# எண்பத்தொன்றில் தமிழ்

பதிப்பாசிரியர்

ச. வே. சுப்பிரமணியன்

ந. கடிகாசலம்




உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

டி.டி.டி.ஐ.தரமணி

சென்னை-600113

## BIBLIOGRAPHICAL DATA


| | | |
|---|---|---|
| Tittle of the Book | : | Eṉpattoṉṟil Tamil |
| Editors | : | S.V. Subramanian, M.A., Ph.D.<br>Director and Chief Professor.<br>N. Ghadigachalam, M.A., Ph.D.<br>Senior Research Fellow<br>I. I. T. S., T. T. T. I. Taramani<br>Madras 600 113. |
| Publishers & Copy.Right holder | : | International Institute of Tamil Studies, T. T. T. I.<br>Taramani, Madras 600 113 |
| Publication Number | : | 70 |
| Language | : | Tamil & English |
| Edition | : | First |
| Date of Publication | : | June 1983 |
| Papper used | : | 18 Kg. D/Demy F. White Printing |
| Size of the book | : | 21×18 Cms |
| Printing types used | : | 10 Point |
| Number of pages | : | 1228+xvi=1244 |
| Number of copies | : | 1200 |
| Price | : | (Rs. 65/-) Rupees Sixty five only |
| Printer | : | Novel Art Printers<br>137, Jani Jan khan Road<br>Madras-600 014<br>Phone : 82731 |
| Artist | : | Anandan |
| Su bject | : | A Compilation of articles regarding Tamil Studies in 1981 |

# முன்னுரை

**டாக்டர் ச. வே. சுப்பிரமணியன்**
இயக்குநர்

ஆண்டுதோறும் உலகம் முழுவதிலும் உள்ள தமிழ் பற்றியும், தமிழர் பற்றியும் உள்ள செய்திகளைத் தொகுத்துத்தந்தால் அது பிற்கால ஆராய்ச்சிக்குப் பயன்படும் என்ற முறையில் 'எண்பதில் தமிழ்' என்ற நூலை வெளியிட்டோம். இதன் தொடர்பாகத் தற்போது 'எண்பத்தொன்றில் தமிழ்' என்ற நூலை வெளியிடு கின்றோம். இவ்வெளியீடுகளின் நோக்கம் தமிழகத்தை மட்டு மல்லாமல் இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், பிஜி, மொரிஷியஸ், ஆப்பிரிக்கா போன்ற பல நாடுகளில் இருக்கின்ற தமிழைப்பற்றி யும், தமிழ் இதழ்கள் பற்றியும், தமிழ்க் கல்வி பற்றியும் அறிவதா கும். ஆண்டுதோறும் தமிழகத்தில் ஏறத்தாழ 1000 நூல்கள் வெளிவருகின்றன. என்னென்ன நூல்கள் வெளிவருகின்றன என்பதைப் பற்றி இதுவரை தொகுத்துத்தருகின்ற முயற்சியை யாரும் செய்யவில்லை. அதையும் செய்து வருகிறோம். குறிப் பிட்ட ஆண்டில் வந்த நூல்களைப் பற்றிய திறனாய்வுகளும் இது வரை வெளிவரவில்லை. அந்த நிலையில் ஓராண்டில் வந்த நூல்கள் பற்றிய திறனாய்வுகளையும், பல கட்டுரைகள் பற்றிய கருத்துரைகளையும் வெளியிட்டு வருகின்றோம். அந்த ஆண்டில் வந்த சிறுகதை, புதுக்கவிதை, நாவல்கள், மருத்துவ நூல்கள், சோதிட நூல்கள், கம்பன் கழகங்கள், வானொலியில் தமிழ், பிற மாநிலங்களில் தமிழின் நிலை பற்றிய செய்திகளை எல்லாம் தொகுத்துத் தருகின்றோம். ஒவ்வொரு ஆண்டிலும் தமிழ் பற்றி என்னென்ன நிகழ்ச்சிகள் உலகம் முழுவதும் நடைபெற்றுக்கொண் டிருக்கின்றன என்பதைக் கூறுவதற்கு இத்தொகுப்புகள் துணை யாக அமைகின்றன.

1981-ஆம் ஆண்டு பல நிலைகளில் குறிப்பிடத்தக்கதொரு ஆண்டாகும். 5-ஆம் உலகத் தமிழ் மாநாடு மதுரைக் காமராசர் பல்கலைக் கழகத்தில் சீரும் சிறப்புமாகப் பெரிய அளவில் நடை பெற்றது. தமிழர் வாழ்வில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப் படவேண்டியதொரு நிகழ்ச்சி அது. அது 1981ல் நிகழ்ந்துள்ளது.

அடுத்து மொழிக்கு என ஒரு தனிப்பல்கலைக்கழகம் 1981-ல் ஏற்படுத்தப்பட்டது. தமிழ்ப்பல்கலைக் கழகத்தைத் தஞ்சாவூரில் அமைத்து அதற்கு ஏறத்தாழ 100 ஏக்கருக்கு மேல் நிலமும் பல கோடி ரூபாயும் கொடுத்துள்ளமை தமிழக அரசினுடைய மிகப் பெரிய செயலாகும். அதற்காக மாண்புமிகு முதல்வர் அவர் களுக்குப் பெரிதும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுள்ளேன். இவ்விரண்டு நிகழ்ச்சிகளும் 1981-ல் ஏற்பட்ட மிகப் பெரிய நிகழ்ச்சி என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

'எண்பதில் தமிழ்' என்ற நூலில் 35 கட்டுரைகள் இடம் பெற்றன. 'எண்பத்தொன்றில் தமிழ்' என்ற இந்நூலில் 46 கட்டுரைகள் இடம் பெறுகின்றன. கடந்த ஆண்டைக் காட்டிலும் வளர்ச்சி இதில் காணப்படுகிறது. அதே நேரத்தில் எண்பதில் வெளிவந்த கட்டுரைத் தலைப்புகளில் 14 கட்டுரைகள் இந்த நூலில் இல்லை. ஆனால் புதுமையாக 25 புதிய தலைப்புகளில் கட்டுரைகள் சேர்க்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு ஆண்டும் இது போன்ற தொகுப்புகள் வெளிவந்தால் உலகம் முழுவதும் தமிழில் என்னென்ன நடைபெற்றுக்கொண்டு இருக்கின்றன என்பதை நாம் உணர அவை துணைபுரியும். பிற்கால ஆய்வுக்கு மிகப் பெரிய பயனாக இத்தொகுப்புகள் அமையும். இந்நோக்கில் பின்வரும் தலைப்புகள் ஆண்டுதோறும் ஆய்வாளர்களுக்கு அளிக்கப்படு கின்றன.

## படைப்பிலக்கியம்

1. மரபுக் கவிதை
2. புதுக் கவிதை
3. நாடகங்கள்
4. நாவல்கள் (நூலாக வெளியிடப்பெற்றவை)
5. நாவல்கள் (திங்கள் இதழில் வெளிவந்தவை)
6. சிறு கதைகள்
7. குழந்தை இலக்கியங்கள்

## இலக்கிய ஆய்வு

8. இலக்கிய ஆய்வு நூல்கள்
9. இலக்கியத் திறனாய்வு நூல்கள்
10. இலக்கிய ஆய்வுக் கட்டுரைகள்
11. ஆய்வேடுகள்
12. ஒப்பிலக்கியம்

## இலக்கண மொழியியல் ஆய்வு



## பிற



## பதிப்புக் கலை



## பல்கலைக்கழகங்கள்



## மக்கள் தொடர்பு

## இலக்கிய நிகழ்ச்சிகள்



## திரைப்படம்



## வானொலி-தொலைக்காட்சி



## கலை நிகழ்ச்சிகள்



## மதிப்புரை



## அயல்நாடுகளில் தமிழ்

இவற்றுள் பெரும்பாலான தலைப்புகளில் கட்டுரைகள் இந் நூலில் இடம்பெற்றுள்ளன.

பலர் எழுதிய கட்டுரைகளின் தொகுப்பே இந்த நூல். பலருடைய உழைப்பும் இந்த நூலில் காணப்படுகிறது. பலரும் கடுமையாக ஒரு ஆண்டுச் செய்திகளை வரன்முறையாகத் தொகுதிப்படுத்தி ஆழ்ந்து நுணுகித் திறனாய்வு செய்து கட்டுரைகள் எழுதி உள்ளனர். இந்த முயற்சி வேறு எந்த மொழியிலும், எந்த ஆய்விற்கும் இருப்பதாகத் தெரியவில்லை. அடுத்து 'எண்பத்திரண்டில் தமிழ்' என்ற நூல் விரைவில் வெளி வரலாம் என்று நினைக்கிறேன். இதற்கான கட்டுரைகள் 20-க்கு மேல் வந்து விட்டன. ஏனைய கட்டுரைகளை எதிர்பார்த்துக்கொண்டிருக் கிறோம்.

இது போன்ற நற்பணிகளுக்கெல்லாம் முழு நிலையில் ஒத்துழைப்புத் தருகின்ற மாண்புமிகு கல்வி அமைச்சர் செ. அரங்கநாயகம் அவர்களுக்கு நாங்கள் என்றும் நன்றி உடையோம்.

இந்நூலைச் சிறப்பாக உரிய காலத்தில் அச்சிட்டுத்தந்த 'நாவல் ஆர்ட் பிரிண்டர்ஸ்' உரிமையாளர் கவிஞர் நாரா நாச்சியப்பன் அவர்களுக்கு நன்றி உடையேன்.

இந்த நூலின் உருவாக்கப் பணிகள் அனைத்தையும் தெளி வாகவும் முறையாகவும் செய்து தந்த டாக்டர் ந. கடிகாசலம் பாராட்டிற்குரியவர்.

இதற்குப் பல நிலைகளிலும் துணைபுரிந்த ஆய்வாளர்க்கு எங்கள் வாழ்த்துக்கள்.

அன்புள்ள,

சென்னை-113
23-5-1983

ச. வே. சுப்பிரமணியன்

# கட்டுரை அளித்தோர்

இரா. முத்துக்குமாரசாமி,
தென்னிந்திய சைவசித்தாந்த
நூற்பதிப்புக்கழகம்,
சென்னை-600 001

டாக்டர் ந. கடிகாசலம்,
முதுநிலை ஆய்வாளர்,
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை-600113

சிற்பி பாலசுப்பிரமணியன்
துணைப்பேராசிரியர்,
60, அழகப்பா குடியமைப்பு,
பொள்ளாச்சி

டாக்டர் ஏ. என். பெருமாள்
இணைப்பேராசிரியர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை-600113

டாக்டர் சு. வெங்கட்ராமன்
தமிழியல்துறை
மதுரைக் காமராசர் பல்கலைக்
கழகம்
பல்கலை நகர்,
மதுரை 625 021

டாக்டர் இராம. குருநாதன்
தமிழ்த்துறை
விவேகானந்தா கல்லூரி,
சென்னை-600 004

டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்,
பேராசிரியர்,
தமிழ் மொழித்துறை,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை-600 005

வி. முருகன்
இணைப்பேராசிரியர்
அரசினர் கலைக்கல்லூரி,
நந்தனம்,
சென்னை-600035

ஆ. சிவலிங்கனார்,
முதுநிலை அலுவலர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்
சென்னை-600113

டாக்டர் சு. இராசாராம்
மொழியியல் துறை,
அண்ணாமலைப் பல்கலைக்
கழகம்,
அண்ணாமலை நகர்

டாக்டர் சு. சண்முகசுந்தரம்
தமிழ்த்துறைத் தலைவர்,
புனித ஜோசப் கல்லூரி
பெங்களூர் 560001

டாக்டர் க. த. திருநாவுக்கரசு
இணைப்பேராசிரியர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை-600113

டாக்டர் கே. பகவதி
உயர்நிலை ஆய்வாளர்,
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்
சென்னை-600113

இராஜ். பவுன்துரை,
ஆய்வாளர்,
உலகத்தமிழாராய்ச்சி
நிறுவனம்
சென்னை-600113

டாக்டர் இ. சுந்தரமூர்த்தி
தமிழ் மொழித்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை-600005

ஏ. எம் பிள்ளை
20, செட்டித்தெரு,
பூவிருந்தவல்லி
சென்னை 600 056

த. அழகப்பராசு
ஆய்வாளர்,
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை-600113

அ. நடராசன்,
64, நேரு தெரு,
திருப்பதி 517 501

டாக்டர் ச. சிவகாமி
உயர்நிலை ஆய்வாளர்,
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை-600113

ம. இராசேந்திரன்
43, வாணியர் தெரு,
சென்னை 600 014

பூ. சுப்பிரமணியம்
ஆராய்ச்சி அலுவலர்,
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்
சென்னை 600 113

டாக்டர் அ. பிச்சை
மாநில முறைசாராக்கல்வி
மையம்,
18, ஆதம்ஸ் சாலை,
சென்னை 600 005

அ. ம. சத்தியமூர்த்தி
ஆய்வாளர்,
சென்னைப் பல்கலைக்கழகம்
சென்னை 600 005

கரு. நாகராசன்
தமிழ்த்துணைப் பேராசிரியர்
குருநானக் கல்லூரி,
சென்னை 600 032

பழ. முத்தப்பன்
சன்னதி வீதி,
மயிலம் 604 304

சா. பெருமாள்
21, ஐடாஸ்கடர் ரோடு,
காகிதப் பட்டடை,
வேலூர் 632 012

டாக்டர் ர. விஜயலட்சுமி
முதுநிலை ஆய்வாளர்,
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்
சென்னை-600113

டாக்டர் பூ. சொல் விளங்கும் பெருமாள்,
பேராசிரியர், தமிழ்த்துறை,
என். எம். எஸ், எஸ். வி. என்
கல்லூரி,
மதுரை-19

வா. மு. சேதுராமன்
''தமிழ்ப்பணி''
12, சாயிநகர் அனெக்ஸ்
சென்னை 600111

கா. அ. ச. ரகுநாயகன்
62, கச்சேரித் தெரு,
திருப்பத்தூர், 635 601

இளசை எஸ். சுந்தரம்
தயாரிப்பாளர்,
அகில இந்திய வானொலி
நிலையம்,
திருச்சி 620 001

பட்டுக்கோட்டை குமாரவேல்
அகில இந்திய வானொலி
நிலையம்
சென்னை-600004

வெ. நல்லதம்பி
தயாரிப்பாளர்,
தொலைக்காட்சி நிலையம்
சென்னை 600005

மு. தங்கராசு
தமிழ்த்துறை
கிறித்துவக் கல்லூரி,
தாம்பரம், சென்னை 600059

இரா. பார்வதி
நூலகர்
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை-600113

சுப. சுப்பிரமணியன்
315, அபர்டின் பஜார்,
போர்ட் பிளேயர்
அந்தமான் 744 104

மு. சாயபுமரைக்காயர்,
14, இலாசுப்பேட்டை சாலை
திருவள்ளுவர் நகர்,
புதுச்சேரி 605003

தி. ஜானகிராமன்,
9. வாணிதாசன் தெரு.
புதுச்சேரி. 605 011

டாக்டர் இ.பாலசுந்தரம்
விரிவுரையாளர்.
தமிழ்த்துறை'
கொழும்புப் பல்கலைகழகம்
கொழும்பு ஸ்ரீலங்கா
600 029

டாக்டர் இரா. தண்டாயுதம்.
இந்தியப் பகுதி
மலாயப் பல்கலைக்கழகம்.
மலேசியா

S.S. Sharma,
54, Nerkuntram Road,
Vadapalani,
Madras-600026.

அ. தாமோதரன்
தெற்காசிய நிறுவனம்
ஹைடெல் பெர்க் பல்கலைக்
கழகம்
ஹைடெல்பெர்க்
மேற்கு ஜெர்மனி

டாக்டர் தா. வே. வீராசாமி
இணைப்பேராசிரியர்,
உலகத் தமிழாராய்ச்சி
நிறுவனம்,
சென்னை-600113

எம். தங்கணமுத்து
தலைவர்,
உலகத் தமிழ்ப் பண்பாட்டு
இயக்கம்,
மொரீசியசு

# பொருளடக்கம்

பகுதி ஒன்று

## ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு



பகுதி இரண்டு



பகுதி மூன்று



பகுதி நான்கு

இலக்கிய ஆய்வு



பகுதி ஐந்து

இலக்கண மொழியியல் ஆய்வு



பகுதி ஆறு

கலை—அறிவியல்

பகுதி பன்னிரண்டு

வானொலி மற்றும் தொலைக்காட்சி



பகுதி பதின்மூன்று

கலைநிகழ்ச்சி



பகுதி பதினான்கு

நூலகம்



பகுதி பதினைந்து

யூனியன் பிரதேசங்களில் தமிழ்



பகுதி பதினாறு

அயல் நாடுகளில் தமிழ்



பகுதி பதினேழு

நாவல்



பகுதி பதினெட்டு

மொரிஷியஸில் தமிழ்



மதுரையில் நடந்த உலகத் தமிழ் மாநாட்டில் உலகத்தமிழாராய்ச்சி நிறுவன நூல்களை மாண்புமிகு தமிழக முதல்வர் எம். ஜி இராமச்சந்திரன் அவர்கள் வெளியிடுகிறார்கள். அந்நூல்களை மாண்புமிகு கல்வியமைச்சர் செ. அரங்கநாயகம் அவர்கள் பெறுகிறார்கள்.



ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டில் உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் டாக்டர் ச வே. சுப்பிரமணியன் அவாகள் அந்நிறுவன நூல்கள் பற்றிப் பேசுகின்றார்.



மதுரையில் நடைபெற்ற ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டின் நிறைவு விழாவில் இந்தியப் பிரதமர் திருமதி இந்திராகாந்தி அவர்கள் கலந்துகொள்கிறார்கள். தமிழக முதல்வரும் ஆளுநரும் உடனிருக்கின்றனர். செக்கோஸ்லோவாகியா நாட்டு அறிஞர் டாக்டர் வாசக் பேசுகிறார்.

# 1. ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு —ஆய்வுக் கருத்தரங்கு

இரா. முத்துக்குமாரசாமி

ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டு ஆய்வுக்கருத்தரங்கில் வெளிநாட்டிலிருந்து 463 அறிஞர்களும், இந்தியாவிலிருந்து 291 அறிஞர்களும் பேராளர்களாகக் கலந்து கொண்டனர். ஆய்வுக் கருத்தரங்கில் 232 கட்டுரைகள் படிக்கப் பெற்றன. இவற்றில் 25 விழுக்காடு இலக்கிய ஆய்வுக் கட்டுரைகளாக இருந்தன. இக்கால இலக்கியம் பற்றி அதிகமாகக் கட்டுரைகள் வரவில்லை. இக்கருத்தரங்கில் படிக்கப்பெற்ற கட்டுரைகள் 3000 பக்கங்களுக்கு மேற்பட்ட 3 தொகுதிகளாக நூல் வடிவம் பெற்றுள்ளன. கருத்துக் கருவூலமாக இத்தொகுதிகள் அமைந்துள்ளன.

## முன்னுரை

'எத்திசையும் புகழ்மணக்க இருந்த பெருந்தமிழணங்கே' என மனோன்மணீயம் சுந்தரனாரும், 'விண்ணோடும் மண்ணோடும் உடுக்களோடும் பிறந்த எங்கள் தமிழ்' எனப் பாவேந்தரும் போற்றிப்பாடிப் பரவிய தமிழ்மொழியின் மேன்மையை உலகெங்கும் எடுத்துரைப்பதற்கான முயற்சியின் விளைவே இதுவரை நடந்து முடிந்த ஐந்து உலகத் தமிழ் மாநாடுகள். வீரமாமுனிவர் கால்டுவெல், போப் போன்ற மேனாட்டுப் பாதிரியார்கள் தமிழ் மொழி இலக்கண, இலக்கிய நூல்களின் பெருமையை வெளிநாட்டாருக்கு எடுத்துக்கூறியது முதல் தமிழ்மொழிபற்றிய ஆய்வு மேலைநாடுகளில் பரவத் தொடங்கியது. கடந்த அரைநூற்றாண்டு காலமாக மேலைநாட்டுப் பல்கலைக்கழகங்கள் பலவற்றில் தமிழ்

முறையாகப் பயிற்றுவிக்கப் பெற்றதுடன் தமிழ்பற்றிய ஆய்வும் பேரறிஞர்களால் திறமையாக நடத்தப்பெற்றது; இருப்பினும் தமிழ்மொழி, இலக்கிய, இணைவரலாற்றைப் பற்றிய உண்மைகள் வெளி உலகிற்குத் தெரிவிக்கப் பெறவில்லை. மாறாக இவை பற்றிய தவறான செய்திகள் ஆய்வாளர்களிடையே பரவியிருந்தன. மேலும் பெரும்பாலான மேலைநாட்டுப் பல்கலைக்கழகங்களில் இந்தியாவைப் பற்றிய படிப்பு அல்லது ஆய்வு என்றால் அது பெரும்பாலும் வடஇந்தியாவைப் பற்றியதுவாகவோ அல்லது சமக்கிருத மொழியைப் பற்றியது மட்டுமாகவோ இருந்தது. அனைத்துலக அளவில் பேரறிஞர்கள் கலந்துகொண்ட மாநாடுகளி லும் கருத்தரங்குகளிலும் மேற்கூறப் பெற்றனவற்றைப் பற்றிய கட்டுரைகளே இடம் பெற்றன. இத் தகைய மாநாடுகளில் கலந்து கொண்ட தமிழ் ஆய்வில் ஈடுபட்ட மேலைநாட்டு, நம்நாட்டு அறிஞர்கள் இக்குறையை உணர்ந்தனர். தமிழ்மொழிக்கு உரிய இடம் கிடைக்காமற்போனமைக்காக வருந்தினர்.

## தொடக்கம்

புதுதில்லியில் 1964இல் கூடிய 26வது அனைத்துலகக் கீழ்த் திசையாளர்கள் மாநாட்டில் பன்னாட்டுத் தமிழறிஞர்களும் கலந்து கொண்டனர். தமிழ்மொழியின் மேம்பாட்டை எடுத் துரைக்கவும் திராவிடர் இனத்தைப்பற்றிய ஆய்வை மேற்கொள்ள வும் இந்தியாவில் எந்தப்பல்கலைக்கழகமும் முயற்சி எடுக்காத தால் அதற்கான தனி அமைப்பு வேண்டுமென உணர்ந்தனர். பேராசிரியர் பிலியோசா (பிரான்சு), டாக்டர். டி பர்ரோ (யு.கே), எம்.பி. எமனோ (யு.எஸ்.ஏ), எப்.பி.ஜே. கூப்பர், (ஹாலந்து), கமில் சுவலபில் (செக்) சேவியர் எஸ். தனிநாயகம், கா. பொ. இரத்தினம் (இலங்கை), தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், மு. வரதராசனார், ஏ. சுப்பையா (இந்தியா) போன்ற அறிஞர்கள் கூடி உலகத் தமிழாராய்ச்சி மன்றத்தை (I.A.T.R.) நிறுவினர். உலகெங்கணு முள்ள தமிழாய்வில் ஈடுபட்ட பன்னாட்டு அறிஞர்கள் மூன்று நான்கு ஆண்டுகட்கு ஒருமுறை கூடி தத்தம் கருத்துக்களைப் பரிமாற்றம் செய்துகொள்ள வாய்ப்பளிக்கும் வகையில் உலகத் தமிழ் மாநாடுகளை நடத்துவதெனத் திட்டமிட்டனர்.

அவ்வாறே மலேசியாவிலும் சென்னையிலும் பாரிசிலும் இலங்கையிலும் முறையே முதல் நான்கு உலகத் தமிழ் மாநாடுகள் நடைபெற்றன. தவத்திரு. தனிநாயக அடிகளார் மலேசியாப் பல்கலைக்கழக இந்திய ஆய்வுத்துறையின் தலைவராக இருந்த

தால் முதல் மாநாட்டைக் கோலாலம்பூரில் சிறப்பாக நடத்தினார். பேரறிஞர் அண்ணா அவர்கள் தமிழக முதல்வரானவுடன் இரண்டாம் உலகத் தமிழ் மாநாட்டைப் பார் வியக்கும் வகையில் நடத்தினார். பேராசிரியர் பிலியோசா முயற்சியில் பாரிசு மாநாடு பாங்குடன் நடைபெற்றது. இலங்கையில் நடைபெற்ற மாநாட்டில் இலங்கை அரசு போதிய ஆதரவு தராததினால் தமிழார்வலர்களே தனித்து நின்று சிறப்பாக நடத்தவேண்டியதிருந்தது.

## ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு

மூன்றாம் உலகத் தமிழ் மாநாடு பாரிசில் நடைபெற்றபோது அதில் கலந்துகொண்ட மேலை ஆப்பிரிக்க நாடான செனகாலின் குடியரசுத் தலைவர், பிரெஞ்சுமொழிப் பேரறிஞர், டாக்டர் செங்கோர் அவர்கள் தம் நாட்டில் அடுத்த மாநாட்டை நடத்த வேண்டுமென உலகத் தமிழ் ஆராய்ச்சி மன்றத்தார்க்கு அழைப்பு விடுத்தார். இடையில் இலங்கையில் நான்காவது மாநாடு நடைபெற்றுவிடவே ஐந்தாவது மாநாட்டையாவது செனகாலில் நடத்த டாக்டர் செங்கோர் விரும்பினார். இடையில் மாண்புமிகு தமிழக முதல்வர் எம். ஜி. இராமச்சந்திரன் அவர்கள் அதனை மதுரையில் நடத்த விரும்பினார். எனவே டாக்டர் செங்கோர் அவர்களுக்கு இச்செய்தி முறையாக அறிவிக்கப்பெற்றது. அவர்களும் அதற்கு இசையவே, ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டை 1980 சனவரியில் நடத்துவதெனத் திட்டமிடப்பெற்றது. இருப்பினும் இருமுறை ஒத்திப்போடப்பெற்று 1981 சனவரியில் மதுரையில் சிறப்பாக நடந்து முடிந்தது.

## மாநாட்டுக் கருத்தரங்கு அமைப்பு

மாநாட்டை நடத்த விரும்பிய தமிழக முதல்வர் அவர்கள் அதனை நடத்தும் பொறுப்பை இதுவரை நான்கு உலகத் தமிழ் மாநாடுகளையும் சிறப்புற நடத்திய உலகத் தமிழாராய்ச்சி மன்றத்திடமும் அதன் அமைப்பாளருமான திரு. ஏ. சுப்பையா அவர்களிடம் ஒப்படைத்தனர். மாண்புமிகு முதல்வர் அவர்கள் தலைமையிலேயே மாநாட்டுச் செயல்முறைக்குழு அமைக்கப் பெற்றது. டாக்டர் ஜஸ்டிஸ் எஸ். மகராஜன் அவர்கள் குழு அமைப்பின் தலைவராக இருந்தார்.

உலகின் பல்வேறு பகுதிகளிலுள்ள தமிழ் ஆய்வாளர்கட்கு மாநாட்டில் கலந்துகொள்ள அழைப்பு அனுப்பப்பெற்றது. 1981

சனவரி 4 முதல் 10 வரை நடைபெற்ற மாநாட்டிற்கு 754 அறிஞர் பேராளர்களாகப் பதிவுசெய்யப் பெற்றனர். வெளிநாடுகளி லிருந்து 463 பேராளர்களும் இந்தியாவிலிருந்து 291 பேராளர் களும் மாநாட்டில் கலந்துகொண்டனர். ஆஸ்திரேலியா, பங்களா தேஷ், சீனா, செக், பிஜி, பிரான்சு, கிரீசு, அங்கேரி, இந்தோ னேசியா, இஸ்ரேல், இத்தாலி, ஜப்பான், மலேசியா, மோரீசியஸ், நெதர்லாண்ட்ஸ், நைஜீரியா, ரீயூனியன் தீவுகள், செனகால், சிங்கப்பூர், ஸ்ரீலங்கா, தென்ஆப்பிரிக்கா, ஸ்வீடன், தாய்லாந்து, இங்கிலாந்து, அமெரிக்கா, ருசியா, மேற்குசெர்மனி, மேற்கு ஆப்பிரிக்கா முதலிய வெளிநாடுகளிலிருந்து திரளான பேராளர்கள் வருகை தந்தனர். இதுவரை நடைபெற்ற ஐந்து உலகத் தமிழ் மாநாடுகளைக் காட்டிலும் மிகுதியான பேராளர்கள் மதுரையில் நடைபெற்ற மாநாட்டில் கலந்து கொண்டார்கள் என்பது குறிப்பிட வேண்டியதாகும்.

## நிகழ்விடம்

இதுவரை நடைபெற்ற உலகத் தமிழ் மாநாடுகளில் சென்னை யிலும் மதுரையிலுமே மாநாட்டின் அமைப்பு வேறுபட்டிருந்தது. மற்ற மூன்று மாநாடுகளிலும் ஆய்வுக்கட்டுரைகள் படிக்கப்பெற்ற கருத்தரங்கப்பகுதியே மாநாடாக அமைந்தது. சென்னையில் இரண்டாம் மாநாடு நடைபெற்றபோது பேரறிஞர் அண்ணா அவர்கள் கருத்தரங்கில் படிக்கப்பெறும் ஆய்வுரைகள் அறிஞர் கட்கு மட்டுமே பயன்படும், சுவை தரும் என்பதால் பொதுமக்களுக் கும் தமிழ் உணர்வையும் எழுச்சியையும் ஊட்டக்கூடிய பொது நிகழ்ச்சிகள் தனியாக நடத்தப்பெற வேண்டுமெனச் சென்னைத் தீவுத்திடலில் பெரிய பந்தலில் பல்லாயிரக்கணக்கான மக்களுக் காகப் பல்வேறு சொற்பொழிவு நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்திருந் தார். அதே போக்கில் மாண்புமிகு தமிழக முதல்வர் அவர்களும் மதுரைப் பந்தயத்திடலில் ஒருவாரகாலம் பல்வேறு இலக்கியச் சிறப்பு நிகழ்ச்சிகளையும் கலைநிகழ்ச்சிகளையும் ஏற்பாடு செய்திருந்ததை அனைவரும் பாராட்டி வரவேற்றனர் பல்லாயிரக் கணக்கானமக்கள் நிகழ்ச்சிகளைக்கேட்டு, கண்டு பயன் பெற்றனர்.

## கருத்தரங்கக் கட்டுரைகள்

கருத்தரங்கில் படிப்பதற்கென ஆய்வுக்கட்டுரைகள் பலதுறை அறிஞர்களிடமிருந்தும் வரவேற்கப்பெற்றன. 321 கட்டுரைகள்

வந்தன. அவற்றில் 232 கட்டுரைகள் மட்டும் ஆய்வுக்குழுவால் படிப்பதற்கேற்றதெனத் தேர்ந்தெடுக்கப் பெற்றன. எவ்வெத் துறையில் எத்தனை எத்தனை கட்டுரைகள் படிக்கப்பெற்றன என்பதைச் சற்று நுணுகிப்பார்த்தால் தமிழ் ஆய்வின் பரப்பும் ஆழமும் ஓரளவு தெரியும்.

| | |
|---|---|
| மொழியியல், இலக்கணம் | 34 |
| தொல்பொருள் | 4 |
| கலை, கட்டிடக்கலை | 4 |
| நாட்டியம், இசை | 10 |
| நாடகம் | 6 |
| வரலாறு | 13 |
| முற்கால இலக்கியம் | 37 |
| இடைக்கால இலக்கியம் | 19 |
| தற்கால இலக்கியம் | 8 |
| கல்வி | 4 |
| ஒப்பாய்வு இலக்கியம் | 11 |
| குழந்தை இலக்கியம் | 2 |
| பாமர இலக்கியம் | 11 |
| வெளிநாட்டுத் தமிழ் | 15 |
| தத்துவம், சமயம் | 20 |
| அறிவியல், தொழிற்கலை | 8 |
| சித்தமருத்துவம் | 2 |
| சமுதாயவியல் | 8 |
| மொழிபெயர்ப்பு, அகராதிக் கலை | 9 |
| பிறவகை | 2 |
| ஆட்சித்தமிழ் | 5 |
| | 232 |

மொத்தக் கட்டுரைகளில் 25 விழுக்காடு இலக்கிய ஆய்வுக்கட்டுரைகள் இடம்பெற்றுள்ளதைக் காணலாம். ஒருமொழி மாநாட்டில் இலக்கியம் இந்த அளவு இடம்பெறுவது பொருத்தமானதுதான். தற்கால இலக்கியத்தைப் பற்றிய கட்டுரைகள் போதுமானவகையில் இடம் பெறவில்லை எனபதை அனைவரும் உணர்ந்தனர். பொதுவாகத் தமிழ் இலக்கியம், இலக்கணம், வரலாறு,கலை, மருத்துவம்

சமயம், தொல்பொருள் போன்ற பலபொருள்களைப் பற்றிய கட்டுரைகள் கருத்தரங்கில் படிக்கப்பெற்றமை மனநிறைவைத் தரும்.

## தமிழ்-வெளிநாட்டு மொழிகள் தொடர்பு

பல்வேறு பொருள்களைப் பற்றிய கட்டுரைகள் கருத்தரங்கில் படிக்கப் பெற்றிருப்பினும் இம்மாநாட்டில் பொதுவான ஒரு கருத்து புதுவடிவம் பெற்றது தமிழ்மொழியின் தொன்மையை எடுத்துக்காட்டும் வகையில் சில அரிய கட்டுரைகள் மாநாட்டில் படிக்கப்பெற்றன. தமிழ்மொழியும் அது சார்ந்துள்ள திராவிட மொழிக் குடும்பமும் உலகின் பல்வேறு பகுதிகளில்பரவியிருந்ததைச் சில அறிஞர்கள் சான்றுகளுடன் எடுத்துரைத்தனர்.

இம்மாநாட்டில் சப்பானியமொழிப் பேராசிரியர் சுசுமு ஓநோ 'தமிழ்-சப்பானிய உறவுகள்' என்ற கட்டுரையை படித்தபோது இலக்கண அடிப்படையில் தமிழ்-சப்பானியமொழியின் உறவுகளை தொடர்புகளை— நூற்றுக்கணக்கான சொற்களைச் சான்றாகக் கொண்டு விளக்கி உரைத்தது தமிழ்மொழி ஆய்வில் ஒரு புதிய கோணத்தை ஏற்படுத்தியுள்ளது சப்பானிய மொழி எழுத்துக்கள் படைக்கப்பெற்ற காலத்திலேயே காஞ்சிபுரத்திலிருந்து சென்ற பௌத்த சமயஅறிஞர்கள் துணைநின்றனர் என்ற செய்தி முன்னரே வந்ததாகும். அதற்கு மேலும் தமிழ்ச்சொற்கள் சில மாற்றங் களுடன் சப்பானிய மொழியில் வழங்கப் பெறுவதைப் பேரா சிரியர் ஓநோ எடுத்துக்காட்டியதைப் பலரும் வியந்து பாராட்டினர். இக்கருத்து மேலும் ஆய்வுக்குரியதுதான். எனினும் புதிய சிந்தனையை இது தோற்றுவித்துள்ளது என்பதை மறுப்பதற் கில்லை. செல்வி. வி.எஸ். பாலாம்பாள் அம்மையார் படித்த கட்டு ரையில் சப்பானிய மொழியில் உள்ள இடைச் சொற்கள் தமிழில் உள்ள வேற்றுமை உருபுகளோடு ஒத்துள்ளதை எடுத்துக்காட்டி னார். தமிழுக்கும் சப்பானிய மொழிக்கும் உறவு இருக்கிறதென் பதை இவரும் சுட்டிக்காட்டியுள்ளார்.

அவ்வாறே செக் நாட்டுப் பேராசிரியர் டாக்டர். ஜே. வாசெக் தமிழுக்கும் அல்டாய்க் மொழிக்குடும்பத்தைச் சார்ந்த மங்கோலிய மொழிக்கும் இடையே காணப்படும் ஒற்றுமையை எடுத்துக் காட்டினார். இருநூற்றுக்கும் மேற்பட்ட சொற்களின் ஒற்றுமையை எடுத்து விளக்கி இப்புதிய ஆய்வு தமிழுக்கும்

மங்கோலிய மொழி போன்ற பிறமொழிகளுக்கும் இடையே உள்ள உறவினைப் பண்பாட்டு அடிப்படையில் ஆராயத் துணைபுரியும் என்றார்.

அமெரிக்க அறிஞரான டேவிட் மெக்கால்பின் 'ஒலமைட் மொழியும் திராவிடமொழிகளும்' என்கிற கட்டுரையில் மேற்கு ஆசியாவில் தற்கால ஈரான் நாட்டுப் பகுதியில் இன்றைக்கு 5000 ஆண்டுகட்கு முன்பு வழக்கிலிருந்த ஒலமைட் மொழி தமிழ்மொழியுடனும் ஏனைய திராவிடமொழிகளுடனும் தொடர்பு கொண்டிருந்ததைச் சான்று காட்டி விளக்கினார். அம்மொழி என்றைக்கோ பேச்சுவழக்கொழிந்து விட்டதெனினும் அதில் தமிழ்ச்சொற்களோடொத்த சொற்கள் இருப்பதைக் காணும் போது அக்காலத்திலேயே தமிழ் அந்தப் பகுதி வரை பரவியிருந்திருக்க வேண்டுமென்று குறிப்பிட்டார்.

## திராவிடப் பண்பாட்டின் தாக்கம்

பழந்தமிழ் இலக்கியத்தில் தமிழர்களின் கடல் வாணிகம், தமிழ்நாட்டின் துறைமுகங்கள் பற்றிய குறிப்புக் காணப்படினும் அவை உயர்வு நவிற்சியோ என்ற எண்ணமே சில வரலாற்றாசிரியர்களிடம் இருந்துவருகிறது. தமிழகத்திற்கும் கிரேக்கத்திற்குமிடையே கி. மு. 3ஆம் நூற்றாண்டிலிருந்து கி. பி. 6ஆம் நூற்றாண்டு வரையான காலத்தில் கிரேக்கர்கள் தமிழர்களுடன் கொண்டிருந்த கடல்வாணிகம் பற்றிக் கிரேக்கமொழி நூல்களிலிருந்து சான்றுகள் காட்டிக் கிரேக்க நாட்டு அறிஞர் திருமதி எலிகா சென்னாஸ் அம்மையார் படித்த 'கிரீசும் தென்னிந்தியாவும்' என்ற கட்டுரை திராவிட நாகரிகத்தின் விரிவைத் தெளிவாக்கியது.

மேற்கு ஆப்பிரிக்க நாடான செனகல் நாட்டிலிருந்து வந்திருந்த பேராசிரியர்கள் உபாத்யாயா, அறவாணன், தாயம்மாள் அறவாணன் மூவருமே மேற்கு ஆப்பிரிக்கப் பண்பாட்டிற்கும் திராவிடப் பண்பாட்டிற்கும் இடையே உள்ள பல்வேறு ஒப்புமைகளை எடுத்துக்காட்டி இவ்விரு இனமக்களும் ஏதோ ஒருவகையில் முன்னொரு காலத்தில் நெருங்கிய தொடர்பு பெற்று விளங்கியிருக்கவேண்டுமென்ற புதிய கருத்தைப் பலவகைச் சான்றுகளால் நிறுவினர். ஐம்பெருங்கண்டங்களுள் ஒன்றான ஆப்பிரிக்காவிலும் திராவிடப் பண்பாடு பரவியிருந்ததை அறியு

வியப்பாயுள்ளது இடையில் ஏற்பட்ட பல்வேறு மாற்றங்களினால் இவ்விரு இனமக்களிடையேயும் தொடர்பே இல்லாது போய் விட்டது வருந்தத்தக்கது.

## திராவிட மொழிகளும் தமிழும்

தமிழ்மொழி - திராவிடமொழிகளும் பழமையானதும் பண் பட்டதுமாக இருப்பினும் பிற திராவிடமொழிகளிடையே இன்னும் பல்வகைகளில் தொடர்புகொண்டு விளங்குகிறது. தஞ்சைப் பகுதியில் வழங்கப்பட்ட சோழநாட்டுக் கொடுந்தமிழே பிற் காலத்தில் தெலுங்குமொழியாக மாறியிருக்க வேண்டும் மொழி யியல் அடிப்படையில் எடுத்துக் காட்டுகளுடன் இதை மெய்ப்பிக்க முடியாவிடினும் வரலாற்று அடிப்படையில் இதற்குத் தக்க சான்றுகளைக் காட்டமுடியுமென்று ' கன்னடம் தெலுங்கு, மொழி களில் தமிழ் மொழியின் தாக்கம்'' பற்றிய கட்டுரையில் தெலுங்கு மொழி அறிஞர் வேதம்வேங்கடராமையா கூறியுள்ளார் தமிழர் களுக்கும் தெலுங்கர்களுக்குமிடையே ஏற்பட்ட தொடர்பு சங்க காலந்தொட்டே ஏற்பட்டிருக்கவேண்டும் இடையில் மொழிப் பகைமை ஏற்பட்டிருந்தாலும் தெலுங்குமொழியில் இசைத்துறை யில் தமிழர்கள் ஆற்றிய தொண்டு அளவிடற்கரியது என்று டாக்டர். சி. ஆர். சர்மா 'தமிழ்-தெலுங்கு மொழிகளின் தொடர்பு கள்' என்ற தம் கட்டுரையில் குறிப்பிட்டுள்ளார். நீலகிரிமலையில் வாழும் தொதுவர்கள் பேசும் படுகு மொழி பழந்தமிழ் மொழியே, வழக்கிழந்துபோன பழந்தமிழ்ச் சொற்களைப் படுகு மொழியில் காணமுடியும். படுகுமொழியில் வடசொல் கலப்பில்லை தமிழ், படுகு மொழிகளிடேயே சொல்லொற்றுமைகள் அதிக அளவில் காணப்படுகின்றன என்பது சி. பி. கிருட்டிணையாவின் கணிப் பாகும்.

திராவிடமொழிகள் வழங்கும் பகுதியை ஒட்டியுள்ள மராத்திய நாட்டில் வழங்கும் மராத்திய மொழியின் அடிப்படைக் கூறுகள் தமிழ்மொழி இலக்கணக்கூறுகளுடன் இணைந்துள்ளன. எனவே மராத்தியமொழி தமிழ் இலக்கண, சொற்றொகுப்பின் அடிப்படையிலேயே அமைந்திருக்கிறது என்று பல்வேறு சான்று காட்டி பொறியியலறிஞர் விசுவநாத் கைரே நிறுவ முற் பட்டுள்ளார். திராவிடமொழி இனத்தைச்சாராத வேறு ஓர் இந்திய மொழியும் தமிழ்மொழியுடன் இணைப்புடையது

என்பது புதிய ஆராய்ச்சியாகும். இவ்வகையில் மேலும் ஆய்ந்தால் வேறு சில வடஇந்திய மொழிகளிலும் திராவிடமொழிகளின் தாக்கத்தை அறியலாம்.

## எழுத்துச் சீர்திருத்தம்

இம் மாநாட்டில் சிறப்பாக வாதிக்கப்பட்ட பொருள்களுள் 'எழுத்துச் சீர்திருத்தம்' ஒன்றாகும். தமிழக அரசு எழுத்துச்சீர் திருத்தத்தை ஏற்றுக்கொண்டதிலிருந்து அறிஞர்கள் கவனமும் அதில் முனைப்பாக உள்ளது. மாநாட்டு அமைப்பாளரான ஏ. சுப்பையா அவர்கள் 'தமிழ்மொழி' என்ற மாநாட்டுக் கட்டுரையில் மெய்யெழுத்துக்களுக்குமேல், கீழ்வாட்டிலும் பக்கவாட்டிலும் ஒரேவகையான குறியீடுகளைப் பயன்படுத்தினால் தட்டச்சும் அச்சுக்கோப்பும் எளிதாகும் என்று ஆலோசனை கூறியுள்ளார். திரு சி கனகசபாபதி நெடிலுக்குப் பயன்படுத்தும் குறியீட்டினைக் குறிப்பிட்டுக் குற்றெழுத்துக்களைக் கொண்டும் அக்குறியீடுகளைக் கொண்டும் தமிழ் வரிவடிவங்களை அமைத்துக் கொள்ளலாமென்கிறார். தமிழ் எழுத்துக்களில் மேலும் சில சீர்திருத்தங்களைச் செய்தால் தமிழ் வரிவடிவங்களை 39 ஆகக் குறைக்கமுடியும் என்கிறார் கே. வீரராசகோபாலன்.

தமிழில் இல்லாத சில வேற்றுமொழி ஒலிகளை உச்சரிப்பதற்கு வேற்றுமொழி எழுத்துக்களையே கடன் வாங்கிக்கொள்ளலாம் என்கிறார் வி. ஜே ராஜ் ஆனந்தன். பலரும் பலவாறாகச் சீர்திருத்தங்களைக் கூறுவதைவிடத் தமிழ் பயிலப்பெறும் தமிழ் நாடு, இலங்கை, மலேசியா, சிங்கப்பூர் போன்ற நாடுகளிலுள்ள தமிழறிஞர்கள் ஒன்றுகூடிக் காலத்துக்கேற்ற மாறுதல்களைச் செய்து அவற்றை எல்லோரும் ஒரே வகையாகக் கையாளச்செய்ய வேண்டுமென்கிறார் எஸ். வி. சண்முகம்.

247 தமிழ் எழுத்துக்களுக்குப் பதிலாக 26 எழுத்துக்களையும் 12 ஒலிக்குறி வடிவங்களையும் கொண்ட ஒரு வரிவடிவை இலங்கை அறிஞர் கணபதிப்பிள்ளை சச்சிதானந்தன் தம் கட்டுரையில் தந்துள்ளார்

எழுத்துச் சீர்திருத்தத்தைத் தட்டச்சுப்பொறியின் நோக்கிலிருந்து கொடுமுடிசண்முகம் ஆய்ந்துள்ளார். தற்போதுள்ள தமிழ்த் தட்டச்சுப்பொறியில் 46 விசைகள் உள்ளன. இவற்றில் வேண்டிய மாறுதல்கள் செய்தால் இந்த 46 விசைகளைக் கொண்டு ஒரே

பொறியில் தமிழ், ஆங்கிலம் என்ற இரண்டுமொழித் தட்டச்சை யும் பெறமுடியும் என்று நிறுவுகிறார். மேலும் கம்யூட்டர், டெலி பிரிண்டர் போன்ற அமைப்புகளுக்குத் தேவையான வடிவமைப்பு களையும் வரைபடங்கள் மூலம் விளக்கியுள்ளார். தமிழ்த் தட்டெழுத்திற்கு 38 விசைகளே போதும் என்று சானி இளந் திரையன் அம்மையார் தம் ஆய்வுக்கட்டுரையில் குறிப்பிடுகிறார்.

கம்யூட்டர் முறையில் தமிழ்ச்செய்திகளை அனுப்புதற்கும் செய்திகளைச் சேமிப்பதற்கும் செய்யவேண்டிய முறைமைகளைப் பற்றி இலண்டன் பொறியியலறிஞர் வி. கே. தில்லைநாயகம் கட்டுரை படித்தார். இப்போது தமிழில் வழங்கும் உயிர்மெய்க் கூட்டெழுத்துக்களுக்குப் பதிலாக மெய் உயிர் கலந்த தனித்தனி எழுத்துக்களை எழுதும் துறைவேண்டுமென்று சுட்டிக்காட்டினார். அவர்தம் கருத்துக்களுக்குச் செயல்வடிவம் கொடுத்து தமிழ் மொழிக்கென ஒரு கம்யூட்டரை உருவாக்கி அது நன்கு செயல் படும் முறையையும் விளக்கிக் காட்டினார். தமிழக முதல்வர் அவர் களும் கல்வி அமைச்சர் அவர்களும் தமிழறிஞர்களும் அதனைக் கண்டு வியந்தனர். தமிழ்மொழி அறிவியல் தொழிலியல் உலகிற் கேற்ற வகையில் பயன்படும் என்பதை அது உணர்த்தியது.

இதற்கு மேலாகத் தற்கால அறிவியல் வளர்ச்சியில் தமிழ் மொழியின் பங்குபற்றித் தனிக்கருத்தரங்கமே இம்மாநாட்டில் நடைபெற்றது. உலகிலுள்ள பல்வேறு ஆய்வுக்களங்கள் அறிவியல் துறைக்குச் செய்துவரும் நலத்தைத் தமிழில் எடுத்துக்கூற வேண்டு மென்று டாக்டர். திருஞானசம்பந்தம் குறிப்பிட்டார். அறிவியல் தமிழ்வரைத் தமிழிசை வளர்ச்சித்தொண்டில் நாடு ஈடுபட்டது போல ஈடுபடுதல் வேண்டுமென்றார் அவர். உயர்தனிச் செம் மொழியாகிய தமிழ்மொழி, உலகத்தேவைக்கேற்ப அறிவியல், தொழில்நுட்ப மொழியாகவும் விளங்கவேண்டுமென்றார் டாக்டர் ஜி. ஆர். தாமோதரன். டாக்டர். லலிதா காமேஸ்வரன் அம்மை யார் தாம் கண்டறிந்த மாக்ஸ் அணுவைப்பற்றிய ஆய்வுக் கட்டுரையைப் படித்தார். சுற்றுச்சூழல் அறிவியல் பற்றி டாக்டர். சிவலிங்கமும், வருங்கால இயல் பற்றி கிருபாகரன் அவர்களும் ஆய்வுக்கட்டுரைகள் படித்தனர்.

தமிழ் இலக்கியம், சமயம், தத்துவம் மட்டுமல்லாது அறிவியலுக்கும் ஏற்றமொழி என்பதை அக்கருத்தரங்கம் காட்டியது.

இலங்கையிலிருந்து வந்த பேராளர்கள் பல அரிய ஆய்வுக் கட்டுரைகளைப் படித்தனர். இலக்கணம், இலக்கியம், மொழி யாய்வு, சமயம், தத்துவம் போன்ற பல துறைகளிலும் அவர்கள் கட்டுரைகள் அமைந்திருந்தன.

இலக்கியப்பகுதியில் சப்பான்மொழிப் பேரறிஞரான மட்சு நாகா திருக்குறள் பற்றிப் படித்த கட்டுரை அனைவருடைய கருத்தையும் கவர்ந்தது திருக்குறளைச் சப்பான் மொழியில் தாம் மொழிபெயர்த்தபோது தமிழர் நாகரிகத்தையும் அன்பு நெஞ்சத்தையும் உணர்ந்ததாகக் கூறினார். அதில் உண்ண அறக் கருத்துக்களும், வாழ்வு நோக்கும் தம்முடைய ஆழ்ந்த உணர்வு களைத் தட்டியெழுப்பியதாகக் கூறினார். தமிழுக்கும் சப்பான் மொழிக்கும் மொழியியல் தொடர்பு இருப்பதால், சப்பானி யருக்கும் தமிழருக்கும் நீண்டநெடுங்காலத்திற்குமுன்னே ஒரு வகைக் குருதித்தொடர்பு இருந்திருக்க வேண்டுமென்றும் அத் தொடர்பே தமக்குக் குறளின்பால் ஆழ்ந்தவேட்கையை உண்டாக்கியிருக்க வேண்டுமென்றார்.

குறளில் கூறப்படும் இல்லறத்தார் பண்புகளும் சப்பானியர் இல்லறப்பண்புகளும் ஏறத்தாழ ஒரே தன்மையன. திருக்குறளில் அமைந்துள்ள போதனைகள் இன்றைய எந்த நாட்டினரும் ஏற்கும் படியாக அமைந்துள்ளன என்றார். அவர் தம்முடைய சப்பானிய மொழித் திருக்குறள் மொழிபெயர்ப்பு நூலை உலகத் தமிழ் மாநாட்டின் போது வெளியிட்டு மகிழ்ந்தார்.

## கருத்தரங்கக் கட்டுரைத் தொகுதிகள்

ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டுக் கருத்தரங்கக் கட்டுரைகள் மூன்று தொகுதிகளாக வெளியிடப்பெற்றுள்ளன. முன்கூறப் பெற்ற பொருள் அடிப்படையிலேயே கட்டுரைகள் பாகுபாடு செய்யப் பெற்றுள்ளன. முதல் இரண்டு தொகுதிகளும் ஆங்கிலக் கட்டுரைகளை ஏந்தியுள்ளன. மூன்றாவது தொகுதி தமிழ்க் கட்டுரைகளைத் தாங்கியுள்ளது. முதலிரு தொகுதிகளும் (1100+1200) 2300 பக்கங்களுடனும் மூன்றாம் தொகுதி 700 பக்கங் களுடனும் உருவாகியுள்ளன. இதுவரை நடைபெற்ற வேறெந்த மாநாடும் இவ்வளவு பெரிய தொகுதிகளை வெளியிடவில்லை. கட்டுரை எண்ணிக்கையிலும் இம் மாநாட்டுத் தொகுதிகள்தாம் அதிக அளவைப் பெற்றுள்ளன.

## முதல் தொகுதி

முதல் தொகுதியில் 1. மொழியியலும் இலக்கணமும் (26), 2. தொல்பொருளியல் (9), 3. கலைகள், கட்டிடக்கலை (7) 4. நாட்டியமும் இசையும் (8), 5. நாடகம் (5), 6. வரலாறு (9), 7. முற்கால இலக்கியம் (22) என்ற ஏழு பகுதிகள் இடம்பெற்றுள்ளன. மொத்தத்தில் இத்தொகுதியில் இடம்பெற்றுள்ள கட்டுரைகளின் எண்ணிக்கை 86.

## மொழியியலும் இலக்கணமும்

இப்பகுதியில் இடம்பெற்றுள்ள தமிழ் பிறமொழித் தொடர்புகள், தமிழ்எழுத்துச் சீர்திருத்தம் பற்றிய கட்டுரைகளின் தனிச்சிறப்பை முன்பே தனியாக எடுத்துக்காட்டப்பெற்றுள்ளது. தமிழ்-சமச்கிருதம் தொடர்பான இருகட்டுரைகள் குறிப்பிட வேண்டியவை இலங்கையைச் சார்ந்த ஜே. டி. சேவியர் இந்து சமயத்தின் மூலமொழி சமற்கிருதமா அல்லது மூலத்திராவிட மொழியா என்ற ஐயத்தை எழுப்பி மூலத்திராவிட மொழியே மூல மொழி என்று நிறுவியுள்ளார்.

ஆரிய திராவிடமொழிகளை ஒப்பிட்டு ஆரியமொழி இந்தியா விற்கு வருவதற்கு முன் பேச்சுமொழியாக மட்டுமே இருந்தது. அப்போது இந்தோ-ஐரோப்பிய மொழிகள் தோன்றக் காரணமா யிருந்தது. ஆனால் இந்தியாவிற்கு ஆரியமொழி வந்தவுடன் திராவிடமொழி பல்வகைகளிலும் மேம்பாடடைந்திருந்தமை கண்டு அதன் கூறுகளில் 80 விழுக்காட்டை ஏற்றுக்கொண்டு எழுத்துமொழியாகவும் இலக்கிய மொழியாகவும் ஆனது. அதன் பின்னரே இன்று வட இந்தியாவிலுள்ள இந்தோ-ஆரிய மொழி களைத் தோற்றுவித்தது என்று தூத்துக்குடி எஸ். நடராசன் அவர்கள் பல்வேறு சான்றுகள் காட்டி நிறுவியுள்ளார்.

தமிழில் சந்தி, ஒலி இரட்டிப்பு, வேற்றுமை உருபுகள், மூக் கொலிகள் போன்ற மொழியியற் கட்டுரைகளும் இப்பகுதியில் உள்ளன.

## தொல்பொருளியல்

முன்பு நடந்த உலகத் தமிழ் மாநாடுகளில் தொடர்ந்து ஆயப் பெற்றுவரும் பொருள்களுள் சிந்துவெளி எழுத்துக்களைப் பற்றிய ஆய்வும் ஒன்றாகும். இப்பகுதியில் ஐந்து கட்டுரைகள் சிந்துவெளிப்

பண்பாடு-எழுத்து தொடர்புடையனவாகும். சிந்துவெளியில் வாழ்ந்த மக்கள் பேசியமொழி திராவிடமொழியே ஆரியமொழி அன்று என அமெரிக்க அறிஞர் வில்லியம் பிரைட் சான்றுகள் காட்டி நிறுவமுற்படுகிறார். சிந்துவெளிக் குறியீடுகளைக் கம்ப்யூட்டர் உதவியுடன் ஆய்வதெப்படி என்பதை டாக்டர் கிப்ட் சிரோமணி விளக்கியுள்ளார். வால்டர் பேர்சர்வீஸ் என்ற அமெரிக்க அறிஞர் அரப்பாவில் கிடைத்த ஒரு தந்தப்பொருளை அக்காலச் சிந்துவெளி மக்கள் பயன்படுத்திய நாட்காட்டி (காலண்டர்) என்பதைப் பல்வேறு விளக்கப்படங்கள் மூலம் காட்டுகிறார். சந்திரனின் தேய்பிறை, வளர்பிறையைக் கணக்கிட்டு நாட்களைக் கணித்ததையும் பருவகால அடிப்படையிலும் நிலவைக்கொண்டும் ஓரம்புநிலா, ஈரம்புநிலா என்று மாதங்களைச் சுட்டியதையும் தெளிவுற எடுத்துக்காட்டியுள்ளார். சிந்துவெளிச் சித்திர எழுத்தையும் காவடி ஏந்திய சின்னத்தையும் ஒப்பிட்டு ஆய்கிறார் அஸ்கோ பர்போலோ. நகர், அரண்மனை, வளைவு, அடைப்பு வளைவு, பொதுமன்றம், தெரு, வாழ்மனை ஆகியவற்றைக் குறிப்பதற்கு வழங்கப்பெற்ற சிந்துவெளிச் சின்னங்களை ஐராவதம் மகாதேவன் ஆய்ந்துள்ளார். சிந்துவெளி வரிவடிவம் இன்னதென்று இன்னும் முடிவுசெய்யப் பெறவில்லையாயினும் மேற்கூறிய கட்டுரைகள் அது திராவிட இனத்தைச் சார்ந்ததென்றே முடிவு செய்கின்றன.

இப்பகுதியில் இடம்பெற்றுள்ள கட்டுரைகளில் குறிப்பிட வேண்டியது தொழிற்செல்வர் நா. மகாலிங்கம் எழுதிய குமரிக் கண்டத்தைப் பற்றிய ஆய்வுக் கட்டுரையாகும். குமரிக்கண்டம் என்று ஒன்று இருந்ததாகவே சிலர் ஒப்புக்கொள்ள மறுக்கும் இந் நாளில் கடல்கொண்ட குமரிக்கண்டத்தைப் பற்றி விரிவாகக்கூறி அதுவே மாந்தனின் பிறப்பிடமென்றும் உலகத்தின் பழமையான மொழி தமிழ்மொழியே என்றும் குமரிக்கண்டம் கடலுள் மூழ்கியதென்றும் வீரவழிபாட்டின் அடிப்படையில் சைவம் தோன்றியதென்றும், ஒளிவழிபாடே முதலில் தோன்றிய வழிபாடு என்றும் இக்கட்டுரையாளர் நிறுவியுள்ளார்.

## கலைகளும் கட்டிடக் கலையும்

சித்தன்னவாசல், தஞ்சை ஓவியங்களின் சிறப்பை விளக்குகிறார் லீலா கணபதி. பிற கட்டிக்கலைகளின் மீது

திராவிடக் கட்டிடக்கலையின் செல்வாக்கு ஏற்பட்ட வகையை கே. வி. சௌந்தரராசன் ஆய்ந்துள்ளார். அங்கோர்வாட் நினைவுச் சின்னங்கள் பற்றிய கோமளாவரதன் அவர்களின் ஆய்வு திராவிடக் கட்டிடக்கலை கடல்கடந்த வரலாற்றைக் காட்டும்.

## நாட்டியமும் இசையும்

இந்திய இசைக்கருவிகளின் வரலாறு படங்களுடன் தெளிவாக விளக்கப்பெற்றுள்ளது எஸ். பிரேமலதா அவர்களின் கட்டுரையில். தமிழ்நாட்டு இசைக்கருவிகளைப் பற்றிய பி. தாமோதரனின் கட்டுரை மறைந்துபோன தமிழிசையை நினைவூட்டுவது. தென்னிந்திய இசைமரபுகளைப்பற்றி எஸ். இராமநாதனும், தாள முறை பற்றி வீ. ப. கா. சுந்தரமும் ஆய்ந்துள்ளனர். சிலப்பதி காரத்தில் இசை பற்றி சேலம் எஸ். ஜெயலட்சுமி ஆய்ந்துள்ளார்.

## நாடகம்

மேடை நாடகங்களைப் பற்றியும் நாடக நூல்களைப் பற்றியும் பயனுள்ள கட்டுரைகளை தா.ஏ. ஞானமூர்த்தி, ஏ.என்.பெருமாள், பூர்ணம் விசுவநாதன், சக்திபெருமாள் ஆகியோர் ஆய்ந்துள்ளனர். அமெரிக்காவிலிருந்து தமிழகம்போந்து 'தெருக்கூத்து' பற்றி ஆய்ந்து ஆடியும் பாடியும் மேடையில் காட்டியவர் ரிச்சர்ட் பிராஸ்கா.

## வரலாறு

தமிழர் வரலாறுபற்றி கே.கே. பிள்ளையும், தமிழக விடுதலை வீரர்கள் பற்றி கே. ராஜய்யனும், தமிழ்நாட்டில் சாதிகள் தோன்றிய விதத்தை கே. ஆர். அனுமந்தனும் ஆய்ந்துள்ளனர். 'திரு. வி. கவும் தேசிய காங்கிரசும்' பற்றி ஆய்ந்துள்ளவர் ஈ சா. விசுவநாதன். தமிழக வரலாற்றின் பல்வேறு காலகட்டங் களைப் பற்றிய ஆய்வுரைகள் இப்பகுதியில் உள்ளன.

## முற்கால இலக்கியம் (கி.பி. 600க்கு முன்)

சங்க இலக்கியத்தின் சிறப்புகளைப் பொன். சௌரிராசன், இரா. சண்முகம், கதிர். மகாதேவன்,ராஜம் ராமமூர்த்திஆகியோர் ஆய்ந்துள்ளனர். திருக்குறள் கருத்துகளைப் பற்றிய ஆய்வு க. த. திருநாவுக்கரசு, சுசோ மட்சுநாகா, பா. நடராசன், எஸ். இராமகிருஷ்ணன், கே. கைலாசபதி, வி. சே. சிவப்பிரகாசம், தி. முருகரத்தினம் ஆகியோரால் நிகழ்த்தப் பெற்றுள்ளது.

மற்றும் தமிழ்நாட்டில் கல்வி, தமிழ் இலக்கியத்தில் சட்டக் கூறுகள், சிலம்ப விளையாட்டு ஆகியவை பற்றிய கட்டுரைகளும் இப்பகுதியில் இடம்பெற்றுள்ளன.

## இடைக்கால இலக்கியம் (கி.பி. 600-1800)

இடைக்கால இலக்கியத்தின் சிறப்புக்கூறுகள் அனைத்தையும் மு. அருணாசலம் இரு கட்டுரைகளில் விரிவாகத் தந்துள்ளார். கம்பனின் அழகுணர்வைப் படித்துக் காட்டியுள்ளவர் நீதிபதி எஸ். மகாராஜன். தேவாரம், திருவாசகம், திருமூலர், சைவ வைணவ இலக்கிய ஆய்வுகள் கட்டுரைகளாக வடிக்கப்பெற் றுள்ளன. சிற்றிலக்கியங்களின் சிறப்புக்களும், முதல் மேனாட் டறிஞரான தத்துவபோதகரைப் பற்றிய கட்டுரையும் தனியே காணலாம்.

## தற்கால இலக்கியம்

இன்றைய தமிழ்ப் புதினத்தைப் பற்றி நீல. பத்மநாபனும் புதினம் சிறுகதைகள் பற்றி 'சிட்டி' சௌந்திரராஜனும் நன்கு ஆய்ந்துள்ளனர். புதுமைப்பித்தன் கதைகள் பற்றி ருஷிய அறிஞர் பைகானா ஆய்ந்துள்ளார். வாழ்க்கைவரலாறு நூல்கள் பற்றி 'சோமலெ'யும் தமிழ் நூல்கள் அச்சான வரலாற்றை டேவிட் பாக்கிய முத்துவும் ஆய்ந்துள்ளனர்.

## ஒப்புமை இலக்கியம்

தமிழ்-ஆப்பிரிக்கா, தமிழ் பிற-திராவிடமொழிகள், தமிழ்-மராத்தி, தமிழ்-சமச்கிருதம் போன்ற ஒப்பாய்வுகள் பற்றிய கட்டுரைகள் இப்பகுதியில் இடம்பெற்றுள்ளன.

## குழந்தை இலக்கியம்

சிறுவர் பாடல் இலக்கியத்தின் போக்கை பூவண்ணனின் ஆய்வுக்கட்டுரை உணர்த்துகிறது.

## நாட்டுப்புற இலக்கியம்

தமிழ்நாட்டுப்புற இலக்கிய ஆய்வு வளர்ந்துள்ள முறையை நா. வானமாமலை விரிவாக ஆய்ந்துள்ளார். நாட்டுப்புறப் பாடல்களின் வகைகள், அவற்றில் காணப்படும் சமுதாய

வாழ்க்கை, ஒத்துழையாமை இயக்கக் கருத்துக்கள், மருத்துவ முறைகள் தனித்தனியாக ஆயப்பெற்றுள்ளன. தமிழ்நாட்டில் பாமரர் இசைவளர்த்த வரலாற்றை சியாமளா பாலகிருஷ்ணனும் பாமரக் கலைஞர்களின் வாழ்க்கை முறையைப் பற்றி கே. சுப்பிரமணியமும் ஆய்ந்துள்ளனர்.

## வெளிநாட்டுத் தமிழ்

இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், மொரீசியசு, வடசுமத்திரா, ஜெர்மனி, மேற்கு ஆப்பிரிக்கா ஆகிய நாடுகளில் வாழும் தமிழர் களைப்பற்றியும் அங்குக் காணப்படும் தமிழ்ப் பண்பாடுகளைப் பற்றியும் அங்குத் தமிழ் இலக்கியம் வளர்ந்துவரும் பாங்கையும் அங்கு வாழும் பேரறிஞர்கள் ஆய்ந்துள்ளனர்.

## சமயமும் தத்துவமும்

சைவசித்தாந்த தத்துவத்தின் அடிப்படைக் கொள்கைகள் பற்றி முருபடி இரத்தினம் அவர்களும், ஞானாமிர்தம் பற்றி எஸ். கங்காதரனும் ஆய்ந்துள்ளனர். சிவநடனத்தில் வெளியாகும் சைவசித்தாந்த தத்துவம் பற்றி தர்மா திருநாவுக்கரசு விளக்கி யுள்ளார். வைணவ இலக்கியம், சம்பிரதாயம் பற்றி ந. சுப்புரெட்டியார், கே. கே. எ. வெங்கடாசாரி, பால்எங்கர், ராபர்ட் சி. லிஸ்டர். என். வேணுகோபால் ஆகியோர் ஆய்வுரைகள் தீட்டியுள்ளனர். தமிழ்நாட்டுக் கோயில்களின் அமைப்பில் காணப் படும் மறைபொருள் குறியீட்டைப்பற்றி எஸ். சீனிவாசனும், எஸ். மகராஜன் அவர்களும் இணைந்து எழுதியுள்ள கட்டுரை புதிய சிந்தனைகளையுடையது.

## அறிவியலும் தொழிற்கலையும்

தமிழர்தம் அறிவியல் புலமையை உணர்த்தும் கிணறு தோண்டும் கலையை ச.வே. சுப்பிரமணியன் 'கூவநூல்' எனும் கட்டுரையில் விளக்கியுள்ளார். தொய்யில் வரைதல், அலகு குத்துதல் ஆகியவற்றிலுள்ள அறிவியல் கூறுகளை இருகட்டுரைகள் ஆய்கின்றன,

## சமூகவியல்

இப்பகுதியில் மேனாட்டறிஞர்கள் தமிழ் நாட்டைப் பற்றி நிகழ்த்திய ஆய்வுகளின் முடிவுகள் உள்ளன. 18ஆம் நூற்றாண்

டில் தமிழகத்திற்கு வருகைதந்த அமெரிக்கப் பாதிரியார் பர்த்த லோமியோவின் தமிழ் நாட்டைப்பற்றிய படப்பிடிப்புகளை அன்டோனியோ சோரொன்டினோ என்ற அறிஞர் விளக்கியுள் ளார். சோழர்ஆட்சியில் காவிரிப்படுகையில் நடைமுறையில்இருந்த விவசாய முறையைச் சப்பானிய அறிஞர் நொபுரு கரோஷிமா ஆய்ந்துள்ளார். சோழர் ஆட்சியில் நில உரிமை முறை குறித்து எல். பி. ஆல்யேல் ஆய்வு செய்துள்ளார்,

உடையார் உறவு முறைகளைப்பற்றி ஆயோபரி புகார்டும் புதுவையிலுள்ள நாட்டார்களைப் பற்றி மிசுஷிமாவும் ஆய்வுக் கட்டுரைகள் வடித்துள்ளனர்- பிராமண சமூகத்தைப் பற்றி புரூஸ் கலர் ஆய்வு செய்கையில் கமலா கணேஷ் அம்மையார் நெல்லை மாவட்டத்திலுள்ள கோட்டைப் பிள்ளைமார் பழக்க வழக்கங்களைப் பற்றி விரிவாக ஆராய்ந்துள்ளார்.

## மொழிபெயர்ப்பும் அகராதிக்கலையும்

சட்டத்துறையில் மொழிபெயர்ப்பில் உள்ள சிக்கல்களை ஏ. சிதம்பரம், நீதிபதி எஸ். மகராஜன் ஆகியோர் விளக்கியுள் ளனர். ஆட்சித்துறை மொழிபெயர்ப்பிலுள்ள பிரச்சனைகளை அவ்வை நடராசன் ஆய்ந்துள்ளார். இலக்கிய மொழிபெயர்ப்பில் எழும் இன்னல்களை ஜே. பார்த்தசாரதி, சி. கனகராயகம், வி. மி. ஞானப்பிரகாசம் ஆகியோர் ஆய்ந்துள்ளனர். அறிவியல் மொழிபெயர்ப்பிலுள்ள சிக்கல்களை விளக்குவோர் ரா. அம்பிகை பாகன், பெ. நா. அப்புஸ்வாமி ஆகியோர். தமிழ் அகராதிக் கலை யின் வளர்ச்சியை சண்முகசுந்தரனார் விளக்கியுள்ளார்.

## பல்வகை

பிரிட்டனில் உள்ள தமிழ் நூல்களைப்பற்றிய விவரங்களை ஆல்பெர்தின் கௌளர் அம்மையாரும், ஐரோப்பிய நாடுகளிலுள்ள தமிழ்ச் சுவடிகளைப் பற்றி அ. தாமோதரனும் தந்துள்ளனர்.

## ஆட்சித்தமிழ்

தமிழ் மொழியை வளர்க்கத் திட்டமிடுதல் பற்றிக் கருணா கரன் விளக்கியுள்ளார். வங்கிகளில் தமிழைப் பயன்படுத்தும் போது ஏற்படும் சிக்கல்களைக் கூறி அவற்றைச் செம்மைப்படுத்திய வகையையும் விளக்கியுள்ளார் இரா. நமச்சிவாயம்.

முதலிரண்டு தொகுதிகளில் அமைந்துள்ள கட்டுரைகளின் சாரத்தைச் சுருக்கி முன்னுள்ள பகுதியில் தரமுடிந்ததே தவிர ஒவ்வொன்றையும் நுணுகி ஆய்ந்து அவற்றின் முடிவுகளைப் பற்றிச் சீர்தூக்கி ஆய்ந்து கூறின் இக்கட்டுரையின் அளவு பெருகிக் கொண்டே போகுமென்பதால் இத்துடன் நிறுத்திக்கொள்ள வேண்டியதாயிற்று. மாநாட்டில் எத்தகைய பொருள்கள் பற்றி ஆய்வுரைகள் நிகழ்த்தப்பெற்றன என்பது பற்றி பொதுவாக அறிவிக்கும் நோக்கத்துடன்தான் இப்பகுதி எழுதப்பெற்றது.

## தமிழ்த்தொகுதி

மாநாட்டு ஆய்வேடுகளின் மூன்றாவது தொகுதி முழுக்கத் தமிழ்க் கட்டுரைகளையே கொண்டது. மேற்கூறப்பெற்ற எல்லாத் தலைப்புகளிலும் இக்கட்டுரைகள் அமைந்திருப்பினும் தனியாகப் படிக்க எளிமையாக இருக்கும் பெருட்டே இக்கட்டுரைகள் தனித்தொகுதியாக வெளியிடப்பெற்றுள்ளன. 900 பக்கங்களுடைய இத்தொகுதியில் 67 கட்டுரைகள் இடம்பெற்றுள்ளன.

| | |
|---|---|
| பழந்தமிழ் இலக்கியம் | 14 |
| இடைக்கால இலக்கியம் | 7 |
| தற்கால இலக்கியம் | 5 |
| ஒப்பிலக்கியம் | 2 |
| இலக்கணம் | 9 |
| மொழியியல் | 4 |
| நாடகம் | 3 |
| நாட்டுப்புற இலக்கியம் | 3 |
| அறிவியல் | 7 |
| வரலாறு | 2 |
| சமூகவியல் | 1 |
| சமயம் | 3 |
| ஆட்சித்தமிழ் | 4 |
| கல்வி | 1 |
| சித்தமருத்துவம் | 2 |

தமிழ்க் கட்டுரைகளில் 40 விழுக்காடு இலக்கியம் பற்றியனவே. பழந்தமிழ் இலக்கியத்தில் சங்க இலக்கியத்தைப் பருந்துப் பார்வையாகப் பார்த்திருப்பவர் சி. பாலசுப்பிரமணியம். அதில்

காணப்படும் கற்பனையைப் பற்றி கா. மீனாட்சிசுந்தரனாரும், அறக்கூறுகளைப்பற்றி ஆ. கந்தசாமியும், சமூகஇயல் கோட்பாடு பற்றி மா. செல்வராசனும் ஆய்வுரை தந்துள்ளனர். வாழ்வியல் பற்றி தா. வே. வீராசாமி, மா. இராமலிங்கம், மனோன்மணி சண்முகதாஸ் ஆகியோர் ஆய்ந்துள்ளனர்.

திருக்குறள் வெளிப்படை எனும் பொருளில் வ. சுப. மாணிக்கனாரும், வள்ளுவரின் சமய நோக்குபற்றி ச. தண்டபாணி தேசிகரும் கட்டுரைகள் வடித்துள்ளனர்.

இஸ்லாமியச் சிற்றிலக்கியம் பற்றி எம். எம். உவைசும், கிறித்துவக் காப்பியங்கள் பற்றி பா. வளன்அரசும் தந்துள்ள கட்டுரைகள் தமிழில் பல்வேறு சமயத் தாக்குதல்களை எடுத்துக் காட்டுகின்றன.

இலக்கிய ஆய்வில் பல புதிய கோணங்களை சாலை இளந்திரையன், கலா பரமேஸ்வரன், சோ. இலட்சுமிரதன் பாரதி ஆகியோர் கூ ட்டியுள்ளனர்.

சட்டங்களைத் தமிழில் கொண்டு வருவதற்கு நாவல் இலக்கியத்தின் தந்தையான வேதநாயகனார் இயற்றிய 'சித்தாந்த சங்கிரகம்' எந்த அளவு பாடுபட்டது என்பதை ந. சஞ்சீவி நன்கு விளக்கியுள்ளார்.

எழுத்து, சொல், யாப்பு பற்றிய துறைகளில் புதிய கருத்துக்களை வெளியிடும் கட்டுரைகள் உள்ளன.

தெருக்கூத்து பற்றி இரா. அறிவுடைநம்பியும், மா. நவநீத கிருட்டிணனும் புதிய செய்திகளைத் தந்துள்ளனர்.

அறிவியல் பற்றி அத்துறை அறிஞர்கள் ஆய்வுக்கட்டுரைகள் தந்தது பற்றி இக்கட்டுரையின் தொடக்கப்பகுதியில் விரிவாகக் கூறப்பெற்றுள்ளது.

ஆட்சித்துறையில் தமிழ் பயிலப் பெறுவதை க. இராமலிங்கனார், மா. நன்னன், கோ. முத்துப்பிள்ளை ஆகியோர் அழகுற எடுத்துக் கூறியுள்ளனர்.

காவல்துறையிலும் தமிழைக் கட்டளைக் சொற்கள் கூறுதற்குப் பயன்படுத்த முடியுமென்பதைக் கட்டுரைவாயிலாகவும் காவலர் பலரை அணிவகுக்க வைத்து நேர்முகமாகவும் நிறுவிக் காட்டியவர் காவல்துறை அதிகாரி ச. இராசவேலு,

தமிழ் மருத்துவமுறையான சித்தமருத்துவத்தின் சிறப்பை ப. சிற்சபை, ந. சேதுரகுநாதன் ஆகிய இருவரும் எடுத்துரைத்துள்ளனர்.

மொத்தத்தில் மூவாயிரம் பக்கங்களுக்கு மேற்பட்ட இம்மூன்று தொகுதிகளைக் கொண்ட ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டுக் கருத்தரங்கக் கட்டுரைக் கோவை அரிய கருவூலமாகும். மறைவாகத் தமிழர்களே தமக்குள் பழங்கதைகள் கூறி மகிழ்ந்திருந்த காலம் போய் தமிழைப் பற்றிய வெளிநாட்டறிஞர்களும் தமிழறிஞர்களும் கலந்து பேசிக் கருத்துப் பரிமாற்றம் செய்து தமிழை நல்ல முறையில் வளர்க்க முற்பட்டுள்ளமை தமிழ்மொழிக்கும் தமிழர்கட்கும் உள்ள நல்ல எதிர்காலத்தை உணர்த்துகிறது.

# 2. ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு —பொதுநிலைக் கருத்தரங்கு

டாக்டர் ந. கடிகாசலம்

தன்னேரில்லாத் தமிழுக்கு நான்மாடக்கூடலாம் மதுரை மாநகரில் ஐந்தாவது உலகத் தமிழ் மாநாடு நடத்தப் பெற்றது. மாநாட்டுத் துவக்க விழாவுக்குப் பத்து இலட்சம் பேரும், நிறைவு விழாவுக்கு 25 இலட்சம் பேரும் கூடினார்கள். பொதுநிலைக் கருத்தரங்கில் கருத்தரங்கம், கவியரங்கம், பட்டி மன்றம், வழக்காடு மன்றம் எனப் பல்வேறு நிலைகளில் நிகழ்ச்சிகள் சிறப்பாக நடத்தப்பெற்றன: பந்தயத் திடலில் கூடிய பல்லாயிரக்கணக்கான மக்களின் செவிகளிலும் தேனாறு பாய்ந்தது என்று கூடச் சொல்லலாம்.

தன்னேரில்லாத் தமிழுக்கு—கோலாலம்பூர், சென்னை, பாரிசு, யாழ்ப்பாணம் ஆகிய இடங்களில் உலகளாவிய நிலையில் மாநாடும் கருத்தரங்கும் நடைபெற்றன. 1981 சனவரித் திங்களில் கூடல்மாநகர் என வழங்கப்பெறும் மதுரையில் ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு நடைபெற்றது. பொதுமக்களுக்கெனப் பட்டி மன்றம், வழக்காடு மன்றம், கருத்தரங்கம் கவியரங்கம் ஆகிய நிகழ்ச்சிகள் மதுரைப் பந்தயத் திடலில் சனவரி 5 முதல் 10 தேதி வரை நடைபெற்றன. இதுவே பொதுநிலைக் கருத்தரங்கு என அமைந்தது.

## மாநாட்டுத் தொடக்க விழா

1981 சனவரி 4-ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை மாலை 6 மணிக்கு மேதகு ஆளுநர் திரு. சாதிக் அலி ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டைத் தொடக்கி வைத்தார். ''திராவிட மொழிகளில்

தலையானதாக, பண்பட்ட உயர்தனிச் செம்மொழியாக, மிகச் சிறந்த வளர்ச்சியைப் பெற்றுள்ளதாகத் தமிழே திகழ்கிறது என்பதை அறிஞர் பலரும் ஒத்துக்கொள்கின்றனர். ...வளங்கெழுமிய பண்பாட்டு மரபைக் கொண்ட தமிழ்மொழியையும், தமிழிலக்கியங்களையும் கற்பதன் மூலம் அனைத்து நாட்டு அறிஞர் பெருமக்களிடமும் தமிழ் ஈடுபாடும் ஆர்வமும் விளைந்திருப்பதில் வியப்பில்லை. ...என்றும் மாறாத தனித்தன்மையைக் கொண்டிலங்குவதோடு, புதிய சிந்தனைகளையும், புதிய அறிவுத்துறைகளையும் ஏற்றுக் கொள்ளும் வண்ணம் புதிய சொற்களும் புதிய கருத்துக்களும் தன்னிடம் வந்தமையும் வகையில் தமிழ்மொழி இடம்தர வேண்டும் என்பது என் பணிவான கருத்தாகும்... ''யாதும் ஊரே யாவரும் கேளிர்'' என்று சங்கப் புலவர் கணியன் பூங்குன்றனார் உரைத்த குறிக்கோள் மொழியின் வழியில் ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு நடைபெறுவது முற்றிலும் பொருத்தமாகும்'' என்று மேதகு ஆளுநர் தம்முடைய தொடக்கவுரையில் குறிப்பிட்டார்.

இந்நிகழ்ச்சிக்குத் தலைமை வகித்தவர் மாண்புமிகு தமிழக முதல்வர் திரு. எம். ஜி. இராமச்சந்திரன். அவர் தம்முடைய தலைமை உரையில், ''தமிழ் ஆட்சி மொழியில் அரசு அக்கறை கொண்டுள்ளது. தமிழ் வழக்கு மொழியாக—வழக்கத்தில் உள்ள மொழியாக மட்டுமல்ல—வழக்கு மன்றத்தில்—நீதிமன்றத்தில் தீவிரமாக்கப்பட முயற்சி நடைபெறும்...உலகத் தமிழர் அனைவரும் அறிவினால் ஒன்றுபடுவோம். தமிழ் இனத்தவரிடம் ஒருமை உணர்ச்சி ஏற்பட அனைவரும் பாடுபடுவோம்'' என்று குறிப்பிட்டார்.

## பொதுநிலைக் கருத்தரங்கத் தொடக்கம்

5.1.'81 திங்கட்கிழமை காலை 10 மணிக்கு, பொதுநிலைக் கருத்தரங்கத்தை, தமிழக மேலவைத் தலைவர் திரு. ம. பொ சிவஞானம் தொடங்கிவைத்தார். ''தமிழ்மொழி தமிழ் நாட்டுக்கு மட்டுந்தான் சொந்தம் என்று எண்ணுதல் கூடாது; உலக மொழி தமிழ் என்பதை எல்லோருக்கும் எடுத்துச் சொல்ல வேண்டும்'' என்று திரு. ம. பொ. சி. குறிப்பிட்டார்.

## கருத்தரங்கம்

''மாந்தர் தோற்றமும் தமிழர் மரபும்'' என்னும் தலைப்பில் முதல் நாள் கருத்தரங்கம் நடைபெற்றது. நீதிபதி கோகுல

கிருஷ்ணன் இக் கருத்தரங்கினுக்குத் தலைமை ஏற்றார். 'உலகில் மனிதன் தோன்றிய போதே தமிழ்தான் பேசினான் என்பதற்கான ஆதாரங்கள் சிலப்பதிகாரத்தில் உள்ளன' என்று தம் உரையில் அவர் குறிப்பிட்டார். தொடர்ந்து டாக்டர் மு. அறம், தேவ நேயப் பாவாணர், கா. அப்பாத்துரை, அ. மு. பரமசிவானந்தம், டாக்டர் ந சஞ்சீவி, டாக்டர் க. த. திருநாவுக்கரசு, டாக்டர் ச. அகத்தியலிங்கம் முதலான பல தமிழறிஞர்கள் இக் கருத்தரங்கில் உரையாற்றினார்கள்.

6.1.81 அன்று பிற்பகல் 2 மணி அளவில் கருத்தரங்கம் திருக்குறள் அரங்கமாக அமைந்தது. திருக்குறளார் வி. முனுசாமி தலைமை ஏற்றார். "தமிழ்ச் சமுதாயத்தை உலகுக்குக் காண்பித்தவர் திருவள்ளுவர், தங்கத்தை உரைத்துப் பார்க்கலாம். பித்தளையை உரைத்துப் பார்க்கலாம்; ஆனால் வைரத்தை அப்படிப் பார்க்க முடியாது. திருக்குறள் வைரத்தைப் போன்றது" என்று திருக்குறளார் திருக்குறளின் சிறப்பை எடுத்துக்கூறினார். தொடர்ந்து, ந. ரா. முருகவேள், பண்டித கா. பொ. ரத்தினம், இராஜம்மாள் தேவதாஸ், அருள்திரு ஞானப்பிரகாசம், அன்பு கணபதி, டாக்டர் ந. பிச்சமுத்து, டாக்டர் சாரங்கபாணி, டாக்டர் சுப. அண்ணாமலை, டாக்டர் கா. மீனாட்சி சுந்தரம், டாக்டர் இ. சுந்தரமூர்த்தி, டாக்டர் மெ. சுந்தரம், டாக்டர் சங்கரராசு நாயுடு ஆகிய அறிஞர்கள் திருக்குறளின் பல்வேறு சிறப்புக் கருத்துக்களைக் குறித்து உரை நிகழ்த்தினார்கள்.

8.1.81 வியாழக்கிழமை காலை 10 மணிக்கு, "காப்பிய உலகக் கலைநலம்" எனும் தலைப்பில் கருத்தரங்கம் நடைபெற்றது. அ ச. ஞானமூர்த்தி தலைமை ஏற்றார். டாக்டர் ந. சுப்பு ரெட்டியார் தொடக்கவுரை நிகழ்த்தினார். இக் கருத்தரங்கில் கம்பனடிப்பொடி சா. கணேசன், உடுமலை நயினார் முகமது, டாக்டர் தா. ஏ ஞானமூர்த்தி, டாக்டர் இரா. சனார்த்தனம், டாக்டர் சிங்காரவேலு, டாக்டர் பரிமணம், டாக்டர் கு. திருமேனி முதலான பல அறிஞர்கள் உரையாற்றினார்கள்.

9.1.81 வெள்ளியன்று பிற்பகல் 2-30 மணிக்கு நடைபெற்ற "இன்றைய தமிழின் எழில்" எனும் தலைப்பிலான கருத்தரங்குக்கு எழுத்தாளர் அகிலன் தலைமையேற்றார்; இதில் பல எழுத்தாளர்களும் தமிழ் அறிஞர்களும் பங்கேற்று, இன்றைய தமிழின் எழிலைப் பலவாறாகப் படம் பிடித்துக் காட்டினர்.

10.1.81 சனிக்கிழமையன்று காலை 10 மணிக்கு, ''சங்க இலக்கியச் சால்பு'' எனும் பொருளில் கருத்தரங்கம் நடைபெற்றது. மாண்புமிகு நிதியமைச்சர் திரு. இரா. நெடுஞ்செழியன் தலைமையில் இக் கருத்தரங்கு நடைபெற்றது. ''எல்லா நற்பண்புகளையும் தொகுத்துச் சொல்ல ஒரு தமிழ்ச் சொல் உள்ளது. அது தான் சால்பு. அறிவுசால், பெருமைசால், தகைமை சால், சீர்சால் என்றெல்லாம் நாம் குறிப்பிடுகிறோம். பண்பாடு மிகுந்து நிறைந்து, செறிந்து , காணப்பட்டால் அதுதான் சால்பு. சங்க இலக்கியங்களை நுகர்ந்தால் மிக நல்ல பண்பாடுகளை நாம் அறிந்து கொள்ளலாம்'', என்று தம் தலைமையுரையில் நிதியமைச்சர் குறிப்பிட்டார். டாக்டர் சாலை இளந்திரையன் தொடக்கவுரை ஆற்றினார். தொடர்ந்து டாக்டர் ச.வே சுப்பிரமணியன், டாக்டர் முத்துக்கண்ணப்பர், டாக்டர் தமிழண்ணல், டாக்டர் இரா. கு' நாகு, டாக்டர் பொற்கோ, டாக்டர் இளவரசு போன்ற பல தமிழறிஞர்கள் உரையாற்றினார்கள்.

## கவியரங்கம்

ஐந்து கருத்தரங்குகள் நடைபெற்றது போல, கவியரங்கமும் பந்தயத் திடலில் நடைபெற்றது. 5.1.81 பிற்பகல் 2 மணிக்கு நடைபெற்ற கவியரங்கத்தின் பொருள்: எப்போதும் இருப்பவர்கள். திரு. புலமைப்பித்தன் இதற்குத் தலைமையேற்றார். மாண்புமிகு அமைச்சர் திரு. மா. முத்துசாமி தொடக்கவுரை நிகழ்த்தினார். கவிஞர் துறைவன் வாழ்த்துரை வழங்கினார். தொடர்ந்து, கவிஞர் பலர் தம் கவிதையினை வழங்கினர்.

| பொருள் | கவிஞர் |
|---|---|
| திருவள்ளுவர் | புத்தனேரி சுப்பிரமணியம் |
| இளங்கோ | முருகுசுந்தரம் |
| சாத்தனார் | மீ. இராசேந்திரன் |
| கம்பர் | நாரா. நாச்சியப்பன் |
| திருத்தக்க தேவர் | குருவிக்கரம்பை சண்முகம் |
| குமரகுருபரர் | தமிழரசன் |
| சிவப்பிரகாசர் | இளஞ்செழியன் |
| வேதநாயகம் | மணிமொழி |
| உமறுப்புலவர் | முத்துலிங்கம் |
| வள்ளலார் | பாலசுந்தரம் |
| பாரதியார் | நாவேந்தன் |
| பாரதிதாசன் | அறிவுமதி |

7.1.81 புதனன்று பிற்பகல் நடைபெற்ற "எண்களும் எண்ணங்களும்" எனும் பொருள் குறித்த கவியரங்கத்திற்குத் தலைமை ஏற்றவர் கவிஞர் வாலி. ஒன்று முதல் பதின்மூன்று எண்கள் வரை, ஒவ்வொரு எண்ணின் சீர்மையைப் பதின்மூன்று கவிஞர்கள் கவிதைகளால் சிறப்பித்துப் பாடினர்,

8.1.81 வியாழன் பிற்பகலில் கருத்தரங்கம் நடைபெற்றது. பொருள் : இனிய தமிழில் இயற்கைப் பொருள்கள். தலைமை : கவிஞர் சுரதா. நிலம், நெருப்பு, வெளி, நிலவு, கடல், மலை, ஆறு, மேகம், அருவி, காடு, காற்று, கதிரவன் ஆகிய இயற்கைப் பொருள்களைப் பற்றிக் கவிஞர்கள் கவிதை மழை பொழிந்தனர்.

9.1.81 வெள்ளியன்று காலை 10 மணிக்கு நடைபெற்ற கவியரங்கத்தின் தலைப்பு : "தமிழ் இன்பம்" தலைமை : கவிஞர் கண்ணதாசன். பல்வேறு கவிஞர்கள் தமிழின்பத்தைப் பல்வேறு பார்வைகளால் படம்பிடித்துக் காட்டினார்கள்.

## பட்டி மன்றம்

6.1 81 அன்று காலை 10 மணிக்கு குன்றக்குடி அடிகளார் தலைமையில் உலக வாழ்வுக்கு உயர்வூட்டுவது அறிவியலா? பொருள் வளமா? இன்பச் செழுமையா? எனும் பொருள் குறித்துப் பட்டிமன்றம் அமைந்தது. தா. பாண்டியன் தொடக்கவுரையாற்றினார். உலக வாழ்வுக்கு உயர்வூட்டுவது அறிவியலே என்ற அணியில் அறிவொளியின் தலைமையில் டாக்டர் பூ. சொல் விளங்கும் பெருமாள், தா. கு சுப்பிரமணியம், இராசம் மரகதம் ஆகியோரும்; பொருள் வளமே என்ற அணியில் இ. மறைமலை தலைமையில் சனார்த்தனம், நெடுமாறன், கோ. பா. தாமரை ஆகியோர் வாதாடினர். இன்பச் செழுமையே என்ற அணியில் தெ. ஞானசுந்தரம் தலைமையில் அறிவுமணி, அரசு மணிமேகலை, கா. தமிழரசி ஆகியோர் வாதாடினர். "எல்லோரும் எனக்காக; நானும் எல்லோருக்குமாக என்ற எண்ணம் வரவேண்டும். மனத்துக்கண் மாசிலானாதல் அறம்; அதுவே எல்லா அறங்களிலும் சிறந்தது என்றார் வள்ளுவர். எனவே உலக வாழ்வுக்கு உயர் ஆட்டுவது அறிவியலே என்று தீர்ப்பு வழங்குகிறேன்" என பட்டி மன்றத்தை முடித்து வைத்தார் குன்றக்குடி அடிகளார்.

7.1 81 புதன்கிழமை பிற்பகல் 3 மணிக்கு திரு கி. வா. ஜகந்நாதன் தலைமையில் "இலக்கிய வளர்ச்சிக்கு எழில் சேர்ப்பது

உணர்வு நலமா? நாடக வளமா? அறக்கருத்துக்களா?'' எனும் பொருள் குறித்து, ஒரு பட்டிமன்றம் நடைபெற்றது. உணர்வு நலமே எனும் அணியில் கு துரைராசன், தி. இராசகோபாலன், அரங்கசாமி, சித்திரா திலகர் ஆகியோரும்; நாடக வளமே எனும் அணியில் அறிவுடைநம்பி, சாரங்கபாணி, ஆ. இராமு, சாரதா நம்பிஆரூரன் ஆகியோரும்; அறக்கருத்துக்களே எனும் அணியில் சாலமன் பாப்பையா, சகந்நாதன், மைக்கேல் பாரடே, லலிதா அறிவுடைநம்பி ஆகியோரும் வாதிட்டனர்.

## வழக்காடு மன்றம்

பட்டிமன்றம் போன்றே மக்களின் பேராதரவைப் பெற்று வருவது வழக்காடு மன்றம். இரு வழக்காடு மன்றங்கள் இப் பொதுநிலைக் கருத்தரங்கில் இடம் பெற்றன. 8.1.81 வியாழனன்று பகல் 12 மணிக்கு நடைபெற்ற வழக்காடு மன்றத்தின் பொருள் : "கோவலன் வாழ்வில் மேலோங்கியது கலையுணர்வே''. வழக்குத் தொடுத்தோர்: சோ. சத்தியசீலன், இரா. காந்திமதி, எதிர் வழக்காடியோர் : அ. வெ. ராசகோபாலன், உமையான் முத்து.

9.1.81 வெள்ளிக்கிழமை பகல் 12 மணிக்கு நடைபெற்ற வழக்காடு மன்றத்திற்கு நடுவராக இருந்தவர் : டாக்டர் எஸ். இராமகிருஷ்ணன், பொருள் : "கம்பர் காப்பியத்தில் மேலோங்கி நிற்பது தமிழ் இலக்கிய உணர்வே''.

வழக்குத் தொடுத்தோர் : வலம்புரி ஜான், இந்திரகுமாரி.

எதிர் வழக்காடியோர் : சுகி சிவம், இளம்பிறை மணிமாறன்.

கருத்தரங்கம், கவியரங்கம், வழக்காடு மன்றம், பட்டிமன்றம் ஆகிய் நிகழ்ச்சிகளில் பங்கு பெற்றோர் தத்தம் திறமையை நன்கு வெளிப்படுத்தி, கூடியிருந்த பல்லாயிரக்கணக்கான மக்களின் செவிகளுக்குத் தேன்விருந்து படைத்தார்கள் என்றே கூறலாம்.

## நிறைவு விழா

நான்மாடக்கூடலில் சனவரி 4-ஆம் நாள் தொடங்கிய ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டு நிகழ்ச்சிகள் 10-ஆம் நாள் இரவு 7 மணியளவில் நிறைவடைந்தன. நிறைவு விழாவில் கலந்து

கொண்டு சிறப்பித்தவர் இந்தியத் துணைக் கண்டத்தின் தலைமை அமைச்சர் இந்திரா காந்தி. அவர் தம்முடைய உரையில், ''இந்தியை யார்மீதும் திணிக்க மாட்டோம்... 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற தமிழ்ப்புலவர் கூற்று பரந்த நோக்கத்தை உணர்த்துகிறது. உள்ளத்திலே பரந்த எண்ணங்களை உருவாக்க வேண்டும். மேலும் மேலும் பல மொழிகளைக் கற்க மக்கள் அனைவரும் முன் வர வேண்டும்'' என்று குறிப்பிட்டார்.

முன்னதாகத் தமிழ்த்தாயின் திருவுருவச் சிலையைத் தமிழக முதல்வர் திரு. எம். ஜி. ஆர் திறந்து வைத்து உரையாற்றினார். உலகத் தமிழ் மாநாட்டு விழாவின் தலைவர் மாண்புமிகு நிதியமைச்சர் திரு இரா. நெடுஞ்செழியன், மாநாடு சிறப்புற நடைபெறுவதற்கு உறுதுணையாக இருந்து உழைத்திட்ட அனைவருக்கும் நன்றி கூறினார். நாட்டுப் பண் இசைக்க, ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டுப் பொதுநிலைக் கருத்தரங்கு நிகழ்ச்சிகள் நிறைவடைந்தன.

# 3. தமிழ்ப் பல்கலைக்கழகம்

**டாக்டர் ந. கடிகாசலம்**

எல்லா மொழிக்கும் பல்கலைக்கழகம் அமைத்து விட முடியாது. சில மொழிக்குத்தான் பல்கலைக்கழகம் அமைக்கலாம். அதில் முதன்மை யானது தமிழ். தமிழன்னையின் முதல் மகளாகத் தமிழ்ப் பல்கலைக் கழகம் பிறக்கிறது. தமிழர்க்கு வரவேற்பும் தமிழ்க் கலாசாரத்துக்குப் பெருமையும் தேடித் தருவதில் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் பங்கு முக்கியமானது. டாக்டர் வி.ஐ. சுப்பிரமணியம் அவர்களைத் துணை வேந்தராகப் பெற்றுள்ள தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக்கழகம் தமிழுக்கும் தமிழருக்கும் மேன்மையைத் தேடித்தரும் என உறுதியாக நம்பலாம்.

## தமிழக முதல்வர் உறுதி

1981 சனவரியில் மதுரையில் ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு நடைபெற்றபோது, தமிழ்நாட்டில் தமிழ்ப் பல்கலைக்கழகம் நிறுவப்படும் என்று மாண்புமிகு முதல்வர் திரு. எம். ஜி. இராமச் சந்திரன் குறிப்பிட்டார். இவ்வறிவிப்பைத் தொடர்ந்து, தமிழ் பல்கலைக்கழகம் அமைக்க அரசுக்குப் பலவற்றையும் தெளிவு படுத்தும் நிலையில் தமிழறிஞர்கள் அடங்கிய வல்லுநர் குழுவை அரசு நியமித்தது.

## வல்லுநர் குழு

தமிழ்நாடு அரசு அறிவித்த வல்லுநர் குழுவில் டாக்டர் வ. சுப. மாணிக்கம், டாக்டர் ம. பொ. சிவஞானம், கி. ஆ. பெ. விசுவநாதம், டாக்டர் வா. செ. குழந்தைசாமி, டாக்டர் ச. வே. சுப்பிரமணியன், டாக்டர் சாலை இளந்திரையன், டாக்டர் மா. நன்னன், இரா. மீனாட்சி சுந்தரம் ஆகிய அறிஞர்கள் இடம்

எ—3

பெற்றிருந்தனர். இக்குழு தமிழ்ப் பல்கலைக்கழக அமைப்பு குறித்து ஓர் அறிக்கையை அரசுக்கு அளித்தது. இக்குழுவின் இவ்அறிக்கைக்கு ஏற்பவே தமிழ்ப் பல்கலைக்கழகம் அமைகிறது.

## பல்கலைக்கழக அமைப்பு முறை

தமிழ்ப் பல்கலைக்கழகம் ''உறைஉள் தனிப்பல்கலைக் கழகமாக'' (Residential Unitary University) அமைகிறது. பிற பல்கலைக்கழகங்களைப் போலவே வேந்தர், இணைவேந்தர், துணை வேந்தர், பதிவாளர் ஆகியோரைக் கொண்டு செயல்படவிருக்கிறது. 40 உறுப்பினர்கள் கொண்ட பேரவை (Senate) யையும், 12 உறுப்பினர் கொண்ட ஆட்சிக்குழுவையும் (Syndicate) இப்பல்கலைக்கழகம் கொண்டிருக்கும்.

## துவக்கம்

தஞ்சைத் தரணியில், (அண்ணா பிறந்த நாளான) 1981 செப்டெம்பர் 15-ஆம் நாளில் தமிழ்ப் பல்கலைக்கழகம் துவக்கி வைக்கப்பட்டது. கேரளப் பல்கலைக்கழக மொழியியல் துறைத் தலைவரும் பேராசிரியருமான டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம் இப் பல்கலைக்கழகத்தின் முதல் துணை வேந்தராக நியமிக்கப்பட்டார்.

## புலங்களும் துறைகளும்

தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் குறிக்கோளுக்கேற்பவே புலங்களும் துறைகளும் அமைக்கப்பட்டுள்ளன. 1. கலைப்புலம் 2. சுவடிப் புலம் 3. மொழிப்புலம் 4. அறிவியல் புலம், 5. வளர் தமிழ்ப்புலம் ஆகிய ஐந்து புலங்கள் முதலில் தொடங்கப் பட்டுள்ளன. இப்புலங்களின் கீழ் இயங்கும் துறைகள் வருமாறு:

1. கலைப்புலம் > சிற்பத்துறை, ஓவியத்துறை, இசைத்துறை நாடகத்துறை
2. சுவடிப்புலம் > ஓலைச் சுவடித்துறை, அச்சு சுவடித்துறை, கல்வெட்டுத் துறை
3. வளர்தமிழ்ப்புலம் > அயலகத்தமிழ்த்துறை, மொழிபெயர்ப்புத் துறை, தொகுப்புத் துறை
4. மொழிப் புலம் > இலக்கியத்துறை, மொழியியல் துறை
5. அறிவியல் புலம் > சித்த மருத்துவத் துறை, பண்டைய அறிவியல் துறை, தொழில்துறை, கட்டடக் கலைத்துறை

## சிறப்புரையாளர்

இந்தியாவிலும், பிற வெளிநாடுகளிலும் ஆய்வு நிறுவனங்கள் பல்கலைக் கழகங்களில் பணிபுரியும் பேராசிரியர்களைக் குறுகிய காலத்திற்கு வரவழைத்து ஆய்வு மேற்கொள்ளச் செய்தல் தமிழ்ப் பல்பலைக் கழகத்தின் சிறப்பான பணியாகக் காணக் கிடக்கிறது.

## ஆய்வாளர்கள்

இப்பல்கலைக்கழகம் மேற்கொள்ளும் ஆய்வுப் பணிகளுக்கேற்ப ஆய்வாளர் அமர்த்தப்படுவர். முதல் கட்டமாக 50 ஆய்வாளருக்கு நிதிவசதி செய்யப்பட்டுள்ளது.

## நூலகம்

தமிழாய்வு செய்வோர்க்குச் சிறந்த வகையில் உதவும் வகையில் நூலகம் அமைய விருக்கிறது. இந்நூலகத்தில் 'இல்லாத நூலே இல்லை' எனுமளவுக்கு எல்லா நூல்களையும் கொண்டதாக இந்நூலகம் அமைய முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டுள்ளன.

## அருங்காட்சியகம்

தமிழர் பண்பாட்டுச் சின்னங்கள் இடம் பெறவுள்ள இவ் அருங்காட்சியகத்தில் உலக நாடுகள் பலவற்றிலிருந்தும் இதற்கான பொருள்கள் சேகரிக்கப்படவிருக்கின்றன.

## பதிப்பகம்

நூல் வெளியிடுதல், இதழ் வெளியிடுதல், பதிப்பித்தல் ஆகியவை இப்பல்கலைக்கழகப் பணிகளில் ஒன்றாகும். பல்வேறு துறையினைச் சார்ந்த நூல்களை வெளியிடவிருப்பதால் சொந்தமாகப் பதிப்பகத்தைக் கொண்டிருத்தலை இப்பல்கலைக்கழகம் மேற்கொண்டுள்ளது.

## இடம், பிறவசதிகள்

பல்கலைக் கழகத்திற்கென தஞ்சையை அடுத்துள்ள பிள்ளையார்ப்பட்டி, நீலகிரி தோட்டம் ஆகிய சிற்றூர்களில் ஏறக்குறைய 1000 ஏக்கர் நிலப்பரப்பு கையகப்படுத்தப்பட்டுள்ளது. இங்கு பல்கலைக்கழகக் கட்டிடங்கள் கட்டப்படவிருக்கிறன.

தற்காலிகமாகத் தஞ்சை அரண்மனைப் பகுதியில் 7.80 இலட்சம் ரூபாய் செலவில் செப்பனிடப்பட்ட இடத்தில் தமிழ்ப் பல்கலைக்கழகம் இயங்கி வருகிறது.

## விழா நிகழ்ச்சிகள்

1981, செப்டெம்பர் 15ஆம் நாளன்று தஞ்சை விளையாட்டரங்கில் தமிழ்ப் பல்கலைக்கழகத் துவக்கவிழா நடைபெற்றது. ''தமிழாய்ந்த தமிழ்ப் பெரியவர்கள் மட்டும்தான், தமிழைக் காப்பவர்கள் மட்டும்தான், தமிழை வளர்ப்பவர்கள் மட்டும்தான் பங்குபெறும் வகையில் இந்த அமைப்பு இருக்கும்'', என்று பல்கலைக்கழக் கட்டிடத்திற்கு அடிக்கல் நாட்டிச் சிறப்புரையாற்றிய தமிழக முதல்வர் திரு எம். ஜி ஆர். அவர்கள் குறிப்பிட்டார்கள். துவக்கவுரை ஆற்றிய மேதகு ஆளுநர் சாதிக்அலி அவர்கள், ''பல்வேறு துறைகளுக்கும் தமிழ்மொழி ஓர் அறிவுக் கருவூலமாக மிளிர்கிறது தமிழ் மொழியில் மண்டிக் கிடக்கும் அரிய கருத்துக்களை உலகுக்கு எடுத்துரைக்க இப்பல்கலைக்கழகம் அரும் பணியாற்றும்'' என்று குறிப்பிட்டார்

''எல்லா மொழிக்கும் பல்கலைக்கழகம் அமைத்து விட முடியாது. சில மொழிக்குத்தான் பல்கலைக்கழகம் அமைக்கலாம். அதில் முதன்மையானது தமிழ். தமிழன்னையின் முதல் மகளாகத் தமிழ்ப் பல்கலைக்கழகம் பிறக்கிறது'' எனக் குறிப்பிட்டார் டாக்டர் வ.சுப மாணிக்கம்.

## புலங்கள் திறப்பு விழா

செப்டம்பர் 16 ஆம் நாள் பல்கலைக்கழகப் புலங்கள் திறந்து வைக்கப்பெற்றன.

| எண் | புலம் | திறப்பாளர் |
|---|---|---|
| 1 | கலைப்புலம் | திரு. கா. இராசாமுகமது, தமிழ் நாடு அரசு நீர்ப்பாசன அமைச்சர் |
| 2 | சுவடிப்புலம் | திரு. ஜி. பி. சங்கரதாஸ், கல்வியமைச்சர், கர்நாடக அரசு |
| 3 | வளர்தமிழ்ப் புலம் | திரு. பி வெங்கட்ராம் ரெட்டி கல்வியமைச்சர், ஆந்திர மாநில அரசு |

| | | |
|---|---|---|
| 4 | மொழிப்புலம் | திரு. ப. குழந்தைவேலு உள்ளாட்சித்துறை அமைச்சர் |
| 5 | அறிவியல்புலம் | திருமதி ரேணுகா அப்பாதுரை கல்வியமைச்சர், பாண்டிசேரி அரசு |

தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர் டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம் குறிப்பிட்டார்: ''தமிழர்க்கு வரவேற்பும், தமிழ்க் கலாசாரத்துக்குப் பெருமையும் தேடித் தரும் இந்தப் பல்கலைக் கழகம்''

இந்த மேன்மை நிலையை அடையும் நாள் வெகு தொலைவில் இல்லை என நம்பலாம்.

# 4. புதுக் கவிதை

**'சிற்பி' பாலசுப்பிரமணியம்**

வாழ்க்கையின் புறத்தே காணப்படும் அவலங்களையும் துயரங்களையும் சித்திரிக்கும் இயல்பை புதுக்கவிதைகளில் அடிக்கடி சந்திக்கிறோம். மானுடத்திலிருந்து மனதின் அந்தரங்கம் வரை எண்பத்தி ஒன்றாம் ஆண்டுக் கவிதைகளின் தளம் விசாலமாகவே இருக்கிறது.

## 1

நெடிய வரலாறு படைத்த தமிழ்க் கவிதை தவிர்க்க முடியாத காலத்தின் கட்டாயத்தால் புதிய வடிவும் புதிய பொருளும் தாங்கி வளர்ந்து வந்திருக்கிறது. மனித சமுதாய அமைப்பில் ஏற்படும் ஒவ்வொரு மாறுதலும் வளர்ச்சிக் கட்டங்களை அடையும் போது கலை இலக்கியத் துறைகள் உருவத்திலும் உள்ளடக்கத்திலும் புதிய வளர்ச்சி நிலைகளை எய்துகின்றன. இந்த விதிக்கிசையத் தமிழ் இலக்கியமும் குறிப்பிடத்தக்க மாற்றங்களை ஏற்றுப் பயணம் தொடர்ந்துள்ளது.

அகவலும் வெண்பாவும் விருத்தமும் மற்ற பாவினங்களுமாகச் செழித்துக் கிடந்த தமிழ்க் கவிதை இருபதாம் நூற்றாண்டின் தொடக்கக் காலத்திலேயே அடிப்படையான மாறுதலுக்கு ஆரம்பம் செய்துவிட்டது. உரை நடை வளர்ச்சி முதன் முதலாகச் செய்யுளுக்கு வரவேற்கத் தக்க அறை கூவலாயிற்று. மேலை நாட்டு இலக்கியத் தாக்கம் பரவலாகச் செயல்படத் தொடங்கியது. சுதந்தரமான வெளியீட்டுத் தோரணைக்கு உள்ளார்ந்த அவசியம்—அலுப்புத் தரும் மரபுப் போலிச் செய்யுட்களாலேயே எதிர்மறைவாக விளைந்தது. அறிவியல் வளர்ச்சியும் அரசியல்

வளர்ச்சியும் அரசியல் இயக்கங்களின் வளர்ச்சியும் புதிய சமூக விழிப்பும் இலக்கியக் கலையின் பரிணாமத்துக்கு வழி வகுத்தன. இதனால் மெல்ல மெல்ல தமிழ்க் கவிதையில் ஒரு திசை திருப்பம் தோன்றலாயிற்று.

மேற்கே வால்ட் விட்மனையும் கிழக்கே 'ஹைய்கு' கவிதையை யும் இனம் காண முடிந்த முழுப் பார்வை பாரதிக்கு இருந்தது. நொண்டிச் சிந்து, காவடிச் சிந்து, கிளிக் கண்ணி என்ற எளிய வடிவங்களிலும் இசைகளிலும் கவிதையை உருவாக்கிய அவர் தான் மரபுத் தடத்தில் நின்றவாறே புதுக்கவிதைக்கும் பாதை சமைத்துத் தந்தார். வசன கவிதை என்று அழைக்கப்பட்ட அவரது 'காட்சி'க் கவிதைகளே புதுக் கவிதையின் மூல விதைகள்.

தொடர்ந்து முப்பதுகளில் 'மணிக்கொடி'க் காலத்தில் புதுமைப்பித்தன், கு. ப. ரா., ந. பிச்சமூர்த்தி ஆகிய இலக்கிய மேதைகள் 'புதுக்கவிதை'ச் சோதனைகளில் ஈடுபட்டனர். மரபுக் விதையின் பெரும் படைப்பாளியான பாரதிதாசனும் அவரது காலத்திலேயே கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையும், இன்னும் சிலரும் ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருந்த சூழலிலும் இச் சோதனைகள் தொடர்ந்தன. ஐம்பதுகளில் இதற்கொரு களமும் தளமும் அமைத்துக் கொடுத்தவர்கள் 'எழுத்து' இலக்கியச் சிற்றேட்டின் ஆசிரியர் சி. அ. செல்லப்பாவும், 'இலக்கிய வட்டம்' ஆசிரியர் க நா. சுப்பிரமணியமும் ஆவர். பல இளம் படைப் பாளிகள் இவர்களால் உருவாயினர்.

இந்த உந்து சக்தி வாயிலாக உரம் பெற்ற அடுத்த முயற்சி 'கசடதபற', 'நடை' முதலிய சிறுபத்திரிகைகளால் நிகழ்ந்தது. இதுவரை நடந்த புதுக்கவிதை முயற்சிக்கு தமிழ்ப் பாரம்பரியத் தில் ஊன்றிய பின்னணி பொதுவாக அமைந்திருக்கவில்லை. அது மட்டுமன்றி ஒரு வகை நிராசையும், அவநம்பிக்கையும் மேலோங்கி யிருந்தன. இதற்குக் காரணம் மேல் நாட்டுச் சமுதாயச் சிதைவு களால் அந்நாட்டுக் கவிஞர்கள் பிரதிபலித்த வெறுமையுணர்வை இவர்களும் இரவலாக வாங்கிக் கொண்டது தான். ஆயினும் கலைத்திறம் இந்தக் கவிஞர்கள்பால் பெருமளவு செழுமையாவே இருந்தது.

அறுபதுகளின் இறுதியிலும் எழுபதுகளின் தொடக்கத்திலும் புதுக் கவிதைத் துறையில் எழுந்த புதிய அலை 'வானம்பாடி'

இயக்கம், இது வரை சமுதாய உணர்வுகளைப் பொறுத்தவரை வெற்றிடமாகவும், அப்படிப்பட்ட உணர்வுகளைக் கவிதையில் புலப்படுத்துவது கவிதைக்கு முரணானதாகவும் கருதப்பட்டு வந்த சூழலை மீறி 'வானம்பாடி' கவிதை இயக்கம் மனித சமுதாயச் சிக்கல்களையும், இடதுசாரி உணர்வுகளையும், மார்க்சியச் சாய்வுடன் எடுத்துக் கொடுத்தது; உண்மையில் புதுக் கவிதை என்ற இலக்கிய வடிவத்தைப் பரவலாக்கிய வானம் பாடி இயக்கம் அது குறித்து விவாதங்களைக் கிளறி விட்டது. எழுபதுகளில் புதுக்கவிதையை வளப்படுத்தும் சமூகப் பிரக்ஞை யுள்ள இயக்கமாக வானம்பாடி இயக்கம் திகழ்ந்தது. எழுபது களின் இறுதியில் இவ்வியக்கக் கவிஞர்கள் சிதறிப் போனார்கள் என்றாலும் தங்கள் தனித் தன்மைகளோடு அவர்களில் சிலர் தொடர்ந்து எழுதி வருகிறார்கள்.

## 2

மரபுக் கவிதையிலிருந்து மாறுபட்ட தொனியும், நடையும் பூண்டிருந்தமையால் 'புதுக் கவிதை' என்று பெயர் சூடிக்கொண்ட போதிலும் கவிதைத் துறையில் ஒரு வளர்ச்சிக் கட்டத்தைக் குறிக்கவே இப்பெயர் வழங்கப்படுகின்றது. நாளடைவில் மேலும் புதிய சாயல்களும் போக்குகளும் இடம் பெறும் போது இந்தக் கால எல்லையைக் குறித்து 'அந்நாளில் புதுக்கவிதை என்று அழைக்கப்பட்ட' என்ற அடையோடு இன்றைய கவிதை அழைக் கப்படும் என்பதில் ஐயமில்லை.

எண்பதுகளின் தொடக்கம் புதுக்கவிதையில் குறிப்பிடத்தக்க புதுமைகளைச் சாதிக்கவில்லை. எனினும் மரபுக் கவிதையின் தனித்துவமும் ஒளியும் கண்ணதாசன் காலத்தோடு முற்றுப் பெற்றுவிட்டதாகத் தோன்றுகின்றது.

புதுக்கவிதையில் இக்கால எல்லையில் இளங் கவிஞர்கள் பலர் எழுதத் தொடங்கியுள்ளனர். பத்திரிகைகளில் வெளிவரும் கவிதைகளைக் கணக்கிலெடுப்பது கடினமாகையால் எண்பத்தி ஒன்றில் வெளிவந்துள்ள கவனத்துக் கெட்டிய நூல்களின் அடிப் படையில் பரிசீலித்துப் பார்க்கலாம். அப்படிப் பார்க்கும் போது புதுக்கவிதையின் முதல் கட்டங்களினுடைய முதிர்ச்சியையும், கூரிய பார்வையையும், பின் தலைமுறையில் அத்தனை தெளி வாகக் காணக் கூடவில்லை என்பதைக் குறிப்பிடுவது அவசியம்,

## 3

எண்பத்தி ஒன்றில் வெளியாகியுள்ள புதுக்கவிதை நூல்களில் பார்வைக்குக் கிடைத்தவை பதினேழு தொகுதிகள். இவற்றில் பாதி சமூகச் சிந்தனைகளையும், அரசியல் சார்புகளையும் வெளிப் படுத்தும் போக்குடையவை. இரண்டு நூல்கள் மொழி பெயர்ப்புக் கவிதைகளடங்கிய சர்வதேசத் தன்மை பெற்றவை (சோசலிசக் கவிதைகள், வீணையே வாளாக). ஒரு தொகுப்பு கவியரங்கக் கவிதைகள் கொண்டது (முகத்துக்கு முகம்). காதலை மட்டுமே பொருளாகக் கொண்ட ஒரு கவிதை நூலும் இவற்றில் உண்டு (மகரந்தக் கோலங்கள்). சில அனுபவ சாரம் கவிதைகளாக வடி வெடுத்திருக்கும் நூல்களும் காணப்படுகின்றன (மெய்ப் பொருள், புலரி).

கவிதை நூல்களுக்கு இடப்பட்டுள்ள பெயர்களில் பல இயல்பு கள் வெளிப்படுகின்றன. முன்வந்த நூல்களைப் பின்பற்றிய போக்கை ஓரிரு தொகுப்புக்கள் சுட்டிக் காட்டுகின்றன. உணர்ச்சிப் பூக்கள்—கண்ணீர்ப் பூக்களை நினைவூட்டுகிறது. நேரடியாகக் கவிதைகளின் தன்மையை விளக்கிவிடும் தலைப்புக் களில் ஒன்று 'சோசலிசக் கவிதைகள்'. இதே பொருளடக்கத்தைக் கொண்டிருந்தாலும் அதனைக் கவித்துவமான உணர்வுடன் புலப் படுத்தும் நூல்களும் உள்ளன. (வீணையே வாளாக, பூபாளம்). கவிதைகளின் கருப்பொருளை நறுக்கென்று முன் வைத்து விடும் தலைப்புக்கள்—கிழிசல்கள், முரண், ஆகியவை. ஒரு வியப் புணர்வைக் கிளறிக் கவிதைகளை நோக்கி நம் கவனத்தை ஈர்க்கும் தன்மையைச் சில நூல்களின் தலைப்புக்கள் கொண் டுள்ளன (உயிர்ப்புறா, காகிதத்தில் ஒரு கோடு, மழை மறைவுப் பிரதேசங்சள், முகத்துக்கு முகம்). சாதாரணமான பெயர்கள் போல் தோன்றினாலும் படித்த பிறகு பெயரின் அழகில் ஈடுபடச் செய்ய வல்லவை-புலரி, மெய்ப் பொருள் தொகுப்புக்கள். தலைப்புப் பெயரால் எவ்வித சலனத்தையும் ஏற்படுத்தாத கவிதை நூல்களும் உள்ளன (விடியல் கீதம், ஜலதரங்கம், கொதிப்பு). பெயரில் என்ன இருக்கிறது என்று பேசப்பட்டாலும், ஒரு கவிதை நூலைப் பொறுத்தவரை அதற்கு ஒரு தனிச் சிறப்பு உண்டு என்பதை மறுக்க முடியாது.

பெரும்பான்மையான கவிதை நூல்களில் ஆசிரியர் முன்னுரை யோ அல்லது விமர்சகர்களின் திறனாய்வுரையோ அல்லது அணிந்

துரையோ தவறாமல் இடம் பெற்றுள்ளன. கா. சிவத்தம்பி (பூபாளம்), தா. பாண்டியன் (விடியல் கீதம்), மீரா (மகரந்தக் கோலங்கள்) ஆகியவர்களின் திறனாய்வுரைகள் அந்த நூல்களுக்கு மேலும் ஒரு புதிய பரிமாணமாகத் திகழ்கின்றன. மு. மேத்தா, என். ஆர். தாசன், தேவமகள் ஆகிய கவிஞர்கள் தங்கள் தொகுப்புக்களின் அடிப்படைகளைத் தாங்களே விளக்கியுள்ளனர். அன்னம் வெளியீட்டகத்தார் பாரதி நூற்றாண்டு விழாவை யொட்டி ஒன்பது இளங் கவிஞர்களின் தொகுப்புக்களை 'நவ கவிதை' வரிசையில் வெளிவருவதாகவும் அவற்றில் இரண்டு 1981-இல் வெளிவருவதாகவும் (புலரி, மெய்ப் பொருள்) அந்நூல் களில் அறிவிக்கின்றனர் மிகவும் விசித்திரமான ஒரு சிறப்பைப் பெறுகின்றது மகரந்தக் கோலங்கள்.. அந்நூலில் முன்னுரையும், பதிப்புரையும், மதிப்புரையுமாக பதினான்கு பேர் எழுதி யுள்ளனர்!

கவிதைகளை வகை வகையாக இனம் பிரிக்கும் போக்கும் பரவ லாகக் காணப்படவில்லை. ஓரிரு நூல்களில் தான் இந்தப் பழைய முறை பின்பற்றப்பட்டுள்ளது. ஜல தரங்கம் என்னும் தொகுப்பில் திரை இசைக் கவிதைகள், மரபுக் கவிதைகள் என்று பாகுபாடு செய்திருப்பது இதற்கு எடுத்துக் காட்டு.

## 4

வாழ்க்கையின் புறத்தே காணப்படும் அவலங்களையும் துயரங்களையும் சித்திரிக்கும் இயல்பை இப் புதுக் கவிதைகளில் அடிக்கடி சந்திக்கிறோம்.

'தேசச் சாலை யெங்கும்
வர்கப் பேதக் குண்டு குழிகள்
அநீதி முட்கள்' (உயிர்ப்புறா)

என்று அடையாளம் காட்டுவதும்,

'இந்த தேசத்திலேயே
மிகவும் உயர்ந்தவன்
கிராம வாசியா
நகர வாசியா
இல்லை
விலைவாசி' (கிழிசல்கள்)

என்று ஏளனம் புரிவதும்

'வருஷம் பூரா கோவணத் தோடே
வாழ்ந்து முடிக்குது ஏழையினம்
நிமிஷம் தோறும் புதுப்புது உடையைப்
போட்டுக் கிழிக்குது மாடி ஜனம் (பூபாளம்)

என்று எதார்த்தத்தை எடுத்து மொழிவதும் சமுதாயச் சிந்தனைக் கவிஞர்களிடம் உள்ள பண்பு. இதனை உக்கிரமான மொழியில் வெளியிடும் ஒரு கவிதை:

'காலியா யிருக்கிறது அரிசிப் பானை
ததும்புகிறது விழிக்குடம்
இதயமோ வேதனையில்
அம்மா இனி நான் உன்னை
எப்படிக் காப்பாற்றுவேன்!' (சோசலிசக் கவிதைகள்

நமது தேசத்தின் தேக்கத்துக்கும் ஏக்கத்துக்கும் நாட்டின் அரசியல்வாதிகளை நேரடியாக இனம் காட்டும் தன்மையும் இக் கவிதைகளில் காணப்படுகிறது.

'சுதந்தரத்திற்கு முன்னால்
சுதந்தரம் என் பிறப்புரிமை
சுதந்தரத்துக்குப் பின்னால்
சுரண்டல் என் பிறப்புரிமை' (கிழிசல்கள்)

என்றும், பதவி வேட்டைகளை,

'சிலருக்குத்
தான்
எந்தக் கட்சியில்
இருக்கிறோம் என்பதே
தினசரித் தாள் வாசித்த
பின்னரே
தெரிகிறது' . (முகத்துக்கு முகம்)

என்றும் படம் பிடித்துக் காட்டுகின்றனர் கவிஞர்கள்.

சமுதாயச் சூழலில் இளைஞர்களின் நிலை தெளிவாகப் புலப் படுத்தப்படுகிறது.

'ஏழெட்டு இண்டர்வியூ
எத்தனையோ சிபாரிசு
அம்மாவுக்கு வீட்டில் கையாள்
அப்பாவுக்கு தண்டச் சோறு (முரண்)

எங்கும் வேலையில்லாத் திண்டாட்டத்தின் வேதனைச் சாயல் படிந்திருப்பதை,

'ஆலையில் வேலையில்லை
அறுவடை யான பின்பு
கூலிக்கு வேலையில்லை
கிராமத்தில்; நாட்டின் கல்விச்
சாலையில் வேலையில்லை
சர்க்காரில் வேலையில்லை
நூலுக்கு வேலையில்லை
நெசவுக்கும் வேலையில்லை
மூளைக்கும் வேலையில்லை...
ஆளுக்கே விலையைப் பேசும்
அரபுநாட் டெண்ணெயில் நம்
வாலிபம் எரியும்' (பூபாளம்)

என்று மரபின் வேகத்தோடு அடுக்கிச் சொல்லும் கவிதைகளும் உண்டு.

இன்றைய இந்தியச் சமூகத்தில் பெண்களின் வாழ்நிலைச் சோதனைகளையும் இக் கவிதைகள் விமர்சிக்கின்றன.

'இந்த இருபதின் இறுதியில்
துச்சாதனன் இல்லாமல்
துகிலுரியும் பாஞ்சாலிகள்
சாபம் இல்லாமல்
கல்லாகும் அகலிகைகள்
இலக்குவன் உடனிருந்தும்
காத்திருக்கும் ஊர்மிளைகள்
அரிச்சந்திரன் பொய் உரைக்க
விலைபோகும் சந்திரமதிகள்... (முரண்)

'வரன்களை வாங்கச்
சவரன்கள் வேண்டுமென்றால்
வரன்களே வேண்டாம்...
என்று சினந்து
எழுந்தாள் என் மச்சினி' (பூபாளம்)

கற்போடு வேலை கேட்கப் போன
உன்னிடம்
கற்பையே கேட்டார்கள் (கிழிசல்கள்)

நம்முடைய சமுதாயச் சீரழிவுக்கு மற்றொரு தடைக் கல்லாக விளங்கும் சாதி சமயப் பிணக்குகளும் கவிஞர்களின் பார்வையில் படுகின்றன. சாதி மதங்களைப் பாரோம் என்று பாப்பா வகுப்பு முதல் பட்டப் படிப்புவரை கேட்ட அறிவுரையைப் பின்பற்றினாள் ஒரு வைதீக இந்துப் பெண். விளைவு?

‘கால்களைப் பிணித்தது
நாய்ச் சங்கிலி...
அவசரமாக
உறவில் மணப் பேச்சு’

அவள் இணங்க மறுத்தபோது தந்தை ஒரு புட்டி மண்ணெண்ணெய் கவிழ்த்து மகளை நெருப்புக்கு இரையாக்கினான்.

‘இவர்களை
சட்டம் சுடவில்லை’ (முரண்)

என்று ஆத்திரப்படுகிறது கவிதையின் கடைசி வரி. அரிசனப் படுகொலையில் விளைந்த கோரத்தை,

‘ஒரு டிசம்பர் மாதக் கிறிஸ்துமஸ் இரவில்
நாற்பத்து நாலு மனித குமாரர்களின்
வெண்மணி விறகுகளல்லவா
வாடைக் குளிர்காயத் தேவைப்பட்டன’ (பூபாளம்)

என்று பதறும் கவிதை கூறுகின்றது. மத மாற்றங்களால் எவ்வகையிலும் தீர்வுகள் சாத்தியமில்லை என்பதை ஆவேசமாகப் பேசுகிறது ஒரு கவிதை:

சரி
காத்தான் காதரானால்
அவனுக்கு என்ன நன்மை
முன்பு
காத்தானின் ஒரே மனைவி
அரைப் பட்டினி இருந்தார்
இனி
காதரின் இரண்டு மனைவிகள்
முழுப் பட்டினி கிடப்பார்கள்’ (கிழிசல்கள்)

இந்தச் சமூகக் கொடுமைகளுக்குச் சில கவிஞர்கள் மட்டுமே தீர்வுகளைக் குறிக்கிறார்கள். வாக்குறுதிகளால் இது நிறைவேறப் போவதில்லை. வர்க்கப்போரில் தான் இது சாத்தியமாகும் என்று குறிப்பிடும் தீர்வைத் தடம் காட்டும் கவிதைகள் சில.

'வாலிப வெள்ளம் வருகிறது
வர்க்கப் போர்முனை தெரிகிறது' (பூபாளம்)

அர்த்த சாஸ்திரத்தைப்
பள்ளியில் கற்றோம்
தர்க்க சாஸ்திரத்தைக்
கல்லூரியில் கற்றோம்
இப்போது
வர்க்க சாஸ்திரத்தை
வீதிகளில் கற்கிறோம் (கிழிசல்கள்)

வர்க்கப் புரட்சியின் தேவையை இவ்வாறு வலியுறுத்தும் போதே அடக்கு முறையைத் தாங்கிக் கிளர்ந்தெழும் மக்கள் பலாத்காரத் தைக் கையாளலாம் என்று போதிக்கும் கவிதைகளும் காணப்படு கின்றன.

சவுக்கடி பட்ட முதுகுகள்
மலை போல் நிமிர ஆரம்பிக்கின்றன
வெட்டப்பட்ட விரல் துணுக்கு
துப்பாக்கி விசையைப் பற்ற
இன்னும் துடிக்கிறது' (சோசலிசக் கவிதைகள்)

இத்தகைய புரட்சிகளில் ஈடுபடும் வீர நெஞ்சங்களை மறைத்து வைத்ததாக விசாரிக்கப்படும் ஒரு தெலுங்கானா மூதாட்டியைப் பற்றிச் சொல்கிறது 'வீணையே வாளாக' என்ற நூலில் உள்ள மொழிபெயர்ப்புக் கவிதை 'தெலுங்கானாப் புரட்சிக் கவிதைகள்,

''குடிசைக் கதவு தட்டப்பட்டது
போலீசார் வெளியில் நின்றனர்
''அவர்கள் எங்கே?''
லஷ்மம்மா கேட்டாள்: ''யார்?''
''அவர்கள் தான் கிழவியே!
அவர்களை நீ மறைத்து வைத்திருக்கிறயா?''
அவள் நிதானமாகச் சொன்னாள்:
''நான் மறைத்து வைத்திருப்பது
உங்களையும்
உங்கள் சர்க்காரையும் பற்றிய
வெறுப்பு ஒன்றைத்தான்.'' (வீணையே வாளாக)

இவைகள் ஒருபுறமிருக்க தனிமனித உணர்வுகளோடு அனுபவங்களையும் குழைத்துப் பேசும் கவிதைகளும் சித்திரங்களாக இத் தொகுதிகளில் உள்ளன. நட்பு என்ற தலைப்பில் ஒரு கவிதை:

'நான் நானான
நீ நீயான
கௌரவம்' (முரண்)

'கார்த்திகை தீபங்கள்' என்ற கவிதை பேசுகிறது:

'கார்த்திகை தீபங்கள்
கால் முளைத்து ஓடுவதைக்
கண்டதுண்டா நீங்கள்?
கடைசி மணி அடித்ததும்
ஆரம்பப் பள்ளியின்
கேட்டருகே
நின்று பாருங்கள்' (பூபாளம்)

மற்றொரு அழகான கேள்வி கவிதையில் பூக்கிறது:

'விதைகளுக் குள்ளிருந்து
வெளி உலகப் பயணம்
புறப்பட்டுள்ள செடிகளே
உங்களைப் பார்த்தும்
எங்கள் அடிமைச் சிறைகளை
உடைத்துக் கொண்டு
நாங்கள்
வெளிக் கிளம்ப வில்லையே! (உயிர்ப் புறா)

நயமாக 'மெய்ப் பொருள்' உரைக்கும் நேர்த்தியான இன்னொரு கவிதை:

'எதையேனும் சார்ந்திரு
கவித்துவம்
தத்துவம், காதல்
இங்கிதம், சங்கீதமிப்படி
எதன் மீதேனும் சாய்ந்திரு
இல்லையேல் உலகம்
காணாமல் போய் விடும்' (மெய்ப் பொருள்)

வாழ்க்கையின் எளிய உண்மைகளையும் காட்சிகளையும் மனத்தில் இழையில் ஓவியமாக்கி நிறுத்தும்.

'பாதி வழியில்
ஓடுகிற பஸ்ஸில்
ஏறி இடம் தேடிப்
பறந்தலைந்த
வண்ணத்துப் பூச்சி
நான்
கூடவே வந்து
மனதில் உட்காரும்
ஒரு
கவிதையின் மேல்' (புலரி)

இனிய மீட்டுதலாக ஒலிக்கும் இன்னொரு கவிதை:

'தலைவியின் கண்கள்
பாவம்
தபால் கவர் மாதிரி
உறக்கத்தோடு
அவை
ஒட்டுவதே இல்லை' (முகத்துக்கு முகம்)

எல்லாக் கவிஞர்களும் பொதுவாக ஈடுபடும் ஓர் உணர்வு காதல், இந்த உணர்வை நளினமாகவும் நயமாகவும் மட்டுமல்ல நாகரிக மாகவும் சொல்லத் தெரியாவிட்டால் அது பச்சைப் பாலுணர்வுப் பிதற்றலாய்க் கொச்சைப்படும். பெண்ணை வெறும் போகப் பொருளாகக் காணும் குறுகிய பார்வையையும் ஓரிரு கவிஞர் களிடம் காணுகிறோம். 'மகரந்தக் கோலங்கள்' என்னும் நூல் முழுக்க முழுக்கப் பெண்ணின் அங்க வர்ணனைகளும் காமச் சித்திரங்களும் அடங்கியதாய்ப் போனது வருத்தத்துக்குரியது.

காதலியைப் பார்த்து,

'மூர்ச்சையாவதற்குள் வலையிலிருந்து
என் உயிர்ப் புறாவை விடுதலை செய்
உன் புன்னகையின் மெல்லிய வலையில்
என் உயிர்ப் புறா சிக்கித் தவிப்பதை
அறிவாயா நீ?' (உயிர்ப்புறா)

என்று மன்றாடும் காதலனையும்,

'கருப்பு வளையல்
கையுடன் ஒருத்தி
குனிந்து
வளைந்து
பெருக்கிப் போனாள்
வாசல் சுத்தமாச்சு
மனம் குப்பையாச்சு (புலரி)

என்று காமத்தையும் நாகரிகமாகச் சொல்லும் கவிக் குரலையும் காணும் போது பச்சைக் காம ரூபங்களிலிருந்து விடுதலை பெற்ற கவிதையின் உயிர்ப்பில் பரவசப்படுகிறோம்,

இந்த கவிதைகளிலிருந்து மாறுபட்டு நிச்சயமற்ற தன்மையைப் பேசும் சீபாக்கும் சில கவிதைகளில் ஒலிக்கின்றன.

'இந்தக் கவிதை
எப்படி முடியும்
எங்கு முடியும்
என்று தெரியாது
திட்டமிட்டு முடியாது
என்றெனக்குத் தெரியும்
இது முடியும் போது
இருக்கும் (இருந்தால்) நான்
ஆரம்பத்தில் இருந்தவன் தானா?
(காகிதத்தில் ஒரு கோடு

என்று வினவும் கவிஞருடைய கவிதைகளில் எல்லாம் இந்தத் தொனி பரவலாகக் கேட்கின்றது.

'திசைகளறியுமோ கிழக்கும் மேற்கும்
கடலைக் கடலறிந்தால்
கானகத்தைக் கானக மறியும்' (மெய்ப் பொருள்)

என்று பூடகமாகப் பேசும் கவிதைகள் நம்மை நின்று நிதானிக்க வைக்கின்றன.

இவ்வாறு மானுடத்திலிருந்து மனதின், அந்தரங்கம் வரை எண்பத்தி ஒன்றாம் ஆண்டுக் கவிதைகளின் தளம் விசாலமாகவே இருக்கிறது.

சமுதாய நியாயங்களுக்காகப் போரிடும் கலை வடிவமாகவும், அழகு ததும்பும் வாழ்க்கைத் தரிசனமாகவும், நெற்றி சுருக்கிச்

சிந்திக்க வைக்கும் நிதானப் பயணமாகவும் ஒரு சில கவிதைகளேனும் கிடைத்திருப்பது எண்பத்தொன்றில் புதுக் கவிதையைப் பொறுத்தவரை மகிழ்வூட்டுவதாகும்.

இன்னும் வளமான கவிதைகள் விளைய இவை உரமாகும் என்று நம்பிக்கையோடு குறிப்பிடலாம்.

## நூற் பட்டியல்

1. உயிர்ப் புறா—ஆ. செகந்நாதன் (மேலையூர்—திலகன் பதிப்பகம்)
2. உணர்ச்சிப் பூக்கள்—பெ. வேலு (தாரமங்கலம்—செந்தில் பதிப்பகம்)
3. கனவுச் சிறைகள்—மு. நடராசன் (மாயூரம் நிலாமுற்றம்)
4. காகிதத்தில் ஒரு கோடு—ஆத்மாநாம் (சென்னை ழ.வெளியீடு)
5. கிழிசல்கள்—கந்தர்வன் (சிவகங்கை—அகரம்)
6. கொதிப்பு—எழிலண்ணன் (கோவை, இராமநாதபுரம் 6/19 திருவள்ளுவர் நகர்)
7. சோசலிசக் கவிதைகள்—(சென்னை—மக்கள் இலக்கியக் கழகம்)
8. புலரி—கல்யாண்ஜி (சிவகங்கை—அன்னம்)
9. பூபாளம்—தணிகைச் செல்வன் (சென்னை—சிகரம் வெளியீடு)
10. மகரந்தக் கோலங்கள்—வசந்தரூபன் (விருதுநகர்—குருபரன் என்டர்பிரைசஸ்)
11. மழை மறைவுப் பிரதேசங்கள்—கௌதமன் (சிவகங்கை அகரம்)
12. முகத்துக்கு முகம்—மு. மேத்தா (கோவை—விஜயா பதிப்பகம்)
13. முரண்—தேவமகள் (சிவகங்கை—அகரம்)
14. மெய்ப் பொருள்—வண்ணநிலவன் (சிவகங்கை—அன்னம்)
15. விடியல் கீதம்—இளங்கலைமணி (சென்னை — விடியல் வெளியீடு)
16. வீணையே வாளாக—என். ஆர். தாசன் (சென்னை—கார்க்கி நூலகம்)
17. ஜலதரங்கம்—பி. பாலசுந்தரம் (சேலம்—பேபி பப்ளிஷர்ஸ்)

# 5. நாடகம்

**டாக்டர் ஏ. என். பெருமாள்**

இலக்கிய நயம், கலை நலம் மிக்க நாடகங்கள் சிலவற்றைத் தந்து இந்த ஆண்டு சிறப்பு எய்தியுள்ளது. பெண்கள் சமுதாய ஏணியில் படிப்படியாக ஏறுவதையும் வேலையில்லாத் திண்டாட்டம் பெருகி வருவதையும் பலநாடகங்கள் சுட்டுகின்றன. எனினும் 'ஓரளவு' முன்னேற்றத்தையே இந்த ஆண்டு நாடகங்களில் காணமுடிகிறது.

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பத்தொன்றாம் ஆண்டில் தமிழ் நாடக இலக்கிய உலகம் பல நாடகங்களைக் கண்டு களித்துள்ளது. இவற்றுள் மேடையேறிய அனைத்தும் அச்சேற வில்லை என்பது உண்மை. பல நூலுருவிலும், சில தொடராக இதழ்களிலும் வெளிவந்துள்ளன. இதழ்களில் வந்தவற்றுள் ஒன்றிரண்டு எண்பத்திரண்டில் நூலுருவாகி உள்ளன. ஆனந்த விகடனில் தொடர் நாடகமாக வெளி வந்த மெரீனாவின் 'அடாவடி அம்மாக்கண்ணு' எண்பத்திரண்டுக்கு உரிய நூலாகி விட்டதினால் எண்பத்தொன்றிற்கு உரியதாகக் கருதப்பட வில்லை. 'சாமியாரின் மாமியார்' எண்பதற்கு உரியதாக மதிக்கப் பெற்று முன்பே அலசப்பட்டு விட்டது. இவற்றைத் தவிர்த்து வெளிவந்துள்ள பிற நாடகங்களை ஆய்ந்து காண முயலலாம்.

பல வகையான நாடகங்களை எண்பத்தொன்றில் ஆசிரியர் கள் உருவாக்கித் தந்துள்ளனர். அவை முழு நீள நாடகங்களாக வும் ஓரங்க நாடகங்களாகவும் காணப்படுன்றன. சிறுவர் நாடகங் களாகவும் சில வெளிவந்துள்ளன. வானொலி, தொலைக் காட்சி, நாடக மேடை, நூல்கள் ஆகிய வாயில்கள் மூலம் அவை மக்களுக்கு எட்டியுள்ளன. இலக்கிய நயும் கலை நயும் மிக்க

நாடகங்கள் சிலவற்றைத் தந்து இந்த ஆண்டு சிறப்பு எய்தியுள்ளது. அவற்றை முதலில் வகை பிரித்துக் காண்பது முறையாக அமையும். நாடகங்களில் தோன்றும் தனித்துவ சிறப்புகளைக் கொண்டு அவற்றை வகைப்படுத்திக் காணலாம்.

## சமூகநாடகங்கள்

மக்களின் விருப்பத்திற்குத் தக்கவாறு பல சமூக நாடகங்கள் தோன்றியுள்ளன. சமுதாயத்தில் காணப்படும் பல்வேறு சிக்கல்களையும் பிரச்சனைகளையும் அடிப்படையாகக் கொண்டு பல நாடகங்கள் எழுதப்பட்டுள்ளன. அவற்றின் வாயிலாக மக்களின் தவறுகளைச் சுட்டுவதுடன் அவர்களைத் திருத்தி நல்வாழ்வுக்கு வழிகாட்டவும் நாடக ஆசிரியர்கள் முயன்றுள்ளனர் இந்த ஆண்டு சமூகத்தின் நன்மைக்கு ஊறு விளைவிக்கும் தீய சக்திகளை இனங்கண்டு அவற்றைத் தடுக்க நாடக மேடையைப் பயன்படுத்தியுள்ளனர். கருத்துச் செறிவும் கலை அழகும் கொண்டு பல நாடகங்கள் விளங்குகின்றன.

எஸ். என். சி. நாகையன் படைத்த வளமான வாழ்வு என்ற சமூகச் சீர்திருத்த நாடகம் பல விதமான சீர்கேடுகளைச் சுட்டிக் காட்டுகிறது. வரதட்சிணைப் பேயைக் குழிதோண்டிப் புதைக்க வேண்டும் என்று வீரமாகக் கூறுகிறது.[1] பெண்கள் எவ்வளவு படித்திருந்தாலும் குடும்ப விளக்காக வீட்டுக்கு அரசி என்ற நிலையிலிருப்பதுதான் நல்லது என்ற ஓர் கருத்து இடையில் நுழைக்கப்பட்டுள்ளது.[2] இதனை முழுமையாக ஒப்புக் கொள்ளாதவர் இருக்கலாம். ஆயினும் ஆசிரியரின் சிக்கலான அனுபவத்தில் தோன்றிய கருத்தாக இதனைக் கொள்வதில் தவறில்லை. பெண்கள் வீட்டகத்தை நீத்து நாட்டகத்தில் புகுந்து பல்வேறுபணிகளை ஆற்றுகின்றனர். ஒரு வகையில் அதுநாட்டுக்கும் வீட்டுக்கும் பயனுடையது என்பதை யாராலும் மறுக்க முடியாது. இருப்பினும் அன்பாக வாழ்க்கைக்கு அது சில சமயம் ஊறாகி விடுவதைக் கான்லாம். இதனை உணர்ந்து கூறிய கூற்றாக இக் கருத்தைக் கருதலாம்.

வேலையில்லாத் திண்டாட்டம் இந்நாடகத்தில் கோடிட்டுக் காட்டப்படுகிறது. வேலை வாங்கிறது கடலில் மூழ்கி முத்து

1. வளமான வாழ்வு, எஸ் என்.சி.நாகையன், மருதமலையான் பதிப்பகம், சென்னை, (1982) பக் 16.

2. மேற்படி, பக்.22.

எடுக்கிற மாதிரிதான்[3] என்று ராமன் என்கிற பாத்திதின் வாயிலாக ஆசிரியர் கூறுகிறார். வேலைக்காகப் பிறரிடம் கையேந்தி நிற்கும் அவலநிலையை இங்கு பார்க்கிறோம். தன் பிழைப்புக்குத் தானே' ஒரு வேலையை ஏன் செய்யக் கூடாது என்ற சிந்தனையும் ஆசிரியருக்கு எழாமல் இல்லை. 'அவனவன் பொளைப்பைக் கவனிச்சா எந்த வம்பும் வழக்கும் வராது'[4] என்று கண்ணன் கூறுவதில் இக்கருத்து நன்றாகப் புலப்படுகிறது.

அலுவலகங்களில் ஆண்களும் பெண்களும் சேர்ந்து பணியாற்றும் போது ஏற்படும் 'அல்லோகல்லோல' நிலையும் காட்டப் படுகிறது. நாடகத்திலுள்ள ஏழாவது காட்சி இதனை நன்கு புலப்படுத்திக் காட்டுகிறது. நர்சரி பள்ளிப் படிப்பு தமிழ் நாட்டுப் பண்பாட்டுக்கு ஒத்து வராத ஒன்றாகும் என்பதை ஆசிரியர் வெளிப்படையாகக் காட்டிவிடுகிறார்[5] தக்க தருணத்தில் சரியான முறையில் கற்றுக் கொடுத்தால் எந்த மொழியையும் நன்றாகப் படித்துக் கொள்ளலாம் என்ற ஆசிரியரின் கருத்தையும் இந்த நாடகம் தாங்கியுள்ளது.[6]

பெண்மையைச் சூறையாடும் புல்லர்களின் வெறித்தனத்தை வேகமாகக் கண்டிக்க ஆசிரியர் தவறவில்லை. அத்தகைய தீயவர்களுக்கு மரண தண்டனை விதிக்க வேண்டும் என்பது ஆசிரியரின் தீர்ப்பு[7]. சாதிப் பிரிவினையைச் சரியாகச் சாடி அதனை மிகத் துணிவுடன் கண்டிக்கிறார். அது ஓர் உதவாக்கரைக் கொள்கை என்பது ஆசிரியரின் கருத்து[8].

நன்னடத்தையும் கடின உழைப்புமே வளமான வாழ்வுக்கு அடிப்படை. பெண்களின் கட்டுப்பாடான வாழ்வு வலியுறுத்தப் படுகிறது. துயர வாழ்வில்தான் உண்மையான தியாக வாழ்வு இருக்க முடியும் என்பதை அனைவரும் நம்ப வேண்டும். சத்தியத்தையும் தர்மத்தையும் வாழ்க்கையில் கடைப்பிடிக்க வேண்டும். குலத்தையும் கோத்திரத்தையும் பார்க்கவோ சிந்திக்கவோ கூடாது. குணத்தையும் பண்பையும் மதிக்க வேண்டும். அனைத்துக்கும் மேலாக ஏழ்மையைப் பங்கிட்டுக் கொள்ளும் மனப்

3. மேற்படி, பக் 22.
4. மேற்படி, பக். 26.
5. மேற்படி, பக். 34
6. மேற்படி, பக். 44
7. மேற்படி, பக் 53.
8. மேற்படி, பக் 53

பக்குவம் அடைய வேண்டும். அவ்வாறாயின் வளமான வாழ்வு வாய்க்கும்.[9] சமுதாயம் பல நிலைகளில் சீர்திருந்தி, பலருக்கு நன்மையாக அமைய வேண்டும் என்ற சீரிய நோக்கத்தில் இந்த நாடகம் எழுதப்பட்டுள்ளது என்று கருதலாம்.

வேலையில்லாத் திண்டாட்டத்தை அடிப்படையாகக் கொண்டு பி. பி. செல்லப்பா வேலை காலியிருக்கு என்ற நாடகத்தை எழுதியிருக்கிறார். அரசு அலுவலகங்களை நம்பியே அனைவரும் படித்துள்ளனர். இன்றையக் கல்வி முறையின் அமைப்பும் தகுதியும் அவ்வாறு அமைந்துள்ளது. படித்தவர்கள் அனைவரும் அரசுத் துறைகளில் பணிகளை நாடி அலைகிறார்கள். வேலை காலியில்லை. ஆகையினால் ராமுவும் மதிவாணனும் மனமுடைந்து உரையாடுகின்றனர்.[10]

ராமு : ஒண்ணு படிச்சவங்களுக்கு உடனடியா வேலை கிடைக்கணும். இல்லே வேலை கிடைக்கிற வரைக்கும் உதவிப் பணமாவது கொடுக்கணும்.

மதி : சர்க்காரை குறை சொல்றதும் அதையே முழுசா நம்பியிருக்கிறதும் முறையில்லை! நாமளும் ஏதாவது சொந்தமா முயற்சி செய்யணும். அதுக்கு அவங்க உதவியைநாடணும் அதுதான் ஞாயமும் கூட!

சமூகப் பிரச்சனையை எடுத்துக் கூறி அதற்குரிய தீர்வாகத் தான் நினைப்பதை நாடக ஆசிரியர் எடுத்துக் கூறியுள்ளதைக் காண லாம். இதனை ஒரு நல்ல ஆலோசனையாக மக்களும் அரசும் கருதுவதே முறை.

வேலை பெற்றாக வேண்டும் என்ற வேகத்தில் கையூட்டு கொடுத்தல், பரிந்துரை பெறுதல் போன்ற குறுக்கு வழிகளை ஆசிரியர் கண்டிக்கிறார். வேலை கிடைத்தபின் உண்மையாக உழைக்காமல் தவறான செயல்களில் ஈடுபடும் கயமையை வன்மை யாகக் கடிந்துரைக்கிறார். இருபக்கக் கண்காணிப்புடன் நாடக ஆசிரியர் பிரச்சனையை அணுகும் முறை நன்கு அமைந்துள்ளது.

---

9. மேற்படி, பக். 66, 80.
10. வேலை காலியிருக்கு, பி.பி.செல்லப்பா, வாணி லட்சுமி பதிப்பகம், போரூர், சென்னை, (1982) பக். 8.

மதிவாணனின் வாய் மொழியாக ஆசிரியர் இவ்வுண்மையைச் செவ்வனே விளக்குகிறார்.

> 'எப்பவுமே நியாயத்துக்கும் நீதிக்கும் தலைவணங்கணும். அதே சமயம் அக்கிரமத்தையும் அநீதியையும் எதிர்த்து அஞ்சாம துணிஞ்சுதான் நிக்கணும்.''[11]

இதுதான் ஆசிரியரின் அரிய கொள்கை. இதை நல்ல முறையாகக் கடைப்பிடித்து இந்த நாடகத்தை எழுதியுள்ளார்.

நடுவே குடியின் தீமையை விளக்கிக் காட்ட ஓர் இடத்தைப் புகுத்தியுள்ளது தெளிவாகத் தோன்றுகிறது. இளைஞர் நாட்டு நலனை மனத்தில் கொண்டு துணிச்சலுடன் முன்னேற வேண்டும் என்பது வலியுறுத்திக் காட்டப்படுகிறது. இறுதியில் ஆசிரியரின் ஆவல் வெளியிடப் பெறுகிறது.

> 'இந்த நாட்டில் படித்த இளைஞர்கள் வேலை தேடி அலையக் கூடாது. வேலை அவர்களைத் தேடி வர வேண்டும்.'[12]

வேலை தேடி வருமா அல்லது வேலையை அவர்களே உருவாக்கிக் கொள்ள வேண்டுமா அல்லது பலதரப்பட்ட வேலைகள் உருவாக்கப்பட்டு அவர்களுக்குத் தரப்படுமா என்பதைப் பொறுத்திருந்து தான் பார்க்க வேண்டும்,

கோமல் சுவாமிநாதனின் தண்ணீர் என்ற நாடகம் சிற்றூர்களின் அவலநிலையினை ஒரு கோணத்தில் நின்று பார்க்கும் காட்சிப் படைப்பாக உள்ளது. அத்திப்பட்டி என்ற ஊர் நாகரிக உலகிலிருந்து சற்று தூரம் தள்ளியிருப்பதாகக் காட்டப் படுகிறது. அங்கு மக்கள் தண்ணீரின்றித் தவிக்கின்றனர். அரசு உதவ முன் வரவில்லை. ஆனால் சட்டத்தின் முன்னால் குற்றவாளியாக்கப்பட்ட வெள்ளைச்சாமி அவ்வூரின் தண்ணீர்த் தட்டுப்பாட்டை அகற்ற உறுதி பூணுகிறான். அத்திப்பட்டு மக்களிடம்,

> 'உங்க ஊர் மாரியம்மன் நெதம் குளிக்கணும் நீங்க எல்லோரும் தினம் தாகம் தீரத் தண்ணீர் குடிக்கணும்'[13]

---

11. மேற்படி, பக். 39
12. மேற்படி, பக். 84
13 தண்ணீர் தண்ணீர், கோமல் சுவாமிநாதன், வானதி பதிப்பகம், சென்னை-17, (1981) பக் 17.

என்று வெள்ளைச்சாமி கூறுவதில் அவனுடைய மன உறுதியும் நம்பிக்கையும் தோன்றும். அவன் அவ்வூருக்காக மாடாய் உழைப்பது விளக்கப்படுகிறது. அதனுடைய முன் வரலாறு சிற்றூர்த் தலையாரிகளின் அலங்கோலங்களை அம்பலப்படுத்து கிறது. அரசு இயந்திரம் இயங்காது இயங்கும் அவலநிலை அழுத் தம் திருத்தமாகப் புலப்படுத்தப் பெறுகிறது. சட்டத்தின் கோரச் சிரிப்புக்கு முன்னால் நீதிமதி மயங்கி விடுவதை நாடகம் நயமாகக் காட்டுகிறது.

தேர்தல் களத்தின் திகைப்புறு செயல்கள் வெளிப்படுத்தப்படு வதுடன் இனியும் மக்களை ஏமாற்றுவது இயலாத காரியம் என்பதும் விளக்கப்படுகிறது. காந்திய வழி வினாக் குறியாக்கப் பட்டு விட்டதாக இந்த நாடகம் கருதுகிறது. இளைஞன் கோவாலுவின் வாயுரையான,

> 'அடிதடி இல்லாம காந்திவளியில போய் கேளுேங்க. தலையில மொளகா அறைப்பானுக. போராட்டம் நடத் தித்தான் காரியத்தை நாம் சாதிக்கணும்[14]

என்பதின் வாயிலாக ஆசிரியர் தன் மனக் கருத்தைப் புலப்படுத்த விரும்புகிறார். இளைஞர்கள் தான் சமுதாய மாற்றத்துக்கு உதவ முடியும் என்பதை விளக்க,

> 'வயசுப் பிள்ளைக எதுக்கும் தயராத்தான் இருக்கீக; உங்களால்தான் இந்த ஊருக்கு விடிவு காலம் வரணும்'

என்று வெள்ளைச்சாமி வாயிலாகக் கூறப்பட்டுள்ளது. பெரியவர் கள் மனம் வருந்தாமல் செயல்பட வேண்டும் என்ற ஆலோசனை யும் கூறப்படுகிறது.

நாட்டு நடப்பை நையாண்டி செய்யும் நாடகமாக இது விளங்குகிறது. பல குறைகளை அங்கத முறையில் சுட்டிக் காட்டுகிறது.

> 'இந்த நாட்டுல பேப்பர் பஞ்சம் வந்ததுக்குக் காரணமே கவர்மெண்டுக்கு பெட்டிஷன் எழுதிப் போட்டுத்தான்'[16]

என்று கூறுவது அவ்வாறு அமையும் ஓரிடமாகும். சமுதாயப் பிரச்சனைகள் பலவற்றைக் கிளப்பி அவற்றுக்குத் தீர்வு காணா

14. மேற்படி, பக். 81.
15. மேற்படி, பக். 83.
16. மேற்படி, பக். 105

விட்டால் கடுமையான புரட்சி தவிர்க்க முடியாதது ஆடுவிடும் என்ற அபாய அறிவுப்புடன் நாடகம் முடிவடைகிறது. முக்கிய மான ஒரு தேவையான தண்ணீரை முக்கிய பிரச்சனையாக்கி நாட்டு நடப்பை நன்றாக விளக்க நாடக ஆசிரியர் முயன்றுள்ளார்.

செ. உலகநாதன் (திருத்தணி) யாருக்கு யார் சொந்தம் என்ற நாடகத்தை சாதி ஒழிப்பு என்ற சீர்திருத்த நோக்கத்துடன் சமைத்துள்ளார். சாதிப் பாகுபாட்டு உணர்வில் பெரியவர்கள் சிக்கியிருப்பதையும் அதிலிருந்து விடுபட இளைஞர்கள் துடிப்பதை யும் இந்த நாடகம் விரிவாக விளக்குகிறது. சாதி ஒழிப்பை மனித சமுதாயம் ஒன்றுபடும் வேள்வியாக ஆசிரியர் கருதுகிறார்.[17] உலகளாவிய ஒரு பரந்துபட்ட சமுதாயத்தைக் காண விரும்பு வதாகத் தோன்றுகிறது. அதில் மொழியுணர்வு, தேசியவுணர்வு ஆகியவை காணப்படுகின்றன. சுந்தர் என்ற பாத்திரம்,

> 'மொழியால் தமிழன்; நாட்டால் இந்தியன்; உலகில் ஓர் உறுப்பினன்'[18]

என்று கூறுவதில் இந்த உண்மை தெரிகிறது.

சாதி வேறுபாட்டை அழிக்க ஒரே ஒரு வழியாக ஏழ்மையைப் போக்க வேண்டும் என்பது நாடகத்தின் கருத்து. அடுத்த வழி யாகக் கலப்பு மணம் ஆதரிக்கப்படுகிறது.[19]

கல்வி முறையைச் சீர்திருத்தி அமைக்கவேண்டும் என்பதும் ஆசிரியரின் விருப்பமாகத் தோன்றுகிறது. இன்றையக் கல்வி மாறிவரும் வாழ்க்கை அமைப்புக்குச் சரியான துணையாக அமையவில்லை என்ற கருத்தைக் கொண்டு ஒரு குறிப்பு நாடகத் துள் தரப்படுகிறது.

> 'படிப்பு பயனுள்ளதாக இருக்கணும்னா தொழில் கல்வி யும் பொதுக் கல்வியோடு இணையணும். படிப்புக்கு ஏற்ற வேலை அப்போதுதான் கிடைக்கும்'[20]

தொழிற் கல்வி பொதுக் கல்வியோடு இணைய வேண்டும் என்ற பொதுக் கருத்தை ஆசிரியர் ஆதரிக்கிறார்.

---

17. யாருக்கு யார் சொந்தம், செ. உலகநாதன், செழியின் பதிக்கம், திருத்தணி, (1981) பக். 51
18. மேற்படி, பக். 60
19. மேற்படி, பக். 95.
20. மேற்படி, பக். 42

உண்மையான காதலுக்கு உயர்ந்த இடத்தை இந்த நாடகம் கொடுக்கிறது. அது மனிதன் தனக்குத் தானே ஏற்படுத்தி கொண்டுள்ள சாதி சமயப் பாகுபாட்டினைக் கடந்தது. 'தூய்மை யான காதல் இருக்கிற இடந்தான் உண்மையான கோயில் என்ற கருத்து விதைக்கப்படுகிறது.[21] அனைத்துச் சிறப்புக்களுக்கும் ஆதாரமாக அன்பு எடுத்துந் பேசப்படுகிறது. அன்பால்தான் கடவுளையும் அடைய முடியும்; உண்மையான காதலையும் அடைமுடியும்[22] என்பது ஆசிரியரின் கொள்கை.

பெருஞ் செல்வந்தர் ஒருவருடைய மகனை மருத்துவக் கல்வி படிக்க அனுப்பிவிட்டு அவனைக் கொண்டு சாதிக் கொள்கைக்குச் சாவுமணி அடிக்க விரும்புகிறார். தடைகளை மீறுகிறான். தன் உற்றார் பெற்றோர்களின் துணைகளை நாடிப் பெற முயல் கிறான். சமூகத்தில் இருக்கும் பிரச்சனையாகயினால் மக்களுக்கு நன்கு அறிமுகமானது. அதனைத் தீர்க்க விரும்புவோர் இந்த நாடகத்தை ஆதரிக்காமல் இருக்க முடியாது.

'சபாநாயகன்' என்ற திங்கள் இதழில் தொடராக வெளிவந்த நாடகமங்கை ஒரு நங்கை என்ற நாடகத்தில் ஆசிரியை கே. ரேணு தேவி சமுதாயத்தில் புரையோடிப் போயிருக்கும் ஒரு அருவருக்கத் தக்க நோயை அம்பலப்படுத்தி அறுவை சிகிச்சை செய்ய முயல் கிறார்.

மனைவி ஒருத்தி இருக்க இன்னொருத்தியை உடல் தினவு போக்கவும் உயர்நிலை அடையவும் மணந்து மயக்க வாழ்வு வாழும் புல்லர்களுக்குக் கொடுக்கப்படும் சவுக்கடியாக இந்த நாடகம் திகழ்கிறது. நடிகர் ராஜசேகரன் தன்னுடைய முதல் மனைவி கோமதி இருக்கும்போது இன்னொரு பெண்ணை தன் முன்னேற்றத்துக்கு உதவும் ஏணியாகக் கருதி மணந்து கொள்கி றார். கோமதியைப் பற்றியோ அவளுடைய மகன் சந்திரனைப் பற்றியோ யாருக்கும் கூறவில்லை. கோமதியைக் கண்டிப்பு நிறைந்த ஓர் உன்னத பாத்திரமாகப் படைத்துக் காட்டுவது சிந் தனைக்கு உரியதாக அமைகிறது.

தாயை ஏமாற்றி வாழும் தந்தையை மோசக்காரன் என்று மகன் கடிந்து உரைக்கிறான். ஆனால் தாயோ மஞ்சளுக்கும் குங்கு

21. மேற்படி, பக். 99.
22. மேற்படி, பக்.125.

மத்துக்கும் மதிப்பு கொடுத்துப் பேசுகிறாள்.[23] அனைத்தையும் அமைதிப்படுத்தும் முறையில் சத்திய மூர்த்தி என்ற முதியவர் வாய் மொழியாக 'சந்தர்ப்பமும் சூழ்நிலையும் தான் ஒரு மனுஷனைக் கெடுதலும் துரோகமும் செய்ய வைக்குது'[24] என்ற நீதி பேசப்படுகிறது.

தாய் மகன் உறவை இந்த நாடகம் நன்றாகச் சித்திரித்துக் காட்டுகிறது. பெரிய டாக்டரான மகனையும் கண்டிக்க அன்புத் தாய் தவறவில்லை. அவன் தவறான வழியில் சென்று வாழ்க்கையைப்பாழ்படுத்தி விடக்கூடாது என்ற உணர்வில் கண்ணும் கருத்துமாக அவனைக் கண்காணிக்கிறாள். நல்லதைச் செய்யத் தூண்டுகிறாள். எந்த நிலையிலும் கோமதி ஒரு நல்ல தாயாக நடந்து கொள்கிறாள்.

விருப்பு வெறுப்புக்கு அப்பாற்பட்டு ஒரு மருத்துவர் தன் கடமையைச் செய்ய வேண்டும் என்பதை இந்த நாடகம் மிகச் சிறப்பாகவும் உறுதியாகவும் எடுத்துக் காட்டுகிறது. சமூக நன்மையை நாட்டங் கொண்டு இந்த நாடகம் எழுதப் பெற்றுள்ளது என்பது உண்மை.

சமூக நாடகங்கள் அனைத்தும் சீர்க்கேடுகளையும் சிக்கல்களையும் சுட்டிக் காட்டித் திருத்தும் நோக்கத்துடன் எழுதப்பட்டுள்ளன. பொதுவாக நாடகங்கள் கலையாக அமைவதுடன் இலக்கியங்களாகவும் அமைய வேண்டும் நடிப்புக்கும் படிப்புக்கும் அவற்றில் இடமும் பொருளும் இணைந்து இருக்க வேண்டும். வளமான வாழ்வு யாருக்கு யார் சொந்தம் போன்ற நாடகங்கள் கருத்தை விளக்குகின்றன. ஆனால் நாடக உத்திகளை நயமாகப் பயன் படுத்தியதாகத் தோன்றவில்லை. வேலை காலியிருக்கு என்ற நாடகம் நடிப்புக்கு மிகுதியான இடம் கொடுத்துள்ளது. ஆறிலிருந்து பத்து வரையுள்ள ஐந்து காட்சிகளும் உரையாடலின்றி உருவாக்கப்பட்டுள்ளது. இது மிகையாகவே தோன்றுகிறது.

தண்ணீர் தண்ணீர், நாடக மாடுகிறாள் ஒரு நங்கை ஆகியவை நாடக உத்திகளை ஓரளவு பயன்படுத்தியுள்ளன. இரண்டிலும் பின்னதில் மறைப்பு உத்தி (Suspense) நன்கு அமைந்

23. நாடகமாடுகிறாள் ஒரு நங்கை, கே.ரேணுதேவி, சபா நாயகன் (திங்களிதழ்), சென்னை,-17, (1921) கா.13
24. மேற்படி, கா. 17

துள்ளது. முன்னதில் செவந்தி என்ற ஒரே ஒரு பெண் பாத்திரம் மட்டும் இடம் பெறுவதைக் காணலாம். இரண்டு நாடகங்களும் நடிப்பிற்கு வேண்டிய அளவு இடம் தந்துள்ளன. ஆயினும் நாடகச் சிக்கல் (Conflict) போதியஅளவு இருப்பதாகக் கூற முடியவில்லை. தண்ணீர் இல்லாமை, இருதார மணம் ஆகிய இரு எளிமையான பிரச்சனைகளை முறையே இரு நாடகங்களும் எடுத்துள்ளமை யால்; தர்க்கமான கருத்துக்களை நாடகத்துள் புகுத்த முடிய வில்லை.

வளமான வாழ்வு என்ற நாடகத்துள் ஒரே பிரச்சனையை விளக்குவதற்கு நாலு தலைமுறையினர் இடம் பெறுகின்றனர். இதனால் காலப் பொருத்தம் (unity of time) கடுமையான முறையில் மீறப் படுகின்றது. இதைப் பெருந்தவறு என்று கூற முடியாவிட்டாலும் தவிர்க்க இடமுள்ளது என்று கருதலாம்.

## வீரவுணர்வு நாடகங்கள்

மக்களை மிகவும் கவரும் உணர்வுகளில் ஒன்றாக வீரம் விளங் குகிறது. நல்லதுக்காகப் பாடுபடும் வீரனின் செயல் அனைவ ராலும் பாராட்டப் படுவதைப் பார்க்கலாம். தான், தனக்கு என்னும் உணர்வுகள் இன்றிச் செயல்படுவதில்தான் உண்மையான சிறப்பும் புகழும் உள்ளன. இத்தகைய வீரச் செயல்கள் மிக்க நாடகங்களை வீரவுணர்வு நாடகங்கள் என அழைக்கலாம். நாடகச் செயல்பாடுகள் நடந்தவைகளாகவும் கற்பனைகளாக வும் இருக்கலாம் நடந்தவை கொண்டு படைக்கப்படும் நாடகங் களை வரலாறு என்றும் கற்பனையாக எழுதப்பட்டிருப்பனவற் றைக் கற்பனைப் புனைவுகள் என்றும் பிரித்துக் காணலாம்.

மகாஜனம் வார இதழில் வெளி வந்த ஜெம்புலிங்கம் என்ற வரலாற்று வீரவுணர்வு நாடகம் ஜி. பால்துரை என்பவரால் எழுதப்பட்டது. அண்மைக் காலத்தில் திருநெல்வேலி மாவட்டத் தில் நடந்த ஒரு மாவீரனின் வாழ்க்கைச் செயல்களைக் கொண்டு உருவாக்கப் பட்டது இந்த நாடகம். பிறருக்காகத் தன் உயிரைப் பணையம் வைத்து வீரச் செயலாற்றிய ஜெம்புலிங்கம் 'கொள்ளைக் காரன்' என்ற அவப்பெயருக்கு எப்படி ஆளானான் என்பதையும் நாடகம் விளக்குகிறது.

சின்ன செல்வம் பிள்ளையின் மகளிடம் தவறாக நெருங்குகி றான் பெரும் செல்வந்தனான பெரிய செல்வம் பிள்ளை

அதனைக் கண்ட ஜெம்புலிங்கம் தாங்க முடியாத வேதனையுடன் அவனை எதிர்க்கிறான். அதனை நாடகம் காட்டும் பான்மை யினைக் காணலாம்.

பெரிய செல்லம் பிள்ளை: யாருடா நீ?
ஜெம்புலிங்கம்: உன் எமன்![25]

ஆபத்தில் சிக்கிய ஓர் அபலையைக் காப்பாற்றத் துணிந்த ஜெம்புலிங்கத்திற்கு வாழ்க்கை முழுவதும் பணக்காரர்களையும் அரசாங்கத்தையும் எதிர்த்தே வாழ வேண்டிய சூழ்நிலை உருவாகி விட்டது. நீதி மன்றமும் காவல் துறையும் ஜெம்புலிங் கத்தைக் கொள்ளைக்காரனாக மதித்து அவனை ஒழித்து விட முனைந்து செயல்பட்டன. 'சட்டம் என்ற கோட்டைக்குள் சாட் சியம் என்ற விலங்கிடப்பட்டுக் கிடப்பவர்தான் நீதிபதி'[26] என்று ஜெம்புலிங்கம் கூறுமளவுக்கு நீதி நிலை குலைந்து காணப்பட்டது.

ஜெம்புலிங்கம் எதற்கும் அஞ்சவில்லை. தீயவர்களைத் திட்ட மிட்டு அழிக்கத் துணிந்தான். ஏழைகளுக்கு உதவ முயன்றான். செல்வர்களைக் கொள்ளையடித்து இல்லாதவர்களைக் காப்பாற் றினான். காவலர்களை ஏமாற்றினான். காட்டிக் கொடுப்பவர் களை வாட்டினான். காருண்ய அம்மாளுக்குப் பணிந்தான். ஆங்கில அதிகாரிகளின் வஞ்சகச் செயலை வன்மையாகக் கண்டித் தான். அஞ்சாது அரிய செயல்கள் பலவற்றைச் செய்தான்.

காசிக்கும் ஜெம்புலிங்கத்தும் இடையிலுள்ள உறவு மிகவும் இறுக்கமானது. அவர்களிருவரின் உறுதி மொழிகள் அதை மிகத் தெளிவாகப் புலப்படுத்தும்.

காசி: மரணம் உங்களைத் தொடுமுன் நான் அதை
அணைத்துக் கொள்வேன்.
ஜெம்: எந்த சக்தி உன் உயிரைப் பிரிக்க முயற்சிக்கிறதோ
அதே சக்திக்கு என் உயிரைக் கொடுப்பேன்[27]

இவ்வீரவுரையாடல் நாடக முடிவை முன் அறிவிப்பதாக அமைந்து விடுகிறது. காசி சுடப்பட்டு இறக்கிறான். அதைக் கண்டதும் ஜெம்புலிங்கம் சற்றும் தயங்காமல் தன்னைச் சாவுக்கு ஒப்புக் கொடுத்து விடுகிறான்.

---

25. ஜெம்புலிங்கம், ஜி. பால்துரை, மகாஜனம், (வார இதழ் மதுரை, (1981) கா.2
26. மேற்படி, கா.10.
27. மேற்படி, கா. 6

'ஏழ்மைச் சாகடிக்க இரவு பகலாய் அலைந்த நேர்மைச் சின்னங்கள் குடைசாய்ந்து கிடக்கின்றன'[28]

என்று கலங்கிக் கூறும் அளவுக்கு அவர்கள் சாவு அமைந்து விட்டது. ஒரு வீர விளையாட்டு முழுப் பொலிவுடன் முடிந்தது போல் நாடகம் முற்றுப் பெறுகிறது.

ரகுநாதனின் காவியப்பரிசு ஒரு சற்பனைப் புனைவாக மலர்ந்த வீரவுணர்வுக் கவிதை நாடகமாக வனொலியில் ஒலிபரப் பப்பட்டு அச்சுருவில் வெளிவந்துள்ளது. கவிஞனும் மன்னனும் வீரப் போரில் ஈடுபடுகின்றனர். அரசனுக்குப் பணிந்து அவரைப் பாட, கவிஞன் மறுக்கிறான். அவன் நிற்கும் நிலை அமைச்சனால் விளக்கப்படுகிறது.

'நெஞ்சுரத்தில் மிஞ்சி நிற்கும் கவிஞன் மட்டும் உலையி லிட்டும் உருகாத உருக்கைப் போலே உறுதியினை இழக்காது சிலையாய் நின்றான்'[29]

மன்னனாகிய வேங்கையன் வியந்து கவிஞனைப் பார்க்கிறான். தன்னைப் பாடுமாறு ஆணையிடுகிறான். கவிவாணன் சற்றும் கலங்காமல்,

'வேங்கையனே! ஒருவார்த்தை. என்னைத் துண்டாய் வெட்டிவெட்டிப் போட்டாலும் பாடேன்! பாடேன்'[30]

என்கிறார். அஞ்சா நெஞ்சமுடைய கவிஞனுக்கு அரசன் பணி கிறான். அவன் விரும்பியதை உடனே செய்ய முன்வருகிறான். வீரத்துக்கு முன்னால் வேந்தனும் துரும்பாகி விடுகிறான்.

## புராணப் புனைவு

பழமையான கதைகளைப் புராணங்கள் என்று கூறுவர். பெரும்பாலும் அவை இறைத் தொடர்பாக அமைந்ததாகும். அவ் வாறான பழமையான கதைகளை ஒட்டிக் கற்பனை ஆற்றலால் புதுமையான நாடகங்கள் படைப்பதைப் புராணப் புனைவு நாட கங்கள் என்று கூறலாம்.

நாடோடியின் **மாசற்றவள்** என்ற நாடகம் அகலிகையின் கதையைக் கற்பனைக் குழைவால் மாற்றிப் புதுப்பித்துத் தரும்

28. மேற்படி, கா. 25.
29. காவியப் பரிசு, ரகுநாதன், மீனாட்சி புத்தக நிலையம் மதுரை-1 (1982) பக் 24.
30. மேற்படி பக். 29

புராணப் புனைவு ஆகும். இந்திரன், அகலிகை, கௌதமர், அத்திரி. இந்திராணி முதலிய புராணப் பாத்திரங்களைக் கொண்டு அகலிகையுடன் இந்திரன் தொடர்பு கொள்ள முயலும் புராணக் கதையை அடிப்படையாக்கி ஒரு புதுமையான போக்குடைய நாடகத்தை நாடோடி உருவாக்கியுள்ளார்.

காம எண்ணத்துடன் இந்திரன் அகலிகையைப் பின் தொடர்கிறான். கௌதம முனிவர் அவனைப்பற்றி ஐயப்படாதவாறு நடந்து கொள்கிறான். இந்திராணி தன் கணவன் அகலியைக் கெடுத்து விடக்கூடாது என்று கண்ணும் கருத்துமாக இருக்கிறார். ஒருவரை ஒருவர் ஏமாற்ற அனைத்துப் பாத்திரங்களும் முயல்கின்றனர் முடிவில் கௌதமர் உருவில் இந்திரன் அகலிகை உருவில் இருந்த இந்திராணியைக் கௌதமருடைய குடிசையில் கூடிக் களிக்கிறான். இந்திராணி வெற்றிக் களிப்பில் தன்னுருவைக்காட்டுகிறாள். இந்திரன் ஏமாற்றத்துடன் தன் சுயஉருவுக்கு வருகிறான். அகலிகை வியப்புடன் தோன்றுகிறாள். அடுத்தவனைக் கவரத்தக்க அழகுடைய அகலிகையைக்கல்லாகி விடுமாறு கௌதமர் சபிக்கிறார். இராமனின் கால் வண்ணத்தால் கல்லுருவம் மாறும் என்ற சாபத்தீர்வின் அறிவிப்புடன் நாடகம் நன்கு முடிகிறது.

பாத்திரங்கள் குழம்பித் தவிப்பதில் நாடகத்தின் நயம் பளிச்சிடுகிறது நகைச்சுவை மிகுதியாக அமைந்து நாடகத்தின் சுவையைப் பெருக்கிறது. காலத்துக்குத் தக்கவாறு கருத்துக்கள் தூவப்படுகின்றன. சிந்தனைக்கு ஏற்ற கருத்துகளாக அவை நாடகம் முழுவதும் பரவிக் கிடக்கின்றன.

இந்திரன் அகலிகையைப் பார்த்து,

> 'அளவுக்கு மீறி நகை வைத்திருக்கும் பெண்களால் நகை போய்விட்டது என்று கண்டுபிடிக்க முடியாது'[31]

என்று கூறுவது இக்காலக் கண்ணோட்டத்தில் சுவைத்து மகிழத் தக்கதாக உள்ளது. மேலும்,

> 'யாரிடம் அரசு இருக்கிறதோ அவர்கள்தான் தைரியமாக அக்கிரமங்கள் புரிவார்கள்'[32]

என்ற கூற்று இக்கால அரசியல் நையாண்டியாக அமைகிறது, அகலிகை,

---

31. மாசற்றவள், நாடோடி, சபாநாயகன் (திங்களிதழ்) சென்னை, (1981) கா 5.

32. மேற்படி, கா.1.

'நான் பாரதப் பெண். ஆகவே கல்லானாலும் கணவன், புல்லானாலும் புருஷன் என்கிற கொள்கையை உடையவள்![33]

என்று பேசுவது பாரதப் பண்பாட்டையும்,

'ஒரு அழகான பெண்ணைக் கண்டதும் பின் தொடர்வது இந்த நாட்டுக்கே அவமானம்'[34]

என்பது இன்றைய பாரத நாட்டின் அவல நிலைமையையும் சித்திரிப்பதாகக் காணப்படுகிறது. இவ்வாறு நாடகம் புராணப் பொதிவில் நவீன உணர்வுகளைத் தாங்கி நடையிடுகிறது. அகலிகையை மாசற்ற மாணிக்கமாகக் காட்டுவது ஆசிரியரின் பண்பாட்டுக்கேற்ற கற்பனைத் திறனாகத் தோன்றுகிறது.

## இலக்கியத் தழுவல்

முன் இலக்கியத்தைத் தழுவிப் புதுமைப் பொலிவுடன் நாடகம் எழுதுவதை இலக்கியத் தழுவலாகக் கருதலாம். புகழேந்திப் புலவரின் நளவெண்பாவை அடியொற்றி தமயந்தி என்ற கவிதை நாடகத்தை மலேசியக் கவிஞர் உலகநாதன் எழுதியுள்ளார். கவிதை அமைப்பு புதுமையாகக் காணப்படுகிறது. கதை பழமையாக உள்ளது. இடையிடையே நாடக ஆசிரியரின் குரலில் காலத்துக்கு ஏற்ற நயமான உரைகள் ஒலிக்கின்றன.

கதையின் நோக்கத்தை முன்னெடுத்து ஆசிரியர் மொழிவது நாடகத்தைத் தெளிவாக உணர்வதற்குத் துணையாக அமைகிறது.

'தனிமனிதன் தவறிழைத்தால்
சரிவதவன் ஒருவன்தான்!
தலைவனே தவறிழைத்தால்
சமுதாயம் தடம்புரளும்!
இனிய இந்த தத்துவத்தை
எடுத்துரைக்கும் கதையிதுகாண்![35]

நாடகம் தொடர் அறாது நடையிட்டு முன்னேற 'குரல்' என்றொரு பகுதியை இடையிடையே புகுத்தி இருக்கும் ஆசிரியரின் கட்டுக்கோப்புப் புதுமையாக உள்ளது. ஆனால் அது நாடகத்தின்

33. மேற்படி, கா.1.
34. மேற்படி, கா.1
35. தமயந்தி, மலேசியக்கவிஞர் உலகநாதன், பாரி நிலையம், சென்னை-1, (1981) முன்னுரை, பக். xiii)

இயல்பான போக்கை இடையறச் செய்வதாகவே தோன்றுகிறது. ஆகையினால் இந்த உத்தியை நாடகச் செயலோட்டத்துள் புகுத்தியிருப்பது வினாக்குறியை எழுப்புவதாகவே உள்ளது. நாலாவது அங்கம் இது பற்றி நன்கு சிந்திப்பதற்கு உரிய இடமாகக் காணப்படுகிறது. இதனை நாடகமாகவோ நாடகக் காப்பியமாகவோ கருதுவதற்கு முடியாத அமைப்பில் ஆசிரியர் படைத்துள்ளார். நாடக பாணியில் நளன் கதை நவிலப்பட்டுள்ளதாகக் கருதலாம்.

## சிறுவர் நாடகங்கள்

சிறுவர் நாடகத் தொகுதியாக அ.அகமது பஷீருடைய மறுவாழ்வு என்ற நூலை எண்ணலாம். இதில் பத்து ஓரங்க நாடகங்கள் சிறுவர்களுக்கு அறிவுரை கூறும் நிலையில் அமைந்துள்ளன. அனைத்தும் வானொலிக்காக எழுத்தப்பட்டவை. சிரித்துக் கொண்டே இருப்பேன் என்பது அன்புடன் செயல்பட வேண்டும் என்ற கருத்தை விளக்குகிறது. காலமும் கடமையும் என்ற நாடகம் குறிப்பிட்ட நேரத்தில் செய்ய வேண்டியதைச் செய்து முடிக்க வேண்டும் என்று சிறுவர்களுக்கு அறிவுரை கூறுகிறது.

அண்ணனும் தங்கையும் என்ற ஓரங்கநாடகம் கடிகாரம் பற்றிய அறிவை ஊட்டுகிறது. இவ்வாறு பங்கு போட்டு தின்னலாம், தவறும் திருத்தமும், குழந்தை நூலகம், உதவி, புத்தக வங்கி உதவ வேண்டும், ஆகிய நாடகங்களும் ஒவ்வொரு கருத்தை ஒவ்வொரு அங்கத்தில் விளக்குகின்றன.

மறுவாழ்வு என்ற நாடகம் பதினொரு பாத்திரங்களைக் கொண்டு பன்னிரண்டு காட்சிகளாக விரிந்து ஒரு நல்ல கருத்தை நயமாக விளக்கும் சிறப்புடையதாக உள்ளது. நல்ல மனமும் நல்ல சிந்தனையும் உடையவர்களுக்கு எந்த விதமான குறையும் வராது என்ற கருத்தை விளக்குவதாகும். அங்கு இங்குமாகக் குழந்தைகளுக்கு அறிவுரைகள் அள்ளி வீசப்படுகின்றன. உழைப்பின் பெருமையைப் பிஞ்சு உள்ளங்களில் விதைக்கும் திறமை இந்த நாடகத்துக்கு உள்ளது.

## மொழிபெயர்ப்பு நாடகம்

வடமொழியில் மகேந்திரவர்ம பல்லவன் எழுதிய மத்தவிலாச அங்கதம் என்ற நாடகத்தை தமிழுக்கு ஆக்கம் தரும் வகையில் இ. ஜான் ஆசீர்வாதம் மொழி பெயர்த்துத் தந்துள்ளார். கவிதை நடையிலேயே கவிதைகளைத் தந்திருப்பது ஒரு சிறப்பாகும்.

கபாலிகன் ஒருவன் தன் மனைவியான தேவசோமா என்பாளைக் குடிவெறியில்,

'முத்தென வியர்வை சொரிந்திடும் எழில் முகம்
முழுவதும் அழகுற நெளிந்திடும் புருவம்
மத்த நடையொரு பொருளற்ற முறுவல்
முறையறு அசையொடு மூழங்கிய வாய்மொழி[37]

என்று பலவாறு கூறி வியப்பதை மொழிபெயர்ப்பு என்று கணிப்பதே கடினமாக இருக்கும். இவ்வாறுள்ள பாடல்கள் நாடகத்துள் பலவாகக் காணப்படுகின்றன.

நாடக உரையாடல்களும் வேற்று மொழி நாடகம் என்பதை மறக்கச் செய்யும் அளவில் பொருள் நன்கு புரியுமாறு நல்ல தமிழ் நடையில் சிறப்பாக அமைந்துள்ளன.

புகழ் மிக்க வரலாற்றுச் சிறப்புடைய மத்தவிலாசம் நல்ல தமிழ் நாடகமாக மலர்ந்து உள்ளதை உயர்வாக மதிக்கத்தான் வேண்டும். மூல நாடகம் நகைச்சுவையுடன் விளக்கக் கருதிய கருத்தை இந்த மொழிபெயர்ப்பு நாடகம் தமிழில் விளக்கிச் சிறந்துள்ளது.

## பொதுவான சிந்தனை

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பத்தொன்றில் சமூக நாடகங்களே மிகுதியாகத் தோன்றியுள்ளன. சமுதாயப் பிரச்சனைகள் மிகுதியாகத் தோன்றும் பொழுதுதான் இத்தகைய நாடகங்கள் எழுதப்படும். சாதி வேறுபாட்டுணர்வு சமுதாயக் கட்டுக்கோப்புக்கும் ஒன்றிய செயல்பாட்டுக்கும் பெரிய தடைக் கல்லாக இருப்பதை மக்கள் உணரத் தலைப்பட்டு விட்டார்கள் என்பதை அறிய முடிகிறது. கலப்பு மணத்தால் சாதிப் பிடிப்பின் தளர்வு ஏற்படுவதை நாடக ஆசிரியர்கள் நன்கு உணர்த்த விரும்புகின்றனர்.

பெண்கள் சமுதாய ஏணியில் படிப்படியாக மேலேறுவதையும் சில நாடகங்கள் சுட்டுகின்றன. ஒழுக்கக் கட்டுப்பாடு சீர்குலைந்து விடக்கூடாது என்ற அறிவுரையும் அமைதியாகத் தரப்படுகிறது. வரதட்சிணை ஒரு சாபக்கேடாக அமைந்து சமுதாய நலனுக்குப் பாதகமாக இருப்பதையும் நாடகங்கள் விளக்குகின்றன.

36. மத்தவிலாச அங்கதம், மகேந்திர விக்கிரமவர்ம பல்லவன்' மொ.பெ. இ. ஜான் ஆசீர்வாதம், கிறிஸ்தவ இலக்கிய சங்கம், சென்னை, (1982) பக்.3,

வேலையில்லாத் திண்டாட்டம் பெருகி வருவதை அச்சத்தோடு அறிவுறுத்தும் நாடகங்களை மிகுதியாகப் பார்க்க முடிகிறது. கல்வி முறையை மாற்றி அமைத்து இந்தப் பிரச்சனைக்கு நல்ல தீர்வு காண துரிதமாக முயலவேண்டும் என்ற கருத்து உறுதியாக உணர்த்தப்படுகிறது. இளைஞர்கள் நம்பிக்கை இழந்து காணப்படுவதை நாடகங்கள் வருத்தத்துடன் காட்டுகின்றன. சமுகத்தில் புல்லுருவிகளும் கொள்ளைக்காரர்களும் தோன்றுவதற்கு வேலையில்லாத் திண்டாட்டம் முக்கியமான காரணம் என்பதை விளக்கமாக எடுத்துக் கூறுகின்றன. அந்தப் பிரச்சனையை உடனடியாகத் தீர்க்க முயல வேண்டும்.

அலுவலகச் சீர்கேடுகள், பிறனில் விழைதல், ஏமாற்றல், ஏற்றத் தாழ்வு காட்டல், பகை மூட்டல் முதலிய பலவிதமான தீமைகள் நாடகங்களால் விளக்கப்படுகின்றன. குடும்ப அமைப்பில் நிகழும் சீர்குலைவுகளையும் நாடக ஆசிரியர்கள் மறைக்கவில்லை. மனிதன் நாளுக்கு நாள் அறிவுநிலையில் வளர்ந்து கொண்டு வருகிறான். சமுதாய அமைப்பு துரிதமாக மாறிக் கொண்டு வருகிறது. இத்தகைய மாற்றங்களைப் புரியாமல் தவிப்பது அறியாமை. அறிவுடன் சூழ்நிலையை நன்றாகத் தெரிந்து கொள்ள வேண்டும். சமுதாய உணர்வுடன் ஒன்றி வாழ முயல வேண்டும்.

நாடக அமைப்பை மாற்றிப் புதுமைகளைப் புகுத்த சில நாடக ஆசிரியர்கள் முயன்றுள்ளனர். ஆனால் அவை சீராக அமைந்ததாகத் தோன்றவில்லை. உரையாடல்கள் குறுகியனவாக இருப்பது சிறப்பாக உள்ளது. நடிப்பிற்குச் சிறப்பிடம் தந்திருப்பது வரவேற்கத் தக்கது. தனிமொழி இல்லை என்றே கூறலாம். தலைமை பாத்திரம் என்ற சிறப்பு தனிப்பட்ட ஒரு பாத்திரத்துக்கு இல்லாமல் நாடகங்கள் எழுதப்பட்டுள்ளன. சில நாடகங்கள் பாத்திரப் பண்புகளை விடவும் கூறும் கருத்துகளுக்குச் சிறப்பிடம் கொடுத்துள்ளன.

ஓரளவு முன்னேற்றத்தை இந்த ஆண்டிலுள்ள தமிழ் நாடகங்களில் கண்டாலும் இன்னும் சிறப்பான முன்னேற்றத்தை அடுத்த ஆண்டு எதிர்பார்த்து மனநிறைவு பெறலாம்.

## பின்னிணைப்பு

### எண்பத்தொன்றில் வெளிவந்த நாடகங்கள்

| | | |
|---|---|---|
| 1 | அன்னையின் அன்பளிப்பு, | இ. கோவிந்தராஜுலு, முருகன் பதிப்பகம், சென்னை-56 |
| 2 | எங்கள் தெய்வம், | எஸ். பூமிநாதன், நாவலர் புத்தக நிலையம், மதுரை |
| 3 | காவியப் பரிசு | ரகுநாதன் மீனாட்சி புத்தக நிலையம் மதுரை 4 |
| 4 | சத்தியத்தின் கரங்கள் | டி என். சுகிசுப்பிரமணியம் சென்னை |
| 5 | தங்கச் சிலைகள் | ச. மாதவன் வானதி பதிப்பகம், சென்னை-17 |
| 6 | தண்ணீர் தண்ணீர் | கோமல் சுவாமிநாதன் வானதி பதிப்பகம், சென்னை-17. |
| 7 | தமயந்தி | மலேசியக் கவிஞர் உலகநாதன் பாரி நிலையம், சென்னை-1 |
| 8 | தெற்கில் கதிரவன் உதிக்கிறான் | மு. உலகநாதன் முத்துச் சிதம்பரனார் பதிப்பகம் மதுரை |
| 9 | தொலைக்காட்சிநாடகங்கள் | அண்ணாமலை சென்னை |
| 10 | நாடகமாடுகிறாள் ஒரு நங்கை | கே. ரேணுதேவி சபாநாயகன் (திங்களிதழ்) சென்னை-17 |
| 11 | புரட்சிக்கவி | வசந்தகுமார் வள்ளுவர் பதிப்பகம், சென்னை |
| 12 | பொன்னூர்தி | புனை நலங்கிள்ளி தமிழ்மணி புத்தகப் பண்ணை, சென்னை-5 |

| | |
|---|---|
| 13 மத்த விலாச அங்கதம் | மகேந்திர விக்கிரமவர்ம பல்லவன்<br>(மொ.பெ.) இ.ஜான் ஆசீர்வாதம்<br>கிறிஸ்தவ இலக்கிய சங்கம்<br>சென்னை |
| 14 மறுவாழ்வு | அ. அகமது பஷீர், சென்னை |
| 15 மாசற்றவள் | நாடோடி<br>சபாநாயகன் (திங்களிதழ்)<br>சென்னை |
| 16 யாருக்கு யார் சொந்தம் | செ. உலகநாதன்<br>செழியன் பதிப்பகம்<br>திருத்தணிகை |
| 17 வளமான வாழ்வு | எஸ். என். சி நாகையன்<br>மருதமலையான் பதிப்பகம்<br>சென்னை |
| 18 வாள்விழி | மு. உலகநாதன்<br>முத்துச் சண்முகனார் பதிப்பகம்<br>மதுரை |
| 19 வேலை காலியிருக்கு | பி. பி. செல்ல்ப்பா<br>வாணிலட்சுமி பதிப்பகம் போரூர்<br>சென்னை |
| 20 ஜெம்புலிங்கம் | ஜி. பால்துரை<br>மகாஜனம் (வாரஇதழ்)<br>மதுரை |

# 6. சிறுகதை

டாக்டர் சு. வேங்கடராமன்

சிறுகதை என்பது வாழ்க்கையின் சாளரம். எண்பத்தொன்றில் வெளியான சிறுகதைகள் பலவற்றில் ஆழமான வாழ்க்கைப் பிரச்சினைகளை மையமிட்ட உள்ளடக்க வீச்சைக் காண்கிறோம். உள்ளடக்க வீச்சும், அதற்கேற்ற அமைப்பும் கலைத்திறனும் இணைந்த கலைவடிவங்களாகக் காணப்படும் இக்காலச் சிறுகதைகளில் பலவற்றில் தமிழ் சிறுகதை ஆழமான வளர்ச்சி பெற்றுள்ளதை உணர முடிகிறது.

## நுழைவாயில்

ஆயிரத்துத் தொள்ளாயிரத்து எண்பத்தொன்றாம் ஆண்டின் சிறுகதைகளினுடைய மதிப்பீடாக அமையும் இந்த ஆய்வுக் கட்டுரையின் முதற்பகுதியில், இவ்வாண்டில் வெளியான சிறுகதைத் தொகுப்புகளின் பட்டியல் தரப்பட்டு உள்ளது. அதனையடுத்து அவை பற்றிய மதிப்பீடு உள்ளது. எண்பத்தொன்றாம் ஆண்டில் முதற்பதிப்பாக வெளியான சிறுகதைத் தொகுப்புக்கள் மட்டுமே இங்கு ஆய்வுப் பொருளாகின்றன. இக்கால கட்டத்தில் இதழ்களில் மலர்களில் வெளியான சிறுகதைகளையோ மறுபதிப்பாக வந்த தொகுப்புக்களையோ இந்த ஆய்வில் சேர்த்துக் கொள்ளவில்லை. எண்பத்தொன்றாம் ஆண்டில், தமிழர் வாழும் பிற நாடுகளில் வெளியான தமிழ் சிறுகதைகளை இவ்வாய்வில் உட்படுத்திக் கொள்ளவில்லை. தமிழகத்திலும் கேரளத்திலும் புதுவையிலும் முதற்பதிப்பாக எண்பத்தொன்றாம் ஆண்டில் வெளிவந்த சிறுகதைத் தொகுப்புகளை மட்டும் ஆய்வதாக இந்த ஆய்வு அமைகிறது. பிற நாடுகளில் வாழும் தமிழ் எழுத்தாளர் படைத்த சிறுகதைத் தொகுப்பு தமிழ்நாட்டில் வெளியான போதும் அவையும் இந்த ஆய்வில் இடம் பெறவில்லை.

## ஆய்வின் அணுகுமுறை

இந்த ஆய்வின் முதற்பகுதியில் எண்பத்தொன்றாம் ஆண்டில் முதற்பதிப்பாகத் தமிழகத்திலும் கேரளத்திலும் புதுவையிலும் வெளியான சிறுகதைத் தொகுப்புக்களின் பட்டியல் தரப்பட்டுள்ளது. அதனை அடுத்து இக் கால கட்டத்தின் பொதுவான போக்குகள் சில சுட்டப்பட்டுள்ளன. வாசகர்களின் படிப்பார்வம், எழுத்தாளர் நிலை. வெளியீட்டாளர் நிலை ஆகிய முப்பரிமான அமைப்பினடிப்படையில், இக்காலத்தின் போக்குகள் சில விளக்கப் படுகின்றன. இப்பாங்கின் அடிப்படையில், சில அடிப்படை உண்மைகளை அறிந்து கொண்டால், பின்வரும் இக்காலகட்ட தமிழ்ச் சிறுகதைகளின் போக்கையும் நோக்கையும் உணர்ந்து கொள்ள முடியும். சிறுகதைகளைத் திறனாயும் பகுதியில் அவற்றின் உருவம், உள்ளடக்கம் உத்தி பற்றிய மதிப்பீடு காணப்படினும் பொதுப்பாங்கும் தனிப்பாங்கும் விவாதிக்கப் படுகின்றன. ஒவ்வொரு தொகுப்பையும் தனித்தனியே ஆராய்ந்து மதிப்பிடாமல் பொதுவாக இக்கால கட்டத்தில் தமிழ்ச் சிறுகதைகளின் போக்குகள் எப்படி உள்ளன என்று இனம் பிரித்துக் காட்டுவதே இந்த ஆய்வின் அடிப்படை ஆனபடியால் அந்த முறையிலே ஆய்வும் அமைகிறது.

இக்கால கட்டத்தில் வெளியான சிறுகதைத் தொகுப்புகள்: எண்பத்தொன்றாம் ஆண்டில் முதற் பதிப்பாக வெளிவந்த சிறுகதைத் தொகுப்புகள் (தமிழக-கேரள - புதுவை - படைப்பாளர் களின் படைப்புக்கள்) 22 ஆகும்[1]. அவை பின்வறுமாறு:

1. ஆனைச் சத்தம்-ஆ. மாதவன், அகரம், சிவகங்கை
2. உத்தராயணம் லா. ச. ராமாமிருதம், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை
3. மனிதாபிமானம்-தி. ஜானகிராமன், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை
4. அலைகள் ஒய்வதில்லை-கே.பி.எஸ். நீலமணி, பழனியப்பா பிரதர்ஸ், சென்னை
5. புதுமைப்பித்தனின் துரோகம்-ஆதவன், நர்மதா பதிப்பகம், சென்னை

---

1. இவ் ஆய்வாளரின் முயற்சியால் அறியப்பட்டவை 22 தொகுப்புக்களே. இப்பட்டியலில் இடம் பெறாதவை ஒரு சில இருத்தல் கூடும்,

6. அணில்கள்-சிவசங்கரி, வானதி பதிப்பகம், சென்னை
7. சிறுகதை எழுதுவது எப்படி?-சுஜாதா, குமரிப் பதிப்பகம், நாகப்பட்டினம்
8. காகிதச் சங்கிலிகள்-சுஜாதா, குமரிப் பதிப்பகம், நாகப் பட்டினம்
9. இந்திய பாஸ்போர்ட்-ரவிச்சந்திரன், விஜயா பதிப்பகம், கோயம்புத்தூர்
10. இந்த மலரும் வாடவா?-ஜாலிசுந்தர், பொன்னா பப்ளி கேஷன்ஸ், திருவனந்தபுரம்
11. அயல் மகரந்தங்கள்-வ. தேனப்பன், தேன் வள்ளியம்மை பதிப்பகம், தேவகோட்டை
12. பழைய சோறும் போர்ன்விட்டாவும் - கதைப்பித்தன். அன்னம், சிவகங்கை
13. மௌன உணர்த்தல்கள்-சக்திப்புயல், தென்றல் பதிப்பகம் புதுச்சேரி
14. தெய்வங்கள் ஓநாய்கள் ஆடுகள்-நாஞ்சில் நாடன், அகரம் சிவகங்கை
15. ரிஸப்ஷனிஸ்ட்-சக்திக்கனல் அகரம், சிவகங்கை
16. என்னதான் செய்வது? - பொன் சுந்தரராசு, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை
17. சின்னம்மிணி-தொகுப்பு- இலக்கியச் சிந்தனை - வானதி பதிப்பகம், சென்னை
18. விருந்து-தொகுப்பு, தனித்தமிழ்க்கழகம், புதுவை
19. இதய மலர்கள்-தொகுப்பு, பூக்கூடைப் பதிப்பகம், சென்னை
20. விடியும் வெளிச்சம் வரும்-தொகுப்பு, இலக்கிய வீதி, வாசுகி நூலகம், வேடந்தாங்கல்
21. சிகப்பாய்ச் சில மல்லிகைகள் - திருப்பூர் கிருஷ்ணன், சென்னை
22 யுகப்பிரசவம்-காவலூர் எஸ். ஜெகந்நாதன், நர்மதா பதிப்பகம் , சென்னை

1980-ஆம் ஆண்டில் வெளிவந்த சிறுகதைகளைவிட, எண்பத்தொன்றில் கூடுதலாக வந்துள்ளன[2]. எண்ணிக்கையில் மட்டுமன்றிக் கதைப்பொருள், கருப்பொருள், கலைத்திறன், வடிவச் செம்மை ஆகிய பல்வேறு கூறுகளிலும் தரத்தில் சிறந்த சிறுகதைகள் இக்காலத்தில் வந்துள்ளன. எழுத்துத் துறைக்குப் புதிய இளைஞர்களின் கையில் சிறுகதை செம்மையுற மலர்வதை இக்கால கட்டத்தில் உணர முடிந்தது. புதுவையிலுள்ள தனித்தமிழ்க்கழகம், விருந்து என்னும் தொகுப்பை எண்பத்தொன்றில் வெளியிட்டுள்ளது முதன் முதலாகத் தனித்தமிழ்ச் சிறுகதைத் தொகுப்பாக இந்நூல் வெளிவந்துள்ளது.[3] வேடந்தாங்கல் அருகேயுள்ள விநாயக நல்லூரில் உள்ள இலக்கிய வீதியின் வெயீடாக இனியவன் உருவாக்கி வெளியிட்டுள்ள விடியும் வெளிச்சம் வரும் தொகுப்பு இக்காலத்தில் குறிப்பிடத்தக்க முயற்சி.[4] முழுவதும் புதியவர்களான 12 எழுத்தாளர்களின் சிறுகதைகள் அடங்கிய இத்தொகுப்பு, தமிழ்ச் சிறுகதை வளர்கிறது என்ற பெரு நம்பிக்கையை வலியுறுத்துவதாக உள்ளது. இதே போலச் சக்திப்புயலின் மௌன உணர்த்தல்கள் தொகுப்பும் சிறுகதைத் துறைக்குப் புதிய கரங்களின் முயற்சி. இத்தொகுப்பிலும் கதையின் அனைத்து நிலைகளிலும் தரத்தை உடைய கதைகளைக் காண முடிந்தது. வ. தேனப்பனின் அயல் மகரந்தங்கள் தொகுப்பும் புதிய முயற்சி· ஆதவனின் புதுமைப்பித்தனின் துரோகம், ஆ. மாதவனின் ஆனைச் சத்தம், நாஞ்சில் நாடனின் தெய்வங்கள் ஓநாய்கள் ஆடுகள், திருப்பூர் கிருஷ்ணனின் சிகப்பாய்ச் சில மல்லிகைகள், தி. ஜானகிராமனின் மனிதாபிமானம், லா. ச. ராமாமிருதத்தின் உத்தராயணம் ஆகியன பழகிய கரங்களின் வீச்சால் மலர்ந்த சிறுகதைத் தொகுப்புகள். சிறுகதையின் நுட்பமான ஆழ வளர்ச்சிக்கு இக்காலம் துணை நிற்பதை இவை பறை சாற்றுகின்றன. பூக்கூடைப் பதிப்பகம் என்ற நிறுவனம் வெளியிட்டுள்ள இதய மலர்கள் தொகுப்பும் இக்காலத்தில் குறிப்பிடத்தக்க ஒரு படைப்பு.

---

2. காண்க: சு. வேங்கடராமன், "எண்பதில் சிறுகதை என்ற கட்டுரை ப 36. ச. வே. சுப்பிரமணியன், ர. விசயலட்சுமி (ப. ஆ) எண்பதில் தமிழ், சென்னை, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், 1982.
3. தமிழமல்லன், க. (தொ. ஆ,) விருந்து, முன்னுரை, ப. 5 புதுச்சேரி, தனித்தமிழ்க் கழகம், 1981.
4. இனியவன் (தயாரிப்பு), விடியும் ளிச்சம் வரும்., விநாயக நல்லூர் (வேடந்தாங்கல் அஞ்சல்), வாசுகி நூலகம் 1981.

இதில் கிறிஸ்தவ சமயத்தைச் சார்ந்த எழுத்தாளர்கள் பலர் சுய தரிசனம் செய்து, தனிமனித, சமுதாய வளர்ச்சிக்குத் தடையாகும் போலிகளைக் கூறுபோட்டுக் காட்டும் பணியைச் செவ்வனே செய்துள்ளனர்.

**இதழ்களின் நிலை:** பெரும்பாலும் இதழ்களில் எழுதி வெளியான பின்னர்ச் சிறுகதைகளைக் தொகுப்புகளாக வெளியிடுகின்றனர். எனவே, இதழ்களின் பாதிப்பு சிறுகதைகளிலும் உள்ளன. சிறுகதைகளின் கலைத் தன்மைகளில் குறைபாடுடைய கதைகள் வெளிவர இதழ்கள் துணை நின்றன.[5] வியாபார நோக்கில் போட்டி போட்டுக் கொண்டு தொடர்களை வெளியிடும் இதழ்கள் சிறுகதைகளுக்கு மிகுதியும் இடம் தராததால் சிறுகதை வெளியீடு பாதிக்கப்பட்டது. சிறு அளவில் விற்பனையாகும் இதழ்களில் நல்ல தரமான கதைகள் வெளிவந்த போதிலும் அவற்றிற்குப் படிப்பவர் ஆதரவு மிகுதியும் இல்லை. படிப்பவர்களில் பெரும்பாலும் பொழுதுபோக்கை மையமிட்டுப் பத்திரிகை படிப்பவரே மிகுதி. சிந்தனை வளத்திற்காகத் தரமிக்க சிறுகதைகளை நாடிப் படிப்பவர் குறைவு. எனவே, சிறுகதைகளைத் தேடித் தரமிக்கவற்றை வெளியிடும் போக்கை இதழ்கள் மாற்றிக் கொள்ளத் தலைப்பட்டன.

**பதிப்பக நிலை:** பொதுவாக, எண்பத்தொன்றாம் ஆண்டில் தமிழகத்தில் அனைத்துப் பெரிய பதிப்பகங்களும் சிறுகதைத் தொகுப்புக்களை வெளியிட்டுள்ளன. இது எண்பதாம் ஆண்டினைக் காட்டிலும் வெளியீட்டு அளவில் ஏற்பட்ட மாறுதல் - வளர்ச்சி - ஆகும். எழுத்தாளர்கள் தாமே வெளியிட்டுள்ள நிலையும் இக்காலத்தில் குறிப்பிடத்தக்கது. புதுவை தனித்தமிழ்க் கழகமும், வேடந்தாங்கல் (விநாயகநல்லூர்) இலக்கிய வீதியும், சென்னை இலக்கியச் சிந்தனையும் சிறுகதைத் தொகுப்புக்களை வெளியிட்டுள்ளன. தமிழ்ச் சிறுகதை வளர்கின்ற பக்குவ நிலையுடைய இவை காட்டுகின்றன.

**தொகுப்பிற்குப் பெயரிடல்:** சிறுகதைத் தொகுப்புக்களுக்குப் பெயரிடுவது என்பது பதிப்புத்துறையில் - நூல் உருவிக்கும் கலையில் - ஒரு குறிப்பிடத்தக்க பணி. பொதுவாக அது எழுத்

---

5. வேங்கடராமன், சு., ''எண்பதில் சிறுகதை'', எண்பதில் தமிழ் பக் 37-38.

6 மேற்கூறிய கட்டுரை, ப. 37,

தாளர் (அல்லது பதிப்பாளர் - தொகுப்பாளர் வெளியிட்டாளர் - தயாரிப்பாளர்) பணி. தொகுப்பில் உள்ள பல்வேறு கதைகளில் ஏதேனும் ஒன்றைத் தேர்ந்தெடுத்து அதன் தலைப்பையே தொகுப்பின் தலைப்பாக அமைப்பர். அந்தப் பெயருடைய கதை முதற் கதையாக அமையலாம். (எ-டு) 'விடியும் வெளிச்சம் வரும்.[7] இடையில் உள்ள கதையாக அமையலாம். (எ-டு) விருந்து;[8] அயல் மகரந்தங்கள்[9] மௌன உணர்த்தல்கள்[10]. இலக்கியச் சிந்தனை கதைகளைத் தேர்ந்தெடுத்து ஆண்டில் சிறந்த ஒன்றைத் தேர்வுசெய்து அதையே தொகுப்பின் பெயராகச் சூட்டுகின்றனர் ('சின்னம் மிணி'[11]) இதற்கு மாறாகத் தொகுப்பிற்குச் சூட்டப்பட்டுள்ள பெயரில் அத்தொகுப்பில் ஒரு சிறுகதை கூட இல்லாமல் உள்ளது. (எ-டு இதயமலர்கள்[12]). என்ன காரணம் கருதி இத்தொகுப்பிற்கு இப்பெயரிட்டனரோ தெரியவில்லை.

தவறாகப் பெயரிடல்: படிக்கும் வாசகர்களைத் தவறாக வழி நடத்துவதாக (misguide) வேறு ஒன்றை எதிர்பார்க்க வைப்பதாகச் சிறுகதைத் தொகுப்பின் பெயர் இருத்தல் கூடாது. சுஜாதாவின் சிறுகதைத் தொகுப்பான சிறுகதை எழுதுவது எப்படி? என்ற நூல் இவ்வாறு அமைந்தது. சிறுகதைகள் அடங்கிய ஒரு தொகுப்பிற்குப் பதிப்பாளர் (வெளியீட்டாளர்) இவ்வாறு பெயர் சூட்டியிருப்பது பொருந்தாத ஒன்று. சிறுகதை எழுதுவது எப்படி? என்ற தலைப்பு, சிறுகதை பற்றிய திறானய்வு நூலோ என்று எண்ண வைக்கிறது. இதே தலைப்பில் சிறுகதைத் திறனாய்வு நூல் ஒன்று[13] முன்னர் வெளிவந்துள்ளது. அப்படியிருந்தும் இத்தலைப்பை எவ்வாறு தேர்ந்தெடுதனர் என்பது தெரியவில்லை. தமிழ்ச் சிறுகதை பற்றிய திறனாய்வு நூல் என்று வாசகர்களைத் தவறாக வழி நடத்துவதாக இந்நூல் உள்ளது.

---

7. இனியவன் (தயாரிப்பு), விடியும் வெளிச்சம் வரும்'
8. தமிழமல்லன், க. (தொ. ஆ.) விருந்து. (தொகுப்பில் ஆறாவது கதை)
9. தேனப்பன், வ., அயல் மகரந்தங்கள், தேவகோட்டை, தேன்வள்ளியம்மை பதிப்பகம், 1981 (ஏழாவது கதை)
10. சக்திப்புயல், மௌன உணர்த்தல்கள், புதுச்சேரி, தென்றல் பதிப்பகம், 1981 (மூன்றாவது கதை)
11, சின்னம்மிணி, இலக்கியச் சிந்தனை, வானதி பதிப்பகம், சென்னை, 1981
12. ராஜ்குமார், எச். பி. (தொ. ஆ.) இதயமலர்கள், சென்னை பூக்கூடைப் பதிப்பகம், 1981.
13. சேஷாத்ரி சர்மா, ஏ,, சிறுகதை எழுதுவது எப்படி?, சென்னை, வானதி பதிப்பகம், 1979.

இதே தொகுப்பில் இரண்டாவதாக உள்ள ஒரு சிறுகதைக்குப் பெயரே இன்றி சுஜாதா எழுதும் ஒருகதை [14] என்று தலைப்பு இடப்பட்டுள்ளது. இது எப்படி அமையலாம் என்ற வினா எழுகிறது. இந்தக் கதைக்கு ஆசிரியர் என்ன பெயரிட்டார்? இதழில் வெளிவந்தபோது இக்கதைக்குப் பெயரில்லையா...? அல்லது அப்போதும் பெயரிருந்து நூலாகத் தொகுக்கப்பட்ட போது பெயரின்றி, சுஜாதா எழுதும் ஒருகதை என்ற பெயர் சூட்டப் பட்டதா? அப்படியாயின் ஆசிரியருடைய கவனத்திற்கே செல்லாமல் நூல்வெளியிடும் நிறுவனமே இப்பணியைச் செய்கிறதா? சுஜாதாவின் பெயரால் எதனை வெளியிட்டாலும் படிப்பவர் வாங்குவர்; தமிழ் வாசகர் உலகம் ஏற்கும் என்ற நம்பிக்கையா? எதனால் இவ்வாறு நிகழ்கிறது என்பது தெரியவில்லை.

இதே தொகுப்பில் வந்தவன் [15] என்ற பெயரில் நாடக அமைப்பில் ஒரு கதை உள்ளது. அது சிறுகதை வடிவம் பெறாது நாடகக் கதையாக திரைக்கதை வடிவாக உள்ளது. இத்தொகுப்பில் அடங்கியுள்ள கதைகளுக்குப் பொருளடக்கம் நூலில் தரப்படவில்லை. நூல் பதிப்பிக்கும் பணியில் கவனமின்றி எப்படித் தமிழ் நூல்கள் உருவாகின்றன என்பதற்கு இச்சிறுகதைத் தொகுப்பு நல்ல சான்று. சிறுகதைத் தொகுப்புக்களை வெளியிடும் வெளியீட்டாளர்கள் ஒவ்வொரு கதைக்குக் கீழேயும் அக்கதை முதலில் எந்த இதழில் எப்போது வெளியானது என்ற தகவலைச் கொடுத்தால் பயனுடையதாயிருக்கும் (ஒரு சில பதிப்பகங்கள் கொடுத்து வருகின்றன).

இரவிச்சந்திரனின் இந்திய பாஸ்போர்ட் என்ற தொகுப்பின் இறுதிக்கதையாக உள்ள இந்திரா செட்டியின் இனிய சிநேகிதன் சிறுகதையாக இல்லாமல் குறுநாவலாக உள்ளது. இது எவ்வாறு சிறுகதைத் தொகுப்பில் இடம்பெற்றது என்பது புரியவில்லை. இதேபோல, திருப்பூர் கிருஷ்ணனின் சிகப்பாய் சில மல்லிகைகள் தொகுப்பிலும் குறுநாவல் இடம் பெற்று உள்ளது. நூல் வெளியீட்டாளர் - பதிப்பாளர் - இன்னும் சற்றுக் கூடுதல் கவனத்துடன் செயற்பட்டுப் பதிப்புப்பணியைச் செம்மையாகச் செய்தால் இக் குறைகள் இடம்பெறா.

---

14. சுஜாதா, சிறுகதை எழுதுவது எப்படி? நாகப்பட்டினம், குமரிப்பதிப்பகம், 1981, பக். 21-32
15. பக். 87-95

**எழுத்தாளர் நிலை:** சிறுகதை படைப்பது என்பது கடுமையான பணி. கலைத்திறமிக்க கதையைப் படைப்பது மிகக் கடுமையான பணி. எழுத்தாளர்கள் இதழ்களின் விருப்பு, வெறுப்பு, படிப்பவர்தம் ரசனை ஆகியவற்றை மனத்திற்கொண்டு எழுதுவதால் சிறுகதை தன் கலைத்தன்மையை இழந்து, வணிக நோக்கை முதன்மைப்படுத்திக் கொள்கிறது. புதிதாக அறிமுகமாகி எழுதத் தலைப்பட்டுள்ள சிறுகதைப் படைப்பாளர் சிலர் தம் முன்னோடிகளை அவர்தம் எழுத்தை தம் படைப்புக்களில் போற்றி அவர்களின் சாயல் தம் மீது மிகுதியும் விழுவதை விரும்புகின்றனர். சான்றாக இரவிச்சந்திரனின் இந்திய பாஸ்போர்ட் தொகுப்பில் உள்ள கதைகளாகும். முரண்படுதல் என்பது மனிதவிதி என்று ஜெயகாந்தன் ஒருமுறை எழுதினார்[16] என்று 'மண்ணின் மைந்தர்கள்' என்னும் கதையில் ஆசிரியர் ஜெயகாந்தனிடம் தமக்குள்ள ஈடுபாட்டைக் காட்டிக் கொண்ட போதிலும் இரவிச்சந்திரன் எழுத்தில் சுஜாதாவின் பாதிப்பு மிகுதியாக உள்ளது. இந்திராரெட்டியின் இனிய சிநேகிதன் என்ற படைப்பில்

> ''என்னுடைய ராசி சினிமா தியேட்டரில் எனக்கு
> முன் நிற்பவன் குடம் குடமாக மூத்திரம் போவான்.
> நல்ல சொற்றொடர் ஆனால் காப்பியடிக்கப்
> பட்டது சுஜாதாவின் வரிகள்தானே?''[17]

என்று வருகிறது. வருணனை உரையாடற் பாங்கு கதை அமைப்பு பத்திரிகைப் போக்கு மிக்க கதை, மிகவும் சாதாரண கதைத் தன்மை, உரையாடல், கதைத்தலைப்பு மொழிநடை ஆகியவற்றில் சுஜாதாவின் பாதிப்பு இவரிடம் மிகுதி. சுஜாதாவிற்குத் தம்முடைய இந்தத் தொகுப்பு மட்டுமல்ல ''என் எல்லா சமர்ப்பணங்களும் சுஜாதாவிற்கே'' என் ஆசிரியரே கூறுவதும் இக் கருத்தை வலியுறுத்தும்.

மாறாகப் புதிய எழுத்தாளர்களாக மலர்ந்துள்ள பலர் சிறுகதையை அதன் அனைத்து நிலைகளிலும் செம்மைத் திறம் வாய்ந்ததாகப் படைத்து உள்ளனர். கதைக்கு ஆழமான கருப்பொருளைத் தேர்ந்தெடுத்தல், சிறுகதை வழியே சமூக

---

16. இரவிச்சந்திரன், இந்திய பாஸ்போர்ட் ப. 110, கோயம்புத்தூர், விஜயா பதிப்பகம், 1981
17 ப. 146.

உணர்வைப் புலப்படுத்தல், கூரிய வாழ்க்கை நோக்கை புலப் படுத்தல், பாத்திரப்படைப்பை நன்கு ஆளுதல், கதையில் கலைத் திறன்களைச் செம்மையாக ஆளுதல், கதை வடிவத்திறன், நடப் பியல் வாழ்வை விமர்சித்தல் ஆகிய பல்வேறு கூறுகளிலும் கை வண்ணம் மலர்ந்துள்ளது. விடியும் வெளிச்சம் வரும் தொகுப்பில் உள்ள பல கதைகள், சக்திப் புயலின் மௌன உணர்த்தல்கள், திருப்பூர் கிருஷ்ணனின் சின்னம்மிணி, சங்கரனின் எம்ப்ளாய் மெண்ட் எக்ஸ்சேஞ்ச், சக்திப்புயலின் இது என்ன தகுதி?, செய சீலனின் பரிசு, பி. அ. தாவீதின் திருத்தொண்டு; லெயோ ஜோசப்பின் இடதும் வலதும் ஆகியன புதியவர்களின் கதை களில் சில

வாசகர் நிலை: வாசகர்களின் படிக்கும் ஆர்வமும் சிறுகதை வளர்ச்சிக்குத் துணை நிற்கிறது. படிப்பவர்களும் பெரும்பாலும் பொழுது போக்கையே முதன்மையாக எண்ணுவதால் படைப் பாளர்களின் எழுத்தும் அதனை மையமிடுகிறது. இரவிச் சந்திரனின் இந்திய பாஸ்போர்ட், ஜாலிசுந்தரின் இந்த மலரும் வாடவா?, சிவசங்கரியின் அணில்கள், தேனப்பனின் அயல்மகரந் தங்கள், கதைப்பித்தனின் பழையசோறும் போர்ன்விடாவும், சுஜாதாவின் காகிதச் சங்கிலிகள், சிறுகதை எழுதுவது எப்படி? கே. பி. எஸ். நீலமணியின் அலைகள் ஓய்வதில்லை ஆகியன இத்திறத்தன. இருப்பினும் பொழுதுபோக்கை மீறி நல்ல தரமான கதைகளை வாசகர் வரவேற்கின்றனர் என்பதை இக்காலத்தில் வெளியான பிற தொகுப்புக்களால் அறியலாம். இவையே தமிழ்ச் சிறுகதை வளர்ச்சிக்கு உதவும் கதைகள்.

கதைகளின் உள்ளடக்கம் : சிறுகதைக்கு உள்ளடக்கமாகக் கருப்பொருளாக எதுவும் அமையலாம். தனிமனித குடும்ப, சமுதாய நிலைகளில் உள்ள பிரச்னைகள் கதைக்குப் பொருளாக அமையும். இவற்றைப் படைக்கும் எழுத்தாளர் பொருளாதார, அரசியல், சமூக, சமயப் பின்னணியில் பிரச்னைகளை எவ்வாறு அணுகுகிறார்? எவ்வாறு அதற்குத் தீர்வு காட்டுகிறார்? அணுகும் முறை தீர்வுகாட்டும் முறை படைக்கும் முறை ஆகியன நடப்பியல் வாழ்க்கை நெறிகளுக்கு இயைந்து வருகிறதா? கதை மாந்தர் மன அறத்திறம் வாழ்க்கைப்போக்கிற்கும் ஊனம் ஏற்படா வண்ணம் அவை காட்டப்படுகின்றனவா? வாழ்க்கை நோக்கு சிறப்பான முறையில் பழைய மரபுகளுக்கு இயைந்த போக்கில் பிரச்னைக்குத் தீர்வு காட்டப்படுகிறதா? மரபுகள் மீறப்பட்டுப் புதுநெறி படைக்

கப்படுகிறதா? என்பன போன்ற பல வினாக்களை முன்வைத்துச் சிறுகதையின் கருப்பொருளை உள்ளடக்கத்தை திறனாய வேண்டும். எண்பத்தொன்றில் வெளியான மேற்கூறிய தொகுப்புக்களில் உள்ள கதைகள் பலவற்றின் உள்ளடக்கம் இத்தகைய வினாக்களுக்கு விடை தருவதாக உள்ளன.

விடியும் வெளிச்சம் வரும்: விடியும் வெளிச்சம் வரும் தொகுப்பில் அப்பெயருடைய கதை நல்ல சான்று. இக்கதையின் கனமான கருப்பொருளால் கதை சிறக்கிறது. கணவன் குடிகாரனாகக் - குடும்பப் பொறுப்பை உணராதவனாக மனைவியை அடித்து நொறுக்குபவனாக - இருப்பது கண்டு, அவன் கொடுமைகளுக்குப் பொறுத்துப் பேசாமல், கணவனை - அவனது அடாத செயல்களை - எதிர்க்கிறாள் மனைவி. அதனால் கிராமப் பஞ்சாயத்தில் அவளுக்கு நீதி கிடைக்கவில்லை. அவளை ஊர் புறக்கணிக்கிறது. ஆண் வழிச் சமுதாயத்தில் ஆணைச் சார்ந்து வாழவேண்டிய பெண்ணுக்குக் 'கல்லானாலும் கணவன்; புல்லானலும் புருஷன்' என்பது வாழ்க்கை மந்திரமாகக் கற்பிக்கப்பட்ட வாழ்க்கையில், தவறு செய்த கணவனைத் தட்டிக் கேட்டது தவறாகப் பேசப்பட்டது. அவளைப் பெண்ணல்ல என்று கூறிப் புறக்கணித்த கொடுமையை எண்ணி அவள் தனக்குள் சிரிக்கிறாள். ஊர் புறக்கணித்ததே என்பதற்காக அவள் தன் கதையை வாழ்வை முடித்துக் கொள்ளவில்லை. கூலி வேலை செய்து தன் மகளுக்காகவும் தனக்காகவும் தனித்து வாழத் தலைப்பட்டாள். நெஞ்சில் உரமற்ற ஆடவர்கள் மத்தியில் உரத்துடன் இவள் வாழ முற்பட்டாள். ஆண் ஆதிக்கச் சமுதாய கொடுமையை அந்தப்பெண் பல்லவி எண்ணிப் பார்க்கிறாள். இச்சமூக அமைப்பில் தான் எவ்வாறு, தன் சுகுணாவைக் கடைத்தேற்ற முடியும் என்று எண்ணிப் பார்க்கிறாள். ''சுயநலங்களும் கெடுபிடித்தனங்களும் மட்டுமே அரசோச்சுகிற இந்தப் பூமியில் ஆணாதிக்கம் மேலோங்கி இருக்கிற இந்த மண்ணில் ஒரு பெண், இன்னொரு பெண்ணை எந்த அளவு கடைத்தேற வைக்க முடியும் என இவள் இதயம் யோசித்தது''[18]. சமுதாய வாழ்க்கை நெறிகளும் சட்டதிட்டங்களும் அதன் அனைத்துப் பிரிவினர்களுக்கும் - குறிப்பாக வலிமை குறைந்தவர்களுக்குப் பாதுகாப்பும் ஆதரவும் தந்து - துணை நிற்பதாக இருத்தல் வேண்டும். ஆனால் நடைமுறை வாழ்க்கையில் நாம் காண்பது தலை

---

18 இனியவன் (தயாரிப்பு), தேனி. சீருடையான், விடியும் வெளிச்சம் வரும், ப. 2?.

கீழான போக்கு. வலிமை குறைந்து தன்னை (ஆணை) நம்பி வாழ் பவள் என்ற ஒரே காரணத்திற்காக அவளைத் தனக்கு அடிமைப் படுத்த விழையும் ஆண், தனக்குச் சாதகமாகச்சட்ட திட்டங்களை உருவாக்கிப் பெண்ணைக் கொடுமைப்படுத்த முற்பட்டான். அத் தகைய ஆண் ஆதிக்கக் கொடுமைகளை எதிர்க்கிறாள் இக்கதைத் தலைவி பல்லவி. ஊர் (ஊர் என்பதும் ஊர்ப் பஞ்சாயத்து என்ப தும் ஆடவர்கள் அடங்கியதும் அரசோச்சும் அமைப்புத் தானே) அவளைப் புறக்கணிக்கிறது. ஊர்க் கொடுமையை - ஆணாதிக்கச் சமூக நியதிகளை அவள் புறக்கணிக்கிறாள். ஊரை எதிர்த்து அவள் வாழ்ந்து காட்டத் தலைப்படுகிறாள். பெண்ணைப் பற்றி யும் பெண்மை பற்றியும் ஆண் நினைப்பதும் அதன் வழி அவன் உருவாக்கியதுமான சமூக, வாழ்க்கை, அழகியற் கோட்பாடுகளை எதிர்த்துப் பல்லவி உருவாக்கப்பட்டு உள்ளாள். பாரம்பரியத் தொடர்ச்சி முறிவை இங்குப் பல்லவி வழியே உணர்கிறோம் தேனி சீருடையான் என்ற ஆண் எழுத்தாளர் (ஏராளமான பெண் எழுத்தாளர்களே இந்த விதிகள் பற்றியெல்லாம் எண்ணாமல் ஆண்கள் போலவே, பெண்ணை வணிகப் பொருளாக்கி எழுதும் பணியில் இருக்கும் நமது சமூகத்தில்) இச்செயலை மிகத் துணிச்ச லாகப் படைத்துள்ளார். முன்னர்க் கூறிய அனைத்து நிலைகளிலும் இக்கதைக் கரு சிறக்கிறது.

மேடுபள்ளங்கள்: விடியும் வெளிச்சம் வரும் தொகுப்பில் உள்ள மேடுபள்ளங்கள் என்பது கருவால் சிறக்கும் மற்றொரு கதை. தான் பெரிய அளவில் திருடி, தன் பதவி உயர்விற்காக மேலதிகாரிகளும் திருட்டுப் பொருள் வணிகத்தால் பொருளீட்டி, அதன்வழி அவர்கள் உதவியால் தன் சுயலாபத்தைப் பார்க்கும் காட்டு இலாகா அதிகாரி, காட்டில் முதன்முறையாக விறகு வெட்டிய ஏழைக்குத் தண்டனை பெற்றுத் தருகிறான். காடுகள் பாதுகாக்கப்பட வேண்டும் என்பது அரசின் கொள்கை. ஆனால் வேலியே பயிரை மேய்வது போல, அதிகாரிகளே காட்டு மரங் களைத் திருடி விற்கவும், விற்பனைக்குத் துணை நிற்கவும் செய் கின்றனர். தாம் தப்பிக்க ஏழையைக் காட்டிக் கொடுத்து அவனுக் குத் தண்டனை வாங்கித் தரவும் தலைப்படுகின்றனர். அதிகார வர்க்கத்தினரின் முரண்பாடு மிக்கசெயல்கள், அவர்தம் இழிசெயல் கள், தன்னலப்போக்கு ஆகியன இக்கதையில் கூறுபோட்டுக் காட் டப்படுகின்றன. பணம், பதவி, அரசியல், அதிகாரம் துணைபோகச் சந்தன மரங்கள் கடத்தப்பட்டு விலையாகின்றன. மேட்டுக்குடியி

னரின் திருட்டு அவர்களது மேற்பார்வை காரணமாக மறைக்கப் படுகிறது. ஏழை தண்டனையை அனுபவிக்கிறான். கதைக்கருவின் ஆழமும் அழுத்தமும் காரணமாக, சிறுகதை சிறந்த கதை யாகிறது.

நொண்டியும் செருப்புக்களும்: இதே தொகுப்பில் உள்ள நொண்டியும் செருப்புக்களும் கருவால் சிறக்கும் மற்றொரு கதை. வேலையில்லாத் திண்டாட்டத்தைப் பிரச்சினையாக்கி, சமுதாய சாதி அமைப்பு, பொருளாதார ஏற்றத்தாழ்வு, இளைஞர் மன நிலை ஆகிய பின்னணிகளில் நுட்பமாக ஆசிரியர் படைத்துள்ளார். ஏழையாக, அந்தணச் சமுதாயத்தில் பிறந்த அனந்த பத்மநாபன் என்ற இளைஞன் பட்டப்படிப்பில் பல்கலைக்கழக மாணவனாகத் தேறுகிறான். அவனுடைய ஏழ்மையும் சாதியும் அவனுக்கு வேலை கிட்டாமல் செய்ய (தகுதிக்கு மதிப்பில்லாத சமுதாய அமைப்பில்) அவன் பட்டமும் மதிப்பெண்களும் பயனின்றிப் போகின்றன. அதேபோதில், வேறு சில இளைஞர்கள் தங்களின் வாய்ச்சவடால், பணம் தங்களைச் சார்ந்தவர் செய்யும் சிபாரிசும் போன்றவற்றால் தேடியலையாது எளிதில் வேலை பெறுகின்றனர். பெற்ற வேலையை உடனுக்குடன் விட்டு விட்டுப் புது வேலை தேடுகின்றனர். இது அவர்களுக்குப் பொழுது போக்கு. அந்த இளைஞர் கூட்டமும் அனந்த பத்மநாமனும் சந்தித்தபோது-மாறு பட்ட இரு பிரச்சினைகளாலான இரு துருவங்களான வேலை கிட்டாத வர்க்கமும் சந்தித்தபோது - தன்னுடைய இந்த அவல நிலைக்குக் காரணமான இளைஞன் பசுபதியை அனந்து அடித்து நொறுக்கித் தன்னைத்தானே இடித்துக்கொண்டு தன் சான்றிதழ் களை எல்லாம் தூள் தூளாகக் கிழித்தெறிகிறான். வர்க்கபேதம் எத்தனை வழிகளில் இன்றைய சமுதாய அமைப்பில் உருவாகிறது என்பதை மிக ஆழமாகவும் அழுத்தமாகவும் இக்கதையில் காண் கிறோம்.

மசால்தோசை: பழையசோறும் போர்ன்விடாவும் என்ற கதைப்பித்தனின் சிறுகதைத் தொகுப்பில் மசால்தோசை நல்ல கருவை உடைய கதை. ஆழமான சமூகப் பிரக்ஞையுடன் எழுதப் பட்டுள்ளது. ஓட்டலில் மசாலா தோசைக்கு ஆசைப்பட்டு உண்ணப்போய் அதில் பாம்பரணை கிடக்க, விஷங்கலந்த அதனை உண்டு பிச்சைக்காரி இருக்கிறாள். விஷங்கலந்த அந்த உணவை யாரும் அறியாமல் புதைத்துவிட்டுப் பிச்சைக்காரியையும் (அவள் எங்கோ போய் எதையோ தின்றுவிட்டு இங்கு வந்து இறந்தாள்

எனக் கூறி) அப்புறப்படுத்துகின்றனர் ஓட்டல் பணியாளர்கள். மக்களும் அதனை நம்புகின்றனர். பணக்கார வர்க்கம் தங்கள் தவற்றை மறைக்க ஏழையைக் கருவியாக்கிக் கொள்வதுடன், ஏழையிடம் தாங்கள் இரக்கமுள்ளவர்கள் போல நடிக்கிறது. இதனை, 'அப்போது தான் உள்ளே நுழைந்த ஒருவரிடம், "பார்த் தீர்களா சார், இந்த அநியாயத்தை! பிச்சைக்காரக் கழுதை எங்கேயோ போய் எதையோ விஷத்தைத் தின்னுட்டு ஹோட்ட லுக்குள்ளே காப்பி சாப்பிடறாப்லே வந்து உள்ளே விழுந்துட்டது! கர்மம்! கர்மம்! இதையெல்லாம் பழிக்குப் பயந்து நாம தூக்கிப் போட வேண்டியிருக்கு"[19] என்ற பகுதியில் அறியலாம்.

பிரார்த்தனை: இதே தொகுப்பில் உள்ள 'பிரார்த்தனை' என்ற கதையும் கருவால் சிறக்கும் கதை. பொருள் வசதியும் அதிகாரத் திமிரும் மிக்க வலிமையுடைய ஆண்டானை அடிமை எதிர்க்கும் கதை. தன் மனைவியைத் தன் கண் முன்னே பிறர் இழுத்துச் செல் வதைக் காணச் சகிக்காது குருசாமி துடித்தெழுந்து தர்மகர்த்தா வின் (ஆண்டானின்) தலையை வீழ்த்துகிறான். ஆனால் அநீதி யைக் கண்டு இவ்வாறு துடித்தெழுந்து போராடுவது இவன் ஒருவன் மட்டுந்தான்; பெரும்பாலான மக்களின் பண்பு பணத்திற் கும் அதிகாரத்திற்கும் அடங்கிப் போவதுதான்; தீமையைக் கண்டு ஒதுங்கிச் செல்வதும் அதற்குத் துணை நிற்பதும் தான். இதனை, "அவரைப் பின்தொடர்ந்து அவருடைய அடியார்களும் காக்காய் களும் அவர் வீசி எறியும் எலும்பைக் கடிக்க வரும் 'நாய்களும்' அவர் முதுகைப் பார்த்தபடி முன்னேறி வந்தது. அதில் 'ஒரு நாய்' பல்லைக் இளித்தபடி பக்கவாட்டில் நின்று வாலைக் குழைத்தது"[20] என்ற வரிகளால் அறியலாம்.

காகிதக் கப்பல் கானல் நீரிலே: இந்த மலரும் வாடவா? என்ற தொகுப்பில் உள்ள காகிதக்கப்பல் கானல் நீரிலே என்ற சிறு கதை நல்ல கனமான கருவை உடையது. வறுமையால் வாடும் பிச்சைக்காரியைக் (அவள், அழும் தன் பிள்ளைக்குப் பாலூட்ட முடியாமல், பிள்ளை பசியைக் காணப் பொறாது துடிக்கிறாள்) கண்டு ஒருவன் ஓவியம் வரைந்து பரிசு பெற, மற்றவன் கவிதை எழுதிப் பரிசு பெற மூன்றாமவன் கதை எழுதிப் பரிசுபெறுகிறான்.

---

19. கதைப்பித்தன், பழைய சோறும் போர்ன்விடாவும் ('மசால் தோசை'), ப. 65 சிவகங்கை, அன்னம், 1981.
20. ஷெ, ப. 68

இவர்கள் மூவரும் அவளுக்கு நன்றி கூற, அவள் அவர்களின் இழி செயலை-மனிதாபிமான மற்ற முறையில் அவளுடைய வறுமைக்கு இரங்காமல் அவளது வறுமையைக் கலை என்ற பெயரில் வணிக மாக்கும் அவர்களுடைய மனித நாகரிகத்தை கண்டு காறித் துப்பு கிறாள்.

இது என்ன தகுதி : விருந்து என்ற தொகுப்பில் உள்ள சக்திப் புயலின் இது என்ன தகுதி? நல்ல கருவை உடைய கதை. நகர நாகரிகமும் கல்வியும் எவ்வாறு போலிப் பெருமையை உண்டாக்கி உடலுழைப்பை ஏளனமாக்குகிறது என்பதைக் காட்டி, கிராம வாழ்வின் அடிநாதமான உடலுழைப்பை மதிக் காது போலிப்பெருமை போற்றும் தன்மை படியப்படிய, கிராம வாழ்வின் அமைதி சீர்குலைகிறது. இதற்கு இச்காலக் கல்வியின் முறை துணையாகிறது. இச்செய்தியை மிக நுட்பமாக ஆசிரியர் காட்டுகிறார்.

சின்னம்மிணி : சின்னம்மிணி தொகுப்பில் உள்ள திருப்பூர் கிருஷ்ணனின் சின்னம்மிணி தரமான கதை. தனித்திருக்கும் வேளையில், தன் கற்பிற்கு ஊறு வரக்கூடுமாயின், தன் வலுவால் தன்னைக் காத்துக் கொள்கிறாள் பெண். அவளுக்குப் பாது காப்பாக உள்ள அவள் தாத்தாவின் எண்ண ஓட்டத்தில் (கிழவர்) வெளியே—முருகன் கோயிலுக்கு—சென்றுவிட்டு வருகையில்) நடப்பியல் வாழ்வை ஆசிரியர் காட்டுகிறார். ''இந்தத் தைரியம், இந்த வீரம், இந்த புத்திசாலித்தனம்—இவைகளல்லவா நிரந்தரத் துணை. இன்றைய இந்தியாவில் ஒரு பெண் தன்னைத் தானே காப் பாற்றிக் கொள்ளும் திறமை பெற்றாலன்றி வேறு எந்தத் துணை தான் அவளைக் காப்பாற்றிவிட முடியும்! பெண்மைக்குக் காவ லாக இருக்க வேண்டிய போலீஸ்காரர்களே பெண்மையைச் சூறை யாடுகிற தேசம் இந்தத்தேசம்...பெண்களின் கற்புக்குச் சோதனை வருகிற காலத்தில் வன்முறையைக்கூட ஆதரிக்கிறார் மகாத்மா. திடீரென்று சிலிர்ப்படைந்த கவுண்டர் உள்நோக்கிச் சென்றார். இளநீர் சீவுகிற கருக்கரிவாளைத் தேடி எடுத்துக் கொண்டு வந்தார். பளபளவென வெள்ளி நிலவுத்துண்டம் போல் மின்னிய அந்த அரிவாளைச் சின்னம்மிணியின் கரங்களில் கொடுத்துக் கொண்டே சொன்னார்:

''இந்தா புள்ளே. இந்த அரிவாளை எப்பவும் உன்ற கூடவே வெச்சிக்க''

''ஒரு அரிவாள் எப்பவும் என் மனசுக்குள்ளேயே இருக்கு துங்கய்யா...''[21]

இன்னும் மௌன உணர்த்தல்கள், இதயமலர்கள் ஆகிய தொகுப்பில் உள்ள பல சிறுகதைகளிலும், ஆனைச்சத்தம், உத்தரா யணம், மனிதாபிமானம், புதுமைப்பித்தனின் துரோகம், யுகப் பிரசவம், ஓ நாய்கள், ஆடுகள் மனிதர்கள் ஆகிய தொகுப்பிலுள்ள கதைகளிலும் நல்ல உள்ளடக்கத்தைக் காண முடிகிறது. தனி மனித, குடும்ப, சமுதாயப் பிரச்னைகளைப் பல்வேறு நோக்கு களில் பின்னணி இயைந்து வருவதை இக்கதைகளில் காண முடிகிறது. வாழ்க்கையைக் கூர்ந்து நோக்கும் திறனும் அதன்வழி மனிதாபிமானத்துடன் வாழ்க்கைச் சிக்கல்களுக்குத் தீர்வு காணும் பாங்கும் இப்படைப்பாளர்களிடம் உள்ளன. இதனால், எண்பத் தொன்றில் வெளியான ஆழமும் அழுத்தமும் கனமும் உடைய உள்ளடக்கங்களைக் கொண்ட கலை வடிவமும் திறனும் மிக்க கதைகளாகப் பலவற்றை நாம் காணமுடிகிறது. இதனால் தமிழ்ச் சிறுகதை ஆழ வளர்ச்சி பெற்று வருகிறது என்பதை நம்மால் உணர முடிகிறது.

சுஜாதாவின் சிறுகதை எழுதுவது எப்படி? தொகுப்பில் உள்ள கதைகள் பலவற்றில் கொலை திருட்டு, துப்பறிதல், ஆண்-பெண் உறவு ஆகியன தவிர வாழ்க்கைப் பிரச்சினை எதுவும் உள்ளடக்கமாக அமையாததால், இக்கதைகளில் சமூகநோக்கு நடப்பியல் பாங்கு எதையும் காண முடிவதில்லை. இதே போன்று, இரவிச்சந்திரனின் இந்திய பாஸ்போர்ட் தொகுப்பில் உள்ள கதை கள் பலவும் உள்ளன. பல கதைகளில் ஒரே பெண் படைப்பு (வைதேகி) வருகிறது. கதைகள் பலவற்றிலும் பெண்களின் அங்கவருணனை, ஆண்-பெண் உறவு (முறைகோடன உறவு) ஆகியவை விரசமாக ஆபாசமாக — படைக்கப்பட்டுள்ளன. அதுவும் அவை கதைப் போக்கிற்குத் தொடர்பின்றி, இடை யிடையே ஆசிரியர் குறுக்கீட்டில், படிக்கும் வாசகர்களுக்குக் கிளு கிளுப்பை ஏற்படுத்தும் ஒரே நோக்கில் கூறப்படுகின்றன, ஒரு கணவன் தன் மனைவியின் இளமையையும் அழகையும் கொண் டாட எண்ணி, மற்றவனிடம் ''கல்யாணமாகி இரண்டு வருஷமா கிறது. முதலில் ஒரு DNC; அப்புறம் ஒரு அபார்ஷன் ஆகி இருக் கிறது. இதைப் புது மனுஷரிடம் சொல்லுங்கள். 'சீபோ சின்ன

21. சின்னம்மிணி, திருப்பூர் கிருஷ்ணன், ''சின்னம்மிணி'', ப. 103, சென்னை, இலக்கியச் சிந்தனை-வானதி, 1981.

ஜாதிப்பையா. வாயைக் கழுவிவிட்டு வந்து பேசு. இப்பத்தான் அரைமணி முன்னால் புஷ்பவதி ஆனமாதிரி ஜ்வலிக்கிறாள். நீ ஏதோ பேத்தறையே என்று வைவார்கள்''[22] என்று கூறுவதாக திட்டாதே பேசாதே செல்வப் பெண்டாட்டி நீ கதையில் வருகிறது. மற்றொரு கதையான ஜநீஸ்வரம் என்பதில் ''வேறு வழி இல்லை. ட்யூஷனுக்கு வருகிற ஒரு புஷ்பவதியை இழுத்துப்போய்... என்றான் இந்தக் கதையை எழுதுகிற சின்ன ஜாதி''[23] எனவும் எல்லாவற்றிற்கும் ஒரு விலை உண்டு என்ற சிறுகதையில் பெண்ணை வருணிக்குமிடத்தில், ''ரயில்வே கேட்டாய் ஹூக்கில் இணைந்த பிரேசியர் நாடா ஹூக்கை எடுத்தால் 'ரயில்' ஹெட் லைட்டோடு ஊருக்குள் நுழைந்துவிடும்''[24] எனவும் வருகின்றன. அப்பட்டமான வணிக நோக்குமிக்க இதழின் மஞ்சள் தனத்தை— படிப்பவர் சுவையுணர்வை மலிவுப்படுத்தி இலக்கியத்தைக் கொச்சைப்படுத்தும் போக்கை இது தெளிவாகக் காட்டுகிறது. வாழ்க்கையின் பிரச்சினைகளை லேசாக ஒதுக்கிவிட்டுப் படிப்பவர்களுக்குக் கிளுகிளுப்பை ஏற்படுத்தும் நிலைக்கு இங்குச் சிறுகதையின் தரம் இறங்குகிறது.

பல சிறுகதைகளில் கதைக்கரு பழமையானதாக இருக்கின்றது. சில கதைகளில் படைப்பாளர்கள், கதைக்கருவைச் சரியான முறையில் படைக்காமலும் மாந்தர்களின் மன அறம், படைப்பவனின் நடப்பியல் பார்வை, சமுதாய நோக்கு, வாழ்க்கைப்பாங்கு, சமூக, அரசியல், சமய பொருளாதாரப் பின்னணி ஆகிய கூறுகளுடன் இணைத்துக் காட்டாமலும் விடுவதால் கதையின் உள்ளடக்கம் நீர்த்துவிடுகிறது. இதனை, விடியும் வெளிச்சம் வரும் தொகுப்பில், ஊர்வலம், சிவப்பு, சில சின்ன நிறைவுகள் ஆகியவற்றிலும், பழைய சோறும் போர்ன்விடாவும் தொகுப்பில் பிரியம் காலங் கடந்த ஞானோதயங்கள், சத்யாக்ரஹம் ஜெயிப்பதில்லை, கற்பின் விலை, தூக்கம், தண்ணி மரணத்தின் வாசலில், பழைய சோறும் போர்ன்விடாவும் ஆகிய பல கதைகளிலும் காணலாம். பழை சோறும் போர்ன்விடாவும் எனும் தொகுப்பைப் படைத்த கதைப்பித்தனிடம் கதையைச் சரிவர, கலைப்படைப்பாகக் உருவாக்காத பாங்கு மிகுதியாக உள்ளது. நிகழ்ச்சிகளை மட்டும் வரிசையாக அடுக்கி அவற்றி

22. இரவிச்சந்திரன், இந்திய பாஸ்போர்ட், ப. 20.
23. ஷெ, ப. 93
24. ஷெ, ப. 122

னூடே கதை ஓட்டத்தை கதை வடிவை— உருவாக்காமல் விட்டு விடுவது, கதைக்குரிய திறன்களைச் சரிவர ஆளாமல் விடுவது ஆகிய பாங்குகள் உள்ளன. அனைத்திற்கும் மேலாக, சிறுகதை உள்ளடக்கத்தைத் தேர்ந்தெடுப்பதில் கூடத் தமிழ்த் திரைப் படத்தின் பாதிப்பு உள்ளது என்பதை, இவருடைய கற்பின் விலை, பழைய சோறும் போர்ன்விடாவும் ஆகிய கதைகளிலும், தேனப் பனின் 'அயல் மகரந்தங்கள்' கதையிலும், ஜாலிசுந்தரின் இந்த மலரும் வாடவா? தெகுப்பில் உள்ள குண்டு மல்லிகை கதையிலும் காணமுடிகிறது. இப்போக்கு தமிழ்ச் சிறுகதை வளர்ச்சிக்கு உதவாததாகும்.

கலைத்திறன் : எண்பத்தொன்றில் வெளியான சிறுகதைகள் பலவற்றில் கலைத்திறன் சிறப்பாக ஆளப்பட்டு உள்ளது. சிறு கதையின் தலைப்பு, தொடக்கம், முடிவு, கதை கூறும் முறை, நோக்குநிலை, பின்னோக்கு மறைபொருள் கவர்ச்சி, ஒருமைப் பாடு ஆகிய பலவும் கதையில் இடம்பெறும் கலைத்திறன்களாகும். கருப்பொருளைச் சிறப்பான முறையில் விளக்கும் வண்ணம் வடிவம் செம்மையாக விளங்குமாறு அவை அடக்கி வாசிக்கப்பட வேண்டும். ஒரே கதையில் அனைத்தும் இடம்பெறவேண்டும் என்ப தில்லை ஒரு சில திறன்கள் கூடியும் குறைந்தும் அமையினும் கதை யின் ஒருமைப்பாடு சிதையா வண்ணம் அவை ஆளப்படவேண்டும் "கலைவடிவில் மேற்கொள்ளப்படும் ஒவ்வொரு கலைத்திறனும் கதையின் அடிநாதமாக ஒலிக்கும் கருப்பொருளினை விளக்கி எதிரொலி செய்யும் வண்ணமே எடுத்தாளப்படும்." கதை கூறும் முறை சிறப்பாக அமைந்த பல கதைகளை இக்காலத்தில் காண முடிந்தது. சின்னம்மிணி தொகுப்பில் உள்ள நான், கங்கா, எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்ச், செக்குமாடுகள், மழை, இடப் பெயர்ச்சி, சுமைக்கூலி, காட்சிகள், சின்னம்மிணி ஆகியனவும்; விடியும் வெளிச்சம் வரும் தொகுப்பில் உள்ள விடியும் வெளிச்சம் வரும், கிழக்கேயும் சில அஸ்தமனங்கள், கண்ணீர் விற்கும் ஜாதி, மரண அடி, இன்னொரு வாரிசு, மேடு பள்ளங்கள், எதற்காக? ஆராதனை, நொண்டியும் செருப்புக்களும் ஆகியனவும் சிலசான்று கள். சின்னம்மிணி தொகுப்பில் உள்ள நா. பா.வின் இரத்தினகற் கள் கதையில் பின்னோக்குத் திறனும், விடியும் வெளிச்சம் வரும்

---

25. வேங்கடராமன், சு, அகிலன் சிறுகதைகள் ஒரு திறனாய்வு, ப. 153, சென்னை, தமிழ்ப்புத்தகாலயம், 1977

தொகுப்பில் உள்ள கிழக்கேயும் சில அஸ்தமனங்கள் கதையில் நனவோடைத்திறனும் (Stream of consciousness) சிறப்பாக ஆளப்பட்டுள்ளன. கதை-ஆசிரியர் கூற்றில் அமையினும், ஆசிரியர் கதை கூறிச் செல்கிறார் என்ற உணர்வே தோன்றாத முறையில் சுவைப்படக் கூறப்பட்டுள்ள பாங்கைப் பல கதைகளில் காணலாம். பழைய சோறும் போர்ன்விடாவும் தொகுப்பில் உள்ள மசால் தோசை என்ற கதை இதற்கு நல்ல சான்று.

மாந்தர் கூற்று : கதைமாந்தர் கூறும் முறை சிறப்பாக அமைந்த பாங்கைச் சிறுகதை எழுதுவது எப்படி தொகுப்பில் உள்ள சிறுகதை எழுதுவது எப்படி? என்ற கதையிலும் பழைய சோறும் போர்ன்விடாவும் தொகுப்பில் உள்ள கற்பின் விலை என்ற கதையிலும் காணலாம்.

தொடக்கம் : சிறுகதையின் தொடக்கம் சுவைபட அமை வதைச் சுஜாதாவின் பல கதைகளில் காண முடிகிறது. சிறுகதை எழுதுவது எப்படி? இதற்கு நல்ல சான்று.

"ஒரு அரிய வாய்ப்பு! நீங்கள் நல்ல சிறுகதைகள் எழுத விரும்புகிறீர்களா? குமுதம், விகடன், குங்குமம், சாவி, இதயம், கல்கி போன்ற இதழ்களில் உங்கள் சிறுகதைகள் பிரசுரமாக வேண்டுமா? சுஜாதாவிடம் கற்றுக்கொள்ளத் தொடர்பு கொள்ளுங்கள் த. பெட்டி எண்-2355.

சமீபத்தில இந்த வௌம்பரத்தை தினமணில பாத்திருப்பீங் களே. ரெண்டாம் பாகத்தில ஒரு ஓரத்தில ஏல விளம்பரம், கோர்ட்டு நோட்டீஸ் இதுக்கெல்லாம் மத்தியில பொடி எழுத்தில வந்தது." [26]

சிறுகதையின் தலைப்பு, தொடக்கம் முதல் இறுதி முடிய ஆர்வ நிலையும் மறைபொருள் கவர்ச்சியும் சிறப்பாக ஆளப்பட்டு அவை கருப்பொருள் வெளிப்பாட்டிற்குத் துணை நிற்பதை விடியும் வெளிச்சம் வரும் தொகுப்பில் உள்ள மு. சாயபு மரைக் காயரின் எதற்காக? சிறுகதையில் காணலாம். இத்திறனைச் சரிவர ஆளாமல் கதையின் உள்ளடக்கம் சரியாகப் புலனாகாமல், கதை ஓட்டம் தடைப்பட்டு நிற்பதை ஜாலி சுந்தரின் இந்த மலரும் வாடவா? தொகுப்பில் உள்ள குண்டு மல்லிகை கதையில் காண லாம்.

---

26. சுஜாதா, சிறுகதை எழுதுவது எப்படி? ப. 5, நாகப் பட்டினம், குமரிப்பதிப்பகம். 1981

பாரம்பரியக் கதைகூறு முறை: ஆசிரியர் இடையீடு, வாசகர் களை நோக்கி ஆசிரியர் விளித்துப் பேசுவது போன்ற, தமிழ்ச் சிறுகதையின் பாரம்பரியக் கதைகூறு முறையைச் சில எழுத்தாளர் களிடம் இன்னும் காணமுடிகிறது. இதனால் கதையின் இயல்பான வளர்ச்சி தடைப்பட்டுக் கதைகூறு திறனும் கதையும் ஒத்திசையா மல், கலைத்திறன் மட்டும் முன்நிற்பதை நாம் உணரலாம். இப்போக்கைச் சுஜாதாவிடமும் இரவிச்சந்திரனிடமும் கதைப் பித்தனிடமும் காணமுடிகிறது. "ராஜு" வின் தீரச்செயல்களைச் சொல்லிக்கொண்டே போனால் விடிந்து விடும். அவனை அறிந்து கொண்டு விட்டீர்கள், இனி நகரலாம்." [27] என்றும், "அம்மா வுக்கு இருநூறு ரூபாயாவது கொடுத்துவிட்டு வரவேண்டாம்? நேற்று அவனிடம் இருநூற்றுச் சொச்சம் இருந்தது. அதை ஏதோ ஓர் ஓரியண்டல் டான்ஸ்காரியைத் துரத்திக் கோட்டை விட்டான். ('உங்களுக்காகத் தனி டான்ஸ் ஆடணங்களா? டான்ஸ் வேண்டாம், வா!') [28] என்றும் சுஜாதாவின் கதைகளில் காண லாம். இரவிச்சந்திரனின் இந்திய பாஸ்போர்ட் தொகுப்பில் பல கதைகளில் இப்பங்கு மிகுதியும் உள்ளது. சான்றாக, ஜதீஸ்வரம் கதையில் வரும் "இதன்பின் நிகழ்ந்த உரையாடல் படிக்கிறவர் களின் சௌகரியம் கருதித் தமிழில் மொழிமாற்றம் செய்யப் பட்டுள்ளது" [29] எனவும், "மதுரை மேற்குத் தொகுதியைச் சேர்ந்தவரும் வாக்காளர் பட்டியலில் பெயர் விட்டுப் போன வருமான மாணிக்கம் பி. இ., எம். டெக் சொல்லலானார்" [30] என்று வரும் தேவையற்ற வருணனையும், மண்ணின் மைந்தர்கள் என்ற கதையில் வரும், ' மேலதிகாரியைப் பற்றி ஒரு கிசுகிசு-அதி உயர மனிதரும் 'சு' வில் ஆரம்பித்து 'தா'வில் முடியும் மகத்தான எழுத்தாளருக்கு காப்டன் பிராபகர் பாஸ்" [31] என்று வரும் இடத்தையும் கூறலாம் பழைய சோறும் போர்ன்விடாவும் தொகுப்பில் உள்ள பிரியம் கதையில் "அவன் திகைத்துப் போனான். வேலைக்குப் போன ஒருநாள் இரவு அவள் வீடு திரும்பவே இல்லை. அவளுக்கு வசதியான வாழ்க்கை மீது பிரியம். அவனுக்கு அவள் மீது பிரியம். ஆனால் அவன் அம்மாவுக்கு அவன் மேல் ரொம்பப் பிரியம். பிரியம் எல்லோருக்கும் ஒவ்வொன்றின்

---

27. ஷை, ப. 22
28. ஷை. பக். 22-23
29. இரவிச்சந்திரன், இந்திய பாஸ்போர்ட் ப. 92
30. ஷை, ப.93.
31. ஷை, ப. 11. 108

மேல் இருக்கிறது''[32] என்று குறுக்கிட்டுப் பேசுவது அறியத் தக்கது. கதை முடிவில் இவ்வாறு வெளிப்படப் பேசுவது-தொகுப்புரை கூறுவது-கதை வடிவத்திறனைப் பாதிக்கிறது.

நடை : இக்காலகட்டச் சிறுகதை ஆசிரியர் சிலர் தமிழும் ஆங்கிலமும் கலந்து எழுதி வருகின்றனர். இப்போக்கு சென்ற ஆண்டும் காணப்பட்டது.[33] சிறுகதையில் இடம் பெறும் உள்ளடக்க வெளிப்பாடு, பின்னணி புலப்பாடு, மாந்தர் இயல்பு ஆகியவற்றிற்கு ஏற்ப, மொழிநடையை ஆளுவதில் பிறமொழிக் கலப்பு ஏற்படுவது இயல்பு. அப்பாங்கு சிறுகதைக்கு நடப்பியல் உணர்வைத் தரும் மாந்தர் கூற்றில் அல்லாமல் ஆசிரியர் நடையிலே பிறமொழிக் கலப்பு (தமிழும் ஆங்கிலமும் ஒரு சிலர் தமிழும் இந்தியும்-கலந்த புதுவகை மணிப்பிரவாளம்) ஏற்படுவது அண்மைக்காலத் தமிழ்ப் படைப்பிலக்கியப் போக்காகும். இதழ்களின் வழியேயும் தொகுப்புக்களின் வழியேயும் பொதுமக்களைச் சென்றடையும் இலக்கியமான சிறுகதையில் இவ்வாறு பிறமொழிக் கலப்பு இருப்பின் படிப்பவர் அனைவராலும் புரிந்து கொள்ள இயலுமா என்பதைப் படைப்பிலக்கிய ஆசிரியர்கள் எண்ணிப் பார்ப்பதில்லை. இப்போக்கு சிறுகதைக்குத் தலைப்பு இடுவது முதல் ஆசிரியர் எடுத்துரைக்கும் (narration) நிலை முடியப் பரவலாக இக்காலச் சிறுகதைகளில் காண முடிகிறது.

தலைப்பில் மொழிக்கலப்பு: சின்னம்மிணி தொகுப்பில் உள்ள எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்ச், சுஜாதாவின் சிறுகதை எழுதுவது எப்படி? தொகுப்பில் உள்ள எல்டொரோடா நோ ப்ராப்ளம், இரவிச்சந்திரனின் இந்திய பாஸ்போர்ட் தொகுப்பில் உள்ள ஏலி ஏலி லாமா சமக்தானி ஆகிய கதைகளின் தலைப்புகளிலே பிறமொழிக் கலப்புள்ளது. தமிழில் எழுதி, தமிழ் இதழ்களின் வழி தமிழ் மக்களுக்காக விற்பனையாகும் கதைகளுக்குத் தலைப்புக்கூடத் தமிழில் அமைக்காத போக்கு, தமிழ்ச் சிறுகதையுலகில் உள்ளது.

ஆசிரியர் கூற்றில் மொழிக்கலப்பு : இந்திய பாஸ்போர்ட் தொகுப்பில் உள்ள திட்டாதே பேசாதே செல்வப் பெண்டாட்டி நீ சிறுகதையில் ஆசிரியர் கதைகூறுமிடத்தில் இது ஒருவகை Sadism?

32. கதைப்பித்தன், பழையசோறும் போர்ன்விடாவும், ப. 12

33. வேங்கடராமன், சு., ''எண்பதில் சிறுகதை'' எண்பதில் தமிழ், (ப ஆ.), ப 40.

ஒரு சைக்யாட்ரிஸ்டைப் பார்ப்பது உசிதமா?''[34] என்று வருகிறது. சுஜாதாவின் சிறுகதை எழுதுவது எப்படி? தொகுப்பில் உள்ள ஒரே இரவில்... ஆசிரியர் எடுத்துரைக்கும் நடையில் ''ராஜண்ணாவின் ஃப்ளாட் எதிர்த்தாற் போல் இருந்தது. மிக சுத்தமாக இருந்தது. அலமாரி நிறையப் புத்தகங்கள் புதுக்கருக்கு அழியாமல் அடுக்கி வைத்திருந்தன.

ஃப்ராண்டியர்ஸ் ஆப்பிஸிக்ஸ், ஃபெர்ரோபாரா அண்ட்டயா மாக்னடிஸம், தி நெய்வ் அண்ட் [35] ஸெண்ட்டி மெண்டல்லவர்! புக் ஆப் க்ராஸ்வோர்ட்ஸ்'' என்று இயற்பியல் நூற்களின் பெயர் கள் அடுக்கப்படுகின்றன. கதைப்போக்கிற்கும் கதை இறுதியில் துப்பறியப்படுவதற்கும் தொடர்புபடுகிறது என்றாலும்கூட, இப் புத்தகப் பெயர்கள் தேவையா (பிறமொழிக்கலப்பில்) என்பது எண்ணிப் பார்க்கப்படவேண்டும்.

விவரிப்பு வருணனை: ஆசிரியரின் நடையில் மாந்தரின் இயல்பு, பண்பு, மன உணர்வு, கதையின் உள்ளடக்கம், சமுதாய நடப்பியலைச்சாடும் பாங்கு பின்புலப் புலப்பாடு ஆகிய பல்வேறு பாங்குகளை வெளிப்படுத்தும் வண்ணம் அமைந்த பல கதைகளை இக்காலகட்டத்தில் காண்கிறோம். ''ஐந்தரை மணிக்கெல்லாம் குழந்தை எழுந்து படுக்கை நடுவில் சம்பிரமமாக உட்கார்ந்து கொண்டு அழுதது. தூக்கம் கலைந்த கணவன், 'சனியனைத் தூக்கிண்டு எங்கயாவது ஒழி என்றான். பசி அழுகை அது. ஆறு மணிக்குப் பால் வரும்வரை நிறுத்தாமல், முதல் கிண்டி உள்ளே சென்றால்தான் அடங்கும். என்னதான் தட்டினாலும் 'ஜோஜோ' கொட்டினாலும் 'கண்ணோல்லியோ' சொன்னாலும் சரிப்படாது

குழந்தையைப் பொறுக்கிக் கொண்டாள். அறைக்கதவை மூடிவிட்டு அழுகிற குழந்தையுடன் பால் பாத்திரத்துடன் வாசலுக்கு வந்து நின்றாள். எதிரே குடிசைகளுக்குப் பின்னால் வானம் காயம்பட்டிருந்தது. 'சரக் சரக்' என்று ஊசி நிரடும் ராகம் பாடிக்கொண்டு அலுப்பு இல்லாமல் அழுதது. அப்படியே குழந்தையையும் பால் பாத்திரத்தையும் போட்டுவிட்டு ஓட

---

34. இரவிச்சந்திரன், இந்திய பாஸ்போர்ட் ப. 24
35. சுஜாதா, சிறுகதை எழுதுவது எப்படி? ப. 134.

வேண்டும் போலிருந்தது அவளுக்கு''[36] என்று சுஜாதாவின் கதையில் விவரிப்பும் வருணனையுமான நடையைக் காண்கிறோம்.

வருணனை: ''அப்பனின் உடம்பை அடித்தபோது பசித்த புலிபோல் ஆவேசப்பட்டிருந்த குப்பனின் முகம் - இப்போது பரிதாபமாக இளகியிருந்தது. தடியெடுத்து அடித்த தன்கைகளால் தலை மீது அடித்துக்கொண்டு அரற்றினான். 'சுடலையில் விழுந்து நாமும் செத்திடாம போனோமே!' என உணர்ச்சி வசப்பட்டான்.

திடீரென்று-பெரியண்ணன் உயிர்த்தெழுந்து சிரிக்கிறாற் போலிருந்தது. சந்தோஷமான சிரிப்பு நிம்மதியான சிரிப்பு. இனி எனக்குக் கஷ்டமே இல்லேடா ராசா! நீ உருப்பட்டுடுவே! என்கிற மாதிரியான சிரிப்பு.

நரிகளின் ஊளைகள் அடங்கி, தூரத்திலிருந்து ஒரு சேவல் விடியலுக்குக் கட்டியம் கூறியது...''[37] என்று அறிவழகனின் மரணஅடி கதையில் வரும் வருணனைப் பகுதி கதைக் கருவை விளக்குகிறது.

தனித்தமிழ் நடை: விருந்து தொகுப்பு தனித்தமிழ் நடையில் அமைந்த கதைகளை உள்ளடக்கியது.

''பயணச்சீட்டு ஆய்வாளர் ஒருவர் பெட்டிக்குள் நுழைந்தார். அருள் கூர்ந்து தங்கள் பயணச்சீட்டினைக் காட்டலாமா?' அவர் இப்படிக் கேட்டபோது அயர்ந்து போனான், தமிழ்க்கோ. அவருடைய தமிழுணர்வைக் கண்டு பூரித்தான். எதிர் இருக்கையில் அன்பரசியின் தவிப்பை ஓரக்கண்ணால் துய்த்துக்கொண்டே இரண்டு பயணச்சீட்டுக்களை எடுத்து நீட்டினான். நண்பன் பொன்னகனுக்காக வாங்கிய சீட்டு அன்பரசிக்குப் பயன்பட்டதில் அவனுக்கு ஒரு மனஅடைவு''[38] சிறுகதை என்ற கலைவடிவம் இதழில் வெளிவந்தாலும் தொகுப்பு நூலாக வந்தாலும் அது பொதுமக்களை-எழுதப் படிக்கத் தெரிந்த எளிய மக்களை (Common man) சென்று அடைகிறது.

---

36. ஷி, ப. 33.
37. இனியவன் (தயாரிப்பு) விடியும் வெளிச்சம் வரும், அறிவழகன், 'மரண அடி', ப. 53.
38. தமிழ்மல்லன் (தொ. ஆ.), விருந்து பாவலர் கோ ''நெஞ்சிலே பூத்த நிலவு'', பக். 54-55

அவர்களுக்கும் புரியக் கூடிய எளிய தமிழில்-பொதுத் தமிழில் (Standard Language) அமைந்தால்தான் அதற்குச் சிறப்பு. பொதுமக்களை அடைந்து அவர்கள் நெஞ்சிலும் நினைவிலும் நாவிலும் நடையாடினால்தான் இலக்கியத்திற்கு வாழ்வும் நிலை பேறும் கிட்டும். பிறமொழி கலந்த மணிப்பிரவாளம் எவ்வாறு பொதுமக்களுக்குப் பயன்படாதோ அப்படித்தான் தனித்தமிழ் நடையும். தனித்தமிழ்ச் சொற்களில் செல்லும் கவனம் கதை ஓட்டத்தைத் தடைப்படுத்த வாய்ப்புள்ளது. இதை இந்த நிலையில் எண்ணிப்பார்த்தல் வேண்டும்.

ஆசிரியர் இடையீடு: சிறுகதையில் ஆசிரியரோ கதை கூறு பவரோ இருக்கிறார் என்ற உணர்வே ஏற்படாது கதை கூறப் படுவதுதான் சிறப்புடையது. எந்தவொரு இடத்திலும் இடையீடு இருத்தல் கூடாது. தொடக்கத்திலோ இடையிலோ இறுதியிலோ கதை ஓட்டத்தைத் தடுத்து நிறுத்தும் ஆசிரிய விளக்கம் இடம் பெறின் அது படிப்பவர் கவனத்தைத் திசை திருப்பும். கூறியது குறைவாகவும் அதுகொண்டு வாசகர் சிந்திக்கவேண்டியது நிறை வாகவும் இருக்கவேண்டும். சிறுகதை திட்பமும் நுட்பமும் செறிவும் மிக்க கலைவடிவம் என்பதை மறந்து பெரும்பாலான ஆசிரியர்கள் தாங்களே, தலைநீட்டிப் பழங்கதை மரபில் இது காறும் கூறியவாற்றால் எனப் பேசுவதை இக்காலச் சிறுகதை ஆசிரியர் பலரிடமும் காணமுடிந்தது.

> "மாந்தர் தம் உள்ளங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு வகை. வாழ்வோர் கோடி என்றால் அவர்தம் நெஞ்சத்து நிறமும் அத்தொகையே அன்றோ!"[39]

என்று இடையில் ஆசிரியர் புகுவதைக் காணலாம்.

சிறுகதை எழுதுவது எப்படி தொகுப்பில் இரண்டாவது கதையின் (சுஜாதா எழுதும் ஒரு கதை என்பது அக்கதையின் தலைப்பு) இறுதியில் கதைமுடிவிற்கு அப்பால் ஆசிரியர் பேசுகிறார்:

> "அவன் மேல் ஆயிரம் இடிகள் விழுந்தன. செவிப்பறை யில் சண்டமாருதங்கள் மோதின என்று சொல்வதெல்லாம் வெட்டி. உங்களில் பலர் கிட்டத்து உறவினர்களையோ, ஏன், தாய் தந்தையர்களையோ இழந்திருப்பீர்கள். இந்தத்

39. ஷ்டி, ப். 50

துக்கத்தின் ஆழம் உங்களுக்குப் புரியும். விஷயம் அது அல்ல.''[40]

கதையின் ஓட்டம் இங்குத் தடைப்படுகிறது. ஆசிரியர் சுஜாதா நேர்ப்பட்டு முன்னிலை உத்தியில் வாசகர்களுடன் உரையாடுவது, படிப்பவரின் சிந்தனையைத் தடைப்படுத்துவதுடன் கதையின் செறிவை நீர்க்க வைக்கிறது. 'படிப்பவர்களின் சிந்தனை ஆற்றலை மழுங்கடித்து மரத்துப் போகவைக்கும் இதழ்களின் போக்கால் இது விளைந்ததா அல்லது இறுதிக்காட்சியில் அத் திரைப்படத்தின் கதைச் சிறப்பை அல்லது பெயர்ப்பொருத்தத்தை எடுத்துப் பேசி அமைதி காணும் தமிழ்த் திரைப்படத்தின் தாக்கத் தால் ஏற்பட்டதா என்று ஆராயவேண்டும்.''[41]

## சிறுகதையின் உருவம்

இக்காலச் சிறுகதைகளில் எளிய அமைப்பையே பெரும்பாலும் காண்கிறோம். எளிமையுடன் வடிவச் செம்மையும் செறிவும் திட்டமும் இக்கதைகளில் காணப்படுகின்றன. கதையின் அமைப்பை அதன் நீளத்தை வைத்து முடிவு செய்ய இயலாது. இருப்பினும் கதையின் உள்ளடக்கம் புலப்படுமாறு கதைப் பின்னலின் முழுநிலை வெளிப்பாடாக அது அமையவேண்டும். நீண்ட வடிவில் அமைந்து, குறுநாவலாக ஆகிவிட்ட கதையை இரவிச்சந்திரனின் இந்திராரெட்டியின் இனிய சிநேகிதன் கதையில் காண்கிறோம். விடியும் வெளிச்சம் வரும் தொகுப்பில் உள்ள கதைகள் பலவற்றில் வடிவச் செம்மையைக் காண்கிறோம். சுஜாதா, இரவிச்சந்திரன், கதைப்பித்தன், சிவசங்கரி ஆகியோர் கதைகளில் இதழ்களின் போக்கிற்கும் படிப்பவரின் பொழுது போக்குச் சுவைக்கும் இசைந்த ஆர்வநிலையை மையமிட்ட கதைப் பின்னலையும் அமைப்பையும் காண்கிறோம்.

## முடிவுரை

சிறுகதை என்பது வாழ்க்கையின் சாளரம். எண்பத்தொன்றில் வெளியான சிறுகதைகள் பலவற்றில் ஆழமான வாழ்க்கைப் பிரச்சினைகளை மையமிட்ட உள்ளடக்க வீச்சைக் காண்கிறோம். பழகிய கரங்களும், புதிய கரங்களும் ஆக எழுத்தாளர் பலர்

---

40. சுஜாதா, சிறுகதை எழுதுவது எப்படி?, ப. 32
41. வேங்கடராமன், சு., ''எண்பதில் சிறுகதை'', எண்பதில் தமிழ்.

நம்பிக்கைக் குரல் கொடுக்கின்றனர். உள்ளடக்க வீச்சும் அதற்கேற்ற அமைப்பும் கலைத்திறன்களும் இணைந்த கலை வடிவங்களாகச் சிறுகதைகளை இக்காலத்தில் காண்கிறோம். மனித மன உணர்வுகளைச் சல்லடையிட்டு அலசிக் காட்டுவதுடன், முரண்பாடும் மோதலும் சாதி, சமய, வர்க்கபேதமுமிக்க சமுதாய அவலங்களைக்காட்டி சமுதாய நெறி பிறழ்ந்து கிடக்கும் அமைப்பில் அதன் விளைவான மனிதனும் இப்படித்தான் இருப்பான் என்று விதிபடைக்கும் பாங்கும் இக்காலக் கதைகளில் காணப்படுகின்றது.

பொதுவாக, எண்பத்தொன்றில் தமிழகத்திலிருந்தும் கேரளம் புதுவை மாநிலங்களில் இருந்தும் முதற்பதிப்பாக வெளியான சிறுகதைத் தொகுப்புக்கள் பலவற்றில் தமிழ்ச் சிறுகதை ஆழமான வளர்ச்சி பெற்றுள்ளதை உணர முடிந்தது.

# 7. குறும்-புதினம்

டாக்டர் இராம. குருநாதன்

சிறுகதைக்கும் புதினத்திற்கும் பிறந்த குழந்தையாகக் குறும்-புதினத்தைக் கருதலாம். 1981இல் வந்த குறும்-புதினங்கள் பெண்மையின் மனப் போராட்டங்களையே முதன்மைப்படுத்தியுள்ளன. சமுதாயத்தின் அடிமட்டத்தில் உள்ள ஏழைகளைப் பற்றிய குறும்-புதினம் வராதது குறையே. மண்ணில் நடக்கும் நன்மை-தீமைப் போராட்டங்களுக்குத் தீர்வு காணும் குறும்-புதினங்களையும் காண முடியவில்லை.

## 1

## கதைமரபு

கதை என்பது பழங்காலத்திலிருந்தே சொல்லப்பட்ட கலையாக அரும்பி, எழுதப்பட்ட கலையாக மலர்ந்த ஒன்று. சொல்லப் பட்ட/வழங்கப்பட்ட கதைகளைப் பழங்கதை, கட்டுக்கதை, நீதிக் கதை எனப் பலவாறு கூறுவர். கதை சொல்லப்பட்டு வந்த கால முதல் புனைகதைப் பண்பே பெரிதும் போற்றப்பட்டது. நீண்ட நெடுங் கதைகளாயினும் அவை முழுக்க முழுக்கப் புனைந்துரையாகவே விளங்கின. 1001 இரவுகள், டெக்கமரான், ரூத்தின் கதை, மதனகாமராசன் கதை, விக்கிரமாதித்தன் கதை போன்றவை புனைந்துரை கொண்ட நீண்ட நெடிய கதைகளாகும்.

நீண்ட நெடிய கதை மரபினின்னும் (Long narrative tradition) தனக்கென ஒரு தனித்த இடத்தைப் பெற்ற புதினம் 18-ஆம் நூற்றாண்டின் இடைப் பகுதியில் கிளைத்ததாகும். புனைவியல் பாங்கை அடியொற்றியே இக்கலைவடிவம் பல்கியது. இதனை எண்ணும் போது ஏனைய கதை இலக்கியக் கலை வடிவங்

களான சிறுகதையையும், புதினத்தையும் ஈண்டுத் தொடர்பு படுத்துதல் நலம்.

## இலக்கணப் பார்வை

சிறுகதை, புதினம், குறும் புதினம் ஆகியன கதையையே அடிப்படையாகக் கொண்டவை. எனினும் சிறுகதைக்கும், புதினத்திற்கும் தனித்தனிப் பண்புக் கூறுகள் கூறப்பட்டுள்ளன. சிறுகதையைப் புதினத்தின் சுருங்கிய வடிவம் (a condensed novel) என்றழைப்பது பொருந்தாது. சிறுகதைக்கும், புதினத் திற்கும் சொல்லப்படும் இலக்கணம் காலஞ் செல்லச் செல்ல மாறி யமைந்துள்ளது. இதுதான் சிறுகதை, புதினம் இப்படித்தான் இருக்க வேண்டும் என்று இலக்கணத் துலாக்கோலில் அப்படியே எடை போட்டுவிட முடியாது. இந்த நிலையில் குறும் புதினத் திற்கு என எந்த இலக்கணத்தை வரையறுக்க இயலும்?

குறும் புதினம் பற்றிய பார்வை இக்கட்டுரைக்குத் தேவை யாகிறது. குறும் புதினம் NOVELETT என்றும் NOVELLA என்றும் மேனாடுகளில் வழங்கப் படுகிறது. சிறு புதினம் (Short Novel) என்பது இதற்குரிய பொருளாகும். சிறுகதைக்கும், புதினத் திற்கும் இடைப்பட்ட ஓர் இலக்கியக் கலைவடிவமாக இதனைக் கருதுவர். 15,000 சொற்களிலிருந்து 30,000 சொற்களைக் கொண்டது குறும் புதினம் என்பர்; 30,000 சொற்களிலிருந்து 50,000 சொற்களை உடையது என வெப்ஸ்டர் பேரகர முதலி வரையறை செய்கிறது.

## குறும் புதினக் குழந்தை

குறும் புதினத்தைச் சிறுகதைக்கும், புதினத்திற்கும் பிறந்த குழந்தையாகக் கருதலாம். சிறுகதைப் பண்புகள் சிலவற்றையும் புதினப் பண்புகள் சிலவற்றையும் கொண்டு பிறந்த இக் குழந்தை உலக இலக்கிய அரங்கில் மெல்லவே நடைபோடுகிறது.

சிறுகதை, புதினம் ஆகிய இவற்றைக் கொண்டு குறும் புதினத்தை ஓரளவு இனங் குறிப்பது ஈண்டுப் பொருந்துவதாகும். சிறுகதை, புதினம் இவற்றிற்குள்ள நுட்பமும், கலைத்திறமும் குறும் புதினத்திற்குச் சொல்லப்படவில்லை. இவை இரண்டிற்கும் இடைப்பட்ட நிலையில் அமைந்ததே இதற்குக் காரணம் என லாம். இந்த வகையில் குறும் புதினக் குழந்தை சப்பாணிக் குழந்தையாகவே உள்ளது.

## குறும் புதினத்தில் கதைப் பின்னல்

கதைப் பின்னலில் சிறுகதை, புதினம், குறும் புதினம் என்ற மூன்றிற்கும் பங்குண்டு எனினும் சிறுகதைக்குப் பின்னல் அவ்வள வாகத் தேவையில்லை. புதினமோ கதைப்பின்னல் இன்றிச் சிறப்ப தில்லை (விலக்கு: நனவோட்டப் புதினங்கள்). புதினத்திற்கே உரிய இறுக்கமான கதைப்பின்னல் குறும் புதினத்திற்குத் தேவை யில்லை' எனவே கதைப் பின்னலில் அது நெகிழ்ச்சித் தன்மை யுடையதாகும்.

புதினத்தில் தலைமைக் கதைப்பின்னல் (Main Plot), துணைக் கதைப் பின்னல் (Sub plot) ஆகிய இரண்டுமே ஒன்றையொன்று அடுத்து ஒருங்கிணைவாகச் செல்லும். மேலும், துணைக் கதைப் பின்னல் தலைமை மாந்தரின் (Protagonist) பண்புநலன்களை விரித்துரைக்கப் பயன்படும். குறும் புதினத்தில் துணைக் கதைப் பின்னலின் பங்கு மிக மிகக் குறைவு. ஒருங்கிணையாகவும் செல்வ தில்லை; எங்கோ ஓரிடத்தில் நின்று, ஓரளவு தலைமைக் கதைப் பின்னலுக்குத் துணைபுரியும்.

## குறும் புதின மாந்தர்

சிறுகதையில் மனிதனைப் பற்றிய ஒரு பகுதி வாழ்க்கை அல்லது ஒரு நிகழ்ச்சி, மின்னல் உணர்வாகப் பளிச்சென்று. செல்லும். புதினம் மனிதரின் முழு வார்ப்பை விளக்குவதாகும். குறும் புதினத்தில் வரும் கதைமாந்தர்கள் இவ்விரண்டிற்கும் இடைப்பட்ட நிலையில் உலவுவர். சிறுகதையில் வருவது போல, மனிதரின் ஒரு கோணத்தைச் சற்று விரிவாகவே குறும் புதினம் ஆராயும். சிறுகதையில் தலைமை என்று சொல்லக்கூடிய கதை மாந்தர் இடம் பெறுவதில்லை. குறும் புதினத்திலோ மாந்தர் ஓரிருவர் உலவுவர். ஆயின் தலைமைமாந்தர்க்குச் சிறப்பிடமுண்டு.

## குறும் புதின எல்லை

கதையின் நீள அகலங்களைக் கொண்டு குறும் புதினத்தைச் சிறுகதை, புதினம் இவற்றினின்றும் பிரிப்பது இயலாது. குறும் புதினத்தில் அடங்கியுள்ள 'குறுமை'யும் சிறுகதையில் அமைந் துள்ள 'சிறுமை'யும் சில சமயங்களில் பொருளற்று விடுகின்றன.

மிகவும் நீண்டிருந்து சிறுகதைத் தன்மை படைத்த குறும் புதினங்களும் உள்ளன. சிறுகதைத் தன்மையிலிருந்து சற்றே வேறுபட்டுக் குறும் புதினமாகிவிட்ட சிறுகதைகளும் உள்ளன,

ஏர்னெஸ்ட் ஹெமிங்வே எழுதிய 'கிழவனும், கடலும்' என்ற நோபல் பரிசு பெற்ற கதை குறும் புதினமாகக் கருதப்பட்டாலும், அதனைச் சிறுகதைத் தன்மைபடைத்ததாகவே கருதுவர். ஜோசப் கான்ராடு எழுதிய 'டைதபூன்' (Typoon) என்ற கதை 20,000 சொற் களுக்கு உட்பட்டதெனினும், அதனைக் குறும் புதினமாகவே கருதுகிறார், வால்ட்டர் ஆலன்.

ஹென்ரி ஜேம்சின் கதைகள் 8,000 சொற்களுக்கு மேற் பட்டவை. நூற்றுக்கு மேற்பட்ட அவரது கதைகள் மிக நீண்டவை. அவற்றைக் குறும் புதினமாக ஜேம்ஸ் எண்ணுகிறார். ஆனால் வால்ட்டர் ஆலன் அவற்றைச் சிறுகதையாகவே கொள் கிறார்.

மேனாட்டில் மட்டுமின்றித் தமிழகத்திலும் மேற்கண்ட போக்கைக் காணலாம். புதுமைப்பித்தனின் 'கபாடபுரம், அன்றிரவு' போன்ற கதைகள் நீண்டவை யெனினும், அவற்றில் சிறுகதைத் தன்மை அமைந்துள்ளது. அவரது துன்பக்கேணி என்ற சிறு கதையோ குறும் புதினப் போக்குடையது. கல்கியின் கதைகளில் சில, சிறுகதைப் பண்பிலிருந்து மாறுபட்டுக் குறும் புதினமாக விரிந்துள்ளன. சில கதைகள் 35 அல்லது 40 பக்கங்களைத் தாண்டி யுள்ளன. அவை காலநீட்சியும், நிகழ்ச்சிக் கோவையும் பெற்றுப் பலவாக விரிந்து குறும் புதினமாகியுள்ளன. அகிலன் தான் எழுதிய முதல் புதினமான இன்பநினைவு என்ற புதினத்தைப் பெரிய சிறுகதை என்றே குறித்துள்ளார். ஜெயகாந்தன் எழுதிய குறும் புதினங்கள் சில சிறுகதைத் தன்மை பெற்றுள்ளன.

சிறுகதைக்கும், புதினத்திற்கும் இடைப்பட்ட நிலையில் அமைவது குறும் புதினம் என்ற கருத்து மேலே கண்ட கூற்று களால் ஏற்புடையதாகிறது.

சிறுகதைக்கும், புதினத்திற்கும் பொருந்தி வரும் இலக்கணங் களைக் குறும் புதினம் ஓரளவு கொண்டிருந்தாலும், இவ்விரண்டின் சிதைந்த வடிவமே குறும் புதினம் என்று சொல்லத்தோன்றுகிறது. 81இல் இதழ்களில் வெளிவந்த குறும் புதினங்களைக் காணும் போது அவ்வெண்ணம் மேலும் உறுதிப்படுகிறது

## வண்ண வண்ணப் பெயர்கள்

குறும் புதினம் இன்றைய தமிழ் இதழ்களால், பல்வேறு பெயர் களில் அழைக்கப்படுகிறது. நெடுங்கதை (கணையாழி), முழு

நீளக்கதை (கல்கி), இரண்டிதழ்த்தொடர்கதை(அமுதசுரபி), சிறிய தொடர் (சாவி), தவணைக்கதை (குங்குமம்), போனஸ் கதை (தின மணி கதிர்) எனப் பல்வேறு பெயர்களில் வடிவெடுத்துள்ளது குறும் புதினம். 'தாய்,' இதழ் ஒன்றில் குறும் புதினம் (Serial-miniature' என்ற பெயரில் வெளிவந்துள்ளது.

குறும் புதினம் தமிழ் இதழ்களில் தற்போது பெருகியுள்ளது. வரர இதழ்களைக் காட்டிலும் மாத இதழ்களில் குறும் புதினங்கள் அதிகம் வெளிவந்துள்ளன. மாத இதழ்களின் அளவும், பக்கங்களுமே குறும் புதினத்தை வெளியிடக் காரணமாயுள்ளன. வார இதழ்களில் வெளிவரும் குறும்புதினம், பெரும்பாலும் ஒரே இதழில் முடிவடைவதில்லை; எனவே தான் தவணைக் கதை, Serial-miniature என்ற பெயர்களில் சிலசமயம் வெளிவருகிறது.

## இதழ்களில் குறும் புதினம்

மாத இதழ்களில், குறும் புதினம் தனித்த இடத்தைப் பெற்றுள்ளது. குறும் புதினத்திற்குச் சிறப்பிடம் அளித்துவருகிறது கலைமகள். இதற்காகப் பல போட்டிகளை நடத்தி வருகிறது. நாராயணசாமி அய்யர் பரிசு, சுப்புலக்ஷ்மி லக்ஷ்மணன்பரிசு அமரர் ராமரத்னம் பரிசு ஆகியவை இத்துறையில் குறிப்பிடத்தக்கன. 'கலைமகளில் அடிக்கடி குறுநாவல் போட்டி வைப்பதும், பல பெருமக்கள் அத்தகைய போட்டியை நடத்தப் பொருள் வழங்குவதும் கலைமகள் பத்திரிகையில் தமிழ் மக்களுக்குள்ள நம்பிக்கையையும், மதிப்பையும் காட்டுகின்றன', எனக் கலைமகள் (பிப் 81) ஆசிரியர் கி வா.ஜ குறிப்பிட்டுள்ளது பொருத்தமான கூற்றேயாகும்.

தமிழ் இதழ்களில் மாறுபட்ட கண்ணோட்டத்தையும், புதுமைப் படைப்புகளை வெளியிடுவதையும் நோக்கமாகக் கொண்ட கணையாழி ஏப்ரல் 82 முதல் ஒவ்வோர் இதழிலும் குறும் புதினத்தை வெளியிட முன்வந்துள்ளது. அதற்கெனத் தனிப் போட்டி ஒன்றை நடத்தி வருவது 'குறும்' புதின வளர்ச்சிக்குப் பெருமை தருவதாகும்.

மாதந்தோறும் புதினங்களை வெளியிட்டு வரும் இதழ்களில் குறும் புதினங்கள் வந்துள்ளன. 'கதைக்கதிரில் குறும் புதினங்கள் சில வெளி வந்துள்ளன. (மாத வெளியீடான கதைக்கதிர் போன்றவற்றில் வெளிவந்த குறும் புதினங்களை இக்கட்டுரைக்குப் பயன்படுத்தவில்லை)

அமுதசுரபி, மங்கையர் மலர் ஆகிய மாத இதழ்களில் குறும் புதினங்கள் ஓரளவு தொடர்ந்து வெளியாகியுள்ளன. இதழ் களில் குறும் புதினங்கள் ஓரளவு பெருகி வருகின்றன. பொது வாக அனைத்து இதழ்களிலும் குறும் புதினம் வெளியாகிறது; எனினும் ஆனந்தவிகடன், குமுதம் போன்றவற்றில் அவ்வளவாக வெளிவருவதில்லை.

## குறும் புதின வளர்ச்சி

குறும் புதினம் எழுதுவதில் இன்றைய எழுத்தாளர் பலர் முனைந்துள்ளனர். தேர்ந்த எழுத்தாளர் சிலரின் படைப்புகள், மெருகோடு ஒளிருவதை 81-இல் வெளிவந்த இதழ்கள் காட்டு கின்றன.

இளந் தலைமுறையினரும் குறும் புதின விடிவெள்ளிக்குப் பள்ளியெழுச்சிப் பாடியுள்ளனர். கலைமகள் மூலம் குறும் புதினப் போட்டிகளில் தேர்ந்தெடுக்கப்பட்ட சிலரும், இந்த விடியலுக்குப் பூபாளம் பாடப் புறப்பட்டுள்ளனர். 'குறுநாவல்களை எழுது வதில் இப்போது எழுத்தாளர்கள் ஊக்கம் காட்டி வருகிறார்கள்' பத்திரிகைகளும் அவற்றை வெளியிட்டு வருகின்றன. அந்தத் துறையில் கலைமகள் ஒரு வழிகாட்டி என்று சொல்ல வேண்டும். (மார்ச் 81) திரு கி.வா. ஜ. அவர்களின் கூற்று ஏற்றுக்கொள்ளப் படவேண்டிய ஒன்றாகும். குறும் புதின மரபை இதழ்களில் தோற்றுவித்த பெருமை கலைமகளுக்கு உண்டு. அமுதசுரபி, மங்கையர் மலர்,. கல்கி, தினமணி கதிர், குங்குமம், சாவி, தாய் ஆகிய இதழ்கள் குறும் புதினங்களை வெளியிட அதன் வளர்ச்சிக் குத் துணை செய்கின்றன.

பொதுவாகவே இதழ்களில் வரும் குறும் புதினங்களால் பக்கங்கள் நிரம்புகின்றன; அதே வேளையில் படிப்போர் மனமும் நிறைகின்றது;

### 3

**கண்காட்சி :** 81-இல் வெளிவந்த குறும் புதினங்கள் ஆண், பெண்-காதலுறவு, கணவன், மனைவி-குடும்பம், தனிமனித ஏக்கம் மனிதமன அலைவு, கொலை, கொள்ளை போன்றவற்றைக் களமாகக் கொண்டவை. பொழுது போக்கிற்காக மட்டும் என்றில்லாமல் சில கதைகள் சிந்தனையைத் தூண்டும் வண்ணம் அமைந்துள்ளன, வாழ்வின் கோலங்கள் எந்தெந்தக்

கோணங்களில் வடிவெடுக்க முடியுமோ அவற்றை யெல்லாம் குறும் புதினப் பார்வை காட்சியாக நல்குகின்றது.

விரைவில்லாமல் மெல்லப் படித்துச் சுவைக்கும்படியான கதைகள் சில உள்ளன. (குறிஞ்சியோ? நெருஞ்சியோ? பிரளயங் கள்); திரைப்படத்தை மனத்துள் கொண்டு, திரைப்படத்திற் குரிய கதையமைப்பை யுடைய கதைகள் சில உள்ளன. (அரவணைப்பு). மனக் கற்பனையின் விரிசல்களை வெளிப்படுத்து வதாய்ச் சில கதைகள் உள்ளன (இந்திராரெட்டியின் இனிய சிநேகிதன், எதற்காக வெட்கம்); வெறும் காதலை மட்டும் காட்டிச் செல்கின்ற கதைகள் சில உள்ளன (காதல் கொடி, யதார்த்தங்கள்).

நெஞ்சில் ஆழ்ந்த வடுக்களை ஏற்படுத்தும் கதைகள் இல்லாதது குறையே எனினும் பார்வை, எரிமலை மனிதர்கள், மாறுதல், ஊற்றுக்கண், விலை முதலான கதைகள் ஓரளவு அக்குறையைத் தீர்க்க முயல்கின்றன.

பாதிமலர்கள் : குறும் புதினங்களில் விறுவிறுப்புத் தன்மை பொதுவாகக் குறைந்தே காணப்படுகிறது. பாத்திர வார்ப்பிலும் புதிய கண்ணோட்டத்தைக் காண முடியவில்லை. வழக்கமான கற்பனை மனிதர்கள் வந்து போகின்றனர். இவற்றைப் பார்க்கும் போது புதினமாக மலர வேண்டியவை பாதிமலர்களாகிக் குறும் புதினமாகக் காட்சி அளிக்கின்றனவோ என எண்ணத் தோன்று கின்றது.

கதைப் பொருள்: 81-இல் வெளிவந்த கதைகளின் செய்திகளை குடும்பநிலை, காதல்நிலை, பொதுநிலை எனப் பகுக்கும்பொழுது அனைத்துக் கதைகளிலும் வாழ்க்கைச் சிக்கலே கதைப் பொருளாய் விளங்குவதைக் காணலாம்.

குடும்பம்-ஒரு குறும் புதினம்: குடும்ப வாழ்க்கையில் கணவன் மனைவி ஆகியோர் ஒருவரையொருவர் புரிந்து கொண்டு வாழ வேண்டும் என்பதை வலியுறுத்தும் கதைகளில், ஆணின் மனப் போராட்டத்தை விடப் பெண்ணின் மனப்போராட்டமே அடங்கி யுள்ளது.

தீய பழக்கத்தினால் வழி தவறிய கணவனைப் பிரிந்து தனித்து வாழ்கிறாள் ஒருத்தி. அலுவலகத்தில் ஊழல் செய்த குற்றத்திற்காகக் கணவன் கைதாகிறான். கையாடிய பணத்தைத்

திருப்பிக் கட்ட உத்தரவு வரும்போது, மனைவியைத் தஞ்சம் புகுகிறான் கணவன். கணவனது புற மாசினை அகற்றி அவன் அகத்தை உழுது பண்படுத்தி விடுகிறாள் மனைவி. ஒருவரை யொருவர் புரிந்து கொண்டு வாழத் தலைப்படுகின்றனர். மனத்தை உழுதால் என்ற இக்குறும் புதினத்தின் கதை இது.

மேலே கூறிய கதையின் சாயல் படிந்த இன்னொரு கதை அவளுக்கு இரண்டு முகங்கள் என்பதாகும். கமலினியும், அவள் கணவனும் ஒரே அலுவலகத்தில் பணிபுரிந்தாலும் கணவனின் கொடுமையால் தனித்து வாழ்பவள் கமலினி. அலுவலகத்தில் கணவன் செய்த ஊழல், அவனை வேலை இழக்கச் செய்கிறது இந்நிலையில் மனைவியிடம் பணம் கேட்டு வருகிறான். மனைவிக்குத் தான் இழைத்த குற்ற உணர்வால் அவளோடு வாழ விரும்பாததைத் தெரிவித்து வெளியேறிவிடுகிறான் ஆனால் அவனோடு மீண்டும் வாழ விரும்பும் ஆசை அந்த நேரமுதல் அவளிடத்துத் தளிர்விடுகிறது.

முன்னர் கூறிய கதைக்கும், இதற்கும் ஒற்றுமை இருக்கிறது. மனத்தை உழுதால் (கலைமகள்) முதலில் வெளிவந்த கதை. அவளுக்கு இரண்டு முகங்கள் (அமுதசுரபி) பின்னர் வெளியிடப் பெற்ற கதை. ஒன்றின் நிழல் மற்றொன்றிலும் அப்படியே விழுந்துள்ளது. தவறு நேர்ந்தபின் ஒருவரை ஒருவர் புரிந்து கொண்டு வாழ்வதை விரும்புகிறது முதல் கதை- இர்ண்டாவது கதையோ மனைவி விரும்பினாலும் குற்றவுணர்வு பொறுக்காத கணவன், பிரிவதைக் காட்டுகிறது. முதல் கதை கூறி வந்த கருத்தால், வாழ்க்கைக்குப் பாடம் புகட்டுகிறது. இரண்டாம் கதை ஒரு கதைக்கே உரிய இயல்பினை முடிவில் காட்டி நெஞ்சில் ஒரு நெருடலை ஏற்படுத்த முனைகிறது.

கைதிகள் என்ற கதையில் கண்வன் இரவிச்சந்திரன் மீது மோசடிக் குற்றம் சாட்டப்பட்டதை அறிகிறாள் அவனது மனைவி நிர்மலா. அவள் வழக்குரைஞராக இருக்கும் தன் பழைய காதலன் சிவராமனின் உதவியால், கணவனைக் குற்ற மற்றவனாக்கித் தண்டனையிலிருந்து மீட்கிறாள். இந்தக் கதையில் பெண் ஒருத்தி, தன் கணவனுக்காகப் போராடும் மன இயல்பு எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிறது. பெண், வாழ்க்கைச் சிக்கலை எவ்வாறு அணுகுகிறாள் என்பதைக் காட்ட நிர்மலா தக்க சான்று. காதல் புரிந்த நாட்களை நிர்மலாவும், சிவராமனும் எண்ணிக் கொள்வது. குறும் புதினமாக விரித்துரைக்க இடந்தருகிறது.

அலுவலகம் போகும் திருமணமாகாத பெண்ணின் மன ஓவியங்களைப் படம் பிடிக்கிறது தவறுகள் பாடங்களாகின்றன என்ற கதை. என்றோ ஒரு நாள் தன் மேலதிகாரி தவறாக நடக்க முயன்றதை வெறுத்த நளினி, அந்த மேலதிகாரிக்குப் பின் அப் பதவியில் அமர்ந்த கோபாலையும் முன்னவர் போலவே வெறுத்து, எல்லா ஆண்களும் ஒரே மாதிரியானவர்களே என்ற முடிவுக்கு வரு கிறாள். கோபால் அவளைத் தன் வீட்டிற்கு அழைத்து வந்து, தன் ஐந்து தங்கைகளை அறிமுகப்படுத்தியதோடு, தன்மேல் கொண்ட தவறான எண்ணத்தையும் மாற்றியமைக்கிறார். அலுவலகம் செல்லும் திருமணமாகாத பெண்களின் நிலையை ஓரளவு இக் கதை எடுத்துக் காட்டுகிறது. கருவிலும், அதனை வளர்த்துச் செல்லும் முறையிலும் புதிய கோணத்தை இதில் காண முடிய வில்லை.

குடும்ப வாழ்வில் கணவன்-மனைவி இருவரிடையே ஏற்படும் ஐயம், சிக்கல் ஆகியவை வாழ்வை எங்ஙனம் பாதிக்கின்றன என்பதற்குக் கன்யாகுமரி ஒரு நல்ல எடுத்துக்காட்டு.

சுந்தரவதனம், தான் இளமையில் காதலித்த செல்லம் என்ப வளுக்குப் பணம் அனுப்பிவருகிறார். ஒரு நாள் பணவிடைப் பற்றுச் சீட்டில் செல்லம் பெயரைக் கண்டு சுந்தரவதனத் தின் மனைவி சுமத்ரா திகைக்கிறாள். களங்கமே இல்லாத தன் வாழ்வில், இப்படி ஒரு குழப்பம் வந்ததை எண்ணிக் கலங்குகிறாள் செல்லத்தோடு நட்பு கொண்ட தன் இளமை வாழ்வை மனைவி யிடம் கூறுகிறார் சுந்தரவதனம். சுமத்ரா செல்லத்தைத் தன்னோடு அழைத்துக் கொள்வதற்காக அவளை அணுகியபோது. சுந்தரவதனத்தை இம்மையில் அடைய முடியாவிட்டாலும் மறுமையில் அடைய தவமிருப்பதாய்க் கூறி வர மறுத்து விடுகிறாள் செல்லம். 'காலம் என்ற நெருப்பில் தன் கன்னித்தன்மையை வேள்வி செய்து தவமிருக்கும் கன்யாகுமரியாகவே செல்லம் சுமத்ராவின் கண்களுக்குத் தென்படுகிறாள். தங்கு தடையின்றி ஒரே சீரான நடையில், ஒரு குறும் புதினத்திற்குரிய விளக்கமான அமைப்பில் இக்கதை செல்கிறது. எனினும் பழைய பாணிக் கதைதான்.

குடும்பம் இரு இதயங்களின் பிணைப்பு; இது மாறுபடுமானால் வாழ்க்கையே பாலைவனமாக மாறி விடுகிறது என்பதை பார்வை என்ற கதை சுட்டுகிறது. மனைவி தனக்குள்ள சிறுசிறு குடும்ப உரிமைகளில் கணவன் தலையிடுவதை விரும்பவில்லை.

எனவே தனியாக ஒதுங்கி விடுகிறாள். கணவன் வேறொருத்தியை மணந்து அவளுக்கு முழு உரிமை அளித்திருப்பதை ஒரு நாள் அறிந்து போது, தன் பார்வை மாறுபட்டிருந்ததை உணர்கிறாள். இது ஒரு சாதாரண சிறு கதைதான். எனினும் கூறப்படும் விதத்தால் குறும் புதினமாவதைக் காண்கிறோம்.

உண்மையான காதலரை இணைத்துத் திருமணம் செய்து வைக்கும் மனஅலைவு கொண்ட ஒருவரைக் குறிஞ்சியோ? நெருஞ்சியோ? என்ற கதையில் சந்திக்கிறோம். காந்திமதிநாதன் தான் திருமணம் புரிய இருந்த ரமாவை, அவள் விரும்பிய அசோக் என்பவனோடு இணைத்து வைத்து, நெருஞ்சியாகக் குத்தும் நினைவுத் தடத்திலிருந்து குறிஞ்சியாகி, நெடிது மணக்கும் தியாக வாழ்வில் நிலைபெறுவதை விளக்குகிறது இக் கதை.

கமனியக் கனவுகள், ஒரு சொல் ஒரு உயிர் ஆகிய இரு கதைகள் பெண்ணின் மெல்லிய உணர்வுகளை வெளிப்படுத்துகின்றன. கமனியக் கனவுகளில் கல்யாணி என்ற ஒருத்தியின் வாழ்க்கைப் போக்கில் ஏற்பட்ட மாற்ற மெல்லிய இழைகளால் பின்னப்பட்டுள்ளது. குடும்பம் என்ற ஒன்றில் சுற்றிச் சுழலும் போது ஆண்களுக்கு அடங்கிப் போகும் இயல்பு, அதில் பெண்ணின் ஏலாமை முதலியன இயல்பாக உணர்த்தப்பட்டுள்ளன. சிறுகதையின் ஓட்டத்தையும், அதன் பண்பையும் பெற்றுள்ள இக்கதை குறும் புதினமாக விரிந்துள்ளது கதையினிடையே ஒரு தொய்வையும் உணர்கிறோம்.

பொது மகளிர் விடுதியில் வாழ நேர்ந்த ஒருத்தியின் வாழ்க்கையை விளக்குகிறது ஒரு சொல் ஒரு உயிர் என்ற கதை. தங்கம் பொது மகளிர் விடுதிக்கு அழைத்துவரப்பட்ட ஒருத்தி. செல்லையா அவளை அங்கிருந்து மீட்டு, ஊருக்கு அழைத்து வருகிறான். தான் வாழ்ந்த அந்த விடுதி வாழ்க்கை பற்றி யாரேனும் கூறக் கேட்டால், அடுத்த கணம் உயிர் விடுவேன் எனச் செல்லையாவிடம் தெரிவிக்கிறாள். தங்கத்தின் பழைய வாழ்க்கையைச் செல்லையாவின் பெரியம்மாவிடம் ஒருவர் கூற, அதனைக் கேட்க நேர்ந்த தங்கம், அடுத்த கணம் ஆற்றில் குதித்து உயிர் துறக்கிறாள்.

இக்கதை, பழிச்சொல் ஏற்காத பெண்மையைக் கூறினாலும் வேண்டுமென்றே குறும் புதினமாக விரித்து எழுதப்பட்டுள்ளது. ஒரு சிறுகதைக்குரிய செய்தி தேவையில்லாமல் விரிந்துள்ளது.

## காதலா? காமமா?

காதல் பற்றிய குறும் புதினங்கள் 81-இல் பல கோணங்களில் வடிவெடுத்துள்ளன. காதலை மையமாக்கிக் காட்டும் பொழுது திரைப்படத்திற்குரிய போக்கையே காண்கிறோம். அரவணைப்பு, காதல் கொடி, இந்திரா ரெட்டியின் இனிய சிநேகிதன் முதலிய கதைகள் இத்தன்மையன.

காதல், காமம் என்பவை வளர்ந்து வரும் நாகரிகப் போக்கால் எங்ஙனம் தலைகீழாய் மாறிவிட்டிருக்கின்றன என்பதை விளக்க இந்திரா ரெட்டியின் இனிய சிநேகிதன், யதார்த்தங்கள் என்ற இரு கதைகளும் சான்று. இந்திரா ரெட்டியின் இனிய சிநேகிதன் என்ற கதை எதையும் கூறிவிடவில்லை; இது தரக் குறைவான வகையில் எழுதப்பெற்ற ஒரு பொழுது போக்குக் கதையாகக் காணப்படுகிறது.

முதிய கணவன்-மனைவியரிடையே எழும் காம உணர்வை உளவியல் நோக்கில் கூறவிழைகிறது எதற்காக வெட்கம்? என்ற கதை. கூறும் தன்மையில் உளவியலைக் காணோம். வெறும் மனித மனக் கிறுக்கலைத்தான் இதில் காண்கிறோம்.

காதல், காமம் பற்றிய உணர்வில் வாழ்க்கையைச் சிதறடித்துக் கொள்ளும் போக்கை யதார்த்தங்கள் என்ற கதை வெளிப்படுத்துகிறது,

கண்டதும் காதல் என்று கற்பனையில் வாழும் ஒருத்தி, தனக்கு ஏற்றவன் எனக் கருதி ஒருவனை மணந்து, அவனோடு வாழ்க்கையைத் தொடங்குகிறாள். ஆனால் தன் இயல்புக்கும் சூழலுக்கும் அவன் வசிக்கும் வீடு பொருந்தாமல் போகவே, காதல், காமம் என்பவையெல்லாம் மட்டமானவை என்ற முடிவோடு, தாலியைக் கழற்றி அவனிடத்துத் தத்துவிட்டு வெளியேறிவிடுகிறாள். படித்த பெண்களிடையே அவர்கள் வளர்த்துக் கொள்ளும் கற்பனை உலகம், தற்கால நாகரிகத்தால் எங்ஙனம் வாழ்க்கையைப் பாதிக்கிறது என்பதைக் கதை சுட்டுகிறது. ஒரு நல்லமெருகோடு சொல்லப்பட வேண்டிய கருவைக் கூறும் முறையால் சிதைத்துள்ளார் அதன் ஆசிரியர்.

குடும்பத் தலைவன் காமுகனாக இருப்பதையும், அதனால் குடும்பம் சீரழிவதையும் எரிமலை மனிதர்களில் காண்கிறோம். பெண்களை வீட்டுக்கு அழைத்து வந்து காமக் களியாட்டம்

புரியும் தந்தையின் செயலை, அன்னையோ, அண்ணன்களோ கண்டு கொள்ளவில்லை ஊமையும், மூடவனுமான கடைசிப் பையன் ரமணன் எல்லோரையும் இதனால் வெறுத்தொதுக்கு கிறான் தனக்குப் பணிவிடைபுரியும் லட்சுமி என்பவளை ரமணன் மணந்த போது, அவர்களைத் தன்னோடு அழைத்துக் கொள்ள விரும்பிய தந்தையின் முகத்தில் உமிழ்ந்து விட்டு வீட்டை விட்டு லட்சுமியோடு ரமணன் வெளியேறுகிறான்.

'இயலாமை சூழ்நிலை விதி எது?' என்ற கதையில், கேசவன் என்பவனின் மனைவியை அடைய திட்டம் வகுக்கிறான் ராம். கேசவனைப் போதைச் சரக்கு வியாபாரத்தில் சிக்க வைத்துச் சிறைக்கு அனுப்பி விடுகிறான். கேசவன் விடுதலை பெற்று வந்த அன்றே தன் மனைவி சரளா, ராமால் கெடுக்கப்பட்டதை அறிந்து, அவனைக் கொன்றுவிட்டு மீண்டும் சிறை செல்கிறான் கேசவன்.

காதல், காமம் இவற்றை மையமாக்கும் குறும் புதினங்களில் நடப்பியலைக் காட்டிலும் புனைவியல் பாங்கே ஓங்கியுள்ளன. பெரும்பாலும் அவற்றின் வடிவம் கூடச் சிறுகதைத் தன்மை படைத்ததாவே உள்ளது.

குழந்தை உள்ளம்: சமுதாயத்தில் மனிதர்களிடம் காணப் பெறும் ஆசை, ஏக்கம் ஆதங்கம் ஆகிய பண்புகளைப் பாசத் தோடும் பரிவோடும் அணுகுவதை அசோகமித்திரன் எழுதிய மாறுதல் என்ற கதை எடுத்துக்காட்டுகிறது. நிர்மலா என்ற சிறுமியின் மனவோட்டங்கள் இக்கதையில் இயல்போடு பொருந்தி யுள்ளன. கதை மிகமிகச் சாதாரணமானதுதான் எனினும், சொல்லும் முறையில் அழுத்தமும், தெளிவும் ஆழமாகப் பதிந்துள்ளன. சிறுமியின் தார்மீகக் கோபம், ஏக்கம், ஆதங்கம் இவற்றை ஒருங்கே காட்டிவிடுகிறது இக்கதை.

வரதட்சணை வாழ்வு: வரதட்சணையால் ஏற்படும் விளைவு களை இயல்பான சித்தரிப்போடு கூறுவதில் அனுராதா ரமணின் சாதகப் பறவை குறிப்பிடத் தகுந்தது வரதட்சணைக் கொடுமை யால் பெண் ஒருத்தி அடையும் வேதனையைப் படிப்படியாய்க் காட்டும் இக்கதையில் பெண்மையின் மெல்லிய இயல்புகள் ஒளிரு கின்றன. தனக்கு ஏற்பட்ட விபத்தின் மூலம் தன் கணவனின் இரக்கத்தைப் பெற்று, அது ஒன்றே வாழ்வில் போதுமானது என்று எண்ணும் சாலகியின் மன ஓவியங்கள் விழித்திரையில் தோன்றுகின்றன.

வரதட்சணையால் வாழ்வே சீரழிந்து, ஆடவரை விருந்துக்கு அழைக்கும் நிலைக்கு வந்துவிட்ட ஒருத்தியை ஆரத்தின் அறுந்த நூலிழைகளில் சந்திக்கிறோம்.

'ஒரு நல்லிதயம்': பழமையான போக்கும், அறியாமையும் இருக்கும்வரை நல்லியல்புடையோர் எங்ஙனம் ஏமாற்றப்படு கின்றனர் என்பதனை 'விலை' என்ற கதை கூறுகிறது.

ஸ்ரீரங்கநாதருக்குப் பூகட்டும் பரம்பரையில் வந்தவர் ரங்க ஐயங்கார். ஒட்டலை அகலப்படுத்த அவரது வீட்டை விலைக்குக் கேட்கிறார் சோமசேகர். அந்த வீடு இறைவனுடையது; அவன் சொத்து எனக்கூறி விற்க மறுக்கிறார் ஐயங்கார். ஆனால் பணமுடை ஏற்படவே, அந்த வீட்டை விற்க முடிவு செய்கிறார். அவரது இனத்தைச் சார்ந்த பார்த்தசாரதி என்ற வழக்குரைஞர் கோவில் வழியாகவே வழக்கு ஒன்றைத் தொடுத்து, அந்த வீட்டைச் சோமசேகர் விலைக்கு வாங்குதற்கும், தன் இனத்தைச் சேர்ந்த ரங்க ஐயங்கார் வீட்டைவிட்டு வெளியேறுவதற்கும் காரணமாகிறார்.

சுஜாதா எழுதிய இக்கதை, இனத்தவனுக்கு எதிரி இனத்த னாகவே இருப்பான் என்பதையும், சமுதாயத்தில் நல்ல மனிதர் சிலருக்கு இழைக்கும் தீங்கையும் ஒருங்கே உணர்த்துகிறது.

துப்பறியும் கதை ஒன்று: ஒரு மையப்புள்ளியை நோக்கிக் கதை சுழல்வது சிறுகதைக்குரிய பண்புக்கூறுகளில் ஒன்று. துப்பறியும் கதைகளில் ஒரு மையக் கருத்தைச் சுற்றியே கதை நிகழும், நிகழ்ச்சி, சூழ்நிலை, வருணனை இவற்றில் சற்றே விளக்கம் தேவை. இவற்றை எண்ணியே துப்பறியும் கதைகள் சில குறும் புதின வடிவம் பெற்றுள்ளன. இவ்வகையில் குறும் புதினம், நீண்ட சிறுகதையாகி விடுகிறது. இதற்குத் தக்க சான்று ஓரே இரவில் என்ற கதை.

'ஓரிரவில்', நடந்து முடிந்த கொலையைக் காவலதிகாரி தன் மதிநுட்பத்தால் அது தற்கொலை அன்று; கொலையே என்ற முடிவுக்கு வருவதைக் கூறுகிறது. கதை பழையதுதான் என்றாலும் சொல்லப்படும் உத்தியில் அதன் மெருகு கூடுகிறது. மூன்று பக்கங்களில் முடிய வேண்டிய இக்கதையைச் சுஜாதா தனக்கே

உரிய தெளிவான கண்ணோட்டத்தில் பதினெட்டுப் பக்கங்களாக்கித் திரைப்படத்துக்குரிய விறுவிறுப்புடன் கதையை முடிக்கிறார்.

விண்வெளி அதிர்ச்சி: செம்பியனின் கம்ப்யூட்டர் உலகை ஆண்டபோது என்ற குறும்புதினம் அறிவியல் கற்பனைக் கதை ஆகும். Alwin Toffler-ன் பரபரப்பூட்டிய 'Future Shock' என்ற நூலைப் படித்ததன் விளைவோ என்னவோ இவரை இக்கதை எழுதத் தூண்டியுள்ளது.

சக்திவாய்ந்த மனித உயிரணு செவ்வாய்க் கிரக வாசிகளால் திருடப்படுகிறது. இதனைக் கண்டுபிடிக்க அமெரிக்காவில் ஓர் ஆலோசனைக் குழு கூட்டப் பெறுகிறது. அக்குழுவில் தமிழகத்தைச் சேர்ந்த பரணியும் ஒருவன். விண்வெளிக் கலத்தில் செவ்வாய்க் கிரகத்துக்குச் செல்கிறான் பரணி. உயிரணுவை வளர்த்துப் பெரிய ஆளாக்கிப் பூமிக்கு அனுப்பப்படவிருக்கும் செவ்வாய்க் கிரக வாசிகளின் திட்டத்தை அறிந்து, தான் வந்த எண்ணம் தோல்வியுற்றதால் விண்வெளியினின்றும் திரும்புகிறான். செவ்வாய்க் கிரக வாசிகளான டாரஸ்-அஸ்ட்ரா இவர்களின் நோக்கம் நம்மைத் திகைக்க வைக்கிறது. உயிரணுவை வளர்த்து ஆளாக்கிப் பூமிக்கு அனுப்பி விடுவது - அமெரிக்காவையும், ருஷ்யாவையும் மோதவிட்டு உலகப்போர் மூளச் செய்வது என்ற இரண்டுமே அவர்களின் திட்டங்கள்.

'கம்யூனிசம் ஜனநாயகத்தை அழிக்க, ஜனநாயகம் கம்யூனிசத்தை ஒழித்துக்கட்ட சர்வ நாசம் விளையும். மனித நாகரிகமே இல்லாது போய்விடும்,' என்ற எண்ணத்தைச் செவ்வாய்க் கிரகத்தில் வசிக்கும் அஸ்ட்ரா கூறும்போது நாம் வியக்கிறோம்.

குறும் புதினத்திற்குரிய முறையில் காட்சிகள் வளர்ந்து விளக்கம் பெற்றுள்ளன. அறிவியல் கற்பனை இழையோடுகிறது. வருங்காலத்தில் இப்படியும் நடக்கலாம் என்பதைக் கூறி நம்மை வியப்பில் ஆழ்த்தி விடுகிறார் ஆசிரியர்.

## 4

## பொதுமேடை

1981-இல் வெளிவந்த குறும் புதினங்களைக் குடும்பம், காதல், பொதுநிலை என்ற நிரலில் கண்டபோது, கதைக்களங்களை

ஓரளவு அறிய முடிகிறது. குடும்ப உறவை மையமாக்கும் கதைகளில் பெண்களின் உரிமை, கணவன்-மனைவி இவர்கள் அலுவலகத்தில் பணிபுரிவதில் உள்ள உயர்வு-தாழ்வு மனப்பான்மை, ஒருவரை யொருவர் புரிந்து கொள்ளாமை, உழைத்து ஓடாகிப் போன பெண்களின் அவலம் முதலியன களமாகியுள்ளன.

பெண்மையின் மனப்போராட்டங்களையே 8!-இல் வெளிவந்த குறும் புதினங்கள் முதன்மைப் படுத்தியுள்ளன. பெண் இனத்திற்குச் சமூகம் இழைக்கும் கொடுமைகளைக் கூறி இரக்கத்தையும், அன்பையும், சமுதாயத்தில் பெண்களுக்குரிய இடத்தையும் பெண் எழுத்தாளர்கள் நியாயப்படுத்தியுள்ளனர்.

காதலைக் களமாகக் கொண்ட கதைகளில் பெரும்பாலும் திரைப்படப் போக்கே தலையெடுத்துள்ளது. நடப்பியல் வாழ்விலிருந்து அன்னியமாகிவிட்டதை உணரமுடிகிறது. இனக் கவர்ச்சி, பாலுணர்வு இவைகள்தாம் வாழ்க்கை என்பதையே வலியுறுத்துகின்றன. இன்றைய நாகரிகத்தில் கற்பிற்குள்ள மதிப்பு, இளந் தலைமுறையினரின் கீழ்த்தர உணர்வு, காதல், காமம் இவற்றிற்காக நடத்தப்படும் கொலை,கொள்ளை, கடத்தல் முதலியவற்றை எடுத்தாளும் இயல்பு புலப்படுகிறது.

சமுதாய நனவோடு படைக்கப்பட்ட கதைகள் உண்மைத் தன்மையோடு உலவுகின்றன. அன்றாடம் வாழ்வில் நடக்கும் போக்குகளை நடப்பியல் சூழ்நிலையில் காட்டுகின்றன. எனினும் சமுதாய நனவோடு படைக்கப்பட்ட குறும் புதினங்கள் மிகச் சிலவே.

சமுதாயத்தின் அடிமட்டத்தில் உள்ள ஏழைகளைப் பற்றிய கதைகள் இல்லாதது குறையே. ஏழைகளின் வறுமைச்சிக்கல், பொருளாதாரப் போராட்டம், சாதி வேறுபாட்டால் தோன்றும் பூசல் போன்ற வாழ்க்கை நிலைகளைக் குறும் புதினமாக்காதது வியப்பே.

மண்ணில் நடக்கும் நன்மை, தீமைப் போராட்டங்களுக்குத் தீர்வு காணும் கதைகளைக் காண முடியவில்லை. சமுதாயத்தைப் பற்றிய தெளிவையும், கண்ணோட்டத்தையும், படிப்போரிடையே ஆழ்ந்த பாதிப்பையும், சிந்தனையையும் ஏற்படுத்தக் கூடிய குறும் புதினங்களை வருங்காலத்திலாவது எதிர்பார்ப்போமாக!

81-இல் வெளிவந்த குறும் புதினங்களின் போக்கைக் கீழ்க் கண்டவாறு தொகுத்துரைக்கலாம்.

1. தனிமனித ஏக்கங்களுக்குக் குடும்பமும், சுற்றுப்புறமும் காரணமாதல்.
2. சமூகத்தில் அகவயமான சிந்தனைகளுக்கு அதிக இட மளித்தல்.
3. பெண்களுக்கு அலுவலகத்திலும், பொது வாழ்க்கையிலும் நிலவும் பாதுகாப்பின்மையை எடுத்துரைத்தல்.
4. பெண்களின் மனப்போராட்டங்களை வெளிக்காட்டு வதில் பெண் எழுத்தாளர்களிடையே உள்ள அக்கறை.
5. பெண்களை அடிமையாகவும், இச்சைப் பொருளாகவும் கதைகளில் காட்டுதல்.
6. குடும்பத்தில் பெண்கள் தங்களுக்குரிய உரிமையை நிலை நாட்ட முயலுதல்.
7. காதல் காமம்-இவையே வாழ்க்கை என்று வலியுறுத்த முயன்று, கீழ்த்தரமான உணர்வைத் தூண்டும் வகையில் எழுதியுள்ளமை.
8. பண்பாட்டுச் சிதைவினைப் பற்றிக் கவலையுறாது, பொழுதுபோக்கு என்ற பெயரில், பண்பாட்டிற்கு அப் பாற்பட்டு எழுதி, அதனை நியாயப்படுத்தியுள்ளமை.
9. மேல்மட்ட, நடுத்தர வர்க்கத்தினரை மட்டுமே கதை மாந்தராக்கிக் காட்டுவதில் உள்ள நாட்டம்.
10. சமுதாயத்தில் மிகவும் தாழ்ந்த மக்களின் வாழ்க்கைச் சிதைவுகளையும், அவர்களுக்குச் சமூகத்தில் உள்ள இடத் தையும், முறையோடு அணுகி எழுத மனம் இல்லாமை.

## 81-இல் இதழ்களில் வெளிவந்த சில குறும்-புதினங்கள்

### அமுதசுரபி

இயலாமை, சூழ்நிலை, விதி, எது?—அபர்ணா நாயுடு
அவளுக்கு இரண்டு முகங்கள்—பிரதிபா ராஜகோபாலன்
தவறுகள் பாடங்களாகின்றன—கோமகன்
ஆரத்தின் அறுந்த நூலிழைகள்—கௌதம நீலாம்பரன்
அனுப்புக மணல்கயிறு—ராஜேந்திர குமார்
கன்யாகுமரி—ஜெயரதன்

### கலைமகள்

சில பாவங்களின் நியாயங்கள்—
குறிஞ்சியோ? நெருஞ்சியோ?—லட்சுமி ரமணன்
நிறங்கள்—ஜி. நாராயணன்
பிரளயங்கள்—ஜெ. ராஜகுரு
மனத்தை உழுதால்—அரவிந்தன்
ஒருசொல் ஒரு உயிர் -ராம்பிரசாத்

### கல்கி

கம்யூட்டர் உலகை ஆண்டபோது—செம்பியன்
நாயகி—மௌவி
களங்கம்—வேதா

### குங்குமம்

நெஞ்சில் வரைந்த நினைவுகள்—தமிழ்ப்பிரியா
தொலைதூரத் தண்டவாளங்கள்—இந்துமதி
யதார்த்தங்கள்—குமாரதேவி
இந்திராரெட்டியின் இனிய சிநேகிதன்—ரவிச்சந்திரன்
பார்வை—சிவசங்கரி
காதல்கொடி—இளங்கோமகன்
தலையணை சகவாசம்—அனுராதா ரமணன்
நின்று கொல்லும்—சுப்பிரமணிய ராஜு
எரிமலை மனிதர்கள்—இந்துமதி

## சாவி

ஒரே இரவில்—சுஜாதா
அரவணைப்பு—எஸ். குமார்

## தாய்

எதற்காக வெட்கம்—ஹேமா ஆனந்ததீர்த்தன்
ஒரு கேள்வி—மகரிஷி
மகாத்மா காந்திக்கு ஜே—பூவை. எஸ். ஆறுமுகம்
வாடகைக்கு வந்த வம்பு—நீல பத்மநாபன்
பூக்கள் செடிகளுக்குச் சொந்தமில்லை—

## தினமணிகதிர்

விலை—சுஜாதா

## மங்கையர் மலர்

சாகுல் எனக்கு ஒரு டிக்கெட் ப்ளீஸ்
—லட்சுமி ராஜரத்தினம்
ஊற்றுக்கண்—சரோஜா ராமமூர்த்தி
மாறுதல்—அசோகமித்திரன்
கைதிகள்—மஞ்சுளா ரமேஷ்
கமனியக் கனவுகள்—இந்திரா பார்த்தசாரதி
சாதகப் பறவை—அனுராதா ரமணன்
அவள் காத்துக்கொண்டு இருக்கிறாள்
—கோதா பார்த்தசாரதி
சரிநிகர் சமானம்—பிரதிபா ராஜகோபாலன்
மூங்கில் காட்டுக் குழலோசை—உஷா சுப்பிரமணியம்
அவள் ஒரு முற்றுப்புள்ளி விமலா ரமணி
மீண்டும் ஒரு வாழ்வு—மதி குமாரசுவாமி

# 8. இலக்கியத் திறனாய்வு நூல்கள்

டாக்டர் சி. பாலசுப்பிரமணியன்

புற்றீசல் போன்று நூல்கள் வெளிவரும் இந்நாளில் பயனுள்ள நூல்களை அறிந்து படிக்கத் திறனாய்வுக் கலை துணை செய்கிறது. ஆங்கில இலக்கியத்தைப்போல திறனாய்வுக் கலை தமிழில் வளரவில்லை என்பது அறிஞர் சிலரின் கருத்தாகிறது. எண்பத்தொன்றில் வெளியான தமிழிலக்கியத் திறனாய்வு நூல்களில் ஆய்வுப்போக்கில் அமைந்தவை சிலவே.

## முன்னுரை

வாழ்க்கையிலிருந்து முகிழ்ப்பது இலக்கியம். இலக்கியம் மொழியின் வாயிலாக வாழ்க்கையை உணர்த்துவதாகும். அதனால் வாழ்க்கையைப் பிரதிபலிக்கும் காலக்கண்ணாடியாக இலக்கியங்கள் இலங்குகின்றன. வாழ்க்கையைப் பல கோணங்களிலும் அணுகி நுணுகி ஆய்ந்தவர் தமிழர் தமிழர் தம் உணர்வுகளும் எண்ணங்களும் செயல்களும் தமிழ் இலக்கியங்களில் பொதிந்து கிடக்கின்றன; வாழ்க்கையைப் பற்றிய அரும்பெரும் உண்மைகளை உள்ளடக்கிய கருத்துக் கருவூலங்களாகத் தமிழ் இலக்கியங்கள் திகழ்கின்றன.

## இலக்கியத் திறனாய்வு

திறனாய்வுக் கலையால் தமிழ் இலக்கியங்களில் பொதிந்து கிடக்கும் அரும்பெரும் உண்மைகளைப் பலரும் அறியும் வண்ணம் வெளிக்கொணரும் தமிழ் இலக்கியத் திறனாய்வு நூல்கள் பல வெளிவருகின்றன.

இலக்கியத் திறனாய்வின் நோக்கமும் இன்றியமையாமையும் தமிழில் இலக்கியத் திறனாய்வு வளர்ச்சி, 1981இல் தோன்றிய இலக்கியத் திறானய்வு நூல்கள் சிலவற்றின் மதிப்பீடு என்பன பற்றி இக்கட்டுரையில் காண்போம்.

இலக்கியத் திறனாய்வு ஒரு தனிக்கலையாகவே மேலை நாடுகளில் வளர்ந்து வரும் இந்நாளில், இலக்கியத் திறனாய்வின் நோக்கமும் இன்றியமையாமையும் குறித்துச் சிந்தித்தல் நலம் பயப்பதாகும்.

## இலக்கியத் திறனாய்வின் நோக்கம்

கலைஞனின் (படைப்பாளியின்) அனுபவத்தை—உணர்ச்சியை—நோக்கத்தை, சுவைஞனை (நுகர்வோனை) அடையும்படிச் செய்வது ஒரு சிறந்த திறனாய்வாளனின் பணி எனலாம். அப்பணியைச் செவ்வனே செய்ய உதவும் கருவியாகத் திகழ்வதே திறனாய்வுக் கலையாகும்

## இலக்கியத் திறனாய்வின் இன்றியமையாமை

குறைந்த காலம், விரைவான வாழ்க்கையோட்டம் இந்நிலையில் காப்பியங்கள், பெரும் நூல்கள் போன்றவற்றைப் படித்துச் சுவைக்க வாய்ப்பு குறைவு. இக்குறையை இத்திறனாய்வுக் கலை எளிதில் தீர்வு காணும் அருங்கலையாகும். மூலநூலின் சாரத்தைப் பிழிந்து தருவதன் மூலம் நிறைவு செய்வதைக் காணலாம். எடுத்துக்காட்டாக .பத்தாயிரம் பாடல்கள் கொண்ட கம்பராமாயணத்தைப் படித்துமுடிக்க நீண்டகாலம் பிடிக்கும் ஆனால் இதற்கு எழுதப்பட்ட வ. வே. சு ஐயரின் கம்பராமாயண ரசனை என்ற திறனாய்வு நூலின் மூலம் கம்பராமாயணத்தைச் சுவைத்து அனுபவிக்க முடிவதைக் காணலாம்.

புற்றீசல் போன்று நூல்கள் வெளிவரும் இக்காலத்தில் பயனுள்ள நூல்களை அறிந்து படிக்கவும் இத்திறனாய்வுக் கலை துணை செய்வதைக் காணலாம். இதனால் நல்லிலக்கியங்களை மட்டுமே தேர்ந்து படிக்கும் வாய்ப்பைப் பெறலாம். மேற்குறிப்பிட்டவற்றான் இலக்கியத் திறனாய்வுக்கலையின் இன்றியமையாமையை நன்கு உணரலாம்.

## தமிழில் இலக்கியத் திறனாய்வுக்கலை வளர்ச்சி

ஆங்கில இலக்கியத்தைப்போல் திறனாய்வு நூல்கள் தமிழில் வளரவில்லை என்பது அறிஞர்கள் சிலரின் கருத்தாகும். இஃது

உண்மையாயினும் திறனாய்வு முறை ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்தே வளர்ந்துவரும் ஓர் அருங்கலையாகும் தொல்காப்பியனார் காலத்திலிருந்து இன்றுவரை வளர்ந்து வருகின்றது என்பதை மறுக்கவோ மறைக்கவோ முடியாது. காலந்தோறும் தமிழில் திறனாய்வு வளர்ந்து வந்துள்ளது என்பதை ஈண்டுக் காண்போம்.

தொல்காப்பியம் ஆன்றோர் குழுமிய அவையில் நான்மறைகளையும் கற்றுத்தேர்ந்த அதங்கோட்டாசான் முன்னிலையில் குற்றமற்றது எனத் திறனாய்ந்து போற்றப்பட்டமையை,

அறங்கரை நாவின் நான்மறை முற்றிய
அதங்கோட் டாசாற் கரில்தபத் தெரிந்து

எனும் தொல்காப்பியப் பாயிர அடிகளான் அறியலாம்.

சங்க இலக்கியங்களும் அவ்வாறே திறனாய்வு செய்யப்பட்ட பின்னரே அறிஞர்களால் ஏற்றுக் கொள்ளப்பட்டது. இறைவனே குற்றம் செய்தாலும் அதைச் சுட்டிக்காட்டித் திருத்தும் முறை இருந்தது. இதனை,

நெற்றிக் கண்ணைக் காட்டினும்
குற்றம் குற்றமே

என்பதனால் அறியலாம்.

இறையனார் களவியலுக்கு இன்றிருக்கும் நக்கீரர் உரையும் திறனறிந்து தேர்ந்த பின்னரே சிறந்த உரையாக ஏற்றுக்கொள்ளப்பட்டமையை களவியலின் முதல் நூற்பா உரையே சுட்டிக் காட்டுகின்றது.

இடைக்காலத்தில் இலக்கிய இலக்கண நூல்களுக்கு எழுந்த உரைகளில் சிறந்த திறனாய்வுப்போக்கு இருப்பதை அவற்றைப் படிப்போர் நன்கு அறிவர். மூலநூலை நன்கு அணுகி நுணுகிப் படித்தே உரையாசிரியர்கள் உரை கண்டனர்.

சமய காலத்தில் சமய இலக்கியங்களில் நிகழ்ந்த அனல்வாதம் புனல்வாதம் என்பன திறனாய்வுப்பாங்கைச் சுட்டிக் காட்டுகின்றன.

சேக்கிழார் தாம் எழுதிய திருத்தொண்டர் புராணத்தைத் தில்லையம்பதியிலே அரங்கேற்றம் செய்தார். சேக்கிழாரின் புலமைத்திறனைப் [பாராட்டும் வகையில் அரசன் அனபாயன் தானே புலவருக்குக் கவரி வீசி வந்தான்.

கம்பர் தாம் எழுதிய இராமாயணத்தைத் திருவரங்கத் திருக் கோயிலில் கற்றோர் முன்னர் அரங்கேற்றினார் என்பர். நூலைத் தேர்ந்து தெளியும் திறனாய்வுப் போக்கு இம்முறையில் அக்காலத் தில் நிலவியது.

குமுதன் இட்ட குலவரை கூத்தரில்
திமிதம் இட்டுத் திரியும் திரைகடல்
துமிதம் ஊர்புக வானவர் துள்ளினார்
அமுதம் இன்னும்எழும் எனும் ஆசையால்

என்னும் கம்பராமாயணப் பாடலைப் படிக்கும்போது விவாதம் ஏற்பட்டதாக ஒரு கதை உண்டு. அப்பாடலில் வரும் துமி என்ற சொல் பற்றியவிவாதத்தைத் தொடங்கினார் ஒட்டக்கூத்தர். துமி என்ற சொல் வழக்கு உலக வழக்கில் உள்ளதா? என ஒட்டக் கூத்தர் கேட்டார். அச்சொல் இலக்கியவழக்கில் இல்லாதது. ஆயர்குடியில் தயிர்கடையும் வீட்டில் துமி என்ற சொல்வழக்கு உள்ளதாகக் கம்பர் கூறினார். இதனால் இடைக்காலத்தில் இலக் கியங்களைத் திறனாய்வு செய்யும்போது இலக்கிய வழக்கு, உலக வழக்கு என்ற இரு நிலைகளிலும் பார்த்துத் திறனாய்வு செய்யும் முறை இருந்தமையை அறியலாம்.

இடைக்காலத்தில் சமயம் சாதி அடிப்படையிலும் இலக்கியங் கள் திறனாய்வு செய்யப்பட்டன.

அரங்கனைப் பாடிய வாயால்
குரங்கனைப் பாடேன்

என ஒரு புலவர் கூறுகின்றார்.

வைணவத்தில் இரு பிரிவாகத் தோன்றிய வடகலை, தென் கலை பற்றி எழுந்த இலக்கிய விவாதங்கள் பற்றியும் குறிப்பிட லாம்.

இராமலிங்க அடிகள் தாம் இயற்றிய நூலுக்கு அருட்பா எனப் பெயரிட்டார். அவர் அந்நூலுக்கு திரு என்ற அடை கொடுக்கக்கூடாது என்றனர் மற்ற சமயத்தினர். ஆறுமுக நாவலர் இதற்கெதிராக 'மருட்பா' என்னும் நூலை வெளியிட்டார்.

தற்காலத்தில் தமிழ் இலக்கியத் திறனாய்வு பெருகி வளர்ந்து வருகின்றது. வ.வே.சு. ஐயர் ஆங்கிலத்தில் எழுதிய கம்பராமாயண ரசனை (Kambaramayana A Study) என்பது கம்பராமாயணத் தைப் பற்றிய திறனாய்வு நூலாக ஒளிர்கின்றது. மறைமலையடி

களாரின் முல்லைப்பாட்டு ஆராய்ச்சி பட்டினப்பாலை ஆராய்ச்சி ஆகியவை குறிப்பிடத்தக்கன. தமிழிலக்கியத் திறனாய்வுக் கலைக்கு டாக்டர் மு வரதராசனார், டாக்டர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் போன்றோர் வளம்சேர்த்த தமிழ் அறிஞர் களாவர்.

அண்மைக்காலத்தில் தமிழ் இலக்கியத் திறனாய்வுக் கலை வர்ணனை நோக்கு, வரலாற்று நோக்கு, சமுதாய நோக்கு, மொழி யியல் நோக்கு, அறிவியல் நோக்கு என்னும் பல்வேறு கோணங் களில் ஆராயப்பட்டு வருகின்றது. இத்துறைப் பூங்காவில் நித்தம் நித்தம் புத்தம்புது மலர்கள் மலர்கின்றன.

ரசிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் எழுதிய இதய ஒலி சிறந்த திறனாய்வு நூலாகும். பேராசிரியர் அ. ச ஞான சம்பந்தன் அவர்கள் எழுதிய இராவணன் மாட்சியும் வீழ்ச்சியும், இலக்கியக்கலை என்னும் இரு நூல்களும் குறிப்பிடத்தக்கன. அடுத்து, மார்க்கபந்து சர்மா அவர்களின் சிலப்பதிகார ரசனை என்னும் நூல் மேனாட்டு இலக்கிய ஆராய்ச்சிப் போக்கில் அமைந் துள்ளது.

பேராசிரியர் முத்துசிவன் அவர்களின் அசோகவனம், அசலும் நகலும் முதலிய நூல்கள் சிறந்த திறனாய்வு நூல்களாகும்.

பேராசிரியர் அ ச. ஞானசம்பந்தன், டாக்டர் க. கைலாசபதி, டாக்டர் வ. சுப. மாணிக்கம், டாக்டர் தமிழண்ணல், டாக்டர் ஆ. வேலுப்பிள்ளை, டாக்டர் ச. வே. சுப்பிரமணியன், டாக்டர் இரா. தண்டாயுதம், டாக்டர் எழில்முதல்வன் முதலான தமிழறி ஞர்கள் தமிழ் இலக்கியத் திறனாய்வுக் கலைக்குச் சிறந்த தொண்டாற்றி வருகின்றனர். டாக்டர் க. கைலாசபதி அவர் களின் ஒப்பியல் இலக்கியம் சிறந்த தமிழ் இலக்கியத் திறனாய்வு நூலாக ஒளிர்கின்றது. தமிழ் இலக்கியங்களை இன்னும் பல்வேறு துறையைச் சார்ந்த அறிஞர்களும் ஆய்ந்து தமிழ் இலக்கியத் திறனாய்வுக் கலைக்குத் தற்காலத்தில் வளம் சேர்த்து வருகின்ற னர் என்பது குறிப்பிடத்தக்கது. மேனாட்டு திறனாய்வுக் கொள் கைகளின் அடிப்படையில் தமிழ் இலக்கியங்களை ஆராயும் போக்கும் இக்காலத்தில் வளர்ந்து வருவதும் ஈண்டுக் குறிப்பிடத் தக்கதாகும்.

# 1981-இல் தமிழ்இலக்கியத் திறனாய்வு நூல்கள்

1981 -ஆம் ஆண்டு வெளிவந்த இலக்கியத்திறனாய்வு நூல்கள் சிலவற்றைப் பற்றிய மதிப்பீடு:

1. அந்தோணி குருசு, அ., கன்னிச்சங்கு திருக்கோவலூர் கலம்பகத் திறனாய்வு

வீரமாமுனிவர் வாழ்வும் பணியும் முதலாகக் கலம்பகத்தில் பாட வேறுபாடு முடிய பத்துவகைப் பகுப்புகளுடன் நூலினை ஆய்வு நோக்கில் உருவாக்கியுள்ளார் ஆசிரியர்,

2. இளஞ்சேரன், கோவை , பாரதியின் இலக்கியப் பார்வை,

பாரதியின் கவிதைகளை ஆய்ந்து அவர்தம் தமிழ் இலக்கியப் புலமையை இந்நூலாசிரியர் வெளிக்கொணர்ந்துள்ளார். பாரதியின் கவிதையடிகளைக் கொண்டு தமிழ் இலக்கியங்களில் அவருக்குள்ள ஈடுபாட்டைக் காட்டுகின்றார் ஆசிரியர்.

3. இஸ்மாயீல், மு.மு., இலக்கிய மலர்கள்

பாரதியார் பாடலில் காதல் கனிவுகளைப் பற்றியும், குணங்குடியாரின் பேரின்பக்காதல் பற்றியும், இராமலிங்க அடிகளாரின் வான்பெருங்காதல் பற்றியும் இலக்கிய மலர்கள் இரண்டாவது தொகுதியில் தெளிவாக விளக்கியுள்ளார் ஆசிரியர். இம்மூவரின் பேரின்பப் பாடல்கள் சிலவற்றைத்தான் இந்நூல் விளக்கிச் செல்கின்றது. இம்மூவருடைய பாடல்களிலும் இறைவனைப் பற்றிய பாடல்கள் பல கோணங்களில் அமைந்துள்ளன. இந்நூலாசிரியர் இம்மூவரின் பாடல்களில் நாயகன், நாயகி பாவத்தில் இறைவனைப் பற்றிய பாடல்களை விளக்கியுள்ளார்.

ஆழ்ந்த சிந்தனையும் உயரிய கருத்துக்களையும் உள்ளடக்கிய ஒப்பற்ற நூலாக இந்நூல் துலங்குகின்றது.

4. உலகநாதன், மு., குறளுக்கு ஏன் இந்தப்பெருமை?

இந்நூலில் இடம்பெறும் இருபது கட்டுரைகளை ஏற்கனவே செந்தமிழ், தமிழ்நாடு, காஞ்சி, தென்னகம் போன்ற பற்பல நாள், வார, திங்கள் இதழ்களில் வெளிவந்தவை. ஆய்வுக் கருத்துக்கள் பலவற்றை வழங்கும் கட்டுரைகளின் தொகுப்பு நூலாகும் இது.

5. கணேசன், கதி., குழந்தை இலக்கியத்தில் வள்ளியப்பா ஒரு வழிகாட்டி

தேசிய விநாயகம் பிள்ளை அவர்கள் வழிநின்று உயர்ந்தவர் குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்கள். குழந்தை இலக்கியத்தில் பிறர்க்கும் வழிகாட்டியாகத் திகழ்வதைத் தன் ஆய்வுத் திறத்தால் காட்டுகின்றார் இந்நூலாசிரியர்.

இந்நூல் களஆய்வில் (Field Reserach) சிறந்து விளங்குகின்றது. இந்நூலில் இறுதியாக இடம்பெறும் அழ. வள்ளியப்பாவுடனும், பள்ளி ஆசிரியர்களுடனும், பெற்றோர்களுடனும் குழந்தைப் பாடல்கள் பற்றிய இந்நூலாசிரியர் பேட்டியின் போது பெற்ற கருத்துகள் சிறந்த பயனளிப்பனவாகும்.

முதலில் இந்நூலாசிரியர் குழந்தைப் பாடல்கள் இன்னவை என்பதை வரையறுக்கின்றார். குழந்தையைச் சித்தரிக்கும் பாடல்கள் வேறு, குழந்தையை வளர்ப்பதற்குதவும் பாடல்கள் வேறு, குழந்தைகளே பாடி ஆடும் பாடல்கள் வேறு என வேறுபடுத்திக் காட்டுகின்றார். இறுதியிற் கூறிய குழந்தைகளே பாடி ஆடும் பாடல்கள் என்பனவே குழந்தைப் பாடல்கள் ஆகும் என வரையறுக்கின்றார்.

பின்னர்ப் பாடல்களைப் பகுத்தும், வகுத்தும், ஒப்பிட்டும் உறழ்ந்தும் கருத்தை விளக்கியும் எடுத்துக்காட்டுகள் தந்தும் விளக்கிச்செல்லும் பான்மை போற்றத்தக்கது.

தமிழில் குழந்தைப் பாடல்கள், தோற்றமும் வளர்ச்சியும் குழந்தைப் பாடல்கள் வரலாற்றில் வள்ளியப்பாவின் இடம், வாழ்வும் பணியும், பாடற்பொருளும் பாகுபாடும், கதைப்பாடல்கள், இலக்கிய நயங்கள், இலக்கணமும் உத்திகளும், தேவையும் பயனும், வள்ளியப்பா ஒரு வழிகாட்டி என்னும் பத்து இயல்களைக் கொண்ட ஆய்வுநூலாகும்.

மதுரைப் பல்கலைக் கழகத்திற்கு எம். பில். பட்டப் பேற்றிற்காக அளித்த ஆய்வேட்டை நூலாக வெளிக்கொணர்ந்துள்ளார் ஆசிரியர்.

6. கிருட்டிணசாமி, வெ., குழந்தைக் கவிஞரின் இலக்கியத் திறன்.

குழந்தைக்கவிஞர் அழ. வள்ளியப்பா அவர்களைப் பற்றி ஒரு சிறந்த பண்பாளராகவும், குழந்தைக் கவிஞராகவும் விளங்கிச்

கொள்ள இந்நூல் பெரிதும் துணைநிற்கும். குழந்தைகளுக்கான பாட்டுக்களை எளிய முறையில் படைக்கும் அவர்தம் படைப் பாற்றலை இந்நூலாசிரியர் காட்டுகின்றார். "பாரதியாரால் அடித்தளம் இடப்பட்டு, கவிமணியால் கட்டப்பட்ட குழந்தை இலக்கியம் என்னும் கட்டிடம் அழ. வள்ளியப்பாவால் காக்கப் பட்டு வருகின்றது'' என முடிவாகக் குழந்தைக்கவிஞரின் இலக்கியம் படைக்கும் திறனைக் கூறுகின்றார் இந்நூலாசிரியர்

7. கேசவன், கோ., பள்ளு இலக்கியம் - ஒரு சமூகவியல் பார்வை

பள்ளு இலக்கியம் பற்றி சமூகவியல் கண்ணோட்டத்தில் எழுதப்பட்ட சிறந்த ஆய்வுநூலாகும். சிற்றிலக்கியப் பிரபந்தங் களுக்கான காலச்சூழலைத் தெளிவாக விளக்கியுள்ளார் இந் நூலாசிரியர். பள்ளு இலக்கியத் தோற்றத்திற்கான பின்னணி சமுதாயநிலை, பஞ்சம், படையெடுப்பு இவற்றையெல்லாம் முறைப்படி விளக்கியுள்ளார்.

சமுதாயத்தின் தாழ்நிலை மக்களாகிய பள்ளரை, பள்ளு இலக்கியங்கள் கதைமாந்தர்களாகக் கொண்டமைக்கான காரணங் களை ஆசிரியர் ஆய்ந்து விளக்கியுள்ளார் (பக். 41—42). பள்ளு போன்ற சிற்றிலக்கியங்கள் எளிமையாக இருப்பதற்கான காரணத் தைக் குறிக்கின்றார் (ப 43). பள்ளரின் தோற்றம் பற்றிக் கூறும் கருத்து ஒரு கருதுகோள் அளவிலேயே இடம்பெறுகின்றது.

சமூகவியல் அடிப்படையில் இலக்கியத்தை அணுகி ஆயும் போதுதான் அவ்விலக்கியத்தின் நோக்கங்களை உறுதியாக, கணிக்க முடியும் என்பதை இந்நூல் தெளிவுபடுத்துகின்றது.

8. கோவிந்தராசன், மு., புறநானூற்றுப் பேழை

புலவர் போற்றும் புலவர்கள், நாளும் கோளும், பறவைகளின் வாழ்க்கை, வஞ்சினமும் வஞ்சப்புகழ்ச்சியும், பொருள்களின் இயற்கை என்னும் ஐந்து புறநானூற்றுக் கட்டுரைகளைக் கொண்டது இந்நூல்.

நாளும் கோளும் என்னும் கட்டுரையில் புள் சகுனம், கனவுக் காட்சிகள், தீ நிமித்தங்கள், உற்பாதங்கள். உன்னம் பார்த்தல், விரிச்சி ஓர்தல் என்பன விளக்கப்படுகின்றன. பொருள்களின் இயற்கை என்னும் கட்டுரையில் பண்டைத்தமிழ் மக்களின் புவியியல், உளவியல், வான நூற்புலமையினை ஆசிரியர் புலப் படுத்துகின்றார். புறநானூற்றுக் கருத்துகளை ஆசிரியர் ஆய்வுக் கண்ணோட்டத்தில் விளக்கிச் செல்லும் திறம் பாராட்டத்தக்கது.

9. சாமி, பி. எல்., இலக்கியத்தில் அறிவியல்

செந்தமிழ்ச் செல்வி, தினமணி சுடர், ஆராய்ச்சி முதலிய இதழ்களில் வெளிவந்த கட்டுரைகளின் தொகுப்பு நூல் இது. தமிழ் இலக்கியத்தில் உள்ள அறிவியல் பற்றியே பெரும்பாலான கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. மேலும் கல்வெட்டு, மொழி யியல், வானவியல், இலக்கியம் பற்றியும் கட்டுரைகள் அமைந்துள் ளன. தாவிரவியல், உயிரியல், பொதுவியல் என்னும் முப்பிரிவு களில் கட்டுரைகள் அமைக்கப் பெற்றுள்ளன.

10. சாமி, பி. எல்., சங்க நூல்களில் விந்தைப் பூச்சி

சங்க இலக்கியத்தில் பல பாடல்களில் இடம்பெறும் மூதாய் என்னும் பூச்சியைப் பற்றிய செய்திகளை இந்நூலாசிரியர் எடுத்துரைக்கின்றார். மலரும் மணியும், மணிமிடை பவளம், கடம்ப மலர், கம்பர் தரும் காட்சி என்னும் இயல்களில் இலக் கியத்தை அறிவியல் நோக்கில் ஆயும் ஆசிரியரின் திறம் புலப்படு கின்றது.

11. சிவஞானம், கு., குயில்பாட்டு ஆராய்ச்சி,

பாரதியார் பின்பற்றிய சமயக் கருத்தையும், வாழ்க்கையைப் பற்றி அவர் கொண்டிருந்த எண்ணத்தையும் தெரிந்து கொண்டு, குயில்பாட்டு வேதாந்தக் கருத்துகளை விளக்கிப் பல உண்மைக் கருத்துகளைத் தெளிவுபடுத்துகின்றார் இந்நூலசிரியார். பாரதி யாரைக் கொண்டே பாரதியாரை விளக்க வேண்டும் என்பதே என் குறிக்கோள் என இந்நூலாசிரியர் குறிப்பிடுகின்றார். பாரதியின் உளப்பாங்கினை ஆய்ந்து குயில்பாட்டு மூலமாக வாழ் வியல் உண்மைகளைத் தெளிவு படுத்துவது இந்நூலாகும்.

12. செம்பியன், பட்டுக்கோட்டையின் பாட்டுத்திறம் (ஒப்பாய்வு)

பாரதியின் பரம்பரையில் வந்த பட்டுக்கோட்டையின் பாட்டுத்திறம் குறித்த ஒரு திறனாய்வு நூலாகும். இந்நூல் பாரதியின் தாக்கமும் பட்டுக்கோட்டையின் ஆக்கமும், பாவேந் தரின் புரட்சியும் பட்டுக்கோட்டையின் மறுமலர்ச்சியும் என்னும் பகுதிகளாக அமைந்துள்ளது

பட்டுக்கோட்டையின் சமுதாய உணர்வை பல இடங்களில் சுட்டிக்காட்டுகின்றார் ஆசிரியர். பட்டுக்கோட்டையைப் பற்றிய ஆய்வு நூல்களில் இந்நூலுக்குச் சிறப்பான இடமுண்டு.

13. செயராமன், ந. வீ., பாட்டியலும் இலக்கியவகைகளும்

சிற்றிலக்கிய நூல்களை முறையாக, முழுமையாக ஆய்வது இந்நூலாகும். பாட்டியல் இலக்கணம் கொண்டு சிற்றிலக்கியப் போக்கினை இந்நூலாசிரியர் ஆய்ந்துள்ளார். சிற்றிலக்கியங்களில் வாழும் தகுதியுடையனவாய்த் திகழும் சிற்றிலக்கிய வகைகளைப் பல்வேறு பொருண்மைக் கூறுகளைத் திறம்பட இந்நூலாசிரியர் ஆய்ந்துரைக்கின்றார்.

பாட்டியல் நூல்களில் தொண்ணாற்றாறு என்னும் பட்டியலில் அடக்கிக் கூறப் பெறும் சிற்றிலக்கிய வகைகள் அனைத்தையும் அணுகி நுணுகி இந்நூலில் விரிந்த அளவில் ஆராய்ந்துள்ளார் இந்நூலாசிரியர். சிற்றிலக்கிய வகைகளைப் பற்றிய முழுமையான நோக்குடன் திகழும் இந்நூல் இவ்வகையில் விரிவான பாங்கில் அமைந்த முதல் நூல் என்பது குறிப்பிடத்தக்கது.

14. தேவிதாசன், தி., ஞானரதம் ஒரு கண்ணோட்டம்,

பாரதியாரின் சிறுகதை எழுதும் ஆற்றலை வெளிப்படுத்தும் இந்நூலில் சந்திரிகை, ஞானரதம், சின்னச்சங்கரன் என்னும் அவரது மூன்று கதைகளை ஆய்ந்துள்ளார் ஆசிரியர்.

பாரதியின் ஞானரதத்தை செகப்பிரியரின் 'மாக்பெத்' நாடகத்தோடு ஒப்பிட்டுக் கூறும் விளக்கங்கள் போற்றற்குரியன. சந்திரிகை என்னும் கதையில் வரும் சந்திரிகை என்னும் பாத்திரப் படைப்பின் உயர்வையும், இன்றியமையாமையையும் மிகத் தெளிவாகக் குறிப்பிடுகின்றார் ஆசிரியர். சின்னச்சங்கரன் கதையின் மூலம் பாரதியின் தமிழ்ப்பற்று, புலமை நலம் புலப்படுத்தப்படு படுகின்றன.

15. பாண்டியன், தா., பாரதியும் சாதிகளும்

சாதிகள் பற்றி பாரதியார் கொண்டிருந்த கருத்துகளைத் தொகுத்தளிப்பது இந்நூல். ''பாரதியார் சாதி பற்றிய கருத்துகளைத் தமிழ் மக்களின் ஆய்வுக்காகத் தொகுத்துக் கொடுத்துவிட நினைத்ததன் விளைவே இந்நூல்'' என ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

இந்து மதமும் சாதிகளும், சாதிகளின் தோற்றமும் வினோதமமும், மத மாற்றங்கள் பற்றிய ஆசிரியரின் கருத்துகள் குறிப்பிடத்தக்கவை.

சாதி ஒழிப்புக்கும், மூட நம்பிக்கை எதிர்ப்புக்கும், நாட்டின் ஒருமைப்பாட்டுக்கும், மனிதகுல மேம்பாட்டுக்குமாகச் சிந்தித்த ஒரு மாபெரும் சிந்தனையாளன் பாரதியார் என முடிவாகக் கூறுகின்றார் இந்நூலாசிரியர்.

16. மணி, பெ. சு., பாரதியாரும் தமிழ்ப் புலவர்களும்,

பாரதியார் தம்கவிதைகளில் போற்றிய தமிழ்ப் புலவர்களைப் பற்றி ஆராயும் நூல் இது. பாரதிக்கு முன் தமிழ்ப் புலவர்களின் நிலைமை, பாரதியார் அளித்த திருப்பம், பாரதி போற்றிய தமிழ்ப்புலவர் மரபு, மனோன்மணீயம் சுந்தரம் பிள்ளையும் பாரதியாரும், உ.வே. சாவும் பாரதியாரும், தமிழ்ப் புலவர்களிடம் பாரதியார் எதிர்பார்த்தது, செந்தமிழ் நாடெனும் போதினிலே, சுதேச கீதங்கள் மீது விதிக்கப்பட்ட தடையுத்தரவு என்னும் தலைப்புகளைக் கொண்ட இந்நூல் பாரதியாரின் ஆழ்ந்த தமிழ்ப் புலமையை வெளிப்படுத்துவதாகும்.

17. வல்லிக்கண்ணன், பாரதிக்குப் பின் தமிழ் உரைநடை,

வளரும் வசன நடையின் பல்வேறு சிறப்புக்களைத் தக்க சான்றுகள் கொண்டு ஆராய்ந்துள்ளார் இந்நூலாசிரியர்.

வளரும் வசனநடை, பாரதிக்கு முன், சி. சுப்பிரமணிய பாரதி வ. வெ. சு. ஐயர், வ. ர., டி. கே சிதம்பரநாத முதலியார், உ. வே. சா., வசனநடை வல்லுநர்கள், கல்கி, போகிற போக்கில் புதுமைப்பித்தன், கு. ப. ரா., மௌனி, பிச்சமூர்த்தி, சி. என். அண்ணாதுரை, லா. ச. ர., எழுத்தில் கொச்சை, லா.ச.ராவும் மௌனியும், கொச்சைநடைபற்றி, சி.சு. செல்லப்பா, பலவித நடைகள், ஜெயகாந்தன், நீல. பத்மநாபன், ஆ. மாதவன், சுஜாதா, ஈழத்தின் எழுத்தாளர்கள், இளைய தலைமுறை, என்னும் கட்டுரைகளைக் கொண்டது இந்நூல்.

பாரதியின் உரைநடை பற்றி ஆய்ந்து, "பாரதியின் கட்டுரைகள் எல்லாமே இலக்கியத் தரமான கட்டுரைகள் அல்ல. ஒவ்வொன்றும் முழு வடிவம் பெற்ற கட்டுரையாகவும் அமையவில்லை. கட்டுரைகள் என்று குறிப்பிடப் பெற்றுள்ளவற்றில் பலவும் சிந்தனைச் சிதறல்களாகவும், எண்ணக்கோவைகளாகவும், அபிப்பிராய உதறல்களாகவும், கருத்து உதிரிகளாகவும்தான் காணப்படுகின்றன" என்னும் கருத்தினைக் கூறுகின்றார்.

வசனநடையின் வளர்ச்சி பற்றியும் ஆராய்ந்துள்ளார். இந்த நூற்றாண்டின் முப்பதுகளுக்குள் தமிழ் வசன நடை வளமும் வனப்பும், எளிமையும், இனிமையும் பெற்று நன்கு வளரத் தொடங்கி விட்டது என்றே கூற வேண்டும் (ப. 71) என வசன நடையின் வளர்ச்சி பற்றிக் கூறுகின்றார்.

ஒவ்வொரு எழுத்தாளரின் நடையின் தனித்தன்மையினை மிக நுட்பமாக வியக்குகிறார். புதுமைப்பித்தன் தமிழ் நடையில் பலவிதமான தன்மைகளையும் கையாண்டிருக்கும் திறத்தைச் சான்றுகள் காட்டி நிறுவுகின்றார். ல, ச. ரா. நடையில் கொச்சை மொழி பற்றித் தெளிவாக விளக்கிச் செல்கின்றார். கொச்சை நடை பற்றி விளக்கும் இந்நூலாசிரியர் ''இலக்கியப் பண்பை கொச்சை மிகையே படுத்துகின்றது. அர்த்த புஷ்டியுடன் ஓசையின் பழும் வேகமும் கொச்சைக்குப் பங்கு உண்டு'' என்கிறார். பல வகையான பேச்சு வழக்குகளும் இலக்கியத்தில் இடம் பெறுவதற்கு கொச்சை நடை வழிவகுத்த பான்மையையும் இந்நூலாசிரியர் காட்டுகின்றார்.

18. ... ... ... ... முத்துக்கோவை

தமிழ் ஆய்வுக்கு அருங்கருத்துகளை நல்கும் பல்வேறு தமிழறிஞர்களின் ஐம்பது கட்டுரைகள் அடங்கிய தொகுப்பு நூலாகும்.

இலக்கியம், இலக்கணம், மரபு, மொழிக்கலை, வரலாறு, முழுநூல் திறனாய்வு, நூலாசிரியர் திறனாய்வு, சமயம், பொது வியல் என்னும் ஒன்பது பகுதிகளாக அறிஞர்களின் கட்டுரைகள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன.

முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் அவர்களின் முத்துவிழா நினைவாக இந்நூல் வெளியிடப் பெற்றது.

19. தமிழண்ணல், குழந்தைநாதன், சு., உலகத்தமிழ்.

தமிழிலக்கியங்களைப் பற்றி எழுதப்பட்ட பல்வேறு தமிழறிஞர்களின் கட்டுரைகள் அடங்கிய நூலாகும். தொல்காப்பியமும் சங்க இலக்கியமும், நீதி நூல்கள், காப்பியங்கள், தெய்வ இசைப் பனுவல்கள், சிற்றிலக்கியங்கள், கவிதையும் உரைநடையும், நாடகமும், புனைகதையும், துறைதோறும் வளரும் தமிழ் பற்றிய கட்டுரைகள் தமிழ் ஆராய்ச்சிக்குச் சிறப்பு நல்குவனவாகும்.

## நிறைவுரை

எண்பத்தொன்றில் வெளிவந்த தமிழ்இலக்கியத் திறனாய்வு நூல்களில் ஆய்வுப் போக்கில் அமைந்த நூல்கள் சிலவே. பள்ளு இலக்கியம் ஒரு சமூகவியல் பார்வை என்னும் நூல் சமுதாயக் கண்ணோட்டத்தில் இலக்கியத்தை ஆராய்ந்து உண்மைகளை உணர்த்தும் சிறந்த நூல் எனலாம். ந. வீ. செயராமன் அவர்களின் பாட்டியலும் இலக்கிய வகைகளும் என்னும் நூல் சிற்றிலக்கிய வகைகளின் பல்வேறு பொருண்மைக் கூறுகளை முறையாக அணுகி நுணுகி விரிந்த அளவில் ஆராயும் சிறந்த இலக்கிய திறனாய்வு நூலாகும். தமிழ் உரைநடை நூல்கள் பற்றி வெளி வந்த திறனாய்வு நூல்களின் வரிசையில் 1981 இல் வெளிவந்த வல்லிக்கண்ணன் அவர்களின் 'பாரதிக்குப் பின் தமிழ் உரைநடை' என்னும் நூல் சுவைக்கத்தக்க சிறந்த நூலாகும். வளரும் வசன நடை பற்றி ஆராயும் நூலாகும் இது.

### 1981-இல் வெளிவந்த இலக்கியத் திறனாய்வு நூல்கள்


1. அந்தோணி குருசு, அ., கன்னிச் சங்கு, திருக்கோவிலூர்க் கலம்பகத் திறானாய்வு.
2. இராமசாமி, ச., பாரதி வாழ்வும் வாக்கும், சென்னை சரசு பதிப்பகம், 1981.
3. இராஜு செட்டியார், பாரதியும் கபிலரும், சென்னை கம்பன் பதிப்பகம், 1981.
4. இளஞ்சேரன், கோவை., பாரதியின் இலக்கியப் பார்வை, நாகப்பட்டினம்: கலைக்குடில் வெளியீடு, 1981.
5. இஸ்மாயீல், மு. மு., இலக்கிய மலர்கள்—இரண்டாம் தொகுதி, சென்னை: வானதி பதிப்பகம், 1981.
6. உலகநாதன், மு., குறளுக்கு ஏன் இந்தப் பெருமை. மதுரை: முத்துச் சிதம்பரனார் பதிப்பகம், 1981.
7. கந்தசாமி, இல.செ , புதுக்கவிதை ஒரு பார்வை, கோவை கலைச்செல்வம் பதிப்பகம், 1981.
8. கருணையப்பன், எஸ் , சங்க இலக்கியத்துக் காதல் கதை, சென்னை : வானதி பதிப்பகம், 1981.
9. கணேசன், கதி., குழந்தை இலக்கியத்தில் வள்ளியப்பா ஒரு வழி காட்டி, காரைக்குடி: அருள்சிவம் நூலகம், 1981

10. கிருட்டினசாமி, வெ., குழந்தைக் கவிஞரின் இலக்கியத் திறன், சிதம்பரம்: மணிவாசகர் நூலகம், 1981.

11. கேசவன், கோ., பள்ளு இலக்கியம் ஒரு சமூகவியல் பார்வை, சிவகங்கை: அன்னை பிரைவேட் லிமிடெட், 1981

12. கோபாலன், நா., நூற்றாண்டு காணும் பாரதி, கோயம் புத்தூர், 1981.

13. கோவிந்தராசன், மு., புறநானூற்றுப் பேழை, சென்னை: தென்மொழிப் பதிப்பகம், 1981.

14. சாமி, பி. எல்., இலக்கியத்தில் அறிவியல், சென்னை: சேகர் பதிப்பகம், 1981.

15. சாமி. பி. எல்., சங்க நூல்களில் விந்தைப்பூச்சி, சென்னை சேகர் பதிப்பகம், 1981.

16. சிவஞானம், கு., குயில் பாட்டு ஆராய்ச்சி, மதுரை, சோமு புத்தக நிலையம், 1981.

17. செந்துறைமுத்து, காப்பியங்களில் வஞ்சனை மாந்தர்கள், சேலம்: அருண்மொழிப் பதிப்பகம், 1981.

18. செந்துறைமுத்து, பாரதி சிந்தனைகள், சென்னை: செல்வ நிலையம், 1981,

19. செம்பியன், பட்டுக்கோட்டையின் பாட்டுத்திறம், ஒப்பாய்வு, மாயூரம்: திங்கள் பதிப்பகம், 1981.

20. ஜெயராமன், ந. வீ., பாட்டியலும் இலக்கிய வகைகளும், சென்னை: இலக்கியப்பதிப்பகம், 1981.

21. தேவிதாசன், தி., ஞானரதம் ஒரு கண்ணோட்டம், சென்னை: சேகர் பதிப்பகம், 1981,

22. நாராயண வேலுப்பிள்ளை, எம்., அகப்பொருளும் புறப் பொருளும், சென்னை: வசந்தா பிரசுரம், 1981.

23. பாண்டியன், தா., பாரதியும் சாதிகளும், சென்னை, அருண்குமார் பதிப்பகம், 1981.

24. பாலசுந்தரன், ஆதி., சங்க இலக்கியங்களில் சமயக் கருத்துக்கள், சென்னை: சக்தி பதிப்பகம், 1981.

25. மணி, பெ. சு., பாரதியாரும் தமிழ்ப் புலவர்களும் சென்னை: பூங்கொடி பதிப்பகம், 1981.

26. வல்லிக்கண்ணன், பாரதிக்குப் பின் தமிழ் உரைநடை, சிதம்பரம்; மணிவாசகர் நூலகம், 1981.

# 9. Comparative Literature

*V. Murugan*

As is the case with the past year, the 1981 takes a limping step forword as far as Comparative Literature is concerned. As for as the published works in Comparative Literature are concerned the year 1981 wears an unpromising look.

Comparative Literature is no longer a new academic discipline. It has taken deep and firm roots in the Western soil. Its merits and potentialities, its serviceability to higher causes have been fully recognized and it is being looked upon as a beacon light capable of leading us forth to the cherished goals of human mind and heart. If the Western world, in the midst of its multiplicity of languages and cultural patterns, has achieved a kind of harmony and mutual adaptability, it is primarily because of its increasing awareness of the fundamental unity of its art forms. This unity is in a large measure realized through the constant searching and re-searching of the notions, ideas, concepts, beliefs and practices of the distinct geographical and cultural groups, and then through discovering the underlying identities and similarities. Now among these peoples the mode of comparison has grown to such heights that it has got entrenched into tneir hearts and has become a natural, spontaneous academic and cultural activity.

It would be redundant to discuss here the uses of comparative literature vis-a-vis Tamil literary studies. We are no longer closed set exulting in the 'uniqueness' of our past glories. We have recognized the need for the interaction and interfertilization of our literature with that of other peoples and cultures. We have become conscious of not only our rich heritage but also the need to contribute our share to the literary resourcefulness of the world. We have also become cons cious,acutely, of the need to win a clear universal recognition to our literary masterpieces. A realization—painful-though it is—has dawned upon us that we have sinned so long by not taking our literature into the stream of universal literary consciousness. Starting from G. U. Pope and S. Krishnasamy Iyengar through S. Vaiyapuri pillai, V. V. S. Iyer, M. Varadharajan and Xavier S. Thaninayagam down to T. P. Meenakshi Sundaram, K. Kailasapathy, V. Sachidanandam, Rama Periakaruppan and a host of others, a number of scholars trained in Comparative Literature have taken sure steps toward this realization.

But we are still in the infancy. Save for a few mature works like Xavier S. Thaninayagam's *Landscape and Poetry: A Study of Nature in Classical Tamil Poetry* and K. Kailasapathy's *Tamil Heroic Poetry*, the others lack direction and purposiveness. Certainly we need comparative studies of individual works and writers as is being done now. But the more immediate and compelling need of the hour is to work for a universal perspective for our literature, a conceptual framework through which to see our works as potential courses being capable of confluence into the great cosmic stream. We need to identify the conceptual spaces in our literature that could fit into the World Literature. One such example is Dr.K. Kailasapathi's *Oppiyal Ilakkiam* (Comparative Literature) which makes it clear that the fundamental tanets that go into the making of our great poetry are indeed an organic constituent of the General Literature.

As is the case with the past, the year 1981 takes a limping step forward as far as Comparative Literature is concerned. That a good number of people are working for their Ph. Ds in Comparative Literature discipline is a happy sign of our growing interest in it. The Department of English and Comparative Literature, Madurai Kamaraj University, occupies a place of pride in initiating people into this discipline. Dr. V. Sachidanandam, the Head of that Department, cultivates a native interest and a scholarly flare for this subject. Dr. K. Chellappan of the Bharathidasan University, besides being an exponet of Comparative Literature himself consciously prepares devoted youngmen so that they could take this discipline in this part of the country towards positive and specific goals. Dr. S. V. Subramanian, Director, International Institute of Tamil Studies has given an impetus to Comparative Literature studies by encouraging the scholars to untertake intensive research in this field.

This year has seen two students of Comparative Literature being awarded Ph. Ds. One is A. A. Manavalan of the Madras University who worked on the heroic types in Milton and Kamban and the other is Mrs. Regina Sunder in Madurai-Kamaraj University who compared D. H. Lawrence with Jayakandan, the two unique phenomena in their respective cultures. Both the dissertations display an admirable sense of scholarship and erudition, apart from widening the horizon of this discipline in this part of the world. Both of them merit to be in the hands of a larger reading public.

The most significant contribution is that of Madurai-Kamaraj University where Comparative Literature has taken strong roots as an academic discipline. Hundreds of students at the post-graduate and research levels work on Comparative Literature themes and they have been given conscious training in this field. The Institute of Correspondence Course and Contining Education of that University has been doing a signal service by spreading the message of Comparative Literature

to a significantly larger number of postal participants at the post-graduate level. These lessons have been so impressively and spiritedly organized that the participants feel an inner obligation to go into this field deeply and contribute to Tamil studies through it. The most serviceable part of these postal lessons is that they have outlined the specific areas of Tamil studies which need to be systematized and enriched with the help of this discipline.

The UGC seminar on Comparative Literature, and Theory and Practice of Translation held by the Department of English of the Autonomous Post-Graduate Centre (now Bharathidasan University) Tiruchirapallai, during 20-24 January 1981 is another significant event of the year. Sixteen papers on the various aspects of comparative studies and fourteen papers on Translation were presented. Dr. G. R. Damodran in his inaugural address stressed the academic and cultural necessity and purposiveness of comparative studies in the twentieth century century context. Dr. S. V. Subramanian in his paper "What Comparative Literature can do for Tamil" outlined the areas in Tamil literature that could stand meaningful comparisons with other literatures, implying throughout the indispensability of this discipline in acquiring for Tamil literature its rightful place in the galaxy of different national literatures. Dr. G. Sundaramurthy made a scholarly study of the Tamil and Sanskrit literary theories. Mrs. Regina Sunder compared compared certain prominent facets in the literary universes of D. H. Lawrence and Jayakanthan. Mr. Kanthimathinatan traced the common features in the evolution and growth of the historical novel in English and Tamil. Dr. M. J. Rabisingh in his paper on "Thahazhi Sivasankaran Pillai and Jayakanthan" made a stimulating study of the two contemporary literary phenomena in Malayalam and Tamil. Miss. S Baghirathi attempted to see the two *Pāvai* literatures in Tamil—*Tiruppāvai* and *Tiruvempāvai* in the light of Emerson's "oversoul". Mr. Sirpi Balasubramaniam

examined the "Krishna Theme" in the works of Bharathi and and Vallathol. Dr. S. Ramakrishnan made an interesting study of the characterization in Shakespeare and Kambar. Dr. A. A. Manavalan's paper examined the various epics with particular reference to *Charity* that constitutes "the Soul of Epic Heroism". Dr. K. Chellappan elucidated the conceptual map of Comparative Literature bringing in the metaphysical image of "the still point of the turning wheel". Dr. Avvai Natarajan dwelt on the subtle aesthetic characterisstics involed in the art of translation. Dr. S Agasthialingom and Mr. A. Joseph brought in the linguistic theories of translation to arrive at literary universals. Dr. N. S. Prabhu examined translation as a possible device in teaching literature. Mr. A. Noel Irudaya-raj made a critical study of the limitations of translation as a component of Comparative Literature studies. During the panel discussions that followed under the chairmenship of Dr. V. Sachidanandam and Dr. S. P. Appasamy, the scope and methodology of research in Comparative Literature and Translation in the Indian Context and the curriculurn and methods of teaching for courses in Comparative Literature and Translation in Indian Uuiversities were discussed with a felt concern for seeing Comparative Literature take roots in this soil as an integrated academic discipline. On the whole this seminar oranized with the personal initiative and efforts of Dr. K. Chellappan, gave the much needed fillip by increa-sing the wareness of the literary world about how beneficial Comparative Literature could be and how great a role it could play in the development af different literatures.

The English Department of the Madras Christian College, Tambaram, organized a consultation seminar on Comparative Literature on 31st October 1981 with a view to making this discipline as a curriculum component. Dr. V. Sachidanandam and Dr. K. Chellappan made an impressive case for including Comparative Literature in the University curriculum along with thoughtful suggestions to make it a success. Dr. A. A. Manavalan spoke on Literary Universals and Theoretics of

Comparative Literature with reference to Tamil and English. Dr. Nagarajan outlined the negatives and positives in comparatism.

As far as the published works in Comparative Literature are concerned, the year 1981 wears an unpromising look. It is surprising that the increased awareness of the role of Comparative Literature in the enrichment of individual literatures has not brought with it convincing evidences in print. The maximum credit for whatever is available goes to the International Insittute of Tamil Studies, Madras. It continues to provide both oral and material support for the students of Comparative Literature. The *Journal of Tamil Studies*, an half-yearly, bilingual journal published from the Institute publishes articles on comparative studies in almost every issue. The twentieth issue (December 1981) has in it a paper by Dr. K. P. Aravanan entitiled "Tree-Worship" which makes a comparative study of Tree Worship in Tamil among the Dravidians and the Africans in the light of the recent developments in Cultural Anthropology. The "Papers on Tamil Studies" published by the Insitute on the eve of the Fifth World Tamil Conference in January 1981 contains three articles on Comparative Literature themes: Dr. John Samuel's "Shelley and Bharathi: A Study in Romantic Individualism" V. Murugan's "Akam Poetry: A Lawrentian Approach" and "The Birth of Naravahanadatta; A Comparative Study of the Accounts found in *Perunkatai* and *Brhatkathaslo - Kasangraha*" by Dr. R. Vijayalakshmy. The first article tries to examine how Shelly and Bharathi, the great romantic individualists of the European and Indian consciousnnes, evolved their conceptions of individual freedom through the lyrical expression of their 'cosmic egos", how Shelley's Platonism and Bharathi's Vedantism come closer to one another in their identification of the individual 'I' with 'One Being' how both the poets have conceived the supremacy of individual self, how they demonstrate a "brotherhood" in viewing the common man, especially the labour class, as the incarnation

of Brahma, how fer both of them individual freedom and happiness is the basic principle of human life, and that of the universe as well, and how their individualistic-idealistic conceptions ultimately embraced the "collective unconscious" of their age. The second article by V. Murugan attempts at interpreting Akam poetry in the light of the insights and intuitive revelations of D. H. Lawrence a rebel, of the European consciousness. The writer demonstrates how the Akam bards and the "prophet" of the English Midlands constitute a spiritual brotherhood in their basic conceptions of human emotional consciousness, of the relationship between human life and Nature and of the organic connectedness between man and the cosmos. This article seeks to examine the psychic and psychological foundations for the classification of human life into *Akam* and *Puram* love mode and power mode by the Akam poets with the lamp of Lawrentianism in hand. Dr. R. Vijayalakshmy's article traces Konkuvelir's *Perunkatai* to *Brhatkathaslo Kasangraha* the Sanskrit version of the celebrated *Brhatkatha* of Gunadhya. She tries to establish a close similarity between these two works, besides stressing throughout the importance of comparative analysis of all related works for the proper interpretation of the Tamil epic.

This Comparative textual criticism of Dr. Vijalakshmi is part of her book *A Study of the Perunkatai: An Authentic Version of the story of Udayana* published by the International Institute of Tamil Studies three months later. In this work the author tries, successfully, to establish the acthenticity of the *Pervnkatai* by comparing the different versions of the story found in various ancient Indian languages like Paisaci, Sanskrit and Prakrit. She makes an exhaustive study of the Tamil version from various angles—as a work belonging to the central Tamil literary tradition, as one which is a product of the age-old Tamil literary traditions and conventions, its place among the various existing Udayana legends, ananalysis of the story from the historical, geographical, religious points

of view and so on. The most striking feature of this comparative study is that the author, though primarily concerned with the textual analysis of a *regional* literature that celebrates a particular religious ideology, convincingly makes out that all these versions are the living streams that form part of the Indian national literature. This indeed is one of the cherished goals of Comparative Literature : the otherness of literatures and the oneness of literature.

There is still another remarkable book that came out during the year. It is *Engengu Kaninum Sakthi*, a collection of essays by Dr. K. Chellappan of the Bharathidasan University. This book is an example of how much creative and beneficial a role Comparative Literature can play in the inter-fertilization and universalization of different literatures. His comparison of such seemingly polar opposites as Dr. M. Varadarajan and D. H. Lawrence would open new vistas to the students of this discipline in this soil. There are in this book other rewarding and stimulating studies in comparison like Bharadhidasan and Shelley.

All these publications—though some of them are indeed pace-setters—show how unenviably we are placed as far as the growth Comparative Literature in this land is concerned. There are many problems that confront Tamil Studies today, there are many things that we need it we want to see our literary theory and history attain a semblance of scientific objectivity and convincingness. Some of these tasks Comparative Literature can do for us. For instance, we can reinterpret the Akam poetry, perhaps with more convincingness, using the insights provided by the modern fundings in basic and applied psychology. It will be interesting to find that the classical commentator Peraciriyar's explanation of the concept of physio-revelations and Ilampuranar's elucidation of simile are similar to modern findings on the subjects. It is possible to compare, with great pracital utility, the various prosodic features of Tamil with those of the Western languages. We

can see that in Tamil as much as in other languages the formal structure of a poem works in perfect harmony with the emotional content. Comparative Literature will provide a new perspective to the study of the different genres in Tamil literature. It will also unearth certain unique features of Tamil in relation to other literatures. A comparative study of our oral literature in its astonishing variety with that of other languages can be another fruitful pursuit. The rich symbols and images of the classical Tamil poetry can be one of our princeless contributions to the totality of World Literature. When they are studied in an international perspective, Comparative Literature will tell us what we do not have in the realm of literary studies. It makes us painfully aware of the fact that we do not have a systematic history of literary criticism. In fact in Comparative Literature, literary theory, history and criticism all go together.

It will not add to the health of our rich literary and cultural heritage if we shut our eyes off the trends of other literatures. The scholars in addition to their depth of knowledge in their own language and literature must allow themselves to be fertilized by other human disciplines like psychology, sociology, and anthropology and by other literatures. All these things we are fully capable of achieving what is needed on our part is the 'will' and a spirit of accommdation.

# 10. இலக்கண ஆய்வுக் கட்டுரைகள்

ஆ. சிவலிங்கனார்

1981-இல் மரபிலக்கணம் பற்றிய ஆய்வு குறைந்தும், மொழியியல் பற்றிய ஆய்வு மிகுந்தும் காணப்படுகின்றன. மரபிலக்கணம் குறித்து 30 கட்டுரைகள்இவ் வாண்டில் எழுதப்பெற்றுள்ளன.

தமிழ் இலக்கணம் பற்றிய ஆய்வுகள் இரண்டு வகையாக அமைகின்றன. ஒன்று மரபிலக்கணம் பற்றியவை. மற்றொன்று மொழியியல் பற்றியவை. 1980-இல் மரபு இலக்கணம் பற்றிய ஆய்வுகள் மிகுந்தும் மொழியியல் பற்றிய ஆய்வுகள் குறைந்தும் காணப்பட்டன. 1981-இல் மாறாக மரபிலக்கணம் பற்றிய ஆய்வுகள் குறைந்தும் மொழியியல் பற்றிய ஆய்வுகள் மிகுந்தும் காணப்படுகின்றன. காரணம் மரபு இலக்கணம் பற்றிய எண்ணங்கள் ஓரளவில் நிற்பன. மொழியியல் பற்றிய சிந்தனைகள் அளவுக் குட்படாதன. அன்றியும் நம்நாட்டில் மொழியியல் பற்றிய சிந்தனைகள் வளரத் தொடங்கிய காலம் அண்மைக் காலமேயாம். இந்நிலையில் மரபிலக்கணம் பற்றிய எண்ணங்களின் வெளிப்பாடுகள் 1981-இல் எவ்வெவ்வாறு அமைந்துள்ளன என்பதைக் காணலாம்.

அவ்வெண்ணங்களை எழுத்து பற்றியன, சொல் பற்றியன, பொருள் பற்றியன, பிற என நான்கு வகைப்படுத்தலாம்.

## I. எழுத்து

### 1 சார்பெழுத்து

தொல்காப்பியம் சார்பெழுத்துகளாக மூன்று குறித்தது. அவை குற்றியலிகரம், குற்றியலுகரம், ஆய்தம் என்பன. நன்னூல்

பத்து எனக்குறித்தது. அவை உயிர்மெய், ஆய்தம், உயிரளபெடை ஒற்றளபெடை, குற்றியலிகரம், குற்றியலுகரம், ஐகாரக்குறுக்கம், ஔகாரக்குறுக்கம், மகரக்குறுக்கம், ஆய்தக்குறுக்கம் என்பன பிற்காலத்து முத்துவீரியம் உயிர்மெய், ஆய்தம் என்னும் இரண்டே குறித்தது. "உயிரும் மெய்யும் சார்தலின் உயிர்மெய் சார்பு எழுத்து எனப்பட்டது. ஆய்தம் மொழியைச் சார்ந்து வருதலின் சார்பு எழுத்து எனப்பட்டது." இவ்வாறுகூறிச் சார்பெழுத்துகள் இரண்டே என்ற முடிவினைத் தந்தவர் திரு. வெ. இசக்கிமுத்து (இ. த. ப. க. ஆய்வுக். பக். 49-52)

குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் ஆகிய மூன்றும் தனி எழுத்துகளே என்பது அறிஞர் பெரும்பாலோர் முடிவு. அவை மொழியில் முன்பின் உள்ள எழுத்துகளைச் சார்ந்து (பற்றி) வருவதால் சார்பெழுத்து எனப்பட்டன என்பர். பலவற்றுக்கு ஒரு பொதுப் பெயர் வைப்பதாயின் ஒன்றுபட்ட பொதுக்காரணம் இருத்தல் வேண்டும். உயிர்மெய் உயிரும் மெய்யும் சார்வதால் சார்பெழுத்து எனப்படும் எனின், ஆய்தம் எதுவும் எதுவும் சார்ந்தது என்னும் வினாவிற்கு விடையின்மையறிக. உயிர் மெய்க்குஒரு காரணமும் மொழியிடைச் சார்வது என ஆய்தத் துக்கு ஒரு காரணமும் காட்டி இரண்டையும் சார்பெழுத்து என்பது பொருந்தாது. 'மொழியில் குறிப்பிட்டதைச் சார்ந்து வருவது' என்னும் ஒரு பொதுமையைக் கொண்டு பார்க்கின் தொல்காப்பியர் கூறிய மூன்றுமே சார்பெழுத்து எனப்படற் குரியன.

## ஐ-அஇ-அய்

"ஐஎன்பது தனியொலியாகவும், அஇ, அய் என்பவற்றின் கூட்டொலியாகவும் கூறப்படுகின்றது. அஇ என்பது ஒலிவடிவிற்கே அமைவது; அய் என்பது ஒலி வடிவிற்கும் வரிவடிவிற்கும் அமைவது. மொழியில் முதலிலும் இடையிலும் அஇ என்பது வரிவடிவில் வாராது எனினும் மொழியிறுதியில் வரும். தொல் காப்பியர் "இகரயகரம் இறுதி விரவும்" (தொல். 58) என்றதற்கு அஇ அய் என்பனவற்றின் இகரமும் யகரமுமே கொள்ளவேண்டும். உதாரணமாக விலை என்பதை விலஇ என்றாவது விலய் என்றா வது ஐகாரத்தை இறுதியில் அமைக்க வேண்டும்: விலஇய் என இரண்டையும் அமைக்கலாகாது. சிலர் கல்வெட்டுகளில் கணி என்பது கணிய் எனக் காணப்படுவதைத் தொல்காப்பியச் சூத்தி

ரத்துக்கு உதாரணமாகக் காட்டுவர். தொல் காப்பியச் சூத்திரம் ஐகாரம் பற்றியதாதலின் அது பொருந்தாது''—இவ்வாறு ஒரு திய கருத்தை ''ஐ-அஇ-அய்'' என்னும் கட்டுரை வெளிப்படுத்து கிறது. (செ. செ. சிலம்பு. 55. பக். 450—453)

## 3. போலி-ஓர் ஒப்பீடு

உயிரிலும் மெய்யிலும் கரணப்படும் போலி எழுத்துகளைத் தொல்காப்பியம் முதல் முத்து வீரியம் வரையும் உள்ள இலக்கண நூல்கள் கூறுமாற்றைத் தொகுத்துத் தந்துள்ளார் இரா. சின்னப்பன். நிரல்படுத்தி நல்ல முறையில் அமைந்துள்ள கட்டுரை யிது (இ. த. ப. க. ஆய்வுக் பக். 139-143)

## 4. சுட்டெழுத்து

'தொல்காப்பியத்தில் சுட்டெழுத்து சுட்டும் இடம்' என்னும் கட்டுரை ஒரு புதிய கருத்தைத் தருகின்றது. (இ. த. ப. க. ஆய்வுக் பக். 134-138)

அகரச்சுட்டு சேய்மையையும் இகரச்சுட்டு அண்மையையும், உகரச்சுட்டு இடைமையையும் சுட்டும் என்பது பொதுவான கருத்து. இவற்றுள் உகரச்சுட்டு அகரச்சுட்டுக்கு அப்பாற்பட்ட சேய்மையைச் சுட்டும் என்ற கருத்தும் உண்டு. அகரம் மூன்றிடத் தையும் சுட்டும் என்பதற்கு அவை என்னும் சுட்டு, தொல்காப்பி யத்தில் ''தநுஎ எனஅவை முதலாகி'' (தொல் 696) என்ற விடத்தில் அண்மையிலுள்ள தநுஎ என்பவற்றைச் சுட்டுவதையும் ''அளவதாம், வழங்கியல் மருங்கின் குன்றுவ குன்றும்'' (தொல். 597) என்ற விடத்தில் இச்சூத்திரத்தின் முன்சூத்திரத்தில் உள்ள, 'வினையே செய்வது செயப்படு பொருள் முதலிய எட்டையும் சுட்டுவதையும், ''அவைதாம் தத்தம் கிளவியடுக்குநவரினும்'. (தொல். 912) என்ற விடத்தில்இதன் முன் சூத்திரத்துக்கு அப்பாற் பட்ட சூத்திரத்தைச் சுட்டுவதையும் சான்று காட்டியதோடு, இகரம் முதலில் கீழிடத்தைச் சுட்டிப் பின்னர் அண்மையிடத்தைச் சுட்டியது என்றும், உகரம் பின்னிடத்தைச் சுட்டிப் பின்னர் நெடுந் தொலைவிடத்தைச் சுட்டியது என்றும் கூறுகிறது அக் கட்டுரை.

இக்கட்டுரையிலிருந்து, ''அகரம் எல்லாவிடத்துக்கும் உரிய பொதுச்சுட்டு என்றும், இகரம் அண்மையிடச் சுட்டு என்றும்

உகரம் உலக வழக்கிறந்த தாயினும் இலக்கிய வழக்கில் நெடுந் தொலை தூரத்தை வானுலகு முதலிய காணாவிடத்தைச்சுட்டும் என்றும் ஒரு கருத்தைக் கொள்ளலாம்'' என்று கருதவும் இடம் உண்டு.

## 5. அளபெடை*

உயிரளபெடை ஒற்றளபெடை என்னும் இரண்டனுள் ஆய்வாளர் அறிவுக்கு விருந்துகொடுப்பது உயிரளபெடையேயாம். உயிரளபெடைபற்றிய கட்டுரைகளே மிகுதியும் காணப்படுவதைக் காணலாம்.

உயிர் நெடில் ஏழும் மொழி முதல் இடை கடை என்னும் மூவிடங்களிலும் அளபெடுக்க உயிரளபெடை இருபத்தொன்று ஆகும் என்றும், ஔகாரம் மொழியிடை கடைகளில் வாராமையின் இரண்டு நீக்கப் பத்தொன்பது ஆகும் என்றும், அவற்றுடன் இன்னிசையளபெடை சொல்லிசையளபெடைகளைச் சேர்க்க உயிரளபெடை இருபத்தொன்றாம் என்றும் கணக்கிட்டனர் சிவஞான முனிவர்.

இன்னிசையளபெடை சொல்லிசையளபடை எனத் தொல் காப்பியரும் நன்னூலாரும் பகுப்புக் கூறாமையாலும், ஔகாரம் இடையில் வாராது என்று யாரும் கூறாமையாலும், ககர வகர மோடு ஔகாரம் இறுதியில் வரும் எனயாவரும் கூறினமையாலும் சிவஞான முனிவர் ஔகாரம் இடையிலும் கடையிலும் வாராது எனஇரண்டு கழிப்பதும், இன்னிசை சொல்லிசையளபெடைகளைச் சேர்ப்பதும் பொருந்தா என்பர் க. ப. அறவாணன். (முத்துக் கோவை பக் 93-99)

ஆனால் அவர் உயிரளபெடை இருபத்தொன்று என்பதற்கு முடிவு கூறவில்லை. அவர் கருத்து, 'உயிர்நெடில் ஏழும் மொழி மூவிடத்தும் அளபெடுக்கும் ஆதலின் இருபத்தொன்றாகும்' என்பதாம். தொல்காப்பியரோ நன்னூலாரோ மெய்களுக்கு இடைநிலை மயக்கம் கூறினரேயல்லாமல் உயிர் எழுத்துகளுக்குக் கூறவில்லை. அதனால் ஔகாரம் மொழியிடையில் வரும் என்பது அவர்தம் கருத்தெனத் துணிய முடியாது. ஔகாரம் ககர வகர

---

* 'தொல்காப்பியத்தில் உயிரளபெடை ஆட்சி' என்னும் கட்டுரையைச் செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 5, இல் பக் 385-390இல் காண்க.

மோடு மொழியிறுதியில் வரும் என்றாலும் கௌ வௌ என ஓரெழுத்து மொழிகளையே நோக்கிக் கூறினரேயன்றி வேறன்று ஓரெழுத்தொருமொழியாகிய அவை ஈரெழுத்து முதலியவாகத் தொடர்ந்து இறுதியில் வருவனவல்ல. அதனால் அவற்றை முதல் எனக்கொள்ள வேண்டுமேயன்றி இறுதி எனக் கொள்வதற்கில்லை அதனால் நன்னூலார் உயிரளபு எழு மூன்று என்று கூறிவிட்ட தால் கணக்கைச் சரிப்படுத்தச் சிவஞான முனிவர் கூறியது பொருந்தும் என்றே கருதுகின்றேன். இன்னிசை சொல்லிசை என்ற காரணம் காட்டாமல் குறில் நெடிலாகி அளபெடுப்பதும் ஒரு சொல் பிறிதொரு சொல்லாக வேண்டியளபெடுப்பதும் ஆகிய இரண்டும் உண்மையால் அவை சேர்க்கப்பட (21—2=19: 19+2=21) உயிரளபெடை இருபத்தொன்று என்பது பொருந்தும் என்னலாம்.

ஆபிரகாம் அருளப்பன், தொல்காப்பிய இலக்கணஅமைப் பில் அளபெடைவண்ணம், அளபெடைத் தொடை, அள பெடை நிலை வகை, அளபெடை இசை வகை, செய்யுளிசை நிறையளபெடை, இன்னிசை நிறையளபெடை, சொல்லிசை நிறையளபெடை, சொல்லிசைச் செய்யுளிசை நிறையளபெடை புணர்ச்சி வகையள பெடை, செயற்கையளபெடை, இயற்கையள பெடை எனப்பாகுபாடு கொண்டு அவை தொல்காப்பியச் சூத்திரங் களில் அமைந்தவற்றைக் எடுத்துக் காட்டினார். அவர் அளபெடை எழுத்தைக் கழி நெடில்எழுத்து எனப் பெயர் தந்தது ஓர் புதுமைப் படைப்பாகும். அளபெடை என்னும் தொடர்க்கு அவர்தரு இலக்கண விளக்கம் சிறப்பானது.

''இத்தொடர் மொழியானது நெடில் ஒன்று தனக்குரிய இரண்டு மாத்திரைகளோடு கூடுதல் அளபு பெற்று நிற்கும் கழி நெடில் எழுத்தைச் சுட்டும். அவ்விடத்து 'அளபினை எடையாகக் கொண்டது' என விரிநிலைக்களத்துப் பெறும் இரண்டாம் வேற்றுமைத் தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகை நிலைத் தொடராம் இருபெயரொட்டாகுபெயர்.

''அது நெட்டெழுத்து எடுத்த அளபைக் காட்டும் குறியாகிய குறிலுயிரைச் சுட்டும். அவ்விடத்து 'அளபுக்கு எடையாயது' என விரிநிலை பெறும் நான்காம் வேற்றுமைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித் தொகை நிலைத் தொடர் மொழியாம் இரு பெயரொட்டாகு பெயர்'' (முத்துக் கோவை பக் 85-92)

## 6. மாத்திரை

எழுத்துகளின் ஓசையை அளப்பதற்கு அளவு கருவிகளாகக் கண்ணிமைத்தலையும் கை நொடித்தலையும் ஆசிரியர் தொல்காப்பியர் கூறினார், அளவு கருவிகள் இரண்டு கூறுவானேன் ஒன்றமையாதோ! இவ்வினாவை எழுப்பித் திறமுறக் காரண காரியங்களுடன் ஆய்வு செய்து பின்வரும் கருத்தை எழுதினார் இரா—மதிவாணன்:

''கண்ணிமைக்கும் கால அளவு ஒரு நொடியின் (விநாடியின் எட்டுபங்கு அளவே என்பர் அறிவியலார். எனவே கண்ணிமைக்கும் காலமும் கைநொடிக்கும் காலமும் சமமாகாது, அதனால் ஒரு மாத்திரையினும் குறைந்தும் (¼ மாத்திரையாக, ⅛ மாத்திரையாக நுணுகி ஒலிக்கும் ஓசையைச் சார்த்தியளக்கக் கண்ணிமைக்கும் காலமும், ஒரு மாத்திரை முதலாக அதற்கு மேற்பட்ட காலத்தை யளக்கக் கைந்நொடிக்குங் காலமும்எடுத்துக் காட்டாகக் கொள்ளப்பட்டனவா என்று கருதத் தோன்றுகின்றது'' (செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 56பக். 167-169))

இக்கருத்து சிந்தனை விருந்தாகவுள்ளது.

# II. சொல்

சொல் தொடர்பான கட்டுரைகள் எழுத்து, பொருள் பற்றிய கட்டுரைகளைவிடக் கூடுதலாகவே வெளிவந்துள்ளன. பெயர் வினை, இடை, உரிச் சொற்களுள் இடைச்சொல் பற்றிய கட்டுரைகள் கூடுதல்,

## 7. வடசொல்

செய்யுள் ஈட்டச் சொற்களாகத் தொல்காப்பியர் இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் [என்னும் நான்கு சொற்களைக் கூறினார். இயற்சொல்லும் திரிசொல்லும் தமிழ்ச் சொற்கள். திசைச் சொல் என்பது நான்கு திசைகளிலிருந்தும் தமிழ் நிலத்து வந்து வழங்கும் பிறமொழிச் சொற்களும், தமிழ் நிலத்திலேயே ஒரு திசையில் வழங்கும் சொல் மற்றொரு திசையில் சென்று வழங்கும் சொல்லும் ஆம். வடசொல் என்பது ஒரு பொருளையே குறிக்கும் தமிழிலும் சமக்கிருதத்திலும் உள்ள எழுத்தொன்றான சொல்லாம். அதாவது உலகம் என்பது தமிழ்ச் சொல்; சமக்கிருதச் சொல்லாகவும் வருகிறது. எனவேதமிழ்ச்

சொல்போல் இருக்கும் சமக்கிருதச் சொல்லோ சமக்கிருதச் சொல் போல் இருக்கும் தமிழ்ச் சொல்லோ வட சொல் எனப்படும் அவ் வாறில்லாத பிற சமக்கிருதச் சொற்கள் தமிழில் வந்து வழங்கும் போது திசைச் சொற்களாகும் தொல்காப்பியத்தின் பழைய உரையாசிரியராகிய உரையாசிரியர் (இளம்பூரணரல்லர்) என்பார் ''வடசொல்லாவது வட சொல்லோடு ஒக்கும். தமிழ்ச் சொல்'' என்றது காணலாம் (செந்தமிழ்ச் செல்வி சிலம்பு 56. பக். 173-176) இக்கருத்து பா. வே. மாணிக்க நாயக்கரால் முதல் முதலில் ஐயப் பாடாகக் கூறப்பட்டது. அதுவே முடிபாகும் என்பது 'தொல் காப்பியர் கூறிய வடசொல்' என்னுந் தலைப்புக் கட்டுரையின் கருத்து.

## 8. வவ்விறு மொழிகள்

வகர வீற்றுச் சொற்கள் நான்கு என்றார் தொல்காப்பியர் தொல்81.) அதற்கு உதாரணம் அவ் இவ் உவ் தெவ் என்பன காட் டினர் உரையாளர். அவ் இவ் உவ் என்பன ஒரு நிலையில் சுட்டிறு வகரம் என அடங்குதலின் மூன்று சொற்களாகக் கொள்வதற் கில்லை என்றும், வேறு சொற்கள் மூன்றுண்டு என்றும் கொண்டு, தொல்காப்பியத்தும் புறத்தும் ஆக, தவ் கவ் வவ் என்பனவற்றைக் காட்டினர் இரா. கிருட்டிணன். (செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 56, பக். 41-45, 75-80) இக் கருத்து ஏற்புடையதே எனினும் ஓர் ஐயம் எழுகிறது. கவ் வவ் என்பன கௌ வௌ என்பனவற்றின் திரிபுகள். ஔ எஞ்சிய இறுதியாகும் (தொல் 69) என்னும் தொல்காப்பியச் சூத்திரமூலம் கௌ வௌ என்பனவே முதற்சொற்கள் என்றறிய லாம். தவ் என்பது தௌ என வருவதில்லை. தவ் என்பது தா எனவும் வரும் என்றார் அவர். தா என்பதே தவ் என வந்தது என்றும் கூறிவிடலாம். இவற்றால் அவர் கருத்துக்குத் தடையுண் டாகின்றது.

## சில இடைச்சொற்கள்

## 9. ஏகார இடைச்சொல்

இடைச் சொற்கள் எவ்வெப் பொருளில்வரும் என்பதற்கு உரையாளர் தம் முன்னோர் நூல்களிலிருந்து உதாரணம் காட்டி னர். பா. மல்லிகா என்பவர் கவிஞர் கண்ணதாசனின் சினிமாப் பாடல்களிலிருந்து அவர் எவ்வெப் பொருளில் ஆண்டுள்ளார் என எடுத்துக் காட்டினர். தொல்காப்பியர் ஏகாரப் பொருளாக

தேற்றம் வினா ஈற்றிசை பிரிநிலை எண் என்னும் ஐந்து கூறினார். (தொல் 742) அவற்றுக்குமேலும் எதிர் மறையேவல், விளி, அழைக்கும் சொல் என்னும் பொருள்களிலும் வருவதைக் காட்டினர் (இ.த.ப க ஆய்வுக் பக். 244-249) எதிர்மறையே வலுக்குக் காட்டிய உதாரணங்களில் ஏகாரம் எதிர்மறையுணர்த்தவில்லை; இடை. வரும் ஆகாரமே எதிர்மறைப் பொருள் உணர்த்துவது. அதனால் எதிர்மறைப் பொருள் உணர்த்துமிடத்தில் எதிர்மறையிடைச் சொல்லுடன் சேர்ந்து வந்தது என்பதே பொருந்தும்.

## 10. தன்மையொருமை விகுதி

''தன்மையொருமை விகுதியாகத் தொல்காப்பியம் அன் என்' பதைக் குறிப்பிடவில்லை. எனினும் அது பழைய இலக்கியங்களில் ஆங்காங்கே காணப்படுவதால் மூலத்திராவிட மொழியில் அது இருந்திருக்கவேண்டும். அன் என்னும் விகுதியிலிருந்தே அல் என்னும் தன்மையொருமை விகுதி உருப்பெற்றிருத்தல் வேண்டும்'' இவ்வாறு சுபாஷ் சந்திரபோஸ் கூறினார். (இ.த. ப. க. ஆய்வுக் பக் 159-.64) இவர் ஆய்வுமொழியியல் அடிப்படையில் அமைந்தது. சங்க இலக்கியங்களில் தன்மையொருமை விகுதியாக அன் வருவதற்குத் தொடங்கினன் (ஐங்குறுநூறு 428 4) போலும் சொற்களைக் காட்டினர். மரபிலக்கணக் கொள்கையினர் அதை ஏலாமல் பதிப்பாளர்கள் தொடங்கினென் என்பதையே அறியாமையால் தொடங்கினன் எனப் பதிப்பித்தனர் என்பர். அல்லது ஏடெழுதியோர் அறியாமையால் தொடங்கினன் என்றெழுதினர் என்பர். திராவிடமொழிகளில் அன் விகுதி தன்மையொருமை விகுதியாகக் காணப்படுவது தமிழில் அல் என்பது அன் எனத் திரிந்து வழங்கிய நிலையில் காணப்படுவதாம். தமிழிலிருந்து பிற திராவிட மொழிகள் பிரிந்தன என்பதற்கு இதையும் ஒரு காரணமாகக் கூறுவர் அவர்.

## 11. மன்-இடைச்சொல்

மன் என்னும் இடைச்சொல் கழிவு ஆக்கம் ஒழியிசை என்னும் மூன்று பொருளில் வரும் என்பர் தொல்காப்பியர் (தொல். சொல். 249) எஸ். எம். சரோஜினி என்பார் மன் என்பதற்கு இருத்தல் என்பதே பொருள் என்று கூறி இலக்கியச் சான்றுகள் காட்டினர். மேலும், ''இருத்தல் என்னும் பொருள்தரும் வினைகள் வாக்கியத்தில் கண்டிப்பாக அமைந்துவர வேண்டியதில்லை என்ற நிலை ஏற்பட்டபோது இலக்கணிகள் இதனைக் கழிவு, ஆக்கம், ஒழியிசை,

ஆகிய பொருண்மைகளையுணர்த்தும் ஓர் இடைச் சொல் எனக் கருதியிருக்கலாம்' என்றும் கூறினர். அவரே இருத்தல் என்னும் பொருளை ஆக்கம் என்பதில் அடக்கலாம் என்றும் கூறினர். இக் கருத்து ஏற்புடையதாகவேயுளது.(இ த ப.க. ஆய்வுக். பக்.119122)

முதலில் இருத்தல்(நிலைத்தல்) என்னும் பொருளே இருந்தது. "மன்னாவுலகத்து மன்னுதல் குறித்தோர்" எனப் புறத்திலும், "மன்னாப் பொருளும் அன்ன இயற்றே" (தொல்-சொல் 517). எனத் தொல்காப்பியத்தினும் அப் பொருளைக் காணலாம். மன் என்பது வினைச் சொல்லாக இருந்து பின்னர் இடைச் சொல் நிலை யெய்தியதாகக் கொள்ளலாம். 'என்மனார் என்பதிலும் மன் இருத்தற் பொருளதாதலையறியலாம். என் மனார்=என்று சொல்லியிருந்தார்.

## 12. கள் விகுதியிடைச் சொல்

வன் தொடர்க் குற்றியலுகரத்தின் முன் கள் விகுதி வரின் அதன் ககரவல்லெழுத்து மிகுவதில்லை. கணக்கு+கள்=கணக்குகள் எனவரும். சிலர் எழுத்து+கள்=எழுத்துக்கள் என்றெழுதுவர். இது பிழை. எழுத்துகள் என்றே எழுதுதல்வேண்டும். இதற்கு மகாவித்துவான் மே. வீ. வேணுகோபால பிள்ளை கூறும் காரணம் காட்டி இரா. கிருட்டிணன் 'கள் விகுதி' எனும் கட்டுரையை எழுதினார். அது வருமாறு:

தோப்பு+கள் என்பது தோப்புகள் எனக் ககர ஒற்றுமிகாது வரின் தோப்பின் பன்மையைக் குறிக்கும். தோப்புக்கள் என்று வரின் தோப்பிலிருந்து இறக்கிக் கொண்டுவரப்பட்டகள்' என்று பொருள்பட்டுக் கள் என்பது பெயர்ச் சொல்லாகும். (இப்படியே நாள்கள், நாட்கள் என்பன கொள்க)" (செந்தமிழ்ச் செல்வி சிலம்பு 56 பக். 185, 186)

இக்கருத்து பொருந்துவதே என்றாலும் இக்காலத்தில் எழுத்துக்கள் குறிப்புக்கள் என்று பெரு வழக்காக வழங்கப்பட்டு வருவதால் தவிர்க்கமுடியாத நிலையில் காலவகை எனக் கொண்டு கள் விகுதியின் வல்லெழுத்து மிகுதியையும் ஏற்கவேண்டியுளது. அல்ல என்பது அஃறிணைப் பன்மைக்கே புரியதாயினும் நானல்ல, நீயல்ல, அவனல்ல, அவளல்ல, அதுவல்ல என ஏனைப் பாலிடங்களுக்கும் தற்காலத்தில் வழங்கப்படுதல்போலக் கள் விகுதியும் வன் தொடர்க் குற்றியலுகரத்தின் முன் ககர ஒற்றுமிக வரும் எனக் கொள்ளலாம்.

## 13. பாலீற்று மயக்கம்

ஒரு பாலுக்குரிய ஈறு (Suffix) மற்றொரு பாலில் (Sex-number) நின்று மயங்குதலைப் பாலீற்று மயக்கம் எனக் குறிப்பிட்டுத் தொல்காப்பியம் நன்னூல் ஆகியவற்றின் துணைகொண்டு ஆய்வு செய்தவர் மா அய்யாசாமி (இ த. ப. க. ஆய்வு. பக். 12-17) ஒன்றன் விகுதி பிறிதொன்றிலும் இருப்பதையே பாலீற்று மயக்கம் என்றார்- தன்மையொருமைக்கு வரும் து விகுதி ஒன்றன்பால் படர்க்கைக்கும் வருவது போல்வன பற்றிக் குறிப்பிடுகிறார். ஆனால் இவர் காட்டிய உதாரணங்கள் சில பொருந்துவன இல்லை. "நீங்கு என்று யான் யாங்ஙனம் மொழிகு ஓ" (அகம் 90:8) என்னும் வரியில் நீங்கு என்பதிலும் மொழிகு என்பதிலும் விகுதியே இருப்பதாகவும் நீங்கு என்பதில் முன்னிலை யேவலில் வந்ததாகவும் மொழிகு என்பதில் தன்மையொருமையில் வந்ததாகவும் குறிப்பிட்டார். மொழி கு என்பதில் கு விகுதியுண்டு ஆனால் நீங்கு என்பதில் உள்ள கு விகுதியன்று. விகுதியாயின் அதனை நீக்கினால் நீங் என்பது சொல் ஆகாது. அதனால் அவர் காட்டியது பிழை.

"தன்மை யொருமையில் வரும் கு ஈறு அஃறிணையில் "ஆபுக்கு" (அகம் 262-4) என ஒன்றன் பாலிலும் "பெருநிரை வாடுபுலம் புக்கு" (அகப் 399:9) எனப் பலவின் பாலிலும் வந்து மயங்கி நின்றது. மேலும் ஐதேய்கு—அழகு தேய்கின்றது. (அகம் 38:15) என்று கூறு அஃறிணையில் உயிரில் பொருளிலும் வந்து நிற்றலைக் காணலாம் என்றும் எழுதினார் அவர். புக்கு என்பதில் கு விகுதியன்று. புகு என்பது புக்கு எனக்காலம் இரட்டி நின்றது; புகுந்து என்னும் வினை யெச்சப் பொருளது அது. ஐதேய்கு என்பது 'அழகு தேய்கிறது' என்னும் பொருளும் தரவில்லை; 'அழகு தேய்கிறேன்' என்னும் பொருள் தருகிறது அதனால் அவர் உதாரணம் தவறானது. பிற உதாரணங்கள் பொருந்துவனவே.

# வினை

## 14. இருவகை மெய்யீற்று வினை

| 1 | 2 |
|---|---|
| "எண் | உண் |
| மன் | என் |
| புல் | செல் |
| உள் | கொள் |

மேற் காட்டி இருவகைப் படுத்தியுள்ள வினைகளில் உள்ள ண், ன், ல், ள் ஈறுகள் ஒன்று போலமையினும் புணர்ச்சி விதியிலும் சொல்லிலக்கணத்திலும் வேறுபடுகின்றன.

1 எண் + தல் = எண்ணுதல்.
உண் + தல் = உண்ணுதல், உண்டல்

இதில் முதல் வகை உகரம் பெற்றே வர இரண்டாவது பெற்றும் பெறாது வந்தது.

2. எண் + அ = எண்ண
உண் + அ = உண்ண, உண

இதில் முதலாவது ணகரம் இரட்டித்துவர, இரண்டாவம் இரட்டித்தும் இரட்டியாதும் வந்தது.

3. எண் + இன் + ஐ = எண்ணினை
உண் + ட் + அன் + ஐ = உண்டனை

இதில் முதலாவது ணகரம் இறந்தகால இடை நிலையாக இன் பெற, இரண்டாவது டகர இடைநிலை பெற்றது.

4. எண் என்பது உகரம் பெற்று எண்ணு என நிற்க, அது தி என்பதுடன் சேரும் போது அஞ்சு + தி = அஞ்சுதி என்பது போல் குற்றுகரவீற்றுச் சொல் தன்மை பெறுகிறது. இதனால் எண் என்னும் சொல்லின் முதல் வடிவம் 'எண்ணு' என்பதாகலாம் (இப்படியே பிறவும் கொள்க). எண்ணு என்பதை அடிப்படை வடிவமாகக் கொண்டால் புணர்ச்சி விதிகளையும் சொல்லிலக்கண விதிகளையும் எளிதில் உணர முடியும்'' (இ.த.ப.க. ஆய்வு.பக். 123 218-21)

மேற்கண்டவாறு கூறியவர், க. பாலசுப்பிரமணியன். மொழியியல் நோக்கில் கூறப்பட்ட இக்கருத்து சிறப்புடையதே. எனினும் இங்கு ஓர் ஐயம் எழக்கூடும். எண், எண்ணு என்பனவற்றில் அடிப்படை வடிவம் எது? எண்ணுதல் என உகரம் பெற்றும், எண்ணல் என உகரம் பெறாதும் வரும் இயல்பு எண் என்பதற்கேயிருத்தலின் எண் என்பதுவே முதல் வடிவம் என்னலாம். மேலும் எண்ணு என்பது அடிப்படை வடிவமாயின் எண்ணல் என்பதை எண்ணு + அல் எனப் பிரித்து உகரக் கேட்டுக்கு ஓர் விதி கூற வேண்டியுளதே.

## 15. தொகை

'சிந்தனைக்குச் சில தொகைகள்' என்னுந் தலைப்பில் ஏ. ஆதித்தன் என்பார் ஓர் கட்டுரை வரைந்துள்ளார் (இ.த.ப.க ஆய்வு. பக். 41-46)

அதில் உவமத்தொகை, பண்புத்தொகை ஆகியவை வேற்றுமைத் தொகையில் அடங்கும் என்றும், வினைத் தொகை தனி நிலையில் முக்காலத்துக்கும் வரினும் மொழியில் அது ஓர் காலத்திற்பட்டு வரும் என்றும், அன்மொழித் தொகையைக் கூட்டு ஆகுபெயர் எனக்கருதலாம் என்றும் கூறினர் அவர்.

எல்லாத் தொகைகளுமே வேற்றுமைத் தொகையாகவே கூறப்படலாம் என்பதை உதாரணங்கள் மூலம் காணலாம்.

1. மணியடித்தான் = மணியையடித்தான்—(வேற்றுமை)
2. கொல்யானை = கொல்லுதலைச்செய்யும்யானை (வினை)
3. கருங்குதிரை = கருமையையுடைய குதிரை —(பண்பு)
4. மதிமுகம் = மதியைப் போலும் முகம்—(உவமை)
5. இர்ர்ப்பகல் = இரவிலும் பகலிலும் (உம்மை)
7. பொற்றொடி = பொற்றொடியை யுடையவள் (அன்மொழி)

மேலே காட்டப்பட்ட உதாரணங்களில் வேற்றுமையுருபுகள் தொக்கி வந்தமை காண்க,

இவற்றுள் முன்மொழி பெயராக அமைந்தமையும் காணலாம். கொல்யானை என்பதில் கொல் என்பது முதல் நிலைத் தொழிற் பெயர். ஆதலின் வினைத் தொகையின் முன்மொழியும் பெயரே என்பதை வினைத்தொகை என்னும் கட்டுரை[2] தெளிவுபடுத்து கிறது. (முத்துக்கோவை. பக் 109-113)

## 16. எழுவாய் வேற்றுமை

'தமிழில் எழுவாய் வேற்றுமை' என்னுந் தலைப்பில் மொழியியல் அடிப்படையில் ஓர் ஆய்வுக் கட்டுரை[2] வழங்கியுள்ளார் ச. அகத்தியலிங்கம் (இ.த.ப.க. ஆய்வு. பக். 1—6)

---

2. இக்கட்டுரை, டாக்டர் கி. ஆ. பெ. விசுவநாதன் முத்து விழா மலருக்காக 1973ல் எழுதியனுப்பப்பட்டது.

"நான் கண்ணனைத் தன் வீட்டிற்குஅனுப்பினேன்.
நான் கண்ணனுக்குத் தன் புத்தகத்தைக் கொடுத்தேன்

போன்ற வாக்கியங்கள் இலக்கணப்பிழை. காரணம் தான் தன் என்பவை எழுவாயைக் குறித்து வருவதே.

கண்ணனுக்குத் தன் தம்பியைப் பிடிக்கும்
கண்ணனால் தன் வீட்டிற்குப் போக முடிகிறது.

போன்ற வாக்கியங்களில் காணப்படும் கண்ணனுக்கு, கண்ணனால் போன்றவற்றை எழுவாய் எனவே கருதலாம்''

இக்கருத்து மரபிலக்கண முறைக்கு மாறுபட்டது. பெயராக வரும் சொற்கள் யாவும் எழுவாயாகவே கொள்ள வேண்டும் என்பது அவர் கூற்றிலிருந்து தெரிகிறது. அது உண்மைதான். ஆனால் அச்சொற்கள் பல்வேறு அமைப்புகளில் ஆளப்படும் போது அவ்வவற்றுக் கேற்ற தனி இலக்கணங்கள் அமைக்க வேண்டும். அந் நிலையில்தான் பெயர்களுக்கு எட்டு வேற்றுமைகள் கண்டனர். கண்ணனுக்கு என்பது நான்காம் வேற்றுமை என்றாலும் பிடிக்கும் என்பதற்குக் கண்ணன் எழுவாயாதலின் கண்ணனுக்கு என்பது முதல் வேற்றுமையே. அதனால்தான் மரபிலக்கண நூலார் வேற்றுமை மயக்கம் என ஓர் அமைப்பினை வகுத்தனர்.

'நான் கண்ணனைத் தன் வீட்டிற்கு அனுப்பினேன்' என்பதில் தன் என்பது எழுவாய் என்பர் அவர். இதில் தனது என்பது தன் என நிற்றலின் ஆறாம் வேற்றுமையாகும். தன் என்பது எழுவாயாயின் அதன் வினை (செயல்) இங்கு யாது? அனுப்புதல் நான் என்பதன் வினை. இத்தொடரில் தன் என்பது எழுவாய் எனின் பயனிலை (செயல்) இல்லாமையால் அக்கூற்று மரபிலக்கண நூலார்க்கு ஏற்புடையதாகாது. மொழியியல் அடிப்படையில் எல்லாப் பெயருமே எழுவாயாதலின் அவர் கூற்று ஏற்புடைய தாகலாம்.

## III. பொருள்

1981-இல் பொருள் பற்றிய ஆய்வுக் கட்டுரைகளில் செய்யுட் பொருள் பற்றிய கட்டுரைகள் கூடுதலாகவுள்ளன.

## 17. பாட்டியல்

"பாட்டியல் என்பது பாடல்களால் அமையும் நூல்களைப் பற்றிய வரையறைகளைக் கூறுவதாகும். பாட்டியல் யாப்பியலி

விருந்து தோன்றியது என்னும் கூற்று பொருந்தாது. ஏன்எனின் யாப்பியல் என்பது செய்யுள் இலக்கணம் கூறுவது. தொல்காப்பியரின் செய்யுளியலை அடியொற்றியே யாப்பிலக்கணம் பின்னர் எழுந்தது. பாட்டியல் என்பது தொல்காப்பியர் கூறிய அம்மை அழகு முதலியவற்றினை ஒட்டிப் போந்ததாகும்.''

இவ்வாறு கூறி 'செய்யுளியலில் பாட்டியல் அடங்கும்' என்பாரை மறுத்து அரங்க–நலங்கிள்ளி என்பார் ஓர் ஆய்வுக் கட்டுரையினைத் தந்துள்ளார் (செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 56 பக். 27-32)

18. சங்க இலக்கியம் பாட்டு வடிவமும் யாப்பும் என்னும் தலைப்பில் இராம-பெரியகருப்பன் என்பவர் தொல்காப்பியர் கூற்றுகளை ஆதரவாகக் கொண்டு சங்க இலக்கியங்களில் காணப் படும் பாடல்களை ஆராய்ந்துள்ளார். அவர் தமது முடிப் புரையில் கூறிய கருத்து சிந்தித்துப் போற்றற்குரியது.

> ''தொல்காப்பியர் சுட்டும் யாப்பு வடிவங்களையும் உறுப்புக்களையும் வகைப்படுத்திக் கொள்ள வேண்டும். சங்கத் தொகைப் பாடல்களின் யாப்பு வடிவங்களை ஆய்ந்து தனியே பகுத்துக் கொள்ளுதல் வேண்டும். பிற்கால யாப்பு வடிவங்கள் அனைத்தையும் பட்டியல் போட்டுக் கொள்ள வேண்டும். இவற்றை ஒப்பிடுவதுடன், பிறமொழி யாப்பு வடிவங்களுடனும் ஒத்து நோக்குவது, தமிழ் இக்லகிய ஆய்வில் தனிசிறப்பான இடத்தைப் பெறும்' (முத்துக் கோவை. பக்114-122)

## 19. அலகு

நேர் ஓரலகு பெறும்; நிரை ஈரலகு பெறும்; நேர்பு மூவலகு பெறும், நிரைபு நாலலகு பெறும் என்று தொல்காப்பியம் கூறுவ தற்கு விளக்கம் தருகிறார் சுந்தர-சண்முகனார். புதிய விளக்கம் (செந்தமிழ்ச் செல்வி, சிறம்பு 55 பக். 231-218, 310-317, 362-365, 404 407)

''ஓரலகு முதலியவற்றுக்கு ஒருவகையலகு இருவகையலகு மூவகையலகு நால்வகையலகு எனப்பொருள் கொள்ள வேண்டும். ஒரே வகையான ஒலி முயற்சியிற் பெறுவன ஓரலகு பெறுவன வாம். க, கா, கல், கால்.

கல, கலா என்பன ஒரு முயற்சியும் கலன், கலாம் என்பன ஒரு முயற்சியும் பெறுவதால் நிரையசை ஈரலகு பெறுவனவாம்.

நேர்பசை என்பது குறிலொற்றின் கீழ் உகரமாகவும், நெடிற் கீழ் உகரமாகவும், நெடிலொற்றின் கீழ் உகரமாகவும் மூன்று வகை ஒலி முயற்சிக் கூறுபாடுடைமையின் மூவலகு பெறுவதாம். வண்டு, நாகு, காம்பு என்பன காண்க.

நிரைபசை என்பது குறிலிணைக்கீழ் உகரமாகவும், குறில் நெடிற்கீழ் உகரமாகவும், குறிலிணை ஒற்றின்கீழ் உகரமாகவும், குறில் நெடில் ஒற்றின் கீழ் உகரமாகவும் நான்கு வகையில் வருதலின் நாலலகு பெறுவதாயிற்று, வரகு, மலாடு, அரக்கு, பனாட்டு என்பன காண்க.''

இவ்வாறான வினக்கம் இவர் பெயரால் வழங்கப்பட வேண்டிய—புதிய விள்க்கம்.

20 அங்கதச் செய்யுள் பற்றி, சொ. சிங்கார வேலன் சிறப்புற ஆய்வு செய்துள்ளார். பழிப்பது போன்று புகழ்தலைச் செம் பொருள் அங்கதம் என்றும், புகழ்வது போன்று பழிப்பதைப் பழி கரப்பு அங்கதம் என்றும் குறிப்பிட்டு இலக்கிய ஆட்சிகள் தந்து விளக்கியுள்ளார். (முத்துக்கோவை. பக். 123-124)

## 21 சங்க இலக்கியத்தில் கண்டோர் கூற்றுகள்

என்னும் தலைப்பில் நா. செயராமன் ஒரு கட்டுரை எழுதி யுள்ளார். கண்டோர் கூற்று உடன்போக்கிலும், ஊடற் காலத்தும் நிகழ்வது. உடன் போக்கிலும், (1) தலைவன் தலைவியரிடம் தங்கும்படியாகவோ, வழியனுப்பியோ, மொழிதல் (2) தலைவி யைத் தேடிச் செல்லும் தாயினைத்தடுத்தல் அல்லது போகும்படி விடுத்தல் (3) சென்றோர் மீளும் போது கூறுதல் என முத்திறக் கூற்று கண்டோர்க்குரியன. இவை நாடகத் தனிமொழியில் அடங்கும். இவ்வகையில் சங்கப்பாடல்களை ஆய்ந்து தொகுத் தார் அவர் (முத்துக்கோவை பக். 135-142)

## 22 பதிற்றுப் பத்தும் பாடாண்திணையும்

''சேரமன்னர்களின் ஆற்றல் மிக்க ஒழுகலாறுகளையும் அன்பின் மிக்க மனைவாழ்க்கையினையும் புலவர் தம்பாடலுக் குரிய பொருளாகக் கொண்டு பாராட்டும் முறையில் பதிற்றுப் பத்துப் பாடல்கள் யாவும் அமைந்துள்ளன. இதன்கண் (பதிற்றுப்

பத்தில்) அமைந்த நூறு பாடல்களும் பாடாண்திணை என்னும் ஒரு திணையையே பொருளாகக் கொண்டு பாடப் பெற்றன எனக் கொள்ளுதல் ஏற்புடைத்தாகும்'' எனக் கூறிப் பதிற்றுப் பத்துப் பாடல்களின் திணை பாடாண் திணையே என்பதற்குரிய விளக்கத்தைத் தெளிவு பெறக்காட்டியுள்ளார் க. வெள்ளை வாரணர். (முத்துக்கோவை பக். 130-134) இதற்குச் சான்றுகளாக ''பதிற்றுப்பத்து நூறும் இவ்வாறே வருதலிற் பாடாண்திணையே யாயிற்று'' என்னும் நச்சினார்க்கியர் தொடரையும், பதிற்றுப் பத்துப் பாடல்களைத் தொகுத்தோர் ஒவ்வொருபாடலுக்கும் திணை குறிப்பிடாது துறை, வண்ணம், தூக்கு, பெயர் என்ப வற்றை மட்டுமே குறித்துச் சென்றமையையும் காட்டினர்.

### IV பிற

தொல்காப்பியத்தில் ஆளப்படும் சொற்கள் சில வற்றைப் பற்றிக் கருத்து செலுத்தினோரும் உளர்.

## 23 அவைதாம் அவற்றுள்

தொல்காப்பிய நூற்பாக்களுள் சிலவற்றில் அவைதாம் என் பதும், சிலவற்றில் அவற்றுள் என்பதும் சொற் சீரடிகளாக வந்துள்ளன.

அவைதாம் என்பதற்குப் பதில் அவற்றுள் என்றிருப்பின்சிறக் கும் என்று கருதும்படிச் சில நூற்பாக்கள் உள. அவற்றுள்ஒன்று,

அவைதாம்,
மெய்பிறி தாதல் மிகுதல் குன்றல் என்று
இவ்வென மொழிப திரியு மாறே (புணரியல்-7)

என்பது. இதன்முன் நூற்பாவில் மொழிபுணர் இயல்பு நான்கு வகை; அவை திரிபு மூன்றும் இயல்பு ஒன்றும் ஆம் என்பது கூறப் பட்டது. (புணரியல்-6) இந்த நான்கில் மூன்றுபற்றிக் கூறுவது இந் நூற்பா. அப்படியானால் ஆவைதாம் என்பதற்குப்பதில் அவற்றுள் என்றிருப்பதே சிறக்கும். இவ்வாறு கண்டவர் க. வா. சச்சிதானந் தம். அவற்றுள் என்பது பற்றியும் ஓரிடத்தில் மாறுபாடு கண்டு எழுதியுள்ளார். அம்மாறுபாடு அமைதி கொள்வதற்குரியதே (இ. த. ப. க. ஆய்வு பக்(109-113)

## 24 கிளவியும் சொல்லும்

''கிள + வி = கிளவி, சொல் + ? = சொல் எனக் கிளவியையும் சொல்லையும் பிரிக்கலாம். சொல் என்பது விகுதியிழந்த முதல்

நிலைச்சொல். கிளந்து (எடுத்து) சொல்லப்படுவது கிளவி. வகரக் கிளவி (தொல்-81) அன்என் கிளவி (தொல்-119) என்பன காண லாம். எழுத்தையும் சாரியை முதலிய இடைச்சொற்களையும் வெயில் (தொல்-377) போலும் முழுச் சொற்களையும் விதந்து சொல்லுமிடத்து ஆளப்படுவது கிளவி என்னும் சொல். அதுவே பின்னர் எல்லாச் சொல்லையும் குறிப்பிடப் பொதுச் சொல் நிலையில் ஆளப்பட்டது. சொல் என்பது சொல்லுதல் என்பதன் சுருக்கம். அது பொதுவாக முழுவடிவில் அமையும் சொற்களைக்குறிக்க வருவது. பொருள் வரையறை கருதாமலும் தொல்காப்பியர் கிளவியையும் சொல்லையும் ஆண்டுள்ளார்.'' இவ்வாறு கூறியவர் மெ. சுந்தரம். பொருத்தமான ஆய்வுக் கட்டுரையிது.

## 25 வழக்கு

தொல்காப்பியர் உலகவழக்கையும் செய்யுள் வழக்கையும் தனித்தனியாகவும் பொதுவாகவும் எடுத்துக் கூறிய இடங்களைத் தொகுத்துச் சுட்டியுள்ளார் க. அழகேசன் என்பவர். இயல்பு வழக்கு, தகுதி வழக்கு முதலிய பிரிவுகளையும் குறிப்பிட்டுள்ளார். (இ. த. ப. க. ஆய்வு. பக். 29-34)

## 26 பரிமேலழகரும் ஆகு பெயரும்

இத்தலைப்பில் சி. செல்வத்தாண்டவன் என்பவர் பரிமேலழகர் ஆகுபெயராகக் குறளில் குறிப்பிட்ட வகைமைகளை அவர் கட்டுரை முடிவில்.

> ''ஆகுபெயர் பொருள் விளக்கும் நிலை கருதி அதனை இயற் சொல் ஆகுபெயர், திரிசொல் ஆகுபெயர் என இருவகை யாகக் கொள்ளலாம் தொல்காப்பியர் ஆகு பெயர் பற்றிய வாய்பாடுகள் காட்டி அவற்றின் அடிப்படையில் பிற ஆகு பெயர்களையும் அமைத்துக் கொள்ள வழி வகுத்துள்ளார். திருக்குறளில் பரிமேலழகர் காட்டும் ஆகு பெயர்களில் பெரும் பாலன ஒப்பில்வழியால் பிறிது பொருள் சுட்டும் இயல்பின, பரிமேலழகர் அன்மொழித் தொகையும் அடைமொழியொடு வந்த ஆகுபெயரும் ஒன்றெனக் கொண்டுள்ளார். ஆகு பெயரை அன்மொழியாகக் கொள்ள முடியாது, அன் மொழியை ஆகு பெயராகக் கொள்ளலாம்'' (முத்துக்கோவை பக். 100-107)

என்னும் தொகுப்புரை தந்ததற்கேற்ற விளக்கங்களை எடுத்துக் காட்டுகளுடன் தந்திருப்பது சிறப்புடையதாம்.

## 27 இலக்கண ஒருமைப்பாடு

பிறர் யாரும் சொல்லாததும், யாவரும் ஏற்றுக் கொள்ளக் கூடியதுமாகும் கருத்துகளைத் தருவதில் தலை சிறந்து விளங்கு பவர் வ. சுப. மாணிக்கம். இலக்கண ஒருமைப்பாடு என்னும் கட்டுரையில் (முத்துக் கோவை பக். 67-77) அவர் இலக்கண மூல நூல், இலக்கணவுரை நூல், இலக்கண மூலவுரை நூல் என இலக் கண நூல்களை மூன்று வகையாக்கி அவற்றிடைக் காணப்படும் ஒருமைப்பாட்டை விளக்கியிருக்கும் திறம் போற்றுதற்குரியதாம். தொல்காப்பியம் மூலநூல்; தொல்காப்பியவுரைகள் உரைநூல்; இலக்கண விளக்கம் மூலவுரை நூல். தொல்காப்பியர் கூறிய இலக்கணங்களுக்கு மேலும் இளம்பூரணர் போன்றார் இலக்கணங் களைக் பெருக்கினர். தொல்காப்பிய இலக்கணங்களையும் உரை யாளர் பெருக்கிய இலக்கணங்களையும் சேர்த்துப் பவணந்தியார் நன்னூல் இயற்றினார். எனவே நன்னூலுக்கு முன்னூல் நேரே தொல்காப்பியமாகாமல் தொல்காப்பிய உரைகளும் முன்னூல் களாக விளங்கின. அதனால் மூலநூல் நூற்பாயாப்பில் அமைவதே சிறப்புடையது எனக் கருதாமல் உரைநடையில் அமைவதும் மூல நூல் ஆகலாம் எனக்கொண்டு வழி நூல் விளக்கம் பெறுவது சிறப் புடையதாம். எனவே இலக்கண மூல ஆசிரியர்களையும் உரையாசி ரியர்களையும் பிரிவு படுத்தாமல் உரையாசிரியர்களும் மூல ஆசிரியர் களே எனக் கருதுவது இலக்கண ஒருமைப்பாட்டுணர்வாகும். இவ் வாறு சிறந்த விளக்கம் தந்தார் அவர்.

## 28 தொன்னூல் விளக்கம்-சொல். முதல்நூற்பா

தொன்னூல் விளக்கச் சொல்லதிகார முதல் நூற்பாவுக்கு விரிந்த ஆய்வு தந்துள்ளார் செ. வை. சண்முகம். நன்னூலார்க்கு வீரமாமுனிவர் மாறுபடும் இடங்களைக் குறிப்பிட்டுள்ளார். ஆகு பெயர் என்பது பெயர்க்கும் வினைக்கும் பொது ஆகுபெயர் ஒன்றன் பெயர் பிறிதொன்றற்கு ஆகிவருவது. அது போலவே ஒன்றன் வினை பிறிதொரு வினைக்கு ஆகிவரின் அதுவும் ஆகு பெயர் (வினை) என்னலாம். 'அண்ணாமலை அரசர் பல்கலைக் கழகம் கட்டினார்' என்பதில் கட்டினார் என்பது அப்பொருளை விட்டு நிறுவினார் என்ற பொருளைத் தருவது அதற்குஉதாரணம். இப்படிப்பல செய்திகளைத் தருமாறு முதல் நூற்பாக்கட்டுரையை எழுதியுள்ளார்.

## இணைப்பு-1

### இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்றம் (அண்ணாமலை நகர்) பதின்மூன்றாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை, தொகுதி 2-ல் வெளிவந்த கட்டுரைகள்

| எண் | பொருள் | ஆசிரியர் | பக்கம் |
|---|---|---|---|
| 1. | கண்ணதாசனும் ஏயும் | பா. மல்லிகா | 244—249 |
| 2. | சார்பெழுத்துகள் | வெ. இசக்கிமுத்து | 47—52 |
| 3. | சிந்தனைக்குச் சில தொகைகள் | ஏ. ஆதித்தன் | 44—46 |
| 4. | தமிழில் எழுவாய் வேற்றுமை | ச. அகத்தியலிங்கம் | 1—6 |
| 5. | தொல்காப்பியத்தில் அவைதாம் அவற்றுள் | க. வா. சச்சிதானந்தம் | 109—113 |
| 6. | தொல்காப்பியத்தில் கிளவியும் சொல்லும் | மெ. சுந்தரம் | 144—149 |
| 7. | தொல்காப்பியத்தில் சுட்டெழுத்துச் சுட்டுமிடம் | ஆ. சிவலிங்கனார் | 134—138 |
| 8. | தொல்காப்பியமும் வழக்கும் | சு. அழகேசன் | 29—34 |
| 9. | தொன்னூல் விளக்கச் சொல்லதிகார முதல் நூற்பா. | செ. வை. சண்முகம் | 354—358 |
| 10. | பழந்தமிழில் இருவகை மெய்யீற்று வினைகள் | க. பாலசுப்பிரமணியம் | 218—223 |
| 11. | பழந்தமிழில் தன்மை யொருமை விகுதிகள் | ச. சுபாஷ்சந்திரபோஸ் | 159—164 |
| 12. | பாலீற்று மயக்கம் | மா. அய்யாசாமி | 12—17 |
| 13. | போலி—ஓர் மதிப்பீடு | தி. இரா. சின்னப்பன் | 139—143 |
| 14. | மன்என்னும் இடைச் சொல் | எம். எ.ஸ் சரோஜினி | 119—122 |

திருச்சி (8), தமிழகப் புலவர் குழுவின் வெளியீடாகிய முத்துக் கோவையில் வந்த கட்டுரைகள்

| எண் | பொருள் | ஆசிரியர் | பக்கம் |
|---|---|---|---|
| 1. | அங்கதச் செய்யுள் | சொ. சிங்காரவேலன் | 123—129 |
| 2. | இலக்கண ஒருமைப்பாடு | வ.சுப. மாணிக்கம் | 67 \| 77 |
| 3. | உயிரளபெடை எண்ணிக்கை. | க. ப. அறவாணன் | 93—99 |
| 4. | சங்க இலக்கியத்துள் கண்டோர் கூற்று | நா. செயராமன் | 135—142 |
| 5. | சங்க இலக்கியம்—பாட்டு வடிவமும் யாப்பும் | இராம. பெரிய கருப்பன் | 114—122 |
| 6. | தொல்காப்பியத்தில் உயிரளபெடை | ஆபிரகாம் அருளப்பன் | 85 – 92 |
| 7. | பதிற்றுப்பத்தும் பாடாண்திணையும் | க. வெள்ளை வாரணர் | 130—134 |
| 8. | பரிமேலழகரும் ஆகுபெயரும் | சி. செல்வத்தாண்டவன் | 100—107 |
| 9. | வினைத்தொகை | ஆ. சிவலிங்களார் | 108—113 |

மாத இதழ்—செந்தமிழ்ச் செவ்வியில் வெளிவந்த கட்டுரைகள்

| | | | தொகுதி, பக்கம் |
|---|---|---|---|
| 1. | அவ்வே மாத்திரை | இரா. மதிவாணன் | 55. 167—169 |
| 2 | ஐ-அஇ-அய் | ஆ. சிவலிங்கனார் | 55. 450—453 |
| 3. | கள்விகுதி | இரா. கிருட்டிணன் | 56, 185—186 |
| 4. | தொல்காப்பியர் கூறிய வடசொல் | ஆ. சிவலிங்கனார் | 56. 173 – 176 |
| 5. | பாட்டியல்-பெயர்க்காரணம்-தோற்றக்காரணம் | அரங்க நலங்கிள்ளி | 56. 27—32 |
| 6. | வவ்விறு மொழிகள் | இரா. கிருட்டிணன் | 56. 41—45, 75—80 |
| 7. | நேர்நிரை நேர்பு நிரைபு | சுந்தர. சண்முகனார் | 55. 213—218, 310 – 317, 362—365, 404—407 |

இணைப்பு—2

# 1981-இல் வெளிவந்த இலக்கண நூல்கள்

1. தொல்காப்பிய உரைவளம்-எழுத்ததிகாரம்-மொழிமரபு.
பதிப்பாசிரியர்: ஆ. சிவலிங்கனார்
வெளியீடு: உலகத்தமிழராய்ச்சி நிறுவனம்,
சென்னை-113. விலை ரூ. 9-00

2. தொல்காப்பிய உரைவளம்-எழுத்ததிகாரம்-பிறப்பியல்
பதிப்பாசிரியர்: ஆ. சிவலிங்கனார்
வெளியீடு: உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை-113. விலை ரூ. 8-00

3. இலக்கண மரபில் இடைச் சொற்கள்
பா. மல்லிகா
பாஸ்கரன் வெளியீடு
பாஸ்கரன்நாயர் கோயில் தெரு
மன்னம், பாலக்காடு, கேரளா விலை ரூ. 9-00

4. இனிக்கும் இலக்கணம்
இரா. திருமுருகன்
சேகர் பதிப்பகம், 66, பெரியார் தெரு
எம் ஜி ஆர். நகர், சென்னை-78. விலை ரூ. 7-50

5. உவமானசங்கிரகம்-அணியிலக்கண ஆராய்ச்சி
இ. சுந்தரமூர்த்தி
தமிழ்ப் புத்தகாலயம், 59, டி பி. கோயில் தெரு
திருவல்லிக்கேணி, சென்னை-5. விலை ரூ. 6-00

6. தெய்வச்சிலையார் உரைத்திறன்
சோ. ந. கந்தசாமி
அபிராமி பதிப்பகம்
அண்ணாமலை நகர், சிதம்பரம் விலை ரூ. 3-75

7. யாப்பதிகாரம் 5-ஆம் பதிப்பு
குழந்தை
பாரிநிலையம், 184, பிராட்வே, சென்னை-1.
விலை ரூ. 8-50

8. யாப்பருங்கல விளக்கம், விருத்தித் தொகுப்பாய்வு
ச.கு. கணபதி
பாரி நிலையம், சென்னை-1, விலை ரூ. 13-00

9. யாப்பு நூல்
சரவணத் தமிழன் உரை
இயற்றமிழ்ப் பயிற்றகம்
திருவாரூர்-610 002. விலை ரூ. 8-00

10. யாப்பும் பொருளும்
பொன். சவுரிராஜன் + கு. முத்துராசன்
தேன்தமிழ்ப் பதிப்பகம், 85, சுப்பிரமணியம் பிள்ளை தெரு
சேலம்-636001. விலை ரூ. 19-00

11. தொல்காப்பிய உரைவளம்-பொருளதிகாரம்-மரபியல்
பதிப்பாசிரியர்: டாக்டர் கே. பகவதி
வெளியீடு: உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
சென்னை-113 விலை ரூ. 10-00

# தமிழ் கற்பித்தல்

டாக்டர் சு. இராசாராம்

தமிழை அன்னிய மொழியாகக் கற்பித்தலைப் பொறுத்தவரையில் 1981-ஆம் ஆண்டிற்குத் தனிச் சிறப்பு உண்டு. வேறு எந்த ஆண்டைக் காட்டிலும் இவ் ஆண்டில் தான் தமிழ் கற்பித்தலைப் பற்றிச் சில கட்டுரைகள் எழுதப் பெற்றுள்ளன. இவற்றைத் தொகுத்துப் படித்தால் மொழி கற்பித்தலைப் பற்றிய முழுமையான அறிவைப் பெறலாம்-இவ் வாண்டு பல்வேறு கற்பித்தல் கொள்கைகளும், கோட்பாடுகளும் விளக்க மாக ஆராயப்பட்டுள்ளன.

'தமிழ் கற்பித்தல்' என்னும்போது தமிழைத் தாய்மொழி யாகக் கற்பித்தல் என்றும், அயல்மொழியாக அன்னியர்க்குக் கற்பித்தல் என்றும் இரண்டு வகையாகப் பொருள் கொள்ளலாம். இக்கட்டுரை இரண்டாவது பொருளைக் கருவாகக்கொண்டு தமிழை அன்னிய மொழியாகக் கற்பித்தல் பற்றி என்னென்ன நூல்களும் கட்டுரைகளும் இதுகாறும் வெளிவந்துள்வள; அவற்றி லிருந்து தமிழ் கற்பித்தல் (Tamil Language Teaching) என்பது பற்றி நாம் பெறும் கருத்துக்கள் என்னென்ன என்பனவற்றை திறனாய்வுக் கண்ணோட்டத்தில் ஆராயமுற்படுகிறது. வெறுமனே திறனாய்வாக இல்லாமல் தமிழ் கற்பித்தலின் வாழ்வையும் வரலாற்றையும் தொகுத்து அறிவியல் நோக்கில் காண்பதும் இக் கட்டுரையின் நோக்கம் எனலாம்.

பிற இந்திய மொழிகளுக்கு இல்லாத சிறப்பொன்று இன்றைய தமிழுக்கு உண்டு. இன்று மொழியைப் பற்றிய படிப்பாக மொழி யியல் எல்லா அறிஞர்களாலும் போற்றப்பட்டு வருகிறது. இம் மொழியியல் பிடிப்பின் பல கொள்கைகளையும் கோட்பாடுகளை

யும் பற்றித் தமிழில் ஏராளமான நூல்களும் கட்டுரைகளும் வெளி வந்துள்ளன. வேறு எந்த இந்திய மொழியிலும்] இந்த அளவிற்கு மொழியியல் பற்றி நூல்களும் கட்டுரைகளும் வெளிவரவில்லை. இன்று [மொழியாசிரியர்களாலும் மொழியியலாளர்களாலும் மிகுதியாகப் பேசப்பட்டுவரும் பயன்பாட்டு மொழியியல் (Appiled Linguitsics) பற்றியும் நூல்களும் கட்டுரைகளும் வெளிவந்த வண்ணம் இருக்கின்றன.

மொழி கற்பித்தல் பயன்பாட்டு மொழியியலின் ஓர் அங்க மாகக் கருதப்படுகிறது. மொழி கற்பித்தலின் முக்கியத்துவமும் பயன்பாட்டு மொழியியலில் அதன் ஆதிக்கமும் பயன்பாட்டு மொழியியலே மொழிக்கற்பித்தல் தானோ என்ற ஐயத்தை இன்று ஏற்படுத்தியுள்ளது. மனித நாகரிகம் வளர வளர மொழிகளும் வளர்ந்து வருகின்றன. அத்தோடு மனிதனுடைய தேவைகளும் பல்கிப் பெருகுகின்றன. தாய்மொழியைத் தவிர பிற மொழிகளை யும் கற்கவேண்டிய தேவையும் கட்டாயமும் உருவாகிவிடுகின்றன இந்நிலையில் அறிவியல் நோக்கில் மொழிக் கற்பித்தலை ஆராய வேண்டியது இன்றியமையாதது. தமிழில் தமிழை அன்னியர்க்குக் கற்பிப்பதற்கெனப் பல நூல்களும், கற்பித்தல் கொள்கைகளைப் பற்றிப் பல கட்டுரைகளும் தோன்றியுள்ளன.

அவற்றுள் 1981-ஆம் ஆண்டு தோன்றிய கட்டுரைகளைத் தொகுத்துப் பார்க்கும்போது எவ்வளவு எவ்வளவு நுணுக்கமான ஆராய்ச்சி உணர்வோடு இன்று மொழி கற்பித்தலை அணுக ஆரம்பித்துள்ளோம் என்பது தெரியவருகிறது.[1] இக்கட்டுரைகளை எழுதிய அனைவரும் நம் பாராட்டிற்குரியவர்கள். இனி, மொழிக் கற்பித்தலின் வரலாறு, மொழிக்கற்றல் மற்றும் கற்பித்தல் கொள்கைகள், மொழிப்பாடங்களின் உள்ளமைப்பு என்ற வரிசை யில் ஒவ்வொரு கட்டுரையாகப் பார்ப்போம்.

மனித நாகரிகத்தின் தொடக்கக் காலத்திலேயே மனிதன் தன் கருத்துக்களைப் பிறரோடு பரிமாறிக் கொள்ள மொழியைப் பயன் படுத்தினான். நாகரிகம் வளர வளர மனித மொழியும் செம்மை யடைந்தது. உணவையும் உறையுளையும் தேடி ஒவ்வோர் இடமாக அலைந்த மனிதன் பல மனிதர்களைப் பல இடங்களில் சந்தித்தான். செம்மையான கருத்துப்பரிமாற்றம் நடைபெறத் தன் மொழியைக் கற்பித்தான்; பிற மொழிகளைக் கற்றுக் கொண் டான்; எனவே, மொழிக்கற்றலும் கற்பித்தலும், மனிதர்கள்

குழுக்களாக-சமுதாயமாகச் செயல்படத் துவங்கிய காலத்தி லிருந்தே ஆரம்பித்துவிட்டன எனலாம். சுமேரியர்களின் நாகரிகத்தைப் பற்றிப் படிக்கும்போது இவ்வுண்மையை உணர லாம். சுமேரியர்கள் தம் மொழியைப் பிறருக்குக் கற்றுக் கொடுத் ததாகப் பல சான்றுகள் இன்றும் கிடைக்கின்றன. கிராமர் (S. N. Kramar) என்பவர் கி. மு. மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே படியெடுப்பவர் (Scribes) மொழிகளை வகுப்பறையில் கற்பித்ததாகக் கூறுகிறார். சுருப்பக் (Shruppak) என்ற நகரம் கிறிஸ்து பிறப்பதற்கு 2500 ஆண்டுகளுக்கு முன் நாகரிகத்தோடு வாழ்ந்த நகரம். இந்நகரத்தைப் புதைப் பொருள் ஆராய்ச்சி யாளர்கள் அகழ்ந்தெடுத்தபோது களிமண்ணாலான முத்திரைகள் கிடைத்தன என்றும் இம் முத்திரைகளில் மொழி வீட்டுப் பாடங்களை மாணவர் எழுதிக் சுற்றதற்கான பல சான்றுகள் இருந்தன என்றும் வரலாற்றாசிரியர்கள் கூறுகிறார்கள். இக்களி மண் முத்திரைகளில் இலக்கணம் முக்கிய இடம்பெற்றிருந்தது இவற்றையெல்லாம் சுமேரியர்கள் தம் தாய்மொழியைக் கற்றதற் கும் கற்பித்ததற்குமான சான்றுகளாக வரலாற்றாசிரியர்கள் சொல்வர்.

ஒரு மொழியை அயல் மொழியாக—அன்னிய மொழியாக, கற்பிக்கத் தொடங்கிய வரலாறும் சுமேரியர்களின் நாகரிகக் காலத் தொடக்கத்திலேயே ஆரம்பித்துவிட்டது. குறிப்பாக, சுமேர் நாட்டை அக்காடியர்கள் (Akkadians) வென்று ஆட்சி. புரியத் தொடங்கிய காலத்தில் ஆரம்பித்தது எனலாம். அக்காடியர் களின் மொழி வேறு; சுமேரியர்களின் மொழி வேறு. எனவே, அக்காடியர்கள் சுமேரியர்களின் மொழியைக் கற்க விரும்பினர். ஆள்பவர்கள் ஆளப்படுவோரின் மொழியைக் கற்று ஆட்சிபுரிந்த. நாகரிகம் பண்டைய நாகரிகம் என்பது இங்குக் குறிப்பிடத்தக்கது அக்காடியர்களுக்குச் சுமேரியமொழியைக் கற்பிப்பதற்கெனச் சுமே ரிய இலக்கண வல்லார் புதிய இலக்கணங்களையும் அகராதிகளை யும் எழுதினர். அக்காடியர்கள் அக்காடியன் மற்றும் சுமேரிய இரு மொழி அகராதிகளைப் (Bilingual DIctionaries) பயன்படுத்திச் சுமேரிய மொழியைக் கற்றனர். எகிப்தியர்களும் தாம்வென்ற நாடு களில் பேசப்பட்ட மொழிகளை யெல்லாம் கற்றதாக வரலாற்றுச் செய்திகள் பலஉள. உரோமானியர்கள், கிரேக்கமொழியைத் தம் குழந்தைகளுக்குக் கற்பிக்க இன்று பெருவழக்கிலிருக்கின்ற நேரடிப் பயிற்று முறையின் (Direct method) திருந்தாத பயிற்றுமுறை

யொன்றைக் கையாண்டு வந்தனர் என்பதை அறியும் போது வியப்பாக உள்ளது. உரோமானியக் குழந்தைகளின் கல்வி ஆரம்பமே இருமொழிக் கல்வி முறையாகத்தான் இருந்தது என்பர். கிரேக்கம் மற்றும் இலத்தீன் மொழிகளை அவர்கள் பள்ளியில் கற்று வந்தனர்.

இந்தியாவில் பண்டைக் காலந்தொட்டே மொழிகள் கற்கப் பட்டும் கற்பிக்கப்பட்டும் வருகின்றன, இம்மொழிகளுள் முதலாவதும் முக்கியமானதுமாக விளங்கியது சமஸ்கிருதமேயாகும். அநேகமாக இந்தியா முழுவதுமே சமஸ்கிருதம் கற்பிக்கப்பட்டு வந்தது. கி.மு. 400—ல் பாணினி முனிவரால் பாணினீயம் என்ற சமஸ்கிருத இலக்கணம் எழுதப்பட்டது, இவ்விலக்கணம் பரவலாக எல்லா மக்களாலும் கற்கப்பட்டு வந்தது. இந்தியாவின் பழம்பெரும் பல்கலைக் கழகங்களான நாலந்தா, தட்சசீலம் ஆகிய பல்கலைக் கழகங்களில் சமஸ்கிருதம் கற்பிக்கப்பட்டதாக அறிகிறோம்.

தமிழகத்திலும் இலக்கணங்கள் தமிழ் மக்களாலும் பிறராலும் கற்கப்பட்டும் வந்தன என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. 13-ஆம் நூற்றாண்டில் பவணந்தி முனிவரால் எழுதப்பட்ட நன்னூலைச் சிறந்த சான்றாகக் கொள்ளலாம். இந்தியாவிலும் சிறப்பாகத் தமிழகத்திலும் தமிழையும் ஏனைய இந்திய மொழிகளையும் அயல்மொழியாகவோ அல்லது இரண்டாம் மொழியாகவோ கற்பிக்கப்பட்டு வந்த முறையை வரலாற்று நோக்கில் காண்பது இக்கட்டுரையின் முக்கிய நோக்கமன்று என்பது கருதி இத்தோடு முடித்துக் கொள்வோம். ஆனால் தமிழ்மொழியைப் பொறுத்தவரையில் அம்மொழியை அயல்நாட்டவர்க்குக் கற்பிக்கத் தொடங்கிய காலக்கட்டத்தைப் பற்றி அறிந்து கொள்வது மிக அவசியமாகும்.

வர்த்தகத்தின் பொருட்டுத் தமிழகத்திற்கு வந்த மேலை மற்றும் கீழை நாட்டோர் பலர். அவர்களுள் ஐரோப்பியர்கள் குறிப்பிடத்தக்கவர்கள். வர்த்தகத்தின் பொருட்டு மாத்திரமே வந்த இவர்கள் தமிழ்மொழியைக் கற்க மிகுந்த ஆர்வம் கொண்டனர். தத்தம் மொழிகளில் தமிழுக்கு இலக்கணமும் சிறுசிறு அகராதிகளும் இவர்கள் எழுதினர். இவர்களுள் ஆங்கிலேயர் பணி மிகவும் போற்றத் தக்கது. வர்த்தகத்தின் பொருட்டு வந்த கிழக்கிந்திய கம்பெனியார் நம்மை ஆளத்தலைப்பட்டனர். இந்திய மக்களின் நம்பிக்கையைப் பெறுவதற்காக இந்திய மொழி

களைக் கற்றனர். இங்கிலந்திலிருந்து இந்திய நிருவாகப் பொறுப்பை ஏற்றுக் கொள்ள அனுப்பப்பட்ட ஆங்கில அதிகாரி களுக்கு இந்தியாவில் அவர்கள் வேலைக்கு அனுப்பப்படுகிற இடத் தில் வழங்கும் மொழி இங்கிலாந்திலேயே கற்பிக்கப்பட்டது. இம் மொழியறிவோடு வந்த அதிகாரிகளுக்கு இந்தியாவிலும் மறு பயிற்சி கொடுக்கப்பட்டது. தென்னிந்திய மொழிகளைப் பொறுத்தவரையில் இன்று சென்னை நுங்கம்பாக்கத்தில் செயற் பட்டு வரும் கல்வி இயக்குநர் அலுவலகத்திற்குள் நிமிர்ந்து நிற்கும் சந்தனக்கல் கட்டிடத்தில் (Madras Literary Society Library) தான் மறுபயிற்சி அளிக்கப்பட்டு வந்ததும். இக்கல்லூரியின் தோற் றத்தையும் ஆங்கில அதிகாரிகள் இங்கு திராவிட மொழிகளான தமிழ், மலையாளம், தெலுங்கு, கன்னடம், மற்றும் மராத்தி மொழிகள் கற்பிக்கப்பட்டு வந்ததையும் (The college of Fort. St, George (1812—1854) என்ற டாக்டர் நம்பி ஆரூரன் அவர் களின் கட்டுரை விளக்குகிறது. தமிழ் மொழியை அயல் நாட்ட வர்க்குக் கற்பித்த வரலாற்றில் இக்கல்லூரி முக்கியமான மைல்கல் என்றால் வெறும் புகழ்ச்சியன்று. கட்டுரையாசிரியர் கல்லூரியின் குறிக்கோள் (Object of the college) அலுவலக அமைப்பு முறை (Administrative set up ), மொழிப் படிப்பு (Language studies). தேர்வு (Examination) ஆசிரியர் நியமனம் (Recuitment of native masters) என்ற சிறிய தலைப்புக்களின் கீழ் தமிழ் அயல் மொழியாக ஆங்கிலேயர்க்குக் கற்பிக்கப்பட்டு வந்த முறைமையை மிக நேர்த்தியாகத் தொகுத்துத் தருகிறார். தமிழகத்தில் தமிழ் அயல்மொழியாகக் கற்பிக்கப்பட்டு வந்ததின் நோக்கத்தையும் முறையையும் வரலாற்றுக் கண்ணோட்டத்தில் ஆராய முற்படு வோருக்கு இக்கட்டுரை அடிப்படையாக அமையும். கட்டுரை யாசிரியர் கையாண்டுள்ள துணை நூற்கள் பட்டியல் சில முக்கிய மான குறிப்புக்களைத் தருகின்றன.

மொழிகற்றல் மற்றும் கற்பித்தல் கொள்கைகளைத் தனி யொரு பகுதியாக ஆராய்வது இக்கட்டுரையின் நோக்கமில்லை யாதலால் மொழிப் படங்களின் உள்ளமைப்பு வழி இவற்றைச் சிறிது பார்ப்போம். இன்று மொழிக் கற்றலின் சிறந்த கொள்கை களாக தூண்டல்—துலங்கல் கொள்கை (Stmulus-Response theory) கேட்டல்-பேசல் கொள்கை (Audio lingual theory) ஓர்தல் விதி பயில் கொள்கை (Cognitive-Code learing theory) ஆகியவற்றை வரிசைப்படுத்திக் கூறலாம். இவற்றுள் கேட்டல்-

பேசல் கொள்கையும், ஓர்தல் விதி பயில் கொள்கையும் தாம் இன்றைய பல மொழிப் பயிற்று முறைகளுக்கு ஆதாரமாக அமைகின்றன. இவ்விரு கொள்கைகளையும் அடித்தளமாகக் கொண்டு இரு பயிற்று முறைகள் வழக்கில் இருந்து வருகின்றன. கேட்டல்-பேசல் கொள்கையின் அடிப்படையில் உருவான பயிற்று முறையைக் கேட்டல்-பேசல் பயிற்றுமுறை (Aydic-lingual method) என்றும், ஓர்தல் விதி பயில் கொள்கையின் அடிப்படையில் உருவான பயிற்று முறையை ஓர்தல் விதி பயிற்று முறை (Eognitive method) என்றும் கூறுவர். இவ்விரு பயிற்று முறைகளும் இருவேறு உளவியல் மற்றும் மொழியியல் கொள்கைகளைக் கொண்டவை. கேட்டல் — பேசல் கொள்கை ஒழுகலாற்று உளவியலையும் (Behavioral Psychology. அமைப்பு மொழியியலையும் (structural Linguistics), ஓர்தல் விதி பயில் கொள்கை ஓர்தல் உளவியலையும் (Cognitive Psycholog) மாற்றிலக்கண மொழியலையும் (Generativ Tronsformational Grammar) ஆதாரமாகக் கொண்டவை இவ்விரு கற்றல் கொள்கைகளும் உளவியல் மற்றும் மொழியியலைப் பொறுத்தவரையில் ஒன்றிற் கொன்று கொள்கைளைக் கொண்டவை என்றாலும்மொழியைக் கற்பிக்கும் நிலையில் இவை இணைந்து செய்யப்பட்டால் மட்டுமே மொழிக்கற்றலும் கற்பித்தலும் முழுமை பெற முடியும் என்று இன்றைய பயன்பாட்டு மொழியியலாளர்களும் மொழியாசிரியர்களும் கருதுகின்றனர்.

ஒரு மொழிப்பாடங்கள் மிகவும் முக்கியம். இம்மொழிப் பாடங்களின் அமைப்பு பொதுவாக எந்தக் கற்றல் கொள்கையை ஏற்றுக் கொள்கின்றோமோ அதன் அடிப்படையில் அமையும் கேட்டல்—பேசல் கொள்கையின் அடிப்படையில் மொழிப்பாடங்கள் தயாரிக்கப்படும் போது பயிற்சிகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டும். இப்பயிற்சிகளைப் பற்றி டாக்டர் இருளப்பன் அவர்களின் கட்டுரையில் பார்ப்போம்.

Audio-lingual Exercisee A porfile in Tamil Teaching என்ற டாக்டர் இருளப்பன் அவர்களின் கட்டுரை கேட்டல்—பேசல் பயிற்று முறையில் கையாளப்படும் பயிற்சிகளின் அமைப்பைத் தெளிவாகப் படம்பிடித்துக் காட்டவில்லையென்றாலும், தமிழில் முதலாவது முயற்சி என்ற முறையில் பாராட்டுதற்குரியது தமிழாசிரியர்களுக்காக—குறிப்பாகத் தமிழை அன்னிய மொழியாகவோ அல்லது இரண்டாவது மொழியாகவோ கற்பிக்கும்

ஆசிரியர்களுக்காக இம்மாதிரியான கட்டுரைகள் எழுதப்படும் போது முழுமையான அறிவு கிடைக்கும் வகையில் எழுதப்பட வேண்டும், இக்கட்டுரை மொழிப்பயிற்று முறைகளின் வரலாற்றைத் தொட்டுத் தொடங்கி, கேட்டல்-பேசல் முறையில் பயிற்சிகளாகக் கருதப்படும் ஒரு சிலவற்றை எடுத்துக் காட்டுக்களோடு விளக்கி அடிப்படை மொழித் திறன்களைக் (Basic language skills) கற்பிப்பதற்கு எத்தனையோ பயிற்று முறைகள் இன்று வழக்கிலிருந்தாலும் கேட்டல்—பேசல் முறையே பயனுள்ள முறையாக வழங்குகிறது என்று கூறி முடிகிறது.

கட்டுரையின் பொருளுக்குள் புகுவதற்குமுன் மொழிப் பயிற்று முறைகள் வளர்ந்து வந்த வரலாற்றுச் சுவட்டில் கட்டுரை ஆசிரியரோடு சற்று நடந்து வருவோம். கட்டுரையாசிரியர் 1940-ஆம் ஆண்டு வரை இலக்கண மொழிபெயர்ப்பு முறையே (Grammar Translation method) மொழியாசிரியர்களால் பயன் படுத்தப்பட்டு வந்தது என்கிறார். அமெரிக்க ஐக்கிய நாடுகளைப் பொறுத்தவரையில் ஆசிரியர் கூறுவது உண்மையே. உலக நாடுகளெல்லாம் ஆங்கில மொழியைக் கற்பதில் ஆர்வம் காட்டி வந்ததாலும் பெரும்பாலான நாடுகள் காலனி ஆதிக்கத்திற்கு உட்பட்டிருந்ததாலும் பிற நாட்டு மொழிகளைக் கற்பதில் அமெரிக்க ஐக்கிய நாடுகளும் பிரிட்டனும் போதிய கவனம் செலுத்தவில்லை. அமெரிக்க ஐக்கிய நாடுகளைப் பொறுத்வரையில் இது இரண்டாம் உலகப்போருக்கு முந்திய நிலை. ஆனால், பிரிட்டனோ அமெரிக்க ஐக்கிய நாடுகளைப் போலல்லாமல் அவ்வப்போது அன்னிய மொழிகளைக் கற்பிப்பதில் ஆர்வம் காட்டி வந்தது. அத்தோடு புதிய பல பயிற்று முறைகளையும் வளர்த்து வந்தது. எனவே மொழிப்பயிற்று முறைகளின் வாழ்வையும் வரலாற்றையும் நாம் தொகுத்து ஆராயும் போது—குறிப்பாகத் தொடக்கக் காலத்தை பொறுத்தமட்டில் பிரிட்டனின் பங்கு மிகவும் முக்கியமானது.

1940-ஆம் ஆண்டு வரை அமெரிக்காவில் இலக்கண மொழி பெயர்ப்பு முறை அன்னிய மொழிகளைக் கற்பதில் பரவலாகப் பயன்படுத்தப்பட்டு வந்த நேரத்தில் இங்கிலாந்தில் இலக்கண—மொழிபெயர்ப்பு முறை வழக்கொழிந்து புதிய பல பயிற்று முறைகள் வளர்ந்தன. பொதுவாக, கி. பி. 18—ஆம் நூற்றாண்டில் இலத்தீன், கிரேக்கம் போன்ற பாரம்பரிய இலக்கணங்கள் கற்பிக்கப்பட்டு வந்த மரபிற்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டது. இம்மர

போடு இவ்விலக்கணங்களை கற்பிக்கப் பயன்படுத்தப்பட்டு வந்த இலக்கண மொழி பெயர்ப்பு முறையும் கிட்டத்தட்ட மறைந்து விட்டது எனலாம். இருந்தாலும் பழைய மொழிகளை விட்டுத் தற்கால மொழிகளை (Modetn languages) கற்பிக்கத் தொடங்கிய அதே நூற்றாண்டில் இலக்கண மொழிபெயர்ப்பு முறை முழுவது மகா மறைந்து விட்டது என்று கூறமுடியாது. கற்பிக்கும் உத்திகளில் சில மாற்றங்கள் ஏற்பட்டன என்றாலும் அடிப்படையில் இலக்கண—மொழி பெயர்ப்பு முறையாகவே இருந்து வந்தது. எடுத்துக் காட்டாக, பதினெட்டாம் நூற்றாண்டில் முற்பகுதியில் கார்ல் பிளாட்ஸ் (Karl plotz) என்பவர் அறிமுகப்படுத்திய பயிற்று முறையைக் கூறலாம். இம்முறையில் இலக்கண விதிகளுக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படாமல் மொழி பெயர்ப்புக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. 1886—ஆம் ஆண்டு ஹெனஸ் (Heness) என்பவர் பிளாட்சின் இப்பயிற்று முறையை விமரிசித்து இயற்கை முறை (Natural method) என்ற பயிற்று முறையை அறிமுகப்படுத்தினார். இவர் இலக்கண விதியளை உருப்போட்டு கற்கும் முறையையும் மொழி பெயர்ப்பையும் தவிர்த்து, படங்களையும் அன்றாடப் பொருள்களையும் பயன் படுத்திக் கேள்வி-பதில் என்ற முறையில் மொழிகளைக் கற்பித்தார் புதிய சொற்களை மாணவர்க்குத் தெரிந்த மற்றொரு மொழி மூலமாகவோ அல்லது தாய் மொழி மூலமாகவோ மொழி பெயர்ப்பாக இல்லாமல் விளக்கிப் பொருள் உணர்த்தினார்.

வியோதர் (Viotor) ஹெனஸின் சமகாலத்தவர். இவர் கார்ல் பிளாட்சின் பயிற்று முறையும் ஹெனஸின் இயற்கை முறையும் அடிப்படையில் இலக்கண—மொழிபெயர்ப்பு முறைகளே என்று விமரிசித்தார். மேலும் இவ்விரு முறைகளும் இலக்கண—மொழிபெயர்ப்பு முறையைப் போலவே எழுத்து மொழிக்கு முக்கியத்துவம் கொடுக்கின்றன என்றார். எழுத்து மொழிக்கு இம் முறைகளில் முக்கியத்துவம் கொடுக்கப்படுவதில் தவறில்லை. ஆனால் இதன் காரணமாகப் பேச்சு மொழி உதாசீனப்படுத்தப் படக்கூடாது என்பதை வியோதர் வற்புறுத்தினார். பின்னர் தாமாகவே Reform method என்றொரு முறையை இவர் அறிமுகப்படுத்தினார். இம்முறையில் பேச்சு மொழிக்கு முக்கியத் துவம் கொடுக்கப்பட்டது. இம்முறையே பின்னர் phonetic method என்றும் அழைக்கப்பட்டது.

வியோதரின் இக்கற்பிக்கும் முறை ஜெர்மனி, ஸ்கேண்டி நேவியா, பிரான்ஸ், இங்கிலாந்து ஆகிய நாடுகளிலுள்ள மொழி யாசிரியர்களால் பெரிதும் வரவேற்கப்பட்டது. வியோதரின் இக் கற்பிக்கும் முறையே பின்னர் நேரடிப் பயிற்று முறை (Direct method) தோன்றவும், அதனைத் தொடர்ந்து Berlitz method என்றும், Eclectic Direct methcd என்றும், Simplification method என்றும், Basic English method என்றும், Graded Direct method என்றும் பலவாகப் பெருகி வளர்ந்தது. பல ஐரோப்பிய நாடுகளில் அன்னிய மொழிகளைக் கற்பிக்க இம்முறைகளே பயன்படுத்தப் பட்டன. அமெரிக்காவிலும் இவை ஆங்காங்கே வழக்கத்தில் இருந்தன. இருந்தாலும் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் கட்டுரை யாசிரியர் குறிப்பிட்டுள்ளபடி 1939 ஆம் ஆண்டு வரை அதாவது இரண்டாம் உலகப் போர் ஆரம்பமாகும் வரை இலக்கண—மொழி பெயர்ப்பு முறைதான் பரவலாகப் பயன்படுத்தப்பட்டு வந்தது. ஆனால் அன்னிய மொழிகளைக் கற்பிப்பதில் மொழியியலின் தாக்கம் பற்றிக் கட்டுரையாசிரியர் குறிப்பிடும் போது 1941—ஆம் ஆண்டு வரை கற்பிக்கும் முறைகளில் மொழியியலின் செல்வாக்கு ஏற்படவில்லை என்பதை ஒப்புக் கொள்ள இயலாது.

---

1. (Page 170) 1981-இல் தமிழ் கற்பித்தல் குறித்துஒரு சில கட்டுரைகள் மாத்திரமே கிடைக்கின்றன. இக்காலத்தில் நூல் எதுவும் எழுதப்பட்டதாகத் தெரியவில்லை. தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளிவந்துள்ள கட்டுரைகள் இக்கட்டுரையில் விமரிசிக் கப்படுகின்றன. இருந்தாலும் பிற இந்திய மொழிகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும் போது 1981-இல் தமிழ் கற்பித்தல் பற்றி வெளியாகியுள்ள கட்டுரைகளின் எண்ணிக்கை மிகக் கூடுதல் என்றே கொள்ள வேண்டும்.

**2.** The College of Fort St George (Page 173).

**Object of the College :** The main object in founding a college at Fort. St. George was to enable the Junior civil Servants of the Establishment of Fort St. George to acquire "knowledge of the grammar, the idiom and the general connection of the languages of Southern India." Besides the learning of languages, the civil servants were also expected to acquaint themselves "with the Regulations of Government as connected with the managment of the revenues and the administration of justice."

**Administrative set up :** The college was superintended by a Board consisting of translators to the government, numbering at least three. The authority of the Board extended over all

இரண்டாவது உலகப்போர் தொடங்குவதற்கு முன்னரே—அதாவது இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்திலேயே மொழியியலின் செல்வாக்கு மொழிப் பயிற்று முறைகளில் ஆதிக்கம் செலுத்த தொடங்கிற்று. நேரடிப் பயிற்று முறை பரவலாகப் பயன்படுத்தப்பட்டு வந்த காலக்கட்டத்தில்தான் மொழியியலின் பாதிப்பு மெதுவாகப் பயிற்று முறைகளில் உண்டானது.

---

the Junior civil Servants attached to the College of Fort St. George as well as over the native masters, teachers, students of the civil service and of law. The Boards responsibility was not only confined to the studies of Junior Civil Servants but extended "to every part of their conduct, tending to affect their qualifications as public servants.

**Language studies** : Every Junior Civil Servant on hisarrival at Fort St. George was asked to select two languages for intensive study. One was from a group of five south Indian languages-Tamil, Teloogoo (Telugu), Malayalam, Carnataca (Kannada) and Mahratta; The other was from a second group consisting of Sanscrit, Hindoostanee (Hindustani), Persian and Arabic. As soon as the civil servant selected a language for study, the Board appointed a teacher to instruct him. Tutors went to the homes of the Junior Civil Servants, and taught them.

**Examination** : A student was to acquire proficinecy within a period of three years in two languages and the Board conducted two examinations each year—the first in the month of June and the second in the month of December. A reward of Rs. 3500 was granted to each Junior Civil servant on passing the language examinations. If a Civil Servant failed to pass the examinations within three years he was removed from the College and was declared ineligible for employment. Such candidates were sent back to England.

**Recruitment of Native Masters** : Detailed rules were laid down as to the appointment of native masters. Native Head Masters were appointed for English and for each language taught in the College. The Head Masters were asstisted by native teachers approved by the College Board. All teachers were required to pass examinations in English and two native languages and successful students were given certificates. A salary of Rs. 35 per month was paid to a teacher attending on only one civil servant and Rs. 50 per month for instructing two or more of the Civil Servants. A pension of Rs. 25 per month was given to teachers who had put in a service of ten years. Thus the College of Fort St. George was also serving the purpose of a teachers-training institution (Nambi Arooran 1981).

நேரடிப் பயிற்று முறையும் ஓர் அன்னிய மொழியைக் கற்பிப்பதில் சிறப்பாகச் செயல்படவில்லை என்பதை உணர்ந்த பல மொழி யாசிரியர்கள் சில திருத்தங்களை ஏற்படுத்தினர். இத்திருத் தங்களை ஏற்படுத்துவதின் மூலம் வருங்காலத்தில் நல்லதொரு கற்பிக்கும் முறையை மொழியாசிரியர்களுக்குத் தரலாம் என்பது அவர்கள் குறிக்கோளாக இருந்தது. இவர்களுள் ஹென்றி ஸ்வீட் (Henry Sweet), ஆட்டோ யெஸ்பெர்சன் (Otto Jerpersen), ஹெரால்ட் பாமர் (Harold E. Palmer) ஆகியோர் குறிப்பிடத் தக்கவர்கள்.

ஹென்றி ஸ்வீட் புகழ் பெற்ற ஆங்கில ஒப்பிலக்கண அறிஞராய்த் திகழ்ந்தவர். பயிற்று முறைகளில் மொழியியல் கொள்கைகளைப் புகுத்தி, குறிப்பாக ஒலியியல் கொள்கைகளைப் புகுத்தி மாற்றங்கள் பல செய்யவேண்டும் என்று விரும்பினார். மொழி, அறிவியல் நோக்கில் ஆராயப்பட வேண்டும் என்பதும் பயிற்றுமுறை இவ்வாராய்ச்சியின் அடிப்படையில் அமைய வேண்டும் என்பதும், பேச்சுமொழியே முக்கியமானதும் மற்றும் எழுத்து மொழிக்கு ஆதாரமானது என்பதும் ஹென்றி ஸ்வீட்டின் கொள்கைகளாகும்.[3] இவரைப் போலவே யெஸ்பெர்சனும் பேச்சு மொழிக்கு முக்கியத்துவம் கொடுத்துக் கற்பிக்கும் முறைகளில் ஒலியியல் கொள்கைகளைப் புகுத்தி பல மாற்றங்களை ஏற்படுத்தி னார். பாமர், மொழிகளைக் கற்பிப்பதில் பரிமாற்றத்திறனுக்கு (Communicative Competence) முக்கியத்துவம் கொடுத்தார் மொழியென்பது பரிமாற்றத்திற்காகப் பயன்படுத்தப்படும் ஒரு கருவி; அதனைத் தகுந்த முறையில் பயன்படுத்த வேண்டுமானால் பரிமாற்றத் திறனில் வல்லவராக வேண்டும்; பரிமாற்றத்திறன் சிறப்படைய வேண்டுமானால் நன்றாக உச்சரிக்கத் தெரிய வேண்டும்; எனவே, உச்சரிப்பு அன்னிய மொழியைக் கற்பிப்பதில் முதலிடம் பெறுகிறது என்கிறார் பாமர். உளவியல் கொள்கை

---

3. Sweet's methodological orientation can be defined on the basis of the following characteristics.
   i) The practical study of languages was in no way less scientific than the theoretical.
   ii) A good methed must be comprehensive and eclectic. It must be based on a thorough knowledge of the science of language.
   iii) Tne spoken language is the source of written language. (Renzo Titone: 1968).

களும் நல்லதொரு பயிற்றுமுறை உருவாக அடிப்படையாக அமைகிறது என்று உணர்ந்தார் பாமர். மொழியாசிரியனுக்கு மொழியியல் பல்வகைகளில் பயன்படுவதையும் அவர் விளக்கி வரைந்தார்

ஸ்வீட், பாமர், யெஸ்பெர்சன் ஆகியோரின் சீரிய பல ஆராய்ச்சிகளுக்குப் பின்னரும் அன்னிய மொழிகளைக் கற்பிக்கும் பயிற்று முறைகளில் சிறப்பாக மாற்றம் ஏதும் ஏற்பட்டுவிடவில்லை. மொழியியல் அடிப்படையில் ஸ்வீட்டும், பாமரும், யெஸ்பெர்சனும் உருவாக்கிய கொள்கைகளும் கோட்பாடுகளும் மொழியாசிரியர்களால் புறக்கணிக்கப்பட்டு வந்தன. பல மொழியாசிரியர்கள் தாங்கள் கையாண்டுவந்த இலக்கண-மொழி பெயர்ப்பு முறைக்கும் புதிய முறைகளுக்குமிடையே இருந்த இடைவெளியைக் கண்டு வியந்தனர் மொழியியல் கொள்கைகள் பயிற்று முறைகளில் ஏற்படுத்திய மாற்றங்கள் அவர்களை ஆச்சரியத்தில் மூழ்கடித்தன. ஆனால், கொள்வாரில்லாது ஸ்வீட், பாமர் மற்றும் யெஸ்பெர்சன் ஆகியோரின் கொள்கைகள் அன்னிய மொழிகளைக் கற்கும் சந்தையில் விலை போகாமல் மறையத் தலைப்பட்டன. 1900-ஆம் ஆண்டு வெளியிடப்பட்ட (Report of the Committee of Twelve) அமெரிக்காவில் அன்னிய மொழிகளைக் கற்பிப்பதில் அப்போது நிலவிய சூழ்நிலையை நமக்குப் படம் பிடித்துக் காட்டுகிறது. 1896-ஆம் ஆண்டு அமெரிக்காவிலுள்ள National Educational Association கேட்டுக் கொண்டதற்கிணங்க மேலே கூறிய கமிட்டி செயல்படத் தொடங்கியது. இக்கமிட்டியின் தலைவராக இருந்த பேராசிரியர் கால்வின் தாமஸ் (Calvin Thomas) என்பவர் கூறும் உண்மைகள் நம்மைத் திடுக்கிட வைக்கின்றன. மொழியியல் கொள்கைகளின் அடிப்படையில் அறிவியல் நோக்கில் உருவாக்கப்பட்ட பயிற்று முறைகள் இக்காலக்கட்டத்திலுள்ள மொழியாசிரியர்களை எந்த விதத்திலும் பாதிக்கவில்லை என்பதை அறியும்போது அன்னிய மொழிகளைக் கற்பிப்பதில் அமெரிக்கா, எந்த அளவிற்கு ஆர்வம் கொண்டிருந்தது என்பது தெரியவரும். எனவே, மொழியியலின் பாதிப்பும் ஆதிக்கமும் 1940-ஆம் ஆண்டிற்கு முன்னரே வேண்டிய அளவிற்கு அன்னிய மொழிகளைக் கற்பிப்பதில் ஆக்கிரமித்திருந்தன என்பதில் ஐயமில்லை.

கேட்டல்-பேசல் முறையின் அடிநாதமாக விளங்கும் பயிற்சிகளைப் பற்றி விரிவாக விளக்க வந்த கட்டுரையாசிரியர் அம்முறை

யைப் பற்றிச் சிறிது விளக்கமாகக் கூறாதது கட்டுரையின் முழுமையைப் பாதித்துள்ளது. எனவே, கேட்டல்-பேசல் முறையைப் பற்றிச் சிறிது விளக்கமாய் பார்த்துவிட்டு கட்டுரைக்கு வருவோம் கேட்டல்-பேசல் முறை அறிமுகமாவதற்கு முன்னர் இலக்கண-மொழிபெயர்ப்பு முறையே அன்னிய மொழிகளைக் கற்பிப்பதில் கோலோச்சி வந்தது எனலாம். இம்முறையின் நோக்கம் அன்னிய மொழியின் இலக்கண இலக்கியங்களை மாணவர்க்குக் கற்றுக் கொடுப்பதாகும். ஆனால் அன்னிய மொழிகளைக் கற்பதின் நோக்கம் மாற மாற பல்வேறு கற்பிக்கும் முறைகள் வளர ஆரம்பித்தன. அன்னிய மொழிகளைப் பேசுவதற்காகப் பயன்படுத்த வேண்டிய சூழ்நிலை உருவானபோது எழுத்து மொழிக்குக் கொடுத்துவந்த முக்கியத்துவம் மெதுவாகக் குறைந்து வந்தது. நேரடிப் பயிற்று முறையின் தோற்றத்திற்கு இம்மாற்றமே முக்கிய காரணமாகும். இருந்தாலும் அன்னிய மொழிகளை அன்றாட வாழ்க்கையில் கருத்துப் பரிமாற்றத்திற்காகப் பயன்படுத்த வேண்டிய சூழ்நிலை ஒரு குறிப்பிட்ட காலம்வரை உருவாகவில்லை இதனால்தான் இலக்கண-மொழிபெயர்ப்பு முறைக்குப் பின்னர் பல கற்பிக்கும் முறைகள் பேச்சு மொழியை மையமாகக் கொண்டு உருவானபோதிலும் எல்லா மொழியாசிரியர்களாலும் மிகுதியாகப் பயன்படுத்தப்படவில்லை. இரண்டாம் உலகப்போர் தொடங்குவதற்கு முன்னர் வரை அமெரிக்காவிலும்,இங்கிலாந்திலும் ஓரளவு இந்நிலையே பரவலாக இருந்தது. இரண்டாம் உலகப்போரில் ஜப்பானியரும், ஜெர்மானியரும் கலந்து கொண்ட பின்னரே அன்னிய மொழிகளைக் கற்கவேண்டிய அவசியத்தை அமெரிக்கா உட்பட உலகநாடுகள் உணர்ந்தன. குறிப்பாகப் பேச்சு மொழியின் முக்கியத்துவத்தைப் புரிந்து கொண்டன. நேரடிப் பயிற்று முறையோ, இலக்கண - மொழிபெயர்ப்பு முறையோ பேச்சு மொழியைக் கற்பிக்க எதிர்பார்த்த அளவிற்கு உதவவில்லை. இக் காலக் கட்டத்தில்தான் எழுத்துருவம் இல்லாத மொழிகளை ஆராய்ந்து கொண்டிருந்த மானிடவியல் மொழியியலாளர் பலர் விளக்க மொழியியல் (Descriptive linguisties) கொள்கைகளைப் பயன்படுத்தி பாடத்திட்டங்கள் பலவற்றை உருவாக்கினர். மொழியியலின் தாக்கம் இரண்டாம் உலகப்போருக்கு முன்னரே இத்துறையில் ஏற்பட்டிருந்தாலும் இக்காலக் கட்டத்தில்தான் மொழியியலின் தேவையும் பங்கும் எல்லோராலும் ஏற்றுக்

கொள்ளப்பட்டது. இக்காலத்திலேயே கேட்டல்-பேசல் முறையின் அடிப்படை அம்சங்கள் வேரூன்றிவிட்டன என்று கென்னத் சாஸ்டெயின் (Kenneth Chastain) கூறுகிறார்.[4]

உலகப் போர்களுக்குப் பின்னர் மொழியியல் துறையில் பெருத்த மாற்றங்கள் உண்டாயின. மொழியியல் கொள்கைகள் ஒருபுறமும் அக்கொள்கைகளை மொழிகளைக் கற்பிக்கப் பயன் படுத்திக் கொள்வதென மற்றொரு புறமுமாக மொழியியல் வளர்ந்து வந்தது. இக்காலத்தில்தான் பயன்பாட்டு மொழியியல் தோற்றம் பெற்றது. 1940-50 ஆண்டுகளுக்கிடையில் அன்னிய மொழிகளைக் கற்பிப்பதில் விளக்க மொழியியலின் செல்வாக்குக் குறைந்து அமைப்பு மொழியியலின் செல்வாக்கு வளர ஆரம்பித்தது. இச்செல்வாக்கின் பிரதிபலிப்பே கேட்டல்-பேசல் கற்பிக்கும் முறை. அமைப்பு மொழியியலின் கருத்துக்களின் அடிப்படையில் இதனை அறிமுகப்படுத்திய பெருமை ஃபிரீஸ் (Fries), நெல்சன் புருக்ஸ் (Nelson Brooks), புரூம்ஃபீல்டு (Broomfield) ஆகிய மொழியியலாளர்களைச் சாரும். கேட்டல்—பேசல் முறையின் அடிப்படைக் கருத்துக்களை டாக்டர் திருமலை தம் நூலில் விளக்கமாகக் கூறியிருக்கிறார்,[5] இம்முறை பரவலாக வற்புறுத்த வாய்

---

4. The roots of the audiolingual method are to be found in the twenties among those doing work in descriptive linguistics (Kenneth Chastain : 1969)

5. கேட்டல்—பேசல் முறையில் பின்வரும் அடிப்படைக் கருத்துக்களைச் சொல்கிறார்கள்.

(i) இரண்டாம் மொழியைத் தாய்மொழியாகப் பேசுகிறவர்களுடைய மொழித் திறமையைப் போலவே இரண்டாம் மொழியாகப் பேசுகிறவர்களுடைய மொழியாகக் கற்பவரின் திறமையையும் உயர்த்துவது இம்முறையின் குறிக்கோள். அதாவது, பேசுவதிலோ கேட்டுப் புரிந்து கொள்வதிலோ தயக்கம் காட்டாமல் தாராளமாக மொழியைப் பயன்படுத்துகிற திறமையை வளர்க்க இம்முறை முயல்கிறது.

(ii) மேற்சொன்ன குறிக்கோளை அடைய வேண்டுமானால் கற்பவனின் தாய் மொழியைப் பயன்படுத்தாமல் பயிற்சி தருவது பலனளிக்கும். தாய்மொழியை வகுப்பில் பயன்படுத்துவது தடை செய்யப்படுகிறது.

(iii) மொழி என்பது மொழித் திறன்களின் கோவை என்று கேட்டல்—பேசல் முறை அறிஞர்கள் கருதுகிறார்கள். இத்திறன்கள் நான்கு வகைப்படும். அவை கேட்டுணருந்திறன், பேசுந்திறன், வாசிக்குந்திறன், எழுதுந்திறன் என்பன ஆகும்.

(iv) மொழியைக் கற்பிப்பது என்பது கற்பிக்கப்படும் மொழியில் மேற்சொன்ன திறன்களைப் பெற்றுக்கொள்வதும் அத்திறன்களை வளர்ப்பதும் ஆகும்.

மொழிப் பயிற்சி (Drills)· இவ்வாய் மொழிப் பயிற்சியைப் பற்றிக் கூறுவதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும். ஆனால் இந்நோக்கத்தைத் திருப்தி செய்யும் வகையில் கட்டுரை அமையவில்லை.

Drills மற்றும் Exercises என்ற இரு சொற்களையும் ஒரு பொருள் குறிக்கும் இரு சொற்களாகக் கட்டுரையாசிரியர் கூறுகிறார். தவிரவும் Drills என்றால் என்னவென்றோ Exercises என்றால் என்னவென்றோ அவர் எங்கும் குறிப்பிடவில்லை.

---

v. மொழித் திறன்களைக் கற்றுத் தருவதிலும் வளர்ப்பதிலும் இயல்பான வரன்முறையைப் பயன்படுத்த வேண்டும். இந்த இயல்பான வரன்முறை எது? நாம் தாய்மொழியைப் பயன்படுத்த அறிந்து கொள்ளும் போது முதலில் பேசுவதற்கு முன்பாகக் கேட்டுணருந்திறனைப் பெறுகிறோம் அல்லவா? அதாவது, நாம் சிறு குழந்தையாய் இருக்கும் போது பேசத் தொடங்குவதற்கு முன்பாகவே நம்மிடம் பேசப்படுகிறவற்றில் ஒரு சிலவற்றையாவது கேட்டுணருந்திறனை ஏற்படுத்திக் கொள்கிறோம். கேட்டுணருந்திறன் நம்மிடம் உண்டான பிறகே பேசுந்திறன் வளர்கிறது. நம் வாழ்நாள் முழுவதும் பேசுந்திறனைக் காட்டிலும் நமது கேட்டுணருந்திறன் வலு மிகுந்ததாக அமைந்திருக்கிறது. எந்த மனிதனுக்கும் எந்தச் சூழ்நிலையிலும் கேட்டறியுந்திறனே பேசுந்திறனைவிட அதிகமாக இருக்கும். ஆகையால் மாணவர்களுக்கு அவர்கள் கற்கும் இரண்டாவது மொழியில் முதலில் கேட்டுணருந்திறனையும் அதையடுத்துப் பேசுந்திறனையும் வாசிக்கும் திறனையும் அதனையடுத்து எழுதுந் திறனையும் கற்பிக்க வேண்டும்.

(vi) மேற்சொன்ன காரணத்தால் தொடக்கக் காலத்தில் மாணவர்களை அவர்கள் கற்கும் மொழியில், கேட்டுணர்ந்திராததைப் பேசச் சொல்லவோ பேச முடியாததை வாசிக்கச் சொல்லவோ, வாசிக்கமுடியாததை எழுதச் சொல்லவோ கூடாது.

(vii) மேற்சொன்ன நான்கு திறன்களிலும் பேசுந்திறனும் கேட்டுணருந்திறனும் மிக முக்கியமானவை. எனினும் வாசிக்கும் திறனும் புறக்கணிக்கப்பட மாட்டா. ஆனால் அவைகளின் முக்கியத்துவமோ முந்தியதைவிடக் குறைவே.

(viii) நான்கு மொழித் திறன்களையும் அவற்றின் முக்கியத்துவத்தின் அடிப்படையில் வரிசைப்படுத்திக்கொண்டாலும் கற்கிறவரின் தேவைக்கு ஏற்றவாறு வாசிக்கும் திறனையும் எழுத்துத் திறமையுமோ அன்றிக் கேட்டுணருந்திறனையும் பேசுந்திறமையுமோ தனித்தனியாகக் கற்றுத்தர முடியும் என்றும் நம்புகிறார்கள்.

(ix) தேவைப்பட்ட திறன்களைப் பெறுவதற்கும் வளர்ப்பதற்கும் உரிய கற்கும் - கற்பிக்கிற சூழ்நிலைகளை அமைத்துக்கொள்ள வேண்டும். இச்சூழ்நிலைகளில் கொடுக்கப்பட்ட கேள்விகளுக்கு, தூண்டுதலுக்குப் பொருந்தமான பதிலைத் தரும்படி மாணவர்களுக்குப் பயிற்சிகள் கொடுக்கப்படுகின்றன.

Drslls என்பது வேறு; Exercises என்பது வேறு.[6] தமிழில் Drills என்பதை வாய்மொழிப் பயிற்சிகள் என்றும், Exercises என்பதை எழுத்துப் பயிற்சிகள் என்றும் மொழிபெயர்க்கலாம். கட்டுரை யாசிரியர் காட்ட முற்படுவது வாய்மொழிப் பயிற்சிகளே தவிர எழுத்துப் பயிற்சிகள் அல்ல. எனவே, Drills என்ற சொல்லையே எல்லா இடங்களிலும் பயன்படுத்தியிருக்க வேண்டும்.

---

(x) பதில்களைப் பாடப்பயிற்சியின் மூலம் மனதிலாக்குவதும் வேண்டும்போது பயன்படுத்துகிற திறமையை வளர்ப்பதும் இம் முறையின் நோக்கமாகும். இம்முறையில், பயிற்சியின் போது ஒரு ஒலியோ, சொல்லோ, தொடர்களோ, வாக்கியங்களோ மாணவர் களுக்குக் கொடுக்கப்படும். இவ்வாறு கொடுக்கப்பட்டவற்றை ஆசிரியர் கூறுவதுபோல மாணவர்கள் அமைக்கவேண்டும். மாண வரின் பதில் முடிந்ததும் ஆசிரியர் சரியான பதிலைச் சொல்வார்.

(xi) பயிற்சியின் போது மொழியமைப்புக்களைப் பற்றிய விளக்கம் எதும் இல்லாமலே எவ்வாறு மொழியமைப்புக்கள் அமை கின்றன என்பதைக் காட்டுவதாகும். அதோடு விளக்கம் ஏதும் இல்லாமலேயே தானாகவே தயக்கம் இல்லாமல் மொழியமைப்புக் களைப் பயன்படுத்துகிற திறமையை வளர்ப்பதும் பயிற்சியின் நோக்கமாகும் (திருமலை:1977).

6. எட்வர்டு ஸ்டேக் (Edward stack) An Introduction to Language, Labcratory என்ற தம்நூலில் Audio lingual Exercises என்ற சொற்றொடரில் drills என்ற சொல்லுக்குப் பதிலாக Exercises என்ற சொல்லைப் பயன்படுத்தியுள்ளனர் என் பதை அறிவேன். இன்று drills என்பதையும் exercise என்பதை யும் வேறுபடுத்திக்காட்ட வேண்டிய கட்டாயநிலை உருவாகி யுள்ளது. மொழிகற்பிப்பதில் வாய்மொழிப்பயிற்சிகளுக்கு முக்கியத் துவம் கொடுக்க வேண்டும் என்றும், இப்பயிற்சிகள் மூலமாக மட்டுமே அன்னியமொழியின் சரியான உச்சரிப்பையும் அம்மொழி யைத் தாய்மொழியாகப் பேசுவோரின் பேச்சு வேகத்தையும் பெற முடியும் என்றும் கேட்டல் - பேசல் கோட்பாடு நிறுவுகிறது. மட்டுமின்றி அன்னிய மொழியின் இலக்கண விதிகளை இலக்கணம் கற்கின்றோம் என்ற உணர்வில்லாமலேயே மாணவர்க ற்றுக் கொள்ளவும் தங்குதடையின்றி வாக்கியங்களை உருநாக்கவும் இத் தகைய வாய்மொழிப் பயிற்சிகள் தேவை என்றும் இக்கோட்பாடு வலியுறுத்துகிறது. மொழி பயில்தலில் கேட்டல் - பேசல் கோட் பாட்டைப் பொறுத்தவரையில் மேலே குறிம்பிட்டவை அதன் கொள்கைகளுமாகும். கேட்டல் - பேசல் கோட்பாடு எவ்விதச் சவாலுமின்றி உயர்தனிக் கோட்பாடாக மொழி கற்பித்தலிலும், பயிலுதலிலும் அரசோச்சி வந்த காலம்வரை (audio lingual drills) என்பதனை audio lingual exercises என்று கூறி வந்தது சரியாக இருந்தது. ஆனால் 1964-ஆம் ஆண்டு ஜான் கரோலின் John F. Carroll) கட்டுரையொன்று கேட்டல் - பேசல்' கோட்பாட்டின் ஆதாரத்தையே, கேள்விக்குறியாக மாற்றிவிட்டது. மட்டுமின்றி கற்பிக்கும் முறையில் ஓர்ந்து கற்கும் முறையின் (Cognitive code

வாய்மொழிப் பயிற்சி என்றால் என்ன? ஓர் அன்னிய மொழியைக் கற்கும் போது அம்மொழியைப் பேசுவோர் பேசுவது போல ஒரு சிறந்த கலை. இக்கலை கைவரப்பெற சிறந்த பயிற்சி தேவை. இப்பயிற்சியே வாய்மொழிப் பயிற்சி எனப்படுகிறது. பேசும் போது கைக்கொள்ள வேண்டிய வேகம், அம்மொழியைப் பேசுவோர் உச்சரிப்பது மாதிரி உச்சரித்தல், பிழையறப் பேசுதல் ஆற்றொழுக்கோடு குரலில் ஏற்றத்தாழ்வு கொடுத்துப் பேசுதல் ஆகியவை பேசுதலின் சிறப்பு அம்சங்களாகும். இவற்றை அன்னிய மொழியில் பெறுதல் மிகவும் முக்கியமானது. நல்லதொரு மொழிப்பயிற்று முறை இவ்வாற்றலைக் கற்பவர் பெறும் வகையில் அமைய வேண்டும். இவ்வாற்றலை அடிநாதமாகக் கொண்டது தான் கேட்டல்—பேசல் கொள்கை (Audio lingual Theory) இக் கொள்கை மொழியைக் கற்றலில் மேற்கூறிய ஆற்றலைப் பெறும் வகையில் வாய்மொழிப் பயிற்சிக்கு முக்கியத்துவம் கொடுக்கிறது.

எழுத்துக் கலைப் பயிற்சிகள் வாய்மொழிப் பயிற்சிமூலம் கற்ற மொழிக்கூறுகள் மனத்தில் பதியத் துணைபுரிகின்றன. இவை கற்ற மொழிக் கூறுகளை மீண்டும் மீண்டும் பயன்படுத்த வாய்ப்பளிப்ப தால் மொழிக் கூறுகள். மனத்தில் ஆழமாகப் பதிந்து மேன்மேலும் சிறப்படைகின்றன. ஜூலியன் டாகின் (Julian Dakin) என்பவர் வாய்மொழிப் பயிற்சிகள் மொழித்திறனை (Linguistic competence) வளர்க்கப் பயன்படுகின்றன என்றும், எழுத்துப் பயிற்சிகள் அம்மொழித்திறனைப் பயன்படுத்தும் முறைகளைக் (Performance strategies) கற்றுக்கொள்ளப் பயன்படுகின்றன என்றும் கூறு கிறார்.[7] பின்னர்க் குறிப்பிட்ட ஆற்றலைப் பெற மொழித் திறனைப் பற்றிய அறிவு அவசியம் தேவை என்கிறார் அவர்.

---

learning theory) முக்கியத்துவத்தையும் தெளிவுப்படுத்தியது. இக் கற்பிக்கும் முறை வாய்மொழிப் பயிற்சிகளுக்கு முக்கியத்துவம் கொடுப்பதில்லை. வாய்மொழிப் பயிற்சி அர்த்தமற்ற மொழிப் பயிற்சி என்றும் நிறுவியது. ஆனால் எழுத்துப் பயிற்சிகளுக்கு இக் கற்பிக்கும் முறையில் முக்கிய இடம் கொடுக்கப்பட்டது. எனவே, வாய்மொழிப் பயிற்சி கேட்டல் - பேசல் முறைக்கு மட்டுமே உரியது. அதனால் கேட்டல் - பேசல் முறையைப் பற்றிப் பேசும் போது exercises என்ற பொதுவான சொல்லைப் பயன்படுத்துவது சரியன்று.

7. Drills are concerned with seleeted structures, exercises with selected activities. In a drill the students attention is concentrated on giving a grammatcially correct response. In an exercise he has to find an appropriate and adequate answer,

வாய்மொழிப் பயிற்சிக்கும் எழுத்து மொழிப் பயிற்சிக்குமிடையே யுள்ள வேற்றுமைகளை டாக்டர் திருமலை தம் நூலில் தெளிவாக விளக்குகிறார்.[8]

கேட்டல்—பேசல் கொள்கையில் வாய்மொழிப் பயிற்சிகளை வகைப்படுத்துவது முக்கியமான அம்சமாகக் கருதப்படுகிறது. கிறிஸ்டியானா பால்ஸ்டன் (Christiana Bratt Paulston) இவற்றை மூன்றாக வகைப்படுத்துவார்.[9] அவை 1) மொழிக் கூறுகளை இயல்பாகக் கற்றுக் கொள்ளப் பயன்படுத்தும் வாய்மொழிப் பயிற்சிகள் (Mechanical drills); 2) மொழிக் கூறுகளைப் பொருளுணர்வோடு கற்றுக்கொள்ளப் பயன்படுத்தும் வாய்மொழிப் பயிற்சிகள் (Meaningful drills); 3) பரிமாற்றத்தினை வளர்த்துக் கொள்ளப் பயன்படுத்தும் வாய்மொழிப் பயிற்சிகள் (Communicative drills). ஜூலியன் டாகின் முதல்வகை வாய் மொழிப் பயிற்சிகளை பொருளற்ற வாய்மொழிப் பயிற்சிகள் (Meaningless drills) என்பார்.[10] கட்டுரையாசிரியர் இவ்வகைகளைப் பற்றி எதுவும் குறிப்பிடாதது கட்டுரைக்கு நிறைவு தரவில்லை. மேலும்

---

The purpose of drill is to develop the students competence to practice and consilidate his knowledge of the Language.

The purpose of an exercise is to develop the student's repertoire of performance strategies. Exercizes presuppose a certain knowledge of the linguistic rules and they may also increase it (Julian Dakin : 1973.

8. வாய்மொழிப் பயிற்சிக்கும் எழுத்துப்பயிற்சிக்கும் சில வேற்றுமைகள் உண்டு. முதலில் பெயரின் பொருளை ஒத்து வாய் மொழிப் பயிற்சி என்பது உரக்கப் பேசிச் செய்வதாகும். எழுத்துப் பயிற்சியிலோ பதில்கள் எழுத்தில் எதிர்பார்க்கப்படுகின்றன. மேலும், வாய்மொழிப் பயிற்சியில் ஆசிரியரின் நேரடிப்பார்வை உண்டு. ஆசிரியர் கொடுக்கும் குறிப்புக்களும் மாதிரிகளும் அதிகம். வாய்மொழிப்பயிற்சியைத் தனிநபர் பயிற்கயாகவோ வகுப்பு முழுவதுமே ஒன்று சேர்ந்து செய்கிற குழுப்பயிற்சியாகவோ அமைக்கலாம். எழுத்துப்பயிற்சியைத் தனிநபர் என்றே சொல்ல வேண்டும்.

மேலும், வாய்மொழிப் பயிற்சியில் ஒரு கேள்விக்கு ஒரே ஒரு சரியான பதிலைத்தான் எதிர்பார்க்கிறோம்; தரமுடியும் ஆனால், எழுத்துப் பயிற்சியிலோ ஒரு கேள்விக்குப் பல வகையாகப் பதில் களைத் தர வாய்ப்பு உண்டு.(திருமலை:1977)

9. Christiana Bratt Paulston (1970)

10. Julian Dakin (1973)

கேட்டல்-பேசல் கொள்கையில் வெகுவாகப் பாராட்டப்பட்ட வாய்மொழிப் பயிற்சிகள் எவ்வாறு ஏனைய கற்றல் கொள்கை களில் பிற்காலத்தில் ஏற்றுக் கொள்ளப்பட்டது என்ற ஒரு வரலாற்றுக் கண்ணோட்டத்தையும் வாசகர்க்குத் தர முடியாமல் போனதற்குக் காரணமாகி விட்டது.

வாய்மொழிப் பயிற்சிகளை வகுப்பறையிலும் மொழிப் பயிற்சிக் கூடத்திலும் (Language Laboratory) மாணவர்க்குக் கொடுக்கலாம். ஆனால் வகுப்பறையில் கொடுக்கின்ற வாய் மொழிப் பயிற்சிகளின் அமைப்பும் மொழிப்பயிற்சிக் கூடத்தில் கொடுக்கின்ற வாய்மொழிப் பயிற்சிகளின் அமைப்பும் வேறுபாடு உடையதாக இருக்கவேண்டும். ஏனெனில் வகுப்பறைச் சூழ்நிலை வேறு; மொழிப்பயிற்சிக் கூடத்தில் மாணவர்க்குக் கிடைக்கின்ற சூழ்நிலை வேறு. வகுப்பறையில் கொடுக்கின்ற வாய்மொழிப்பயிற்சி களையே மொழிப்பயிற்சிக் கூடத்திலும் கொடுப்போமேயானால் மொழிப் பயிற்சிக் கூடத்தின் தேவையும் சிறப்பும் தாம் என்ன? எனவே, மொழிப் பயிற்சிக் கூடத்தில் கிடைக்கின்ற வசதிகளைப் பயன்படுத்தி வாய்மொழிப் பயிற்சிகளை உருவாக்க வேண்டும். அதேமாதிரி வகுப்பறையில் கிடைக்கின்ற மிகக் குறைவான வசதி களைக் கொண்டு வாய்மொழிப் பயிற்சிகள் உருவாக்கப்பட வேண்டும். கட்டுரையாசிரியர் இவ்விருவகை பயிற்சிகளுக்கு மிடையேயுள்ள வேறுபாட்டை நன்கு காட்டவில்லை. கட்டுரை முழுவதும் இக்குழப்ப நிலையை நன்கு உணரமுடிகிறது. எடுத்துக் காட்டாக, ஓர் அன்னிய மொழியின் உச்சரிப்பைப் பெறப் பயன் பயன்படுத்தும் உச்சரிப்புப் பயிற்சியைக் (Phonological drills) குறிப்பிடலாம். கட்டுரையாசிரியர். ஸ்டேக்கின் மாதிரியில் இவ்வுச்சரிப்புப் பயிற்சியைக் கொடுத்துள்ளார். என்று நான் நினைக்கிறேன். இப்பயிற்சியை மொழிப் பயிற்சிக் கூடத்தில்தான் சிறப்பாக நடத்த முடியும். சில வாய்மொழிப் பயிற்சிகளின் அமைப்பு வகுப்பறைப் பயிற்சிக்கும் மொழிப்பயிற்சிக் கூடப் பயிற்சிக்கும் பொதுவாக அமையலாம். இருந்தாலும் மாணவர்க்கு அளிக்கின்ற முறையில் (Presentation) நிச்சயமாக வேறுபாடு உண்டு. இதனைக் கட்டுரையாசிரியர் நன்கு காட்டவில்லை.

பொதுவாக வாய்மொழிப் பயிற்சியைப் பொறுத்த வரையில் அவற்றை மாணவர்க்கு அளிக்கின்ற முறை மிகவும் முக்கியமானது. மொழிப்பயிற்சிக் கூடத்திற்கென வாய்மொழிப் பயிற்சிகளைத்

தயாரிக்கும் போது மொழியாசிரியர் இதில் கவனமாக இருக்க வேண்டும். வாய்மொழிப் பயிற்சிகளை அளிக்கின்ற முறையிலேயே மொழிப் பயிற்சிக்கூட வாய்மொழிப் பயிற்சிகளுக்கும் வகுப்பறை வாய்மொழிப் பயிற்சிகளுக்குமிடையே வேற்றுமையை நன்கு காட்ட முடியும். இவ்வேற்றுமை தேவையும் கூட. இப்பயிற்சிகளைத் தொடர்ந்து வருபவை தேர்வுக்காகப்(Testing) பயன்படுத்தும் வாய்மொழிப் பயிற்சிகள். மொழிக் கூறுகளை வாய்மொழிப் பயிற்சிகளின் மூலம் எந்த அளவிற்கு மாணவர்கள் கற்றுத் தேர்ந்துள்ளனர் என்பதை சோதனைச் செய்ய இவற்றைப் பயன்படுத்த வேண்டும். இப்பயிற்சிகளும் அமைப்பில் வேறாக இருக்கும். கட்டுரையாசிரியர் இவ்வேறுபாட்டையும் தெளிவாகக் கூறவில்லை. மொத்தத்தில் கேட்டல்-பேசல் கொள்கையின் அடிப்படையிலான வாய்மொழிப் பயிற்சிகளைப் பற்றி ஒரு சிறிய குறிப்பைக் கட்டுரையாசிரியர் கொடுத்துள்ளார் என்று திருப்தி அடைந்து கொள்ளலாம்.

பயன்பாட்டு மொழியியலில் முக்கியமான பகுதியாகக் கருதப் படுவது மொழி கற்பித்தல். இம்மொழி கற்பித்தலின் சிறப்பான கொள்கைகளாக இன்று இரண்டினைக் குறிப்பிடுவர் பயன்பாட்டு மொழியியலாளர்கள். ஒன்று உறழ்வு ஆய்வு(Contrastive Analysis) மற்றொன்று பிழை ஆய்வு (Error Analysis)மொழி பயில்தலிலும் கற்பித்தலிலும் இவ்விரு கொள்கைகளின் இன்றியமையாமைக் காரணமாக இவற்றிற்கு மிகுந்த முக்கியத்துவம் கொடுக்கப்பட்டு வருகிறது.

உறழ்வு ஆய்வும் பிழை ஆய்வும் பொதுவாக மொழி கற்றலின் போது மாணவர் செய்யும் பிழைகளின் அடிப்படைக் காரணத்தை ஆராய்கின்றன. இவ்விரண்டிற்கு மிடையேயுள்ள வேறுபாடு: உறழ்வு ஆய்வு மாணவர் செய்யும் பிழைகளுக்கெல்லாம் அன்னிய மொழியில் மாணவரின் தாய்மொழி இடையீடே (Interferenee) காரணம் என்றும், பிழை ஆய்வு மாணவர் செய்யும் பிழைகளுக்குத் தாய்மொழி இடையீட்டைத் தவிர வேறுசில காரணங்களும் உள என்றும் கூறுவதாகும். ஆய்வின் முடிவில் இவ்விரு கொள்கைகளும் முறையான-சரியான மொழிப்பயிற்சிகளை மாணவர்க்கு அளிக்க வற்புறுத்துகின்றன. ஆக, இரு கொள்கைகளின் அடிப்படை ஒற்றுமையும் நோக்கமும் மாணவர் செய்யும் பிழைகளின் மூலக் காரணத்தைக் கண்டு பிடிப்பதாகும் எனலாம்,

திரு. நடராசப் பிள்ளை மற்றும் திருமதி விமலா அவர்களின் ''தமிழை இரண்டாம் மொழியாகக் கற்பவரின் பிழைகள்: ஓர் ஆய்வு'' என்ற கட்டுரை இந்திய மொழிகளின் நடுவண் நிறுவனத்தில் தமிழை இரண்டாம் மொழியாகப் பயின்ற மாணவர்களின் கட்டுரை, குறிப்பேடுகளில் கண்ட பிழைகளை ஆராய்கிறது. பிழை ஆய்வு பிழைகளின் மூலக்காரணத்தை அறிந்து, அவற்றைப்பின்னர் வகைப்படுத்தி ஆராயும் படிப்பாகும் என்று பார்த்தோம். கட்டுரையாசிரியர்கள் இதனை மனத்திற்கொண்டு மாணவர் செய்த பிழைகளை 1. எழுத்துப் பிழைகள் 2. உருபனியற் பிழைகள் 3. புணர்ச்சிப் பிழைகள் 4. தொடரியற் பிழைகள் 5. சொற் பிழைகள் என ஐந்தாக வகைப்படுத்தி இக்கட்டுரையில் ஆராய்கின்றனர். தமிழில் முதலாவது முயற்சி என்பதாலும் பிழைகளை வகைப்படுத்தித் தெளிவாக எடுத்துரைப்பதாலும் கட்டுரையாசிரியர்கள் நம் முழுப் பாராட்டைப் பெறுகின்றனர். இருந்தாலும் சில பிழைகளின் மூலக் காரணத்தைக் கூறும்போது இன்னும் கொஞ்சம் தெளிவாகக் கூறியிருக்கலாமோ என்ற எண்ணம் எழுகிறது.

எடுத்துக் காட்டாக, 'பயில்மொழி எழுதுமுறை' என்ற பகுதியில்

''னாத்தம் 'நாத்தம்'
வந்தாந் 'வந்தான்'
அவந் 'அவன்'
னகரம் 'நகரம்'

இவை போன்ற பிழைகளுக்குத் தமிழின் எழுத்துமுறையே காரணம். தகரத்திற்கு முன்னரும் சொல் முதலிலும் /ந/ வருமென்றும், /ன/ மற்ற இடங்களில் வருமென்றும் அவைகளின் வருமுறை கூறப்பட்டிருப்பினும் இவ்விதி தன்னகப்படுத்தப் படாத காரணத்தால் பிழை செய்கிறார்கள் (P. 58-59)'' என்கிறார்கள் கட்டுரையாசிரியர்கள். மேற்காட்டிய பிழைகளுக்குப் பயில்மொழியின் எழுதுமுறை முக்கிய காரணம் என்பதைவிட (ந) மற்றும் (ன) என்ற இரு வரிவடிவங்களுக்கிடையே உச்சரிக்கின்ற அளவில் வேறுபாடு இல்லாமலிருப்பதே மூலக் காரணம் என்றால் மிகவும் பொருத்தமாக இருக்கும்.

தமிழில் /ந/, /ன/ என்பனவற்றை ஒரே மாதிரியாக உச்சரிக்கிறோம். அதாவது இவ்விரண்டு மூக்கொலியன்களையும் நாவளை

மூக்கொலியாக உச்சரிக்கிறோம். வரிவடிவில் காணப்படுற வேற்றுமை ஒலிவடிவில் இல்லை. இதன் விளைவாக (n) என்ற நாவளை மூக்கொலியன் ஒலிக்கும் இடங்களிலெல்லாம் /ந/ என்ற வரிவடிவத்தையோ அல்லது /ன/ என்ற வரிவடிவத்தையோ பிழையாக மாணவர்கள் எழுதிவிடுகின்றனர். ஒலிவடிவில் இவ்விரண்டு வரிவடிவங்கட்கும் இடையேயுள்ள வேறுபாட்டை மொழியாசிரியர் கற்பதற்கியலாது. ஏனெனில் தமிழைத் தாய் மொழியாகப் பேசுபவர்களே இவ்விரு வரிவடிவங்களையும் ஒன்றாகத்தான் உச்சரிக்கிறார்கள். இதன் பொருள் இவ்விரு வரிவடிவங்களுக்கும் இருவேறு ஒலிவடிவங்கள் தமிழில் இல்லை என்பதன்று. இன்று தமிழர்களால் பேசப்பட்டு வரும் தமிழில் இவ்வேறுபாடு இல்லை என்பதே பொருந்தும். இதனால் மொழி யாசிரியர்க்கு இவ்விரு வரிவடிவங்களும் தமிழில் எங்கெல்லாம் எழுதப்படுகின்றன என்பதைக் கூறுவதைத் தவிர வேறு வழி இல்லை. எனவே, தமிழில் இவ்வரிவடிவங்கள் எழுதப்படும் இடங்களை மாணவர்க்கு ஒரு விதியாகக் கற்பிக்கலாம்.

ஆக, ஓர் இலக்கண விதியை மாணவர் தன்னகப்படுத்திக் கொள்ளவில்லை என்பதற்கும் தன்னகப்படுத்திக் கொள்ள இயலாதவாறு மற்றொரு பிரச்சினை முட்டுக்கட்டையாக இருக் கிறது என்பதற்கும் வேறுபாடு உண்டு. தமிழ் எழுத்துக்களைக் கற்பிக்கும்போது ஒரு மொழியாசிரியர் (ந) கரமும் (ன) கரமும் தமிழில் வரும் இடங்களை ஒரு விதியாகக் கற்பித்த பின்னரும் மாணவர் தவறிழைக்கின்றனர் என்றால் இவ்விரு எழுத்துக் களிடையே காணப்படும் ஒலி ஒற்றுமையும் இதற்கு முக்கிய காரணம் என்பதை நாம் தெளிவுபடுத்தியாக வேண்டும்.

இரண்டாவதாகத் 'தாய்மொழி இடையீடு' என்ற கட்டுரை யாசிரியர்களின் பகுதியை எடுத்துக் கொள்வோம். "தமிழின் வல்' மெல் வினைப்பாகுபாடு தாய்மொழியில் இல்லாதிருக்கும்போது இப்பிழைகள் செய்யப்படுகின்றன. பெரும்பாலும் கன்னடத்தைத் தாய்மொழியாகக் கொண்டவர்களே இப்பிழைகளை அதிகமாகச் செய்திருக்கின்றார்கள்.

இரு, கொடு போன்ற வினைகள் கன்னடத்திலும் இருக் கின்றன. ஆனால் தமிழின் மெல்வினைகள் போன்று பயன்படுத்தப் படுகின்றன. எனவே அவைகளின் 'செய' எனும் வாய்பாட்டு வினையெச்சம் பிழையாகின்றது.

அ. இர வேண்டும்
ஆ. இரலாம்
இ. கொடவில்லை
ஈ. கொட வேண்டும்
உ. கொடமாட்டேன் (P. 61,''

இப்பகுதியில் (அ) தொடங்கி (உ) வரையிலான பிழைகளுக்குக் காரணமாக இருந்த கன்னடச் சொற்றொடர்களையும் கீழ்க் கண்டவாறு கொடுத்திருக்கலாம்.

| | தமிழ் | கன்னடம் |
|---|---|---|
| அ. | இரவேண்டும் | இர பேகு |
| ஆ. | இரலாம் | இர பகுது |
| இ. | கொடவில்லை | கொடவில்லா |
| ஈ. | கொட வேண்டும் | கொட பேகு |
| உ. | கொடமாட்டேன் | கொடவதில்லா |

இப் பிழைகளுக்கு வல்/மெல் வினைப்பாகுபாடு கன்னட மொழியில் இல்லாதது ஒரு முக்கிய காரணம் என்பதோடு வேர் வினைச் சொற்களில் தமிழுக்கும் கன்னட மொழிக்கும் இடையே காணப்படும் வடிவ ஒற்றுமையும் (Form Similarity) காரணமாக அமையலாம் என்று கூறலாம்.

'வழக்கு வேறுபாடுகளும் இரண்டாம் மொழி பயில்தலில் மொழித் திறனின் பங்கும்' என்ற டாக்டர் நடராசப் பிள்ளையின் கட்டுரை மொழி கற்றலில் சோம்ஸ்கியின் மொழித் திறனின் பங்கை விளக்குகிறது. முழுமையான மொழியறிவை வெறுமனே மொழித் திறனால் மட்டும் பெற்றுவிட இயலாது. முழுமையான மொழியறிவை மொழித்திறனும்,மொழிச்செயலும் (performance) பரிமாற்றத் திறனும் (Communicative Competence) இணைந்த நிலையிலேயே பெற இயலும். மொழித் திறனை வளர்க்க இலக்கண விதிகளைத் தன்னகப்படுத்திக் கொள்வதைப் போல பரிமாற்றத்திறனை வளர்க்க பரிமாற்ற விதிகளை (Communicative rules) அன்னிய மொழிபயிலும் மாணவர்கள் தன்னகப்படுத்திக்கொள்ள வேண்டும். ஏனெனில், இலக்கண விதிகளை மட்டும் கற்றுக்கொள்வதால் தாம் கற்கின்ற மொழியைத் தாய்மொழியாகப் பேசுபவர்களைப் போல் பேசிவிட இயலாது. இலக்கணவிதிகளுக்கும் மேலாக யாரிடம், எங்கே, எப்படி, எப்போது தாம்கற்கும் மொழியைப் பயன்படுத்துகிறோம் என்பதை மாணவர்கள் நன்றாக

அறிந்திருக்க வேண்டும். பயன்பாட்டு மொழியியலாளர்களாலும் மொழியாசிரியர்களாலும் இன்று பரவலாக ஆராயப்பட்டுவரும் இக்கூறுகளை முதற்பகுதியில் தெளிவாக விளக்குகிறார் கட்டுரையாசிரியர்.

இரண்டாவது பகுதியில் கட்டுரையாசிரியர் மொழி வழக்குகளிடையே காணப்படும் வேறுபாடுகள் மொழியாசிரியர்க்கும் மாணவர்க்கும், சவாலாக அமையும் இயல்பைக் காட்டுகிறார். தமிழ் வழக்கு நிலைகளைக் கீழ்வருமாறு காட்டலாம்.

1. இரு வழக்கு நிலை
2. நிலைபேறு வழக்கும் சமுதாய வழக்கும்
3. வட்டார வழக்கும் சமுதாய வழக்கும்
4. துறை வழக்கும் குறு மொழியும்

இவ்வழக்கு நிலைகளில் எந்த வழக்கை மாணவர்க்குக் கற்பிப்பது என்பதும், ஏதாவதொரு வழக்கை மட்டுமே மொழிப் பாடங்களுக்குப் பயன்படுத்திக் கொண்டால் மற்ற வழக்குகளில் மாணவர்க்கு எவ்வாறு பயிற்சி கொடுப்பது என்பதும் இன்றைய மொழியாசிரியர்களிடையே எழுந்துள்ள பிரச்சினைகள். இப்பிரச்சினைகளில் அகப்பட்டுக் கொள்ளாமல் தமிழை அன்னிய மொழியாகக் கற்பிக்கும் மொழியாசிரியர்கள் நிலைபேறு வழக்கை மட்டும் கற்பித்துவிட்டுத் தப்பிவிடுகின்றனர் என்று சாடும் கட்டுரையாசிரியர், ''ஒரு வழக்கை மட்டும் எடுத்து நிலைபேற்றுத் தன்மை தமிழைப் பொறுத்த வரையிலும் கொடுக்க முடியுமா என்பது ஐயத்திற்கு இடமானது. அது நன்முயற்சியில் முடியும் என்பதில் எனக்கு நம்பிக்கை இல்லை. அது வட்டாரம் மற்றும் சமுதாயப் பேச்சுக் கூறுகளை அறவே நீக்கிய ஒரு வழக்காக அமைய வேண்டும். அம்மாதிரியானதொரு பேச்சு வழக்குச் செயற்கையானதாகத்தான் இருக்குமேயல்லாது இயற்கைச் சூழ்நிலையில் கிடைக்கும் ஒரு வழக்காக இருக்க முடியாது. எனவே என்னைப் பொறுத்தவரையில் நிலைபேறு வழக்கு என்பது ஒரு நிலை; அந்நிலை இன்னும் முடிவு பெறவில்லை என்றே சொல்வேன். இவ்வாறு நிலைபேறு பெறுகின்ற வழக்கை யாரும் பேசுவதாகவும் கூறமுடியாது. கல்வியறிவு பெற்ற தமிழர்களின் பேச்சு இவ்வாறு குறிக்கப்படுகின்ற நிலை பேறு வழக்காகும் என்று கூறப்படினும் அதுவும் பலவகைகளில் வேறுபட்டிருப்பதைக் காணலாம். சான்றாக, பேச்சுத் தமிழைக்கற்பிக்க முயல்கின்ற சில நூல்களைப்

பார்க்கும் போது, (Knmaraswamy Raja & Doraisamy 1966, Shanmugam Pillai 1968, Rajaram 1979, Schiffman 1975, Kothandaraman, 1975) அவைகளில் மொழியில் வேறுபாடுகள் இருப்பதைக் காணலாம்' (P.93-94) என்றார் கட்டுரையாசிரியர். மாணவர் வகுப்பறையைவிட்டு வெளியே வந்து தாய்மொழியாகப் பேசுபவர்களோடு பேச விரும்பினால் பல்வேறு மொழி வழக்கு களின் திரிபு விதிகளை அதாவது நிலைபேறு வழக்கிலிருந்து திரிந்து மற்றொரு மொழிவழக்குக்கு மட்டுமே உரிய விதிகளைத் தெரிந் திருக்கவேண்டும். இத்திரிபு விதிகள் ஒவ்வொரு மொழிவழக்குக் கும், ஏன் ஒவ்வொரு கிளைமொழிக்கும் வெவ்வேறாக இருக்கும். தாய்மொழியாகப் பேசுபவர்கள் இவ்விதிகளையும் தன்னகப் படுத்திக் கொண்டிருப்பதால் தான் பிறமொழிகளைப் பேசுபவ ரோடும் உரையாட முடிகிறது என்கிறார். (இலக்கண அமைப்பை பொறுத்தவரையில் எந்த அளவுக்கு கிளைமொழிகளிடையே வேறுபாடுகள் உள்ளன, பொதுவாக இத்திரிபு விதிகளின் தன்மை யாது? அதாவது மொழி நிலையில் - ஒலியமைப்பிலோ அல்லது வாக்கிய அமைப்பிலோ எந்நிலையில் இத்திரிபு விதிகள் காணப் படுகின்றன என்ற ஓர் ஆராய்ச்சி மொழியாசிரியர்க்கும் மொழிப் பாடம் அமைக்கும் பாடத் தயாரிப்பாளர்க்கும் மிகுந்த துணை புரியும் என்று நான் நினைக்கிறேன்.) ஒரு மொழியை இரண்டாம் மொழியாகக் கற்கும் மாணவரும் இத்திரிபு விதிகளைத் தெரிந்து கொண்டால் மட்டுமே இயற்கையாக நடக்கின்ற உரையாடலில் முழுமையாகக் கலந்து கொள்ள முடியும் என்கிறார் கட்டுரை யாசிரியர். எனவே மொழி கற்பித்தலில் திரிபு விதிகளும் முக்கிய விதிகளும் இடம்பெற வேண்டும். இதன் பொருள் இத்திரிபு விதிகள் பாடநூலில் இடம்பெற வேண்டும் என்பதில்லை; துணைப்பாட நூல்கள் வழியாகவும் கற்பிக்கப்படலாம் என்று கட்டுரையாசிரியர் கட்டுரையை முடிக்கின்றார்.

பாடநூலில் திரிபு விதிகள் சேர்க்கப்படவேண்டிய இடத்தைப் பற்றிக் கட்டுரையாசிரியர் கூறும்போது 'பாடநூல்கள் பெரும் பாலும் இலக்கணத் திறனைக் கொடுக்கின்றன. ஆனால் எந்தவொரு நூலுமே திரிபு விதிகளைச் சேர்ப்பதில்லை'' (P. 102) என்கிறார். தமிழில் இதுவரை வெளிவந்துள்ள பாடநூல்களைப் பார்க்கும்போது கட்டுரையாசிரியர் கூறுவது உண்மையே. ஆனால் பாடநூல் என்பது மாணவர் எதற்காக ஒரு மொழியைக் கற்

கிறார், அம்மொழியை எங்கு, யாரிடம் பயன்படுத்தப் போகிறார் என்பனவற்றின் அடிப்படையில் உருவாவது என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. இதனை ஏற்றுக் கொண்டால் கட்டுரையாசிரியர் கூறுவதைப் போல ஒவ்வொரு பாடநூலும் திரிபு விதிகளைச் சேர்க்க வேண்டும் என்ற கட்டாயத்திற்கு உள்ளாக வேண்டியதில்லை. எடுத்துக்காட்டாக, அமெரிக்காவைச் சேர்ந்த ஒருவர் தமிழ் கற்க விரும்புகிறார் என்று வைத்துக் கொள்வோம். முன்பெல்லாம் உடனே அகரத்தில் தொடங்கி விடுவார்கள். தமிழ் எழுத்துக்களையும் பின்னர் எழுத்து மொழியையும் கற்பிப்பது தான் தமிழ் கற்பித்தல் என்றிருந்தது பழைய காலத்தில். இன்று இந்நிலை எவ்வளவோ மாறிவிட்டது. தமிழ்ப் படிக்கவேண்டும். என்று அந்த அமெரிக்கர் கூறிய மாத்திரத்திலேயே 'எதற்காக நீங்கள் தமிழ் படிக்க விரும்புகிறீர்கள்? எங்கே, யாரிடம் இம் மொழியைப் பயன்படுத்தப் போகிறீர்கள்?' என்று அடுக்கடுக்காக கேள்விகள் தொடர்கின்றன. 'இல்லே, சும்மா கற்கலாமென்று நினைக்கிறேன்' என்று அந்த அமெரிக்கர் கூறுவாறேயானால் அங்கேதான் மொழியாசிரியர்க்குச் சோதனை ஏற்படுகிறது. இவருக்கு எந்த மொழியைக் கற்பிப்பது? எழுத்து மொழியைக் கற்பிப்பதா? நிலைபேறு கொச்சை மொழியைக் கற்பிப்பதா? யாரோடு இவர் தமிழில் எந்தக் கிளைமொழியைப் பேசுகிறவர்? அவர் இந்த அமெரிக்கரைப் போல படித்தவரா? என்ன விஷயம் பொதுவாக இவர்தம் உரையாடலில் இடம் பெறும்? எந்தச் சமுதாயச் சூழ்நிலை இவர்கள் உரையாடலுக்குரியகளமாக அமையும்? இப்படி எத்தனையோ கேள்விகள் ஆசிரியரைத் திக்குமுக்காட வைக்கும். அவரே பாடத்திட்டமும் பாடநூலும் தயாரிப்பதாக இருந்தால் 'ஏன் இந்த அமெரிக்கர் தமிழ் படிக்கவேண்டும்; நமக்குப் பைத்தியம் பிடிக்கவேண்டும்' என்ற நிலைக்கு ஆளாவார். ஆனால் இன்று பொதுவாக கற்பவரின் தேவைகளை மனத்தில் கொண்டு மொழிப்பாடத் திட்டங்களும் பாடநூல்களும் இன்ன மொழி வகையில், இன்னாரோடு, இன்னச் சூழ்நிலையில், இன்ன பொருள்பற்றி மாணவர் பேசும் ஆற்றல்பெறவேண்டும் என்று வரையறுக்கப்பட்டு மொழிகள் கற்பிக்கப்படுகின்றன. மொழி கற்பித்தலின் இவ்வியத்தகு வளர்ச்சியில் திரிபு விதிகளுக்கு இடமில்லாமற் போய்விடுகிறது. பொதுவாகத் தமிழ் கற்பிக்கிறோம் என்ற பூகோள அணுகுமுறையில் கற்பிக்க முயற்சி செய்வோமேயானால் இத்திரிபு விதிகளுக்கு முக்கியமான இடம் கொடுக்க வேண்டும். ஆனால் இத்திரிபு விதிகளுக்கு மேலாக இவ்வணுகு

முறையில் வேறுபல பிரச்சினைகள் விஸ்வரூபம் எடுப்பதை மொழி கற்பித்தலில் அனுபவம் பெற்ற ஆசிரியர் அனைவரும் உணர்வர். அப்பிரச்சினைகளுக்கு முன் திரிபு விதிகள் முக்கியமாகத் தோன்றுவதில்லை. தற்போது கிடைக்கின்ற நூல்கள் அனைத்தும் இப் பிரச்சினைகளில் அகப்பட்டுக்கொண்டு விழி பிதுங்குபவை என்பதை நாம் இங்குக் கூறியாக வேண்டும்.

மேலும், ஒரு மொழியைத் தாய்மொழியாகப் பேசுபவர்கள் கூட எந்த அளவிற்கு அம்மொழியின் கிளைமொழிகளிலெல்லாம் உரையாடும் திறன் பெற்றிருக்கின்றனர் என்பதையும் நாம் பார்க்க வேண்டும். எல்லாக் கிளைமொழிகளிலும் காணப்படும் திரிபு விதிகளைத் தன்னகப்படுத்திக் கொண்டு உரையாடுகிறார்கள் என்பதை ஒப்புக் கொள்ள இயலாது. இது முடியுமென்றால் ஒரு மொழியின் நிலைபேறு வழக்குக்கு நாம் கொடுத்து வருகின்ற முக்கியத்துவம் அர்த்தமற்றது என்று நான் நினைக்கிறேன். படித்தவர்கள் பெருமைக்காக நிலைபேறு வழக்கில் பேசிக் கொள்கிறார்கள் என்பது ஒருபுறமிருக்க உரையாடலில் கலந்து கொள்கின்ற இருவரின் கிளை மொழிகளிடையேயுள்ள வேறுபாடுகளையும் உணர்ந்து பொதுவான இருவராலும் தங்குதடையின்றி உறவாட இயலுகின்ற ஒரு மொழி வழக்கைத் தேர்ந்து எடுத்துக் கொள்கின்றனர் என்பதையும் நாம் மறந்துவிடக்கூடாது. இவ்வாறிருக்க ஒரு மொழியைக் கற்கின்ற மாணவர்க்குப் பாட நூல் வழியாகவோ துணைப்பாடநூல் வழியாகவோ திரிபு விதிகளைக் கற்பிக்க வேண்டியது அவசியம்தானா?

மொழிக் கற்றல் என்பது ஒரு குறுகிய காலக் கட்டத்திற்குள் மொழியின் சில அடிப்படைக்கூறுகளைக் (இலக்கண விதிகள் என்றும் கூறலாம்) கற்றுத் தேவைகளுக்கேற்ப மொழிவளத்தைப் பெருக்கிக் கொள்வதாகும். எந்தவொரு மொழிப் படிப்பும் 'மொழி' முழுவதையும் கற்றுத் தந்துவிட இயலாது. மொழிப் படிப்பிற்கும் ஏனைய பொருள்பற்றிய படிப்பிற்குமிடையேயுள்ள வேறுபாடுகளில் இதுவும் ஒன்று. ஆக, மொழியாசிரியர் மாணவர்க்குக் கற்றுத் தர இயல்வது செயற்கையாக-ஓரளவிற்குக் கற்பனையாகக் கூட 'உருவாக்கிக் கொண்ட பாடங்களைத் தாம். மொழி வகுப்பறை இந்த அளவிற்கு மட்டும்தான் ஒரு மாணவர்க்கு உதவ முடியும். உண்மையில் மொழிப்படிப்பு வகுப்பறைக்கு வெளியே உருவாவது. வெளியே மாணவர் சந்திக்கின்ற மக்கள்தாம் அவர்களின் உண்மையான ஆசிரியர்கள் என்றால் மிகையாகாது. வகுப்

பறையில் மாணவனுக்கும் மாணவன் கற்கின்ற மொழியைத் தாய் மொழியாக வெளியே பேசுகின்ற மக்களுக்குமிடையே மொழியாசிரியர் மொழிப்பாடம் என்றொரு மெல்லிய நூல்கட்டி ஓர் இணைப்பை ஏற்படுத்துகிறார் என்று கூறலாம். மாணவரின் தொடர்பு அம்மக்களோடு தொடர்ந்திருப்பதைப் பொறுத்து அந்நூல் இறுகி அம்மக்களோடு ஒருவராக மாணவர் மொழியைப் பொறுத்தவரையில் கலந்துவிடுகிறார். இந்நிலையில் ஒவ்வொரு கிளைமொழிகளின் திரிபுவிதிகளையும் மாணவர் தேவையென்று உணர்ந்தால் கற்றுக்கொள்ள இயலும். ஒரு மொழிப்பாடத் திட்டம் இவ்விதிகளை உள்ளடக்கி அமைக்கப்பட வேண்டும் என்ற கட்டாயம் வேண்டியதில்லை.

திருமதி விமலா அவர்களின் Teting Literature in Second Language Situation என்ற ஆங்கிலக் கட்டுரை இதுவரை வெளி வந்துள்ள கட்டுரைகளில் தனி இடம் வகிக்கிறது. சில கட்டுரைகள் மொழிக் கூறுகளையும், இலக்கண விதிகளையும் பற்றிக் கூறு கின்றன. கற்றல் கொள்கைகளை விளக்கி வரைகின்றன சில சில கட்டுரைகள் கற்பதிலும், கற்பிப்பதிலும் முறையே மாணவர்க் கும் மொழியாசிரியர்க்கும் உண்டாகும் பிரச்சினைகளை அலசி ஆராய்கின்றன. இவற்றைத் தவிர்த்து மொழிப்பயிற்று முறையில் ஒரு மொழியின் இலக்கியம், பண்பாடு ஆகியவற்றின் முக்கிய பங்கை வலியுறுத்துகிறது இக்கட்டுரை. மேலாகக் கற்ற இலக்கியங் களை நலம் பாராட்டுவதிலும் அயல் மொழிப் பேசுவோரின் பண் பாட்டைத் தம் பண்பாட்டோடு ஒப்பு நோக்கிப் பார்ப்பதிலும் எந்த அளவிற்கு மாணவர்கள் தேறியுள்ளனர் என்பதைப் படிப்படி யாகத் தேர்வுநடத்தி அறியும் பங்கினையும் மொழியாசிரியர்க்குச் சொல்லித் தருகிறார் கட்டுரையாசிரிர். பாடத் திட்டத்தில் இலக் கியத்தின் இடம் (The place of literature in the curriculum), பொருத்தமான இலக்கியத்தைத் தேர்ந்தெடுத்தல் (Selecton), இலக்கியத்தைப் பொறுத்தவரையில் மாணவர் அல்லது கற்போரின் மனோநிலை (The learner's attitude), தேர்வு (Testing), தேர்வை அமைக்கும் முறை (Test constructions) என ஒவ்வொரு படியாகத் தம் கட்டுரையில் இறங்கி வருகிறார் கட்டுரையாசிரியர்.

மொழிப் பயிற்று முறையில்—தாய்மொழிப் பயிற்று முறையி லும் சரி, அன்னிய மொழிப் பயிற்று முறையிலும் சரி—இலக்கியம் ஓர் அணிகலனாக, அலங்காரப் பொருளாகவே கருதப்பட்டு

வருகிறது. நம் எண்ணங்களைப் பிறரோடு பரிமாறிக் கொள்வதில் இலக்கியங்களுக்குரிய முக்கியமான பங்கை யாருமே சரியாக உணரவில்லை என்கிறார் திருமதி விமலா. குறிப்பாக, அன்னிய மொழிப் பயிற்றுமுறையில் இக்கியத்திற்கு அவ்வளவாக முக்கியத்துவம் கொடுக்கப்படுவதில்லை. இதற்குக் காரணம் அன்னிய மொழிக் கல்வியின் வரலாற்றின் தொடக்க கால மனநிலையே யாகும். அன்னிய மொழிக் கல்வியின் தொடக்கக் காலத்தில் ஒரு மொழியைக் கற்பதின் நோக்கம் அம்மொழியைப் பேசுவோரோடு நம் எண்ணங்களைப் பகிர்ந்து கொள்ள மட்டுமே என்ற உணர்வு தான் மேலோங்கி இருந்தது. இவ்வுணர்வுக்கு அக்காலச் சமுதாயச் சூழ்நிலையும் முக்கிய காரணமாக இருந்தது. முதலாம் மற்றும் இரண்டாம் உலகப்போரின் போது அன்னிய மொழிகளைக் கற்பித்தின் நோக்கம் எதிரிகளைப் புரிந்து கொள்ளவும் அவர்களோடு ஓரளவிற்குத் தம் எண்ணங்களைப் பகிர்ந்து கொள்ளவுமே என்றிருந்தது. போர் முடிந்த பிறகுதான் அன்னிய மொழிகளைப் பேசிப் பரிமாற மட்டுமன்று; அம்மொழியின் இலக்கியங்களையும் அம்மொழியைப் பேசுவோரின் பண்பாட்டையும் அறிந்து போற்றும் வகையிலே அன்னிய மொழிக் கல்வி அமைய வேண்டும் என்ற உணர்வு ஏற்பட்டது. இன்று பல்கலைக் கழகங்களில் அன்னிய மொழிகளைக் கற்பிப்பதின் நோக்கம் இதுவே யாகும். இருந்த போதிலும் அன்றாடக் கருத்துப் பரிமாற்றத்திற்கென அன்னிய மொழியை—குறிப்பாகப் பேச்சு மொழியை மட்டுமே கற்பித்து வருகின்றன பல நிறுவனங்கள். இவை இலக்கியங்களையும் பண்பாட்டையும் கற்பிப்பதில்லை. இக்காரணங்களால்தாம் இலக்கியமும் பண்பாடும் அன்னிய மொழிப் பயிற்று முறையில் இடம் பெறவில்லை. இன்று தமிழில் பேச்சு மொழியைக் கற்பிக்க எத்தனையோ நூல்கள் இருக்கின்றன. ஆனால் அயல் நாட்டவர்க்குத் தமிழ் இலக்கியத்தையும் தமிழர் பண்பாட்டையும் கற்பிக்கும் வகையில் தகுதியான நூல் ஒன்று கூட இல்லை எனலாம்.

இக்கட்டுரையில் நான்கு பிரிவுகளைப் பார்த்தோம். இப்பிரிவுகளுள் தேர்வை அமைக்கும் முறையைப் பற்றிக் கட்டுரையாசிரியர் குறிப்பிடுவதை முக்கியமான பகுதியாகக் கொள்ளலாம். மொழிப் பாடங்களைப் பொறுத்தவரையில் தேர்வுக்கு மிகவும் முக்கியத்துவம் கொடுக்கப்பட வேண்டும். மொழிப் பாடங்களிலும் தேர்வுகள் கொடுக்கப்பட்டுள்ளன என்பதோடு நாம் நிறைவு பெற்று விடுகிறோம். ஆனால் அத்தேர்வுகள் பல்வேறு வினாக்களின் மூலம் மாணவர்கள் கற்ற அனைத்தையும் உட்படுத்தி

யுள்ளதா என்பதை நாம் அவ்வளவாகக் கவனிப்பதில்லை. மேலும் தொகுக்கப்படும் வினாக்கள் ஒரு வரன்முறைக்குள் தொடர்ந்து வருகிறதா என்பதையும் பார்ப்பதில்லை. மாணவர்களின் விடைத்தாள்களைத் திருத்தும் போது எந்தெந்த பகுதிகள் மாணவர்க்கு இன்னும் விளங்கவில்லை என்பதைப் பட்டியல் போட்டு மொழியாசிரியர்கள் கற்பிப்பதில்லை என்பதும் உண்மை. இந்நிலையில் தேர்வுகளை அமைக்கும் முறையைப் பற்றிய அறிவு மிகவும் முக்கியமானது.

மொழிப் பாடங்களை பொறுத்தவரையில் தேர்வுகள் சரியாக வகுக்கப்படாவிட்டால் கற்பித்த பாடங்களை மாணவர் எந்த அளவிற்குக் கற்றுத் தேர்ந்துள்ளார் என்பதை அறிய இயலாமற் போய்விடும். ஒரு தேர்வு இந்நோக்கத்தை நிறைவேற்றாமல் போய்விடுமானால் எந்தப் பாடப் பகுதியை மீண்டும் கற்பிக்க வேண்டும்; இன்னும் கூடுதலாக என்னென்ன பாடப்பகுதிகளைக் கற்பிக்கலாம் என்பன குறித்து மொழியாசிரியர்க்கு எவ்விதச் செய்தியும் கிடைக்காமற் போய்விடும். இதன் விளைவாக்க் கற்பதற்கும், கற்பிப்பதற்கும் இடையே இழையோடும் தொடர்பு அறுந்து விடுகிறது. மொழி கற்பித்தலில் ஆசிரியர்—மாணவர் இடையேயுள்ள இத்தொடர்பு கவனமாகக் காப்பாற்றப்பட்டு வர வேண்டும. எனவே, தேர்வுகள் சரியாக வகுக்கப்பட வேண்டும்.

பாடத்திட்டத்தில் (syllabus) கொடுக்கப்பட்டுள்ள குறிக்கோள்களை மாணவர் பெறும் வகையில் தேர்வுகள் அமைக்கப்பட வேண்டும் என்கிறார் கட்டுரையாசிரியர். சொற்களில் தொடங்கி அயல் மொழியில் கற்ற இலக்கியப் பகுதியைத் தம் தாய்மொழியிலுள்ள ஒத்த இலக்கியப் பகுதியோடு ஒப்பிட்டுப் பார்த்து, நலம் பாராட்டுவது வரையிலான தேர்வு முறை கையாளப்பட வேண்டும். கட்டுரையாசிரியர் சொற்கள் முதலாகத் தொகுத்துத் தரும் பல்வேறு மொழிக் கூறுகள் மொழியாசிரியர்க்கு மிகுந்த அளவில் பயனளிக்கும். ஏதாவதொரு தமிழ் இலக்கியப் பகுதியை மாதிரியாகக் கொண்டு இக்கூறுகளுக்கான தேர்வுகளை பல்வேரு வகையான வினாக்கள் மூலம் கட்டுரையாசிரியர் விளக்கிக் காட்டியிருப்பாரேயானால் கட்டுரை இன்னும் சிறப்பாக அமைந்திருக்கும்.

இதுவரை வரலாற்றுக் கண்ணோட்டத்தில் மொழிக் கற்பித்தல் பற்றியும், மொழிக் கற்றல் மற்றும் கற்பித்தல்

கொள்கைகள் பற்றியும், மொழிப் பாடங்கள் மற்றும் பாடங்களின் மற்றும் பாடங்களின் உள்ளமைப்பு பற்றியும் வெளிவந்துள்ள சில கட்டுரைகளைப் பார்த்தோம்.

தமிழை அன்னிய மொழியாகக் கற்பித்தலைப் பொறுத்த வரையில் 1931-ஆம் ஆண்டிற்குத் தனிச் சிறப்பு உண்டு. வேறு எந்த ஆண்டிலும் இல்லாத அளவிற்கு இவ்வாண்டில்தான் தமிழ் கற்பித்தலைப் பற்றிச் சில கட்டுரைகள் எழுதப்பெற்றுள்ளன. இவ்வாண்டில் வெளியாகியுள்ள மொழியியற் கட்டுரைகளின் எண்ணிக்கைக்கு நிகராக இல்லாவிட்டாலும் மொழிக் கற்பித் தலைப் பற்றிய முழுமையான அறிவை இவ்வாண்டு வெளி வந்துள்ள கட்டுரைகளைத் தொகுத்துப் படித்தால் பெறலாம். முந்திய ஆண்டுகளில் தமிழை அன்னியருக்குக் கற்பிக்க எத் தனையோ பாடத்திட்டங்களும், பாடங்களும் உருவாக்கப்பட்டி ருந்தன; இவ்வாண்டில் பல்வேறு கற்பித்தல் கொள்கைகளும், கோட்பாடுகளும் விளக்கமாக ஆராயப்பட்டிருக்கின்றன. பொது வாக, மொழியியல் இன்றுவரை தமிழ் அறிஞர்களுக்கு அறிமுக மாகியிருக்கின்ற அளவிற்குப் பயன்பட்டு மொழியியலும் இக் கட்டுரைகள் மூலம் அறிமுகமாகியுள்ளது என்றால் மிகையாகாது. இவற்றைத் தொடர்ந்து தமிழ்மொழி கற்பித்தலைப் பற்றி மேன் மேலும் பல கட்டுரைகளும் நூல்களும் வெளிவரும் என்று எதிர் பார்க்கலாம்.

## துணை நூல் பட்டியல்

Chastain, Kenneth. 1969. Audio-Lingual Habit Theory Versus the Cognitive-code Learning Theory; Some Theoretical Considerations. IRAL, Vol VIII/2. Heidelberg.

Christiana Bratt - Paulston. 1970. Structural Pattern Drills: A Classification, Foreign Language Annals 4, 2.

Dakin, Julian. 1973. The Language Laboratory and Language Learning, London: Longman.

Irulappan, S. 1981. Audio-Lingual Exercises - A - Profile in Tamil Teaching, Annamalai Nagar: All India University Tamil Teachers' Association,

Nambi Arooran, K. 1981. The College of Fort St. George (1812—1854). Historia 1, Madurai: Madurai Tamilology Publishers.

Titone. Renzo. 1968 Teaching Foreign Languages-An Historical Sketch, Washington, D.C. 20007: Georgetown University Press.

Vimala, S. 1981. Testing Literature in Second Language Situation, Paper submitted to the National Seminar on "Aspects of Testing and Evaluation in Language Education", Mysore: Central Institute of Indian Languages.

திருமலை, மா.சு. 1977. தமிழ் கற்பித்தல் அல்லது மொழி கற்பித்தல், சிதம்பரம்: மணிவாசகர் நூலகம்.

நடராசபிள்ளை, ந. 1981. வழக்கு வேறுபாடுகளும் இரண்டாம் மொழி பயில்தலில் மொழித் திறனின் பங்கும், மொழியியல் 4:4, அண்ணாமலை நகர்: அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம்.

நடராசபிள்ளை, ந & விமலா, ச. 1981. தமிழை இரண்டாம் மொழியாகக் கற்பவர்களின் பிழைகள்: ஓர் ஆய்வு, மொழியியல் 5:2 அண்ணாமலைநகர்: அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகம்.

# 12. நாட்டுப்புறவியல்

டாக்டர் சு. சண்முகசுந்தரம்

எண்பத்தொன்றில் நாட்டுப்புறவியல் பற்றி ஐந்து நூல்களும், ஐம்பதுக்கும் மேலானக் கட்டுரைகளும் வெளிவந்துள்ளன. இவ்வியல் தொடர்பான ஆய்வு நிலையில் மாற்றம் உருவாகியிருப்பதும் போற்றுதலுக்குரியது. கருத்தரங்க அமைப்புகளால் இவ்வாண்டில் இத்துறை ஆய்வு விரிவடைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

## முன்னுரை

நாட்டுப்புற இயல் பற்றிய ஆய்வு உலகம் எங்கணும் கால் கொண்ட பிறகே இந்தியாவிலும் அதைச் சார்ந்த தமிழகத்திலும் தலைகாட்டுவதற்கு ஆரம்பித்தது. மேநாட்டுக்காரர்கள் இங்கு வந்த பிறகுதான் இங்குள்ள கிராமியக் கதைகளும், பாடல்களும், பழமொழிகளும் தொகுக்கப்பட்டன; அதுபற்றிய சிந்தனைகளும் தொடரப்பட்டன.

அறுபதுகளில்தான் நாட்டுப்புற இயல் ஆய்வுகள் பல்கலைக் கழக ரீதியில் தொடங்கப்பட்டன. எழுபதுகளில் இவ்வாய்வுகளின் உச்சத்தைப் பார்க்கலாம். எண்பத்தொன்றில் நாட்டுப்புற இயல் பற்றிய ஆய்வுகளையும் ஆர்வங்களையும் நாம் கட்டுரைகள், நூல்கள் கருத்தரங்குகள் மூலம் காண்பதுதான் இக்கட்டுரையின் நோக்கமாகும். இவ்வாண்டில் வெளிவந்த வார, மாத இதழ்களையும், வானொலி உரைகளையும் நான் இங்கு ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இக்கட்டுரையில், பாடல், கதைப்பாடல், கதை, பழமொழி, விடுகதை, கலை, பண்பாடு, நாட்டுப்புற இயல் என எட்டுவகை

யான வகுப்புக்கள் உள. இவ்எட்டு வகைகளும், வெளி வந்துள்ள நூல்களையும் அச்சான கட்டுரைகளையும், மையொற்றுப் படி செய்யப்பட்ட கட்டுரைகளையும் தொகுத்து ஆய்வு செய்வதாக அமைந்துள்ளன.

## I பாடல்கள்

### 1 நாட்டுப்புறப் பாடல்

இது எண்பத்தொன்றின் இறுதியில் வந்த நூல். டாக்டர் மெ. சுந்தரம் அவர்களால் தொகுக்கப்பட்டது. இவர் நீண்ட கால மாக இத்துறையில் ஈடுபாடு கொண்டவர். அடிக்கடி இதழ்களில் பாடல்களுக்கு விளக்கம் தந்து கொண்டிருப்பவர். இவரது முதல் நூல் இதுதான்.

இதில் இவர் பாயிரம் ஒன்று எழுதியுள்ளார். அதில் நாட்டுப் புறப் பாடல்களின் தன்மைகளைக் கூறி, அதனை ஊற்று இலக்கி யம் என்கிறார். இதனை முறை சாராக்கல்வியின் முன்னோடி என் றும் குறிப்பிடுகிறார். போலி இலக்கியங்களைக் கண்டிக்கிறார். நாட்டுப்புறப் பாடல்களின் அகப்பண்புகளையும் புறப்பண்புகளை யும், பன்னிரண்டு கோட்பாடுகளையும் தொகுத்துத் தந்துள்ளார். இலக்கிய சுவையையும் சான்றுகளோடு விளக்கியுள்ளார்.

இந்நூல் 512 பக்கங்களைக் கொண்டது. பாடல்களும் அத் தனை என்று சொல்லலாம். பக்கத்துக்கு ஒன்றாகவும் ஒன்றுக்கு மேலேயும் காண முடிகின்றது. இப்பாடல்களெல்லாம் இவரால் எங்கிருந்து—எவ்வாறு தொகுக்கப்பட்டது என்பது ஆய்வுக்குரி யது. பாயிரத்தில் இதற்கான விளக்கமில்லை. படையலில் சிறு ஊகக் குறிப்பு உள்ளது. 'பைந்தமிழ்ப் பாட்டுகளை வாரி வழங் கிய என் அருமை அன்னையார் திருவாட்டி பாப்பாயி ஆச்சி' என்று ஒரு வேளை இவரே இத்தனை பாடல்களையும் கூறியிருக்கலாம். அவ்வாறு எண்ணுவதும் சாத்தியமில்லை. காரணம் ஒரு மாவட் டத்துக்குரியவர் பிற மாவட்டப் பாடல்களையும் பாடிவிடுவது ஆச் சரியத்திற்குரியது.

இந்நூலுக்குத் தாள் தந்தவரையும், தாளில் அச்சிட்டவரை யும், அச்சிட்டு விற்றிட பொறுப்போற்றவரையும் நன்றியுடன் நினைவு கூறும் இவர், இதைவிட முக்கியமாக இந்நூலின் உயிரான பாடல்களின் மூலத்தை நினைவு கூர்ந்தால் நன்றாயிருந்திருக்கும். பாடல்களை, இவர் பாடியவர்கள் மூலம் தொகுத்திருந்தால் பாடி

யவர் பெயர், ஊர் போன்ற விவரங்களைக் கொடுத்திருக்க வேண்டும். அல்லது பாடல்களை, இவர் நூல்களில் இருந்து தொகுத்திருந்தால் நூல் பெயரையும் பக்கங்களையும் குறிப்பிட்டிருக்க வேண்டும். எனவே 81 இல், தொகுப்பாக வந்த ஒரே நூலான இது கூட, இத்துறையில் ஏற்பட்ட இத்தனை வளர்ச்சிக்குப்பிறகும் இவ்வாறு வெளிவந்திருப்பது வியப்பினைத் தருகிறது.

அடுத்து இந்நூலின் பகுப்புமுறை முறையாக இல்லை. தாலாட்டில் ஆரம்பமாகிறது இந்நூல். 200 பக்களுக்கு மேல் தொடர்ந்த பின் சோழநாடு என்று பகுத்து உள்ளார். ஐந்து தாலாட்டுப் பாடல்கள் இதில் உள. அவ்வாறானால் முதல் பிரிவு. எந்த நாட்டுக்கு உரியது, இதுபோல் நாஞ்சில் நாடு, தென் பாண்டி நாடு, கொங்கு நாடு என்று பகுக்கப்படுகிறது. இவற்றில் கொங்கு நாட்டுப் பிரிவில் பாப்பம்மா, நாகம்மா, திலகவதி என்ற பெண்களின் பெயர்களும் சில வட்டங்களின் பெயர்களும் உள்ளன. இதற்கு என்ன அர்த்தம்? யாரிடம் போய் கேட்பது? ஏற்கனவே சோழ நாட்டில் திருச்சி மாவட்டத்தை சேர்ந்தவர், பின்னர் திருச்சி மாவட்டம் என்று தனியாகப் பிரித்துள்ளர். தென்னார்க்காடு மாவட்டம் பின் ஆரம்பமாகிறது. இதுவரை தாலாட்டுப் பாடல்களை மட்டும் சேகரித்தவர், இப்பொழுது குழந்தை தவழ்வதும் சாய்தாடுவதும் கை வீசுவதும் எனப் பாடல்கள் நீள்கின்றன. திரும்பவும் கொங்கு நாடு தலை நீட்டுகிறது. பல்வேறு பாடல்களுடன் மதுரை, திருநெல்வேலி, குமரி என்ற மாவட்டப் பிரிவுகளும் உள்ளன. இறுதியில் பெங்களூர் 'சௌ சௌ' போன்று முக்கூடற்பள்ளு வில்லுப்பாட்டைப் பற்றி கூறுவதும், இருளர், பழங்குடி, மலை நாடு, குற்றாலநாதர் என்றும் அமைந்துள்ளது. ஒரு வழியாகத் தாலாட்டுப் பாடலுடன் முடிந்து விடுகிறது. திட்டமிட்ட பகுப்பு முறை இல்லை. அத்துடன் 'வகை தொகை' இல்லாமல் இந்நூல் அமைந்துள்ளது.

ஒரு பெரும் பேராசிரியரிடமிருந்து இத்துறையில் பல காலம் ஈடுபாடு கொண்ட ஒருவரிடமிருந்து எவ்வளவோ எதிர்பார்க்க இடமிருந்தது. இத்தொகுப்பு ஏமாற்றத்தையே தருகிறது. ஏற்கனவே பல நூல்களில் தொகுத்து அச்சிடப்பட்ட பாடல்கள் மீண்டும் மறுபிறவியை இந்நூல் மூலம் அடைந்திருப்பது பாடல்களின் சிறப்பையும் புகழையுமே காட்டுகிறது.

## கட்டுரைகள்

### 1. FOLKSONGS

இந்த ஆங்கிலக் கட்டுரையினை இதன் ஆசிரியர் டாக்டர் சு. சண்முக சுந்தரம் 1978 இல் நடந்த கருத்தரங்கில் வாசித்தார். அது மூன்று ஆண்டுகளுக்குப் பிறகு அச்சு வடிவம் பெற்றுள்ளது.

இக்கட்டுரையானது நாட்டுப்புறப் பாடல் பற்றிய அடிப்படையான சில விளக்கங்களைத் தருகின்றது. தமிழில் நாட்டுப்புறப் பாடலின் தோற்ற வரலாற்றினையும், தொகுக்கப்பட்ட ஆய்வு வரலாற்றினையும் அச்சு செய்யப்பட்ட வரலாற்றினையும் எழுதியுள்ளார். தாலாட்டுப் பாடல், ஒப்பாரிப் பாடல், குழந்தைப் பாடல், ஆட்டப்பாடல், தொழில் பாடல், மணப்பாடல், நாடோடிப் பாடல் என ஏழு வகையாக்கி விளக்கமும் தந்துள்ளார். நாட்டுப்புறப் பாடல்களின் பண்புகளையும், பாடும் முறைகளையும், இசை அமைப்புகளையும், இலக்கிய கொள்கைகளையும், பயில்கின்ற முறைகளைப் பற்றியும் விவரிக்கின்றார்.

ஆழமாக ஆய்வு செய்யாமல் தமிழ் நாட்டுப்புறப் பாடல்களைப் பற்றிய விளக்கவியல் கட்டுரையாக இது அமைந்துள்ளது.

### 2 நாட்டுப்புறப் பாடல்களில் வளமை நம்பிக்கையும் சடங்குகளும்

க. கிருட்டிணசாமி அவர்களின் இக்கட்டுரை நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகளின் முதல் தொகுதியில் இடம் பெற்றுள்ளது. இக்கட்டுரை மூலம் இவர் காட்டும் துணிச்சலைப் பாராட்ட வேண்டும்.

இனக்குழு வாழ்க்கையின் எச்சங்கள் இன்றுகூடத் தமிழ் நாட்டார் வழக்காறுகளில் காணப்படுகின்றன என்பதை நாட்டுப்புறப் பாடல்கள், பழக்க வழக்கங்கள் மூலம் காட்டுகிறார், வேளாண்மையின் போது செய்யப்படும் சடங்குகளில் பெரும்பாலானவை வளம் வேண்டி செய்யப்படுவன. புணர்ச்சிச் சடங்கு இவற்றுள் முக்கியமானது. இதற்குப் பாடல்களும் குறிப்புகளும் சான்றுகளாக அமைகின்றன. நிர்வாணம், குருதி, சிவப்பு நிறம் போன்றவையும் இதனையே சுட்டுவன. இது போலச் செய்தல் எனும் மாயவித்தையைச் சேர்ந்தது.

இது மானிடவியல் நோக்குடன் அமைந்த சிறந்த கட்டுரை. 5வது உலகத்தமிழ் மாநாட்டுக்கும் அனுப்பப்பட்டது என்றும் அறிகிறோம்.

## 3. JAFFNA DIALECT OF TAMIL IN THE FOLKSONGS:

இராஜ குமாரி அவர்களின் இக்கட்டுரையானது, இ. ப. க. த. ம ஆய்வுக் கோவையில் இடம் பெற்றுள்ளது. மொழியியல் அடிப்படையில் இக்கட்டுரை அமைந்து இத்துறையில் சில புதிய வழிகளைக் காட்டுவதற்கு உதவுகின்றது.

வட்டுக்கோட்டை மு. இராமலிங்கத்தின் வடஇலங்கையர் நாட்டுப் பாடல்கள், கிராமக் கவிக்குயில்களின் ஒப்பாரிகள் ஆகிய நூல்களை அடிப்படையாகக் கொண்டு இந்த ஆய்வினை இவர் செய்துள்ளார். இப்பாடல்களில் உயிர் எழுத்து மாற்றங்களையும் மெய்யெழுத்து மாற்றங்களையும் இன்னும் சில மாற்றங்களையும் குறிப்பிட்டுள்ளார்.

இக்கட்டுரை 'கடல் கடந்து' கவலை கொள்ளுகிறது தம் ஆய்வில். இவை வரவேற்கத்தக்க முயற்சிகளே.

## 4 நாட்டுப்புறப் பாடல்களில் இடம்பெறும் ஊர்ப் பெயர்கள்

இக்கட்டுரை இ. ப. க. த. ம. ஆய்வுக் கோவையில் இடம் பெற்றுள்ளது. இதனை எழுதியவர் இத்துறைக்கு புதிய வரவு போல் தோன்றுகிறது. நாட்டுப்புறப் பாடல்களில் இடம் பெறும் ஊர்ப் பெயர்களைப் பற்றி இக்கட்டுரையில் விளக்குகிறார். குறிப்பாக, நெல்லை மாவட்டத்தினை மட்டும் தம் ஆய்வுக்கு எடுத்துக் கொள்ளுகின்றார்.

புண்ணியதலம், பொருள், சந்த நயம் ஆகிய மூன்று காரணங்களால் ஊர் பெயர்கள் பாடலில் இடம் பெறுகின்றன என்கிறார். இது நெல்லை மாவட்டத்துக்கு மட்டுமல்லாமல் பிறமாவட்டங்களும் ஒத்து வரும் என்று நிருபணம் செய்கிறார்.

இது போன்ற புதிய முயற்சிகள் இத்துறையில் வரவேற்கப் படத்தக்கன.

## 5 நாட்டுப்புறப் பாடல்களும் மாறுபடும் தன்மையும்

இத்துறையில் ஆய்வு செய்து வருபவர் ஜெ நிர்மலாபாய் அவர்கள். அவரது இக்கட்டுரை இ.ப.க.த.ம. ஆய்வுக் கோவையில் இடம் பெற்றுள்ளது.

நாட்டுப்புறப் பாடல் மாறுபடுவதற்கு நிலவியல் சூழல், சமுதாயச் சூழல், வட்டார வழக்கு என்று மூன்று காரணங்களைக் கூறுகின்றார் சமுதாயச் சூழலில் சாதி, சமயம், வாழ்க்கைச் சூழல் வாழுமிடங்கள் போன்றவற்றால் மாறுபடுவதை விளக்கியுள்ளார். சொல்லிலும் தொடரிலும் மாற்றம் ஏற்படுவதைச் சான்றுகளுடன் விளக்குகின்றார். வாழ்க்கைச் சூழலில் தாலாட்டு, விளையாட்டு, தொழில் போன்ற பாடல்கள் மாறுபடுவதையும் தக்க ஆதாரங்களுடன் விவரிக்கின்றார்.

தம்முடிவுரையில் கூறுவதுபோல எவ்வாறு மாறுகின்றன மாற்றப்படுகின்றன என்பதை ஓரளவு அறிந்து கொள்ள முடிகின்றது.'

## 6. FOLKSONGS AMONG THE PEASANTS CONCERNED WITH SOCIAL ILLS AND INJUSTICE.

ஆ. சிவசுப்பிரமணியத்தின் இக்கட்டுரை அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் நடைபெற்ற நாட்டுப்புற இயல் கருத்தரங்கில் வாசிக்கப்பட்டது. இதன் முழுமை வடிவம் எனக்குக் கிட்டவில்லை; குறிப்புகள் மட்டுமே கிடைத்தன.

இக்கட்டுரையில், விவசாயப் பெருங்குடி மக்களின் பிரச்சனைகள், அவர்கள் பெறுகின்ற துன்பங்கள், அவர்களுக்குச் செய்யப்படுகின்ற அநீதிகள் ஆகியவற்றை விளக்கமாக ஆராய்ந்துள்ளார், நாட்டுப்புறப் பாடல்கள் மூலமாக.

சமூகவியல் அடிப்படையில் ஆராயப்பட்ட சிறந்த கட்டுரையாக இது அமைந்துள்ளது.

## 7. FOLKLORE AS A VEHICLE FOR SOCIAL PROTEST.

டாக்டர் இராம. சுந்தரத்தின் இக்கட்டுரை அண்ணாமலையில் நடைபெற்ற நாட்டுப்புறவியல் கருத்தரங்கில் வாசிக்கப்பட்டுள்ளது. ஆனால் இக்கட்டுரை ஏற்கனவே தமிழில் வெளிவந்துள்ளது. உலகத்தமிழ் மாநாட்டில் வாசிக்கப்பட்டிருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

சமுதாயத்தில் இரு வர்க்கம் உள்ளது. ஒன்று அடங்கியவர்க்கம்; மற்றொன்று ஆளும் வர்க்கம். ஆளும் வர்க்கத்திற்கு எதிராக அடக்கப்பட்டவர்க்கம் தனது எதிர்ப்புகளை சில வேளைகளில் கிராமியப் பாடல்கள், கதைகள், பழமொழிகள் மூலம் வெளியிடுகின்றது.

இக்கட்டுரையில் இவர் அடக்கப்பட்ட வர்க்கத்தின் எதிர்ப்புக் குரலை இனங்கண்டு கூறுகிறார். இவரது கட்டுரையில் பாடல்களுடன், பிறசான்றுகளும் தொகுக்கப்பட்டு ஆயப்பட்டிருந்தால் சிறப்பாக இருக்கும்.

## 8. VILLUPPATTU

இக்கட்டுரை தி.சி. கோமதிநாயகம் அவர்களால் 1978 இல் உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தில் நடைபெற்ற கருத்தரங்கில் வாசிக்கப்பட்டு 1981 இல் அச்சாகி நூல்வடிவம் பெற்றுள்ளது. இக்கட்டுரையாசிரியர் இத்தலைப்பில் டாக்டர் பட்ட ஆய்வு செய்து கொண்டிருப்பவர் என்பது குறிப்பிடத்தக்கது.

இக்கட்டுரையானது வில்லுப்பாடல் பாடப்படும் முறையையும், வாய் மொழியாக வாழ்ந்து வரும் நிலையையும், உரையும் பாடலும் கலந்ததன்மையையும் விளக்குகிறார். அம்மானைப் பாடலுக்கு வில்லுப்பாடலுக்கும் உரிய தொடர்பினையும், வில்லுப்பாடலின் வரலாற்றுக்குத் துணைபுரியும் இலக்கிய சான்றுகளையும், பொதுவான வில்லுப்பாடல் அமைப்பினையும், கதைப் பாகுபாடுகளையும் விளக்கியுள்ளது இவரது கட்டுரை.

மொத்தத்தில் வில்லுப்பாடல் பற்றிய நல்ல அறிமுகக் கட்டுரை இது.

## 9. வில்லுப்பாட்டு - தோற்றமும் வளர்ச்சியும்

இக்கட்டுரை கலைமாமணி கவிஞர் சுப்புஆறுமுகம் அவர்களால் எழுதப்பட்டுள்ளது. ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டின் சிறப்பு மலரை இக்கட்டுரையும் அலங்காரம் செய்துள்ளது.

இவர் கலைமாமணி என்பதால் இவரது உரையில் ஆய்வினை விட அலங்காரம் மிகுதியாகி விட்டது போலும். ‘முத்தமிழ்க்கலைகளிலே மூத்தகலை வில்லுப்பாட்டு. இது மட்டுமல்ல, முத்தமிழும் இணையும் ஒரு கூட்டுக்கலை, பாட்டுக் கலை, நாட்டுக்கலை’ என்று இவர் ‘ஜமாய்ப்பது’ இதற்கு சான்றாகும்.

'கதைகள் பல கூறுவதையே பிறவிக் கடமையாகக் கொண்டிருக்கும் வில் தோன்றிய கதை வணக்கத்துக்குரியது (?!,' என்று கூறிவிட்டு 'தென்பாண்டிநாட்டிலே' என்று ஆரம்பித்து 'விடுகிறாரே' அத்தனையும் கதைதான்.

வில், யாழ், வீணை ஆகியவற்றை பாட்டி, மகள், பேத்தி என்று கூறுகிறாரே அந்த இடம் நயமானது. வில்லிசையில் மலர்ந்த சொல்லிசைகளையும், வில்லிசைக்குப் புத்துயிர் ஊட்டிய கலைஞர்களின் வரிசைகளையும் அடுக்கிச் செல்வது பாராட்டுக்குரியது. ஆனால் அண்ணாவுடன் உள்ள தொடர்பையும் அவர் மேல் உள்ள பாடலும் மிகையானது என்று சொல்லத் தோன்றுகிறது.

'வில்லுப் பாட்டின் தோற்றமும் வளர்ச்சியும்' என்ற கட்டுரையில் 'கலைமாமணியின் தோற்றமும் வளர்ச்சியும்' வெகு நுட்பமாகச் சொல்லப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

## 10 தாலாட்டுப் பாடல்கள் காட்டும் சமுதாயம்

சா. வளவன் அவர்களின் இக்கட்டுரை நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகளின் முதல் தொகுதியில் இடம் பெற்றுள்ளது. இவர் இத்துறையில் ஆர்வமும் ஈடுபாடும் கொண்டவர்.

பதிப்பாசிரியர் கூறுவது போல் தாலாட்டுகளில் காணப்படும் சமுதாயச் செய்திகளை எச்சரிக்கையாக அணுகுகிறார். குழந்தைப் பேறு, குழந்தைக்காகச் செய்யும் தவம், காதல்உறவு, பரத்தமை நெறி, தொழில்முறை, கல்விநிலை, வறுமைநிலை, சாதிப்பிரிவு. உறவுனர் பெருமை, நாட்டுப்புற நம்பிக்கைகள் போன்றவற்றைத் தாலாட்டுப்பாடல்கள் மூலம் எடுத்துரைக்கின்றார்.

செங்கல்பட்டு மாவட்டத்தில் கள ஆய்வு செய்த இவர் அடிக்கடி ஆய்வுக்கட்டுரைகள் எழுதிவருபவர். 'அவர் இத்துறையில் மேலும் ஈடுபடுவார் என்ற நம்பிக்கை' எனக்கு(ம்) உண்டு.

## 11 கோவை மாவட்ட ஒப்பாரிப்பாடல்களில் காணலாகும் சில தன்மைகள்

டாக்டர் பா.ரா. சுப்பிரமணியத்தின் இக்கட்டுரை நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகளின் முதல் தொகுதியில் இடம் பெற்றுள்ளது. இவர் இத்துறையில் ஆய்வுசெய்து முதன் முதலில் டாக்டர் பட்டம் பெற்றவர்.

இக்கட்டுரையில் இவர் கோவை, நெல்லை ஆகிய இரு மாவட்டங்களில் உள்ள ஒப்பாரிப்பாடல்களை ஒப்பிட்டு விளக்கியுள்ளார். நெல்லை மாவட்டப்பாடல்கள் வடிவு நெகிழ்வுடையன என்றும் உருவகப்படுத்தும் முறை மிகுதி என்றும் முடிவு கூறுகிறார்.

கோவை மாவட்டப்பாடல்கள், இவருக்கு ஒரு ஆய்வாளர் மூலம் கிடைத்த வரலாற்றினையும், தொகுப்பில் உள்ள பாடலின் தன்மைகளையும், தொழில் முறையாகப் பாடுபவர்களைப் பற்றிய குறிப்புகளையும் தந்துள்ளார்.

'இத்தொகுப்பு தமிழக ஒப்பாரிப்பாடல்களின் பொதுத் தன்மைகளையும் ஒரு வட்டாரத்திற்குரிய சில சிறப்புத்தன்மைகளையும் கொண்டுள்ளது என்பதனையே இக்கட்டுரை வாயிலாக காட்டமுயன்றுள்ளேன்' என்று முடிவில் கூறுகிறார். அதற்கு முன் 'இம்முடிவுகளில் சில மாற்றப்படலாம் என்பதை நான் உணர்ந்தேயிருக்கிறேன்' என்று குறிப்பிடுவது இவரது ஆய்வு மன நிலையின் உயர்வினைக் காட்டும்.

## 12 ஒப்பாரிப் பாடல்களில் உருவகம்

சா. வளவன் அவர்களின் இக்கட்டுரை இ.ப.க.க. மன்ற ஆய்வுக் கோவையில் வெளியானது. இவர் நாட்டுப்புறப் பாடல்களில் நீண்டகாலமாக ஆர்வம் கொண்டவர். அவ்வப் போது அது பற்றி கட்டுரைகள் எழுதிக் கொண்டிருப்பவர்.

இக்கட்டுரையில் ஒப்பாரிப் பாடல்களில் உருவகம் பெற்றுள்ள சிறப்பிடத்தை விளக்குகின்றார். குழந்தை, கணவன், மகள், அண்ணி ஆகியோருக்கு எவ்வாறு உருவகங்கள் வேறுபட்ட தன்மையுடன் கையாளப்படுகின்றது எனக் கூறுகின்றார். இறுதியில் ஒப்பாரிப் பாடல்களில் உருவகம் இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றது எனக் குறிப்பிடுகின்றார்.

இலக்கியப்பார்வையில் அமைந்த ஆய்வு இது. இத்துறை ஆய்வில் பெறும் வளர்ச்சியை இக்கட்டுரை காட்டுகின்றது.

## 13. FOLICSONGS OF LAMENTATIONS IN TAMIL AN ANALYSIS OF THEIR STRCTURE

இக்கட்டுரை சுமதி அவர்களால் எழுதப்பட்டு அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் நடைபெற்ற நாட்டுப்புற இயல் கருத்தரங்கில் வாசிக்கப்பட்டது.

இதில் 'ஒப்பாரி' என்பதற்கான சொல் விளக்கம் முதலில் தரப் பட்டுள்ளது. ஒப்பாரி பாடப்படும் முறைகளும், அதன் அமைப் பியல் தன்மைகளும் விளக்கப் பட்டுள்ளன. அமைப்பியலில் பாடப் படுகின்ற கருத்துகளும், சடங்குகளும், சமுதாய பிரச்சனைகளும் குறிப்பிடப் பட்டுள்ளன. மாமியைப் பற்றிய ஒப்பாரிப் பாடலின் கருத்துகளும் தொகுக்கப்பட்டுள்ளன.

இக்கட்டுரை விளக்கவியல் முறையில் அமையப்பட்டுள்ளது. இதற்கு முன்னரே தமிழில் பலர் இப்பகுதியைத் தொட்டிருப்பது குறிப்பிடத்தக்கது. இவர் இன்னும் கொஞ்சம் தொட முயன்றிருக் கலாம்.

## 14 ஆக்காட்டிப் பாட்டு-ஓர் ஆராய்ச்சி

இக்கட்டுரை நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகளின் முதல் தொகுதியில் இடம் பெற்றுள்ளது. இதனை பி. எல். சாமி அவர்கள் எழுதியுள்ளார்.

இதனை நாட்டார் பாடல்கள், சங்க இலக்கியம் பறவையியல், அனுபவ அறிவு எல்லாம் இணைந்த ஒரு புதையல் என்று பதிப் பாசிரியர் குறிப்பிட்டுள்ளார்.

ஆக்காட்டி பாடல் ஒன்று தமிழ் நாட்டிலும் இலங்கையிலும் பாடப்பட்டு வருகின்றது. இதில் பலவகை பாட மாற்றங்கள் உள் ளன. இவற்றில் எது முன்னர் தோன்றிய வடிவம், எது பின்னர் தோன்றிய வடிவம் என்று ஆய்வு செய்துள்ளார்.

இயற்கைச் செய்திகளை உள்ளது உள்ளபடியேயும் தன்மை நவிற்சியுடனும் மிக மிகப் பின்னர் கண்டு பிடித்த அறிவியல் செய்திகளையும் சேர்த்துக் கூறும் இந்த ஆக்காட்டிப் பாடல்கள் 'நாட்டார் பாடல்களில் மிகச் சிறப்பானவையும் தனித்தன்மையு முடையனவாகும்' என்று முடிவாக ஆசிரியர் கூறுகிறார். அறிவியல் அறிஞரான இவரது கட்டுரையும் அறிவியல் சார்ந்ததாகும்.

## 15 கும்மிப்பாடல்கள்--வகைப்பாடு

டாக்டர் ஏன். என். பெருமாளின் இக்கட்டுரை இ.ப.த.ம.க. ஆய்வுக் கோவையில் இடம்பெற்றுள்ளது. இத்துறையில் ஆர்வம் கொண்ட பேராசிரியர் இவர். இதுவரை நடனம் பற்றி பல கட்டுரைகளையும் ஒரு நூலையும் எழுதியுள்ளார்.

இக்கட்டுரையில் கும்மியின் தோற்றம், வளர்ச்சி வகைப்பாடு போன்றவற்றினை விளக்குவதனை நோக்கமாகக் கொண்டுள்ளார். இயற்கும்மி, ஒயிற்கும்மி, என இருவகையாகப் பகுக்கின்றார். பின்னர் சமூகக் கும்மிப் பாடல்களைச் சீர்திருத்தம், நாட்டுப் பற்று அறிவூட்டல் என மூன்று பிரிவுகளாகப் பிரிக்கின்றார். சமயக் கும்மிப்பாடல்களைப் புராணம், இதிகாசம், தத்துவம், சிறுதெய்வக்கதை, துதிகள் என ஐந்தாகப் பகுத்துள்ளார், வரலாற்றுக் கும்மிகளைத் தனிமனித வாழ்வு, நாட்டு, வரலாறு, சிறப்பு நிகழ்ச்சிகள் என மூன்று வகையாக்கியுள்ளார்.

இவரது முயற்சி வரவேற்கத்தக்கது. இத்துறையில் இவரிடமிருந்து நிறைய எதிர்பார்க்கலாம்.

## 16. உடுக்கைப் பாடல்களில் சக்தியின் ஒருமைப்பாடு

நா. செல்வராசனின் உடுக்கைப் பாடல் பற்றிய கட்டுரை இ.ப.க.த ம. ஆய்வுக் கோவையில் வெளியாகியுள்ளது. இவர் இத்துறையில் ஆய்வு புரிய தொடங்கியிருப்பதனை இக்கட்டுரை மூலம் அறிய முடிகிறது.

உடுக்கையின் தத்துவத்தை முதலில் இவர் ஆராய்கிறார். இதில் சக்தியின் ஒருமை பாட்டுணர்வைக் காணுகின்றார். பத்ரகாளி, மாமுண்டியம்மன், அங்காளம்மன் என்னும் மூன்று தெய்வங்களின் உடுக்கைப் பாடல்களை எடுத்துக் கொண்டு ஆய்வு செய்கிறார். முடிவுரையாக 'சக்தி தெய்வங்கள் தனித்தனி வழிபாட்டு முறைகளைக் கொண்டு விளங்கினாலும் உடுக்கை வழிபாடலினால் ஒன்றுபடுகின்றனர் எனக் கூறுகிறார்.

'இக்கருத்து விரிவான ஆய்வுக்குரியது' என இவரே கூறுவதால். இவ்வாய்வைத் தொடங்கியவர் என்ற முறையில் இவர் சிறப்பினை பெறுகின்றார்,

## 17. A STUDY OF LABOUR SONGS

வளவன் அவர்களின் இக்கட்டுரையும் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் நடைபெற்ற நாட்டுப்புறவியல் கருத்தரங்கில் வாசிக்கப்பட்டதாகும்.

தொழில் பாடல்களைப் பற்றிய விரிவான ஆய்வு இது. இதில் தொழில் பாடலின் வகைகள், உள்ளடக்கம், இயல்பு போன்றவற்றை முதலில் விளக்குகிறார். பின்னர் உழவு, நடுவை. ஏற்றம்

போன்ற தொழில்களின் போது பாடப்படுகின்ற பாடல்களைச் சான்றுகளுடன் விளக்குகிறார். பாடல்கள் பாடப்படுகின்றமுறையையும், புராணத் தொடர்பையும் விவரித்துள்ளார்.

இதை இன்னும் விரிவாகச் செய்திருக்கலாம் என்று தோன்றுகிறது.

## 18. THEMMANGU SONGS

டாக்டர் குருவிக்கரம்பை சண்முகத்தின் இக்கட்டுரை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற நாட்டுப்புறவியல் கருத்தரங்கில் வாசிக்கப்பட்டது.

தெம்மாங்கு பற்றிய விளக்கம், இசைத்தன்மை, தோற்ற வளர்ச்சி, தற்கால நிலைமை, போன்றவற்றை முதலில் விவரிக்கின்றார். பின்னர், நடந்து செல்லும் போதும், வண்டியோட்டும் போதும் பாடப்படுகின்ற பாடல்களை ஆய்கின்றார். தொழில் செய்யும் போது காதல் சூழ்நிலையில் தெம்மாங்கு பிறப்பதையும் விளக்குகின்றார். தெம்மாங்கின் வடிவத்தையும், பொருளடக்கத்தையும் ஆராய்கிறார். இதுவரை தெம்மாங்கு பற்றிய தொகுப்பாய்வுகளையும் விவரிக்கிறார்.

இது ஒரு தெம்மாங்கு பற்றிய விளக்கவியல் கட்டுரையாகும்.

# II கதைப்பாடல்—கட்டுரைகள்

## 1. BALLADS

டாக்டர் ஆறு. இராமநாதனின் இக்கட்டுரை உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 1978 இல் நடத்திய கருத்தரங்கில் வாசிக்கப்பட்டு 1981இல் அச்சாகியுள்ளது. கதைப் பாடல் பற்றிய ஆங்கில விளக்கக் கட்டுரை இது.

இதில் கதைப் பாடல்களின் தோற்றத்தையும் வளர்ச்சியையும் முதலில் குறிப்பிடுகின்றார். எல்லா மொழிகளிலும் இருப்பது போன்று தமிழிலும் இதன் தோற்றம் இவரால் விளக்கப்படுகின்றது. கதைப்பாடல் ஆய்வின் பயன்களையும் கூறுகின்றார். இலக்கிய வரலாற்றுக்கு இது பயன்படுவதை இவர் ஆழமாகச் செய்ய முயல்கிறார். தேசிங்கு இராஜன் கதைப் பாடல் தோன்றி வளர்ந்த முறையை விரிவாக ஆய்கிறார். நிகழ்ச்சி, பரவல், இலக்கிய வடிவம் என்ற மூன்று நிலைகளை இக்கதைப் பாடல் எவ்வாறு பெறுகிறது என்றும் கூறுகிறார். கதை, சிறிய கதைப்

பாடல், நீளக் கதைப்பாடல் காவியம், கதை என்று 5 நிலைகள் இருப்பதையும் விளக்கிவிடுகிறார். இறுதியில் இரண்டு வகையாகக் கதைப் பாடலைப் (நீளமானது. குறுகியது) பகுக்கின்றார். இலக்கியக் கதைப் பாடலைவிட நாட்டுப்புறக் கதைப் பாடல் சமுதாயத் சிறப்பாகப் பிரதிபலிக்கிறது என்று கூறியுள்ளார்.

## 2 தமிழ் நாட்டுக் கதைப் பாடல்களில் சோக முடிவு

நா. வானமாமலை அவர்களின் இக்கட்டுரை ஆராய்ச்சி இதழில் 1971இல் வெளிவந்தாலும் 1981 இலும் நாட்டார் வழக்காற்றில் ஆய்வுகளின் முதல் தொகுதியிலும் இடம் பெற்றுள்ளது. இக்கட்டுரை கொடுக்கப்பட்டதல்ல; எடுக்கப்பட்டது என எண்ணுகிறேன்.

இதில் தமிழகக் கதைப் பாடல்களில் பெரும் பாலானவை சோக முடிவினைப் பொறுவதற்குரிய காரணங்களைச் சமூகவியல் கண்ணோட்டத்துடனும் வரலாற்று முறையிலும் ஆராய்ந்துள்ளார்.

'புதிய கருத்திற்கும் புதிய வாழ்க்கையார்வத்திற்கும் மறுக்கப்பட்ட மனித உரிமைகளைப் பெறவும் போராடும் வீரர்களே நமது கதைப் பாடல்களில்வரும் சோகப் பாத்திரங்களான காத்தவராயன் முத்துப்பட்டன் மதுரை வீரன், சின்னத்தம்பி, கௌதலமாடன் முதலியோர். பழமையான சிந்தனைகளால் செயலூக்கம் இழந்து. புதிய நிலைமைகளை அறிய முடியாமல் புதிய சக்திகளுக்குப் பலியாகிற சோகப்பத்திரங்கள் பெரும் பாலும் உயர்நிலை வர்க்கத்தைச் சேர்ந்த குலசேகரன், சடைக்க தேவன், இரவிக் குட்டிப்பிள்ளை, தேசிங்கு போன்றோர். எனவே, இருவகையான சோகப் பாத்திரங்கள் இருவகையான காரணங்களால் தோற்றம் பெறுகின்றன என்பது இக்கட்டுரையின் முடிபு.

இது, சமுதாய மானிடவியல் கண்ணோட்டத்துடன் அமைந்த சிறந்த கட்டுரையாகும்.

## 3. அம்மானை—ஓர் ஆய்வு

டாக்டர் சு. சண்முக சுந்தரத்தின் இக்கட்டுரை நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகளின் முதல் தொகுதியில் இடம் பெற்றுள்ளது. அம்மானை கதை தழுவா நிலையிலிருந்து கதை தழுவி அமைந்த நிலையை ஏட்டிலக்கியம் வாய்மொழி இலக்கியம் இரண்டின் துணை கொண்டும் வரைகிறார்.

இக்கட்டுரையில், அம்மானையின் சொற்பொருளும் விளை யாடலாக இருந்த நிலையும் அதற்காக எட்டிலக்கிய சான்றுகளும் முதல் பகுதியாகத் தரப்பட்டுள்ளன. பின்னர் அம்மானை கதைப் பாடாக வளர்ந்த நிலையையும் வகைகளையும், அம்மானையின் உள்ளடக்கத்தையும் விரிவாகக் கூறியுள்ளார்.

பதிப்பாசிரியர் கூறுவது போல் 'மேலும் ஆய்வு செய்ய இட முண்டு'. டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்கள் கூறுவது போல், அமைப்பியல், உள்ளடக்க ஆய்வியல் என்ற இரண்டும் சார்ந்த நிலையில் இதுகட்டுரை அமைகிறது'

## 4. வைகுண்டர் காட்டிய வாழ்க்கை நெறி

பொன்னீலன் அவர்களின் இக்கட்டுரை நாட்டார் வழக்காற் றியல் ஆய்வுகளின் முதல் தொகுதியில் இடம் பெற்றுள்ளது கரிசல் எனும் நாவலைத் தந்த இவர் அகிலத்திரட்டு அம்மானை என்னும் நாட்டார் காப்பியம் பற்றி இக்கட்டுரையில் ஆய்வு புரிகிறார்.

'சாதியின் பெயரால் நடந்த கொடுமைகளை நாட்டார் இலக் கியங்கள் எவ்வாறு பிரதிபலிக்கின்றன, என்றும் மனிதநேயம் கொண்ட சிலர் எவ்வாறு அதனை எதிர்த்துப் போர் புரிந்தனர் என்பதையும் இக்கட்டுரையில் ஆசிரியர் விளக்கியுள்ளார். முடிவில், 'இந்திய முதல் சுதந்திர போருக்கு முன்னேயே உழைக்கும் மக்களைத் திரட்டி அவர்களின் வாழ்வு மேம்பாட்டுக்காகப் போரட்டத்தால் இயங்க வைத்த பெருமை வைகுண்ட சாமியைச் சாருகிறது' என்கிறார்.

சமூகவியல் நோக்கத்தையும் வரலாற்று பொருள் முதல்வாத நோக்கத்தையும் இக்கட்டுரையில் ஆசிரியர் செலுத்திப் பார்க் கிறார்.

## 5. தளவாய் இராமப் பையன்

பெ. சண்முகத்தின் இக்கட்டுரை இ. ப. க. த. ம ஆய்வுக் கோவையில் இடம் பெற்றுள்ளது. இராமப்பையனின் வரலாற் றினையும் போர் வெற்றிகளையும், மறைவினையும் இக்கட்டுரை விளக்கியுள்ளது. இது வரலாற்றுக் கட்டுரையாக இருப்பினும் இவனது வெற்றிகளுக்குச் சான்றாக அம்மானைப் பாடல்கள் விளங்குகின்றன. இவனது திருவிதாங்கூர்ப் போரினைப்பற்றி

இராமப்பையன் அம்மானை விரிவாகக் கூறுவதனையும் எடுத்துக் காட்டுகின்றார். வெங்களூர்ப் போரினையும் அம்மானை விளக்கு வதைச் சுட்டிக் காட்டுகின்றார்.

இக்கட்டுரை விளக்கவியல் கட்டுரையாக அமைந்துள்ளது. இதில் இவர் ஆய்வுக்கு இடம் வைக்கவில்லை.

## 6. கோவலன் கதையில் கண்ணகி

மா. இராமலிங்கம் அவர்களின் இக்கட்டுரை இ. ப. க. த. ம. ஆய்வுக் கோவையில் இடம் பெற்றுள்ளது. இவர் இக்கட்டுரை யில் சிலப்பதிகாரத்தையும் கோவலன் கதையையும் ஒப்பிட்டுப் பார்க்கிறார்.

கண்ணகியின் மனநிலைகளும் செயல் முறைகளும் ஊர்க்குணம் கொண்டிலங்குகின்றன. காளிதேவி கண்ணகியாகப் பிறக்கின்றாள். 'பாமரர்களின் ரசனைக்கு ஏற்ப பெண்ணொருத்தி ஆவேசமாகப் புனையப்பட்டிருக்கலாம்' என்கிறார். மந்திர, தந்திரங்களில் மயங்கும் கிராமிய மக்களின் மனவோட்டத்திற்கு ஏற்பக் கதையில் அபூர்வக் கற்பனைகள் அதிகம் காணப்படுகின்றன என்றும், கிராமத்தின் சராசரி மனிதர்களது அபிலாஷைகள் கற்பனைகள் நம்பிக்கைகள் கதைக் கண்ணகியிடம் காணப்படுகின்றன என்றும் கூறுகிறார்.

ஒரு காப்பியத்தையும் கதைப் பாடலையும் ஒப்பிடும் முயற்சி புதியதன்று. இதற்கு முன்னால் 'சிலம்பும் கூத்தும்' என்னும் ஒரு நூல் முழுவதும் இந்தக் கருத்தில் ஆராயப்பட்டிருப்பது நினைவுகூரத்தக்கது,

## 7. கண்ணகி கோவலன் கதை வேறுபாடுகள்

கொ. இலட்சுமணசாமி அவர்களின் இக்கட்டுரை இ.ப.க.த. ம. ஆய்வுக் கோவையில் இடம்பெற்றுள்ளது. இதில் கோவலன் கண்ணகி கதை பற்றிய ஆய்வு நடத்தப் பட்டிருக்கிறது.

முதலில் சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் உள்ள கதைப் பகுதிகளின் ஒற்றுமை வேற்றுமைகளையும் எடுத்துரைக் கின்றனர். கண்ணகி வழக்குரை என்னும் ஈழத்து நூலையும் கோவலன் கதை எனும் கதைப் பாடலையும் ஒப்பிடுகின்றார். செவிவழிச் செய்திகளையும் இதனோடு ஒப்பிட்டுள்ளார்,

மக்களிடையே நெடுங்காலமாக வழங்கப் பெற்று அவ்வக் காலத்திற்கு ஏற்ப வளர்ச்சியும் பெற்று பின் ஒரு கட்டத்தில் எழுத்து வடிவம் பெற்று நிலைத்து விடுவது வளர்காப்பியமாகும். கலை நலம் தோன்ற புதுவதாகப் புலவனால் புனையப்படுவது கலைக்காப்பியம் ஆகும். சிலப்பதிகாரத்தில் இருவகைக் காப்பிய கூறுகளும் உள்ளன' என்கிறார்.

இக்கட்டுரையின் முடிவில் மேலும் ஆய்வுக் குரியனவாகும் என்று முடிக்கின்றார், ஆசிரியர். ஆசிரியர் மேலும் ஆய்வது நன்று.

## 8. துரோபதை குறம்

தெ முருகசாமியின் இக்கட்டுரை இ. ப க. த. மன்ற ஆய்வுக் கோவையில் வெளிவந்துள்ளது. இவர் இத்துறைக்குப் புதியவர் போலக் காணப்படுகிறார்.

துரோபதை குறத்தை எடுத்து வைத்துக் கொண்டு அதன் கதையோட்டத்தையும், கருத்து விளக்கங்களையும் விவரிக்கின்றார். குறத்துக்கும் குறவஞ்சிக்கும் வேறுபாடு உண்டு என்றும் கூறுகிறார். குறத்தின் இலக்கணத்தையும் துரோபதை குறத்தினைப் பாடியவர் வெண்பாவில் புகழேந்தி அல்லர் என்றும். இது பாடப்பட்ட காலம் அச்சு எந்திரங்கள் உருவான 19 ஆம் நூற்றாண்டு என்றும் கூறுகிறார். வரிகளில் அமைந்துள்ள எதுகை மோனை அழகுகளும், திருமாலின் சிறப்பிடமும்...' இப்படி எவ்வளவோ கூறலாம்' என்கிறார்.

கட்டுரையாசிரியர் இத்துறையில் காலடி எடுத்து வைத்துள்ளார். இவர் இன்னும் நடை போடுவார் என எதிர்பார்க்கலாம்.

## 9. கான்சாகிபு--வரலாறும் முரண்பாடும்

எச். நத்தர்சா அவர்களின் இக்கட்டுரை இ. ப. க. த. ம. ஆய்வுக் கோவையில் இடம் பெற்றுள்ளது. இவரும் இத்துறைக்குப் புதியவர் போல் தோன்றுகிறது.

இதில் கான்சாகிபின் பிறப்பினைப் பற்றி முதலில் ஆராய்கிறார். இவன் பிறப்பில் சில முரண்பாடுகள் உள்ளன. இதற்கு தெளிவு காண நாட்டுக் கதைப் பாடல் இவருக்கு எவ்வாறு உதவுகின்றது என்பதையும் குறிப்பிடுகின்றார். கான்சாகிபின் திருமணம் பற்றியும் இறப்பு பற்றியும் உள்ள முரண்பாடுகளையும் இவர் கதைப் பாடல் மூலம் நீக்க முயல்கின்றார்.

இக்கட்டுரை வரலாற்று ரீதியில் புதிய பிரச்சனைகளை அலசுகின்ற வரவேற்கத்தக் கட்டுரையாகும்.

## 10. நளனம்மானையில் உவமைகள்

பகவதி காளிமுத்து அவர்களின் இக்கட்டுரை இ.ப.க.த.ம. ஆய்வுக் கோவையில் வெளிவந்துள்ளது. இவரும் இத் துறைக்குப் புதியவர் எனத் தெரிகிறது.

இக்கட்டுரையில் நளனம்மானையில் இடம் பெறும் உவமைகளைப் பற்றிய ஆய்வுள்ளது. முதலில் பாத்திர வருணனையில் வரும் உவமைகள், பிற இடத்து வரும் உவமைகள் என இருவகையாகப் பகுக்கின்றார். மகளிரின பண்பு, உறுப்பு போன்றவற்றின் வருணனை பற்றியும் ஆடவர் உறுப்பு வருணனை பற்றியும் உவமைகள் வந்துள்ளன. உவமைகளின் வகைகளையும், உவம உருபுகளையும் எடுத்துக் காட்டியுள்ளார். முடிவாக 'நளனம் மானையின் உவமைகள் நளனம்மானையைப் பிறகதைப் பாடல் களிலிருந்தும் வேறுபடுத்தி அதனுடைய இலக்கியத்தரத்தை உணர்த்துவனவாக அமைகின்றன' என்று கூறுகிறார்.

இது இலக்கியவியல் அடிப்படையில் அமைந்த கட்டுரையாகும்

## 11. SOCIAL RUPTORES IN CERVAI-K-KARAN BALLAD

டாக்டர் ஏ. என். பெருமாள் அவர்களின் இக்கட்டுரையானது அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற நாட்டுப் புறவியல் கருத்தரங்கில் வாசிக்கப்பட்டது.

சேர்வைக்காரன் கதைப் பாடல் பற்றிய ஆய்வு இது. இதில் அடங்கியுள்ள சமூக இயல்பை விளக்கியுள்ளார். கதைப்பாடலின் கதைச்சுருக்கத்தை முதலில் தருகிறார். பின்னர் இக்கால கட்டத்தில் உள்ள சமூக நிலையை விரிவாகத் தந்துள்ளார்.

கதைப் பாடலில், சமூக இயல்பினை அறிய முயலும் இக் கட்டுரை விரிவாக அமைந்துள்ளது. இவரே இக்கதைப் பாடலைத் தொகுத்து ஆய்ந்திருப்பது பாராட்டுக்குரியதாகும்.

# III கதைகள்-கட்டுரைகள்

## 1. நாட்டார் படைப்புகளில்சொற்பொருள் அமைப்பியல் ஆய்வு

டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம் அவர்களின் இக்கட்டுரை நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகளின் முதல் தொகுதியில் இடம்

பெற்றுள்ளது. இக்கட்டுரை ஏற்கனவே 1970 இல் ஆங்கிலத்தில் வெளி வந்துள்ளது. இப்போது அது தமிழாக்கம் பெற்றுள்ளது.

அணிந்துரையில், கூறப்பட்டிருப்பது போல 'பல்வேறு படி நிலைகளில் கதையினைச் சுருக்கி, கருத்தளவு வாக்கியங்களாக மாற்றப்படுகின்றன. அவற்றில் அடித்தளமாக உள்ள கருத்துகள் கதைக் கூறுகளுக்கான தலைப்புகளாக உருவாக்கப்படுகின்றன. இம்முறையில் பல்வேறு வகைப்பாடல்களை வேறுபடுத்தவும் பாடற்போக்கை ஆராயவும் முடியும். இதனை இரண்டு ஒப்பாரிப் பாடல்கள், இரண்டு தாலாட்டுப் பாடல்கள், தேவாரம், பாரதி யார்பாடல், புறப்பாடல் போன்ற இருவகை இலக்கியங்கள் வாயிலாகவும் செயல் முறைப்படுத்திக் காட்டுகின்றார். அமைப் பியல் பார்வையில் புதிய சிந்தனை போராட்டத்தில் அமைந் துள்ளது. இக்கட்டுரை!

## 2. மதுரைத் தலப்புராணங்களில் உள்ள இரு கதைகளின் அமைப்பியல் ஆய்வு

டாக்டர். கி. நாச்சிமுத்துவின் இக்கட்டுரை, நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகளின் முதல் தொகுதியில் இடம் பெற்றுள்ளது.

'ஒரு கதையில் மூலவடிவம், பல்வேறு கதைகள் ஒரு கதையாக அமைதல், அவை இணைந்தகாலம், ஒரு கதையின் அமைப்பு மற்றொன்றில் அமைதல் போன்றவற்றைக் கண்டு பிடிக்க அமைப்பியல் ஆய்வு உறுதுணையாகும் என்பதை மிகச்சிறப்பாக விளக்குகிறார். வாய்மொழி வழக்காறுகளாக இருந்து ஏட்டில் அமைந்த தமிழ்ப் புராண கதைகளுக்குப் பிராங்டண்டிஸ் போன்றோரின் ஆய்வு முறையை இணைத்து ஒரு மாதிரியை உருவாக்குகிறார்'—இது பதிப்பாசிரியர் கூற்று.

'தருமியும் பெரியாழ்வாரும் பொற்கிழிபெற்ற கதைகள் பயன் பாட்டிற்காக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. இருப்பினும் கதைக்கூறன்களை இனங்கண்டு கொள்வது எப்படி என்று தெளி வாக்கியிருந்தால் இளம் ஆய்வாளர் புரிந்து கொள்ள ஏதுவா யிருக்கும்' என்ற அணிந்துரையும் ஆய்வுரையே.

## 3. SOCIO PSYCHOANALYSIS OF A TAMIL FOLKTALE

டாக்டர் ஆறு. இராமநாதனின் இக்கட்டுரையும் அண்ணா மலைப் பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற நாட்டுப் புறபியல் கருத்தரங்கில் வாசிக்கப்பட்டது.

இவர் ஒரு நாட்டுப்புறக்கதையை எடுத்துக் கொண்டு அதனை சமூக உளவியல் அடிப்படையில் ஆராய்ச்சி செய்துள்ளார். ஒரு கதையின் தோற்றம், பரவல், நிலைத்தல், மாற்றம் போன்ற வற்றை அறிந்து கொண்டால் சமூக உளவியல் அடிப்படைக்கான விடைக்கிடைக்கின்றது. இதை இவர் சிறப்பாகச் செய்துள்ளார்.

தமிழில் ஏராளமான நாட்டுப்புறக்கதைகள் இருப்பினும் அவற்றில் இன்னும் விரிவான ஆய்வு செய்யப்படாதது பெருங் குறையாகும். இவரைப் போன்றவர்கள் இத்துறையில் முயலலாம் என்பதற்கு இக்கட்டுரை அனுமதியளிக்கிறது.

## 4 நரிக்கதை-ஓர் ஆய்வு

பி. தட்சிணாமூர்த்தி அவர்களின் இக்கட்டுரை இ. ப. க. த. ம. ஆய்வுக்கோவையில் இடம் பெற்று உள்ளது. இவர் இத்துறையில் ஆர்வம் கொண்டவர் ஏற்கனவே சில கட்டுரைகளை எழுதியுள்ளார்.

இக்கட்டுரையில் நரிக்கதையைப் பற்றிய ஆய்வினை செய் துள்ளார். கிதோபதேசத்தில் உள்ள நரிக்கதையையும் தேவரின் நரிக்கதையையும் ஒப்பிட்டுள்ளார். நரி ஒன்று தன் வழியில் இறந்து போன ஒரு வேடனையும் அவனால் கொல்லப்பட்ட ஒரு மிருகத் தையும் தானாக மடிந்த பாம்பையும் காண்கிறது. இவை தனக்கு நல்ல உணவு என எண்ணி மகிழ்ந்த நரி, பின்னர் இவற்றைத் தின்னாமல் வேடனின் வில்லில் உள்ள தோல் வாரினை விரும்பி கடிக்கவே வார் அறுபட்ட வில் நிமிர்ந்து நரியைக் கொன்று விடு கிறது. இது தான் நரிக்கதையில் அடிப்படைக் கூறுகள். இவை வடமொழியில் ஒருவகையாகவும் தேவரது விருத்தத்தில் ஒருவகை யாகவும் இடம் பெற்றுள்ளது. இடையில் புதியன சேர்வதும், பழையன மாற்றம் பெறுவதும் உண்டு எனக்குறிப்பிடுகிறார்.

இவ்வாய்வு ஆரம்ப நிலையில் உள்ளது. இவர் லெவிஸ்ட்ரஸ் பிராப் போன்றவர்களை அறிந்து கொள்வது நல்லது.

## IV பழமொழி

### 1. PROVERBS

டாக்டர் காந்தியின் இக்கட்டுரை உலகத்தமிழராய்ச்சி நிறுவனத்தில் 1978 இல் நடைபெற்ற கருத்தரங்கில் வாசிக்கப்

பட்டது. ஆனால் எண்பத்தொன்றில் அச்சானது. பழமொழிகளை அதன் வரலாற்றுப் பின்னணியில் ஆய்வதனை நோக்கமாகக் கொண்டது இக்கட்டுரை.

நாட்டுப்புற இயலைப்பற்றியும், வாய்மொழிக் கலைகளுக்கும் பழமொழிகளுக்கும் இடையேயுள்ள தொடர்பினையும் பழமொழிக்குரிய இலக்கணத்தையும், தமிழ்ப் பழமொழிகளின் வரலாற்றினையும், பழமொழி ஏட்டு இலக்கியத்தின் மீது கொண்ட செல்வாக்கினையும் விளக்கியுள்ளார். பழமொழிகள் தொகுக்கப்பட்டு வகை செய்யப்பட்ட வரலாற்றினையும், சில விளக்கங்களையும் தந்துள்ளார்.

இக்கட்டுரை பழமொழிகளைப் பற்றி பொதுவாகத் தெரிந்து விரும்புகின்றகின்றவர்களுக்குப் பெரிதும் உதவும்.

## 2. வேளாண்மையில் பழமொழிகள்

பேராசிரியர் இல. செ. கந்தசாமியின் இக்கட்டுரை ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டு சிறப்பு மலரில் இடம் பெற்றுள்ளது.

'பழமொழி என்பது பட்டறிவால் தோன்றிய அனுபவமொழி' என்று பழமொழிக்கு விளக்கம் கூறுவதுடன் பழமொழியின் பண்புகளையும், வடிவத்தையும், பயன்களையும் விளக்குகிறார். தமிழில் மட்டும் ஏறத்தாழ 40000 பழமொழிகளுக்கு மேல் வேளாளர் தொடர்பானவை. உழவியல், மண்ணியல், பயிரியல், விதையியல், பூச்சி நோயியல், தோட்டவியல், வேளாண் பொருளியல் ஆகிய வேளாண்மைக் கருத்துக்களைப் பற்றி பழமொழிகள் விளக்குகின்றன கால்நடை வளர்ப்பு, கால்நடை மருத்துவம், வேளாண் பொறியியல், மீன்வள இயல், வன இயல், மனையியல், சமுதாய இயல் போன்றவற்றையும் பழமொழிகள் விளக்குவதாகக் குறிப்பிடுகின்றார் தமிழில் மட்டுமல்ல உலகப் மொழிகளிலும் வேளாண்மை பற்றிய குறிப்புகள் உண்டு. பழைய பழமொழிகளில் மட்டுமல்லாமல் புதிய மொழிகளும் நிலத்தை அறிந்து உரத்தை இடு' என்பன போன்று தோன்றி வேளாண்மையை விளக்குகின்றன என்கிறார்.

வேளாண்மை அறிஞர்கள் இத்தகைய ஆய்வினை ஒரு பொதுத்தொண்டாகக் கருதி ஆராய வேண்டும் என்றும் அவ்வாறு ஆராய்ந்தால் இன்றைய சமுதாயத்தில் அவிழ்க்க முடியாத சிக்கல்களை அவிழ்க்க முடியும் என்கிறார்.

டாக்டர் சாலை இளந்திரையன். முன்னோடியாகத்தனது டாக்டர் பட்ட ஆய்வுக்கு இத்துறை பற்றி தொடங்குகிறார் இவர் தொடர்ந்து செல்வது தெரிகிறது.

## 3. THE CONCEPT OF HUSBAND WITH REFERENCE TO TAMIL PROVERBS

பேராசிரியர் வ. பெருமாள் அவர்கள் என்றதும் பழமொழி நினைவுக்கு வரும் வகையில் ஏராளமாக வாய்ப்புகள் கிடைக்கும் போதெல்லாம் எழுதிகுவிக்கின்றார். இக்கட்டுரை இ.ப.க.த.ம. ஆய்வுக் கோவையில் ஆங்கிலத்தில் எழுதப்பட்டிருப்பது சற்று வித்தியாசமாக உள்ளது.

கணவனது நிலையினைப் பழமொழி மூலமாக இவர் விவரிக்க முயல்கின்றார். கணவன், அழகு, உயர்வு, ஆற்றல், மரியாதை, காப்பு, துணை, ஒழுக்கம், தெய்வீகம், சம்பாத்தியம், சந்தோஷம், சமுதாய நல்நிலை, ஆகியவற்றினைக் கொண்டவன் என்றும் கணவன் ஒரு பெண்ணுக்கு அவசியம் என்றும் பழமொழிகளின் மூலமாக எடுத்துக்கூறுகிறார். முடிவுரையில் இப்பழமொழிகளின் கருத்துக்கள் இன்றும் நடைமுறையில் கடைபிடிக்கப் படுகிறது என்று கூறுகிறார்.

இது ஒரு விளக்கவியல்கட்டுரை. இதுபோல் இவரிடம் ஏராளம் எதிர்பார்க்கலாம்.

## 4. A COMPARATIVE STUDY OF TAMIL AND MALAYALAM PROVERBS.

பேராசிரியர் வ. பெருமாள் அவர்களின் இக்கட்டுரை அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் நடைபெற்ற நாட்டுப்புறவியல் கருத்தரங்கில் வாசிக்கப்பட்டது.

இக்கட்டுரையில், அவர் முதலில் இலக்கியத்தின் இருவகையையும், பழமொழிகளின் இலக்கணத்தையும், பழமொழிகளைப் பற்றிய பிறஅறிஞர்களின் கருத்துக்களையும் தொகுத்துள்ளார். பின்னர் மலையாளத்திலுள்ள பழமொழிகளையும் தமிழ்ப் பழமொழிகளையும் ஒப்பிட்டு எழுதுகிறார். சமூகம், கல்வி, பொருளாதாரம், நீதி, மதம், மருத்துவம், அன்பு, மனவியல் எனப்பல்வேறு வகைகளில் இவரது ஒப்பீடு செல்கிறது. இறுதியில் 20 ஒத்தப் பழமொழிகளையும் தொகுத்து தந்துள்ளார்.

இவர் பழமொழிகள் ஊறுவது உண்மை என்றாலும் பழமொழிகள் இவரில் ஊற மறுப்பது இக்கட்டுரையால் தெரிய வருகிறது.

## V விடுகதை

CLASSIFICATION OF TAMIL RIDDLES

செல்வி சாந்தி அவர்கள் தமிழ் விடுகதைகளை இக்கட்டுரையில் வகைப்படுத்த முயல்கின்றார்.

விடுகதைகளை Simple, Compound, String என்று மூன்று வகையாகப் பகுத்துள்ளார். Simple விடுகதைகள் 1:1 என்ற விகிதத்திலும், Compound விடுகதைகள் N:1 என்ற விகிதத்திலும் String விடுகதைகள் N:N என்ற விகிதத்திலும் அமைந்திருப்பதாகச் சான்றுகளுடன் விவரிக்கின்றார். அட்டவணையிட்டும் தனது கருத்தினை உறுதிபடுத்துகின்றார்.

முடிவுரையில் 'This paper in only a first attempt' என்று கூறுகிறார். இதுவே 'best attempt' என்று கூறத் தோன்றுகிறது.

## VI கலைகள்

### 1 சங்கக் கூத்தும் தெருக்கூத்தும்:-

அ. அறிவு நம்பியின் இக் கட்டுரை இ.ப.க,த.ம. ஆய்வுக் கோவையில் இடம் பெற்றுள்ளது.

சங்கக்காலக்கூத்து முறையையும் இக்காலத் தெருக் கூத்தினையும் இக்கட்டுரையில் ஒப்பிட்டு விளக்குகின்றார். தமிழகத்தின் மிகப்பழமையானது இக்கூத்து என்றும் சங்ககாலத்தில் கூத்தராற்றுப்படை, மதுரைக்காஞ்சி போன்றவற்றின் வரிகள் நமக்கு உதவும் என்றும் குறிப்பிடுகின்றார்.

ஆந்திராவின் வீதி நாடகம், கர்நாடகத்தின் சன்னாட்ட, மளையாளநாட்டின் கூடியாட்டம் போன்றவற்றின் மூலம் சங்கக் கூத்தாகவே இருக்க வேண்டும் அவற்றினை பீட்டுருவாக்கம் செய்தால் இவ்வுண்மை தெரியவரும் என்கிறார். அதனைச் செய்கின்ற காலமே நம் ஆய்வின் நற்காலம் எனலாம்.

### 2 தமிழில் தெருக்கூத்து

இக்கட்டுரை ந. முத்துசாமியால் எழுதப்பட்டு ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டு சிறப்புமலரில் வெளியிடப் பட்டுள்ளது.

நாட்டிய சாஸ்திரத்தில் சொல்லப்படும் செய்திகளோடு தெருக்கூத்தைச் சேர்த்துப்பேசும் காரியத்தில் ஈடுபடுகிறது இந்தக் கட்டுரை. அதிலும் நாட்டிய சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கும் 'விக்ருஸ்ட நாட்டியக்ரஹம்' என்ற அரங்க அமைப்பு ஒன்றை மட்டும் எடுத்துக் கொண்டு அது எப்படி தெருக்கூத்தில் எளிமை யாக்கப் பட்டுள்ளது என்று ஆராய்கிறார் கட்டுரையாசிரியர்.

சாஸ்திரப்படி அரங்கமானது நேபத்யக்ரஹம் (வேஷமிட்டுக் கொள்ளும் இடம்), ரங்ககிரிஷம் (வாஷ்ய கோஷ்டிக்கான இடம்), ரங்கபீடம் (நடிப்பிடம்), ரங்கமண்டலம் (பார்வையாளர்இடம்) போன்றவை எவ்வாறு அமைந்துள்ளது என்றும் அது தெருக் கூத்தில் எவ்வாறு இலகுவாக்கப்பட்டு விட்டது என்றும் குறிப்பிடு கின்றார்.

இவர் தெருக் கூத்தினைப் பற்றி கூறும் போதே இதனோடு தொடர்புடைய யக்ஷகானம், கதக்களி, கிருஷ்ணணாட்டம், சாக் கையன் கூத்து. கூடியாட்டம், போன்றவற்றைப் பற்றியும் விளக் கங்கள் கூறுவது இவரது தனித்தன்மையையும் சிறப்புத் தன்மை யையும் காட்டுவனவாய் உள்ளது.

இவர் ஆய்வார்வத்துடன் தெருக்கூத்தினை அணுகி பல்வேறு கட்டுரைகளை இதழ்களிலும் பிறவற்றிலும் எழுதி வருகிறார். இவர் இத்துறையில் ஆய்ந்து வருவோருக்கும் வழிகாட்டியாய் அமைவார் என்பதில் ஐயம் இல்லை. தெருக்கூத்தில் ஈடுபாடுள்ள இவர் இதனோடு பந்தமுள்ள நாடகக் கலைக்குப் புத்துடலும் உயிரும் கொடுத்து வருவதும் குறிப்பிடத்தக்கது.

## 3. THE SOCIO RELIGIOUS CONTEXT OF THE TERUK-KUTTU.

Richard Armand Frasca என்பவர் எழுதியுள்ள இக்கட்டுரை ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டு மலரில் இடம் பெற்று உள்ளது.

தெருக் கூத்தானது சமுதாய, சமயப்பின்னணியில் எவ்வாறு அமைந்துள்ளது என்பது பற்றி இந்த அயல் நாட்டு ஆய்வாளர் இக் கட்டுரையில் ஆராய்கிறார். சமுதாய வாழ்வில் 'காதுகுத்துவிழா,' 'திதி,' 'குலதேவதை பூசை' போன்றவற்றிலும் சமய வாழ்வில் திரௌபதையம்மன்கோவில் விழாக்களிலும் தெருக்கூத்து நடத்தப் படுவதை விளக்கியுள்ளார். கருமாதிபூஜையில் 'கர்ணன் மோட்சம்'

நடத்தப்படுகின்ற முறையையும் துரௌபதை அம்மன் கோவிலில், சித்திரை மாதத்தில் 21 நாட்கள் நடைபெறும் பாரதகூத்தினையும் விரிவாகக் கூறியுள்ளார்.

கட்டுரை சுருக்கமானதாக இருப்பினும் அயல் நாட்டுக்காரருக்கு நம்நாட்டுக்கலையில் இருக்கும் ஆர்வம் பாராட்டத்தக்கதே'

## 4. கட்டியக்காரன்

சோமசுந்த மூர்த்தியின் இக்கட்டுரை இ.ப.க.த.ம. ஆய்வுக் கோவையில் இடம் பெற்றுள்ளது. கட்டியக்காரனைப் மற்றிய செய்திகளைக்கொண்டு ஆய்வு செய்வதனை இக்கட்டுரையின் நோக்கமாகக் கொண்டுள்ளார்.

இதில் கட்டியக்காரனின் கடமைகளை முதலிற கூறுகிறார்' வடமொழியில் சூத்திரதாரன், நடன், விதூகரன் என்று அழைக்கப் படுகிறவனைப் போன்றவன் இவன். கூத்துக்களில் இவனே முதலில் இடம் பெறுகின்றான். பள்ளு, குறவஞ்சி, கீர்த்தனை, நொண்டி நாடகம் போன்றவற்றில் இவனே வெவ்வேறு பெயர்களில் வருகிறான். விலாசத்தில் இவனது பங்கு மரபுப்படி உள்ளது. முடிவுரையாகக் கூத்தில் இவனது பணியையும், பள்ளு நாடகத்தில் கோலுக் காரனாகவும், நொண்டிநாடகத்தில் சித்தாண்டியாகவும், கீர்த் தனையில் கட்டியக்காரன் என்ற பெயரிலும் வருவதனைச் சுட்டு கின்றார்.

## VII பண்பாடு

## 1. FOLK BELIEFS OF THE TAMILS.

டாக்டர் மு. சண்முகம்பிள்ளையும் எரிக்கா.ஏ.இ. கிளாஸ் அவர்களும் சேர்ந்து ஆக்கிய நூல் இது. இது தமிழகத்திலுள்ள நாட்டுப்புற நம்பிக்கைகளைத் தொகுத்து ஆராய்கிறது.

எழுபதுகளில் தமிழவன் செய்த பணியை எண்பத்தொன்றில் டாக்டர் முத்து சண்முகம் தலைமை தாங்கி செய்கிறார். ஒரே ஒரு வித்தியாசம் அவர் செய்தது தமிழில். இவர் செய்திருப்பது ஆங்கிலத்தில், கனடாவைச் சேர்ந்த ஒரு ஆய்வாளர் இத்துறையில் ஈடுபட்டது பாராட்டுக்குரியதாகும்.

The life cyelc—97, Children—51, The household—187, worship—48, pest—46, Rersonal property—80, Travel—61, Animals—105, Death—118, Customs—217, எனப் பத்தாக நாட்டுப்

புற நம்பிக்கைகளைப் பகுத்துள்ளனர். பகுப்பும் சிறுவிளக்கமும் சிறப்புக்குரியது. இத்துறையில் இந்நூல் இரண்டாவது காலடியை எடுத்துள்ளது.

## கட்டுரைகள்

### 1. FOLK BELIEFS IN TAMIL SOCIETY

ஆர். பாலகிருஷ்ணன் அவர்களின் இக்கட்டுரையும் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற நாட்டுப்புற வியல் கருத்தரங்கில் வாசிக்கப்பட்டது.

மூடநம்பிக்கைகளை, நாட்டில் உள்ள அனைத்து நிலையில் வாழும் மக்களிடமும் காணமுடிகிறது. இந்நம்பிக்கைகளை (i) மனிதவாழ்க்கை (ii) இயற்கை இறந்த நிகழ்ச்சி (iii) இயற்கை உலகம் (iv) பொதுவானவை என நான்கு வகையாகப் பகுத்துள்ளனர்.

இக்கட்டுரையில் ஆசிரியர் சகுனங்களை நல்லது, கெட்டது என இரண்டு வகையாகப் பகுத்து சான்றுகளையும் தொகுத்து தருகிறார். இவற்றில் ஒருபகுதியிலுள்ள மக்களால் நல்லசகுனங்கள் என்று நம்பப்படுவது இன்னொரு பகுதியிலுள்ள மக்களில் கெட்டவை என நம்பப்படுவதாகக் கூறுவது சிறந்த கண்டு பிடிப்பு; சீரிய ஆய்வுக்கு உரியது.

### 2. FOLK-CUSTOMS AND BELIEFS OF FISHERMEN IN TAMILNADU

இராஜகுமாரியின் இக்கட்டுரையும் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் நடைபெற்ற நாட்டுப்புறவியல் கருத்தரங்கின் போது வாசிக்கப்பட்டது.

இதில், கடல் புறத்தில் வாழ்கின்ற பரதவமக்களின் பழக்க வழக்கங்களையும், நம்பிக்கைகளையும் தொகுத்து ஆய்வு செய்ய முயல்கிறார். அம்மக்களின் வழிபாட்டு முறைகளையும், வாழ்வியல் முறைகளையும் களப்பணி மூலம் கிடைத்த சான்றுகளால் விளக்க முயல்கிறார். 'வீட்டுக்கு வில்க்காகியுள்ள பெண்கள் படகைத் தொடக்கூடாது' என்பது ஒரு விலக்கு. இவ்வாறு செய்திகளைத் தொகுத்து இக்கட்டுரை தருகிறது.

இதில் ஆய்வு புரிந்தால் இன்னும் பல உண்மைகள் வெளிவர வாய்ப்புள்ளது. இதனை இக்கட்டுரை ஆசிரியரே முயலலாம்.

## 3. A NOTE OF FOLK GAMES OF THE TAMILS

பாலசுப்பிரமணியத்தின் இக்கட்டுரை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற நாட்டுப்புற இயல் கருத்தரங்கில் படிக்கப்பட்டது.

இக்கட்டுரையில் நாட்டுப்புறவாழ்வு, நாட்டுப்புற இயலில் நாட்டுப்புற விளையாட்டுகளின் இடம் போன்றவற்றை முதலில் விளக்குகிறார். பின்னர் ஆண்களும், பெண்களும், சிறுவர்களும், சிறுமிகளும். சிறுவர் சிறுமிகளும், குழந்தைகள் என ஐந்து வகை யாக விளையாடுபவர்களைப் பகுத்துள்ளார். ஆண்களின் விளை யாட்டுகளை (i) நாயகத்தன்மைகொண்டது (ii) அறிவு வளர்ச்சிக் குரியது (iii)உடல் பயிற்சிக்குரியது (iv) விழாக்குரியவை எனப்படுத் துள்ளார். சில விளையாட்டுகளின் மூலத்தைப் பற்றிய ஆய்வினைச் செய்கிறார். விளையாட்டால் வரும் பயன்களையும் தொகுத் துள்ளார்.

இக்கட்டுரையில் இவரது ஆர்வத்தையும், ஆய்வையும் காண முடிகிறது.

## 4. SACRIFICE TO VILLAGE DEITIES

டாக்டர் ச.வே. சுப்பிரமணியன் அவர்களின் இக்கட்டுரை அண்ணாமலைப் பல்கலைகழகத்தில் நடைபெற்ற நாட்டுப்புற வியல் கருத்தரங்கில் படிக்கப்பட்டதாகும்.

கிராமத் தேவதைகளைக்குரிய பலி முறைகளைப் பேராசிரியர் இக்கட்டுரையில் விரிவாக ஆராய்கிறார். பலியின் தன்மைகளையும் கிராமத் தேவதைகளின் இயல்புகளையும், விவரித்துள்ளார். பின்னர் பலிப்பெபருட்களைப்பற்றியும், பலியிடுகின்ற முறை களைப் பற்றியும், பலிநோக்கங்களையும் ஆராய்ந்துள்ளார். பலிச் சடங்குகளும் இதில் விளக்கமாகத்தரப்பட்டுள்ளன.

நாட்டுப்புறப் பண்பாட்டினை அறிந்து கொள்ள—அறிவிக்க இக்கட்டுரை பெரிதும் உதவும்.

## 5. STRUCTURAL STUDIES IN FOLKLORE—A NOTE.

கார்லோஸ் அவர்களால் எழுதப்பட்ட இக்கட்டுரை அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற நாட்டுப்புற வியல் கருத்தரங்கில் வாசிக்கப்பட்டதாகும்.

அமைப்பியல் ஆய்வு பற்றிய இக்கட்டுரையில் அமைப்பியல் ஆய்வின் தொடக்க கால வரலாற்றையும் தமிழில் அதன் நிலை

யையும் முதலில் விவரிக்கின்றார். நாட்டுப்புற நம்பிக்கைகளைப் பற்றி முதன் முதலில் நூல் எழுதியவர் இவர். இக்கட்டுரையில் நாட்டுப்புற நம்பிக்கைகளில் அமைப்பியல் ஆய்வினைச் செய்துள்ளார்.

தொட்டுத் துலக்கப்படாத இத்துறைகள் இவர்களைப் போன்றவர்களாலேயே உயர்வு பெற வேண்டும். இவரது 'ஸ்டரக்சுரலிசம்' இவர் இத்துறையில் பெற்ற ஆய்வுச் சிறப்பை வெளிக் காட்டும்.

## 6 மழையும் நாட்டார் வழக்கியலும்

ஆ. சிவசுப்பிரமணியம் அவர்களின் இக்கட்டுரை நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகளின் முதல் தொகுதியில் இடம் பெற்றுள்ளது. இதில் மழை பற்றிய தமிழக நாட்டுப்புற வழக்காறுகளை உலகில் காணப்படும் நாட்டுப்புற வழக்காறுகளுடன் ஒப்பியல் முறையிலும் வரலாற்று முறையிலும் ஆய்வு செய்கிறார்.

மழையின்மையால் வரும் துன்பத்தையும், மழைச் சடங்குகளையும் பாடல்கள் மூலம் எடுத்துக் காட்டுகிறார். மழைக் கஞ்சி, கொடும்பாவி, தாராபிஷேகம், எல்லைக்கூடா வெட்டுதல், நிர்வாணநடனம், பிள்ளையார் தண்டனை போன்றவை மழைக்கான சடங்குகள். மழை அதிகமானால் அதனை நிறுத்தவும் சடங்குகளைப் புரிகின்றனர். மழைப் பற்றிய பழமொழிகள். நம்பிக்கைகள், சொற்கள் போன்றவற்றையும் இக்கட்டுரையில் தொகுத்துத் தந்துள்ளார்.

விளக்கவியல் முறையில் அமைந்த சிறந்த கட்டுரை இது.

## 7 அவ்வை நோன்பு— ஒரு சமூக மானிடவியல் ஆராய்ச்சி

செந்தீ நடராசனின் இக்கட்டுரை நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகளின் முதல் தொகுதியில் இடம் பெற்றுள்ளது. இது ஏற்கனவே ஆராய்ச்சியில் வெளிவந்த கட்டுரை. இதில் விரிவாக்கப் பட்டுள்ளது. பேராசிரியர் நா. வானமாமலை எதிர்பார்த்தது போலவே இவர் தொடர்ந்தது பாராட்டுக்குரியது.

இந்நோன்பு தொடங்கும் முறையையும், நோன்பு பற்றிய பாடல்களையும், சொல்லப்படும் கதைகளையும், கதை வேறுபாடு

களையும், நோன்பு பற்றிய மாந்திரீக நம்பிக்கைகளையும், சமணத்தோடு இதற்குரிய தொடர்புகளையும் இக்கட்டுரையில் விளக்கமாகக் கூறியுள்ளார்.

பதிப்பாசிரியர் கூறுவது போல, 'நாட்டார் வழக்காறுகளைச் சங்கிலிப் பார்வையாக, முழுப்பார்வையாகப் பார்க்க வேண்டும் என்பதை உணர்த்துகிறார்.' ஆனால் 'நோன்பு பற்றிய ஆய்வுகளில் இதுவே முதலாவதும் முதன்மையானதும் ஆகும்' என்று கூறுவதில் சிறு பிழை. இது முதலாவது அன்று. இது பற்றிய 1975-இல் கொங்கு இதழில் என்னால் ஒரு கட்டுரை எழுதப்பட்டுள்ளது நினைவு கூரத்தக்கது.

## VIII நாட்டுப்புற இயல்

## 1. நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள்

இது முதல் தொகுதியாகும். இதன் பதிப்பாசிரியர் தே. லூர்து இவருக்குத்துணை புரிந்தவர் ஆ. சிவசுப்பிரமணியம். பாரி வேள் பதிப்பகம் மறைந்த பேராசிரியர் நா. வானமாமலை அவர்க்கு இந்நூலைப் படையலாக்கியுள்ளது. தமிழ் நாட்டுப்புற இயலின் தந்தை என்று அழைக்கப்படுகிற இவரது மறைவிற்குப் பின் (1980) அவர் நினைவுடன் அவரது கட்டுரையையும் சேர்த்து வெளிவந்துள்ள நூல் இது.

இந்நூலில் பதின்மூன்று கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. இவற்றில் இரண்டு இந்நூலின் பதிப்பாசிரியர் தே. லூர்துவின் கட்டுரைகளாகும்.

### பிராப்பின் அமைப்பியல் ஆய்வு

பிராப்பின் அமைப்பியல் அணுகு முறையை இக்கட்டுரையில் சுருக்கித் தந்துள்ளார். 'பிராப்பைப் படித்தற்கு புரிந்து கொள்ளுதற்கு இது ஒரு முதல் படியாகும்' என்கிறார்.

அமைப்பியல் என்றால் என்ன என்பதற்கு முதலில் விளக்கம் கூறுகிறார். பிராப்பின் வகைப்பாட்டினைத் தமிழில் மொழி பெயர்த்து தந்துள்ளார். பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்களைத் தமிழில் தரவேண்டும் என்பது பாரதியின் வேண்டுகோள் அல்லவா? இவரும் அப்பணியைச் செய்துள்ளார்.

பிராப் 100 தேவதைக் கதைகளை எடுத்து ஆய்வு செய்து அவற்றில் மொத்தம் 31 வினைகளே (function) உள என்கிறார்.

இதை தவிர்த்த ஏனைய வினைகள் வந்தால் அவை வேறு வகைக் கதைகளின்றும் உள் நுழைந்ததாகலாம்' என்றும் கூறுகிறார். இதனை அலகாக வைத்து அவர் கதைகளை அளந்து பார்த்துரைக் கிறார்.

## எடுத்துரைக்கப்படும் நாட்டார் வழக்காறுகளை வகைப்படுத்தல்:—

'இந்தக் கட்டுரையில் புராணங்கள், பழமரபுக் கதைகள், நாட்டார் கதைகள் போன்றவற்றின் இயல்புகளையும் அவற்றை வில்லியம் பாஸ்கம் எவ்வாறு வகைப்படுத்துகிறார் என்பதையும் குறிப்பிட்டுள்ளேன்' என்று கட்டுரையாசிரியரும் பதிப்பாசிரியரு மான தே. லூர்து கூறுகிறார்.

'நாட்டார் வழக்காறுகளுள் மக்கள் கேட்குமாறு எடுத்துரைக் கப்படுபவை ஒருவகை. பாடலாகப் பாடப்படுபவை உரைநடை யில் அமைபவை என்று எடுத்துரைக்கப்படும் வழக்காறுகள் இரு வகைப்படும். நாட்டார் கதைகள், பழமரபுக்கதைகள், புராணக் கதைகள் முதலியவை உரைநடையாக அமையும் நாட்டார் வழக் காறுகள் ஆகும்' என்பார்.

வகைப்படுத்துவதற்கானப் பட்டியலைத் தயாரித்துவிட்டு விட்டு 'மேற்கண்ட பட்டியல் வகைப்படுத்தி அறிதற்கு ஓரளவு துணை செய்யும்' என்கிறார். முடிவில் 'இது விரிவான ஆய்வுக் குரியது' என்பார். இது உண்மையானது. கட்டுரையாசிரியர் தமது இரண்டு கட்டுரைகள் மூலம் தமது நாட்டுப் புற ஆய்வு மீது கொண்ட ஈடுபாடுகளையும், மொழி பெயர்ப்பில் தமக்குரியது ஆற்றலையும் வெளிப்படுத்தியுள்ளார்.

## 2. நாட்டுப்புற இயல் சிந்தனைகள்

டாக்டர் சு. சண்முக சுந்தரத்தின் இந்நூல் மணிவாசகர் நூலகத்தால் வெளியிடப்பட்டுள்ளது.

அறிவியல், மருத்துவம், வரலாறு, மொழி இயல், சட்டஇயல், மானிடவியல், கணிதம், இசை, தத்துவம், உளவியல், சமூகவியல் போன்ற துறைகளில் தம் சிந்தனைகளைச் செலுத்தி இந்நூலை எழுதியுள்ளார். இதன் முன்னுரையில் இவர் கூறுவது. 'நான் எல்லாத் துறைகளிலும் வல்லவன் அல்லன். ஆனால் பல துறை களையும் ஆர்வம் கொண்டு அணுகினேன். நான் அறிந்தது குறைவு

தான் என்று எனக்கு இறுதியில் புலப்பட்டது. இந்நூல் மூலம் நான் இச்சிந்தனைகளைத் தொடங்கி வைக்கிறேன். என்னைத் தொடர்ந்து இத்துறைக்கு வரும் ஒருவர் இதனை இன்னும் ஆழமாகச் செய்வார் என்ற நம்பிக்கை எனக்குண்டு. அல்லது வாய்ப்பிருந்தால் என்னாலும் அதனைச் செய்ய முடியும் என்று உறுதி கூறுகிறேன்.'

எனவே இந்நூல் ஒரு சிந்தனையின் தொடக்கமே; முடிவல்ல. இவரிடமே இதன் முடிவையும் எதிர்பார்க்கலாம். ஆனால் இப்போதைக்கு இவர் தெரிந்து கொள்ள வேண்டியது ஏராளம்.

## தமிழக நாட்டுப்புற இயல்

இத்துறையில் டாக்டர் பட்டம் பெற்ற திருமதி சரசுவதி வேணுகோபாலின் நூல் இது. தாமரையின் வெளியீடான இது இவரது இரண்டாவது நூல். ஏற்கனவே தனது களப்பணி அனுபவங்களை டாக்டர் இராமசாமியுடன் சேர்ந்து நூலாக்கியுள்ளார்.

'ஏறத்தாழ எட்டு ஆண்டுகளாக அதனோடு (நாட்டுப்புறவியல்) கொண்டிருக்கும் தொடர்பின் காரணமாக அதனிடத்து ஒரு சேய்க்குத் தன் தாயிடம் ஏற்படும் அன்பு போன்ற ஒரு வகை விருப்பு எனக்கு ஏற்பட்டிருப்பதை என்னால் உணர முடிகிறது. பெரும் பரிசுகளைத் தரமுடியா விட்டாலும் (ஏன் இவ்வாறு கருதுகிறார் எனப் புரியலையே!) சிறு அன்பளிப்புகளையாவது அந்தத் தாய்க்குத் தரலாமே என்ற ஆசையில் இச்சிறு நூலை உருவாக்கினேன்!' இது நூலாசிரியரின் முன்னுரை. இதில் அம்மையாரின் மனநிலை தெளிவாகிறது. ஆனால் சேய் அன்பாக இல்லாமல் தாய்ப் பாசத்துடன் சில கட்டுரைகளை எழுதியுள்ளார் என்பது குறிப்பிடத்தக்கது. ஓலைச் சுவடியில், மக்கள் இலக்கியங்களாகிய கதைப் பாடல் மரச்சீனிக் கிழங்கு நடுகைப் பாடல், விவாதப் பாடல் போன்றவை இடம் பெற்றுள்ளன. இலக்கிய சுவை மட்டுமின்றி மானிடவியல், சமூகவியல், மொழியியல், வரலாறு போன்ற பிறதுறை கருத்துகளுக்கும் உதவுகின்றன.

'நாட்டுப்புறப் பாடல்களும் இசையும் என்ற கட்டுரையில் பாடல்களின் வகைகள் ஒவ்வொன்றுக்கும் சுரம் அமைத்து, இன்னொருவர் உதவியுடன் எழுதியுள்ளார். இதனால் என்ன முடிவுக்கு வருகிறார் என்று தெரியவில்லை. தாலாட்டிலும் சங்கராபரண ராகம் உண்டு ஒப்பாரியிலும் அது தான் என்று கூறும் போது 'உனக்கும் பெப்பே உங்கப்பனுக்கும் பெப்பே' என்பது போல் தோன்றுகிறது.

'நாட்டுப்புறப் பாடல்களில் சமுதாயப் பார்வையைச் செலுத்தியுள்ளார்; காதல் சுவையைப் பிழிந்துள்ளார். திருமணப் பாடல்களையும் ஒரு பார்வை பார்த்துள்ளார். இவர் பார்வையில் களியாட்டமாக நலுங்கு, ஏசல் ஆகிய பாடல்களும், வாழ்த்தாக ஊஞ்சல், கப்பல், வாழ்த்து போன்ற பாடல்களும் பட்டுள்ளன. இவ்வகைப் பாடல்கள் பாடப்படுவதற்கான காரணங்களையும் சிறப்பாகக் கூறியுள்ளார். சமையல் செய்திகளையும் இவ்விலக்கியம் மூலமாகக் கூறியுள்ளார். போஜனப்பாட்டுகள் புதிய கண்டு பிடிப்புகள். சாதி அடிப்படையில் சமையலை விளக்கியிருப்பது பாராட்டத்தக்கது. மதுரை, வையை, மீனாட்சி, சொக்கன், பாண்டியர் போன்று பட்டியலும் இட்டுள்ளார்.

டாக்டர் தமிழண்ணல் இந்நூலுக்கு அணிந்துரை எழுதும் போது, 'தமிழகம் இத்தகைய முன்னோடி நூல்களை வரவேற்கும் என்பது உறுதி' என்று என்று கூறியுள்ளார். இது ஆய்வுக் குரியது தான். காரணங்கள்: —

1. வானொலி பேச்சுகளை நூலாக்கும் போது நூல்வடிவமாக இல்லாமல் உரைவடிவாக இருப்பது நூலின் தரத்தை குறைத்து விடுகிறது. (பார்க்க-ப-க். 29, 35,)

2. திருமணப் பாடல்கள் வகைகளை கூறியது கூறல் என்ற முறையில் நூலில் மூன்று இடங்களில் கூறியுள்ளார். (பார்க்க-ப-க் 1, 15, 63) அவ்வாறு கூறும் போது முன்னுக்குப் பின் முரண் ஏற்பட்டுள்ளது. கப்பல், நுடம் என்ற இரண்டு வகைகளாகப் பக்கம் 15-இல் கூறிவிட்டு கப்பல் அல்லது ஓடம் என்று பக்கம்63 இல் கூறியிருப்பது. நாட்டுப்புறப் பாடல்களின் வகைகளிலும் இதே குறையைக்-காணலாம். (ப-க்; 11, 23)

3. குழப்பமான அல்லது தெளிவில்லாத சில இடங்களும் உள்ளன. 'நாட்டுப்புற இலக்கியம் பாடல்கள் கதைப் பாடல்கள், கதைகள் என மூவகைப்படும்' (ப.11). மூன்றுவகை மட்டுந்தானா? 'பாடல் இன்றைய நகரச் சூழலுக்குப் பொருந்தி வராது. இன்றைக்குக் கிராமச் சூழலுக்கு ஒத்து வரலாம்.' (ப. 33)

4. அச்சுப் பிழைகள் அந்திமழை போன்று இருப்பது— 'அவசரம்' இதற்குக் காரணமாக இருக்கலாமோ?

ஏற்கனவே இவர் களப்பணியைப் பற்றி எழுதியவரானதால் இவரிடமிருந்து நிச்சயம் ஒருமுன்னோடி நூலை எதிர்பார்க்கலாம்,

## கட்டுரை

• FOLKLORE STUDIES IN TAMIL NADU

டாக்டர் சக்திவேலின் இக்கட்டுரையானது அண்ணாமலையில் நடைபெற்ற நாட்டுப் புறவியல் கருத்தரங்கில் வாசிக்கப்பட்டது.

இதில் இவர் நடப்புறவியல் ஆய்வின் வரலாற்றினைச் சிறப்பாக விளக்கியுள்ளார், இவ்வரலாற்றுக்கு, வெளியீடுகள், இதழ்கள், கருத்தரங்குகள். ஆய்வுக் கட்டுரைகள், வானொலி போன்றவை இவருக்கு உதவியாக உள்ளன. இவற்றை அடிப்படையாக கொண்டு இக்கட்டுரையை அமைத்துள்ளார்.

80-இல் 'நாட்டுப்புற இலக்கிய வரலாறு' வெளிவந்திருந்தாலும் அதனைத் தழுவி, இக்கட்டுரையை சிறப்பாக ஆக்கியுள்ளார். இது பயனுள்ள கட்டுரை.

## முடிவுரை

ஆக, எண்பத்தொன்றில் 5 நூல்கள் வெளி வந்துள்ளன. 50க்கும் மேலான கட்டுரைகள் வந்துள்ளன. என் பார்வைக்கு 50 கட்டுரைகளே சிக்கியுள்ளன. ஐந்து நூல்களும், டாக்டர் மெ. சுந்தரம். டாக்டர் ச. சு, டாக்டர் மு. ச. எரிக்கா ஏ. இ, கிளாஸ், டாக்டர் சரசுவதி வேணுகோபால், தே. லூர்து ஆகியோரால் எழுதப்பட்டுள்ளன.

50 கட்டுரைகளும், 40 ஆய்வாளர்களால் எழுதப்பட்டுள்ளன' இவற்றில் பலர் இத்துறையில் பழையவர்கள்; பழகியவர்கள். சிலர் புதியவர்கள் பலர் ஒரு கட்டுரையே எழுதியிருக்க ஒருவர் மூன்று கட்டுரைகளும் (சா. வளவன்) சிலர் இரண்டு கட்டுரைகளும் (டாக்டர் ஆறு. இராமநாதன், டாக்டர் சு. சண்முக சுந்தரம்) டாக்டர் ஏ. என். பெருமாள், வ. பெருமாள், ஆ. சிவ சுப்பிரமணியம்) எழுதியுள்ளனர்.

பாடல்களைப் பற்றி ஒரு நூலும் 18 கட்டுரைகளும் கதைப் பாடலைப் பற்றி11 கட்டுரைகளும், கதைகளைப் பற்றி 4 கட்டுரைகளும், கலைகளைப் பற்றி 4 கட்டுரைகளும், பண்பாடு பற்றி ஒரு நூலும் 7 கட்டுரைகளும், பழமொழி பற்றி 4 கட்டுரைகளும், விடுகதை பற்றி ஒரு கட்டுரையும் நாட்டுப்புற இயல் பற்றிப் பொதுவாக 3 நூல்களும் ஒரு கட்டுரையும் எழுதப்பட்டுள்ளன. இதனால் பாடல்களைப் பற்றிய ஆய்வுகள் அதிகம் எனவும் ஆரம்ப காலத்திலிருந்தே இந்த நிலையைக் காணலர்ம் என்றும் இதுவே ஆய்வாளர்களை பெரிதும் அல்லது எளிதில் கவர்கிறது

என்றும் கூறலாம். விடுகதை பற்றிய ஆய்வு மிக அருகிப் போயுள்ளது. இதுவும் பழைய நிலைதான். பண்பாடு பற்றி ஆய்வு வளர்ந்,துள்ளதனை ஏனைய ஆண்டுகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது தெரிகிறது.

இலக்கியவியல், விளக்கவியல் அடிப்படையிலேயே இருந்த ஆய்வுநிலை தற்போது மாற்றமும் ஏற்றமும் பெற்று வருவது இவ்வாண்டால் தெரிகிறது. அமைப்பியல், வரலாற்றியல், மானுடவியல், உளவியல், சமூகவியல் போன்ற அறிவியல் துறைகளில் ஆய்வாளர்களின் நாட்டம் சென்றுள்ளதும் குறிப்பிடத் தக்கது.

பல கட்டுரைகள் ஆசிரியர்களால் கொடுக்கப்பட்டிருக்கின்றன. சில எடுக்கப்பட்டுள்ளன. சில சற்று விரிவாக்கப்பட்டுள்ளன. ஒரு கட்டுரை மொழி பெயர்க்கப்பட்டுள்ளது. சில காலம் கடந்து அச்சேறியுள்ளன.

கருத்தரங்க அமைப்புகளால் இவ்வாண்டில் இத்துறை ஆய்வு விரிவடைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

## துணை நூற்பட்டியல்

1. Dr, S. V. Subramanian & Dr. N. Ghadigachalam
Literary Heritage of the Tamils.
International Institute of Tamil studies,
Madras-20, 1981.

2. உலகத்தமிழ் மாநாட்டு சிறப்புமலர் மதுரை, 1981

3. டாக்டர் சரசுவதி வேணுகோபால்
தமிழக நாட்டுப்புறவியல், மதுரை, 1981

4. ஆய்வுக் கோவை—13
இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றக்கருத்தரங்கம், திண்டுக்கல், 1981

5. டாக்டர் மெ. சுந்தரம், நாட்டுப்புறப் பாடல்,
விற்பனை உரிமை, மணிவாசகர் நூலகம், சென்னை 1981

6. டாக்டர் சு. சண்முகசுந்தரம்
நாட்டுப்புறவியல் சிந்தனைகள்
மணிவாசகர் நூலகம், சென்னை-1981

7. ஆய்வுக்கோவை,
இ.ப.க.த. மன்றம்
அண்ணாமலை நகர், 1981

8. மையொற்றுப் படிகள்.
சிதம்பரம், 1981
உதவியர்: டாக்டர் ஆறு. இராமநாதன்

9. பதிப்பாசிரியர் தே. லூர்து
நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள்
பாளையங் கோட்டை, 1981

# 13. வரலாற்று நூல்கள்

**டாக்டர் க. த. திருநாவுக்கரசு**

1981-ஆம் ஆண்டைப் பொறுத்தவரையில் தமிழில் 13 வரலாற்று நூல்களே வெளிவந்துள்ளன. இவையனைத்தும் தமிழ்நாட்டைப்பற்றியனவே. உலகெங்கிலும் சமூகப் பொருளாதாரக் கண்ணோட்டத்தில் நாட்டு வரலாறு அலசி ஆராயப்படுகிறது. நம் தமிழ் மொழியில் இத்தகைய வரலாறுகளைப் படைக்கும் முயற்சி தோன்றாமல் இருப்பது உலக வரலாற்று நீரோட்டத்தில் தமிழக வரலாற்று அருவி கலக்காமல் தனித்தோர் ஓடையாஒதுங்கி விட்டதையே தெரிவிக்கிறது.

1981 ஆம் ஆண்டில், தமிழில் வெளிவந்துள்ள வரலாற்று நூல் மிகக் குறைவானவையே யாகும். அவை பெரும்பாலும் தமிழ் நாட்டு வரலாற்றையும் பண்பாட்டையும் பற்றியனவாகவே உள்ளன.

மனிதனுடைய வாழ்க்கைப் பயணத்தில் அவன் சாதித்த சாதனைகளை அறிய உதவுவன வரலாற்று நூல்கள். இதைப் போன்றே அவன் செய்யத் தவறிய செயல்களையும் வெளிப் படுத்துவன காலந்தொறும் இயற்றப்படும் வரலாற்று நூல்களாகும். மனித குல நாகரிகத்தின் வளர்ச்சி, முதிர்ச்சி தளர்ச்சி அல்லது முன்னேற்ற நிலை அல்லது தேக்கநிலை போன்றவற்றை அறிய உலகின் பல்வேறு பகுதிகளின், வட்டாரங்களின் வரலாறு வழி காட்டியாக இருந்து வருகின்றன. இந்த நோக்கில், தமிழில் 1981-ஆம் ஆண்டு வெளியிடப்பட்டுள்ள வரலாற்று நூல்களைத் தொகை வகைப்படுத்திப் பார்க்கின்ற பொழுது, சில உண்மைகள் புலனாகும். அவை எதிர்காலப் பணிக்குச் சிறந்த உரமாக உந்துதல் சக்தியாக—அமைதியுமென நம்புகின்றேன்.

தமிழில் வெளிவந்துள்ள வரலாற்று நூல்களைப் பின் வருமாறு வகைப்படுத்தி ஆராயலாம்.

## தொல்லியல் ஆய்வு, கல்வெட்டியல்

### பண்டை நகரங்கள் பற்றிய வரலாறு

ஒரு நாட்டின் தொல் பழங்கால வரலாற்றை—வரலாற்று நூலின் தொடக்கத்திற்கு முற்பட்ட காலத்தைப் பற்றிய வரலாற்றை அறிவதற்குப் பேருதவியாகத்]அமைபவை தொல்லியல் ஆய்வும் கல்வெட்டு கண்டு பிடிப்புகளும், பண்டை நகரங்களில் அகழ் வராய்ச்சிகளுமேயாகும். 1981-இல் தமிழில் வெளிவந்துள்ள இத்துறை நூல்கள் சங்க காலத்தைப் பற்றியனவாகவே உள்ளன.

### 1. சங்ககாலத்துப் பிராமிக் கல்வெட்டெழுத்துகள்

இந் நூல், தமிழ் நாட்டு வரலாற்றுக்குப் பயன்படும் சிறந்ததொரு நூலாகும் சங்க காலத்துப் பிராமிக் கல்வெட்டுகளைப் பற்றிய செய்திகள் ஆங்கிலத்தில் பல்வேறு நூல்களில் ஆய்வேடுகளில் சிதறிக் கிடக்கின்றன. தமிழில் முதன் முதலாக அவற்றை ஒரு நூல் வடிவில் திரட்டிக் கொடுக்கும் பணியை வரலாற்றுப் பேரறிஞர் மயிலை சீனி. வேங்கடசாமி மேற்கொண்டுள்ளார். அவ்வறிஞர் இறந்த பிறகு வெளிவந்துள்ள நூல் ஈதென்பது இங்குக் குறிப்பிடத்தக்கது,

தமிழகத்தில் கிடைக்கும் பிராமிக் கல்வெட்டுகள் அனைத்தையும் (181 இடங்களில்) ஒருங்கு திரட்டி, வரிவடிவத்தோடு தமிழ் வாசகமும் சேர்த்து இந்நூலில் வெளியிடப்பட்டுள்ளன. இத்துறையில் ஈடுபட்ட முந்தைய அறிஞர்கள் எவ்வாறு இக் கல்வெட்டுகளைப் படிந்துள்ளனர் என்பதும், அவற்றின் நிறை குறைகளும் பொருத்தமான முறையில் அங்கங்கே சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

'தவறான பாடம்' என்று இந்நூலாசிரியர் நினைப்பனவற்றைச் சுட்டியுள்ளார். தம்முடைய 'கண்ணோட்டம் யாது என்பதையும், தாம் கொள்ளும் பொருள் யாது?' என்பதையும் தவறாமல், ஆசிரியர் எடுத்துரைப்பது இந்நூலிற்கு வலிவும் பொலிவும்'அளிக்கிறது.

வரலாற்றுக் காலம் நெடுகத் தமிழகத்தில் வழக்கத்தில் இருந்த பண்டை எழுத்து முறைகளைப் பற்றித் தெளிவான,

சுருக்கமான முன்னுரை இந்நூலின் தோற்றுவாயாக அமைக்கப் பட்டு இருக்கிறது. வடக்குப் பிராமி, தெற்குப் பிராமி ஆகிய வற்றுக்கு இடையே காணப்படும் வேற்றுமைகள் எடுத்துரைக்கப் பட்டுள்ளன. "தமிழ் நாட்டுப் பிராமி எழுத்துக்களில் தமிழுக்கே தனிச்சிறப்பாக உள்ள ழ, ற, ன என்னும் எழுத்துக்களும் காணப் படுகின்றன. இந்தச் சிறப்பு எழுத்துக்களைப் பிராமி எழுத்து வருவதற்கு முன்னே, தமிழகத்தில் வழங்கிவந்த பழைய தமிழ் எழுத்திலிருந்து எடுத்துப் பிராமி எழுத்துக்களோடு அமைத்துக் கொண்டனர் என்று தோன்றுகிறது" எனும் முடிவு, வரவேற்கத் தக்கதாகும் (பக்.5).

'இந்தப் பிராமி எழுத்துகள் எந்த மொழிக்கு உரியன?' எனும் ஐயப்பாட்டைப் போக்குவதில் ஆசிரியர் ஆர்வம் காட்டி யுள்ளார். பிராகிருத மொழிச் சொற்கள் இடையிடையே கலந்துள்ள தமிழ்மொழியில் இக்கல்வெட்டுகள் பொறிக்கப்பட்டுள் ளன என்பது இவ்வாசிரியாரின் முடிவு. மற்றும், இப்பிராமிக் கல்வெட்டுகளால் அறியப்படும் பண்பாட்டு வரலாற்றுச் செய்தி களைத் தொகுத்துத் தந்துள்ளமை நூலினைப் பற்றி முழுமையாக கூறிய உதவுகிறது.

அரசலூர், கொங்கர் புளியங்குளம், குன்றக்குடி, மால கொண்டபுரம், முத்துப்பட்டி, அழகர்மலை, ஆண்டிப்பட்டி, விக்கிரமங்கலம், அரிட்டாபட்டி, ஆனமையை, கருங்காலக்குடி, மேட்டுப்பட்டி, கீழைவளவு, மறுகால்தலை, அரிக்கமேடு, திருப் பரங்குன்றம், புகழூர், ஐவர்மலைஎனும் இடங்களில் கண்டுபிடிக்கப் பட்டுள்ள பிராமிக் கல்வெட்டுகள்இந்நூலில் ஆராயப்பட்டுள்ளன.

இவற்றுள், அழகர்மலை பிராமி எழுத்துகள், ஆண்டிப்பட்டி ஈயக்காசுகள், அரிட்டாபட்ட பிராமிக் கல்வெட்டுகள் (மாங்குளம்) புகழூர்க் கல்வெட்டும் வரலாற்றுச் சிறப்புடையன.

இந்நூலின் பின்னிணைப்பில் அதியமானுடைய ஜம்பைக் கல்வெட்டும் சேர்க்கப்பட்டுள்ளது. இந்த வகையில் இந்நூல் தமிழில் ஒரு புதிய முயற்சியாகும்.

## 2 முத்தமிழ் மதுரை

தமிழகத்தின் பழம்பெரும் நகரங்களுள் மதுரையும் ஒன்று. வரலாற்றுக் காலம் நெடுக மதுரை மாநகரம் எவ்வாறு இருந்தது என்பதை அறியும் ஆர்வத்தோடு, நாம் இந்நூலைப் படிக்கத் தொடங்குவோம்.

தமிழ்ப் பண்பாட்டின் வளர்ப்புப் பண்ணையாக விளங்கியது மதுரை; விளங்கி வருவது மதுரை. 'சங்கம் எனும் தொட்டிலில் தமிழை வளர்த்தது மதுரை. பாண்டிய வேந்தரின் பொன்றாப் புகழ் வாய்ந்தத் தலைநகரம் மதுரை. தெய்வ மணங்கமழும் சமய நெறிகளின் செழிப்பிற்கும் சிறப்பிற்கும் காரணமானது மதுரை. கோயில் திருநகராய், கண்கவர் கலைக் கூடமாய்த் திகழ்வதும் மதுரை.

இத்தகைய மாண்புமிகு மதுரையின் வரலாற்றை, எளிய நடையில் எடுத்துரைக்க இந்நூல் முயலுகிறது. இந்நூலில் பதினாறு இயல்கள் உள்ளன. அவற்றை நான்கு வகைப்படுத்தலாம். அவை 1. மதுரை—பெயர் ஆராய்ச்சி, நகரின் தோற்றம், பழம் பெருமை பற்றிய ஆறு கட்டுரைகள், 2. சமயங்கள் கண்ட மதுரை பற்றி மூன்று கட்டுரைகள்: 3. இலக்கியம் கண்ட மதுரையை ஐந்து இயல்கள் விரித்துரைக்கின்றன, 4. அரசர்களால் கலைக் கூடமாக்கப்பட்ட மதுரையைப் பற்றி இயல்கள் இடம் பெற்றுள்ளன.

இவையாவுமே, பண்டைக் காலத்திய மதுரையைப் பற்றிய விளக்கமாகக் காணப்படுகின்றன. மற்றும், இலக்கியங்களில் காணப்படும் செய்திகளே திரும்பத் திரும்ப, 'கூறியது கூறல்'' எனும் குற்றத்திற்கு இடம் தரும் வகையில் எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

'வரலாற்றுக் காலந்தொறும் மதுரை' (Madras Through the Ages) எனும் ஆய்வு நூல் ஆங்கிலத்தில் வெளியிடப்பட்டுள்ளதை வாசகர்கள் அறிந்து இருக்கலாம்.

அண்மைக் காலத்தில் மதுரையில் நடைபெற்ற அகழ்வாராய்ச்சிகளால் தெரியவரும் புதிய வரலாற்றுச் செய்திகளைச் சேர்த்து இருந்தால் இந்நூலின் பயன்பாடு பெருகி இருக்கும்.

## 11. சங்ககால வரலாறு

தமிழகத்தின் பண்டைக்கால வரலாற்றில் முதன்மை இடம் பெறுவது சங்க காலம். இதனைத் " தமிழக வரலாற்றின் பொற்காலம்'' எனப் போற்றுவர். இக்கால வரலாற்றை முழுமையாகவும் நுட்பமாகவும், காலவரன் முறைப்படியும் இதுவரையில் யாரும் தமிழில் எழுதவில்லை. அரசு அமைத்துள்ள தமிழ் நாட்டு வரலாற்றுக்குழு இத்தேவையை நிறைவேற்றும் அரிய பணியில் ஈடுபட்டுள்ளது.

## 3 சங்க கால வரலாறு[3]

இப்பெயரில் ஒரு நூல் வெளியிடப்பட்டுள்ளது. நூலின் முகப்பிலேயே "மேற்பட்டப் படிப்பிற்குரியது" எனும் குறிப்பும் காணப்படுகிறது. மற்றும் இந்நூலின் சில பகுதிகள் வானொலியில் "இளைய பாரதம்" பகுதியில் ஒலிப்பரப்பப்பட்டவை என்பதும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

இந்நூல் இரண்டு பகுதிகளாகப் பகுக்கப்பட்டுள்ளது. முதற் பகுதியில் தமிழக வரலாறு—ஆதாரங்கள், தமிழக நிலஇயற் கூறுகள், தொல்பழங்காலத் தமிழகம் எனும் மூன்று கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. ஆதாரங்கள் பகுதியில், பல்லவ, சோழ, பாண்டியர் வரலாற்றுக் காலத்திற்குரிய ஆதாரங்கள் யாவும் தொகுத்துத் (பக். 5.7) தரப்பட்டுள்ளன. மற்றும், 'சிவகங்கைச் சரித்திரக் கும்மி', 'பாஞ்சாலங்குறிச்சி அழிவு சரித்திரக்கும்மி' என்பன பற்றிய செய்திகளும் தரப்பட்டுள்ளன. இவையாவும் சங்க கால வரலாற்றோடு எவ்வாறு தொடர்பு கொண்டுள்ளன என்பது புரியவில்லை,

'நினைவுச்சின்னங்கள்' எனும் தலைப்பிலும் பல்லவர், சோழர் காலத்திற்குரிய (பக். 12-13) செய்திகள் எடுத்துரைக்கப்படுகின்றன.

இரண்டாம் பகுதியில், சங்கம் இருந்ததா? சங்க காலம், சங்க காலச் சேரர்கள்: சங்க காலப் பாண்டியர்கள், சங்க காலச் சோழர்கள், சங்க காலக் குறுநில மன்னர்கள், சங்க கால ஆட்சிமுறை, சங்க கால மக்களின் வாழ்க்கை, சங்க காலப் பெண்கள், சங்க கால வாணிபம், சங்க காலச் சமயம், சங்க காலக் கல்வி முறை, சங்க கால நுண்கலைகள், சங்க காலத் தமிழரின் பண்பாடு எனும் பதினான்கு கட்டுரைகள் உள்ளன.

'சங்கம் இருந்தது' என்பதை ஆசிரியர் அறிவுறுத்துந் திறன், உள்ளத்தில் கருத்துகளை நன்கு பதியவைப்பதாக உள்ளது. சங்க காலத்து மூவேந்தர் குடியைச் சேர்ந்த அரசர்களைப் பற்றிய வரலாறு விரிவாக இருக்கிறது. ஆனால், சங்க கால வரலாற்றில்

---

3. A. சுவாமிநாதன், சங்க கால வரலாறு; மோகன்பதிப்பகம் சென்னை, 1981: விலை ரூ 12=75

காணப்படும் புதிர்கள் (சரிகாலன் செங்குட்டுவனுக்குப் பாட்டன் போன்றவை) அப்படியே ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளன (பக். 66).

மற்றப் பகுதிகள் எல்லாம் தேர்வுக் கண்ணோட்டத்தில் வகைப்படுத்தி எழுதப்பட்டுள்ளன. பிற்சேர்க்கையில் 'சங்க கால இலக்கியங்கள்' எனும் தலைப்பில் சங்ககால இலக்கியம், சங்க மருவிய கால இலக்கியம் பற்றிய செய்திகள் விரித்துரைக்கப் பட்டுள்ளன; 'சங்க காலத்தின் மறைவு' பற்றியும் ஒரு கட்டுரை சேர்க்கப்பட்டுள்ளது.

மாணவர்களுக்குப் பயன்படக் கூடிய முறையில் இவ் வரலாற்று நூல் எழுதப்பட்டுள்ளது.

## 4. சங்க இலக்கியங்களில் சமயக்கருத்துகள்[4]

இந்நூலின் தலைப்பிற்கும் உள்ளே சொல்லப்பட்டுள்ள கருத்துகளுக்கும் அதிகத் தொடர்பு இல்லை; 'மற்றொன்று விரித்தலே' மிகுதியாக உள்ளது. பல்லவர் காலத்தை யொட்டி தமிழகத்தில் பரவிய வைதிக சமயக் கருத்துகளை விரிவாக விளக்கி 'அவை எல்லாம் சங்க காலத்திலேயே வழக்கில் இருந்தன' என நிறுவுவதற்கு ஆசிரியர் முயலுகிறார். தாம் கூறும் கருத்து களைப் பற்றித் தெளிவான அறிவு இந்நூலாசிரியரிடம் காணப் பெறாமை வருந்தத்தக்கது.

நூலின் முன்னுரையில், ''சங்க இலக்கியங்களில் ஆங்காங்கே சைவ, வைணவ சமயக் கருத்துக்கள், புராணக் கதைகள், மரபுவழி வந்த நம்பிக்கைகள் ஆகியவை விரவிக் கிடக்கின்றன'' எனும் ஆசிரியரின் கூற்று ஆராயத்தக்கது. இருநூறு பக்கங்கள் கொண்ட இந்நூலில், மேற்கண்ட கருத்துகள் அறுபது பக்கங்களுக்குட்பட்ட தாகவே உள்ளன.

பதிப்புரையில் 'இந்நூல் ஓர் ஆய்வு நூல்' என்று குறிப்பிடப்பட் டுள்ளது. இதனைப் படிப்போரே இதனை முடிவு செய்யவேண்டும்.

சமயக் கருத்துகள் வேண்டப்படுவனவா? உயிர் அல்லது ஆன்மா, உயர்திணை—அஃறிணை, ஆன்மா என்றால் என்ன? ஆன்மாவை ஒப்புக் கொள்ளாதவர், ஆன்மாவின் மூன்று நிலைகள்

---

4. ஆதி. பாலசுந்தரன், சங்க இலக்கியங்களில் சமயக் கருத்துக்கள், சக்தி பதிப்பகம், சென்னை 1981: விலை ரூ 10/=

ஆன்மாவின் இலட்சியம், முத்தி என்றால் என்ன? உடம்பும் உயிரும் எனும் தலைப்புகளில் தரப்பட்டுள்ள செய்திகள் (பக்.15-50) வெறும் கதை அளப்பாக உள்ளன.

சங்க இலக்கியங்களில் கடவுள் பற்றிய செய்திகள் (பக்.50-130) தமிழர் வழிபாட்டின் தனித்த முறை, வெறியாட்டு, நடுகல் வழி பாட்டு முறை, தமிழர் வழிபட்ட தெய்வங்கள், முருகன் எத்தகையவன்?' கொற்றவை, சங்க இலக்கியங்களில் திருமால், சங்க காலத்தில் இருந்து வந்த நம்பிக்கைகள் போன்ற தலைப்புகளே நூலின் தலைப்பிற்குப் பொருந்திவரும் செய்திகளாகும்.

இதற்கு மேல், அறுவகை இந்தியதத்துவங்கள் பற்றிய கருத்துகளை விளக்குவதற்குச் சங்கப்பாடல்களைச் சான்றாகக் காட்டும் முறை மேற்கொள்ளப்பட்டுள்ளது.

அடியார்களும் பக்திமார்க்கமும், புராணங்கள் போன்ற தலைப்புகளில் தமக்குத் தெரிந்தவற்றை எல்லாம், இந் நூலாசிரியர் 'அவியல்' செய்து தந்துள்ளார்,

## 5. பல்லவர் கால வரலாறு[5]

'பல்லவர் கால வரலாறு' எனும் இந்நூலின் முதல் பகுதி களப்பிரரைப் பற்றியதாகும். பல்லவர் கால வரலாற்றை முழுமையாகவும் சுருக்கமாகவும் இந்நூல் எடுத்துரைக்கிறது. பல்லவர் வரலாறு—ஆதாரங்கள் பல்லவர் தோற்றம், முற்காலப் பல்லவர்கள், பிற்காலப் பல்லவர்கள், குறுநில மன்னர்கள் எனும் ஐந்து அதிகாரங்களும் அரசியல் வரலாற்றைத் தெரிவிக்கின்றன.

முதலாம் மகேந்திரவர்மன், முதலாம் நரசிம்மவர்மன் முதல் அபராசிதன் வரையிலான காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட அரசர்களைப் ''பிற்காலப் பல்லவர்கள்'' எனும் தலைப்பில் அடக்கிக் காட்டுவது பொருத்தமாகத் தோன்ற வில்லை. இவர்களை ''மாண்புமிகு பல்லவர்'' அல்லது ''காஞ்சிப் பல்லவர்'' எனச் சுட்டுவதே சிறப்பாகும்.

இந்நூலின் பிற்பகுதி, சமுதாயப் பண்பாட்டு வரலாற்றை ஓரளவிற்கு விரிவாக விளக்குகிறது. இந்நூலும் பாடநூலாகவே எழுதப்பட்டுள்ளது.

---

5. A. சுவாமிநாதன், பல்லவ கால வரலாறு, மோகன் பதிப்பகம், சென்னை, 1981; விலை ரூ 10/=

## 6. சோழர்கால வரலாறு[6]

தமிழக வரலாறும் பண்பாடும் எனும் வரிசையில் மூன்றாவது நூலாக இது, வெளியிடப்பட்டுள்ளது. ஆதாரங்கள் முதல் சோழர் காலப்பண்பாடு ஈறாக உள்ள பதின்மூன்று தலைப்புகளில் இடைக் காலச் சோழப் பேரரசர்களின் வரலாறு விரித்துரைக்கப்பட்டுள் ளது. இராசராசனுடைய இலங்கைப் படையெடுப்பை, அமெரிக்க அறிஞர் ஜார்ஜ் ய. ஸ்பென்சர் என்பவர் ''கொள்ளையடிக்கும் அரசியல்'' என்று குறிப்பிட்டுள்ளதை இந்த நூலாசிரியரும் உடன் படுவதாகத் தோன்றுகிறது. (பக். 335-337)

அவ்வப்போது கருத்தரங்குகளில் படித்த கட்டுரைகள் பல வற்றை இந்நூலின் இடையிடையே ஆசிரியர் இணைத்துள்ளார். இதனால் நூலின் அமைப்பில் 'மற்றொன்று விரித்தல்' மிகுதிப் பட்டு இருக்கிறது.

சோழர்கால ஆட்சி முறை (கிராம ஆட்சி உட்பட) மிக விரி வாகத் தெளிவுறுத்தப்பட்டுள்ளது. இந்நூலும், 'பாடநூலே' என் பது நூலின் அமைப்பால் எளிதில் புலனாகும்.

## III நாகரிகமும் பண்பாடும்

ஒரு சமூகத்தின் புறத்தே உண்டாகும் வளர்ச்சியையும் போக்குகளையும் புலப்படுத்துவது நாகரிகம்; அகத்தே ஊற்றெடுக் கும் உணர்வுகள் 'பண்பாட்டினை' உருவாக்கும். இவ்விரண்டும் ஒரு நாணயத்தின் இரு பக்கங்களைப் போன்று இணைந்து இயங்கு வதாலேயே, மக்கள் வாழ்க்கை வலிவும் வனப்பும் பெறுகின்றது.

## 7. தமிழர் வரலாறு நாகரிகம் பண்பாடு[7]

இந் நூல், புலவர் செந்துறை முத்து அவர்களால் வெளி யிடப்பட்டுள்ளது. தம்முடைய முன்னுரையில், ஆசிரியர், ''தமிழர் வரலாறு; நாகரிகம் பண்பாடும் என்னும் இந்நூல் முழுமையான தொரு ஆய்வு நூல், பண்டைய இலக்கிய இலக்கணங்கள், வர லாற்று நூல்கள், கல்வெட்டுகள், செப்பேடுகள், அகழ்வாய்வுக் குறிப்புகள் ஆகியவற்றைக் கொண்டு ஆய்வு செய்யப் பெற்

---

6. A. சுவாமிநாதன், சோழர் கால வரலாறு, மோகன் பதிப் பகம், சென்னை, 1981; விலை ரூ 12=75
7. செந்துறைமுத்து, தமிழர் வரலாறு நாகரிகம் பண்பாடு அருண்மொழிப் பதிப்பகம், சேலம், 1981: விலை ரூ 25/=

றுள்ளது. பதினாறு இயல்களாகப் பகுக்கப்பெற்று, 102 தலைப்பு களில் ஆய்வு நிகழ்த்தப் பெற்றுள்ளது'' என்று குறிப்பிட்டுள்ளமை இந்நூலின் நோக்கையும் போக்கையும் புரிந்துகொள்ள உதவும்.

தமிழக வரலாற்றினை இந்நூலாசிரியர் புதுவகையாகப் பாகுபடுத்தியுள்ளார். ''தமிழகத்தின் காலத்தை, பாண்டியர் நிறுவிய சங்கத்தை மையமாகக் கொண்டு அதற்கு முற்பட்ட காலத்தைப் 'பழங்காலம்' எனவும், அக்காலத்தைச் 'சங்க காலம்' எனவும், அதன் பிற்பட்ட காலத்தைப் 'பிற்காலம்' எனவும், இவ் விருபதாம் நூற்றாண்டைத் 'தற்காலம்' எனவும் கொண்டு, நூற் பொருள் ஆய்வு செய்யப் பெற்றுள்ளது'' (பக். IV) எனும் பாகு பாட்டு முறை தெளிவற்றது. இந்த முறையைக் கூட நூலின் உள்ளே பின்பற்றாமல் ஆசிரியர் குழம்பியுள்ளார்; குழப்பியுள்ளார்.

இந்நூலின் பதின்மூன்றாம் இயல் (பக். 460) முடிய 'சங்க கால நாகரிகமும், பண்பாடும்'' மிக விரிவாக விளக்கப்பட்டுள்ளன. இவற்றின் பெரும் பகுதி, 'இலக்கிய வரலாறாகவே' உள்ளதை, இந்நூலை மேற்போக்காகப் படிப்பவரும் எளிதில் உணரலாம்.

எஞ்சியுள்ள 'சங்ககாலத்திற்குப் பின்,' 'புறச்சமயங்கள்', 'இருபதாம் நூற்றாண்டு' எனும் மூன்று இயல்களும் [மொத்த பக்கம் 95 (555)] கொட்டப்பட்ட செங்கற்களாகவே உள்ளன; கட்டப்பட்ட மாளிகையாகத் தோன்றவில்லை!

தமிழ்த் தேசிய எழுச்சி யூட்டும் வகையில் மொழி, நாடு, இனம், சமயம், வாழ்க்கை, அரசியல் போர் முறை எனும் ஆறு இயல்கள் அமைந்துள்ளன. சங்க இலக்கியப் பாடல்களும், அவற் றின் பொழிப்புரைகளும் மிகுதியாக இடம் பெற்றுள்ளன.

பதினோராம் இயல் ''கலைகளைப்'' பற்றிப் பேசுகிறது. இவ் வியலில் சங்க காலம், பல்லவர் காலம், சோழர் காலம், பிற்காலம் ஆகிய பகுதிகளில் பல்வேறு கலைகள் சிறப்புடன் வளர்க்கப் பட்டுள்ள வரலாறு தரப்பட்டுள்ளது.

'மருத்துவக் கலை' (பக். 407—415) எனும் தலைப்பு, பிற் காலத்திய சித்த மருத்துவத்தைப் பற்றிய சிறப்புமிகு விளக்கமாக அமைந்துள்ளது.

பதின்மூன்றாம் இயல் 'பண்பாடு'' பற்றிய விரிவுரையாகக் காணப்படுகிறது. இதனுள் சமுதாயம் தழுவிய பண்பு, ஒருமை தழுவியபண்பு, விருந்தோம்பல் பண்பு, புலவர் பண்பு எனும் ஐந்து

தலைப்புகளில் விரிவாகவும் சுவையாகவும் பல கருத்துகள் விளக்கப்பட்டுள்ளன.

இந்நூலினுள் பல கருத்துப் பிழைகள் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் இரண்டினை மட்டும் இங்குக் காண்போம்.

''இல்லறவாழ்வினை மேற்கொள்ளாதும் துறவு மேற்கொள்ளலாம் என்பது ஆரியர் கொள்கை. பொருள் இன்பங்களில் சுவை காணாத ஒருவன் துறவு மேற்கோள்ளுதல் என்பது தமிழர் கொள்கைக்கு முரணானது'' (பக். 198)

மேற்கண்ட கருத்து ஆராயத்தக்கது. சமண, பௌத்த சமயத்தினரே தொடக்க காலத்தில் 'இல்லற வாழ்வில் ஈடுபடாமலேயே துறவியாவது சிறப்பாகும்' என்று கருதினர். இதற்கு இளங்கோவடிகள், மணிமேகலை, மருணீக்கியார் (அப்பர்) போன்றோர் வாழ்க்கை சிறந்த எடுத்துக் காட்டுகளாகும்.

வைதிக சமயத்தினர் நால்வகை ஆசிரமங் (வாழ்க்கை நிலை) களை வற்புறுத்தி வந்தனர். ஆதிசங்கரர் காலம் முதலே. (கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு முதலே) வைதிக சமயத்தினரும் புறச்சமயத்தின் தாக்கத்தால், இல்லறத்தில் ஈடுபடாது—கிரகஸ்தன் ஆகாமல்—துறவி சந்நியாசியாக நேரடியாகத் தவநெறியில் தலைப்படலாம் எனும் எண்ணப் போக்கினைப் போற்றலாயினர். எனவே, இந்நூலாசிரியர் ''ஆரியர் கொள்கை'' எனச் சுட்டுவது ''வைதிக சமயத்தினை''ச் சுட்டுமானால், அக்கருத்துத் தவறுடையதாகும்.

''அவள்நிறை
பொன்செய் பாவை கொடுப்பவும் கொள்ளான்''

எனும் குறுந்தொகைப் பாடலின் (292) அடிகள் இந்நூலாசிரியரின் கண்களில் படவில்லை போலும்.

'சென்று தேய்ந்து இறுதல்' எனும் நூல் குற்றத்திற்குச் சிறந்ததோர் காட்டாக இந்நூலினைக் கூறலாம்.

## 8. தமிழர் உணவு[8]

ஒருவருடைய உணவுப்பழக்க வழக்கங்களைக் கொண்டு, அவர் எத்தகைய மனிதர் என்பதைத் துணியலாம். பெரும்பாலும் அத் துணிவு, அவருடைய பண்பு நலனையும் புலப்படுத்துவதாக அமை

8. சே. நமசிவாயம், தமிழர் உணவு, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1981: விலை ரூ 12/=

யும். இதைப் போன்றே, ஒரு நாட்டின், ஓர் இனத்தின் பண்பாட்டையும், நாகரிக நிலையையும் அறிய அந்நாட்டின் ' உணவுப் பொருள்கள், உணவுவகை, உணவுமுறை'' உதவும்.

தொன்மையான நாகரிகத்தையும், இடையறவு அற்ற (தொடர்ச்சியான) பண்பாட்டுப் பாரம்பரியத்தையும் உடையவர்கள் தமிழர். கடந்த ஈராயிரம் ஆண்டுகளுக்கு மேலாக அவர்கள் இடையே வளர்ந்து வந்துள்ள 'உணவுப் பண்பாட்டு' முறையை முழுமையாகத் தொகுத்துத் தரும் நூல், இதற்கு முன்பு தமிழில் வெளிவரவில்லை. அந்தக் குறையை இந்த நூல் போக்க முயலுகிறது.

இந்நூலில் பத்து இயல்கள் உள்ளன. இவற்றுள் முதல் எட்டு இயல்கள் உணவுப் பொருள்களைப் பற்றிய செய்திகளின் தொகுப்பும் பகுப்புமாக உள்ளன. அவை அறிமுகம், நில அடிப்படை, கல்வெட்டுச் செய்திகள், நிகண்டுச் செய்திகள்; சுவையடிப்படை, திடவுணவு, நீருறைவு, உண்ணும் முறை என்பன.

இரண்டாம் பகுதியாகக் கொள்ளத் தக்கன உணவும் பண்பாடும் (9), உணவும் தமிழ்ச் சமுதாயமும் (10) என்பனவாம்.

'உணவு' எனும் தலைப்பினையுடைய இந்நூலில், சமைக்கப்படும் பொருள்களை மட்டும் வகைப்படுத்தித் தராமல், உண்பதற்குப் பயன்படும் எல்லாவகையான பொருள்களையும் (காய்கறிகள், கிழங்குகள், பழங்கள், தானியங்கள், பானங்கள், இறைச்சி முதலியன) பற்றிய செய்திகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. இந்தப் பகுதியை (அதி 5,6,7) இன்னும் ஆழமாகவும், தெளிவாகவும், பயன்பாட்டிற்குப் பெரிதும் உதவத் தக்க வகையில் அமைத்து இருக்கலாம்.

பக்கம் 153 முதல் பக்கம் 193வரை உள்ள பகுதிகளே, உணவுப் பொருள்களாலும், உணவு முறையாலும் வளர்ந்து சிறந்துள்ள தமிழர் பண்பாட்டின் சிறப்பையும் உயர்வையும் அறிந்து கொள்ள உதவுகின்றன.

நூலின் பிற்பகுதியில் சேர்க்கப்பட்டுள்ள கலைச்சொல் அகராதி தமிழருடைய உணவுப் பொருள்களைப்பற்றி அறிய விரும்புகின்றவர்களுக்குப் பேருதவி புரியும்.

## 9. அழகுக் கலைகள்[9]

தமிழில் அழகுக் கலைகளின் கோட்பாட்டை விளக்கும் முறை யான நூல்கள் இன்றுவரை வெளிவரவில்லை. அழகுக் கலைகள் தமிழகத்தில் அடைந்த வளர்ச்சியினைக் கூறும் இரண்டொரு நூல்களே எழுதப்பட்டுள்ளன.

பேராசிரியர் செ. வைத்தியலிங்கம் அவர்கள் அழகுக் கலை களில் முக்கியமான கோட்பாடுகளைத் தமிழ் இலக்கியப் பின்னணி யில் பொதுமக்கள் புரிந்து கொள்ளத் தக்க வகையில் இந்நூலில் விளக்கியுள்ளார்.

இந்நூலினுள் அழகுக் கதைகள், கலையின் கூறுகளும் அழக மைப்பும், கலையும் கற்பனையும், கலைஞன் வாழ்க்கையும் சமுதா யமும், ஓவிய உலகமும், எழுதெழில் சிறப்பும், தெய்வநல இசை அமைப்பு, அருளாளர் பாசுரங்களில் அமைந்த இசைத்திறன். ஆடற்கலைத் திறன், ஆடவல்லானின் திருக்கூத்து—அமைப்பு, சிற்பக் கலைத்திறன், தெய்வநலக் காப்பியங்களின் அழகநுபவம் எனும் பதினொரு கட்டுரைகள் அமைந்துள்ளன.

முதற்கட்டுரை கலை, கலையின் பயன், கலையும் தொழிலும், மேனாட்டுக் கலையும் இந்நாட்டுக் கலையும் எனும் பகுதிகளை உடையதாகும். இவை சிந்திக்கத் தூண்டுவனவாக உள்ளன.

''இந்தியக் கலையானது உலகியல் பொருள்களைத் துணை யாகக் கொண்டு நாளும் முயன்று முழுநிறைவை நாடத் துணை புரிகின்றது. அதாவது கலை அமைப்பிற்குச் சமயத் தொடர்பு தந்து, ஆன்மீக அழகினை உலக மக்களின் கண்முன் கொணர்ந்து நிறுத்தி, இன்புறுத்திய வண்ணம் நன்னெறியில் ஈடுபடுத்த முயல் கின்றது; முந்துகின்றது.'' (பக்.20) எனும் கருத்து, ஆசிரியரின் எண்ணப் போக்கினைத் தெளிவுபடுத்துகிறது.

'கலையும் கற்பனையும்' எனும் மூன்றாவது தலைப்பில் கற்ப னையின் பல்வேறு வகைப்பாடுகளை, ஆசிரியர் நன்கு விளக்கி யுள்ளார். அவை எவ்வாறு கலைப்படைப்புகளை உருவாக்குவதற் கும் பயன்படுகின்றன என்பதையும் விரிவாக விளக்கியுள்ளார்.

---

9. செ. வைத்தியலிங்கம், அழகுக் கலைகள், நறுமலர்ப் பதிப்பகம், சென்னை, 1981 விலை ரூ 7=50;

ஓவியக் கலை பற்றிய கட்டுரையில், பழந்தமிழ் இலக்கியங் களில் காணப்படும் 'எழுதெழில்' எனும் தொடருக்கு மிகவும் பொருத்தமான விளக்கம் தந்துள்ளது போற்றத்தக்கதாகும்.

'ஆடவல்லானின் திருக்கூத்து' பற்றிய ஆய்வுரை, சில அரிய செய்திகளைத் தொகுத்துத் தருகிறது.

'தெய்வநலக் காப்பியங்களில் அழகநுபவம்' எனும் பகுதியில், நம்முன்னோர்கள் அழகிய இன்பத்தை அனுபவித்தார்கள்: மற்றவர் களை அனுபவிக்கச் செய்தார்கள் என்பதைத் தக்க காட்டுகளைக் கொண்டு விளக்குந்திறன் கற்பவர் உள்ளத்தைக் கவருவதாகும்.

இயல்பாகக் கலையுணர்வும், கலையறிவும் வாய்க்கப் பெற்ற இந்நூலாசிரியர், இலக்கியப் புலவர்களின் கண்களுக்குப் புலனா காத பல நுட்பமான கலை தத்துவ இயல்புகளைக் கண்டறிந்து, இன்புற்று மகிழ்கிறார்; மற்றவர்களையும் கண்டு அனுபவிக்குமாறு தூண்டுகிறார்.

'அழகுக் கலைகள்' எனும் இந்நூல் முழுவதும், மெய்யுணர்வு சார்ந்த அழகியல் அனுபவம் இழையோடிச் செல்லுகிறது.

## 10 தமிழர்தோற்கருவிகள்[10]

பண்டைக் காலத்தில் இசைக் கலையினைச் சிறந்த முறையில் நம் முன்னோர்கள் போற்றி வளர்த்தனர். இசை பிறத்தற்கு நிலைக் களன்கள் இரண்டு என்று அவர்கள் கருதினர். அவை மிடறு, கருவி என்பன. அவற்றில் இருந்து எழும் இசை மிடற்று(கண்ட)ப் பாடல் எனவும், கருவிப்பாடல் எனவும் சுட்டப்பெற்றன.

இசைக்கருவிகளைப் பண்டைத் தமிழர் 'இயம்' எனும் பொதுப் பெயரால் குறிப்பிட்டுவந்தனர்; பலவகை இசைக் கருவி களைத் தொகையாகச் சுட்டும்பொழுது 'பல்லியம்' எனும் பெய ரால் குறிப்பிட்டனர். இதைப் போன்று, 'குயிலுவக் கருவி' எனும் பெயரும் பண்டைக் காலத்தில் வழங்கியது. 'குயிலுதல்' எனும் சொல்லிற்கு 'ஒலித்தல்' என்பது பொருள். மக்களால் செய்யப் பட்ட இசைக்கருவிகளுக்கு இப்பெயர், பொதுப்பெயராய் வழங்கி வந்திருக்கிறது. இசைப்பாக்களின் இசையையும், பாணியையும் நிகழ்த்தவல்ல கருவிகள், இசைக் கருவிகள் என்பது இங்குக் குறிப் பிடத் தக்கதாகும்.

---

10. ஆர். ஆளவந்தார், தமிழர் தோற் கருவிகள் உலகத் தமிழா ராய்ச்சி நிறுவனம், சென்னை, 1981; விலை ரூ 10/=

பண்டைக் காலத்தில், இசைக்கருவிகள் (1)தோல்கருவி, (2) துளைக்கருவி, (3)நரம்புக்கருவி என்று மூவகைக் கருவிகளாகப் பாகுபாடு செய்யப் பட்டு இருந்தன. கி.பி ஏழாம் நூற்றாண்டை ஒட்டிக் கஞ்சக் கருவிகள் வழக்கிற்கு வந்தன.

'தமிழர் தோற்கருவிகள்' எனும் இந்நூல், மிகப் பழமையான இசைக் கருவியைப் பற்றிய ஆராய்ச்சி நூலாகும். இந்நூலில் 86 தோற்கருவிகளின் அமைப்பும் அழகும், பெருமையும் பயன்பாடும் தெளிவுறுத்தப்பட்டுள்ளன.

'தோற்கருவி: ஓர் அறிமுகம்' எனும் தொடக்கப்பகுதி, இசைக் கலையின் வரலாற்றையும், இசைக் கருவிகளின் வரலாற்றையும் முதலில் கோடிகாட்டுகிறது.

பிறகு ''தோல் போர்த்தப் பட்ட கருவிகள், தோற்கருவிகள்'' (பக்.6) எனும் விளக்கம் தரப்பட்டுள்ளது. இதனை அடுத்து,

''தோற்கருவிகள் இசைபாடுவோருக்குப் பக்க இசைக் கருவியாக இருந்துதவி, காலப்பிரமாணத்தைக் காத்து இசையை வளர்த்தன. செய்திகள் அறிவிக்கப் பயன்பட்டன. அரசர்களின் ஆணைகளாக இருக்கலாம். கொள்ளைக்காரர் போன்றோர் வருகையைத் தொலை தூரத்தில் உள்ளோர்க்குக் காவலர்கள் அறிவிக்கும் செய்திகளாக இருக்கலாம். போர் பற்றிய செய்திகளாக இருக்க லாம். பொதுவாக எல்லாவகையான அறிவிப்புகளுக்கும் பயன் பட்டன'' (பக்.7-8) என்பது தோற்கருவி பயன்பட்ட பல்வேறு நிலைகளை நினைவூட்டுகிறது.

'தோற்கருவிகளுக்கு ஏற்ற தோல்' 'தோற்கருவிகளுக்கு ஏற்ற மரங்கள்,' 'பஞ்சமரபு' எனும் நூலில் கூறப்படும் செய்திகள், அடியார்க்கு நல்லார்' அறிவிப்பன எனும் பகுதிகள் தோல்கருவி களைப்பற்றிய பொதுச் செய்திகள் பலவற்றைத் தந்துதவுகின்றன.

இலக்கியங்களிலும் பிறர் நூற்குறிப்புகளிலும் காணப்பெறும் செய்திகளால் திரட்டப்பட்ட ''கருவிகைளப்பற்றிய விளக்கக் குறிப் புகள்'' எனும் பகுதி, இந்நூலின் முதுகெலும்பாகக் காட்சி தருகிறது.

அடக்கம் முதல் ஜமலிக்கா எனும் இசைக்கருவி ஈறாக, 86 இசைக் கருவிகளைப்பற்றிக் கிடைத்துள்ள செய்திகள் முறைப் படுத்தித்தரப்பட்டுள்ளன.

உடுக்கை (பக்.42-44), கிணை(பக்.50-51), சுத்தமத்தளம் (பக்.58-59), தண்ணுமை (பக் 62-64), தமருகம் (பக்.67), தவில்

(பக் 68-70), துடி (பக்.71-74),பேரி (பக்.88-89),மத்தளம் (பக்.90-93), மிருதங்கம் (பக்.93-96), முரசு (பக்.96-101), மேளம் (பக்.107-108) எனும் தோற்கருவிகளைப் பற்றிய விரிவான செய்திகள் இப்பகுதியில் இடம்பெற்றுள்ளன.

இவற்றுள் உடுக்கை, தமரு, துடி எனும் பெயர்களுக்கு ஒரே வகையான பொருள் பொதுவாக அகராதிகளில் தரப்படுகின்றன. எனவே, 'இவை ஒரே கருவிக்கு வழங்கும் வெவ்வேறு பெயர்களா? அல்லது இவற்றிடையே காணப்படும் தொடர்புகள் யாவை?' என்பன போன்ற ஐயங்கள் எழவொட்டாமல் விளக்கம் தந்து இருக்கலாம்.

'சுத்தமத்தளம். தண்ணுமை, மத்தளம், மிருதங்கம் என்பன ஒரு கருவிக்கு வெவ்வேறு காலங்களில் வழங்கிய பல பெயர்களா? அல்லது இவற்றிடையே காணப்படும் ஒப்புமைகள் யாவை?' என்பதைப் புலப்படுத்தி இருக்கலாம்.

(54)தவில், (83)மேளம் எனும் இருதலைப்புகளில் ஒரே கருவியைப் பற்றிய செய்திகள் தரப்பட்டுள்ளன. இவற்றை ஒரே தலைப்பில் கொடுத்து இருக்கலாம். 'கருவிகளின் மிகுதியான எண்ணிக்கையால் நமக்குப் பெருமை உண்டாகப் போகிறதா? அல்லது அவற்றின் வடிவ அமைப்பு, உறுப்புகள், இயல்புகள், இசைக்கும் முறைகள் போன்றவற்றை நுட்பமாக விளக்குவதால் ஆதாயம்—அறிவுவிளக்கம்—உண்டாகப் போகிறதா?' என்பதை ஆராய்ச்சியாளர்கள் எண்ணிப் பார்க்க வேண்டும். பின்னிணைப்பு ஒன்றில் 'தமிழ்நூல்களில் தோற்கருவிகள் ஆட்சி' எனும் தலைப்பில் 78 பக்கங்களில் பல செய்திகள் திரட்டித் தரப்பட்டுள்ளன. இவற்றை, முந்தைய இயலான ''இசைக்கருவிகளைப்பற்றிய விளக்கக் குறிப்புகள்'' எனும் பகுதியில் முறைப்படுத்திக் கொடுத்து இருந்தால். அந்த இயல் வளமும் வனப்பும் பெற்று இருக்கும்.

வகைப்படுத்திக் காட்டுவதிலேயே ஆராய்ச்சியின் பயன் மிகுதிப்படும். 86 இசைக் கருவிகளை அகரவரிசையில் கொடுத்துள்ள ஆசிரியர், அவற்றை 1 உடுக்கை வகை, 2 பறைவகை, 3 முரசு வகை, 4 முடிவுவகை 5 தட்டைவகை என்பன போன்ற முறையில் வகைப்படுத்தி இருந்தால் முன்பக்கத்தில் எழுப்பப்பட்ட ஐயவினாக்களுக்கு இடம் இல்லாமல், எளிதில் விளங்கிக் கொள்ள உறுதுணையாக இருந்திருக்கும், அடுத்த பதிப்பிலாகிலும் இம்முறையைப் பின்பற்றலாம்,

தோற்கருவி பற்றிய தமிழ் ஆங்கிலக் கலைச் சொற்கள் பின்னிணைப்பில் திரட்டித் தரம்பட்டுள்ளமை இந்நூலின் தரத்தை உயர்த்துகிறது.

## 11 இந்துசமய பண்டிகைகள், பண்பாட்டு[11] முறைகள்

உலகின் பல்வேறு சமயங்களில், இந்து சமயத்தில்தான் மிகுதியானபண்டிகைகள் இடம்பெற்றுள்ளன. ஒவ்வொரு பண்டிகைக்கும் ஒவ்வோர் அடிப்படை நோக்கம் இருப்பதாகத் தெரிகிறது.

விழாக்களும் பண்டிகைகளும் குறிப்பிட்ட சமுதாயத்தினரின் நல்வாழ்விற்கும், அச்சமுதாயத்தின் கட்டுக்கோப்பிற்கும் உதவுகின்றன. உழைத்துழைத்துச் சோர்ந்து போன மனிதனுடைய உள்ளத்திற்கு ஒருவகைப் புத்துணர்ச்சியை ஊட்டி, மகிழவைப்பன பண்டிகைகள்.

உற்றார் உறவினரோடு கூடி மகிழ்ந்து, பகுத்துண்டு பல்லுயிர் ஓம்ப உதவுவனவாகப் பண்டிகைகள் அமைகின்றன. மற்றும், வருங்காலத்தில் ஊக்கத்தோடு உழைக்கவும், இறை இன்பத்தில் மூழ்கித் திளைப்பதனால், மனத்தில் ஒருவகை நிறைவை பெறுவதற்கும் பண்டிகைகள் உந்துதல் சக்தியாக அமைகின்றன.

இந்தப் பண்டிகைகளின் வரலாற்றையும், நடைமுறையில் செய்யவேண்டிய சடங்குகளையும் விரித்துரைப்பதாகப் 'பாவனை' செய்கிறார் இந்நூலின் ஆசிரியை.

இந்நூலினுள், தமிழ்ப் புத்தாண்டுதினம், சித்திராபவுர்ணமி, ஆடிப்பெருக்கு, நாகசதுர்த்தி (கருடபஞ்சமி) வரலட்சுமி விரதம், ஆவணி அவிட்டம், கோகுலாஷ்டமி, விநாயகசதுர்த்தி, ஸாம உபா கர்மா, நவராத்திரி, புரட்டாசி சனிக்கிழமை, தீபாவளி, கார்த்திகை மாதம், பிருந்தா துவாதசி, மார்கழி, வைகுண்ட ஏகாதசி, போகிபண்டிகை, பொங்கல்பண்டிகை, கனுப்பண்டிகை, ரதசப்தமி சிவராத்திரி, பங்குனிமாதம் ஸ்ரீராம நவமி, யுகாதிப்பண்டிகை எனும் 25 பண்டிகைகள் பற்றிய குறிப்புகள் தரப்பட்டுள்ளன. இவற்றுள் பல பண்டிகை (விழாக்)கள் அல்ல; விரதங்(நோன்பு)கள்.

---

11. திருமதி சியாமளா ராகவன், இந்து சமய பண்டிகைகள் பண்பாட்டு முறைகள், நர்மதா பதிப்பகம், சென்னை, 1981; விலை ரூ 5 = 50

பண்டிகைகளுக்கும் விரதங்களுக்கும் வேறுபாடு உண்டு. குறிப்பிட்ட சில சமூகத்தினர், குலத்தினர், குடும்பத்தினர், இனத்தினர் போற்றி மேற்கொள்ளுவது விரதம். குறிப்பிட்ட ஒரு சமுதாயத்தில் உள்ள பெரும்பாலோர் கொண்டாடுவது பண்டிகை. பண்டிகை பரந்துபட்டது; நாடளாவியது. இந்நூலாசிரியருக்கு இவ்வேறுபாடு தெரியாமல் இராது. நூலின் வடிவத்தைப் பெரிதாகக்குவதற்குச் செய்யப்பட்ட முயற்சியாகவே இரண்டையும் சேர்த்துள்ளமை தோன்றுகிறது,

சங்க காலம் முதற்கொண்டு 'பங்குனி முயக்கம் (உத்தரம்)' தமிழ்நாட்டில் கொண்டாடப்பட்டு வருகிறது. திருஞான சம்பந்தர் காலம் (கி பி. ஏழாம் நூ.ஆ.)முதல் இது சிறப்புமிக்க விழாவாயிற்று. இந்த விழாவினைப் பற்றிய குறிப்பினை இந்நூலில் காணோம்.

இந்நூலின் தலைப்பிற்கும், உள்ளே சொல்லப்பட்டுள்ள செய்திகளுக்கும் பொருத்தம் இருப்பதாகத் தோன்றவில்லை. எந்தப் பண்டிகையைப் பற்றியும் தெளிவான விளக்கமோ, வரலாறோ தரப்படவில்லை. 'பூசைக்கு வேண்டிய பொருள்கள்' செய்ய வேண்டிய பட்சணங்கள், 'பட்சணங்கள் செய்யும் முறை' என்பனவே, இந்நூலின் 90%விழுக்காட்டு இடத்தை அடைத்துக் கொண்டுள்ளன.

தமிழகத்தின் திருவிழாக்கள், பண்டிகைகள் பற்றிய முறையான நல்லதொரு விளக்க நூல் இன்றுவரை எழுதப்படாமையால், இத்தகைய 'போலிகள்', 'புலிவேஷம்' போடுகின்றன.

## IV. வரலாற்றுப் பொது நூல்கள்

அரசியல் வரலாற்றிலோ, பண்பாட்டு வரலாற்றிலோ அடக்கிக் கூற இயலாத நூல்கள் இரண்டொன்று இந்த ஆண்டில் இயற்றப்பட்டுள்ளன. அவற்றைக் காண்போம்.

### 12. தமிழகத்தில் மார்க்கோ போலோ[12] இபுனு பத்தூதா

வரலாற்றுக் காலம் நெடுக, வெளிநாட்டுப் பயணிகள் பலர் தமிழகத்திற்கு வந்துள்ளனர். இங்குக் கண்டதையும் கேட்டதை

12. எம். ஐ மரைக்காயர், தமிழகத்தில் மார்க்கோ போலோ இபுனுபத்தூதா, சென்னை, 1981; விலை ரூ 5/=

யும் அவர்கள் குறித்து வைத்துள்ளனர். அக்குறிப்புகள், அவர்கள் காலத்திய நாகரிகப் பண்பாட்டு வரலாற்றை அறிவதற்குப் பெரிதும் பயன்படுகின்றன.

கி. பி. பதின் மூன்றாம், பதினான்காம் நூற்றாண்டுகளில் தமிழகத்திற்கு வந்தவர்கள் மார்க்கோ போலோவும், இபின் பத்தூதாவுமாவர். முன்னவர் இத்தாலிய நாட்டினர்; பின்னவர் அராபியராவர். இவர்கள் இருவரும் 'காயல்பட்டினம்' பற்றித் தந்துள்ள விளக்கங்களைக் கொண்டு, 'அவர்கள் குறிப்பிடும் காயல் கீழ்க்கரைக் காயலா? அல்லது வடகாயலா?' என்பதைத் துணிய இந்நூலாசிரியர் முயன்றுள்ளார்.

மார்க்கோ போலோ கூறும் காயல் என்பது இராமநாதபுரத்திற்குத் தெற்கே 12 கி. மீ. தொலைவில் கடலோரத்தில் உள்ளது. 'கீழ்க்கரை' எனும் ஊராகும். 'காயல்' எனும் இதே பெயரை அடக்கிக் 'காயல் பட்டணம்' என்பதொன்று தூத்துக்குடியை அடுத்து 22 கி. மீ. தொலைவில் கடலோரத்தில் இருக்கிறது. 'இவற்றுள் எது உண்மையான காயல்?' எனும் ஆராய்ச்சியே இந் நூலாக வடிவெடுத்துள்ளது.

மார்க்கோ போலோ, இபுனுபத்தூதா ஆகிய இருவரும் இவ் வூரைக் குறிப்பிடுகின்றனர். இருவரும் சுட்டும் சுற்றுப்புறச் சூழல் களில் இருந்து கீழக்கரையே காயலாக இருந்திருக்க வேண்டும் எனத் தோன்றுகிறது. வெனிசு நகரப் பயணி இலங்கைத் தீவிற்கு அருகேயுள்ள மாபார் (தமிழகக்) கரைக்கு வந்து இறங்கியவர். தலைமன்னாரை அடுத்த அரிப்போவில் இருந்து 72 கி. மீ. தொலைவில் உள்ள துறைமுகத்தை வந்து அடைந்ததாகப் போலோ கூறுகிறார். இது கீழ்க்கரையே யாகும். இபுனுபத் தூதாவும் சிறப்புமிகு குறிப்பு ஒன்று தந்துள்ளார். இதனால் தலை மன்னாரில் இருந்து 72 கி. மீ. யும் மதுரையில் இருந்து 72 கி. மீ. யும் தொலைவில் உள்ள ஊர் கீழக்கரைக் காயலையே அவர் சுட்டுவதாகத் தெரிகிறது.

இவ்வுண்மையை உறுதிப்படுத்தும் வகையிலே திருப்புல்லாணிக் கோயில் கல்வெட்டு ஒன்று கிடைத்து இருக்கிறது. கீழ்க்கரையை இக்கல்வெட்டு 'சௌந்திர மாணிக்கப் பட்டணமாகிய காயல்' என்று குறிப்பிடுகிறது.

'சீதக்காதி நொண்டி நாடகம்' இவ்வூரையே சுட்டுகிறது. இவ்வூரில் 'செத்தும் கொடுத்த சீதக்காதி' வாழ்ந்தார் என்பதும்

கருதத்தக்கது. இவ்வூரை வகுதை, கீழக்கரை என்னும் பெயர் களால், இந்நூல் சுட்டுகிறது.

புலவர் நாயகம் என்னும் இசுலாமியப் புலவர், இவ்வூரில் பிறந்து சிறந்தவர். தம்முடைய ஊரை, அவர் 'தென்காயல்' எனும் பெயராலேயே சுட்டுகிறார். 'தெற்கே உள்ள காயல்' மேலே கண்ட கீழ்க்கரையேயாகும் என்பதும், வடக்கே உள்ள காயல், தூத்துக்குடிக்கு அருகிலுள்ள காயல்பட்டணம் என்பதும் புலனாகின்றன. உள்ளூர்க்காரர் தரும் சான்றைவிடவா வேறு ஆதாரம் வேண்டும்?

'பட்டணம்' என்பதையே இபுனுபத்தூதா, 'பத்தன்' என்று சுட்டியுள்ளார்.

இத்தகைய சான்றுகளால் கீழக்கரைக் காயலே, மார்க்கோ போலோ, இபுனு பத்தூதா முதலியோர் குறித்த 'பண்டைக் காயல்' என்பதை இந்நூலாசிரியர் நிலைநாட்ட முயலுவது வரலாற்றுச் செய்திகளானும், ஆராய்ச்சி வழிப்பட்ட ஆதாரங்களாலும் ஒப்புக் கொள்ளத் தக்கதாகவே தோன்றுகிறது.

'உண்மை உருமாறிப் போகக் கூடாது' என்னும் ஆசிரியரின் உண்மை நாடும் வேட்கையையும் ஆராய்ச்சித் திறனையும் இந் நூல் வெளிப்படுத்துகிறது.

இந்நூல் மற்றோர் ஆராய்ச்சிக்கு வழிவகுத்துள்ளது. இக் கீழக்கரைத் துறைமுகமே, பழம்பெரும் கொற்கை என ஆய்வாளர் களால் அறிவிக்கப்பட்டுள்ளதை இந்நூலாசிரியர் எடுத்துக்காட்டி யுள்ளார். அணிமைக் காலத்திய புதைபொருள்ஆய்வு, பாண்டிய நாட்டில் உள்ள கொற்கையே பழம்பெரும் துறைமுகப் பட்டினம் என்பதை உறுதிப்படுத்தி இருப்பது வருங்கால ஆராய்ச்சிக்கு வழி காட்டுவதாகும்.

## 13. ம. பொ. சி. படைத்த புதிய தமிழகம்[13]

விடுதலை பெற்ற இந்தியாவை, காந்தி அடிகளின் கொள்கைக்கு இணங்க, மொழிவழி மாநிலங்களாகப் பகுப்பதற்கு நம் நாட்டில் நடைபெற்ற போராட்டத்தின் ஒரு பகுதியைச்

---

13. வெள்ளையாம்பட்டு சுந்தரம், (தொ). ம. பொ. சி படைத்த புதிய தமிழகம், சேகர் பதிப்பகம், சென்னை 1981: விலை ரூ 16/=

சித்திரிப்பதே இந்நூல், எனவே, இந்திய விடுதலைக்குப் பிற்பட்ட காலத்திய தமிழக வரலாற்றில் இப்போராட்டம் ஓர் இயலாக இடம் பெறுகிறது.

இப்போராட்டத்தைத் தமிழரசு கழகத்தின் தலைவராக இருந்துவரும் சிலம்புச் செல்வர் டாக்டர் ம. பொ. சி நடத்திய முறையினை இந்நூல் விரித்துரைக்கிறது. இந்நூலில் இருபத்தேழு இயல்கள் உள்ளன.

ஆந்திரர் உரிமை கொண்டாடிய சென்னை நகரைத் 'தலையைக் கொடுத்தாகிலும் தலைநகரைக் காப்போம்' எனும் ம. பொ. சி. யின் வீரமுழக்கமும், திருத்தணியைத் தமிழ் நாட்டில் சேர்க்க வேண்டும் என்பதற்காக நடத்தப்பட்டப் போராட்டமும், இவற்றால் உண்டான அல்லல்களும், அவருடைய சொற்களா லேயே எடுத்துரைக்கப் படுகின்றன.

'தமிழரசு' கழகத்தின் தோற்றத்தையும் வளர்ச்சியையும், ம. பொ. சி. அவர்களின் அரும்பணியையும் அறிவதற்கு இந்நூல் உதவும். வேறு வகையாகச் சொல்லுவதானால், சுதந்திரத்திற்கு முற்பட்ட காலமுதல் கி. பி. 1961 வரையிலான கால கட்டத்தில், குறிப்பிட்ட ஒரு கட்சி, தமிழகத்தில் வளர்ந்த வரலாற்றை, இந் நூல் 'பத்திரிகையாளர் பாணியில்' எடுத்துரைக்கிறது.

இந்த நூல் உருவாக்கப்பட்டதன் நோக்கத்தை ம. பொ. சி. அவர்களே கூறுகிறார், 'இன்றைய அரசியல் சூழ்நிலையிலே பொய் மெய்யாக்கப்படுகிறது; மெய் பொய்யாக்கப்படுகிறது. புகழ்திருடும் புத்தி, அரசியல்வாதிகள் இடையே அதிகப்பட்டு வருகிறது. சரித்திரத்தில் இடம் பெறத்தக்க வகையில் சாதனை புரிந்தோர் மறைக்கப்படுகின்றனர்; சாதனை ஏதுமற்றோர் போற்றப்படு கின்றனர்''.

எனவே, தமிழ்மக்கள் ''தமிழரசு'' பற்றித் தெளிவாகத் தெரிந்து கொள்ளப்பட வேண்டும் என்பதற்காக இந்நூல் எழுதப் பட்டதாகத் தெரிகிறது. விருப்பு வெறுப்புகளுக்கு இடம் அளிக்கும் இந்நூலை, 'மனப்பதிவு முறை' வரலாற்று நூலாகக் கொள்ளலாம்.

## முடிப்புரை

1981 ஆம் ஆண்டு தமிழில் வெளிவந்துள்ள வரலாற்று நூல் களைப் பொறுத்தவரையில் இந்த ஆண்டு மிகச் சாதாரணமான

ஆண்டாகும். ஆண்டிற்கு ஏறக்குறைய ஆயிரம் நூல்கள் தமிழில் வெளிவருகின்றன. அவற்றில் இந்த ஆண்டுப் பதின்மூன்றே நூல்கள், வரலாறு பற்றியனவாக உள்ளன.

இந்தப் பதின்மூன்று நூல்களும் தமிழ்நாட்டைப் பற்றியன வாகவே உள்ளன. அவையும் சிறப்புமிக்க நூல்களெனச் சொல்லு வதற்கு இல்லை. பெரிதும் செய்திகளின் தொகுப்பாகவே தோன்று கின்றன. 'தமிழ் நாட்டுப் பிராமிக் கல்வெட்டெழுத்துகள்' எனும் நூலில் இருந்துதான், தமிழக வரலாற்றின்மீது புதியவொளி பாய்ந்துள்ளது. மற்ற நூல்களால், தமிழ் நாட்டு வரலாற்றிற்குப் புத்தொளியோ, தமிழ்நாட்டு வரலாற்றின் சிக்கல்களுக்குத் தீர்வு களோ கிடைக்கவில்லை.

இந்தியத் துணைக் கண்டத்தின் பன்முக வரலாறுகளைப்பற்றி ஒருநூலும் தமிழில் இவ்வாண்டு வெளிவராமை வருந்தத்தக்கதே. ஆசிய வரலாறோ, ஐரோப்பிய வரலாறோ, உலக வரலாறோ, மனித குலத்தின் சிந்தனையைப் பற்றிய, நாகரிக வளர்ச்சியைப் பற்றிய வரலாறோ தமிழ் மக்களுடையகருத்தை இந்த ஆண்டில் கவராமை வியப்பூட்டுகிறது.

உலகெங்கும் சமூகப் பொருளாதாரக் கண்ணோட்டத்தில் நாட்டு வரலாறு, அலசி ஆராயப்படுகிறது. ஆனால், நம் தமிழ் மொழியிலோ, இத்தகைய வரலாறுகளைப் படைக்கும் முயற்சி தோன்றாமல் இருப்பது, 'உலக வரலாற்று நீரோட்டத்தில்', தமிழக வரலாற்று அருவி கலக்காமல், தனித்ததோர் ஓடையாக ஒதுங்கி விட்டதையே தெரிவிக்கிறது!

# 15. பயண நூல்களும் கட்டுரைகளும்

டாக்டர்-கே. பகவதி

1981-இல் பயணம் தொடர்பாக ஐந்து நூல்களும், ஐந்து தொடர் கட்டுரைகளும் வெளியாகியுள்ளன. மனித சமுதாயம் முன்னேறத் தேவையான பல கருத்துகள் இவற்றில் இடம் பெற்றிருக்கின்றன. இத்தகையப் பயண நூல்களும் கட்டுரைகளும் தமிழில் மேன்மேலும் வெளிவருதல் வேண்டும்.

பயணம் பற்றிய நூல்கள் அல்லது கட்டுரைகளை நோக்க இரு அடிப்படையில் இவை அமைந்திருக்கக் காணலாம் பல்வேறு நோக்கிலும் செய்த பயணங்களுக்குப் பின்னர் அவற்றை நூலாக அல்லது கட்டுரைகளாக வெளியிடுதல் ஒன்று. எழுதுவதற்கென்றே பயணம் மேற்கொள்ளுதல் இன்னொன்று. இவ்விரண்டனுள் பயண இலக்கிய நோக்கம் இரண்டாவது வகையிலேயே முற்றுப் பெற முடியும். ஏனெனில் முதல் நிலைப் பயணத்தில் அவர்களின் அனுபவம் இயல்பாக வெளிப்படினும், கற்போர்க்குப் பல கருத்துகளைத் தெளிவுற இயம்பாமல் விட வாய்ப்புண்டு. ஆயின் இரண்டாவது அமைவது திட்டமிட்ட பயணம். ஆகையால் பிறர் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற முன்னேற்பாடு காரணமாக எல்லாவற்றையும் தெளிவாகப் புரிந்து கொண்டு அவற்றை எடுத்தியம்ப முடிகின்றது. இவ்விரண்டு நிலையில் 1981-இல் எழுந்த பயண இலக்கியங்கள் வருமாறு:

1. இமய மலைப் பயணம், ப. ரா. சுப்பிரமணியன், சேகர் பதிப்பகம், சென்னை.
2. பத்ரி—கேதார் யாத்திரை, நெ. சி. தெய்வசிகாமணி, பைலட் பப்ளிகேஷன்ஸ். சென்னை.

3. நான் கண்ட அமெரிக்கா, செல்வி. எம். முத்தையா, அசோகன் பதிப்பகம், சென்னை.

*4. புதிர் நிறைந்த பூமி, எலிசா, மருதமலை பதிப்பகம். சென்னை.

*5. நேப்பாள நாட்டின் அனுபவங்கள், பரதபாண்டியன், சர்வோதய இலக்கியப்பண்ணை, மதுரை.

## கட்டுரைகள்

1. திருத்தலப் பெருமை-பரணீதரன், 'ஆனந்த விகடன்' வார இதழ் (12-4-81 தொடங்கப் பெற்றது).
2. தேவி தரிசனம்-பொன் பாஸ்கர மார்த்தாண்டன் 'இதயம் பேசுகிறது' வார இதழ் (1981).
3. பெல்ஜியம்-ஹாலந்து பயணக்கதை-மணியன் 'இதயம் பேசுகிறது' வார இதழ் (14-9-80—8-2-81).
4. பஹாமாஸ்(மேற்கு இந்தியத் தீவு)-மணியன், 'இதயம் பேசுகிறது' வார இதழ் (15-3-81—28-6-81).

## நூல்கள்

### 1. இமயமலைப் பயணம்-ப.ரா. சுப்பிரமணியன்

கேதார்நாத் - பத்ரிநாத் என்ற இரு இடங்களைப் பற்றிய செய்திகள் இந்நூலில் இடம் பெறுகின்றன, முதலில் வசதியாகச் செல்லத்தகுந்த மாதங்கள் (பனிகாரணமாக), குழுவினராகச் செல்வதில் உள்ள நன்மை, புறப்படும்போது செய்து கொள்ள வேண்டிய பாதுகாப்பு ஏற்பாடுகள் ஆகியவை பற்றி ஆசிரியர் இயம்புவது அங்குச்செல்ல விரும்பும் பயணிகளுக்குச் சிறந்த வழி காட்டுதலாக அமைகிறது.

''கங்கை நதி மலைப்பகுதிகளைக் கடந்து சமவெளியில் பிரவேசிக்கும் இடமான ஹரித்துவாரே இமயமலைப்பயணம் ஆரம்பிக்கும் இடமாகும். இந்துக்களின் புனிதமான திருத்தலம் இது. இதனை அடுத்தமைவது ரிஷிகேஷ். இதனின்றும் 70 கி.மீ தொலைவில் உள்ள தேவப் பிரயாகையிலிருந்து தான், நீர்ப்பெருக்குக்குக் கங்கை என்ற பெயர் தொடங்குகிறது. தொடர்ந்து ருத்ரப்

* இவ்விரு நூல்களும் கிடைக்காத காரணத்தால் கட்டுரையில் இணைக்க இயலவில்லை.

பிரயாகை, குப்தகாசி, காளிகங்கை, திரியுக் நாராயணன் மலை. சௌரிகுண்டம் ஆகிய இடங்கள் சிறப்பானவை. இங்கு இருந்து 9 மைல் தொலைவில் உள்ளது கேதாரிநாத் கோயில். இது 11753 அடி உயரத்தில் உள்ளது. இக்கோயிலில் லிங்கம் பிற சிவன் கோவில் களில் போன்றில்லை. சுமார் 4 அடி உயரமான அடியிற் பருத்த கற் பாறைதான் சுயம்புவான மூர்த்தி. உற்றுப் பார்த்தால் ஒரு எருமையின் பின்புறம் போன்று தோன்றுகிறது. இந்த லிங்கத்தை நம் விருப்பம் போல் அர்ச்சிக்கலாம். இவ்வியப்பு பற்றிய தொரு தலபுராணமும் உண்டு.[1] குளிர் காலத்தில் கேதாரிநாத் முழுவதும் உறைபனியால் மூடப்பட்டு விடும். அப்போது இங்கு யாரும் தங்கு வதில்லை. கேதாரிநாத்தினின்றும் திரும்பி ருத்திரப் பிரயாகை வந்து பத்ரிநாத் செல்ல வேண்டும். பத்ரிநாத் வரையிலும் பஸ் இருப்பதால் நடக்க வேண்டிய தேவையில்லை ருத்ரப் பிரயாகை யினின்றும் சர்ணப் பிரயாகை, கௌசார், நந்தப்பிரயாகை, பிப்பல் கோட்டி, ஜோஷிமத், பாண்டுகேசுவரம், அனுமான் சட்டி போன்ற வற்றைக் கடந்து பத்ரிநாத் கோயிலை அடைய வேண்டும். 10513 அடிதொலைவில் உள்ளது இவ்வாலயம். இக்கோவில் பூலோக வைகுண்டமாகும். பிரம்மா வேதங்களை உண்டு பண்ணிய தாகவும், வேதங்களைப் பூமியில் நிர்வகிக்க நாராயணன் அவ தரித்ததாகவும், அவர் தவம் செய்த இடத்தில் மகாலெட்சுமி ஒரு இலந்தை மரமாகி நிழல் கொடுத்ததாகவும், அந்த இடமே பத்ரீ காச்ரமம் என்றும் கூறுவர். சுமார் 3 அடி உயரமுள்ள மூர்த்தி கல்லினால் ஆனது. ஆலயத்தின் அருகில் மூன்று வெந்நீர் ஊற்று கள் உள்ளன. வடகிழக்கே வியாசர்குகை அமைகிறது என்று, தாம் கண்ட காட்சிகளை எடுத்தியம்புகின்றார் ஆசிரியர். பரமன் அருள் தேடுவார்க்கு உதவும் ஒரு நூலாக இப்பனிமலைப்பயணம் அமை கிறது. இருப்பினும் எண்பதில் வெளிவந்த புண்ணிய பாரதம் என்னும் நூலின் கண் அதன் ஆசிரியர் மேற் கூறிய இமயமலைத் தலங்களை மிகச்சிறப்பாகவும் மிகநுணுக்கமாகவும் பல வரலாறு

---

1. பாண்டவர்கள் சுவர்க்கத்திற்குக் கேதாரிநாத் வழியாகச் சென்றார்கள் என்றும் சிவன் அவர்களுக்கு ஒரு எருமை உருவில் காட்சி தந்தான் என்றும் காட்சிதந்த பின் அது பூமிக்குள் நுழைந்து விட்டதாகவும் முழுதும் நுழைவ தற்குள் பீமன் அதன் வால்புறத்தைப் பிடித்து நிறுத்திய தாகவும், பரமசிவன் பின்னர் அவர்கட்குக் காட்சி தந்து இந்த கல் உருவத்தில் தன்னைவழிபடும்படி கூறியதாக வும் ஸ்தல புராணம் கூறுகிறது. (பக். 52)

களுடன் கூறிச் செல்கின்றதைக் காணும் போது இவ் இமயமலைப் பயணம் மேலெழுந்த வாரியாகப் படித்துப் பயன் பெறத்தக்க தாகவே அமைகின்றது எனலாம்.

## 2. பத்ரி கேதார் யாத்திரை-நெ.சி. தெய்வசிகாமணி

வடஇந்தியாவில் உள்ள பல சிறப்பு மிக்கத் தலங்களைப்பற்றி அறிய உதவுமொரு நூல் இது. ஆக்ரா, மதுரா, புதுடெல்லி, ஜம்மு, காஷ்மீர் போன்ற பல புகழ் பெற்ற இடங்கள், அவற்றின் வரலாற்றுச் சிறப்புகள் ஆகியவை விளக்கப் படுகின்றன. பயண இலக்கியம் எழுதவேண்டுமென்ற நோக்கமின்றித் திரும்பிய பின்னர், பிறர் குறிப்பைப்பார்த்தும் பிற நூல்களைப் பிடித்தும், கிடைத்த பிற தகவல்களைக் கொண்டும் இந்நூலை எழுதியதாக ஆசிரியர், தன் உரையில் கூறுகின்றார். தன்னுடைய சொந்த அனுபவங்கள், பயணத்தின் போது கண்ட, கேட்ட செய்திகள் இவற்றினடிப்படையில் எழுதும் பயண இலக்கியக் கொள்கை யினின்றும் சிறிது மாறுபட்டுப் பிறருக்கு ஒரு இடத்தைப் பற்றி தெரிவிக்க வேண்டும் என்ற எண்ணத்தையே ஆசிரியரிடம் காண் கின்றோம். எனவே பயண இலக்கியக் கொள்கை என்ற நிலையில் இவ்வமைப்பு ஏற்கத் தக்கதா அல்லது முரண்பட்டதா என்பது ஆய்வுக்குரிய ஒன்று.

மேற்கண்ட இரண்டு நூல்களும் இந்தியாவின் வடபகுதி பற்றி யன. இருப்பினும் நூல் தலைப்பைப் பொறுத்த வரையில் இரண் டையும் மாற்றி அமைத்திருக்கலாம் எனத் தோன்றுகிறது. ஏனெ னில் இமயமலைப் பயணம் என்று முதல் நூல் தலைப்பு அமையி னும், நோக்கம் பத்ரிநாத், கேதார் நாத் யாத்திரையே ஆகும். பின்னைய பத்ரி-கேதார் யாத்திரை, இவ்விரண்டுடன் வட இந்தியாவின் பல பகுதிகளையும் விளக்குவதாக அமைகின்றது.

## 3. நான் கண்ட அமெரிக்கா-செல்வி எம். முத்தையா

கல்வித் துறையுடன் தொடர்பு கொண்டவராதலால் அமெரிக்காவில் மிகுதியாகத் தான் கண்டு பயன் பெற்ற கல்வித் துறை பற்றியும், சில பிற சிறப்பான காட்சிகள் பற்றியும் விளக்கிச் செல்கின்றார் ஆசிரியர்.

தானே ஒரு குழந்தையாக அமெரிக்காவில் பயிலமாட்டோமா என்று ஏங்கும் வண்ணம் அங்குள்ள கல்விப் போக்கை அதன்

சிறப்பைப் போற்றுகின்றார். கல்வியில் பின் தங்கிய மாணவர்கள் முன்னேறத் திட்டம், வசதிக் குறைவு காரணமாக விடுமுறை எடுத்த குழந்தைகளுக்கு நவீனக் கருவிகள் மூலமாக வீட்டிற்கே கற்பிக்கும் முறைகள் போன்றன மிகவும் பயன் தரத்தக்கன. குழந்தைகளின் வருங்காலம் கருதி ஒவ்வொரு நிலையிலும் அவர் களின் வளர்ச்சி நுணுக்கமாக ஆராயப்பட்டு, அதற்கேற்ற திட்டங் கள் வகுத்துள்ளமை போற்றத் தக்கது.

இயந்திர உலகமாகத் திகழும் அமெரிக்காவில் பார்க்க வேண் டிய முக்கிய இடங்கள் நியூயார்க், வாஷிங்டன் ஆகிய நகரங்கள். நியூயார்க்கில் உள்ள மன்ஹார்ட்டன் பகுதி, எம்பயர் ஸ்டேட் பில்டிங், துறை முகத்தில் உள்ள சுதந்திர தேவியின் சிலை, கிறித் துவக் கோவில், ஐக்கிய நாட்டு ஸ்தாபனம் முதலியன கண்ணை யும் கருத்தையும் கவரத் தக்கன. அமெரிக்காவின் தலை நகரான வாஷிங்டனில் உள்ள பென்சில்வேனியா சாலை புகழ் பெற்றது. ஜனாதிபதியின் வெள்ளை மாளிகை, பார்லி மெண்ட் கட்டிடம், லிங்கன் நினைவாலயம், ஜெபர்ஸன் நினைவு ஆலயம், ஸ்மித் சோனியன் ஸ்தாபனம், கண் காட்சி சாலை, போன்ற இடங்கள் பார்க்கத் தகுந்தன. மேலும் பிலடெல்பியா, பாஸ்டன், கெட் டீஸ்பர்க் ஆகியவைகளும் பார்க்க வேண்டிய தலங்களாகும்.

அமெரிக்காவைப் பற்றிய, அதன் முக்கிய நகரங்களைப் பற்றியதொரு அறிவைப் பெறவழி செய்யும் வகையில் அமை கிறது இப்பயண இலக்கிய நூல்.

## கட்டுரைகள்

1. திருத்தலப் பெருமை-பரணீதரன்

பரணீதரன் தஞ்சை மாவட்டத்தில் உள்ள கோயில்களை வலம் செய்து, அங்குத் தான் பெற்ற அனுபவங்களுடன் தனது பிற எண்ணங்களையும் கலந்து பிரயாண இலக்கியமாக்கித் தருகின் றார்.

கும்பகோணத்திலிருந்து திருவாரூர் செல்லும் பெரு வழியில் அமைந்துள்ள ஸ்ரீ கோணேச்வர சுவாமி ஆலயத்தினின்றும் தொடங்குகிறது இவரது பயணம்.

இக்கோயில் தலபுராணத்தைப் பக்திப் பெருக்குடன் விவரிக் கின்றார். அங்குள்ள தீர்த்தப் பெருமையைப் பல நிகழ்ச்சிகள் மூலம் இயம்புகின்றார். அடுத்து கொரடாச் சேரி சிவன் கோயில் விளக்க மமைய, தொடர்வது திருக் கொள்ளம் புதூர் கோயில்

விளக்கம். இங்கு நடை பெறும் ஓடவிழா சிறப்பானது. சம்பந்தப் பெருமானுடன் சம்பந்தப்படுத்தி இச்செய்தியைச் சொல்கின்றார் ஆசிரியர். மேலும் பல புராணக் கதைகளும் இவண் இடம் பெறு கின்றன. அடுத்து, திருவிடைவாயில் என்ற சம்பந்தர் பாடல் பெற்ற தலம் இடம் பெறுகிறது. குடவாயில் செல்லும் பாதையில் பத்தூர்-அபிவிருத்தீச்வரம் என்ற கிராமங்களில் முட்புதர்களுக் கிடையே சிதைந்து கிடக்கும் கோயில்களைச் சுட்டி, அவற்றின் ஊர்ப் பெயர்கள் பற்றியும், தல புராணங்கள் பற்றியும் ஆசிரியர் குறிப்பிடுகின்றார்.

ஆலங்குடி என்ற தலத்தில் அமைந்து இருக்கும் தட்சிணா மூர்த்தி பற்றிய விளக்கத்தில், காசி போன்று இங்கு மரணமுறு வோர்க்கு மோட்சம் கிட்டும் என்ற நம்பிக்கை வெளிப்படுகிறது சுவர்ண புரீச்வரர் கோயிலைத் தொடர்ந்து விளக்க மமைவது சித்தீச் வரர் கோயிலுக்கு ஆகும். இக்கோயில் கும்பகோணம் குடவாயில் பாதையில் உள்ள திரு நறையுரில் அமைந்துள்ளது. சித்தர்கள் வழிபாட்டால் சித்தநாதர் என்ற பெயரை இறைவன் கொண்டா ராம். இக்கோயில் பற்றிச் சொல்லும் போது, 'திரு நறையூர்க் கோயில் தஞ்சை மாவட்டத்தில் உள்ள பழம்பெரும் கோயில்களில் ஒன்று. பெரிய கோபுரமும், பெரிய மண்டபங்களும் கொண்டது. ஆனால் பல கோயில்களைப் போல இதுவும் திருப்பணி செய்யப் பட வேண்டிய பரிதாப நிலையில் உள்ளது என்கின்றார் நாச்சி யார் கோயிலில், கருடனுக்குப் பூசை செய்தல், அவரின் பலம் இடத்திற்கு ஏற்பமாறும் தன்மை போன்றன சிறப்பாகச் சுட்டத் தக்கன. திருச் சேறையில் உள்ள சிவன் கோயிலைத் தொடர்ந்து, ஆசிரியர் பயணம் செல்லுவது நாலூர் ஆலயமாகும். அக்காலத் தில் திருத்தலமாக விளங்கி, இன்று ஒளிகுன்றி கவனிப்பாரற்று இருக்கும் கோயில்களின் வரிசையில் இக்கோயிலும் இடம் பெறு கிறது. திருப்பணிகள் பாதியிலேயே நின்றுவிட்ட நிலையில் காணப் படுவது சரவீர நாதசுவாமி ஆலயம்.

வரகூரில் இருக்கும் வரதனின் அருள்பெரும் செயல்களைச் சில நிகழ்ச்சிகள் மூலம் இயம்புகின்றார். இங்கு நடைபெறும் உறியடி உற்சவம், வழுக்கு மரம் ஏறல் சிறப்பானவை. ஏராளமான கல் வெட்டுகளுடன் காட்சி தருவது திருக் காட்டுப்பள்ளி சிவன் கோயில். சிறுவாச்சூர் மதுர காளியம்மன் கோயில் மூன்று ஆண்டு களுக்கு முன்னர் புதுப்பிக்கப்பட்டு, சிறப்பாக விளங்குகிறது. மேலும் இவரது இப்பயணத்தில், வரகூருக்கு அருகில் நல்ல முறை

யில் நிர்வகிக்கப்பட்டு வரும் இளங்காடு கோயில், திருப்பணிக்காகக் காத்திருக்கும் முல்லைக் காடு கோயில், பாழடைந்து கிடக்கும் ஆற்காடு கோயில் ஆகியவையும் இடம் பெறுகின்றன. கருப்பூரிலும் கோனேரி ராசபுரத்திலும் காணப்படும் சிவாலயங்களும் பாழடைந்தே காணப்படுகின்றன.

கண்டமங்கலம் கிராமத்தில் இருக்கும் சிவன் கோயில் நல்ல முறையில் செயல்பட்டு வரும் ஒரு கோயிலாகும். செந்தலைப் பெருமாள் கோயில் அத்துணைச் சிறப்பாக இன்றில்லை.

ஸ்ரீரங்கம் கோவில் அருகில் உள்ள இன்னொரு ஸ்ரீரங்க நாதர். ஆலயம், கோவிலடியாகும். இதுவும் சிறப்புடையதொரு கோயில். இதன் பக்கத்தில் உள்ள திருச்சென்னம் பூண்டி பெருமைகள் குறைந்து காணப்படுகிறது.

'திருத்தலப் பெருமை' என்றும் இந்நூலில் ஆசிரியர், கோயில்களின் பழம் பெருமைகளை எண்ணும் நிலையிலேயே இன்று பல சிதலமடைந்து காணப்படும் நிலையை விளக்குகின்றார். எனினும் பயண இலக்கியம் என்ற நிலையில், இத்தொடர் கட்டுரைகள் பயில்வோர்க்குத் தரும் எண்ணங்கள் பல.

வாழ்வும், வீழ்வும் மனிதர்களுக்கு மட்டுமல்லாது, கோவில்களுக்கும் உண்டு என்பதனை, இவ்விலக்கியம் நமக்கு உணர்த்துகின்றது. பொதுவாக, தெரிந்த சிறப்பான கோயில்களின் வரலாறு கூறாது, பிறபகுதி மக்கள் அறியாத அல்லது தெரிந்து கொள்ள இயலாத பல கோயில்கள் பற்றிச் சொல்லிச் செல்வது இப்பயண இலக்கியத்தின் ஒரு சிறப்பு ஆகும். கோயில்களின் மிகுதி, கோயி லில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம் என்ற, தமிழர் மொழியை யுணர்த்துகின்றது. தலபுராணங்கள் வழி ஊர்ப் பெயர் வரலாறு சொல்லிச் செல்லுதல் ஊர்ப் பெயர் ஆய்வுக்குச் சிறந்ததொரு துணையாகவும் அமைகிறது.

விளக்கங்களில் இலக்கிய எண்ணங்களையும் கலந்து தருவது, ஆசிரியரின் அறிவையும் புலப்படுத்த வல்லது. எல்லாக் கோயில்களையும், சைவம். வைணவம் என்ற பாகுபாடின்றி விளக்கிச் செல்வதும் இவர்தம் சிறப்பாகும்.

## 2. தேவி தரிசனம்

பல்வேறு தலங்களுக்கும் சென்று அங்குள்ள கோயிற் சிறப்பு எழுதியவர் பரணிதரன், ஆனால் பொன் பாஸ்கர மார்த்தாண்டன்

தேவி தரிசனத்தில் பல்வேறு தேவிகளையும், அந்தந்த ஊருக்குச் சென்று கண்டு—அவளது அருட்செயல்களையும், பக்தர்களுக்கு அருள் புரியும் கருணை பற்றியும் எழுதிச் செல்கின்றார். சங்கரன் கோயில் கோமதி அம்மன், பெரியபாளையம் பவானி அம்மன், சென்னை முண்டக்கண்ணி அம்மன், காஞ்சிபுரம் பெருந்தேவி நாச்சியார் கொங்கு நாட்டுப் பன்னாரி மாரியம்மன் சோட்டானிக் கரை பகவதி ஆகியோரின் மகிமைகளைப் பற்றிச் சொன்ன ஆசிரியர், செங்கன்னூர் பகவதியின் சிறப்புக்களை அடுத்தியம்பு கின்றார்.

இத்தெய்வம் பற்றிப் பேசுகையில் 'தெய்வம் வெளிப்படை யாக மனித உருவிலேயே வாழும் சக்தியாக இயங்கி அற்புதங்கள் நிகழ்த்துவதுண்டு என்பது செங்கன்னூர் திருத்தலத்தில் சாதிக் கப்படும் நிரந்தர தெய்வாம்சம் பொருந்தியஉண்மை என்றியம்பு கின்றார். செங்கன்னூர் பகவதியின் திருப்பூத்து வைபவம் பற்றிய புராணக் கதையையும், அந்நிகழ்ச்சி இன்றும் நடைபெறும் தன்மையையும் விளக்குகின்றார். மன்றோ என்ற துரை அதனை நம்பாது இகழ அம்மன் அவருக்கு தன் சக்தியையுணர்த்தியது அற்புதமான தொரு நிகழ்வாகும்.

பேசும் தெய்வமாய், பிணியகற்றும் மாமருந்தாய் வீற்றிருப் பவள் சென்னையிலிருக்கும் கோலவிழியம்மன், கொல்லூரில் கொலு வீற்றிருப்பவள் மூகாம்பிகை. மூகாம்பிகை கோயில் கொண்ட வரலாறு, அத்தேவியின் அருட்செயல்கள், சொர்ண ரேகை படிந்த சந்தனம், அதிமதுரம் என்ற தீர்த்தப் பிரசாதம் இவற்றின் சிறப்புகள் போன்றவை சிறப்பாக விளக்கப்படுகின்றன. சேலம் கோட்டை பெரிய மாரியம்மன் திருவருட் சிறப்பைத் தொடர்வது மேல் மருவத்தூர் அம்மன். இத்திருத்தலத்தில் அம்மா ஆதிபராசக்தி பங்காரு அடிகளார் மூலம் அருள் பிரவேசமாகி மகிமைகளை நிகழ்த்தி வருவது அனைவரையும் வியக்க வைத் திருக்கும் ஒரு செய்தியாகும். சென்னை தம்புச் செட்டித் தெரு வில் காளிகாம்பாள் என்ற பெயருடன் பக்தர்களைக் காத்து நிற்கும் தேவியின் மகிமைகளும் இத்தேவி தரிசனத்தில் இடம் பெறுகின்றன. இந்நூலில், தேவியை, மக்கள் தரிசனம் செய்ய அவர்கள் பக்தி உணர்வில் கனிந்து, தேவி தானே தரிசனம் கொடுத்து அவர்கள் துன்பங்கள் களைதலைச் சிறப்பாக ஆசிரியர் எடுத்தியம்பக் காணலாம்.

## 3. பெல்ஜியம் ஹாலந்து பயணக்கதை

சென்ற ஆண்டில் தொடங்கிய இக்கட்டுரை, முடிவு பெறுவது இவ்வாண்டுதான். மணியனின் இயல்பான பிற பயணக் கட்டுரைகளைப் போல் சுவையுடனும், தகவல் களஞ்சியமாகவும் திகழ்கிறது. இக்கட்டுரைத் தொடரும். ஹாலந்து, பெல்ஜியம் சிறப்புகள் டெல்லர் — மணியனது உரையாடல் மூலம் தெளிவாகின்றது. சிறந்த இயற்கை வளம் இல்லாத நிலையிலும் வேண்டாத உவர் மண்கொண்டு சிறந்த கண்ணாடிகளை உருவாக்கி, இன்று மிகச் சிறந்த கண்ணாடிகளுக்குப் பெயர் பெற்றுத் திகழும் நாடாக பெல்ஜியம் விளங்குவது மேன்மையுடையது. மணியன் தனது இறுதிக் கட்டுரையில் அந்நாட்டு மேன்மையை நம்நாட்டு நிலையுடன் இணைத்துப் பேசுவது மிகச் சிறப்பாக அமைவதுடன், சிந்திக்கவும் வைக்கும் நன்று. இயற்கை வசதிகள் இல்லாத ஒரு நாடு தன் மக்களின் உழைப்பு, நாட்டுப்பற்று, முன்னேற வேண்டும் என்ற விழிப்புணர்ச்சி காரணமாக உயர்ந்து நிற்கும் நிலையைத் தெளிவாக எடுத்து இயம்புகிறார்.

## 4. பஹாமாஸ் (மேற்கு இந்தியத் தீவு)

பெல்ஜியம் ஹாலந்து பயணத்தைத் தொடர்ந்து, மணியனின் பயணக் கட்டுரை பஹாமாஸ் தீவுகளைப்பற்றி அமைகின்றது.

பஹாமாஸ் தீவுகளில் இம்முறை (அக்டோபர் 1980) நடைபெற்ற உலகப் பயண எழுத்தாளர் மாநாட்டில் இந்தியாவிலிருந்து கலந்து கொண்ட ஒரே பத்திரிகையாளரான மணியனின் அனுபவங்களே இத்தொடர் கட்டுரைகள்.

'டூரிஸம்' துறையை ஜீவநாடியாகக் கொண்டது இத்தீவுகள். இயற்கை வளம் எதுவுமே இயலாது வெறும் கடற்கரையை வைத்துக் கொண்டு பஹாமியர்கள் செல்வம் கொழிக்க வாழ்ந்து கொண்டு இருக்கின்றனர். டூரிஸம் காரணமாக நாட்டு வளர்ச்சியைப் புரிந்து கொண்ட அங்குள்ள மக்கள், அதை மேன்மைப் படுத்தும் நிலையில் நடந்து கொள்ளும் திறன் போற்றற்குரியது. 'இந்நாட்டினுடைய பொருளாதாரமே சுற்றுலாவில் அடங்கி இருக்கிறது என்பதைப் புரிந்து கொண்ட காரணத்தால் இன்முகம் தவிர வேறு முகத்தை இங்குப் பார்க்கவே முடியாது;' என்று சுற்றுலாத் துறையில் பணிபுரியும் ஒருவர் எண்ணத்தை மணியன் சுட்டுவது ஈண்டு சான்றாக்கத்தக்கது. இதன் சிறப்புக்குரிய கேளிக்கை, மது, இயற்கைச் சூழ்நிலைகள் ஒவ்வொரு நாட்டுச்

சுற்றுலாத் துறையிலும் சிறந்ததொரு பங்கினை வகிக்கும் நிலையில், நம் நாட்டுச் சுற்றுலாத்துறை வளர்ச்சியின்மைக்கு கேளிக்கைகள் சிறப்பாக இடம் பெறாமையே காரணமாகும். மேலும் "நமக்கு ஒரு பெரிய பாரம்பரியம் இருக்கிறது. நமக்கு என்று ஒரு கலாச்சாரம் இருக்கிறது. இவற்றை ஏந்த அளவிற்கு விட்டுக் கொடுக்கிறோமோ அந்த அளவுக்குத் தான் டூரிஸம் வளரும். ஆனால் இவற்றை எல்லாம் விட்டுக் கொடுத்துத் தான் டூரிஸம் வளர வேண்டுமா என்பது தான் கேள்வி" என்று சொல்லிச் செல்லும் மணியனின் கருத்தை, சுற்றுலாத்துறை அதிகாரிகள் சிந்தித்துப் பார்த்தல் வேண்டும்.

பஹாமாஸ் தீவுகளில் பெரிய தொழிற்சாலை எதுவும் இல்லை டாக்டர்கள், இஞ்சினீயர்கள் போன்ற நிபுணர்கள் இல்லை. புகழ்பெற்ற வழக்கறிஞர்களும் இல்லை. மக்கட் தொகையோ மிகக் குறைவு. இத்தகையதொரு நாடு செல்வத்தில் மிதந்து கொண்டு இருக்கிறது எனில் அறிவுபூர்வமான அதன் திட்டங்களே காரணமாகும். அமைதியும், தனிமையும், உல்லாசமும் தேடிவரும் டூரிஸ்டுகள் தான், நாட்டுப் பொருளாதாரத்திற்கு அடிப்படை என்பதையுணர்ந்தவர்கள் அம்மக்கள். எனவே, அவர்களுக்குத் தேவைபடும் எல்லா வசதிகளையும் செய்து கொடுக்கிறார்கள். இது நாம் அவர்களிடம் கற்றுக் கொள்ள வேண்டிய பாடம். நம் நாட்டில் இயற்கை வளத்துக்குக் குறைவில்லை. ஆயினும் அவர்களைப் போல் முன்னேற இயலாமல் இருக்கின்றதை எண்ணிப் பார்க்க வேண்டும். இவற்றை யெல்லாம் கூறிச் செல்லும் மணியன் இறுதியில்,

"ஆண்டவன் கொடுக்கும் இயற்கைச் செல்வத்தினால் மட்டும் ஒரு நாடு உயர்ந்து விடமுடியாது. அதைச் சிறந்த முறையில் பயன்படுத்தும் சாமர்த்தியம், ஊக்கம், உழைப்பு, சுறுசுறுப்பான ஈடுபாடு இவைதான் ஒரு நாட்டை உயர்த்த முடியும். இருப்பதை வைத்துக் கொண்டு இயன்ற அளவு அதிகமான பயனை உருவாக்கத் தெரிந்து கொள்ள வேண்டும்" என்று கூறிச் செல்லும் கருத்து ஒவ்வொரு இந்தியனும் சிந்திக்க வேண்டியதொரு எண்ணமாகும்.

எண்பத் தொன்றில் வெளியான பயண நூல்களும் கட்டுரைகளும் நமக்குப் பயன்படும் முறையில் முதன்மையாக நிற்கின்றன என்பதில் ஐயமில்லை.

பக்தி அடிப்படையில் அமைந்த பயண நூல்கள், தமிழ் மக்களின் பக்தியுணர்வு, நம்பிக்கையுணர்வு இவற்றைச் சிறப்பாக எடுத்தியம்புகின்றன.

சமுதாய முன்னேற்றம், விழிப்புணர்ச்சி பெற்று பிறநாட்டு மக்களைப் போன்று நாமும் எல்லாத் துறைகளிலும் முன்னேற வேண்டும் என்ற தூண்டுதலை மணியனின் இரண்டு பயணக் கட்டுரைகளும் அளிக்கின்றன. மக்கள் சமுதாயம் முன்னேற இத் தகையப் பயண இலக்கியங்கள் மேன் மேலும் பல்கிப் பெருக வேண்டும்.

# 16. தொல்பொருள், கல்வெட்டு ஆய்வு

இரா்ஜ். பவுன்துரை

பண்டையதமிழகத்தின் பண்பாடு, வரலாறு போன்ற செய்திகளைக் கல்வெட்டுகள் தரவல்லன. 1981-ஆம் ஆண்டில் வெளியான கல்வெட்டு ஆய்வுரைகள் மூலம் இருண்ட காலம் குறித்துப் புதிய செய்திகள் கிடைத்திருப்பது குறிப்பிடத்தக்கது.

கிரேக்க மொழியில் 'ஆர்க்கியாலஜி' (archaeology) என வழங்கும் பிரிவு தமிழில் 'தொல் பொருளாராய்ச்சி' என அழைக்கப்படுகின்றது. இச் சொல்லின் பொருள் (archaios = ancient; logos = science) பழங்காலத்தைப் பற்றி ஆராயும் அல்லது விளக்கும் அறிவியல் என்பதாகும். ஒரு நாட்டின் வரலாற்றுக் காலத்திற்கு முற்பட்ட காலத்திய மக்களின் வாழ்வின் நிலையை வெளிப்படுத்தும் ஆய்வாக இது அமைகின்றது.

'கல்வெட்டுகள்' பண்டைய தமிழகத்தின் பண்பாடு, மொழியின் வளர்ச்சி, மாற்றங்கள், வரலாறு போன்ற செய்திகளைக் கொடுக்க வல்லது. பொதுவாகத் தொல்பொருள் ஆய்வும், கல்வெட்டாய்வும் தமிழகத்தின் சிறப்பான பண்டைய பண்பாட்டினை அறிய பெரும் உதவியாக உள்ளன. 1981-ஆம் ஆண்டில் நடத்தப்பட்ட தொல்பொருள், கல்வெட்டாய்வு நிலையை எடுத்துக் காட்டுகிறது இக்கட்டுரை. முதல் பகுதியில் ஆய்வாளர்களின் கருத்துக்கள், இரண்டாம் பகுதியில் ஆய்வு நிலை, மூன்றாம் பகுதியில் வெளியீடுகள் ஆகியவை தரப் பெற்றுள்ளன.

''சங்க காலத்துப் பிராமியக் கல்வெட்டுகள்'' என்னும் நூலில், சீனி. வேங்கடசாமி, பிராமிய எழுத்துக்களை ஆய்வு செய்கிறார்.

''பிராமி எழுத்து வருவதற்கு முன்பு பழைய தமிழ் எழுத்து தமிழகத்தில் வழங்கி வந்தது. பிராமி எழுத்து வந்தபிறகு பழைய தமிழ் எழுத்து மறைந்துவிட்டது என்பதுதான் தமிழின் பழமைக்கும் வரலாற்றுக்கும் பொருத்தமானது'' எனக் கூறுகின்றார் ஆசிரியர். ''தமிழ் நாட்டுப் பிராமி எழுத்துக்களில் தமிழுக்கே தனிச்சிறப்பாக உள்ள ழ,ற,ள என்னும் எழுத்துக்களும் காணப்படுகின்றன. இந்தச் சிறப்பு எழுத்துக்களைப் பிராமி எழுத்து வருவதற்கு முன்னே தமிழகத்தில் வழங்கிவந்த பழைய தமிழ் எழுத்திலிருந்து எடுத்துப் பிராமி எழுத்துக்களோடு அமைத்துக் கொண்டனர் என்று தோன்றுகின்றது'' என்கிறார்.

பிராமி எழுத்துக்களின் காலத்தைக் கணக்கிடுவதிலுள்ள தவறான செய்திகளைச் சுட்டிக் காட்டுகின்றார். ''கி.மு. 3ஆம் நூற்றாண்டிலேயே பிராமி எழுத்து தமிழகம் வந்துவிட்டது. சாத்திரி கி.மு. முதல் நூற்றாண்டு என்று காலத்தைக் குறைத்துக் கூறுகிறார்'' என்றும், மேலும் ''தமிழ்நாட்டு வரலாற்றைப் பொறுத்தவரையில் பல தவறான கருத்துக்களை வெளியிட்ட திரு. நீலகண்ட சாஸ்திரி பிராமி எழுத்தைப் பற்றியும் தவறாகக் கூறியுள்ளார். அய்ரோப்பியத் தமிழறிஞராகிய டாக்டர் கமல் சுவலபில் அவர்கள் ''கி.மு. 200—100க்கு இடையில் பௌத்த—சைனத் துறவிகள் இருந்த இயற்கைக் குகைகளில் தமிழ்—பிராமி எழுத்துக்கள் எழுதப்பட்டன'' என்று (The Smile of Murugan Dr. Kamil Zvelabil 1973, P. 140) குறிப்பிடுகிறார்.

இக்கருத்தைக் கொண்டு,

''திரு நீலகண்ட சாஸ்திரியின் இந்தத் தவறானக் கருத்தை அய்ரோப்பியத் தமிழறிஞராகிய டாக்டர் கமல் சுவலபில் அவர்களும் ஆராயாமல் இவரைப் பின்பற்றுவது வியப்பாக இருக்கிறது. இந்த அறிஞர், சாத்திரி கூறிய தவறான கருத்தையே பொன் போலப் போற்றி எழுதியுள்ளார்'' எனச் சாடுகின்றார்.

தமிழகப் பிராமிக் கல்வெட்டுகள் பற்றிய ஆய்வில் போதிய அளவு நியாயமான முறையில் ஆய்வு முறைகள் அமையவில்லை. இதற்கு மொழிப்பற்று காரணம் என்பதை ''தமிழ் நாட்டிலுள்ள பிராமி எழுத்துக் கல்வெட்டுக்களை ஆராய்ந்து படித்துப் பொருள் காண்பவர் நடுநிலையுள்ளவராக இருக்கவேண்டும். அந்த எழுத்துக்கள் எழுதப்பட்ட காலத்துப் பழக்க வழக்கம் முதலியவற்றையும் அறிந்திருக்க வேண்டும். விருப்பு வெறுப்பு இல்லாமல்

உண்மை காணும் கருத்து உள்ளவராகவும் நேர்மையாளராகவும் இருக்கவேண்டும். எல்லாவற்றுக்கும் மேலாக வெறுப்புணர்வு உள்ளவராக இருத்தல் வேண்டும்'' எனக் கல்வெட்டாய்வு நிலையின் சூழலைத் தெளிவாகக் காட்டும் தன்மையைப் பாராட்ட வேண்டும்.

பிராமிக் கல்வெட்டுக்களுடன் பிராமி எழுத்துக்களைக் கொண்ட பழங்காசுகளை வைத்து ஆய்வு நிலையைக் கொடுக்கின்றார். 1967 இல் வடஆற்காடு மாவட்டத்துச் செய்யாறு தாலுகாவில் ஆண்டிப்பட்டி என்னும் ஊரில் பழங்காலப் புதையல் கிடைத்தது. இதனைக் கடைச்சங்க காலத்தில் அதாவது கி.பி. முதல் நூற்றாண்டில் வெளியிடப்பட்டது என்றும் கருதுகின்றார்.

சங்ககாலத்துப் பிராமிக் கல்வெட்டெழுத்துக்கள் என 18 கட்டுரைகளும் பின்னிணைப்பாக ஒரு கல்வெட்டையும் கொடுத்துள்ளார். இந்நூலில் காணப்பெறும் கல்வெட்டுச் செய்திகள்.

1. அரசலூர் பிராமி எழுத்துக்கள்
2. கொங்கர் புளியங்குளம் பிராமி எழுத்து
3. குன்னங்குடி (குன்றக்குடி) பிராமி எழுத்து
4. மாலகண்ட பிராமி எழுத்து
5. முத்துப்பட்டி பிராமி எழுத்துக்கள்
6. அழகர்மலைப் பிராமி எழுத்துக்கள்
7. ஆண்டிபட்டி பிராமி எழுத்து
8. விக்கிரம மங்கலம் பிராமிக் கல்வெட்டு
9. அரி்ட்டாபட்டி
10. ஆனைமலை பிராமி எழுத்து
11. கருங்காலக்குடி பிராமி எழுத்து
12. மேட்டுப்பட்டி (சித்தர்மலை)
13. கீழையவளவு பிராமி எழுத்து
14. மறுகால்தலை பிராமி எழுத்து
15. அரிக்கமேடு பிராமி எழுத்து
16. திருப்பரங்குன்றத்துப் பிராமி எழுத்து
17. புகழூர் பிராமி எழுத்து
18 அய்யர் பிராமி எழுத்துக்கள்
19. (பின்னிணைப்பு)
    ஔவைக்கு நெல்லிக்கனி ஈந்த
    அதிகமான் கல்வெட்டு

என பத்தொன்பது பிராமிக் கல்வெட்டுக்களைப் பற்றி ஆய்கின்றார்.

'தமிழ் எழுத்துக்களின் தோற்றமும் வளர்ச்சியும்'' என்னும் ஆய்வுக் கட்டுரையைக் கே.ஜி. கிருஷ்ணன் எழுதியுள்ளார். தமிழ் எழுத்தின் தோற்றமும் வளர்ச்சியும் என்பது பற்றிய இக்கட்டுரையில் தென்னாட்டுப் பழம்பெருங் கல்வெட்டுகளில் காணப்படும் எழுத்து வடிவங்களையும் வடநாட்டில் காணப்படும் கல்வெட்டு

களின் எழுத்து அமைப்பையும் ஆய்வு செய்கின்றார். தென்னாட்டில் உள்ள சில எழுத்துக்கள் வடநாட்டில் காணப்படுவதில்லை. பின்வருபவை வடநாட்டில் இல்லாதவை.

( ) -ன    ( ) -ற    ( ) -ல்

( ) -ழ்    ( ) -ம

தமிழ் நாட்டில் மாங்குளம், அரிட்டாபட்டி போன்ற இடங்களில் காணப்படும் எழுத்துக்களை ஆய்வு செய்கின்றார். தொல்காப்பியர் காலத்திய தமிழ் எழுத்துக்களின் அமைப்பையும் தொடர்புபடுத்திக் காட்டுகின்றார். தமிழ் எழுத்துக்களின் தோற்றத்தினையும் குடைவரைக் கோயிலில் காணப்படும் எழுத்துக்களின் தொடக்கத்தையும் ஒப்பிட்டுக் காட்டுகின்றார். அரிக்கமேட்டில் காணப்படும் மட்பாண்டங்களில் உள்ள எழுத்துக்களைக் கொண்டு எழுத்துக்களின் வளர்ச்சியினைக் காட்டுகின்றார். தமிழ் எழுத்தின் வளர்ச்சியைக் கால நோக்கிலும் ஆய்வு செய்கின்றார். தமிழ் எழுத்தின் தோற்ற காலத்தைக் காண முயலும்போது அசோகரின் பிராமிக் கல்வெட்டுக் காலத்தின் தோற்றத்தையும் காண முடிகின்றது என்பதைக் கூறுகின்றார்.

இந்தியத் துணைக் கண்டத்தின் மிகத்தொன்மையான எழுத்து வடிவங்களை, முதன்முதல் இந்த நாட்டில் வழங்கிய எழுத்து வடிவங்களைச் ''சிந்துவெளி எழுத்து வடிவங்கள்'' என்று தொல்லியல் அறிஞர்கள் சுட்டுகின்றனர். இங்குக் காணப்படுகின்ற எழுத்து வடிவங்களைப் பல அறிஞர்கள் ஆய்வு செய்து வருகின்றனர். அவற்றை ஆயந்தும் தொகுத்தும் கொடுக்கின்றார் டாக்டர் க.த. திருநாவுக்கரசு.

முதன் முதல் 1925-இல் இந்த எழுத்து வடிவத்தை ஆராய்ந்தவர் எல்.ஏ.வேடல் (L.A. Waddell) என்பவராவர். ''இவர் சுமேரிய எழுத்துகளுக்கும் சிந்துவெளி எழுத்து வடிவங்களுக்கும் இடையே ஒப்புமை இருப்பதாகக் கூறுகிறார். ஆனால் சுமேரிய எழுத்து வடிவங்களுக்கும் சிந்துவெளி எழுத்து வடிவங்களுக்கும் இடையே காணப்படும் பொதுமைப் பண்பு இரண்டு விழுக்காட்டு அளவினதேயாகும் என்பது அறிஞர் முடிவாகும்.

அட்டவணைப்படுத்தியதில் முதல்வர் என்னும் நிலையில் 1931-ஆம் ஆண்டு பிரான்நாத் (Prannath) என்பவர் சில நெறிமுறைகளைத் தெரிவித்தார். அங்கேரிய நாட்டு அறிஞர் எம் ஜி.டி. ஹெவசே (M.G. deHevesey) என்பவர் சிந்துவெளி எழுத்துக்களும் ஈஸ்டர் தீவு எழுத்துக்கும் தொடர்புடையதாக உள்ளன என்கிறார். 1934 ஆம் ஆண்டு கே.என். தீக்ஷித் (K.N.Dikshit) என்பவர் ''சிந்துவெளி எழுத்துக்கள் அய்யத்திற்கு இடமின்றித் தனிப்பட்ட நிலையில் இந்த நாட்டில் தோன்றி வளர்ந்த எழுத்தாகும்'' என்கிறார். இக்கருத்தை ஜி.ஆர். ஹன்டர் (G.R. Hunter) என்பவர் ஆய்வுசெய்த அக்கருத்திற்கு ஆதரவாகப் பல ஆதாரங்களைத் தந்தார். அதன் பின்னர் இந்த ஆய்வானாது ''திராவிடமொழி'யின் பக்கம் திரும்பியது. இதில் தனிப்பெருஞ் சிறப்பு வாய்ந்தவர் திருத்தந்தை ஹீராசுப் பாதிரியார் ஆவார். பழந்திராவிட மொழியின் எழுத்துக்களாக முதன்முதல் கண்டறிந்த பெருமை இவருக்கேயுரியதாகும்.

இந்தியத் தொல்பொருள்துறை ஆய்வு அறிஞர் சிகரபுர அரங்கநாதராவ் (S.R / Rao.) ''சிந்துவெளி நாகரிகத்திற்குரிய மக்கள் வேதகால ஆரியரின் மூதாதையர் என்னும் முடிவிற்கு வருவதே பொருத்தமாகத் தோன்றுகிறது,'' என்கிறார். இதனை திரு. ஐராவதம் மகாதேவன் மொழியியல், எழுத்தியல். பண்பாட்டியல் சான்றுகளைக் கொண்டு இவருடைய கருத்துகளை மறுத்துள்ளார். ''திரு. ராவின் முடிவுகள் வியப்புக் கலந்த அதிர்ச்சியூட்டுவனவாக உள்ளன. சிந்துவெளிக் குறியீடுகள் பயிலப்படும் நிகழ்வு நிலையைத் தற்சார்பற்ற முறையில் பகுத்தாராயாமல் செய்யப்பட்ட ஆய்வினால் வெளிப்பட்ட முடிவுகளாகவே இவை தோன்றுகின்றன'' மேலும் ''சிந்துவெளிக் குறியீடுகள் ஒலிவடிவ எழுத்துக்கள். அசைகளால் அமைந்தவை. அந்த எழுத்துக்களால் அறியப்படும் மொழி வேதமொழியோடு தொடர்புடையவை எனும் அவருடைய முடிவுகள் எதிர்கால ஆராய்ச்சிகளால் புலனாகக் கூடிய உண்மைகளுக்கு முன்னால் நிலைத்து நிற்க இயலாது எனக் குறிப்பிடுகின்றார்.

பொதுவாக ''சிந்துவெளி எழுத்துக்கள் திராவிட மொழித் தொடர்புடையவை எனும் கருத்தினைக் கடந்த பதினைந்து ஆண்டுகால ஆராய்ச்சியின் பயனாக பின்னிஷ் மொழியாளரும், ருஷிய நாட்டு அறிஞர்களும் தமிழ்நாட்டு அறிஞர் ஒருவரும் கண்டுள்ளனர். ''சிந்துவெளி எழுத்துக்கள் ஆரியருக்கு முற்பட்ட—

சமஸ்கிருத மொழியோடு தொடர்பு இல்லாத ஒரு மொழிக்கு உரியன'' என்னும் கருத்தினை பழந்திராவிட மொழிக்குரியவை என்று கருதும் நிலைக்கு வந்துள்ளனர். இதனை நிலைநாட்ட ஐரோப்பிய அறிஞர் சிலரும், தமிழ்நாட்டு அறிஞர் சிலரும் முயன்று வருவதைக் காணுகின்றோம் எனக் கட்டுரையாளர் ஆய்வு நிலை பற்றிய கட்டுரையைத் தருகின்றார்.

'வில்லியம் பிரைட்' எனும் ஆய்வாளர் சிந்துவெளி நாகரிகத்தின் எழுத்துவடிவங்களைக் கொண்டு திராவிடமொழி அமைப்பு வடிவில் உண்மைகாண விழைகிறார். திராவிட மொழியின் தொன்மையையும் சமஸ்கிருத மொழியின் தாக்கத்தையும் சுட்டிக் காட்டுகின்றார். மொழி, பண்பாடு இவற்றின் அமைப்பினையும் ஆழ்ந்து கூறுகின்றார்.

'தமிழ்நாட்டில் புதைபொருள் ஆராய்ச்சியின் அண்மைக் கண்டு பிடிப்புகள்' (An Outstanding Epigraphical Discovery in Tamil Nadu) எனும் கட்டுரையை டாக்டர் இரா. நாகசாமி அவர்கள் படைத்துள்ளார்.

அண்மையில் மன்னன் சேந்தன் கூற்றன் என்பவனைப் பற்றிய கல்வெட்டு பூலாங்குறிச்சியில் கண்டு பிடிக்கப்பட்டது. தூயதமிழில் 45 அடி நீளம் 6 அடி அகலமுள்ள பகுதியில் இது எழுதப் பட்டுள்ளது. இது கி.பி. 192 ஆம் ஆண்டு தைத்திங்கள் 30-ஆம் நாளில் எழுதப்பட்டது. மூன்று பகுதியில் கடைசி பகுதிமட்டும் தெளிவாக அறிய முடிகின்றது. இக்கல்வெட்டில் Devakulas, Brehmadayam, Tapatap எனும் பிரிவுகளும், தேவனாறு கோட்டம், செயக்கோட்டம், மதிரைக்கோட்டம், கொங்குநாடு, சின்னமனூர், கூடலூர்நாடு, வெண்பாண்டிநாடு, வேணாடு, முத்துருக்கூற்றம் போன்ற பகுதிகளையும் நல்லம்கிழான், இலங்குமான், மூலன், கொற்றன், கண்ணன், வெண்ணாட்டான், நரியன் அருகிழான், காரி முதலிய பெருமக்கள் பெயர்களும், நன்செய் புன்செய் பற்றிய செய்திகளும் பல அதிகாரிகளுடைய பெயர்களும் இதில் காணப்படுகின்றன. இக்கல்வெட்டு கி.பி 1912 இல் எழுதப் பட்டது. இது பல்லவமன்னன் சிம்மவர்மன் காலத்தை ஒட்டியது. இது கி.பி. 78 இல் தொடங்கிய சகயுகத்தில் எழுதப்பட்டது. பூலாங்குறிச்சிக் கல்வெட்டில் காணப்படும் ஆண்டே தமிழ் நாட்டின் காலக்கோடாக அமைகிறது. இக்கல்வெட்டில் பக்கம், 'தை' போன்ற சொற்கள் கையாளப்பட்டுள்ளன என்று ஆய்ந்து கூறுகின்றார்.

பூலாங்குறிச்சியில் குறிப்பிடப்பட்டுள்ள 192 ஆம் ஆண்டு கி.பி. 270(சகயுகமாயிருக்கும்) எனவே கி.பி. மூன்றாம் நூற்றாண்டு இருள்மயமான காலம் அல்ல அது தெளிவான காலம் என்பது புலனாகிறது. அக்காலத்தில் மக்கள் வாழும் பகுதிகள் பல பிரிவு களாகப் பிரிக்கப்பட்டன. பற்பல பிரிவுகள் பற்பல அதிகாரிகளால், ஆளப்பட்டன. அதிகாரிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர். மேலும் இக்கல்வெட்டிலிருந்து இராணுவ அதிகாரிகள் வாழ்ந்ததை அறிய முடிகின்றது.

"சிந்துவெளிச் சின்னங்கள் கொத்துப் பகுப்பு ஆய்வு" என்னும் கட்டுரை டாக்டர் கிப்ட்சிரோமணி, அப்துல்ஹக் என்பவரால் கொடுக்கப்பட்டது. சிந்துவெளியில் கிடைக்கப்பெற்ற எழுத்து வடிவங்களைப் பலர் பலவழிகளில் ஆய்வு செய்து வருகின்றனர். சிந்துவெளி நாகரிகம் கி.பி. 2500 முதல் கி. மு.1500 ஆம் ஆண்டுக் கும் உட்பட்ட காலத்தில் மிகவும் தழைத்தோங்கியது. சிந்துவெளி மக்கள் பேசிய மொழி நமக்கு தெரியவில்லை. ஆனால், அவர்கள் எழுத்துக் கலையை நன்கறிந்தும் அதனைப் பயன்படுத்தியவர்கள் என்பதும் தெளிவு. அவர்களது எழுத்து வடிவங்களை நாம் இனம் காண இயவில்லை. இருப்பினும் தற்கால ஆய்வு முறையில் ஒரு தெளிவானமுடிவைக் காணஇயலும் என்ற நம்பிக்கை அதிகரித்து வருகின்றது. சிந்துவெளி எழுத்து வடிவங்களைக் கணக்கிடும் இயந் திரம் மூலம் கண்டறியப் பலர்முயன்றுள்ளனர். பொதுவாக கணக் கிடும் இயந்திரங்களின் உதவியால் படித்த போது சிந்துவெளிச் சின்னங்கள் பண்டை மொழி ஒன்றில் எழுதப்பட்ட வாசகங்களைக் குறிக்கின்றன என்றும் அது திராவிடமொழியின் தொடக்க கால வடிவு என்றும் அறிகிறோம் என்பதைச் சுட்டிக் காட்டுகின்றார் கட்டுரையாளர்.

"After Careful study with the use of Computers a great many scholars have agreed that the signs represent writings in an ancient language and that the language was an early form of Dravidian

ஐராவதம் மகாதேவனுடைய நூலின் வழியே ஆய்வு மேற் கொள்ளப்படுகின்றது இவர் கொடுத்துள்ள சிந்துவெளி எழுத் தோவியத்தில் சுமார் 5) முறை காணப்படும் ஒரு பொது அடை யாளத்தை எடுத்து ஆய்வு செய்கின்றார். ஒவ்வொரு இணைச் சின்னங்களுக்கும் இடையே இடைவெளி விட்டு அதன் அடிப் படையில் தோன்றும் சின்னங்களின் 67 கணங்களை 7 கொத்தாகப் பிரித்து ஆய்வு செய்கின்றார். ஒவ்வொரு சின்னமும் ஒருபொருளை

அல்லது ஓர் இயல்பைக் குறிக்கலாம். திரு மகாதேவன் சொல்வது போல் ஒரு சின்னம் ஒரு கருத்தை வெளியிடுகிறது எனலாம் என்கிறார் கட்டுரையாளர்.

''இடைக் காலத்தியத் தமிழ்க் கல்வெட்டுக்களின் காலத்தை கணக்கிடும் கம்ப்யூட்டர் முறை'' என்னும் ஆய்வை டாக்டர் கிப்ட் சிரோமணி எம். சந்திரசேகரன் ஆகியோர் மேற்கொண்டனர். தெளிவுபடுத்தப்படாத கல்வெட்டு சம்பந்தப்பட்டச் சிக்கல்களைத் தெளிவுபடுத்தி எளிய முறையாக இக்கம்ப்யூட்டர் முறை உள்ளது என்கின்றனர். கி பி. 900க்கும் கி. பி. 1500க்கு இடைப்பட்ட காலத்தைச் சேர்ந்த சில தமிழ்க் கல்வெட்டுகளின் துணையுடன் காலச் சான்றுகளேயில்லாத சில கல்வெட்டுக்களின் காலத்தைக் கணிக்க இந்த கம்ப்யூட்டர் மிகவும் உதவியாக இருக்கும் என்கிறார். இதில் காலத்தைக் கணிப்பதற்குத் தேவையான மெய்க்கீர்த்திகள் போன்ற அடிப்படைச் சான்றுகளில்லாத கல்வெட்டுகளின் காலத்தையும், மற்றும் 'இராசகேசரி' 'கோணரின்மை கொண்டான்' போன்ற பட்டப் பெயர்களை மட்டுமே கொண்ட கல்வெட்டுக்களின் காலத்தையும் சமகாலத்தைச் சேர்ந்தவையாக இருந்தும் மாறுபட்ட அம்சங்களைக் கொண்ட கல்வெட்டுகளின் காலத்தைக் கணித்து எளிதில் ஆய்வு செய்திடவும் இந்த கம்ப்யூட்டர் பயன்படுவதை விளக்குகின்றார். சென்னைக்கு அருகேயுள்ள பெருங்களத்தூரில் கிடைத்துள்ள கல்வெட்டுக்களை கம்ப்யூட்ட்ர் முறையில் அவைகள் மூவரில் எந்த இராசராசன் காலத்தைச் சார்ந்தது என்பதை தெளிவாக கண்டு பிடிக்கப்பட்டுள்ளது. இதில் மெய்கீர்த்தியை அடிப்படையாகக் கொண்டு (1) நேரிடையாக ஒப்பு நோக்கும் முறை என்றும் (2) மதிப்பெண் கணக்கீட்டு ஒப்பு நோக்கும் முறை என்றும் இரண்டு முறைகளில் தஞ்சாவூர் திருக்கச்சூரில் கிடைத்த கல்வெட்டின் காலத்தையும் கணித்துள்ளனர் என்பது குறிப்பிடத் தக்கது.

''குடுமியான் மலைக் இசைக் கல்வெட்டுகள்'' என்னும் இசை பற்றிய கல்வெட்டுச் செய்திகளை ஆர். சத்தியநாராயிணா என்பவர் எழுதியுள்ளார். உலகிலேயே மிகப் பழமையான இசைக் கல்வெட்டு குடுமியான் மலையில் காணப்படும் கல்வெட்டாகும் என்பது கட்டுரையாளர் கணிப்பாகும். வடமொழியில் கிரந்த எழுத்துக்களில் 38 வரிகளைக் கொண்டமைந்த குடுமியான் மலைக் கல்வெட்டில் ஏழுபண்கள் அமைந்துள்ளன. இக்கல்வெட்

டானது மகேந்திரவர்மன் காலத்திய கல்வெட்டாகும். மேலும் இங்கு மாறவர்மன் சுந்தரபாண்டியன் கல்வெட்டும் உள்ளது. பாண்டியனுடைய கல்வெட்டில் ஆய்ந்து ராகங்களை நாடக இயல்பிற்கேற்ப வழங்குகிறது. இருப்பினும் இக்கல்வெட்டானது பாண்டியர் காலத்ததா அல்லது பல்லவர்களுக்கே உரிய கல்வெட்டா என்பது பற்றி பல கருத்து இருப்பினும் கட்டுரை யாளர் பா ண்டியர்க்குரியது என்று ஆய்வுரை தருகின்றார்.

சோழர் ஆட்சி இறுதியில் காவிரிச் சமவெளியில் புதிய நிலவு டைமை முறையின் வளர்ச்சி'' என்னும் ஆய்வுக் கட்டுரை 'நொபொரு கர்சோஷிமா' என்பவரால் எழுதப்பட்டது. இக் கட்டுரை கல்வெட்டுக்களின் துணை கொண்டு உடையார். கிழவன், ஆள்வான் ஆகியோர் நிலவுடைமை உரிமை பெற்றிருந் ததையும் அரசு மூலம் ஏலம் விடப்பட்ட நிலங்கள் வழங்கப்பட்ட செய்திகளையும் கூறுகின்றது. இக்கட்டுரையில் நில உடைமை யாளர்கள் படிப்படியாகக் கிராம ஆட்சி அமைப்பிலும் கோயில் களது நிர்வாகத்திலும் முக்கிய இடம்பெற்ற நிலையையும் எடுத் துரைக்கின்றது.

திரு. ஏ தேவராசன் ''பண்டைய இலங்கையில் தமிழர்கள் சில கல்வெட்டுச் சான்றுகள்'' எனும் கட்டுரையை எழுதியுள்ளார். இதில் இலங்கையில் கிடைக்கப் பெற்ற சில கல்வெட்டுக்களை ஆய்வு செய்கிறார். கிறித்து பிறப்பதற்கு முன்பு பொறிக்கப்பட்ட அறுபது கல்வெட்டுகள் இலங்கையில் கிடைத்துள்ளன. இங்கு கிடைக்கப்பெற்ற கல்வெட்டுக்களில் பெயர்கள் தமிழர் பெயர்களை யும், தமிழ்ச் சொற்களையும் ஆய்வு செய்யத் தூண்டுகின்றன. தத்தா, தத்தை எனும் கல்வெட்டுப் பெயர்களை ஆய்வு செய்கின்றார். தத்தா தத்தை எனும் தமிழ்ச் சொற்களுக்குக் 'கிளி' என்பது பொருள். மகளிரின் பெயர் 'தத்தா' என முடிவது இலங்கையில் இயல்பு எனக் கூறுகின்றார். எடுத்துக்காட்டாக ''வர்ணதத்தர் என்னும் கல்வெட்டு 'வண்ணக்கிளி' எனப் பொருள் கொள்ளலாம் என்கிறார். வேலன், வேலு, மருமகன், பெருமகன், பெருமகள், நிலையம், குடும்பிகன் போன்ற தமிழ்ச் சொற்களும் கல்வெட்டுகளில் காணப்படுகின்றனவாம். பழங்காலத்தில் தாய் வழி சமூக அமைப்பில் தமிழர்களிடையே ஒரு பெண் பலரைக் கணவராக ஏற்கும் வழக்கம் இருந்தது என்பதற்குக் கல்வெட்டுச் சான்றுகள் உள்ளன. மேலும் இலங்கைத் தமிழர்கள் தொல் பழங் காலத்தில் சேரர் குடியினராக இருந்து சமூகத்தில் சிறந்து விளங்கி யிருக்க வேண்டும் என்கிறார் கட்டுரையாளர்,

'சிந்துவெளி பற்றிய எழுத்துக்கள்' என்னும் கட்டுரை திரு. ஐராவதம் மகாதேவனால் எழுதப்பட்டது. சிந்துவெளி எழுத்து வடிவங்களுக்கும் பொருள் காணும் வேலையில் பலநாட்டு அறிஞர்கள் ஈடுபடுகின்றனர். பல்வேறுபட்ட கருத்துக்கள் இடம் பெறுகின்றன. இருப்பினும் இன்றைய ஆய்வு நிலையில் 'திராவிட மொழி' அமைப்பை நோக்கி வந்த வண்ணம் உள்ளது. பொதுவாக சிந்துவெளி எழுத்துக்கள் இது காலம் வரை சரிவரப் படிக்கப்பட வில்லை இருப்பினும் அவை திராவிட மொழிக்கே உரிய எழுத்துக் களே.

"There are several Conveying lines of evidence to indicate that the language of the Indus script is probably Dravidian"

எழுத்து வடிவங்களின் உண்மையை அறிய கம்ப்யூட்டர் மூலம் செய்த ஆய்வின் விளைவாகச் சில உண்மைகள் கண்டுணர முடிகின்றது. இக்கட்டுரை சித்திரக் குறியீடுகள் அமைப்பைக் கொண்டு ஆய்வு செய்யப்படுகிறது.

"அதியமான் நெடுமான் அஞ்சியின் கல்வெட்டுக் கண்டு பிடிப்பு" (தமிழரசு இதழ் 16-11-1981) என்னும் செய்தித் தொகுப்பு கொடுக்கப்பட்டுள்ளது. தொல் பொருள் ஆய்வுத் துறையினர்.

"ஸதியபுதோ அதியந் நெடுமான்
அஞ்சி ஈத்த பாளி"

எனும் வரலாற்றுச் சிறப்புடைய கல்வெட்டு ஒன்றைக் கண்டு பிடித்துள்ளனர். இக்கல்வெட்டு கி. பி. முதல் நூற்றாண்டுத் தமிழ் எழுத்துக்களில் உள்ளது. மௌரியப் பேரரசன் அசோகன் தனது கல்வெட்டில் சோழரையும், பாண்டியரையும் கேரளரையும் ஸத்ய புத்ரரையும் குறிக்கின்றான்.

தென்னார்காடு மாவட்டம் ஜம்பை எனும் ஊரில் இக்கல் வெட்டு கிடைக்கப் பெற்றது. இக்கல்வெட்டுக்கருகில் பராந்தக சோழனுடைய கல்வெட்டு ஒன்று உள்ளது. கி பி 947-ஆம் ஆண்டில் கல்வெட்டில் சிவஞான செம்மல் செம்பியன் மாதேவி யின் கணவர் கண்டராதித்த சோழருக்கு கம்மலை மேல் அதீத கரம் (சமாதிக் கோயில்) எடுக்கப்பட்டது என்று இக்கல்வெட்டுக் கூறுகின்றது.

கண்டராதித்த சோழனுக்கு மேற்கு எழுந்தருளின தேவர் என்ற பட்டப் பெயர் உண்டு. இது காறும் அவர் எங்கு இறந்தார் என்பது தெரியவில்லை. இக்கல்வெட்டின் மூலம் அவர் ஐம்பையில் இறந்தார் என்பது தெரிகிறது. இவ்வூரில் கோட்டைமேடு என்ற பகுதி ஒன்று உள்ளது. பல சோழர்காலப் பொருள்கள் கிடைக்கின்றன. சோழர்கால கோட்டை அமைப்பாகத் தென்படுகிறது. முதலாம் இராச இராச சோழன் காலத்தில் நித்த விநோதபுரம் என்று இவ்வூர் அழைக்கப்பட்டது 11-ஆம் நூற்றாண்டின் மத்தியில் வீர இராஜேந்திரபுரம் என அழைக்கப்பட்டது. இதிலிருந்து சோழர்கள் அப்பயிர் ஐம்பை ஒரு 'எல்லை' பாதுகாப்பு இடமாக இருந்திருக்கிறது எனத் தெரிகிறது. இங்கு பண்டைய எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட பானை ஓடுகள் கிடைத்துள்ளன.'' என டாக்டர் இரா. நாகசாமி கூறுகின்றார்.

பேராசிரியர் இரா. மதிவாணன் ''அதியமான் சத்திய புத்திரனா?'' எனும் கட்டுரையைத் தந்துள்ளார். அசோகன் கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்ட 'சத்திய புத்திரன், என்னுஞ் சொல்லாட்சியைத் தாங்கிய அதிகமானின் கல்வெட்டு, அண்மையில் திருவண்ணாமலைக்கருகில் 'ஐம்பை' என்னுமிடத்தில் கிடைத்திருப்பதாகத் தமிழகத் தொல்பொருளாய்வுத் துறை இயக்குநர் தினமணி நாளிதழில் கட்டுரை எழுதியுள்ளார். அக்கட்டுரை பற்றிய மறு கட்டுரையாக திரு. இரா. மதிவாணன் எழுதியுள்ளார்.

''சத்ய புதோ அதியமான் நெடுமான் அஞ்சி
ஈத்த பாலி'' என்றும்,

இரு பாட வேறுபாடுகளுடன் ஐம்பைக் கல்வெட்டு படிக்கப்பட்டுள்ளது என்று முன்னதே சற்றுப் பொருத்தமானதாக இருக்கலாம் எனக் கட்டுரையாளர் கருதுகின்றார். டாக்டர் நாகசாமியின் கருத்தை மறுக்கும் முறையில் ''உண்மையான தமிழ்ப்புலமை சான்ற பெருமக்களனைவரும் தொல்காப்பியர் காலந்தொட்டே

''வடசொற் கிளவி வடவெழுத் தொரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லாகும்மே.''

என்னும் தமிழ் மரபைப் பேணி வந்துள்ளனர் என்றும், தமிழ் மரபிலக்கணம் பயிலாக் கல்வி குறைபாடு மூவேந்தராட்சி நிலை குலைந்த களப்பிரர்காலம் தொட்டே கால் கொண்டது. சத்ய புதோ போன்ற சொல்லாட்சிகள் களப்பிரர் காலத்திற்குப் பிற்

பட்டதாக இருக்கவேண்டும். எக்காரணத்தை முன்னிட்டும் இத்தகு சொல்லாட்சிகள் கல்வெட்டில் இடம் பெறுவதைக் காலத்தால் முற்படுத்துவது அறவே பொருந்தாது என்கிறார்.

அசோகன் கி.மு. மூன்றாம் நூற்றாண்டினன்; அவனுக்கு முன்பும் அதியமான்களின் மரபிருந்தது. அதியர் உதியர், பொறையர் என்போர் சேரக் கிளை மரபினர் எனச் சுட்டிக் காட்டுகின்றார். மேலும் சத்ய புத்ய அதிகமான் என்னும் கல்வெட்டுத் தொடரில் உள்ள புத்த (பத்ர) என்னும் சொல் மதிப்புரவு குறித்த வேற்றுமொழி என்பதற்கு மேலும் சான்றுகள் உள்ளன என்பதையும் கூறி விளக்குகின்றார்.

டாக்டர் கே.வி. இராமன், "வரலாற்றுக் காலத்திற்கும் முற்பட்ட மக்களுடைய நாகரிகம், பண்பாடு, பயன்படுத்திய கருவிகள், பொருளாதாரம், கலை, வாழ்க்கை பற்றித்தமிழ்நாட்டில் கிடைத்துள்ள சான்றுகள்" என்னும் கட்டுரையைத் தருகின்றார். தற்காலத்தின் பிற்பகுதியில்-கி.மு. 1725க்கும் முன்பு வாழ்ந்த மக்களின் படைப்புச் சான்றுகள் வாணியம்பாடி அருகில் பைனம் பள்ளியிலும், தர்மபுரி மாவட்டத்தில் மல்லபாடி என்ற இடத்திலும் கிடைத்துள்ளன. அங்குள்ள பாறைக் குகைகளும், அவற்றிலுள்ள சித்திரங்களும் அம்மக்களுடைய வாழ்க்கை முறை, உணவு முறை, விலங்கினம், பயன்படுத்திய விலங்கினங்கள் போன்றவற்றை அறிய முடிகின்றது. இவர்களுடைய சித்திரங்களில் குதிரை இடம் பெற்றுள்ளது. டி. கல்லுப்பட்டிக்கு அருகில் கண்டுபிடிக்கப்பட்ட சாம்பற் குவியல்களிலிருந்து அவர்கள் சொக்கப்பனை எரிக்கும் பழக்கம் உடையவர்களாக இருத்தல் வேண்டும். இங்கு கையாலும் கருவியாலும் செய்யப்பட்ட வெளிர்நிறப் பாண்டங்களைப் பயன்படுத்தினர் என்றும் தெரியவருகின்றது. இத்தகையச் சான்றுகள் கர்னாடகத்தில் கிடைக்கப் பெற்ற சான்றுகளை ஒத்திருக்கின்றன எனக் கட்டுரையில் ஆய்வு செய்துள்ளார்.

"அகழ்வாய்வில் கோவலன் பொட்டல்" எனும் கட்டுரை மா. சுந்திரமூர்த்தி என்பவரால் எழுதப்பட்டது. மதுரை அருகில் மாடக்குளம் கிராமத்தைச் சார்ந்த பழங்காநத்தம் என்னும் ஊரில் கோவலன் பொட்டல் அமைந்துள்ளது. இப்பகுதியில்தான் சிலப்பதிகாரத் தலைவன் கொலையுண்டதாகச் செவிவழிச் செய்தி நிலவுகிறது. இதற்கு ஆதாரமாக இங்கே கோவலன் வெட்டுப் பாறை என்னும் ஒரு பெருங் கல்லுக்குக் கோயில் எடுத்து வழிபட்டு வருகின்றனர். இங்கு கிடைத்த தாழிகளுள் ஒன்று திறந்து

ஆய்வு செய்யப்பட்டது. அத்தாழியின் உள்ளே மண்டை ஓடு, கை கால்கள் ஆகிய மானிட எழும்புகளும் 8 மட்பாண்டங்களும் கண் டறியப்பட்டன. இவ்வெலும்புக் கூடுகள் 2000 ஆண்டு களுக்கு முற்பட்டதாகும். கருப்பு, சிவப்பு நிற மட்பாண்டங்கள் பலவகையான அமைப்புகளிலும் கிடைக்கப் பெற்றன. கழுத்தணி மணிகள், விரல் அணிகள், சங்கு வளை போன்றவை கிடைக்கப் பெற்றன. மேலும் 'தமிழ்' எழுத்துப் பொறிக்கப் பெற்ற பானை ஓடு ஒன்றும் கிடைத்துள்ளது. 'அ,த' என்ற எழுத்துக்களே உள் ளன. ''ஒரு வேளை இக்காலப் பாத்திரத்தில் முன்னெழுத்து பொறிப்பது போன்ற வழக்கத்தைப் போல அவற்றைக் கொள்ள லாம்'' என்கிறார் கட்டுரையாளர்.

நொய்யல்வெளி நாகரிகத்தை தமிழகத்திற்கு அறிமுகப்படுத் தியவர் செ. இராசு ஆவர். 'நெடும் புகழ்க் கொடுமணம்' என்னும் கட்டுரையில் கொடுமணலின் பழந்தொன்மையைக் காட்டியுள் ளார். பழங்காலத்தில் ஆற்றங்கரைகளில் தான் பண்டைய ஊர் கள் அமைந்திருந்தன. கொங்கு நாட்டில் தோன்றிக் கொங்கு நாட்டிலேயே ஓடிக் கொங்கு நாட்டுக்குள்ளேயே காவிரியாற்று டன் கலக்கும், ஒரு சிற்றாறுதான் 'நொய்யில்' இன்று நொய்யல் என்ற பெயரைப் பெற்றிருந்தாலும், சங்க இலக்கியத்திலும், பழம் பாடல்களிலும் இந்த ஆறு காஞ்சி என்ற பெயரையே பெற்று விளங்கி வந்துள்ளது. இக்கரையின் இரு புறத்திலும் 18 கோயில் களைக் கொண்டுள்ளது. புகழூர் அருகே உள்ள ஆறுநாட்டார் மலையில் கிடைத்த

''மூதா அமண்ணன் யாற்றூர் செங்காயபன் உறைய்
கோ ஆதன் செல்விடம் பொறை மகன்
பெருங் கடுங்கோன் மகன் இளங்
கடுங்கோ இளங்கோ ஆக அறுத்தகல்''

எனும்கல்வெட்டிலுள்ள மூன்று சேர அரசர்களையும் எடுத்துரைக் கின்றார். பண்பாட்டுத் தொடர்புடைய பல செய்திகளும் அக் கட்டுரையில் உள்ளது.

''கி.மு. 4—ஆம் நூற்றாண்டு முதலே ரோம் நாட்டினர், கிரேக்கர், யூதர், அராபியர் முதலிய தரகர் மூலம் தமிழ்நாட் டோடு வாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர். மிளகு, ஏலக் காய், தந்தம் முதலிய மலைபடு பொருட்களாகவும், முத்து முதலிய கடல்படு பொருட்களாகவும் தமிழகத்திற்கு நேரில் வந்த ரோமானியரைக் கொங்கு நாட்டு நீலம், பச்சை, சிவப்பு,

படிகம் முதலிய பல வண்ணக் கற்கள் கவர்ந்தன'' என்கிறார் தமிழகக் கல்வெட்டு ஆய்வாளர் புலவர் செ. இராசு கொடு மணல் பகுதியில் ரோமாணியக் காசுகள், கொடுமணலில் கிடைக்கும் மணிகள், சங்கு வளையல்கள், மோதிரம், காதணி போன்றவைகள் பற்றிய செய்திகளையும் கொண்ட ஆய்வில் இலக்கியங்களும் கல் வெட்டுகளும் எனும் பகுதியில் கொடுமணத்தைப் பற்றிய இலக் கியச் செய்திகளையும், கல்வெட்டுகளையும் கொடுக்கின்றார்.

''தஞ்சையில் சோழர் காலக் கட்டடம்'' கண்டுபிடிக்கப் பட்டது. தஞ்சாவூர் சோழர்களுடைய தலைநகர் 1981-ஆம் ஆண்டில் புதிய பல கண்டுபிடிப்புகள் தமிழகத் தொல் பொருள் ஆய்வின் மூலம் கிடைக்கப் பெற்றது. தஞ்சாவூர் பிரகதீஸ்வர் கோயிலுக்கு வடமேற்கே 1½ கி.மீ. தொலைவில் ''கறும்பன் மேடு'' என்ற ஒரு மேடு உள்ளது. அம்மேட்டின் ஒரு பகுதில்யி ஆறு அடிக்குக் கீழ் செங்கல்லால் ஆன கட்டடப் பகுதி வெளிக் கொணரப்பட்டது. இக்கட்டடம் 15 அடி நீளமும் 1½ அடி அகல மும் உடையது. இங்கு கிடைத்த பானை ஓடுகள் கங்கை கொண்ட சோழபுரத்தில் கிடைக்கப் பெற்ற பானை ஓடுகள் போன்றே உள்ளது எனத் தொல்பொருள் ஆய்வுத்துறையினரால் கொடுக்கப்பட்டுள்ளது.

'கர்நாடகத்தில் சோழர் ஆட்சியில் சில கூறுகள்'' எனும் கட்டுரையில், டாக்டர் ஜி. குப்புராம், கர்நாடகத்தில் சோழர் கல் வெட்டுகள், கோயில்கள் பற்றிய ஆய்வை கொடுத்துள்ளார். கர்நாடகத்தின் பலபாகங்களைச் சோழர்கள் கைப்பற்றினர். தமிழிலும் கன்னடத்திலும் சோழர் காலக் கல்வெட்டுகள் வடிக்கப் பட்டுள்ளன. கல்வெட்டுகளுள் இவ்வாறு 40 விழுக்காடு காணப் படுகின்றன. தலைக்காடு, குளிசல், தும்கூர் போன்றவை சோழப் பேரரசின் தலை நகரங்களாகத் திகழ்ந்தவை. சுமார் 14 கோயில் களை அமைத்துள்ளனர். இதன் வழி ஆய்வு செய்யுமிடத்து சோழர்கள் ஆதிக்கத்தை அறிய முடிகின்றது என்பதைக் கட்டுரையாளர் குறிப்பிடுகின்றார்.

தமிழகத்துக் கோயில்களின் அமைப்புகளை விளக்கும் வண்ணம் ''தமிழகக் கோயில்களில் அனுபூதிக் குறியீடு'' என்னும் இக்கட்டுரை கோயிலின் கண் பொழிந்துள்ள பல்வேறு மெய்ஞ் ஞானக் கருத்துக்களை எடுத்துக் காட்டுகின்றது. கருவறைகள் அமைக்கப்பட்ட முறையை எடுத்துக் காட்டி விளக்குகின்றார். இறைவனோடு இரண்டறக் கலப்பதாகிய அனுபூதி நிலையை

நம்முன்னோர்கள் கோயில்களிலே குறியீடுகளால் உணர்த்தியுள்ளதை இக்கட்டுரை வாயிலாக எஸ் சீனிவாசன் எடுத்துரைக்கின்றார்.

திராவிடக் கலலயின் தாக்கத்தை கிழக்காசிய நாடுகளில் காண முடிகின்றது. கம்போடியாவில் அமைந்துள்ள கோயில்களில் காணப்படும் சிற்பக் கலைகளுக்கும் தமிழகக் கோயில்களில் அமைந்துள்ள சிற்ப வடிவமைப்புகளுக்கும் நிறைய ஒற்றுமைகள் உள்ளன என்பதை ''கம்போடியாவின் அங்கோர் நினைவுச் சின்னங்கள்'' எனும் கட்டுரையில் விளக்குகின்றார் திருமதி கோமளா வரதன் இது 5-ஆம் நூற்றாண்டில் ஜெயவர்மனால் கட்டப்பட்ட விஷ்ணுவினுடைய கோயிலாகும் என்றும், மேலும் பல்லவர்களின் சிற்பக் கலையோடு நெருங்கிய கலை ஒற்றுமையுடைய தொடர்பு காணப்படுகின்றது என்றும் எடுத்துரைக்கின்றார். இங்கு காணப்படும் நாட்டிய முத்திரைகள் போன்று தமிழகத்திலுள்ள சிதம்பரம் கோயிலில் காண முடிகின்றது. பண்பாட்டுத் தாக்கத்தையும் நாம் காண முடிகின்றது என்கிறார் கட்டுரையாளர்,

தமிழகத்தின் கோயில் அமைப்பையும் அதன் பயன்பாட்டு முறை அமைப்பையும் ''கலைக் கோயில்கள் பண்பாட்டுக் கருவூலங்கள்'' எனும் கட்டுரையில் விளக்குகின்றார். ''பிரித்தானிய ஆங்கிலக் கலைக் களஞ்சியத்தில் 'கோயில் கட்டும்' பெருங்கலைத் திறம் வாய்ந்தவர் தமிழர்' என்று தமிழினத்தைப் பற்றிக் குறித்திருப்பது நமக்குப் பெருமை தருவதாகும். மேலை நாட்டார் வியந்து போற்றும் கிரேக்கக் கலை வெறும் பொருள் நிலையில் மட்டும் நிற்பது; தமிழ் நாட்டின் சிற்பக் கலையும் கட்டடக் கலையும் அந்த நிலையினும் மிக உயர்ந்தது; ஆன்ம நிலையின் அடிப்படையில் எழுந்தது என்று அவர்களே போற்றுகிறார்கள்'' எனக் குறிப்பிடுகிறார். மேலும், ''நம் தமிழ் நாட்டில் பழங்காலத்தில் கோயில்களே கல்வி நிலையங்களாகவும் விளங்கின; கலை வளர்க்கும் கழகங்களாகத் திகழ்ந்தன; ஏழை எளியவர்களை உணவளித்துப் பாதுகாக்கும் அறச்சாலைகளாக அமைந்திருந்தன; மருத்துவ மனைகளாகப் பணிபுரிந்தன, தொழில் தரும் நிறுவனங்களாகத் தொண்டாற்றின. பொதுமக்களுக்குப் பொருள் கொடுத்தும் வாங்கியும் உதவிபுரியும் நிதி நிலையங்களாக இயங்கின என்னும் உண்மைகளை நாம் நன்கு உணரலாம் என்கிறார் கட்டுரையாளர்.

"தமிழகத் திருக்கோயில்கள்" எனும் கட்டுரையை ந. ரா. முருகவேள் தருகின்றார். தமிழகத்தில், நூற்றுக்கணக்கான சைவ, வைணவத் தலங்களும், கோயில்களும் நிறைந்து விளங்கு கின்றன என்பதைக் கூறும் வண்ணம் கட்டுரையைத் தருகின்றார். பண்டைய கோயில்கள் என பெருங்கோயில், இளங்கோயில் மணிக் கோயில், ஆலக்கோயில், மாடக்கோயில், தூங்கானை மாடக்கோயில் பற்றியும், பஞ்சபூதத்தலங்கள். அட்ட விரட்டத் தலங்கள், சப்த விடங்குத் தலங்கள், சித்தர்கள் வாழும் தலங்கள், கல்வெட்டுக்கள் வரலாற்றுச் சிறப்புகள் என்பனவற்றையும் கூறியுள்ளார். 'அயலவர் ஈடுபாடு' எனும் பகுதியில் "ஆட்சன் (Hondgson) என்ற ஆங்கி லேயர் காஞ்சிபுரம் திருவேகம்பர் கோயில் மதிலைச் செப்பனிட் டார்; யோனார்ப் பிளேசு (Leondard Place) என்னும் அயலார் மதுராந்தகம் பெருமாள் கோயிலுக்குத் திருப்பணி செய்தார்; வில்லியம்கரோ (William Garrow) என்பவர் பவானி சங்கமேசு வரர் கோயில் தேவநாயகி அம்பிகைக்குத் தந்தத்தால் செய்த ஊஞ்சல் ஒன்றை வழங்கி மகிழ்ந்தார்; மதுரைக் கோயில் மீனாட்சி யம்மைக்கு ரூஸ்பீட்டர் (Rous Peter) என்னும் வெள்ளையர் தங்கத்தேர் செய்து மணிகள் பதிப்பித்த அங்கவடிகளை (Stirrups) அளித்திருக்கின்றார். கிழக்கிந்தியர் கம்பெனியைச் சேர்ந்த இராபர்ட் கிளைவ் (Robert Clive) நவரத்தின மாலை ஒன்றைக் காஞ்சிபுரம் வரதராசப் பெருமாள் கோயிலுக்குக் கொடுத்துள்ளார். உலகபுகழ்ப் பெற்ற சாமர் செட்மாம் (Somerset Maugham) என்னும் புதினநூல் ஆசிரியர், தாம் மதுரைக் கோயிலைக் கண்டு வியந்து விம்மித முற்றதாகத் தம் நூலில் குறிப்பிட்டுள்ளார். இத்தகைய செய்திகளால் தமிழகக் கோயில்களின் சிறப்பும் பெருமையும் புலனாகும்" எனக் குறிப்பிட்டுக் கட்டுரையைத் தந்துள்ளார்.

சேரன் செங்குட்டுவன் கட்டுவித்த கண்ணகி கோயில் கூடலூர் மங்கலதேவி கோட்டம்தான் என்பதை உறுதிப்படுத்தும் விதத்தில் "மங்கலதேவி கோயில்—ஓர் ஆய்வு" என்னும் கட்டுரையை, இராஜ். பவுன்துரை கொடுத்துள்ளார். மங்கல தேவி கோயில் மதுரை மாவட்டம், உத்தமபாளையம் தாலுகா, கூடலூர் எனும் ஊரின் மலைத்தொடரின் மேல் அமைந்துள்ளது. கூடலூர் கூடலழகர் கோயிலில் ஒரு கல்வெட்டு காணப்படு கின்றது. அதில் "மங்கலதேவியம்மன் பூசைக்குவிட்ட நிலம் 15 குழியும்" எனக் குறிப்பிடப்படுகின்றது. இக்கல் வெட்டானது கி. பி. 1534ஆம் ஆண்டினைச் சார்ந்தது. மங்கலதேவியம்மன்

கோட்டத்தில் காணப்படும் கல்வெட்டுகளை இக்கட்டுரை ஆய்வு செய்கிறது. 'மகராசி மலை', மாசாத்துவ(ளி)மந்தம்' ''திருவாசல் மாடம்', 'கனகவி (சுய)', 'ஸ்ரீபூர்ணி', ஸ்ரீவல்லதே...குல'' எனப் படும் கல்வெட்டுகள் பற்றிய செய்திகள் இடம் பெறுகின்றன. கம்பம் பள்ளத்தாக்கின் தொன்மையான வரலாற்றுச சான்றுகள் இதில் இடம் பெற்றுள்ளன. 'தேவாரம்' காமயகமிண்டன் பட்டி போன்ற இடங்களில் இக்கட்டுரையாளரால் ஆய்வு செய்யப் பட்டு 2500 ஆண்டுகளுக்கு முற்பட்ட மட்பாண்டங்கள் கண்டு பிடிக்கப்பட்டது எனும் செய்தியும் இடம் பெற்றுள்ளது. ஆய்வு இறுதியில் ''மங்கலதேவியம்மன் கோயில் கண்ணகி கோட்டம் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் இன்று காணப்படும் கட்டட அமைப்பானது பிற்காலத்தில் தொடர்ந்து செப்பனிடப்பட்டு வந்துள்ளது'' என்கிறார் கட்டுரையாளர்.

தமிழர்களின் கலைச் சிறப்பைக் கூறுகின்றது ''தமிழ் நாட்டுக் கலைச் செல்வங்கள்'' எனும் கட்டுரை. கட்டடக்கலை, சிற்பக்கலை, செப்புப்படிமக்கலை, ஓவியங்கள், மரச் சிற்பக்கலை, தந்தச் சிற்பக் கலைபோன்ற கலைத் திறனைக் காட்டுவனவாக கட்டுரையுள்ளது. சிற்பக் கலையின் சிறப்பையும் தெய்வீகச் சிறப்பையும் எடுத்துரைக் கின்றது. இன்றைக்குச் சுமார் 2800 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தமிழ்நாட்டில் செப்புப் படிமக்கலை மிக உன்னத நிலையில் வளர்ச்சி பெற்றிருந்தது என்பதைக் காட்டுகின்றது. திருநெல்வேலி மாவட்டம் ஆதிச்சநல்லூர் கண்டு பிடிப்புகள் இதற்கு நல்ல எடுத்துக் காட்டுகள் என்பதைச் சுட்டிக்காட்டுகின்றது. இலக்கியத் தில் ஓவியங்களைப் பற்றி வருகின்ற செய்திகளையும், தமிழகத்தில் காணப்படும் பழமையான ஓவியங்களையும் வெளிக் காட்டப் படுகின்றது. மரச்சிற்பக் கலையின் தொன்மை, அக்கலை பெற்ற வளர்ச்சி நிலை என்பனவற்றைக் குறித்தும், நாயக்கர் காலத்தில் இக்கலை பெற்ற சிறப்பையும் குறிப்பிடப்படுகின்றது.

''இசைத்தூண்கள்'' எனும் ஆய்வுக் கட்டுரையை இராஜ். பவுன்துரை எழுதியுள்ளார். திராவிடக் கோயில் கட்டடக்கலை. அமைப்பில் போற்றக் கூடிய ஒன்று தூண்நிருமாணக் கலையாகும். தூண்களின் அமைப்புப் கலை நுட்பமும் நாயக்கர் காலத்தில் சிறப்புப் பெற்றன. அத்தகைய கலைத் திறனுடைய படைப்பில் ஒன்று இசைத்தூண்களாகும். இசைத் தூண்கள் பல வடிவங்களில் பல வகை ஒலியை எழுப்பும் கற்கருவிகளாகக் காணக் கிடைக் கின்றன. தமிழகத்தில் பாண்டியநாட்டுப் பகுதியில்தான் அதிக மான இசைத்தூண்களை காணமுடிகின்றன. இசைத்தூண்களை

(அ) இசைத்தூண்கள் (தட்டினால் இசை எழும் தூண்கள்), (ஆ) துளை இசைத்தூண்கள் (துளைவழி ஊதினால் இசை எழும் அமைப்பு) என இரண்டு பிரிவுகளாகப் பிரித்து ஆய்வு செய்யப் படுகின்றது. சுமார் 16 இடங்களில் இசைத்தூண்கள் உள்ளன. இசைத்தூண்களின் அமைப்பு, வகைகள், எழும் இசைக் குறிப்பு, போன்றவற்றை ஆய்வு செய்து கொடுக்கப்பட்டுள்ளது. தமிழகக் கட்டடக்கலையில் தனிச் சிறப்புடையது இசைத்தூண்களாகும்.

ஓவியக்கலை ''உன்னதமான கலை மனித குலம் முழுமைக்கும் பொதுவாகி, மொழி, கலாச்சார வேறுபாடுகளைத் தகர்த்து, தேசங்களுக்கிடையிலான விரிந்த எல்லைககளைக் கடந்து, மனிதர்கள் அனைவரையும் ஒருங்கிணைக்கும் மகத்தான சாதனம் என்பதில் கருத்து வேறுபாடு இருக்க முடியாது'' என்கிறார் கட்டுரையாளர் K.M. ஆதிமூலம். ''தமிழகத்தில் நுண்கலைப் புரட்சி'' எனும் இவருடைய கட்டுரை தற்காலத்திய கலை வளர்ச்சி நிலை, ஓவியத்திற்கும் சிற்பத்திற்கும் இடையே தொடர்ந்து காணப்படும் தொடர்புகள் போன்றவற்றை விளக்கு கின்றது.

''தொன்றுதொட்டு வரும் தமிழர் சிற்பக்கலை'' எனும் ஆய்வுக்கட்டுரையைக் கொடுத்திருப்பவர் வி. கணபதி ஸ்தபதியா வார். கலையின் வளர்ச்சி, கலை பற்றிய நூல்களை ஆய்வு செய் துள்ளார். இந்தியக் கலையானது சுமார் இரண்டாயிரம் ஆண்டு களுடைய வரலாற்றைக் கொண்டதாகும். இக்கலை நகரம், வேசரம், திராவிடம் எனப்படும் மூன்று பெரும் கலைப்பிரிவாகும். இதில் தென்னாட்டின் கலைப் படைப்பான 'திராவிடக் கலை' பற்றிய இலக்கியச் செய்திகளை ஆய்வு செய்கின்றது இக்கட்டுரை. இது பண்டைய சிற்ப சாஸ்திரங்களையும் அவை கூறும் செய்தி களையும் எடுத்துரைக்கின்றது. சிற்பக் கட்டடக்கலைப் பற்றிய இலக்கியங்களாக சுமார் 32-க்கும் மேற்பட்ட சாஸ்திரங்களைக் கூறுகின்றது. வழக்கில் காணப்படும் சொற்களையும் அகராதியில் இல்லாத சொற்களையும் எடுத்துக்காட்டுகின்றார். அதிகமான எண்ணிக்கையில் சமஸ்கிருதத்தில்தான் காண முடிகின்றது. தமிழில் இரண்டு நூல்கள்தான் உள்ளன. அவை பொதுவாக வீட்டின் அமைப்பு பற்றியே அதிகமாகக் கூறப்பட்டுள்ளது என்று தன்னுடைய ஆய்வில் கொடுத்துள்ளார்.

''தமிழ்ச் சிற்பங்களில் படைப்புக் கலைப்பணி'' என்னும் ஆய்வுப் படைப்பை வழங்கியவர் பீட்டர் காட்னர் என்பவராவார்.

தமிழர் கலைத்திறனைக் கூறும் வண்ணம் ஆய்வு அமைகின்றது. தமிழர் படைப்புகளில் சிற்பங்கள் சிறப்பிடம் பெறுவன. இக்கலைப் பணியானது தொன்றுதொட்டு தமிழகத்தில் பின்பற்றப் படுகின்றது. 'ஸ்தபதிகள்' இக்கலையில் தேர்ந்தவர்களாக உள்ளனர். பழைய சாஸ்திர நூல்களைக் கொண்டு அவற்றில் கொடுக்கப்பட்டுள்ள விபரங்களை மனதில் நிறுத்தி சிற்பங்களைப் படைக்கின்றனர். மேல் நாட்டில் வாழும் சில கலை வரலாற்று ஆசிரியர்கள், இந்தியக் கலைகள் மாறாதவை, ஒரே மாதிரி யானவை, தேக்கம் உடையவை என்று குறைகூறியுள்ளனர். இது தவறான கருத்தாகும் என்கிறார் கட்டுரையாளர்.

படிமக்கலையின் சிறப்பையும் அக்கலை வடிவிற்கு எடுத்தாளப் படும் அளவு, அமைப்பையும் எடுத்துரைக்கின்றது. தாளம், அங்குலம் போன்ற அளவுகள் பயன்படுத்தப்பட்டுள்ளன. இக்கலை வடிவமைப்பை கம்ப்யூட்டர் மூலம் ஆய்வு செய்து கொடுத்துள்ளார். பல்லவர், பாண்டியர், சோழர் காலச் சிற்பங் களின் அளவு, அமைப்பைக் கம்ப்யூட்டர் வழியே ஆய்ந்து அவற்றின் சிறப்பியல்பை டாக்டர் கிப்ட்சிரோமணி, கோவிந்தராஜு, பகவன்தாஸ் எனும் ஆய்வாளர்கள் கொடுத்துள்ளனர்.

திருமதி லீலா கணபதி, "சித்தன்னவாசல், தஞ்சாவூர் ஓவியங் களும் அவற்றின் நுட்பங்களும்" என்னும் ஆய்வைத்தந்துள்ளார். தமிழகத்து ஓவியங்களில் புகழ்பெற்றவை சித்தன்னவாசல் ஓவிய மாகும். அதுபோல் சிறப்புடைய மற்றொன்று தஞ்சாவூர் ஓவிய மாகும். இக்கட்டுரை தஞ்சை, சித்தன்னவாசல் ஆகிய இரு இடங் களிலும் காணப் பெறும் ஓவியங்கள் எவ்வாறு ஒரு முனைப்பு நோக்கி வளர்ச்சியையும் மேன்மையையும் எடுத்துக் காட்டுகின்றன என்பதை ஆய்வு முறை எடுத்து விளக்கப்படுகின்றது. சித்தன்ன வாசல் ஓவியங்கள் சைனக் கூறுகளைக் கொண்டவை; தஞ்சை ஓவியங்களும் ஓரளவு சைனக் கூறுகளைக் கொண்டிருக் கின்றன என்கிறார். பல்வகை ஓவிய அமைப்புகளை பல நூல்களின் உரையின் வழி எடுத்துக் காட்டுகின்றார். தமிழ் இலக்கியத்தில் காணப்படும் ஓவியச் செய்திகளைக் கொடுத்துள்ளார். வண்ணங் களும் அவற்றின் கலவைகளும் எடுத்துரைக்கப்பட்டுள்ளன. சோழர் கால ஓவியங்கள், நாயக்கர்கால ஓவியங்களால் மறைக்கப் பட்ட செய்திகளையும், நாயக்கர் கால ஓவியங்களையும் ஆய்வு செய்கின்றது இக்கட்டுரை.

''தமிழ் இதழியலில் அங்கத ஓவியங்கள்'' எனும் ஆய்வுரை 'கார்ட்டூன்' ஓவியத்தைப் பற்றிக் கூறுகின்றது. பலவகை ஓவியங்களில் அங்கத ஓவியம் ஒருவகைப்படும். இதனை கார்ட்டூன் என்பர். கார்ட்டூன் என்பதற்கு அரசியல் வசைக் கேலிச் சித்திரம், வசைக் கேலிப்படம், கேலிப்படம்; ஏளன ஓவியம், வேடிக்கை ஓவியம் என்னும் பல பொருள்களைக்காட்டும். டி.எஸ். சொக்கலிங்கம், 'கார்ட்டூன்' என்பதற்கு 'கூடார்த்தப்படம்' என்கிறார். பாரதியின் 'இந்தியா,' திரு வி.க. வின் தேசபக்தம், 'விநோதனி' போன்ற இதழ்களின் கார்ட்டூன்களைப் பற்றியும் ஆய்வு செய்யப்பட்டுள்ளது.

## சிந்துவெளி எழுத்து வடிவங்களும் ஆய்வு நிலையும்

சிந்துவெளி நாகரிகத்தை இன்று வரை முழுவதுமாக அறிந்து கொள்ள இயலவில்லை எனலாம். அம்மக்களின் பண்பாடு. நாகரிகம் என்பனவற்றை அறிந்து கொண்டாலும் இன்னும் தெளிவு கிடைக்காமல் இருப்பதில் இங்கு காணப்படும் வரிவடிவங்கள் ஒன்றாகும். நீண்டு கொண்டே செல்கின்ற இந்த ஆய்வு இன்றைக்கு திராவிடத்தை நோக்கி வந்த வண்ணமிருக்கின்றது என்பதற்கு ஆய்வாளர்கள் தருகின்ற விளக்கமே போதுமானதாகும்.

தமிழ்க் கல்வி தமிழ்ச்சாசன அறிவு இன்றி முழுமை பெற இயலாது எனலாம். தமிழ் இலக்கிய வளத்துக்குத் தமிழ்ச் சாசனவளம் குறைந்ததன்று என்பார் டாக்டர் ஆ. வேலுப்பிள்ளை ''சாசனம்' என்பது வடமொழிச் சொல். சாசனம் என்பது தமிழில் ''கல்வெட்டு'' என்று அழைக்கப்படும். எழுத்துக்கள் கல்லில் வெட்டப்பட்டுள்ளதால் அதனை 'கல்வெட்டு' என்பர். ஆனால் கல்லில் வெட்டப்படாத ''செப்புப்பட்டயம்'' முதலியவற்றை உள்ளடக்கிச் சுட்டிக்காட்ட தமிழ் சொல்லின்மையால், 'சாசனம்' என்றே அழைப்பர்.

காலத்துக்குக் காலம் வரிவடிவங்கள் அடையும் மாற்றங்களைப் பற்றிக் கற்பது தொல்வரிவடிவவியல் அல்லது தொல்லெழுத்தியல் எனப்படுகின்றது. வரிவடிவங்கள் பொதுவாக காலத்தாலும், பண்பாட்டின் வளர்ச்சியாலும் மாற்றங்களைப் பெறுகின்றன. வரிவடிவங்களின் ஆய்வுத் தன்மையை விளக்கும் நூலாக 'பூலர்' என்பவரின் ''இந்தியத் தொல் வரிவடிவவியல்' எனும்

நூல் 1896-இல் முதன் முதலில் வெளிவந்தது. அதன் பின்னரே வரிவடிவ அமைப்பைப் பற்றிய பல ஆய்வுகள் வெளிவரத் தொடங்கின எனலாம்.

'தமிழில் தொல்வரிவடிவவியலைப் பற்றி இருபதாம் நூற்றாண்டு ஆராய்ச்சிகளை நோக்குமிடத்து முதன்முதலில் ஆய்வுரை வெளியிட்ட பெருமை டி.ஏ. கோபிநாதராவைச் சேரும். அவருடைய ஆய்வுக் கட்டுரையில்[1] தொல்வரிவடிவவியலாரிடம் தென்னிந்தியா தனக்குரிய கவனத்தைப் பெறவில்லை எனக் கவலைக் கொள்கின்றனர். தமிழ்த் தொல்வரிவடிவ இயலைப் பற்றி 1830-இல் கலைமகள் இதழில் தொடர்ந்து எழுதியுள்ளார்' அதன் பின்னர் சிவராமமூர்த்தி தென்னிந்தியத் தொல்வரிவ வியலை ஆராய்ந்து ''இந்திய சாசனவியலும் தென்னிந்திய வரிவடிவங்களும்'' (1957) எனும் ஆய்வைக் கொடுத்துள்ளார். இவ்வகையான ஆய்வு நிலை இன்று சிந்துவெளி வரிவடிவத்தை ஆய்வு செய்யும் வகையில் மலர்ந்துள்ளது.

சிந்துவெளியில் காணப்படும் வரிவடிவங்கள் திராவிட மொழிக்கு நெருங்கிய தொடர்புடையது. அவ்வகையில் பல ஆய்வுகள் வந்த வண்ணம் உள்ளன. சிந்துவெளி வரிவடிவம் பழைய திராவிட வரிவடிவம் என்று உடன்படும் நிலை அறிஞரிடையே ஏற்படுமானால் பிராமியின் தோற்றம் சிந்துவெளி வரிவடிவத்திற்கு காணப்படுகின்றது, என்று கூறத்தக்க நிலை வரலாம் என்கிறார் டாக்டர் ஆ. வேலுப்பிள்ளை.[2] சிந்துவெளி வரிவடிவங்களில் பல திராவிட மொழியின் சிறப்பியல்புகள் என்று கூறமுடியாத சில வழக்காறுகள் அது பழந்திராவிட மொழியாக வாசித்த பகுதியிற் காணப்படுகின்றன என்கிறார் பி.பி. லால்[3]. ஆரியரும் சுமேரியரும் ஓரினத்தவர் என்று கொண்ட எல்.ஏ. வாட்டேல் என்பவர், சுமேரிய வரிவடிவத்துக்கும் சிந்துவெளி வரிவடிவத்துக்கும் சில ஒற்றுமைகளைக் கண்டுள்ளார். இருப்பினும் தெளிவான

---

1. T.A. Gopinatha Rao, Travancore Archaeological Series Vol I P. 201.
2. டாக்டர். ஆ. வேலுப்பிள்ளை, சாசனமும் தமிழும், பேராதனை. P.9.
3. B.B. Lal, Director General of Archaeology, India made these observations at the Second International Conference Seminar on Archaeology, Colombo, 1969.

முடிவு கிடைக்கவில்லை. ஆனால் இவை எதிர்பாராத தற்செயல் நிகழ்ச்சியாகவே தோன்றுகிறது என்று 1934 இல் கே.என். தீக்ஷித் எனும் ஆய்வாளர் கருதுகின்றனர்.[4]

ஜி.ஆர். ஹண்ட்டர் (G.R. Hunter) என்பவர் ஆக்ஸ்போர்ட்டு பல்கலைக் கழகத்திற்கு வழங்கிய டாக்டர் பட்ட ஆய்வுரையில் முதன் முதலாகத் தக்க அடிப்படையில் சிந்துவெளி எழுத்துக்கள் இந்தியாவிற்குரிய திராவிட இன மக்களின் எழுத்துக்கள் என்பதையும் பிராமி எழுத்துக்கள் சிந்துவெளி எழுத்துக்களிலிருந்து திரிந்து வளர்ந்தனவாகும் என்றும் கூறியுள்ளார்.[5]

பேராசிரியர் ரோசனி (Hrozny), ஹிட்டைட் (Hittite) மொழி ஆராய்ச்சியாளர். இவர் ஹிட்டைட் மொழிக்கும் சிந்துவெளி மொழிக்கும் இடையே காணப்படும் தொடர்பைக் காட்டுகின்றார் இருப்பினும் தொல்லியல் அறிஞர்களான சர் மார்ட்டிமர் வீலர், லியோனார்ட்டு உல்லி, ஸ்டுவர்ட் பிக்காட் (Stuard Piggott) போன்றோர் "சிந்து வெளி நாகரிகம் ஆரியர்களாலேயே அழிக்கப் பட்டது. அவர்களுக்கு முன்பு அங்கு வாழ்ந்த மக்கள் ஆரியர் அல்லாத இந்தியப் பழங்குடி மக்களாவர்" எனும் கருத்தில் உள்ள னர். இருப்பினும் கே.என். சாஸ்திரி என்பவர் "ரோஸட்டா கல் (Rosetta Stone)லைப் போன்ற இருமொழிக் கல்வெட்டுகள் இங்கு கிடைக்கும்வரை, சிந்துவெளி எழுத்துக்கள் பெரும்புதிராகவே இருந்து வரும்" என்ற கருத்தைக் கூறுகின்றார்.[6]

சிந்துவெளி எழுத்துகள் திராவிட மொழிச் சார்புடையன என்பதை முதன்முதல் கண்டு உலகிற்கு உணர்த்தியவர் ஹீராசுப் பாதிரியாவார். "ஸ்பெயின் நாட்டுத் திராவிடன்' என்று தம்மை, இந்த நாட்டு மக்களிடம் அறிமுகப்படுத்திக் கொண்டவர். இவர் சிந்துவெளி மக்கள் திராவிடர்கள், அந்த மக்கள் திராவிட மொழி களையே பேசினர் எனக் கூறியுள்ளார்.[7]

---

4. K.N. Dikshit, Pre-historic Civilizahion of the Indus Vally, 1935, P. 9. 135-37.

5. G.R. Hunter, Scripts of Harappa and Mohanjodaro and cits onneetion with other Scripts, London, 1939, P.12

6. க.தா. திருநாவுக்கரசு, சிந்துவெளி எழுத்து வடிவங்கள், மணியகம், சென்னை, 1982, P. 25

7. Rev. H. Heras, studies in Proto-Indo Mediterranean culture, Vol. I. Historical Research Institute, Bombay, 1953, P. 143.

பின்லாந்து நாட்டில் கடந்த பதினைந்து ஆண்டுகளாக சிந்து வெளி எழுத்துகள் பற்றிய ஆராய்ச்சி மிகத் தீவிரமாகச் செய்யப் பட்டுவருகிறது. அங்கு சிமோ பர்போலா (Simo parpola), அஸ்கா பர்போலா (Aska parpola) எனும் சகோதரர்கள் கோபன் ஹேக னில் உள்ள ஸ்காண்டிநேவிய ஆசிய ஆராய்ச்சிக் கழகத்தின் சார் பில் ஆய்ந்துள்ளனர். இவர்களுக்கு மிகுந்த துணையாக கணித வல்லுநர் ஒருவரும், கணிப்பான் தொழில் நுட்பக் கலைஞர் ஒரு வருமாகச் சேர்ந்து இதில் ஈடுபட்டனர். இதனால் 1969 இல் "சிந்துவெளி எழுத்துக்களின் வரிவடிவ ஆராய்ச்சியின் நிலை" எனும் அறிக்கையைக் கொடுத்தனர். இவர்களுடைய ஆய்வு திரா விடமொழிக் கூறுகளைச் சுட்டுவணவாகவே உள்ளது.

1965—இல் சோவியத்நாட்டைச் சார்ந்த யூ. நார்சோ (Yu-Knorsor) பி.யா. வோல்சோக் (B.Ya. Volcok) என்.வி. குரோ (N.V. Gurov) முதலிய ஆய்வாளர்கள் சிந்துவெளி எழுத்துகளை ஆய்வு வடிவம் செய்து அவை திராவிட மொழிக்குரிய ஒரு மொழி எனக் கருதினர். சிந்துவெளியில் வழங்கிய மொழியாக இருக்க வேண்டும் என்று கருதுகின்றனர்.[8]

சிந்துவெளி எழுத்து வடிவங்களைப் பற்றி பலகட்டுரைகள் வெளிவந்துள்ளன. அவற்றில் குறிப்பாக திராவிடமொழித் தொடர்புடைய ஆய்வுகளைக் கொண்டவை சில. பொதுவாக சிந்துவெளி ஆய்வுகள் பெரும்பகுதி திராவிடமொழித் தொடர் புடையது எனும் கோட்பாட்டிற்கு நெருங்கி வந்துகொண்டு இருக் கின்றனர் இக்கருத்தினை ஒட்டி ஆய்வாளர் ஐராவதம் மகாதேவன் சிறப்பாகச் செய்துகொண்டு இருக்கின்றார் எனலாம். 1970 இல் சிந்துவெளி எழுத்துக்களுக்குப் புதியதொரு விளக்கத்தை கொடுத் தார்.

சங்க இலக்கியங்களில் சிறப்பாகப் பேசப்படும் வேளிர்களையும் கோசர்களையும் சிந்துவெளி மக்களோடு தொடர்புபடுத்தி எழுதி யுள்ளார். "பழைய இந்திய (சிந்துவெளி) நாகரிகம் திராவிட ருடையதேயாகும். அங்குக் காணப்படும் குறியீடுகளில் உள்ள எழுத்துக்களின் ஆராய்ச்சியால் தெரியவரும் சிந்துவெளி மொழி பொதுவாகத் தென் திராவிட மொழிகளையும் சிறப்பாகப் பழந் தமிழையும் ஒத்துள்ளது" என்று கூறியுள்ளார்.[9]

---

8. N.V. Gurou, Towards the Linguistic Interpretastion of the Proto-Indian Texts in the Journal of Tamil Studies IATR, Madras, Vol. II No : 1 May 1970, PP. 70-71.
9. I Mahadevan, Journal of Tamil Studies, Vol II 157.

1972—இல் "நாகரிக இயல்புகளாலும், மொழி அமைப்பு முறையால் வடஇந்திய மக்கள் வாழ்க்கையில் காணப்படும், திராவிடப் பண்பாட்டின் தாக்கத்தாலும் ஹாரப்பாவின் பண்பாடு திராவிடச் சார்புடையது எனக்கூறுவதற்கு வாய்ப்பு உண்டு எனக் கூறியவர்[10] பின்னர். "இரு மொழி இணைகள் சில'; எனும் ஆய்வில் "ஆழி" எனப்படும் குறியீட்டை சூரிய சக்கரத்தோடு தொடர்புபடுத்திக் காட்டுகின்றார். முடிவில் "ஒரு கால், திரிந்த பிற்கால சமஸ்கிருத மரபில் இருந்து திராவிடமொழிச் சொற்கள் படைக்கப்பட்டு இருக்கலாம்."[11] என திசை திரும்பிச் செல்லுகின்றார். இந்நிலையை "வேதகால மொழி பண்பாட்டோடு சிந்துவெளி வரிவடிவங்களை இணைத்துக் காட்டும் முயற்சியே மேற்கொள்ளப்பட்டுள்ளமை நம்மை வியப்பில் ஆழ்த்துகிறது" என்பார் டாக்டர் க.த. திருநாவுக்கரசு.[12] ஆனால் 1981ஆம் ஆண்டில் "சிந்துவெளி பற்றிய எழுத்துக்கள்' எனும் ஆய்வுரைக் கொடுத்துள்ளார் அதில் மீண்டும் திராவிட மொழி சார்ந்தே கட்டுரையைத் தந்துள்ளார்என்பது குறிப்பிடத்தக்கது. திரு. ஐராவதம் மகாதேவன் அவர்கள் சிந்துவெளி எழுத்து வடிவங்களைப் பற்றிக் குறிப்பிடும் பொழுது,

"There are several conveying lines of evidence to indicate that the language of the Indus script is probably Dravidian[13]

எனக் குறிப்பிட்டுள்ளார்.

டாக்டர் க. த. திருநாவுக்கரசு "சிந்துவெளி எழுத்து வடிவங்கள்" எனும் ஆய்வுக்கட்டுரையில் சிந்துவெளி எழுத்து வடிவத்தின் ஆராய்ச்சிப் போக்கையும் தெளிவாகக் காட்டுகின்றார். எளிதில் எல்லோரும் புரிந்து கொள்ளும்படியான அளவில் ஆய்ந்து கொடுத்

---

10. I Mahadevan, Study of the Indus Script throush Bi. lingual Parallels in Ancient cities of the Indus, Gregory, L. (ed), Vikas, NewDelhi, 1979, P 262.

11. Ibid. P. 265.

12. டாக்டர் க.த. திருநாவுக்கரசு, சிந்துவெளி எழுத்து வடிவங்கள், மணியகம், 1982, P. 59.

13. I Mahadevan, place sings in the Indus scipt, 5th world Tamil conference, Madurai, 1981.

துள்ளார். சிந்துவெளி எழுத்துவடிவ ஆராய்ச்சி பற்றி அறிந்து கொள்ள வேண்டுமெனில் இவருடைய படைப்பு பெரிதும் துணை புரியும். டாக்டர் சா. குருமூர்த்தி ஹரப்பா நாகரிகத்தின் தன்மை களையும் தமிழ்ப் பண்பாட்டின் சிறப்பியல்புகளையும் தொடர்பு படுத்தி ஆய்ந்துள்ளார்,

சிந்துவெளி ஆய்வில் இடம்பெறும் மற்றொரு சிறப்பு 'கணிப்பான்' துணையுடன் நடைபெறும் ஆய்வாகும். மேலை நாட்டவர்கள் சிந்துவெளி வரிவடிவங்களை கணிப்பான் (கம்ப் யூட்டர்) வழி ஆய்வு மேற்கொண்டனர். அதன் பின்னர் இந்தியா விலும் இவ்வியக்கம் ஏற்படத் தொடங்கியது. சிந்துவெளி எழுத்து வடிவங்களையும், பிற கல்வெட்டுச் செய்திகளையும் இதன் வழி எளிதாக அறிய முடிகின்றது. கல்வெட்டுக்கள் மட்டுமல்லாது சிற்பங்களின் அளவீடுகளின் தன்மையையும் சோழர் கால நாயக்கர் காலச் சிற்பங்களின் படைப்புத்தன்மையின் வித்தி யாசங்களையும் தெளிவாகக் கொடுக்கப்பட்டுள்ளது. குறிப்பிடத் தக்கதாகும். இன்றைய ஆய்வில் அறிவியல் முறை ஆய்வு பெரிதும் துணைபுரிகின்றது எனலாம். இம்முயற்சி பற்றி ''இடைக்காலத் தியத் தமிழ்க் கல்வெட்டுக்களின் காலத்தைக் கணக்கிடும் கம்ப் யூட்டர் முறை'' என்னும் கட்டுரையை டாக்டர் கிப்ட் சிரோமணி, எம் சந்திரசேகரன் ஆகியோரும், சிந்துவெளி பற்றி எழுத்துக்கள் எனும் ஆய்வு கம்ப்யூட்டர் துணைக்கொண்டு ஆய்வு செய்து திரு. ஐராவதம் மகாதேவன் கொடுத்துள்ளனர். சோழ, பாண்டி சிற்பங்களை ஆய்வு செய்து டாக்டர் கிப்ட் சிரோமணி, எஸ். கோவிந்தராஜு, எம். பகவன்தாஸ் போன்றோர் கொடுத் துள்ளனர். 1981 ஆம் ஆண்டின் ஆய்வில் கம்ப்யூட்டர் சான்றாக கம்ப்யூட்டர் முறையைக் கூறலாம்.

## கல்வெட்டு ஆய்வுகள்

தமிழக வரலாற்றில் நீண்ட காலமாக 'இருண்டகாலம் எனும் வரலாற்றுக் காலம் தொடர்ந்து இருந்து வருகின்றது. 1981ஆம் ஆண்டின் சில கண்டுபிடிப்புகளின் ஆய்வுரைகள் இக் கருத்தை மாற்றிக் காட்ட வல்லன. அண்மைக்காலத்திய கண்டு' பிடிப்புகள் எனும் பகுதியில் டாக்டர் நாகசாமி அவர்கள் பூலாங் குறிச்சி கல்வெட்டைக் கொடுத்துள்ளார். அக்கல்வெட்டானது

பழந்தமிழகத்தைக் காட்டும் மிகப்பெரிய கல்வெட்டாகும் இருண்ட காலத்தின் வரலாற்றை மாற்றி எழுதும் வண்ணம் அக்கல்வெட்டில் தமிழ் நாட்டின் பல பகுதிகளின் பெயர்கள் நாடுகள், கோட்டம், சிற்றரசர்கள், ஆட்சிமுறை அரசியல் பற்றிய பல நற்செய்திகள் இவற்றைத் தருகின்றன என்பது குறிப்பிடத்தக்க தாகும்.

அசோகன் கல்வெட்டுகளில் குறிப்பிடப்பட்ட 'சத்திய புத்திரன்'என்னுஞ் சொல்லாட்சியைக் கொண்ட அதியமான் கல்வெட்டு ஒன்று திருவண்ணாமலைக்கருகில் ஜம்பை என்னுமிடத்தில் கண்டுபிடிக்கப்பட்டது.

''சத்ய புதோ அதியமான் நெடுமான் அஞ்சி ஈத்த பாழி' என்னும் இக்கல்வெட்டு வரலாற்றுச் சிறப்புடையது என டாக்டர் இரா. நாகசாமி குறிப்பிட்டுள்ளார். அதியமான் பற்றிய கல்வெட்டு ஒன்றின் வழி சத்திய புத்திரன்' எனும் வம்சவழி பற்றிய சிக்கலை சிலர் மாறுபட்ட கருத்தில் எழுதுகின்றனர், சான்றாக 'அதியமான் சத்தியபுத்திரனா?'' எனும் பேராசிரியர் இரா. மதிவாணனின் கட்டுரையையும் நாம் குறிப்பிடலாம். இத்தகைய ஆய்வு வரவேற்கத்தக்கதாகும். அசோகன் கி. மு. 3 ஆம். நூற்றாண்டினன் என்றும், அவனுக்கு முன்பும் அதியமான்களின் மரபு இருந்தது என்றும் எடுத்துக் காட்டியுள்ளார். அதியர். உதியர், பொறையர் என்போர் சேரக்கிளை மரபினர் என்றும் ''அதியமான்களை மட்டும் சத்திய புத்திரர்என்பது ஏனை மூவந்தேரையும், பாரி, ஓரி, [காரி போன்ற குறுநில மன்னரையும் பண்பளவில் குறைத்து காட்டிவிடும்'' என்று கூறுகின்றார். இவ்விரண்டு ஆய்வும் அதிகமானின் வம்சவழிப் பிரச்சனையைத் தொடுவதால் சற்று திசை மாறி விடுகின்றன' இருப்பினும் இக்கல்வெட்டு மிகப்பயனுடையதாக அமைகின்றது.

## அகழாய்வுகள்

அகழாய்வுகளின் மூலம் சங்ககாலத்திய செய்திகள் கிடைக்கப் பெற்றுள்ளன. கோவலன் கொலையுண்ட இடமாகிய கோவலன் பொட்டல் குறிப்பிடத்தக்கதாகும். சுமார் 2500 ஆண்டுகளுக்கு முன்னர் செய்யப்பட்ட மட்பாண்டங்கள் கண்டு எடுக்கப்பட்டன. அவை தமிழரின் தொன்மையைக் காட்ட வல்லன. தஞ்சையில்

சோழர் காலத்திய கட்டடம் கண்டுபிடிக்கப்பட்டது, தஞ்சை சோழருடைய தலைநகரமாகும். இன்னும் பல ஆய்வுகள் செய்யப் பட்டால் பலவரலாற்றுச் சான்றுகள் கிடைக்கக் கூடும். தஞ்சை அரண்மனைவில் ஒரு இருட்டறை கண்டுபிடிக்கப்பட்டது. இக் கண்டுபிடிப்பு தமிழருடைய கட்டடக் கலையின் சிறப்பைக் காட்டும் வண்ணம் அமைந்துள்ளது. தர்மபுரி அருகே பூமியில் பல அழகிய தெய்வச் சிலைகள் கண்டுபிடிக்கப்பட்டன. பெரிய பாளையத்தில் 43 பழைய தங்க நாணயங்கள் கண்டெடுக்கப் கட்டன. இவ்வகையில் தமிழகத் தொல்பொருள் ஆய்வுத்துறை இந்தியத் தொல்பொருள் ஆராய்ச்சித்துறை ஆகிய இருபெறும் துறைகள் தமிழகத்தில் செயல்படுகின்றன. இத்துறைகளின் கண்டுபிடிப்புக்களை முறைப்படி வெளியிட வேண்டிய அமைப்பு முறை உள்ளதால் அத்துறையின் கண்டுபிடிப்புகள் அனைத்தும் இதில் இடம் பெறவில்லை, மேலும் அத்துறையின் 1981-ஆம் ஆண்டின் கண்டுபிடிப்புத் தொடர்பான செய்திகள் சில ஆண்டுகள் கழித்தே வெளிவருகின்றன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

## இதழ்கள் தரும் செய்திகள்

தினசரிப் பத்திரிகைகளில் கலை கட்டடக் கலை பற்றிய செய்தி களைச் சிறப்பாக வெளியிடும் தமிழ்ப் பத்திரிகை தினமணியாகும். தினமணி—சுடரில் வாரத்திற்கு] ஒருமுறை கலைவளத்தைப் பற்றிய கட்டுரைகள் வெளிவருகின்கினறன. சுடரில் திரு. நாராயணசுவாமி, வி. என், சாமி, குடவாயில் பாலசுப்பிரமணியன் புலவர் தாமரைக் கண்ணன் போன்றோர் பல சிறந்த கட்டுரை களைக் கொடுத்துள்ளனர். பொதுவாக இதில் இடம் பெறும் கட்டுரைகள் தமிழகத்தில் சிற்றூர் முதல் பெரும் நகரம் வரை யுள்ள கோயில்களைப் பற்றிய பாராட்டத்க்க ஒன்றாகும். தமிழ கத்தின் கலைச் செல்வங்களைப் பற்றி 'தமிழரசு' இதழ் வெளியிடு கின்றது. செந்தமிழ்ச் செல்வியில் திரு. இராசமாணிக்கம் அவர்கள் குடைவரைக் கோயில்கள் எனும் நிலையில் பல குடைவரைக் கோயில்களைப் பற்றிக் குறிப்பிட்டு எழுதுகின்றார். அவை பழந் தமிழகத்தின் சிறப்புத் தன்மையை காட்டவல்லன. இந்து, இந்தியன் எக்ஸ்பிரஸ் போன்ற இதழ்கள் அவ்வப்போது பல கட்டுரைகளை வெளியிடுகின்றன.

## பின்னிணைப்பு

**1981** இல் வெளியான தொல்பொருள் கல்வெட்டாராய்ச்சித் தொடர்பான கட்டுரைகள்

1. அகழ்வாய்வில் கோவலன் பொட்டல்,
மா. சந்திரமூர்த்தி,
தமிழரசு இதழ்(16 5.1981).

2. அத்தி ஆன அகத்தீசுவரம்,
நாராயண ஸ்வாமி,
தினமணிசுடர்(7.6.1981).

3. அதியமான் சத்தியபுத்திரனா?
பேராசிரியர் இரா. மதிவாணன்,
செந்தமிழ்ச் செல்வி(நவ 1981)

4. அதியமான் நெடுமான் அஞ்சியின், கல்வெட்டுக் கண்டு பிடிப்பு
தமிழரசு இதழ், 16.11.1981.

5. அருள்மிகு திருவேட்டீசுவர் ஆலையம்.
கீழாம்பூர் சங்கர சுப்பிரமணியன்,
தினமணி சுடர்(19.4.1981).

6. ஆறுகாடு திருவழுத்தூர்,
நாராயணஸ்வாமி,
தினமணி சுடர் (17.5.1981)

7. ஆனையூர் குடைவரைக் கோயில்,
தி.இராசமாணிக்கம்.
செந்தமிழ்ச் செல்வி (டிசம்.1981).

8. இசைத் தூண்கள்,
இராஜ். பவுன்துரை.
தமிழரசு இதழ் (16.10.1981)

9. இந்து சமயத்தின் முதல் மொழி வடமொழியா? அல்லது திராவிட மொழியா?
டாக்டர். ஜே.டி. சேவியர்,
உலகத் தமிழ் மாநாட்டு மலர்.

10. உலகத் தமிழ் மாநாடு உணர்த்தும் சில புதிய ஆய்வுகள்,
வி.என். சாமி.
தினமணி.(16.1.1981)

11. ஏற்வாடி சாஸ்தா,
நாகர்கோவில் கிருஷ்ணன்,
தினமணி (1.3.1981)

12. கட்டி முதலிகள்,
பெ. அர்த்தநாரீசுவரன்,
இந்தியப்பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற ஆய்வுக்
கோவை (3),

13. கம்பன் கவிகளில் ஓவியம்,
குடவாயில் பாலசுப்பிரமணியன்,
தினமணி சுடர் (9.8.1981).

14. கம்போடியாவின் ஆங்கோர் நினைவுச் சின்னங்கள்,
வி.என்.சாமி,
தினமணி (10.2.1981).

15. கருவூரில் ஒரு கல்வெட்டு,
தங்கமணி,
இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற ஆய்வுக்
கோவை(1981)

16. கல்வெட்டு காட்டும் மூவர்,
சி. கோவிந்தராசனார்,
இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற ஆய்வுக்
கோவை(3),

17. கலைக் கோயில்கள்-பண்பாட்டுக் கருவூலங்கள்,
இராம. வீரப்பன்,
உலகத் தமிழ் மாநாட்டு மலர்.

18. குடுமியான்மலை இசைக் கல்வெட்டு,
ஆர். சத்தியநாராயணா,
உலகத் தமிழ்மாநாட்டு மலர்.

19. குமரி மாவட்ட மக்களிடையே வீர வழிபாடு;
பி. ராமசந்திரன்.
தினமணிச் சுடர் (3.5,1981).

20. குரங்குப் பிடி,
பி.எல்.சாமி,
தினமணி சுடர் (10,5.1981)

21. குன்றக்குடிக் குடைவரைக் கோயில்கள்,
தி. இராசமாணிக்கம்,
செந்தமிழ்ச் செல்வி (செப் 1981).

22. சாக்கோட்டை ஸ்ரீ வீரசேகர உமையாம்பிகை,
அரு. சோமசுந்தரன்,
தினமணிசுடர் (4.1.1981)

23. சிங்கபுரம் ஸ்ரீ அரங்கநாதர்,
புலவர் தாமரைக் கண்ணன்,
தினமணி சுடர் (22.2.1981)

24. சிந்தி மொழியில் தமிழ்ச் சொற்கள்,
புலவர். மு.ச.சிவம்.
செந்தமிழ் செல்வி.

25. சிந்துவெளி எழுத்து வடிவங்கள்,
டாக்டர் க.த. திருநாவுக்கரசு,
5-ஆம் உலகத் தமிழ் மாநாட்டு மலர்.

26. சிரமண பெளிகுளத்து கோமடேசுவரர்;
நாராயணசுவாமி,
தினமணி சுடர் (15.2. 1981)

27. செம்பியன் மாதேவி-கோயிற் பணிகள்,
அ. அழகிரிசாமி,
இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் ஆய்வுக் கோவை(1981).

28. சேங்காலிபுரம் பூம்பொழில் ஈசுவரம்,
குடவாயில் பாலசுப்பிரமணியம்,
தினமணிசுடர் (5.7.1981),

29. சோழ அரசர்களும் தெய்வீகக் கொள்கைகளும்,
பத்மநாபன்.
5-ஆம் உலகத் தமிழ்மாநாட்டு மலர்.

30. சோழர் ஆட்சி இறுதியில் காவிரிச் சம வெளியில் புதிய நிலவுடைமை முறையின் வளர்ச்சி.
நொ. பொரு. கர்சோஷிமா,
5-ஆம் உலகத் தமிழ் மாநாட்டு மலர்.

31. தஞ்சை அரண்மனையில் மராட்டிய மன்னனின் இருட்டறை கண்டு பிடிப்பு.
தமிழரசு இதழ்(1 5.1981),

32. தஞ்சையில் சோழர் காலக்கட்டடம்,
தமிழரசு இதழ் (1.10.1981)

33. தமிழ் நாட்டுக் கலைச் செல்வங்கள்,
தொல்பொருள் ஆய்வுத் துறையினர்,
5-ஆம் உலகத் தமிழ் மாநாட்டு மலர்.

34. தமிழகக் கோயில்களில் அனுபூதிக் குறியீடு.
எஸ். சீனிவாசன்,
5-ஆம் உலகத் தமிழ் மாநாட்டு மலர்.

35. தமிழகத் திருக்கோயில்கள்,
ந.ரா. முருகவேள்,
5-ஆம் உலகத் தமிழ்மாநாட்டு மலர்.

36. தமிழகத்தில் அண்மையில் கிடைத்த அரும் வரலாற்றுச் செய்திகள்,
டாக்டர் இரா. நாகசாமி,
தினமணி (4.1.1981)

37. தமிழகத்தில் நுண்கலைப் புரட்சி,
கே எம். ஆதிமூலம்,
5-ஆம் உலகத் தமிழ் மாநாட்டுமலர்.

38. தமிழும் திராவிட மொழிகளும்,
இரா. மதிவாணன்,
5-ஆம் உலகத் தமிழ் மாநாட்டுமலர்.

39. தமிழர் தோற் கருவிகள்,
ஆர். ஆளவந்தார்.
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை-113.

40. தமிழனின் பிறந்தகம்,
ஞா. தேவநேயன்,
5-ஆம் உலகத் தமிழ்மாநாட்டு மலர்.

41. தளவாய் இராமப்பையன்,
பெ. சண்முகம்,
இந்தியப் பல்கலைக் கழகத் தமிழாசிரியர் மன்ற ஆய்வுக் கோவை.

42. திராவிடர்கள்,
க.சி. கமலையா,
செந்தமிழ்ச் செல்வி, (ஜூலை,ஆகஸ்ட் 1981)

43. திருக்கோளக்குடி குடைவரைக் கோயில்
தி. இராசமாணிக்கம்.
செந்தமிழ்ச் செல்வி.(அக்.1981).

44. திருச்சந்தூர் வரகுணன் கல்வெட்டு,
அ. பாஸ்கரபால்பாண்டியன்
இந்தியப் பல்கலைக் கழக தமிழாசிரியர் மன்ற ஆய்வு கோவை

45. திருச்சிக் கல்வெட்டும் திருநாவுக்கரசர் காலமும்,
இரா. நாகசாமி,
முத்துக்கோவை, தமிழ்ப்புலவர் குழு வெளியீடு,

46. திருநாவலூர் திருக்கோயில்
எ.வி. ரங்காசாரி,
தினமணி சுடர் (19.4.1981).

47. திருமலைநாயக்கர் மகால்.
கி. மா. பக்தவத்சலன்,
தினமணி சுடர் (4.1.1981)

48. திருமெய்யம் குடைவரைக் கோயில்கள்,
தி. இராசமாணிக்கம்,
செந்தமிழ்ச் செல்வி (நவ. 1981)

49. தில்லை விளாகம் ஸ்ரீவீரகோதண்டராமன்.
தில்லை கல்யாண பத்மநாபன்,
தினமணி சுடர், (5-4-1981)

50. திருவெள்ளரை குடைவரைகள்
தி. இராசமாணிக்கம்,
தினமணிசுடர் (ஜுன் 1981)

51. தென்னக எல்லோரா,
தி. இராசமாணிக்கம்,
செந்தமிழ்ச் செல்வி (ஏப். 1981)

52. நெடும்புகழ்க் கொடுமணம்,
புலவர் செ. இராசு,
5-ஆம் உலகத் தமிழ் மாநாட்டுமலர்

53. பண்டை எகிப்தில் தமிழ் பொறித்த தாழி
ஐராவதம் மகாதேவன்
தினமணி சுடர் (4.1.1981)

54. பண்டைய இலங்கையில் தமிழர்கள் - சிலகல்வெட்டுச் சான்றுகள்,
ஏ. தேவராசன்,
5-ஆம் உலகத் தமிழ் மாநாட்டு மலர்

55. பல்லவராணியின் தர்ம மகாதேவீச்சுரம்.
நாராயணசுவாமி
தினமணிசுடர் (8.11.1981)

56. பழையாறையில் பஞ்சவன் மாதேவீச்சரம்,
குடவாயில் பாலசுப்பிரமணியன்,
தினமணி சுடர் (4.1.1981)

57. பாண்டியர்கள் காலக் கல்வெட்டுகள்,
புலவர் வெ. அ. முத்துக் கண்ணன்,
தினமணி சுடர் (4.1.1981)

58. பகதூர் அகத்தீச்சுர முடையார்,
தி. சு. கலியாணராமன்,
தினமணிசுடர் (19.7.1981)

59. புள்ளமங்கைப் புனிதன் கோயில்,
தஞ்சை ந. செல்வராஜ்,
தினமணி சுடர் (11.10.1981)

60. பிரான்மலைக் குடைவரைக் கோயில்,
தி. இராசமாணிக்கம்
செந்தமிழ்ச் செல்வி (ஆகஸ் 1981)

61. பிள்ளையார் பட்டி குடைவரைக் கோயில்,
தி. இராச மாணிக்கம்
செந்தமிழ் செல்வி, (ஜூலை 1981)

62. பூமியில் கிடைத்த விக்ரகங்கள் (தர்மபுரி),
தினமணி (22.3.1981)

63. பெரியபாளையத்தில் 43 புராதன தங்க நாணயங்கள்,
தினமணி (31.3.1981)

64. பெரும்பேறு தான்தோன்றி ஈசுவரர்,
புலவர் தாமரைக் கண்ணன்,
தினமணி சுடர் (ஏப். 1931)

65. பெருவழிகள்,
க. குழந்தைவேலன்,
5-ஆம் உலகத் தமிழ் மாநாட்டு மலர்

66. மகிபாலன் பட்டி குடைவரைக் கோயில்,
தி. இராசமாணிக்கம்,
செந்தமிழ்ச் செல்வி, (மே. 1981)

67. மங்கலதேவி கோயில்—ஓர் ஆய்வு,
இராஜ். பவுன்துரை.
உலகத் தமிழராய்ச்சி நிறுவனக் கருத்தரங்கு, சென்னை, 113.

68. மடம் குளந்தை ஆண்டார்
புலவர் தாமரைக் கண்ணன்,
தினமணி (அக். 1981)

69. முன்னோடிகளாக திகழ்ந்த தமிழரின் மணிஓசை.
தினமணி (3.12.1981)

70. மொகஞ்சுதாரோ நாகரிக கால சந்ததியினர் பற்றி குறிப்பு.
தினமணி (டிசம்பர் 30. 1981)

71. வரலாற்றுக் காலத்திற்கும் முற்பட்ட மக்களுடைய நாகரிகம், பண்பாடு, பயன்படுத்திய கருவிகள், பொருளாதாரம், கலை, வாழ்க்கை பற்றித் தமிழ்நாட்டில் கிடைத்துள்ள சான்றுகள்;
டாக்டர் கே. வி. இராமன்,
5-ஆம் உலகத் தமிழ் மாநாட்டு மலர்

72. வரலாற்று வண்ணத் திரைப்படம்: குமரிக் கண்டம்,
இல. இராசேந்திரன்,
தமிழரசு இதழ் 16.1.1981

73. வளநகர் சக்கரப் பள்ளி,
தஞ்சை ந. செல்வராஜ்,
தினமணி (15.3.1981)

74. வானவன் மாதேவீச்சரம்,
நாராயணஸ்வாமி.
தினமணி (8.3.1981)

75. ஷாஜஹான் காலத்து தங்க நாணயம்,
தினமணி, 27.3.1981

1. Administrative System of the Ancient Tamil, Manickarasagam M.E, I I T S, Madras—113,

2. Archaeology, linguistics and Ancicnt Dravidian, William Bright, 5th World Tamil Conferenec. Madurai.

3. Archaeological Heritage of the Tamils, Dr Suresh B. Pillai, Dr. S.V. Subramanian. Dr. V. Veerasami (Ed) I I T S., Madras—600 113.

4. An outstanding Epigraphical Discovery in Tamil Nadu, Dr. Nagaswamy, R, 5th World Tamil Conference

5. Buddhism in South India, V. Yasoda devi, I.I.T.S., Madras—600 113.

6. Ceramics of Ancient Tamils, Kodumudi S. Shanmugam, I.I. T.S., Madras—600113.

7. Ceramic traditions in South India, S. Curumurthi, Madras university, 1981.

8. Chieftains of the Sangam Age, Pulavar S. Raju. I.I.T,S, Madras—600113.

9. Cluster Analysis of Indus signs—A computer approach, Gift Siromoney Abdul Huq, 5th world Tamil Conference.

10. Computcr Analysis of early chola anb Pandy Sculptures-an Iconomatric study, Gift Siromoney, S. Govindaraju and M. Bagavandas, 5th world Tamil Confernce.

11. Computer Methods of dating Medieval Tamil Inscription, Gift Siromoney, M. Chandrasekaran and C.Chandra sekaran 5th wotld Tamil Conference.

2. Cultural Heritage of the Tamils.
Dr. S.V. Subramanian and Dr. V. Veerasami (Edrs)
International Institute of Tamil Studies, Madras—600113.

13. Evolution of Industries and Industrialisation in Primordial Tamil Nadu,
Dr. G. Kuppuram,

14. Gems From Pre-Historic past,
M. Mahalinam,
International society for the Investigaton of Ancient Civilization, Madras.

15. Greative performance in Tamil Sculptures:
An ethnographic respones of Art Historians,
Peter M. Gardner,
5th world Tamil Conference

16. Harappa and Tamil Culture
Dr. S. Gurumurthy,
I.I.T.S. Madras—113.

17. Infulence of Dravidian Architecture on the Schools,
K.V. Soundara rajan,
5th world Tamil Gonference,

18. Jatavarman Sri Vallabha and His Royal Orders,
Dr. V. Balambal.

19. Kumari Kandam—The lost Continent,
N. Mahalingam
5th world Tamil Conference.

20. Kumari Kandam,
N. Mahalingam,
Gems from Pre-Historic past,
International society for the investigation of Ancient civilization, Madras.

21. Madurai Megalithic
N. Devasahayam,
Tamil Arasu, June 1981.

22. Megalithic Monuments and Megalithic Culture in Tamil country,
Dr. P. Chinnian,
I.I..T.S., Madras.

23. On the Harappan 'Yoke Carrier' pictogram and the Kavadi worship,
Asko Parpola, 5th world Tamil conference,

24. Origin and Significance of the Name Uraiyur,
R. Ramasamy,5th world Tamil conference,

25. Recent Archaeological Exavations in Tamil Nadu
Dr. K.V. Raman,
'Cultural Heritagc of the Tamils,Dr.S.V.Subramanian and Dr. V. Vcerasami (Edrs),I.I.T.S., Madras—600113.a

25. Recent progress in Tamil Epigraphical Research.
K.G. Krishnan, 5th world Tamil conference.

26. Sittannavasal and Tanjavur paintings: The tradition they reveal in rcspect of technique and treatment, Leela Ganapathy 5th world Tamil Conference.

27. Some Aspects of chola Rule in Karnataka.
G. Kuppuram 5th world Tamil Conference.

29. Social Complex of the Ancient Tribes of Tamil Nadu,
Dr. G. Kuppuram, I.I.T.S, Madras—600113,

30. Place Singns in the Indus Script,
Iravatham Mahadevan, 5th word Tamil Conference.

31. Pre-History of the River Kaveri,
C.G. Deivanayagam, I I T S, Madras—600113.

32. Proto—Dravidian Matrix of the Indus script and culture,
Dr. S, Sadasivam,I I T S, Mrdras—600113.

33. Towards a theory or Tamil Aesthetics with Special reference to Sangam poetry and Silappatikaram,
K. Chellappan, 5th world Tamil Confcrence

34. The Age of the Sangam: A reassessment,
V.T. Chellam, I I T S, Madras—600113.

35, The Artists and Artisans,
Nātana Kasinathan, 5th worldTamil Conference.

36. The Chola Kings of the Sangam Age,
Prof. C. Govindarajan, I I T S, Madras—600113.

37. The Harappan Calendar,
Walter A. Fairsevis Jr.5th wor ld Tamil Conference:

38. The Historic Vaigai River,
Dr. K. Nambi Arooran,
I I T S, Madras—600113.

39. The Neolithic culture in Tamil Nadu,
M. Rajasekara Thangamani,
I I T S, Madras—113.

40. The Riddles of Kumarikkandam,
R. Mathivanan,
I I T S, Madras—113.

41. The Role of Kaverippoompattinam in the Maritime Trade during the Sangam Age.
Dr. S Devamki,
I I T S, Madras—113.

42. The Sculptural Tradition of the Tamils
V. Ganapathy Sthapathi,
Cultural Heritage of the Tamils, Dr. S.V. Subramanian an
Dr. V. Veerasami (Edrs), I I T S, Madras—600113

43. The Angkor Monuments—A study
Komala Varadan,
5th world Tamil Conference,

# 17. இசை நூல்கள்

இ. சுந்தரமூர்த்தி

பழந்தமிழிசையின் பெருமையைச் சிலப்பதிகாரமும் அடியார்க்கு நல்லார் உரையும் இன்று எடுத்துரைக்கின்றன. அழிந்து போனதாகக் கருதப்படும் எத்துணையோ இசைநூல்களைத் தேடிப் பதிப்பிக்கும் பணியும், பழந்தமிழ்ப்பண்ணின் மரபுநெறியைப் போற்றிப் பாதுகாக்கும் ஆர்வமும் நம்மிடையே மலர வேண்டும். ஒவ்வொரு ஆண்டிலும் தமிழிசை குறித்த ஆய்வு நூல்கள் வெளிவருதற்கு அரசும் பிற நிறுவனங்களும் நல்லாதரவு நல்கினால் பழந்தமிழிசையின் பெருமை உலகெலாம் பரவும்.

## தமிழிசை

கலைகளுள் இசைக்கலை மிகவும் சிறப்புடையது எனவும் மக்கள் சமுதாயத்தோடு நெருங்கிய தொடர்புடையது எனவும் கூறுவர். மிகத் தொன்மையான காலந்தொட்டு மக்கள் தங்கள் வாழ்வின் எல்லாக் கூறுகளிலும் இசையைப் பயன்படுத்திவந்தமையை அறியமுடிகிறது. உழைப்புப்பாடலாகவும், உணவுப் பாடலாகவும், போர்ப்பாடலாகவும், துன்பப்பாடலாகவும், காதற் பாடலாகவும், விளையாடல் பாடலாகவும், இறையுணர்வுப்பாடலாகவும் தங்கள் உள்ளத்தெழுந்த உணர்வுகளுக்குத்தக இசை வடிவம் தந்தனர். தமிழிலக்கியத்தைப் பொருத்தவரை இசை பற்றிய அரிய குறிப்புகள் பழந்தமிழ் நூல்களில் சிறப்பாகக் காணப் படுகின்றன. காலத்தொன்மை வாய்ந்த அப்பழம் குறிப்புகளின் விளக்கம் இன்னும் முறையாக ஆராயப்பெறவில்லை. நால்வகைப் பெரும் பண்கள், சிலம்புகூறும் 103 பண்களின் வகை ஆகியனவெல்லாம் இன்று எந்த வடிவில் தமிழிசையில் விளங்குகின்றன என்பது குறித்து இன்றும் ஆராய்ந்து முடிவுகளைக் கண்டறிய வேண்டிய நிலையில் உள்ளோம். இவற்றுள் ஒருசில பழந்தமிழ்ப்பண்கள்

குறித்து இசைக்கலையும் தமிழ்ப்புலமையும் பெற்ற அறிஞர் ஆய்ந்து முடிவு கண்டுள்ளமையும் குறிப்பிடத்தக்கதாகும்.

## இசைமரபுச் செல்வம்

சிலப்பதிகாரத்தினின்றும் அதற்கு உரைவகுத்த அரும்பத உரைகாரர் அடியார்க்கு நல்லார் ஆகியோர்தம் உரைக் குறிப்புகளினின்றும் நம்முடைய பழைய தமிழிசை மரபுகளை நுட்பமாக அறியமுடிகின்றது. அகத்தியம், பஞ்சபாரதீயம், பரதம், முறுவல், சந்தம், குணநூல், செயிற்றியம், இசைநுணுக்கம், இந்திர காவியம், தாளவகை யோத்து, பெருங்குருகு, பெருநாரை, நாடகத் தமிழ்நூல், இசைத் தமிழ்செய்யுட் நிறைக்கோவை, சிற்றிசை, பேரிசை, பதினாறுபாடம் முதலாய பல அரிய தமிழ் இசைநூல்கள் காலத்தால் அழிந்தன. இவையெல்லாம் இன்று வெறும் பெயரளவிலேதான் அறிய முடிகின்றது.[1] இந்நூல்கள் அனைத்தும் கிடைக்கப்பெறின் தமிழர்தம் இசைமரபுச் செல்வத்தின் வரலாறு ஓரளவு தெளிவாகக்கூடும். பஞ்சமரபு, கூத்தநூல் ஆகியன அண்மைக்காலத்தில் வெளியிடப்பட்டுள்ள நூல்களாகும். இவை நம்முடைய மரபு பற்றி அறிந்துகொள்ளத் துணையாகின்றன. எனவே காலப்பழமை வாய்ந்த இந்நூல்களைத் தேடிக்கண்டு பிடிக்கும் பொறுப்பு இன்றியமையாததாகும்.

## வரலாறு

சிலப்பதிகாரத்திற்குப்பின் சமயக்குரவர்களான நால்வர் பாடல்கள் மூலம் பழந்தமிழ்ப்பண்ணின் வளர்ச்சியை அறியலாம். தமிழிசை முறையில் எண்ணிறந்த பண்ணுக்குரிய திருப்பாடல்களை இயற்றினர். அதன்பின் இசைக்கலையின் ஒளி குறைந்தது என்பர். பின்னர் 10,11,12,13 ஆவது நூற்றாண்டு வரையில் சுபதேவர். மதங்கமுனி, அபிநவகுப்தர், சாரங்கதேவர் முதலியவர்களால் பிரகத்கசி, சங்கீதரத்னாகரம், அஷ்டபதி முதலிய நூல்கள் இயற்றப்பட்டன. சாரங்க தேவர் வடநாட்டினராயினும் தென்னாட்டில் சங்கீத நூல்கள் மறைந்து ஒளி மழுங்கியகாலையில் இவரால் எழுதப்பெற்ற சங்கீதரத்னாகரம் கருநாடக சங்கீத வளர்ச்சிக்கு உறுதுணையாயிற்று என்பர்.[2] 15,16 ஆம் நூற்றாண்டு

1. அ. இராகவன், இசையும் யாழும், பக் 95-99 மயிலை சீனி, வேங்கடசாமி, மறைந்துபோனதமிழ் நூல்கள், பக்.184-196
2. க.பொன்னையாபிள்ளை, இசையியல் (ஐந்தாம் தொகுதி, முதற்பகுதி தொகுத்தவர். லெ ப.கரு. இராமனாதன் செட்டியார்) பக் 110 - 111 அண்ணாமலைப்பல்கலைக் கழகம் 1979

களிலும் அதற்குப்பின்னரும் தஞ்சைநகரம் இசைக்கலைக்குப் பேராதரவுதந்தது. சரபோசிமன்னர் காலத்தில் இக்கலை மேலும் வளர்ந்தது. தஞ்சையின் வளர்ந்த இசைக்கலையின் வரலாற்றை டாக்டர் எஸ். சீதா அவர்கள் Tanjore as a seat of music (1981) என்னும் நூலில் நன்கு விளக்கியுள்ளமை குறிப்பிடத்தக்கது.[3]

காலந்தோறும் வளர்ந்து வந்த இசைக்கலையின் வரலாற்றைக் குறிப்பாகத் தமிழ்ப்பண்களின் வரலாற்றை விரிவாகவும், முறையாகவும் எழுதவேண்டிய கடப்பாடு இசைத்தமிழ்க்கலைஞர்க்கும் அறிஞர்க்கும் உரியதாகும்.

இவ்வகையில் 1981 ஆம் ஆண்டில் வெளியான தமிழ் இசை நூல்கள் பற்றி இக்கட்டுரை எழுந்துள்ளது. அண்மைக்காலத்தில் தமிழ் இசை நூல்வெளியீடுகளாகப் பின்வருவன வெளியாகியுள்ளன;

அருட்கவி சானகி நாதன் கீர்த்தனைகள்(பாகம்1)

அருட்கவி சானகிநாதன் எம்.ஏ,
20, வடக்கு ராசாச்சந்து
தூத்துக்குடி-1

ஆரம்பப்பள்ளிக்கு 125 அபிநயப்பாடல்கள்

ஜவஹர்வெளியீடு
நன்னூலருவி
1-70 பள்ளிவாசல்தெரு
நாச்சியார் கோவில்

இசைப்பாமாலை—பக்திப்பாமாலை

பாபனாசம் நீலா ராமமூர்த்தி
13, திருவேங்கடம்தெரு
சென்னை-28

ஏர்வாடி சாஸ்தா போற்றி இசைமாலை

அருட்கவி சுத்த சத்வானந்தா
12, ஐந்தாவது தெரு
ஸ்ரீபத்மநாபநகர் அடையாறு சென்னை-20

3. Dr.S. Seetha. 'Tanjore as a seat of music,' University of Madras, 1981

## கர்நாடகக் கர்த்தா இராகங்கள் 72

குடந்தை கல்லான்கவி
எஸ். ஆர் வி.எஸ். இயல்இசைநாடகமன்றம்
கும்பகோணம்

## சக்திப்பாடல்கள் (பாகம்1)

பாபனாசம் நீலாராமமூர்த்தி
நீலாபப்ளிகேஷன்ஸ்
13, திருவேங்கடம்தெரு
சென்னை-28

## செளபாக்கியம் தரும் துதிமாலை

நாகர் கோவில் கிருஷ்ணன்
வெற்றிபதிப்பகம்
11, வேங்கடசாமிதெரு
திருவல்லிக்கேணி, சென்னை-5

## தியாகராஜரின் அபூர்வ கிருதிகள்-2

ஸ்வரப்படுத்தியவர் : சுககானதாரஸ்வாமிமலை
எஸ். ஜானகிராமன்
விளக்கவுரை : நல்லான் சக்கரவர்த்தி
கே. எஸ். ரங்காச்சாரி

சுவாதிபதிப்பகம்
3, காந்தி மார்க்கெட்
கும்பகோணம்

## திருவேங்கடமாலை

வசந்தா கிருஷ்ணசாமி
சப்தகிரி புக் ஸ்டால்
ரங்கநாதன் தெரு
சென்னை-17

## முருககானம்

கே. சுப்பிரமணியம்
92, நந்தனம் எக்ஸ்டென்சன்
சென்னை 600035

## மேளராக கிருதிமாலா

திருமதி டி. பட்டம்மாள்
ஹிக்கின்பாதம்ஸ்
814 அண்ணாசாலை
சென்னை-2

## ஸ்ரீதர்ம சாஸ்தா பாமாலை

ஆர்.எம். சோமய்யா
75, பொன்னப்பமுதலி தெரு
புரசைவாக்கம்
சென்னை-84

## ஸ்ரீமத் பஜனாம்ருதம்

ஸ்ரீகோபால கிருஷ்ண நாம பிரசார மண்டலி
180. வீரபிள்ளை தெரு
பெங்களூர்-1

## இறைவழிபாட்டுப்பாடல்கள்

இவ் வெளியீடுகளுள் பெரும்பாலான இறைவழிப்பாட்டுப் பாடல்களாகவே அமைந்துள்ளன. சில மட்டும் இசையின் அடிப்ப படையில் பாடுதற்குரிய குறிப்புகள் அமைக்கப் பெற்று வெளியாகி யுள்ளன. சிறுசிறு வெளியீடுகளாயுள்ள பலநூல்கள் இன்னும் வெளி வந்திருக்கக்கூடும். ஆயின் இவை அனைத்தும் இறையுணர்வோடு ஒன்றிய இசையமுத நூல்கள் எனலாம்.

## 1981-இல் இசைநூல்கள்

ஆய்வு நோக்கிலும், இசைக்கலையின் வரலாற்றை ஆராய்ந்து வெளியிடும் நிலையிலும் 1981-இல் சில நூல்களே வெளியாகி உள்ளன. அவை வருமாறு.

## 1. சிலப்பதிகாரத்து இசைத்தமிழ்

டாக்டர் எஸ். இராமநாதன்,
தமிழ் எழுத்தாளர் கூட்டுறவுச் சங்கம்,
107, பெரியதெரு,
திருவல்லிக்கேணி, சென்னை,

2. தமிழர் தோற் கருவிகள்

ஆர். ஆளவந்தார்
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
அடையாறு சென்னை

3. இசையாய் இன்பயனாய்

(ப.ஆ) டாக்டர் இ. சுந்தரமூர்த்தி
ப. நாகேந்திரன்
தி.சா.சு. நினைவுக்குழு
66, பசுபதி முதலியார் தெரு,
உடுமலைப்பேட்டை
கோவை

4. சுவரதாள அமைப்புடன் பாரதியார்பாடல்கள் (முதல்பாகம்)

பத்தமடை எஸ். கிருஷ்ணன்
நாட்டுசுப்பராயன் முதற்சந்து
சென்னை-4

இவற்றுள் 'இசையாய்இன்பயனாய்' என்னும் வெளியீடு பண்ணிசை மன்னர் சுந்தரமூர்த்தி ஓதுவார் நினைவாக வெளியிடப் பெற்றது. அறிஞர்பலரின் ஆய்வுக்கட்டுரைகளைக்கொண்டு விளங்குவதாகும். 1981 ஆண்டில் சென்னைத் தமிழிசைச் சங்கத்தின் சார்பில் வெளியிடப் பெறும் மலரிலும் இசை குறித்த பல அரிய ஆய்வுக் கட்டுரைகள் உள்ளன. 1981 ஆம் ஆண்டில் மதுரையில் நிகழ்ந்த உலகத் தமிழாராய்ச்சி மாநாட்டுக் கருத்தரங்கக் கட்டுரைத் தொகுதிகளிலும் இசைபற்றிய ஆய்வுக் கட்டுரைகள் உள்ளன.

## சிலப்பதிகாரத்து இசைத்தமிழ்

இயல், இசை, நாடகம் என முத்தமிழ்க் கூறுகளைப் பெற்று விளங்குவது சிலப்பதிகாரக் காப்பியம் ஆகும். இப்பெருங்காப்பியத்தினுள் காணக்கிடக்கும் அரிய செல்வங்களுள் ஒன்று இசைபற்றிய குறிப்புகள். தமிழிசைச் செல்வத்தின் கருவூலமாகத் திகழும் இக் காப்பியத்தின் மூலமே நமக்குப் பழந்தமிழ்ப்பண்களின் வரலாற்றுக் குறிப்புகளும், இசைகுறித்த பிற செய்திகளும் தெரிய வருகின்றன. இளங்கோ அடிகள் தந்த நுட்பமான இசைச் செய்திகளை அரும்பத உரைகாரரும், அடியார்க்குநல்லாரும் தம் நுண்மாண் நுழைபுலம்

விளங்க உரைப்பகுதியில் விளக்கியிருக்கின்றார்கள். நீண்ட காலத்திற்கு முன்னர் எழுதிய அவ்விளக்கங்களின் நுட்பம் இன்னும்கூட எளிமையாகப் புரிந்து கொள்ளும் அளவில் இல்லை. இதற்குரிய காரணமாக இசைக்கலையின் அறிஞராகத்திகழும் முடிகொண்டான் வேங்கடராமையர் அவர்கள் கூறும் கருத்து இன்றைய நிலைக்கு மிகவும் பொருந்துமாறு உள்ளது:

''இசையென்பது ஓர் அழகான நுண்கலை. இக்கலையோ கைக்கும் அகப்படாது; கண்ணுக்கும் தெரியாது; நா, மூக்கு இவைகளாலும் அறியப்படமாட்டாது. செவியொன்றினால் மட்டுமே அறியக் கூடிய நாத வித்தையாகும். ஆகையினால் இந்த நாத வித்தை யாகிற இசைக் கலையில் பூரண பாண்டித்தியமும், ஆத்மாநுபவமும், கலையில் அளவிலா ஆர்வமும், கலையின் இலக்கண அறிவும், கலையின் தத்துவம் எங்கெங்கு புதைந்துகிடக்கிறதென்பதைத் தேடி ஆய்ந்தறிந்து சர்ச்சை செய்யும் பேரவாவும் உள்ளவர்களுக்கே இச் சிலப்பதிகாரத்தினுட் புதைந்து கிடக்கும் இசைக் கலையின் நுணுக்கத்தையறிந்து விளக்குதல் சாத்தியமென நினைக்கின்றேன்'' என்று 'சிலப்பதிகாரத்து இசைநுணுக்க விளக்கம் மதிப்புரையில் திருவேங்கடராமையர் கூறுவார்.[4]

மேற்கூறியவாறு இக்கலையில் செறிந்தபுலமையும். உள்ளார்ந்த மனஒருமையும், இடைவிடா ஆர்வமும் உடையவர்களே இத்துறையில் வெற்றிபெற முடியும் சிலப்பதிகாரத்து இசைத்தமிழ் என்னும் ஆய்வுநூலினை உருவாக்கிய பேராசிரியர் டாக்டர் எஸ். இராமநாதன் அவர்களின் இசைப்புலமைக்கும், இசையொருமைக்கும், இடைவிடா ஆர்வம் நிறைந்த ஆய்வு நெறிக்கும் அந்நூலே தக்க சான்றாகத் திகழ்கின்றது. இசைஅறிஞர்களான அபிரகாம் பண்டிதர், யாழ்ப்பாணத்து அறிஞர் சுவாமி விபுலானந்தர், குடந்தை சுந்தரேசனார் அ. இராகவன் முதலானார் இக்கலை அறிந்து முன்னர் ஆராய்ந்துள்ளமையும் குறிப்பிடத்தக்கது.

## நூற்பாகுபாடு

இளங்கோ அடிகளின் இசைக்கலைப் புலமையை நுட்பமாகவும் செறிவாகவும் விளக்கி இசைமரபினைத் தமிழுலகத்திற்கு அறிந்த அரும்பத உரைகாரர் அடியார்க்கு நல்லார் ஆகிய பழைய உரையாசிரியர்களின் மரபிலேயே நின்று மேலைநாட்டு இசை முதலான

4. சிலப்பதிகாரத்து இசைத்தமிழ், பக். xix-xx

இக்காலத்திய இசைநுணுக்கங்களையும் பொருத்திப்பார்த்து ஓர் அரிய ஆராய்ச்சியைத் தந்துள்ளார் ஆசிரியர். இவ் ஆய்வு நூலில் ஆசிரியர் முதலில் இசைத்தமிழின் தொன்மை குறித்து விளக்கியுள்ளார். ஆய்ச்சியர் குரவை, அரங்கேற்றுகாதை, வட்டப் பாலையின் இடமுறைத்திரிபு, தற்கிழமை திரிந்த வலமுறைத்திரிபு' வட்டப்பாலையிற் காணப்படும் இசைநுணுக்கங்கள், இசைத்தமிழ் நூல்களில் காணப்படும் 22 சுருதிகள் முதலானவை நூலில் காணப்படுகின்ற பாகுபாடுகளாகும். நூலின் இறுதியில் தந்துள்ள பின்னிணைப்பும், வரைபடங்களும் நூற்பொருளை நன்கு உணர்வதற்குப் பயன்படும்வகையில் அமைந்துள்ளன.

## இசைத்தமிழின் தொன்மை

சங்க நூல்களுள் பெரும்பாணாற்றுப்படை, சிறுபாணாற்றுப் படை, கல்லாடம், பரிபாடல் முதலிய நூல்களில் இசைபற்றிய குறிப்புகள் காணப்படுகின்றமை அக்கலையின் தொன்மையைக் காட்டும். செயிற்றியம், சிகண்டியார் இயற்றிய இசைநுணுக்கம் முதலிய நூல்கள் பற்றிய குறிப்புகளும் கிடைக்கின்றன. இந்நூல்கள் அன்றி வேறு சில நூல்களும் காலப் பழைமையால் அழிந்தன. கண்ணிசை பாடலுக்கு இன்றியமையாத கூற்றினைத் திருக்குறளும் புலப்படுத்தும். தேவாரம் பழந்தமிழ்ப் பண்களால் பாடப் பெற்ற செய்தியினையும் அறியமுடிகின்றது.[5] தேவாரத் திருப்பதிகங்களைப் பண்முறையாக வகுத்து ஓதுவார்கள் பழையமரபு கெடாதவாறு இன்றும் ஓதிக் கொண்டிருக்கின்றார்கள்.

## ஒப்புமை

தமிழ் இசையின் தொன்மையை இந்நூல் பலவாறு விரித்துரைப்பது குறிப்பிடத்தக்கது. ஆசிரியர் மேல் நாட்டு இசை பற்றிய குறிப்புகளையும் அறிந்தவராதலால் நம்நாட்டு இசைக்கும் மேல்நாட்டு இசைக்கும் உள்ள வேற்றுமையை அவர் ஆய்ந்து எழுதுவது எண்ணத்தக்கது.

---

5. தேவாரத்திருமுறை அமைப்பு (1979) என்னும் நூலில் கடலூர் தி. கி. நாராயணசாமி அவர்கள் தேவாரயாப்பு, கட்டளை, பண் இவற்றிற்கு ஏற்ற தேவாரப் பாடல் திரட்டு ஆருயர் புராணத்திலுள்ள இசை விளக்கம், சிலப்பதிகாரத்தில் உள்ள இசைக் குறிப்புகள் ஆகியவற்றைத் தொகுத்துள்ளார்கள். (வெளியீடு: தி. கி. நாராயணசாமி, 2 சீதாராம நகர், கடலூர் 607001)

"பல சுரங்களை ஒரே காலத்தில் இயக்கி அவைகளின் இணைப்பிலிருந்து பிறக்கும் இனிமையை அடிப்படையாகக் கொண்டது மேல் நாட்டிசை. அதாவது 'ஹார்மணி' என்பதை அடிப்படையாகக் கொண்டது. (Harmony is the Combination of simultaneous concordant notes) ஒன்றற்கொன்று இணை, கிளை, நட்பு என்ற உறவுள்ள சுரங்களை ஒன்றன்பின் ஒன்றாக அடுக்கி அதனால் பிறக்கும் இராகம் அல்லது பண் எனும் தத்துவத்தை அடிப்படையாகக் கொண்டது நம்நாட்டு இசை அதாவது (Melody) என்பதை அடிப்படையாகக் கொண்டது, (Melody is the arrangement of single notes in musically expressive succession.)"[6]

இவ் ஒப்புமைக் குறிப்பால் இருவேறுபட்ட அடிப்படைத் தனிமைகளையும் உணர்ந்து கொள்ளமுடிகின்றது.

## தொன்றுபடுமுறை

சிலப்பதிகார உரைகாரர்களான அரும்பத உரைகாரரும் அடியார்க்கு நல்லாரும் சிலப்பதிகாரத்தில் வரும் 'தொன்றுபடு முறையில் நிறுத்தி' என்றும் தொடருக்குத் தரும் குறிப்புகளை இந்நூலில் நன்கு ஆராய்ந்து வெளிப்படுத்தியுள்ளார். குரவைக் கூத்தாடிய எழுவருக்கும் குரல் முதலிய ஏழிசைப் பெயர்கள் படைத்துக் கொள்ளப்பட்டமையாலும். அவர்கள் ஏழிசை நிற்கும் தொன்றுபடு முறையிலேயே வட்டமாய் நின்று ஆடினமையாலும், அந்த இரு உரையாசிரியர்களும் தொன்றுபடு இசையின் அடிப்படையான வட்டப் பாலையைப்பற்றி விரிவாக எழுதியிருக்கின்றார்கள். குரல் முதலிய ஏழும் வட்டப்பாலையில் நிற்கும் பழைய முறையை விளக்க இராசிவட்டம் அமைக்கும் முறையையும், மேஷம் முதலான பன்னிரண்டு இராசிகளிலும் குரல் முதலிய ஏழும் நிற்கும் முறையையும் அரும்பத உரைகாரர் விளக்குகின்றார். அதற்கு மேலும் விளக்கம் தரும் முறையில், அடியார்க்கு நல்லார் இராசிவட்டத்தில் இசை நரம்புகள் ஏழும் நிற்கும் முறை அந்நரம்புகளின் மாத்திரை, பிறப்பு, நாற்பெரும் பண்புகள் பிறக்கும் நிலை; பாலையாழின்கண் குரல்திரிபினால் ஏழு பாலையிசைகள் பிறக்கும் விதம் ஏழு பாலையிசைகளின் பெயர் முதலாயின குறித்து உரையில் கூறுவார்.

---

6. சிலப்பதிகாரத்து இசைத்தமிழ், ப. 2

## இராசிவட்டம்

இப்பகுதினை மேலும் விளக்கம் செய்யும் வகையில் உரையாசிரியர்களின் கருத்து வழியே நின்று இராசி வட்டத்தில் இசை நரம்புகள் நிற்கும் முறையை விளக்கப்படம் தந்து அமைந்திருப்பது பெரிதும் பயன் தருவதாக உள்ளது. (பக். 10) அவ்வாறே பழந்தமிழ்ப் பெயர்கள், குறியீடு என பாகுபடுத்திக் காட்டியிருப்பது இசைக்கலையை மேலும் புரிந்து கொள்ள ஏற்ற வகையில் அமைந்துள்ளது.

| தமிழ்ப்பெயர் | வடமொழிப்பெயர் | குறியீடு |
|---|---|---|
| குரல் | ஷட்ஜம் | ச |
| துத்தம் | ரிஷபம் | ரி |
| கைக்கிளை | காந்தாரம் | க |
| உழை | மத்திமம் | ம |
| இளி | பஞ்சமம் | ப |
| விளரி | தைவதம் | த |
| தாரம் | நிஷாதம் | நி |

## குரல்—இளி உறவு

சிலப்பதிகாரத்தில் இளங்கோ அடிகள் பல இடங்களில் 'குரல்—இளி உறவு' பற்றிக் குறிப்பிடுகின்றார்.

ஏற்றிய குரல் இளி என்று இரு நரம்பன்
ஏப்பக் கேட்கும் உணர்வின னாகிய (அரங்கேற்று, 59, 60)

என்னும் பகுதிக்குப் பழைய உரைகாரர் 'பதினாற் கோவையினிடத்துக் குரல் நரம்பு இரட்டிக்க வரும் அரும்பாலையும் இளி நரம்பு இரட்டிக்க வரும் மேற்செம்பாலையும் போல அல்லாத பாலைகளையும் இசைநூல் வழக்காலே இணைநரம்பு தொடுத்துப் பாடும் அறிவினையுடையனாயென்றவாறு' என்று விளக்கம் தருவார், இதுகுறித்து மேலும் சில விளக்கக் குறிப்புகளைத் தொடர்ந்து தருவார் உரைகாரர். இப்பகுதிகளனைத்தையும் நூலாசிரியர் நுட்பமாகத் தொகுத்துப் பின்னர் 'தாரத்து உழை பிறக்கும்' என்னும் தொடருக்கு அவர் தரும் விளக்கம் எண்ணி இன்புறற் பாலதாய் அமைந்துள்ளது.

அவர் தரும் குறிப்பு வருமாறு: 'இசைக் கருவியில் ஒரு தந்தியை மீட்டினால் அத்தந்தியின் முழு நீளத்தில் அசைவு ஏற்பட்டு ஒரு ஒலி பிறக்கும், அதே போழ்து அத்தந்தி இரண்டு,

மூன்று, நான்கு, ஐந்து பகுதிகளாகப் பிரிந்து அசையும். ஒவ்வொரு பகுதியும் 'லூப்' (Loop) எனப்படும். அப்படி இரண்டாகப் பிரிந்து அசையும்போது மேல் சட்சமும் (வலிவுக்குரல்) மூன்றாகப் புரிந்து அசையும் போது பஞ்சமும் (இளி) பேசும். தந்தியின் மூன்றில் ஒரு பங்கில் விரலை வைத்து மெல்ல மீட்டினால் இப்பஞ்சம சுரத்தைக் கேட்கலாம். இரண்டாகப் பிரிந்து அசையும் போது பிறக்கும் சுரமும் சட்சமே யாதலால் மூன்றாகப் பிரிந்து அசைவதால் பிறக்கு பஞ்சமத்தையே குரலினின்றும் பிறப்பதாகக் கொண்டனர். ஆகவே எந்தச் சுரத்தை இசைத்தாலும் அதன் பஞ்சம பாவமுள்ள (இளி உறவுள்ள) சுரமும் அவ்வொலியில் பிறக்கும். இம்முறையில் தார நரம்பை இயக்கினால் அதினின்றும் எட்டாம் இடத்திலுள்ள (இளியுறவான) உழை பிறக்கும் என்றனர்'' என்று எழுதும் போது தான் முன்னையோர் தந்த கருத்தின் நுட்பம் நமக்கு எளிமையாகத் தெளிவாகின்றது.

## நாற்பெரும் பண்புகள் நால்வகையாழ்கள்

நாற்பெரும் பண்களாகப் பாலையாழ், குறிஞ்சியாழ், மருதயாழ், நெய்தலியாழ் ஆகியவற்றைக் குறிப்பிடுவர். யாழ் என்னும் சொல் பண் என்பதையும் குறிக்கும்; கருவி என்பதையும் குறிக்கும் என்பர். நான்கு பண்களுக்கும் உரிய நரம்புகள் தனித்தனியே இயலுமாறு அமைக்கப் பெற்ற நால்வகை யாழ்கள் இருந்தமையும் இதனால் புலனாகும். 'வடமொழியில் 'சுரமேள கலாநிதி' என்னும் இசையிலக்கணநூல் எழுதிய 'இராமாமாத்தியர், என்பார் தம்நூலுள் ஏகராக வீணை, சர்வராக வீணை என்ற வகைகளைக் குறிப்பிட்டிருக்கிறார். தற்போது நம் நாட்டில் வழங்கும் வீணை சர்வராக வீணையாகும். ஸ்தாயிக்குரிய பன்னிரண்டு இடங்களும் இதனுள் அமைக்கப் பெற்றிருத்தலால் எல்லா இராகங்களையும் இதனுள் வாசித்தல் கூடும். 'ஏகராக வீணை' என்பது ஒரு குறிப்பிட்ட இராகத்திற்குரிய சுரங்கள் மட்டும் இயல்வது' என்று இன்றுள்ள சூழலையும் இதனோடு பொருத்திக் காட்டுவார் ஆசிரியர்[7]

முல்லைப்பண் (மோகனம்)

'முல்லைப்பண்' என்னும் பழம்பண்தான் இப்பொழுது மோகனம் என்ற பெயருடன் வழங்குகின்றது' என்னும் அரிய

7. மு. கா. நூ. ப. 30

ஆராய்ச்சி முடிவினை இந்நூலாசிரியர் பல வருடங்களுக்கு முன்பே வெளியிட்டார். அதனை இப்பொழுது இசைத்துறையில் வல்ல அறிஞர்களனைவரும் ஒப்புக் கொண்டுள்ளனர்.

குரல் முதலிய ஏழு இசை நரம்புகளாக நின்ற பெண்கள் வட்டமாய்த் தொன்றுபடு முறையில் நின்றபின் குரல் நரம்பாக நின்றபின் துத்தநரம்பாயவளை நோக்கி 'முல்லைத் தீம்பாணி' பாடுதும் என்கிறாள். சிலம்பில் இப்பகுதி

'பாடுதும் முல்லைத் தீம்பாணி என்றாள்
எனா
குரல் மந்த மாக இளிசம னாக
வரல் முறையே துத்தம் வலியா—உரன்இலா
மந்தம் விளரி பிடிப்பாள்' (சிலம்பு, ஆய்ச்சி 17, 18)

எனவரும். இப்பகுதிக்கு ஆசிரியர் தரும் விளக்கம் அவர் தம் நுண் மாண் நுழை புலத்தைக் காட்டுவதாக விளங்குகின்றது;

"குரல், இளி, துத்தம் விளரி ஆகிய சுரங்களைப் பிடிக்கின் றாள். இந்நான்கு கிளையாதல் நோக்குக. 'குரல் மந்த மாக' என்றதால் குரல் (ச) தாழ்ந்து ஒலித்தது என்றா யிற்று. இளிசமனாக என்றதால் இளி (ப) சமஸ்தாயியில் இயங்கிற்று என்பது புலனாகின்றது. இளியிலிருந்து ஐந்தாம் நரம்பாகிய துத்தம் வலியா இயன்றது.

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| கு | து | கை | உ | இ | வி | தா | கு | து |
| ச | ரி | க | ம | ப | த | நி | ச | ரி |

குரலிலிருந்து ஐந்தாவதாகிய இளி சமஸ்தாயியில் நிற்றலை யும், இளியிலிருந்து ஐந்தாவதாகிய துத்தம் வலிவுத்தானத் தில் (தாரஸ்தாயியில்) நிற்றலையும் காண்க.

என்னும் பகுதியாலும் இப்பகுதிக்கு மேற்கொண்டு அவர் தரும் விளக்கங்களாலும் பழம்பண்ணை அரிதின் ஆராய்ந்து வெளிக் கொணர்ந்த ஆய்வுத்திறன் புலனாகும்.

முல்லைப்பண் என்ற விடத்தில் 4 நரம்புகளை அடிகள் சொல்லி ஐந்தாவது நரம்பைச் (ஸ்வரத்தை) சொல்லாமல் மறை வாய் வைத்திருப்பதை, முல்லைப்பண் 'திறம்' என்று கூறப்பட்ட திலிருந்து 'திறம்' என்பது 5 ஸ்வரங்கள் கொண்ட ஔடுவராகமாவ

8. சிலப்பதிகாரத்து இசைத்தமிழ், பக். 87

தால் ஏழு ஸ்வரத்தில் எந்த ஐந்தாவது ஸ்வரம் எது என்று கண்டு கொள்ள வேண்டி, ஆனாயநாயனார் புராணத்தில் சேக்கிழாரால் சொல்லப்பட்ட "மாறு முதற் பண்ணினபின்...கொடிப்பாலைனி யில் நிறுத்தி" என்ற பாட்டின் மூலம் கோடிப் பாலையில் (சங்கராபரணத்தில்) தாரம், உழை இவை நீங்கியது முல்லைப் பண் எனநுட்பமாய் அறிந்து, அத்திறம் இப்பொழுதுள்ள மோகன ராகமே யாகுமென விளக்கியிருப்பது வியக்கத்தக்கதே'[9] எனச் சங்கீத கலாநிதி முடிகொண்டான் வேங்கடராமையர் அவர்கள் கூறும் கூற்றாலும் இவர் தம் ஆய்வின் திட்பமும் ஒட்பமும் இனிது புலனாகும்

## உலகிசை

ஐந்து சுரங்களால் இயலும் இம்மோகனப்பண் உலகெங்கணும் எல்லா நாட்டினங்களிலும் காணப்படுகின்றது என்றும் மேனாட்டில் இது cycle of Fifths எனப்படும் என்றும் கூறுவர். ஐந்தாம் நரம்புக் கிரமத்தில் பிறப்பதால் இப்பெயர் பெற்றது. ஆனால் இது தற்போது பாடப்பெறும் தேவாரப் பண்களில் காணப்படாததால் பழந்தமிழ்நாட்டிசையில் இப்பண் இல்லையோ என்று சிலர் ஐயுறுகின்றனர். ஐந்து கிளை நரம்புகளைப் பற்றிச் சூத்திரம் வகுத்த நம் முன்னோர், அவ்வைந்து நரம்புகளைக் கொண்டே ஒரு திறம் இயற்றும் திறம் பெற்றிருந்தனர் என்பதற்கு ஐயமும் உண்டோ? திருவாசகம் மோகனராகத்தில் ஓதப்பெற்று வருவதும் ஈண்டு நினைவில் கொள்ள வேண்டும் என்றும் கூறுவர்.

## செம்பாலை (ஹரிகாம்போதி)

முல்லைப்பண்ணை மோகனம் என்பதைத் தெளிவு படுத்தியதைப் போலவே செம்பாலை—ஹரிகாம்போதியே ஆகும் என ஆசிரியர் தெளிவுறுத்துகின்றார்.

பாலைகள் ஏழு நரம்புகளும் இயல்வன. தற்கால வழக்கில் இவை மேளகர்த்தாக்கள் எனப்படும். பாலையினின்றும் பண்கள் பிறத்தல் போல், மேளகர்த்தாக்களினின்றும் ஜன்ய ராகங்கள் எனப்படுபவை பிறக்கும் என்பார்.

அறிந்ததிலிருந்து அறியாததற்கு (from the known to the unknown) என்ற கொள்கைப்படி, தற்போது வழங்கும் மேளகர்த்

---

9. சிலப்பதிகாரத்து இசைத்தமிழ் ப, xxvi

தாக்களில் செம்பாலை முதலிய பாலைகளின் விவரம் குறித்து இக்காலக் குறியீடுகளின் பின்வருமாறு காட்டுகின்றார்.

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 22 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| கு | — | து | — | கை | உ | — | இ | — | வி | தா | — |
| ச | — | ச ரி | — | அக.ா | சு.ம | — | ப | — | சத | கைநி | — |

சட்சம், சதுசுருதி ரிஷபம், அந்தரகாந்தாரம், சுத்த மத்திமம், பஞ்சமம், சதுசுருதி தைவதம், கைசிகி நிஷாதம் ஆகிய சுரங்களை யுடைய இது ஹரிகாம்போதி என்னும் இராகம் என்பதை இசைப் புலவர்கள் எளிதில் உணர்வர் என்றும் இது 72 மேளகர்த்தாக் களும் 28 ஆவது ஆகும் என்றும் குறிப்பிடுவார்.

## ஹரிகாம்போதியா? சங்கராபரணமா?

கைக்கிளை கும்பத்தில் நிற்கின்றது. அங்கிருந்து எட்டாவது இடம் கன்னியாகும், மற்ற நரம்புகள் எட்டாம் இடத் தில் நிற்பது போல் தாரமும் கும்பத்திலிருந்து எட்டாம் இடமான கன்னியில் நிற்க வேண்டாமோ? அப்படித்தாரம் கன்னியில் நின்றால் அது சங்கராபரணம் ஆகாதோ?'' என் னும் ஐயத்தை எழுப்பி அதனால் இளங்கோ அடிகளாரின் கூற்றைக் கொண்டும் அடியார்க்கு நல்லாரின் உறை கொண்டும் தெளிவு படுத்துகின்றார்.

'இறுதி ஆதியாக ஆங்கவை
பெறுமுறை வந்த பெற்றியின் நீங்காது'

(அரங்கேற்று. 82-83)

என்று சிலம்பு கூறும். 'முதலில் தோன்றிய நரம்பு தாரம்' என்பது அடியார்க்கு நல்லார் தெளிவுரை. தொடங்கும் போதே தாரம் நிற்கும் சிம்மத்தில் தொடங்கப்பட்டது. அப்படித் தொடங்கிய தால்தான் கைக்கிளை கும்பத்தில் நிற்கின்றது. அவ்வாறிருக்க கைக்கிளையிலிருந்து மறுபடியும் தாரம் பிறத்தல் கூடுமோ? ஆகவே தாரம் சிம்மத்தில்தான் நிற்கும். பழந்தமிழ் நாட்டின் அடிப்படைப் பாலையான செம்பாலை ஹரிகாம்போதியேயாகும் என்பார்.[10]

---

10. சிலப்பதிகாரத்து இசைத்தமிழ், பக். 131

## சொல்வழக்கு

யாழ், குழல் முதலிய கருவிகள் ஒலிக்குமிடத்து, 'குழல் வழி நின்றது யாழே' என்றார் இளங்கோவடிகள். குழலில் ஊதும் துளை தவிர, சுரங்களை வாசித்தற்கு ஏழு துளை கள் உள்ளன. துளைகளை முழுதும் மூடித்திறந்து வாசிக்கக் குழலில் ஹரிகாம் போதியே பேசும் குழலின் சுத்தத் துளைகளில் பேசும் ஹரிகாம் போதியும், குழல் வழிநின்ற யாழிற்பிறக்கும் செம்பாலையும் ஒன்றே என்பது தெளிவாகும், ''காம் பூதி காம்போதி'' என்னும் வழக்கையும் நோக்குக. காம்பு + ஊதி; காம்பு—குழல்' என்று மேலும் தம் கருத்துக்கு அரண் சேர்ப்பார் ஆசிரியர்.[11]

## அடிப்படை அலகு

தமிழ்நாட்டு இசையின் அடிப்படைப் பாலை (Fundamenatal Scale) ஹரிகாம்போதி என்றும் அதினின்றும் ஏழு பாலையிசைகள் தோன்றின என்றும், அதினின்றும் 103 பண்கள் பிறந்தன என்றும் கூறுவர், இவ் ஏழுபாலையிசை களையும் நன்கு ஆராய்ந்து இன்று வழக்கில் அவற்றிற்குரிய இணையான இராகங்களையும் ஆசிரியர் பட்டியிலிட்டுக் காட்டுகின்றார்.[12]

| பாலை | குரல்திரிபு (வலமுறை) | இராகம் | மேளஎண் |
|---|---|---|---|
| செம்பாலை | குரல் குரலாயது | ஹரிகாம்போதி | 28 |
| படுமலைப்பாலை | துத்தம் ,, | கல்யாணி | 65 |
| செவ்வழிப்பாலை | கைக்கிளை ,, | தோடி | 8 |
| அரும்பாலை | உழை ,, | கரஹரப்ரியா | 22 |
| கோடிப்பாலை | இனி ,, | சங்கராபரணம் | 29 |
| விளரிப்பாலை | விளரி ,, | — | — |
| மேற்செம்பாலை | தாரம் ,, | நடபைரவி | 20 |

(இவற்றுள் விளரிப்பாலைக்கு நேரான இராகம் வழக்கில் இல்லை என்பார்)

இது இசைக்கலைக்கும் தமிழாராய்ச்சிக்கும் கிடைத்த அரிய கருவூலமாகும். இதனைப் பின்பற்றி இன்னும் உள்ள பழந்தமிழ்ப் பண்புகளுக்கு இன்று நடைமுறையில் என்னென்ன இராகங்கள்

11. சிலப்பதிகாரத்து இசைத்தமிழ், பக். 132
12. சிலப்பதிகாரத்து இசைத்தமிழ் பக். 41

பயின்று வருகின்றன என்பதனை இசைப் புலமையும் தமிழ்ப் புலமையும் கைவரப் பெற்றவர்கள் கண்டறிவது மிகமிக இன்றி யமையாததாகும்.

'இளங்கோவடிகளும் 22 சுருதிகளும்', நூற்றுமூன்று பண்கள், 'வட்டப்பாலையிற் காணவேண்டிய நுணுக்கங்கள்' முதலிய பிற கட்டுரைகளும் தமிழிசையின் வரலாற்றை அறிய முனைவார்க்குப் பெரும் பயன் விளைப்பனவாகும். பின்னிணைப்பில் தந்துள்ள பட விளக்கங்கள் ஆய்வாளர்க்குப் பெரிதும் துணை நிற்பன.

## சங்கேத மொழிகள்

சோதிடம் வைத்தியம் முதலான நூல்களில் காணப்படும் சங் கேத மொழிகளைப் போலச் சிலப்பதிகாரத்திலும் காணப்படும் இசைபற்றிய குறியீடுகளைப் பெரிதும் முயன்று விளக்கம் காட்டிப் படிப்போர்க்குத் தெளிவுபடுத்தியுள்ளார் நூலாசிரியர் டாக்டர் எஸ். இராமநாதன் அவர்கள். 'தம்முடைய சொந்தக் கற்பனை களையோ, அபிப்ராயங்களையோ எதையும் சிறிது கூடப் புகுத்தா மல் உரையில் உள்ளதை விளக்கஞ்செய்து உள்ளதை உள்ளவாறே எழுதியிருப்பது மிக மெச்சத் தகுந்தது' என்று சங்கீத கலாநிதி முடிகொண்டான் வேங்கடராமையரின் கூற்று[13] நூலைப்படிப் போர் நன்குணர்வர். அறிவியல் நோக்கில் சிலப்பதிகார இசைக் குறிப்புகளை ஆராய்ந்து வெளிப்படுத்தியுள்ளார் ஆசிரியர்.[14] என்பது குறிப்பிடத் தகுந்ததாகும்.

## தமிழர் தோற்கருவிகள்

இசையோடு இயைந்த வாழ்வு நடத்திய பழந்தமிழர் பல்வேறு வகையான இசைக் கருவிகளைப் பயன்படுத்தி வந்திருக்கின்றனர். முன்னைய இலக்கணிகள் ஒவ்வொரு நிலத்திற்குரிய கருவிகளைத் தனித்தனியே பாகுபடுத்திக் காட்டியிருப்பதும் இக்கருத்தை மேலும் வலிவுறுத்தும். தாள லயத்தை வரையறுத்து இசையோடு ஒன்றிய கருவிகள் பலவாகும். இந்தியாவில் ஐந்நூற்றுக்கு மேற் பட்ட இசைக் கருவிகள் உள்ளன என்று கூறுவர். இவற்றுள் ஏறத் தாழ 250 இசைக்கருவிகளைப் தமிழர் பயன்படுத்தியுள்ளனர் என அறியும்போது தமிழரின் இசைக்கலையார்வம் இனிது புலனா கின்றது.

---

13. சிலப்பதிகாரத்து இசைத்தமிழ் U. xix
14. M.Arunachalam, Hindu (Review) 6.7.82.

## நால்வகைக் கருவிகள்

தோற் கருவிகள், துளைக் கருவிகள், நரம்புக் கருவிகள், கஞ்சக் கருவிகள் என நால்வகைக் கருவிகளாகப் பகுத்தனர் பண்டையோர். இவற்றுடன் மிடற்றுக் கருவிகளையும் சேர்த்துக் கொள்வர். இவைபற்றிய செய்திகளைப் பண்டைய இலக்கியங் களினின்றும், கல்வெட்டுகளினின்றும், அகழ்வாய்வுப் பொருள்களி னின்றும் அறியலாம்.

இங்ஙனம் கிடைக்கும் அனைத்துச் செய்திகளையும் தொகுத் துத் தமிழர் தோற்கருவிகள் என்னும் இசைக்கலை ஆய்வு பற்றிய நூல் ஒன்றினை வழங்கியுள்ளார் ஆசிரியர் திரு. ஆளவந்தார். இலக்கியச் செய்திகள், கல்வெட்டுச் செய்திகள் முதலானவற்றி லிருந்து கிடைக்கும் இசைக்கருவிகளையும் அதன் இயல்புகளையும் இசைக்கலை அறிஞர்களின் கருத்துகளோடு இணைத்து ஆராய்ந்து முடிவுகளை மேற்கொண்டமை நூலால் நன்கு விளங்குகின்றது. இன்றுள்ளோடும் பழைய இசைக்கருவிகளைப் பார்க்கும் வண்ணம் இடையிடையே அரிய இசைக் கருவிப் படங்களை இணைத்திருப் பது மேலும் விளக்கம் தருவதாக அமைந்துள்ளது.

## தோற்கருவிகள்

பழந்தமிழர் பயன்படுத்திய தோற்கருவிகளின் பெயர்களையும் அதன் விவரக் குறிப்புகளையும் அறியும்போது பல்வகையான இசைக் கருவிகளைப் பயன்படுத்திய திறமும், நுட்பமான இசை யாற்றலும் தெளிவாகின்றன. அரிக் கூடு, ஆகுளி, ஆவஞ்சி, ஆமந் திரிகை, இடக்கை, உடுக்கை, உறுமை, எல்லரி, ஏறங்கோள், ஒரு வாய்க் கோதை (ஒருகட்பறை) கணப்பறை, கண்டிகை, கரடிகை, கல்லவடம், கல்லல், கல்லலகு, கிணை, கிளை, கொட்டு, கொடு கொட்டி, கோட்பறை, கைத்திரி (துடி, இடக்கை), சல்லிகை, சிறு பறை, தகுணிச்சம், தக்கை, தண்டோல், தருணிதம், தட்டை, தடாரி, தண்ணுமை, தமருகம் (டமரு), தவண்டை, தம்பட்டம், தவில், திமிலை, துடி, துத்திரி, துந்துபி, துந்துமி, தூரியம் தொண் டகச் சிறுபறை, படகம், (படவம்) படலிகை, பதலை, பம்பை, பறை பேரி, பேரிகை, மத்தளம், முரசம் முருகியம், முருடு, முழவம், குடமுழவு, ஐம்முக முழவம், அகமுழவு, அகப்புற முழவு, புறமுழவு, புறப்புற முழவு, பண்ணமை முழவு, நாண் முழவு, காலை முழவு, மொந்தை, முதலாய 65 கோற்கருவிகள் பழந்தமிழ் இலக்கியங் களில் பயின்று வருவதை எடுத்துக் காட்டும்போது எத்தனை

வகையான கருவிகளில் பண்டையோர் பயிற்சி பெற்றிருந்தனர் என வியக்கிறோம். இவை அத்துணைக்கும் இலக்கிய ஆட்சிகள் உள்ளன. இவற்றுள் துடி, முரசம், முழவம் ஆகியன பெருவழக்குப் பெற்றுள்ளன. வாழ்வில் இன்றியமையாத கூறாக இக்கருவிகள் ஆட்சி செலுத்தின போலும்.

## கருவிகள் செய்முறை

கருவிகளுக்கு ஏற்ற தோல், மரங்கள் முதலாயின குறித்தும் சில இலக்கணங்களை முன்னையோர் ஏற்படுத்தியுள்ளனர். உத்தமமான ஆவின் தோலையும் மான் தோலையும் பயன்படுத்தினர். ஏற்றினது செவ்வித்தோலை மயிர்சிவாமல் போர்த்தலும் உண்டு இக்குறிப்புகளை மலைபடுகடாம், மதுரைக்காஞ்சி, பஞ்சமரபு முதலிய நூல்கள் எடுத்தியம்புகின்றன கருங்காலி, செங்காலி, வேம்பு, பலா, கஞ்சம் (உலோகம்) குரவம், மண் ஆகிய இவை முழவுகள் செய்வதற்குத் தகுதியானவை எனப் பஞ்சமரபு கூறும். மரங்கள் பொத்துப்படாமல், சாவாமல், மூவாமல், இளமையின்றி நடுவயதினவாய் உயர்ந்த சமதளமான நிலத்துளவான மரங்களே முழவுகள் செய்யத் தகுந்தவை என்பர்.

கஞ்சத்தால் செய்வது முழவம்
கருங்காலியால் செய்வது இடக்கை
செங்காலியால் செய்வது சல்லி
வேம்பாற் செய்வது மத்தளம்
பலாவாற் செய்வது கரடிகை
குரவாற் செய்வது பேரிகை

என வரையறுப்பதும் எண்ணுதற்குரியது;

## பஞ்சமரபு

அறிவனார் இயற்றிய பஞ்சமரபு என்னும் நூலில் இசை, முழவு, தாளம், கூத்து, அவிநயம் ஆகிய ஐந்தும் விளக்கப் பட்டுள்ளன. தோற்கருவிகளின் இலக்கணம், பெயர்கள், அமைதிகள் போல்வன முழவுமரபில் சொல்லப்பட்டுள்ளன. தோற்கருவிகளைப் பெயர், முறைமை, பிண்டம் பேரெழுத்து எனும் நான்கு வகைப்படுத்துவர். தோற்கருவிகளை மேலும் வன்மைக்கருவி, மென்மைக் கருவி, சமக்கருவி, தலைக்கருவி, இடைக்கருவி, கடைக் கருவி, வீரக்கருவி என எழுவகையில் அடக்குவர். இவ்வாறே பிறவற்றையும் பகுத்துக்காட்டும் மரபால் இசைக்கருவிகள் எவ்வகையிலெல்லாம் பயன்பட்டன என்பது புலனாகும்.

ஒவ்வொரு கருவியைப் பற்றிய விளக்கக் குறிப்பும், படங்களும், பின்னிணைப்பில் தரப்பட்டுள்ள இசைக் கலைச் சொல் அகர நிரலும் ஆய்வாளர்க்குப் பெரும்பயன் விளைப்பன. எல்லா இசைக்கருவிகளைப் பற்றிய செய்தித் தொகுப்பும் பெற்ற இசைக் களஞ்சியம் உருவாவதற்கு இந்நூல் ஒரு முன்னோடி எனலாம்.

## சுவர தாள அமைப்புடன் பாரதியார் பாடல்கள்

## பாரதியும் இசையும்

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞரான பாரதியாரின் சில பாடல்களுக்கு இசைதாளக் குறிப்புகளுடன் மெட்டமைத்துப் பதிப்பித்துள்ளார் திரு பத்தமடை எஸ். கிருஷ்ணன் அவர்கள். பாரதியின் 28 பாடல்களுக்குச் சுவரதாள அமைப்புகள் தரப்பட்டுள்ளன 'மகாகவி ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியாரின் பாடல்களை முழு கர்னாடக இசை நிகழ்ச்சிக்குத் தக்கபடி மெட்டமைத்து, தொகுத்துச் சுவரதாள அமைப்புடன் 'பாரதி நூற்றாண்டு மலராக' வெளியிட்டுள்ளார். இதுவரை துக்கடா நிலையிலிருந்த பாரதி பாடல்களைக் கச்சேரி நிலைக்கு உயர்த்திப் புதுமை புகுத்தும் முயற்சி என்று தன் முயற்சியைக் குறிப்பார். 'நம் பெரியோர்கள் இசை நுட்பத்தைப் பலவழியில் பாதுகாத்துள்ளார்கள். துஜாவந்தி, மாஞ்சி, மங்களகைசிகி, பாடி கர்னாடக காந்தாரி நவரோஜ் போன்ற ராகங்களை நிரந்தர மெட்டுக்கள் மூலம் கிராமிய இசை, திருமணப் பாடல்கள் மூலம் காத்த நுட்ப மறிந்த நம் பாரதியார் ஏற்றப் பாட்டுப் போன்ற கிராமிய இசையில் தம் நெஞ்சைப் பறிகொடுத்தார்' எனப் பாரதி கிராமிய இசையில் ஈடுபாடு கொண்டுள்ளதைக் குறிக்கின்றார்.

பாரதியின் பாடல்களுக்கு ஆசிரியர் தந்த இராகம் தாளம் விவரம் வருமாறு:

| எண் | பாட்டின் பெயர் | இராகம் | தாளம் |
|---|---|---|---|
| 1. | ஆன்மாவான | ஹம்ஸத்வனி | ஆதி |
| 2. | விந்தைக்கிறைவா | கௌளை | மி.சாபு |
| 3. | ஆதிப்பரம் பொருளின் | ஆபோகி | ஆதி |
| 4. | நெஞ்சு பொறுக்கு தில்லையே | துஜாவந்தி | ஆதி |
| 5. | கண்ணன் திருவடி | ஆரபி | மி.சாபு |
| 6. | என்று பிறந்தவள் | மோஹனம் | ச.சாபு |
| 7. | ஆடுவோமே | தேஷ் | ஆதி |

| | | | |
|---|---|---|---|
| 8. | உண்மையறிந்தவர் | கல்யாணவஸந்த | ரூபகம் |
| 9. | சந்திரனொளியில் | லலித | மி.சாபு |
| 10. | சென்றதினி | சங்கராபரணம் | ஆதி( திஸ்ரகதி) |
| 11. | ஓம்சக்தி | பூரிகல்யாணி | ஆதி |
| 12. | இன்னுமொருமுறை | பூஷாவளி | ஆதி |
| 13. | வருவாய் | தோடி | ஆதி |
| 14. | வையமுழுதும் | ஜோதிஸ்வரூபிணி | மி.சாபு |
| 15. | பாரதஸமுதாயம் | யமுனா கல்யாணி | ஆதி(திஸ்ரகதி) |
| 16. | பேயாய் உழலும் | வீணாதாரி | ரூபகம் |
| 17. | மனமெனும் | ஜயந்தஸேனா | மி. சாபு |
| 18. | யாதுமாகி | நீலாம்பரி | ஆதி |
| 19. | ஜயமுண்டு | கமாசு | ஆதி(திஸ்ரகதி) |
| 20. | காலாஉனைநான் | சக்கரவாகம் | ஆதி |
| 21. | தேடிச்சோறு | ஸஹானா | மி.சாபு |
| 22. | இயற்கையென்றுனை | பிலஹரி | மி. சாபு |
| 23. | நிற்பதுவே | சிம்மேந்திர மத்யமம் | ஆதி(கண்டகதி) |
| 24. | மன்னும் இமயமலை | பூபாளம் | மி.சாபு |
| 25. | பூட்டைத்திறப்பது | ஆஹிரி | ரூபகம் |
| 26. | வானுலகு | அம்ருதவர்ஹிணி | ஆதி |
| 27. | எந்தையும்தாயும் | சுபபந்துவராளி | ஆதி(கண்டகதி) |
| 28. | பக்தியினாலே | காம்போதி | மி.சாபு |

இவ்வமைப்புக் குறித்து இசையறிஞர் செம்மங்குடி சீனிவாசய்யர், 'வித்வான் ஸ்ரீ பத்தமடை கிருஷ்ணன் அவர்கள் ஸ்ரீ சுப்பிரமணிய பாரதியாரின் கவிதைகளில் சிலவற்றிற்கு மிகவும் ரஞ்சகமாக ப்ரஸித்த ராகங்களிலும்,வீணாதாரி, துஜாவந்தி, கல்யாண வஸந்தம் போன்ற ரக்தி ராகங்களிலும் வர்ண மெட்டமைத்து இந்த இசைமலரை உருவாக்கியுள்ளார். நூலில் 28 உருப்படிகள் அடங்கியுள்ளன. ஸ்வர தாள அமைப்பு எளிமையாக அமைக்கப்பட்டிருப்பது பாராட்டிற்குரியதாகும்' என எடுத்துரைப்பது உளங்கொளற்குரியது.

## இசையாய் இன்தமிழாய்
## திருக்கோயில்களில் தமிழிசை

பழமரபோடு தமிழிசைப் பண்கள் முறைவழுவாது திருக்கோயில்களில் ஓதப்பட்டுவந்தன. திருக்கோயில்களில் தேவாரத்தை உரிய பண்ணிப்பாடி வந்த ஓதுவார்களுக்குப் பண்டைய

மன்னர்கள் மானியம் அளித்துச் சிறப்பித்ததைக் கல்வெட்டுகள் எடுத்துரைக்கின்றன. ஆகமங்களைப் பயிற்றுவிக்கவும் தேவாரங் களைப் பண்ணொடு பாடவும் இசைக் கருவிகளை இயக்கவும் பயிற்சியளிக்க அக்காலத்தே கல்லூரிகளும் இருந்தன. இங்ஙனம் பழைய மரபினைப் போற்றித் தேவாரங்களைப் பழம்பண்ணில் இசைத்த ஓதுவார் மரபில் தோன்றிய திருநெல்வேலி சுந்தரமூர்த்தி ஓதுவார் அவர்கள் நினைவு வெளியீடாக மலர்ந்த இவ்வெளியீட்டில் இசைக்கலை குறித்த அறிஞர்களின் பல்வேறு கட்டுரைகள் உள்ளன.

## பண்ணிசைப் பெருமை

தேவாரப் பண்ணிசையை முறை வழுவாது ஓதி அறிஞர்கள் பலரின் பாராட்டைப் பெற்ற ஓதுவா மூர்த்திகளின் வரலாறும், நிகழ்ந்த பல நிகழ்ச்சிகளும் இசைக்கலைக்கு அக்காலத்தே இருந்த மதிப்பை எடுத்துரைக்கும், இயல், இசை அறிஞர்களும் சமய அருளாளர்களும் இசைக்கலைக்குச் செய்யும் சிறப்பினையும் உணர முடிகின்றது. காஞ்சிபுரம் இசைமன்னர் நயினாப்பிள்ளை போன்ற அறிஞர் பெருமக்கள் ஓதுவாமூர்த்திகளின் பாடலில் மிளிரும் அசையையும் புலமையையும் கண்டு மகிழ்ந்து பாராட்டிய குறிப்புகளும் தெரிய வருகின்றன.

## தமிழிசை மாண்பு

சுந்தர ஓதுவா மூர்த்திகளின் 'தமிழிசை மாண்பு' என்னும் அரிய கட்டுரை (1941) அவர்தம் முத்தமிழ்ப் புலமையினை எடுத் துரைப்பதாய் அமைந்துள்ளது. 'ஒலி வகைகளுக்குப் பண்டைத் தமிழ் நாட்டுப் பெரியோர் குரல், துத்தம், கைக்கிளை, உழை இனி, விளரி, தாரம் என்று வழங்கியதோடு நெஞ்சிலிருந்து ஒலி தோன்றுவதை மந்திரம் என்றும், கண்டத்திலிருந்து வருவதை மத்தியம் என்றும் சிரசிலிருந்து எழும் ஒலிகளைத் தாரம் என்றும் பெயரிட்டு வழங்கி வந்தனர். எழுவகை ஒலிகளையும் குறிப்பதற் குத் தமிழ்மொழியில் உள்ள உயிரெழுத்துக்களில் ஆ,ஈ,ஊ,ஏ,ஐ, ஓ.ஔ—இவ்வேழு நெட்டெழுத்துக்களையும் முன்னோர் பயன் படுத்தி இசை பயின்று வந்தார்கள். ச,ரி,க,ம,ப,த,நி என்னும் சுரம் ஏழில் ச,ப என்னும் சுரங்கள் சிவம்சக்தி போல் நின்றும், ரி,க,ம,த,நி என்னும் ஐந்து சுரங்களும் ஐம்புலன்கள் போல் சத்தி வயமாய் நின்று சிவமாகிய ச என்னும் சுரத்தோடு சேர்தலைப் பண்டைய காப்பியங்களில் பரக்கக் காணலாம். இஃதிவ்வாறிருக்க

ச,ரி,க,ம,ப,த,நி என்ற தனிச் சொல்லாகிய ஏழு சுரங்களும் தமிழ் மொழியே என்பதற்குச் சான்று உண்டு' என மேலும் அவர் உரையில் சிலப்பதிகாரத்தினின்றும் சான்றுகள் காட்டுவார்.

## இசையின் பயன்

டாக்டர் உ.வே. சாமிநாதையர் அவர்களால் எழுதப்பெற்ற தமிழ் இசைபற்றிய கட்டுரை ஒன்றும் இப்பதிப்பில் இடம் பெற்றுள்ளது. பண்களின் இலக்கணம், இலக்கியங்களில் அவை பெறுமிடம், காலந்தோறும் பெற்ற வளர்ச்சி, இசைப் பாட்டுக்கள் முதலானவை குறித்துத் தக்க சான்றுகளுடன் தமிழிசை வரலாறு சுருக்கமாகத் தரப்பட்டுள்ளது. எந்தக் காலத்திற்கு எந்தப் பண்ணைப்பாட வேண்டுமோ அதையே தவறின்றிப் பாட வேண்டும். அங்ஙனம் பாடினாலன்றிக் கேட்கும் மனிதருக்கும், விலங்குகளுக்கும், பறவைகளுக்கும் இன்பம் பிறவாது. தவறிப் பாடுவராயின் அது குற்றம் என்று அறிஞர் கருதுவர் என்பர். விலங்குகளில் யானையும், அசுணமாவும், ஊர்வனவற்றில் பாம்பும் இசையறிவிற் சிறந்தவை என்று கூறுவர். இலக்கியச் சான்றுகளாலும் இதனை அறிய முடிகின்றது.

## வில்யாழ்-சாரங்கி

இசைப் பேரறிஞர் மீ.ப. சோமு அவர்கள் பழைய இசைக் கருவியாகிய வில்யாழ் (சாரங்கி) குறித்துச் சுவையான செய்திகளைத் தருகின்றார். 'சாரங்கம் என்ற ஸம்ஸ்கிருதச் சொல்லுக்கு வில் என்று பொருள். மற்ற வீணைகள் நரம்புகளைச் சுண்டி வாசிக்கிற இசைக்கருவிகள். ஆனால் இந்த வாத்தியம் அவ்வாறில்லாமல் வில்லை வைத்து வாசிக்கக் கூடிய கருவியாக இருப்பதால் இதனை வில்யாழ் என்றும் சாரங்க வீணை அல்லது சாரங்கி என்றும் அழைத்திருக்கிறார்கள்...மனித சாரீரம் போன்ற இசைக்கிற ஒரு பெரிய ஒலிச் செறிவு, இந்த வாத்தியத்திற்கு உண்டு. மனிதக் குரல் ஒலிப்பது போலவே மொழிகளையும் இசைவடிவத்தையும் சேர்த்து இயக்குகிற ஆற்றல் இந்த இசைக் கருவிக்கு இயல்பாகவே ஒலிக்கும் வண்ணம் இதன் நாயக நரம்புகளும் துணை நரம்புகளும் இணைந்து அமைந்திருக்கின்றன. இந்த வாத்தியத்தைச் சுருதி சேர்ப்பதும், இணைநரம்புகள் தளராதபடி பார்த்துக் கொள்வதும் பெரிய பயிற்சியாகும்.' என்று இவ் விசைக் கருவியைப் பற்றி எடுத்துரைப்பார்,

# ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டுமலர் இசைக் குறிப்புகள்

## மரபு—கருவி—தாளம்

பழந்தமிழ் இசை கிரேக்க இசை ஆகிய இரண்டிற்குமிடையே உள்ள தொடர்பினைக் குறித்துத் திருமதி சேலம் ஜெயலட்சுமி அவர்கள் ஆராய்ந்துள்ளார்கள். சிலப்பதிகாரம் கூறும் இசைக் குறிப்புகள் கிரேக்க இசைத் தன்மையோடு எவ்வாறு பொருந்து கின்றது என்பதையும் இவ்வாய்வு சுட்டிச் செல்வது குறிப்பிடத் தக்கது. தொல்பழங்காலத்திலிருந்து இன்றுவரை கிடைத்துள்ள இசைக்கருவிகளை அடிப்படையாக வைத்து இந்திய இசைக் கருவி களின் வரலாற்றை எடுத்துரைக்கின்றார் டாக்டர் வி. பிரேமலதா. பழைய சிற்பங்கள், ஓவியங்கள் முதலானவற்றில் காணப்படும் இசைக்கருவி ஓவியங்களும் இவ் ஆய்வுக்குப் பயன்படுகின்றன. கல் வெட்டுக்களினின்றும், பிற இலக்கியங்களினின்றும் இவற்றிற்குரிய சான்றுகள் காட்டப்பட்டுள்ளன. கருநாடக இசையின் முதற் குருவாக அருணகிரிநாதர் விளங்குவதை எஸ். சச்சிதானந்தம் ஸ்ரீகாந்தா விளக்குகின்றார். பல்வேறு வகைப்பட்ட தாள-சந்தங் களோடு அருணகிரிநாதரின் படைப்புகள் விளங்குவதைக் காட்டியும், புதிய புதிய மரபில் இசைப்பாடல்கள் இயற்றியதையும் எடுத்துக் காட்டுவார். புரந்தரதாசர் (1484—1564) அருணகிரி நாதர் (பிரபுட தேவராயர் காலம் 1422—1446) ஆகியோரின் காலப் பின்னணியையும் இயைத்து வரலாற்று ஆய்வாளர்களின் கருத்துப் படியும் அருணகிரிநாதரின் பல்வேறு இசைவடிவச் சோதனைகளையும் அடிப்படையாகக் கொண்டு ஆய்வது உளங்கொளத்தக்கது.

## தாளமும் கணிதவியலும்

தென்னிந்திய இசையில் காணப்படும் தாளம் பற்றிய குறிப்பு களைத் திரு. வீ.ப.கா சுந்தரம் ஆராய்ந்துள்ளார். இசையின் உயிர் நாடியாக விளங்கும் தாளம் கணிதவியலைப் போன்றது. 'தாளம்' என்னும் சொல்லின் தோற்றத்தைச் சிவபெருமானின் அணிகலன் விழுந்த ஓசையை மையமாக வைத்து இயைத்துக் காட்டுவார். அதுதொடர்பான பிறகதை, புராணக் கருத்து களையும் எடுத்துக்காட்டுவார். தாளம் என்னும் சொல்லின் வேர்ச்சொல் மக்களின் ஆடல் பாடலோடு பிறந்தது என்பதைச் சுவைபட விவரிப்பது குறிக்கத்தக்கது. (தாள்+அம்—தாளம்)

## தமிழ்க்கூத்து

'கூத்துத்தமிழ்- அன்றும் இன்றும்' என்னும் கட்டுரையில் கவிஞர் புத்தனேரி ரா. சுப்பிரமணியம் அவர்கள் இசையும் கூத்தும் இணைந்த கூத்துக்கலையினைப் பழைய இலக்கியங்கள், முதல் இன்றைய இலக்கியங்கள் வரையில் உள்ள சான்றுகளைக்கொண்டு விளக்கம் தருவார். இன்றைய தொழில் முறை நாடகங்களோடு இணைத்தும் இக்கலையை ஆராய்வது குறிப்பிடத்தக்கது.

'தெருக் கூத்தும் அங்கியா நாட்டும்' என்னும் கட்டுரையில் அஸ்ஸாம் நாட்டுக் கலையைப்பற்றி ஆய்வுரை தருகின்றார் டாக்டர் மா. நவநீத கிருஷ்ணன், 'அங்கியநாட்' என்பது அஸ்ஸாமில் வழங்கும் கூத்தாகும் இசையோடு தொடர்புடைய நம் நாட்டுத் தெருக்கூத்தோடு அதனை ஒப்பிட்டு ஆராய்ச்சி செய்துள்ளார்.

உலகத்தமிழ் நாட்டு மலரின் இசைபற்றிய கட்டுரைகளின் விவரம் வருமாறு:

**Vol. I** Section 4 : Dance and Music (PP 1—107)

1. **The History of Indian Musical Instruments**
   —S. Premlatha
2. **Talam : Analysis of Rhythmic Patterns in South Indian Music**
   —V.P. Ka. Sundaram
3. **Arunagirinathar — The Adiguru of Carnatic Music**
   —Sri Kantha Sachithananthan
4. **A Survey of the Musical Traditions of Tamil Nadu**
   —S. Ramanathan
5. **Music in Silappatikaram**
   —Salem. S Jayalakshmi
6. **Music and Musical Instruments of India**
   —B. Damodaran

## தொகுதி 3

1. **கூத்துத் தமிழ்**
   புத்தனேரி ரா. சுப்பிரமணியம்
2. **தெருக் கூத்தும் அங்கியா நாட்டும்**
   — டாக்டர் மா. நவநீதகிருட்டிணன்

## முடிவுரை

பழந்தமிழிசையின் வரலாறு, பழந்தமிழ்ப் பண்களை பாடும் விதம் ஆகியன குறித்து ஆராய்ந்து இளந்தலைமுறையினர்க்கு நம் இசையின் பெருமையை உணர்த்துதல் வேண்டும். தமிழிசை இயக்கம் செட்டிநாட்டரசர் இராஜா சர் அண்ணாமலை செட்டியார் அவர்களின் பேராதரவாலும் தமிழிசைச் சங்கத்தின் அளப்பரிய தொண்டாலும் வளர்ந்ததைப் போலவே இன்றும் வளர்ந்து வருகின்றது.

பழைய இசை நூல்களைத் தேடிப் பதிப்பிக்கும் பணியும் அம்மரபு கெடாதவாறு பயிற்றுவிக்கும் தொண்டும் நடைபெறல் வேண்டும். ஒவ்வொரு ஆண்டிலும் பழந்தமிழ் இசைகுறித்த ஆய்வு நூல்கள் வெளிவருதற்கு அரசும் பிற நிறுவனங்களும் நல்லாதரவு நல்கினால் பழம் பெருமை பெற்ற இசைநூல்கள் தமிழிசைக்குப் புத்துயிர் நல்கும் என்பதில் ஐயமில்லை.

## துணை நூல்கள்


1. இராகவன், அ. இசையும் யாழும், கலைநூற் பதிப்பகம், பாளையங்கோட்டை, திருநெல்வேலி, 1971
2. நாராயணசாமி, தி.க., தேவாரத் திருமுறை அமைப்பு 2, சீதாராமநகர், கடலூர், 1979
3. பொன்னையாபிள்ளை, க. இசையியல் (ஐந்தாம் தொகுதி முதற்பகுதி, தொகுத்தவர் லெ.ப. கரு இராமனாதன் செட்டியார்) அண்ணாமலைப் பல்கலைக்கழகம், 1979
4. வேங்கடசாமி, மயிலைசீனி, மறந்து போன தமிழ் நூல்கள், காந்தி நூலகம், சென்னை. 1967
5. Seetha, Dr. S. Tanjore as a seat of Music University of Madras, 1981

# 18. சோதிட—நூல்கள்

ஏ. எம். பிள்ளை

தற்போது மேனாட்டில் சோதிடம் பல்கலைக் கழகப் பாடத்திட்டத்தில் சேர்க்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. அறிவியல் அடிப்படையில் அமைந்த இக்கலையின் பெருமையை உணர்த்தும் வகையில் '81-ல் சில சோதிட நூல்களே தமிழில் வெளிவந்துள்ளன.

ஆயகலைகள் அறுபத்து நான்கில், சோதிடக் கலையும் ஒன்று இது, புராண இதிகாச காலம் முதற் கொண்டு, பண்டைப்பாரம் பரியத்துடன் நின்று செயல்பட்டு வருகிறது. இக்கலையைப் பதினெட்டு சித்தர்கள் வளர்த்து வந்ததாகப் புராண இதிகாசங்கள் சொல்லுகின்றன.

நீறுபூத்த நெருப்பு போல மங்கிக் கிடந்த சோதிடக் கலைக்கு செந்தணல் பூத்த நெருப்பு போல பிரகாசம் வீசும் வரையில் பதினான்கு, பதினைந்தாம் நூற்றாண்டுகளில் ஒரு புதிய திருப்பம் ஏற்பட்டது. ஆரியபட்டர், வராகமிகிரர் போன்ற வானசாஸ்திர —விஞ்ஞான ஜோதிடர்கள் தோன்றினார்கள், இவர்கள் குப்தப் பேரரசர்களின் ஆட்சிகாலத்தில், அரசு ஆதரவு பெற்று செயற்கரிய சாதனைகளைச் செய்து காட்டினார்கள்.

ஆரியபட்டர், பூமிஉருண்டை என்ற தத்துவத்தையும், சூரியனைச் சுற்றி வரும் கோள்களையும் பற்றி ஆராய்ந்தறிந்து, உலகிலேயே, முதன் முதலில் பஞ்சாங்க கணிதத்தை ஏற்படுத்தி, அதனை ஆண்டு தோறும் நடைமுறையில், ஏற்றுக் கடைபிடிக்கும்படி செய்தார்.

இப்படிப்பட்ட பஞ்சாங்க கணிதத்தில்,

வாரம் (கிழமை), திதி (பூர்வபுட்சம் — அமரபட்சம்) நட்சத்திரம், யோகம், கரணம் ஆகிய ஐந்து அங்கங்களைப் புகுத்திப் பலன்சொல்லி வரும் பண்பாட்டை ஏற்படுத்தியதால், இந்த கணிதம் ''பஞ்சாங்க கணிதம்'' என்று பெயர் பெறலாயிற்று.

ஆரியப்பட்டர் பாணியைப் பின்பற்றும் வகையில் கிரகங்களின் நகர்ச்சி—நுகர்ச்சி பற்றி ஆராய்ந்தறிந்து, வராகமிகிரர், ''பிரகத்ஜாதகம்'' என்ற ஜோதிட சாஸ்திர மூலகிரந்தத்தை வடமொழியில் எழுதி வெளியிட்டார்.

இவரைப் போலவே, கல்யாணவர்மா என்பவரும், ''சாராவளி'' என்ற ஜோதிட சாஸ்திர மூலகிரந்தத்தை வடமொழியில் எழுதி வெளிட்டார்,

கீரனூர் நடராஜன் என்பவர் ''சாதகலங்காரம்'' என்ற ஜோதிட சாஸ்திர மூலகிரந்தத்தைத் தமிழ்ச் செய்யுட்களின் மூலம் எழுதி வெளியிட்டார்.

1981-ம் ஆண்டில், கீழ்க்கண்ட சோதிட நூல்கள் இக்கட்டுரையாசிரியரால் எழுதி, வெளியிடப்பட்டன:-

## 1. மங்கையர் ஜாதகமர்மங்கள் விலை 5-00

ஜனவரி 1981-ல் வெளியிடப்பட்டது. வெளியிட்டோர் யமுனா பிரசுரம், சென்னை-4

சோதிட நூல்களில், ஆண் பெண் பாலுணர்வு இன்றி பொதுப்படையான சோதிடப் பலன்கள் சொல்லப்பட்டிருக்கின்றன, பெண்களுக்கென்று சில சோதிடப் பலன்களும், ஆங்காங்கு சொல்லப்பட்டிருக்கிறது. ருதுஜாதகப் பலன்கள் முழுதும் பெண்களுக்கே உரித்தானது.

இது தவிர களத்திரஸ்தானமான ஏழாமிடம், மாங்கல்ய ஸ்தானமான எட்டாம் இடம், குடும்ப ஸ்தானமான இரண்டாம் இடம் போன்றவைகள் எல்லாம் ஆண்களுக்காகச் சொல்லப்படும் பலன்களில் இருந்து மாறுபட்ட பலன்களைச் சொல்லத்தரமுள்ளதாக இருக்கிறது.

ஆயுள் பாவத்தைப் பற்றிச் சொல்லும் போது, பெண்களுக்கு ஆயுள் பலம், ஆண்களுக்குச் சொல்லுவது போல சொல்ல முடியாது. பிறக்கும் ஒவ்வொரு குழந்தையும் கணக்கில் கொண்டு, பெண்களுக்கு ஆயுள் பலத்தைச் சற்று குறைத்தே சொல்லவேண்டும்.

ஜெனன லக்கினமும், ஜெனன ராசியும், யுக்மராசிகள் என்றும், பெண் ராசிகள் என்றும் சொல்லக்கூடிய ரிஷபம்—கடகம்

கன்னி—விருச்சிகம்—மகரம்—மீனம் ஆகிய ஆறில் இடம் பெற்று இருந்தால், அந்த ஆரணங்கு அழகே உருவான எழிலரசி யாக விளங்குவாள். அப்படியில்லையானால், குரூர குணமும், ஆண் தன்மையும் கொண்டவளாக இருப்பாள் என்பது சோதிட சாஸ்திர தத்துவமாகும். அனுபவ நடைமுறையில், இது 'நூற்றுக்கு நூறு உண்மை என்று தெரிய வருகிறது.

ஒரு பெண்ணின் ஜெனன ஜாதகத்தில், அயன சயனபோஸ் தானம் என்றும் சொல்லக் கூடிய ஜெனன லக்கினத்திற்கு பன்னிரெண்டாவது ஸ்தானத்தில், அந்த ராசியதிபதி ஆட்சியாய் அமர்ந்து இருந்து அது' சுபர் வீடாக இருந்தால், அந்த ஜாதகி மாட மாளிகை போலுள்ள சொந்த இல்லத்தில் ஜனிப்பாள் என்பது சாஸ்திர விதி.

இதன்படி, உலகில் பிறக்ககூடிய ஒவ்வொரு பெண்ணும், கூடியமட்டும் நல்ல தரமான சொந்த இல்ல அமைப்பு இடம் பெற்று இருக்கவே செய்கிறது. இதற்கான பாடல்:-

''தூர முறும் பன்னிரெண்டாம் அதியன்தானும்
சுபகோளாய்ப் பகவானாய்ச் சுகவானாயின்
பாரமனை மேன் மெத்தை மாடங்கூடும்
பரிவுடனே உண்டான அம்பதியினிலே வாழ்வனார்''

ஒரு பெண்ணின் ஜெனன ஜாதகத்தில், ஜெனன லக்கினம்—ஜெனன ராசி என்று எவ்வித அமைப்பு ஏற்பட்டு இருந்தாலும், அந்த ஜாதகத்தில் செவ்வாயும் சூரியனும் கூடி எங்கே இருந் தாலும் அல்லது சப்தமஸ்தானமான ஏழாம் இல்லத்தில் சனியும் செவ்வாயும் கூடி இருந்தாலும் அந்த ஜாதகி இளமையிலேயே கணவனை இழப்பதின் மூலம் விதவை ஆவாள் என்று சொல்லப் படுகிறது.

பூர்வ புண்ணிய பலத்தினால், அவளுடைய கணவர் அவளை விட்டுப் பிரிந்து செல்லாமலோ அல்லது இறந்து படாமலோ இருந் தால், அவளுடைய மாங்கல்யம் அடகு வைப்பதின் மூலமோ அல்லது வறுமையினால் விற்பதின் மூலமோ அவளை விட்டுச் சென்றுவிடும் என்பதாகப் பலன்கள் நடைபெறும் மீண்டும் வேறொரு மாங்கல்யம் வாங்கி அணிந்துகொள்ள எவ்வளவு முயன்றாலும், அது செயலளவில் கூடிவராது. இந்தவகையில் கணவர் உயிருடன் இருந்தும், அவள் மாங்கல்ய பலம் இல்லாத விதவை போன்றவளாவாள். இதற்கான பாடல்:

''இரு செவ்வாய் கதிர்கூடி எங்கே நின்றாலும்
இவளும் வாலிபம் தன்னில் அமங்கலமே ஆவாள்
தீர்த்தமேழிற் சனி செவ்வாய் செறிந்தால்
விதவை வாலிபத்தில்

சில பெண்கள் பொருள் வளத்தாலும், உடல் உரத்தாலும் நல்ல அந்தஸ்து பெற்று இருந்தாலும், அவர்கள், இரண்டாந் தார மனைவியாக வாழ்க்கைப்படுகின்றார்கள், அல்லது அதிக வயதான (கிழப்) புருஷனை மணம்செய்து கொள்ளக் கூடிய அவயோகத்தைப் பெற்று விடுகின்றனர். இதற்கு, அப்பெண் களின் ஜெனன ஜாதக அமைப்பு காரணமாக அமைகிறது. அது எப்படி என்றால் ஜெனன லக்கினத்திற்கு ஏழாமிடம் களத்திர ஸ்தானமாகும். இந்த ஸ்தானத்தில் சந்திரனும் சுக்கிரனும் கூடியிருந்தால், மேற்கண்ட விதிவசம் ஏற்பட்டு விடுகிறது. இதற்கான பாடல்:-

''இந்து வசுர குருவுடனே யேழிலிருக்கச்
கிழ புருடன்''

ஒரு பெண்ணின் மாங்கல்யஸ்தானமான எட்டாம் இல்லத்தில் பாபகிரகங்கள் இருந்து, குடும்பஸ்தானமான இரண்டாம் இல்லத்தில் சுபகிரகங்கள் இருந்தால், அந்த ஜாதகி கணவனுக்கு முன் தீர்க்க சுமங்கலியாக மரணமாவாள் என்பது சரஸ்வதிவிதி. இதற்கான பாடல்:-

சாரவெட்டிற் பாவர்களுந்
தானுமிருக்க இரண்டதனில்
ஒருஞ் சுபர்களிருந்திட அப்பாங்கி
மரணஞ்சு மங்கலியாய்''

பெண்கள் ஜாதகத்தில் எட்டாம் இடம் கணவருடைய ஆயுள் பலத்தைக் காட்ட வல்லது. ஏழாமிடம் அப்பெண்ணின் சுகானுபவமும், அவளுடைய மணவாளனின் பலமும் காட்ட வல்லது. ஜனன லக்னம் அப்பெண்ணின் அழகைக் காட்டவல்லது. ஒன்பதாம் இல்லம் புத்திரபாக்கியத்தைக் குறிப்பிடுகிறது. இது எவ்வளவு தூரம் உண்மை என்பதைப் பற்றிக் கீழுள்ள பாடலால் கண்டறியலாம்.

''பலன்களுரைக்கும் ஸ்திரீகளுக்குப்
பகரு மெட்டாமிடம் விதவை
துலங்கு மேழா மிடந் தன்னால்
சுகமும் மகிழ்நன் பலமறியப்

பிலங் கொள் லக்கின மழகறிந்து
பேசு பொன்பான் புத்திரரும்
தலங்களறிந்தே மிகவுரைப்பர்
தாமுங் கணித வல்லோரே''

ஆண்களுக்குப் பிறந்த ஜாதகம் ஒன்றே இறக்கும் வரையில் பலன் சொல்லக் கூடியதாகும். ஆனால், பெண்களுக்கு, ருது ஜாதகம் சரிபாதி பலன்களைச் சொல்லக் கூடியதாக அமைகிறது.

''மன்னவன் பிறந்த நாளும்
மங்கையர் பூத்த நாளும்

என்ற பாடல் மூலம் அறியமுடிகிறது.

**2. நவரசசோதிடம் விலை ரூ 5—00: மே, 1981-ல்** வெளியிடப்பட்டது. வெளியிட்டோர்—அணில் ஆப்செட்புக் அவுஸ், பாண்டிச்சேரி.

சோதிடம் கற்பதற்கு

1. வராகமிகிரர் எழுதிய பிரகத்சாதகம்

2. கல்யாணவர்மா எழுதிய சாராவளி

3. கீரனூர் நடராசன் எழுதிய சாதகலங்காரம் ஆகிய மூன்று கிரந்தங்கள் இருக்கின்றன இம்மூன்றில், 'சாதகலங்காரம்' என்ற கிரந்தத்தை மட்டும் பின்பற்றி இந்நூல் எழுதப்பட்டுள்ளது. இதிலுள்ள தத்துவங்கள்யாவும், செய்யுள்வடிவில் இருக்கின்றன. இதற்குப்பலர், பலகோணங்களில் உரை எழுதி இருக்கின்றனர்.

' நவரச சோதிடம்'' என்ற நூலில், மேற்கண்ட செய்யுள்களையும்—அவைகளுக்கான உரைகளையும் கருத்தில் கொண்டு, இன்றைய சோதிட உலகில் கையாளப்பட்டுவரும் அருஞ்சொற்பதங்களைக் கொண்டு, சோதிடப் பலன்கள் எழுதப்பட்டுள்ளன. இந் நூலின் நடை மிக மிக எளிதானது.

இத்நூலில் குறிப்பிடப்பட்டுள்ள அனைத்து சோதிடப்பலன்களும், சோதிடம் கற்றுக் கொள்வது எப்படி? என்பதைப்பற்றி, ஆரம்ப அரிச்சுவடி போன்ற ரூபத்தில், விஷயாலோசனைகளைக் கோர்வையாக எழுதப்பட்டிருக்கின்றன.

சோதிடக்கலை உருபெற்று எழுவதற்கு—வானமண்டலத்தி லுள்ள பன்னிரெண்டு ராசிவீடுகள்—இருபத்தேழு நட்சத்திர மண்டலங்கள்—ஒன்பது கிரகங்கள்—ஆகிய மூன்று சாதனங்களும் அவசியமாகின்றன. இம்மூன்றின் செயல்களே, நவக்கிரக பரிபாலனம் என்ற நிர்வாகத்திறன் ஆகின்றது.

மானிட வாழ்க்கையின் ஒவ்வொரு அசைவுக்கும் நவக் கிரகபரிபாலன இயக்கம் காரணமாகவும், ஆட்டுவிக்கின்ற கர்த்தா வாகவும் அமைகிறது. எடுத்துக்காட்டாக, ஆணும் பெண்ணும் கூடி கர்ப்பவாசத்தின் மூலம் ஒரு குழந்தையைப் பெற்றெடுத்தால், அக் குழந்தை நாளொரு மேனியும் மொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து வருகிறது. அத்தகைய வளர்ச்சியின், அன்றாட நிகழ்ச் சிக்கு. நவக்கிரபரிபாலனம், அக்குழந்தையின் பூர்வபுண்ணிய பலனுக்கு ஏற்ப அனுக்கிரகம் செய்கிறது. அதுதான்—ஊழ்வினை என்றும்—விதிஎன்றும்—தலைஎழுத்து என்றும் சொல்லப்படுகிறது. இப்படிப்பட்ட வினைகளைச் செய்வதற்கு—இராசி வீடுகள்—நட்சத்திரமண்டலங்கள் - கிரகங்கள் ஆகியவைகளுக்கு எப்படி வல்லமை ஏற்படுகிறது என்பதும் இந்நூலில் விரிவாக எழுதப்பட்டு இருக்கிறது.

வானமண்டலத்திலுள்ள வெற்று வெளியை அதாவது பூமியின் மேல்—கீழ்—கிழக்கு மேற்கு ஆகிய நான்கு பக்கங்களிலும் வியாபித் துள்ள வெற்று வான வெளி மண்டலத்தை ராசி வீடு ஒன்றின் பரிமாணம் முப்பதுபாகைகள் வீதம், 360 பாகைகள் கொண்ட வானவெளிமண்டலத்தை மொத்தம் பன்னிரெண்டு ராசி வீடு களாகப் பிரிந்துள்ளனர். இந்த ஒவ்வொரு ராசிவீட்டிற்கும்

மேஷம்—ரிஷபம்—மிதுனம் - கடகம்—
சிம்மம்—கன்னி—துலாம்—விருச்சகம்—
தனுசு—மகரம்—கும்பம்—மீனம்—

என்று பெயர்கள் சூட்டப்பட்டிருக்கின்றன.

வானவெளியிலுள்ள பலகோடி நட்சத்திர மண்டலங்களை, இருபத்தி ஏழுநட்சத்திரமண்டலங்களாகப் பிரித்து—ஒவ்வொரு நட்சத்திரமண்டலத்திற்கும்—

அசுவனி—பரணி—கிருத்திகை—ரோகணி—
மிருகசீரிஷம்—திருவாதிரை—புனர்பூசம்—பூசம்—
ஆயில்யம்—மகம்—பூரம்—உத்திரம்—
அஸ்தம்—சித்திரை—சுவாதி—விசாகம்—

அனுஷம்—கேட்டை—மூலம்—பூராடம்—
உத்திராடம்—திருவோணம்—அவிட்டம்—சதையம்—
பூரட்டாதி—உத்திரட்டாதி—ரேவதி
என்று பெயர்கள் சூட்டப்பட்டிருக்கின்றன.

வானவீதியில், பூமிக்கு மிக சமீபத்திலுள்ள கிரகங்கள் ஒன்பது. அவைகளில், சூரியன் மூலகிரகமாக அமைந்து, பூமிஉள்பட மற்ற ஒன்பது கிரகங்களும், அச்சூரியனைச்சுற்றி ஒரு குறிப்பிட்ட நியமத்துடன் சதாவலம் வந்த வண்ணமாகவே இருக்கின்றன.

சூரியனுக்கு மட்டும் சுய ஒளிஇருக்கிறது. மற்ற கிரகங்களுக்குச் சுயஒளி கிடையாது. ஆகவே, கிரங்கள் சூரிய ஒளியைப் பெற்று, பிறைத்தோற்றத்தைத் தோற்றுவிக்கின்றன.

ஒரு காலத்தில், சூரிய மண்டலத்திலிருந்து வெடித்துச் சிதறிய பகுதிகளே, இந்த கிரகங்கள் என்று சொல்லப்படுகின்றன என்பது விஞ்ஞான உண்மையாக அமைகிறது. உண்மை நிகழ்ச்சியும், இப்படித்தான் இருந்திருக்கக்கூடும் என்று நம்பத்தக்க ஆதாரங்கள் இருக்கின்றன.

பூமிஉள்பட உள்ள பத்து கோணங்களில், சூரியன்தான் மிகப் பெரியது, குரு அதை விட சற்று சிறியது. சனி குருவைவிட சற்று சிறியது. இதைச்சுற்றி ஒரு வளையம் பெல்ட்போல இருக்கிறதாம். பூமியும், சுக்கிரனும் சனியைவிட சிறியது. இந்த இரண்டும், ஏறக்குறைய சம அளவாக இருப்பதால், இந்த இரண்டும், இரட்டையோ (Twin) என்று சந்தேகிக்கும் வகையில் அமைந்திருக்கிறதாம். அதைவிட சிறிது செவ்வாய் என்று சொல்லக்கூடிய அங்காரகன் செவ்வாயைவிட புதனும்—புதனைவிட சந்திரனும் சிறியதாம். பூமியின் வடதுருவ நிழல் கேது என்றும் தென்துருவ நிழல் ராகு என்றும், இவ்விரு கிரகங்களின் நிழல்கள், குருவுக்கும், சனிக்கும் இடைவெளியிலுள்ள பாதையில் விழுந்து, அவைகள் மற்ற கிரகங்களை எதிர்த்து எதிர்வரிசையில் — ஆன்டிகிளாக்வைஸ் சிஸ்டத்தில் (அப்பிரதட்சணமாக)சுற்றி வருகிறது என்று சொல்லப்படுகிறது.

இது விஞ்ஞான கால சோதிடஉண்மை என்று சொல்லப்படுகிறது ஆனால், புராண காலத்து சோதிட உண்மை வேறாக இருந்தது என்பது மிகச் சுருக்கமாக இந்நூலிலும் இடம் பெற்று இருக்கிறது .

ஆதியில், சிவன்—விஷ்ணு—பிரம்மா என்ற மூன்று மூர்த்திகளும் (திரிமூர்த்திகள்), குழந்தைகள் சின்னஞ்சிறு வீடுகட்டி அப்பா—அம்மா என்று விளையாட்டு விளையாடுவதைப் போல, பிரஞ்சத்தில், தேவர்—அசுரர்—நரர் போன்ற ஜீவராசிகளைத் தோற்றுவித்து, அந்தஜீவராசிகளின் இனப்பெருக்கத்தைக் கண்டு ரசிக்கும் பணியில் ஈடுபட்டனர்.

பிரமனும்—சிவனும் கூடி, ஜீவராசிகளைத் தோற்றுவிக்கவும், விஷ்ணு, அவைகளைக்கட்டிக்காத்து சமரட்சணை செய்யவும் போன்ற, ஆக்கல்—காத்தல் தொழிலை மேற்கொண்டனர்.

திரிசுர்த்தர்கள் இப்படிப்பட்ட இக்கட்டான நிலைமைகளைச் சமாளிக்க,

சப்த ரிஷிகள்—நவநாயகர்கள் போன்ற ரிஷிகணங்களையும்—ரிஷிபுத்தரர்களையும் தோற்றுவித்தனர்.

ஜீவராசிகளின் சம்ரட்சணைகளையும் — சுகதுக்கங்களையும், ஒன்பது பேர் அடங்கிய சபையிடம் ஒப்படைத்து விட்டு, திரிகர்த்தர்கள், நேர் முகத்தொடர்புகளிலிருந்து விடுவித்துக்கொண்டனர்.

தேவர்களால் நியமிக்கப்பட்ட ஒன்பதுபேர்களும் ''நவநாயகர்கள்'' என்றும், அவர்களுடைய நிர்வாகச்சபை ''நவக்கிரக பரிபாலனசபை'' என்றும் பெயர் பெற்றது.

தற்போது மாநிலங்களை ஆள்வதற்காக நியமிக்கப்பட்டுள்ள மந்திரிசபை (கேபினட்) போன்றது அந்த நவக்கிரகபரிபாலனசபை, மந்திரிசபையில், ஆளுங்கட்சி—எதிர்கட்சி—சபாநாயகர் என்று இருப்பதைப்போல, அதிலும், இந்த மூன்று அங்கங்களும் இடம் பெற்று இருக்கின்றன.

சூரியன் — சந்திரன் —அங்காரகன் —புதன் —குரு—சுக்கிரன்—சனி—ராகு—கேது ஆகிய ஒன்பதின்மரும் அச்சபையில் இடம் பெற்று இருக்கின்றனர். இவர்களில், குரு—சந்திரன்—புதன் சுபகிரகங்கள் என்ற பெயரில், ஆளுங்கட்சியாக அமைகின்றனர். சூரியன்—அங்காரகன்—சனி—ராகு—கேது ஆகிய ஐவரும் பாபகிரகங்கள் என்ற பெயரால், எதிர்கட்சியாக அமைகின்றனர்.

வளர்ந்தும்—தேய்ந்தும் பிறைத்தோற்றங்களைத் தோற்றுவிக்கக் கூடிய சந்திரன் வளர்பிறையில் சுபராகவும், தேய்பிறையில், பாபராகவும் அமைவதால், அச்சந்திரன் சபாநாயகரைப்போல செயல் பட்டு நடுநிலைமையும் வகிக்கிறார்.

இந்த ஒன்பது கிரகங்களுக்கும், சிற்சிலகாரகப் பலன்கள் அளிக்கப்பட்டிருக்கிறது. அவைகள் யாவை? என்று பார்ப்போம்.

1. சூரியன்—ஆத்மா—பிதுர்காரகராகிறார்.
2. சந்திரன்—உடல்—புத்தி—மாதுர் ,,
3. அங்காரகன்—சகோதர—பூமி ,,
4. புதன்—மாதுல—வித்தியா ,,
5. குரு—தன—புத்திர ,,
6. சந்திரன்—களத்திர—வாகன ,,
7. சனி—ஆயுள் ,,
8. ராகு—போக—யோக ,,
9. கேது—ஞான—மோட்ச ,,

ஒவ்வொருகிரகமும், தமக்கு அளிக்கப்பட்ட காரகப்பலன் களைத்தகுதிக்கு ஏற்ப அளித்து நவக்கிரகபரிபாலனத்தில் செயல் பட்டுவருகின்றது.

இந்த ஒன்பதுபேரும், ஒருவருக்கொருவர் உறவின் முறையை அமையப்பெற்றவர்களாகத் திகழ்கின்றனர். அது எப்படி? என்று பார்ப்போம்.

பிரமனால்தோற்றுவிக்கப்பட்ட—
''மரீசி—அத்திரி—ஆங்கிரீஸ்—
புலஸ்தியர்—பிருகு—புலகர்
வசிஸ்டர்''—

ஆகிய எழுவரும், ''சப்தரிஷிகள்'' என்று சொல்லப்படுகின்றனர். இந்த எழுவரில், ஐவர் வழிவந்தவர்களே மேலே சொல்லப்பட்ட நவநாயகர்களாவார்கள். அது எப்படி? என்று ஆராய்வோம்.

1. அத்திரியின் — புத்திரர் சோமன் என்ற சந்திரன்
2. பிருகுவின் — புத்திரர்—பாரிசவன் என்ற சுக்கிரன்
3. ஆங்கிரீஸின் — புத்திரர்—பிரகஸ்பதி என்ற வியாழன் குரு
4. வஸிஸ்டரின் — வழி வந்த ரிஷிபுத்திரர் செவ்வாய் என்ற அங்காரகன் (பரதிதுவாசரின்புத்திரர்)
5. சந்திரனின் — புத்திரர் சௌமியன் என்ற புதன்
6. மரீசியின் — பேரர் துவாதச ஆதித்தியர்கள் எனப் படும் சூரியன் (கசியபரின் புத்திரர்)
7. சூரியனின் — புத்திரர் காரி என்கிற சனி
8. கசியபரின் — பேரர் ஸ்வர்பானு என்ற ராகு—கேது

(கசியபரின்ஐந்தாம் மனைவிக்குப் பிறந்த விப்ரசித்துவிக்கும். இரண்டாவது மனைவிக்குப் பிறந்த ஸிம்ஹிகைக்கும் பிறந்தவன் ஸ்வர்பானு)

இப்போது கிரகங்களின் உறவின் முறையை நன்கு ஆராய்ந்தால்

சந்திரன்—சுக்கிரன்—குரு ஆகிய மூவரும் சகோதரர்கள்.

சூரியன்—புதன் சகோதரர்கள், இவர்களுக்கு சந்திரன்—சுக்கிரன்—குரு ஆகிய மூவரும், சிற்றப்பா முறையோ அல்லது பெரியப்பா முறையோ ஆகிறது.

சனி—ராகு—கேது—ஆகிய மூவரும் சகோதரர்கள், இவர்களுக்கு சந்திரன்—குரு ஆகிய மூவரும் பாட்டன் முறையாகிறது.

வசிஷ்டர் வழி வந்த பரத்துவாசரின் புத்திரர் செவ்வாய் என்று சொல்லக் கூடிய அங்காரகன் என்பதால் அங்காரகனுக்கு, மற்ற எட்டு கிரகாதிபர்களும் பாட்டன் முறை என்று தெரிய வருகிறது.

இதுவே, நவக்கிரகாதிபதியர்களின் உறவின் முறை என்பதைப் பல்வேறு புராணங்களிலிருந்து ஆராய்ந்து புள்ளி விவரங்கள் எடுக்கப்பட்டது என்பதால், இதனை இறுதி வரையில் கவனத்தில் கொள்ள வேண்டும். அப்போதுதான் நவக்கிரக பரிபாலனத்தில், கிரகபலத்தின் ஏற்ற தாழ்வுகளைப்பற்றி எடை போடலாம்.

இத்தகைய புள்ளி விபரங்கள், இந்த புத்தகத்தில், விரிவாக எழுதப்பட்டிருக்கின்றன.

தேவர்களுக்கு எல்லாம் அதிபதியான தேவேந்திர சபையின் ஆஸ்தான குரு பிரகஸ்பதி என்று சொல்லக் கூடிய குருவாகிறார்.

அசுரர்களுக்கு எல்லாம் அதிபதியான அசுரேந்திரனின் ஆஸ்தான குரு' பார்கவன் என்று சொல்லக் கூடிய சுக்கிரனாகிறார்,

ஆகவே, பதவி அமைப்பை ஒட்டி, குருவும் சுக்கிரனும் ஒருவர்க் கொருவர் ஜென்மப்பகைவர்களாகின்றனர். இந்த பகை, நவகிரக பரிபாலன நிர்வாகத்திலும் இடம் பெறுகிறது. ஆகவே குருவும் சுக்ரனும், பகைவர்களாகின்றனர்.

குரு பத்தினி தாரா தேவிக்கும், சந்திரனுக்கும் கூடா நட்பின் மூலம் பிறந்தவர் புதன் என்பதால், புதனுக்கும் குருவுக்கும் ஆகாது, சந்திரனும், ராசி கட்டத்தில், குருவுக்கு 6-8-12ல் இருந்

தால், அந்த ஜாதகர், சந்திரன் சென்ற வழியில் எல்லாம் செல்வார் என்று சொல்லப்படுகிறது. இதன் காரணமாக. இது சகடை ஜாதகம் என்ற பெயரும் பெறுகிறது.

அங்காரகனுக்குக் கையூட்டு கொடுக்கும் வகையில். சுக்கிரன் சேனாதிபதிபதவியை வாங்கிக் கொடுத்த விதத்தில், சூரியனுக்கும் சுக்கிரனும், சூரியனுக்கும் அங்காரகனுக்கும் பகைமை ஏற்படு கிறது.

சனியும்—எமனும் சூரியனுடைய புத்திரர்களாக இருந்த போதிலும், சூரியன், எமனுக்கு அனுக்கிரகம் செய்ததை எதிர்த்து சனி, சூரியனுடன் பகை பெற்றார். இந்த பகை நவக்கிரகபரி பாலனத்திலும் அப்படியே இடம் பெறுகிறது.

ராகு—கேதுகள் சுவர்பானு என்ற உருவத்தில்இருந்த போது, கள்ளத்தனமாக தேவர்களின் வரிசையில் நின்று அமுதம் பெற்று உண்டபோது, சூரியசந்திரர்கள், அந்த சுவர்பானுவைக் காட்டிக் கொடுத்ததை முன்னிட்டு, ராசிசக்கரத்தில், சூரிய சந்திரர்கள் கூடியோ அல்லது சப்தமமாகவோ, ராகு கேதுகளைக் கடந்து செல்லும்போது, சூரிய கிரகணம்—சந்திரகிரகணம் என்று கிரகணங்களைத் தோற்றுவிக்கின்றன. இந்த வகையில். ராகு கேதுகள் தமது நிழலில், சூரிய சந்திரர்களுடைய ஒளியை மறைந்து ஏறக்குறைய ஒன்றறை மணிநேரம் செயல் இழக்கும்படி செய்து விடுகிறது.

இந்தவகையில், ராகு கேதுகளுக்குக் சூரியசந்திரர்களும், சூரிய சந்திரர்களுக்கு, ராகு கேதுகளும் ஜென்மப்பகைவர்களாக அமை கின்றனர்,

அடுத்து, ராசி வீடுகளில் சஞ்சரிக்கும் நவக்கிரங்களின் பார்வை பலம் எப்படி? என்று பார்ப்போம்.

சூரியன் — சந்திரன் — புதன்—சந்திரன்—ராகு—கேது ஆகிய ஆறுகிரகங்களும், தாம்நின்ற ஸ்தானத்திலிருந்து, ஏழாம் இல்லங் களைப்பார்க்கும்.

குரு 5-7-9ம் இல்லங்களைப்பார்க்கும்.

அங்காரகன் 4-7-8 ம் இல்லங்களைப்பார்க்கும்.

சனி 3-7-10ம் இல்லங்களைப்பார்க்கும்.

சப்தமப்பார்வை எல்லாகிரகங்கள்களுக்கும் பொது என்று தெரியவருகிறது,

சந்திரன் ஒரு ராசியை, $2\frac{1}{4}$ நாட்களிலும், புதன்—சந்திரன்—சூரியன் ஒருமாதத்திலும், அங்காரகன் $1\frac{1}{2}$ மாதத்திலும், குரு ஒரு வருஷத்திலும், ராகு கேதுகள் $1\frac{1}{2}$ ஆண்டிலும், சனி $2\frac{1}{2}$ ஆண்டுகளிலும் கடக்கும்.

சூரியன்—சந்திரன்—ராகு—கேது—நீங்கலாக, மற்ற ஐந்து கிரகங்களுக்கும் விக்கரகதி உண்டு.

புதனுக்கு மூன்று மாதத்திற்கு ஒரு முறையும்—குருவுக்கும் சனிக்கும் ஆண்டுக்கு ஒரு முறையும் அங்காரகனுக்கு $1\frac{1}{2}$ ஆண்டுக்கு ஒரு முறையும், சுக்கிரனுக்கு 20 மாதங்களுக்கு ஒரு முறையும் வக்கரகதி ஏற்படுகிறது.

சூரியனுடைய ஆட்சிவீடு சிம்மம்—சந்திரனுக்கு ஆட்சிவீடு கடகம்—அங்காரகனுக்கு ஆட்சிவீடு மேஷம் விருச்சிகம்—புதனுக்கு ஆட்சிவீடு மிதுனம் கன்னி—குருவுக்கு ஆட்சிவீடு தனுசு மீனம்—சனிக்கு ஆட்சிவீடு மகரம்—கும்பம் என்று ஏற்படுகிறது: ராகு—கேதுகளுக்கு ஆட்சி வீடு என்று தனியே கிடையாது. எந்த ராசியில் சரிக்கிறதோ, அந்த ராசியதிபதியைப் போலவே செயல்படும் என்பது பொதுவிதி.

ராசி வீடுகள் பன்னிரெண்டில், கடகம்—மகம்—மீனம் ஆகிய மூன்றும் ஜலராசிகள் என்று சொல்லப்படுகின்றன. ஆகவே, இவைகளின் ஆட்சியதிபதிகளான சந்திரன்—சனி— குரு ஆகிய மூன்றும் ஜலராசி கிரகங்கள் என்று பெயர் பெறுகின்றன. இம்மூன்றும் பலம் பெற்றுள்ள ஜாதகர், கடல் கடந்த அயல் நாடுகளுக்குச் சென்று வரக்கூடிய பாக்கியம் பெறுவார்கள் என்பது சிறப்புவிதி

ஒரு குழந்தை பிறக்கும் சமயத்தில், அடி வானத்தில் உதயமாகிக் கொண்டிருக்கும் ராசி வீடு ஜெனன லக்கினம் என்று அமைகிறது. இந்த வீட்டிற்கு 4ம் வீடு—பூமியின் அடிபாகத்திலும், ஏழாம் வீடு, அஸ்தமித்துக் கொண்டிருக்கும் வீடாகவும், பத்தாம் வீடு தலைக்குமேல் நேர் உச்சியில் உள்ள ராசி வீடு என்றும் பொருள் கொள்ள வேண்டும்.

சூரிய உதயம் முதல், மறுநாள் சூரிய உதயம் ஆகும் வரையிலுள்ள 12 ராசி வீடுகளும் 60 நாழிகைக்குள், அதாவது 24 மணி நேரத்திற்குள், பூமியை ஒரு சுற்றுசுற்றிவிடுகிறது. உண்மையில் 12 ராசி வீடுகளும் சுற்றவில்லை. கோளவடிவமாக உள்ள பூமி சுற்று

வதால், ராசி வீடுகள், உதய அஸ்தமனமடைவது போல காட்சி யளிக்கின்றன. சூரியசந்திர உதய அஸ்தமனங்களும் கூட இப்படித் தான் இடம் பெறுகிறது.

இதை ஒரு உதாரணத்துடன் விளக்குகின்றேன். பஸ்ஸிலோ அல்லது ரயிலிலோ அமர்ந்து பிரயாணம் செய்து கொண்டிருக்கும் போது, உண்மையில், பஸ் அல்லது ரயில்தான் ஓடிக் கொண்டிருக் கின்றன. ஆனால், நாம் காண்பதோ, பாதைக்குப் பக்கவாட்டி லுள்ள மரஞ்செடி கொடிகள் ஓடுவது போல இருக்கின்றன.

ஒரு குழந்தை பிறக்கும் சமயத்தில் அடிவாணத்தில் உதய மாகிக் கொண்டிருக்கும் ராசி வீடுதான் ஜெனன லக்கினம் என்று சொன்னேன். அதே சமயத்தில், சந்திரன் எந்த நட்சத்திரத்தில் சஞ்சரித்துக் கொண்டிருக்கிறதோ அது தான் அக்குழந்தையின் ஜெனன நட்சத்திரமாக அமைகிறது. ஆகவே, இந்த நட்சத்தி ராதிபதியின் தெசையே, அக்குழந்தையின் ஜெனன தெசையாக, அதாவது, உருமகா தெசையாக அமைகிறது.

எந்த நட்சத்திரம், எந்த கிரகத்தினுடைய நட்சத்திரம் என்று கண்டறிவோம்.

அசுவனி நட்சத்திரம் கேது கிரகத்தினுடைய நட்சத்திரம் என்பதால், அசுவனி நட்சத்திரத்தில் பிறந்த குழந்தைக்கு, முதல் தெசை அதாவது ஜெனன கால உருமகா தெசை கேது தெசை யாக அமைகிறது. இப்படியே, மற்ற எல்லா நட்சத்திரங்களுக்கும் ஜெனன தெசை கண்டறிய வேண்டும்.

| | | |
|---|---|---|
| கிருத்திகை—உத்திரம்—உத்திராடம் | = சூரிய தெசை | 6 வருஷம் |
| ரோகணி—அஸ்தம்—திருவோணம் | = சந்திர தேசை | 10 வருஷம் |
| மிருகசீரிஷம்—சித்திரை—அவிட்டம் | = அங்காரக தெசை | 7 வருஷம் |
| திருவாதிரை—சுவாதி—சதையம் | = ராகு தெசை | 18 வருஷம் |
| புனர்பூசம்—விசாகம்—பூரட்டாதி | = குரு தெசை | 16 வருஷம் |
| பூசம்—அனுஷம்—உத்திரட்டாதி | = சனி தெசை | 19 வருஷம் |
| ஆயில்யம்—கேட்டை—ரேவதி | = புதன் தெசை | 17 வருஷம் |
| அசுவனி—மகம்—மூலம் | = கேது தெசை | 7 வருஷம் |
| பரணி—பூரம்—பூராடம் | = சுக்கிர தெசை | 20 வருஷம் |
| | ஆக மொத்தம் தெசை | 120 வருஷம் |

ஏறக்குறைய 70 அல்லது 80 வருஷம் வரையில் ஆயுள் அமைப்பு பெற்றவர்களுக்கு ஏழு தெசைகள் மட்டும் நடை பெறக் கூடும் என்பதால், இந்த ஒன்பது தெசைகளும் நடைபெற சாத்தியம் இருக்காது,

அங்காரக தெசையில் பிறந்தவர்களுக்கு சனிதெசை நான்காவது தெசையாக நடை பெறக்கூடும் என்பதால், அது அவர்களுக்கு மாரக தெசையாக அமைகிறது.

கேது தெசையில் பிறந்தவர்களுக்கு, அங்காரக தெசை ஐந்தாவது நடைபெறக் கூடும் என்பதால், அது அவர்களுக்கு மாரக தெசையாக அமைகிறது.

சுக்கிர தெசையில் பிறந்தவர்களுக்கு குருதெசை ஆறாவது தெசையாக நடைபெறக் கூடும் என்பதால், அது அவர்களுக்கு மாரக தெசையாக அமைகிறது.

கடக லக்கின ஜாதகர்களுக்கு மட்டும், குரு தெசை ஆறாவது தெசையாக நடைபெற்றால், அது அவர்களுக்கு மாரகம் செய்யாது என்று சொல்லப்படுகிறது.

புதன் தெசையில் பிறந்தவர்களுக்கு, ராகு தெசை ஏழாவது தெசையாக நடைபெறக்கூடும் என்பதால், அது அவர்களுக்கு மாரக தெசையாகிறது.

மாரக நடைபெறும் சமயத்தில், மாரகம் செய்வதற்குப் பதிலாக, சிறு கண்டங்களுடன் அந்த அசுபப் பலன் நிறைவு பெறக் கூடும். அல்லது வருவாயிலும் - குடும்ப அமைப்பிலும் பலவித சிரமங்களை ஏற்படுத்தலாம்.

இப்போது, லக்கின வாரியாக மாரக ஸ்தானங்கள் எவை எவை என்பதைப் பார்ப்போம்.

மேஷம்—கடகம்—துலாம்—மகரம் ஆகிய நான்கு சரலக்கினங்களுக்கும், இரண்டு—ஏழாம் இல்லங்கள் மாரக ஸ்தானங்களாகும். பதினோராம் இல்லம் பாதகஸ்தானம். சுக்கிரன் கேந்திராதிபத்திய தோஷம் தரக்கூடியவராகிறார்-

ரிஷபம்—சிம்மம்—விருச்சிகம்—கும்பம் ஆகிய நான்கு ஸ்திர லக்கினங்களுக்கும்—மூன்று-எட்டாம் இல்லங்கள் மாரக ஸ்தானங்களாக அமைகின்றன. பாக்யஸ்தானமான ஒன்பதாம் இல்லம் பாதகஸ்தானங்களாகும். சுக்கிரன், சந்திரன் கேந்திமாதிபத்திய தோஷம் தரக்கூடியவர்களாகின்றனர்.

உபய லக்கினங்களான மிதுனம்—கன்னி—தனுசு—மீனம் ஆகியவைகளுக்கு சப்தம் ஸ்தானங்களும் லாப ஸ்தானங்களான பதினோராம் இல்லங்களும் மாரகஸ் தானங்களாகின்றன. சப்தம ஸ்தானம் கேந்திராதி பத்திய தோஷம்—பாதகாதிபத்திய தோஷம் தரக்கூடியவைகளாக அமைகின்றன. ஆகவே, இவர்களுக்குப், புதனும் குருவும் பலத்த கேந்திரா திபத்திய தோடலம் தரக் கூடியவர்களாகின்றனர். புதன் சூரியனுடன் கூடிஇருந்தால், புதனுக்குக் கேந்திராதயத்திய தோஷம் இல்லை.

ஜெனன லக்கினத்திற்கு 1—4—7—10 ஆகிய நான்கு ஸ்தானங்களும்,கேந்திரா ஸ்தானங்களாகும் இவைகள் விஷ்ணு ஸ்தானங்கள் என்றும் சொல்லப்படுவதால், இவைகளில் நிறைய கிரகங்கள் இருந்தால், அந்த ஜாதகர்கள் விஷ்ணு புத்திரர்கள் எனப்படுகின்றனர்.

ஜெனன லக்கினத்திற்கு 1—5—9 ஆகிய மூன்று ஸ்தானங்களும். திரிகோண ஸ்தானங்களாகும். இவைகள் லட்சுமி ஸ்தானங்கள் என்றும் சொல்லப்படுவதால், இவைகளில் நிறைய கிரகங்கள் இருந்தால், அந்த ஜாதகர்கள் ''லட்சுமி புத்திரர்கள்'' என்று சொல்லப்படுகின்றனர்.

லக்கினம் கேந்திரம்—திரி கோணம் ஆகிய இருவிதஸ்தானங்களுக்கும் ஆதியத்தியம் வகிப்பதால், இது ஒரு சுபஸ்தானமாகக் கருதப்படுகிறது. இந்தஸ்தானம், குரு—சுக்கிரன்—புதன் ஆகிய சுப கிரகங்களின் ஆட்சி வீடுகளாக அமைந்தால், அது கேந்திராதியத்திய தோஷம் தரக்கூடியதல்ல என்பது பொது விதி.

இராசி வீடுகள் பன்னிரெண்டில், பகல் வீடு—இரவு வீடு—பகலும் இரவும் களந்த வீடு என்று மூன்று வகையான பிரிவுகள் இருக்கின்றன.

அ. பகல் வீடுகள் (இவைகளுக்குப் பகலில் பலம் அதிகம்) மிதுனம் - சிம்மம்— கன்னி—துலாம்— விருச்சிகம்— கும்பம் = 6.

ஆ. இரவு வீடுகள் (இவைகளுக்கு இரவில் பலம் அதிகம்) மேஷம்—ரிஷபம்—கடகம்—தனுசு—மகரம். = 5.

இ. பகலிரவு வீடுகள் (பகலிலும் இரவிலும் பலம் அதிகம்) மீனம் = 1.

இராசி வீடுகள் பன்னிரெண்டில், ஒவ்வொரு ராசி வீட்டிற்கும் ஒவ்வொரு சின்னம் கொடுக்கப் பட்டிருக்கிறது. இது தவிர, இந்த ஒவ்வொன்றுக்கும், ஒவ்வொரு அதிதேவதை என்ற நியமமும் ஏற் பட்டிருக்கிறது. ஆகவே, அந்தந்த ராசியதிபதிகள் அந்தந்த ராசிக்கு உரிய அதிதேவதையை ஆராதித்து வணங்கி வர வேண்டும்.

| | | | | |
|---|---|---|---|---|
| 1. | மேஷராசி-ஆட்டு | சின்னம் | சுப்பிரமணியர் | அதிதேவதை |
| 2. | ரிஷபராசி-எருது | ,, | மீனாட்சி | ,, |
| 3, | மிதுனராசி-இரட்டை உருவ | ,, | மகாவிஷ்ணு | ,, |
| 4. | கடகராசி-நண்டு | ,, | பராசக்தி | ,, |
| 5. | சிம்மராசி-சிங்க | ,, | பிரமன் | ,, |
| 6. | கன்னியாராசி-கன்னிப் பெண் | ,, | மகாலட்சுமி | ,, |
| 7. | துலாராசி - தராசு | ,, | சரஸ்வதி | ,, |
| 8. | விருச்சிகராசி-தேள் | ,, | ஐயப்பன் | ,, |
| 9. | தனுசுராசி-வில் | ,, | வெங்கடேசபெருமாள் | ,, |
| 10. | மகரராசி கடல்குதிரை | ,, | ராஜராஜேஸ்வரி | ,, |
| 11. | கும்பராசி-அமுதகலச | ,, | பரமேஸ்வரண் | ,, |
| 12. | மீனராசி-இரட்டைமீன் | ,, | அன்னவாகனதேவி | ,, |

ராசிவீடுகள் ஒவ்வொன்றுக்கும், 30 பாகைகள் வீதம் 12 ராசி வீடுகளுக்கும் 360 பாகைகள் என்று சொன்னேன். இவைகளின் நடப்பு நாழிகை மொத்தம் 60 நாழிகைகள் என்றும், அல்லது 24 மணிநேரம் என்றும் ஏற்படுகிறது, அதன் விபரம் பின்வருமாறு:—

| | நாழிகை | விநாடி | | நாழிகை | விநாடி |
|---|---|---|---|---|---|
| 1. மேஷம்— | 4 | 15 | 7. துலாம்— | 5 | 00 |
| 2. ரிஷபம்— | 4 | 45 | 8. விருச்சிகம்— | 5 | 15 |
| 3. மிதுனம்— | 5 | 15 | 9. தனுசு— | 5 | 30 |
| 4. கடகம்— | 5 | 30 | 10. மகரம்— | 5 | 15 |
| 5. சிம்மம் — | 5 | 15 | 11. கும்பம்— | 4 | 45 |
| 6. கன்னி— | 5 | 00 | 12. மீனம்— | 4 | 15 |

சூரியஉதயம் இடத்திற்கு இடம்—காலத்திற்குக் காலம் மாறு பாடு அடைகிறது. அகில உலக நடைமுறையில் இருந்து வரும் ஆங்கில மாததேதியின் உதயம்—அஸ்தமனம் எப்படி? என்று பார்ப்போம்.

இங்கிலாந்து தேசத்தின் தலைநகர் லண்டன்மாநகர். அதற்கு அருகாமையில் இருக்கும் இடம் ''கிரீன்வீச்சு'' என்றஸ்தலமாகும். இதை புஜ்யம் பாகை என்று கணக்கிட்டு, இதற்கு மேற்காக 180 பாகை என்றும், கிழக்காக 180 பாகை என்றும், ஆகமொத்தம் 360 பாகைகளாகப் பிரித்துள்ளனர். இது ஒவ்வொன்று ''தீர்க்கரேகை'' என்று சொல்லப்படுகிறது.

சூரியன் ஒரு பாகையில் இருந்து, மறுபாகையைச் சென்றடைய நான்கு நிமிஷங்கள் ஆகின்றன. இப்படியாக, சூரியன் ''கிரீன்வீச்சு'' ஸ்தலத்தில் இழிந்து பிறப்படும் சூரியன் 360 பாகைகளையும் கடந்து, சூரியன் அதே இடத்தை வந்தடைய ஆகும் காலம் 360×4=1440 நிமிஷங்கள், அதாவது 24 மணிநேரமாகிறது.

ஒரு தீர்க்கரேகைக்கும் மறுதீர்க்கரேகைக்கும் இடையிலுள்ள தூரம் ஏறக்குறைய 67 மைல்கள் ஆகின்றன. இப்படியாக 360 தீர்க்கரேகைகளின் விஸ்தீரணம் 360X67=24120 மைல்கள் (36592 கிலோ மீட்டர்கள்)ஆகின்றன.

மேலே சொல்லப்பட்ட கேந்திர—திரிகோணங்கள் நல்ல ஸ்தானங்கள். ஆனால், லக்கினத்திற்கு 3-6-8-12- ஆகிய ஸ்தானங்கள் மறைவு ஸ்தானங்கள் என்றும், அசுபஸ்தானங்கள் என்றும் சொல்லப்படுகின்றன.

ஆகவே, இவைகளின் தெசாபுத்தி அசுயப்பலன்களைத்தரும். இந்த அசய ஸ்தானங்களில் 1-2-4-7- 9-10-11 ம் அதிபதிகள் இடம் பெறுவது கூடாது.

மேற்கண்டவகைகள் தவிர, இன்னும் ஏராளமான சோதிடப் பலன்கள் ''நவரசசோதிடம்'' என்ற நூலில் விளக்கமாகத்தரப் பட்டுள்ளன.

## 3. உங்கள் ராஜயோகம் விலை ரூ 5—00

மே 1981ல் வெளியிடப்பட்டது. வெளியிட்டோர்—அணில் ஆப்செட்புக் அவுஸ், பாண்டிச்சேரி.

'யோகங்கள்'' என்பது, எளிய நிலையில் உள்ள ஒருவன் திடீ ரென்று நல்ல உன்னதமான, உயர்ந்த நிலைய அடைவதை, குறிக்கும்.

இப்படிப்பட்ட உயர்ந்த நிலை, பணத்தாலும் ஏற்படலாம். பட்டம்பதவியாலும், ஏற்படலாம். அல்லது நல்ல உடல் ஆரோக்யத்தாலும் ஏற்படலாம்.

இத்தகைய உன்னத நிலைமை சர்வசாதாரணமாக ஏற்படுவது கிரகபலனத்தினால் என்றுதான்சொல்லவேண்டும். குறிப்பாக சொல்லப்போனால், உயர்ந்தவர் தாழ்வதும், தாழ்ந்தவர் உயர்வதும், அவரவர் ஜாதக வாயிலாக அமைந்துள்ள யோகங்களாலும், அவயோகங்களாலும் என்றே அமைகிறது.

அவயோகங்களில், அதிக அளவில் பாதிப்பைத் தரக்கூடியது எவை எவை என்றும், யோகங்களில் அதிக அளவில் உயர்வை தரக்கூடியது எவை எவை என்பதை எடுத்துச் சொல்லுவதற்கு முன்பு, யோகவியல்புகளைப் பற்றிச்சிறிது ஆராய்வோம்.

உலகநாடுகளில், பண்டைப்பாரம் பரியமாக சோதிடக் கலையை வளர்த்துவருவது நமது பாரத நாடு ஒன்றுமட்டுதான் என்று நாம் பெருமிதம் அடைகிறோம் ஆனால், ஒருகாலத்தில் நம்மை விட கிரேக்கர். ஜோதிடக்கலையிலும், கைரேகைகலையிலும் சிறந்து விளங்கினார் என்று சொன்னால், நீங்கள் ஆச்சரியப் படுவீர்கள்! ஆம், ஒருகாலத்தில் கிரேக்கர்கள் இக்கலைகளைச் சிறப்பாக வளர்த்து வந்தார்கள்.

கிரேக்க அலக்சாந்தர் இந்தியாவின் மீது படைஎடுத்து வந்த போது, அவருடையபடைகளில் அநேகருக்கு ஜோதிடக்கலையும், கைரேகைகளையும் தெரிந்திருந்தது, வெற்றி கொண்ட அலக்சாந்தர்,நாடு திரும்பியபோது,அவர் பாபிலோன் என்ற நகரில் மஞ்ளசுரத்தினால் (காமாலை) இறந்து விட்டார். அப்போது' அவருடைய பிரதான தளபதியாக இருந்த செல்யூக்கஸ் நிக்கேடார் என்பவர், அலச்சாந்தர் ஜெயித்த இந்தியாவின் வடமேற்கு பகுதிக்குத்தாம் அரசரானார்.

அப்போது, மௌரரிய அரசரான சந்திரகுப்தர், பலம்பெற்ற மன்னராக ஆட்சிசெய்துகொண்டிருந்தார். அவருக்குச் செல்யூக்கஸ் நிகேடார் தமது மகளைத்திருமணம செய்து கொடுத்து, நிறைய யானைகளை ராயபாரியாக (அன்பளிப்பாக) கொடுத்தார்.

அச்சமயத்தில், கிரேக்கருடைய படைகளும் வடமேற்கு இந்தியாவிலேயே நிரந்தரமாகத்தங்கிவிட்டனர். காலகிரமத்தில், இந்தியர்களும், கிரேக்கர்களும் பெண் கொடுக்க—பெண் எடுக்க என்று சம்மந்தம் செய்து கொண்டு, இந்தியரும் கிரேக்கர்களும்

இரண்டறக்கலந்து விட்டனர். இதன் காரணமாகத்தான் இந்தோ—கிரேக்கர்நாகரிகம் ஏற்பட்டு, அதன் எதிரொலியாக காந்தாரக்கலை என்ற அழியாச்சின்னம் ஏற்பட்டது.

அச் சமயத்தில், இருமரபினர்களுடைய சோதிடக் கலைகளும் சங்கமம் ஆகத்தலைப்பட்டது. ஆகவே, கிரேக்கர்களுடைய சோதிடக் கலையிலும் கூட, 150 யோகங்கள் இடம் பெற்று இருந்ததாகத் தெரிய வந்தது. அதைப் போலவே, நம் நாட்டு சோதிடக் கலையிலும் கூட, 150க்கு மேற்பட்ட யோகங்கள் இருந்ததாகச் சொல்லப்படுகிறது.

மேலே சொல்லப்பட்ட யோகங்களில், ஏறக்குறைய அனுபவ நடைமுறையில் இருந்து வரும் 108 யோகங்களைப் பற்றி ''உங்கள் ராஜ யோகம்'' என்ற நூலில் குறிப்பிட்டு, அவைகளுக்குரிய பாடல்கள் சிலவும், அதற்கான விளக்கங்களும் எழுதப்பட்டிருக்கின்றன.

நம்மை செய்யும் யோகத்தைப் போலவே தீமை செய்யும் யோகங்களும் கூட இருக்கின்றன.

மன்னன் என்று சொல்லக்கூடிய குரு நின்ற ராசி வீட்டுக்கு 6—8—12ல் மதி என்ற சந்திரன் இருந்தால், அதுதான் சகடை யோகம் என்றும் அரிஷ்டயோகம் என்றும் சொல்லப்படுகின்றன,

இதில் பிறந்தவர்கள் எல்லாம், என்ன இருந்தும் என்ன புண்ணியம். அல்லல் படவும் எதையும் காலம் கடந்தே அனுபவிக்கவும் கூடும். எந்த ஒரு நல்ல காரியமும், ஓரிருமுறை தோல்வி கண்டு, இறுதியில் வெற்றியாக முடியும். இருப்பினும் பெயர்கெடும்.

அடுத்து, லக்கினாதிபதி, ஜெனன லக்கினத்திற்கு 6-8-12ல் மறைந்து இருப்பதும், லக்கினத்திற்கு 6-8-12ல் சந்திரன் இடம் பெற்று இருப்பதும் கூட அவயோக ஜாதகமாகும்.

ராகு தரும் அவயோகம் எப்படி என்றால், சந்திரன் வளர்பிறையாக இருந்து, அச்சந்திரனுக்கு 2ல் அல்லது 12ல் ராகு தனித்து இருந்தால், அதுவும், மாபெரும் அவயோக ஜாதகமாகும்.

ராகு கேதுகளுக்குள் லக்கினம் உள்பட எல்லா கிரகங்களும் உள்ளடங்கி இருந்தால், அதுவும் மாபெரும் அவயோக ஜாதகமாகும்.

கேந்திர கோணாதிபதிகள் பரிவர்தனை பெற்று இருந்து, கீழோர்கள் என்று சொல்லக் கூடியவர்கள் (லக்கினத்திற்கு 3-6-8-12க்கு உடையவர்கள்) இவ்விருவரை அல்லது இருவரில் ஒருவரை பார்த்தாலோ அல்லது, கூடி இருந்தாலோ கூட- "கனமான யோகமெலாம் நாசமாமே!" என்று சொல்லப்படுகிறது

யோகந்தரக் கூடிய 5-9-10க்கு உடையவர்கள் 6-8-12ல் மறைந்து இருந்தாலோ அல்லது பகைநீச்சம் பெற்று இருந்தாலோ கூட, அதுவும் ஒரு அவயோக ஜாதகம் தான்.

லாபாதிபதி விசையஸ்தானம் பற்றி இருப்பதும் கூட அவயோக ஜாதகம்தான்.

மேற்கண்ட ஜாகதங்கள் மட்டும், மாபெரும் அவயோகங்களைத் தரக் கூடிய ஜாதகங்களாகும். மற்றவை ஓரளவு பரவாயில்லை.

இனி, சுபயோகங்களைப் பற்றிப் பார்ப்போம்.

எந்த ஒரு ஜாதகர் பாக்யாதிபதி சாரத்தில் (ஒன்பதுக்கு உடையவரின் நட்சத்திரத்தில்) பிறக்கின்றாரோ, அவருடைய வாழ்க்கை உள்ள படியே சிறப்பாகத்தான் இருக்கும். இதைவிட சிறந்தயோகம் இருக்க முடியாது.

தர்மகர்மாதிபதிகள் (9—10க்கு உடையவர்கள்) பகை. நீச்சம் அஸ்தங்கம்—நிறி சூன்யம்—வேதக நிலை அடையாமலும் 3—6-8-12ல் இடம் பெறாமலும் கூடி இருந்தாலும் அல்லது ஒருவரை ஒருவர் சப்தமமாகப் பார்த்துக்கொண்டிருந்தாலும் அல்லது பரிவர்தனையாக இருந்தாலும் அல்லது அவரவர் இல்லத்தில் ஆட்சிபெற்று இருந்தாலும் அது தர்மகர் மாதிபதியோகமாகும். இதன்காரணமாக இவருக்கு தீர்க்க ஜீவன யோகம் ஏற்பட்டு சுகயோஜனம் சுகாவேஎம் என்ற அமைப்பு இறுதி வகையில் குறைவின்றி அமைந்திருக்கும்.

சந்திர கேந்திரத்தில் குரு இருந்து, அது சந்திரனுக்கும் குருவுக்கும் நல்ல ஸ்தான அமைப்பு பெற்று இருந்தால் அது "கேசரி யோகம்" என்றும் "கெஜ கேசரி யோகம்" என்றும் சொல்லப்படுகிறது. இதன் காரணமாக, இவருக்கு ஜாதக ரீதியாக உள்ள சகல தோஷங்களும், சிங்கத்தைக் கண்ட பல யானைகள் பயந்து ஓடுவதைப் போல விலகிவிடும் என்று சொல்லப்படுகிறது.

ஜெனன லக்கினத்திற்கு 1-4-7-10ல், கோன் என்று சொல்லக் கூடிய குருவும்-சுக்கிரனும்-புந்தி என்ற புதனும் இருந்தால், அந்த

ஜாதகத்தில் உள்ள பத்து தோஷங்களும் (பட்சி தோஷம்—பறவை தோஷம்—எட்சி தோஷம்—தேரை தோஷம்—குளி தோஷம்—புருஷ தோஷம்—பெண் தோஷம்—முட்டு தோஷம்—கழிவழிந்த தோஷம்—பாலாரிஷ்ட தோஷம்) சூரியனைக் கண்ட பனி போல விலகிவிடும் என்று சொல்லப்படுகிறது. யோகங்களில், இது தலை சிறந்த யோகமாகக் கருதப்படுகிறது. இது பத்துக் கோடியில் ஒருவருக்கு அமையும்.

கேந்திராதிபதியும்—கோணாதிபதியும் நல்ல ஸ்தானங்களில் இருந்து, அவ்விருவரும் பரிவர்த்தனையாய் இருந்து, தீயவர்களின் பார்வை, சேர்க்கை இன்றி இருந்தால், அந்த ஜாதகருக்கு சகல சம்பத்துகளும் குறைவின்றி அமையும். தீய பலன் தரித்த நிலை என்ற பேச்சுக்கே இடம் இருக்காது. விதவிதமாய் வண்டி வாகனங்களும் அமைந்திருக்கும். பெண்களால் அனுகூலமுண்டு. ஆடை ஆபரணங்கள் சேரும்.

ஆறு எட்டாம் வீட்டதிபதிகள் மாறி இருந்தாலும் சரி, இருவரும் கூடி இருந்தாலும் சரி, அது விபரீத ராஜயோகமாகும். இது, திடீர் தனயோகம் காட்டும். இவ்விருவருடைய தசா புத்திகளில் பிரபல யோகம் கிட்டும்.

லக்கினாதிபதியும் நான்காம் வீட்டதிபதியும் பரிவர்த்தனையாயிருந்தால், அந்த ஜாதகருக்கு வயது 8 முடிவதற்குள், அவருடைய மாதா பிதாவிற்கு சுயமான வீட்டு யோகமும், பூமி யோகமும் சிறப்பின் பலன் தரும்.

12ஆம் இல்லத்ததிபதிஇரண்டாம் வீட்டில் அமர்ந்துஎத்தனை கிரகங்களுடன் கூடி இருக்கிறதோ, அந்த ஜாதகர் அத்தனை வீடு கட்டிச் சுகமாக வாழக் கூடியவராவாராம்.

குடும்பஸ்தானாதிபதி — சப்தமாதிபதி — களத்திரகாரகனை சுக்கிரன் இம்மூவரும் கேந்திர திரிகோண அமைப்புப் பெற்று இருந்தால், அந்த ஜாதகர் பல பெண்களை விரும்பினால், ஒரே ஒரு பெண்ணை மணம் செய்து கொண்ட ஏகதாரம் என்றபடி வாழக் கூடியவராவார்.

ஆண் ஜாதகத்தில் சுக்கிரன் மேஷம்-மிதுனம்-சிம்மம்-துலாம் தனுசு-கும்பம் ஆகிய ராசிகளில் சுக்கிரன் இருந்தால் அது யோக ஜாதகமாகும். மனைவிக்கு இறுதிவரையில் ஆடை ஆபரண அணிகலன்கள் நிலைத்து நிற்கும்.

ஒரு சிலர் பிறக்கும் போது எளிய நிலையில் இருந்தாலும், அவர்கள் தமது ஜீவித காலத்தில், பெரிய மாடமாளிகை போல வீடு கட்டி தகுதியாய் வாழ்ந்திடுவார் என்று சொல்லப்படுகிறது. இதற்கு, வாகனஸ்தானாதிபதி என்று சொல்லக்கூடிய நான்காம் வீட்டதிபதி நல்ல நிலையில் இருக்க வேண்டும்.

4ஆம் வீட்டதிபதி நல்லோர் வீட்டில் இருக்கவேண்டும் (குரு-சுக்கிரன்-புதன்-வளர் பிறைச்சந்திரன்) அல்லது 2-5-8-11 என்று சொல்லக் கூடிய பணபர ஸ்தானத்தில் இருக்க வேண்டும். அல்லது கேந்திரத்தில் இருக்கவேண்டும்

நான்காம் வீட்டதிபதி நின்ற ஸ்தானத்திற்கு 10ஆம் வீட்டதிபதி லக்கினாதிபதியுடன் கூடி இருந்தால், அந்த ஜாதகர் யோகவான் என்றும், வெகு பூமி சொத்துக்கு அதிபதி என்றும் சொல்லப்படுகிறது.

குரு நின்ற ஸ்தானத்திற்கு 1-4-7-10 ல் மங்களன் என்றுசொல்லக்கூடிய செவ்வாய் இருந்தாலும், அந்த ஜாதகருக்கு நல்ல விசாலமான வீடுவாசலும், பழமரங்கள்-தோட்டம்-தோப்பு-வற்றாத நீர் நிலை எல்லாமே நிறைந்திருக்கும். இவை போன்ற இன்னும் ஏராளமான யோகங்கள் ''உங்கள் ராஜ யோகம்''என்ற இந்நூலில் கூறப் பெற்றுள்ளன.

## 4. அதிர்ஷ்ட அமைப்புடன் வீடு கட்டுவது எப்படி?

விலை ரூ. 4-50. மே, 1981-ல் வெளியிடப்பட்டது. வெளியிட்டோர் — அணில் ஆப்செட் புக் அவுஸ்-பாண்டிச்சேரி.

பண்டைக் காலத்தில், திருமணம் ஒன்றைச் செய்து முடிப்பதும், வீடு ஒன்றைக் கட்டி முடிப்பதும் அவ்வளவு சுலபமல்ல; இதன் காரணமாகத்தான்,

''கல்யாணத்தைச் செய்து பார்
வீட்டைக் கட்டிப்பார்''

என்ற ஒரு பழமொழி ஏற்பட்டது.

வீடு கட்டுவதற்கு ஒரு மனைவாங்கினால்; அந்த மனை யோகமுள்ளதா? என்று கண்டறிய பல்வேறு சோதனைகளைச் செய்து பார்க்க வேண்டும்.

முதலாவதாக, அந்த மண் இனிப்பான மண்ணாக இருக்க வேண்டும். மனையின் எதிரில் சந்து குத்து கோவில் சன்னதி-குட்டிச்சுவர்-எதிர்மனை சிம்மலக்கினம் அல்லது சிம்ம ராசிக்காரருடையதாகவும் இருக்கக் கூடாது.

மனையில், 1½ அடி ஆழத்திற்குள் இரும்புத்துண்டு-எலும்புத் துண்டு-மண்டை ஓடு-சிட்டம் பிடித்த செங்கல்-தேரை-தலைமயிர்-உமி-புற்று-இருக்கக் கூடாது. அப்படி இருந்தால், அது சல்லிய தோஷம் என்று சொல்லப்படுகிறது. ஆகவே, அவற்றை அறவே அகற்ற வேண்டும். சமதளமாக உள்ள மனையின் மீது, 1½ அடி, உயரம் மண் கொட்டி உயரம் எழுப்பி அதன் மீது வீடு கட்டினால், சல்லிய தோஷம் பாதிக்காது.

இது தவிர, தேர்ந்தெடுக்கப்பட்ட மனை யோகமாக இருக்குமா? என்று கண்டறிய, அம்மனையின் ஈசான்ய (வடகிழக்கு), மூலையில், ஒரு முழ நீளம், ஒரு முழ அகலம், ஒரு முழ ஆழம் இருக்கும்படி ஒரு குழி வெட்ட வேண்டும். அக்குழியில், மூன்று சுமங்கலிகள் தண்ணீர் கொண்டு வந்து ஊற்றி, அக்குழியை நிரப்பச் சொல்ல வேண்டும். அதன் பிறகு, விநாயகர், சிவன், பூமா தேவி ஆகிய மூவரையும் தியானம் செய்து, ஏதாவது ஒரு புஷ்பத்தை அக்குழியில் உள்ள தண்ணீரில் விடவேண்டும்.

இப்போது, அந்தத் தண்ணீரும், அந்த புஷ்பமும், இடமிருந்து வலமாக (பிரதட்சணமாக) சுற்றிவந்தால் அந்த மனை யோகமான மனை என்று கண்டறிய வேண்டும். இது ஒரு வகை.

மற்றொரு வகை என்னவென்றால், தோண்டப்பட்ட அக்குழியில் தண்ணீர் விட்டு சோதனை செய்யாமல், அப்பள்ளத்திலிருந்து தோண்டி எடுத்த அந்த மண்ணை மீண்டும்அந்தப் பள்ளத்திலேயே தூர்க்க வேண்டும். இப்போது மண் மிகுதியாக மீந்து இருந்தால், அந்த மனை யோகமான மனை என்று அறிந்து கொள்ள வேண்டும்.

வேறு ஒரு வகையில் சோதித்தால், அதாவது தோண்டப்பட்ட குழியில் தண்ணீர் நிரப்பி, மலர் விடுவதற்குப் பதிலாக, கொஞ்சம் பால் விடவேண்டும். பாலும் நீரும் பிரதட்சணமாகச் சுற்றினால் நன்மை. அதாவது அது யோகமுடைய மனை.

குழியில் விடப்பட்ட நீரை அப்படியே விட்டு விட்டு, மறுநாள் காலை சூரிய உதயத்தின்போது அக்குழியை வந்து பார்த்தால், அக்குழியினுள், மூன்று பிடிநீர் இருந்தால், அது யோகமுடைய மனையாகும்.

குழியில் தண்ணீர் விட்டு மலர் போட்டு சோதிக்கும்போது, நீரும் மலரும் வலமிருந்து இடமாகச் சுற்றி வந்து, மலர் தென் கிழக்கிலோ அல்லது தெற்கிலோ அல்லது வடமேற்கிலோ ஒதுங்கி நிற்கக் கூடாது. அப்படி ஒதுங்கினால் அது யோகமான மனை யல்ல.

பொதுவாக, ஒரு மனையில் வீடுகட்ட ஆரம்பிப்பதற்கு முன்பு அம்மனையில், கிணறு வெட்டி, தண்ணீர் பிராப்தியை முதலில் ஏற்படுத்திக் கொள்ளுவது மரபு. கிணறு தோண்டுவதாய் இருந் தால், அம்மனையின் கிழக்கு-வடகிழக்கு-மேற்கு ஆகிய திக்கில் தான் கிணறு எடுக்கவேண்டும். மற்ற திக்குகள் யோகமல்ல. சித் திரை,வைகாசி,ஆனி மாதங்களில் கிணறு தோண்டினால், நீர்ப் பெருக்கம் அதிகமாக இருக்கும்.

ஆடி-ஆவணி ஆகிய மாதங்களில் கிணறு வெட்டினால், மத்திம நீர்ப்பெருக்கம் இருக்கும். மற்ற மாதங்களில் கிணறு வெட்டினால், நீர்ப்பெருக்கம் ஏற்படுவது இயலாமல் போகும். இது பூகற்ப ஆராய்ச்சியின் படியும்-ஆயரிதியின் படியும் அமை யக் கூடிய விதிமுறையாகும்.

அ. மேஷம்-சிம்மம்-தனுசு ராசிக்காரர்களுக்குத் வடக்குத் திக்கு பார்த்தபடி வீடுகட்ட உத்தமம்.

(இவர்கள் சித்திரை-வைகாசி மாதங்களில் வீடு கட்டுவது உத்தமம்)

ஆ. கடகம் விருச்சிகம்-மீனம் ராசிக்காரர்களுக்கு கிழக்குத் திக்கு பார்த்தபடி வீடுகட்ட உத்தமம்.

(இவர்கள் ஆடி-ஆவணி மாதங்களில் வீடுகட்டுவதுஉத்தமம்).

இ. ரிஷபம்-கன்னி-மகரம் ராசிக்காரர்களுக்கு தெற்குத் திக்கு பார்த்தபடி வீடுகட்ட உத்தமம்)

(இவர்கள் ஐப்பசி, கார்த்திகை மாதங்களில் வீடு கட்டுவது உத்தமம்)

ஈ. மிதுனம்-துலாம்-கும்பம் ராசிக்காரர்களுக்கு மேற்குத் திக்கு பார்த்தபடி வீடுகட்ட உத்தமம்.

(இவர்கள் தை, மாசி மாதங்களில் வீடு கட்டுவது உத்தமம்)

ஆனி புரட்டாசி-மார்கழி-பங்குனி ஆகிய நான்கு மாதங்களில் வீடு கட்டக்கூடாது. அப்படிக் கட்ட வேண்டும் என்ற அவசியம்

ஏற்பட்டால், அம்மாதங்களில் வாசக்கால் வைக்கலாகாது. மறு மாதங்களில் வாசக்கால் வைக்க உத்தமம்.

கிரகாரம் செய்ய அல்லது அஸ்திவாரம் போட, ''வாஸ்து புருஷன்'' இருக்கையை அறிந்து செயல்பட வேண்டும். பூமா. தேவிக்கும் சுகண்ட முனிவருக்கும் பிறந்தவர்''வாஸ்து புருஷன்.'' அவர் ஸ்ரீரங்கநாதர் பள்ளி கொண்டுள்ளபடி, ராசிவீடுகளில் சூரியன் சஞ்சரிக்கும் ராசி வீட்டில் காலை நீட்டிக் கொண்டு, அதற்கு நேர் எதிர் ராசியில் தலையை வைத்துக் கொண்டு, தமது இடக்கையை கீழ்புறமாகவும், வலக்கையை வலது தொடையில் பதியும் படியும் நீண்டிக் கொண்டு நித்திரை செய்து கொண்டிருப் பார். இது படுக்கைநிலை என்று சொல்லப்படுகிறது.

இப்படிப்பட்ட படுக்கை நிலை-ஆனி-புரட்டாசி-மார்கழி-பங் குனி ஆகிய நான்கு மாதங்களில் நீடிக்கும். ஆனால் எழமாட்டார். மற்ற மாதங்களில், கீழே குறிப்பிடப்பட்ட தேதியில் நாழிகையில் விழித்து எழுந்து 3¾ நாழிகை வரையில், முதல் முக்கால் நாழிகை யில் ஸ்நானம்-தந்த சுத்திசெய்வார். 2ஆவது முக்கால் நாழிகையில் பூஜை செய்வார். 3ஆவது முக்கால் நாழிகையில் போஜனம் செய் வார். 4ஆவது முக்கால் நாழிகையில் தாம்பூலம் தரிப்பார். 5ஆவது முக்கால் நாழிகையில் ராஜ்ய பரிபாலனம் செய்வார்.

மேலே சொல்லப்பட்ட மூன்றே முக்கால் நாழிகையில் 3 கிரியைகளுக்கான 2¼ நாழிகை சென்ற பிறகு, தாம்பூலம் தரித்தல் ராஜ்ய பரிபாலனம் செய்தல் ஆகிய கடைசி 1½ நாழிகையில் மனை கோலவும்-கிரகாரம்பம் செய்யவும் உத்தமம்.

1. சித்திரைமாதம் 10ஆம் தேதி சூரிய உதயம்கழித்து5 நாழிகை யில் வாஸ்து புருஷன் விழித்தெழுவார்
2. வைகாசி மாதம் 21ஆம் தேதி 8 நாழிகை ,,
3. ஆடி மாதம் 11ஆம்தேதி 2 ,, ,,
4. ஆவணி மாதம் 6ஆம் தேதி 21 ,, ,,
5. ஐப்பசி மாதம் 11ஆம் தேதி 2 ,, ,,
6. கார்த்திகை மாதம் 8ஆம்தேதி10 ,, ,,
7. தை மாதம் 12ஆம் தேதி 8 ,, ,,
8. மாசி மாதம் 22ஆம் தேதி 8 ,, ,,

கட்டக்கூடிய வீடு எந்தத் திக்கை நோக்கி இருந்தாலும், அந்த வீட்டுமனைக்கு எதிரில் வீட்டைப் பார்த்தபடி நின்று கொண்டு,

அந்த வீட்டின் அகலத்தை வலக்கைப் பக்கத்திலிருந்து இடது பக்க மாக ஒன்பது பாகம் வரையில் இருக்கும்படி செய்து அந்த ஒன்பது பாகத்திற்கும், சூரியன்-சந்திரன்-அங்காரகன்-புதன்-குரு-சுக்கிரன்-சனி-ராகு கேது-என்று பெயர் கொடுக்க வேண்டும். இப்போது, புதன் குரு பாகத்தில்,புதனில் ஒரு பகுதியும் குருவில் இரு பகுதியும் இருக்கும்படி வாசக்கால் வைக்க வேண்டும். இதுதான், மனையடி சாஸ்திரப்படி அமையக் கூடிய விதிமுறையாகும்.

நாம் கட்டும் வீட்டிற்குத் தெற்கிலும், மேற்கிலும் நம்மைவிட வயதில் அதிகமாக உள்ள உறவினர்களின் வீடு அமைந்திருக்க வேண்டும்.

வீட்டின் நுழைவாசல் உயரத்திற்கு வீட்டினுள் இருக்கும் வாயில்கள் அனைத்தும், புறக்கடை வாயில் வரையில், சமஉயர மாக இருக்கவேண்டும். இடையில் தடுப்புச் சுவர்களும்கூட இருக்கக் கூடாது. தெரு வாயிற்படி முதல், வீட்டின் தோட்டம் வரையில், தடையின்றி நன்கு தெரிய வேண்டும். தெரு வாயிற்படியை விட உள் வாயிற்படி இறக்கமாக இருக்கக்கூடாது.

மாடிக்கு மேல் மாடி வீடு வேண்டுமானால், அதை அம்மாடி யின் மேல் தளத்தில் உள்ள வடபுறத்தில் அல்லது கீழ்ப்புறத்தில் கட்டுவதே சிலாக்கியம் ஆகும். மாடிக்கு ஏறிச்செல்லும் படிக்கட் டின் ஆரம்பம், கிழக்கு அல்லது வடக்குத் திக்கை நோக்கி ஏறிச் செல்லுவது போல அமைந்திருக்கவேண்டும்.

வீட்டின் கழிவுநீர் கிழக்குத் திக்கை நோக்கிச் சென்று வெளி யேற வேண்டும். இப்படிப்பட்ட கழிவு நீர். ஒரு வீட்டிலிருந்து, மற் றொரு வீட்டினுள் சென்று அதன் பிறகு,அது வெளியேறக்கூடாது.

வீட்டினுள்ளிருந்து வெளி யேறும் கழிவுநீர், தெருவாயிற்படி வரையில், வாசற்படியை நோக்கி வந்து, அது வெளியேறும் சாலக மாக இருக்கக்கூடாது.

வாசற்படிக்கு நேராக, மாடிவீட்டுக் கழிவுநீர் அல்லது மழை காலங்களில் வெளியேறும் ஜலதாரை நீர் வெளியேறக்கூடாது. பக்கவாட்டில் இருப்பது நலம்.

ஒரு வீட்டினுள் வீடு என்று அடுக்கடுக்காக, இரண்டுக்கு மேல் கட்டக்கூடாது. இது தொட்டிக் கட்டுகள் என்று பெயர் பெறும். முதற்கட்டுக்கும் இரண்டாம் கட்டுக்கும் வெவ்வேறு ஆயம் இருக்கவேண்டும். ஒரே ஆயமாக இருக்கக்கூடாது.

வீட்டின் சமதளத்திற்குப் புறக்கடையின் சமதளம் சற்றுத் தாழ்ந்து இருக்கவேண்டும்.

வீட்டிற்குள் அமைக்கக்கூடிய தாழ்வாரம் $5\frac{1}{2}$ அடிக்குக் குறையாமல் இருக்கவேண்டும். கூடங்களின் அகலம் 12 அடி—16அடி—22அடி—29 அடி என்று இருக்கவேண்டும்.

வீட்டில் அமைக்கக்கூடிய அறைகள் ஒற்றப்படையாக இருக்க வேண்டும். ஒரு அறை—மூன்று அறைகள் கூடாது. 5-7-9-11 என்று அமையவேண்டும்.

இரண்டுவித மரத்தினால் வாசல் கால் செய்யக்கூடாது. கதவு செய்வதற்கு ஒற்றப்படை பலகையைப் பயன்படுத்த வேண்டும். மூன்றுவித மரத்தினால் கட்டில் செய்யக்கூடாது.

வாசற்படி வைக்க, வேங்கை அல்லது தேக்கு மரம் சிரேஷ்டம், வாசக்காலின் உயரம் 9 பங்கு என்றும், அகலம் 5 பங்கு என்றும் இருக்கவேண்டும். கதவுகளுக்கு ஒற்றைக்கணக்காய்ப் பலகைகளை இணைக்கவேண்டும்.

ஒற்றைக்கதவாய் இருந்தால்,மூன்று பலகைகளை இணைத்துக் கதவுசெய்ய வேண்டும். இரட்டைக்கதவுகளாக இருந்தால், ஒவ்வொரு கதவிற்கும் மும்மூன்று பலகைகள் என்று இணைத்துக் கதவுகள் செய்யவேண்டும்.

கதவைத் திறந்து வைத்தால், அது தானே வந்து சாத்திக் கொள்ளக் கூடாது. அதிக இரைச்சலும் போடக்கூடாது.

வாசக்காலுக்கு இடப் பக்கத்தில்தான் ஒற்றைக் கதவை இணைக்கவேண்டும்.

மச்சு வீடுகளின் கழிகளும், கூரைவீடுகளின் தூலங்களும் இரட்டைப்படையாகவே இருக்கவேண்டும்..

வீட்டின் சுவர் 9அடிகளுக்குக் குறைவு இல்லாமல் இருக்க வேண்டும் தாய்ச்சுவர் உள்பட எல்லாச் சுவர்களும் $1\frac{1}{2}$ அடி அகலம் கொண்டதாக இருக்கவேண்டும்.

சுவரில் புற்று இருப்பதும், விரிசல் ஏற்படுவதும் கூடாது. உடனுக்குடன் மராமத்து செய்யவேண்டும். ஒற்றைக் கம்பம் அமைப்பதும் கூடாது.

வீடுகளில்—பருத்தி—அத்தி—பனை—நாவல்—நெல்லி—புளி—இலவு—அருக்கு போன்ற விருட்சங்களை வைக்கக்கூடாது.

சிவாலயம், விநாயகர் ஆலயம் ஆகியவற்றிற்குமுன் வீடுகட்டிக் குடி இருப்பது ஆகாது. விஷ்ணு கோவில்களுக்குப் பின்புறம் வீடு கட்டிக் குடி இருப்பது ஆகாது. கோவில்களின் கோபுரம், மசூதி ஸ்தூபிகள்சர்ச்சுகளின் சிகரம் ஆகியவைகளின் நிழல்கள் எங்கெங்கு விழுகிறதோ அங்கங்கு எல்லாம் வீடுகட்டிக் குடிஇருப்பது ஆகாது.

இன்னும் இது போன்ற அநேக சாங்கியங்களை எடுத்துச் சொல்லும் வகையில் இந்த 'அதிர்ஷ்ட அமைப்புடன் வீடுகட்டுவது எப்படி?'' என்ற நூல் எழுதி வெளியிடப் பட்டிருக்கிறது. இக் காலத்தில், இப்படிப் பட்ட விதிமுறைகளை எல்லாம் அனுசரித்து வீடு கட்டுவது என்பது சாத்தியமில்லை என்பதால்; கூடியமட்டும், ஏற்றுக் கடைபிடிப்பது நல்லது.

## 5. பணம் பெருக பத்து வழிகள்—விலை ரூ. 4—00.

டிசம்பர் 1981-இல் வெளியிடப்பட்டது, வெளியிட்டோர். ராசி பப்ளிகேஷன்ஸ், 20, செட்டித்தெரு, பூவிருந்தவல்லி, சென்னை-600056.

இந்நூல், முழுக்க முழுக்க சோதிட சாஸ்திர தத்துவப்படி எழுதப்பட்ட நூல், அ. ம. இலக்குவன் எழுதிய நூல் இது.

சோதிட சாஸ்திர அடிப்படைத் தத்துவப்படி, ஒவ்வொரு வருக்கும், வருவாய் எப்படி அமையும்? என்பதைப்பற்றி எடுத்துச் சொல்லுவதுதான் ஜீவனயோகம் என்று சொல்லக்கூடிய கர்ம காண்டமாகும். இதனை அப்படியே அப்பட்டமாக, ஒவ்வொருவரு டைய ஜீவனயோகம் லக்கினப்படி, ராசிப்படி எப்படி அமையும் என்பதைப் பற்றி விளக்கிச் சொல்லுவதுதான் இந்நூலின் சாராம்சமாகும்.

நவக்கிரகங்கள் என்று சொல்லக் கூடிய ஒன்பது கிரகங்களும், அவரவர் ஜனன லக்கினப்படி, ஜீவனஸ்தானாதிபதியாகிறது. அப்படி ஜீவன ஸ்தான ஆதிபத்தியம் பெறும்கிரகம், எப்படி வேலை வாய்ப்பிற்கான அனுக்கிரகத்தைச் செய்கிறது என்பதை இந்நூல் தெளிவாக விரிவாக எடுத்துச் சொல்லுகிறது.

ஒரு காரியத்தைச் சாதிக்கப் புறப்படும் காலம் நேரம் எப்படி இருக்கவேண்டும் என்பதையும் இந்நூல், எடுத்துச் சொல்லி இருக் கிறது.

சிக்கனம், ஊதாரித்தனமான செலவுகளுக்கும் கிரக பலன் எப்படி என்பதையும் இதில் காணலாம். சுயசம்பாத்தியம் – மனைவிவழி

சம்பாத்தியம்—பிதுர்வழி சொத்து வகையில் சம்பாத்தியம்—திடீர் தனயோகம்—அயல் நாட்டுப்பிரயாணயோகம். போன்றவை களும் இந்நூலில் கூறப்பட்டுள்ளன.

## 6. நல்ல நாள் பார்ப்பது எப்படி? விலை ரூ. 6—00

முதல் பதிப்பு, பிப்ரவரி 1977; இரண்டாம் பதிப்பு, நவம்பர் 1981-இல் வெளியிடப்பட்டது. முதல் பதிப்பு வெளியிட் டோர் தணிகை பதிப்பகம், சென்னை-1; இரண்டாம் பதிப்பு வெளியிட்டோர், இமயப் பதிப்பகம், நாகப்பட்டினம்.

அன்றாட நடை முறையில், எந்த ஒரு சுப அசுப காரியங் களுக்கும், நல்ல காலம் நேரம் பார்த்து, அதைச் செய்ய வேண்டிய சூழ்நிலையை இன்றைய மானிட சமுதாயம் பெற்று வருகின்றது. படிப்புக்கும், தேர்தலில் நாமிநேஷன் பைல் செய்ய, வேலைக்கு மனுப்போட, பிரயாணங்களை ஏற்க, திருமணவிஷயம் பற்றி தொடர, வீடுகட்ட ஆரம்பிக்க, கிரகப்பிரவேசம் செய்ய, கிணறு வெட்ட, சொத்துக்களை விற்க அல்லது வாங்க, வியாபாரம் ஆரம் பிக்க, உழவுசெய்ய, பதவியை ஏற்க இவை போன்ற எல்லாவித மான சுப வேலைகளுக்கும் நல்ல நாள் பார்ப்பது என்பது அவசியமாகி விட்டது.

சபம் எடுக்க, ஈமக்கடன் செய்ய போன்ற அசுப காரியங் களுக்கும் கூட, நல்ல காலம் நேரம் பார்க்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது.

இவைகளுக்கான புள்ளிவிபரங்கள் எல்லாம், அன்றாடம் நடைமுறையிலுள்ள ''பஞ்சாங்கம்'' என்ற நூலில் இருந்தாலும், அவைகளை எப்படிக் கண்டறிவது என்பதற்கான அனுபவ நடை முறையை, ''நல்ல நாள் பார்ப்பது எப்படி?'' என்ற இந்நூலில் கண்டறியலாம்.

நல்லதொரு முகூர்த்தநாள்—பஞ்சபட்சி சாஸ்திரம் விவாக சக்கர ஆய்வு போன்ற எல்லாம் கூட இந்நூலில் இடம் பெற்று இருக்கின்றன.

முடிவாகச் சொல்லுமிடத்து, ஜோதிடசாஸ்திரம் என்பது, விஞ்ஞான அடிப்படையில் எடுத்துச் சொல்லக்கூடிய தத்துவ மாகும்.

ஜோதிடசாஸ்திரம் பற்றி எடுத்துச் சொல்லும் தெய்வபக்தர் களே பஞ்சாங்கம் கணிக்கின்றனர். அந்தப் பஞ்சாங்கத்தில், சூரிய

கிரகணம் இத்தனை மணிக்கு இத்தனை விநாடியில் ஏற்படும் என்று குறிப்பிடுகின்றனர், அதே சமயத்தில், அந்த சூரிய கிரகணம் தப்பாமல் நடைபெறுகிறது. இது மட்டும் இப்படி நடைபெறும் போது, ஜாதகப் பலன்கள் மட்டும் எப்படி சரிவர நடைபெறாமல் போகும்? என்பதைச் சற்று சிந்தித்துப் பார்த்தால் உண்மை புலப் படும்.

இதன் காரணமாகத்தான் ''சாஸ்திரம் பொய் என்றால், கிரகணத்தைப்பார்'' என்று ஒரு பழமொழி வழங்குகிறது,

தற்போது, நம்மைவிட, மேல் நாடுகளில் ஜோதிடக்கலைக்கு அதிக அளவு வரவேற்புக் கொடுத்து,அதனைப்பல்கலைக்கழகத்தின் மூலம் வளர்த்து வருகின்றனர். எந்த ஒரு ஜோதிட ஆசிரியரும், உரிய சான்றிதழ் இல்லாமல், அங்கு ஜோதிடப் பலன்களைச் சொல்லக்கூடாதாம்! இதனால் அந்தக் கலையின் மகத்துவம் உணர்த்தப்படுகிறதல்லவா?

# 18. மருத்துவ நூல்கள்

த. அழகப்பராசு

பயன்பாட்டு நிலையில் முதன்மை பெறுவது மருத்துவக்கலை எனலாம். 1981-ல் மருத்துவம் தொடர்பாகக் குறைந்த நூல்களே வெளிவந்துள்ளன. எனினும், பயன்பாட்டு நிலையில் அவை குறிப்பிடத் தக்க நூல்களாக அமைகின்றன.

கலைகளுள் பயன்பாட்டு நிலையில் முதன்மைபெறுவது மருத்துவக்கலையே எனலாம். ஏனெனில் மருந்தும், மருத்துவமும், மருத்துவரும் மருத்துவ மனைகளும் இன்றைய நிலையில் இன்றியமையாதனவாகி விட்டன.

மனித சமுதாயத்தில் நோய்கள் வந்துகொண்டே இருக்கின்றன; போரில்லாத காலம் இருக்கலாம்; பஞ்சமில்லாத காலம் இருக்கலாம்; படிப்பின்மை என்பது சிறிதும் இல்லாமல் நூற்றுக்கு நூறுபேர் கல்வியுடைவர்களாக இருக்கலாம். ஆனால் நோயில்லாத காலமே இல்லை; நோயில்லாத சமுதாயமே இல்லை. ஆதலால் நோயைப் போக்கும் மருத்துவர்கள் எல்லா இடத்திலும் எல்லா காலத்திலும் இன்றியமையாதவர்களாக இருக்கிறார்கள்.[1] என்ற கி.வ. ஜ. அவர்களின் கூற்று இக்கலையின் இன்றியமையாத் தன்மையைப் புலப்படுத்தும்.

பெரும்பான்மையும் ஆங்கிலமொழி வாயிலாகவே விளக்கப் பட்டு வந்த மருத்துவக்கலை இன்று ஓரளவு மாற்றம்பெற்று தமிழிலும் மருத்துவ நூல்கள் தோன்றுகின்ற நிலையை எட்டியுள்ளது.

---

1. மருந்துகளும் பயன்களும், டாக்டர் க. ரா. கிருட்டிணன் அணிந்துரை, கி. வ. ஜகந்நாதன்,

என்றந்தப் பேதை உரைத்தான்-ஆ
இந்த வசையெனக் கெய்திடலாமோ?
''சென்றிடு வீரெட்டுத் திக்கும்—கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்''[1]

என்கிறான் பாட்டுக்கொருபுலவன் பாரதியும்.

மருத்துவ முறைகளை விளக்குவனவாக எண்பத்தொன்றில் தோன்றிய நூல்கள் பல திறத்தன. அவை எண்ணிக்கையில் முப்பத்து நான்கு. அவற்றுள் கிடைத்தன கொண்டு இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது. இவ்வாய்வு இரண்டு நிலையில் நடை பெறுகின்றது. முதலாவது நூல்தரும்செய்திகளைத்தொகுத்தளிக்க இரண்டாவது அதனை ஆய்வு நோக்கில் காண முயல்கின்றது.

ஆய்வின் பகுப்பெளிமை கருதி மருத்துவ நூல்களை அவற்றின் நூற்பொருளைக் கொண்டு பின்வருமாறு வகைபடுத்த முடியும்.

1. உணவுப் பொருள் மருத்துவம்
2. இயற்கைப் பொருள் மருத்துவம்
3. வீட்டு மருத்துவம்
4. குழந்தை மருத்துவம்
5. உடலுறுப்பு மருத்துவம்
6. நோயும் மருந்தும்
7. யோகாசன மருத்துவம்
8. மனோதத்துவ மருத்துவம்
9 பாலுணர்வு மருத்துவம்

## 1. உணவுப்பொருள் மருத்துவம்

நோய்வருதற்கான வழிகளாக ஒட்டுவாரொட்டு, ஊண், உடை, நஞ்சு, உறுப்பறை, வறுமை, பஞ்சம், அச்சம், போர், என்பன சுட்டப்படுகின்றன.[2] அவற்றுள்ளும் உணவுமுறையே பெரும்பாலான நோய்களின் தோற்றத்திற்குக் காரணமாக அமை கின்றது.

ஒருவன் தன் உடற்கூற்றையும், அதற்கேற்ற உணவையும், அதையுண்ணும் காலத்தையும் அறியாது, தான் விரும்பிய உணவு வகைகளை எல்லாம் விரும்பிய போதெல்லாம் பசியளவிற்கும் செரிமானத் தன்மைக்கும் மேற்பட்டு உண்பானாயின் அவனிடம் பலவகை நோயும் தோன்றி வளரும்.[3]

1. பாரதியார் கவிதைகள், தேசிய கீதங்கள், தமிழ்த்தாய்
2. திருக்குறள் தமிழ் மரபுரை, ஞா. தேவநேயன், பக்—5?6
3. திருக்குறள், 947

'மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின்'[1]

'அற்றால் அளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு'[2]

என்றெல்லாம் நோய்க்கு உணவுகளும், அதை உண்ணும் முறைகளுமே காரணம் என்று காட்டுகின்றார் திருவள்ளுவர். அவ்வகையில் அமையும் உணவு, உணவுச்சத்துகள், குறைவினால் ஏற்படும் நோய்கள், தவிர்க்கும் முறைகள் இவற்றைக் கூறும் நூல்களை இப்பிரிவின்கண் அடக்கலாம்.

## 1. உணவுப்பொருளின் மருத்துவ குண அகராதி என்னும் நூல்

அன்றாடம் உண்ணும் உணவுப் பொருள்களில் அடங்கியுள்ள மருத்துவப் பண்புகளைப் பட்டியலிட்டுத் தந்திருக்கின்றது. இந்நூல் அதனை அகரமுறையில் அமைத்திருப்பதனால் அகராதி என்று பெயர் கொடுத்துள்ளார்.

அகத்திக்கீரை, அதிரசம், அத்திக்காய், அத்திப்பழம் என அகரத்தில் தொடங்கி வெள்ளரிக்காய், வெள்ளரிப்பழம், வெறும் சாதம், வெற்றிலை வள்ளிக்கிழங்கு என்று தனது அகரவரிசைப் பட்டியலை முடிக்கின்றார் ஆசிரியர். இவ்வகை விளக்கத்தில் சுமார் 280 க்கு மேற்பட்ட பொருள்கள் விளக்கம் பெறுகின்றன.

அன்றாட உடல்நிலைக்கு ஏற்ற உணவு, உடல் பலம்பெற அதிக அளவில் உண்ணவேண்டுவன; கபத்தை முறிக்கும் பொருள்கள், உருவாக்கும் பொருள்கள், கண்களுக்குக் குளிர்ச்சி தருவன; கண்நோயைக் குணப்படுத்துவன; பித்தம் உருவாக்குவன, அதைத் தணிப்பன; வயிற்றுப்போக்கை நிறுத்துவன; மலச்சிக்கலைத் தவிர்ப்பன என்று அகர முறைக்குப் பின்னரும் தனது பட்டியலை நீட்டிச் செல்கின்றார்.

மேலும், வாதம், தாதுவிருத்திகள், உடல் வெப்பம், அறிவு மந்தம், இரத்த விருத்தி, உடலழகு தாகத்தணிவு போன்றவற்றிற்கும் வழிமுறையைக் காட்டுகின்றார் ஆசிரியர். இந்தப்

---

1. திருக்குறள், 942
2. திருக்குறள் 943

பிற்பகுதி அகரமுறையில் அமைக்கப்படவில்லை; வேறு எந்த ஒழுங்கு முறையும் கடைபிடிக்கப்பட்டதாகவும் தெரியவில்லை.

உணவில் இன்றியமையா இடம்பெறும் காய்கறிகளின் மருத்துவ குணங்களைப் பேசுகின்றது. காய்கறிகளின் மருத்துவ குணங்கள். அவரைக்காய், அத்திக்காய், கத்திரிப்பிஞ்சு, முருங்கைக் காய், காளிபிளவர், காரட்டு என்று 32 காய்களின் குணங்களைச் சுட்டுகின்றார்.

ஆசிரியர் ஒவ்வொரு காய்க்கும் உரிய ஆங்கிலப் பெயரையும் அடைப்பில் கொடுத்துள்ளார். இதில் மூன்று நிலைகளில் பகுத்துக் கொண்டு பேசுகின்றார். முதலில் காய்கறியில் அடங்கியுள்ள சத்துப்பொருள்களைச் சதவீத நிரல்படி விளக்குகின்றார். அந்தக் காயின் குணங்களைச் சிறு சிறு தொடர்களால் ஒருவரியில் தொடர்ந்து அடுக்கிச் செல்கின்றார்; இது அடுத்த நிலை. மூன்றாம் நிலையில் அந்தக் காய்கறியை உண்பதால் நமக்குக் கிடைக்கும் உடனடிப் பயன் அல்லது கேடு பற்றிக் கூறுகின்றார். சில குறிப்பிட்ட காய்களுக்கு மட்டும் இப்பகுதியில் குறிப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன. காய்கறிகளின் பெயர்களை ஆங்கிலத்தில் கொடுத்தது போன்று சத்துப் பொருள்களின் சதவீதம் (percentage) கூறும் போதும் அவற்றிற்கு அடைப்பில் ஆங்கிலத்திலும் கொடுத்துள்ளார்.

சிலவற்றின் விளக்கங்களில் முதலில் ஒரு முறையான மருத்துவம் சொல்லி, அதன் பயன்பாட்டுமுறையில் வேறு முறை என்று தலைப்பிட்டு மற்றுமொரு முறையினையும் சுட்டுகின்றார். குறிப்புப்பகுதிகள் சிலவற்றில் காய் கனியை எப்போது உண்ண வேண்டும் என்பதையும் சுட்டுகின்றார். ஒருசில காய்கள் இரண்டு மூன்று முறைகளைப் பெற்றிருக்கின்றன. காய்கறிகளின் விளக்கத்தைத் தொடங்கும் முன்னர் உண்ணத்தக்கது என்று அடைப்பில் கூறுகின்றார்.

''பிணிதீர்க்கும் கீரைகள்'' என்னும் நூல் கீரைகளின் விளக்கமாக அமைந்துள்ளது. அத்தி, அரை, ஆரை, ஆவாரை எலிச் செவி, கரிசலாங்கன்னி, கரிவேப்பிலை தொடர்ந்து 41 கீரைகளுக்கு இயல்பாக உள்ள குணங்கள் பேசப்படுகின்றன. அதில் உள்ள சத்துகள், உண்பதால் வரும் பலன், நோய்களை அவை குணப்படுத்தும் வழிமுறைகள் போன்றன பேசப்படுகின்றன. நோயின் முறையிலோ, வேறு இயல்புகளின் பின்னணியிலோ

அவற்றை வகைப்படுத்தவில்லை. ஆனால் அகர முறைப்படி அமைத்துள்ளார். அது பார்ப்பதில் உள்ள கடினத்தைப் போக்கு, கின்றது. இதற்கு மூல ஆதாரமாக

''அகத்தியர் 2000
போஜன குதுகூலம்

என்ற நூல்களும் எனது அனுபவ அறிவும்'' கொண்டதாகக் காட்டுகின்றார் ஆசிரியர்.[1]

கனிகளின் மருத்துவ குணங்களைப் பேசும் இந்நூல் நெல்லிக் கனி, மாதுளங்கனி, வாழைக்கனி, திராட்சைக்கனி, மாங்கனி, விளாங்கனி, கொய்யாக்கனி, பலாக்கனி, எலுமிச்சங்கனி, பப்பாளிக்கனி, ஆப்பிள்கனி, அன்னாசிக்கனி, புளியங்கனி, ஆரஞ்சுக் கனி, பேரிக்காய், பேரீச்சம்பழம், நாவல்கனி, என்ற பதினெட்டு கனிகளைப்பற்றியும் எடுத்துரைக்கின்றது. இக்கனிகளின் மருத்துவத் தன்மைகளையும், சத்துப் பொருண்மையையும் குறிக் கின்றது. நூலின் தொடக்கம், 'பழங்களும் பயன்களும்' என்ற உள் தலைப்புடன் தொடங்குகின்றது. அதில் கனிகள் என்றால் ஊட்டத்திற்கான சத்துப் பொருள்கள் அதிகம் இருக்கும் என்பதைக் காட்டுகின்றார்.

நெல்லிக்கனியானது நீர்க்கோவை, கண்பிணிகள், மலச்சிக்கல் ரத்தபேதி, வயிற்றுப் பூச்சி, குடல்புண், சரும நோய், நீரிழிவு நோய் போன்ற பலவற்றைக் குணப்படுத்தும் என்கிறார். இதே போன்று, பிற கனிகளுக்கும் அதன் தன்மைகளை விளக்கி, மருத்து வத்திற்குப் பயன்படும் முறையை எடுத்துக்காட்டிவிளக்குகின்றார்.

ஒருசில கனிகளை விளக்கப் புகுமுன் அதன் காய், இலை, பூ, போன்றவற்றில் ஒன்றோ பலவோ மருத்துவத் தன்மை பெற்ற தாயின் அவற்றையும் விளக்க முற்பட்டுள்ளார். நோயின் தன்மை களுக்கு மருத்துவமுறை சொல்வதோடு அமையாமல் அந்த மருந்து எப்படி வினைபுரிந்து இந்த நோயைப் போக்கும் என்பதையும் விளக்கிச் சென்றுள்ளார்.

## 2. இயற்கைப்பொருள் மருத்துவம்

இயல்பாகக் கிடைக்கக்கூடிய பொருள்களைக் கொண்டு செய்யப்படும் மருத்துவம் இயற்கை மருத்துவம் எனப்படும். இயற்கையோடு ஒன்றி வாழ்ந்த பண்டைக்கால மனிதன் தான்

---

1. பிணிதீர்க்கும் கீரைகள், முன்னுரை.

நோயிடைச் சிக்குண்டபோது, அவனைச் சுற்றி இருந்த இயற்கைப் பொருள்களைப் பயன்படுத்தியே அவற்றைப் போக்கிக் கொண்டான். அப்படிச் செய்யப்பட்ட மருத்துவம் நாளடைவில் குடும்ப நிலைகளில் வளர்ந்து அம்மருத்துவம் செய்வதற்கென்றே அவர்கள் ஒதுக்கப்பட்டனர். வழி வழி அக்குடும்பமே பின்னர் அப் பணியைப் புரியத் தொடங்கியது.

இவ்வகை இயற்கை மருத்துவ நூல்களாக நமக்குக் கிடைத்தனவற்றை மேலும் இரண்டு பகுப்புக்குள் அடக்க முடியும். முதலாவது உண்ணும் பொருளது; இரண்டாவது அருந்தும் வகையது; இரண்டு வகைகளுக்கும் முறையே இரண்டிரண்டு நூல்கள் கிடைத்துள்ளன. அவற்றை வகைப்படி காண்போம்.

'துளசியின் பயனும், காய்கனி மருத்துவமும்' என்னும் நூலில் காய் என்பது நெல்லிக்காயையும், கனி என்பது எலுமிச்சைக் கனியையும் குறிப்பதாக அமைகின்றது. துளசி என்ற பகுதியில் அதன் இரண்டு வகைகள்-அது வாழிடம் இவை பேசப்படுகின்றன. துளசி சேர்ந்த நீர் குழந்தை, பெரியோர் நோய்களைப் போக்குந் தன்மை; நோய்க்கிருமிகளை அகற்ற அவை எத்தனை முறைகளில் பயன்படுகின்றன. நச்சுக் கிருமிகள் இதன் வாசனையைக் கண்டதும் அகன்றுவிடும் தன்மை போன்றவற்றைப் பேசுகின்றார்.

நெல்லிக்காய் என்னும் பகுதி இதனினும் விரிவாக அமைகின்றது. இதனை நூலாசிரியர் ஐந்து சிறுபகுதிகளாகப் பகுத்துக் கொண்டு பேசுகிறார். வகை வகை மாறுபாட்டின் சுவை, சிறப்பு; கிடைத்தற்கெளிமை; சத்துகள் அடங்கியுள்ள அளவுகள் இவை முதற்பகுதியில் பேசப்படுகின்றன. நெல்லிக்காயை எப்படியெல்லாம் பயன்படுத்தி குணம்பெற முடியும் என்று காட்டுகின்றார். இதன்கண் இருபத்து ஆறுக்கும் மேற்பட்ட நோய்களுக்கு மருத்துவம் சொல்கின்றார். அடுத்து நெல்லிக்காய் மட்டுமல்லாமல் அதன் கொட்டை. மரப்பட்டை போன்றன. மருந்திற்குப் பயன்பட்டு நோய் நீக்கும் முறையையும் சுட்டுகின்றார். அகத்தின் நோய்கள் மட்டுமன்றி புறஅழகுகளைப் பாதுகாக்கவும் இந்த நெல்லிக்காய் பயன்படும் தன்மையை விளக்கமாகக் கூறுகிறார்.

'எலுமிச்சம்பழம்' என்ற பகுதி ஏழு சிறு பகுதிகளுடன் பகுத்துக்கொண்டு பேசப்படுகின்றது. இல்லங்களில் நிகழும்

மங்கலமான செயல்கள் கோவில் வழிபாடுகள், மந்திர நிகழ்வுகள் போன்றவற்றில் எலுமிச்சை பயன்படுகின்றது இப்பழம் கிடைக்கின்ற இடங்கள், இடத்தன்மைக் கேற்ப மாற்றம் பெறும். அளவு முறைகள் போன்றனவும் சுட்டப்படுகின்றன.

இதன் அறிவியல் முறை பயன்பாடு, கார அமிலத்தன்மைகள், சத்துப்பொருள்களின் சதவீதம் இரசாயன மாற்றம் செய்கின்ற முறை, இதன்கண் அமிழ்ந்துகிடக்கும் வினைமாற்ற இயல்புகள் போன்றன பேசப்படுகின்றன. அடுத்து, பல வகை நோய்களை இவை குணப்படுத்துகின்ற முறை; அச்செடியின் வளம்; அது வாழுமிடம், அதன் தோல் இலைகள் போன்றன மருத்துவத்திற்குப் பயன்படும் முறை; ஆயுர்வேதம் எலுமிச்சையைச் சிறப்பிக்கின்ற முறை போன்றனவும் அதில் உள்ள புரதம், கொழுப்பு, சர்க்கரை கால்சியம், பாஸ்பரஸ், இரும்பு நீர் இவற்றினை விழுக்காட்டு (Percentage) அமைப்புடன் சுட்டி முடிக்கின்றார் ஆசிரியர்.

இந்தப் பிரிவின் இரண்டாம் நூல் 'வேர்கள், பட்டைகள் மருத்துவம் என்பது இயற்கையாகவே வளர்கின்ற மரம் செடி கொடிகளின் வேர்கள், பட்டைகள் இவற்றில் அடங்கியுள்ள மருத்துவ குணங்களையும். அவை குணப்படுத்துகின்ற நோய்களையும் குணப்படுத்துகின்ற முறைகளையும் இதன்கண் காண்கிறோம்.

நித்தியக் கல்யாணிவேர், அழிஞ்சில்வேர், நாகலிங்கவேர், ஆதண்டைவேர், சிற்றரத்தைவேர், ஆகாச கருடன்வேர், ஆவாரைவேர், மிளகரணைவேர், ஆடுதீண்டாப்பாளைவேர் போன்ற ஐம்பது வேர்களைப் பற்றியும், பலவகையான மரப் பட்டைகள், அவற்றின் குணங்கள், நோய் போக்கும் இயல்புகள் பற்றியும் பேசுகின்றார் ஆசிரியர்.

இவர் ஒரு வேரின் மருத்துவம் பற்றிப் பேசும்போது அந்த வேர் எந்த நோய்க்கு முதன்மையாகப் பயன்படுகின்றது என்பதை முதன்மையாகக் காட்டுகின்றார். அடுத்து அத்துடன் சேர்க்க வேண்டிய மற்றப் பொருள்களையும் சுட்டி அளவு பதம் இவற்றையும் எடுத்துக்கூறி முடிக்கின்றார். ஒரு சில நோய்களுக்கு விரிவாக விளக்கம் கூற முடியாத நேரங்களில் ஒரே நிலையும் எல்லாவற்றையும் இணைத்துக் கூறக் காண்கிறோம்.

பட்டைகளின் மருத்துவம் பற்றிப் பேசுகின்ற இறுதிப் பகுதி இவ்வமைப்பினின்றும் மாறுபட்டு அமைகின்றது. பட்டைகளைச்

சுட்டி அவை நீக்கும் நோய்கள் பற்றிப் பேசாமல், நோயினைக் கூறி, அவற்றைப் போக்குவதற்குத் துணை செய்கின்ற பட்டையை—பட்டைகளைப் பற்றிப் பேசுகின்றார். பட்டைகளைப் பயன்படுத்த வேண்டிய அளவு முறைகளும், பதப்படுத்து கின்ற தன்மைகளும் கூறப்பட்டுள்ளன. நாம் முன்னர் (வேர்கள்) கண்ட அமைப்புமுறை இங்கும் பின்பற்றப்பட்டுள்ளது.

இரண்டாம் வகையில் அடங்கும் 'அருந்து வகை'யில் நமக்கு, தேனும் அதன் பயனும், பால் தேன் மருத்துவம் என்னும் இரண்டு நூல்கள் கிடைக்கின்றன. அவ்விரண்டில் முதல் நூல் ஒன்று தேனைப் பற்றியும், தேனையும் பாலையும் குறித்தும் சொல்கின்றன.

இவ்வகையின் முதல் நூல் பதினைந்து உள்தலைப்புகளுடன் அமைகின்றது. தேனீக் குடும்பத்துடன் மனிதக் குடும்பத்தைத் தொடர்புபடுத்திப் பேசுகின்றது; கொம்புத்தேனீ, மலைத்தேனீ போன்ற வாழிடவகைகளும், இராணித்தேனீ, ஆண்தேனீ என்று அமைப்பிடவகைகளும் சுட்டப்படுகின்றன; தேனீக்கள் அலைந்து திரிந்து தேன் சேகரிக்கும் முறை—அதில் உள்ள வகைகள் இவை பற்றி முதல் நான்கு பகுதிகள் பேசுகின்றன.

தேனின் பயனும் பாதுகாப்பும் அதன் அடுத்தடுத்த பகுதி களில் அமைக்கப்பட்டுள்ளன. நூலின் முதன்மைப் பொருளான தேனின் மருத்துவ குணங்கள் பற்றி அதையடுத்த இரண்டு குதிகள் எடுத்துரைக்கின்றன; நூலின் பிற்பகுதி வீட்டில் வளரும் தேனீக்கள் பற்றியும், அதன் பெட்டி-வீட்டுத்தேன்-பண்ணைக்கால தேன்-தேன் மெழுகு-தேனின் மேன்மை என்பனவற்றைச் சுட்டிச் செல்கின்றது.

இவ்வகையின் இரண்டாம் நூல் பால், தேன் ஆகியவற்றின் மருத்துவத் தன்மைகளைப்பற்றிப் பேசிநிற்கின்றது. பாலின் சிறப்பு, பாலில் உள்ள உணவுச் சத்துகள், பால் வகைகள், அதன் இயல்பு, பயன் போன்றவற்றை முன்னர்க் கூறி இறுதியில் பால் மருத்துவத்தை அமைக்கின்றார்.

தேனைப்பற்றிப் பேசும்போது, தேனின் சிறப்பு, அதன் பயன், அடங்கியுள்ள சத்துப் பொருட்கள், பிற இனிப்பிற்கும் இதற்கும் இடையேயுள்ள வேற்றுமை ஒற்றுமைகள், தேன் சிறந்த உண வாகக் குழந்தைக்குப் பயன்படும் தன்மை போன்றவற்றை விளக்கி இறுதியில் அதன் மருத்துவஇயல்பை விரித்துரைக்கின்றார்.

பாலின் சத்துகள் குறித்துக் கூறும்போது, அதன் நன்மைகள், நச்சுத் தன்மைகள் இரண்டையும் கூறி, நச்சுத்தன்மை உள்ள காலங்களில் அவற்றை அருந்தக் கூடாது என்று எச்சரிக்கின்றார். தாய்ப்பால், பசும்பால் — காராம் பசுவின், சிவப்பு நிறப் பசுவின் பால் என்று வகைப்படுத்தி, எருமை, செம்மறியாடு, வெள்ளாடு, குதிரை, கழுதை, யானை ஆகியவற்றின் பாலின் தன்மைகளையும் கூறி, தாவர வகையின் பாலின் தன்மைகள் பற்றியும் பேசுகின்றார்.

தேனினைப் பற்றிப் பேசும்போது, பிற இனிப்பு—தேன் இடையே உள்ள வேறுபாட்டைச் சுட்டி அதில் சிறந்துள்ள நல்ல குணங்களைப் பட்டியலிட்டுக் காட்டுகின்றார். தேன்—ஊடபாய்டு, நீரிழிவு நோய், வாய், கண் தொடர்பான நோய்கள், பாரிசவாயு, இருமல், சோகை, வாந்தி போன்ற பலவற்றைப் போக்கும் மருந்தாகவும், கசக்கும் மருந்துடன் இணைத்து அருந்தும் பொருளாகவும் இது பயன்படும் முறையையும் கூறி முடிக்கின்றார்.

## 3. வீட்டு மருத்துவம்

இந்த வகையில் வீட்டில் நாமே எளிதாகச் செய்து கொள்ளும் மருத்துவம் எடுத்துரைக்கப்படுகின்றது. இவ்வகையில் நமக்குக் கிடைத்துள்ள நூல்கள் இரண்டு. ஒன்று 'வீட்டுப் பூச்சிகளும் ஒழிக்கும் முறைகளும்' எனவமைந்து, நமது வீட்டிலுள்ள பூச்சிகளை ஒழிக்கும் முறை பற்றியது. மற்றொன்று வாழ்வில் நாம் காணும் நோய்களுக்குக் கூறப்பட்டுள்ள சுலபமான மருத்துவ முறைகள் பற்றியது.

முதல் நூலில் வீட்டில் வாழும் பூச்சிகளாக, ஈ, மூட்டைப் பூச்சி, கரப்பான் பூச்சி, கொசு, எறும்பு, தேள், பாச்சை, இராம பாணம், எட்டுக்கால் பூச்சி, சாம்பல்நிறக் கம்பளிப்பூச்சி, கருநிறக் கம்பளிப்பூச்சி என்று பதினொரு பூச்சிகளைப்பற்றி நூலுள் விளக்கி இருக்கின்றார்.

பூச்சிகளை ஒழிக்கும் முறைகளைப் பற்றிப் பேசும் முன்னர் பொதுவாகப் பூச்சிகள் எங்கே வாழும்? அதன் இயல்புகள் என்ன? அமைப்பு மாறுபாடுகள்—போன்றவற்றை பூச்சிகள் பற்றி சில குறிப்புகள் என்ற பகுதியில் பேசுகிறார்.

பூச்சிகளைத் தனித்தனியே விளக்கும் பகுதிகளில்-பூச்சியின் வாழ்விடம், உணவு, வாழ்வு, இவை பேசப்படுகின்றன.

இதனைத் தொடர்ந்து பூச்சிகளின் உடலமைப்பு முறை விரிவாக எடுத்துரைக்கப்படுகின்றது. அதன் இனப்பெருக்கத்தை அடுத்து அவை நமக்குச் செய்யும் தீமைகள் நவிலப்பட்டு, இறுதியில் அவற்றை ஒழிக்கின்ற முறை அமைக்கப்பட்டுள்ளது.

இவரது ஒழிப்புமுறை மருத்துவங்கள் பெரும்பாலும் மண்ணெண்ணெய் மருத்துவமாகவே காணப்படுகின்றது. பொதுவாக நம்மையும், நமது சுற்றுப்புறத்தையும் சுத்தமாக வைத்திருப்போமானால் பூச்சிகள் அங்கு அவ்வளவாக வாழமுடியாது என்பதை வலியுறுத்துகின்றார்.

அடுத்து இரண்டாவதாக அமைந்த நூல், 'செலவில்லாத சுலப வைத்தியம்' என்பது. இது ஏறத்தாழ நூற்றிருபதுக்கும் மேற்பட்ட நோய்களுக்கு மருந்துகளைச் சுட்டிச் செல்கின்றது. இதில் கூறப்படும் சிகிச்சை முறை எளிய மூலிகை முறையாகும். வயிற்று வலி, பித்தவாயு, காக்காய் வலிப்பு, வயிற்றுப் போக்கு அரையாப்புக் கட்டி, மூலம், வயிற்றுப்புண் என்ற முறையில் நீண்டு கொண்டே செல்கின்றது இப்பட்டியல்.

ஆசிரியர் இதன் விளக்கு முறையை இரண்டு நிலைகளில் அமைத்துள்ளார். முதல் முறையில் நோயின் தன்மைகள், அவை ஏற்படக் காரணம், அது வராது தடுக்கும் முறைகள், தோன்றுதற்கான அறிகுறிகள் போன்றன சுட்டிக் காட்டப்படுகின்றன. அந்த நோய்க்கு எந்தெந்த மருந்துப் பொருள்களை எந்த அளவில் சேர்த்து மருந்தை உண்டாக்குவது? எப்படி உட்கொள்வது போன்ற மருந்துமுறை பேசப்படுகின்றது. ஒரு நோய்க்கு ஒன்றுக்கு மேற்பட்ட முறைகளில் ஆசிரியர் மருந்தமை முறை கூறினாக் அதை வேறுமுறை என்றே சுட்டுகின்றார்.

உஷ்ணவயிற்றுப் போக்குக் குணமாக ஒரு எலுமிச்சம் பழச் சாறெடுத்து, அதனுடன் ஆப்பச்சோடாவைக் கலந்து குடிக்க வேண்டும் என்று கூறுகின்றார் (ஒரு முறை).

பின்னர், 'வேறுமுறை' என்று சுட்டி, வேளைக்கு இரண்டு ரஸ்தாளி வாழைப்பழம் வீதம் மூன்று வேளைக்குத் தொடர்ந்து சாப்பிட்டால் உஷ்ண வயிற்றுப்போக்கு குணமாகும் என்று கூறுகின்றார். இது (பக்—15) இரண்டாம் முறை. சில நோய்களுக்கு இரண்டுக்கு மேற்பட்ட முறைகளையும் கூறுகின்றார்.

## 4. குழந்தை மருத்துவம்

குழந்தைகள் மருத்துவம் அண்மையில் மிகவும் வளர்ச்சிபெற்று வருகின்றது. மேலும்குழந்தைகள் மருத்துவம் அனைவரும் தெரிந் திருக்க வேண்டிய ஒன்றாகும். இந்த வகையில் நமக்குக் கிடைத்த நூல் 'குழந்தை வைத்தியம்' என்ற ஒன்று மட்டுமே.

இந்த நூல் ஐம்பத்தொரு துணைத் தலைப்புகளுள் குழந்தை யின் நோய்களையும், அவற்றைத் தடுக்கும் முறைகளையும் விளக்குகின்றது. நூலின் தொடக்கத்திலிருந்து ஒருசில பகுதிகள், நோய்-அவற்றை நீக்கும்முறை இவற்றினைத் தாய்மார்கள் அறிந் திருத்தலின் அவசியம்; குழந்தையை வளர்க்கும் தாய்மார்கள் கவனிக்க வேண்டிய சில விதிமுறைகள்; குழந்தையின் நோயை அதன் தன்மைகொண்டு அறிந்துகொள்ளும் திறம் முதலிய வற்றைக் கூறுகின்றார்.

பண்டை மகளிரைப் போன்று இக்கால மகளிரும் மருத்துவ முறைகளை அறிந்துகொண்டு குழந்தைகளுக்குத் தாங்களே மருத் துவம் செய்ய வேண்டும் என்று வலியுறுத்துகின்றார். அப்படிச் செய்வது சிலவேளைகளில் நோயைக் குணப்படுத்தவில்லை என்றா லும் முதலுதவி யாகவாவது அமையும் என்று அவர் கருதுகின் றார்.

குழந்தைகளுக்குப் பால் கொடுக்கின்ற காலங்களில் தாய் எவற்றையெல்லாம் உண்ணவேண்டும், உண்ணக் கூடாது என்று குறிப்பிடுகின்றார். தோஷம், மாந்தம், கணம், கரப்பான், கழிச் சல் போன்ற நாற்பத்தைந்திற்கும் மேற்பட்ட நோய்களுக்கு நோய் நீக்கும் முறையைச் சுட்டுகின்றார்.

## 5. உடலுறுப்பு நோய்கள்

உடலுறுப்பு வகையில் கண், நுரையீரல், நரம்புகள் தொடர் பான நோய்களின் நீக்கு முறைமை பற்றிய மூன்று நூல்கள் கிடைத்துள்ளன.

இவற்றுள் கண் தொடர்பான நூல் 'கண் பாதுகாப்பும், கண் மருத்துவமும்' என்று அமைகின்றது. அந்நூலின் முதலில் அமை யும் 'கண்ணின் பெருமை' என்னும் பகுதியில் மற்ற உறுப்புக்களி னும் கண் மிகவும் இன்றியமையாதது என்று காட்டுகின்றார். கண்பற்றிய பொதுப்படையான எண்ணங்கள்—கருத்துகள்—வழக்குகள் இவற்றைச் சுட்டுகின்றார்.

'புகைப்படக் கருவியைப் பார்த்திருக்கிறீர்களா?' என்ற பகுதி கண்ணின் அமைப்பை விரிவாக புகைப்படக் கருவியுடன் தொடர்புபடுத்தி விளக்குகின்றது. நரம்புகளால் பின்னப்பட்ட அமைப்புடைய கண் தகநிலைக்கேற்ப மாற்றமடைந்து ஒளிநுகரும் தன்மையைக் காட்டுகின்றார். பெரும்பான்மை இயற்கையாகவும் ஓரோவழி செயற்கையாகவும் ஏற்படும் கிட்ட, எட்டப் பார்வை களை விளக்கும் பகுதி 'பார்வைக் கோளாறுகள்' என தலைப் பிடப்பட்டுள்ளது.

குழந்தைகளுக்குக் கண்கள் பாதிக்கப்பட வாய்ப்புகள் அதிகம் உண்டு என்பதை 'குழந்தைகளுக்கு ஏற்படும் கண்ணோய்' என்ற பகுதி காட்டுகின்றது. அடுத்து. கண்களில் பீளை ஏற்படும் தன்மைபற்றியும் விளக்குகின்றார். உயிர்சத்துகளின் குறைவே குழந்தைகளின் பெரும்பாலான கண்ணோய்கள் தோன்றுகின்றன என்கிறார். 'ஏ' வைட்டமின் குறைவே அதில் பெரும்பான்மை என்று சுட்டி, அந்த வைட்டமின் உள்ள பொருள்களை பற்றியும் எடுத்துரைக்கின்றார்.

'கண்வலி' பகுதியில் அது தோன்றக் காரணம். தவிர்க்கும் முறைகள், மருந்துகள் போன்றன சுட்டிக் காட்டப்படுகின்றன. கண்களில் ஏற்படும் சதை வளர்ச்சி (டிரக்கோமா) யால் கண்களில் தோன்றும் நோய்கள் அதனால் முன்னரே ஏற்படுகின்ற குறிகள் போன்றவையும் விளக்கப்படுகின்றன. அலர்ஜி என்னும் ஒவ்வாமையும் நோய்களில் ஒன்றாக இங்குக் காட்டப்படுகின்றது

கண்கட்டித் தோற்றத்தின் முன்னர் தோன்றும் அறிகுறிகள், வராமல் தடுக்க வேண்டிய வழிமுறைகள், கவர்ச்சிக் கண்ணாடி அணிவதால் விளையும் தீமைகள், மனத்திற்கும் கண்களுக்கும் உள்ள தொடர்புகள், நல்ல உணவுப் பழக்கங்களால் கண்ணைப் பாதுகாக்கின்ற முறை போன்றனவற்றைக் கூறுகின்றார். மேலும் பொதுவான கண்நோய்கள் பலவற்றைக் காட்டுகின் றார். அவற்றிற்கு மருத்துவ முறையும் கூறுகின்றார்.

இரண்டாம் நூலாக அமையும் 'நுரையீரல் நோய்கள்' என்பது தன்னுள்ளடக்கத்தைப் பதினைந்து உட்பிரிவுகளாக்கி விளக்கு கின்றது. நுழைவாயில்' என்னும் முதல் பகுதியில் நோய்கள்— உலகின் நோக்கோடு அளவுகளுடன் எடுத்துக்காட்டி விளக்கப்படு கின்றது. நுரையீரலை ஒரு மாளிகையாக உருவகம் செய்து, அதற்கடுத்த பகுதியில் விளக்கியுள்ளார்,

மேலும், குழந்தைகளுக்கு வருகின்ற க்ஷயரோகம், இயோசின பீலாயா, ஆஸ்துமா, சுவாசக் குழாயில் ஏற்படுகின்ற அழற்சி சுவாசக்குழாயின் விரிவு-அதனால் ஏற்படும் நன்மைகள், தீமைகள், நுரையீரலில் ஏற்படுகின்ற புற்றுநோயின் தன்மைகள், க்ஷயரோகம் போன்றவற்றையும் விளக்குகின்றார்.

நுரையீரலின் தொல்லையான சளிக்காய்ச்சல், நுரையீரலில் ஏற்படுகின்ற சீழ்க்கட்டி, நுரையீரலைச் சுற்றி இருக்கின்ற நீர், அதன் தன்மையால் ஏற்படும் நோய்கள், அதில் ஏற்படும் காளான் என்னும் நோய் தொழில் புரிவோர் அதற்கேற்பப் பெறுகின்ற நுரையீரல் தொடர்பான நோய்கள் போன்ற எல்லாவற்றையும் எடுத்துரைக்கின்றார். அதற்கடுத்து இப்படியெல்லாம் ஏற்படும் நுரையீரல் நோய்களுக்குத் தடுப்பு முறைகள், மருத்துவ முறைகள் போன்றன கூறப்படுகின்றன. இறுதியில், நூற்றுக்கும் மேற்பட்ட ஆங்கிலச் சொற்களுக்கு அதற்கிணையான தமிழ்க்கலைச் சொற்களைக் கூறுகின்றார்.

மனித உடலின் இயங்குநிலையில் முதலிடம் வகிக்கின்ற நரம்புகள் பற்றிய மருத்துவம் கூறுகின்ற 'நரம்புக் கோளாறுகள்' என்ற நூலையும் இத்துடன் இணைக்க முடியும். இதில் நரம்பு—நரம்பு நோய் சிகிச்சை—நரம்பு நோய் ஆய்வு இவை மிகத் தெளிவாக எடுத்துரைக்கப்படுகின்றன. நரம்புத் தளர்ச்சி ஏற்படாதிருக்க வழிமுறைகள்; அவ்வகையில் உடலுக்கும், உள்ளத்துக்கும் இருக்கின்ற தொடர்புகள். மனித உடலின் நரம்பமைப்புகள் வகைப்பாடுகள்; வேலைகள், இவை இயங்கும் முறை இயல்பிற்கேற்ப மாறுபடுந்தன்மை போன்றன விவரிக்கப்படுகின்றன.

நரம்புகள் தொடர்பான நோய்களைக் கண்டறியும் கருவிகள் தெளிந்த சிந்தனை. தெளிவான பார்வை இவற்றால் உணர்ச்சிக்கு அடிமையாகாதிருத்தலின் அவசியம், சக்திகளை வீணாக்குவதால் நேரும் இடர்ப்பாடுகள்; நம்பிக்கை இழக்காமல் மனஉறுதியுடன் இருத்தல் இவை பேசப்படுகின்றன.

உணவு முறையில் நரம்புகளை வலுப்படுத்திக் கொள்ளுதல் விளையாட்டிலும், உடற்பயிற்சியிலும் கவனஞ் செலுத்தலின் அவசியம், விபத்துக்களுக்கும் நரம்புகளுக்கும் உள்ள தொடர்புகள் இவையும் எடுத்தியம்பப்படுகின்றன,

நடுக்கம்—வலிப்பு போன்றவற்றால் ஏற்படும் பாதிப்புகள், நரம்பினால் ஏற்படும் வலிப்பு நோய் ஏற்படக் காரணம்,

வலிப்பின் பல பிரிவுகள்; ஏற்படும் தன்மை மாற்றம்; அதற்கான சிகிச்சை முறைகள்; நரம்புகளுக்கும் தலைவலிக்கும் உள்ள உறவுகள்; நல்லசத்துள்ள வைட்டமின் உணவுகள் உண்ணாததால் இவை ஏற்படக்கூடிய நீர்மை இவையும் பேசப்படுகின்றன. இறுதியில் அளவு முறையில் விழுக்காட்டைச் (percentage) சுட்டி நரம்பு நோய்களின் விளக்கங்கள் கூறப்படுகின்றன.

## 6. நோயும் மருந்தும்

நோய்க்கான மருந்து முறைகள்—மருத்துவ வகைகள் நாம் முன்னர்க் கண்ட நூல்களிலும் இடம் பெற்று இருக்கின்றது. பின் வரும் நூல்களிலும் சுட்டப்படலாம். ஆனால் அவற்றைத் தனித்த நிலையில் உள்ள சில குறிப்பிட்ட நோய்களைக் காட்டி அதற்கான சிகிச்சை முறைகள் பலவற்றைக் கூறுவதால் அவ்வகை நூல்களை இப்படி தனிப்பிரிவின் கீழ் அடக்கிக் காட்டலாம். இப்பகுப்பில் அடங்குவனவாக இரண்டு நூல்கள் உள்ளன. 'ஆஸ்துமா' என்னும் நூல் ஆஸ்துமாவைப் பற்றிய முழு விளக்கமாகவும் 'பயங்கர வியாதிகளும் பயனுள்ள சிகிச்சையும்' என்றநூல் பல நோய்களையும் அவற்றிற்கான நோய் நீக்கு முறைகளையும்' விளக்கும் வண்ணம் அமைகின்றது.

முதல் நூலின் உள்ளமைப்பு இரண்டு பெரும்பகுதியாக அமைகின்றது. முன்பகுதி ஆஸ்துமா பற்றிய விளக்கமாகவும், பின் பகுதி ஆஸ்துமாவிற்கு சிகிச்சை முறையாகவும் உள்ளது.

ஆஸ்துமா ஏற்படக் காரணங்கள், அதை நாமே தவிர்க்கும் முறைகள்; சூழ்நிலைக்குத்தக அவற்றை மாற்றிக் கொள்ளுதல். சூழ்நிலையில் ஆஸ்துமா சில பெண்களைத் தாக்கும் நிலை இவை முதற்கண் கூறப்படுகின்றன.

தோற்றத்தின் அறிகுறி; பெரும்பான்மையும் பரம்பரை நோயாக அமைகின்ற தன்மை; மொத்த சதவீத மக்களில் 10 விழுக்காட்டினர் இந்த நோயைத் தற்காலிகமாகப் பெறுகின்றனர்; பதினைந்து முதல் முப்பத்து நான்கு வயதுக்குட்பட்டவரே இதில் பெரும்பான்மை பாதிக்கப் பெறுகின்றார். இது ஒரு சுவாசத் தொற்று நோய், இடைக்காலச் சிகிச்சை முறைகள் சில; இவற்றைக் காட்டுவதாக அமைகின்றது முதல் பகுதி.

இரண்டாவதாக அமையும் சிகிச்சை முறையில் அவர் சுவாசப் பயிற்சியையே முதன்மையாகக் காட்டுகின்றார். மருத்துவச்

சிகிச்சைகளோடு உடற் பயிற்சிகளும் செய்தல் வேண்டும் என்று கருதுகின்றார். இருமலுக்கும் ஆஸ்துமாவிற்கும் உள்ள தொடர்பினைச் சுட்டி, உணவுக்கட்டுப்பாடே அதில் பகுதியைக் குணமாக்கும் என்றும், சில வழிமுறைகளைப் பின்பற்றினால் அதைத் தடுக்க முடியும் என்றும் காட்டுகின்றார். இதற்கான மருந்தும், மருத்துவ முறைகளும் விரிவாகவும் விளக்கமாகவும் கூறப்பட்டுள்ளன. இதைக் குணப்படுத்தும் ஆங்கில சிகிச்சைமுறை, ஹோமியோபதி சிகிச்சைமுறை, ஆசனப்பயிற்சிமுறை, இயற்கை மருத்துவமுறை ஆகியவற்றை விளக்குகின்றார்.

காலரா, வெள்ளை, வெட்டைநோய், அம்மைநோய், மேகநோய், க்ஷயரோகம், ஈளை, இருமல், மூலரோகம் போன்ற நோய்களைக் குணமாக்கும் முறையை இந்நூல் கூறுகின்றது. ஒவ்வொரு நோயையும் சுட்டும் போது அது பயங்கர நோய் என்று ஆசிரியர் சுட்டுகின்றார். நோய்களை நுண்ணிய வகைகளுடன் எடுத்துக் காட்டுகின்றார். அம்மையை—பெரியம்மை, வெந்தய அம்மை, உமியம்மை, கல்லுதரியம்மை, பாசிப்பயிற்றம்மை, விச்சிலுப்பை அம்மை, மொழுக்கம்மை, கொள்ளம்மை, என்று வகைப்படுத்திக் காட்டி விளக்கிச் செல்கின்றார்.

அந்த அம்மை போட்ட காலங்களில் வரும் காய்ச்சல், இரத்த வாந்தி, வயிற்றுப் போக்கு, உப்பிசம், சீதபேதி, ஜன்னி இவற்றையெல்லாம் சுட்டி அவை போக்க மருத்துவ முறையையும் கூறுகின்றார். அதே போன்று ஒவ்வொரு நோய்க்கும், பாதுகாப்பும். வகைப்பாடும், நோய்நீக்கும் முறையும் ஆசிரியரால் சுட்டப்படுகின்றன.

இந்நூலாசிரியர் தனது அமைப்பு முறையை நோய் தோன்றக் காரணம், அந்த நோயினால் உடல் பாதிக்கப்படும் தன்மைகள், அந்தந்தச் சூழலில் அவற்றைத் தவிர்க்கும் முறைகள் என்ற மூன்று நிலைகளில் அமைத்துக் கொண்டு செல்கின்றார்.

## 7. யோகாசன மருத்துவம்

யோகாசனத்தை விளக்கும்வகையில் நமக்கு இரண்டு நூல்கள் கிடைத்துள்ளன. ஒன்று 'யோகாசன மருத்துவம்' என்றும், மற்றொன்று 'யோகாசன முறையில் வைத்தியம்' என்று பெயர் கொண்டுள்ளன.

நூற்று அறுபத்தெட்டுப் பக்கங்களைக் கொண்ட இந்நூல் பதினேழுக்கும் மேற்பட்ட தலைப்புகளுள், எடுத்துக்கொண்ட

பொருளை விளக்குகின்றது. இந்நூல் செய்திகளை விளக்கு கின்ற முறையை நாம் இரண்டாகப் பகுத்துக் கொள்ளலாம். முதல் பகுதி ஆசன முறைகள் அதற்குக் கடைபிடிக்க வேண்டிய வழிமுறைகள்; ஆசன வகைகள்—அதனைக் கற்றுக் கொள்ள வேண்டிய படிநிலைகள், அதற்குத் தேவைப்படும் ஒழுங்கு முறைப் பயிற்சிகள் மனோதத்துவ நிலையில் இதன் இன்றியமை யாத் தன்மைகள், பயிற்சிக்கு முன்னர் இருக்க வேண்டிய சில பயிற்சி முறைகள் போன்றன கூறப்பட்டுள்ளன. இதில் பல வகை ஆசனங்கள் படத்துடன் விளக்கப்பட்டுள்ளன.

இரண்டாம் பகுதி யோகாசனம் மருத்துவத் துறையில் வகிக் கும் பங்கினைச் சுட்டிச் செல்கின்றது. இதில் ஆஸ்துமா இருதய நோய், நீரிழிவு நோய், காசநோய், உடல் தொடர்பான வலிகள், மஞ்சள்காமாலை, இளம்பிள்ளைவாதம், கீல்வாதம், கண்ணோய், வயிற்றுக் கோளாறுகள் போன்றவற்றை யோகாசனப் பயிற்சி முறையால் குணமாக்க முடியும் என்று உறுதியுடன் கூறுகின்றார் ஆசிரியர்.

இரண்டாவதாக அமையும் நூல், மண்டையிடி, மாத விடாய்க் கோளாறுகள், இன்புளுயன்சா, மேகக்கிரந்தி, முள்ளந் தண்டுசுரம், டிப்திரியா, வாதசுரம், போன்ற பல நோய்களுக்கு ஆசன மருத்துவ முறையைக் கூறுகின்றது.

முதலில் நோயின் தன்மைகள், தோன்றக் காரணங்கள்— அதற்கான முன்னறிகுறிகள் இவற்றைக்கூறி, அதற்கு ஆசன முறை கூறுகின்றார். நோய்கள் வராதிருக்க ஆசனமுறைகளோடு, உணவு முறையில் கட்டுப்பாட்டையும் விளக்கிச் செல்கின்றார். இறுதியில், பிறையாசனம், பாதஹஸ்த ஆசனம் போன்ற இருபத்து மூன்று ஆசனமுறைகளைப் புகைப்படங்களுடன் விளக்கு கின்றார்.

நூலை முடித்த பின்னர் 'கல்லூரி மாணவ மாணவிகளின் அவலநிலை, அந்தோபரிதாபம்' என்று தலைப்பிட்டுச் சில செய்திகளைத் தருகின்றார்.

கல்லூரி மாணவ மாணவிகள், கஞ்சா எல்.எஸ்.டி (L.S.D) போதை மாத்திரை போன்றவற்றைச் சாப்பிட்டுத் தங்களை அழித்துக்கொள்கிறார்கள் என்று காட்டுகின்றார். அவர்களைத் தடுக்க யோகாசனமுறைப் பயிற்சியை, கல்லூரிகளில் கட்டாயப் பாடமாக அமைத்து அவர்களைத் திருத்த அரசு ஆவன செய்யு மாறு வேண்டுகின்றார்.

## 8. மனோதத்துவ மருத்துவம்

மனோதத்துவம் ஒரு சிறப்பான மருத்துவம். அது குறித்து எளிய மக்களும் உணரும் வகையில், ஒரு நூல் அமைகின்றது. இந் நூல் மனவலிமையை மிக்கெழச் செய்யும் பணியில் ஈடுபட்டுள்ளது. மனம், சஜஷன், ஹிப்னாட்டிசம், லோசனாவ் முறை, அடிப் படை முறைகள், சிகிச்சை முறை, பரிசோதனைகள், தூக்க மின்மை, தாழ்வு மனப்பான்மை, அர்த்தமில்லா அச்சங்கள், கட்டுக்கடங்காத கள்ள உணர்ச்சிகள், குறைப்பாடுள்ள சிறுவர். பழக்கத்துக்கு அடிமையாதல், மாணவர்களின் முன்னேற்றம், பிரார்த்தனையைச் சிகிச்சையாகக் கொள்ளுதல் போன்ற பல வற்றைப் பற்றித் தெளிவாக விளக்குகின்றார்.

"இந்தப் புத்தகம் ஹிப்னாடிசத்தை விஞ்ஞான ரீதியில் உப யோகித்து உலகோருக்கு உதவும் வழிவகைகள் விவரிக்கப்பட்டி ருக்கின்றன. மக்களுக்கு முக்கியமாக நோய்வாய்ப்பட்டோருக்கு கல்வியில் திறமை குன்றிய மாணவ சமுதாயத்திற்கும் பொது வாகத் தன்னம்பிக்கை இழந்து தவிக்கும் பலருக்கும் ஹிப்னாடிசம் எப்படி கைகொடுத்து உதவுகிறது என்பதை எடுத்துரைக்கும் நூல் இது. இந்த முறை ஹிப்னோதெரபி (Hypno Therapy) என்று அழைக்கப்படுகின்றது இது மனோதத்துவத்தை அடிப்படையாகக் கொண்டு செயல்படும் முறை. ஆகவே இதை மனோதத்துவமுறை என்று அழைக்கலாம்" என்று காட்டுகின்றார் (முன்னுரை)

ஹிப்னாடிசத்தைக் கற்றவர்கள் மேடைவரையில் பரப்பும் 'மேடை ஹிப்னாடிசம்' ஒன்றைத்தான் மக்கள் அறிந்திருக் கிறார்கள். மக்களின் பல பிணிகளையும் குறைகளையும் தீர்க்கும் சக்தி படைத்த ஹிப்னோதெரபி என்ற ஒன்று இருப்பதை அறிய வில்லை என்று காட்டுகின்றார். ஹிப்னாடிசம் எவரும் பயிற்சி செய்து எளிதில் கற்றுக்கொள்ளக் கூடியது என்றும், ஆனால் ஹிப்னோ தெரபி அத்துணை எளிமையானதல்ல என்றும் காட்டு கின்றார். இந்நூலை நாம் ஹிப்னாடிச மருத்துவ முறைக்கு ஒரு வழி காட்டி நூலாகக் கொள்ளலாம்.

## 9. பால் உணர்வு மருத்துவம் (Sexual Medicine)

இவ்வகையில் நமக்குக் கிடைக்கும் நூல் ஒன்றுதான். அது முன்னுரையில் பால் மருத்துவம் தெரிந்து கொள்வது அசிங்கம் என்று எண்ணுவதை வன்மையாகக் கண்டித்து. அது அனைவரா லும் அறியப்பட வேண்டியதே என்று கோடிட்டுக் காட்டுகின்றார்.

இன்று பாலுணர்வு பற்றிய தனிப்பிரிவுகள் இன்றைய நிலையில் மருத்துவ நிலையங்களில் வளர்வதைச் சுட்டிக்காட்டுகின்றார்.

ஆண், பெண் உறுப்புகளின் அமைப்பு முறை விளக்கப்பெறும் பகுதி 'பாலுறுப்புகளின் அமைப்பு' என்றும், பருவம் அடைதல் தொடங்கி, அந்த உறுப்புகளின் இயக்கங்களை, அளவுகளுடன் விளக்கிக் காட்டும் பகுதி 'பாலுறுப்புகளின் இயக்கம்' என்றும் அமைகின்றது.

இன்ப நிலையின் அனுபமுறை—இன்ப உணர்வின் தூண்டல், வளர்ச்சி, உச்சம், தளர்ச்சி என்ற நான்கு நிலைகளில் பகுத்துக் கொண்டு ஆராயப்படுகின்றது. அடுத்து அடிக்கடி நிகழும் சில பாலுணர்வுக் கோளாறுகளும் பேசப்படுகின்றன. அதன் பிறகு, இருபாலரின் கருவின் நிலைகள் விளக்கப்படுகின்றன. கருத்தரிக்கும்—கருத்தரிக்கா முறைகளில் உடலுறவு கொள்ள வழிமுறைகளைக் காட்டுகின்றார்.

ஆண், பெண் இருபாலரிடை நிகழும் சுய இன்பங்கள், ஆண் + ஆண்: பெண் + பெண் போன்றபல முறைகளைக் காட்டி அவற்றின் நன்மை தீமைகளை எடைபோடுகின்றார். மாறுபட்ட மன நிலையிலும், உடல் நலக்குறைவிலும் உடலுறவு கொள்வதைத் தவிர்க்க வேண்டுகிறார். இறுதியில் பாலுணர்வு குறித்த பல தவறான கருத்துகளைச் சான்றுகளுடன் மறுத்துப் பேசுகிறார். முக்கியக் கருத்துகளின் அட்டவணை எனும் பகுதியில் அவர் சொன்ன முதன்மைக் கருத்து விளக்கத்தின் பின்னர் படவிளக்கம் அமைந்துள்ளது.

II

## மதிப்புரை

மேற்கண்ட பாகுபாட்டின் அடிப்படையில் அப்பாகுபாட்டிலடங்கும் நூல்களின் மதிப்புரைகள் இங்கு இடம் பெறுகின்றன.

I. முதல் வகையில் அடங்கும் முதல் நூல் **'உணவுப் பொருளின் மருத்துவகுண அகராதி'** என்பது இது. ஒரு பொருளின் அனைத்து நிலைகளையும் விளக்க முயன்றுள்ளது.

சில நேரங்களில் அவ்வாறு விரித்துரைப்பது அவசியமற்றதாகி விடுகின்றது. ஒரு பொருளின் இரண்டு பெயர்களை அறியாமல் அவற்றைத் தனித்தனியாக இரண்டிடங்களில் விளக்கிச் செல்

கின்றார். 'கக்கரிக்காய்' என்பது வெள்ளரிக்காய்; ஆனால் ஆசிரியர் அதைக் கக்கரிக்காய் (ப—15) என்ற தலைப்பிலும், வெள்ளரிக் காய் என்ற தலைப்பிலும் (ப-63) விளக்குகின்றார். மேலும் ஒரு பொருள் பற்றிய விளக்கங்கள் திரும்பவும் இடம்பெறுகின்றன. இவை பக்கம் பெருக்கவே பயன்படுகின்றன. மொழிப் புலமை திறம்பட இன்மையின் வந்த தொடர்களே திரும்பத் திரும்ப வரு கின்றன. என்றாலும் அறிமுக நிலையில்-விளக்கவியல் வகையில் இதைக் குறை கூறுவதற்கில்லை.

காய்கறிகளின் மருத்துவம் பேசும் நூல், காய்களின் பயன் நுகர்ந்து, நல்லன உண்ணவும், அல்லன தவிர்க்கவும், காலமறிந்து உண்ணுதற்கும் மிகவும் துணை செய்யும். பச்சைப் பட்டாணியின் குணங்களைச் சொல்லும் போது,

'உடம்புக்குச் சக்தியைக் கொடுக்கும்'
உடம்புக்கு வலுவைக் கொடுக்கும்'

என்ற இரண்டு தொடர்களைக் கையாளுகின்றார். இப்படி வேறு பாடில்லாத தொடர்கள் திரும்பவும் பல இடங்களில் பயன் படுத்தப்பட்டுள்ளன.

ஒருசில இடங்களில் கருத்து முரண்பாடு காணப்படுகின்றது. வாழைப்பூவின் மருத்துவ குணம் பேசும் போது, 'மலக்கட்டை ஒழிக்கும், வயிற்றுக் கடுப்பு தணிக்கும், சீதாபேதியைக் குணப்படுத் தும் என்று காட்டுகின்றார். மலக்கட்டும், வயிற்றுக் கடுப்பும் (பேதி ஒன்றுக்கொன்று முரணானவை. ஒரு பொருள் எப்படி இந்த இரு வினைகளையும் செய்யும். இதில் ஏதோ ஒன்று பிழையானது.

கீரைகளின் நோய் நீக்கும் தன்மைகளைப் பேசும் 'பிணி தீர்க் கும் கீரைகள்' எனும் நூல் பொதுப்பட எல்லாக் கீரைகளும் கண்ணுக்குக் குளிர்ச்சியைத் தந்து, கண்நோய்களைத் தடுத்து, உடல் வெப்பத்தைக் குறைக்கும் என்று கூறுகின்றது. கீரைகளின் பட்டியல் பல புதுமைகளைத் தந்திருக்கின்றது. இவர் பக்கம் ஒட்டு வதில் மிகவும் துணிந்து செயல்பட்டிருக்கின்றார். கீரையின் விளக்கம் ஒரு பக்கத்தின் எந்தப் பகுதியில் முடிந்தாலும் அத்துடன் அந்தப் பக்கத்தைவிட்டு அடுத்த பக்கம் தாவுகின்றார் ஆசிரியர்.

"காசினிக் கீரைக்கு விளக்கம் சொல்லும்போது,

காசினிக் கீரையை உட்கொள்வதால் உடல் நல்ல மெருகுடன் இருக்கும். இரத்தம் சுத்தியாகி விருத்தியுறும்! அஸ்தி தாது சுரத்தைத் தணிக்கும். வீக்கம்வாடும்'' (பக்—22).

என்ற அளவில்காசினிக்கீரையை முடிப்பதுடன், அந்தப் பக்கத்தையும் முடித்துவிட்டு அடுத்தப்பக்கம் சென்றுவிடுகிறார்.இப்படிப் பல இடங்களில் பக்கம் நிரப்பும் பணி பெரிதும் நிகழ்ந்திருக்கின்றது.

கனிகள் மருத்துவத்தின் ஆசிரியர், கனிகளின் பெயர்களைச் சுட்டி அவற்றின் உண்மைத் தன்மையை வெளிக்கொணர மிகவும் பாடுபட்டுள்ளார். கனிகளில் அமைந்துள்ள சத்துகள் விழுக்காட்டு முறையில் விளக்கிக் கூறப்பட்டுள்ளன. கனிகளைத் தனியே எடுத்துக் கொண்டு அவற்றின் சுவைகளைச் சுட்டி—மருத்துவப் பெருமையை எடுத்துச் சொல்ல முனைந்து அதில் வெற்றியும் காண்கிறார் ஆசிரியர். தலைப்பு, துணைத்தலைப்பு இவற்றின் அமைப்பும் நடையும் குறிப்பிடும்படி அமைந்துள்ளன. எல்லாக் கனிகளும் சத்துள்ளவை என்றாலும், அவற்றின் மிகும்—குறையும் பண்புகள் சுட்டப்பட்டு காரணங்காட்டி விளக்கப்படுகின்றன.

மூலிகை வகையில் அடக்கப்பட்ட துளசியின் பயனும் காய் கனி மருத்துவமும் என்ற முதல் நூல் ஒரு மூலிகை (துளசி) ஒரு காய் (நெல்லிக்காய்),ஒரு கனி (எலுமிச்சை)என்ற நிலையில் தனது பெயரமைப்பையும், நூற்பொருட் செய்தியையும் கொண்டுள்ளது. இம்மூன்றையும் விளக்க ஆசிரியர் மிகவும் முயன்றுள்ளார். துளசியினும் மற்ற இரண்டிற்கும் முதன்மை தருகின்றார். கருத்துகள் திரும்பத் திரும்ப வருகின்ற பான்மையைப் பலவிடங்களில் காண முடிகின்றது. அதுபோக தொடரை-பத்தியை ( Para)—அப்படியே கையாண்டுள்ளார்.

"இயற்கை வாழ்வில் சுகம்பெற இறைவன் செயற்கை அம்சங்களுக்கு இடம் வைக்கவில்லை, ஆங்காங்கே இயற்கையாகக் கிடைக்கும் எளிய பொருள்களைக் கொண்டே நாம் ஆரோக்கியமாக வாழமுடியும்'' —என்ற பகுதி முன்னுரையிலும்,நெல்லிக்காய் என்றபகுதியிலும் (ப—14)மாற்றமின்றி அப்படியே அமைந்துள்ளது.

இவர் எல்லா நோய்களுக்குமே இம்மூன்றையும் மருந்தாக அமைக்கின்றார். இதில் எல்லாம் பொருந்துவனவாய் இல்லை. ஆசிரியரின் கற்பனைச் சரக்குகளும் இடம்பெறாமலில்லை.

'வேர்கள் பட்டைகள் மருத்துவம்' என்று நூல் தலைப்பேற்றிருந்தாலும், வேர்கள் முதன்மை பெறுகின்றன. வேர் விளக்கமாக அமையும் முன்பகுதியில், அகத்திவேர் பட்டை மாதுளைவேர் பட்டை (பக், 43,) இரண்டும் இடம்பிடித்திருக்கின்றன. பட்டைகள் பயன்பாட்டுமுறையில் குறைவாக இடம்பெற்றிருக்கின்றன.

இதனமைப்பு முறையில் நாம் எவ்வித ஒழுங்கு முறையையும் (வைப்புமுறையில்) காண இயலவில்லை. நோய்நீக்கும்—வேர்கள் பட்டைகள் இவற்றில் அதிகப் பயன்பாடு கருதியோ, கிடைத்தற்கு எளிமையுடையது எனக் சொண்டோ, நோய்நீக்குதலில் விரைவாகச் செயல்படக்கூடியது என்றோ அகர நிரல்படியோ அமைக்கப்படவில்லை. தனது போக்கில் ஒன்றன்பின் ஒன்றாக விளக்கங்களைக் காட்டிச் செல்கின்றார். தான் அப்பொருளைப் புரிந்து கொண்ட தன்மையே அதற்குக் காரணம்.

அருந்தும் வகையில் அமைந்த முதல் நூலில் ஆசிரியர், தேன் தயாரிப்பு, பாதுகாப்பு, பயன்படுத்தல் போன்றவற்றைக் குறிப்பிடும்படிச் சொல்கின்றார். இந்நூல் தனது உள்ளடக்கத்தைப் பதினைந்து துணைப்பிரிவுகளுள் பேசுகின்றது. ஆனால் அது பொருளடக்கத்தில் சுட்டப்படவில்லை—பொருளடக்கமே இல்லை. ஒரு பகுதியில் கூறப்பட்டுள்ள செய்திகள் மற்றப் பகுதிகளில் பல இடங்களில் திரும்பத் திரும்பப் பயின்றுவரக் காண்கிறோம். பல செய்திகளுக்குச் சான்றேதும் சுட்டப்படாமல் இருப்பதால் நம்மிடம் அக்கருத்து வலிமைபெறவில்லை.

'தேனும் அதன் பயனும்' என்று நூல் தலைப்பிடப்பட்டுள்ளது. ஆனால் நூலின் பெரும்பகுதி தேனீ—தேனீ வகை—வாழ்வு—சேகரித்தல் இவற்றையே நூற்பொருள் செய்தியாகக் கொண்டுள்ளது. இந்த நூலுக்கு நூலின் பொருளமைப்புப்படி தலைப்பிடப்பட வேண்டுமானால், 'தேனீக்களும் தேனும்' என்று அமைத்தல் வேண்டும். நூலின் அட்டை—அமைப்புமுறை அழகைப் போன்று — பொருள் — பொருள்கூறுமுறை — பொருளமைமுறை வகைப்பாடு விளக்கக் கோணங்கள் இவை அத்துணைச் சிறப்பாக அமையவில்லை.

இந்த வகையிலமைந்த மற்றொரு நூல் 'பால் தேன் மருத்துவம்' என்பது. இவர் தனது நூலில் பாலுக்கும் தேனுக்கும் முதன்மை கொடுத்து மருத்துவத்திற்கு இரண்டாமிடமளிக்கின்றார். வகைப்பாடுகள் செய்வதிலும், அவற்றுள் காணக்

கிடக்கும் வேறுபாடுகளை விளக்கிக் காட்டுவதிலும் முனைந்து செயல்பட்டிருக்கின்றார் ஆசிரியர். ஆனாலும் தேன் மருத்துவத்திற்கு ஒதுக்கியுள்ள பக்கங்களைச் செம்மையாகவே அமைத்துள்ளார். சத்துப்பொருள்களைச் சதவீதத்துடன் காட்டி, சிறப்புத் தன்மைக்கு முதலிடம் தந்து—அதிலுள்ள மருத்துவப் பண்புகளைத் தெளிவுபடுத்திக் காட்டுகின்றார். தொகுப்பு வகையில் இது ஒரு முழுமைபெற்றநூல்; ஆனால் ஆய்வு அளவில் முழுமை பெறுதல் வேண்டும்.

3. வீட்டுப் பூச்சிகளை ஒழித்துச் சற்று மன அமைதியுடன் வாழ்வதைக் காட்டுகின்றது. இப்பிரிவின் முதல் நூலாக அமையும் வீட்டுப் பூச்சிகளும் ஒழிக்கும் முறைகளும் என்னும் நூலில், அறிவியல் முறையை விட்டு எளிதாக ஒழிக்கும் முறை சுட்டப்படுகின்றது. இவரது ஒழிப்புமுறையின் பெருமை பெரும்பான்மை மண்ணெண்ணெயில் அடக்கப்பட்டுவிடுகின்றது.

ஒழிப்புமுறை என்று தலைப்பை அமைத்தாலும், பெரும்பகுதி அவை வாழுமிடம், ஏற்ற சூழல், வளரும்நிலை, இனப்பெருக்கம் இவற்றைப் பேசுவதில் சென்றுவிடுகின்றது. சாப்பிட்ட உடன் அந்த இடத்தை உடனே சுத்தம் செய்து மண்ணெண்ணெய் தெளிக்கச் சொல்கின்றார், அதனால் நாற்றமடிக்குந் தன்மைபற்றி அவர் கவலையுறவில்லை போலும்.

கரப்பான் பூச்சியை ஒழிக்க ஆசிரியர் கூறுகின்றமுறை வேடிக்கையாக உள்ளது. கரப்பான் தனியாகவோ கூட்டமாகவோஇருக்குமிடத்தில் மை உறிஞ்சும் பில்லரில் (Ink piller) மண்ணெண்ணெயை எடுத்து அவற்றின் மீது விடவேண்டுமாம். அப்படி நாம் விடும்வரை அது ஓடாது அங்கேயே நிற்குமாஎன்ன? மொத்தத்தில் எளிய, செலவில்லாத ஒழிப்புமுறை இங்குச் சுட்டப்பட்டுள்ளது.

செலவில்லாத சுலப வைத்தியம் அடுத்து அமைகின்றது. ஆசிரியர் நோய்களுக்கு மருத்துவம் கூறும்முறை, பெரும்பான்மை கிராமத்தில் இன்றும் பயன்படுத்தும் முறையைப் பின்பற்றியே அமைகின்றது. ஒரு நோயை அது ஏற்படும் தன்மை கொண்டு சில பல வகைகளாகப் பகுக்கும் முறையை இவரிடம் காண்கிறோம்.

நோயின் பெயருடன் குணமாக, ஆற, ஆற்ற, அகல, நீங்க முறிய, நிற்க, வெளியேற, கட்டுப்படுத்த, எளியமுறை, எளியவழி, சுலபமுறை, சுலபவழி என்றெல்லாம் இணைத்துக் காட்டுகின்றார்.

நூலின் நடைநலம் குறிப்பிடத்தக்க அளவிற்குச் சிறப்பாக அமைய வில்லை. மருத்துவ அமைப்புமுறையில் ஒழுங்குத்தன்மை இல்லாமல் தொடர்பில்லா நோய்கள் ஒரு கோணத்தினின்று விளக்கப்படுகின்றன.

4. இந்நான்காம் வகையில் 'குழந்தை வைத்தியம்' என்ற ஒரே நூல்தான் அமைகிறது. நோய்நீக்கு முறைக்கான விளக்கத்திற்கு. ஆசிரியர் சிறந்த அமைப்பு முறையினைக் கையாண்டுள்ளார். ஒரு நோய் எந்த வயதிலிருந்து எந்த வயதிற்குள் ஏற்படும் என்று காட்டுகின்றார். சில நோய்களுக்கு அதன் தோற்ற அறிகுறிகளை நுண்மையாக விளக்குகின்றார். ஒருநோய்க்குப் பல முறையில்மருத் துவத்தைச் சுட்டுகின்றார்.

கிடைக்கின்ற பொருள்களைக் கொண்டே இவர் கூறும் மருத்துவத்தைச் செய்துவிடலாம். இது செலவு குறைவான தாகவும், பலன் மிகுந்ததாகவும் அமைகின்றது. இவர் கூறும் மருத்துவ முறைதளும், அறிகுறிபற்றிய விளக்கங்களும் இவ் ஆசிரியரது அனுபவ அறிவைக் காட்டுகின்றன. ஒட்டுமொத்தமாக இந்நூல் குழந்தைகளுக்கு நோயில்லாமல் பாதுகாக்கப் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

5. இவ்வகையில் முதற்கண் அமைவது கண்பாதுகாப்பும் கண் மருத்துவமுமாகும். பொதுப்பட பழஞ்சுவடிகளின் தாக்கத்தைக் கொண்டு—அதன் விரிவுடன் இக்காலத்திய கொள்கைகள்—கண் நோய்கள் இவற்றை உட்கொண்டு நூலை அமைத்துள்ளார். இவரது அனுபவ அறிவும் ஆங்காங்கே தலையைக் காட்டுகின்றது.

வந்த செய்திகளே திரும்பத் திரும்ப வருகின்ற பாங்கினை இந்நூலிலும்காணமுடிகின்றது. இதில் காணப்படும் பலகருத்துகள் 'கண் பாதுகாப்பு' என்ற நூலின் (கழக வெளியீடு) பகுதிகளி லிருந்து எடுக்கப்பட்டுள்ளன. அமைப்புமுறையில் நாம் ஒரு ஒழுங்கின்மையைக் காண்கிறோம், பகுதிகள் பிரிப்பதிலும், பக்கம் கூட்டுவதிலும், ஆசிரியருக்கு இருந்த கவனம் நூல்பொருளில் இல்லாது போனது பெரும் குறையாகத் தோன்றுகின்றது.

'நுரையீரலின் நோய்கள்' பற்றி ஆராயும் நூல் நுழைவாயில் என்ற பகுதியில் உலகப்புள்ளி விவரங்களை மிகத்தெளிவாக எடுத் துரைக்கின்றது. 'புளுரசி' (Pleurisy) என்று ஆங்கிலத்தில்

அழைக்கப்படும் நோய்க்கு, 'நுரையீரலைச் சுற்றி நீர்' என்ற தமிழாக்கம், Dry pleurisy என்ற சொல்லின் நுரையீரல் சவ்வின் வறண்ட அழற்சி' என்ற தமிழ் வடிவம் இவை தமிழின் நோயின் தன்மையை விளக்குவதோடு சொல்வளத்தைப் பெருக்கவும் பயன்படுகின்றன. இதில் அமையும் நடை குறிப்பிடும்படி உள்ளது. அறிவியல் முறையில் மிக அரிதின் முயன்று, எளிமையாகச் சொல்லி மக்களுக்குப் பயன்படும் வகையில் இந்நூலை அமைத்துள்ளார் டாக்டர். பி.எம் ரெக்ஸ் அவர்கள்.

6. 'ஆஸ்துமா' பற்றி அமையும் இந்நூல் தொகுப்பு நிலையில் விளக்கவரையறையையும் தற்காப்பு முறைகளையும் விளக்குவதில் சிறந்து காணப்படுகின்றது. இதற்கான மூல ஆதாரங்களை ஆசிரியர் குழு மிக முயன்று புள்ளிவிவரங்களுடன் தந்துள்ளது. இது ஆங்கில நூலின் மொழிபெயர்ப்பு என்பதை விளக்க நமக்குப் பல இடங்கள் துணைநிற்கின்றன. இதன் நடையிலும் ஆங்காங்கே ஆங்கிலச் சொற்களின் ஆட்சியைக் காணமுடிகின்றது.

"வருமுன்னர் காவாதான் வாழ்க்கை எரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்"

என்ற நிலையைத் துல்லியமாக விளக்கிக் காட்டுகின்றனர் ஆசிரியர் குழுவினர்.

ஆசனமுறைப் பயிற்சிகளும், இயற்கைமுறை மருத்துவங்களும் அதன் பலன்களுடன் சுட்டியே விளக்கப்படுகின்றன. இந்நூல் படிப்பு ஆஸ்துமா அணுகாமுறையைத் தெரிந்துகொள்ளக் கண்டிப் பாக உதவும்.

'பயங்கர வியாதிகளும் பயனுள்ள சிகிச்சையு' மாக அமையும் இந்நூல், குறைவான நோய்களை எடுத்துக்கொண்டு, விரிவாக விளக்குகின்றது. ஒரு நோய்க்குரிய பல கூறுகளையும் தனித்தனியே விளக்க முற்பட்டிருப்பது இந்த நூலாசிரியரின் உழைப்புத் தன்மை யைக் காட்டிநிற்கின்றது. நோய்களின் தடுப்புமுறைகள், கிராம மக்களின் வழக்கு முறையுடன் சுட்டப்படுகின்றன.

நூலுக்குப் பொருளடக்கம் இன்மையால் நமக்கு நோய்களைக் காண்பது கடினமாக இருக்கின்றது. உள்தலைப்புகளும், துணைத் தலைப்புகளும் வேறுபாடின்றி அச்சிடப்பட்டுள்ளன. நோய்களின் பெருகுந்தன்மை குறைப்பதற்கு இந்நூல் பெரிதும் பயன்படும்.

7. யோகாசன முறையில் அமைகின்ற இரண்டு நூல்களும் விளக்கவகையில் அமைந்துள்ளன. 'யோகாசன மருத்துவம்' என்று

பெயர்கொண்ட நூல், பல உள்பிரிவுகளையும், அதற்குமேலும் துணை உள்பிரிவுகளையும் கொண்டு தான் எடுத்துக் கொண்ட பொருளை விளக்குகின்றது. ஆண்கள், பெண்கள் இருபாலரும் ஆசனம் செய்யமுடியும் என்பது சுட்டப்படுகின்றது. இரண்டு பகுதிகளாகப் பிரிக்கப்பட்ட இந்நூல், முதல் பகுதிக்குக் கொடுத்த அளவு சிறப்பினை இரண்டாம் பகுதிக்குக் கொடுக்கவில்லை. முதல் பகுதி ஆசனத்தையும் அதன் படிநிலைகளையும் விளக்கு கின்றது. இரண்டாம் பகுதி, நோய்—நோயின் தன்மைகள்—தோன்றுதற்கான காரணங்கள் இவற்றைக் கூறி, அதற்கான சித்த ஆயுர்வேத மருத்துவ முறைகளை எடுத்துரைக்கின்றது. இதில் நோயினைக் குணப்படுத்த எந்த ஆசனமுறையைப் பயன்படுத்த வேண்டும் என்பதைக் கூறவில்லை. அது கூறப்பட்டிருந்தால் நூல் தனது சொல்பொருளின் முழுமையைப் பெற்றிருக்கும்.

அடுத்தமையும் 'யோகாசன முறையில் வைத்தியம்' என்னும் நூல்யோகாசன மருத்துவத்தைத் தெளிவாகத்தெரிந்துகொள்ளப் பெரிதும் துணைசெய்யும். யோகாசன முறைகளின் அவசியத்தை மருத்துவத்தோடு பொருந்த அமைத்துள்ள பான்மை சுட்டத் தக்கது.

பொதுவாக யோகாசன மருத்துவத்தை விளக்குமுறையில் இரண்டு முறைகளைக் கையாண்டுள்ளனர். ஒன்று ஆசனங்களைக் கூறி அவை நோய்களைக் குணப்படுத்தும் தன்மை பேசுவது, மற்றொன்று பிணிகொண்ட உடலின் உள்ளியல்புகளைக் கூறி அவற்றை ஆசனங்கள் போக்குமுறையைக் கூறுவது. சிறந்ததும், எளிமையானதுமாக இவ்விரண்டாம் முறையைத்தான் இந்நூலா சிரியர் மேற்கொண்டுள்ளார்.

ஆசனங்கள் முறை மாற்றம் பெறாமல் சரியாகச் செய்யப்பட வேண்டும் என்பதை ஆசிரியர் மிகவும் வலியுறுத்திச் சொல்கின் றார். இறுதியில் நூலிற்கு அப்பாற்பட்ட நிலையில், எதிர்காலம் நல்லமுறையில் உருவாக மாணவர்கள் யோகாசனம் செய்ய வேண்டும் என்றும், அதற்கு அரசு ஆவன செய்யவேண்டும் என்றும் வலியுறுத்திச் சொல்கின்றார். அப்பகுதி ஆசிரியரின் யோகாசன முறையில் உள்ள அசைக்க முடியாத நம்பிக்கை—ஈடு பாடு, ஐம்பது ஆண்டு கால அனுபவம் இவற்றைக் காட்டி நிற்கின்றது. இவரது அனுபவமே இந்நூல் சிறப்பாக அமை கின்றது என்றால் மிகையாகாது.

8. இந்நூல் மனநிலையைப் பற்றிக் கூறுகின்றது அது. மனோதத்துவ மருத்துவம்' என்பது. அது சிறந்த ஒரு நூல். படித்தவர்களில் பண்பட்டைந்தவர்கள் மட்டுமே அறிந்துள்ள மனோதத்துவம் பற்றிய செய்திகளைத் தமிழில், எளிய மக்களும் அறியும் வண்ணம் நூலையமைத்துள்ளமை குறிப்பிடத்தக்கது. நூலைப் படிப்போர் பயனெய்தி சிறக்க வேண்டும் என்று ஆசிரியர் மிகவும் விரும்புகின்றார். அதனால்தான் இந்நூலைப் படிக்கும் முறைக்குக் கூட ஆசிரியர் விளக்கம் தருகின்றார்.

எடுத்துச் சொல்லும் கருத்து மக்களுக்கு எளிதில் புரிய வேண்டும் என்பதற்காகப் பல சான்றுகளைக் காட்டி விளக்கு கின்றார். அகமனம், வெளிமனம் என்று மனத்தை இரண்டு நிலை யில் பகுத்துக் கொண்டு பேசுகின்றார். இவ்விரண்டின் செயல் பாடுகள் வேறுபடுத்தி உணர்த்தப்படுகின்றன. அகமனத்தின் செயல்களே இங்குப் பெரும்பான்மை இடம் பெறுகின்றன. அக மனத்தை இயக்குவது கடினம் என்றாலும், விடாமுயற்சியால் அது கைகூடும் என்று கூறுகின்றார். சிறந்ததான நூற்பொருளை ஆசிரியர் செம்மையாகவே கூறிச் செல்கின்றார்.

9. இறுதியாக அமைவது 'பாலுணர்வு' பற்றியது. பேசவும், பிறர்க்கு எடுத்துச் சொல்லவும் கூசிக் கொண்டிருக்கின்ற பாலுணர்வை ஒளிவு மறைவின்றித் தெளிவாக எடுத்துச் சொல்லி யிருக்கின்றார். டாக்டர் நடராஜன் அவர்கள் தனது கருத்து களுக்கு ஆதாரங்கள் தருவதில் முழுமுனைப்புடன் திகழ்கின்றார். சான்றுக்கு அவர் தன்னிடம் சிகிச்சைக்கு வந்த நோயாளிகளையே அழைத்து வருகின்றார்.

எளிமையாகச் சொல்லுதல் என்ற முறையில் ஒரு பெரியவர் குழந்தைகளுக்கு அதைச் செய்யாதே இதைச்செய்—இப்படிப்போ என்று அறிவுரை பகர்வது போன்று அமைந்துள்ளது. பகுதிகளை விளக்கும் போது இவர் தருகின்ற அளவு முறைகளும், அமைப்பை விளக்கும் கூர்மையும் இவரது அறிவாற்றலுக்குத் துணை நிற்கின்றன. அமைப்பு முறையிலும், அதன் பொருண்மையிலும் தன்னை உட்படுத்திக் கொண்டு விளக்கம் கொடுக்கின்றார், பாலுணர்வை வகுத்தும் — தொகுத்தும் — பகுத்தும் காட்டி யிருப்பது அவரது ஆய்வியல் நுண்ணறிவுக்குச் சான்றாகின்றது.

ஆங்காங்கே தனது கருத்துகளுக்கு அரண் சேர்க்கின்ற சான்று களைத் தமிழ் இலக்கியங்களினின்றும் எடுத்துக் காட்டியிருப்பது

அவர் தம் தமிழ்ப் புலமைக்குத் தக்க சான்று பகர்கின்றது. சில விளக்கம் பெற முடியா இடங்கள் ஆங்கிலத்திலேயோ, தமிழுக்குப் பக்கத்தில் அடைப்பில் ஆங்கிலத்தையோ பயன்படுத்தியுள்ளார். அடிக்கடி நிகழும் பாலுணர்வுக் கோளாறுகள், பாலுணர்வு பற்றிய சில தவறான எண்ணங்கள் போன்ற பகுதிகள் அவரது கூர்ந்த நோக்கையும், பரந்த உலகியல் அறிவையும் காட்டி நிற்கின்றன. படவிளக்கம் பதிய வைத்தல் எனும் தொழிலைச் செய்கின்றது. நூலின் இறுதியில் அமைந்துள்ள சேர்க்கையும், முக்கிய கருத்துகளின் அட்டவணையும் குறிப்பிடத்தக்கன. முக்கிய கருத்து அகரமுறைப்படுத்தப் பட்டிருப்பின் படிப்பெளிமை பெற்றிருக்கும்.

1981 இல் வெளியான நூல்களுள் மருத்துவ நூல்கள் குறிப்பிடத்தக்கன. அளவில்—எண்ணிக்கையில் குறைந்தன என்றாலும் பயன்பாட்டு முறையில் வழிகாட்டுவன மருத்துவத்துறை நூல்களே.

## இணைப்பு—1

## மருத்துவ நூல்கள் (ஆய்வுப் பகுப்பு)★

### 1. உணவுப் பொருள் மருத்துவம்

1.1. உணவுப் பொருள் மருத்துவகுண அகராதி
1.2. காய்கறிகளின் மருத்துவ குணங்கள்
1.3. பிணிதீர்க்கும் கீரைகள்
1.4. கனிகள் மருத்துவம்

### 2. இயற்கைப் பொருள் மருத்துவம்

2.1. மூலிகை வகை
2.1.1. துளசியின் பயனும் காய்கனி மருத்துவமும்
2.1.2 வேர்கள் பட்டைகள் மருத்துவம்
2.2. அருந்தும் வகை
2.2.1 தேனும் அதன் பயனும்
2.2.2. பால் தேன் மருத்துவம்

---

* ஆய்விற்கு எடுத்துக் கொள்ளப்பட்ட நூல்களின் பகுப்பு மட்டுமே இங்கு இடம்பெறுகின்றது.

## 3. வீட்டு மருத்துவம்

3.1. வீட்டுப் பூச்சிகளும் ஒழிக்கும் முறைகளும்
3.2. செலவில்லாத சுலப வைத்தியம்

## 4. குழந்தை வைத்தியம்

4.1. குழந்தை வைத்தியம்

## 5. உடலுறுப்பு நோய்கள்

5.1. கண் பாதுகாப்பும் கண் மருத்துவமும்
5.2. நுரையீரல் நோய்கள்
5.3. நரம்புக் கோளாறுகள்

## 6. நோயும் மருந்தும்

6.1. ஆஸ்துமா
6.2. பயங்கர வியாதிகளும் பயனுள்ள சிகிச்சையும்

## 7. யோகாசன மருத்துவம்

7.1. யோகாசன மருத்துவம்
7.2. யோகாசன முறையில் வைத்தியம்

## 8. மனோதத்துவ மருத்துவம்

8 1. மனோதத்துவ மருத்துவம்

## 9. பாலுணர்வு மருத்துவம்

9.1. பால் உணர்வு மருத்துவம்

இணைப்பு-2

## 1981-இல் வெளியான மருத்துவ நூல்கள்

1. அனுபவ வைத்திய முறைகள் 1000, இரத்தின சண்முகனார், அன்பு இல்லம், சென்னை-14

2. ஆரோக்கிய ரகசியம், லட்சுமி சுப்பிரமணியம், எஸ் , வானதி பதிப்பகம், தி. நகர், சென்னை-17

3. ஆஸ்துமா, மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு. மணி மேகலைப் பிரசுரம், சென்னை-17

4. உங்கள் உடலைப்பற்றித் தெரிந்துகொள்ளுங்கள், மணி மேகலைப் பிரசுர ஆசிரியர் குழு, மணிமேகலைப் பிரசுரம், சென்னை-17

5. உடல் எடை, தொந்தி, மலச்சிக்கல் நீக்கும் யோகாசனங்கள், ஆண்டியப்பன், இரா. சுந்தரயோகாசன பயிற்சி சாலை, 43, கீழத்தெரு, சிங்க நரசப்பையன் கிராமம், திருநெல்வேலி.

6. உடலும் மனமும் வலிமைபெறச் சில யோசனைகள், சிங்கார வேலு, செங்கற்பட்டு. இலக்குமி நிலையம், 59 முத்துமுதலித் தெரு. இராயப்பேட்டை, சென்னை-14

7. உணவுப்பொருள் மருத்துவகுண அகராதி, நடராஜ சிவாச் சாரியார், நர்மதா பதிப்பகம், வியாசராவ்தெரு, தி. நகர், சென்னை-17

8. கடைச்சரக்கு கைமுறை வைத்தியம், சூசைராஜா, எஸ்.ஏ. இலக்குமி நிலையம், 10, காசிம் சாகிப்தெரு, இராயப்பேட்டை, சென்னை-14

9. கண் பாதுகாப்பும், கண் மருத்துவமும், இரத்தின சண்முகனார், அறிவு நிலையம், 601, பைகிராப்ட்ஸ் சாலை, திருவல்லிக்கேணி, சென்னை-5

10. கனிகள் மருத்துவம், இரத்தின சண்முகனார், அறிவுநிலையம், 601, பைகிராப்ட்ஸ் சாலை திருவல்லிக்தேணி, சென்னை-5

11. காப்பி நின்றுகொல்லும் பகைவன், ரே.எம்,எஸ், கல்பனா, கீதா, கண்ணதாசன் வெளியீட்டகம், மல்லிகா இல்லம், 2, சங்கரலிங்கர் தெரு, அருப்புக்கோட்டை.

12. குழந்தை மருத்துவம், கன்னியப்பர், ஆர்., வானதி பதிப்பகம், தி.நகர், சென்னை-17

13. சித்த மருத்துவம், நோயும் நோய்தீர்க்கும் முறையும், இராம மூர்த்தி, அ., இமயம் பதிப்பகம், 20, பெருமாள் தெற்குவீதி, நாகப்பட்டினம்.

14. செலவில்லாத சுலப வைத்தியம், ஜனார்த்தனன். என்., நர்மதா பதிப்பகம், 1, வியாசராவ்தெரு, தி.நகர், சென்னை-17

15. செலவில்லாத சுலப வைத்தியம், சூசைராஜா, எஸ்.ஏ. இலக்குமி நிலையம், 59, முத்துமுதலித்தெரு, இராயப்பேட்டை, சென்னை-14.

16. சேய்நலம், கைக்குழந்தை வளர்ப்புநூல், கிருட்டிணன் க.வி. சரசுவதி புத்தகமனை, 23, சேட் அபாத், கோவை. 641012.

18. துளசியின் பயனும் காய்கனி மருத்துவமும், சம்பந்தம், வானதி பதிப்பகம், தி. நகர், சென்னை-17

19. தேனும் அதன் பயனும், சம்பந்தம். வானதி பதிப்பகம், தி. நகர், சென்னை-19

20. நரம்புக்கோளாறுகள், மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு, மணிமேகலைப் பிரசுரம், தி. நகர், சென்னை-17

21. நுரையீரல் நோய்கள், ரெக்ஸ். பி.எம்., பூம்புகார் பிரசுரம், 63, பிராட்வே சென்னை-1

22. நோய்நீக்கும் மூலிகைகளின் மகத்துவம், வைத்தியநாதன், மலேஷியா, இமயம் பதிப்பகம், 20 பெருமாள் தெற்குவீதி, நாகப்பட்டினம், 611001

23. பயங்கர வியாதிகளும் பயனுள்ள சிசிச்சையும், சூசை ராஜா எஸ்,ஏ., சாந்திநிலையம், தி.நகர். சென்னை-17

24. பால் உணர்வு மருத்துவம், டாக்டர், கே. நடராஜன், விசாலாக்ஷி பதிப்பகம். 7. இராமசாமி கார்டன் தெரு சென்னை-14

25. பால் தேன் மருத்துவம், இரத்தின சண்முகனார், அறிவு நிலையம், 601, பைகிராப்ட்ஸ் சாலை, திருவல்லிக்கேணி, சென்னை-5

26. பிணிதீர்க்கும் கீரைகள், கண்ணப்பன், இராம., வானதி பதிப்பகம். தி.நகர், சென்னை-17

27. புகையும் புற்று நோயும், சாமி, வி. என், காயத்ரி பப்ளி கேஷன்ஸ், 26, வேதாசல கார்டன்ஸ், மந்தைவெளி சென்னை-28

28. மனோதத்துவம், சோமசுந்தர், ஆர்.எம், நர்மதா பதிப்பகம், 1,வியாசராவ்தெரு, தி. நகர், சென்னை-17

29. மாரடைப்புநோய் வராமல் தடுப்பது எப்படி? ரெக்ஸ்.பி.எம். பூம்புகார் பிரசுரம், 63, பிராட்வே, சென்னை-1

30. யுனானி மருத்துவமுறை பொது நிவாரணியின் கையேடு, உம்மல்ஃபாஸல் ரஸாக் ஹகீம், எம்.யூ.ம.மு.ஆ.ம.க. 5, பான்ச்ஷீல் ஷாப்பிங் சென்டர், புதுதில்லி.

31. யோகாசன மருத்துவம், நடராஜ சிவாச்சாரியர், நர்மதா பதிப்பகம், 1, வியாசராவ்தெரு, தி.நகர், சென்னை-17

32. யோகாசன முறையில் வைத்தியம், ராஜன், என்., திருச்செந்தூரான் பதிப்பகம், எ. பி. 1347, 7ஆவது செக்டர், 33ஆவது தெரு, கலைஞர் கருணாநிதி நகர், சென்னை-78

33. வேர்கள் பட்டைகள் மருத்துவம், இரத்தின சண்முகனார், அறிவுநிலையம். 601, பைகிராப்ட்ஸ்சாலை, திருவல்லிக்கேணி, சென்னை-5

34. ஹோமியோபதி: நோயும் நோய்நீக்கும் முறையும் இராமமூர்த்தி, இமயப்பதிப்பகம், 20, பெருமாள் தெற்குவீதி, நாகப்பட்டினம், 611011.

# 20. மொழி பெயர்ப்பு நூல்கள்

டாக்டர். ந. கடிகாசலம்

1980-ஆம் ஆண்டைக் காட்டிலும் 1981-இல் தமிழில் மொழி பெயர்ப்பு நூல்களின் வளர்ச்சி தெரிகிறது. இனிவரும் ஆண்டுகளில் இவ் வளர்ச்சி மேலும் விரிவடைதல் வேண்டும்.

மொழிபெயர்ப்புக் கலை தமிழில் வளரத் தொடங்கியுள்ளது ஒரு நல்ல அறிகுறி எனலாம். மொழிபெயர்ப்புக் குறித்த கல்வி வகுப்புகளையும் பல்கலைக் கழகங்களில் உருவாக்கி, மாண வர்க்குப் பயிற்சிதர ஆவன செய்தால் மொழிபெயர்ப்புக் கலை மேலும் வளர வாய்ப்புண்டு.

சாகித்திய அக்காதெமி மொழிபெயர்ப்பு நூல்களை வெளி யிடுவதில் முன்னணியில் நிற்கிறது. தென்மொழிகள் டிரஸ்டும் இப்பணியில் சிறக்கிறது. 1981-ஆம் ஆண்டில் வெளியான மொழி பெயர்ப்பு நூல்களைப் பற்றிய ஒரு புள்-பார்வையைக் காண் போம்,

1981-ஆம் ஆண்டில் தமிழில் வெளியான மொழிபெயர்ப்பு நூல்களில், நாடகம்—1; நாவல்—1; உரைநடை (கட்சி சார்பான நூல்கள்)—4; வாழ்க்கை வரலாறு (கவிஞர் போன்றோர்)—5 ஆகியவை கைக்குக் கிடைத்தன. தமிழிலிருந்து ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்ட பரமார்த்த குருவின் கதையும் கணக்கி லெடுத்துக் கொள்ளலாம்.

## மத்த விலாச அங்கதம்

ஏழாம் நூற்றாண்டின் காஞ்சிபுரத்தைப் படம் பிடித்துக் காட்டும் இவ் அங்கத நாடகத்தைப் பல்லவ மன்னன் மகேந்திர

வர்மன் இயற்றினான். இந்நாடகத்தில் மகேந்திரவர்மனின் பல பட்டப்பெயர்கள் சுட்டிக்காட்டப்படுகின்றன. காஞ்சி ஏகாம்பர நாதர் கோயில் குறிக்கப்படுகிறது.

மத்த விலாச நாடகத்தின் வசனத்தில் 23 பாடல்கள் இணைந்திருப்பது—இசை நய அங்கதங்களின் பழமையைக் காட்டுகிறது.

சத்திய சோமன் என்னும் கபால தபசி, அவனுடைய துணைவி தேவசோமா ஆகிய இருவரின் குடிக்களியாட்டை மையமாகக் கொண்டு இயங்குகிறது மத்த விலாச அங்கத நாடகம். சத்திய சோமனாகிய கபாலியின் தானக் கபாலம் காணாமல் போகிறது. அதைத் தேடிக் கண்டு கொள்ளுவதே நாடகத்தின் கருப்பொருள்.

''ஆறம்ச பகை நசுக்கத் தீர்மானித்துப் பிறர் நலனுக்காகத் தன்னைத் தாழ்த்தி மூல சத்துவங்களைப் போலவே நிர்மல மானவர். செல்வத்திலும் கொடையிலும் குபேரனை நாணச் செய்தவர். வீரத்திலும் வளத்திலும் இந்திரனுக்குச் சமமானவர். ......பல்லவ வம்சத்தின் பெருமலை''(பக்.2) என்று மகேந்திர வர்மனைப் பற்றிய குறிப்பு இந் நாடகத்தில் இடம் பெறுகிறது.

தமிழாக்கம் செய்த ஆசிரியர் தமிழ்த்துறை ஆசிரியர் பணி புரிவதால் மொழி நடை மிகச் சீராக விளங்குகிறது. நல்ல தமிழில் நாடகத்தை மொழிபெயர்ப்புச் செய்திருப்பது இவர்தம்திறமையை வெளிக்காட்டி நிற்கிறது. உரையாடல்கள் மட்டுமல்ல; பாடல் களும் தெளிவாகவே மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. எடுத்துக் காட்டாக:—

முத்தென வியர்வை சொரிந்திடும் எழில் முகம்
முழுவதும் அழகுற நெளிந்திடும் புருவம்
மத்த நடை ஒரு பொருளற்ற முறுவல்
முறையறு அசையொடு முழங்கிய வாய்மொழி
மருங்கினில் தொங்கியே சுழல் இருவிழிகள்
மேல் இளஞ்சாயச் செந்நிறத் தேமல்
நறுமலர் மாலை ஊடறுந் தளர்ந்திட
தடந்தோள் விளிம்பினில் விழுந்திடும் குழைகள் (பக்3-4)

'மாலை இருளில் சேர்ந்த நிலவைப் போல உம்மைப் பார்க்க எனது கண்களுக்கு இன்பமாக இருக்கிறது' (பக்.18) என உரை யாடல்களும் தெளிவான மொழிநடையில் அமைந்திருப்பது இந் நாடகத்தின் மொழிபெயர்ப்புக்கு உறுதுணையாக நிற்கின்றன.

உரையாடலும் பாடலும் இணைந்து வரும் இந்நாடகத்தைப் படிப்போரைச் சோர்வடையச் செய்யாமலிருப்பதே மொழிபெயர்ப்பாளருக்குக் கிடைத்த வெற்றி எனலாம்.

## கோபுரத்தின் உச்சியிலே

நவீன ஐரோப்பிய நாடகக் கலையின் தந்தை என்று போற்றப் படும் ஹென்ரிக் இப்ஸன் எழுதிய The master Builder எனும் நாடகத்தின் தமிழாக்கமே கோபுரத்தின் உச்சியிலே ஆகும்.

சிறந்த சாதனை எதையும் புரிய, தரவேண்டிய விலையை, பட வேண்டிய பாடுகளை, சாதனைக் கலைஞனின் சோதனை களையும் வேதனைகளையும் இந் நாடகம் படம் பிடித்துக் காட்டு கிறது. எனவே, இந்நாடகத்திற்குக் கலைஞனின் வேதனைகள் என்று கூட இப்ஸன் தலைப்பு தந்திருக்கலாம் எனக் குறிப்பிடு கிறார் கா. திரவியம் (பக்.XVIII).

ஸோல்னெஸ்—தன்வேலைக்காகவும் வெற்றிக்காகயும் எவரையும் எதையும் பயன்படுத்திக்கொள்ளத் தயங்கியதில்லை. தன்சிறப்பையும் தொழிலையும் வருங்காலக் கலைஞர்கள் தன்னிடமிருந்து பறித்துவிடுவார்களோ என்ற அச்சத்தினாலேயே இளைய தலை முறையினர் மீது அவருக்கு ஒரு பகைமை உணர்வு வலுத்திருந்தது. அவர் மனைவி ஆலினிக்குச் சொந்தமான வீடு தீ பிடித்து எரிந்து விட்டது; புகைக் கூண்டின் விரிசல்களைப் பழுதுபார்ப்பதில் கால தாமதம் செய்யாமலிருந்தால் இந்த விபத்தைத் தடுத்திருக்க முடியும் எனும் குற்ற உணர்வு அவரைப் பிடித்திருந்தது. மாதா கோயில் கோபுரங்களைக் கட்டித் தெய்வத்திற்குக் காணிக்கை யாக்கினார்; ஆனாலும் தெய்வம் அவர் குழந்தைகளைப் பறித்துக் கொண்டது. மாதாகோயில் கோபுர உச்சியிலிருந்து, "இனிமேல் கோபுரங்கள் கட்ட மாட்டேன்; குடியிருக்க மக்களுக்கு வீடுகள் கட்டுவேன்" என அறைகூவல் விடுத்தார். இந்நிலையில் அவர் வாழ்வில் குறுக்கிட்ட ஹில்டா அவர் வாழ்வைப் போக்குவதற்குத் துணையாகிறாள்.

இப்ஸெனின் ஆழ்ந்த, உயர்ந்த படைப்புக்களில் ஒன்று தலைமைச் சிற்பி நாடகம் என்பது திறனாய்வாளர் முடிவு. இலட்சியப் பரிபூரண நிலையை எய்த இப்ஸெனின் ஓயாத துடிப்பு மிக்க முயற்சிகள் அவர்தம் படைப்புகளில் காணப்படுகின்றன. நடைமுறையில் இத்தகைய இலட்சிய நிலையை அடைவது

சாத்தியமில்லை என்பதையும் இப்ஸென் உணர்ந்திருந்தார். கோபுரத்தின் உச்சியிலிருந்து ஸோல்னெஸ் விழுவது மூலம் நம்மால் இதை உணர முடிகிறது.

"தலைக்கு மேல் ஒரு கூரை கிடைக்கும், தபாலுக்கு ஒரு முகவரி கிடைக்கும்; ஆனால் வீடு என்று சொல்லுவதற்கு அருகதை இராது. அதற்கு நான் ஒப்ப முடியாது. ......ஒழுங்கு இல்லாமல் கட்டுவதை விட, ஒப்பந்தத்தை விட்டுவிடுவதே மேல்" (பக்.6) என்னும் கூற்றால் ஸோல்னெஸின் மன உறுதிப்பாடும், தொழிலின் மீது கொண்டுள்ள சிரத்தையும் புலப்படுகிறது.

மூலநாடகத்தின் சிறப்புக் குன்றாமல் உணர்ச்சிப்பிழம்பாகவே இத் தமிழாக்கத்திலும் கதாபாத்திரங்கள் உலவுகிறார்கள்; இது மொழிபெயர்ப்பாளருக்கு வெற்றியைத் தருகிறது என்பதில் ஐயமில்லை.

## பாட்டியின் கனவுகள்

சிரிய சிந்தனையாளரும் ஞான பீடப் பரிசு பெற்றவருமான டாக்டர் சிவராம காரந்த் கன்னடத்தில் எழுதிய மூக்கஜ்ஜிய கனஸுகளு எனும் நூலே பாட்டியின் கனவுகள் எனும் தலைப்பில் தமிழில் மொழிபெயர்ப்புச் செய்யப்பட்டது. டாக்டர் டி.பி. சித்த லிங்கையா இந்நூலைத் தமிழில் தந்துள்ளார்.

இந்த நாவலில் கதாநாயகன் இல்லை; நாயகியும் இல்லை. சம்பிரதாயத்தால் உறைந்துபோன மனத்தைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சூடேற்றி உருகவைக்கும் வேலையை மூகிப் பாட்டி செய்கிறாள். மூகிப் பாட்டியும் அவளுடைய பேரனும் நான்கு அல்லது ஐயாயிரம் ஆண்டுகளாகப் பரந்து வந்துள்ள படைப்பின் இரகசியத்தை அறிவுக் கண் கொண்டு பார்க்க முயல்கிறார்கள்.

இந்நாவலில் இடம் பெற்றுள்ள மூகிப் பாட்டி இராமண்ணன், ஜன்னன் ஆகியோர் சிருஷ்டி சாதீயக் கேலி பேசும் மனப் போக்குக்கு வாதிகளாகவோ, பிரதிவாதிகளாகவோ, சாட்சி களாகவோ இருக்கிறார்கள். இந்த நாவலில்—தங்களுடைய அரை வேக்காட்டு நம்பிக்கைகளை மற்றவர்களின் மீது சுமத்திய வர்களின் கதையும் இருக்கிறது.

'கீதையில் ஒரு பேச்சு வருகிறது. பெண்கள் கெட்டவர் களானால் குலங்கள் கலந்து விடும் என்று சொல்கிறான் ஒருவன்'

நான் சொல்கிறேன்—ஒருவர் அல்ல, பத்துப் பேர் தங்களுக்குத் தோன்றியதையெல்லாம் கண்ணன் வாயில் திணித்துவிட்டார்கள். கடவுளே சொன்னது என்றால் நாம் அதற்கு எதிராக ஏதாவது முணுமுணுப்போமா!' (பக் 420)

'பெண்—ஆண் —காமம்—வேறொன்று இதெல்லாம் அருவருக்கத்தக்க விஷயங்களானால், கொடுத்தவனுக்கு அதை ஏன் கொடுத்தோம், எந்த விருப்பத்தை நிறைவேற்றுவதற்காகக் கொடுத்தோம் என்று தெரிந்திருக்கும்.' (பக். 424) என்றன போன்ற பல்வேறு கருத்துகள் இந்நாவலில் இடம் பெற்றுள்ளன.

டாக்டர் சிவராம காரந்த் அவர்களின் கருத்துக் கருவூலங்களைத் தெள்ளிய தமிழில் விறுவிறுப்பாகப் படிக்கத் தூண்டும் வகையில் தமிழாக்கம் செய்துள்ளார் டாக்டர் சித்தலிங்கய்யா என்பது இந்நாவலைப் படித்து முடித்தவுடன் நமக்கு ஏற்படும் எண்ணமாகும்.

## கம்யூனிசம் (கேள்வி—பதில்)

வி. டால்ஸ்டிக், ஏ. கார்சேவ், ஜி. ஒகனோவ், இ. உட்கின் ஆகியோர் தம் கட்டுரைகள் இத்தொகுப்பு நூலில் இடம்பெற்றுள்ளன.

1. கம்யூனிஸ்டுகளின் பார்வையின்படி மனிதனுடைய உண்மையான ஐசுவரியம் ஏது?
2. குடும்பம் பற்றி கம்யூனிஸ்டுகளின் போக்கு என்ன?
3. படைப்புத் திறன் சுதந்திரம் என்பதன் கம்யூனிஸ்ட் புலப்பாடு யாது?
4. மூன்றாவது உலகத்தின் பொருளாதாரத்தை வளர்த்திட சோஷலிச நாடுகள் எப்படி உதவுகின்றன? ஏன் உதவுகின்றன?

ஆகிய தலைப்புகளில் அமைந்துள்ள இந்நான்கு கட்டுரைகளிலும் கம்யூனிச சித்தாந்தம் பற்றிய பல்வேறு நிலைகள் விளக்கமாகப் பேசப்படுகின்றன.

படிப்போர்க்கு புரியுமாறு அவை தமிழில் தரப்பட்டுள்ளன; எனினும் இன்னும் எளிமையை மொழி பெயர்ப்பில் காட்டியிருக்கலாம்.

## விடுதலைப் பாதையில் இந்தியா

Social Scientist எனும் ஆங்கில இதழில் 1979-இல் வெளியான ஆங்கிலக் கட்டுரையின் தமிழாக்கம் இது. பகவத்சிங் அங்கம் வகித்த இயக்கமான நவஜவான் பாரத்சபையைப் பற்றிய ஒரு அறிமுகமாக இக்கட்டுரை அமைந்துள்ளது.

மூலக் கட்டுரையின் வேகமும் விறுவிறுப்பும் குன்றாமல் பாரதிப்ரியா சிறப்பாகத் தமிழாக்கம் செய்துள்ளார். சுபாஷ் சந்திரபோஸின் வீரவுரைகளில் உணர்ச்சி கொந்தளிப்பதைக் (பக்.1) காட்டாகக் காட்டலாம்.

## தற்கால டிராட்ஸ்கியிசம்: அதன் புரட்சிக்கு எதிரான இயல்பு

எம். பஸ்மானோவ் எழுதிய நூலின்தமிழாக்கம் இது. ஐந்து அத்தியாயங்களைக் கொண்ட இந்நூலில், புரட்சிக்கு எதிரான டிராட்ஸ்கியிஸ்டுகளின் போராட்டம் பற்றியும், தற்கால டிராட்ஸ்கியிஸ்டுகளின் கருத்தமைப்புகள் பற்றியும் விரிவாகப் பேசப்பட்டுள்ளது.

நவபாரதியின் தமிழாக்கப்பணி சிறந்து விளங்குகிறது. படிப்போர் தம் ஆவலை மனதில் கொண்டு மொழிபெயர்த்திருக்கிறார் போலும்!

## சோஷலிசமும் மனித நேசமும்

எஸ். போபொவ் இயற்றிய நூலின் தமிழ் வடிவமே இது. டாக்டர் சி.கனகசபாபதி இத்தமிழ்ப் பதிப்புக்குக்காரணமாகிறார். ஐந்து இயல்களில், மார்க்சிய—லெனினிய மனித நேசத்தின் சாரம், மனித நேசமும் இன்றைய கருத்துப் போராட்டமும், முதலாளித்துவத்திற்கு எதிர் நிலையில் மனிதன், சோஷலிசம் என்றால் மனித நேசம், விஞ்ஞானமும் மனித நேசமும் ஆகியன பற்றிப் பேசப்படுகின்றது.

மிகவும் பரவலாக உள்ள போலி மனித நேசக் கொள்கைகளைப் பற்றி ஒரு விமரிசனக் குறிப்பையும் இந்நூல் தருகிறது.

கம்யூனிசத்தை அறிந்து கொள்வோர்க்கும் பயன்படும் நிலையில் சிறப்பாகத் தமிழாக்கம் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது.

## சி. ஆர். ரெட்டி

வி. ஆஞ்சனேயுலு அவர்களின் ஆங்கில நூலை டாக்டர் ந. சுப்புரெட்டியார் அவர்கள் தமிழில் தந்துள்ளார்.

பதினொரு தலைப்புகளில் சி. ஆர். ரெட்டி அவர்களின் வாழ்க்கைச் சித்திரத்தை இந்நூலில் காண முடிகிறது.

தெலுங்கு மொழியைத் தாய் மொழியாகக் கொண்டதால் பேராசிரியர் சுப்புரெட்டியாருக்கு இந்நூலை மொழி பெயர்ப்பில் சிரமம் ஏதும் ஏற்படவில்லை: சிறப்பாகத் தமிழாக்கம் செய்ய மிகவும் அது உதவியிருக்கிறது.

எளிய நடையில் சீரான முறையில் மொழி பெயர்த்துள்ளார் ஆசிரியர் எனில் அது மிகையாகாது.

## நானாலால்

U.M. மணியார் எழுதிய நூலின் தமிழ் வடிவமே இது. தீபம் நா. பார்த்தசாரதி அவர்கள் இதைத் தமிழாக்கம் செய்துள்ளார்.

தந்தையும் தனயனும், நானாலாலின் கவிதை, பெருங் காப்பியங்கள், நானாலாலின் நாடகங்கள், பிரேம்பக்தி ஆகிய தலைப்புகளில் நானாலாவின், வாழ்க்கையும், அவர்தம் படைப்புகளும் பேசப்பெறுகின்றன.

படைப்பாளியாய் இருப்பதால் தீபம் நா. பா. அவர்களுக்கு மொழிபெயர்ப்புச் சிரமமாக இல்லை. நல்ல உரை நடையும் சிறந்த கவிதைகளையும் அவர் தமிழில் பொழி பெயர்த்துத்தர முடிகிறது. குறிப்பாக, கவிதைகளை இங்குக் குறிப்பிடலாம்.

கலைக்க முடியாத திருமணத்திற்கான
அழகு மணப்பந்தலா இது?
அல்லது உடைந்து போன காதலர் மனத்தின்
சாம்பற் குவியல் தானா?

மூல நூலாசிரியனின் உள்ளக் கருத்தை அவ்வாறே வேற்று மொழியில் தவறாது, சீராகவும் செம்மையாகவும் மொழி பெயர்த்திருக்கிறார் நா. பா.

## போதனர்

D. வேங்கடாவதானியின் ஆங்கில நூலான இதனைத் தமிழில் மொழிபெயர்த்தவர் அ. அ. மணவாளன்.

போதனரின் வாழ்க்கை வரலாறு, போதனரின் படைப்புகள், ஸ்ரீமத் பாகவதம், போதனரின் மொழியாக்க முறைகள், போதனரின் கவிதைச் சிறப்பு, போதனரின் ஆளுமை, பாகவதத்தில் அமைந்த கதைகளும் துணைக் கதைகளும், பாகவதத்தில் பக்திச் சுவை ஆகிய எட்டுத் தலைப்புகளை உள்ளடக்கியது இந்நூல்.

போதனரின் மொழியாக்க முறைகள் மிக விரிவாக இந்நூலில் கூறப்பட்டுள்ளன. கதையை மொழி பெயர்த்தல், கருத்தை மொழிபெயர்த்தல், சொற்களை மொழிபெயர்த்தல் எனத் தெலுங்குக் கவிஞர்கள் கையாண்ட மூவகை மொழிபெயர்ப்பு முறைகளை (பக். 35) நான்காவது இயலில் குறிப்பிடுகின்றார் ஆசிரியர். போதனரின் மொழியாக்கத் திறன் ஒன்பது சிறு பிரிவுகளாகப் பிரித்து ஆராயப்பட்டுள்ளது (பக் 36-46).

மொழிபெயர்ப்பாளரின் நடை இன்னும் சற்றுச் சீராக இருந்திருந்தால் மேலும் இந்நூல் சிறப்பாக அமைந்திருக்கும்.

## தாராசங்கர் பந்தோபாத்யாயர்

மஹாஸ்வேதா தேவி எழுதிய நூலின் தமிழாக்கம் இது. தமிழாக்கம் செய்தவர் கு. இராஜவேலு.

பத்து அத்தியாயங்களில் தாராசங்கர் பத்தோபாத்யாயரின் வாழ்க்கை வரலாறும் படைப்புகளும் பேசப்பட்டுள்ளன. 133 படைப்புகளுக்குச் சொந்தக்காரரான இவரிடம் குறைகளைக் காட்டிலும் நிறைகளே அதிகம். "அவர்தம் மூன்று பெரிய காப்பிய நாவல்களில் இந்திய நாட்டின், இந்திய மக்களின் வரலாற்றை, கிராமங்களின் வறிய நிலையை, தளையுண்டு கிடந்த நிலையைக் காண்கிறோம். இதன் மூலம் இவர் ஏனைய நாவலாசிரியர்களை வென்று விளங்குகிறார்" (பக்.89) எனும் கூற்று இவரது சிறப்பை உணர்த்தும்.

கு. இராஜவேலு அவர்களின் மொழிபெயர்ப்பு இந்நூலின் சிறப்புக்கு உறுதுணையாக உள்ளது.

அத்தியாயங்களுக்குத் தலைப்பிட்டு எழுதியிருந்தால் தெளிவாக விளங்கியிருக்கும். முன்னுரை கூட இல்லாமல் ஒரு நூல் சாகித்திய அக்காதெமி வெளியீடாக வருவது வியப்பாகவே உள்ளது.

## ஜீவனானந்த தாஸ்

சிதானந்த தாஸ் குப்தா அவர்களின் இந்நூலைத் தமிழில் தருபவர் டாக்டர் க.த. திருநாவுக்கரசு அவர்கள்.

மேற்குறித்த நான்கு சாகித்திய அக்காதெமி நூல்களில் மொழியாக்க முன்னுரை இடம் பெறவில்லை. ஆனால், இவர் மொழியாக்க முன்னுரை கொடுத்துள்ளது வாசகர்களின் மீது இவர் வைத்துள்ள பற்றினை விளக்குகிறது.

ஜீவனானந்த தாஸின் வாழ்க்கை புரிந்து கொள்ள இயலாத ஒரு புதிராகத் தோன்றுகிறது என்பது பலரின் கருத்து.

இம் மொழியாக்க நூலில் உரைநடை சரளமான எளிமை யான நடையில் விளங்குகிறது. புதுக் கவிதைகளை மொழிபெயர்த் திருப்பதில் க.த. திருநாவுக்கரசு வெற்றி பெற்றுள்ளார் எனக் கூறலாம். குறிப்பிடத்தக்கவை:

முடிவில்லாப் பெரும்பயணம்
மனிதனுக்கு ஒருகால்
கொடுக்கப்பட்ட அழிவில்லாப்
பெரும் பயணம் (பக்.70)

இன்றிரவு இங்கே நீ இருந்தால்
மிக இனிமையாக இருந்திருக்கும்!
ஒளிரும் தாரகைகளின் கீழ் மரங்கள்
இடையே நாம் பேசி
மகிழ்ந்து இருக்கலாம்! (பக்.73)

## THE STUPID GURU AND HIS FOOLISH DISCIPLES

வீரமா முனிவரின் பரமார்த்த குரு கதையை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்திருக்கிறார் P. ராஜா. 1980, மார்ச்சு முதல் ஆகஸ்ட் வரை மதர் இந்தியா இதழில் வெளிவந்து பாராட்டைப் பெற்றது இம் மொழிபெயர்ப்பு.

Readability சிறப்பாக அமைந்துள்ளதால் இந்நூலைப் படிக்கப் படிக்க ஆவல் அதிகமாகிறது.

இதுபோன்றே, வேறு பல தமிழ் உரைநடைநூல்களையும் இந் நூலாசிரியர் மொழிபெயர்த்து, மொழித் தொண்டாற்றலாம்.

1980-ஆம் ஆண்டைக்காட்டிலும் 1981-இல் மொழிபெயர்ப்பு நூல்கள் தமிழில் அதிகமாக வெளியாகி உள்ளன. பரமார்த்த

குருவின் கதை ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இனிவரும் ஆண்டுகளில் மேன்மேலும் மொழிபெயர்ப்புநூல்கள் தமிழில் அதிகமாக வெளியாகும் எனநம்பலாம்.

## 1981-இல் வெளியான மொழிபெயர்ப்பு நூல்கள்

### 1. மத்தவிலாச அங்கதம்

ஆங்கில மூலம் : மைக்கேல் லாக்வுட் & விஷ்ணுபட்
தமிழாக்கம் : இ. ஜாண் ஆசிர்வாதம்
வெளியீடு : கிறிஸ்தவ இலக்கிய சங்கம், சென்னை-3
விலை : ரூ. 3.00

### 2. கோபுரத்தின் உச்சியிலே

மூல நாடகம் : ஹென்ரிக் இப்ஸென்
தமிழாக்கம் : கா. திரவியம்
வெளியீடு : பூம்புகார் பிரசுரம் பிரஸ், சென்னை-1
விலை : ரூ. 7-90

### 3. பாட்டியின் கனவுகள்

கன்னட மூலம் : டாக்டர் சிவராம காரந்த்
தமிழாக்கம் : டாக்டர் டி பி சித்தலிங்கய்யா
வெளியீடு : சோமு நூலகம், சென்னை-20
விலை : ரூ. 16/-

### 4. கம்யூனிசம்

தமிழாக்கம் : கே. கனகராஜன்
வெளியீடு : NCBH, சென்னை-98

### 5. விடுதலைப் பாதையில் இந்தியா

ஆங்கிலமூலம் : எஸ்.கே. மித்தால் & இர்பான் ஹபீப்
தமிழாக்கம் : பாரதிப்ரியா
வெளியீடு : கார்க்கி நூலகம், சென்னை-17
விலை : ரூ. 1/-

### 6. தற்கால டிராட்ஸ்கியிசம்: அதன் புரட்சிக்கு எதிரான இயல்பு

மூலம் : எம். பஸ்மானோவ்
தமிழாக்கம் : நவபாரதி
வெளியீடு : NCBH, சென்னை-98
விலை : ரூ. 10/-

7. சோஷலிசமும் மனித நேசமும்

மூலம் : எஸ். போபொவ்
தமிழாக்கம் : டாக்டர் சி. கனகசபாபதி
வெளியீடு : NCBH, சென்னை-98
விலை : ரூ 10/-

8. சி. ஆர். ரெட்டி

ஆங்கில மூலம் : டி. ஆஞ்சனேயுலு
தமிழாக்கம் : ந. சுப்புரெட்டியார்
வெளியீடு : சாகித்திய அக்காதெமி, புதுடில்லி
விலை : ரூ. 4/-

9. நானாலால்

ஆங்கில மூலம் : யு. எம். மணியார்
தமிழாக்கம் : தீபம் நா. பார்த்தசாரதி
வெளியீடு : சாகித்திய அக்காதெமி, புதுடில்லி
விலை : ரூ. 4/-

10. போதனர்

ஆங்கில மூலம் : D. வேங்கடாவதானி
தமிழாக்கம் : அ. அ. மணவாளன்
வெளியீடு : சாகித்திய அக்காதெமி, புதுடில்லி
விலை : ரூ. 4/-

11. தாராசங்கர் பந்தோபாத்யாயர்

ஆங்கில மூலம் : மஹாஸ்வேதா தேவி
தமிழாக்கம் : கு. ராஜவேலு
வெளியீடு : சாகித்திய அக்காதெமி
விலை : ரூ. 4/-

12. ஜீவனானந்த தாஸ்

ஆங்கில மூலம் : சிதானந்த தாஸ் குப்தா
தமிழாக்கம் : க.த. திருநாவுக்கரசு
வெளியீடு : சாகித்திய அக்காதெமி, புதுடில்லி
விலை : ரூ. 4/-

13. THE STUPID GURU AND HIS FOOLISH DISCIPLES

தமிழ் மூலம் : வீரமா முனிவர்
ஆங்கிலத்தில் : பி. ராஜா
வெளியீடு : அகரம், சிவகெங்கை
விலை : ரூ. 6/-

# 21. Science-writing

A. Natarajan

Science-writing in Tamil is more than a century-old activity. If the books published in 1981 are any guide to the publication of science books in Tamil, the prospect does not appear to be very bright.

## A RETROSPECT

Seience-writing in Tamil is more than a century-old activity. It can perhaps be traced to the christian missionaries who came to Tamil Nadu in the nineteenth century. They started educational institutions and hospitals to be of immediate service to the community around them. The need for presenting modern knowledge in the language of the people should have been clearly realised by them even then.

But the government of the day was mainly carried on through English, the language of the rulers. Naturally English occupied a prominent place in the curriculum both as a language of study and as a medium of instruction in schools and colleges. In fact, everybody who joined service under the Britishers had to know English with the result the native languages had to languish for want of official patronage.

Soon after the advent of the freedom-movement, the importance of the mother-tongue came to be realised, though only slowly in the beginning. But soon the idea gained

strength. It was later reinforced by the findings of the educational experts who emphasised that education through the mother-tongue alone could deliver goods to the majority, clearly and decisively.

Worth while attempts to write about the findings of modern science in Tamil were made in the beginning of the present century. True, there were sceptics who raised doubts about the ability and the adequacy of Tamil to express scientific ideas. But their informed doubts were answered by persons of eminence like P. T. Srinivasa Iyengar who was writing regularly about science in **Swadesamitran** and **Tamizhar Nēsan**, Thiru Vi. Ka., C. Subramania Bharathiar and others. P. T. Srinivasa Iyengar wrote as early as 1930: "...... I have found that the Tamil language, not with standing the great age of its literary dialect retains enough pliability to enable a writer to make new combinations of old words so as to express clearly the latest of modern concepts. It lends itself easily to the forging of metaphors and anetonymies which are so necessary for extending the meanings of words without which no language can become the vehicle of progressive thought. It possesses enough resilience to react like a living organism to the inpact of new ideas. I have found that the most obstruse modern ideas can be easily expressed in Tamil, and the latest concepts conveyed without losing any of their connotation, by Tamil words if properly chosen......"

"Some say that there are not sufficient books in Tamil. We have only to pity them...... If there are no technical books in Tamil, it will be only wise to write them... Regarding technical terms, an honest attempt will give us many scientific terms in Tamil......If for any reason we cannot find an appropriate term in Tamil, we can use the original words as they are......" said Thiru. Vi. Ka. in 1929.

**EARLY EFFORTS**

Efforts were made in the thirties of the present century by the Madras Presidency Tamil sangam to coin and prepare

a glossary of technical terms in Tamil (vide **Tamil University News Bulletin** Vol. 1, No. 3, Thanjavur).

Writers of eminence like P. N. Appuswami, R. K. Viswanathan, N. Anantavaidyanathan, Ekambaram Iyer, E. T. Rajeswari and others wrote science articles in popular magazines which were easily understood and appreciated by the general reader. The universities of Madras and Annamalai encorraged authors to write original books on science by instituting prizes. Some of the religious establishments like Tiruppanandal Mutt and Dharmapuram Athinam also extended assistance for the production of science books in Tamil. Thus, science writing in Tamil was fairly well-established in the second quater of the present century.

**A SPURT AND A DECLINE**

The two decades between 1950 and 1970 witnessed an enormous growth of science-literature in Tamil. Magazines like **Vignani** from Ceylon, **Kalaikkathir** from coimbatore and Anukkathir from Madras devoted solely to science in Tamil gave an impetus to many writers to write on science in Tamil. The first comprehensive Tamil Encyclopaedia (**Kalaikkalanjiyam**) in ten volumes was produced during this period. Numerous books on different branches of science, both original and in translation were written. Some of them won national awards also. But suddenly there was a noticeable decline in the number of science-books in Tamil during the next years, though Tamil had already become the medium of instruction even at the collegiate level. Probally the reason for this set-back may be traced to the slackening of the library movement and to the unwillingness on the part of the publishers to invest in the production of science-books in Tamil. In fact, we learn with a feeling of dejection that science-journals in Tamil became almost extinct.

**MEAGRE PRODUCTION**

A sample survey of science books published in Tamil during 1981 (List, not exhaustive as given in the Appendix)

discloses that compared to the earlier periods, production of science literature is meagre. Also it is found that more books have been published on Applied science than on pure science, not a very happy feature. While information on Applied science must be made available, production of standard books on pure science alone will be more conducive to the dissemination of scientific knowledge.

## NEED FOR CLARITY IN SCIENCE-WRITING

**Kann Chimittum Vinmeenkal** (13) is a lueid presentation which will help the reader to identify some of the stars. But the translation of technical words like black-hole, solar-flare, metron et cetera leaves much to be desired. The formation of technical terms in Tamil often bristles with many difficulties. **Ariviyal Poonka** (6) dealing with physical geography, age of the earth, stellar systems, space-probes, origin of of man, genetics et cetera is an instance in point. While Tamil equivalents convenying the meaning with elarity can be formed in most cases—a perusal of ancient Tamil works from this point of view is bound to disclose most appropriate Tamil words it will also be worthwhile to consider keeping some Engilsh terms as they are, particularly when the newly coined Tamil equivalents are not easily understood, and explain the terms in Tamil.

In **Rakkettukal moolam vinveliyil** [17] which diseusses the origin and functioning of rockets, the authors mental conflict regarding the formation of Tamil technical terms can be clearly seen. Though the book gives facts in plenty, the style also could have been simpler. For it must be borne in mind that in science-books the style should not become a handieap to the reeder in understanding scientific concepts which in themselves are often difficult for comprehension.

In books like **Radio assembling(18)Pampu settukal-mekanisamum reperum** (16) The English technical terms are used as they are. Easy comprehension is effectively achieved, as the technical terms have already become familiar to the readers,

## A FEW WELL-WRITTEN BOOKS

**Kuraivarra Chelvam** (46) and **Kaalnadai valam** (36) are excellent examples of how books dealing with applied science should be written. The former is a collection of articles on various human diseases and ailments like diabetes, blood-pressure, heart-attacks, arthritis, sterility, asthma, leprosy, allergy, cancer, eye-care, deafness, child-birth and child-care, sexually transmitted diseases et cetera by specialists in the respective fields of medicine. Well-written in a lucid styles it will serve as a correct and handy reference book for the layman. The facts are presented in such a way that comprehension is effected even in the first reading. The latter is a collection of special articles contributed by veterinary professionals touching differing aspects of animal husbandry which can be used as a comprehensive guide-book by cattle-growers and poultry owners.

**Pazhamozhikalil velanmai** (34) is another ably-written book containing a lot of useful information for the farmers. **Karumbirku ppayir pathukappu** (28) is another book worthy of mention.

**Kuvanool** (21) is an ancient treatise on the art of water-divining and soil-science, ably edited to aid comprehension.

## SPATE OF BOOKS ON HERBAL MEDICINE

A large number of books dealing with home-medicine, prepared out of easily available herbs has been published, though all of them cannot be said to make the grade. For example, **Thamizh marundu moolikaikal** (47) is not written well and it cannot be followed by learners on lay-public. But their popularity has enthused almost all the publishers and authors to produce them in large numbers. The government will do well to appoint a committee of experts to screen such books so that the innocent public do not come to grief by following them.

## SCIENCE IN TAMIL JOURNALS

It should be confessed though with regret that Tamil dailies and journals do not extend worth-while assistance to

science-writers in Tamil. Gone are the days when almost every Tamil journal and daily set apart a reasonable space for science-writing there by attracting a host of science-writers. But during recent years almost all of them have stopped such patronage. Perhaps the only exception is **Dinamani** which regularly features science in its pages. Both in its weekly supplement **Dinamani Chudar** and in its daily issue, science-articles of merit and utility regularly appear. It may be recalled that when the higher secondary school course (plus two) was introduced recently in Tamilnadu, **Dinamani** published almost daily, lessons in Mathematics and sciences in Tamil which benefitted the student-community. More journals and dailies in Tamil should come forward to set apart exclusive space for science-writing.

## LOOKING INTO THE FUTURE

If the books published in 1981 are any guide to the publication of science-books in Tamil, the prospect does not appear to be very bright. Of course, now that the medium of instruction has been made inTamil even at the collegiate level,a large number of text-books in Tamil on science have been published by both the government and private publishers. But that is not enough. The awareness of and exposure to scientific information that have helped the layman to become better informed about developments in science will, it is hoped, generate a healthy trend among the publishers to search for able authors who can present scientific information correctly and in an easily assimilable way, as dissemination of correct scientific knowledge is perhaps the only reliable measure of the progress of a developing community.

## APPENDIX

### List of Books on science Publised in 1981

| S.No. | Title | Author | Publisher |
|---|---|---|---|
| 1. | Ariviyal Athicayangal | R. Shanmugam | Arunodayam |
| 2. | Ariviyal Arpudhankal | R. Shanmugam | Arunodayan |

| | | | |
|---|---|---|---|
| 3. | Ariviyal Katturaikal | Dr. Natarajan | Paari |
| 4. | Ariviyal Kathaikal | Thumilan | Arunodayam |
| 5. | Ariviyal Chintanaikal | V. Damayendran | Manian |
| 6. | Ariviyal Poonka | V. Damayendran | Manian |
| 7. | Ariviyal Virundhu | N. Subbu Reddiar | ... |
| 8. | Annai Thamizhil Ariviyal Valarchi | V. Damayendran | Pukazh |
| 9. | Pakutharivi Kirakam | Labdev | NCBH |
| 10. | Vignana Ulakil | P. V. Giri | Arunodayam |
| 11. | Vignana Vetikkaikal | Azhi. Ve. Ramasami | Selvi |
| 12. | Anuvai-p-Parrai | Bombay Thamizh Changam | Arunodayam |
| 13. | Kann Chimittum Vinn meenkal | V. Damayendran | Pukazh |
| 14. | Kar Otta-K-Karrukkollun-gal | Lena Thamizlvanan | Manimekalai |
| 15. | Chiru Thozhil Muraikal | S. A. Susairaja | Star |
| 16. | Pampu chettu-kal Mekanicamun Reperum | S. A. Susairaja | NCBH |
| 17. | Rakkettukal moolam Vinnveliyil | Kamala Padmagirivaran | Narmada |

| | | | |
|---|---|---|---|
| 18. | Radio Assembling | G. Manavalayya | Paari |
| 19. | Radio, Television Ariviyal | Va. Arunachalam | Ohms |
| 20. | Alaikatalin Arputhankal | P. V. Giri | Arunodayam |
| 21. | Koova nool | ... | I I T S |
| 22. | Poomiyin Chelvankal | Thumilan | Vasantha |
| 23. | Maakatal Marmankal | Alexander Kondradev | NCBH |
| 24. | Athisaya Uyirinam Paar | Kalvi S. Gopalakrishnan | CLS |
| 25. | Kanavu-k-kuzhandaikal | Kalvi S. GopalaKrishnan | NCBH |
| 26. | Paravaikal Palavitham | C. R. Dhanyakumar | Arunodayam |
| 27. | Aimpattainthu Payirkalin Puthiya Chakupati muraikal | R. Perumalsami | Poonkoti |
| 28. | Karumpirkuppayirpathu kappu | AR. Solaiyappan | Poonkoti |
| 29. | Thamizhilakkiyattil Velanmai Ariviyal | N. V. Jayaraman | NCBH |
| 30. | Thavaraiyal Rakasiyenkal | C. R. Dhanyakumar | Arunodayam |
| 31. | Thennaivalarppu | AR. Solaiyappan | Star |
| 32. | Thennai, Vazhai Murunkai, pappali, Maa, Vempu, Panai, Elumicchai | S. A. Susairaja | Star |

| | | | |
|---|---|---|---|
| 33. | Panam Tharum Kaikarit-thottam | AR. Solaiyappan | Arunodayam |
| 34. | Pazhamozhikalil Velanmai Ariviyal | N. V. Jayaraman | NCBH |
| 35. | Vinthai miku-Velanmai | AR. Solaiyappan | Arunodayan |
| 36. | Kalnatai Valam | L. S. Kandaswami | S. S. B. P. S. |
| 37. | Kalnatai Vaithi-yathil Puthiya muraikal | R. Perumalsami | Poonkoti |
| 38. | Kozhi Parama-rippu | S. A. Gopala Krishnan | NCBH |
| 39. | Atipatai k-kalvi Thathuvavi-yalum Chamookavi-yalum | S. M. Sundararajan M. Govindarajan | Mohan |
| 40. | Manathathu-vamum Thanthrikamum | T. Ganesan | Thamizh Puthakalayam |
| 41. | Iruthayam Oru Puthir | Dr. S. Raja | Annanadu |
| 42. | Utalum Unavum | A. Kanthasami | Sta r |
| 43. | Kann Pathu-kappu | N. S. Sundaram | Arunodayam |
| 44. | Kuzhanthai Valarpum Kuzhanthai Maruttuvamum | R. Shanmukam | Arunodayam |
| 45. | Kuzhanthai Vaithiyam | Dr. R. Kanniappar | Vanathi |
| 46. | Kuraivarra Chelvam | ... | Ranga |
| 47. | Thamizh marunthu moolikaikal | V. Lakshmanan | Vanathi |

| | | | |
|---|---|---|---|
| 48. | Thorrunoiy-kalum Thatuppu-muraikalum | Kalvi S. Gopalakrishnan | NCBH |
| 49. | Noyarra Vazhvukku | Dr. V. Nambi | Thamizh-Puthakalayam |
| 50. | Mananoyum Inraiya maruthuvamum | Dr.O.Somasundaram Dr. Jayaramakrishnan | NCBH |
| 51. | Vaithiya-k-kalanchiyam | Dr. SP. Sadasivam | Tamil Puthakalayam, |

1. AnnaNadu pathippakam, 4, Station Road, Madras-33.

1A. Arunodayam, 3, gowdiya Mutt Road, Madras-14.

2. CLS, Christian Literature Society, P. B. 501, Park Town, Madras-3.

2A. International Institute of Tamil Studies, Madras-113.

3. Manian pathippakam, 39, Ratna Mudali street, Kurinji-padi, South Arcot-Dt.

3A. Manimekalai Prachuram, T. Nagar, Madras-17.

4. Mohan, Mohan Pathippakam, 4, Pycrofts Road, Madras-5

5. Narmada pathippakam, T. Nagar, Madras-17.

6. NCBH, New Century Book House, 41-B, Sidco Estate, Ambattur, Madras-98.

7. Ohms, Ohms Pathippakam, 11, Triplicane High Road, Madras-2.

8. Paari Nilayam, 184, Broadway, Madras-1

9. Poonkoti Pathippagam, Chitrakulam West Street, Madras-4.

10. Pukazh Publications, P. V. Koil street, Mylapore, Madras-4

11. Ranga Nursing House, Mowbrays Road, Madras-18

12. S. S. B. P. S., Saiva Siddhanta Book Publishing Society, 79, Broadway, Madras-1

13. Selvi Pathippakam, Karaikkudi, Ramnad Dt.

14. Star Publications, 72, Big Street, Madras-5.

15. Thamizh Puthakalayam, 58. T. P. Koil Street, Madras-5

16. Vanathi Pathippakam, 13, Deenadayalu Street, T. Nagar Madras-17.

17. Vasantha Prachuram, 55, Ganapati Street, West Mambalam, Madras-33

[I acknowledge with grateful thanks the kind assistance extended by **The Hindu, The Indian Express** group of newspapers, various publishers and Sri M.Krishnaswami Lucas-TVS, Madras. —A. Natarajan.]

# 22. பதிப்பகங்களும் தமிழும்

ச. சிவகாமி

நூலாசிரிய ருக்கும் வாசகர்களுக்கும் இடையே பாலமாக அமைவன பதிப்பகங்கள். பதிப்பகங்கள், நிறுவனங்கள், தனிநபர் எனும் மூன்று நிலை களைப் பதிப்புத் தொழிலில் காணலாம். 1981-இல் 267 பதிப் பகங்கள் 888 தமிழ் நூல்களை வெளியிட்டுள்ளன.

நூலாசிரியருக்கும் வாசகர்களுக்கும் இடையே பாலமாக அமைவன பதிப்பகங்கள். நூல் வெளியீட்டில் இவற்றின் பணி மிக இன்றியமையாததாகும். எழுத்தாளர்களின் எழுத்துகளை வாசகர்களுக்கு அறிமுகப்படுத்தும் பணியினைக் கொண்ட இப் பதிப்பகங்கள் தம் எண்ணங்கள், கொள்கைகளுக்கேற்பத் தமிழ் வளர்ச்சியில் பங்கேற்கின்றன. எண்பத்தோராம் ஆண்டில் நிகழ்ந்த அவற்றின் பணி குறித்து இக்கட்டுரையில் காண்போம்

## பதிப்பகம்

பதிப்பு + அகம் = பதிப்பகம் என்பதாகும். பதி என்பதனை அடியாகக் கொண்ட செயல் பதிப்பு. பதி என்பதற்குத் தங்குதல், ஆழ்தல், முத்திரை முதலியன, அழுந்துதல், ஸ்திரமாதல், எழுதுதல் போன்ற பல பொருள்களுண்டு.[1] எழுத்துருவங்களை அழுத்துதல் மூலம் உருவாக்கல், பனையோலைகளில் அமையும் எழுத்துகளைவிடத் தெளிவாகத் தங்குதல், நீண்ட காலத்திற்கு நிலைபெற்றிருத்தல் எனும் நிலையில் பதி எனும் வினை பதிப்பு எனும் பெயராயிற்று எனலாம். பதிப்புகளை உள்ளடக்கியது பதிப்பகமாகிறது.

---

1. Tamil lexican. vol, IV, Madras University, 1963.

பதிப்பு என்பதற்கு, ஓலைச்சுவடிகளிலிருந்து பிரதி செய்து தேவையான விளக்கங்களை நல்கி அச்சேற்றுவதற்கான பணியினைச் செய்தலும், பலவற்றைத் தொகுத்து, வகைப்படுத்திச் செப்பம் செய்து தருதலும் ஆகியனவும் கருத்தில் கொள்ளப்படுமாயினும் பதிப்பகங்களின் பணி இவற்றினின்று மாறுபட்டது. எனவே இத்தகு நூல்கள் இங்கு விலக்கப்படுகின்றன.

பதிப்பகங்கள் மிகுதியும் தம் பெயரில் பதிப்பகம் என்ற சொல்லையும் உட்கொண்டிருத்தல் காணப்படுகிறது. பப்ளிகேஷன்ஸ் (அபிராமி பப்ளிகேஷன்ஸ்); புக் கம்பெனி (அம்மன் புக் கம்பெனி); நூலகம் (அருள் சிவம் நூலகம்); வாசகர் வட்டம் (என்ரேகஸ் வாசகர் வட்டம்); வெளியீட்டகம் (கண்ணதாசன் வெளியீட்டகம்); பிரசுரம் (காமாக்ஷி பிரசுரம்); புக்ஸ் (சங்கம் புக்ஸ்): அச்சகம் (தென் மொழி அச்சகம்) என்பன போன்று பதிப்பகத்தோடு தொடர்புடைய சொற்களும் அமையக் காண்கிறோம்.

பதிப்பகத்தாரை நூல் பதிப்பிப்பாளர் எனல் பொருந்தும்[2] இவர் தரமான ஆசிரியரைத் தேர்ந்தெடுத்து நூல் எழுதச் செய்பவர். சிறந்த அச்சுக் கூடத்தில் தந்து தக்க மேற்பார்வையில் நன்கு அச்சிடுபவர், அந்த நூல் பல்வேறு இடங்களிலும் தகுதியுள்ள விற்பனையாளர்களிடம் கிடைக்குமாறு செய்பவர் என்பன இவர் தம் பணியாகக் குறிக்கப்படுகின்றன.[2] ''மக்களிடம் எவ்வகை நூல்கள் பெரிதும் விற்பனையாகின்றன என்றும், அடுத்து எவ்வகை நூல்களுக்கு விற்பனை வாய்ப்புகள் உண்டு என்றும், அவ்வகை நூல்களை எம்முறையில் அச்சிட்டு வழங்கினால் மக்கள் விரும்பி வாங்குவர் என்றும் எண்ணியும், கணக்கிட்டும் பதிப்பகத்தினர் ஆராய்கின்றனர். அதனால் மக்களின் தேவையையும், சுவையையும், வாங்கும் சக்தியையும் கணக்கிட்டுத் தம் அடுத்த நூல்களை வெளியிட ஆயத்தம் செய்ய வேண்டியுள்ளது''[3] என்று பதிப்பகத்தார் பொறுப்பினை விளக்குவர்.

இப்பதிப்புத் தொழிலில் மூன்று நிலைகளைக் காணலாம்.

1. பதிப்பகங்கள்
2 நிறுவனங்கள்
3. தனி நபர்

---

2. அ. விநாயகமூர்த்தி; பதிப்புக்கலை; பாலமுருகன் பதிப்பகம்; மதுரை; மு.ப. ஜூன். 1979. பக்,5.
3. மேற்படி.6.

பதிப்பகங்கள் என்பன மேற்கண்டவாறு நூலை உருவாக்கி அவற்றை வெளியிட்டு விற்பனை செய்தலை மட்டுமே தம் தொழிலாகக் கொண்டமைவன. நிறுவனங்கள் என்பவை தம் பல்வேறு அலுவல்களுடன் பதிப்புப் பணியினையும் ஒன்றாக அணைத்துச் செயல்படுத்துவன. ஒரு ஆசிரியரோ அல்லது அவருக்கு வேண்டியவரோ குறிப்பிட்ட நூலை மட்டும் வெளியிடுதல் என்பது 'தனிநபரை'க் குறிக்கின்றது. இவர்களும் இதனைத் தம் முழுநேரத் தொழிலாகச் செய்வதில்லை. தேவையேற்படும்போது மட்டுமே செயலாற்றுகின்றனர். எனவே பின்னிரு நிலைகளும் இங்கு ஆய்விற்கு அப்பாற்பட்டன என்பது போதரும்.

## எண்பத்தொன்றில் பதிப்பகங்கள்

எண்பத்தொன்றாம் ஆண்டில் தமிழ் நூல்களைப் பதிப்பித்த பதிப்பகங்களின் தொகை 267 ஆகும். இவற்றுள் 17 பதிப்பகங்கள் மறுபதிப்புகளை மட்டுமே வெளியிட்டுள்ளன. இவற்றால் மொத்தம் 888 நூல்கள் வெளிவந்துள்ளன. மறுபதிப்புகள் 140 ஆகும். எனவே 250 பதிப்பகங்கள் நமக்குத் தந்துள்ள முதற் பதிப்பு நூல்கள் 748 ஆகும். இவற்றுள் மிகப் பெரும்பான்மையான பதிப்பகங்கள் (164) சென்னையிலே அமைந்துள்ளன. அடுத்து மதுரை (22), கோவை (7), சேலம், (4) ஆகியன அமைகின்றன. சிவகங்கை, காரைக்குடி நாகப்பட்டினம், திருச்சி ஆகிய இடங்களில் மூன்றும், அண்ணாமலை நகர், தஞ்சை, தூத்துக்குடி, மாயூரம், புனா, தேவகோட்டை, சிதம்பரம், காஞ்சி முதலிய இடங்களில் இரண்டு, மற்றும் 41 இடங்களில் ஒவ்வொரு பதிப்பகமும் உள்ளன.' இவற்றுள் புதுடில்லி, புனா, புதுச்சேரி,

4. நார்த்தாம் பூண்டி, நாமக்கல், வேலூர், நாகர்கோவில், திருப்பனந்தாள், அதிராமபட்டினம், திருவாரூர், கோவில் பட்டி, புதுடில்லி, அருப்புக்கோட்டை, பாப்பநாயக்கன் புதூர், பெங்களூர், விருதுநகர், புதுக்கோட்டை, பொள்ளாச்சி, மலேசியா, திருத்துறைப்பூண்டி, தாரமங்கலம், திருத்தணிகை, கீழையூர், கோபிச்செட்டிபாளையம், புதுச்சேரி, காயல்பட்டினம், நாச்சியார்கோவில், காரைக்கால், இளையான்குடி, கோனாபட்டு, திருநெல்வேலி, பாலக்காடு, முசிறி, தென்காசி, திருவனந்தபுரம், குறிஞ்சிப்பாடி, கோட்டையூர், சிவகாசி, வளவனூர். லண்டன், வேடந்தாங்கல், பாகூர், திங்கள்சந்தை, திருவிடைமருதூர் முதலியன,

பெங்களூர், திருவனந்தபுரம், பாலக்காடு பாகூர், என்பன தமிழகத்தைத் தாண்டித் தமிழ்ப்பதிப்பினை மேற்கொண்டுள்ள பிற விடங்களாகும். ஸ்ரீலங்கா, சிங்கப்பூர், லண்டன், மலேசியா எனும் வெளிநாடுகளிலும் பதிப்புகள் நடைபெறுகின்றன.

சென்ற ஆண்டைப் போன்றே இவ்வாண்டிலும் அதிகமான நூல்களை வெளியிட்ட பெருமையை வானதிப் பதிப்பகம் பெறுகின்றது. முதற்பதிப்பாக 59 நூல்களையும், மறுபதிப்பாக 14 நூல்களையும் இது வெளியிட்டுள்ளது. சென்ற ஆண்டிலும் இது பதிப்பித்த நூல்கள் 73 என்பது குறிப்பிடத்தக்கது.[5] ஒரே ஆண்டிலேயே முதற்பதிப்பினையும், மறுபதிப்பினையும் வெளியிட்ட பெருமையையும் கண்ணதாசனின் 'நாள் மலர்கள்' எனும் நூலின் மூலம் இவ்வானதி பதிப்பகம் பெறுகிறது. இதற்கு அடுத்த நிலையில் மணிமேகலைப் பிரசுரம் (34); அருணோதயம் (27); நர்மதா பதிப்பகம் (24); பாரிநிலையம் (16) ஆகியவை அமைகின்றன.

மிகக் குறைந்த நிலையில் அதாவது ஒரே ஒரு நூலை மட்டும் பதிப்பித்த பதிப்பகங்களின் எண்ணிக்கை 149 ஆக, மொத்தப் பதிப்பகங்களின் தொகையில் செம்பாதிக்கு மேல் அமையக் காணலாம். 2 முதல் ஐந்து நூல்களை முறையே 33, 15, 12, 10 பதிப்பகங்களும் 6—15 நூல்களை 25 பதிப்பகங்களும் வெளியிட்டுள்ளன. இவ்எண்ணிக்கைகளும் இனிவரும் எண்ணிக்கைக் குறிப்புகளும் முதற் பதிப்பினை மட்டும் சுட்டுகின்றன.

தமிழ் நூல்களைப் பதிப்பிக்கும் பதிப்பகங்களின் தொகை இவை மட்டுமே என்று கூறற்கியலாது. சென்ற ஆண்டுகளில் செயல்பட்டு இவ்வாண்டில் புதிய நூல் வெளியீட்டினின்று விடுபட்டும், புதிதாகத் தோன்றியும் பல இருக்கலாம். இக்கட்டுரை ஆக்கத்திற்குக் கன்னிமரா நூலகம் வெளியிடும் தமிழ் நாட்டு நூற்றொகை மட்டுமே துணையாகக் கொள்ளப்பட்டுள்ளமையால் அதனின் விடுபட்டவை பற்றிய விளக்கங்களை அறிதல் அரிதாகிறது.

## பதிப்பகங்களும் நூல்களும்

தமக்கு விருப்பப்பட்டஆசிரியரின் நூல்களை மட்டுமே பதிப்பித்தல் என்பதனை மிகச் சிலவே கொண்டுள்ள போதிலும் பெரும்

5. சு.சம்பந்தன்; பதிப்பகங்களும் தமிழும்; எண்பதில் தமிழ்; எஸ் வி சுப்பிரமணியன், எல். விஜயலட்சுமி (பதி) 1981

பாலானவை நூலாசிரியருக்கு வாசகர் உலகில் உள்ள மதிப்பினைக் கொண்டே அவர்களின் நூல்களை வெளியிடுவதில் முன்னிற்கின்றன. (இலக்கியப் பதிப்பகம் இதுவரை வெளியிட்டுள்ள ஆறு நூல்களும் ந. வீ. செயராமனால் படைக்கப்பட்டதாம். மணிமேகலைப் பிரசுரம் ஓர் ஆசிரியர் குழுவினை நிறுவி அதன் வழி நூல்களை வெளியிடுதல் குறிப்பிடற்பாலது. நர்மதா பதிப்பகம் 24 நூல்களை 20 ஆசிரியர்களால் வெளியிட்டிருப்பதும் சுட்டத் தக்கது.

புதிதாக நூல்களை எழுதவைப்பதுடன் ஆசிரியர்களின் சொற்பொழிவுகள், கட்டுரைகள் என முன்பே இதழ்களில் வெளிவந்தவற்றைத் தொகுத்து நூலாக்கம் செய்தலும் குறிப்பிடத் தக்க அளவு காணப்படுகிறது இதழ்களில் வரும் தொடர்கதைகளும், சிறு கதைகளும் இதற்கு விலக்கல்ல. சத்ய கங்கையில் வெளிவந்த நெ. து. சுந்தரவடிவேலுவின் கட்டுரைகள், வானதி பதிப்பகத்தாரால் நூலுருக்கொண்டமைஎடுத்துக்காட்டாம். குழந்தைப் புத்தக நிலையத்தாரின்' 'வளர்ந்துவரும் குழந்தை இலக்கியம்', அழ. வள்ளியப்பா சென்னைப் பல்கலைக் கழகத்தில் நிகழ்த்திய கல்கி நினைவு அறக்கட்டளைச் சொற்பொழிவாகும்.

1978 ஆகஸ்ட் தமிழ் நாட்டில் திருப்பூரில் நடைபெற்ற கலை இலக்கியப் பெருமன்ற மகாநாட்டில் அந்தனி ஜீவாவினால் படிக்கப்பட்ட 'ஈழத்தில் தமிழ் நாடகம்' எனும் கட்டுரை முதலில் இலங்கைத் தினகரன் இதழில் வெளிவந்தது. இலங்கைத் தமிழரின் தமிழின் கருத்துகளைத் தமிழகமும் அறிய வேண்டும் நோக்குடன் 'அகரம்' பதிப்பித்துள்ளமையும் நவிலத்தக்கது.

பதிப்பகங்களே இலக்கிய வளர்ச்சிக்குத் துணை நிற்கும் வகையில் மாநாடுகளை நடத்திப் பின் அதில் படிக்கப்பட்ட கட்டுரைகளை, நிகழ்த்திய சொற்பொழிவுகளை நூலாக்கித்தரல் பாராட்டற்குரியது. இதில் கழகம் முன்னணியில் நிற்கிறது. இவ் வரிசையில் இவ்வாண்டு திருவிளையாடல் சொற்பொழிவுகள் வெளிவந்துள்ளன.

பல ஆண்டுகட்கு முன் பிறிதொரு பதிப்பகத்தால்—நிறுவனத்தால் வெளிவந்து, இன்று கிடைத்தற்கரியதாய் நிற்கும் நூல்களைத் தேவை கருதி மீண்டும் தம் முதற்பதிப்பாகக் கொணர்தலும் உண்டு. வரகூர் நம்பெருமாள் மன்ற வெளியீடாக முதலில் ஏஸ்.கே. இராமராஜன் எழுதி வெளியிட்ட 'மேகநாதம்' வானதி

பதிப்பகத்தால் வெளியிடப்பட்டுள்ளமை சான்றாகும். மற்றும் இலங்கை சாகித்ய அகாடமியின் பரிசு பெற்று அங்குப் பதிப்பிக்கப் பட்ட க. கைலாசநாத குருக்களின் 'வடமொழி இலக்கிய வரலாறு' நூலை நர்மதா பதிப்பகம் மீண்டும் வெளிக்கொணர்ந்துள்ளது.

மறைந்த ஆசிரியரைப் பெருமைப்படுத்தும் பொருட்டு அல்லது அவரது படைப்புகளை உலகிற்கு அறிமுகப்படுத்தும் பொருட்டு நூல்களை வெளியிடுவதனை, வாணிதாசன் பதிப்பகத் தார் வெளியிட்டுள்ள வாணிதாசன் கவிதைகள்—தொகுதி 2; மா.ரா. இளங்கோவன் எழுதி சேகர் பதிப்பகத்தார் வெளியிட் டுள்ள 'இதழியல் நோக்கு' போன்றன உணர்த்துகின்றன.

ஒரே பொருளின் அடிப்படையில் தொடர்ச்சியாகப் பல நூல் களைப் பதிப்பகங்கள் உருவாக்குதலும் உண்டு. சான்றாக வானதிப் பதிப்பகத்தார். பி.சி. கணேசன் படைப்பில் 'உலகப் பெரியார் வரிசை' எனும் தொடரினைத் தந்துள்ளனர். உலகப் பெரும் விஞ் ஞானிகள், உலகப்பெரும் போர் வீரர்கள், உலகப் பெரும் பெண்ணரசிகள், உலகப்பெரும் தீர்க்கதரிசிகள் எனும் நான்கு இதுவரை வந்துள்ளன இவ்வாண்டு 'உலகப்பெரும் எழுத்தாளர் கள்' எனும் நூல் தோன்றியுள்ளது, தமிழ்ச்சோலைப் பதிப்பகம் 'வாழ்வும் இலக்கியமும்' எனும் நூல்தொடரைக் கொண்டுள்ளது. இலக்கியப் படைப்பில் பதிப்பகத்தார் கொண்டுள்ள முயற்சியை, விருப்பினை இத்தகையன தெளி வாக்குகின்றன.

ஏதேனும் விழாவினை முன்னிட்டு நூல்களைப் படைத்தலும் சிறப்பிடம் பெறுகிறது மகாகவி நூற்றாண்டு தொடக்கவிழாப் பதிப்பாக ஸ்ரீபுவனேஸ்வரி பதிப்பகம், திருலோகசீதாராம் எழுதிய புதுயுகக் கவிஞர் எனும் நூலைப் பதிப்பித்துள்ளது. வானதிப் பதிப் பகம் ஆ. கு. ஆதித்தரின் கம்பரும் நாடகக் கலையும் எனும் நூலைப் புதுவைக்கம்பன் விழாவில் வெளியிட்டுள்ளது. பாவேந்தர் நினைவுகள் வரிசையில் மூன்றாவதாக 'குயில் கூவிக் கொண்டி ருக்கும்' எனும் நூலை முருகு சுந்தரம் எழுத அகரம் வெளியிட் டுள்ளது. வசந்தா பதிப்பகம் ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டை முன்னிட்டு கே.எஸ் இராஜேந்திரனின் சங்கம் அமர்ந்த சிவனார் நூலைப் பதிப்பித்துள்ளது. நூலாசிரியருக்குப் பெருமையளிக்கும் வகையில், வானதி பதிப்பகம் எஸ். என். ஸ்ரீராம தேசிகரின் மணி விழா மலராக அவரின் இருமொழி இலக்கிய இன்பம் நூலைத்

தந்துள்ளது. பாரதியின் நூற்றாண்டு விழாவினை முன்னிட்டுப் பல பதிப்பகங்கள் பாரதி பற்றிய நூல்கள் பலவற்றைப் பதிப்பித்துள்ளன.

பதிப்பகங்கள் சில வெளியீட்டு உரிமையை மட்டும் மேற்கொண்டு விற்பனை உரிமையை மற்றொன்றிற்குத் தருதலும் உண்டு. டி. கே. சியின். இதயஒலி, பொதிகை மலையின் பதிப்பாக அமைந்தபோதிலும் விற்பனை உரிமையை வானதி பெற்றுள்ளது. இத்தகு நிலையைச் சிறிய பதிப்பகங்களே மேற்கொள்கின்றன. பிறநிறுவனத்தின் நிதி உதவியுடன் நூல் வருதற்குக் காட்டாக, நர்மதா பதிப்பகம். திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் சமய நூல்களை வெளியிடுவதற்கான உதவி நிதியால் மாருதி தாசனின் இந்துசமயக் கருத்துகள் நூலைப் பதிப்பித்துள்ளமையைக் குறிப்பிடலாம்.

நூல்களின் இயல்பினை நோக்குங்கால் ஏறக்குறைய செம்பாதி நூல்கள் (372) இலக்கியப்படைப்புகளாக அமைகின்றன. அவற்றுள்ளும் கவிதை, நாடகங்களை விட புதினம், சிறுகதைகளே மிகுதியாக உள; வாழ்க்கை வரலாறு, பயணஇலக்கியம் போன்றன குறைவே. இலக்கிய, இலக்கணத் திறனாய்வு நூல்களும் குறிப்பிடத்தக்க அளவில் (115 நூல்கள்) வெளிவந்துள்ளமை சுட்டத்தக்கது. தொல்காப்பியம் முதல் இக்காலப் புதுக் கவிதைகள் வரையிலான ஆராய்ச்சி நூல்கள் உள்ளன. அறிவியல் மருத்துவம் போன்ற துறைகளில் முறையே 18,26, நூல்கள் மட்டுமே பதிப்பிக்கப்பட்டுள்ளன என்பது வருந்துதற்குரியது. தமிழ் மொழியின் உண்மையான வளர்ச்சி இத்துறை நூல்கள் பெருமளவில் வருவதிலும் அமைகிறது. கலை, அரசியல், சமுதாயம் போன்ற பிற துறைகளில் 27 நூல்கள் வெளிவந்துள்ளன.

அருணோதயம், அறிவுநிலையம், இலக்குமிநிலையம், நர்மதா பதிப்பகம், மணிமேகலை பிரசுரம், வானதிப் பதிப்பகம் போன்ற சில பதிப்பகங்களே எல்லாத் துறைகளிலும் நூல் வெளியிடுவதை மேற்கொண்டுள்ளன. நல்ல தரமான நூல்களை மக்களுக்கு அறிமுகப்படுத்த வேண்டும் என்ற நோக்கமிருப்பினும் வணிக நோக்கும் கலந்தமைவதால் விரைந்து விற்பனையாகும் நூல்களே, சிறப்பிடம் பெறுகின்றன. சிறுவர்களுக்கான நூல்களை வெளியிடுவதில் அமுத நிலையம் லிமிடெட், வானதி போன்றன காட்டும் ஆர்வமும் இன்னும் வளர வேண்டியதாகும். அறிவு

நிலையம் தான் வெளியிடும் நூல்களை, சிறுவர், மாணவர்களைக் கருத்துட்கொண்டு அதற்கேற்ற வாறு அமைத்தல் பாராட்டற் குரியது. சிறுவர் நூற்பதிப்புக் கழகம் ஒன்றும் செயல்பட்டுவருவது குறித்தற்பாலது. மணிமேகலைப் பிரசுரம் பொதுஅறிவு தரும் நூல்களையும் தனிமனிதனின் முன்னேற்றத்திற்கு உதவும் நூல் களையும் படைப்பதில் முன்னிற்கிறது.

பெரும்பான்மையான பதிப்பகங்கள் இலக்கியத்திற்கும், இலக் கியத்திறனாய்விற்குமே சிறப்பிடம் நல்க, அன்பு இல்லம், ஓம்ஸ் பதிப்பகம், சாந்தி நிலையம், திருச்செந்தூரான் பதிப்பகம், ப்ரியா பதிப்பகம், போன்றன அறிவியல், மருத்துவ நூல்களை மட்டுமே வெளியிட்டுள்ளமையும் இயம்பற்பாலது.

## பதிப்பகங்களும் நூலாசிரியரும்

பதிப்பகங்களுக்கும் நூலாசிரியருக்கும் இடையே உள்ள தொடர்பு இவண் எண்ணப்படுகிறது. படைப்பிலக்கியங்களிலும் சரி, ஆய்வு முதலிய பிற துறைகளிலும் சரி அவ்வவ் வாசகர்களால் விரும்பி வரவேற்கப்படும் ஆசிரியர்களுக்குப் பதிப்பகங்கள் நல்கும் ஆதரவு புதிய எழுத்தாளர்களுக்குக் கிடைப்பதில்லை. வசதி படைத்தவர்கள் தங்கள் நூல்களைத் தாங்களே வெளியிட்டுக் கொள்கின்றனர். என்னுடைய பிற நூல்களை வெளியிடும் பொறுப்பை ஏற்றுக் கொண்ட வானதி திருநாவுக்கரசு[6] "எனும் கூற்றும்" 19-7-1980 அன்று மாஸ்கோ ஒலிம்பிக் தொடங்கியது. இச்சிறு நாவலை 15-6-1980 அன்று எழுதி முடித்திருந்தேன். ஒலிம்பிக் துவங்குவதற்கு முன் புத்தகம் வெளிவர வேண்டும். என்று துடியாகத் துடித்தேன. எனது 'ஒரு ரயில் புறப்படுகிறது' நாவல் வெளிவந்த பிறகு இரண்டு பதிப்பகத்தார் என்னிடம் கதை கேட்டிருந்தார்கள். அவர்களிடம் அணுகி ஸ்கிரிப்டைக் காண்பித்த போது பக்கங்கள் மிகவும் குறைவு என்றும், இன்னும் 40 பக்கங்கள் சேர்த்து எழுதித்தாருங்கள், உடனே பிரசுரிக்கின் றோம் என்றார்கள். ஒரு கதையை முடித்தபிறகு எப்படி நீட்ட முடியும்? "எனும் கூற்றும்" [7] எழுத்தாளர் நிலையைச் சுட்டுவன வாக அமைகின்றன.

---

6. மு.மு. இஸ்மாயீல்; இலக்கிய மலர்கள் தொகுதி 2. வானதிபதிப்பகம்; முகவுரை.
7. ஞா. ஜெயசீலன்; சுதாகர் ஒலிம்பிக் பார்க்கிறான்; வசந்தா பிரசுரம்; என்னுரை.

எழுத்தாளர்கள், பதிப்பகத்தார் விருப்பிற்குத்தக எண்ணங்,களை மாற்றிக் கொள்வதும் உண்டு என்பதனை எஸ் வி.ரமணி தன் 'பால நட்சத்திரம் பாலாஜி' நூலின் முன்னுரையில் 'பழைய புனைபெயரிலேயே இதை வெளியிடத் தான் விரும்பினேன்: நாவல் தலைப்பிலும் பெயரிலும் மாற்றத்தை விரும்பிய பதிப்பகத்தாரின் (வசந்தா பிரசுரம்) ஆவலை மகிழ்ச்சியுடன் பூர்த்தி செய்துள்ளேன்' என்பதனால் தெளியலாம்.

ஆயின் முழுமையும் வணிக நோக்குடன் பதிப்பகங்கள் செயல்படுவதில்லை. இலக்கிய ஆர்வமும் மிகுதியாக உண்டு என்பதனையும் நூலாசிரியர் தம் கூற்றால் உணர முடிகிறது. ''என்னுடைய நூல்களைப் பதிப்பிப்பதுடன், புதிய நூல்களை, புதுமையான நூல்களை நான் எழுத வேண்டும் என்று எப்பொழுதும் தூண்டி இலக்கியப் பணியில் என்னைத் தொடர்ந்து ஈடுபடுத்திவருபவர்'' என்னும் பூவண்ணன் கூற்றும்[8]; ''மதுரையில் நடைபெறும் ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டின் போது, கல்வி மொழி பற்றிய டாக்டர் ம. பொ. சி. அவர்களின் கருத்துகளைக் கொண்ட நூலொன்றை வெளியிட வேண்டும் என்றும் தமதார்வத்தை நண்பர் வெள்ளையாம்பட்டு சுந்தரம் என்னிடம் தெரிவித்தார். இருவரும் ஐயா அவர்களிடம் சென்று தெரிவித்தோம்......''[9] எனும் மா.ரா. இளங்கோவனின் கூற்றும் இதனை உணர்த்துகின்றன. பதிப்பகத்தார் தாமே விரும்பி நூலாசிரியரை அணுகுதலையும் இவை சுட்டுகின்றன.

நூலாசிரியர்களே பதிப்பகம் அமைத்து நடத்துதற்கு அன்பு பப்ளிகேஷன்ஸ் சான்றாகும்.

## பதிப்பகங்களின் தனிச் சிறப்புகள்

ஒவ்வொரு பதிப்பகமும் தனக்கென்று கொள்கையும் நோக்கமும் கொண்டு செயல்பட்டு வருகின்றது. அவற்றைத் தாம் வெளியிடும் நூல்களில் வெளிப்படுத்துவதுடன் பதிப்பு நிலையிலும் சில வழக்கங்களைக் கொண்டுள்ளன. அவற்றை அவற்றின் தனிச்சிறப்புகளாகக் கொள்ளலாம். இவற்றை அறிவதற்குச் சிறந்த வாயி

8. பூவண்ணன்; ஐஸ்கிரீம் ஆசை; வானதிப் பதிப்பகம்; முன்னுரை.
9. மா.ரா. இளங்கோவன் (தொகு): கல்விமொழி தமிழா; ஆங்கிலமா? (தமிழ் உலகுக்கு ம.பொ.சி. தரும் விளக்கம்) சேகர் பதிப்பகம்; முன்னுரை.

லாகப் பதிப்புரைகள் அமைகின்றன. பெரும்பாலான பதிப்பகங்கள் இவ்வுரைக்குச் சிறப்பளிப்பதில்லை. இதனை எல்லா பதிப்பகங்களும் தம் பதிப்புகள் அனைத்திலும் கொள்வது நல்லது.

''தூய தமிழ் கொண்டதே நிறைதமிழ் நூல் அதனைப் பையப் பைய செய்ய வேண்டும். இந்நோக்கில் இந்நூலில் வடவெழுத்துக்கள் (மேற்கோள் பாடல்களிலன்றி) ஒருவப்பட்டுள', எனத் தன் நோக்கத்தைத் தமிழகப் புலவர் குழு வெளியீடு, முத்துக் கோவை நூலுள் குறிப்பிட்டுள்ளது. ''தமிழுக்குப் புதுப் புதுப் புதுப்புதுப் புதுமைகள் காட்டிய மகாகவி சுப்பிரமணிய பாரதியின் நூற்றாண்டு விழாவில் சொல்விலும் சுவையிலும் பொருளிலும் புதுமை பாய்ச்சும் நவ கவிஞர்களை அன்னம் பெருமையுடன் அறிமுகப்படுத்துகிறது'' என்று அன்னம் (மெய்ப் பொருள்—வண்ண நிலவன்) தன் நோக்கத்தை உணர்த்துகிறது. பக்தியிலக்கிய அறிமுகம் தம் நோக்கமாக இருப்பதைச் சக்தி பதிப்பகத்தார் தம் வாகீசர் அருள் வாக்கு நூலில் சுட்டியுள்ளனர்.

தமிழ்ப் பற்றுடன் திகழ வேண்டுகோள் விடுக்கும் சேகர் பதிப்பகத்தார், நூல் முகப்பில் 'உருவாக்கியோர்' எனும் தனி அட்டவணையில், ஆசிரியர், ஓவியர், பிளாக் செய்தவர், நூல் அச்சிட்டவர், அச்சகத்தார், முகப்பு வண்ணம் அச்சிட்டோர் பைண்டிங் செய்தவர், பிழை திருத்தியவர், தயாரிப்புப் பணியாளர், பதிப்பாளர் என அனைவரையும் தந்து தம் நூல்களில் சிறப்பிக்கின்றனர். பூம்புகார் பிரசுரம் எழுத்தாளர்களின் வாழ்க்கைக் குறிப்புகளைத் தெளிவாகக் குறிப்பிட்டு அவர்தம் படைப்புகளையும் விளக்கமாகத் தந்துள்ளமை ஆய்வாளர்க்குப் பெரிதும் உதவுவதாம். ''என்னை நன்றாக இறைவன் படைத்தனன் தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே'' என்பதனைத் தன் கொள்கையாக அனைத்து நூல்களிலும் தமிழ்ப்பதிப்பகம் நவில்கிறது.

ஒவ்வொரு நூலின் தொடக்கத்திலும் அதன் இயல்பிற்கு ஏற்றவாறு சிறு குறிப்புகளாக அறிஞர் கூற்றினை அன்னம் தம் பதிப்புகளில் வைப்பது பாராட்டத்தக்கது ''உண்மையான கவிதை அருமையான திரவியம், அதனால் உலகம் க்ஷேமத்தை அடைகிறது. எந்த நாட்டிலே புதிய மஹாகவி தோன்றுகிறானோ அந்த நாடு மகா பாக்யமுடையது. தமிழ் நாட்டிலே கவிதையின் புகழ் ஏறுக—மகாகவி சுப்பிரமணிய பாரதியார்'' எனும் குறிப்பினைச் (புலரி கல்யாண்ஜி) சான்றாகக் காட்டலாம். இது போன்ற

அமைப்பினை இளமை நூலகத் தாரின் ருத்ர துளசிதாஸ் படைத்துள்ள 'விஞ்ஞானம் வளர்ந்தது எப்படி?' என்ற நூலிலும் காணலாம்.

தம் நூலுள் எழும் ஐயங்களுக்கும், கருத்து வேறுபாடுகளுக்கும் மற்றும் நூல் தொடர்பான பிற எண்ணங்களுக்கும் நூலாசிரியருடன் தொடர்பு கொள்வதை நர்மதா பதிப்பகம் (மனோதத்துவ மருத்துவம்—ஆர். எம். சோமசுந்தர்) வரவேற்றுத் தன் சிறப்பாகக் கொள்கிறது.

தம் சிறப்பின் காரணமாகச் சில பதிப்பகங்கள் பாராட்டுக்களைப் பெற்றுள்ளன. சிறந்த நூல்களை, முடிந்தவரை குறைந்த விலையில் வெளியிட வேண்டும்; தமிழ் நூல்களைத் தனிப்பட்டவர்களும் வாங்கும் வகையில் பதிப்பிக்க வேண்டும்[10] என்பதனைத் தன் நோக்கமாக, 1946 இல் தோன்றிய தமிழ்ப்புத்தகாலயம் நன்குக் கடைபிடித்து வருதல் குறிப்பிடற்பாலது. 'இலக்கியத் தொழில், பொருளை இலக்காகக் கொள்ளாமல் மக்களுடைய அறிவை வளர்ப்பதாக இருக்க வேண்டும்' என்ற கருத்துடன் சுமார் 1931 இல் தொடங்கப்பட்ட அல்லயன்ஸ் கம்பெனி இவ்வாண்டு ஒரு நூலை மட்டுமே வெளியிட்டுள்ள போதிலும் அதன் நிறுவனர் குப்புசாமி ஐயர், ஒரு ஆசிரியர் நூல் எழுதுகிறார் என்றால் அதற்கு உதவக்கூடிய ஆதார நூல்களையெல்லாம் திரட்டி அவருக்கு நல்கும் நல்ல வழக்கத்தைக் கொண்டிருந்தார்[11] என்பது அவர் இக்காலப் பதிப்பகத்தாருக்கு அன்றே சிறந்த வழிகாட்டியாக விளங்கியமையும், பிற பதிப்பகங்களும் பின்பற்ற வேண்டிய தேவையை வலியுறுத்துவதாகவும் அமைகிறது.

எழுத்தாளர் பலரால் பாராட்டப்படும் சிறப்பினைப் பெற்றது வானதிப் பதிப்பகம், இன்று பதிப்புத்துறையில் தன்னிகரற்று விளங்குகிறது. ''தமிழ்நாட்டுப் பதிப்பகங்களுள் மிகச்சிறப்பான இடத்தை வகிப்பது வானதிப் பதிப்பகம். திரு. வானதி திருநாவுக்கரசு காந்தியத்தில் தோய்ந்தவர். தமிழ்மக்களுக்கு இந்த நாட்டின் ஞானச் செல்வத்தை எல்லாம் வாரி வழங்க வேண்டும் என்பதில் உண்மை ஆர்வம் உள்ளவர். பதிப்பகம் ஒரு தொழிலாக இருந்தாலும், அதில் ஒழுக்கத்தைக் கடைப்பிடித்து வருபவர். என்று நா. மகாலிங்கம் தம் முன்னுரையில் பாராட்டியுள்ளார் (வாழ்விக்க வந்த காந்தி மகாத்மா—சம்பந்தம்)

---

10. ரதுலன்; தமிழ்ப்புத்தகாலயம்; நூலகம். ஆக, 1969.
11. பி.வி. சுப்பிரமணியன்; அல்லயன்ஸ் கம்பெனி; நூலகம் பிப். 1970.

வளர்ந்து வரும் நிறுவனங்களும் இத்தகைய பாராட்டுப் பெறுவதை, ''மாருதிப் பதிப்பகம் புதிய புதிய துறையில், மக்களுக்கு அறிவூட்டக் கூடிய நூல்களை மட்டுமே வெளியிடும் என்று பெருமிதத்தோடு கூறுவார், அதன் ஸ்தாபகரான அமரர் திரு ஏ.எம் விநாயகம். அப்படியே அவர் வெளியிட்டும் வந்தார். அவருக்குப்பின், அவர் மக்களும் அதே மரபைப் பேணிக் காத்து வருவது பெரிதும் பாராட்டத்தக்கதாகும். அவர்களையும் வாழ்த்திப் பாராட்டுகிறேன்; மகாசக்தி அவர்கட்கு எல்லா நலன்களையும் தந்து, அவர்களை என்றும் உயர்த்த வேண்டும் என்றும் வேண்டிப் பணிகிறேன்'' எனும் புலியூர்க் கேசிகன் கூற்றினால் (முற்பிறவி மறுபிறவி அதிசயங்கள்—வி. ரவிச்சந்திரன்) பெறலாம்.

பல கிளைகளுடன், அடிக்கடிப் புத்தகக் காட்சிகள் நடத்தி வரும் நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், ஆசிரியர்களிடமிருந்து வரும் கையெழுத்துப் பிரதிகளைப் படித்துப் பார்த்து கருத்துத் தெரிவிப்பதற்குப் பதிப்பகக் குழுவொன்றை நியமித்திருக்கிறது. இதைத் தவிர ஒரு துறையில் ஆழ்ந்து ஆராய்ச்சி செய்த அறிஞர்களிடம் அத்துறையில் வெளியாவதற்கு வரும் கையெழுத்துப் பிரதிகள் அனுப்பப்படுகின்றன[12] இத்தகு நிலைகள் தமிழில் சிறந்த நூல்கள் வருவதற்கு வழிவகுக்கின்றன. ஏனைய பதிப்பகங்களும் பின்பற்றுதற்குரியதுமாகும்.

இந்தியாவிலேயே புத்தக வெளியீட்டுத் துறையில் நீண்ட காலமாகப் பணியாற்றிவரும் பொது லிமிடெட் கம்பெனி எனப் புகழப் பெறும் தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம். சிறுவர், நூல்கள், இளையோர் நூல்கள் கையடக்கப் பதிப்புகள், மலர்கள், மொழி பெயர்ப்புகள் எனப் பலதுறைகளிலும் வெற்றி கண்ட, சாதனைகள் புரிந்த நிலை இன்று தேக்கம் அடைந்துள்ளதாகத் தோன்றுகிறது. முதற்பதிப்பினை விட (9) மறுபதிப்பு நூல்களே (19) இவ்வாண்டு மிகுதியாக இக்கழகம் வெளியிட்டுள்ளது.

## பதிப்புரை முதலியன

பதிப்பகங்கள் தரும் பதிப்புரைகள் பொது நிலையில் நூலறிமுகம், நூலாசிரியர் அறிமுகம், துணைநின்றோர்க்கு நன்றி எனும் மூன்று நிலைகளைக் கொண்டமைகின்றன. சிலவற்றில்

12. பி.வி. சுப்பிரமணியன்; நியூசெஞ்சுரி புக்ஹவுஸ்; நூலகம் சூலை, 1970.

அவற்றின் நோக்கமும், நூலின் அமைப்பு விளக்கமும் நூலின் தோற்றம் போன்றனவும் அமைதல் உண்டு. தமிழரசிப் பதிப்பகம் நாவலாசிரியர் வையவனுக்கு (தீக்குளிக்காத விட்டில்கள்) வாழ்த்துத் தெரிவித்திருப்பது சுட்டத்தக்கது.

நூல் பற்றிய முழுமையான குறிப்புகளை நல்கும் பதிப்பு விளக்கத்தினைச் (Bibliographical Data) சில பதிப்புகளில் மட்டுமே காணமுடிகிறது. பதிப்பகத்தின் பிற வெளியீடுகளும் நூலாசிரியரின் பிறநூல்களும் பல பதிப்புகளில் அமைகின்றன. அந் நூல்களைச் சிறு விளக்கங்களுடன் அல்லது பாராட்டுரைகளுடன் குறித்திருக்கக் காணலாம். (இலக்கிய ஜோதி—ஒரு மோகன வாழ்வின் முழு நோக்கு—மது. ச. விமலானந்தம்; மோகனப் பதிப்பகம்) நூலாசிரியரின் இலக்கிய வாழ்க்கை பற்றிய அறிமுகத் தினை நூலின் பின்பக்க அட்டையில் வெளியிடுதல் இன்று பரவலாகக் காணப்படுகிறது.

அணிந்துரை, வாழ்த்துரை, அறிஞர்களின் ஆய்வுரை இவற்றுடன் பதிப்புகள் வெளிவருகை பழமையாகும். இன்று இதழ்களில் வெளிவந்தவை நூலாக்கம் பெறும் பொழுது இதழ்களின் வழிப் படித்த வாசகர்களின் கருத்துக் குவியல்களை யும் இணைத்துத் தரும் புதிய நிலை பாலகுமாரனின் 'மெர்க்குரிப் பூக்கள்'(வானதி); மு. மேத்தாவின் 'வெளிச்சம் வெளியே இல்லை' (நர்மதா) போன்ற நூல்களில் காணக்கிடக்கிறது. மிகச் சில பதிப்புகளில்தான் சொல்லகராதியைப் பிற்பகுதியில் காண முடி கிறது. மேற் சுட்டியுள்ள குறிப்புகள் அனைத்தும் ஆய்வாளர்க்குப் பேருதவிபுரிவன. இவற்றை அனைத்து நூல்களிலும் பின்பற்று தல் வேண்டற்பாலது. கதைக் களஞ்சியம் நூலுள் (ஓரியண்டல் வாட்ச்மேன் பப்ளிஷிங் கம்பெனி) இடையிடையே புகைப்படங்கள் இணைத்திருப்பது படிக்கும் ஆர்வத்தை மிகுவிப்பதாக உள்ளது. கழகம், பூம்புகார் போன்ற பதிப்பகங்கள் ஒவ்வொரு நூலிலும் அதன் பதிப்பு எண்ணைக் குறிப்பிடுதலை அனைத்துப் பதிப்பகங் களும் பின்பற்றினால் அவற்றின் வளர்ச்சி குறித்து ஆய்வதற்கு ஏதுவாகும்.

## மறுபதிப்புகள்

இவ்வாண்டு வெளிவந்துள்ள 140 மறுபதிப்புகளில் 69 நூல்கள் இலக்கியப்படைப்புகளாகும். திறனாய்வு நூல்களாக 27 அமை

கின்றன. இவற்றுள் 23 நூல்கள் எத்தனையாவது பதிப்பு என்று அறிய இயலவில்லை. எஞ்சியவற்றுள் 60 நூல்கள் இரண்டாம் பதிப்பாம். 3—10 பதிப்புகளாக முறையே 20, 10, 7, 4, 2, 4, 5, 1, ஆகிய நூல்களும், 13ஆம் பதிப்பாக 2 உம், 16 ஆம், 18 ஆம் பதிப்புகளாக ஒவ்வொரு நூலும் உள.

மருத்துவத்துறை சார்ந்த நூல்களே அதிகமான பதிப்புகளைக் கொண்டவை எனும் பெருமையை இவ்வாண்டில் பெறுதல் நவிலற்பாலது. 18ஆம் பதிப்பாக கி. ஆ. பெ. விசுவநாதத்தின் 'தமிழ் மருந்துகள் நூலும் 16ஆம் பதிப்பாக டி. எஸ் ஜனககுமாரி யின் நாட்டு மருந்துகள் நூலும் இடம் பெறுகின்றன.

மறுபதிப்பு ஏற்படும் பொழுது முதற் பதிப்பில் அமைந்த மதிப்புரை, முன்னுரை, அணிந்துரை போன்றவற்றையும் இணைத் துத்தரும் பாங்கு அமைகிறது. (வடமொழி இலக்கிய வரலாறு—கா. கைலாசநாதக் குருக்கள்—நர்மதா.) மிக அதிகமான மறு பதிப்புகளைப் பெறும் சிறப்பினை பாரி நிலையமும் (23) அடுத்து கழகமும் (17) கொண்டுள்ளன. அடுத்த இடத்தினை வானதி பதிப்பகம் (14) பெறுகிறது.

## நிறுவனங்கள்

பதிப்புப்பணியைத் தம் நோக்கங்களுள் ஒன்றாக நிறுவனங்கள் கொண்டிருப்பதனால் அவைபற்றிய குறிப்புகள் சிலவற்றை யும் தருதல் நலம் எனும் நோக்கில் இங்குத் தரப்பட்டுள்ளன. சுமார் 55 நிறுவனங்கள் இவ்வாண்டு நூல் வெளியிட்டுள்ளன. இந்நிறுவனங்கள் வெளியிடும் நூல்கள் அவற்றின் தோற்றம் நோக்கத்தை நிறைவேற்றுவதாக, குறிப்பிட்ட துறையில் மட்டுமே வெளியிடுவதாக உள்ளன. உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம். பல்கலைக் கழகம் போன்ற பொது நிறுவனங்கள் மட்டுமே பல துறைகளிலும் நூல்களை வெளியிடும் சிறப்புப் பெறு கின்றன.

இந்நிறுவனங்கள் வெளியிட்டுள்ள நூற்றொகை 118 ஆகும். இலக்கியப்படைப்புகள் 38, திறனாய்வு நூல்கள் 24, மருத்துவம் 2, பிறதுறைகள் 54 என அவை அமைந்துள்ளன. நிறுவனங்களும் அறிவியல், மருத்துவத்துறைகளை ஒதுக்கியுள்ளமை குறிப்பிடற் பாலது. மறுபதிப்புகளாகப் பன்னிரண்டு நூல்கள் வெளி வந்துள்ளன. தமிழக அரசின் பல துறைகள் இணைந்து 12

நூல்களைத் தர, உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 8 நூல்களைத் தமிழுலகிற்கு அளித்திருப்பது நோக்குதற்குரியது. அடுத்த நிலையில் 6 நூல்களை கிறித்தவ இலக்கிய சங்கமும், தெய்வீக வாழ்க்கைச் சங்கமும் அளித்துள்ளன.

பதிப்பகங்கள் தரும் இலக்கியப் பதிப்புகளையும், திறனாய்வு நூல்களையும்விட, நிறுவனங்கள் தரும் இத்தகு நூல்கள் ஆய்வு நிலையில் மேலும் பயன்படும் வகையில் பல குறிப்புகள் இணைந்து அமைதல் காணப்படுகிறது. சான்றாகப் புதுவை அரசு கல்வித் துறை வெளியிட்டுள்ள 'கவிஞர் சவுரிராயலு நாயகர் கவிதைகள்' நூலைக் கூறலாம். புலவரின் வாழ்க்கைக் குறிப்பு; பாடிய பாடல்களின் முழுமையான பட்டியல்; புலவருக்குப் புலவர்கள் பாராட்டிச் சூட்டிய புகழ்மாலைகள், அவரைப் பாடியோர் விவரங்கள்; பாடிய புதுவை வித்துவான்கள், போற்றிய காரைக் கால் வித்துவான்கள் முதலியோர் பற்றிய குறிப்புகள்; பிரெஞ்சு மொழிச் சொற்களுக்கான விளக்கம் எனப் பல நூலை அணி செய்கின்றன.

## முடிவுரை

பதிப்பகங்களும் நிறுவனங்களும் தமிழ் நூல்கள் வெளியிடுவதில் கொண்டுள்ள ஆர்வம் தமிழ் மொழியும் விரைவில் பல அரிய நூல்களையும் பல்வேறு துறைகளில் உலகிற்கு அளிக்கும் என்பதனை வலியுறுத்துவதாக உள்ளது. படைப்பிலக்கியங்களுக்கு நல்கும் தங்கள் ஆதரவினை சமுதாய வளர்ச்சிக்கு இன்றியமையாத அறிவியல், மருத்துவம், தொழில் போன்ற பிற துறைகளுக்கும் தரும்பொழுது தமிழ்ச் சமுதாயம் முன்னேற ஏதுவாகும். அதே வேளையில் பொது மக்களின் வாங்கும் தரத்தினையும் மனதுட் கொண்டு, கற்க விரும்புவார் தனக்குரிமையாகவே நூல்களைப் பெறும் படியாக மலிவுப் பதிப்புகளாக, மக்கட் பதிப்புகளாகக் குறைந்த விலையில் அமைதல்வேண்டற்பாலது.

பின்னிணைப்பு : 1

# பதிப்பகங்கள் விளக்க அட்டவணை

| எண் | பதிப்பகம் | இருப்பிடம் | படைப்புகள் | திறனாய்வு | அறிவியல் | மருத்துவம் | பிற | மொத்தம் | ஆசிரியர் | மறுபதிப்பு |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | அகரம் | சிவகங்கை | 9 | 4 | | | | 13 | 13 | |
| 2 | அசோகன் பதிப்பகம் | சென்னை | 4 | | | | | 4 | 3 | 2 |
| 3 | அணியகம் | சென்னை | 2 | 1 | | | 2 | 5 | 4 | |
| 4 | அபிராமிபதிப்பகம் | அண்ணாமலை நகர் | | 2 | | | | 2 | 1 | |
| 5 | அபிராமி பப்ளிகேஷன்ஸ் | சென்னை | 1 | | | | | 1 | 1 | |
| 6 | அம்பாள் பதிப்பகம் | சென்னை | 3 | | | | | 3 | 2 | |
| 7 | அம்மன் பதிப்பகம் | சென்னை | 1 | | | | | 1 | 1 | |
| 8 | அம்மன் புக் கம்பெனி | நார்த்தாம்பூண்டி | 3 | | | | 2 | 5 | 2 | |
| 9 | அமிழ்தம் பதிப்பகம் | சென்னை | | | | | | | | 1 |
| 10 | அமுதநிலையம் லிமிடெட் | சென்னை | 5 | | | | | 5 | 4 | 3 |
| 11 | அருண்குமார்பதிப்பகம் | சென்னை | | 1 | | | | 1 | 1 | |
| 12 | அருண்மொழிப் பதிப்பகம் | சேலம் | | 1 | | | 1 | 2 | 1 | |
| 13 | அருணோதயம் | சென்னை | 11 | 4 | 3 | | 9 | 27 | 14 | 2 |
| 14 | அருள் ஒளி | சென்னை | | 1 | | | | 1 | 1 | |
| 15 | அருள் சிவம் நூலகம் | காரைக்குடி | | 1 | | | | 1 | 1 | |
| 16 | அருள்நிலையம் | மதுரை | 1 | | | | | 1 | 1 | |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 17 | அருள்ஜோதி பதிப்பகம் | நாமக்கல் | 1 | | | | | 1 | 1 | |
| 18 | அல்லயன்ஸ் கம்பெனி | சென்னை | | | | | 1 | 1 | 1 | 1 |
| 19 | அல்லி நிலையம் | சென்னை | | | | | | | | 1 |
| 20 | அவ்வைப் பதிப்பகம் | சென்னை | | | | | | | | 1 |
| 21 | அறிவுக்கனல் பதிப்பகம் | வேலூர் | | | | | 1 | 1 | 1 | |
| 22 | அறிவுச் சுடர் நிலையம் | சென்னை | | | | | | | | 1 |
| 23 | அறிவுநிலையம் | சென்னை | 6 | 3 | | 4 | 1 | 14 | 4 | |
| 24 | அறிவொளி பதிப்பகம் | மதுரை | 1 | | | | | 1 | 1 | |
| 25 | அன்பு இல்லம் | சென்னை | | | 1 | 1 | | 2 | 2 | |
| 26 | அன்பு நிலையம் | நாகர்கோவில் | 1 | | | | 1 | 2 | 2 | |
| 27 | அன்புப் பதிப்பகம் | சென்னை | 1 | | | | | 1 | 1 | |
| 28 | அன்பு பப்ளிகேஷன்ஸ் | சென்னை | 2 | | | | | 2 | 2 | |
| 29 | அன்னபூர்ணா பதிப்பகம் | திருப்பனந்தாள் | 1 | 1 | | | | 2 | 2 | 1 |
| 30 | அன்னம் பிரைவேட் லிமிடெட் | சிவகங்கை | 4 | 1 | | | | 5 | 5 | |
| 31 | ஆய்வகம் | சென்னை | | | | | 1 | 1 | 1 | |
| 32 | ஆயிஷா பதிப்பகம் | அதிராமபட்டினம் | | | | | 1 | 1 | 1 | |
| 33 | ஆனந்தவிகடன் | சென்னை | 1 | | | | | 1 | 1 | |
| 34 | ஆனந்தா பப்ளிகேஷன்ஸ் | சென்னை | 2 | | | | 1 | 3 | 2 | |
| 35 | இமயப் பதிப்பகம் | நாகப்பட்டினம் | 1 | | | 3 | | 4 | 3 | |
| 36 | இயற்றமிழ்ப் பயிற்றகம் | திருவாரூர் | | 1 | | | | 1 | 1 | |

| எண் | பதிப்பகம் | இருப்பிடம் | படைப் புகள் | திற னாய்வு | அறி வியல் | மருத் துவம் | பிற | மொத் தம் | ஆசிரி யர் | மறு பதிப்பு |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 37 | இராம தேவன் பதிப்பகம் | தஞ்சாவூர் | | | | | 1 | | 1 | |
| 38 | இலக்கியப் பதிப்பகம் | சென்னை | | 1 | | | | 1 | 1 | |
| 39 | இலக்குமி நிலையம் | சென்னை | 4 | 1 | | 2 | 7 | 14 | 10 | |
| 40 | இளங்கோ பதிப்பகம் | கோவில்ப்பட்டி | | | | | | 1 | 1 | |
| 41 | இளமை நூலகம் | சிவகங்கை | | | 1 | | 1 | 1 | 1 | |
| 42 | உமா பதிப்பகம் | மாயூரம் | 1 | | | | | 1 | 1 | |
| 43 | உமையாம்பிகை பதிப்பகம் | கோயம்புத்தூர் | 1 | | | | | 1 | 1 | |
| 44 | உமையாள் பதிப்பகம் | அண்ணாமலைநகர் | | 1 | | | | 1 | 1 | |
| 45 | என்ரேகஸ்வாசகர்வட்டம் | திருச்சி | 1 | | | | | 1 | 1 | |
| 46 | எஸ்பியார் புக்ஸ் | தூத்துக்குடி | 1 | | | | | 1 | 1 | |
| 47 | ஏசியன் எஜுகேஷனல்சர்வீஸ் | புதுடில்லி | | | | | | | | 2 |
| 48 | ஓம்ஸ் பதிப்பகம் | சென்னை | | | 1 | | | 1 | 1 | |
| 49 | ஓரியண்டல் வாட்ச்மேன் பப்ளிஷிங்ஹவுஸ் | புனா | 4 | | | | | 4 | 1 | |
| 50 | க்ரியா | சென்னை | 1 | | | | | 1 | 1 | |
| 51 | கடல் பப்ளிஷர்ஸ் | மதுரை | | | | | 1 | 1 | | |
| 52 | கண்ணகி பதிப்பகம் | சிங்கப்பூர் | 1 | | | | | | 1 | |
| 53 | கண்ணகி வெளியீடு | மதுரை | | | | | | 1 | 1 | 1 |
| 54 | கண்ணதாசன் வெளியீட்டகம் | அருப்புக்கோட்டை | | | | | 1 | 1 | 1 | |

சுசீலவள்ளல் தன் மகனுக்கு முடிசூட்ட எண்ணுகிறான். செய்தியறிந்த மகன், மாற்றாரை அடக்கிய பின்பே மண்டலம் ஆளும் பொறுப்பை ஏற்பேன் எனக் கூறி வடநாடு புறப்படுகிறான். அமைச்சன் மகனும் உடன் செல்லுகிறான். இருவரும் தம்மைப் பணிந்த மன்னரைத் தம் சொற்படி நடக்கக் கட்டளையிட்டு, விட்டுவிடுகின்றனர். எதிர்த்த மன்னரை வென்று, அவர்கள் நாட்டில்

''ஏழை எளியோரை இருத்தி முடிசூட்டி
வாளையவன்கைக்கொடுத்துவாழ்ந்திடுவாய்என்றுரைத்து''[31]

மீள்கின்றனர். வீரமன்னனின் தன்மைக்கு ஓர் எடுத்துக்காட்டாய் விளங்கவேண்டும், தம் பாட்டுடைத்தலைவன் என்பது புலவர் கருத்து.

திருவேங்கட நாதன் வண்டு விடு தூது என்னும் இலக்கியத்தின் பாட்டுடைத் தலைவன் திருநெல்வேலியைச் சார்ந்த திருவழுதி வளநாட்டை ஆண்ட குறுநில மன்னன் ஆவான். அவனுடைய மைத்துனனே சங்கரமூர்த்திக் கோவையின் தலைவனாகிய சங்கர மூர்த்தி என்பவன். இச் செய்தியினை

''————————முருகலந் தார்ச்
சங்கர மூர்த்திக்கும் சகோதரராம் செங்கமல
நங்கை வளர் வைகுந்த நாதனுக்கும்—இங்கிதம்சேர்
நன்மைத் துனனாம் நரபாலன்''[32]

என்னும் அடிகள் உணர்த்துகின்றன. திருவேங்கடநாதன் பிள்ளைத் தமிழ் மற்றும் பல தனிப்பாடல்கள் இம்மன்னர்கள் மீது பாடப் பட்டுள்ளன. இவற்றால் இவர்கள் குடும்பத்தினர் பலரும் புலவர் களால் பாடப்பெற்ற புகழ் வாய்ந்தவர்கள் என்பது புலனாகிறது.

## கடவுள் கொள்கை

பல மன்னரை வென்ற இந்திரகோமான், இனி வெல்ல வேண்டிய நாடு ஏதேனும் உண்டோ எனத் தன் அமைச்சனை வினவுகிறான்.

---

31. சுசீலவள்ளல் அம்மானை - வரி - 499-500.
32. திருவேங்கடநாதன் வண்டுவிடுதூது - கண்ணி - 56-59.

"என்ன இந்திர சேகரியு மென்ஞான திஷ்டியினால்
இன்னமொரு ராசன் இயல்புடையான் ஆகுமவன்"[33]

எனத் தன் ஞானதிருஷ்டியினால் கண்டு கூறுகிறான் அமைச்சன்.

சவ்வீர நாட்டு மன்னன் குச்சரன் என்பவன் தனக்கு மகன் இல்லாக் குறையைத் தீர்க்குமாறு வேண்டி இறைவனை நோக்கித் தவம் செய்கிறான்.

"அன்னாட் சரம்சிவன் அன்னையுமை யோடுவந்து
என்னாற் பெறும்பேறு இயம்புவாய் குச்சரனே"[34]

என்று கேட்கிறான். மன்னன் தொழுது 'சுதன் வேண்டும்' என்றான். ஆனால் ஈசனோ

"உனக்குவான் சந்ததிகள் ஓர்போதும் இல்லையில்லை
எனக்குநீ அன்பானாய் ஈந்தோமோர் புத்திரிதான்"[35]

எனக் கூறிப் பெண்மகவு பெறும் பேற்றினைத் தருகிறான். இது போலவே, அமைச்சன் கனவில் முருகன் தோன்றிக் கூறுவதும்,[36] யாகம் செய்வதற்கு முருகனே யோகியாகிவந்து தோன்றுவதும், மகன் பிறப்பான் என வரந்தருவதும்[37] போன்ற பல செய்திகள் கடவுள் உண்மையை அடிப்படையாகக் கொண்டுள்ளன.

மந்திரத்தால் சில சாதனைகள் நடைபெறுகின்றன.[38] கூடு விட்டுக் கூடுபாய்ந்து சில அருஞ்செயல்கள் செய்யப்படுகின்றன.[39] அக்காலக்கட்டத்தில் இவ்வாறான நூல்கள் பல உருவாகியுள்ளன என்பதை இவ்வம்மானை நூல் புலப்படுத்துகின்றது.

டில்லி பாட்சாவிடம் சர்தாராகப் பணியாற்றுகிறான் கொண்டம நாயகன். அவனுடைய உறவினர் மகளைத் தனக்குத் திருமணம் செய்து தரும்படி கேட்கிறான் பாட்சா. பெண் கொடுக்க மறுத்தால் பலாத்காரமாய் மணம் செய்து கொள்ளு வேன் என்றும் கூறுகிறான். முகம்மதிய மன்னனுக்குப் பெண் கொடுக்க விரும்பாத நாயகன், பாட்சாவின் அடக்குமுறைக்குப்

---

33. சுசிலவள்ளல் அம்மானை - வரி. 506-507.
34. ,, ,, - வரி. 515-516.
35. ,, ,, - வரி.
36. ,, ,, - வரி.124-126.
37. ,, ,, - வரி. 246-249
38. ,, ,, - வரி. 637-38; 666-70.
39. ,, ,, - வரி.

பயந்து தன் உறவினர்களுடன் டில்லியை விட்டு வெளியேறுகிறான். பாட்சாவின் ஆட்கள் பின்தொடருகிறார்கள். குறுக்கே நதியில் பெருவெள்ளம் வருகிறது. தங்கள் குலதெய்வத்தை வேண்டிப் பிரார்த்திக்கிறார்கள். ஆற்றங்கரையின் இருமருங்கிலும் இருந்த புங்கமரங்கள் வளைந்து ஒன்றாக இணைகின்றன. அதன் மேல் ஏறி நாயகன் உறவினர் அனைவரும் அக்கரையடைகின்றனர். உடனே மரங்கள் நிமிர்ந்து விடுகின்றன. பாட்சாவின் ஆட்கள் பின்தொடர இயலாமல் அக்கரையிலேயே நின்று விடுகிறார்கள்.[40] இவ்வாறு தடுத்தாட் கொண்ட செய்திகள் வமிசாவளியுள் பலவிடத்தும் காணப்படுகின்றன. இறைவன் கனவில் தோன்றிக் கூறிய செய்திகள் பல; அவ்வாறே நிலம்பல பெற்ற செய்திகள் பல இவ்வமிசாவளிகளுள் காணப்படுகின்றன. மன்னர்களும் குறுநில மன்னர்களும் சமயங்கள் வளரப் பலவகையிலும் துணை செய்துள்ளனர்; ஆலயங்களின் நடைமுறைகள் உயர்ந்துள்ளன என்பன போன்ற பல செய்திகளும் இவ்வமிசாவளிகளால் பெறப்படுகின்றன.

## பேச்சு நடை

தற்காலத்து, பேச்சுநடையில் எழுதப்படும் கதைகளைப்போல சிறந்த வரலாற்றுச் செய்திகளையும் பேச்சு நடையிலேயே எழுதி வைத்துள்ள நிலையும் புலனாகின்றது. இலக்கியங்களிலோ ஆங்காங்கு ஒன்றிரண்டு சொற்களோ சொற்றொடர்களோ பேச்சு நடையில் அமைந்துள்ளன. உரைநடையிலுள்ள வரலாற்றுச் செய்திகளிலோ முழுக்க முழுக்க பேச்சுநடையை காணப்படுகிறது.

"கும்பினி சறுகாறுலே யென்னையும் யென்னை சேற்ந்த செனத்தையும் திண்டுக்கல் ழுதலானயிடங்களுலே கைதுலே வச்சு யிறுந்து தொரைகள் தயவுசெயிது யெனக்கும் யென்னைச் சேர்ந்த சனத்துக்கு மாசம் 1 க்கு படிவீறாயன் யிறுவத்தினாலு பொன் நிகுதி செயிது வூறுலே போஇ யிறுக்கச் சொல்லி உத்திரவு செய்த படியனாலே அறமனையாற் கட்டளையிட்ட படிக்கு மாசம் மாசம் படியும் பத்திகொண்டுயிறுக்குரேன்.

நான் பதினாலு வயசு சிறுபுள்ளையாஇ யென்னை சேர்ந்த குஞ்சு குளந்தை சயிதமாஇ பறாறியாஇ போஇயிருந்து...... புத்தூருகிறாமத்திலே ஆசறுலேயிறுந்து ...காத்துக்கொண்டுயிறுக்கிரேன்."[41]

---

40. பாளையப்பட்டுக்களின் வம்சாவளி - தொகுதி -1, பக்-18. தொகுதி- II. பக் 55-57.

41. ,, ,, தொகுதி 1. பக்-119.

இதுபோன்று பல பகுதிகள் பேச்சுநடையில் காணப்படுகின்றன. போஇ (போய்), சிறுப்புள்ளையாஇ (சிறுபுள்ளையாய்), சயிதமாஇ (சயிதமாய்), பறாறியாஇ (பறாறியாய்) போன்றசொற்கள், 'இகர யகரம் இறுதி விரவும்'[42] என்ற இலக்கணத்திற்குச் சிறந்த எடுத்துக் காட்டுகளாய் அமைகின்றன. என்றாலும் பிற சொற்களையும் சொற்றொடர்களையும் நோக்க எழுதினோர் குறைபாடுகளே இந்த நடையமைப்பிற்குக் காரணம் என்பது தெளிவாகும்.

இதே நடையில் அமைந்த,

'அந்த திண்ண நெனங்குர வேடன்.........மது மாம்சங்கள் னாலே பூசை நெயிவேத்தியங்கள் பண்ணி கொண்டு வந்த பகுத்தி னாலே யீசுவர பகுத்தனாயி .........கண்ணப்பனயினாற் யெங்குர பேற் வரப்பட்டது...... சேருமான் பெருமாள் கேள்விப்பட்டு உடுப் பூருலே யிருக்கப்பட்ட வேட சாதினூத்தி அருவதுநாயிரம் பேறை யும்.........கொங்கு தேசத்தில் நெலை நாட்டு பண்ணிநாற்கள்''[43] என்பது போன்ற பல செய்திகள் கண்ணப்ப நாயனார், சேரமான் பெருமாள் நாயனார் போன்ற நாயனார்கள் காலந் தொடங்கி, ஆங்கிலேயர் ஆட்சி வரையிலான பல வரலாற்றுச் செய்திகளை வெளியிடுகின்றன.

## அணிநலன்கள்

உவமையினின்றும் பிறந்த அணிகள் எப்படியெல்லாம் பல்கிப் பெருகியுள்ளன என்பதனை எடுத்துக் காட்டுவது, உவமையையும் உவமைப் பொருள்களையும் தொகுத்து அளிக்கும் உவமான சங்கிரகம் என்னும் நூல்.

குணத்தையும் குற்றத்தையும் ஒருங்கே ஆய்ந்து மிகுதியான தையே எடுத்துக் கொள்ளுவது தமிழர் பண்பு. அப்பண்பினால் என் கவிதையில் வழுக்கண்டும் அதனைக் குற்றமென்று சொல்லா மல் குணமாகவே கொள்வர் என்று கூற விரும்பும் புலவர்,

''வேதனைசெய் முள்ளோடு விடஅரவு செந்தாழைப்
போதிலுள்ள குற்றமெண்ணார் பூமணத்தால் வேணு
மென்பார்''[44]

என்னும் உவமையோடு தமிழர்தம் பண்பினை எடுத்துக் காட்டு கிறார்.

---

42. தொல். எழுத்து, நூற்பா. 58.
43. பாளையப்பட்டுக்களின் வமிசாவளி, தொகுதி - II. பக் 1.
44. காதல்கொத்து, குமாரலிங்கவேந்தன் காதல் - கண்ணி - 9.

சவுரி என்பாள் தன் வரலாற்றைக் கூறுவதாக அமைந்த பகுதி ஒன்று தன்னால் வெறுக்கப்பட்ட மன்னவன் கடுமையாகப் பேசியதைப் ''பால்துளிதான் வெந்த நெய்யில் பட்டது போலே இறைந்தான்''[45] என்ற உவமையால் எடுத்துக் கூறுகிறாள்.

''எள்ளுக்குள் எண்ணெய் இருந்து கலந்தாப்போல்''[46]

''... ... ... ... ... ... ... வதனக் காட்சி
உதையமால் வரையின் அல்லால் உயர்வரை எங்கும்தோன்றும்
மதிபல என்னக் கண்டோர் மதியினை மருட்டும் அன்றே''[47]

என்பன போன்ற சிறந்த உவமைகள் இப்பகுதிகளில் நூற்றுக்கு மேற்பட்டவை உள்ளன.

''ஐந்துமுகக் கடவுள்அருள் ஆறுமுகக் கடவுளை''[48]

''இறந்தவர் இறவா இன்பம்''[49]

''தோன்றினன் தோற்றம் இல்லான்''[50] போல்வன முரண் அணித் தொடர்களாக அமைவன:

''... ... ... ... ... ... இக்குவரிக்
கோதண்டம் வாங்கிக் குறுகினான் நானிந்தக்
கோதண்ட மேனி குறுகினோன்''[51]

''ஆர்க்கு மகத்திருவை யாற்றினான்-நால்வேத
மார்க்கு மகத்திருவை யாற்றினான்''[52] என்பன போன்ற அடிகளும் இவ்வடிகளை அடுத்துக் காணப்பெறும் பல அடிகளும் அடிமடக்காய் நின்று வெவ்வேறு பொருள் தருவனவாகும்.

''கலையேறுஞ் சிற்றிடையீர் கார்பயங் கொண்டோடி
மலையேறிச் செல்வதுங்கள் வார்குழலைக் கண்டலவோ''[53]

''உவமையில் தமிழால் யானும் உரைத்தனன் விருத்தப்
பாவால்''[54]

---

45. சுசீலவள்ளல் அம்மானை - வரி 911.
46. கந்தசாமிக்காதல் - கண்ணி - 328.
47. தந்திவனப்புராணம் - பா: 254.
48. ,, ,, - பா. 4
49. ,, ,, - பா. 329
50. ,, ,, - பா. 543.
51. திருவேங்கடநாதன் வண்டுவிடுதூது - கண்ணி. 212.
52. திருக்கீழ்வேளூர் உலா - கண்ணி - 54.
53. சிவகங்கை இராசேந்திரபூபதி காதல் - கண்ணி - 246.
54. தந்திவனப்புராணம். பா - 8.

"வாங்குவார் இல்லை என்றே வழிபார்த்து நிற்பவரும்"[56]

என்பன போன்ற பல வரிகள் சிறந்த கற்பனைகளையும் அணி நலன்களையும் பெற்று விளங்குவனவாகும்.

சங்கர மூர்த்தி கோவையின் அனைத்துப் பாடல்களிலும் மூன்றாம் அடியின் நான்காம், ஐந்தாம் சீர்கள் பாட்டுடைத் தலைவன் பெயரைச் சுட்டி, சங்கரமூர்த்தி நல்லூர் அல்லது சங்கர மூர்த்தி வெற்பில் என்ற இரு தொடர்களையே கொண்டு விளங்கு கின்றன என்பதும் குறிப்பிடத்தக்க அமைப்பாகும்.

## பதிப்புமுறை

### (அ) முன்னுரைகள்

இப்பதிப்புகளின் முன்னுரைகள் முகவுரை, பதிப்புரை, பதிப் பாய்வுரை, முன்னுரை, ஆய்வு முன்னுரை, ஆராய்ச்சி முன்னுரை என்னும் தலைப்புகளால் சுட்டப்படுகின்றன பாயிரத்திற்குரிய பலவகைப் பெயர்களைப்போல இத்தலைப்புகள் அமைகின்றன.

"எது தொன்று தொட்டு இன்றுவரை பரவி இருக்கிறதோ அதுவே புராணம்" என்ற கருத்துத் தொடங்கி, புராணங்களைப் பற்றிய பலவகை விளக்கங்களை எடுத்துக்காட்டுகிறது தந்திவனப் புராண முன்னுரை. புராணங்களின் வகைகள், அவற்றின் தோற்றமும் வளர்ச்சியும் போல்வனவற்றையும் விளக்கிச் செல்லுகிறது. மேலும் அம்முன்னுரையுள் நூலாசிரியர் வரலாறும், தலத்தின் வரலாறும் விளக்கப்பட்டுள்ளன. வடமொழிப் புராணம் எடுத்துக் காட்டப்படுகிறது. தந்திவனப்புராணம் — திருவானைக்கா புராணம் இவற்றின் ஒப்பீட்டு ஆய்வும், நூலின் சிறப்பு அமைப் புகள் எடுத்துக் காட்டப்படும் முறையும் கூடிய இம்முன்னுரை பதிப்பு முன்னுரைக்கு ஓர் எடுத்துக் காட்டாய் அமைகிறது.

புராணம், உலா ஆகிய நூல்களில் ஆசிரியர் வரலாறு தெளி வாகக் கூறப்பட்டுள்ளது. இலக்கிய வரலாறுகளில் இடம் பெற்றவை அவை. கொடுமணல் இலக்கியங்களுள் ஏட்டுக் குறிப் பிலிருந்து பெற்ற குறிப்புகளால் ஆசிரியர் வரலாறு கணிக்கப்படு கிறது. இதே போலக் கிடைத்த ஏட்டுக் குறிப்புகளால் அம்மானை ஆசிரியர் வரலாறு தெளிவாக்கப்படுகிறது. ஆசிரியர் வரலாறு

56- சுசீலவள்ளல் அம்மானை - வரி 83.

ஆயும் முறை தூது நூலினுள் சிறப்பாக அமைந்துள்ளது காதல் கொத்து ஆசிரியர் வரலாற்றைத் தொட்டுப் பார்க்கிறது. ஆசிரியரைப் பற்றி நினைத்துப் பார்க்காத பதிப்பாசிரியர்களும் உள்ளனர். வமிசாவளித் தொகுதிகள் தோன்றிய வரலாற்றை விளக்க அகச் சான்றுகளும் புறச்சான்றுகளும் பல உள்ளன.

உலாவும் தூதும் ஒப்புமை உடையன என்பதை நிறுவுவதன் வழி தூது இலக்கியத்தின் தன்மையைத் தெளிவுபடுத்துகிறார். தூது இலக்கியத்தின் பதிப்பாசிரியர் இலக்கியத்தின் இலக்குகளைத் தீர்மானிக்கும் முறை தொடங்கி படிப்படியே, தொடர்பு அறாமல் இலக்கியச் சுவைகளை எடுத்துக்காட்டி' காலச் சூழ்நிலை முதல் இலக்கிய வடிவு ஈறாக நூல் அமையும் பாங்கினை எடுத்துக்காட்டும் காதல் கொத்தில் முன்னுரை பதிப்பாசிரியரின் தெளிவை எடுத்துக்காட்டுகிறது

நொய்யல் ஆற்றங்கரையில் உள்ளது கொடுமணல் என்னும் ஊர். இது இன்று சுமார் எண்ணூறு மக்கள் வாழும் சிற்றூராகத் திகழ்கிறது. இதுவே சங்க இலக்கியங்கள் குறிப்பிடும் கொடுமணம் என்னும் ஊராகும் என்ற செய்திகளையும், சுவடிபெற்ற வரலாற்றையும் கொடுமணல் இலக்கிய ஆய்வு முன்னுரை நன்கு எடுத்துக்காட்டுகிறது.

அம்மானை இலக்கியத்துள் வரலாற்றுக் குறிப்புகள் சிறப்பாக ஆய்வு செய்யப்பட்டுள்ளன. கோயில் அமைப்பை நேரில் கண்டு விளக்குகிறார் உலா பதிப்பாசிரியர். சுவடியை முறைப்பட அமைத்து எழுதிய முறையை விளக்கும் தூது முன்னுரை சுவடி இயலுக்குத் துணைபுரிவதாகும்.

தட்டச்சு நிலையில் உள்ள முழுப் பதிப்பு நூல்கள் எல்லா வகை விளக்கங்களையும் பெற்றுள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும். மீனாட்சி அம்மன் திருப்புகழ் என்னும் நூல், நூலை அலசி ஆய்ந்த பின்னிணைப்புகள் பலவற்றைப் பெற்றிருப்பது பயன்படுத்துவார்க்குப் பல வகையிலும் எளிமையாகிறது.

## (ஆ) நூல் பெயர்கள்

பாளையப்பட்டுக்களின் வம்சாவளி-தொகுதி-I, தொகுதி-II, தொகுதி-III என்பன அட்டையில்காணப்பெறும் நூலின்பெயர்கள். ஆனால் நூலினுள் முதல் பக்கத்தில் பாளையப்பட்டுக்களின் வரலாறு-தொகுதி-I, II, III என்று காணப்படுகிறது. ஆங்கிலத்

தில் உள்ள வெளியீடு பற்றிய தகவல்களிலும், பொறுப்பாசிரியர் முன்னுரையிலும், உள் பக்கங்கள் சிலவற்றிலும் கூட வரலாறு என்ற சொல்லே காணப்படுகிறது. சுவடியில் உள்ளது திருக்கீழ் வேளூருலா ஆனால் திருக்கீழ் வேளூர் உலா என்று பிரித்துப் பதிப் பிக்கப்பட்டுள்ளது.

'கொடுமணல் இலக்கியங்கள்' என்ற பெயர் எவ்வாறு நூலுக்குச் சூட்டப்பட்டது? அறிய இயலவில்லை. பதினொரு சுவடிகளைக் கொடுமணல் நாச்சிமுத்துப் புலவர் அவர்களிட மிருந்து பெற்றதாகப் பொறுப்பாசிரியரின் ஆங்கில முன்னுரை கூறுகிறது.

''அங்கு பல பட்டயங்களும் (சுவடிகளில்), தனிப்பாடல்களும் ........சிற்றிலக்கியங்களும் கிடைத்துள்ளன. இவ்வூரில் வாழும் ........நாச்சிமுத்துப் புலவர் இச்சுவடிகளைப் பாதுகாத்து வைத் துள்ளார். அவற்றுள் இந்நூற் சுவடியும் ஒன்று'' என்பது பதிப்பா சிரியரின் ஆய்வு முன்னுரை (பக்கம் 3) மேலும் ''இத்துடன்பின்னி ணைப்பாகக் கொடுமணல் தனிப் பாடல்களும் ......இணைக்கப் பட்டுள்ளன'' (பக். 5) என்ற தொடரும் அம்முன்னுரையில் காணப்படுகிறது. முன்னுரை முழுமையும் கந்தசாமிக்காதல் என்னும் பகுதிச் செய்திகளையே கொண்டுள்ளது. இவற்றால் ஆய்வு முன்னுரை கந்தசாமிக் காதல் என்ற முதல் பகுதிக்கு மட்டுமே உரியது என்பது தெளிவாகிறது.

'ஒப்புமை கருதி இப்பொன்னையன் காதலும் இங்கு பிற்சேர்க் கையாக இணைக்கப்பட்டுள்ளது''[56]

''இப்பட்டயம் ஓலையில் எழுதப்பட்டுள்ளது......... நாச்சி முத்துப் புலவரிடம் உள்ளது.........இப்பட்டயம் இந்நூலில் சேர்க் கப்பட்டுள்ளது''[57]

'அப்புலவர் மரபினர் பாடிய பல தனிப்பாடல் சுவடிகள்...... நாச்சிமுத்துப் புலவரிடம் உள்ளன. அவற்றில் ஒருபகுதியே........ தொகுத்துக் கொடுக்கப்பட்டுள்ளன''[58] என்பன போன்ற பதிப் பாசிரியரின் கூற்றுகள் பொறுப்பாசிரியரின் செய்தியோடு மாறுபடு கின்றன; நூல் தலைப்பு எப்படிக் கொடுக்கப்பட்டது, எவ்வாறு பொருந்துகிறது, என்பன போன்ற ஐயங்களை ஏற்படுத்துகின்றன,

56. கொடுமணல்இலக்கியங்கள் - பக் 75.
57. ,, ,, - பக் 124.
58. ,, ,, - பக் 131.
59. மனைநூல் பதிப்புரை - பக், x

சுவடிகளில் உள்ள பெயர்கள், தலைப்புகள் போன்றவற்றில் வேறுபாடுகள் இருக்குமாயினும், வேறு காரணங்களால் அவற்றை மாற்ற வேண்டிய நிலை ஏற்படுமாயினும் சுவடிகளில் உள்ள பெயர்களைச் சுட்டிக் காட்டி, இன்ன காரணத்தால் இவ்வாறு மாற்றியிருக்கிறோம் என்று எடுத்துக் காட்டுவதே முறையாகும். அதுவே ஆய்வாளர்களுக்குப் பெரிதும் பயன்படும். இந்த அமைப்பிற்கு நல்ல சான்றாக விளங்குகிறது மனைநூல் என்ற நூல் தலைப்பு பற்றிக் கூறும் செய்தி[59]

## (இ) சீர்மை

பதிப்பாசிரியரின் கடமைகளுள் ஒன்று சொல், பொருள் போன்றவற்றில் சீர்மை அமையச் செய்தல். அதாவது ஒரு நூலுள் வரும் இராசராசன் என்ற பெயரை நூல் முழுமையிலும் ஒரே மாதிரியாக அமைக்காமல் ராஜராஜன், இராஜராஜன், ராசராசன் என்பன போன்று மாற்றி மாற்றி அமைப்பது ஐயத்தை விளைவிப்பதாக அமைந்துவிடும். சுவடியுள் மாறுபாடாகக் காணின் சிறந்த ஒன்றைத் தேர்ந்து, பிறவற்றைச் சுட்டிக்காட்டிவிட வேண்டும் என்பதே ஒழுங்கு முறையாகும்.

இந்த முறை சில நூல்களுள் அமையவில்லை பல பதிப்புகளில் ஒரே பக்கத்தில் (நூல் தலைப்பு அமைந்த முதல் பக்கம்) தமிழ்நாடு அரசு கீழ்த்திசைச் சுவடிகள் நூல் நிலையம் என்று தலைப்பிலும், தமிழ்நாடு அரசு கீழ்த்திசை நூலகச் சுவடி என்று பக்கத்தின் இடைப் பகுதியிலும் காணப்படுகின்றன.

வம்சாவளி என்ற தலைப்பு நூல்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ளது. தொகுதி ஒன்றில்.

வமிசாவளி (பக். 35); வம்சாவளி (பக்.39)

ஜமீன்தாரி வம்முசாவழி (பக். 48): வமுஸ்தாவழி (பக்.72)

ஜமீன்தாரி வம்முசாவழி (பக் 124) வம்முஷாவழி (பக். 105)

என்று பலவாறாக உள்தலைப்புகள் அமைந்துள்ளன. கைபீது என்ற சொல்லும் இவ்வாறே அமைந்துள்ளது.

இராயர் சமஸ்தானத்தில் குமாரபட்டம் பெற்ற ஒருவன்

சோதெய நாயக்கன், சோதைய னாயக்கர், சொஙெசய னாயக்கர், சொதேய னாயக்கற் என்ற தொடர்களால் ஒரே வமிசாவளியில் (தொகுதி-1. பக். 35, 36) குறிக்கப்படுகிறான்.

இதே போல ஒரே வமிசாவளியில் குமாரன், தகப்பனார் என்ற சொற்களும் பலவகையாக அமைக்கப்பட்டுள்ளன. அவை,

குமாரனாகிய. குமரனாகிய; குமாறனாகிய; யிவர்குமாரன்; யிவற்குமாரன்.

சிருதொகப்பனார், தோப்பனார், தோகப்பனாரை;-(தொகுதி 1. பக் 26—36)

பல பக்கங்களில் சகாப்தம் என்ற சொல்—சகப்தம், சகார்த்தம், செகாபுத்தம், என வடிவெடுக்கிறது. இவ்வாறு நூற்றுக்கணக்கான தொடர்கள் அமைகின்றன.

## (ஏ) தலைப்புகள்-பக்கங்கள் தோறும்

ஒவ்வொரு பக்கத்திலும் தலைப்பில் நூல்பெயரும், உள் தலைப்பின் பெயரும் முறையே இடது, வலது பக்கங்களில் அமைவது உள்ளே தலைப்புகளைப் பிரித்துக் காண்பதில் எளிமை பயக்கும்.

முகவுரை, பொருளடைவு, நூல், தனிப்பாடல்கள், சிறப்புப் பெயர்அகராதி ஆகிய தலைப்புகளில்அமைந்துள்ள நூலின் எல்லாப் பக்கங்களிலும் 'திருவேங்கடநாதன்—வண்டுவிடு தூது' என்றே காணப்படுகிறது. உலா, கோவை ஆகியவற்றின் அமைப்பும் இத் தகையதே.

அம்மானை நூலுள் பதிப்புரை என்னும் தலைப்பு முறையாக அமைகிறது. உள்தலைப்புகள் என்னும் பகுதி சுசீலவள்ளல்—அம்மானை என்றே அமைகிறது. கொடுமணல் இலக்கியங்கள் முதற்பகுதி சிறிது மாறுபட்டும், பிற்பகுதிகள் முறையாகவும் அமைகின்றன. காதல் கொத்தில் காதல் கொத்து—பதிப்பாய்வுரை என்றும், காதல் கொத்து—உள்தலைப்பு அகரவரிசை, காதல் கொத்து—அருஞ்சொல் அகரவரிசை என்று அமைய வேண்டும். வமிசாவளிகளுள் முதல் இரு தொகுதிகள் இவ் வமைப்பில் முறையாக அமைந்துள்ளன. புராணமும் மனைநூலும் இவ்வமைப்பு முறைக்கு எடுத்துக்காட்டாய் அமைகின்றன.

## (உ) திருத்தப்பதிப்பு

சுவடிப் பதிப்புகள் ஆராய்ச்சியாளர்களுக்கு மட்டுமன்று. எனவே அனைவரும் புரிந்து கொள்ளும் அளவில் வெளியாக வேண்டும். சுவடியில் உள்ளதை மாற்றக்கூடாது என்ற கொள்கையுடன் வெளியாகும் நூல் ஆய்வாளர்களுக்கும் பயன்படாமல்

போவதுண்டு. காரணம் பொருள் விளங்காமையே; அதாவது திருத்திப்படிக்க இயலாமையே. திருந்திய பதிப்புகளே அவர்களாலும் வரவேற்கப்படுகின்றன. வேண்டுமானால் சுவடியில் உள்ளவாறும் ஒருபுறம் தரலாம்; அல்லது அடிக்குறிப்பில் விளக்கலாம். தூய பகுதியே நூலாக அமைய வேண்டும் இதனால்,

''மாமூலாய் சேர்ந்து வரப்பட்ட பூமியில் பைமேஷ் செய்கிற போது... யெல்கைத் தகராறென்று அமானியில் நிறுத்தியிறுக்கிற படியினாலேயும்... சீர்மைக்குத் தீர்வை சவுக்கியம் செய்து... காப்பத்தி லட்சிக்க வேண்டியது''.[60] என்ற தொடர்களுள் அமைந்த அடிக்கோடிட்டுள்ள சொற்களையெல்லாம் திருத்தி அமைத்து விடவேண்டும் என்பது பொருளன்று. அச்சொற்களுக்கு அடிக்குறிப்பில் பொருள் விளக்கினால் போதும். ஆனால்

''உத்தெசம் கிழ்மெல்வழி''—(வம்சாவளி 1. பக்.30)

''மெல் எழிதினதற்ப்படிக்கி''—( ,, 1. பக்.31)

''மண்டபம் கேற்ப்பகிரிகம் சதுற்சற்மம் 7½ துறத்துக்கு'' (வம்·III.பக் 54)

இவை போன்ற தொடர்களிலுள்ள எழுதினோர் பிழைகளையும், சுவடிகளில் அமையும் குறில் நெடில் வேறுபாடற்ற உயிர்மெய்களையும் முறையறிந்து திருத்திப் பதிப்பித்தல் தவறாகாது.

''அவர் நூலையே அச்சொரூபமாக எடுத்துப் பதிப்பிப்போர் ஓர் அக்ஷரமாவது மாற்றுதல் பெருந்தவறு என்பது யார்க்கும் உடன்பாடே என்ற கருத்துகளை காரண காரியங்களுடன் நன்கு அறிவோம். என்றாலும் வழி வழியாக ஏடுகள் படியெடுக்கப் பட்டுக் காப்பாற்றப்பட்டு வந்திருப்பதால் படியெடுப்போரால் பல பிழைகள் நேர்ந்துள்ளன என்பதையும் அறிவோம். இவை இவை இன்ன இன்ன சொற்களே; படியெடுப்போர் பிழையாக எழுதியுள்ளனர் என்பதை இடத்திற்கேற்ப மிகத் தெளிவாக அறியவும் முடிகிறது.''[61] என்பன போன்ற திருத்தப்பதிப்பு முறைக்கான கருத்துகள் இங்கு நோக்கத் தக்கனவாகும்.

## (ஊ) சுவடி முறையறிதல்

இகர ஈகார உயிர்மெய்கள் (கி, கீ; வி,வீ), எகர ஏகார உயிர் மெய்கள் (கெ, கே), ஒகர ஓகார உயிர் மெய்கள் (கொ, கோ)

60. வம்சாவளி - தொகுதி -1. பக். 76.
61. மனைநூல் - பதிப்புரை - பக், xxxiv

போன்றவற்றுள் குறில் நெடில் அறிய இயலா நிலை சுவடி எழுத்துக்களில் உண்டு. அவற்றை முடிவு செய்வது பதிப்பாசிரியர் கடமை. அவற்றிற்கு அடிப்படைக் காரணம் எகர ஒகரங்கள் புள்ளிபெற்று விளங்கிய பழைய எழுத்து முறையேயாகும். இவற்றையும் அப்படியே பதிப்பிப்பது முறையாகாது. இம்முறையிலும் தேவையானதை மாற்றாமலும் தேவையற்றதை மாற்றுவதும் வியப்பைத்தரும் பதிப்பு முறையாகிவிடுகிறது.

சுவடியில் உள்ள ஆறென்று கேட்டார்கள் என்ற தொடர் ஆறேன்று கேட்டார்கள்'[62] என்றும் முத்துவிரப்பனாயக்கர் என்ற தொடர் முத்து விரப்பனாயக்கர்[63] என்றும் பதிப்பிக்கப் பட்டுள்ளன.

யாரொன்று கெட்டாற்கள்[64] என்பது சுவடித்தொடர்

யாரென்று கெட்டரற்கள்[65] என்பது அச்சுத் தொடர்.

இதே போல,

ஊர் உண்டாக்க[66]—என்பது—உளர உண்டாக்க[67] எனவும்,

பாக்ஷாயிசெனம்[68]—என்பது—பாக்ஷாயிசனம்[69] எனவும,

சோளராசாவை—என்பது—சோளராசரவை[70] எனவும்

அமைந்துள்ளன. எறியோடு என்ற ஊரைப் பற்றிய செய்தியே சுவடியில் உள்ளது. அவ்வூர் ஈரோட்டை அடுத்துள்ள ஒரு சிற்றூர். இன்றும் அதே பெயரில் உள்ளது. அது எறியோடு (ஈரோடு) பாளையப்பட்டு'[71] என்று அடைப்புக்குறிக்குள் திருத்தம் பெற்றுள்ளது.

ருஅளஎ ஷு ஆகொஷ்ட்டுமீ ௩ய்[72] என்ற சுவடித்தொடர் (1807) ஆயிரத்து எண்ணூற்று ஏழாம் வருஷம் ஆகஸ்டு மாதம் 30 முப்பதாம் தேதியில்' 73 என்று வேண்டியவாறு திருத்தம் பெற்ற பகுதிகள் பதிப்புகளுள் இல்லாமலும் இல்லை.

62. வம்சாவளி - II பக். 27
63. ,, - II பக். 128.
64. அரசினர்சுவடி நூலகச்சுவடி - D.2851 - ஏடு 12.
65. வம்சாவளி தொகுதி i - பக் 23.
66. அரசினர்சுவடி நூலகச்சுவடி - D· 2851 - ஏடு - 13.
67. வம்சாவளி தொகுதி I - பக். 15,
68. ,, சுவடி D. 2851. ஏடு.9 b
69. வம்சாவளி தொகுதி I- பக். 21.
70. ,, ,, - பக். 77.
71. ,, ,, - பக். 92.
72. ஷை நூலகச் சுவடி - D. 3138-இறுதிப்பத்தி.

## (எ) பின்னிணைப்புகள்

ஒரே சுவடிக் கட்டில் பல பொருளுடைய நூல்கள் காணப்படுவதும் உண்டு. சுவடி தயாரிக்கப்பட்டு விட்ட அளவினாலும், பிற வசதிகள் காரணத்தாலும் இந்நிலை ஏற்பட்டு வந்துள்ளது. அவற்றில் உள்ள செய்திகள் ஏதேனும் ஓர் அடிப்படையில் தொடர்புள்ளனவாக இருந்தால், பதிப்பிக்கும் போது ஒரு முழு நூலை முடித்தபின் அதே சுவடியில் அமைந்த பிற சிறுபகுதிகளையும் முழு நூலை அடுத்துப் 'பின்னிணைப்பு' என்று கொடுத்துப் பதிப்பிப்பது ஒரு முறையாக இருந்து வருகிறது.

சுசீலவள்ளல் அம்மானை என்னும் நூலினுள் அமைந்துள்ள வர்க்க வெண்பா, பின் இணைப்பு என்று கொடுக்கப்படவில்லையாயினும் இம்முறையில் அமைந்ததே.

கொடுமணல் இலக்கியங்கள் என்ற தலைப்பினால் உள்ளே உள்ள அனைத்துப் பகுதிகளும் ஒரு நூலே என்று பெறப்படும். ஆயினும் கந்தசாமிக் காதல் என்னும் பகுதியைத் தவிரப் பிறவற்றைப் பின்னிணைப்பாகக் கொடுக்கப்பட்டவை என்றே பதிப்பாசிரியர் தம் ஆய்வு முன்னுரையின் இறுதிப் பத்தியுள் சுட்டுகிறார்.

திருவேங்கடநாதன் மேல் தனிப்பாடல்கள் என்ற பகுதியைப் பின்னிணைப்பு—2 என்றே சுட்டிப் பதிப்பித்திருக்கிறார் வண்டு விடு தூதின் பதிப்பாசிரியர். இப்பகுதி முப்பது பாடல்களைக் கொண்டது. அவற்றுள் கட்டளைக் கலித்துறைப் பாடல்கள் பத்து. அவை பத்தும் ஒழுங்காகவே உள்ளன. ஏடு எழுதினோர் சுவடி மாறியிருந்துள்ளதைக் காணாமல் எழுதிவிட்டதனால் ஒன்று முதல் ஏழு பாக்களும் எட்டாம் பாடலின் முதல் மூன்று அடிகளும் அடங்கிய ஏடு பின்னால் இருக்க, முன்னால் இருந்த எட்டாம் பாடலின் நான்காம் அடிமுதலாகப் பாடல்கள் தொடங்கப்பட்டுவிட்டன. முதல் ஏழு பாடல்கள் கிடைக்கவில்லை என்ற குறிப்போடு பதிப்பிக்கப்பட்டுவிட்டது. ஆனால் அடுத்த ஐந்து வெண்பாக்களைத் தொடர்ந்து அப்பாடல்கள் ஏழும் எட்டாம் பாடலின் முதல் மூன்று அடிகளும் அமைந்து நிறைவு பெற்றுள்ளன.

## முடிவு

சுவடிப் பதிப்புகளுக்கு எடுத்துக் காட்டாயமைந்துள்ள அனைத்துப் பதிப்புகளின் குறை, நிறைகள் அடுத்துப் பதிப்பிக்கும் பதிப்பாசிரியர்களுக்குச் சிறந்த வழிகாட்டிகளாக அமைகின்றன.

---

73. வம்சாவளி - தொகுதி I - பக். 17.

## 1981இல் சுவடிகளிலிருந்து பதிப்பிக்கப்பெற்ற நூல்கள்

| வ.எண் | நூல் | பதிப்பாசிரியர் | வெளியீடு | பக்கம் | விலை | குறிப்புகள் |
|---|---|---|---|---|---|---|
| 1 | தந்திவனப்புராணம் | டாக்டர் த. வே. வீராசாமி | உலகத்தமிழாரய்ச்சி நிறுவ வனம், சென்னை-600.13 | 124+230 | 15-00 | |
| 2 | மனைநூல் | பூ. சுப்பிரமணியம் | ,, ,, | 54+300 | 15-00 | |
| 3 | உவமான சங்கிரகம் | டாக்டர் இ. சுந்தரமூர்த்தி | தமிழ்ப்புத்தகாலயம், சென்னை-600005 | 48+64 | 6-00 | |
| 4 | காதல்கொத்து-குமாரலிங்க வேந்தன் காதல் சிவகங்கைஇராசேந்திர பூபதி காதல், கந்தர் காதல் | புலவர் ம. இராசேந்திரன் | தமிழ்நாடு அரசு தொல் பொருள் ஆய்வுத் துறை | 12+152 | 4-50 | |
| 5 | கொடுமணல் இலக்கியங்கள்-கந்தசாமிக் காதல், பொன்னையன் காதல், கொடுமணல் கோயில்கள், நாட்டுப் பாடல்கள், குருப்பு நாட்டுப் பட்டயம் தனிப்பாடல்கள் | புலவர் செ. இராசு | ,, ,, | 14+160 | 7-75 | |
| 6 | சங்கரமூர்த்திக்கோவை | புலவர் K. சுந்தரமூர்த்தி | ,, ,, | 8+110 | 6-00 | |
| 7 | சுசீலவள்ளல் அம்மானை வர்க்க வெண்பா | எஸ். சௌந்தரபாண்டியன் | ,, ,, | 12+147 | 8-25 | |

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| 8 | திருக்கீழ்வேளூர் உலா | அ. இராசேந்திரன் | ,, | ,, | 8+72 | 4-50 |
| 9 | திருவேங்கடநாதன் வண்டுவிடு தூது ,, தனிப்பாடல்கள் | மு. சண்முகம்பிள்ளை | ,, | ,, | 10+86 | 4-50 |
| 10 | பாளையப்பட்டுக்களின் வம்சாவளி தொகுதி-I | க. குழந்தைவேலன் | ,, | ,, | 8+128 | 6-75 |
| 11 | ,, தொகுதி-II. | க. குழந்தை வேலன் | ,, | ,, | 8+184 | 9-75 |
| 12 | ,, தொகுதி-III. | ந. மார்க்சீய காந்தி | ,, | ,, | 8+58 | 3-00 |
| 13 | கரந்தைநல்லபிள்ளை பேரில் சித்திரமடல் | கோ. பிரேமகுமாரி, | தட்டச்சு | வடிவம்—உலகத் தமிழாராய்ச்சி | 80 | — |
| 14 | பிரபந்தத் தமிழ் | புலவர் லலிதாநடராசன் | ,, | ,, நிறுவனம், சென்னை—600113 | 80 | — |
| 15 | பூசையந்தாதி | க. பேபி | ,, | ,, | 120 | — |
| 16 | மீனாட்சியம்மன் திருப்புகழ் | இரா. மாதவன், | ,, | ,, | 203 | — |
| 17 | முருகன் அந்தாதி | வே. சதாசிவம் | ,, | ,, | 92 | — |

# 25. தமிழ்ப் பாடத்திட்டம்

அ. பிச்சை

கல்வித் துறையில் பாடத்திட்டம் உருவாக்குதல் இன்று ஒரு கலையாகப் போற்றப்படுகின்றது. திட்டவட்டமான பாடத்திட்டம் இல்லாவிட்டால் பயன்தரக் கூடிய கல்வியைக் கொடுக்க முடியாது. 1981-இல் உயர் கல்வித் தமிழ்ப் பாடத்திட்டங்கள் நன்றாக அமைந்துள்ளன.

## முன்னுரை

தமிழக உயர் கல்வி வரலாற்றில் 1981-ஆம் ஆண்டு குறிப்பிடத்தக்கது. ஏனென்றால், இந்த ஆண்டு செப்டம்பரில்தான் தஞ்சையில் தமிழ்ப் பல்கலைக்கழகம் தொடங்கப்பட்டது. மேலும், திருச்சியிலும் கோவையிலும் இரண்டு புதிய பல்கலைக் கழகங்கள் செயல்படச் சட்டங்கள் இயற்றப்பட்டன. புதிய பல்கலைக் கழகங்களின் தோற்றம் உயர் தமிழ்க் கல்வியில் புதிய திருப்பங்களையும் மறுமலர்ச்சியையும் எதிர்காலத்தில் ஏற்படுத்தும் என்று நம்புவோம். இம்மதிப்பீட்டாய்வுக் கட்டுரை பொதுவாகப் பாடத் திட்டம் பற்றியும் மூன்று பல்கலைக் கழகங்களின் கீழுள்ள கல்லூரிகளிலும் அஞ்சல் வழிக் கல்வி நிறுவனங்களிலும் பின்பற்றப் படுகின்ற தமிழ்ப் பாடத்திட்டங்கள் பற்றியும் எடுத்துரைக்கின்றது. மேலும், பாடத்திட்டம் பற்றி நிகழ்ந்த கருத்தரங்கில் விளைந்த கருத்துகளைத் தொகுத்தளிக்கின்றது; இறுதியில் சில பரிந்துரைகள் தரப்பட்டுள்ளன.

## பாடத்திட்டம்

எந்த விதமான கல்வி முறைக்கும் ஒரு குறிப்பிட்ட பாடத் திட்டம் வரையப்படுகின்றது. இன்று கல்வித் துறையில் பாடத் திட்டம் உருவாக்குதலே ஒரு தனிக் கலையாகப் போற்றப்படு

கின்றது. கல்வித் திட்டம் நினைத்த பயனை அளிக்க வேண்டு மானால், தரமான - பொருத்தமான - பாடத் திட்டத்தைத் தயாரித்து அமுலாக்க வேண்டும். சுவரின்றிச் சித்திரம் வரைய முடியாது. அதுபோலத் திட்டவட்டமான பாடத்திட்டம் இல்லா விட்டால் பயன்தரக் கூடிய கல்வியைக் கொடுக்க முடியாது.

பாடத்திட்டம் என்பது குறிக்கோள்கள் (objectives), பாடப் பொருள்கள் (content), கற்பிக்கும் முறைகள், மற்றும் கற்பிக்கப் பயன்படும் கருவிகள் (Teaching methods and Aids), மதிப்பிடல் (Assessment) ஆகிய அம்சங்களை விளக்கமாகச் சொல்லுவ தாகும். பாடத்திட்டம் என்பது மாற்ற இயலாத சட்டம் அன்று. காலத்திற்கு ஏற்ப, தேவைக்கு ஏற்ப, கற்போரின் விருப்பம் மற்றும் ஆற்றலுக்கு ஏற்ப மாற்றிக்கொள்ள இடமளிப்பதே சிறந்த பாடத் திட்டமாகும். கற்போரின் மற்றும் சமுதாயத்தின் தேவை களை நிறைவு செய்து, பிரச்சினைக்குத் தீர்வு காண்பதே கல்வித் திட்டத்தின் உயர்ந்த நோக்கம் என்பதை மறந்துவிடக் கூடாது. நெகிழ்ச்சியையும் (flexiblity) பல்துறை அணுகு முறையையும் (inter-displinary approach) பெற்று, சூழலுக்குப் பொருத்தமாக வும் (relevance), ஒழுங்கமைப்போடும் (systematic organisation) அமைவது ஒரு நல்ல பாடத்திட்டமாகும்.

குறிக்கோள்களைத் தெளிவாக எடுத்துரைத்தலே பாடத் திட்டத்தின் முதல் நிலை. கற்போரின் மற்றும் சமுதாயத்தின் (1) தேவைகள் (2) பிரச்சினைகள் (3) விருப்பங்கள் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு குறிக்கோள்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். இதற்காகப் பாடத்திட்டம் வரைபவர்கள் முன் னோட்ட ஆய்வு (survey) நடத்திக் கற்போரின் மற்றும் சமுதாயத் தின் தேவைகளையும், பிரச்சினைகளையும், விருப்பங்களையும், தெரிவு செய்ய வேண்டும். பாடத்திட்டத்தின் பொதுக் குறிக் கோள்களையும், ஒவ்வொரு பாடத்திட்டத்தின் சிறப்புக் குறிக் கோள்களையும், பாடத்திட்டத்தில் வரையறுப்பது மிகவும் இன்றி யமையாதது ஆகும்.

குறிக்கோள்களை வரையறுத்த பின்பு அக்குறிக்கோள்களை அடைவதற்கான பாடப்பொருள்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும். தேர்ந்தெடுக்கப்படும் பாடப் பொருள்கள் கற்போரின் மற்றும் சமுதாயத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்வதாகவும் பிரச்சினை களுக்குத் தீர்வுகாண வழிகாட்டுவதாகவும், விருப்பத்தை

நிறைவு செய்வதாகவும் அமைதல் வேண்டும். தேர்ந்தெடுக்கப் பட்ட பாடப்பொருள்கள் பல இயல்களாகப் (units/modules) பிரிக்கப்பட வேண்டும். ஒவ்வொரு பாடமும் ஏதாவது ஒரு தேவையை / பிரச்சினையை / விருப்பத்தை நோக்கமாகக் கொண்டு அமைய வேண்டும். பாடங்களை ஒரு தர்க்க ரீதியான முறையில் (logical progression) அமைக்க வேண்டும். அதாவது, பாடங்கள் எளிமையிலிருந்து கடினத்திற்கும், அறிந்ததிலிருந்து அறியாததற் கும் கற்போரை அழைத்துச் செல்ல வேண்டும்; பாடம் நடத்து வதற்குரிய காலக் கெடுவையும் பாடத்திட்டம் சுட்டிக் காட்ட வேண்டும்.

குறிப்பிட்ட பாடப்பொருள்களைக் கற்றுத் தருவதற்குச் சில குறிப்பிட்ட முறைகள் கையாளப்படுகின்றன. பொருளுக்கு ஏற்ப முறையைக் கையாண்டால் பாடப்பொருள் கற்பவரை அடையும். சொற்பொழிவு, உரையாடல், கேள்விமுறை, கலந்துரையாடல், விவாதம், பங்கேற்று நடித்தல் (role-play), நாடகமாகக் காட்டல், களப்பார்வை, திட்டமுறை, பாவனை விளையாட்டு (Simulation games), செயல்விளக்க முறை போன்ற பல முறைகளைக் கையா ளலாம். ஒவ்வொரு பாடத்திலும் கையாள வேண்டிய முறையை யும் பயன்படும் சாதனங்களையும் பாடத்திட்டம் ஓரளவு கோடிட்டுக் காட்ட வேண்டும்.

பாடத்திட்டக் குறிக்கோளின்படி கற்போர் அறிவு (know-ledge), திறன் (skill), மதிப்பு (value) ஆகியவற்றைப் பெற்று விட்டாரா என்று கணிப்பதே மதிப்பீட்டின் முக்கியமான நோக்க மாகும். குறுந்தேர்வு, பெருந்தேர்வு ஆகியவற்றால் புறமதிப் பீடும் வாய்மொழித் தேர்வு, களப்பார்வையில் ஈடுபாடு, ஆய்வுக் கட்டுரை சமர்பித்தல் ஆகியவற்றால் அகமதிப்பீடும் செய்ய வேண்டும். கற்போரை மட்டுமின்றி, தயாரிக்கப்பட்ட பாடப் பொருளும் கற்பிக்கும் முறைகளும் எந்த அளவுக்குக் கற்போருக் குப் பொருத்தமாக அமைந்துள்ளன என்று மதிப்பிட வேண்டும். கண்டறியப்பட்ட குறைகளின் அடிப்படையில் பாடத்திட்டத்தைச் சீர்திருத்த வேண்டும். படாத்திட்டத்தைச் செயல்படுத்திய பின்பு பாடத் திட்டத்தையும் இவ்வாறு மதிப்பீடு செய்ய வேண்டும். கல்வித் திட்டம் உருப்பட இது அவசியமாகச் செய்யப்பட வேண்டிய ஒன்று.

பாடத்திட்டம் வரைதல் ஒரு சுழல் முறை (cyclic process) ஆகும். இது மதிப்பீட்டோடு முடிந்து விடுவதில்லை; அல்லது

குறிக்கோள் தயாரிப்பதில் மட்டும் தொடங்குவதில்லை. ஏற்கனவே தயாரிக்கப்பட்ட பாடத்திட்டம் சமூக, அரசியல், பொருளாதார, கல்விக் கோட்பாடுகளுக்கு ஏற்ப, காலந்தோறும் புதியவடிவினைப் பெற்று வரும். பாடத்திட்டத்தை மனுச் சட்டமாக மாற்றாமல் சமுதாயத்தின் வளர்ச்சிக்கும் சிந்தனைக்கும் ஏற்ப வளைந்து கொடுக்கத்தக்க வகையில் உருவாக்க வேண்டும்.

## சான்றிதழ்ப் படிப்புகள்

சென்னை மற்றும் மதுரைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைகளும் உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனமும் தமிழில் சான்றிதழ் வகுப்புகளையும் டிப்ளோமாவகுப்புகளையும் நடத்துகின்றன. இவ் வகுப்புகளில் பெரும்பாலும் தாய்மொழியாகத் தமிழைக் கொண்டிராத பிற மாநிலத்தவர்களும் வெளிநாட்டவர்களும் சேர்ந்து படிக்கின்றனர். உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம் சுவடியியலிலும் மொழிபெயர்ப்பியலிலும் ஓராண்டு டிப்ளோமா வகுப்புகளை நடத்துகின்றது.

சென்னைப் பல்கலைக்கழகச் சான்றிதழ் மற்றும் டிப்ளோமா படிப்பு ஒவ்வொன்றும் இரண்டு தாள்களைக் கொண்டது. சான்றிதழ்ப் பாடத்திட்டத்தில் உரைநடை, செய்யுள், இலக்கணம் மொழிப்பயிற்சி, கட்டுரைப் பயிற்சி, மொழிபெயர்ப்பு ஆகியவை இடம் பெறுகின்றன. டிப்ளோமா பாடத் திட்டத்தில் உரைநடை, செய்யுள், இலக்கணம், கட்டுரை வரைதல், மொழிபெயர்ப்பு, புரிதிறன் பயிற்சி ஆகியவை இடம் பெறுகின்றன. இப்படிப்புகள் பிற மாநிலத்தவர்கள் படிக்க ஏற்றவை.

மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தில் பேச்சுத் தமிழில் 'ஆழ்ந்த படிப்பு' ஒன்று பன்னிரண்டு வாரங்களுக்கு அளிக்கப்படுகின்றது. இங்கே சான்றிதழ் மற்றும் டிப்ளோமா வகுப்புகள் ஒவ்வொன்றும் ஓராண்டு இரண்டு பருவங்களில் நடத்தப்படுகின்றன. சான்றிதழ் வகுப்பில் (1) பேச்சுத் தமிழ் (2) ஆரம்ப எழுத்துத் தமிழ் (3) தற்கால உரைநடை (4) தற்காலக் கவிதை (5) தமிழின் அமைப்பு (6) தமிழர் பண்பாடு என்று ஆறு பாடங்கள் தரப்பட்டுள்ளன. இவைகள் முதல் பருவத்தில் அடிப்படை நிலையிலும் இரண்டாம் பருவத்தில் உயர்நிலையிலும் அமையும். ஒவ்வொரு பருவத்திலும் மாணவர் மூன்று பாடங்கள் எடுக்க வேண்டும். இதைப் போலவே டிப்ளோமா வகுப்பிலும் (1) பேச்சுத் தமிழ் (2) தற்கால உரைநடை (3) தற்காலக் கவிதை (4) இடைக்காலக்

கவிதை(5) சங்கக் காலக் கவிதை (6) தமிழ் இலக்கணம் (7) சமய இலக்கியங்கள் (8) பழங்கால/ இடைக்கால/ தற்காலத் தமிழின் அமைப்பு(9)தமிழர் பண்பாடு ஆகிய பாடங்கள் உள்ளன. இவைகள் முதல் பருவத்தில் அடிப்படை நிலையிலும் இரண்டாம் பருவத்தில் உயர்நிலையிலும் அமையும், தமிழர் பண்பாடு கருத்தரங்குப் பாட மாகவும் ஆய்வுத் திட்டப் பாடமாகவும் அமையும். தேர்வு முறை அகமதிப்பீட்டை மட்டும் சார்ந்தது. பாடநூல் மாணவர்களின் தேவைக்குத் தக்கவாறு பரிந்துரை செய்யப்படும்.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் நடத்தும் மொழி பெயர்ப்பு டிப்ளமோ பாடத்திட்டத்தில் மூன்று தாள்கள் உள்ளன. மொழி பெயர்ப்புக் கோட்பாடுகளும் உத்திகளும் என்பது முதல் தாள். இலக்கிய, விஞ்ஞான, தொழில்நுட்ப மொழி பெயர்ப்பு நூல்களை வரலாற்று ரீதியாகப் படித்தல் என்பது இரண்டாம் தாள். ஐம்பது பக்கத்திற்குக் குறையாத இரண்டு சிறு நூல்களை மொழி பெயர்த்தல் என்பது மூன்றாம் தாள். இத்தாள் ஒரு திட்டப்பணி (Project work) போல அமைகின்றது. இத்திட்டப் பணியின் கீழ் ஓர் ஆங்கில நூலைத் தமிழிலும், ஒரு தமிழ் நூலை ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்க வேண்டும். ஒவ்வொரு தாளின் கீழும் பாடக்குறிப்புகள் விளக்கமாகத் தரப்பட்டுள்ளன.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் கற்பிக்கும் சுவடியியல் டிப்ளமோ பாடத் திட்டத்திலும் மூன்று தாள்கள் உள்ளன. சுவடி யியலைப் பற்றிய பொதுவான கொள்கைகளைக் கொண்டுள்ளது முதலாம் தாள். இதில் மொத்தம் பதினான்கு இயல்கள் இடம் பெற்றுள்ளன. இரண்டாம் தாள் தமிழ் வரலாறு பற்றியது. இதில் பதினாறு இயல்கள் தரப்பட்டுள்ளன. தமிழ் எழுத்துக்களின் தோற்றமும் வளர்ச்சியும் என்பது மூன்றாம் தாள். இதன் கீழ் ஐந்து இயல்கள் உள்ளன. ஒவ்வொரு தாளின் மற்றும் இயலின் கீழ் நுட்பமான பாடக்குறிப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன.

## பட்டமுன்படிப்பு

1977-ஆம் ஆண்டு மதுரை காமராசர் பல்கலைக் கழகம் வெளிப் பல்கலைக் கழகத் திட்டத்தைத் தொடங்கியது. தமிழில் எழுதப் படிக்கத் தெரிந்த யாவரும் இத்திட்டத்தில் சேர்ந்து படிக் கலாம். பதினான்கு வயது நிரம்பிய யாவரும் இதில் சேரலாம். 1981-ஆம் ஆண்டு முதல் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திலும் அடிப்படை நிலைக்கல்வி (Foundation Course) என்னும் பெயரில்

பட்டமுன் படிப்பு நடத்தப்படுகின்றது. இதில் பத்தாம் அல்லது பதினொன்றாம் வகுப்பு தேறியோர் மட்டும் சேர்ந்து பயன்பெற லாம். இந்தப் பட்ட முன் படிப்பில் தமிழ் ஒரு கட்டாயப் பாடமாக உள்ளது.

வெளிப் பல்கலைக் கழகப் பாடத் திட்டத்தின் ஓராண்டு தொடக்க நிலையிலும், இரண்டாண்டு அடிப்படை நிலையிலும் தமிழ் ஒரு பாடமாக உள்ளது. தொடக்க நிலையிலும் அடிப்படை நிலையிலும் செய்யுள் திரட்டு, உரை நடைக்கோவை, கட்டுரைப் பயிற்சி, இலக்கணம், துணைநூல்கள் ஆகியவை உண்டு. தொடக்க நிலைச்செய்யுள் திரட்டில் வாழ்த்துப் பகுதி, நீதிப் பகுதி, கதைப் பகுதி இக்காலக் கவிதைப் பகுதி ஆகியவை இடம் பெறுகின்றன. அடிப்படை நிலைச் செய்யுள் திரட்டில் மேற்கூறியவற்றோடு சங்கச் செய்யுட்கள் சேர்க்கப்பட்டுள்ளன. இரண்டு நிலைகளிலும் பன்னி ரண்டு கட்டுரைகளைக் கொண்ட உரைநடைக் கோவை அமை கின்றது. துணை நூல் தொடக்க நிலைக்கு இல்லை. அடிப்படை நிலை முதலாமாண்டிற்கு 130 பக்கமுள்ள துணை நூலும், இரண்டாமாண்டிற்கு 150 பக்கமுள்ள துணை நூலும் பரிந் துரைக்கப்பாட்டுள்ளன.

## பட்டப் படிப்பு

தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக் கழகத்தின் கீழ் வருகின்ற வேளாண்மைக் கல்லூரிகளிலும், கால்நடை மருத்துவக் கல்லூரி யிலும், மீன்வளக் கல்லூரியிலும் தமிழ் ஒரு பாடமாக இடம் பெறு கின்றது. ஆனால், பொறியியற் கல்லூரிகளிலும், மருத்துவக் கல்லூரிகளிலும், சட்டக் கல்லூரிகளிலும் தமிழ்ப் பாடம் இல்லை. மதுரை வேளாண்மைக் கல்லூரியில் நடத்தப்படும் மனை இயல் (Home Seience) இளங்கலைப் படிப்புக்குத் தமிழ் (முதல் பாக(ம் உண்டு.

வேளாண்மைப் பல்கலைக் கழகம் தனது மூவகைப் பட்டக் கல்லூரிகளின் பாடத்திட்டங்களிலும் தமிழ் பற்றி ஒரு தாள் வைத் துள்ளது. இக்கல்லூரிகளில் முப்பருவ முறை உள்ளது. மாண வர்கள் முதலாண்டின் முதல்பருவத்தில் தமிழைப்பயில்கின்றார்கள். ஒரு மணிநேரம் கோட்பாடும் (Theory) மூன்று மணி நேரம் செய்முறைப் பயிற்சியும் (Practlcal) உண்டு. பாடத்திட்டத்தில் தமிழ்ப் பயிற்சியின் மூன்று நோக்கங்கள் தெளிவாகத் தரப்

பட்டுள்ளன. கிராம மக்களோடு தொடர்பு கொள்ளும் நிலையிலும், வேளாண்மை அதிகாரிகளாகப் பணியாற்றச் செல்லும் விரிவாக்கப் பணி நிலையிலும், பிறருடன் பழகும் போதும், தொடர்பு கொள்ளும் போதும், பண்பாட்டு நிலையிலும் பெற வேண்டிய மொழிப் பயிற்சியைப் பற்றிய தமிழ்ப் பாடத்திட்டம் ஆகும்.

பேச்சுப் பயிற்சி, எழுத்துப் பயிற்சி இவ்விரண்டும் பெறுவதற்கான மொழிப் பயிற்சி, மொழி பெயர்ப்பு முறைகள் ஆகியவற்றை அளிப்பதே பாடத்திட்டத்தின் பொருளடக்கமாகும். தமிழ் இலக்கிய வரலாற்றில் பொதிந்துள்ள வேளாண்மை, கால்நடை, மீன்வளம் பற்றிய செய்திகளை அந்த அந்தப் பட்டப் படிப்பு மாணவர்களுக்குக் கற்பித்தலும் பாடத்திட்டத்தில் இடம் பெறுகின்றது. கட்டுரை, கதை, கவிதை, உரையாடல் வடிவங்களின் வழியாக வேளாண்மை, கால்நடை, மீன்வளம் பற்றிய செய்திகளை எடுத்துரைக்கப் பயிற்சி அளிக்கப்படுகின்றது. கருத்தரங்கம், பட்டிமன்றம், கவியரங்கம், கலந்துரையாடல், பேட்டிகாணல் வழியாகப் பேச்சுத் திறன் வளர்ப்பதற்கும் பயிற்சி தரப்படுகின்றது. விரிவாக்கப் பணிக்குத் தேவையான விளம்பரச் சொற்றொடர், துண்டுப் பிரசுரம், மடிப்பிதழ்கள், கையேடுகள் தயார் செய்தல் ஆகியவற்றிலும் செய்முறைப் பயிற்சி அளிக்கப்படுகின்றது. அறிவியல் கட்டுரைகள் வரைதல், கலைச் சொல்லாக்கம் ஆகியவையும் இடம் பெறுகின்றன. பரிந்துரை செய்யப்படும் உரைநடை நூல் ஒன்றும், துணை நூல் ஒன்றும் கற்க வேண்டும்.

மனை இயல் பட்டப்படிப்பு மாணவர்கள் மூன்று ஆண்டுகளிலும் தமிழ்ப் பாடம் படிக்கின்றனர். முதலாண்டில் தமிழ் இலக்கிய வரலாறு கற்க வேண்டும். இரண்டாமாண்டில் தற்காலத் தமிழ் இலக்கியம் (வாய்மொழி இலக்கியங்கள் உள்பட) கற்க வேண்டும். மூன்றாம் ஆண்டில் தமிழர் நாகரிகமும் பண்பாடும் என்னும் பாடத்தைக் கற்க வேண்டும். மூன்று ஆண்டுகளிலும், கட்டுரை, மொழிபெயர்ப்பு, பேச்சுப் பயிற்சி, எழுத்தாக்கம் ஆகியவை செய்முறைகளாக இடம் பெறுகின்றன.

கலைக் கல்லூரியின் இளங்கலைப் பட்டப் படிப்பில் தமிழ் முதற்பகுதியாக இடம் பெறுகின்றது. சென்னை. மதுரை. அண்ணாமலை பல்கலைக் கழகங்களில் முதற் பகுதித் தமிழில் நான்கு தாள்கள் உள்ளன, ஒவ்வொரு பருவத்திற்கும், ஒரு தாள்

வீதம் ஆண்டுக்கு இரண்டு தாள்களும் எழுத வேண்டும். செய்யுள் மற்றும் உரைநடை இலக்கியங்கள், இலக்கணம், இலக்கிய வரலாறு, கட்டுரைத் திறன் ஆகியவை பாடத்திட்டத்தில் இடம் பெறுகின்றன.

ஒவ்வொரு பல்கலைக் கழகமும் தன் எல்லைக்கு உட்பட்ட கல்லூரிகளுக்குச் செய்யுள் திரட்டினை வெளியிடுகின்றது. சங்க காலம் முதற்கொண்டு தற்காலம் வரையுள்ள செய்யுட்கள் தொகுத்துத் தரப்படுகின்றன. தற்காலச் செய்யுள், பக்தி மற்றும் சிற்றிலக்கியம், காப்பியச் செய்யுள், சங்கச் செய்யுள் என்னும் முறையில் வரிசைப்படுத்திச் சென்னைப் பல்கலைக் கழகம் வெளியிட்டுள்ளது. மதுரைப் பல்கலைக் கழகம் ஏறக்குறைய இதே பிரிவை இலக்கிய வரலாற்று அடிப்படையில் பண்டை இலக்கியம், காப்பிய இலக்கியம், இடைக்கால இலக்கியம்,இக்கால இலக்கியம் என்னும் முறையில் செய்யுட்களைத் தந்துள்ளது. அண்ணாமலைப் பல்கலைக் கழகம் பண்டை, இடை, தற்காலச் செய்யுள்இலக்கியங் களைக் கலந்து தந்துள்ளது.

ஓராசிரியர் எழுதிய உரைநடை நூலும், பல ஆசிரியர்கள் எழுதிய உரைநடை நூலும் சென்னைப் பாடத்திட்டத்தில் இடம் பெற்றுள்ளன. இவற்றோடு உரைநடை, நாடகம், புதினம் ஆகியன வும் கற்க வாய்ப்புண்டு. மதுரைப் பாடத்திட்டத்தில் ஓராசிரியர் உரைநடை நூலும், செய்யுள் மற்றும் உரைநடை நாடகங்களும், நாவலும், சிறுகதைத் தொகுப்பும் உள்ளன. அண்ணாமலைப் பாடத்திட்டத்தில் ஓராசிரியர் உரைநடை நூலும், நாவலும், செய்யுள் நாடகமும் இடம் பெறுகின்றன. சென்னையிலும் அண்ணாமலையிலும் சிறுகதைத் தொகுப்புத் தரப்படவில்லை. சென்னைப் பாடத்திட்டத்தில் செய்யுள் நாடகம் இல்லை. அண்ணாமலைப் பாடத்திட்டத்தில் உரைநடை நாடகம் இல்லை.

சென்னைப் பாடத்திட்டம் முதற் பருவத்தில் சொல்-தொடர் இலக்கணத்தையும், இரண்டாம் பருவத்தில் சொல்-தொடர் இலக்கணத்துடன் பிரபந்த இலக்கணத்தையும், மூன்றாம் பருவத் தில் சொல்-தொடர் இலக்கணத்தோடு யாப்பையும் அணியையும், நான்காம் பருவத்தில் சொல்-தொடர் இலக்கணத்துடன் பொருள் இலக்கணத்தையும் கற்க வேண்டும் என்று வரையறுத்துக் கூறுகின் றது. மதுரைப் பாடத்திட்டத்தின்படி ஐந்திலக்கணங்களும் செய் யுட் பகுதியை ஒட்டி (applied grammar) அமைகின்றன. அண்ணா

மலைப் பாடத்திட்டம் ஒவ்வொரு பருவத்திலும் ஒவ்வொரு வகையான இலக்கணம் கற்றுக் கொடுக்க வலியுறுத்துகின்றது. முதல் பருவத்தில் எழுத்திலக்கணமும், இரண்டாம் பருவத்தில் சொல்லிலக்கணமும், மூன்றாம் பருவத்தில் யாப்பு, மற்றும் அணி இலக்கணங்களும், நான்காம் பருவத்தில் பொருள் இலக்கணமும் கற்க வேண்டும். சென்னைப் பாடத்திட்டத்தில் எழுத்து இலக்கணம் பற்றிய குறிப்பு இல்லை.

சென்னை மற்றும் அண்ணாமலைப் பாடத்திட்டங்களில் இலக்கிய வரலாறு தனிப் பாடமாக அமைகின்றது. ஆனால், மதுரையில் தனிப் பாடமாகவோ தனித் தாளாகவோ அமையாமல் ஒவ்வொரு காலகட்ட இலக்கியத்தோடு படிக்க வேண்டி உள்ளது. இலக்கிய வகை, இலக்கியம் தோன்றிய சமுதாயப் பொருளாதாரப்பின்னணி ஆகியவற்றின் அடிப்படையில் இலக்கிய வரலாறு கற்பிக்க வேண்டும் என்று மதுரைப் பாடத்திட்டம் வலியுறுத்துகின்றது.

மூன்று பல்கலைக் கழகப் பாடத்திட்டங்களிலும் பொதுக் கட்டுரை இடம் பெறுகின்றது. மதுரையிலும் அண்ணாமலையிலும் மொழி பெயர்ப்புப் பயிற்சி ஓராண்டு இடம் பெறுகின்றது. ஆனால், சென்னைப் பாடத்திட்டத்தில் மொழிபெயர்ப்பு இரண்டு ஆண்டுகளிலும் இடம் பெறுகின்றது. முதலாண்டில் 'பொதுப் பொருள்' தழுவியும், இரண்டாம் ஆண்டில் 'அலுவல் நிர்வாகம்' தழுவியும் மொழிபெயர்ப்புப் பகுதி இடம் பெறுகின்றது. மதுரை பருவ மற்றும் அல்பருவ முறைப் பாடத்திட்டங்களில் படைப்புத் திறனும் பெற பயிற்சி அளிக்கப்படுகின்றது. கவிதை அல்லது சிறு கதை எழுதலாம். சென்னையிலும் அண்ணாமலையிலும் படைப்புத் திறன் பற்றிக் குறிப்பு இல்லை.

இளங்கலைப் பட்டத்திற்குத் தமிழைத் தலைமைப் பாடமாக எடுத்துப் படிக்கலாம். இது மூன்றாம் பகுதியாக இடம் பெறும். இப்பட்டம் பெறுவதற்குச் சென்னையிலும் அண்ணாமலையிலும் 16 தாள்கள் எழுத வேண்டும்; மதுரையில் 12 தாள்கள் எழுத வேண்டும். இலக்கியம், இலக்கணம், இலக்கிய வரலாறு, இலக்கியத் திறனாய்வு, தமிழக வரலாறு, கல்வெட்டுகள். கட்டுரை ஆகியவை பாடத்திட்டத்தில் இடம் பெற்றுள்ளன. சென்னையில் துணைப் பாடம் (Auxiliary Subjects) என்னும் பிரிவு உண்டு. மதுரையில் சிறப்புப் பாடம் (Special Subjects) என்னும் பிரிவு உண்டு.

அண்ணாமலை அஞ்சல் வழிக் கல்வியில் பி.ஏ. இளங்கலைத் தமிழ்ப் பட்டப்படிப்பு இல்லை.

சென்னை, மதுரைப் பல்கலைக்கழகப் பாடத்திட்டங்களில் இக்கால இலக்கியம், இடைக்கால இலக்கியம், பண்டை இலக்கியம் என்ற வரிசை முறையில் மூன்று கால கட்ட இலக்கியங்கள் இடம் பெறுகின்றன. சென்னையில் ஒவ்வொரு காலகட்டத்திற்கும் இரண்டு தாள்கள் உள்ளன. ஆனால் மதுரையில் மூன்று கால கட்டத்திற்கும் மூன்று தாள்கள் உள்ளன. இரண்டிலும் தற்கால இலக்கியப் பிரிவில் உரைநடைத் தொகுதி, நாடகம், புதினம், சிறு கதை ஆகியவை இடம் பெறுகின்றன. அண்ணாமலையில் மூன்று தாள்கள் உள்ளன. மூன்று காலகட்ட இலக்கியங்களிலும் கலந்து தரப்பட்டுள்ளன. ஓர் ஒழுங்கான வரன்முறை குறிப்பாகப் பின் பற்றப்படவில்லை.

மூன்று பல்கலைக் கழகப் பாடத்திட்டங்களில் ஐந்திலக்கணங்கள் கற்க வாய்ப்பு உண்டு. இலக்கணப் பாடத்தில் சென்னையிலும் நான்கு தாள்கள் உள்ளன. ஆனால் அண்ணாமலையில் ஐந்து தாள்கள் உள்ளன மூன்றிலும் திராவிட மொழி ஒப்பிலக்கணம் கற்றுத்தரப்படுகின்றன. ஆனால் மதுரையில் தனித் தாளாக இல்லை. நன்னூல், யாப்பருங்கலக் காரிகை, தண்டியலங்காரம், நம்பியகப்பொருள், புறப்பொருள் வெண்பா மாலை, ஆகியவைகள் ஆழ்ந்து படிக்க வேண்டிய நூல்களாகப் பரிந்துரை செய்யப்பட்டுள்ளன. மதுரைப் பாடத்திட்டம் நன்னூலைப் புதிய மொழியியற் கண்ணோட்டத்தோடு ஒப்பிட்டுக் கற்பிக்கவேண்டும் என்று குறிப்பிடுகின்றது. சென்னையில் தமிழ் மொழி வரலாறு தனித் தாளாக உள்ளது. ஆனால் மதுரையிலும் அண்ணாமலையிலும் அவ்வாறு இல்லை.

சென்னையில் தமிழக வரலாறும் பண்பாடும் என்பது இரண்டு தாள்களில் துணைப்பாடமாகத் தரப்பட்டுள்ளது. அண்ணாமலையில் இது இரண்டு தாள்களில் அமைகின்றது. மதுரையில் ஒரே தாளில் இடம் பெறுகின்றது. கல்வெட்டியல் அண்ணாமலையில் மட்டும் ஒரே தாளில் அமைகின்றது. மற்ற இரண்டு பாடத் திட்டங்களிலும் கல்வெட்டு இடம் பெறவில்லை.

சென்னைப் பல்கலைக்கழகப் பாடத்திட்டத்தில் இலக்கியத் திறனாய்வு தனித்தாளாக அமைகின்றது. மதுரையில் இலக்கிய வரலாறும் இலக்கியத் திறனாய்வும் சேர்ந்து அமைகின்றன,

அண்ணாமலையில் இலக்கிய வரலாறும் இலக்கியத் திறனாய்வும் இடம் பெறவில்லை. இதற்குப் பதிலாகக் கட்டுரைத் திறனில் இரண்டு தாள்கள் தரப்பட்டுள்ளன. செய்யுள் பொழிப்பு, பொதுக் கட்டுரை, முடங்கல் வரைதல், குறிப்பு எழுதுதல், மொழி பெயர்ப்பு, சுருக்கி வரைதல் ஆகியவை கட்டுரைத் திறனில் இடம் பெறுகின்றன. இவ்விரண்டு தாள்களும் சென்னையிலும் மதுரை யிலும் இல்லை.

மதுரைப் பாடத்திட்டத்தில் மட்டும் சிறப்புப் பாடம் என்னும் பிரிவு உண்டு. இது பருவ மற்றும் அல்பருவ முறைக்கும் பொது. பருவ முறையில் கற்பவர்கள் மூன்று தாள்களிலும், அல்பருவ முறையில் கற்பவர்கள் ஒரு தாளிலும் சிறப்புப் பாடத்தைத் தேர் வில் எழுதுவர். நாடகவியல், இதழியல், மொழியியல், மொழி பெயர்ப்பு என்னும் நான்கு சிறப்புப் பாடங்கள் பருவ முறைக்குத் தரப்பட்டுள்ளன. மதுரை அஞ்சல் வழிக் கல்வியில் 'நாடகவியல்' மட்டும் கற்க வாய்ப்புண்டு.

மருத்துவம், பொறியியல், வேளாண்மை ஆகிய படிப்புகளுக் குத் தனிக் கல்லூரிகள் இருப்பதைப் போன்று தமிழை மட்டும் முழுமையாகப் படிக்கத் தமிழ்க் கல்லூரிகள் உள்ளன. இக்கல்லூரி களில் படித்து பி.லிட். பட்டம் தமிழில் பெறலாம். பள்ளி இறுதித் தேர்வு தேறியிருக்க வேண்டும் என்பது அடிப்படைத் தகுதி ஆகும். இது நான்கு ஆண்டுப் படிப்பு. மதுரையில் பி. லிட். பட்டம் மீண் டும் புலவர் பட்டமென மாற்றப்பட்டுள்ளது. சென்னை, அண்ணா மலைப் பல்கலைக் கழகங்கள் பி. லிட். பட்டம் அளிக்கின்றன. சென்னையிலும் மதுரையிலும் தனித்தேர்வாக (private) எழுதிப் பட்டம் பெறலாம். அண்ணாமலை அஞ்சல் வழிக் கல்வி நிறுவனம் பி. லிட். பட்ட வகுப்பு நடத்துகின்றது. இப்பட்டம் பெற சென்னையிலும் அண்ணாமலையிலும் 18 தாள்களும் மதுரையில் 12 தாள்களும் எழுத வேண்டும். அண்ணாமலை அஞ்சல் வழி பி.லிட். வகுப்பிற்கு 15 தாள்கள் எழுத வேண்டும்.

பொதுவாக, மூன்று பல்கலைக் கழகப் பி.லிட். வகுப்பிலும் சங்க இலக்கியங்கள், அற இலக்கியங்கள், பக்தி இலக்கியங்கள், காப்பியங்கள், சிற்றிலக்கியங்கள் ஆகியவை இடம் பெற்றுள்ளன. சென்னை பி.லிட். வகுப்பில் தற்காலக் கவிதை, கவிதை நாடகம், சிறுகதைகள், நாவல் ஆகியன படிப்பதற்கு வாய்ப்புண்டு. மதுரை பி.லிட். வகுப்பில் தற்காலக் கவிதை, உரை நடை உள்ளன. ஆனால்

சிறுகதைகள், நாவல்கள், நாடகங்கள் இடம் பெறவில்லை. அண்ணாமலைப் பி.லிட் படிப்பில் தற்காலக்கவிதைகளோடு நாவல் ஒன்றும் இடம் பெறுகின்றது. சென்னையிலும் அண்ணாமலையிலும் இலக்கியத்தில் 6 தாள்கள், மதுரையில் 4 தாள்கள். எழுத வேண்டும். இலக்கிய வரலாறு அண்ணாமலையில் இரண்டு தாள்களில் இடம் பெறுகின்றது. மதுரையில் மொழி வரலாற்றோடு சேர்ந்துள்ளது. சென்னையில் இலக்கிய வரலாறு இல்லை.

ஐந்து இலக்கணப் பிரிவுகளும் மூன்று பல்கலைக் கழகப் பாடத்திட்டங்களில் சேர்க்கப்பட்டுள்ளன. தொல்காப்பியம், நன்னூல், காரிகை, நம்பியகப்பொருள், புறப்பொருள் வெண்பாமாலை, மாறனலங்காரம் ஆகியவற்றைப் பரிந்துரை செய்துள்ளார்கள். மதுரையில் பொருளதிகாரத்தில் சில இயல்கள் மட்டுமே தரப்பட்டுள்ளன. அண்ணாமலையில் செய்யுளியல் நீங்கலாக அனைத்தையும் கற்க வேண்டும். சென்னையில் வண்ணத்தியல்பு, பன்னிருபாட்டியல் (களவியல்) கற்க வேண்டும். மதுரையிலும் சென்னையிலும் அண்ணாமலையிலும் தமிழ் மொழி வரலாறு சேர்க்கப்பட்டுள்ளது. சென்னையிலும் அண்ணாமலையிலும் திராவிட மொழி ஒப்பிலக்கணம் இடம் பெறுகின்றது. அண்ணாமலையில் மட்டும் 'மொழியியல்' தனிப் பாடமாக உள்ளது. மதுரையிலும் அண்ணாமலை அஞ்சல் வழியிலும் நான்கு இலக்கணத் தாள்கள்; சென்னையிலும் அண்ணாமலையிலும் ஆறு இலக்கணத் தாள்கள் உள்ளன.

மதுரைப் பாடத் திட்டத்தில் தென்னிந்திய வரலாறு (ஒரு தாள்)தரப்பட்டுள்ளது. இதில் தமிழக வரலாறும் அடங்கும். சென்னையில் தமிழக வரலாறு (ஒரு தாள்) இடம் பெறுகிறது. அண்ணாமலையில் தமிழக வரலாறும் பண்பாடும் இரண்டு தாள்களில் எழுத வேண்டும். மூன்று பாடத்திட்டங்களிலும் கல்வெட்டுகள் இடம் பெறுகின்றன. மதுரையில் தஞ்சைப் பெருவுடையார் கோவில் கல்வெட்டுகளும், சென்னையில் கல்வெட்டும் கோவிற் கலையியலும் பற்றிய நூலும், அண்ணாமலையில் முப்பது கல்வெட்டுகளைக் கொண்ட தொகுப்பும் பரிந்துரை செய்யப்பட்டுள்ளன.

சென்னைப் பி.லிட். வகுப்பில் துணைப் பாடமாக ஆங்கிலம் தமிழ் மொழி பெயர்த்தல், கட்டுரை, படைப்பிலக்கியம் இடம் பெறுகின்றன. மதுரையில் 'கட்டுரை' என்னும் பெயரில் ஒரு தாள் உண்டு. அண்ணாமலையில் பொதுக் கட்டுரை, மொழி

பெயர்ப்பு, செய்யுள் இயற்றல், சுருக்கி வரைதல் ஆகிய நான்கும் ஒரு தாளாக அமைகின்றன. சென்னையில் மட்டும் துணைப் பாடம் என்னும் பிரிவு உண்டு. முதலாண்டில் இரண்டு துணைப் பாடங்களும், இரண்டாம் ஆண்டில் இரண்டு துணைப் பாடங்களும் எடுக்க வேண்டும். ஒவ்வோர் ஆண்டுக்கும் ஆறு துணைப் பாடங்கள் தரப்பட்டுள்ளன. மொத்தத்தில் நான்கு துணைப் பாடங்கள் எடுக்க வேண்டும்.

## ஆசிரியப் பட்டம்

புலவர், பி. லிட். பட்டம் பெற்றவர்கள் உயர்நிலைப் பள்ளிகளில் தமிழாசிரியராகப் பணியாற்ற விரும்பினால் அவர்கள் ஆசிரியப் பயிற்சி பெறவேண்டும். சென்னையிலுள்ள அரசினர் பயிற்சிக் கல்லூரி ஐந்து மாத காலத்திற்குப் பயிற்சி அளிக்கின்றது. இப்பட்டம் பெற விழைவோர் இரண்டு தாள்களில் தேற வேண்டும். முதல் தாள் பாடத்திட்டம் பற்றியது. இதிலே கற்பிக்கும் முறைகள், பாடங்கள் மற்றும் துணைக் கருவிகள் தயாரித்தல் ஆகியவைகள் அடங்கும். இரண்டாம் தாள் கல்வி உளவியலையும் பள்ளிஆட்சி முறையையும் பற்றியது. பயிற்சிபெறுவோர் நூறு வேலை நாட்களில் எண்பது நாட்கள் வருகை தர வேண்டும். பயிற்சி பெறும் ஆசிரியர் கற்பித்தல் பயிற்சிக்காகத் தொடர்ச்சியாகப் பத்து வேலை நாட்கள் பள்ளிக்குச் செல்லுதல் வேண்டும். விளக்கத் தாள்கள், கட்டுரைகள், மொழிப் பயிற்சிகள், மதிப்புரை, பாடத்தொகுப்பேடு ஆகியவற்றைத் தயாரித்தல் செய்முறைப் பயிற்சியில் அடங்கும். இப்பயிற்சி பெற்றவர்களுக்கு 'டிப்ளமோ' பட்டம் வழங்குகிறார்கள்.

இளங்கலையிலும் முதுகலையிலும் தமிழ் இலக்கியத்தையே தலைமைப் பாடமாக எடுத்துப் படித்தவர்களுக்குப் பி. எட். வகுப்பு நடத்தப்படுகின்றது. பி. எட். பட்டம் பெற்ற இளங்கலைத் தமிழாசிரியர் உயர்நிலைப் பள்ளியிலும், பி. எட். பட்டம் பெற்ற தமிழாசிரியர் மேல்நிலைப் பள்ளியிலும் பணியாற்றலாம் மதுரைப் பல்கலைக் கழக அஞ்சல் வழிக் கல்வி நிறுவனமும் அண்ணாமலைப் பல்கலைக் கழக அஞ்சல் வழிக் கல்வி நிறுவனமும் பி. எட். படிப்பை அஞ்சல் வழியாக நடத்துகின்றன.

தமிழின் மூன்று கூறுகளாகிய இயல், இசை, நாடகம் என்பவற்றை ஆசிரியப் பயிற்சி மாணவர்களுக்கு அறிமுகப்படுத்தல்

தமிழ் இலக்கிய வரலாற்றை உணர்ந்து கொள்ளச் செய்தல்—படைப்பிலக்கியங்கள் பற்றிய ஆர்வத்தை வளர்த்தல்—தமிழில் ஆய்வு மனப்பான்மையை வளர்த்தல்—மேல்நிலை வகுப்புகளுக்கு ஏற்ற முறை பற்றிக் கூறுதல் ஆகியவை தமிழ் பயிற்றும் நோக்கங்களாக மதுரை பி. எட். பாடத்திட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ளன. முத்தமிழ்க் கோட்பாடுகள், கற்பிக்கும் முறைகள், இலக்கிய வரலாறு, இலக்கியக் கழகங்களும் பள்ளி இதழ்களும், ஆராய்ச்சி முறை, ஐந்திலக்கணங்கள், கவிதை மற்றும் உரை நடைத் தொகுதிகள ஆக்கல் ஆகியவை கோட்பாடுகளின் (Theory) கீழ் வருகின்றன. கவிதை இசைத்தலும் பதிவித்தலும், பதினைந்து நிமிட நாடகம் தயாரித்து அரங்கேற்றல், பத்து நிமிடச் சொற்பொழிவு, ஒரு சிறு ஆய்வுக் கட்டுரை, ஒரு சிறிய இதழ் நடத்துதல் ஆகியவை செய்முறைப் பயிற்சிகள் (Practicals) ஆகும்.

அண்ணாமலை அஞ்சல் வழி பி. எட். பட்டப் படிப்பின் பாடத்திட்டம் பொதுத் தமிழுக்குத் தனியாகவும் சிறப்புத் தமிழுக்குத் தனியாகவும் உள்ளது. பொதுத் தமிழ்க் கற்பித்தலின் நோக்கம் தரப்படவில்லை. சிறப்புத் தமிழ்க் கற்பித்தலுக்கான மூன்று நோக்கங்கள் தரப்பட்டுள்ளன. பொதுத் தமிழ்ப் பாடத்திட்டம் மூன்று பிரிவுகளைக் கொண்டது. முதற் பகுதி பாடப்பொருள் பகுதியைப் பற்றியது. இரண்டாம் பகுதி கற்பித்தல் முறை பற்றியது. மூன்றாம் பகுதி கற்பித்தலுக்கான துணைக் கருவிகள் தயாரித்தலைப் பற்றியது. இவை ஒவ்வொன்றும் தொடக்கநிலை, நடுநிலை, உயர்நிலை என்னும் மூன்று நிலைகளில் விளக்கப்பட்டுள்ளன. சிறப்புத் தமிழ் பாடப் பொருள், கற்பித்தல் முறைகள், செய்முறைப் பயிற்சிகள் என்னும் மூன்று பிரிவுகளைக் கொண்டது. செய்முறைப் பகுதியில் பல்வகைத் தேர்வுகளைத் தயாரித்தல், ஓர் அலகுப் பகுதிக்குக் கற்பித்தல் பொருள் தயாரித்தல், புதிய கலைச் சொற்களை உருவாக்கல், திட்ட நிகழ்வு முறையில் இலக்கணப் பகுதி ஒன்றிற்குப் பாடம் அமைத்தல் ஆகியவை இடம் பெறுகின்றன.

## பட்ட மேற்படிப்பு

முதுகலைப் பட்டம் என்பது ஒரு குறிப்பிட்ட துறையில் சிறந்த தகுதியைப் பெறுவோர்க்கு அளிக்கப் படுவதாகும். ஆழ்ந்த புலமையையும்ஆய்வுமனப்பான்மையையும்வளர்ப்பதைஅடிப்படை

நோக்கமாகக் கொண்ட முதுகலைப் படிப்பு, பல்கலைக் கழகத்தில் மட்டுமின்றிக் கலலூரிகளிலும் அஞ்சல் வழிக் கல்வி நிறுவனங்களிலும் நடத்தப்படுகின்றது. சென்னை, மதுரை, அண்ணாமலைப் பல்கலைக் கழகங்களில் முழுநேரப் படிப்பாகவும், அஞ்சல் வழிப் படிப்பாகவும் எம். ஏ, தமிழ் உள்ளது. அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துறை மட்டும் எம். ஓ. எல் என்னும் முதுகலைப் பட்ட வகுப்பை இன்னும் நடத்திக் கொண்டிருக்கின்றது.

இக்கால இலக்கியம், இடைக்கால இலக்கியம் அல்லது சிற்றிலக்கியம், காப்பிய இலக்கியம், சங்க கால இலக்கியம் அல்லது பண்டைக் கால இலக்கியம் என்னும் பிரிவுகளில் (தாள்களில்) சென்னையிலும் மதுரையிலும் முதுகலை இலக்கியப் பகுதி அமைந்துள்ளது. அண்ணாமலையில் தற்கால இலக்கியம், காப்பிய இலக்கியம், சங்க இலக்கியம் என்னும் முப்பிரிவுகளின் கீழ் ஆறு தாள்கள் உள்ளன். அண்ணாமலை எம். ஓ. எல். பாடத்திட்டத்தில் இக்கால உரைநடை ஒரு தாள், இடைக்கால இலக்கியம் 2 தாள், சிற்றிலக்கியம் 2 தாள், சங்க இலக்கியம் ஒரு தாள் ஆகிய ஆறு தாள்கள் உள்ளன.

சென்னை முதுகலையில் இலக்கியத் திறனாய்வும் இலக்கிய வரலாறும் பற்றி ஒரு தாள் இருக்கின்றது. இதே தாள் மதுரை பருவ முறைப் படிப்பிலும் உண்டு. ஆனால் இலக்கிய வரலாற்றைக் கற்பிக்கும் பாங்கில் வேறுபடுகின்றது. சென்னையில் இலக்கிய வரலாறு கால அடிப்படையில் அமைகின்றது. மதுரையில் திறனாய்வு நோக்கில் அமைகின்றது. அண்ணாமலையில் இதே தாள் இலக்கியத் திறனாய்வு ஓர் இலக்கிய வகையின் அமைப்பும் வளர்ச்சியும் என்னும் முறையில் உள்ளது. அண்ணாமலை அஞ்சல் வழி முதுகலையில் இலக்கியத் திறனாய்வு உண்டு.

சென்னைப் பாடத்திட்டத்தில் எழுத்தும் ஒலியியலும், சொல்லும் தொடரியலும், பொருளும் பாவியலும், தமிழ்மொழி வரலாறும் திராவிடமொழி ஒப்பிலக்கணமும் என்னும் நான்கு தாள்கள் உண்டு. மதுரை அல்பருவ முறையில் எழுத்து, சொல், யாப்பும் அணியும், பொருள் என்னும் நான்கு தாள்கள் உண்டு. எழுத்து, சொல் இலக்கணங்கள் விளக்கமுறை மற்றும் வரலாற்று முறை மொழியியல் நோக்கியல் கற்பிக்கவேண்டும் என வலியுறுத்துகின்றது. சென்னையில் தொல்காப்பியம் செய்யுளியல் நீக்கப்பட்டு

உள்ளது. மதுரை அஞ்சல் வழியில் ஒப்பிலக்கணம் கற்பிக்கப்படுவதில்லை. ஆனால் பருவ முறையில் ஒப்பிலக்கணம் கற்க வழி செய்யப்பட்டுள்ளது. அண்ணாமலை அஞ்சல் வழியில் சென்னையைப் போல இலக்கனப் பாடத்திட்டம் உள்ளது. அண்ணாமலைப் பருவமுறை எம். ஏ., எம்.ஓ.எல். ஆகியவற்றில் நான்கு இலக்கணத் தாள்கள் உள்ளன. ஒவ்வோர் இலக்கணத் தாளிலும் எழுத்து, சொல், பொருள் அதிகாரங்களிலிருந்து சில இயல்கள் இடம் பெறுகின்றன. இவ்வகையான கலவை இலக்கணப் பாடம் சென்னை, மதுரை பல்கலைக் கழகங்களில் இல்லை.

சென்னை முதுகலையில் ஏழு விருப்பப் பாடங்கள் தரப் பட்டுள்ளன. இவற்றுள் ஏதேனும் இரண்டை ஒவ்வோர் ஆண்டும் படித்தல் வேண்டும். இரண்டு சிறப்புப் பாடங்களும் வெவ்வேறானவை. அண்ணாமலை பருவமுறை முதுகலையில் இரண்டு விருப்பப் பாடங்கள் நான்கு தாள்களில் தரப்பட்டுள்ளன. எம்.ஏ., எம். ஓ. எல். இரண்டிற்கும் பொதுவாக இருபத்து மூன்று விருப்பப் பாடத்தலைப்புகள் கொடுக்கப்பட்டுள்ளன. ஆனால் நாட்டுப்புற இயல், பொதுமொழியியல் என்னும் இரண்டுக்குத்தான் விளக்கமான பாடக்குறிப்புகள் உள்ளன. மதுரை பருவமுறைப் படிப்பில் பன்னிரண்டு விருப்பப் பாடங்களுக்குத் தெளிவான விளக்கமான பாடக்குறிப்புகள் வரையப்பட்டுள்ளன. ஒவ்வொரு சிறப்புப் பாடத்திற்கும் மூன்று தாள்கள் உள்ளன. ஒரே விருப்பப் பாடம்தான் எடுக்க வாய்ப்புண்டு. மதுரை அஞ்சல் வழியில் ஒப்பியல் இலக்கியம், சைவசித்தாந்தம் என்னும் இரண்டு விருப்பப் பாடங்கள் உண்டு.

அண்ணாமலை பருவமுறை எம்.ஏ., எம்.ஓ.எல். ஆகியவற்றில் ஆய்வுக் கட்டுரை அளித்தல் ''ஒரு தாளாக''க் கருதப்படுகின்றது. இதனோடு ''நேர்முகத் தேர்வு'' உள்ளது. பொதுக் கட்டுரையும் படைப்பிலக்கியமும் சென்னையிலும் அண்ணாமலை அஞ்சல் வழியிலும் ஒரு தாளாக அமைகின்றன. சென்னையில் ''தமிழக வரலாறும் பண்பாடும்'' என்னும் தாள் கட்டாயப் பாடமாக உள்ளது. இது அண்ணாமலை எம். ஓ. எல். வகுப்பில் விருப்பப் பாடமாக இருக்கின்றது. மதுரை அஞ்சல் வழி முதுகலையில் ''தமிழில் பிற துறைகள்'' என்னும் ஒரு தாள் சேர்க்கப்பட்டுள்ளது.

சென்னைப் பருவமுறை முதுகலைக்கும் அஞ்சல் வழி முதுகலைக்கும் தாள்கள், பாடநூல்கள் ஆகியவற்றில் வேறுபாடு இல்லை. மதுரை பருவமுறை முதுகலைக்கும் அஞ்சல் வழி

முதுகலைக்கும் தாள்களில் வேறுபாடு இல்லை. ஆனால் பாட நூல்களில் மட்டும் வேறுபாடு உண்டு. மதுரையில் முதுகலைத் தனித்தேர்வர்களுக்கெனத் தனிப் பாடத்திட்டம் உள்ளது. இருப்பி னும், தாள்கள் எல்லாம் பொதுவானவையே. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தைப் பொறுத்தவரையில் அஞ்சல்வழி முது கலைக்கும், பருவமுறை முதுகலைக்கும் தாள்கள் மற்றும் பாட நூல்கள் ஆகியவற்றில் மிகுந்த வேறுபாடு இருக்கின்றது.

## உயர் முதுகலைப் பட்டம்

1981-ஆம் ஆண்டு முதல் மதுரைப் பல்கலைக் கழகத்தில் மட்டும் இந்த உயர்முதுகலைப் பட்டம் (Advanced M.A.) தமிழில் வழங்கப்படுகின்றது. தமிழ் எம். ஏ. பட்டம் பெற்ற எவரும் தனிப் பட்ட முறையில் படித்துத் தேர்வு எழுதிப் பட்டம் பெறலாம். இப்படிப்பின் நோக்கம் என்னவென்று பாடத்திட்டத்தில் தெளி வாக வரையறுத்துக் கூறப்படவில்லை. இருப்பினும், இப்பாடத் திட்டத்தில் குறிக்கப்பட்ட நூல்களை வரன்முறையாகத் தொகுத்துப் பயின்றால் ஒரு துறையில் அல்லது ஒரு நூலில் ஆழமான புலமை உடையவராக இயலும் என்று குறிப்பிடப் பட்டுள்ளது. ஆகவே, பரந்துபட்ட தமிழ் இலக்கியங்களில் அல்லது இலக்கணங்களில் ஏதேனும் ஒரு நூலை அதற்குரிய திறனாய்வு நூல்களோடு சேர்த்துக் கற்றல்வேண்டும்.

இப்பட்டத்தைப் பெறுவதற்குரிய தேர்வு நான்கு தாள்களை உள்ளடக்கியது. முதல் தாள் ஆராய்ச்சி நெறிமுறைகளைப் பற்றியதாகும். மற்ற மூன்று தாள்களும் சிறப்புப் பாடம் பற்றி யவை. இலக்கியப் பிரிவில் ''பத்துப் பாட்டு'' மட்டும், இலக்கணப் பிரிவில் ''நன்னூல்'' மட்டும் சிறப்புப் பாடங்களாக உள்ளன. பத்துப் பாட்டும் சங்க இலக்கியக் கொள்கைகளும்,பத்துப் பாட்டும் உரைவிளக்கங்களும், பத்துப் பாட்டுத் தொடர்பான ஆய்வுக் கட்டுரைகள் மற்றும் ஆய்வு நூல்கள் ஆகிய மூன்றும் இலக்கியப் பிரிவில் உள்ள மூன்று தாள்களாகும். நன்னூலும் அதன் பல்வேறு உரைகளும், நன்னூலும் பிற இலக்கணங்களும் மொழியியற் கோட்பாடுகளும், நன்னூல் பற்றி எழுந்த ஆய்வுக் கட்டுரைகள் ஆகியவை இலக்கணப் பிரிவில் அடங்கும் மூன்று தாள்களாகும். இவை ஒவ்வொன்றுக்கும் விளக்கமான பொருளடக்கக் குறிப்புகள் பாடத்திட்டத்தில் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு தாளுக்கும் ஆழ்ந்து படிக்கவேண்டிய பல நூல்களும், பார்வை நூல்கள் பலவும் பரிந்துரை செய்யப்பட்டுள்ளன.

## முன்னாய்வுப் பட்டம்

1978 ஆம் ஆண்டு பல்கலைக் கழகங்களிலும் கல்லூரிகளிலும் முன்னாய்வுப் பட்டம் (M. Phil) தமிழில் தொடங்கப்பட்டது இது டாக்டர் (Ph.D) பட்டம் பெறுவோர்க்கு முதற்படியாக- முன்னோடியாக அமைந்துள்ளது. முழுநேரப் படிப்பாக ஓராண்டிற்கும், பகுதி நேரப் படிப்பாக இரண்டாண்டுகளுக்கும் நடத்தப் படுகின்றது. வருங்காலத்தில் இப்பட்டம் பெற்றவர்கள் மட்டுமே கல்லூரிகளில் விரிவுரையாளர்களாகப் பணியாற்றத் தகுதி பெற்றவர் ஆவார்கள். மூன்று பல்கலைக்கழகப் பாடத்திட்டங்களிலும் இதன் நோக்கங்கள் தெளிவாகச் சுட்டப்படவில்லை. இருப்பினும் விரிவுரையாளர்களிடத்தில் ஆய்வுத் திறனை வளர்க்க இப்படிப்பு துணைபுரியும் என்று உய்த்து உணரலாம்.

சென்னையிலும் மதுரையிலும் எம்ஃபில் பாடத்திட்டத்தில் நான்கு தாள்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. அண்ணாமலையில் மூன்று தாள்கள் வைக்கப்பட்டுள்ளன. ஆய்வு நெறிமுறையிலும்' ஆய்வுப் பொருளில் தேர்வும் ஆய்வுக் கட்டுரை அளித்தலும் மூன்று பல்கலைக்கழகங்களிலும் பொதுவாக உள்ளன. சென்னை மொழித்துறைப் பாடத்திட்டத்தில் தமிழ் பயிற்று முறைகள் பற்றி ஒரு தாள் உள்ளது. சென்னை இலக்கியத்துறைப் பாடத் திட்டத்தில் ஆராய்ச்சியின் வரலாறு பற்றி ஒரு தாள் உள்ளது. இவற்றுக்குப் பதிலாக மதுரைப் பாடத்திட்டத்தில் இலக்கியமும், சமுதாயவியலும் என்பது பற்றி ஒரு தாள் உள்ளது. இத்தலைப்பின் கீழ் இவ்வாண்டிற்குத் தேசியகவி சுப்பிரமணிய பாரதியாரின் படைப்புகள் சிறப்புப் பாடமாக வைக்கப்பட்டுள்ளன.

மதுரைப் பாடத்திட்டத்தில் மட்டும் பாட வேளைகள், அக மற்றும் புற மதிப்பீடுகள், வினாத்தாள் அமைப்பு பற்றிய விளக்கமான குறிப்புகள் தரப்பட்டுள்ளன. மற்ற இரண்டிலும் பாடக் கூறுகளும் பார்வை நூல்களும் மட்டுமே பரிந்துரைக்கப்பட்டுள்ளன. ஆய்வுத் தலைப்புகளைச் சில சமயங்களில் கற்போரே தேர்ந்தெடுக்க வாய்ப்பளிக்கின்றனர். சில சமயங்களில் ஒரு குறிப்பிட்ட பொருள் எல்லையை மட்டும் பலரும் பகிர்ந்து செய்யும் வகையில் துறைத் தலைவர் ஆலோசனை கூறுகின்றார். அண்ணாமலைப் பாடத்திட்டம் சுருக்கமாகவும், மற்ற இரண்டு பல்கலைக் கழகங்களின் பாடத்திட்டம் விரிவாகவும் அமைந்து உள்ளன.

## சீர்திருத்தச் சிந்தனைகள்

தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகம் டிசம்பர் இறுதியில் முதுகலைப் பேராசிரியர்களை அழைத்து இரண்டு நாட்களுக்குப் பாடத்திட்டம் சீரமைப்புக் கருத்தரங்கு நடத்தியது. முதுகலைப் பாடத்திட்டத்தைத் தற்கால-எதிர்காலத் தேவைகளுக்கு ஏற்ப எப்படி சீரமைப்பது என்பது பற்றி விவாதங்கள் நிகழ்ந்தன; கருத்துப் பரிமாற்றம் செய்யப்பட்டது.

தி முருகானந்தம் தமிழ் முதுகலைப் பாடத் திட்டங்களை ஒப்பிட்டுப் பாடத்திட்டத்தில் உள்ள பிரச்சினைகளை முன்வைத்தார். இந்தியா முழுவதிலும் நாற்பத்தைந்து கல்வி நிறுவனங்களில் தமிழ் முதுகலை வகுப்புகள் நடைபெறுகின்றன என்றும், இந்தியா முழுவதும் உள்ள பல்கலைக் கழகங்களில் பன்னிரண்டு வகையான முதுகலைப் பாடத்திட்டங்கள் உள்ளன என்றும் குறிப்பிட்டுள்ளார். தாள்களின் தொகை, இலக்கணப் பிரிவுகள், இலக்கியப் பிரிவுகள், மொழியியல் கல்வி, இலக்கியத் திறனாய்வு மற்றும் இலக்கியக் கொள்கை, திராவிட மொழி ஒப்பிலக்கணம், தமிழக வரலாறும் பண்பாடும், தமிழ் இலக்கிய வரலாறு ஆகியவற்றின் அடிப்படையில் முதுகலைப் பாடத்திட்டங்கள் வேறுபடுகின்றன என்று உரைத்துள்ளார். ஒருசில ஆசிரியரின் நூல்களும், ஒருசில பதிப்பகத்தாரின் நூல்களும் திரும்பத் திரும்ப பாடத்திட்டத்தில் இடம் பெறுகின்றன என்றும், நூல்கள் பரிந்துரை செய்வதில் வியாபார நோக்கு தலைதூக்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும் என்றும் சிந்திக்கக் கோரியுள்ளார். பாடத் திட்டங்களை ஆசிரியர் நோக்கில் ஆராயாமல் மாணவர் நோக்கிலும் இந்திய நாட்டின் பின்னணியிலும் தேவையை ஒட்டியும் நோக்கல் வேண்டும் என்று வலியுறுத்திக் கூறியுள்ளார்.

அக்கருத்தரங்கில் ‘கல்லூரிகளில் தமிழ்க் கல்வியில் அளவீடும் முன்னேற்றமும்’ என்னும் பொருளில் ஒரு கட்டுரையைச் செல்வி சோ. பாகீரதி படித்தார். அதில் முதுகலைப் பாடத்திட்டத்தின் நோக்கங்கள், பாடப் பிரிவுகள், பயிற்றுவிக்கும் முறைகள், ஆசிரியருக்குப் பணியிடைப் பயிற்சி, மதிப்பீட்டு முறை, தமிழ் ஆராய்ச்சி நிலை ஆகியவற்றைப் பற்றி விளக்கமாகத் தம் கருத்துக்களைக் கூறியுள்ளார்.

அறிவுத் திறன் வளர்ச்சி, பேச்சாற்றல் மற்றும் எழுத்தாற்றல் வளர்ச்சி, ஆய்வுத் திறன் வளர்ச்சி, வேலை வாய்ப்பு நல்கல், முழு

மனிதன் ஆக்கல் ஆகிய நோக்கங்களை உள்ளடக்கியதாக முதுகலைப் பாடத்திட்டம் அமைய வேண்டும். அது பெரும் பிரிவுகளைக் கொண்டிருக்க வேண்டும். அவை:(1) இலக்கியப் பிரிவு (2) இலக்கணப் பிரிவு (3) அந்நிய மொழிப் பிரிவு (4) விருப்பப் பாடப் பிரிவு. அந்நிய மொழிப் பிரிவின்கீழ் ஓர் இந்திய மொழியையும் ஒரு வெளிநாட்டு மொழியையும் கற்பிக்க வேண்டும். விருப்பப் பாடப் பிரிவில் இரண்டு விருப்பப் பாடங்களை மாணவர்கள் எடுக்க வேண்டும். பணி வாய்ப்பு நல்கும் துறைகளையே விருப்பப் பாடமாக அமைத்தல் வேண்டும் சமுதாய இயல், உளவியல், மொழிஇயல், மொழி பெயர்ப்பியல், இதழியல், கல்வெட்டியல், புதை பொருள் இயல், பயண இயல், ஒப்பியல் இலக்கியம், இந்திய வரலாறு, இலக்கியத் திறனாய்வு, இந்தியத் தத்துவமும் சைவசித்தாந்தமும், தமிழ் இலக்கிய வரலாறு என்னும் பதின்மூன்று விருப்பப் பாடங்களைச் சுட்டிக் காட்டியுள்ளார்.

பயிற்றுவிக்கும் முறையில் சீரிய மாற்றம் செய்ய வேண்டும். சொற்பொழிவு முறையைக் குறைக்க வேண்டும். நூல் நிலையத்தின் துணையோடு மாணவர்கள் தாங்களாகவே கற்கும் ஆற்றலைப் பெருக்கிட வேண்டும். கருத்தரங்கு, ஆய்வுக் கட்டுரை ஒப்படைப்பு, சிறப்புச் சொற்பொழிவு, களப்பார்வை போன்ற பயிற்று முறைகளைப் புகுத்த வேண்டும். வினாவங்கி ஒவ்வொரு பாடத்துக்கும் ஏற்படுத்த வேண்டும். கட்டுரை வடிவில் உள்ள வினாக்களே இடம் பெறல் வேண்டும். நினைவாற்றல் தரம், ஆய்வுத் தரம், சிந்தனைத் தரம், ஒப்பீட்டுத் தரம் ஆகியவற்றை மதிப்பிடும் வகையில் வினாவங்கி அமைத்தல் வேண்டும். மைய மதிப்பீடும், உள் மதிப்பீடும் சரியான முறையில் கடைப்பிடிக்க வேண்டும். ஐந்து ஆண்டுக் காலம் தொடர்ந்து பாடம் நடத்திய ஆசிரியரே இலக்கணப் பாடத்தில் வினாக்களை அமைக்க வேண்டும். வினா தயாரிப்பவரே விடையைச் சுருக்கமாக எழுதித் தரவேண்டும். ஆய்வின் தரம் உயர்த்தப்பட வேண்டும். ஆராய்ச்சி அணுகுமுறை பற்றியும் ஆராய்ச்சி செய்ய வேண்டும். ஆங்கிலத்திலிருந்து தமிழுக்கு மொழி பெயர்க்கப்படும் தரமான மொழிபெயர்ப்பு நூலுக்கு எம்ஃபில் பட்டம் வழங்கலாம். இவ்வாறு செல்வி சோ. பாகீரதி தமிழ் முதுகலைப் பாடத்திட்டத்தில் செம்மை செய் வழிவகைகளைப் பற்றி எடுத்துரைத்துள்ளார்.

## பரிந்துரைகள்

பொதுவாக, பாடத்திட்டங்கள் தேர்வுத் தாள்களின் எண்ணிக்கையையும், மதிப்பெண்களையும், பாடப் பொருள்களையும் விளக்குவதாக அமைகின்றன. பி. எட். பாடத்திட்டம் மற்றும் மதுரை எம்ஃபில் பாடத்திட்டம் ஆகியவற்றைத் தவிர பெரும்பாலான பாடத்திட்டங்களில் படிப்பின் நோக்கம், மதிப்பீட்டின் முறை, கற்பிக்கும் முறை, வினாத்தாள் அமைப்பு, கற்பிப்பதற்குரிய காலம் போன்றவற்றைப் பற்றிய விளக்கங்கள் இல்லை. இந்நிலை உயர் தமிழ்க் கல்வி, குறிப்பிட்ட குறிக்கோளின்றிச் சென்றுகொண்டிருக்கின்றது என்பதைக் குறிப்பாக உணர்த்துகிறது. ஒரு சிறந்த பாடத்திட்டம், குறிக்கோள், பாடப்பொருள் கற்பிக்கும் முறை, மதிப்பீட்டு முறை, வினாத்தாள் அமைப்பு, கற்பிக்கும் காலம் ஆகியவற்றை உள்ளடக்கி இருத்தல் வேண்டும்.

அடிப்படைக் கல்வியில் அல்லது தமிழை இரண்டாம் மொழியாகக் கற்பித்தலில் தமிழ்ப் பாடத்திட்டங்கள் நான்கு வகையான மொழித் திறன்களை வளர்க்கும் வகையில் வரையப்படவேண்டும். பேசும் திறனும் எழுதும் திறனும் தகவல் தொடர்புத் திறன்கள் (communicative skills) ஆகும். இவற்றை வளர்ப்பதில் மிகுந்த கவனம் செலுத்த வேண்டும். இம்மொழித் திறன்களைத் திட்டமிட்ட முறையில் வளர்க்க, பொருத்தமான வரிசைப்படுத்தப்பட்ட (graded) பாடநூல்கள் வெளியிடல் வேண்டும். தமிழை இரண்டாம் மொழியாகக் கற்பிக்க இலக்கண-மொழி பெயர்ப்பு முறையை (Grammar-Translation Method) மட்டுமின்றி, பேசல்-கேட்டல் முறை (Audio -Lingual Method), வேற்றுமை மொழியியல் முறை (Contrastive Linguistics Method) போன்ற புதிய முறைகளையும் கையாள வேண்டும். மொழித் திறன்கள் பெற்றுள்ளமையைச் சோதிக்கத் தற்சார்பற்ற கேள்வி முறைகளைப் பின்பற்ற வேண்டும்.

பொதுவாக, இலக்கியத் தாள்கள் இலக்கிய வரலாற்று முறையிலே வைக்கப்பட்டுள்ளன. அனைத்துப் படிப்புகளிலும் மொழி எளிமை அடிப்படையில் தற்கால இலக்கியங்கள், இடைக்கால இலக்கியங்கள், பண்டைக்கால இலக்கியங்கள் என்னும் வரிசை முறையில் தரப்படல் வேண்டும். மேலும், பண்டைக்கால, இடைக்கால இலக்கியங்கள் நிலப்பிரபுத்துவ சமுதாயத்தில் படைக்கப்பட்டவை. அவை எழுந்ததன் நோக்கம் வேறு. இன்றைய இலக்கியக் கல்வி

சமதர்ம சமுதாயத்தைப் படைக்க விருப்பும் புதிய மானுடத்தை உருவாக்க வேண்டும். ஆகவே, முடியாட்சிக் காலத்தில் எழுந்த இலக்கியங்களைக் குடியாட்சிக் காலத்திற்கு ஏற்ற வகையில் புதிய கண்ணோட்டத்தில் தொகுத்து வழங்கல் வேண்டும்.

வரிவடிவ இலக்கியங்களே பாடத்திட்டங்களில் மிகுந்த செல் வாக்குப் பெற்றுள்ளன. வாய்மொழி இலக்கியங்களுக்கு மிகக் குறைந்த இடங்களே தரப்பட்டுள்ளன. இந்நிலை மாற வேண்டும். பொது மக்கள் பிரச்சினைகளைச் சித்திரிக்கும் நாட்டுப்புற இலக்கி யங்கள் கணிசமான அளவில் ஒவ்வொரு படிப்பிலும் ஒவ்வொரு நிலையிலும் சேர்க்கப்படல் வேண்டும். நாட்டுப் புறக் கதைகள், கதைப் பாடல்கள், விடுகதைகள், பழமொழிகள், மருத்துவம், பண்பாட்டுக் கூறுகள், ஓவியம் மற்றும் பிற கலைகள் பாடத் திட் டங்களில் இடம் பெறல் வேண்டும்.

மேலோட்டமாகப் பார்த்தால், இலக்கியத் தாள்களில் 18-ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்ட இலக்கியங்களே செல்வாக்குப் பெற் றுள்ளன. தற்கால இலக்கியத்திற்கு உரிய இடம் அளிக்கவில்லை. விரல் விட்டு எண்ணக்கூடிய அளவில் ஒரு நாவல், ஒரு நாடகம், ஒரு சிறுகதைத் தொகுதி பாடத் திட்டங்களில் இடம் பெற்றுள் ளன. உரைநடை இலக்கியங்கள் பல்கிப் பெருகிவிட்ட காலத்தில் 'திருஷ்டி கழிக்க' ஒன்றிரண்டு தற்கால இலக்கியங்களை மட்டும் வைப்பது சரியல்ல. எந்த அளவிற்கு மாணவர்கள் தற்கால இலக் கியங்களைக் கற்கின்றார்களோ அந்த அளவுக்கு அவர்கள் சிறந்த படைப்பாளிகளாகி மாநில மற்றும் தேசிய மட்டங்களில் உள்ள பரிசுகளைப் பெறும் தகுதிக்கு உரியவராவார்கள். புதுக் கவிதை களைப் (Free verse) புறக்கணிக்கும் போக்கு பல்கலைக் கழகங் களில்(மதுரை தவிர)காணப்படுகின்றது. இந்நிலை மாறவேண்டும்.

திரைப்பட இலக்கியம் ஒதுக்கப்பட்டுள்ளது. பரிசு பெற்ற திரைப் படப் பாடல்கள்-உரையாடல்கள் - கதைகள் ஆகியவை பாடத் திட்டங்களில் இடம் பெற வேண்டும். இலக்கியத் துறைக்கும் திரைப்படத் துறைக்கும் நெருங்கிய உறவு உண்டு. அதை வலுப் படுத்த வேண்டும். கவிதை நாடகங்கள் தழுவல் மற்றும் மொழி பெயர்ப்பு நாடகங்கள் ஆகியவற்றிற்குப் பதிலாக சமூகப் பிரச் சினைகளைச் சித்திரிக்கும் உரைநடை நாடகங்களைப் பாடத் திட்டத்தில் சேர்க்கலாம். உரைநடைத் தொகுதியில் சமூகப்

பிரச்சினைகள், குமரப் பருவ வீரதீர செயல்கள், விளையாட்டுகள் போன்ற ஆர்வத்தைத் தூண்டும் கட்டுரைகளும் இடம் பெறல் வேண்டும். ஆசிரியர் நோக்கில் மட்டும் ஆராயாமல் மாணவர் நோக்கிலும் அவர்கள் எவற்றைப் படிக்கவிரும்புவார்கள் என்பதை ஆராய்ந்து உரைநடைத் தொகுதியை ஆக்கல் வேண்டும்.

இலக்கிய வரலாறு கற்பித்தலின் நோக்கம் என்ன? யாருக்கு எப்போது கற்பிக்க வேண்டும், என்பவற்றை வரையறை செய்து இலக்கிய வரலாற்றைப் பாடத்திட்டங்களில் சேர்க்க வேண்டும். மேல்நிலை பள்ளிச் சிறப்புத் தமிழிலும், பட்டப்படிப்புப் பொதுத் தமிழிலும், இளங்கலை சிறப்புத் தமிழிலும், பி. லிட். பட்டத் தமிழிலும், ஆசிரியப் பட்டத்திலும், முதுகலைத் தமிழிலும் இலக்கிய வரலாறு பாடமாக உள்ளது. பட்ட வகுப்பு பொதுத் தமிழில் மற்றும் சிறப்புத் தமிழில் இலக்கிய வரலாற்றைத் தனிப் பாடமாக அமைக்காமல் இலக்கியப் பாடத்தோடு சேர்த்து அமைக்க வேண்டும். தமிழாசிரியராகப் பணியாற்றப் போகின்றவர்களுக்கும் இலக்கிய வரலாறு இன்றியமையாதது. ஆதலால் ஆசிரியப் பட்டப்படிப்பில் மட்டும் இடம் பெற்றால் போதுமானதாகும். முதுகலை மாணவர்கள் இலக்கிய வரலாற்றை நூல் அல்லது ஆசிரியர் அடிப்படையில் கற்காமல் இலக்கிய வகை, வடிவம், பொருள், உத்தி ஆகியவற்றின் வரலாற்று அடிப்படையில் புதிய கண்ணோட்டத்தில் கற்க வேண்டும். இலக்கிய வரலாறு நூற்பட்டியலின் தொகுதியாக அமைவதால் மாணவர்களுக்குச் சலிப்புணர்வைத் தருகின்றது. இதை அறிந்தும் எல்லா நிலைகளிலும் அனைத்துத் தமிழ்ப் படிப்புகளிலும் பாடத்திட்டங்களில் இலக்கிய வரலாற்றைச் சேர்த்திருப்பதற்குக் காரணம் மாணவர்களைச் சுரண்டும் வணிக நோக்கே எனச் சொல்லலாம்.

இலக்கியத் தாள்களுக்கு ஏறக்குறைய சமமாக இலக்கணத்தாள்கள் பாடத்திட்டங்களில் இடம்பெறுகின்றன. பொதுத் தமிழில் ஐந்திலக்கணங்களை உரைநடையில் கற்கின்றனர். சிறப்புத் தமிழில் ஐந்திலக்கண மூல நூல்களே கற்கின்றனர். அதாவது, பட்ட வகுப்பு, சிறப்புத் தமிழில் இடைக்கால இலக்கண நூல்களையும். முதுகலைத் தமிழில் சங்க கால இலக்கண நூல்களையும் அவற்றோடு கற்கின்றனர். ஆகவே, உயர்கல்வியில் மூல இலக்கண நூல்களையே கற்பித்தல் வலியுறுத்தப்படுகின்றன. ஆனால் பொதுத் தமிழில் எழுத்து, சொல் இலக்கணங்கள் தேவையா

என்று சிந்திக்கவேண்டும். ஆரம்பப் பள்ளி முதல் இவ்விரு இலக்கணங்களைக் கற்று வருவதால் மாணவர்களுக்குச் சலிப்புத் தட்டிவிடும். அவற்றுக்குப் பதிலாக உயர்நிலை மொழிப் பயிற்சிகளையும் இலக்கியத் திறனாய்வுக்குப் பயன்படும் பொருள், யாப்பு, அணி இலக்கணங்களையும் கற்பிக்கலாம்.

புதிதாக வளர்ந்து வரும் மொழியியலை எந்த அளவிற்குப் பட்ட வகுப்பு பொதுத் தமிழிலும் சிறப்புத் தமிழிலும் அறிமுகப் படுத்த வேண்டும் என்று சிந்திக்க வேண்டும். விளக்க மொழியியலைப் பொதுத் தமிழிலும் வரலாற்று மொழியியலைச் சிறப்புத் தமிழிலும் அறிமுகப்படுத்தலாம். பயன்பாட்டு மொழியியலை ஆசிரியப் படிப்பிலும் சேர்க்கலாம். திராவிட ஒப்பியல் மொழியியலை முதுகலை மாணவர்களுக்கு மட்டும் கற்பித்தால் போதுமானது. உயர்நிலை மற்றும் மேல்நிலைப் பள்ளிகளில் மாணவர்கள் திராவிட ஒப்பிலக்கணத்தைக் கற்பதில்லையாதலால் திராவிட ஒப்பியல் மொழியியலை விரிவாகக் கற்பிக்க வேண்டியதில்லை.

தமிழக வரலாறும் பண்பாடும் என்னும் பாடம் துணைப் பாடமாகவும் பொதுப் பாடமாகவும் அமைந்துள்ளது. பெரும்பாலும், இளங்கலைச் சிறப்புத் தமிழுக்கு மட்டும் இது சேர்க்கப் பட்டுள்ளது. ஆனால் வேளாண்மைப் பல்கலைக் கழகத்தின் பி. எஸ். சி மனை இயல் படிப்பில் தமிழர் நாகரிகமும் பண்பாடும் என்னும் பெயரில் ஒரு தாள் உள்ளமை குறிப்பிடத்தக்கது. ஆகவே பட்ட வகுப்பில் தலைமைப் பாடத்திற்குத் தக்கவாறு தமிழரின் பண்பாட்டு வரலாற்றைச் சேர்த்துக் கற்பிக்கலாம். வரலாற்றைத் தலைமைப் பாடமாக எடுப்பவர் தமிழக அரசர் வரலாற்றையும், பொருளாதாரத்தைத் தலைமைப் பாடமாக எடுப்பவர் தமிழர் பொருளியல் கொள்கையையும், அரசியல் விஞ்ஞானத்தைத் தலைமைப் பாடமாகப் படிப்பவர் தமிழரின் அரசியல் அமைப்புகளையும், சமூகவியலைத் தலைமைப் பாடமாக எடுப்பவர் தமிழரின் சமூக நிறுவனங்களையும், வணிகவியலைத் தலைமைப் பாடமாக எடுப்பவர் தமிழரின் வணிகமுறையையும், அறிவியலைத் தலைமைப் பாடமாக எடுப்பவர் தமிழரின் அறிவியல் கோட்பாட்டையும் அறியச் செய்தல் வேண்டும். இவ்வாறு செய்தால் பொதுத்தமிழ் மாணவர்கள் புதுமைக்கு அடிப்படை பழமையில் உண்டு என்பதை அறிந்து, தமிழர் பண்பாட்டைப் போற்றிப் பேணுவார்கள்,

சென்னை இளங்கலைச் சிறப்புத் தமிழில் இலக்கியத் திறனாய்வு தனித் தாளாக அமைகின்றது. ஆனால் மதுரையில் அது இலக்கிய வரலாற்றோடு சேர்க்கப்பட்டுள்ளது. அண்ணா மலையில் அத்தாள் இல்லை. சென்னை முதுகலைத் தமிழில் இலக்கியத் திறனாய்வும் இலக்கிய வரலாறும் சேர்ந்த ஒரு தாள் உள்ளது. அண்ணாமலை முதுகலையில் இலக்கியத் திறனாய்வு ஓர் இலக்கிய வகையின் அமைப்பும் வளர்ச்சியும் என்பதோடு சேர்ந்துள்ளது. ஆகவே, இலக்கியத் திறனாய்வை எந்த வகுப்பில் தனியாக நடத்துவது, எந்த வகுப்பில் பிற பாடத்தோடு இணைத்து நடத்துவது என்பது பற்றி முடிவு செய்ய வேண்டும். இலக்கியத் திறனாய்வை இளங்கலைத் தமிழில் பொருள், யாப்பு, அணி ஆகிய இலக்கணங்களோடு சேர்த்து நடத்துவது பொருத்தமானது. அவ்வாறே இலக்கியத் திறனாய்வை முதுகலைத் தமிழில் உரையா சிரியர்களின் கொள்கையோடு சேர்த்து நடத்துவது பொருத்த மானது. ஆனால், இலக்கியத் திறனாய்வை இலக்கிய வரலாற் றோடு சேர்த்துத் தருவது எந்த அளவிற்கு இயைபுடையது என்பது சிந்தித்தற்குரியது.

பட்ட வகுப்பு பொதுத் தமிழ் மாணவர்களுக்குக் கட்டுரை வகுப்புகள் குறைவாகவே உள்ளன. அவர்கள் மொழித் திறன் பெற கட்டுரை வகுப்புகள் அதிகரிக்கப்பட வேண்டும். வேளாண்மைப் பல்கலைக் கழகப் பட்ட வகுப்பு மாணவர்களுக்குக் கட்டுரைப் பயிற்சி வகுப்புகள் போதுமான அளவில் தரப்பட்டுள்ளன. இளங்கலைச் சிறப்புத் தமிழ் மாணவர்களுக்குத் தனியான கட்டுரைப் பயிற்சி கிடையாது; இருப்பினும், அண்ணாமலைப் பல்கலைக்கழகம் இளங்கலைச் சிறப்புத் தமிழில் குறிப்புக்களைக் கொண்டு கட்டுரை வரைதல், மொழி பெயர்த்தல், பொதுக் கட்டுரை எழுதுதல், சுருக்கி எழுதுதல், செய்யுளை உரைநடைப் படுத்தல் போன்ற கட்டுரைப் பயிற்சிகளைத் தருவதற்குத் திட்ட மிட்டுள்ளது. மூன்று பல்கலைக் கழக பி. லிட்டிலும் மேற்கூறப் பட்ட பயிற்சிகள் சேர்க்கப்பட்டுள்ளன. மதுரை பட்ட வகுப்பு பொதுத் தமிழில் மட்டும் படைப்புத் திறன் சேர்க்கப்பட்டுள்ளது. படைப்புத் திறனை வளர்த்தல் தற்போதுள்ள பாடத்திட்டத்தில் குறைவான இடத்தைப் பெற்றுள்ளது. குமரப்பருவம் ஆக்கத் திறன்கள் பொங்கி வழியும் பருவம். அதனைப் பயன்படுத்திக் கொள்ளும் வகையில் படைப்புத் திறனை வளர்க்கும் பாடத் திட்டம் வரைதல் வேண்டும்.

ஆய்வு என்பது உயர் தமிழ்க் கல்வியின் முக்கியமான கூறு ஆகும். அண்ணாமலை பருவமுறை முதுகலைப் படிப்புகளில் ஆய்வுக் கட்டுரை சமர்ப்பித்தல் உண்டு அனைத்துப் பல்கலைக் கழகங்களிலும் எம்.ஃபில் படிப்பில்தான் ஆய்வுக் கட்டுரை சமர்ப்பிக்கும் முறை உள்ளது. ஆராய்ச்சி நெறியைப் பற்றி ஒரு தாள் வைக்கப்பட்டுள்ளது. எம்.ஃபில் பாடத்திட்டத்தில் ஆராய்ச்சி சம்பந்தப்பட்டவை மட்டும் போதா. இப்பட்டம் பெற்றவர் கல்லூரிகளில் பணிபுரியச் செல்வதால் இன்னும் சில பாடங்களைச் சேர்க்க வேண்டும். குறிப்பாக, குமரப் பருவ மற்றும் வயதுவந்தோர் உளவியல், கற்பிக்கும் முறைகள், தகவல் தொடர்பு முறைகள், பாடத்திட்டம் மற்றும் பாடப் பொருள்கள் தயாரித்தல், மதிப்பீட்டு முறைகள் ஆகியவற்றைப் பற்றிச் சில பாடங்கள் பாடத்திட்டத்தில் இடம் பெறுவது நல்லது. சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் மொழித்துறை எம்.ஃபில். பாடத்திட்டத்தில் பயிற்றுவிக்கும் முறைகள் ஒரு தாளாக அமைவது குறிப்பிடத்தக்கது.

1981-இல் உயர் கல்வித் தமிழ்ப் பாடத்திட்டங்கள் நன்றாக அமைந்துள்ளன. ஆனாலும் அவற்றை இன்னும் மேம்படுத்துவதற்கு நிறைய வாய்ப்புகள் இருக்கின்றன. ஒவ்வொரு பல்கலைக் கழகத்திலும் பல்துறை தமிழ் அறிஞர்களைக் கொண்ட நிரந்தரமான பாடத்திட்டக் குழு செயல்பட வேண்டும். அக்குழு பாடத் திட்டம் வரைதல், செயல்படுத்தல், மதிப்பிடல், புத்தாக்கம் செய்தல் போன்ற பணிகளைச் செய்ய வேண்டும். அரசு மற்றும் வேலை தரும் நிறுவனங்கள் ஆகியவற்றோடு தொடர்பு கொண்டு சமுதாயத்தின் தேவைக்குத் தக்கவாறு பாடத்திட்டங்களை உருவாக்கித் தரல் மிக இன்றியமையாதது

## துணை நூற்பட்டியல்

தமிழ் :

பாகீரதி, சோ., செம்மை வழிவகைகள், தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர், டிசம்பர், 1981, பக். 11.

முருகரத்தினம், தி., தமிழ் முதுகலைப் பாடத்திட்டங்கள் - ஒரு கண்ணோட்டம், தமிழ்ப் பல்கலைக்கழகம், டிசம்பர், 1981, பக். 12.

ஆங்கிலம் :

Buxton, Thomas H. and Keith W. Richard (ed), Excellence in Uuiversity Teaching (New Essays). University of South Colifornia Press, Columbia, 1975.

Campbell, Oscar James, The Teaching of College English. D. Appleton - century company Incorporated, New York, 1934.

Carter, Charles, Higher Education for the Future, Basil Black well, Oxford, 1980.

Fisher, David and James Day, Graded Comprehension for Advanced Students, Longmans, London, 1963.

Jevons, F. R. and H. D. Turner (ed), What kinds of Graduates Do we Need?, Oxford University Press, London, 1972.

Kaye, Antony and Graville humble (ed), Distance Teaching for Higher and Adult Education, The Open University, Croom Helm Ltd, London, 1981.

Kozma, Robert B. and others, Instructional Techniques in Higher Education, Educational Technology Publication, New Jersey, 1978.

Mcintyre, J. K. L., English for Professional Examinations, Maedonald and Evans Ltd., Plymouth, 1977 (2nd edition.)

Perkins, James A.(ed), Higher Education: From Autonomy to systems, International counsil for Educational Development, New York, 1972. p. 199-207.

Shanmugam Pillai, M. and R. Kothandaraman, Tamil studies Future and prospects, Muthu Patippakam, Madurai, 1978.

Srivastava, Anand P., Pathology of Higher Education, Reprint Publishers (India), Kampar, 1979.

# 26. பல்கலைக்கழக ஆய்வேடுகள்

அ. ம. சத்தியமூர்த்தி

எம்.ஃபில்., எம்.லிட், பிஎச்.டி. ஆகிய பட்டங்களுக்காகப் பல்கலைக் கழகங்களுக்கு அளிக்கப்பட்ட தமிழ் ஆய்வேடுகளைப் பற்றிய முழுவிவரங் களைத் திரட்டுவதற்கு இயலவில்லை. எனவே, சென்னை, அண்ணா மலைப் பல்கலைக்கழகங்களுக்கு அளிக்கப்பட்ட தமிழ் ஆய்வேடுகள் பற்றிய புற மதிப்பீடு இங்குச் செய்யப்பட்டுள்ளது.

## முன்னுரை

உலக நாடுகளில் பல நிலைகளில் தமிழ் வளர்ந்து வருகிறது. தமிழ் வளர்ச்சியில் பல்கலைக்கழக அளவில் நிகழும் தமிழாய் விற்கும் பங்கு உண்டு. எம். ஃபில்., எம். லிட்., பிஎச். டி. ஆகிய பட்டங்களுக்காகப் பல்கலைக் கழகங்களுக்கு ஆய்வேடுகள் அளிக்கப்படுகின்றன. சில கல்லூரிகளிலும், பல்கலைக்கழகங் களிலும் எம். ஏ., எம். ஓ. எல். பட்டங்களுக்கென ஆய்வேடுகள் அளிக்கப் பெறுவதும் உண்டு. அவ்வாறு அளிக்கப்பெற்ற, 1981-க்கு உரிய தமிழ் ஆய்வேடுகளின் நிலையை இக்கட்டுரை எடுத்துரைக் கின்றது.

## கட்டுரையின் எல்லை

'எண்பத்தொன்றில் தமிழ் ஆய்வேடுகள்' எனும் இக் கட்டுரைக்குச் சென்னைப் பல்கலைக்கழகம், அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை ஆகிய இரண்டிலும் நிகழ்ந்த ஆய்வுகளே எல்லைகளாக அமைகின்றன. சென்னைப் பல்கலைக் கழக எம். லிட்., பிஎச். டி. ஆய்வுகள் பற்றிய குறிப்புகள் ஏறத் தாழ முழுமையாகத் தரப்பட்டுள்ளன. எம்.ஃபில். பற்றிய குறிப்புகள் மிகச் சிலவே இடம்பெற்றுள்ளன.

அண்ணாமலைப் பல்கலைக் கழக ஆய்வுகள் பற்றிய செய்திகள் அனைத்தும், அப்பல்கலைக்கழகத் தமிழ்த்துறையினர் தந்த குறிப்பின் அடிப்படையிலேயே தொகுக்கப்பட்டுள்ளன. எம்.ஃபில். ஆய்வேடு ஒன்றும் எம். ஏ., எம். ஓ எல். ஆய்வேடுகள் 17-ம் அப்பல்கலைக் கழகத்திற்குரியவை. எனவே இங்கு இடம் பெறும் மதிப்பீடுகளின் பெரும்பகுதி சென்னைப் பல்கலைக்கழக ஆய்வுகளைப் பற்றியதாகவே அமைகின்றது.

இணைப்பில் அமைந்துள்ள தொகுப்புப் பற்றிய புறமதிப்பீடே இவண் செய்யப்படுகிறது. மேலும், இத்தொகுப்பு ஒரு முன்னோடி முயற்சியே தவிர முழுமையுடையதென்று உறுதிப்படுத்த இயலாது.

## பழைய மதிப்பீட்டின் இன்றியமையாமை

'எண்பதில் தமிழ்' எனும் நூலினுள் இடம் பெற்றுள்ள 'எண்பதில் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் ஆய்வேடுகள்' எனும் கட்டுரையின்கண் தமிழ் ஆய்வேடுகளின் தொகுப்பு வரலாறு, தொகுப்பு இன்மையால் ஏற்படும் குறைகள், தமிழாய்வு நிகழும் இடங்கள், தமிழல்லாத பிறதுறைகளில் நிகழும் தமிழாய்வு, ஆய்வேடுகள் தொடர்பாகச் செய்யவேண்டிய பணிகள், தொகுப்பால் விளையும் பயன்கள் ஆகியன பொதுநிலையில் பேசப் பட்டுள்ளன. எனவே அவை பற்றி மீண்டும் இங்குப் பேசவில்லை. ஆய்வின் வளர்ச்சிக்கும், மதிப்பீடு ஆய்வின் தரத்திற்கும் இத் தொகுப்பு வழிவகுக்கும் என்பதனை மட்டும் வற்புறுத்தி மேலே தொடரலாம்.

## எண்பத்தொன்றில் ஆய்வேடுகள்

1981-இல் நடைபெற்ற தமிழ், மற்றும் தமிழோடு தொடர் புடைய ஆய்வுகள் இணைப்பில் இடம் பெற்றுள்ளன. இணைப்பில் இடம்பெறும் மொத்த ஆய்வுகள் 59. அவற்றுள் பிஎச்.டி. ஆய்வுகள் 24. எம். லிட், 2, எம். ஃபில். 23, எம். ஏ. 9, எம். ஓ. எல். 8.

## பிஎச். டி. ஆய்வுகள்

பிஎச். டி. ஆய்வுகள் இருபத்து நான்கு. தமிழ்த்துறை வழி நடைபெற்றவை 19[1], தத்துவத்துறை (35)[2], தெலுங்குத்துறை(39)

1. அவ்வாய்வுகள் இணைப்பில் 1-4, 10-12, 30, 32, 33, 37 38, 45, 47, 49, 50, 56, 58 ஆகிய தொடரெண்களைப் பெறும்.
2. கட்டுரை முழுதும் காணப்படும் அடைப்புக் குறியிலுள்ள எண்கள் இணைப்பிலுள்ள தொடரெண்களைக் குறிக்கும்.

மரபுவழிப் பண்பாட்டு நிறுவனம் (59) ஆகியனவற்றின் வழியே தலா ஒவ்வோர் ஆய்வும், ஆங்கிலத்துறையின் வழி இரு ஆய்வுகளும் (40, 41) ஆக மொத்தம் ஐந்து ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன.

இந்த 24 ஆய்வேடுகளுள் இருபத்து மூன்று ஆய்வுகள் 1981-இல் பட்டம் பெற்றவை. எஞ்கிய ஓர் ஆய்வேடு (41) மட்டும் பட்டம் பெற்ற ஆண்டு தெளிவாகத் தெரியவில்லை. அவ்வாய்வேடு 1980-இல் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப் பெற்றுள்ளது.

தொகுப்பில் இடம்பெற்றுள்ள இருபத்து நான்கு ஆய்வேடு களுள் 1979-இல் ஒன்றும் 1980-இல் பதினெட்டும், 1981-இல் மூன்றும் பல்கலைக்கழகத்திற்கு அளிக்கப்பட்டுள்ளன.[3] எஞ்சிய இரண்டு ஆய்வேடுகளும் (2, 47) அளிக்கப்பெற்ற ஆண்டு பற்றிய குறிப்புக் கிடைக்கவில்லை.

1980-இல் அளிக்கப் பெற்று 81-இல் பட்டம்பெற்ற பதினெட்டு ஆய்வேடுகளுள் பத்து ஆய்வேடுகள் பற்றிய செய்திகள் 'எண்பதில் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் ஆய்வேடுகள்' எனும் கட்டுரை யில் இடம் பெற்றுள்ளன.

இந்தத் தொகுப்பில் 1981-இல் பட்டம் பெற்ற எம். லிட். பிஎச். டி. ஆய்வேடுகள் பற்றிய செய்திகள் மட்டுமே தொகுக்கப் பெற்றுள்ளன.

எம். ஃபில் ஆய்வேடுகளைப் பொறுத்தவரை 1981-இல் அளிக்கப்பெற்று நமது கைக்குக் கிடைத்த அனைத்தும் தொகுக்கப் பெற்றுள்ளன. எம். ஃபில் ஆய்வேடுகளைப் பொறுத்தவரையில் பட்டம் வழங்கப் பெற்ற காலம் வரையறையாகக் கொள்ளாமல் ஆய்வேட்டில் காணப்படும் ஆண்டே வரையறையாகக் கொள்ளப் பட்டுள்ளது.

## எம். லிட். ஆய்வுகள்

இணைப்பில் இடம் பெற்றுள்ள எம். லிட் ஆய்வேடுகள் இரண்டு (34,42). இவற்றுள் ஒன்று (34) வரலாற்றுத் துறையிலும் மற்றொன்று ஆங்கிலத் துறையிலும் நிகழ்ந்தவை.

3. 1979- இல் அளிக்கப்பட்டவை ஆய்வு இணைப்பில் 56- எனும் தொடரெண்ணையும், 1980-இல் அளிக்கப்பட் டவை 1, 4, 10, 12, 30, 32, 33, 35, 37, 39,40, 41, 45, 50, 57, 59 ஆகிய தொடரெண்களையும், 1981-இல் அளிக் கப்பட்டவை3, 38, 49ஆகிய தொடரெண்களையும் பெறு கின்றன.

## எம். ஃபில். ஆய்வுகள்

தொகுப்பில். இடம் பெறும் எம். ஃபில் ஆய்வுகள் 23 இவற்றுள் எஞ்சிய பதினைந்து ஆய்வுகள் சென்னைப் பல்கலைக்கழக ஆய்வுகளாகும். மீதமுள்ள ஒன்று மட்டும் அண்ணாமலைப் பல் கலைக்கழக ஆய்வாகும். சென்னைப் பல்கலைக்கழக எம். ஃபில். ஆய்வுகள் 15-இல் பத்து ஆய்வுகள் தமிழ்த்துறைகளின் வழியும், 5-இல் மூன்று 9, 16, 24, தொல்பொருளியல் துறையின் வழியும், இரண்டு (4, 8) இந்திய வரலாற்றுத் துறையின் வழியும் நிகழ்ந்தவை.

## எம்.ஏ., எம். ஓ. எல். ஆய்வுகள்

அண்ணாமலைப் பல்கலைக்சழகத்திற்கு 9 எம்-ஏ. ஆய்வேடுகளும் 8 எம். ஓ. எல் ஆய்வேடுகளுமாகமொத்தம் 17 ஆய்வேடுகள் அளிக்கப் பெற்றுள்ளன. இவ்வனைத்து ஆய்வேடுகளும்,

1. ஆசிரியர் வரலாறு; 2. புராணப் பொருட் சுருக்கம்;
3. இலக்கிய வரலாற்றில் பெரிய புராணம் பெறும் இடம்;
4. புராணப் பொருட்சிறப்பு; 5. அணிநலமும் கற்பனையும்;
6. யாப்பமைதியும் நடைநலமும்; 7. ஒப்பீடு; 8. புலமைத் திறம்; 9. முடிவுரை.

எனும் ஒரே பொருளடக்க அமைப்பினைக் கொண்டுள்ள காரணத்தினால், அவ்வாய்வேடுகள் இடம்பெறும் இத்தொகுப்பில் அவைகளின் பொருளடக்கம் குறிக்கப் பெறவில்லை.

## இணைப்பு-சில விளக்கங்கள்

இணைப்பில் உள்ள தொகுப்பின்கண் ஆய்வேடுகள் பத்து[4] சிறு தலைப்புகளின்கீழ் வகைப்படுத்தப்பட்டுள்ளன. ஒவ்வொரு சிறு தலைப்புகளின் கீழும் ஆய்வேடுகள் தலைப்பு அகரவரிசையில் அமைக்கப்பட்டுள்ளன.

---

4. பத்து ஆய்வேடுகளும் இணைப்பில் 1, 4, 10—12, 30, 32, 50, 57, 58 ஆகிய தொடரெண்களைப் பெறும். அவை எண்பதில் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆய் வேடுகள் எனும் கட்டுரையின்கண் காணப்படும் இணைப் பில் 4. 10, 15, 16, 18, 20, 21, 61, 95, 96 ஆகிய தொட ரெண்களைப் பெற்றுள்ளன.

கீழ்க்காணும் வரிசை முறையில் ஒவ்வோர் ஆய்வேடு பற்றிய செய்திகளும் இடம் பெறுகின்றன.

தலைப்பு
ஆய்வாளர் பெயர்
ஆய்வேட்டிற்கான பட்டம்
எம். ஃபில் ஆய்வேடானால், அளிக்கப்பட்ட துறை
பட்டத்திற்குரிய பல்கலைக்கழகம்
பொருளடக்கம்

## சில மதிப்பீடுகள்

1981-இல் மொழியியல் துறையில் ஓர் ஆய்வுகூட வெளி வராதது உணரத்தக்கது. மொழியியல், நாட்டுப்புறவியல் முதலான துறைகள் வளரும் வகையில் ஆய்வாளர்களுக்குத் தேவையான வசதிகள் அமைத்துத் தருவது பயன் நல்குவதாக அமையும் என்பது குறிப்பிடத் தக்கது.

1980-ஆம் ஆண்டோடு ஒப்பிடுமிடத்து 1981-இல் வெளிவந்த எம்.ஃபில். ஆய்வுகள் மிகக் குறைவாகவே காணப்படுகின்றன. பல் கலைக்கழகத் தேர்வு நிலையில் ஏற்பட்ட கால நீட்டிப்பே அதற்குக் காரணமாகும். எனவே, எம்.ஃபில். வகுப்புகளுக்கான தேர்வு முறைமை ஒழுங்குபடுத்துவது மிகமிக இன்றியமையாத ஒன்றாகும்.

1981-இல் எம்.ஃபில். ஆய்வேடுகளுக்கான வாய்மொழித் தேர்வு இல்லாத நிலையில், அவ்வாய்வேடுகளின் தரத்தினைக் காக்க வேண்டியது பல்கலைக்கழகத்தின் பொறுப்பு ஆகும்.

அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் எம். ஏ., எம். ஓ. எல் பட்டத்திற்குப் பெரியபுராணத்தை மையமாகக் கொண்டு 17 ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன. ஒரு பொருளையே மையமாகக் கொண்டு அனைவரும் ஆய்வது அப்பல்கலைக்கழக முன்னைய மரபும் ஆகும். இது போன்ற ஆய்வுகள் ஒரு பொருள் பற்றிய முழுமையான பார்வையாக அமைகின்றன.

பிற துறைகளிலும் தமிழியல் தொடர்பான ஆய்வுகள் நிகழ்ந் துள்ளமையை அறிய முடிகிறது. எனவே, அது போன்ற ஆய்வு களும் தமிழறிந்தோரால் முறைப்பட தொகுக்கப்பெறல் வேண்டும். தமிழ் ஆய்வேடுகள் பற்றிய முறையான தொகுப்பு ஒன்று வெளி வரும் போது ஆய்வின் நோக்கும், போக்கும், தரமும் வெளிப்படுவ துடன், ஆய்வு வளரவும் வாய்ப்பு உண்டு என நம்பலாம்.

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

அ.ப.க.—அண்ணாமலைப் பல்கலைக்கழகம்
கு.அ.க.—கும்பகோணம் அரசினர் ஆண்கள் கல்லூரி
செ.ப.க.—சென்னைப் பல்கலைக்கழகம்
த.இ.து-—தமிழ் இலக்கியத் துறை
த.து.—தமிழ்த்துறை
ப.க.—பச்சையப்பன் கல்லூரி
ரா. மே. க.—ராணி மேரி கல்லூரி
A.H. & A.—Department of Ancient History & Archeology
I. H.—Department of Indian History.
M. U. —University of Madras

## இணைப்பு-1

# எண்பத்தொன்றில் தமிழ் ஆய்வேடுகள்

### 1. இலக்கணம்

1. தமிழில் வினையெச்சங்கள் (வரலாற்றாய்வு)
மாதையன் பெ. பிஎச். டி, செ.ப.க, 1980.
1. முன்னுரை, 2. செய்தென் எச்சம், 3. செயவென் எச்சம், 4. செயினென் எச்சம், 5. செய்யாவென் எச்சம், 6. செம்யூவென் எச்சம், 7. செய்பென் எச்சம், 8. செய்தெனவென் எச்சம், 9. கூட்டுவினை எச்சம், 10. இக்கால வினையெச்சம், 11.வினை யெச்சங்களும் காலக்கோட்பாடும், 12. நேரக்கிளவியும் வினை யெச்சமும், 13. வினையெச்சங்களின் தொடரியல் செயற் பாடுகள், 14. வினைஉரிகளும் வினைஉரி மயக்கங்களும்' 15. முடிவுரை.

### II. தொன்மை இலக்கணம்

2. கலித்தொகை—ஓர் ஆழ்வாய்வு
ஆறுமுகம் என்., பிஎச். டி., செ. ப. க,

3, சங்க இலக்கிய நடை (பத்துப்பாட்டு மட்டும்)
வீரப்பன் பா., பிஎச். டி., செ. ப. க, 1981
1. முன்னுரை-நடையியல், 2. பத்துப் பாட்டுள் ஒலிக் கூறுகள், 3. பத்துப்பாட்டுள் சொற்கூறுகள், 4. பத்துப்பாட்டுள் தொடர்க் கூறுகள், 5. நிறைவுரை—சங்க இலக்கிய நடை.

4. சிலப்பதிகாரக் காலம் வரை இலக்கியங்களில் காணும் போரியல்—ஓர் ஆய்வு
கந்தசாமி த., பிஎச். டி., செ. ப. க, 1980

1. போர் வகையும் தலைமையும், 2.படைவகைகள், 3. அரண் வகைகள், 4. படைக்கலங்கள், 5. பழமையும் புதுமையும்' 6. போரியல் நுட்பங்கள், 7. போர் மரபுகள்.

5. புறநானூற்றில் அவ்வையும் அதிகனும்
அப்துல் சத்தார் க., எம்.ஃபில்., த.து.க., செ. ப.க. 1981

1. முன்னுரை, 2. புறநானூறு காட்டும் அவ்வையார், 3. புறநானூறு காட்டும் அதியன், 4. அவ்வையும் அதியனும், 5. அவ்வையின் புலமை நலன், 6. முடிவுரை.

6. Education in the Sangam Age
Selvaraj C, M.Phil. A. H.&A, M.U. 1981.

7. Maduraikkanchi in its Historical Setting ParameswariV.D M. Phil, I.H., M.U. 1981.

1. Introduction, 2. Political Conditions, 3. Social condition, 4. Economic Conditions, 5. Religion, 6. Culture 7. Conclusion

8. Pattinapalai in its Historical Setting
Tilakavathi M., M.Phil, I. H., M.U. 1981

9. Perumpanatrupadai in its Historical Setting.
Sundararajan T., M. Phil. A., H & A, M. U. 1981

## III. நீதி இலக்கியம்

10. நீதி சதகங்கள்—ஓர் ஆழ்வாய்வு.
பாண்டுரங்கன் நா., பிஎச். டி., செ.ப.க. 1980

1. நீதி சதகங்களின் தோற்றம், 2. சதக இலக்கியப் பொதுப் பண்புகள், 3. நீதி சதகங்கள்—வகை தொகை, 4. நீதி சதகங்களின் இலக்கியப் பண்புகள், 5. நீதி சதகங்களில் பழந்தமிழ் இலக்கியங்களின் கருத்துகள், 6. நீதி சதகங்கள் உணர்த்தும் நீதிகளும நாகரிகமும், 7. சதகங்களின் உயிர்க் கொள்கை.

11. Tamil Culture as Revealed in Tirukkural
Muthuswamy E.S., Ph.D., M. U. 1980

## IV. காவியங்கள்

12. தமிழ்க் காப்பியங்களில் அவலச்சுவை
கோபிநாத் அ, பிஎச். டி., செ. ப.க. 1980

1. தமிழ்க் காப்பியங்கள்—பொது நோக்கு, 2. அவலச்சுவை விளக்கம், 3. கணவர் இழப்பால் மனைவியர் அவலம் 4. மக்கள் இழப்பால் பெற்றோர் அவலம், 5. பெற்றோர் இழப்பால் மக்கள் அவலம், 6. உடன் பிறப்பாளர், நண்பர், பிற இழப்பால் அவலம், 7. அவலப் பாத்திரங்கள், 8. அவலச் சுவை வெளிப்படுத்தும் உத்திகள், 9. முடிவுரை.

13. பெரியபுராணம்—ஓர் ஆய்வு (1.ஆனாய நாயனார், 2. மூர்த்தி நாயனார், 3 திருநாளைப் போவார் நாயனார்)
வான்மதி எஸ்., எம் ஏ., அ.ப.க., 1981

14. பெரியபுராணம்—ஏயர்கோன் கலிக்காம நாயனார் புராணம்
மோகன்குமார் கே., எம். ஏ, அ.ப.க, 1981

15. பெரியபுராணம்—ஏழு நாயன்மார்கள்
வஞ்சிமார்த்தாண்டன் அ., எம். ஏ., அ.ப.க. 1981

16. பெரியபுராணம்—ஓர் ஆய்வு (ஆறு நாயன்மார்கள்)
சடையப்பன் ஜி, எம். ஒ எல்., அ. ப.க. 1981

17. பெரியபுராணம்—ஓர்ஆய்வு (திருஞானசம்பந்தர் புராணம்—முற்பகுதி) அழகிரி என். எஸ்., எம். ஏ., அ. ப.க. 1981

18. பெரியபுராணம் - ஓர் ஆய்வு (மூன்று நாயன்மார்கள்)
சாசுதேவன் ஆர்., எம். ஒ. எல்., அ. ப. க. 1981.

19. பெரியபுராணம் - ஓர் ஆய்வு (மூன்று நாயன்மார்கள்)
தில்லைச் செல்வி ஆர்., எம். ஒ. எல்., அ. ப. க. 1981.

20. பெரியபுராணம் - ஓர் ஆய்வு (மூன்று நாயன்மார்கள்)
ரவிச்சந்திரன் என்., எம். ஒ. எல்., அ. ப. க, 1981

21. பெரியபுராணம் - ஓர் ஆய்வு (மூன்று நாயன்மார்கள்)
கோமதி எஸ்., எம். ஒ. எல்., அ. ப. க. 1981

22. பெரியபுராணம் - கண்ணப்ப நாயனார் புராணம்
வான்மதி எஸ்., எம். ஒ. எல்., அ.ப.க. 1981

23. பெரியபுராணம் - சேரமான் பெருமாள் நாயனார் புராணம்
அந்தோனிசாமி அ , எம்.ஏ., அ. ப.க, 1981

24. பெரியபுராணம் - தடுத்தாட்கொண்ட புராணம்
மதியழகன் கே., எம். ஒ. எல்., அ. ப. க. 1981

25. பெரியபுராணம் - திருக்குறிப்புத் தொண்ட நாயனார்
ரமாமணி கே., எம்.ஒ.எல்., அ.ப.க, 1981

26. பெரியபுராணம் - திருஞானசம்பந்தர் புராணம் (பிற்பகுதி)
உதயகுமார் எஸ்., எம்.ஏ., அ.ப.க, 1931

27. பெரியபுராணம் - திருநாவுக்கரசு நாயனார் புராணம்
இராமமூர்த்தி எம்., எம்.ஏ., அ.ப.க., 1981

28. பெரியபுராணம் (நான்கு நாயன்மார்கள்)
சுந்தரலிங்கம் எஸ்., எம். ஏ., அ.ப.க. 1981

29. பெரியபுராணம் (மூன்று நாயன்மார்கள்)
பிரிதிவிராஜன் பி., எம்.ஏ., அ.ப.க., 1981

30. வில்லி பாரதத்தில் உணர்ச்சிக் கூறுகள்
முருகேசன் கு., பிஎச்.டி., செ. ப. க., 1980

31. Cults and Iconography in the silapathikaram
vasan R.S., M. phil., A.H.& A, M. U, 1981

## V இடைக்கால இலக்கியம்-பக்தி இலக்கியம்

32. அப்பர், சுந்தரர் தேவாரப் பாடல்கள்—ஓர் ஒப்பாய்வு
முரளி இரா., பிஎச்.டி., செ.ப.க. 1980

33. Spiritual Quest in Nammalvar's Tiruvaimoli
Srinivasan T., Ph. D., M. U., 1980.

1. Nammalvar and his works, 2. Nature of Reality as conceived by Nammalvar, 3. Spiritual Quest in Tiruvaimoli, 4. Main feautures of Bakti, 5. Doctrine of Grace and Saranagati.

34. Tamil Society and Religion as Gleaned from the Thevaram (of Appar and Gnanasambandar)
Thilakavathi A., M.Litt, M.U. 1980.

1. Age of Thevaram, 2. Political Conditions, 3. Social conditions, 4. Economic Conditions. 5. Religious conditions, 6. Cultural conditions.

35. The Philosophy and Religion of Tirugnanasambandar
Somasundaram P.S., Ph.D., M.U. 1980.

1. Introduction, 2. Life of Sambandar in Relations to his teachings, 3. Metaphysics of Sambandar, 4. Religion, 5. The Social Philosophy of Sambandar, 6. An Estimate,

## VI உரை

36. புலவர் குழந்தை உரைகள்—ஓர் ஆய்வு

திருவள்ளுவன் மா., எம்.ஃபில்., ப.க.,செ.ப.க., 1981.

1. உரையின் மாண்பு, 2. சமுதாய நிலை, 3. வரலாற்று நிகழ்ச்சிகள், 4. உவமைகள், 5. பழமொழிகள், 6. மரபு.

37. வைணவ உரைவளம்

ஞானசுந்தரம் தெ. பிஎச்.டி., செ.ப.க. 1980.

1. வைணவ உரை முன்னோடிகள், 2. வைணவ உரையாசிரியர்கள், 3. வைணவ உரைப்போக்கு, 4. உரையின் மொழிநடை, 5. உரைகள் காட்டும் சமுதாய நிலை, 6. உரைகள் உணர்த்தும் வைணவ சமயக் கருத்துகள், 7. முடிவுரை.

## VII நாட்டுப்புற இலக்கியம்

38. நாட்டுப்புற இலக்கியம்—ஓர் ஆய்வு

கிருட்டினசாமி க., பிஎச்.டி. செ.ப.க., 1981.

1. தெய்வங்கள், 2. விழாக்கள், 3. நம்பிக்கைகள், 4. பழக்க வழக்கங்கள்,5. சாதிகள், 6. குடும்பம், 7. உவமையும்குறியீடும்

## VIII ஒப்பியல்

39. A comparative Study of Folk-song in Telugu and Tamil.

Nirmala Palanivelu Tmt., Ph.D. M.U. 1980.

40. Patterns of Heroism in the Epics of Milton and Kamban-A comparative Study.

Manavalan A.A., Ph.D,, M. U., 1980.

1. Introduction, 2. The Epic tradition inherited by Miltan, 3. Tamil Epic Tradition inherited by Kamban, 4. Martial Heroism in the Epics of Milton and Kamban, 5. Intellectual Heroism in the Epics of Milton and Kamban, 6. Moral and Spiritual Heroism in the Epics of Milton and Kamban, 7. Conclusion.

41. Shelley and Bharati Comparative Study of their Poetic Creed.

Gnanasambandan D., Ph. D., M.U. 1980.

1. Reform. 2. Revolution, 3. Religion, 4. Nature, 5. Love,

42. The Influence of George Bernard Shaw on the Writings of Dr. M. Varadarajan.

Ramabushnam A.K., M. Litt, M.U. 1980.

1. Introduction, 2. Writers with a purpose, 3. Talkative characters, 4. Women Characters, 5. Love is an Appetite, 6. Is poverty a crime 7. Conclusion.

## IX இக்கால இலக்கியம்

43. க. நா. சு. வின் நாவல்கள்—ஓர் ஆய்வு

விசுவலிங்கம் கு., எம். ஃபில்., கு.அ.க, செ.ப.க, 1981

1. க.நா.சு.வும் அவர்தம் நாவல்களும்-ஓர் அறிமுகம், 2. கதை சொல்லும் முறையில் புதுமை, 3. க. நா. சு-வின் மொழிநடை, 4. க. நா. சு. வின் வாழ்க்கைத் தத்துவம், 5. க.நா.சு வின் நாவல்கள் - ஒரு முழுப்பார்வை

44 கம்பதாசன் கவிதைகள்—ஓர் ஆய்வு

பத்மாவதி மொ , எம்.ஃபில்., ரா. மே. க., செ.ப.க, 1981

1. வாழ்க்கை வரலாறு, 2. பாடுபொருள், 3. சமுதாயப் பார்வை, 4. கதை-வகை தொகை, 5. இலக்கிய உத்திகள், 6. முடிவுரை.

45. கல்கியின் வரலாற்று நாவல்கள்

கோபாலகிருஷ்ணன் வே. தா., பிஎச்.டி , செ.ப.க, 1980

1. கல்கிக்கு முன் வரலாற்று நாவல்கள், 2. கல்கியின் வரலாற்று நாவல்கள் - ஓர் அறிமுகம், 3. கதைச் சுருக்கங்கள், 4. வரலாற்றுக் கூறுகள், 5. சமயப் பின்னணி, 6. கலைகளின் நிலை, 7, அமைப்பும் பகுப்பும், 8. பாத்திரப் படைப்பு, 9. நடைச் சிறப்பு, 10. வாழும் கல்கி.

46. கோவி. மணிசேகரனின் சேரன் குலக்கொடி ஓர் ஆய்வு

எழிலழகன் ப., எம். ஃபில்., ப.க, செ.ப.க. 1881

1. நாவல், 2. கதைச்சுருக்கம், 3. கதைக்கரு, 4. பாத்திரப் படைப்பு, 5. சமுதாயமும் பண்பாடும், 6.மொழி நடையும் வர்ணனையும்.

47. ஜெயகாந்தன் நாவல்களில் சமுதாயப் பார்வை

அறிவழகன் அ., பிஎச்.டி., செ. ப. க., 1981

48. தகழியின் ஏணிப்படிகள் [தமிழில்] — ஓர் ஆய்வு

பானுமதி க , எம்.ஃபில்., ப.க. செ. ப.க., 1981

1. மலையாள நாவல் இலக்கியம், 2. தகழியும் ஏணிப்படிகள் நாவலும், 3. ஏணிப்படிகள் - கதைச் சுருக்கம், 4. நாவலின் தலைப்பும் கதைக்கருவும், 5. நாவலின் கட்டமைப்பு, 6. நாவல் இலக்கிய உத்திகள், 7. நாவலில் பாத்திரப் படைப்பு, 8. நாவல் காட்டும் சமுதாயம்.

49. தமிழ்க் கவிதை நாடகங்களில் பாத்திரப் படைப்பு
முகமதலி மு., பிஎச். டி., செ.ப.க., 1981

1. பாத்திர வகைப்பாடு, 2. நாடகச் சொல்லோட்டப் பாதையில் பாத்திரங்கள், 3. பாத்திரங்கள் வெளிப்படுத்தும் சுவைகள், 4. பாத்திரத் தகுதி, 5. முடிவுரை

50. தமிழ்க் கவிதையில் திராவிட இயக்கத்தின் தாக்கம்
இராசேந்திரன் சே., பிஎச்.டி., செ. ப.க., 1980

1. திராவிட இயக்க வரலாறு, 2. தமிழ் இலக்கிய வளர்ச்சியில் திராவிட இயக்கத்தின் தாக்கம், 3. தமிழ்க் கவிதையில் திராவிட இயக்கத்தின் இயல்புகள்.

51. தற்காலத் தமிழ்க் கவிதைகளில் பொதுவுடைமைக் கருத்துகள் ஓர் அறிமுக ஆய்வு (1950-1979)
பெருமாள் சா., எம்.ஃபில்., ப.க., செ.ப.க, 1981

1. முன்னுரை, 2. பொதுவுடமைக்கொள்கையின் தோற்றமும், வளர்ச்சியும், 3. தற்காலத் தமிழ்க் கவிதைகளில் பொதுவுடைமைக் கருத்துகள், 4. பொதுவுடைமை குறித்துப் பாடியோர், 5. முடிவுரை.

52. நித்திலவல்லி - ஓர் ஆய்வு
அழகர் ராமானுஜம் வெ., எம்.ஃபில், ப.க., செ.ப.க. 1981

1. வரலாற்று நாவலும் நாவல் இலக்கியத்தில் அதன் இடமும், 2. நித்திலவல்லி கதைப்போக்கும் நாவல்அமைப்பும், 3. பாத்திரப் படைப்பு, 4. வரலாற்றுச் செய்தி ஆசிரியர் கையாண்டுள்ள பாங்கு, 5. ஆசிரியர் பிற இலக்கியங்களை நாவலில் கையாண்டுள்ள முறை, 6. நித்திலவல்லியில் ஆசிரியர் காட்டும் சமுதாயம், 7. நித்திலவல்லி - கயல்விழி ஓர் ஒப்பாய்வு.

53. பாரதியார் கட்டுரைகளில் பெண்மை
விஜயகாந்தி மு., எம்.ஃபில்., ரா. மே. க., செ.ப.க., 1981

1. வரலாறும் கட்டுரைகளும், 2. மகளிர் நிலை, 3. சக்கரவர்த்தினி காட்டும் பெண், 4. பாரதியும் பெண்மையும், 5. நிறைவுரை.

54. பாரதியார் கதைகள் - ஓர் ஆய்வு
மாதவன் சிவ., எம்.·.பில், த. இ. து., செ. ப. க, 1981
1. முன்னுரை, 2. படைப்புச் சூழல், 3. கதைகளின் அமைப்பு, 4. நுவல்பொருள், 5. இலக்கியச் சிறப்பு, 6. முடிவுரை.

55 பொன்னியின் செல்வனில் பெண்பாத்திரங்கள் - ஓர் ஆய்வு
பெர்னாட்சா மு., எம். ஃபில், த. து., அ.ப.க,1981.
1. கல்கியின் வாழ்க்கை வரலாறு,2. கதைச்சுருக்கம் 3. பொன்னியின் செல்வனில் பெண்கள் பங்கு., 4. குந்தவை - நந்தினி மந்தாகினி- பூங்குழலி- மணிமேகலை - வானதி-செம்பியன் மாதேவி - பிற பெண் பாத்திரங்கள், 5. பொன்னியின் செல்வனில் பெண்கள்-ஓர் ஒப்பீடு.

## வரலாறு, பண்பாடு, பிற

56 தமிழ் இசையின் தோற்றமும் வளர்ச்சியும்
மேரி மனோகரா ஆ., பிஎச். டி., செ.ப.க. 1979
1. தமிழ் இசையின் தொன்மையும் தோற்றமும், 2. தமிழிசையின் வளர்ச்சி, 3 தமிழிசைக் கருவிகள், 4. கல்வெட்டில் இசைச் செய்திகள், 5. பாட்டும் பண்ணும், 6. பக்தி நெறியும் பாடலும், 7. தமிழிசைச் சங்கம்.

57. தமிழ் நூல்களில் தமிழ்மொழி, தமிழ் இனம், தமிழ் நாடு
கிருஷ்ணன் ப., பிஎச். டி., செ. ப. க, 1980.
1. தமிழின உணர்வின் தோற்றமும் வளர்ச்சியும், 2-8 தொல்காப்பியத்தில், சங்க இலக்கியங்களில், இரட்டைக் காப்பியங்களில், சமய இலக்கியங்களில், சிற்றிலக்கியங்களில், ஆசாரிய ஹிருதயத்தில், 19-ஆம் நூற்றாண்டில்- தமிழ் மொழி, தமிழ் இனம், தமிழ் நாடு.

58. History of Printing and Publishing in Tamil upto 1900 A,D.
Mohanraj P. A., Ph. D., M. U , 1980,

59. The Muslims of Tamil Nadu 1801-1900 A. D.
Abdul Rahim M., Ph. D. M. U. 1980.
1. Group and Sects among the Muslims, 2. Muslim Commercial and maritime activities, 3. Muslims, and the Vellore Insurrection of 1806, 4. Muslims and the British Administration, 5. Muslim education and Public Service, 6. Muslims and Tamil Language and Literature, 7. Muslim Culture, 8, Muslim Journalism in the nineteenth Century.

## இணைப்பு-2

# ஆய்வாளர்-அகர நிரல்

(எண்-வரிசை எண்ணைக் குறிக்கும்)



## இணைப்பு-3

# ஆய்வுத் தலைப்புகள் -அகரநிரல்

(எண்-வரிசை எண்ணைக் குறிக்கும்)

# 27. மாத இதழ்கள்

—கரு. நாகராசன்

ஓராண்டில் தமிழில் வெளியான 1166 இதழ்களில் 642 இதழ்கள் மாத இதழ்களே. 54 விழுக்காட்டுக்கும் மேலாக மாத இதழ்கள் உள்ள நிலை தெளிவாகிறது. 1849இல் தான் தமிழில் முதன் முதலாக மாத இதழ் வெளியானது. 55 ஆண்டுகள் கழிந்த பின்னர், அதாவது 1904 இல் இரண்டாவது மாத இதழ் தமிழில் வெளிவரலாயிற்று. 1981இல் 379 மாத இதழ்கள் தமிழில் வெளியாகியுள்ளன. இவை சமுதாய நிலையை நன்கு தெளிவுபடுத்தும் முயற்சிகளில் ஈடுபட்டுள்ளன.

## முன்னுரை

ஒரு மொழி, இலக்கிய இலக்கணச் செம்மையும் சிறப்பும் உடைய மொழியாக விளங்கியபோதிலும், காலத்தின் தேவைக் கேற்பவும், அம் மொழியைப் பேசும் மக்களின் அறிவு வளர்ச்சிக் கேற்பவும் புதுப்புது இலக்கியங்களைப் பெற்று மிளிர்ந்தால்தான் அது சிறந்த மொழியாகக் கருதப்படும். தமிழுக்கு அச்சிறப்பு உண்டு. வளரும் பல்துறை அறிவு நிலைகளையும், மலரும் சமுதாய மாற்றங்களையும் பிரதிபலித்துக் காட்டுமாறு காலந்தோறும் பல இலக்கியங்கள் தமிழில் தோன்றிக் கொண்டிருக்கின்றன. தமிழ் மொழியின் வளர்ச்சிக்கு இத்தகு இலக்கியங்கள் துணைபுரிவது போன்று தமிழில் அவ்வப்போது மலரும் இதழ்களும் துணைபுரி கின்றன.

இலக்கியம் படைப்பதென்பது தனி மனித முயற்சி; இதழ்கள் நடத்துவதென்பது கூட்டு முயற்சி; பலரது சிந்தனையில் தோன்றிய படைப்புகளையும்பெற்று ஒருசேரத்தொகுத்துத்தரும் 'திருப்பணி'

இலக்கியங்களில் காணப்படுமளவு மொழித்தூய்மை, செம்மை போல்வனவெல்லாம் இதழ்களில் பெரும்பாலும் காணமுடியாதெனினும், உலகில் நிகழ்வுறும் மாற்றங்களையும், புதிய சாதனைகளையும் உடனுக்குடன் மக்களுக்கு எடுத்துரைக்கும் பணியில் இவ்விதழ்கள் சிறந்து நிற்கின்றன. எனவேதான் இலக்கியங்களைப் படிக்கும் ஆர்வம் இல்லாதவர்கள்கூட இவ்விதழ்களில் ஒன்றிவிடுகின்றார்கள். அதனை யறிந்துதான் இதழ் நடத்துபவர்களுங்கூட மொழியின் தூய்மையைப் பேணுவதைவிடக் கருத்துகளை எப்படிக் கவர்ச்சியுடன் எடுத்துரைக்கலாம் என்பதில் அதிக அக்கறை காட்டுகிறார்கள். பலர் வணிக நோக்குடனேயே இதழ்களை நடத்துவதால் மொழியின் தூய்மை, மரபு பற்றிச் சிறிதும் கவலைப்படுவதில்லை. இப்படிப்பட்ட சூழ்நிலையிலுங்கூட மொழித்தூய்மை சிறிதும் கெடாதவாறு, படிப்பவர்களின் மொழியறிவை மேலும் வளர்க்கும் விதத்தில் வெளிவரும் இதழ்களும் உண்டு. அவை இலக்கியங்களாக எண்ணிப் போற்றற்குரியன.

குறிப்பிட்ட ஆண்டில் தமிழின் நிலை எவ்வாறு இருந்தது என்பதை ஆய்வதில் இதழ்களும் பெரும் பங்கு வகிக்கின்றன. இப்படிப்பட்ட காலவரையறைக்குட்பட்ட ஆய்விற்கு இலக்கியங்களைவிட இதழ்களே பெரிதும் பயன்பட முடியும். மொழியின் போக்கில் அவ்வப்போது ஏற்படும் வளர்ச்சிகளையும், தளர்ச்சிகளையும் இதழ்களே உடனுக்குடன் நமக்கு எடுத்துக்காட்டுகின்றன. இவ்வகையில் 1981-ஆம் ஆண்டில் தமிழில் வெளியான மாத இதழ்களைப்பற்றி பொதுநிலையில் மதிப்பிடுவதே இக்கட்டுரையின் நோக்கம்.

## இந்திய மாநிலங்களில் மாத இதழ்கள்

மத்திய அரசின் செய்தி மற்றும் ஒலிபரப்புத்துறையினர் வெளியிட்டுள்ள குறிப்புநூல் (PRESS IN INDIA) இந்திய மாநிலங்களில் வெளியாகும் மாத இதழ்கள் பற்றிய விளக்கத்தைத் தந்துள்ளது:

| மாநிலம் | மாதஇதழ்கள் |
|---|---|
| ஆந்திரா | 323 |
| அஸ்ஸாம் | 31 |
| பீகார் | 1(7 |
| குஜராத் | 274 |

| மாநிலம் | மாத இதழ்கள் |
|---|---|
| ஹரியானா | 98 |
| ஹிமாலயா | 27 |
| ஜம்மு காஷ்மீர் | 16 |
| கர்நாடகா | 320 |
| கேரளா | 496 |
| மத்தியப்பிரதேசம் | 113 |
| மஹாராஷ்டிரா | 883 |
| மணிப்பூர் | 14 |
| மேகாலயா | 10 |
| நாகாலாந்து | — |
| ஒரிஸ்ஸா | 122 |
| பஞ்சாப் | 204 |
| ராஜஸ்தான் | 172 |
| தமிழ்நாடு | 642 |
| திரிபுரா | 3 |
| உத்திரப்பிரதேசம் | 573 |
| மேற்குவங்கம் | 662 |
| அருணாசலப்பிரதேசம் | — |
| அந்தமான், நிகோபார் | 2 |
| சண்டிகார் | 50 |
| டெல்லி | 981 |
| கோவா, டயூ, டாமன் | 15 |
| மிசோரம் | 4 |
| பாண்டிச்சேரி | 20 |

1981 ஆம் ஆண்டின் தொடக்கத்தில் இந்திய மாநிலங்கள் அனைத்திலுமாக மொத்தம் 6162 மாத இதழ்கள் வெளிவந்துள்ளன (Press in India-Page 38, 39). மொழியடிப்படையில் நோக்கும் போது அதிக இதழ்கள் இந்தி மொழியில்தான் வெளியாகியுள்ளன. அதற்கடுத்த நிலையில் ஆங்கில இதழ்கள் வெளியாகியுள்ளன. இந்தியநாட்டின் தலைநகரமான டெல்லியில்தான் மிக அதிகமான மாத இதழ்கள் வெளியாகியுள்ளன. 600-க்கு மேற்பட்ட மாத இதழ்கள் வெளியாகிய நான்கு மாநிலங்களில் தமிழ் நாடும் ஒன்றாக உள்ளது. அனைத்து மாநிலங்களிலும் நான்காவது இடம் பெறுமளவிற்குத் தமிழ் நாட்டில் மாத இதழ்கள் வெளியாகியுள்ளன. மக்களெண்ணிக்கையை வைத்து நோக்குமிடத்துத்

தமிழ் நாட்டில் வெளியாகும் மாத இதழ்கள் பிற மாநிலங்களை விடச் சிறந்த இடம் பெற்றுள்ளது. நம் மக்களிடத்தில் மாத இதழ்களை வாங்கிப் படிக்கும் பழக்கம் மிக்கிருப்பதனையே மேற்கண்ட புள்ளி விவரம் எடுத்துக் காட்டுகிறது.

## தமிழ் நாட்டில் மாத இதழ்கள்

தமிழ்நாட்டில் வெளியாகும் 642 மாத இதழ்களும் தமிழ் மொழியில் வெளிவருபவை யல்ல. பிற மொழி இதழ்களும் கூட தமிழ் நாட்டில் வெளியிடப் பெறுகின்றன. தமிழகத்தின் தலை நகரமான சென்னையில் இந்தியாவின் பிற மாநிலங்களைச் சேர்ந்தவர்களும் வாழ்ந்து வருகின்றார்கள். நகரின் முக்கியப் பகுதிகளைச் சொந்தமாக்கிக் கொண்டிருப்பவர்கள் வட மாநிலங்களைச் சேர்ந்தவர்களே! நாட்டின் பிற பகுதிகளிலும் வேற்று மாநிலத்தைச் சேர்ந்தவர்கள் விரவியுள்ளார்கள். அதனால் பிற மொழிகளிலும் மாத இதழ்கள் தமிழ் நாட்டிலிருந்து வெளிவருகின்றன. அவை பற்றிய விவரம் வருமாறு:

| மொழி | மாதஇதழ்கள் |
|---|---|
| தமிழ் | 379 |
| ஆங்கிலம் | 137 |
| இந்தி | 5 |
| அஸ்ஸாமி | 1 |
| பெங்காளி | 1 |
| குஜராத்தி | 1 |
| கன்னடா | 6 |
| மலையாளம் | 5 |
| மராத்தி | 1 |
| ஒரியா | 1 |
| பஞ்சாபி | 1 |
| வடமொழி | — |
| தெலுங்கு | 36 |
| உருது | 1 |
| இருமொழி (Bilingual) | 56 |
| பன்மொழி (Multilingual) | 10 |
| பிற | 1 |

மேற்கண்ட விளக்கத்தையும் மத்திய அரசுக் குறிப்பு நூல் (PRESS IN INDIA—Page 277) எடுத்துக்காட்டுகிறது.

தமிழ் நாட்டில் வெளியாகும் மாத இதழ்களில் சுமார் 59 விழுக்காடுகள்தான் தமிழ் மொழியில் வெளியிடப்பெறுகின்றன. எஞ்சிய 41 விழுக்காடுகள் பிற மொழிகளிலேயே வெளியிடப்பெறுகின்றன. இந்நிலை தமிழின் மேம்பாட்டைக் குறிக்காது. இன்னும் அதிக அளவிலான தமிழ் மாத இதழ்கள் வெளிவரவேண்டும். குறைந்தது 75 விழுக்காடு மாத இதழ்கள் தமிழ் மொழியிலேயே வெளிவரும் நிலை உருவாகவேண்டும். மக்கள் கணக்கெடுப்பின் படி நோக்கினால் உறுதியாக 41 விழுக்காடுகள் பிற மாநிலத்தினராக இருக்க மாட்டார்கள். பிற மொழி இதழ்கள் மிகுந்த அளவில் வெளிவருவது தமிழருடைய பிற மொழி மோகத்தைக் காட்டுகின்றதோ என்றும் எண்ணத் தோன்றுகின்றது.

தமிழுக்கு அடுத்தபடியாக ஆங்கில இதழ்களே அதிகமாக வெளிவருகின்றன. அதற்கடுத்த நிலையைத் தெலுங்கு பெற்றுள்ளது. இந்தி உட்பட ஏனைய மொழிகளிலெல்லாம் குறைந்த அளவிலேயே மாத இதழ்கள் தமிழ் நாட்டில் வெளியிடப் பெறுகின்றன. சில மொழிகளில் ஓர் இதழ் மட்டுமே வெளியிடப் பெறுகிறது. ஆங்கிலம் இரண்டாம் மொழியாகவும் அரசு அலுவல்களில் பயன்படும் மொழியாகவும் இருந்து வருவதால் அம்மொழியில் பல இதழ்கள் வெளிவருவதற்குரிய சூழல் இங்கு உண்டு. தெலுங்கு மொழியைத் தாய்மொழியாகக் கொண்டவர்கள் நீண்ட காலத்திற்கு முன்பாகவே தமிழர்களோடு ஒன்றிவிட்டமையாலும், எண்ணிக்கையில் மிக்கிருப்பதாலும் அம்மொழியில் பல மாத இதழ்கள் தமிழ் நாட்டில் வெளிவருகின்றன. வடமொழியில் ஒரு மாத இதழ்கூட வெளிவரவில்லை என்பது குறிப்பிடற்குரியது. வடக்கு மாநிலங்களில் மிகுந்த அளவு எண்ணிக்கையில் மாத இதழ்கள் வெளிவரும் இந்தியில் தமிழ்நாட்டில் 5 இதழ்கள் மட்டுமே வெளிவருகின்றன.

## மாத இதழ்களே மிகுதி

மத்திய அரசுக் குறிப்பு நூல் (Press in India-Page 227) தமிழ் நாட்டில் 1981-இல் வெளியான பல வகை இதழ்களையும் குறிப்பிட்டுள்ளது. அவையாவன:

| இதழ்கள் | எண்ணிக்கை |
|---|---|
| நாளேடுகள் | 82 |
| வாரம் இருமுறை | 5 |
| வாரஇதழ்கள் | 143 |

| இதழ்கள் | எண்ணிக்கை |
|---|---|
| மாதமிருமுறை | 161 |
| மாதஇதழ்கள் | 642 |
| காலாண்டு | 84 |
| அரையாண்டு | 40 |
| ஆண்டிற்கோர்முறை | 9 |

ஓராண்டில் தமிழ் நாட்டில் வெளியாகியுள்ள மொத்தம் 1166 இதழ்களில் 642 இதழ்கள் மாத இதழ்களே! மொத்தத்தில் சுமார் 54 விழுக்காடுகளுக்கு மேல் மாத இதழ்களாகவே உள்ளன என்ற உண்மையினை நாம் உணர்கிறோம். மாத இதழ்களே மிகுந்த அளவில் வெளிவருவதற்குக் காரணம் உண்டு.

இதழ்களை நடத்துவதன் மூலமாக சமுதாயத்தொண்டு, மொழித்தொண்டு ஆகியன புரியவேண்டும் என்ற ஆர்வம் இருந்தாலும் சரி, அல்லது பொருளீட்டுதல் ஒன்றே குறிக்கோளாகக் கொண்டிருந்தாலும் சரி, எப்படியாயினும் இப்பணி எளிதான ஒன்று அல்ல. வெளியீட்டாளர்களைப் பலப்பரீட்சை பார்க்கும் செயலே இதழ்களை நடத்துவது. இடர்ப்பாடுகளுக்கிடையில் வெளியிடப்படும் ஒரு நூலைப் பல வருடங்கள்கூட வைத்திருந்து விற்பனை செய்ய முடியும். நூல் நுவலும் கருத்துகளுக்கேற்ப அதன் ஆயுளும் நீண்டுகொண்டே செல்லும். ஆனால் குறிப்பிட்ட ஒரு வகை இதழின் ஆயுட்காலம் அது வெளியிடப்படும்போதே நிர்ணயிக்கப் பெற்றுவிடுகிறது. அதன் பிறகு அவ்விதழைப் பழைய புத்தகக் கடைக்காரனிடம்தான் பார்க்க முடியும். இத்தகைய இடர்ப்பாடுகளுக்கிடையில் அடிக்கடி நாளேடு, வாரம் இருமுறை, வார இதழ் என்று இதழ்களை நடத்தும் துணிவு சிலருக்கே இருக்க முடியும். அதிக அளவு விளம்பரங்களைப் பெற்று வெளியிடல், காலத்திற்கேற்ப இதழின் தரத்தை மாற்றியமைத்தல் போன்ற நிலையில் உள்ளவர்களாலேயே மேற்கண்டவகை இதழ்களை இலாபநோக்குடன் நடத்தி வெற்றி பெற முடியும். மற்றவர்கட்கு அது அவ்வளவு எளிதல்ல.

செய்யும் பணியைச் செம்மையாகச் செய்யவேண்டுமென்றால் அதற்குப் போதுமான அவகாசம் வேண்டும். இதழ்களில் இடம் பெறும் படைப்புகளை நன்கு பரிசீலனை செய்து, மொழியின் தூய்மை, மரபு ஆகியவைகளைப் பேணிப் பாதுகாக்குமாறு அமைக்க வேண்டுமென்றால் அதற்கு மாத வெளியீடுகளே ஏற்றவையாகும். தமிழில் வெளிவரும் பல மாத இதழ்கள் இலக்கியங்களைப் போல விளங்குவதை நாம் காணலாம். மேலும்,

பெரும்பாலான மாத இதழ்கள் இலக்கியப் படைப்புகளுடன் அறிவியல், மருத்துவம். சமயம், தத்துவம், வேளாண்மை, கூட்டுறவு போன்ற உயர்ந்த கருத்துகளைத் தாங்கி வெளிவருகின்றன. அவைகள் எல்லோராலும் எளிதில் புரிந்துகொள்ள முடியாதது என்பதுடன் விற்பனையில் போட்டியிட்டு வெற்றி பெறவும் முடியாது. அத்துடன் சிறந்த சிந்தனைகளை அடிக்கடி கூறுவதும் பயன் தராது. அப்படிக் கூறப்பெறும் கருத்துகளைப் படிப்பவர்கள் உணர்ந்து பயன்பெற ஒரு மாத அவகாசம் தேவை. எனவே, வெளியிடுபவர்களுக்கும், வாங்கிப் படிப்பவர்களுக்கும் மனநிறைவைத் தரும் இதழ்கள் மாத இதழ்களே! அதனால்தான் விற்கப்படும் எண்ணிக்கையளவில் மாத இதழ்கள் குறைந்திருந்தாலும் வெளியிடப்படும் எண்ணிக்கையில் மாத இதழ்களே அதிகமாக உள்ளன.

மத்திய அரசு தரும் புள்ளிவிவரப்படி 1981-ஆம் ஆண்டின் தொடக்கத்தில் தமிழில் 379 மாத இதழ்கள் வெளியாகியுள்ளன. ஆனால், கன்னிமாரா பொது நூலகத்திலும், பிற நூலகங்களிலுமாகச் சேர்த்து சுமார் 293 மாத இதழ்களின் பெயர்களையே அறிய முடிந்தது. எஞ்சிய இதழ்களெல்லாம் வருவாய் நோக்கமின்றிக் குறைந்த அளவு எண்ணிக்கையிலேயே ஆங்காங்கு வெளியிடப்பட்டிருக்கக் கூடும். அதனால்தான் பெயருக்கு ஓர் இதழைக்கூட நூலகங்களில் காணமுடியவில்லை. பெயர் அறியப்படும் இதழ்களிலும்கூட பல இதழ்கள் பொதுமக்கள் பார்வையில் படாத நிலையிலேயே உள்ளன. ஈடுபாடும், ஆர்வமும் உடையவர்கள் மட்டுமே அவ்விதழ்களைத் தெரிந்திருப்பர். இந்நிலையில் பிறவகை இதழ்களைவிட மாத இதழ்கள் வேறுபட்டே உள்ளன.

## தமிழில் மாத இதழ்களின் தோற்றமும் வளர்ச்சியும்

தமிழில் முதன் முதலாக மாத இதழ் தோன்றியது 1849-ஆம் ஆண்டில். அதையும்கூடத் தோற்றுவித்தவர்கள் கிறித்தவ மதத்தினரே. தம் மதக் கருத்துகளை மக்கள் மத்தியில் பரப்புவதற்காகத் தமிழில் ஒரு மாத இதழைத் தோற்றுவித்தனர். அவ்விதழ் தொடங்கப் பெற்ற காலம், ஆங்கிலேயர் நம் நாட்டை ஆட்சி செய்த காலம். கிறித்துவ மதமும் மேனாட்டிலிருந்து வந்து நிலைபெற்ற மதமே. எனவேதான் இன்றும்கூடப் பிற மதத்தினர்களைவிடக் கிறித்தவர்களிடம் ஆங்கிலப்பற்று மிக்கிருப்பதையுணர்கிறோம். அதனால், முதன் முதலாக அவர்கள் தொடங்கிய

தமிழ் மாத இதழின் பெயரும் ஆங்கிலத்திலேயே யிருப்பதை யுணர் கிறோம். பாளையங்கோட்டை கிறித்துவ சங்க அலுவலகத்தி லிருந்து (Dioceson office, Palayam Kottai) முதன்முதலாக வெளியிடப் பெற்ற தமிழ் மாத இதழின் பெயர் 'திருநெல்வேலி டையோஸிஷன் மேகஸின் (Tirunelvelly Dioceson Megazine) ஆகும்.

முதல் மாத இதழ் தமிழில் தொடக்கப பெற்று சுமார் 55 ஆண்டுகள் வரை அடுத்த இதழ் தொடக்கப் பெறும் சூழல் ஏற்பட வில்லை போலும். 1904ஆம் ஆண்டுதான் அடுத்த மாத இதழ் தோன்றுகிறது. அதுவும்கூட கிறித்துவ மதச்சார்பு இதழே' பாளையங்கோட்டையிலிருந்தே இந்திய கிறித்துவ சங்கத்தினரால் (Indian Missionary Society) வெளியிடப்பெற்ற அவ்விதழின் பெயர்'மிஷினெரி இண்டலிஜென்ஷர்' (Missionary Intellegencer) ஆகும். அவ்விதழ் தொடங்கப் பெற்றுப் பதினான்கு ஆண்டுகட்குப் பின்பு 1918-ஆம் ஆண்டு 'தமிழ்ச்சபை தீபிகை' என்ற இதழ் தொடங்கப் பெற்றுள்ளது. 'ஸ்ரீராம கிருஷ்ண விஷயம்' என்ற இந்து மத மாத இதழ் 1921-ஆம் ஆண்டில் தொடங்கப் பெற் றுள்ளது.

கிறித்துவ மதம், இந்துமதம் என்று மதக் கருத்துகளை விளக்குவதற்காகவே தமிழில் மாத இதழ்கள் தோன்றி வளர்ந் துள்ளதைக் காண்கிறோம். மதக் கருத்துகளைப் பரப்பும் நோக்குடன் மட்டும் அமையாது தத்துவக் கருத்துகளையும் மக்களிடம் பரப்பவேண்டும் என்ற நோக்குடன் தொடங்கப்பட்ட இதழ்தான் 'சித்தாந்தம்'. இந்து மதத்தின் ஒரு பிரிவாகிய சைவ சமயத்தின் சார்பு இதழான அது 1928ஆம் ஆண்டு தொடங்கப் பெற்றுள்ளது. அதற்கடுத்த ஆண்டு 'ஞானதூதன்' என்ற சமயத் தத்துவ மாத இதழ் தொடங்கப் பெற்றுள்ளது. இவ்வாறு 1849 முதல் 1928 வரை தமிழில் வெளிவந்த அனைத்து மாத இதழ் களுமே மத, தத்துவ இதழ்களாகவே மலர்ந்துள்ளன.

1929-ஆம் ஆண்டின் பிற்பகுதியில்தான் முதன் முதலாக மத மல்லாத பிற துறைபற்றிக் கூறும் மாத இதழாகக்'கூட்டுறவு'என்ற இதழ் வெளிவந்துள்ளது. அடுத்த இரண்டாண்டுகளில், அதாவது 1931-ஆம் ஆண்டில்தான் சிறந்த தமிழ் இலக்கிய மாத இதழான 'கலைமகள்' தோன்றியுள்ளது. அதே ஆண்டில் 'கடைசி எக்காளம் என்ற சமய இதழும், 1940ஆம் ஆண்டில் கல்வித் துறைபற்றிக் கூறும் 'ஆரம்பக்கல்வி' என்ற இதழும், அதனையடுத்து 1941ஆம்

ஆண்டில் 'ஞானசம்பந்தன்' என்ற சைவ சமய இதழும் தோன்றி யுள்ளன. திரைப்படத்துறைபற்றிக் கூறும் 'பேசும் படம்' என்ற இதழ் 1932-இல் தோன்றியுள்ளது.

பெரியவர்கட்காகவே இதழ்கள் நடத்தப்பட்டு வந்த நிலை யினின்று மாறுபட்டு முழுதும் சிறுவர்கட்காகவே பயன்படுமாறு இதழ் நடத்தவேண்டும் என்ற எண்ணத்தின் விளைவாகத் தோன்றியதே 'அம்புலிமாமா' என்ற சிறுவர் மாத இதழாகும். 1947-ஆம் ஆண்டு தொடங்கப் பெற்ற இந்த இதழ் இன்றுவரை சிறுவர்கள் விரும்பிக் கற்கும் இதழாகத் தொடர்ந்து நடத்தப்பட்டு வருகிறது. 1947-இல் தொடங்கப்பெற்ற வேறு இதழ்கள், 'காதல்' என்ற இதழும் 'மஞ்சரி' என்ற இலக்கிய இதழுமாகும். நாடு உரிமையடைந்த ஆண்டின் நினைவுச் சின்னங்களான இம்மூன்று இதழ்களும் இன்று தொடர்ந்து நடத்தப்பட்டுச் சிறந்த வரவேற்பை மக்களிடம் பெற்று வருகிறது. வளர்ந்து வரும் அறிவியல் கருத்துப் படைப்புகளையும் தமிழில் வெளிப்படுத்து மாறு மாத இதழ் நடத்த வேண்டும் என்ற உயரிய நோக்குடன் 1948-இல் தொடங்கப் பெற்ற இதழ்தான் 'கலைக்கதிர்' ஆகும். வணிக நோக்குடன் பல இதழ்கள் தங்கள் நோக்கையும் போக்கையும் மாற்றியமைத்துக் கொண்ட போதிலும் அன்று முதல் இன்று வரை தரங்குறையாமல் அறிவியல் படைப்புகளையும் இலக்கியப் படைப்புகளையும் தாங்கி வெளிவரும் பெருமை கலைக்கதிருக்கு உண்டு.

1948 ஆம் ஆண்டிலேயே 'முஸ்லீம் முரசு' என்ற மதச் சார்பு இதழும் தொடங்கப் பெற்றுள்ளது. அதனையடுத்து மேலும் பல சமய தத்துவ இதழ்களும், இலக்கிய இதழ்களும் தோன்றியுள்ளன. இன்றுள்ள மாத இதழ்களில் பெரும்பாலான இதழ்கள் 1960-க்குப் பிறகு தோன்றியவைகளே. சுமார் 5 முதல் 10 ஆண்டுகள் வரை குறிப்பிடுமளவிற்குத் தொடக்க காலத்தைப் பெற்ற தமிழ் மாத இதழ்களே மொத்தத்தில் அதிக அளவில் உள்ளன.

பிற்றை ஆண்டுகளில் தனித்தமிழ் மாத இதழ்களும், தூய தமிழ் நெறியை எடுத்துக்காட்டும் இதழ்களும்கூட வெளி வந்துள்ளன. உரைநடையில் பல்வேறு வகை இலக்கியப் படைப்புகளையும் தாங்கிப் பல இதழ்கள் வெளிவந்துள்ளதைப் போன்று கவிதைக்குச் சிறப்பிடம் அளித்து, கவிதைகளை மட்டுமே படைப்புகளாகக் கொண்டும் மாத இதழ்கள் வெளி

வந்துள்ளன. தமிழ் இதழ்கள் என்ற பெயரில் வடசொற்கள் விரவி மணிப்பிரவாள நடையில் வெளிவந்துள்ள இதழ்களும் உண்டு. அரசியல், திரையுலகம் பற்றிய இதழ்களும், தொழிலாளர், அலுவலர் அமைப்புச் சார்பு இதழ்களும், தனி மனித இனச்சார்பு இதழ்களும் காலப் போக்கில் பல்கிப் பெருகலாயின. இவ்வாறு மதத்தில் தொடங்கி மறுமலர்ச்சிக் கருத்துகள் வரை மாதஇதழ்கள் தமிழில் வளர்ச்சி பெற்றுள்ளன. எண்ணிக்கையால் மட்டு மன்றி எண்ணத்தாலும் தமிழ் மாத இதழ்கள் உயர்ந்தேயுள்ளன.

## மாத இதழ்களின் வகைகள்

1981 ஆம் ஆண்டில் 379 மாத இதழ்கள் வெளி வந்துள்ள தாகக் குறிப்பு இருப்பினும், சுமார் 293இதழ்களே நூலகங்களிலும் பிற இடங்களிலும் காட்சியளித்துள்ளன. எண்ணிக்கையளவில் அவை மிக்கிருப்பினும் பொது நிலையில், குறிப்பிட்ட சில தலைப்பு களுக்குள்ளேயே அவைகளை யடக்கிவிட முடியும். ஆய்விற்கும் ஏற்றவகையில் கீழ்க்கண்ட பத்து வகைகளில் அவ்விதழ்களைப் பகுத்துக் காணலாம்.

1. இலக்கிய இதழ்கள்
2. மதச்சார்புடைய இதழ்கள்
3. அரசியல் சார்புடைய இதழ்கள்
4. தொழிலாளர், அலுவலர் அமைப்பு வெளியீடுகள்
5. மகளிர், சிறுவர் இதழ்கள்
6. கல்வி, அறிவியல் இதழ்கள்
7. மருத்துவம், சோதிட இதழ்கள்
8. தனி மனித, இனச் சார்பு இதழ்கள்
9. அரசு வெளியீடுகள்
10. திரையுலக இதழ்கள்

இதழில் சிறப்புப் பெறும் கருத்துகளினடிப்படையிலேயே மேற்கண்ட பகுப்புமுறை அமைந்துள்ளது. அம்முறைகளையும், அதில் அடங்கும் இதழ்களையும் தனித்தனியாக இனி ஆராய் வோம்.

## இலக்கிய இதழ்கள்

இலக்கிய இதழ்கள் என்று நாம் இங்கு பிரித்துக் காண்பது தமிழின் தூய்மை கெடாமல், மரபு சிதைக்கப்படாமல், தரமான

படைப்புகளைத் தாங்கி, மொழித் தொண்டும், அதன் மூலம் சமுதாயத் தொண்டும் புரியும் இதழ்களையே குறிக்கும். வழக்கிலுள்ள தூய தமிழ்ச் சொற்களை, இலக்கணப்பிழையின்றி அச்சிட்டு வெளியிடும் இதழ்கள் கருத்துகளுக்குத் தருமளவு முக்கியத்தை மொழி நடைக்குத் தருவதில்லை. கலைமகள், அமுத சுரபி, தீபம் போன்ற இதழ்களை இவ்வகையில் அடக்கலாம்.

வேற்று மொழிச் சொல் சிறிதும் விரவாமல் தூய தமிழ்ச் சொற்களைக் கொண்டே படைப்புகளை உருவாக்கி வெளியிடும் இதழ்களும் உண்டு செந்தமிழ்ச் செல்வி, தென்மொழி, தமிழ்ப் பொழில், குறளியம் போன்ற இதழ்களை இவ்வகையில் அடக்கலாம். தமிழ் மொழி, தமிழ்இனம், தமிழ்நெறி, தமிழ் உணர்வு என்ற அடிப்படையில் இத்தகைய இதழ்கள் செயல்படுகின்றன. அதனால் இவ்விதழ்களில் இடம் பெறும் படைப்புகளும் நாடு, மொழி, இன உணர்வுகளை மையமாகக் கொண்ட ஆய்வுகளாகவே இடம் பெறுகின்றன. தமிழ் மொழியைப் பற்றியும், தமிழறிஞர்களைப்பற்றியும் அறிந்துகொள்வதற்கு இவ்வகை இதழ்கள் பெரிதும் துணை செய்கின்றன.

இலக்கியத்தின் ஒருவகையான கவிதைக்கு முதன்மையிடமளித்து, முழுமையும் கவிதைகளாகவோ, பெரும்பாலும் கவிதைப் படைப்புகளாகவோ வெளிவரும் மாத இதழ்களும் உண்டு. கவிதை, கவிக் கொண்டல், முல்லைச்சரம் போன்ற இதழ்களைக் குறிப்பிடலாம். இவ்விதழ்களில் இடம் பெறும் கவிதைகள் பெரும்பாலும் மரபுக் கவிதைகளே. அவ்வகையில், மொழி மரபைக் காப்பதோடன்றி இலக்கண மரபையும் காத்துத் தரமான கவிதைப் படைப்புகளை வெளியிடும் இவ்விதழ்களின் பணியும் குறிப்பிடத்தக்கனவேயாம். தனித் தமிழ் நடையை இவ்விதழ்களில் காணமுடியாவிட்டாலும் தமிழ் இன, மொழி உணர்வு குன்றாமல் உலகளாவிய சிந்தனைப் படைப்புகளை இவ்விதழ்களில் காணலாம். இனி இவ்வகை இலக்கிய இதழ்களுக்குச் சில சான்றுகளைக் காணலாம்.

மாத இதழ்களின் வரலாற்றில் முதல் இலக்கிய இதழாகத் தோன்றிய 'கலைமகள்' கடந்த ஐம்பது ஆண்டுகளில் புரிந்துள்ள தொண்டு போற்றுதற்குரியது. தமிழ்ப்பண்பாட்டு மணங்கமழும்

புதினங்கள், சிறுகதைகள், ஆய்வுக் கட்டுரைகள், தன் வரலாற்றுக் கட்டுரைகள் என்று பல நிலைகளிலும் இவ்விதழ் சீரிய இலக்கியத் தொண்டு செய்து வந்துள்ளது.

1981 ஆம் ஆண்டின் தொடக்கத்தில் பெரும்பாலும் எல்லா மாத இதழ்களுமே தமிழ் மணம் கமழும் விதத்தில் அமைந்துள்ளன. 1981 சனவரியில் மதுரையில் நடைபெற்ற 5 ஆம் உலகத் தமிழ் மாநாடுதான் அதற்குக் காரணம். சனவரி மாதக் கலைமகள் மதுரை மாநகரின் அழகிய தோற்றத்தை அட்டையில் சுமந்து மலர்ந்துள்ளது. இவ்விதழின் பொன்விழா ஆண்டின் தொடக்கமாகவும் சனவரி மாதம் அமைந்ததால் சனவரியிலிருந்து ஒவ்வோர் இதழிலும் இவ்விதழைப் பற்றிப் பலரும் எழுதியுள்ள கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

1981 ஆம் ஆண்டிலே பல பரிசுகளை இவ்விதழ் அறிவித்து, போட்டியில் வெற்றிபெற்ற தரமான இலக்கியப் படைப்பாளர் களுக்குப் பரிசளித்து ஊக்குவித்துள்ளது. ஸ்ரீமதி சுப்புலட்சுமி லட்சுமணன் குறுநாவல் போட்டி,அமரர் ராமரத்தினம் குறுநாவல் போட்டி, நாராயணசாமி ஐயர் நாவல் போட்டி ஆகிய போட்டிகள் 1981 இல் நடத்தப்பட்டுள்ளன. பி. வி. ஆரின் 'ஆலமர விழுதுகள்', ஹேமாவின் 'பாசத்தின் எல்லை', மாயாவியின் 'கிருகலட்சுமி' ஆகிய நாவல்களும், ஜெ. இராஜகுருவின் 'பிரளயம்', அரவிந்தனின் 'மனத்தை உழுதால்', ராம்பிரசாத்தின் 'ஒரு சொல் ஓர் உயிர்' போன்ற குறுநாவல்களும் 1981 ஆம் ஆண்டின் சிறந்த படைப்பு களாகும் ஆர். சூடாமணியின் 'முதல்பூ' என்ற நாடகமும் அவ்வப் போது வெளியாகியுள்ள சிறந்த சிறுகதைகளும் இதழுக்குச் சிறப்பளித்துள்ளன.

பேராசிரியர் டாக்டர் பி. இராமமூர்த்தி அவர்களின் உளவியற் கட்டுரைகளும், விடையவன் அளிக்கும் பயன் தரும் பகுதியான 'வினாவிடை மாலை'யும், தொழில் நிறுவனங்கள் பற்றிய கட்டுரை களும் வித்யா தயாரித்தளிக்கும் 'மகளிர் பகுதி'யும் எல்லா இதழ் களிலும் இடம் பெற்றுள்ளன. சிறப்புக் கட்டுரைகள்-2, கட்டுரை-3, தொடர்கதை-2, சிறுகதைகள்-3, மகளிர் பகுதி, வினாவிடை, மதச்சார்புக் கட்டுரை-1 என்ற அமைப்பில் இவ்விதழ் வெளி வந்துள்ளது.

கலைமகளுக்கடுத்த நிலையில் தரமான சிறுகதைகள், குறு நாவல்கள், நாவல்கள், தொழில் நிறுவனங்கள் பற்றிய

கட்டுரைகள் ஆகியனவற்றை வெளியிட்டு வரும் இலக்கிய இதழ் அமுதசுரபி ஆகும். கலைமகளில் இடம் பெறாத 'ராசிபலன்' அமுத சுரபியில் இடம் பெற்றுள்ளது. இவ்விதழின் சார்பாகவும் அவ்வப் போது பல போட்டிகள் நடத்தப்பட்டுப் பரிசுகள் வழங்கப் பட்டுள்ளன. நாட்டின் தலைநகரில் இடம்பெறும் செய்திகளில் சிறந்தனவற்றையும் மாதந்தோறும் இவ்விதழ் வெளியிட்டுள்ளது. 'தில்லியிலிருந்து' என்ற கட்டுரையை ஏ. ஆர். நாராயண சாமி தொடர்ந்து எழுதியுள்ளார். தேசிய விருது பெற்ற ஆசிரியர்களிடம் மாண்புமிகு பிரதம அமைச்சர் அவர்கள் பேசிய பேச்சின் சாரம் அக்டோபர் இதழில் இடம் பெற்றுள்ளது.

பல அரிய கட்டுரைகளை இதழ்கள் தோறும் அமுதசுரபியில் காண முடிகிறது.

தமிழில் தரமான சிறுகதைகள் வளர்வதற்குத் துணை செய்த இதழ்களில் குறிப்பிடத்தக்கது 'தீபம்' என்றால் மிகையாகாது. அவ் விதழில் இடம்பெறும் படைப்புகளில் மிகுதியும் சிறுகதைகளாகவே இருக்கும். 1981 இல் விட்டல் ராவ் எழுதிய 'வெப்பக்காற்று' என்ற நாவலும், மலையாளத்தில் வி.பி.சி. நாயரால் எழுதப்பட்டுத் தமிழில் குறிஞ்சி வேலனால் மொழி பெயர்க்கப்பட்ட 'முழுமை யைத் தேடும் முழுமையற்ற புள்ளிகள்' என்ற நாவலும் தொடர்ந்து இடம் பெற்றுள்ளது. 'தமிழில் சிறு பத்திரிகைகள், என்ற தலைப்பில் பத்திரிகைகளின் தோற்றம் முதல் எழுத் தாளர் வல்லிக்கண்ணன் அவர்கள் செய்து வந்த ஆய்வுக்கட்டுரை வரை தொடர்ந்து இடம் பெற்றுள்ளது. 'இலக்கிய மேடை' என்ற தலைப்பில் இடம் பெற்றுள்ள பயனுள்ள வினாவிடைப் பகுதியும் எல்லா இதழ்களையும் அலங்கரித்துள்ளது. 'புதிய புத்தகங்கள்' என்ற பகுதியில் புது வெளியீட்டு நூல்கள் திறனாய்வு செய்யப் பட்டு அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன.

அவ்வப்போது பல புதுக்கவிதைகளும் இதழில் இடம் பெற்றுள்ளன. பல கவிதைகள் வெறும் சொற்கோலங்களாகக் காணப்படினும் சில சிறந்த கவிதைகளும் இடம் பெற்றுள்ளன. நவம்பர் மாத இதழில் 'ஒரு சந்தேகம்' என்ற தலைப்பில் ஒரு கவிதை இடம் பெற்றுள்ளது.

> தேவர்களின் கால்கள் தரையில் படாதாம்
> காரணம்,
> தேவலோகத்து வீதிகள்

சாக்கடையில் மூழ்கிய
சென்னையில் சில தெருக்கள் போல் இருக்குமோ?'
(பக்கம்-20)

என்பதுவே அக்கவிதை. சமுதாய நிலையைப் புலப்படுத்தும் திறத்திற்காகவேனும் இக்கவிதையை நாம் ரசிக்கலாம். 'மலேசிய மடல்' என்ற ஒரு பகுதியும் எல்லா இதழ்களிலும் இடம் பெற்றுள்ளது. மலேசிய நாட்டின் நிலையை நாம் புரிந்து கொள்வதற்கு அப்பகுதி துணை செய்கிறது. பல நிலைகளிலும் சிறந்த இதழாக வெளி வந்துள்ள தீபம் போன்ற இதழ்களில் மொழித் தூய்மையைக் காண முடியாததே குறையாகும்.

எந்நிலையிலும் தனித்தமிழ் அல்லாத சொற்கள் இதழில் இடம் பெறல் கூடாது என்ற உறுதிப்பாட்டுடன் இயங்கி வரும் இதழ்களில் குறிப்பிடத்தக்கது செந்தமிழ்ச் செல்வி. தென்னிந்தியத் தமிழ்ச் சங்கத்தின் சார்பில் வெளியிடப்படும் இவ்விதழ், மக்கள் நிலைக்கு மொழியின் தரத்தைத் தாழ்த்தாமல் தனது நிலைக்கு மக்கள் நிலையை உயர்த்தும் இதழாகும். ஜனவரி என்ற ஆங்கில மாதத்தைச் 'சனவரி' என்றுதான் இவ்விதழ் குறிப்பிடுகிறது. தவிர்க்க இயலாமல் பிறமொழிச் சொற்களைக் கையாளும் இடங்களில்கூட அச்சொல்லைத் தமிழ் எழுத்துகளால், தமிழ் மொழி மரபுப்படி குறிப்பிடும் நிலையை இவ்விதழில் காண்கிறோம்.

மொழியாராய்ச்சி, இலக்கண ஆராய்ச்சி, பக்தியுணர்வூட்டும் கட்டுரைகள், மொழிமரபு பிறழாக் கவிதைகள் போன்ற படைப்புகளையே இவ்விதழில் காணமுடிகிறது. தமிழ் ஆர்வலர்கள் படித்துச் சுவைப்பதற்கும், அறிஞர்கள் மேலும் பல அரிய செய்திகளைத் தெரிந்து கொள்வதற்கும் இவ்விதழ் பெரிதும் பயன்படுகிறது.

தமிழ் கூறும் நல்லுலகைப் பற்றிய முழுமையான செய்திகளை நாம் அறிய இவ்விதழ் பெரிதும் துணைசெய்கிறது. 1981 ஆம் ஆண்டு சனவரி மாத இதழ் உலகத் தமிழ் மாநாட்டுச் சிறப்பிதழாக மலர்ந்துள்ளது. அம்மாநாடு பற்றிய பல ஆய்வுக் கட்டுரைகளை அம்மலரில் காணமுடிகிறது.

பிப்ரவரி மாத இதழ் அறிஞர் தேவநேயப் பாவாணர் நினைவு மலராக வெளிவந்துள்ளது. 'தனித் தமிழ்ச் சீயம் வீழ்ந்தது' என்ற

தலையங்கம் முதலாய், அவரைப்பற்றி அறிஞர் பலர் எழுதிய கட்டுரைகளும், இரங்கற் பாக்களும் நம் நெஞ்சைத் துயரில் ஆழ்த்துகிறது. அவரது கட்டுரைகளும் அம்மலரை நிறைவு செய் கிறது. கழகப் பெரும்புலவர் இளவழகனார் மறைவு பற்றிய செய்திகள், அவரது தமிழ்த் தொண்டு ஆகியனவற்றை மார்ச்சு மாத இதழிலும், உரைவேந்தர் ஔவை. சு. துரைசாமி அவர் களின் மறைவு, அவர் தமிழுக்கு ஆற்றிய அருந்தொண்டுகள் ஆகியனவற்றை ஏப்ரல் மாத இதழிலும் காண முடிகிறது.

மணிவிழாக் காணும் கழகத்தின் வளர்ச்சிக்குத் துணைபுரிந்த பெருமக்களுக்குக் கழக ஆட்சியரின் நன்றியுணர்வைப் புலப்படுத் தும் தலையங்கம், நாளிதழ் வேந்தர் சி.பா. ஆதித்தனாரின் மறைவு, அவர் பற்றிய செய்திகள், உலகத் தமிழ் மாநாடு கண்ட அறிஞர். ஆ. சுப்பையா அவர்களின் மறைவு, அவர் ஆற்றிய தமிழ்த் தொண்டு ஆகிய செய்திகளை சூன்மாத இதழில் காண முடிகிறது. ரசிகமணி டி.கே.சி. அவர்களின் நூற்றாண்டு விழா பற்றிய சிறப்பு மலராக ஆகஸ்டு மாத இதழ் வெளியாகியுள்ளது.

தஞ்சையில் தொடங்கப் பெற்ற தமிழ்ப் பல்கலைக்கழகம் பற்றிய செய்திகளைச் சுமந்து சிறப்பு மலராக அக்டோபர் மாத இதழ் வெளிவந்துள்ளது. 'தஞ்சை மாநகரில் தமிழுக்கு ஒரு பல்கலைக்கழகம்', 'தமிழ்ப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் வி. ஐ. சுப்பிரமணியம்', 'பாவாணர் கனவிய தமிழ்ப் பல்கலைக் கழகம், போன்ற சிறப்புக்கட்டுரைகள் மலரைச் சிறப்பிக் கின்றன. கவியரசு கண்ணதாசனின் மறைவு, அவரது தமிழ்த் தொண்டு, அவரது மறைவு குறித்து அறிஞர் பலர் எழுதிய இரங்கற்பாக்கள் ஆகியனவற்றைக் கொண்டு வெளியான நவம்பர் மாத இதழ் நம் கண்களைக் குளமாக்குகின்றன. ஓராண்டில் வெளியான செந்தமிழ்ச் செல்வி இதழ்கள் அனைத்தையும் படித்து முடித்த போது தமிழ்ப் பூங்காவிற்குள் நுழைந்து இனிய மணம் நுகர்ந்து இன்புற்ற மனநிறைவைப் பெற முடிகிறது.

தூய தமிழ் நடையில்,இன,மொழி உணர்வின் அடிப்படையில் நடத்தப்படும் மற்றொரு இதழ் "குறளியம்" ஆகும். திருக்குறளே தமிழரின் மறைநூல்; அதுவே வாழ்க்கை விளக்கம் என்ற எண்ணத்தைப் பரப்பும் நோக்குடையோரால் இவ்விதழ் நடத்தப் படுகிறது. எனவே இதழில் இடம்பெறும் படைப்புகளில் பெரும்பா லும் திருக்குறட் கருத்துகளையே காணமுடிகிறது. திருக்குறளில்

நிறைந்த புலமையும், மிகுந்த ஈடுபாடும் உடையவர்களே தொடர்ந்து இவ்விதழில் எழுதிவருகின்றனர். திருக்குறட் கருத்துகளின் அடிப்படையில் புதிய தமிழ்க் குமுகாயம் (சமுதாயம்) அமைக்க முற்படுவதே இவ்விதழின் நோக்கம்.

குறள் நெறிக் காவலரும், திருக்குறட்பேரவையின் தலைவருமான தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் 'திருக்குறள் வாழ்க்கைச் செயல் முறைக் குறிப்புகள்' என்ற தலைப்பிலும், திருக்குறள் முனுசாமி அவர்கள் 'வள்ளுவரின் வழிப்பயணம்' என்ற கற்பனை கலந்த கட்டுரையின் வாயிலாகவும் சிறந்த கருத்துகளைத் 1981ஆம் ஆண்டில் தொடர்ந்து எழுதியுள்ளார்கள்' 'குறளியம்-முழுமைப் புரட்சியின் மூல முழக்கம்' என்ற ஆய்வுக் கட்டுரையை கு. ச. ஆனந்தன் அவர்கள் தொடர்ந்து எழுதியுள்ளார்கள். 'உயிர் அறிவியல்கள்' என்ற தலைப்பில் பல அறிவியல் கட்டுரைகளை, நூலக இயல் அறிஞர் வே. தில்லைநாயகம் அவர்கள் தொடர்ந்து எழுதியுள்ளார்கள். அறமுறையாளர் (நீதிபதி) சி. இராமகிருட்டிணன் அவர்கள் 'முறை மன்றங்களில் திருக்குறள், என்ற சிறந்த கட்டுரையினையும் தொடர்ந்து எழுதியுள்ளார்கள்.

பாவலர் முருகு போன்ற சிறந்த பல கவிஞர்களின் கவிதைப் படைப்புகளும் இதழ்கள் தோறும் இடம் பெற்றுள்ளன. திருக்குறட் கருத்துகள் நாடெங்கும் பரவவும், திருக்குறட் பேரவையின் பணி சிறப்படையவும் இவ்விதழ் பெரும்பணி யாற்றிவருகிறது. திருக்குறள் அவதானி இராமையா பிள்ளை, முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் போன்ற அறிஞர்களின் படைப்புகளும் சில இதழ்களை அலங்கரித்துள்ளன. 'துறை தோறும் தமிழ்' என்ப தோடன்றி, 'துறை தோறும் திருக்குறள்' என்ற உயரிய நிலை ஏற்படச் செய்வதே 'குறளியம்' இதழின் விழுமிய நோக்கமாகும்.

மதுரைத் தமிழ்ச் சங்கத்தினரால் நடத்தப்படும் செந்தமிழ் இதழும் தனித்தமிழ் வளர்ச்சிக்குத் தொண்டு செய்யும் மாத இதழே. எனினும், முந்திய இதழ்களைப் போன்ற தூய தமிழ் நடையை இவ்விதழில் காண முடியவில்லை. இலக்கண ஆய்வுக் கட்டுரைகள், இலக்கியக் கற்பனைப் படைப்புகள், சொல்லாராய்ச்சி, ஒப்பியல் கட்டுரைகள், தரமான மரபுக் கவிதைகள் ஆகியனவற்றைத் தாங்கி இவ்விதழ் வெளிவந்துள்ளது.

கவிராச பண்டித இராம சுப்பிரமணிய நாவலர் என்பவர் 'வடசொல்லாராய்ச்சி' என்ற தலைப்பில் தொடர்ந்து செய்துள்ள ஆய்வுக் கட்டுரை 1981ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது. தமிழா? வடமொழியா? என்ற ஐயத்திற்குரிய பல சொற்கள் வடசொற்களே என்று அக்கட்டுரையாசிரியர் நிறுவுகிறார், இந்துப்பு, உலகு, கவி, காமர், குணம், கொஞ்சம் போன்ற சொற்கள் வடசொற்களே என்பது இவரது முடிவு. (செப்டம்பர்-பக்கம்: 330, 331, 332). பல தமிழறிஞர்கள் மேற்கண்ட சொற்களில் பல தூய தமிழ்ச் சொற்களே எனக் கூறியுள்ளனர். வடசொல்லாராய்ச்சி என்பதற்குப் பதில் 'தமிழ்ச் சொல்லாராய்ச்சி' என்று அவர் முனைந்திருந்தால் 'செந்தமிழ்' இதழுக்குச் சிறப்பளித்திருக்கும்.

மதுரைப் பல்கலைக் கழகத்தில் பணி புரியும் பழனி. அரங்கசாமி என்பவர் 'தமிழில் ஷேக்ஸ்பியர்' என்ற ஓர் ஆய்வுக் கட்டுரையினை எழுதியுள்ளார். அதில் கி.பி. 16 ஆம் நூற்றாண்டில் தோன்றிய ஷேக்ஸ்பியருக்குப் பிறகுதான் தமிழில் நாடகங்கள் வளர்ச்சி பெற்றுள்ளன என்று குறிப்பிட்டுள்ளார். தமிழ் நாடக மரபில் இல்லாத இன்பியல், துன்பியல் அமைப்புகளெல்லாம் அதன் பிறகுதான் தமிழிற் புகுந்தனவென்றும், மனோன்மணியம் தோன்றுவதற்கும், பரிதிமாற் கலைஞர், 'நாடக இயல்' என்ற நூலைப் படைப்பதற்கும் மூலகாரணமானவர் ஷேக்ஸ்பியரே என்றும் அக்கட்டுரையாசிரியர் குறிப்பிட்டுள்ளார். 'செந்தமிழ்ச் செல்வி', 'தென்மொழி' போன்ற இதழ்களின் தனித் தமிழ் நடையினைச் செந்தமிழில் காண முடியாவிட்டாலும் தமிழ் வளர்ச்சிக்கு இவ்விதழும் தொண்டு செய்ய முற்படுகிறது என்றே குறிப்பிட வேண்டும்.

கவிதைப் படைப்புகளை வெளியிடுவதற்கென்றே சில இதழ்கள் தோன்றி அவ்வகையில் சீரியபணியாற்றி வருகின்றன. கவிதை, முல்லைச் சரம், கவிக்கொண்டல், கணையாழி போன்ற இதழ்களை இவ்வகையில் குறிப்பிடலாம். தமிழ் மொழி உணர்வும், இன உணர்வும் கருப்பொருள்களாகக் கொண்ட கவிதைகளையே பெரும்பாலும் இவ்வகை இதழ்களில் காண முடிகிறது. தமிழ்மரபு பிறழாக் கவிதைகளையே இவ்விதழ்கள் மிகுதியாக வெளியிட்டுள்ளன.

டிசம்பர், 1981 இல் வெளியிடப்பட்ட முல்லைச்சரம் பாரதி நூற்றாண்டுச் சிறப்பு மலராக மலர்ந்துள்ளது. அம்மலரில் மணம்

வீசும் கவிதை மலர்களில் பல பாரதியைப் பற்றியனவே, அம் மலரின் முன் அட்டையிலே பாரதியைப் பற்றிய ஒரு கவிதை இடம் பெற்றிருக்கிறது. இங்கே குறிப்பிடப்பட்ட கவிதை இதழ்களின் படைப்புகளில் தமிழ் உணர்வு வெளிப்படுமளவிற்குத் தூய தமிழ் நடையைக் காண முடியாது. ஆனால் தென்மொழி இதழில், வெளியாகும் ஆய்வுக் கட்டுரைகள் மட்டுமன்றிக் கவிதைகளும் கூட தனித் தமிழ் நடையில்தான் அமைந்திருக்கும். எப்படியிருப்பினும், தமிழ்க்கவிதையின் வளர்ச்சிக்கு இவ் விதழ்கள் அரிய பணியாற்றி வருகின்றன என்றே குறிப்பிட வேண்டும்.

## 2. மதச்சார்புடைய இதழ்கள்

எத்தனை மதத்தைச் சேர்ந்தவர்கள் தமிழ் நாட்டில் இருக்கின்றார்களோ அத்தனை மதத்தையும் சேர்ந்த மாத இதழ்கள் தமிழில் உண்டு. சில மதங்களுக்குப் பல இதழ்கள் உண்டு. தமிழ் இலக்கிய வளர்ச்சியில் மதங்களுக்குப் பெரும் பங்குண்டு என்பதை வரலாறு காட்டும். இம்மண்ணில் கால் வைத்த பிற மதங்களால் தமிழர் வாழ்க்கையில் பல மாற்றங்கள் விளைந்ததுண்டு; அதனால் தமிழ் வளம் பெற்றுள்ளது. அது போன்றே இன்றுள்ள தமிழ் மாத இதழ்களில் மிகுதியாய் உள்ள மதச் சார்புடைய இதழ்களும் தமிழின் வளர்ச்சிக்குத் துணை செய்து வருகின்றன என்றே கூறலாம்.

மதச்சார்புடைய இதழ்களில் தூய தமிழ் நடையினை எதிர்பார்த்தல் இயலாது. ஏனென்றால் அவ்விதழ்களின் மூலம் இதழாசிரியர்கள் கூற விரும்பும் கருத்துகளின் பொருத்தமான சொற்கள் பெரும்பாலும் வடமொழியாகவோ, ஆங்கிலம், உருது போன்ற பிற மொழியாகவோதான் இருக்கும். அக்கருத்தை அப்படியே மக்கள் மனத்தில் பதிய வைப்பதுதான் அவர்கள் நோக்கமே தவிர அதற்கேற்ற தூயதமிழ்ச் சொற்களைத் தேடி அதன் மூலம் அக் கருத்தைப் புலப்படுத்தி மொழித்தொண்டு புரிவது அல்ல. எனினும் காலப்போக்கில் தமிழ்ப் பற்றுடைய பிற மதத்தினர்கள் தங்கள் கருத்துகளையும்கூட தூய தமிழில் சொல்லவேண்டும் என்று முற்பட்டிருப்பதையும் உணர்கிறோம். 'பரலோகத்திலிருக்கிற எங்கள் பிதாவே...' என்ற நிலை மாறி 'வானகத்திலிருக்கிற எங்கள் தந்தாய்...' என்றும் கூட கிறித்துவப் பெருமக்கள் வழிபாடு செய்வதை யுணர்கிறோம். இந்நிலை தொடர வேண்டும். மதச் சார்புடைய பல மாத இதழ்களில் சிலவற்றினையே இங்கு ஆய்விற்கு எடுத்துக் கொண்டுள்ளோம்.

'தெய்வீகத் திங்களிதழ்' என்ற அறிமுகத்துடன் வெளிவரும் இதழ் குண்டூசி அறிமுகத்தில் காணப்படும் மொழிச் செம்மையை இதழின் உள்ளே காண முடியவில்லை. ஜனவரி, 1981-இல் வெளியான இதழ், தமிழ்நாட்டுச் சிறப்பிதழ் என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அவ்விதழின் தொடக்கத்தில் ஸ்ரீ காஞ்சி காமகோடி பரமாச்சார்யாள் அவர்கள் 'அஹிம்சை' பற்றித் தம் கருத்துகளை அருளியுள்ளார்.

முறையாகத் தமிழ் பயின்றவர்களாலேயே இதைத்—தெளிவாகப் புரிந்து கொள்ள முடியவில்லை. எல்லோரும் எளிதில் புரிந்து கொள்ளுமாறு எளியதமிழில் (தூய தமிழில் இல்லாவிட்டாலும்) அப்பகுதி வெளியிடப்பட்டிருந்தால் மேலும் பயன் விளைந்திருக்கக் கூடும். ஒரு வேளை, அப்படியே வடசொற்கள் விரவிய நடையில் வெளியிடுவதுதான் தங்கள் தகுதியை உயர்த்திக் காட்டும் வழி என்று கருதுகின்றார்களோ என்னவோ!

'நாலாயிரத் திவ்ய பிரபந்தசாரம்', 'நாலடியார் கதைகள்', குண்டூசி ஜோஸ்யரால் எழுதப்படும் 'லக்ன பலன்' ஆகிய பகுதிகள் எல்லா இதழ்களிலும் இடம் பெற்றுள்ளன. 'குழந்தைகள் உலகம்' என்ற பகுதி, சிறுவர்கட்கு நீதி புகட்டும் விதத்தில் அமைந்துள்ளது. இவ்விதழின் சில மாத இதழ்களில் பெரியாரின் பொன்மொழிகளையும் இறுதியில் குறிப்பிட்டிருப்பது வியப்பாகவும் சிறப்பாகவும் உள்ளது. இதழின் தொடக்கத்தில் காஞ்சிப் பெரியவரின் அருள்மொழி; இறுதியில் ஈரோட்டுப் பெரியாரின் பொன்மொழி!

'குறளை ஊன்றிப் படிப்பவர்கள் எல்லோரும் நிச்சயம் சுயமரியாதை உணர்ச்சி பெறுவார்கள். அரசியல் ஞானம், சமூக ஞானம், பொருளாதார ஞானம் ஆகிய சகலமும் அதில் அடங்கியிருக்கின்றன".

'ஏழை மக்களுக்கு உதவி செய்வது என்பது ஏழைத் தன்மை மனித சமூகத்தில் இல்லாதிருக்கும்படி செய்வதேயொழிய இங்கொருவனுக்கும் அங்கொருவனுக்கும் சாப்பாடு போடுவதால் அல்ல' (சனவரி—1981)

ஆகஸ்டு மாத இதழில் 'மத மாற்றம் ஏன்?' என்ற கட்டுரை, மீனாட்சிபுர மத மாற்றம் பற்றியும், அது போன்ற பிரச்சினைகளுக்கு எப்படித் தீர்வு காண்பது என்பது பற்றியும் தெளிவுபடுத்துகிறது. செப்டம்பர் மாத இதழில் 'இலங்கையில் இனவெறி'

என்ற தலையங்கக் கட்டுரை இலங்கைத் தமிழர் பிரச்சினைகள் பற்றிக் குறிப்பிடுகிறது. மதச் சார்புடைய இதழாக இருந்தாலும் மதக் கருத்துகளை மட்டுமே குறிப்பிட்டு அமையாது சமுதாயப் பிரச்சினைகளையும் திறனாய்வு செய்து மக்களோடு நெருங்கிய கருத்துத் தொடர்பினை இவ்விதழ் கொண்டுள்ளது என்பதனையே நாம் உணர முடிகிறது.

இந்து சமய அறநிலைய ஆட்சித் துறையினரால் நடத்தப்படும் இதழ் திருக்கோயில். தமிழக அரசின் அமைச்சுத் துறைகளில் ஒன்றாக இந்து சமய அறநிலையத்துறை இருப்பதால் அத்துறையில் தமிழக அரசு புரிந்துவரும் பணிகளை எடுத்துக்காட்டும் இதழாக இது விளங்குகிறது. அறநிலையங்கள் தொடர்பான நிகழ்ச்சிகள், சொற்பொழிவுகளின் சுருக்கம், அந்நிகழ்ச்சிகளில் எடுக்கப்பட்ட புகைப்படங்கள் ஆகியவற்றுடன் சமயத் தொடர்பான பல கட்டுரைகளையும் இவ்விதழில் காணமுடிகிறது. சைவ வைணவ மதச் சார்புடைய கட்டுரைகளுடன் சீவக சிந்தாமணி போன்ற பிற மத இலக்கிய ஆய்வுக் கட்டுரைகளும் இவ்விதழில் இடம் பெற்றுள்ளன.

சனவரி—1981 இதழ் உலகத் தமிழ் மாநாட்டுச் சிறப்பு மலராக மலர்ந்துள்ளது. தமிழின் சிறப்புகளையும் தமிழின் வளர்ச்சிக்கு சமயங்கள் ஆற்றிய தொண்டுகளையும் அம்மலரில் காணமுடிகிறது. மார்ச்சு மாத இதழில் மேலவைத் தலைவர் மாண்புமிகு ம. பொ. சிவஞானம் அவர்களின் 'இராமலிங்கரின் இலட்சியம்' என்ற கட்டுரை சிறப்பிடம் பெறுகிறது. ஏப்ரல் மாத இதழில், சென்னை, மயிலாப்பூர் இராமகிருஷ்ணமிஷன் மாணவர் இல்லத்தின் 75 ஆம் ஆண்டு முத்துவிழா நிகழ்ச்சி இடம் பெற்றுள்ளது.

பெரும்பாலும் அமைச்சர்களின் சொற்பொழிவுச் சுருக்கங்களுக்கே முதன்மையிடம் அளித்துவரும் இவ்விதழ் திருமுருகாற்றுப்படை, கந்தபுராணம் போன்ற சமய இலக்கிய ஆய்வுக் கட்டுரைகளையும் வெளியிட்டு வருகிறது. இவ்விதழின் ஆசிரியர் திரு. ந.ரா. முருகவேள் அவர்கள் பல ஆய்வுக் கட்டுரைகளைத் தொடர்ந்து எழுதியுள்ளார்கள். தூய தமிழ் நடையில் அமைந்த இவ்விதழ் சமயக் கருத்துகளைப் பரப்புவதன் மூலம் தமிழ் வளர்ச்சிக்கும் தொண்டு செய்து வருகிறது.

முஸ்லிம் மாத இதழாக வெளிவரும் மணிவிளக்கு அம்மதத்தினரின் கருத்துகளைப் பரப்பும் கட்டுரைகள், கவிதைகள், சிறுகதைகள், நாவல்கள் ஆகியவைகளைத் தாங்கி வெளிவருகிறது 1981-ஆம் ஆண்டில் மீனாட்சிபுர மதமாற்றத்திற்குப் பிறகு பிரச்சினைக்குரிய மதமாக முஸ்லிம் மதம் மாறியதால் பிற மத இதழ்களுக்கு மறுப்புத் தெரிவிக்கும் பல கட்டுரைகள் அவ்விதழில் இடம் பெற்றுள்ளன.

'அண்ணல் முகமது எனும் அழகிய முன் மாதிரி' என்ற தலைப்பில் நபிகளின் வரலாறு 1981 ஆம் ஆண்டில் தொடர்ந்து எழுதப்பட்டுள்ளது. 'அந்திவானம்' என்ற முஸ்லிம் மதத் தொடர் கதையும் தொடர்ந்து வெளியாகியுள்ளது. இந்தி, உருதுச் சொற்கள் விரவிய தமிழ்நடையினை இவ்விதழில் காணமுடிகிறது.

ஜைன இளைஞர் மன்றத் திங்களிதழான முக்குடை, ஜைன சமயக் கருத்துகளைப் பரப்பும் பணியைச் செய்து வருகிறது. வட சொல், ஆங்கிலம் விரவிய தமிழ் நடை ஆங்காங்குக் காணப் படுகிறது. மறைந்துபோன ஜைன இலக்கியங்களைப்பற்றிய ஆய்வுக் கட்டுரைகள் 1981 ஆம் ஆண்டில் பல இதழ்களில் வெளியாகியுள்ளன. 'அறமும் சமயமும்', 'ஆகம விளக்கம்' போன்ற பகுதிகளையும் தொடர்ந்து காண முடிகிறது. 'சிறுவர் பகுதி' மாணவர்கட்கு நீதியைப் புகட்டும் விதத்தில் அமைந்துள்ளது.

செப்டம்பர் மாத இதழ் ஜீவபந்து T.S. ஸ்ரீபால் அவர்களின் நினைவு மலராக வெளியிடப்பட்டுள்ளது. தம் மதக் கருத்துகளைப் பரப்புவதையே நோக்காகக் கொண்ட இவ்விதழ் அதன் மூலம் தமிழ்ப்பணியும் செய்து வருகிறது.

திருப்பராய்த்துறை ஸ்ரீ இராமகிருஷ்ண தபோவன வெளியீடாக மலரும் தர்ம சக்கரம், இந்து மதக் கருத்துகளையும் இடையிடையே பிற மதக் கருத்துகளையும் வெளியிட்டு வருகிறது. வடமொழியும் தமிழும் கலந்த மணிப்பிரவாள நடையில் இவ்விதழ் அமைந்துள்ளது. எனினும், தமிழ் மாதங்களின் வரிசையினையே இதழில் குறிப்பிட்டுள்ளார்கள். பிரார்த்தனை, அருள் விருந்து, பரம ஹம்சர் புகட்டிய பெருநெறி விளக்கம், இயேசுவின் மலை உபதேச விளக்கம், அனுமன் கண்ட சீதை, விஞ்ஞானமும், மெய்ஞ் ஞானமும், குமரகுருபரர், பகவத்கீதையும் காந்தியடிகளும் என்ற தலைப்புகளில் 1981 ஆம் ஆண்டின் எல்லா இதழ்களிலும் தொடர் கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன.

வைகாசி, ஆனி இதழ்களில் 'ஆன்மீக உலகம்' என்ற சமயக் கட்டுரை இடம் பெற்றுள்ளது. ஒவ்வோர் இதழின் தொடக்கத்திலும் பொன்மொழிகள் போன்று 'அருள் விருந்து' என்ற பகுதி இடம் பெற்றுள்ளது.

'வாழ்க்கைச் சுமையினின்று மனிதனை விடுவிப்பது நன்னெறி'

'பிறரை மேன்மைப்படுத்துபவன் தானே மேன்மையுறுகிறான்'—(தை—81)

'நீ எப்படி இருந்தாய் என்பதை மறந்துவிடு; எப்படி இருக்க வேண்டும் என்பதை ஞாபகத்தில் வைத்துக் கொள்.'

'தன்னால் ஆகக்கூடிய காரியத்தை மனிதன் பிறரிடமிருந்து எதிர்பார்க்கு மளவிற்கு அவன் கீழ்மையுறுகிறான்.'

—(கார்த்திகை – 81)

சுவாமி துருவானந்தர் 'பகவத்கீதையும் காந்தியடிகளும்' என்ற தொடர் கட்டுரை எழுதியுள்ளார்.

தனித் தமிழ் நடையில் இல்லை யென்பதைத் தவிர மற்றபடி இவ்விதழ் மதச் சார்புடைய இதழ்களின் வரிசையில் குறிப்பிடத் தக்கதே. கண்மூடித்தனமான செய்திகளை மட்டுமே பக்கங்களில் நிரப்பாமல் விஞ்ஞானக் கருத்துகளையும், மெய்ஞ்ஞானத்துடன் அதற்குள்ள தொடர்பினையும் இவ்விதழ் ஒப்பிட்டு விளக்குகிறது; பண்பட்ட ஆன்மீக வாழ்விற்கு வழிகாட்டுகிறது. மதக் காழ்ப்புணர்ச்சியின்றிப் பிற சமய உண்மைகளையும் மதித்துப் போற்றி வெளியிடுகிறது. பிற மத இதழ்களுடன் ஒப்பிடும் போது வடமொழிக் கலப்பும் கூட இவ்விதழில் குறைவு என்றே கூற வேண்டும்.

## 3 அரசியல் சார்புடைய இதழ்கள்

மக்கள் வாழ்க்கையை மாற்றியமைப்பதில் மதங்களுக்கு உள்ள செல்வாக்கு அரசியல் கட்சிகளுக்கும் உண்டு. மறுபிறவியில் கிட்டும் பயன்களைக் காட்டி மதங்கள் மக்களைக் கவர்கின்றன. இப்பிறவியல் நலம் விளைவிக்கப் போவதாகக் கூறி அரசியல் கட்சிகள் மக்களைக் கவர்கின்றன. கவர்ச்சியின் விரைவுத்தன்மைகளுக்கேற்ப மக்கள் மனங்களும் மாறுபடுவதால் உண்மையில் நலம் விளைவிப்பவர் யார் என்பது கூட மக்களுக்குப் புரியாமல் போய்விடுவதுண்டு மதங்கள் உயர்ந்த தத்துவங்களைக் கூறி நிதானமாகச் சிந்திக்கும்,

வாய்ப்பை மக்களுக்கு வழங்க நினைப்பதால் தான் பெரும்பாலும் மாத இதழ்களாக மத இதழ்கள் அமைந்துள்ளன. ஆனால் அரசியல் நிலை வேறு. ஒவ்வொரு நாளும் நிகழ்வுறும் போட்டிகளுக்கேற்ப மறுப்பு விளக்கங்களை உடனுக்குடன் சூடாகத் தந்தாக வேண்டும். மக்களும் அப்படி எதிர்பார்க்கின்றார்கள். எனவேதான் அரசியல் இதழ்கள் பெரும்பாலும் நாளிதழ்களாகவும், சில இதழ்கள் வார இதழ்களாகவும் வெளிவருகின்றன.

நேரடி அரசியல் இதழாக இல்லாவிட்டாலும் அரசியல் சார்பு இதழாகச் சில மாத இதழ்கள் வெளிவருகின்றன. மார்க்சீய ஒளி, தாமரை, செம்மலர், சிகரம் போன்ற இதழ்கள் இவ்வரிசையில் குறிப்பிடத்தக்கன. இவ்விதழ்கள் உணர்த்தும் தத்துவங்களும் உயர்ந்தனவேயாம். எனவே, மக்கள் மனங்களில் அவ்வுண்மைகளை அசைபோட்டு ஜீரணிப்பதற்கு ஒரு மாத இடைவெளியாவது தேவை யென்பதை உணர்ந்துதான் மார்க்சீய லெனினியக் கருத்துடைய இவ்விதழ்கள் மாத இதழ்களாக வெளிவருகின்றன போலும்.

தரமான முற்போக்கு இலக்கியப் படைப்புகளை வெளியிடும் இதழ்களின் வரிசையில் தாமரைக்குச் சிறப்பிடம் உண்டு. பொதுவுடைமை இயக்கத் தலைவர்களில் ஒருவரும், சிறந்த இலக்கியப் படைப்பாளருமான அமரர் ஜீவா அவர்களால் தோற்றுவிக்கப் பட்ட இவ்விதழ் தரமான சிறுகதைகள், நாவல்கள், ஆராய்ச்சிக் கட்டுரைகள், கவிதை ஆகியனவற்றைத் தாங்கிக் கருத்துக் கருவூலமாக வெளிவந்து கொண்டிருக்கிறது. முற்போக்கு இதழ்களுக்கு முன்னோடியாகத் திகழும் தாமரையில் பெரும்பாலும் நிறைந்த புலமையுடையோரின் சிறந்த படைப்புகளையே காண முடியும்.

1981 சனவரி மாத இதழ் உலகத் தமிழ் மாநாட்டுச் சிறப்பிதழாக வெளிவந்துள்ளது. பல்வேறு தலைப்புகளில் ஆய்வுக் கட்டுரைகளை நாட்டின் பல பகுதிகளில் வாழும் அறிஞர்களும் எழுதியுள்ளனர். மறைந்த பேராசிரியர் நா. வானமாமலை, தோழர் பாலதண்டாயுதம் ஆகியோரின் சிந்தனை மலர்களும் மணம் வீசுகின்றன.

உலகத் தமிழ் மாநாட்டுச் சிறப்பிதழ் என்பதற்கேற்ப உலகின் பிற பகுதிகளில் வாழும் தமிழறிஞர்களின் கட்டுரைகளும் மலரை அலங்கரிக்கின்றன.

மாஸ்கோ வானொலி தமிழ்ப் பிரிவில் கடந்த 17 ஆண்டு களாகப் பணிபுரிபவர் தோழர் வித்தர் மீனின். 'மீனவன்' என்ற புனைபெயரையுடைய இவர் 'மாஸ்கோ வானொலியில் தமிழோசை' என்ற கட்டுரையினை இவ்விதழில் எழுதியுள்ளார்.

டாக்டர் ஏ. கதிரேசன் அவர்கள் மருந்துகள் பற்றி எழுதி யுள்ள தொடர்கட்டுரையும், மன்னர் மன்னனின் 'மண்ணின் மைந்தர்கள்' என்ற நாடகமும் 1981 ஆம் ஆண்டில் தொடர்ந்து வெளிவந்துள்ளன. சூன் மாத இதழ் சிறுகதைப் பேராசான் புதுமைப் பித்தன் நினைவு மலராக அட்டையில் அவர் உருவப் படத்தைத் தாங்கி வெளிவந்துள்ளது. அம்மலரில் பல படைப்புகள் அவரைப் பற்றியே அமைந்துள்ளன. 'புதுமைப் பித்தனின் சில ரசமான ஞாபகங்கள்' என்ற பழைய நிகழ்ச்சித் தொகுப்புக் கட்டுரை ஒன்றினை திரு ரகுநாதன் அவர்கள் எழுதி யுள்ளார்கள். புதுமைப்பித்தன் கவிஞராகவும் விளங்கியுள்ளதை ஒரு நிகழ்ச்சியின் மூலம் விளக்குகிறார் கட்டுரையாசிரியர்.

தூய தமிழ் நடையில் இல்லாவிட்டாலும், மக்களுக்குப் புரியக் கூடிய எளிய தமிழ் நடையை இவ்விதழில் காண முடிகிறது. மார்க்சிய சித்தாந்தங்களின் விளக்கமாக 'மார்க்சிய ஒளி' என்ற மாத இதழ் வெளிவருகிறது. செம்மலர். சிகரம் போன்ற இதழ் களும் தாமரையைப் போன்று முற்போக்குப் படைப்புகளைக் கொண்டு வெளிவரும் இதழ்களே.

## 4. தொழிலாளர், அலுவலர் அமைப்பு வெளியீடுகள்

பல்வேறு அலுவலகங்கள், தொழில் நிறுவனங்களில் பணி புரியும் ஊழியர்கள் ?அனைவரும் ஒன்றுசேர்ந்து சங்கங்களை அமைக்கின்றனர். தங்களிடையே ஒற்றுமையை உருவாக்கு வதற்கும், தங்களது நேர்மையான கோரிக்கைகளை நிறை வேற்றிக் கொள்வதற்கும் அச்சங்கத்தை அவர்கள் பயன்படுத்திக் கொள்கின்றனர். அச்சங்கத்தின் குரலாக ஓர் இதழையும் அவர்கள் நடத்தி அவர்களது எண்ணங்களை அதில் பிரதிபலிக் கின்றனர்.

அவ்வகையில் பல மாத இதழ்கள் தமிழில் வெளி வந்து கொண்டிருக்கின்றன. என். ஜி. ஓ. குரல், பல்லவ நாதம், ஹார்பர் தொழிலாளி, உழைக்கும் விவசாயி, சர்வோதயம், ஊற்று போன்ற

பல இதழ்கள் இவ்வரிசையில் அடங்கும். தங்களது கேடயமாகவும், உரிமைக்குரலாகவும் பயன்படுத்தும் இவ்விதழ்களின் மூலம் தமிழ்ப் பணியினையும் அவர்கள் செய்து வருகின்றனர். தங்களது கோரிக்கைகள், தீர்மானங்கள் ஆகியவைகளை வெளியிடுவதோடு மட்டுமன்றி தரமான சிறுகதைகள், கட்டுரைகள், கவிதைகளையும் கூடச் சில இதழ்களில் வெளியிட்டிருப்பதைக் காண முடிகிறது.

முறையாகத் தமிழ் கற்காத பல தொழிலாளித் தோழர்கள் தங்கள் உணர்ச்சிகளுக்கு உருக்கொடுத்துத் தீட்டும் கவிதைகளும் கட்டுரைகளும் கற்றோர் மனங்கவரும் வண்ணம் அமைந்திருப்பதைக் காண முடிகிறது. இவ்வகை இதழ்களில் மொழித்தூய்மை, செம்மையான நடை, மொழி மரபு இவைகளையெல்லாம் பெரும்பாலும் எதிர்பார்க்க முடியாது. சில இதழ்கள் சிறந்த இலக்கியப் பேழைகளாகவும் திகழ்கின்றன.

தமிழ்நாடு சர்வோதய சங்க வெளியீடான சர்வோதயம் மாத இதழ் நாட்டின் நிலையை நன்கு பிரதிபலித்துக் காட்டும் நடுநிலை இதழாகத் திகழ்கிறது. காந்தீயக் கருத்துகளையே பெரும்பாலும் இவ்விதழின் படைப்புகளில் காணமுடிகிறது. கதர் வேலை பற்றிய செய்திகள், இயற்கை வைத்தியம், மின்சாரம் போன்றவற்றின் இயல்புகளை விளக்கும் கட்டுரைகள் ஆகியன எல்லா இதழ்களிலும் 1981 ஆம் ஆண்டில் இடம் பெற்றுள்ளன. மனித ஒழுக்கத்தை வலியுறுத்தும் கட்டுரைகளும் எல்லா இதழ்களிலுமே காணப்படுகின்றன.

சர்வோதயம் இதழுக்குரிய தனித்தன்மைகளில் ஒன்று ஒவ்வோர் இதழின் அட்டையில் அப்போதைய நாட்டு நிலையைப் பிரதிபலிக்குமாறு வெளியிடும் கேலிச்சித்திரமாகும். சனவரி மாத இதழில், நாளுக்கு நாள் உயர்ந்துவரும் விலைவாசியைக் குறிப்பிடும் விதத்தில் 'உச்சி மீதேறி' என்ற கேலிச்சித்திரம் இடம் பெற்றுள்ளது. அது போல, அன்றாடப் பிரச்சினையைத் தெளிவு படுத்தும் விதத்தில் தீட்டப்படும் தலையங்கங்களும் சரியான விமர்சனங்களாகவே உள்ளன. பிப்ரவரி மாத இதழில், நாட்டில் நடந்த விவசாயிகள் கிளர்ச்சியை மதிப்பீடு செய்து 'விவசாயிகள் எழுச்சி' என்று தலையங்கம் தீட்டப்பட்டுள்ளது.

'சோவியத் பெண்களின் நல்வாழ்வு' என்ற கட்டுரை அக்டோபர் இதழில் இடம் பெற்றுள்ளது. அக்கட்டுரை, சோவியத் நாட்டுப் பெண்கள் பல்துறையிலும் எவ்வாறு முன்னேற்றம் பெற்று

வருகின்றனர் என்பதை விளக்குகிறது. குடிப்பழக்கம் போன்ற சமுதாயக் கேடுகளைச் சாடும் இவ்விதழ் நாட்டு முன்னேற்றத்திற்கு நற்றொண்டு புரிகிறது என்றே குறிப்பிட வேண்டும்.

பல்வேறு அலுவலகங்களிலும் நிறுவனங்களிலும் பணிபுரியும் தமிழ் ஆர்வலர்கள் ஒருங்கிணைந்து நடத்தி வரும் அமைப்பே 'பெங்களூர் தமிழ்ச்சங்க'மாகும். அச்சங்கத்தின் சார்பாக 'ஊற்று' என்ற மாத இதழ் நடத்தப்படுகிறது. சங்கத்தினர் தமிழ் மேம்பாட்டிற்காக அங்கு ஆற்றி வரும் பணிகளை இதழில் காண முடிகிறது. பெங்களூர்ப் பல்கலைக்கழகத்தில் தமிழ்ப் பேராசிரியர் இருக்கை, பள்ளிகளில் தமிழ் பயிற்று மொழியாதல் போன்ற நற்பணிகட்காகச் சங்கம் முயன்று வருவதை 'ஊற்று' நமக்கு உணர்த்துகிறது. பல இலக்கியப் படைப்புகளையும் அவ்விதழில் காண முடிகிறது.

தமிழ் வளர்ச்சிக்குச் சொல்லாலும் செயலாலும் தொண்டு செய்து வரும் நல்ல உள்ளங்கள் 'ஊற்று' இதழின் மூலம் எழுத்தாலும் இலக்கியப் பணி புரிந்து வருகின்றனர். இதுபோல் மேலும் பல அமைப்புகளின் சார்பிலும் தமிழ் மாத இதழ்கள் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

## 5. மகளிர், சிறுவர் இதழ்கள்

இதற்கு முந்திய தலைப்புகளில் நாம் பார்த்த இதழ்களுக்கும் இவ்விதழ்களுக்கும் ஒரு வேறுபாடு உண்டு. பெண்களுக்கு உரிமை தருவது, அவர்கள் பல்வேறு பணிகளையும் புரிவது என்பதெல்லாம் அண்மைக்கால வளர்ச்சியே. பெண்களுக்காகத் தனி இதழ்களை நடத்துவதும் அண்மைக்கால முயற்சியே. அதுபோல் சிறுவர் இலக்கியங்களைப் படைப்பது, அவர்களுக்கெனத் தனி இதழ்களை நடத்துவது என்பதும் அண்மைக் காலத்து முயற்சிகளே. வீட்டின் விளக்காகத் திகழ்பவர் மகளிர்: வீட்டில் மணங்கமழும் முல்லைகளாகச் சிரிப்பவர்கள் சிறுவர்கள். இருப்பினும், அவர்களுக்காகத் தமிழில் நடத்தப்படும் மாத இதழ்கள் மிகக் குறைவே.

பெரும்பாலான மாத இதழ்களில் மகளிர், சிறுவர்களுக்கெனத் தனிப் பகுதிகள் உண்டெனினும் மங்கை, மங்கையர் மலர் போன்ற சில இதழ்களே மகளிருக்குத் தனியாகவும், அம்புலிமாமா, ரத்ன பாலா, அரும்பு போன்ற சில இதழ்களே சிறுவர்களுக்குத் தனியாகவும் நடத்தப்படுகின்றன.

'மங்கையராகப் பிறப்பதற்கே-நல்ல
மாதவம் செய்திட வேண்டுமம்மா' என்ற

கவிமணியின் கவிதை மணிகளைக் குறிக்கோளாகக் கொண்டு இயங்கும் இதழ் மங்கை. மகளிர் பிரச்சினைகளைப் பல நிலைகளில், கட்டுரையாகவும், கேள்வி பதிலாகவும் கலந்துரையாடல் வாயி லாகவும் இவ்விதழ் ஆய்ந்து முடிவு காண முற்படுகிறது. மகளிர் தொடர்பான பொதுவான கேள்விகளுக்கு 'கற்பகத்தைக் கேளுங்கள்' என்ற பகுதியில் ஏற்ற விடைகளையும், உடல் நோய்கள், கருவுறுதல் தொடர்பான கேள்விகளுக்கு 'டாக்டர் பதில்கள்' என்ற பகுதியில் விடைகளையும் தருகின்றனர்.

1981 ஆம் ஆண்டு மங்கை இதழ்களில் 'மகளிர் ஆடிய 'கிரிக்கெட்' என்ற தலைப்பில் இந்திய மகளிர் அணிக்கும், இங்கிலாந்து மகளிர் அணிக்குமிடையில் நடைபெற்ற கிரிக்கெட் பற்றி விமர்சிக்கப்பட்டுள்ளது. (மார்ச்சு-81) 'பெருமைக்குரிய பத்மா' என்று பத்மா சுப்பிரமணியம் பாராட்டப் பெற்றுள்ளார்.

'ஒரு விளையாட்டு வீரரின் மனைவியாக' என்ற தலைப்பில் (டென்னிஸ்) ஆனந்த் அமிர்தராஜின் மனைவி ஹெலன் அளித்த பேட்டி இடம் பெற்றுள்ளது. 'இளம் பெண்களின் இன்றைய பிரச்சினைகள்', 'மலிவோமலிவு'போன்ற பலதலைப்புகளில் மகளிர் பங்கேற்ற கலந்துரையாடல் ஒவ்வோர் இதழிலும் இடம் பெற்றுள்ளது. அழகிய, ஆரோக்யமான குழந்தைக்கு ரூ. 25 பிறந்த நாள் பரிசாக வழங்குவதுடன் 'மழலைச் செல்வம்' என்ற பகுதியில் மாதம்தோறும் அழகிய குழந்தைகளின் புகைப்படங்களையும் வெளியிட்டு மகிழ்கிறது.

உண்மைக்கதைகள், தையல்முறை, கோலங்கள் போடும்முறை போன்ற பயனுள்ள செய்திகள் இவ்விதழில் நிறைந்திருப்பதால் மகளிர் மனங்கவரும் இதழாக இது விளங்கி வருகிறது. உடல் ஊனமுற்றோர் ஆண்டின் தொடர்பாகப் பல கட்டுரைகளை இவ்விதழ் வெளியிட்டுள்ளது. மொத்தத்தில், 'மங்கை' இதழைப் புரட்டும் மகளிர் தங்கள் சொந்த வாழ்விற்கு அது பயன்படுவதுடன் உலகைப் புரிந்து நடப்பதற்கும் உதவி செய்கிறது என்பதை யுணர்வர்.

உண்மைகளை எடுத்து உணர்த்துவதில் பெரியவர்களை விடச் சிறியவர்களிடம் அதிகச் சிரமம் எடுத்துக் கொள்ள வேண்டியதிருக் கும். அது போலவே சிறுவர்கட்கு இதழ் நடத்துவதும் எல்லா

நீதிகளையும் கதைகள், கட்டுரைகள் வாயிலாக மட்டுமே அவர்களுக்குப் புகட்டிவிட முடியாது. அவர்கள் கண்ணையும், மனத்தையும் ஈர்க்கும் அழகிய படங்கள், படக்கதைகள், எளிய இனிய நடை, அவர்களால் புரிந்து கொள்ளக்கூடிய கதை நிகழ்ச்சிகள் என்ற முறையில்தான் சிறுவர் இதழ்களை நடத்தவேண்டும். அம்முறையில் சிறந்த பணியாற்றி வரும் இதழ்களில் ரத்னபாலா, அம்புலி மாமா, அரும்பு போன்றவை குறிப்பிடத்தக்கன.

அழகிய வண்ணப்படமே கண்ணைக் கவருமாறு அமைந்தது ரத்னபாலா. எளிய நடையில், சிறுவர்களுக்கு எளிதில் புரியுமாறு தடித்த எழுத்துகளில் பக்கங்கள் தோறும் படங்களுடன் அவ்விதழ் காட்சியளிக்கிறது. 1981 ஆம் ஆண்டு இதழ்களில் 'பழைய பங்களா' என்ற படக்கதை தொடர்ந்து வெளியாகியுள்ளது. இதழில் இடம் பெற்றுள்ள சிறுகதைகள், கவிதைகள் எல்லாமே சிறுவர்கட்கு நீதி புகட்டும் பாங்கில்தான் அமைந்துள்ளன. சிறுவர்களே எழுதியது போலவே மொழிநடையும் அமைந்துள்ளது. சில மாணவர்களும் சில இதழ்களில் கவிதைகள், துணுக்குகளை எழுதியுள்ளனர்.

இதழின் அனைத்துப் பக்கங்களிலும் திருக்குறளைப் போன்று பல நீதிகளை எழுதியுள்ளார்கள். ஆர்வமுடன் கதை படிப்பது போலவே சிறுவர்கள் அதையும் படித்துப் புரிந்து கொள்வர்.

'கடமையைச் செய்வதிலிருந்துதான் உரிமைகள் எழுகின்றன. 'ஏழைகளுக்காக உழைப்பதைவிட கடவுளைத் தொழும் மார்க்கம் வேறெதுவும் இல்லை' 'இந்து சமயம் என்பது ஒருமதமல்ல; அது வாழும் வழி'—(அக்டோபர்-81)

நாட்டுக்காகஉழைத்த தலைவர்கள், அறிஞர்கள் ஆகியோரின் பிறந்த நாள் வரும் மாதங்களில் அட்டைப்படத்தில் அவர்கள் திரு உருவப் படத்தை இடம் பெறச் செய்து இதழ்களின் உள்ளே அவர்களைப் பற்றிப் பல படைப்புகளையும் இடம் பெறச் செய்துள்ளனர். ரத்னபாலாவினின்றும் சிறிது வேறுபட்டு நிற்பது அரும்பு. கிறித்துவ சபையினரால் அவ்விதழ் நடத்தப்படுவதால் அம்மதச் சார்புடைய கதைகள், நீதிகள் மிகுதியாக இடம்பெற்றிருக்கின்றன. ஆனால் மாணவர்களின் படைப்புகளுக்கே அவ்விதழ் முதன்மையிடம் அளிப்பது பாராட்டிற்குரியது. சாதனையாளர்களைப் பற்றியும், வீரதீர நிகழ்ச்சிகளை நடத்தியவர்களைப் பற்றியும் சிறுகதை, தொடர்கதைகளை இடம் பெறச் செய்யும் இதழ் அம்புலிமாமா. மந்திரம், தந்திரம், பேய், பூதம் என்றெல்

லாம் படைப்புகள் அமைந்திருந்தாலும் படிக்கும் ஆர்வத்தைத் தூண்டும் வண்ணப்படங்களைப் பக்கங்கள் தோறும் இடம் பெறச் செய்துள்ளார்கள். ஒருவகையில் சிறுவர் நெஞ்சில் வீரம் தோன்ற இவ்விதழ் உதவுகிறது எனலாம்.

படிக்கும் சிறுவர்களுக்குப் புரியும் விதத்தில் எளிய நடையிலேயே இவ்விதழ்கள் அமைந்துள்ளன. பெரும்பாலும் பிற மொழிக்கலப்பு மிகக் குறைவாகவே காணப்படுகிறது. கல்லூரி, உயர்நிலைப்பள்ளி மாணவர்களுக்காகவும் பல இதழ்கள் நடத்தப் படுகின்றன. மாணவர்களே சேர்ந்து நடத்தும் சிறந்த இதழ்களில் ஒன்று தேன்மழை. அதுபோன்ற இதழ்களைப் பின்னர் மாணவர் களே நடத்துமளவிற்கு அவர்களுக்கு ஆர்வத்தையும் ஆற்றலையும் இன்றைய சிறுவர் இதழ்கள் வழங்குகின்றன என்றால் மிகை யாகாது.

## 6. கல்வி, அறிவியல் இதழ்கள்

கல்வித்துறையில் அடைந்துவரும் மாற்றங்களையும் வளர்ச்சி களையும் அவ்வப்போது பிறர்க்கு எடுத்துரைக்கும் விதத்தில் பல இதழ்கள் நடத்தப்படுகின்றன. கல்வி, ஆரம்பக்கல்வி, கல்வி அரங்கம், மேனிலைக் கல்வி போன்ற இதழ்கள் கல்வியின் வளர்ச்சி நிலைகளை எடுத்துரைக்கும் மாத இதழ்களாகும். அவ்விதழ் களிலேயே அறிவியல் போன்ற பிற கலைகளின் ஆய்வுக்கட்டுரை களும் இடம் பெற்றுள்ளன. கல்வி, அறிவியல் தொடர்பான பல கட்டுரைகளையும், கண்டுபிடிப்புகளையும் வெளியிட்டுவரும் இதழ் கலைக்கதிராகும். யுனெஸ்கோ வெளியீடான யுனெஸ்கோ கூரியர் மாத இதழிலும், பல்வேறு கலைகள் தொடர்பான கட்டுரைகளையும், அறிவியல் கண்டுபிடிப்புகளைக் காட்டும் ஆய்வுக்கட்டுரைகளையும் காண முடிகிறது. 'விஞ்ஞானச்சுடர்', 'விஞ்ஞான விவசாயம்' போன்ற அறிவியல் இதழ்களும் உண்டு.

அறிவியற் படைப்புகளையெல்லாம் தமிழில் கொண்டு வர வேண்டும்என்ற சீரிய முயற்சியில் இயங்கிவரும் இதழ் கலைக்கதிர். கல்வி, அறிவியல் தொடர்பான பல ஆய்வுக்கட்டுரைகளை 1981- இதழ்களில் காணமுடிகிறது. 'அறிவியல் வினாவிடை' என்ற பகுதி யில் பல புதிய அறிவியல் கண்டுபிடிப்புகள் தொடர்ந்து எல்லா இதழ்களிலும் விளக்கப்பட்டுள்ளன. 'ஊனமுற்றோருடன் எனது தொடர்பும் அனுபவமும்' என்ற கட்டுரை திருமதி. பங்கஜாட்சி சுப்பையன் அவர்களால் பிப்ரவரி மாத இதழில்

எழுதப்பட்டுள்ளது. 'பார்வையற்றோர்க்குக் கற்பிக்கும் முறை' பற்றித் தெளிவு படுத்தும் செல்வி எஸ். ஜெபினால் வியோனிக் கட்டுரை கல்வி போதிக்கும் முறைகளில் புதிய திருப்பமாக அமைந் துள்ளது.

மார்ச்சு மாத இதழில் 'அறிவியல் தமிழாக்கம்' என்பது பற்றி அப்போதைய சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் திரு ஜி. ஆர். தாமோதரன் அவர்கள் ஆற்றிய உரை இடம் பெற்றுள்ளது.

'விண்பயணத்தில் மனோசக்தி' என்ற ஓர் ஆய்வுக் கட்டுரை யினை திரு ச. முகமது அக்பர் அவர்கள் ஜூன் மாத இதழில் எழுதியுள்ளார். 'இங்கிருக்கும் நாம் நியூயார்க்கில் வாழும் நம் நண்பரொருவரின் மனதில் புதியதாக ஒரு எண்ணத்தை உருவாக்க முடியும். ஹிப்னாடிச உலகம் இதைத் தெள்ளத் தெளிவாக நிரூபித்துள்ளது என்று குறிப்பிடும் கட்டுரையாசிரியர் மனோ சக்தியின் உதவியால் பூமியில் இருக்கும் ஒருவர் விண்வெளியில் பயணம் செய்யும் மற்றொருவருடன் பேசவும் முடியும் என்று காட்டியுள்ளார். இப்படிப் பல அறிவியல் உண்மைகளை மாதம் தோறும் எடுத்துக்காட்டி வரும் கலைக்கதிர் தமிழ் நாட்டில் அறிவியல் கருத்துகள் பரவுவதற்குப் பெரும் பங்காற்றுகிறது என்றே குறிப்பிடவேண்டும்.

யுனெஸ்கோ நிறுவனத்தினரால் 25 மொழிகளில் நடத்தப் படும் யுனெஸ்கோ கூரியர் தமிழிலும் மாத இதழாக நடத்தப்படு கிறது. வரலாறு, நிலநூல், கல்வி, கலை பண்பாடு, அறிவியல், உளவியல் போன்ற அனைத்துக் கருத்துகளையும் விளக்கும் கலைப் பூங்காவாக இவ்விதழ் வெளிவருகிறது. அழகான வண்ணப் படங்கள் பக்கங்கள்தோறும் காட்சியளிக்க, பிற தமிழ் இதழ்களில் காணமுடியாத அளவு உயர்ந்த பளபளப்பான தாள்களில் அச்சிடப் பட்டுள்ளது.

1981 சனவரி மாத இதழில் யுனெஸ்கோ நிறுவனம் சிறுவர் களுக்காக உலக அளவில் நடத்திய பாட்டுப் போட்டி பற்றிய செய்தி காணப்படுகிறது. அமெரிக்க வானொலி (RCA) கழகத்தின் ஒத்துழைப்புடன்ஃபிலிபைன்ஸ் நாட்டின்தலைநகரான மணிலாவில் நடைபெற்ற இப்போட்டியில் 57 நாடுகளைச் சேர்ந்த 10 இலட்சம் குழந்தைகள் பங்கேற்றுள்ளனர். அதில் ஒடினாபட்னாக் என்ற 13 வயதுச் சிறுமி வெற்றி பெற்றுள்ளாள்.

கல்வி கற்கவேண்டிய பருவத்துச் சிறுவர்களை வேலையில் அமர்த்தி அவர்கள் எதிர்காலத்தைப் பாழ்படுத்தும் நிலை உலகெங்கும் இருப்பதை வேதனையுடன் எடுத்துக் காட்டுகிறது, 'உலகம் மறந்துவிட்ட தொழிலாளச் சிறுவர்' என்ற கட்டுரை மார்ச்சு மாத இதழ் ஊனமுற்றோர் ஆண்டுச் சிறப்பிதழாக வெளி வந்துள்ளது.

'கலைப்பணியில் 'அறிவியல்', 'வெப்பமுறையினால் போலிச் சிலையைக் கண்டுபிடித்தல்' போன்ற அறிவியல் படைப்புகளையும் 'யாழின் உள்ளமைப்பு' போன்ற நுண்கலைப் படைப்புகளையும் மே மாத இதழில் காணமுடிகிறது. கல்வி, அறிவியல் துறைகளில் உலகம் அடைந்து வரும் முன்னேற்றங்களைத் தமிழர் உணரத் துணைசெய்யும் 'யுனெஸ்கோகூரியர்' எளிய தமிழில், தேவையற்ற மொழிக்கலப்பில்லாமல் அமைந்துள்ளது.

## 7. மருத்துவ சோதிட இதழ்கள்

அறிவியல் துறைகளில் முன்னேற்றங்கள் நாளுக்கு நாள் பெருகிக்கொண்டே வருகின்றன. அம்முன்னேற்றங்களுக்கு எதிர் மறையாகப் பல புதுப்புது நோய்களும் நாளுக்கு நாள் உருவாகிக் கொண்டே வருகின்றன. அவற்றின் மூலகாரணத்தைக் கண் டறிந்து போக்கமுயற்சிகளும் தொடர்ந்துகொண்டேயிருக்கின்றன. வளர்ந்து வரும் மருத்துவ நுட்ப சாதனைகளையும் கண்டுபிடிப்பு களையும் எழுதி, மருத்துவ அறிவை மக்களுக்கு ஊட்டுமளவிற்கு வெளியாகும் தமிழ் மாத இதழ்கள் மிகக் குறைவே. ஆரோக்கியம், குடும்பநலச் செய்திக்கதிர், சத்துணவு, சுகவழி, மருத்துவ மஞ்சரி, மருத்துவமுரசு, மூலிகைமணி, ஹோமியோபதி போன்ற சில இதழ்களை இவ்வரிசையில் குறிப்பிடலாம். இவைகளிலும்கூட நாட்டுப்புற மருத்துவம் பற்றியே பெரும்பாலும் காணப்படுகிறது. ஆனால் கலைக்கதிர், மஞ்சரி, யுனெஸ்கோகூரியர், மங்கை, தாமரை, சர்வோதயம், கலைமகள் போன்ற இதழ்களில் 'டாக்டரின் பதில்கள்' 'டாக்டர் பதிலளிக்கிறார்' என்ற பகுதிகளில் மருத்துவம் தொடர்பான பல விளக்கங்கள் தரப்படுகின்றன. மஞ்சரி மாத இதழில் பல மருத்துவ ஆய்வுக்கட்டுரைகள் 1981ஆம் ஆண்டின் இதழ்களில் வெளியாகியுள்ளன. மகளிர் இதழ்களில், அவர்கள் உடல் தொடர்பான நோய்களுக்குப் பதில் கூறி நல்வாழ் விற்கு வழிகாட்டியுள்ளார்கள். எனினும் இன்னும் பல மாத இதழ்கள் மருத்துவ இதழ்களாக மலரவேண்டுவது காலத்தின் தேவையாகும்.

நம்மவர்களுக்கு உடலில் உள்ள பலவீனத்தைக் காட்டிலும் உள்ளத்தில் உள்ள பலவீனம் அதிகம். எனவேதான் வியத்தகு அறிவியல் முன்னேற்றங்கள் உலகெங்கும் பெருகி, மனிதன் தனது ஊக்கத்தையும் ஆற்றலையும் எடுத்துக் காட்டியும்கூட நமது எதிர் காலத்தை சோதிடக்காரரிடம் கேட்டுத் தெரிந்துகொள்ளும் நிலையில் இருக்கிறோம். நம் எதிர்காலத்தை நிர்ணயிக்கும் பொறுப்பு நம்மிடமே உள்ளது என்ற நம்பிக்கை இன்னும் நம்மில் பலருக்குக் கிஞ்சித்தும் இல்லை. சாலையோரங்களில் எங்கும் கடை விரித்திருக்கும் ஜோதிடக்காரர்களே நம் நிலைமைக்குச் சான்று பகர்வர்.

சோதிடக்கலை பற்றிக் கூறத் தனி மாத இதழ்கள் பல தமிழில் வெளிவருகின்றன. பொய்யாமொழி, ஜோதிட நண்பன், மாதஜோதிடம், வாணிஜோதிடம், முருகுஜோதிடக்கலை, ஜோதிஷ கலைமணி போன்ற பல இதழ்களைக் குறிப்பிடலாம். இவைகளே யன்றித் தமிழில் வெளிவரும் பெரும்பாலான மாத இதழ்களில் சோதிடம் தொடர்பான கேள்வி பதில்கள், ராசிபலன்கள் இடம் பெற்றுள்ளன. ஒருசில இதழ்களே இந்நிலைக்கு விதிவிலக்காய் உள்ளன.

'பொய்யாமொழி' என்ற மாத இதழில் 'அதிர்ஷ்டத்தை அள்ளித்தரும் சூரிய ரேகையும் அதன் பலாபலனும்' என்ற கட்டுரை 1981 சனவரி மாத இதழில் இடம் பெற்றுள்ளது. 'அதிர்ஷ்ட சூக்ஷமம்' என்ற கட்டுரை எண்களைப்பற்றிக் கூறுகிறது. 'ராசிபலன்' விரிவாக ஆராயப்பட்டுள்ளது. சோதிடம் தொடர் பான மேலும் பல ஆய்வுக் கட்டுரைகள் எல்லா மாத இதழ்களிலும் இடம் பெற்றுள்ளன.

'ஜோதிட நண்பன்' என்ற இதழின் 1981 ஜனவரி மாத இதழில் 'யாரால் யாருக்கு யோகம்?' திதி, கிரக ஸ்தான பலன்கள், 'கதிர் மைந்தனின் ராஜவீடு', 'பனிரெண்டாம் வீடு', 'சிம்ம லக்ன மும் யோகமும்', 'கிரகங்கள் காட்டும் வியாதிகளும் அதன் பரி காரங்களும்' போன்ற பல கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. 'சனி பகவான் கெட்ட ராசியா?' என்பது பற்றிய விரிவான ஆராய்ச்சி பிப்ரவரி மாத இதழில் இடம் பெற்றுள்ளது. இது போன்ற பல கட்டுரைகள் எல்லா இதழ்களிலும் இடம் பெற்றுள்ளன. வட சொற்கள் பெரிதும் விரவியுள்ள இவ்விதழ்களில் 'தமிழும் உண்டு' என்று கூறலாம். சில இதழ்களில் சில கட்டுரைகள் மட்டும் ஓரளவு நல்ல தமிழில் எழுதப்பட்டுள்ளதை யுணர்கிறோம்.

## 8. தனி மனித இனச் சார்பு இதழ்கள்

'எல்லோரும் ஓர் குலம்; எல்லோரும் ஓர் இனம்' என்ற பாரதியின் கருத்தை நிலைநாட்டும் முயற்சிகளில் உலகம் முயன்று கொண்டிருந்தாலும் தனி மனித, இன உணர்வுகளும் நாளுக்கு நாள் பெருகிக் கொண்டுதான் வருகின்றன. கல்வியறிவு பெறுவதன் நோக்கம் சாதி, இன வேறுபாடுகளை மறந்து உறவு கொள்வது என்று கூறப்பட்டாலும் படிக்காதவர்களை விடப் படித்தவர்களிடமே இவ்வேறுபாடு அதிகமாகக் காணப்படுகிறது. அதன் விளைவுதான் தனி மனித, இனங்களின் பேரில் இன்று காணப்படும் மாத இதழ்கள். தனி மனிதர்கள் பேரில் காணப்படும் இதழ்களும் அவர்கள் சார்ந்துள்ள இனத்தின் குரலாகவே அமைந்துள்ளன. அம்பேத்கரிஸ்ட்ஸ், கருணீகர் நல்வாழ்வு, கருணீக மித்திரன், குலமுரசு, சமூகத் துணைவன், சமூகநிழல், சிவாஜி, தேவர் நாடு, தேவர்முரசு, முத்து ராஜா முத்திரியர் சங்கநாதம், முஸ்லீம் முரசு, வேளாளர் துணை போன்ற இதழ்கள் இவ்வரிசையில் அடங்கும்.

ஒவ்வோர் இன இதழ்களும் அந்தந்த இனத்தின் முன்னேற்றத்திற்கான செய்திகளையும், ஆலோசனைகளையும் வெளியிடுகின்றன. இனச் சார்பான மாநாடுகள், கூட்டங்கள் பற்றிய செய்திகள் தீர்மானங்கள் முதலியனவற்றை வெளியிட்டு அந்தந்த இன மக்களிடம் விழிப்புணர்ச்சியை உண்டாக்குகின்றன. அரசாங்கம் அவர்களுக்குச் செய்யும் உதவிகள், செய்ய வேண்டிய உதவிகள் பற்றிக் குறிப்பிடுகின்றன. இன்று எல்லாச் சாதிகளுக்குமே தனித் தனிச்சங்கம் அமைக்கப்பட்டுத் தீவிரமாகச்செயல்பட்டு வருவதால், அச்சங்கத்தின் குரலாக ஓர் இதழ் தேவைப்படுவது தவிர்க்கமுடியாததாகிறது. அந்தந்த இன மக்களிடையே ஒற்றுமை யுணர்ச்சியைத் தோற்றுவிப்பதில் இவ்விதழ்கள் பெரும் பங்காற்றுகின்றன. ஆனால் எல்லா இனத்தவர்களையும் அங்கமாகப் பெற்றுள்ள நாட்டின் ஒருமைப்பாட்டிற்கு இவை போன்ற இதழ்களும், சாதியின் பேரால் அமைக்கப்படும் சங்கங்களும் எதிரிடையான விளைவையே உண்டாக்கும் என்பதில் ஐயமில்லை. செய்தித் தொகுப்புகளான இவ்விதழ்கள் மொழித் தொண்டு புரிய வாய்ப்பில்லை. தூய தமிழ் நடையினையும் இவ்விதழ்களில் எதிர்பார்க்க முடியாது.

## 9. அரசு வெளியீடுகள்

இலக்கியம், கல்வி, கலை, அறிவியல், மருத்துவம் போன்ற பல் துறைச் செய்திகளையும் மையமாகக் கொண்ட படைப்புகளைத் தாங்கித் தனியார் நடத்தும் இதழ்களைப் பற்றி இதுகாறும் கண்டோம். சில அரசு இதழ்களையும் இடையில் கண்டுள்ளோம். நாட்டிற்கு நலம் பயக்கும் பொதுவான கருத்துகளை மக்கட்கு எடுத்துக் காட்ட வேண்டியது அரசின் கடமை. பெரும்பாலான இதழ்கள் வணிக நோக்குடன் தனியார் நிறுவனங்களினால் நடத்தப்படுவதால், எவ்விதக் கருத்துகளை எடுத்துரைத்தால் இதழ் விற்பனையாகும் என்றுதான் அவர்கள் எண்ணுவர். கருத்தின் சிறப்பு, தேவை பற்றி அவர்கள் அதிகம் கவலைப் படுவதில்லை. அப்படிப்பட்ட கருத்துகளையும் எடுத்துக்காட்ட வேண்டியது அரசின் கடமை. அந்த அடிப்படையில்தான் தமிழக அரசு சில இதழ்களை நடத்துகிறது.

கூட்டுறவு, கூட்டுறவுச் செய்திமலர், குடும்ப நலச் செய்திக் கதிர், திருக்கோயில், வளரும் வேளாண்மை ஆகிய தமிழ் மாத இதழ்களைத் தமிழக அரசு நடத்தி வருகிறது. அந்தந்தத் துறை தொடர்பான செய்திகளையும், தமிழக அரசு அந்தந்தத் துறையின் மேம்பாட்டிற்கு ஆற்றிவரும் பணிகளையும் அந்த இதழ்களில் காணலாம். குறிப்பாக, உழவர்கள், தொழிலாளர்கள் தொடர்பான இதழ்களையே அரசு நடத்தி வருவதால் இந்த இதழ்களின் மூலம் குறிப்பிட்டவர்களுக்குப் பொது அறிவினையும், அந்தந்தத் துறை பற்றிய தெளிவினையும் அரசு இதழ்கள் உண்டாக்குகின்றன என்று குறிப்பிடலாம்.

சில இதழ்களில் இலக்கியத் தரமுள்ள படைப்புகளையும் காண முடிகிறது. கோவையில் உள்ள தமிழ்நாடு வேளாண்மைப் பல்கலைக்கழக வெளியீடாக மலர்வது வளரும் வேளாண்மை என்ற மாத இதழ். அவ்விதழில் வேளாண் துறை பற்றிய பல செய்திகள் இடம் பெறுவதுடன் இதழ்கள் தோறும் சில தரமான கவிதைகளையும் கட்டுரைகளையும் காண முடிகிறது. கால்நடை வளர்ப்பு, பயிர்களைப் பாதிக்கும் பூச்சிகள், அவைகளை ஒழிக்கும் முறைகள் போன்ற பல செய்திகளையும் எடுத்துரைக்கும் இவ்விதழ் எளிய வழக்குத் தமிழில் படைப்புகளைக் கொண்டுள்ளது. தமிழக அரசின் சார்பில் நடத்தப்படும் இதழ்களாகவும் இவை இருப்பதால் பெரும்பாலும் மொழிக் கலப்பில்லாமல் செம்மை

யான நடையில் அமைந்துள்ளன. இத்தகைய இதழ்களின் விற்பனையும் குறைவே. இலாப நோக்கமின்றி, அரசின் கடமைகளில் ஒன்றாக இதனை எண்ணி வெளியிடுவதால்தான் இவ்விதழ்கள் வெளியாகிக் கொண்டிருக்கின்றன.

## 10. திரையுலக இதழ்கள்

படித்தவர் முதல் படிக்காதவர் வரை, நகரில் வாழும் நாகரிக மனிதர் முதல் நாட்டுப்புறங்களில் வாழ்பவர்கள் வரை அனைவரையும் இன்று கவர்ந்துவிட்ட ஒரு துறைதான் திரைப் படத்துறை. வழிபடும் தெய்வங்களைப் போல நடிகர், நடிகையரை, படித்த இளைஞர்களும் எண்ணிப் போற்றும் நிலை இன்று உருவாகியிருப்பதை யுணர்கிறோம். அது மட்டுமல்ல; நடிப்பின் மூலம் மக்களுக்கு நல்ல பல கருத்துகளை எடுத்துக் கூறினால் அப்படிப்பட்டவர் கூறுவதை மக்களும் கேட்டு நடப்பர் என்ற நிலையும் உருவாகியுள்ளதைக் காண்கிறோம். எனவே, இன்று திரைப்படத்துறை என்பது மக்கள் மனங்களில் கருத்துகளை எளிதில் பதிய வைக்குமளவு சக்தி வாய்ந்துள்ளது. அந்தத் திரையுலகைப் பற்றியும் வெளியுலகில் இருப்பவர்கள் புரிந்து கொள்ளும் விதத்தில் பல மாத இதழ்கள் நடத்தப்படுகின்றன.

கலைப்படம், சினிமா, டாப்ஸ்டார், திரைக்கதிர், திரைக்கதை, பிலிம்ரோல், பிலிமாலயா, பேசும்படம், பொம்மை போன்ற இதழ்கள் இவ்வரிசையில் குறிப்பிடத்தக்கன. திரையுலகின் முதல் மாத இதழான 'பேசும்படம்' 1942இல் தொடங்கப்பட்டது. சுமார் 40 வருடங்களில் திரையுலகம் பெற்ற வளர்ச்சிகளுக்கேற்ப இதழ்களின் எண்ணிக்கையும் வளர்ந்துள்ளது. அமைப்பு, தரம் முதலியனவும் வளர்ந்துள்ளன. எனினும் பெரும்பாலான இதழ்களின் உள்ளடக்கம் ஒரே மாதிரிதான் அமைந்துள்ளது.

முகப்பு. பின்புற அட்டைகளில் வெளிவரவிருக்கும் திரைப்பட விளம்பரம் அல்லது நடிகையரின் கவர்ச்சிப்படம்; உள்ளேயும் பல நடிக, நடிகையரின் வண்ணப்படங்கள்; புதிதாகத் திரையுலகில் நுழைவோர் பற்றிய பேட்டிகள்; (நடிகையாயிருந்தால் கவர்ச்சிப் படங்களுடன்) ஏற்கெனவே அத்துறையில் சாதனை புரிந்தோரின் அனுபவக் கட்டுரைகள்; கேள்வி—பதில்கள்; உருவாகும் படங்களிலிருந்து சில காட்சிகள்; ஏதேனும் ஒரு திரைப்பட உரையாடல்கள் வாசகர்களின் திறனாய்வுக் கடிதங்கள் என்ற அமைப்பினையே பெரும்பாலும் எல்லா இதழ்களிலும் காணமுடிகிறது. சில

மாற்றங்கள் சில இதழ்களில் இருத்தல் கூடும். 'பேசும்படம்' இதழில் வெளிவரவிருக்கும் ஒரு திரைப்பாடலையும் வெளியிடுகின்றனர். 1981 ஆம் ஆண்டிலும் இதே அமைப்பினையே எல்லா இதழ்களிலும் காண முடிகிறது. இதழ்களின் பெயரிலேயே பெரும்பாலும் தமிழைக் காண முடியவில்லை. எனவே இதழ்களின் உள்ளே நல்ல தமிழ் இருக்கும் என்று எதிர்பார்ப்பது தவறு. சிலரது கட்டுரைகள் அந்நிலைக்கு விதி விலக்காகவும் அமைந்திருக்கும்.

திரையுலக இதழ்கள் மட்டுமேயன்றித் தமிழ் மாத இதழ்களில் பெரும்பாலானவை திரையுலகச் செய்திகளை வெளியிட்டே வருகின்றன. 'ராசிபலன்' எவ்வாறு பல இதழ்களிலும் காணப்படுகின்றதோ அது போலத்தான் திரைப்படச் செய்திகளும் காணப்படுகின்றன. 1981ஆம் ஆண்டு தமிழ்த் திரைப் படத்துறைக்குப் பொன்விழா ஆண்டானதால் பல இலக்கிய இதழ்களிலும் திரைப்பட உலகம் பற்றிய செய்திகள் நிரம்பியிருந்தன. சிறந்த இலக்கிய இதழான 'கலைமகள்' ஆகஸ்டு மாத இதழில் திரைப்பட இயக்குநர் திரு. எஸ். பி. முத்துராமன் அவர்களது பேட்டி இடம் பெற்றுள்ளது.

இது போன்ற பேட்டிக் கட்டுரைகளை ஏனைய இலக்கிய இதழ்களிலும் காண முடிகிறது. திரைப்படச் செய்தி இல்லாத இதழ் உப்பில்லாத பண்டம் என்று நினைக்கும் நிலை இன்று உருவாகியுள்ளது. இவ்வாய்ப்பை நன்முறையில் பயன்படுத்தி, ஓரளவு நல்ல தமிழில் படைப்புகளை எழுதினால் படிப்பவர்கள் பயன் பெறக் கூடிய தமிழ்த் தொண்டாக அது அமையும். திரைப் படங்களின் பெயர்கள், அதில் இடம் பெறும் உரையாடல்கள், பாடல்களும்கூட இயலுமட்டும் நல்ல தமிழில் அமைப்பதற்குத் திரையுலக இதழ்கள் முயலலாம்.

## தமிழ் மாத இதழ்களின் தரம்

ஆய்விற்கு எடுத்துக் கொண்ட இதழ்களின் மொழிநடை, கருத்தமைவு பற்றி ஆங்காங்கு விளக்கிக் கூறப்பட்டுள்ளன. மொழிநடையின் அடிப்படையில் அனைத்து இதழ்களையும் மூன்று பிரிவிற்குள் அடக்கலாம்.

1. தனித் தமிழ் இதழ்கள்
2. வழக்குத் தமிழ் இதழ்கள்
3. பிறமொழிக் கலப்புடைய இதழ்கள் என்பனவே அவை.

எந்நிலையிலும் மொழியின் தூய்மை, செம்மை ஆகியன காக்கப்பட வேண்டும் என்ற குறிக்கோளுடன் தமிழில் நடத்தப் படும் மாத இதழ் மிகவும் குறைவே. பொதுமக்களுக்குப் புரிய வேண்டுமென்பதற்காகத் தங்கள் தரத்தைத் தாழ்த்திக் கொள்ளாமல் தங்கள் நிலைக்குப் பிறரையும் உயர்த்த முற்படும் இதழ்கள் அவை. மொழியின் பாதுகாப்பிதழ்கள் என்று அவை களைக் குறிப்பிடலாம்.

தனித் தமிழ் பற்றிக் கவலைப்படாமல் எப்படி எழுதினால் படிப்பவர்க்குப் புரியும் என்று எண்ணிப் படைப்புகளை வெளி யிடும் இதழ்களே தமிழில் மிகுதி. அத்தகைய இதழ்களில்தான் சிறுகதைகள், புதினங்கள். கட்டுரைகள், கவிதைகள் எல்லாம் மிகுதியாக வெளியாகின்றன. தனித்தமிழ் இல்லையேயன்றி, வழக்குத் தமிழில், மொழி மரபு பிறழாமல் இவ்விதழில் படைப் புகள் இடம் பெற்றிருக்கக் காணலாம். சில புதுமை எழுத்தாளர் களின் வரவால் மொழிநடையில் சில மாற்றங்கள் தென் படலாம். அது போலத்தான் சில இதழ்களில் இடம்பெறும் புதுக் கவிதைகளும். பெரும்பாலோர் வாங்கிப் படிக்கும் இதழ்கள் இவ்வகையைச் சேர்ந்தனவே.

மேற்கண்ட இருநிலைகளிலும் சேராத இதழ்கள் உண்டு. அத்தகைய இதழ்களில் தான் மொழிக் கலப்பைக் காணமுடிகிறது. சமயம், தத்துவம், சோதிடம் போன்ற இதழ்களில் வடமொழி உருது போன்ற சொற்களும், அறிவியல், கல்வி, மருத்துவம், திரைப்படம் போன்ற இதழ்களில் ஆங்கிலச் சொற்களும் கலந்துள்ளன. ஸ்ரீநரஸிம்ஹப்ரியா' என்ற ஒரு இதழ் வெளி வருகிறது. தமிழ் மாத இதழ்களின் வரிசையில் அப்பெபரும் உள்ளதேயன்றி இதழினுள்ளே பெரும்பாலும் வடசொற்களே. 'பஞ்சாங்க ஸங்க்ரஹம்', 'புஸ்தக விமர்ஸனம்' 'ஸ்ரீஸந்நிதிச் செய்திகள்' என்ற தலைப்புகளைப் படிக்கும் போதே தலை சுற்று கிறது. வடசொற்களைத் தமிழ் எழுத்துகளால் எழுதிப் படிக்கும் முறையைக் கம்பன் முதல் பலர் பின்பற்றி வந்தும் கூட இந்த வைணவச் சான்றோர்களுக்கு மட்டும் ஏன் இந்தப் பிடிப்பு என்று புரியவில்லை. இந்நிலை மாற்றப்பட்டாக வேண்டும். அல்லது ஒழுங்காக அனைத்தையும் வடமொழியில் எழுத வேண்டும்.

தமிழ் மாத இதழ்களின் 'பொருண்மை'யை நோக்கினால் நாட்டிற்கு நலம் பயக்கும் நற்கருத்துகளை எடுத்துரைக்கும் இதழ்கள் குறைவே. மதம், இனம், ஜாதகம் போன்ற கருத்து களைக் கொண்ட இதழ்களே மிகுதி. அறிவியல், மருத்துவம், கல்வி, உளவியல், ஆராய்ச்சி போன்ற உயர் கருத்துகளை எடுத் துரைக்கும் இதழ்கள் அங்கொன்றும் இங்கொன்றுமாகவே உள்ளன. இவ்விதழ்களும், இவற்றைப் படித்துப் பயன்பெறு வோரும் அதிக எண்ணிக்கையாக வேண்டும். அப்போதுதான் நமது தரமும் உயர்ந்துள்ளதாக நினைக்க முடியும். மக்கள் மத்தியில் இன்று செல்வாக்குடன் விளங்கும் இலக்கிய இதழ் களும், நமது பண்பாடு, மரபு முதலியனவற்றைப் பேணிக் காப்பதுடன், மேலும் நம் நிலை உயர்வடையுமாறு படைப்புகள் இடம் பெறச்செய்ய வேண்டும். விற்பனை நோக்கமொன்றையே குறியாகக் கொண்டு நமது பண்பாட்டையும் விலைபேசிவிடக் கூடாது. அந்நிலையில் சில படைப்புகளையும் காண்பது வருந்தற் குரியது. மொழியின் தரத்தைக் காக்க முடியாமற் போனாலும், மக்களின் தரத்தையாவது காக்கும் அளவிற்கு இதழ்களின் தரம் இருப்பது அவசியம்.

## இதழ்களும் படைப்புகளும்

பெரும்பாலான மாத இதழ்கள் வெவ்வேறு தனிப் பட்ட நோக்குடன் வெளியிடப்படுவதால் தரமான இலக்கியப் படைப்புகள் மாத இதழ்களில் குறைவே. இலக்கிய இதழ்களின் நிலையை நோக்கினால், சராசரி இரண்டு சிறுகதைகள்; இரண்டு கட்டுரைகள்; தொழில் நிறுவனங்கள் தொடர்பான கட்டுரை ஒன்று; இரண்டு அல்லது மூன்று தொடர் கதைகள் என்ற அமைப்பில்தான் உள்ளன. சில இதழ்களில் மதத் தலை வர்களின் அருளுரை நுழைவாயிலாக உள்ளது. சிறுகதைகளை மிகுதியாக வெளியிடும் இதழ் தீபம். ஓர் இதழிலேயே ஒரு முழு மையான குறுநாவலைக் கலைமகளில் காணமுடிகிறது. பிறமொழி களிலிருந்து தமிழாக்கம் செய்யப்பட்ட முழுக்குறுநாவலை 'மஞ்சரி' வழங்குகிறது. கவிதை இதழ்கள் தவிர பிற இலக்கிய இத்ழ்களில் சிறப்புமலர் வெளியிடும் சமயங்களில்தான் ஒரு கவிதையைக் காண முடிகிறது. தீபம் போன்ற இதழ்களில் மிகுதி யான புதுக்கவிதைகள் இடம் பெறுகின்றன. ஒவ்வொரு மாதமும் ஒரு முழு நாவலைத் தாங்கியும் இதழ்கள் வெளிவருகின்றன. நாவல் வளர்ச்சிக்கு அவ்விதழ்களின் பணி குறிப்பிடத் தக்கது.

கேள்வி பதில் பகுதிகள் பல இதழ்களில் இடம் பெற்றுள்ளன. அந்தந்த இதழ்களுக் கேற்ப இலக்கியம், மருத்துவம், அறிவியல், கல்வி, உளவியல், மகளிர் உடல்நிலை என்று அப்பகுதிகள் அமைந் துள்ளன. அரசியல், திரைப்படச் செய்திகளும், அவ்வப்போது நாட்டில் இடம் பெறும் முக்கிய நிகழ்ச்சிகளும் மாத இதழ்களின் 'தலையங்கம்' பகுதியில் நன்கு விமர்சிக்கப்பட்டுள்ளன. பல மாத இதழ்கள் நடுநிலையுணர்வோடு பிரச்சினைகளை அனுகுவதுடன் அரசுக்கு ஆலோசனையும், பொதுமக்களுக்கு அறிவுரையும் வழங்கி யுள்ளன. சிறுவர் பகுதி, மகளிர்பகுதி, மருத்துவம் போன்ற பகுதி கள் பல மாத இதழ்களிலும் இடம்பெற்றுள்ளன.'ராசிபலனைச் சில இதழ்களில் காணமுடிகிறது. நாட்டின் முக்கிய நிகழ்ச்சிகள், தலை வர்கள், அறிஞர்களின் நினைவு நாள் போன்றவற்றைச் சிறப் பிக்கும் வகையில் சிறப்பு மலரைப் பெரும்பாலான இதழ்கள் வெளியிட்டுள்ளன. அவ்வப்போது சிறுகதை, குறுநாவல், நாவல் போட்டிகளையும் சில இதழ்கள் நடத்திப் பரிசுகளை வழங்கி யுள்ளன. மாணவர்களை ஊக்குவிக்கும் விதத்திலும் பல கட்டுரைப் போட்டிகள் நடத்தப்பட்டுப் பரிசுகள் வழங்கப் பட்டுள்ளன. ஆபாசப் படங்கள், கருத்துகள், துணுக்குகள் மாத இதழ்களில் பெரும்பாலும்இல்லையென்றேகூறலாம் அறிவுரைகள், புதிய கண்டுபிடிப்புகள், நகைச்சுவை நிகழ்ச்சிகள் போன்றவை ஆங்காங்கு இடம் பெற்றுள்ளன. எனினும், தரமான இலக்கியப் படைப்புகளுக்கு மேலும் முதன்மையிடம் தந்து, மொழியின் தூய்மையினையும் நாட்டின் மேன்மையினையும் போற்றிப் பாது காக்க முற்படுவது தமிழ் மாத இதழ்களின் தலையாய கடமை யாகும்.

## 1981-இல் இடம் பெற்ற முக்கிய நிகழ்ச்சிகள்

ஒவ்வோர் இதழும் அந்தந்த இதழுக்கான சிறப்புச் செய்திகள், தரமான இலக்கியப் படைப்புகளுடன் 1981 ஆம் ஆண்டில் இடம் பெற்ற முக்கிய நிகழ்ச்சிகளையும் வெளியிட்டுள்ளன. அப்படி இதழ்களில் இடம் பெற்ற நிகழ்ச்சிகளில் கீழ்க்கண்டவை குறிப்பிடத்தக்கன.

1. மதுரையில் நடைபெற்ற 5-ஆம் உலகத் தமிழ் மாநாடு
2. உலக உடல் ஊனமுற்றோர் ஆண்டு
3. மகாகவி பாரதி நூற்றாண்டு விழாத் தொடக்கம்
4. ரசிகமணி டி.கே.சி. நூற்றாண்டு விழா

5. தமிழ்த் திரையுலகப் பொன்விழா ஆண்டு
6. இலங்கைத் தமிழர் பிரச்சினை
7. தமிழக விவசாயிகள் எழுச்சி
8. மீனாட்சிபுர மதமாற்றம்
9. சைன அறிஞர் ஸ்ரீபால் மறைவு
10. தமிழறிஞர் பலர் மறைவு (மொழி ஞாயிறு தேவ நேயப் பாவாணர், இளவழகனார், உரைவேந்தர் ஒளவை. சு. துரைசாமி, சி. பா. ஆதித்தனார், கவிஞர் கண்ணதாசன்)

பெரும்பாலான மாத இதழ்களில் மேற்கண்ட செய்திகள் இடம் பெற்றுள்ளன. நாட்டை மொழியைப் பற்றிய உணர்வும், பற்றும் தங்களுக்கு உண்டு என்பதை எடுத்துக்காட்டி, வாசகர் களுக்கும் அவ்வுணர்வை ஊட்டி, சமுதாய நிலையை நன்கு தெளிவுபடுத்தும் முயற்சிகளில் தமிழ் மாத இதழ்கள் ஈடு பட்டுள்ளன.

## நிறைவுரை

தமிழில் வெளிவரும் இதழ்களிலேயே எண்ணிக்கையால் மட்டு மன்றித் தரத்தாலும் உயர்ந்து நிற்பன மாத இதழ்களே. இருப் பினும் பல இதழ்கள் குறிப்பிட்ட சில வட்டத்தினருக்கே பயன்படு மாறு அமைந்திருப்பது ஒரு குறையே. சாதி மதங்களின் பேரால் இதழ்கள் வெளியிடப்படுவது தவிர்க்கப்படல் வேண்டும். ''எல் லோரும் ஓர் குலம்; எல்லோரும் ஓர் இனம்'' என்ற நிலை உருவாக இதழ்கள் முற்பட வேண்டும். ஏற்கெனவே பல இதழ்களில் 'ராசி பலன்' பகுதி சிறப்பிடம் பெற்றிருக்கும் போது சோதிடத்திற் காகத் தனி இதழ்கள் வெளியிடுவது நமது ஆரோக்கியமான மன வளர்ச்சியைக் காட்டாது. வளர்ந்து வரும் உலகின் போக்கை யும், அடைந்துவரும் சமுதாய மாற்றங்களையும் இதழ்களில் எடுத்துக்காட்டி வாசகர்களையும் அந்நிலைக்கு உயர்த்தும் முயற்சி யில் தமிழ் மாத இதழ்கள் தீவிரமாக ஈடுபட வேண்டும். அதுவே நாட்டுக்கும் மொழிக்கும் செய்திடும் நற்றொண்டாக அமையும்.

பின்னிணைப்பு

## 1981-இல் வெளியான மாத இதழ்கள்

(நூலகங்களில் கிடைக்கப் பெற்றவை)

1. அனுவிரதம்
2. அப்போஸ்தல எதிரொலி
3. அப்போஸ்தல தூதன்
4. அம்புலி மாமா
5. அம்மன்
6. அம்பேத்கரிஸ்ட்ஸ்
7. அமர பாரதி
8. அமுதசுரபி
9. அருங்கொடை
10. அருட்குரல்
11. அரும்பு
12. அல் இஸ்லாம்
13. அறிவியக்கம்
14. அறிவு வழி
15. அறைகூவல்
16. அன்பொளி
17. அன்னைபூமி
18. அன்னையின் அருட்சுடர்
19. ஆசிரியர் எழுச்சி
20. ஆத்ம தர்மம்
21. ஆதவன்
22. ஆரம்பக் கல்வி
23. ஆரோக்கியம்
24. இந்து சமயச் செய்தி
25. இங்கும் அங்கும்
26. இந்தியன் காப்பி
27. இந்தியன் முஸ்லிம் ஹெரால்டு
28. இளந்துறவி
29. இருமலர்
30. இஸ்கஸ்
31. இஸ்மி
32. உலக இதய ஒலி
33. உழைப்பவர் உலகம்
34. உழைக்கும் விவசாயி
35. ஊற்று
36. எழுத்தாளன்
37. என்.ஜி.ஓ. குரல்
38. ஒலிக்கதிர்
39. கடவுள்
40. கதைக்கதிர்
41. கர்த்தர் வருகிறார்
42. கடைசி எக்காளம்
43. கடவுளின் பிரதிநிதி
44. கண்டுபிடி
45. கருணீகர் நல்வாழ்வு
46. கருணீக மித்திரன்
47. கற்பகம்
48. கல்பனா
49. கல்வி அரங்கம்
50. கல்வி
51. கலாச்சாரம்
52. கலாவல்லி
53. கலைமகள்
54. கலைக்கதிர்
55. கலைக்கனல்
56. கலைப்படம்
57. கவிப்புனல்
58. கவியுகம்
59. கவிக்கொண்டல்
60. கவிதை
61. கணையாழி
62. காஞ்சி கூட்டுறவு
63. காதல்
64. காமன்
65. காவற் கோபுரம்
66. காயத்திரி
67. காயிதே மில்லத்
68. கீதாசார்யன்
69. கிராம இயக்கம்
70. குடும்பநலச்செய்திக்கதிர்
71. குமரிமலர்
72. குண்டூசி
73. குபேரன்
74. குமுறும் நெஞ்சம்
75. குலமகள்
76. குலமுரசு
77. குர்ஆனின் குரல்
78. குருசடியின் குரலொலி
79. குரோம் பேட்டைச் செய்திகள்
80. குறளியம்
81. கூட்டுறவு
82. கூட்டுறவுச் செய்திகள்

83. கொங்கு நண்பன்
84. கைத்தறி
85. சத்தியம்
86. சத்தியச்சுடர்
87. சத்தியவர்த்தமானி
88. சத்துணவு
89. சம்பக்
90. சமயஜோதி
91. சமாதான வழி
92. சமூகத் துணைவன்
93. சமூக நற்பணி மன்றம்
94. சமூக நிழல்
95. சர்வோதயம்
96. சலேசியச் செய்தி மலர்
97. சன்மார்க்க விவேக விருத்தி
98. சனாதன சாரதி
99. சாணக்யர்
100. சாரணர்
101. ஸ்தானாபதி
102. சி. ஐ டி. யூ. செய்தி
103. சிகரம்
104. சித்தர் செயல்
105. சித்தாந்தம்
106. சிவசக்தி
107. சித்தாலயா
108. சிவஞான தீபம்
109. சிவப்பு மலர்கள்
110. சிவாஜி
111. சினிரமா
112. சீரத்
113. சுகவழி
114. சுட்டி
115. சுத்தசன்மார்க்கம்
116. சுதந்திரப் பறவைகள்
117. சுப்ரதீபக் கவிராயர்
118. சுவிசேஷ பிரபல்யவர்த்தமானி
119. செக்ஸ் லைப்
120. செந்தமிழ்
121. செந்தமிழ்ச் செல்வி
122. செம்மலர்
123. செய்தி மடல்
124. சேனைத் தலைவர் செய்தி
125. சேவகன்
126. ஞானசம்பந்தன்
127. ஞான தூதன்
128. டாப்ஸ்டார்
129. தஞ்சைஅமுதம்
130. தமிழ்ச் சபை தீபிகை
131. தமிழ்ச் சிட்டு
132. தமிழ் நாட்டுக் காவலன்
133. தமிழ்ப்பொழில்
134. தமிழ்ப்பணி
135. தமிழ் முனிவன்
136. தமிழகத்தின் தொழில் வளம்
137. தமிழாசிரியர்
138. தமிழியக்கம்
139. தர்ம சக்கரம்
140. தாமரை
141. திருஇருதயத்தூதன்
142. திருக்கயிலை
143. திருநெல்வேலி டயோஸிஸன்
144. திரைக் கதிர்
145. திரைக் கதை
146. திரு நீலகண்டன்
147. திருக்கோயில்
148. திருக்கோயில் வரலாறு
149. தீன வார்த்தை
150. தீச் சோலை
151. தீபிகை
152. தீபம்
153. தீர்க்கதரிசன விளக்கம்
154. தீர்ப்புத் திரட்டு
155. தீவிரவாதி
156. தென் ஒலி
157. தென்மொழி
158. தேசோபகாரி
159. தேம்பாவணி தீபம்
160. தேவ எக்காளம்
161. தேவர் நாடு
162. தேவர் முரசு
163. தேன் மழை
164. தேனமுதம்
165. தொழிற் சங்கச் செய்தி
166. தோழன்
167. நண்பர்கள் மலர்
168. நபி நேசன்
169. நம் ராஜ்ய சேவை
170. நமது பாரதம்
171. நவரத்தினம்

172. நவீனம்
173. நயன தாரா
174. நற்கருணை வீரன்
175. நற்சிந்தனை
176. நாக்கு பெட்டா
177. நாகமணி
178. நாணயம்
179. நாளைய பாரதம்
180. நாராயண குரு
181. நித்திலக் குவியல்
182. நிலவளம்
183. பல்லவ நாதம்
184. பல்லவி
185. படைப்பு
186. பண்ணைத்தொழில்
187. பால மித்ரா
188. பாஷாபிமானி
189. பி. ஆர் சி. கீதம்
190. பிலிம்ரோல்
191. பிலிமாலயா
192. பிறை
193. பியுட்டிலைப்
194. புதிய நம்பிக்கை
195. புதிய பயணம்
196. புதுவைச் செய்திகள்
197. பூக்கூடை
198. பூண்டி மகான்
199. பூஜாதீபம்
200. பூஜா மணி
201. பெண்பால்
202. பேசும்படம்
203. பொம்மை
204. பொம்மைவீடு
205. பொதுப்பணிக்குரல்
206. பொய்முகங்கள்
207. பொய்யா மொழி
208. பொய்யா விளக்கு
209. பொன்னகரம்
210. போக்குவரத்துத் தொழிலாளி
211. மகிழ்ச்சி
212. மங்கை
213. மங்கையர் மலர்
214. மஞ்சரி
215. மணிவிளக்கு
216. மதினா
217. மணியன்
218. மருத மலர்
219. மருத்துவ மஞ்சரி
220. மருத்துவ முரசு
221. மனம்
222. மன்னாதி மன்னன்
223. மனைமலர்
224. மாணவர் குரல்
225. மாத ஜோதிடம்
226. மார்க்சீய ஒளி
227. மார்க்கெட் செய்திக்கதிர்
228. மாலை நினைவுகள்
229. மாலை மதி
230. மின் காசாளர்
231. மிஷினரி இன்டலிஜன்ஸர்
232. முகங்கள்
233. முக்குடை
234. முகில்
235. முத்துச்சுடர்
236. முத்துராஜா முத்திரியர் சங்கநாதம்
237. முத்துமாலை
238. மும்தாஜ்
239. முருகு ஜோதிடக்கலை
240. முல்லைச் சரம்
241. முனைவன்
242. முஸ்லீம் முரசு
243. முஸ்லீம் குரல்
244. மூலிகை மணி
245. மூவி டைம்ஸ்
246. மெய்வழி
247. மேனிலைக் கலை
248. மோட்டார்
249. மோனா
250. ரத்னபாலா
251. ரஹமத்
252. ராணி முத்து
253. ரூசா மலர்
254. லஷ்மி லலிதா சதனம்
255. லாரி
256. லீலா காமிக்ஸ்
257. வக்கீல்
258. வள்ளல் பாரி
259. வளரும் வேளாண்மை
260. வரிச் செய்தி
261. வரி விகடன்
262. வாணி ஜோதிடம்
263. வாய்ஸ் ஆப் இந்தியா
264. விஞ்ஞான விவசாயம்

265. விஞ்ஞானச் சுடர்
266. விடுதலைத் தூதன்
267. வியர்வைத் துளி
268. விழித்தெழு
269. விளையாட்டுக்களஞ்சியம்
270 விஸ்வப்பிரியா
271. வேளாளர் துணை
272. வெற்றிலை பாக்கு
273. வெள்ளி விளக்கு
274. வெண்ணங்கி
275. யுனெஸ்கோ கூரியர்
276 ஹார்பர் தொழிலாளி
277. யோகாஸன ஆலய விஜயம்
278. ஸ்ரீபுவனேஸ்வரி விஜயம்
279. ஜகத் குரு
280. ஜெய கிருஸ்து
281. ஜோதிட நண்பன்
282. ஜோக்கர்
283. ஜோதிஷ கலைமணி
284. ஹோமியோ பதி
285. ஸ்ரீ காமகோடி ப்ரதீபம்
286. ஸ்ரீ சங்கரக்ருபா
287. ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம்
288. ஸ்ரீ நரஸிம்ஹப்ரியா
289. ஸ்ரீ குமரகுருபரர்
290. ஸ்ரீ தேவி கருமாரியம்மன்
291. ஸ்ரீ பாம்பன் ஜோதிட மலர்
292. ஸ்ரீ ராமகிருஷ்ணன் விஜயம்
293. ஸ்ரீ ரங்கநாத பாதுகா
294. ஸ்ரீ ராமானுஜன்

# 28. காலாண்டு இதழ்கள்

பழ. முத்தப்பன்

காலாண்டு இதழ்கள் எண்ணிக்கையில் மிக மிகக் குறைவு. விற்பனை எண்ணிக்கையைக் கண்டு மகிழ்வெய்தாமல் இதழில் வெளிவரும் செய்திகளின் திறன் கண்டு மகிழ்வெய்தும் இவ்விதழ் வெளியீட்டாளர்கள் பாராட்டுக்கு உரியவர்கள். எனினும் இதழின் விலையைக் குறைத்து, சமுதாயம் தங்களைத் தேடி வரட்டும் என்ற பிடிவாதத்தைத் தளர்த்தி, தங்கள் எண்ணங்களைப் பரப்ப சமுதாயத்தை நாடி இவ்வெளியீட்டாளர்கள் செல்ல வேண்டும்.

காலாண்டு இதழ்கள் எனச் சிந்தனைக்கு வரும் பொழுதே பரந்து கிடக்கும் இதழ்கள் உலகிலிருந்து நாம் குறுகிய வட்டத்திற்கு வந்துவிடுவோம். ஆம்; புற்றீசல்கள் போலத் தோன்றி மறையும் பல்லாயிரக்கணக்கான இதழ்களுக்கிடையே காலாண்டு இதழ்கள் எண்ணிக்கையில் மிக மிகக் குறைவு. அதிலும் 1981-ஆம் ஆண்டில் சில இதழ்களே வாழ்ந்துள்ளன. புதிய இதழ்கள் தொடங்கப் பெறவில்லை. 80-இல் இருந்த இதழ்களில் ஒன்றிரண்டு நின்றும்விட்டன. வாழ்ந்த இதழ்களோ குறிப்பிட்ட படி அவ்வக் காலங்களில் வெளிவராது - காலம் கடந்தும் வெளி வந்துள்ளன. இத்தகு நிலையில்தான் நாம் காலாண்டு இதழ்களைப் பற்றி ஆய்வு செய்திட வேண்டியுள்ளது.

காலாண்டு இதழ்களை வெளியிடும் வெளியீட்டாளர்கள் முதலில் நம்மால் பாராட்டப் பெறும் பெருமையினை உடைய வர்கள். பிற இதழ் வெளியீட்டாளர்களைப் போல இதழ்களால் தங்கள் வாழ்க்கையை வளப்படுத்திக் கொள்பவர்கள் அல்லர். அவர்கள் வணிக நோக்கு இல்லாமல் - தங்களின் மொழியியல்

சிந்தனை நோக்கிலேயே காலாண்டு இதழ்களை வெளியீடு செய்கின்றனர். அதுமட்டுமல்ல - வணிக நோக்கில்லாத காரணத்தால் இதழில் இடம் பெறும் செய்திகளுக்கு முக்கியத்துவம் கொடுத்துத் தரமான செய்திகளையே வெளியிடுகின்றனர் எனவே இதழ்களின் விற்பனை எண்ணிக்கையைக் கண்டு மகிழ்வெய்தாமல் இதழில் வெளிவந்துள்ள செய்திகளின் திறன் கண்டு மகிழ்வெய்தும் அவர்களை நாம் பாராட்டாமல் இருக்க இயலாது.

பிற இதழ்களைவிட காலாண்டு இதழ்களில் சில குறிப்பிடத்தக்க சிறப்புகள் அமைந்துள்ளன. முதலில் அட்டைப் பகுதியை நாம் எடுத்துக்கொண்டால் - வாரந்தோறும் மாறி மாறிப் பிறக்கின்ற வார இதழ்களைப்போல அல்லாது காலாண்டு இதழ் அட்டை அமைப்புகள் ஒரே மாதிரியாக அமைந்துள்ளன. உருவங்களால் அல்லது ஓவியங்களால் தன்னை விரும்பிப் படிக்கத் தூண்டும் திங்கள் இதழ்களின் அட்டை போல காலாண்டு அட்டை இதழ்கள் வண்ண உருவமோ - ஓவியமோ அல்லாது இலக்கிய நூல்கள் - புத்தகங்கள் போல ஒரே அமைப்பில் அமைந்துள்ளன. அட்டையில் இதழின் பெயரும், ஆசிரியர், வெளியீட்டாளர் பெயரும் அமைந்துள்ளன. சில இதழில் அதிலும் குறிப்பாக சென்னையிலிருந்து வெளிவரும் மலர் மன்னன் வெளியீடான ¼ என்ற இதழில் அட்டையில் இதழின் பெயரே சிந்தனை செய்து தெரிந்து கொள்ளக் கூடிய நிலையில் இருக்கிறது. அந்த இதழில் தற்கால வரிக்கோல ஓவியம் இடம் பெற்று காலாண்டு இதழ்களின் தகுதிப்பாட்டை வெளிப்படுத்துகிறது. வைகறை என்ற ஸ்ரீ அரவிந்த ஆசிரமக் காலாண்டு இதழில் திருவடிகளும் - அதனைச் சுற்றி வரிக்கோல ஓவியமும் இடம் பெற்றிருப்பதும் குறிப்பிடத்தக்கதாகும். இவ்வாறு அட்டையால் காலாண்டு இதழ்கள் நம் உள்ளத்தை சிந்திக்க வைக்கின்றன எனலாம்.

அட்டையின் பின்புறப் பகுதியும் - அதாவது வெளி அட்டையும் பிற இதழ்களிலிருந்து காலாண்டு இதழ்களில் வேறுபட்டுத்தான் காணப் பெறுகின்றன. பிற இதழ்களில் முழுக்க முழுக்க விளம்பரங்களே இடம் பெற்றிருக்கும். ஆனால் காலாண்டு இதழ்களில் செய்திக் குறிப்புகளும் - ஆன்றோர் பாடல்களுமே இடம் பெற்றுள்ளன. இருப்பினும் ஆன்றோர் பாடல்களுக்குக் கீழே சிறிய இடத்தில் விளம்பரமும் பதிப்பிக்கப் பெற்றுள்ளன. எடுத்துக்காட்டாக ¼, வைகறை இதழ்களைக் குறிப்பிடலாம். அனைத்திந்தியத் தமிழ் மொழியியற் கழகத்தின் காலாண்டு

இதழான - மொழியியல் இதழின் வெளி அட்டையோ 'உள்ளுறை' செய்தியைத் தாங்கியதாகவே அமைந்துள்ளது. இதிலிருந்து காலாண்டு இதழ்களின் அட்டைகளும் செய்திக் கோவைகளைத் தாங்கி - வீண் அச்சுக்கு இடம் தராது - சிறப்பிடம் பெறுகின்றன என்பது பெறப்படும். பின் அட்டையில் இடம் பெற்றிருக்கும் விளம்பரங்கள் பெரும்பாலும் ஆங்கிலத்திலேயே இடம் பெற்றுள்ளன.

காலாண்டு இதழ்களின் பெயர்களிலேயே இதழாசிரியர்கள் புதுமை கண்டிருக்கின்றனர். இதழ்களில் ஒரு புரட்சியை உண்டு பண்ணுவன காலாண்டு இதழ்கள்தாம் என்பதை அவை தெளிவுபடுத்துகின்றன. எந்த இதழின் பெயரும் வழக்கத்தில் கையாளுகின்ற பெயராக அமையவில்லை. இதழ்கள் ஆய்வு நோக்கில் வெளியிடப்படுமானால் அவ்விதழ்களின் பெயர்களும் ஆய்வுச் சொற்களாகவே அமைந்துள்ளன. உதாரணமாக மொழியியல், ஆராய்ச்சி போன்றவற்றைக் குறிப்பிடலாம். சமுதாயக் கண்ணோட்டத்தில் புதுமை எண்ணங்களுக்கு இடம் கொடுக்கின்ற இதழ்கள் பெயர்களிலும் புதுமையைப் பெற்றுள்ளன. உதாரணமாகப் படிகள், $\frac{1}{4}$ போன்ற இதழ்களைக் குறிப்பிடலாம். அது போல தத்துவக் கருத்துகளை வெளியிடும் சமய இதழ்கள் தங்கள் பெயரில் சமயச் சாயலைப் பெற்றுள்ளன. உதாரணமாக வைகறை, சித்தாந்தா (ஆங்கில இதழ்) முதலியவற்றைக் குறிப்பிடலாம். பெயர்களில்தான் இத்துணை புதுமை என்பதல்ல. பெயரை அச்சிடுகின்ற விதத்திலும் புதுமைகள் காணப்படுகின்றன. கால் என்ற இதழின் பெயர் எழுத்தால் எழுதப்பெறாமல் எண்ணால் ($\frac{1}{4}$) குறிக்கப் பெற்றமை குறிப்பிடத் தக்கதாகும். படிகள் என்ற இதழ் பெயரை அச்சிடும் போது சாய்வு எழுத்துக்களால் எழுதிப் பதிப்பித்திருக்கிறார்கள். இத்தகைய நிலையில் பெயர்கள் அமைந்திருப்பது எண்ணிப்பார்த்தற்கு உரியதாகும்.

இதழ்களை அச்சிடுகின்ற வெளியீட்டாளர்கள் ஒரே மாதிரியான நிலையில் இதழ்களின் அளவை அமைக்க இல்லை. அதாவது ஓராண்டிற்குரிய நான்கிதழ்களும் பக்க அளவில் ஒரே சீராக அமையவில்லை. ஓரிதழ் அதிகப் பக்கங்களை உடையதாகவும் அடுத்த சில இதழ்கள் குறைவான பக்கங்களைக் கொண்டும் விளங்குகின்றன: உதாரணமாகப் படிகளின் இதழ்களைக் குறிப்பிடலாம். அது போல சில இதழ்கள் பக்கங்களின் எண்களைக்

குறிக்கும் போதும் அந்தந்த இதழுக்குரிய பக்கங்களோடு அமையாது அந்த ஆண்டுக்குரிய தொடர் எண்கள் குறிக்கப் பெற்றுள்ளன. உதாரணமாக ¼ இதழைக் குறிப்பிடலாம்.

இதழ்கள் வாழ்வதே விளம்பரங்களின் பொருளுதவியால் தான். வார இதழ்களோ அல்லது மாத இதழ்களோ விற்பனை யால் வரும் பொருள் ஒரு பங்கு என்றால் அதன் அரைப் பங்கை விளம்பரத்தால் பெற்றுவிடும். ஆனால் காலாண்டு இதழ்களைப் பொறுத்தவரை விளம்பரங்கள் சில இதழ்களில் இடம் பெறவே இல்லை. சில இதழ்களில் இடம் பெற்றாலும் அவை இறுதிப் பகுதியிலேயே இடம் பெற்றுள்ளன. பக்கங்களின் இடையிடையே இடம் பெறுவதில்லை. மொழியியல், படிகள் போன்ற இதழ்களில் விளம்பரங்கள் இடம் பெறவே இல்லை. வைகறை இதழின் இறுதிப் பகுதியில் அவை அனைத்தும் ஆங்கிலத்திலேயே அமைந்துள்ளன; ¼ இதழின் முன் பக்கத்திலும் இறுதிப் பக்கத்திலும் அமைந் துள்ளன. எனவே காலாண்டு இதழைப் பொறுத்தவரை அதிக மான படிகள் விற்காது என்பதாலோ - அல்லது காலாண்டுக்கு ஒரு முறைவரும் இதழால் பெரும்பயன் இல்லை என்பதாலோ-வணிகப் பெருமக்கள் அதிகமான விளம்பரங்களை அளித்திலர் போலும். வைகறை போன்ற இதழில் விளம்பரங்கள் அளிப்பவர்கள்கூட இதழின் நிர்வாகத்தினரிடம் கொண்ட தொடர்பின் அடிப்படை யிலேயே அளித்துள்ளனர் போலத் தெரிகிறது.

இதழ்களில் சிறுகதைகள், உலகச் செய்திகள் போன்றவை இடம் பெற்றாலும் 'படங்கள்' என்ற அமைப்பை அவை பெற வில்லை. அதாவது கதையின் நிகழ்ச்சியை சித்திரிக்கும் ஓவியங்கள் இடம் பெறவே இல்லை. அவற்றுக்குக் காரணம் காலாண்டு இதழ் வெளியீட்டாளர்கள் கருத்துரைகளைப் பரப்ப வேண்டும் என்ற எண்ணம் கொண்டவரேயன்றித் தங்கள் இதழ்கள் அதிகமாக விற்பனையாக வேண்டும் என்ற எண்ணம் கொண்டவர்களல்லர். எனவே செலவினத்தால் அதிக நட்டத்தைப் பெறக் கூடாது என்ப தற்காக ஓவியங்களை அவர்கள் பெரிதாகப் பாராட்டவில்லை என்பது தெரிகிறது. ஏதேனும் ஒருசில இதழ்களில் ஓரிரு படங்கள் இடம் பெறாமலும் இல்லை. ஆனால் அவையும் ஓவியங்கள் அல்ல. புகைப்படங்களே ஆகும். அந்தப் புகைப்படங்களு நிகழ்ச்சிகளை அல்லது கதைகளை எழுதித் தருகின்ற ஆசிரியர் தொடர்பான தாக அமைந்துள்ளன. உதாரணம்: ¼ இதழ்- 1981 அக்டோபர் -

டிசம்பர் - பக்கம் 311; அட்டையில் படிகள் போன்ற இதழ்களில் தற்கால ஓவியர்களுக்கு முக்கியத்துவம் கொடுத்து அவர்களின் ஓவியங்களை அச்சுப்பதித்துள்ளனர்.

இதழ்களைப் படிப்போரைப் பலவகையாகப் பிரிக்கலாம். ஒரு சிலர் இதழ்களில் இடம் பெறும் கதைகளை விரும்புவர். ஒருசிலர் தொடர்கதைகளை விரும்புவர். வேறு சிலர் அவற்றில் இடம் பெற்றுள்ள உலகச் செய்திகளையோ அரசியல் செய்திகளையோ விரும்புவர். இன்னும் சிலர் இதழ்களில் காணப்பெறும் துணுக்குகளை விரும்புவர். இத்தகைய பொழுதுபோக்காளர்களை காலாண்டு இதழ்கள் தன்வயப்படுத்த முடியாது. காரணம், காலாண்டு இதழ்களில் நகைச்சுவைத் துணுக்குகளோ, தொடர் கதைகளோ, படிப்பவரைத் தூண்டும் சிறுகதைகளோ இடம் பெறுவதில்லை. இன்னும் குறிப்பாகச் சொல்லப் போனால் அவை நுழைவதற்கே இடம் தருவதில்லை. மொழியியல் கட்டுரைகளைத் தாங்கி நிற்கும் இதழ்கள் மொழியியல் அறிஞர்களின் கட்டுரைகளின் ஒருசில பகுதிகளைத் துணுக்குகள் போல வெளி யிட்டுள்ளன. மொழியியல் சனவரி - மார்ச் - பக்கம் 114; மொழி யியல் - ஏப்ரல் சூன் பக்கம் 107 போன்றவற்றை எடுத்துக் காட்டாகக் கூறலாம். சமயத் தொடர்பான இதழ்களில் இடை யிடையே துணுக்குகள் போல ஆன்மீகப் பெரியோர்களின் அருள் வாக்குகளையும், அவர்களின் கருத்துகளையும் காண முடிகிறது. வைகறை 1981 இதழ்-2 இல்-10,15,31 ஆம் பக்கங்கள், இதழ் 4-இல் பக்கம் 12, 16, 18, 21 ஆம் பக்கங்கள் ஆகியவற்றைச் சான்றாகக் காட்டலாம். இவ்வாறு துணுக்குகள் இடம் பெற்றுள்ளனவே அன்றி, தொடர்கதைகள் போன்றவை இடம் பெறவில்லை.

சிறுகதைகள் காலாண்டு இதழ்களில் இடம் பெறவே இல்லை என்று சொல்லிவிட முடியாது. ஒருசில இடம் பெறத்தான் செய் கின்றன, என்றாலும் அச் சிறுகதைகள் சிறுகதையை விரும்புவோர் எண்ணம் போல் பொழுதுபோக்குக்காக அமையாது சிந்தனைக் குரியதாக அமைந்துள்ளன. அவைகள் சிறுகதைகள்தாம் என்பதைப் படிப்போர் அறிந்து கொள்ள வேண்டும் என்பதற் காகவே அவை இடம் பெற்றுள்ள இதழ்களில் 'சிறுகதை' என்றே தலைப்பிட்டுள்ளனர். அத்தகைய சிறுகதைகள் தத்துவப் பொருள் நிலையில் அமைந்துள்ளன. சான்றாக வைகறை இதழ் 2-இல்

அமைத்துள்ள 'மந்திரப் பளிங்கு' என்ற கதையையும், ¼ இதழ் 4-இல் உள்ள 'நிலக்கடலையும் பிடித்துண்டும்', 'மாலை சூட்டிகள்' என்ற கதைகளையும் குறிப்பிடலாம்.

கவிதைகள் மொழிபெயர்ப்பாகவும் பழைய இலக்கண மரபுக்கு அப்பாற்பட்ட புதுக் கவிதைகளாகவும் காலாண்டு இதழ்களில் இடம் பெற்றுள்ளன. அவையும் பக்கங்கள் நிரப்புவதற் காக அமைக்கப்பட்டன போலத் தெரிகிறதே தவிர - கவிதைகளை கட்டாயம் வெளியிட வேண்டும் என்ற கொள்கை இருப்பதாகத் தெரியவில்லை. கவிதைகளும் பலதரப்பட்ட பொருள்களில் - ஆனால் அதே நேரத்தில் சமுதாயச் சிந்தனைக் கவிதைகளாகவே அமைந்துள்ளன.

இதழ்களின் உள்ளடக்கத்தைத் தரும் பகுதி சில இதழ்களில் முதல் பக்கத்தில் குறிக்கப் பெற்றுள்ளது. சான்று: வைகறை' மொழியியல் இதழ்களில் வெளிஅட்டையில் குறிக்கப்பெற்றுள்ளது. படிகள் இதழில் மேல் அட்டையில் குறிக்கப் பெற்றுள்ளது. ¼ இதழில் கட்டுரைத் தலைப்புக்கோ கதைத் தலைப்புக்கோ முதன்மை தராது அவற்றை எழுதிய ஆசிரியர்க்கே முதன்மை கொடுத்து அவர்களின் பெயர்களை மட்டுமே குறித்துள்ளனர். இது ஒரு புதிய மாற்றமே. இவ்வாறு காலாண்டு இதழ்களின் பொதுவான சில கூறுகளைக் காண முடிகிறது.

## 2

இனி, காலாண்டு இதழ்களின் தமிழ் நிலை பற்றிய செய்தி களைக் காண்போம்.

1981-இல் தமிழ் என்று எண்ணிப் பார்க்கும் போது ஒரு பக்கம் செந்தமிழ் வளர்ச்சியும் மற்றொரு பக்கம் பிற மொழிச் சொற்கள் கலந்த தமிழ் வளர்ச்சியும் நம் கருத்துக்கு வரும். ஆம்! எவ்வளவுக்கெவ்வளவு தனித் தமிழ் வளர்ச்சி 1981-இல் தலை தூக்கி நின்றதோ—அந்த அளவுக்கு தமிழ் எழுத்தாளர்கள் மத்தியில் பிற மொழிக் கலப்பும் காணப்பெறுகிறது. அத்தகைய சூழலுக்கு 'காலாண்டு இதழ்'களும் ஆட்பட்டன. கடந்த நூற்றாண்டுகளில் வடமொழித் தாக்கம் தமிழில் எவ்வாறு மணிப் பிரவாளநடையாக வளர்ந்ததோ, அதுபோல இந்த நூற் றாண்டின் இறுதிக் காலமான இன்றைய சூழலில் தமிழ்மொழி யோடு ஆங்கிலச் சொற்கள் முதலானவை கலந்து ஒரு கூட்டு மொழியாக தமிழ்மொழி காணப்பெறுவதை யாரும் மறுக்க

முடியாது. எனவே 1981-இல் தமிழ் என்ற தலைப்பில் காலாண்டு இதழ்களை வகைப்படுத்தும் போது நாமும் அக்கோணத்தில் தான் செய்திகளைச் சேர்க்க வேண்டியுள்ளது.

## சொற்கள்

காலாண்டு இதழ்களில் தனித்தமிழ் சொற்களையும் வேற்று மொழிச் சொற்களையும் நாம் காண முடிகிறது. நீத்தார் நினைவு நாள், இலக்கு, துவக்கம், நிணம்[1] போன்றவையும், ஆளுமை, ஆன்மீகம், முறுவல், தளை, ஆன்மா, தெய்வீகம்[2] போன்றவையும், தட்டச்சு, படிகள், மொழியியல் உயர் ஆய்வு, மாற்றிலக்கணம், பயில்மொழி, அலகு[3] போன்றவையும் கட்டுரைகளில் இடம் பெற்றுச் செந்தமிழ் வளர்ச்சியை நினைவுபடுத்துகின்றன. பெரும்பாலும் வழக்குச் சொற்களோடு கதைகளும் கட்டுரைகளும் எழுதப்படுவதால் பிறமொழிச் சொற்களின் கலப்புகள் அதிகம் உள்ளன. ஞாபகார்த்தம், அதிருப்தி, சாராம்சம், விஷயம், ஸ்திரப்படுத்தும், விஸ்திரிக்கப்பட்ட, கடாட்சம், துஷ்டர்கள், கோஷ்டி, பலவந்தம், பிரகடனம், அஸ்திரம், பிரயோகம், அங்கஹீனம் என்பன போன்றவையும்[4] கார்ட்டூன், புத்தி ஜீவிகள் கிண்டல், கம்யூனிசம், சர்ச்சை, ஒரிஜனல், மார்க்ஸியம், நக்ஸல் பாரி, எதார்த்த வாதம், பரிமாணங்கள், ஜடம் போன்றவையும்[5] ஆக இத்தகு சொற் கலப்பு காலாண்டு இதழ்களில் காணப்படுகின்றன. எனவே, காலாண்டு இதழ்களின் சொற்கள் ஒரு கலப்புக் கூட்டமாக அமைந்திருப்பதை யாரும் மறுக்க முடியாது. இத்தகு சூழல் ஏன்? காலாண்டு இதழ்கள் பெரும்பாலும் புதுமை எழுத்தாளர்களின் படைப்புகள்; ஆதலால் அவர்கள் ஏதோ செந்தமிழ்ச் சொற்களைக் கையாண்டால் இற்றைச் சமுதாயத்தை முழுமையாகப் படம் பிடித்துக் காட்ட முடியாது எனப் போலியாக எண்ணி, அப்படியே வழக்குச் சொற்களைக் கொட்டி எழுதுவதுதான் சமுதாயப் புரட்சி எழுத்தாளனின் கடமை என்று எண்ணிக் கொண்டிருப்பதே காரணம். ஏதோ நாடகங்களையோ கதைகளையோ எழுதும்போது அந்தந்தப் பாத்திரங்களுக்கு ஏற்ப வழக்குச் சொற்களைக் கையாள்வதில்

---

1. ½ இதழ்—அக்டோபர்—டிசம்பர்
2. வைகறை இதழ். 2, 4
3. மொழியியல்.
4. ½ இதழ் அக்டோபர்—டிசம்பர்
5. படிகள் 11-ஆவது இதழ்

தவறில்லை. ஆனால் அதற்காக அனைத்து இடங்களிலும் பேச்சு வழக்கையே கையாண்டுவிட்டால் இலக்கிய வழக்கு என்ற ஒன்றே நம் தமிழிலிருந்து விடுபட்டதாகி விடும். பேச்சு மொழியை அப்படியே எழுதினால் சில நேரங்களில் நம்மால் புரிந்து கொள்ள இயலாமற் கூடப் போய்விடும். இதற்கோர் சான்று :

"ஏலுண்டா மக்காள்...நான் அந்தாளிட்ட ஒரே போறன் தான். அந்த ஆள் வேலைதார நேரந்தானே நாம் எடுக்கோணும் ...சாகக் குள்ளையும் என்னை நிம்மதியாச் சாகவிட மாட்டயாளா மக்காள்!..."[6]

பேச்சு வழக்கை நேரடியாகக் கேட்டால் பொருள் விளங்கும். அதையே எழுத்தில் காணும் போது பொருள் விளங்கா தென்பதை இத்தொடர் காட்டுகின்றதன்றோ!

இவ்வாறு ¼, படிகள் போன்ற இதழ்கள் வட்டார வழக்குச் சொற்களை அதிகமாகக் கையாண்டு நம்மிடையே ஒரு கேள்விக் குறியைத் தோற்றியுள்ளன. ஆனால் மொழியியல் போன்ற இதழ்களும் இல்லாமலில்லை. அவைகள் மொழிய்யல் நிலையில் வழக்குச் சொற்களையோ அல்லது வேற்று மொழிச் சொற் களையோ எடுத்தாள வேண்டிய இடத்திலும் செந்தமிழ்ச் சொற்களையே எடுத்தாண்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இலக்கணத் தன்மை (Grammatical)
மூல உடைமை (Source Posession)
மொழிமறை பொருள் (Abstraction)
துல்லியம் (Sensitive)
படர்க்கைப் பதிலிடு பெயர்கள் (Pro-nouns)
புதை நிலை அமைப்பு (deep-Structures)

போன்ற மொழியியல் இதழில் இடம் பெற்ற கலைச்சொற்களை நாம் எடுத்துக் காட்டலாம்.

வைகறை இதழில் எங்கெங்கு வடசொற்களைக் கலக்க முடியுமோ—அங்கெல்லாம் தயங்காமல் வடசொற்களைக் கலந் திருக்கிறார்கள். ஸ்ரீ அரவிந்தர், ஸ்ரீஅன்னை, ஆஸ்ரமம், ஜீவன், ஜீவராசிகள், மகாராஜா, ராமானுஜ தரிசனம் போன்றவை பரவ லாகப் பயன்படுத்தப்படுகின்றன. இதற்குக் காரணம் அரவிந்த ஆஸ்ரமத்தில் இருந்து அவ்விதழ் வெளியிடப் பெறுவதால்

6. ¼ இதழ்—அக்டோபர்—டிசம்பர் பக். 323.

மொழிக்கு முதன்மை கொடுக்காமல் செய்திகளுக்கு முதன்மை கொடுத்தமையே. அந்த இதழில் சொற்களே பல மாற்று வடிவங்கள் பெற்று விளங்குகின்றன. உதாரணமாகப் பழையது என்பது 'பழயது' என்று அமைந்துள்ளதைக் காட்டலாம்.[7] எனவே காலாண்டு இதழ்களில் தமிழ்ச் சொற்கள் என்று பார்த்தால் அவை தனித் தமிழ்ச் சொற்களாக மட்டும் அமையாது ஒரு கலப்புக் கூட்டமாகவே உள்ளமை தெளிவு.

## எழுத்து நிலை

கிடைத்திருக்கும் காலாண்டு இதழ்களை ஆய்வு செய்யும் போது மொழியியல் இதழ் தவிர மற்ற அனைத்தும் பழைய எழுத்துகளையே கையாண்டிருக்கின்றன. புதிய எழுத்து முறையைக் கொண்டுவந்ததற்குக் காரணம் காலச் சிக்கனம் எனக் கூறப்பெற்றது. அந்தச் சிக்கனத்தைக் காலாண்டு இதழினர் தேவையில்லை என்று ஒதுக்குகிறார்களோ என்று எண்ண வேண்டியுள்ளது. ¼ இதழோ புதிய எழுத்தையும் கொண்டிருக்கிறது. பழைய எழுத்தையும் கொண்டிருக்கிறது. மொழியியல் முழுக்க முழுக்க புதிய எழுத்தையே கொண்டிருக்கிறது.

## இலக்கணக் கூறுகள்

காலாண்டு இதழ்கள் மூலமாகத் தமிழ் மொழியின் தற்கால நிலையை அறிய எண்ணும் போது சில குறிப்பிடத்தக்க சொற்கள் நமக்குக் கிடைக்கின்றன. இலக்கணத்தில் எந்தெந்த எழுத்துகள் முதன் மொழியில் வராது என்று சொன்னார்களோ, அவற்றுள் பெரும்பான்மையும் முதன் மொழியாகி வந்துள்ளன. சான்றாக ப்ரயாணம், ராத்திரி,[8] மூான் பவுல் சர்த்தால், டாம் கேட்டான்[9] என்பவற்றைக் குறிப்பிடலாம். இடைநிலை மெய்ம்மயக்கம் பற்றிய இலக்கண வரையறைக்கு மாறாகவும் சில சொற்கள் வந்துள்ளன. சான்றாக வீட்லெ, போய்டுத்து, பராப்ல, சொப்பனம், என்டெ, உத்ரத்லெ, சத்யமா, வித்யாசம்[10] என்ற சொற்களைக் காட்டலாம். மேலும் பேச்சு வழக்கைக் கையாள்வதால் வாக்கியத் தொடர்கள் முடிவில்லாமலேயும் காணப்படுகின்றன. சான்றாக 'அவன் வாசல் திண்ணையில்,[11] என்ற

---

7. வைகறை இதழ் எண் 2
8. ¼ இதழ்
9. படிகள் 1981, அக்டோபர்—டிசம்பர்
10. ¼ இதழ்
11. ¼ இதழ்

தொடரைக் காட்டலாம். இத்தகைய இலக்கண மாறுபாடுகள் 1981இல் தமிழுக்குக் காலாண்டு இதழ்கள் தந்துள்ள சில கருத்துத் தொடர்களாகும்.

## நடை

காலாண்டு இதழ்களின் தமிழ் நடை இதழுக்கு இதழ் வேறு பட்டுக் காணப் பெறுகிறது. இது இயற்கை. தனி ஒருவரின் சிந்தனைகளாக இல்லாமல்—பல பேரின் கூட்டுக் கலப்பாக இருப்ப தால்—அவரவர்களுக்குரிய நடைப் போக்கே காணப் பெறுகிறது. மொழியியலைப் பொறுத்தவரை ஆற்றொழுக்கான நடை இடம பெற்றுள்ளது. நான்கு இதழ்களிலும் இடம் பெற்ற 24 ஆசிரியர் களும் மொழியியல் துறை ஆசிரியர்கள். ஆதலால் ஆங்கிலச் சொற்களை அடைப்புக் குறியில் அமைத்து தெளிந்த தமிழ் நடையிலேயே கட்டுரைகளை எழுதியுள்ளனர். மொழியியல் கட்டுரைகளுக்கு ஏற்றாற்போல் இடையே மொழியியல் குறி யீடுகள் இடம் பெற்றுள்ளன. மேலும் ஆங்கிலக் கட்டுரைகளை மொழி பெயர்த்து, எழுதப் பெற்ற கட்டுரைகளும் ..தக்க மொழி பெயர்ப்பைப் பெற்றிருப்பதுடன் மூலக்கட்டுரையாளரின் எண்ணத்தை அப்படியே வெளிப்படுத்துவதாகவே அமைந் துள்ளன. கட்டுரைகள் முழுமையும் மொழியியல் பற்றி அமைவ தால், வெற்றுச் சொற்களுக்கோ, அலங்காரத் தொடர்களுக்கோ அவ்விதழில் இடமில்லை என்றே கூறலாம். எனவே மொழி யியலைப் படிக்கும் போது ஒரு கட்டுரைத் தொகுப்பைக் கொண்ட நூலைப் படித்தது போன்ற எண்ணம் ஏற்படுகிறதே தவிர இதழ் ஒன்றைப் படிக்கிறோம் என்ற எண்ணம் ஏற்படுவ தில்லை.

புதுவை அரவிந்தர் ஆஸ்ரமத்திலிருந்து வெளி வரும் வைகறை இதழில் முழுக்க முழுக்க அரவிந்தர், அன்னை ஆகியோரின் கருத்துகளும் கட்டுரைகளும் இடம் பெற்றிருப்ப தால் ஒரே மாதிரியான உரைநடை வழக்கே காணப்பெறுகிறது. வட சொற்களையும் வட எழுத்துகளையும் இடையில் பெற்றி ருக்கின்ற தமிழ்நடையே முழுமையாக இடம் பெற்றுள்ளது. கட்டுரைகள் ஆசி உரைகளாகவும் அறவுரைகளாகவும் இருப்ப தால் பெரும்பாலும் கட்டளைத் தொடரமைப்பிலேயே உள்ளன. மேலும் சொல்லப்படுகின்ற செய்திகள் ஒரு வரையறைப்படி அமையவில்லை, அரவிந்தரின் நூல்களிலிருந்தும் அன்னை

அவர்களின் நூல்களிலிருந்தும் செய்திகள் எடுத்து நூலில் பதிப் பிக்கப் பெற்றிருப்பதால் இக்காலச் சொல்லாக்கங்களை அவற்றில் காண முடியவில்லை. அவரவர் வாழ்ந்த காலச் சொல்லாக்கங் களையே நாம் காணமுடிகிறது.

¼, படிகள் போன்ற இதழ்களில் முற்போக்குக் கருத்துகள் இடம் பெறுவதால் அந்த இதழ்களின் நடைகள் இலக்கிய உரை நடை போல் அமையாது பேச்சு வழக்கு நடையிலேயே அமைந் துள்ளது. பேச்சு வழக்கிலும் முற்போக்கு எழுத்தாளர்கள் ஆங்கிலச் சொற்களை இடையிடையே பெய்து எழுதும் வழக்கமுடையவராதலான் கட்டுரைகளில் அதிகமான ஆங்கிலச் சொற்களைக் காணமுடிகிறது. தொடர்கள் நீண்ட நெடுந்தொடர்களாகவும் அமைந்துள்ளன. பொருளைப் புரிந்து கொள்வதும் சற்றுக் கடினமாக உள்ளது. வினை முற்றுக் களும் சிறப்பாக அமையவில்லை. சான்றாக:

"தான் தொழில் தேடும் போட்டியில், ஓவ்வோர் ஆளாகப் பின்னே தள்ளி விடுவதில், எம். பி. ஐ. நெருங்கும் பந்தயத்தில் சிலருக்குப் பிரயோசனம் இருக்கிறது என்பது செங்காவுக்குப் புரிந்தது"[12] என்ற தொடரை எடுத்துக் காட்டலாம். இவ்வாறு காலாண்டிதழ்களின் உரைநடை அந்தந்த இதழ்களைப் பொறுத்துதான் அமைந்துள்ளன எனலாம்.

# 3

## கட்டுரையும் கருத்தும்

1981-ஆம் ஆண்டைப் பொறுத்தவரை காலாண்டு இதழுக்கு ஒரு நல்ல முன்னேற்றமான காலம் அமைந்தது என்று கூற முடியாது. காரணம் புதிய இதழ்கள் அதிகமாகத் தோன்றவில்லை. மேலும் 1980 இல் நடைபெற்று வந்த சில முக்கியமான இதழ்கள் நின்றுவிட்டன, அல்லது காலாண்டு அரையாண்டாக மாற்றம் பெற்றன; அல்லது இரண்டு மூன்று காலாண்டுகள் ஒன்றாகச் சேர்த்து வெளியிடப் பெற்றன. எடுத்துக்காட்டாக நின்றுவிட்ட காலாண்டிதழ்களில் மிகவும் குறிப்பிடத்தக்கது வானமாமலை அவர்களின் ஆராய்ச்சி என்ற இதழாகும் (இவ்வாண்டு—1982-இல் மீண்டும் துவங்கிக் காலாண்டு இதழாக வெளிவருவது மகிழ்வு

12. ¼ இதழ் அக்டோபர்—டிசம்பர்—1981-பக். 323

தருகிறது.) காலாண்டு அரையாண்டிதழாக மாற்றப் பெற்றதற்குக் காட்டாகப் புலமை இதழைக் குறிப்பிடலாம். பொருளாதாரக் குறைவோ அல்லது இதழாசிரியருக்கு நேரமின்மையோ இதற்குக் காரணமாகலாம். இதழ்கள் சேர்ந்து வந்ததில் குடந்தையிலிருந்து வெளிவரும் முனைவன் இதழைக் குறிப்பிடலாம். எனவே கிடைத்திருக்கிற காலாண்டு இதழ்களைக் கொண்டு கட்டுரைகளையும் கருத்துகளையும் ஆய்ந்தோமானால் 1981-இல் தமிழ், கருத்து வளத்தால்-ஆய்வுத் திறனால்-எத்தகைய உயர்வைப் பெற்றிருக்கிறது என்பதை உணரமுடியும்.

காலாண்டு இதழ்களில் தலைமை இடம் பெற்று-தமிழ் மொழிக்கு ஏற்றம் தருவது மொழியியல் இதழாகும். நம் தமிழ் மொழியில் இன்று நாம் எதிர்பார்ப்பது பொழுதுபோக்குக் கதைகளையோ, அல்லது பழைமை இலக்கியங்களைப் போற்றுகின்ற கட்டுரைகளையோ அல்ல. உலக அரங்கில்-உலகமொழிகளுக்கிடையே-நம் தமிழ்மொழி போட்டியிட்டு உயரவேண்டுமானால் மொழியியல் கட்டுரைகளும் அறிவியல் கட்டுரைகளுமே வேண்டப்படுவனவாகும். இத்தகைய கருத்துக்கு இடம் தருவது அனைத்திந்திய தமிழ் மொழியியற் கழகத்தின் வெளியீடாக வரும் மொழியியல் இதழாகும். அவ்விதழின் நான்கு பகுதிகளில் மொத்தம் 30 கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. அவை அனைத்தும் தமிழ் மொழியின் இலக்கணம், சொல்லாக்கம் ஆகியவற்றை அடிப்படையாகக் கொண்டு எழுந்தவையே ஆகும்.

மொழியியலின் சனவரி இதழில் மூவிடப் பெயர்களின் வேறுபாடு என்ற கட்டுரை இக்கால மொழியியலில் தற்கால வழக்குச் சொற்களைக் கொண்டு இடப் பெயர்களை எவ்வாறு ஆராயலாம் என்பதை வகுத்துக் காட்டுகிறது. "பழையன கழிதலும் புதியன புகுதலும்"[13] என்ற நன்னூலாரின் கருத்துப்படி-புதிய இலக்கண முறைகள் தோன்றுவதற்கு அக்கட்டுரை வழி வகுக்கிறது. அவ்விதழில் இடம் பெற்ற 'பழந்தமிழில் எதிர்மறை எச்சங்கள்' என்ற கட்டுரை இலக்கண ஆய்வாளர்களுக்கு உள்ளத்தை நிறைவிக்கும் கட்டுரையாக அமைந்துள்ளது. செய்யாத, செய்யாது, செய்யா என்ற எச்சங்களைப்பற்றிய அக்கட்டுரை புதிய சிந்தனைகளைத் தோற்றுவிக்கிறது. 'சங்கத் தமிழில் பலர்பால்' என்ற கட்டுரையில் இடம் பெற்றுள்ள அட்டவணைகள் ஆசிரியரின் நுண்மாண் நுழைபுலத்தைக் காட்டுகிறது.

13. நன்னூல்—462

ஏப்பிரல் இதழில் இடம் பெற்றுள்ள எதிர்மறைப் பெயர்கள் என்ற கட்டுரை பிறமொழிகளோடு தமிழ் மொழி இலக்கணத்தை ஒப்பிட்டுக்காட்டி தமிழின் உயர்தனிச் சிறப்பை உணர்த்துகிறது. எதிர்மறை இலக்கணப் பெயராக்கத்தை ஆசிரியர் நன்கு விளக்கியுள்ளார். அதுபோல மற்றொரு கட்டுரையான 'நேரக் கிளவியும் வினையெச்சமும்' என்ற கட்டுரை வினையெச்சத்தில் ஒரு புதிய மரபைத் தோற்றுவிக்கிறது. மூன்று காலச் சொற்களையும் நேரக் கிளவியாகக் கொண்டு அவை எவ்வாறு வினையெச்சத்தோடு தொடர்புடையன என்பதைக் காட்டி-இறுதியில் வினையெச்சங்கள் தொழிலைத் தோற்றுவித்து காலத்தையும் பாலையும் ஒழிய நிற்கிறது என முடிவு காட்டியுள்ளமை குறிப்பிடத்தக்கதாகும். 'தமிழில் சொல்லாக்கம்' என்னும் கட்டுரை இக்கால வழக்குச் சொற்களுக்கு இலக்கண மரபுகளைத் தோற்றுவித்திருக்கிறது. வினையடைகளையும் பெயரடைகளையும் ஆசிரியர் ஆய்ந்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். 'தமிழில் வினை வகைப்பாடு' என்ற நீண்ட நெடுங் கட்டுரை ஆசிரியரின் மொழியியல் உணர்வைத் துல்லியமாகக் காட்டுகிறது. வினைகளை வகைப்படுத்தியிருப்பது இன்றைய மொழியியல் ஒப்பீடுகளால் ஏற்பட்ட பெருஞ்சிறப்பாகும். வேற்று மொழி அறிஞர்களின் கருத்துகளைத் தமிழ்வழிப் படுத்தி அவர்கள் கூறும் கருத்துகள் தமிழில் உள்ளன என நிறுவியுள்ளமை குறிப்பிடத்தக்கதாம்.

சூலை இதழில் அறிஞர் தெ.பொ.மீ. அவர்களின் திராவிட மொழிகளில் பால் அமைப்பின் வரலாறும் வளர்ச்சியும் என்ற கட்டுரை, மறைந்த ஆசிரியரை நம் கண் முன் கொண்டு வந்து நிறுத்துவதோடு இன்றைய மொழியியல் வல்லுநர்களுக்கோர் வழி காட்டியாகவும் அமைந்துள்ளது. கட்டுரையில் குருக் மொழியைப் பற்றி ஆசிரியர் ஆய்வு செய்து-அம்மொழியின் பால் அமைப்பை மிகச் சிறப்பாக விளக்கியுள்ளார். அதே இதழில் இடம் பெற்றுள்ள தமிழில் வேற்றுமை என்ற கட்டுரை வேற்றுமைகளின் வளர்ச்சி நிலையை மிகத் துல்லியமாக எடுத்துக் காட்டுகிறது. இலக்கண ஆசிரியர்கள் வேற்றுமைகளைச் சூத்திரங்களாக மட்டுமே சொல்லியிருக்கிறார்கள். ஆனால் இன்றைய மொழியியலாளர்கள் அதைப் பல கோணங்களில் ஆராய்ந்துள்ளனர் என்பதை அக்கட்டுரை காட்டுகிறது. அவ்விதழில் இடம்பெற்றுள்ள வணிகத் தொடர்பால் தோன்றும் புதுமொழிகள் என்ற கட்டுரை ஆய்வுக்குரிய கட்டுரை

யாகும். சுருக்கமாக அமைந்த காரணத்தாலோ என்னவோ இன்னும் அத்தலைப்பைப் பற்றிய சிந்தனை எழுவதற்குத் தூண்டு கோலாக அமைந்துள்ளது.

1981-ஆம் ஆண்டின் இறுதி இதழில் தெ.பொ.மீ அவர்களின் தமிழ்ச் சொல் என்ற கட்டுரை ஒலியியல் முறைகளையும் எழுத்து நிலைகளையும் மொழி மாற்றங்களையும் எடுத்துக்காட்டி தமிழின் வளத்தைச் சுட்டுகிறது. அக்கட்டுரையில் தமிழ் இலக்கண அலகு என்ற பகுதி ஆசிரியரின் அறிவு நலத்தை விளக்கி நிற்கிறது. பொதுவாக நான்கு பகுதிகளில் இடம் பெற்றுள்ள கட்டுரைகளில் இக்கட்டுரை தனி ஓர் இடத்தைப் பெற்றுச் சிறப்பாக விளங்கு கிறது. மொழியியல் அறிஞர்கள், மாணவர்கள் இக்கட்டுரையைப் படித்துச் சிந்தனையை வளர்த்துக் கொள்ளுதல் சிறப்பு. 'கள் இறக்குவோரின் கலைச் சொற்கள்' என்ற கட்டுரை வட்டார வழக்குச் சொல் பற்றிய ஆய்வாக அமைந்துள்ளது. 'தமிழ் எழுத்துகளில் ஆய்தம்' என்ற கட்டுரை ஆய்தம் பற்றிய புதிய கருத்துகளை உருவாக்குவதோடு தொன்மைக் கருத்துகளை மிகத் தெளிவாகக் காட்டியுள்ளது.

சூலை, அக்டோபர் இதழ்களில் முறையே வி. கோ. சூரிய நாராயண சாஸ்தியார், சுவாமி ஞானப்பிரகாசர் ஆகிய இரு மொழியியல் அறிஞர்களின் வரலாறும்-இவர் தம் மொழித் தொண்டும் எழுதப் பெற்றுள்ளன. இவ்வரலாறுகள் மொழியியல் அறிஞர்களின் பணிகளைப் பாராட்டுவதுடன் வருங்கால இளைய தலைமுறைக்கு உணர்வூட்டுவதாகவும் அமைந்துள்ளன. இத்தகைய கருத்து வளத்தைக்கொண்டு விளங்கும் மொழியியல் இதழ் காலாண்டு இதழ்களுக்கே முத்தாய்ப்பாக விளங்குகிறது எனலாம்.

காலாண்டு இதழ்களில் முற்போக்கு இதழ்களாக முனைவன், படிகள் போன்ற இதழ்கள் அமைந்துள்ளன. இவ்விரு இதழ்களும் கம்யூனிசத் தத்துவங்களைத் தன்னகத்தே கொண்டு விளங்கு கின்றன. 'முனைவன்' என்ற இதழ் குடந்தையிலிருந்து வெளிவரு வதாகும். இது 1981-இல் நான்கு இதழ்களாக வெளிவரவில்லை. முதல் இதழ் 80-ஆம் வருடத்தோடும், 1981 ஏப்பிரல்-சூலை இதழ் இரண்டும் ஒன்று சேர்ந்து ஓரிதழாகவும், அக்டோபர் இதழ் 1982-ஆம் ஆண்டுக்குரிய இதழோடு சேர்ந்தும் வெளி வந்துள்ளது. இந்த இதழ்களினுடைய ஆசிரியர் 1981-இல் பல கண்டனங்களுக்கு

ஆளாகியிருக்கிறார். காரணம், தன்னுடைய இதழை 1981ஆம் ஆண்டில் தனித்தமிழ் இதழாக மாற்ற முனைந்தமையே ஆகும். தனித்தமிழ் இயக்கத்தார் தனித்தமிழ் நடையைக் குறை கூறித் தாக்கியுள்ளனர். உதாரணமாக அக்டோபர் இதழில் 'பார்வைகள்' என்ற தலைப்பில் இதழைப் பற்றிய விமர்சனத்தில் இடம் பெற்றுள்ள, க. தமிழ்மல்லனின் கடிதத்தைக் காட்டலாம். அதே நேரத்தில் தனித்தமிழ் இயக்கச் சிந்தனைக்கென வந்த அந்த இதழை-அந்த இயக்கம் தேவையில்ல என மார்க்சீய இயக்கத்தார் கடிந்துள்ளதற்கு அதிலே இடம்பெற்றுள்ள மேலாண்மை பொன்னு சாமியின் கடிதத்தைக் காட்டலாம். எனவே தனித்தமிழ் இயக்கத் தால் பெரும் கண்டனத்துக்கு உள்ளான முனைவன் ஆசிரியர் பரிதாபத்துக்கு உரியவராவார்.

முனைவன் பல சிறப்புச் செய்திகளைத் தன்னகத்துக்கொண்டு விளங்குகிறது. பிறமொழிக் கட்டுரைகளின் மொழியாக்கக் கட்டுரைகள் இடம் பெற்றிருப்பதும், இதழைப் பற்றி - வாசகர்கள் கூறிய குறைகளை அப்படியே வெளியிட்டிருப்பதும் குறிப்பிடத் தக்கது. இதழில் ஒன்றிரண்டு கட்டுரைகளே இடம் பெற்றுள்ளன. ஏப்பிரலும் செப்டம்பரும் சேர்ந்த இதழில் படிகள் என்ற பெங்களூர் இதழை 'படிகள் Vs படிகள்' என்ற தலைப்பில் முனைவன் ஆசிரியர் விமர்சனம் செய்திருக்கிறார். அக்கட்டுரையில் படிகளின் முன்னுக்குப் பின் முரணாக மொழிகின்ற தடுமாற்ற நிலை படம்பிடித்துக் காட்டப்படுகிறது. 'பார்வைத் தெளிவு' என்ற கட்டுரை பிற சிறு இதழாசிரியர்களுக்கும் வாசகர்களுக்கும் சில எண்ணங்களை வெளியிட்டுள்ளது. 'மொழியாக்கம்' என்ற பகுதியில் 'மார்க்சீய இலக்கியக் கொள்கை' எல்ற கட்டுரை இடம் பெற்று அத்தத்துவத்தை விளக்குகிறது. அவ்விதழில் குடந்தை இசைவாணர் ப. சுந்தரேசனாருக்கு அஞ்சலி செய்திருப்பதும் நினைவுகூரத் தக்கதாகும். அதுபோல அக்டோபர் இதழில் 'தொலைவுகள் நெருங்கும் தூர தரிசனம்' என்ற கட்டுரை பயணக் கட்டுரையாகத் தொடங்கியுள்ளது. 'தற்காலத் தமிழ் இலக்கியத் தில் வறுமையும் சாதியும்' என்ற கட்டுரை மார்க்சீய தத்துவத் திற்கே உரிய பாணியில் எழுதப்பெற்ற இலக்கியக் கட்டுரை ஆகும். இந்த இதழில் மொழியாக்கக் கட்டுரையான மார்க்சீய இலக்கியக் கட்டுரை தொடர்ந்துள்ளது.

முனைவனில் புத்தக விமர்சனங்கள், பிற இதழ்களைப்பற்றிய அறிவிப்புகள், அவ்வக் கால அரசியல் குறிப்புகள், இறப்பு அறிவிப்புகள் ஆகியவை இடம் பெற்றுள்ளன.

சென்னையிலிருந்து வெளிவரும் ½ இதழ் 1981- சனவரியில் ஓரிதழும், அக்டோபரில் மற்றோர் இதழுமாக வெளிவந்துள்ளது. இந்த இதழ் 'தற்காலத் தமிழிலக்கியம் மற்றும் பண்பாட்டிற்கான காலாண்டிதழ்' என்று குறிக்கப் பெற்று வெளிவந்துள்ளது. இவ்விதழின் சாயலை நம்மால் கணக்கிட முடியவில்லை என்றே சொல்ல வேண்டும். இதழின் தலைப்பு, அட்டைப்படம் போன்ற பகுதிகளைப் பார்க்கும் பொழுது முற்போக்கு இதழ் போலத் தோன்றுகிறது. ஆனால் அதே நேரத்தில் முதல் பக்கத்திலும் இறுதி அட்டையிலும் இடம் பெற்றுள்ள வள்ளலாரின் திருவருட்பாக் கருத்தையும் கவிதையையும் நோக்கும்போது இலக்கிய இதழாகவும் தோன்றுகிறது. இருப்பினும் இவ்விதழைப் பொறுத்த வரை தரமான பல சமூக இயல் கட்டுரைகள் இடம் பெற்றிருப் பதால் பண்பாட்டை விளக்கும் இதழாகவே இதைக் குறிப்பிட லாம். இதழ்களில் சிறுகதை, நாடகம், கவிதை, மொழியாக்கக் கட்டுரை ஆகிய பலவகைக் கூறுகள் இடம் பெற்றுள்ளன. அக்டோபர் இதழில் இடம் பெற்றுள்ள, 'நமது பொருளாதார நிலை! பிரச்சினைகள் தீர்வு காணும் முறை' என்ற கட்டுரை சிறந்த கட்டுரையாகும். 'தெருக்கூத்தின் சமூக, சமயப் பின்னணி' என்ற கட்டுரை நம் நாட்டுத் தெருக்கூத்தை அமெரிக்க அறிஞர் ஒருவர் எந்த அளவுக்குப் போற்றியுள்ளார் என்பதைச் சிறப்பாக வெளிப் படுத்துகிறது. தெருக்கூத்தின் பின்னணியை நாம் காணாத அளவுக்கு - மிகப் பெரிதாக - அவ்வறிஞர் கண்டு காட்டியிருக் கிறார். அசோக மித்திரனின் தமிழ் சினிமா பற்றிய கருத்துகள் திரைப்படத் தொழிலை ஆய்வு செய்வார்க்கு ஒரு நல்ல விருந்தாகும். அக் கட்டுரையில் பழைய திரைப்படங்களையும், புதிய திரைப்படங்களையும் ஆசிரியர் மிகத் தெளிவாக ஆய்வு செய்திருக்கிறார். 'திரைப்படம் ஓர் அசேதனப் பொருள். அதாவது அது தானாக இயங்கமுடியாது. அதற்காக ஓர் உயிரும் பிரக்ஞையும் கிடையாது. அதைப் பார்ப்போர் ஊட்டும் சக்திதான் அதற்கு உயிரும் பிரக்ஞையும் ஆகும், என்று கட்டுரையில் ஆசிரியர் திரைப் படத்திற்குத் தந்துள்ள விளக்கம் சரியான கணிப்பாகும். இந்தக் கட்டுரை அவ்விதழுக்கே முத்தாய்ப்பு வாய்ந்த கட்டுரையாக அமைந்திருக்கிறது எனலாம். நிலக்கடலையும் பீடித்துண்டுகளும் என்ற கதையும், மாலைக் குட்டிகள் என்ற கதையும் முற்போக்குச் சிந்தனையிலேயே அமைந்துள்ளன. மாலைக் குட்டிகள் என்ற கதை இலங்கை எழுத்தாளரின் கதையாதலால் இலங்கை மக்களின்

பேச்சு வழக்கையும் நாகரிகக் கோட்பாட்டையும் நாம் காண முடிகிறது. உந்திச் சுழி என்ற நாடகம் மேடை நாடகத்தின் ஒரு பகுதியாகும். பாத்திரங்கள்-இன்றைய சமுதாயப் பின்னணிகளின் அடிப்படையில் படைக்கப்பட்டுள்ளன. ஆசிரியர் பல சிந்தனை மொழிகளை நாடகத்தில் அமைத்துள்ளார். ஆனால் அந்த நாடகம் இலக்கிய இதழில் இடம் பெறுகிற தகுதி உடையதா என்பது சிந்தனைக்கு உரியது.

அக்டோபர் இதழில் இடம் பெற்றுள்ள ஐந்து கவிதைகளும் புதுக்கவிதைப் பாணியிலேயே அமைந்துள்ளன. கதைகள் எந்தப் பொருளைச் சுட்டுகின்றன என்பதை யாரேனும் உரையாசிரியர்கள் இருந்து விளக்கிக் காட்டினால் நன்று எனத் தோன்றுகிறது. எனவே $\frac{1}{4}$ இதழைப் பொறுத்தவரை இலக்கிய ஆய்வாளர்களும் அரசியல் பொருளாதார ஆய்வாளர்களும் முற்போக்கு எழுத் தாளர்களும் ஏற்கும் வண்ணம் அமைந்துள்ளது எனலாம்.

படிசள் இதழ் கர்நாடக மாநிலத்திலிருந்து வெளிவருவது குறிப்பிடத்தக்க ஒன்றாகும். இதழ் வெளிவருவது பெங்களூரி லிருந்து என்றாலும் அச்சாவது மதுரையில் ஆகும். அவ்விதழின் படைப்பாளிகள் பெரும்பாலும் தமிழகத்தைச் சேர்ந்தவர்களாகவே அமைந்திருக்கிறார்கள். எனவே கர்நாடக மாநிலத் தமிழ் நடையை நாம் அதில் காண முடியவில்லை. ஆசிரியர்கள் பெயர் குறிப்பிடப் பெறாததால் சிலர் அல்லது பலர் சேர்ந்து அவ்விதழை நடத்துகிறார்கள் என்பது பெறப்படுகிறது.

படிகள் இதழைப் பொறுத்தவரை இன்றைய சமுதாயச் சூழலில் ஒருசிலரால் பத்தாம்பசலிக் கொள்கைகள் என்று கருதப் பெறுகிற சில பழைமைக் கருத்துகள் மறுக்கப்பட்டும் கண்டிக்கப் பட்டும் தருகிறது எனலாம். கட்டுரைகள் என்று பார்க்கிற பொழுது பெரும்பாலும் பொதுவுடைமைத் தத்துவக் கருத்து களைக் கொண்டிருப்பதால் ஒருசிலராலேயே புரிந்து கொள்ள முடிகிறது. அவர்கள் பாணியில் அதைச் சொன்னால் ஒருசிலரால் தான் ஜீரணிக்க முடிகிறது. பிப்ரவரி இதழில் மூன்றாம் உலக விஞ்ஞானம் ஒரு விவாதம் என்ற கட்டுரை ஒரு நூலைப் பற்றிய கலந்துரையாடலாக அமைந்துள்ளது. அது போல விஞ்ஞான தத்துவமும் மார்க்சியமும் என்ற கட்டுரை விஞ்ஞானம் பற்றிய தத்துவ விளக்கங்கள் மார்க்சிய அறிஞர்களால் எவ்வாறு சிந்திக்கப் பெற்றன என்பதை விளக்குகிறது. அவ்விதழில் இடம் பெற்றுள்ள

இலங்கை இலக்கியச் சூழல் என்ற கட்டுரை இலங்கை இலக்கிய எழுத்தாளர்களை நமக்கு அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறது. மிகவும் பாராட்டலுக்குரிய கட்டுரை; இலங்கை ஆய்வாளர் கைலாசபதி அவர்களை அக் கட்டுரை அடையாளம் காட்டுகிறது. 'மே' மாத இதழில் கூண்டு கேட்ட பறவைகள் என்ற கட்டுரை பெண்களின் நிலையை எடுத்து விளக்கும் ஓர் அரிய கட்டுரையாகும். தக்க ஆதாரங்களுடன் பறவைகள் முன்னேறுவதற்குத் தோன்றிய இயக்கங்கள் வரலாற்று நிலையில் எழுதப்பெற்றுள்ளது. அவ்விதழில் இடம் பெற்றுள்ள சிறுகதை, 'சலிப்பு' என்ற தலைப்பில் அமைந்துள்ளது. அக்கதை சிறுகதை விரும்பும் வாசகர்களைவிட, கதையின் நடையை விரும்பும் வாசகர்களுக்கென்றே எழுதப்பட்டதாகத் தோன்றுகிறது. ஆசிரியரின் நடையழகு ஒரு புத்துணர்ச்சியைத் தருகிறது. 'குழந்தை ஓடி வந்து என் கையைப் பற்றியது. மெல்லிசு மெல்லிசான அந்த விரல்கள் என் மரத்துப் போன விரல்களோடு பின்னிக் கொள்ளும் போதுதான் நான் மண்ணுக்கு வருகிறேன். எனக்குள் நின்று போய் இருந்த ஏதோ ஒன்று செயலுறத் தொடங்குவதாய்த் தோன்றுகிறது, என்ற பகுதி ஆசிரியரின் உணர்ச்சி மிக்க நடைக்கு ஓர் சான்று. 'வாசகரை மறுக்கும் எழுத்துக்கள்' என்ற கட்டுரை சிறு இதழ்களை விமர்சனம் செய்கிறது. பசுவய்யாவின் கவிதைகள் முதல் இன்றைய புதுக்கவிதைக் கவிஞர்கள் வரை பலரும் திறனாய்வு செய்யப்படுகின்றனர். கட்டுரையின் பிற்பகுதி முழுக்க முழுக்க புதுக்கவிதை விமர்சனமாகவே அமைந்துள்ளது. புதுக்கவிதைத் திறனாய்வில் இக்கட்டுரை வளர்ச்சிப் பாதையின் ஓர் 'மைல் கல்' ஆகும்.

படிகள் இதழில் ஒரு சிறப்புப் பகுதி படிகள் நீங்கள் நாங்கள் என்ற பகுதியாகும். ஆசிரியர் குழு தந்ததையும் - அவர்கள் எதிர்பார்ப்பதையும் அப்பகுதி சுட்டுகிறது. அதுபோல உள்ளும் வெளியும் என்ற பகுதி கர்நாடக மாநிலத்திலும் தமிழ் மாநிலத்திலும் நடைபெற்ற செய்திகளை வாழ்த்துவதும் கண்டிப்பதுமாக அமைந்துள்ளது. கண்டிப்பதில் 'குமுதம்' என்ற வார இதழைத் தன்னுடைய முக்கிய இலக்காகக் கொண்டிருப்பதாகவும் தோன்றுகிறது. அவ்விதழ் பிறரைக் கண்டிக்கும் போது சொற்களால் மிகவும் வேதனைப் படுத்துகிறது. உதாரணமாக வாரியாரைக் குறிப்பிடும் போது வாரியார் என்ற மொன்னையன் என்று குறிப்பிதையும், கமலஹாசன் என்ற சாதாரண உடம்பு காட்டிக் கவரும் வேசித்தனம் செய்பவன் என்று குறிப்பதையும் காட்டலாம்.

இத்துணை வன்மையான சொற்கள் தேவைதானா? ஆசிரியர் குழு எண்ணிப் பார்க்க வேண்டும். அவ்விதழில் கவிதை என்று ஒரு பகுதி அமைந்துள்ளது. அப்பகுதியில் தொடர்கள் கவிதை போன்று அச்சிடப் பெற்றுள்ளதே தவிர கவிதைக்குரிய எந்தப் பண்பும் இருப்பதாக நமக்குத் தெரிய இல்லை. ஆனால் அதே நேரத்தில் கருத்துகள் வளமாக அமைந்துள்ளமை பாராட்டுதற்கு உரித்து, இத்தகைய நிலைகளில் 'படிகள்' வாழ்த்துவதற்கும், சில கருத்துகளை மறுத்துச் சுட்டுவதற்கும் இடமாக அமைந்துள்ளது என்பதே முடிந்த முடிபு.

புதுவை ஸ்ரீ அரவிந்த ஆஸ்ரமத்திலிருந்து வெளியாகும் வைகறை என்ற காலாண்டிதழ் அரவிந்தரின் கொள்கைப் பரப்பு இதழாக அமைந்துள்ளது. இதழில் எங்கெங்கு இடம் கிடைக்கிறதோ அங்கெல்லாம் அரவிந்தரின் பொன்மொழிகளும் அன்னை அவர்களின் ஆசி உரையும் இடம் பெற்றுள்ளன. ஒவ்வோர் இதழிலும் ஏறக்குறைய 20 கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. அக் கட்டுரைகள் அனைத்தும் அரவிந்தர், அன்னை ஆகியவர்களின் நூல்களிலிருந்து திரட்டப் பெற்றவைகளாகவே காணப்பெறுகின்றன. கட்டுரைகள் தெய்வத் தத்துவங்களையும், அன்பின் அடிப்படைகளையும், வழிபாட்டுச் சிறப்புகளையும் எடுத்தியம்புகின்றது. இதழ் அனைத்தும் அரவிந்தர், அன்னை ஆகியவர்களின் செய்திகளாக மட்டும் இல்லாமல் ஓரிரண்டு கட்டுரைகள் பிற அறிஞர்களின் நூல்களிலிருந்தும் திரட்டப் பெற்றிருக்கின்றன. உதாரணமாக 1981-ஆம் ஆண்டு இரண்டாம் இதழில் வெளியான மகாகவி பாரதியாரின் காமதேனு கட்டுரையையும், சுவாமி இராமதாஸின் பெரியோர் வாழ்க்கையும், நான்காவது இதழில் இடம் பெற்றுள்ள ஸ்ரீ கபாலி சாஸ்திரியாரின் ஸ்ரீ அரவிந்தரும் பாரதியாரும் என்ற கட்டுரையையும் குறிப்பிடலாம். கட்டுரைகளோடு ஒரு சில கதைகளும் இடம் பெற்றுள்ளன.

அரவிந்தரைத் தெய்வமாகக் கொள்ளும் சில பிரிவினருக்கு வைகறை இதழ் திருவருள் தந்திடும் எழுத்துக்கோயிலாகும். அரவிந்தரைப் புரிந்து கொள்ளத் துடிக்கும் இன்றைய இளைய தலைமுறையினருக்கு வைகறை இதழ் தக்கதோர் வழிகாட்டியாகும்.

நான்காவது இதழில் இடம் பெற்றுள்ள மகரிஷிகளுடன் ஒரு மேல்நாட்டு ஞானதாகி என்ற கட்டுரை பால்பிரண்டன் என்ற ஆங்கில அறிஞன் ரமண மகரிஷியைச் சந்தித்த நிகழ்ச்சியை

எடுத்துக்காட்டுகிறது. அந்தச் சந்திப்பு இன்றைய சமயத்துறைக்கு மாற்றுக் கொள்கை தேடும் சீர்திருத்த வாதிகளுக்கு ஒரு நல்ல விளக்கமாக அமைந்துள்ளது. ரமண மகரிஷியும் பிரண்டனும் பேசுகின்ற உரையாடலாகவே அக்கட்டுரை அமைந்துள்ளது. அதே இதழில் அமைந்துள்ள அன்னை எழுதிய 'இந்தியா' என்ற கட்டுரை இளைஞர் பகுதியாக அமைந்து நாட்டடிப்படையில் ஆன்மீகத்தை எவ்வாறு உணர்வது என்பதைஎடுத்துக்காட்டுகிறது. பரமஹம்சரின் அறவுரைகளை அவ்விதழ் வெளிப்படுத்துகிறது. அதில் ஒரு வரி நம் நெஞ்சத்தை விட்டு என்றும் அகலாததாகும். ''பணம் உனக்குச் சோறுபோடலாம். அதற்காக அதையே வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டு விடாதே'' என்பது அந்த வரி.

இரண்டாவது இதழில் இடம் பெற்றுள்ள காமதேனு எனும் பாரதியின் கட்டுரை அடியார்கள் பலரைக் குறிப்பிட்டு - நம்பிக்கை தான் காமதேனு என்பதை விளக்குகிறது. அக்கட்டுரை நம்பிக்கையினால் உயர்வடைந்த திருநாவுக்கரசர், ராமானுஜர் ஏசுபெருமான், முகமது நபி ஆகியோரை எடுத்துக்காட்டி நம்மைச் சிந்திக்கவைக்கிறது. அவ்விதழ் பாரபட்சமற்ற சமயத் தத்துவங்களைக் கூறுகிறது என்பதற்கு இதழில் இடம் பெற்றுள்ள இஸ்லாம் மதத்துறவி கூறிய மூன்று அறிவுரைகள் என்ற கட்டுரை சான்றாகும். ஆகவேதான் இதழ் முகப்பில் திருவடிகள் அமைந்துள்ளன. எனவே வைகறை என்ற இதழைப் பொறுத்த வரை அரவிந்தரைப் புரிந்து கொள்ளவும் தத்துவத்தை அறிந்துகொள்ளவும் ஒரு சிறந்த வழிகாட்டி என்று கூறலாம்.

## 4

1981-இல் தமிழ் என்ற பகுதிக்கு எடுத்துக்கொள்ளப் பெற்ற காலாண்டு இதழ்கள் பற்றிய ஆய்வு இதுவரை மூன்று கோணங்களில் இங்கே தரப்பெற்றது.

முதல் பகுதியில் பொதுக்கருத்துகள் பற்றியும் இரண்டாவது பகுதியில் தமிழ் நடை பற்றியும், மூன்றாவது பகுதியில் கருத்து வளங்கள் பற்றியும் ஆய்வு செய்து தரப்பெற்றன. இப்பகுதியில் வெளியீட்டாளர்களுக்குச் சில எண்ணங்கள் கூறப்பெறுகின்றன.

காலாண்டு இதழ்கள் எண்ணிக்கையில் குறைந்திருப்பதும் வாசகர் மத்தியில் அவை சிறப்புப் பெறாமைக்கும் இதழ் வெளியீட்டாளர்கள் குறித்த காலத்தில் வெளியிடாமையே காரணமாகும்.

எனவே, வெளியீட்டாளர்கள் அந்தந்த காலாண்டுப் பகுதியில் இதழை வெளியிட்டுவிடவேண்டும். அப்போதுதான் ஆண்டுச் சந்தா கட்டியவர்களுக்கும் கட்டுபவர்களுக்கும் ஒரு நம்பிக்கை ஏற்படும். அடுத்து, வெளியீட்டாளர்கள் எத்தரத்தினரும் படித்துப் பயன்பெறும் வண்ணம் தங்கள் இதழ்களைச் சிறிது மாற்றம் செய்து கொள்ளுதல் வேண்டும். இதழின் விலையையும் ஓரளவுக்குக் குறைத்துப் பலரும் வாங்கும்படிச் செய்தல்வேண்டும். தங்கள் எண்ணங்களை மாற்றமுடியாது. முடிந்தால் சமுதாயம் தங்களைத் தேடி வரட்டும் என்ற பிடிவாதத்தைத் தளர்த்தித் தங்கள் எண்ணங்களைப் பரப்ப சமுதாயத்தை நாடி அவர்கள் செல்ல வேண்டும். அப்பொழுதுதான் இதழும் அனைவராலும் வரவேற்கப் படும். வெளியீட்டாளரின் எண்ணமும் எழுத்தும் பரவும். இத்தகைய சூழலில் காலாண்டு இதழ்கள் இனி வரும் ஆண்டுகளில் அமைந்து தமிழுக்கும் தமிழ்ச் சமுதாயத்திற்கும் ஏற்றம் தரட்டும்.

## 1981-இல் கிடைக்கப் பெற்ற காலாண்டிதழ்கள்

| எண். | இதழின் பெயர் | ஆசிரியர் | வெளியீடு | முகவரி | விலை (தனி இதழ்) |
|---|---|---|---|---|---|
| 1. | மொழியியல் | ச. அகத்தியலிங்கம், கோ. சீனிவாசவர்மா, ஜெ. நீதிவாணன் பொற்கோ, இராமசுந்தரம். | ச. அகத்தியலிங்கம் அனைத்திந்திய தமிழ் மொழியியற் கழகம். | அண்ணாமலை நகர், சிதம்பரம், தெ.ஆ. மாவட்டம். 608 002 | 5-00 |
| 2. | வைகறை | பி.வி. சீதாராமன் | அரவிந்தர் ஆசிரமம் | அரவிந்தர் ஆசிரமம், பாண்டிச் சேரி, 605 002. | 2-00 |
| 3. | ¼ | மலர்மன்னன் | மலர்மன்னன் | 13, பள்ளப்பன் தெரு, சென்னை-600 005. | 5-00 |
| 4. | படிகள் | இல்லை | இதழாசிரியர் குழு | 501, 19ஆவது மெயின் 4ஆவது டி. பிளாக். ஜெயன் நகர், பெங்களூர் 560 011. | 2-50 |
| 5. | முனைவன் | வே.மு. பொதிய வெற்பன் | வே.மு. பொதியவெற்பன் | 20, ப. கோதண்ட பாணித் தெரு, குடந்தை. 612 001 | 2-00 |
| 6. | தேனோலை | — | தொல்லியலாய்வுத் துறை. | கொடுமுடி சண்முகப் பிரகதம், 11.ஆ. இரண்டாம் பெருஞ்சாலை, சென்னை-20 | |

## கிடைத்துள்ள காலாண்டு இதழ்களின் கட்டுரை அகரநிரல்

(மொழியியல் தனியாக உள்ளது)

| வ.எண் | கட்டுரையின் பெயர் | இதழின் பெயர் |
|---|---|---|
| 1. | அஞ்ஞானத்தில் ஆழ்ந்துள்ள ஆன்மாவே (கவிதை) | வைகறை |
| 2. | அதை அடைவதென்றே முக்கியமானது | ,, |
| 3. | அரவிந்தரும் பாரதியாரும் | ,, |
| 4. | அன்னை வாக்கு | ,, |
| 5. | அன்னை காப்டன் மோனாவுடன் பேசியது | ,, |
| 6. | அன்னை பாலர் பள்ளி ஆசிரியர்களுக்குக் கூறியது | ,, |
| 7. | ஆசிரம மாணவர்க்கு ஸ்ரீ அன்னையின் அறிவுரைகள் | ,, |
| 8. | ஆன்ம நாட்டம் | ,, |
| 9. | இதழிய உறவு | முனைவன் |
| 10. | இந்தியா | வைகறை |
| 11. | இரண்டு கடிதங்கள் | படிகள் |
| 12. | இலக்கியத்துக்கு நடந்துள்ள அவமானம் | ,, |
| 13. | இலங்கை இலக்கியச் சூழலும் விவாதமும் | ,, |
| 14. | இலட்சியத்தை அடைய நிச்சயமாக இருவழிகள் | வைகறை |
| 15. | இவ்வுலகில் பரிணமிக்க வேண்டிய தெய்வீக ஆனந்தம் | ,, |
| 16. | இறைவனை அடைகிறவர்கள் | ,, |
| 17. | இனி | ,, |
| 18. | உந்திச்சுழி (நாடகம்) | $\frac{1}{4}$ |
| 19. | உபநிடதங்கள் | வைகறை |
| 20. | உலகை மாற்றுவது எப்படி? | வைகறை |
| 21. | உள்ளும் வெளியும் | படிகள் |
| 22. | எளிமையாக்கப்பட்ட பெருநூல்கள் பற்றி | வைகறை |
| 23. | ஏழடுக்கு அஞ்ஞானம் | ,, |
| 24. | கடவுள் சித்தம் | ,, |
| 25. | கர்ம யோகம் | ,, |
| 26. | கனவு (கவிதை) | $\frac{1}{4}$ |
| 27. | காமதேனு | வைகறை |
| 28. | கிரேக்கர்கள் | ,, |
| 29. | கீதை காட்டும் பாதை | ,, |
| 30. | குண்டு சட்டியும் வாழ்க்கையும் | படிகள் |
| 31. | குருக்ஷேத்திரம் | வைகறை |

| | |
|---|---|
| 32. குழந்தைகள் ஏன் பயப்படுகிறார்கள் | வைகறை |
| 33. கூண்டு கேட்ட பறவைகள் | படிகள் |
| 34. சலிப்பு (சிறுகதை) | ,, |
| 35. சாதனைக் குறிப்புகள் | வைகறை |
| 36. சார்த்தரும் அறிவி ஜீவிகளும் | படிகள் |
| 37. சாவித்திரி | வைகறை |
| 38. சுத்த தமிழ் நேயம் | படிகள் |
| 39. சைத்திய அல்லது அந்தராத்மக் கல்வி | வைகறை |
| 40. சைத்திய புருஷன் அல்லது அந்தராத்மா | ,, |
| 41. சோர்வை விரட்டும் புன்முறுவல் | ,, |
| 42. தமிழ் சினிமா பற்றி விவாதிக்கத் தயக்கம் | ¼ |
| 43. தற்காலத் தமிழிலக்கியத்தில் வறுமையும் சாதியும் | முனைவன் |
| 44. துறவும் தியாகமும் | வைகறை |
| 45. தெருக்கூத்தின் சமூக சமயப் பின்னணி | ¼ |
| 46. தொலைவுகள் நெருங்கும் தூரதர்சனம் | முனைவன் |
| 47. நம்பிக்கை இழந்துபோ (கவிதை) | படிகள் |
| 48. நமது குறைகளும் இறைவனுடைய சக்திக்குத் திறத்தலும் | வைகறை |
| 49. நமது பிரச்சினையும் அதற்குத் தீர்வும் | வைகறை |
| 50. நமது பொருளாதார நிலை | ¼ |
| 51. நாளை மற்றுமொரு நாளே | படிகள் |
| 52. நிலக்கடலையும் பீடித்துண்டுகளும் (சிறுகதை) | ¼ |
| 53. நிறவேற்றுமை பாராட்டுதல் | வைகறை |
| 54. நினைவாஞ்சலிகள் | முனைவன் |
| 55. நூல் அறிமுகம் | படிகள் |
| 56. நோயைத் தடுப்பது எப்படி | வைகறை |
| 57. ப்ரயாணம் (கவிதை) | ¼ |
| 58. படிகள் நீங்கள் நாங்கள் | படிகள் |
| 59. பத்திரமும் பாதுகாப்பும் | வைகறை |
| 60. பரமஹம்சரின் இலௌகீக ஞானம் | ,, |
| 61. பரிணாமத்தில் மனிதன் விழித்தெழுதல் (கவிதை) | ,, |
| 62. பழையதும் புதியதும் | ,, |
| 63. பார்வைகள் | முனைவன் |
| 64. புத்தியோக சாதனைக்கு உதவியா இடைஞ்சலா | ,, |

| | | |
|---|---|---|
| 65. | புதிய வரவு | முனைவன் |
| 66. | பெரியோர் வாக்கு | வைகறை |
| 67. | மகரிஷிகளுடன் ஒரு மேல்நாட்டு ஞானதாகி | ,, |
| 68. | மந்திரப் பளிங்கு (சிறுகதை) | ,, |
| 69. | மனத்திலே நடைபெறும் விவாதம் | ,, |
| 70. | மனிதன் பின் பற்றிச் செல்ல வேண்டிய வழி | ,, |
| 71. | மார்க்சீய இலக்கியக் கொள்கை | முனைவன் |
| 72. | மாலை சூட்டிகள் | $\frac{1}{4}$ |
| 73. | மூன்றாம் உலக விஞ்ஞானம் ஒரு விவாதம் | படிகள் |
| 74. | மூன்று அறிவுரைகள் | வைகறை |
| 75. | ரசமட்டம் | முனைவன் |
| 76. | ராயன் | படிகள் |
| 77. | வாசகரை மறுக்கும் எழுத்துக்கள் | ,, |
| 78. | வாமனக் கூட்டுக்குள் வசமான இசங்கள் | முனைவன் |
| 79. | வாழ்வின் அடிப்படை | வைகறை |
| 80. | விஞ்ஞானத் தத்துவமும் மார்க்சீயமும் | படிகள் |
| 81. | விடுதலை (கவிதை) | $\frac{1}{4}$ |

## 1981-ல் தமிழ் – ‘‘காலாண்டிதழ்கள்’’ – மொழியியல்-இதழ் (அ.ப.க.) கட்டுரை அகரநிரல்

| வ.எண் | கட்டுரைப் பெயர் | ஆசிரியர் பெயர் | இதழ் எண் | பக்க எண் |
|---|---|---|---|---|
| 1. | ஆகுபெயரும் சொற்றொடரும் | சி. சுப்பிரமணியன் | 3 | 1-14 |
| 2. | எதிர்மறை | ச. அகத்தியலிங்கம் | 2 | 93-111 |
| 3. | எதிர்மறைப் பெயர்கள் | கே.எஸ். கமலேஸ்வரன் | 4 | 51-60 |
| 4. | கசவ மொழியில் செய்து வாய்பாட்டு வினைஎச்சம் | வே. சிதம்பரநாதன் | 3 | 55-63 |
| 5. | கள் இறக்குவோர் பேச்சில் கலைச் சொற்கள் | சி. மகேசுவரன் | 2 | 43-49 |
| 6. | காரண வினை | ச. அகத்தியலிங்கம் | 1 | 1-9 |
| 7. | கூட்டு வினைகளும் அவற்றைக் கண்டறியும் விதிகளும் | ஆ. கார்த்திகேயன் | 1 | 117-127 |
| 8. | சங்கத் தமிழில் பலர்பால். | ச. அகத்தியலிங்கம் | 3 | 65-95 |
| 9. | சுழற்சி முறையும் ‘தான்’ பிரதிப்பெயராக்கமும் | எம். சுசீலா | 3 | 97-104 |
| 10. | தமிழ் எழுத்துக்களில் ஆய்தம் | சிவப்ரியா | 2 | 79-92 |
| 11. | தமிழ்ச் சொல் | தெ.பொ.மீ | 2 | 1-42 |
| 12. | தமிழில் சொல்லாக்கம் | ஆ. கார்த்திகேயன் | 4 | 71-80 |
| 13. | தமிழில் வினை வகைப்பாடு | ச. அகத்தியலிங்கம் | 4 | 1-44 |
| 14. | தமிழில் வேற்றுமைகள் | ஆதித்தன் | 1 | 89-106 |
| 15. | தமிழை இரண்டாம் மொழியாகக் கற்பவர்களின் பிழைகள்—ஓர் ஆய்வு | ந. நடராசப்பிள்ளை & ச. விமலா | 2 | 51-74 |
| 16. | திராவிட மொழிகளில் பால் அமைப்பின் வரலாறும் வளர்ச்சியும் | தெ.பொ.மீ. | 1 | 11-31 |

# 29. அரசுத்துறை வெளியீடு 'தமிழரசு' இதழ்

**சா. பெருமாள்**

*தமிழக அரசு மேற்கொண்டுள்ள பொருளாதார, சமூக மேம்பாடு தொடர்பான நடவடிக்கைகள் ஆகியவற்றோடு தமிழ் வளர்ச்சி, தமிழ் வளர்ச்சிக்குத் தொண்டாற்றியவர்களுக்குப் பாராட்டு முதலிய நிகழ்ச்சிகளுக்கும் சிறப்பிடம் அளித்துத் தமிழரசு தமிழ்ப் பணியாற்றியிருப்பதைக் காண்கிறோம்.*

1942 ஆம் ஆண்டில் அப்போது நிகழ்ந்து கொண்டிருந்த இரண்டாம் உலகப் போருக்கு ஆதரவாக மக்கள் கருத்தை உருவாக்கும் நோக்கத்துடன் சென்னை மாநிலத் தகவல் பிரிவு ஏற்பட்டது. 1947-இல் நாடு விடுதலையடைந்து மக்களாட்சி ஏற்பட்ட போது, மக்களுடன் தொடர்பு கொள்வதற்காக அப்பிரிவு, செய்தித் துறையாக விரிவாக்கப் பெற்றது. பல்வேறு துறைகளின் செய்திகளை மக்களுக்குத் தெரிவிக்கும் நோக்குடன் செய்தி இதழ்கள் வெளியிடப் பெற்றன. வேளாண்மைத் துறையின் மேழிச் செல்வம் உள்ளாட்சி மற்றும் ஊரக வளர்ச்சித் துறையின் கிராமநலம் பின்னர் சீரணி, மகளிர் நலத் துறையின் பாக்கியலக்ஷ்மி, சமூக நலத்துறையின் ஆரோக்கிய மாங்கம், தொழில் வணிகத் துறையின் இண்ட் - காம், அறநிலையத் துறையின் திருக்கோயில், செய்தித் துறையின் சென்னைச் செய்தி ஆகியவை இவ்வகையில் குறிப்பிடத்தக்கன. 'செய்தி—விளம்பரத்துறை' என்று அழைக்கப்பட்டு வந்த செய்தித் துறை 1971-ஆம் ஆண்டில் 'செய்தி—மக்கள் தொடர்புத்துறை' என மாற்றியமைக்கப்பட்டது; நிர்வாக அமைப்பில் சிறப்பிடமும்

பெற்றது. அரசுக்கும், பொது மக்களுக்கும், பத்திரிகைத் துறைக்கும் இடையேயான நல்லுறவை வளர்த்திடும் தொடர்புப் பாலமாகச் செய்தி—மக்கள் தொடர்புத் துறை இயங்கத் தொடங்கியது.

இந்து அறநிலையத் துறையினர் வெயிட்டுவந்த திருக்கோயில் தவிர, பிறதுறையினரின் இதழ்கள் ஒன்றாக்கப்பட்டு, அனைத்துத் துறையினரின் பணிகளைப் பற்றிய தகவல்களையும் தாங்கி, 1970-சூலை மாதம் முதல் தமிழரசு எனும் பெயரில் புதிய இதழ் வெளிவரத் தொடங்கியது. தமிழரசு தகவல் அளிக்கும் இதழாக மட்டுமல்லாமல் அரசின் செய்திகளையும், கொள்கைகளையும் பரப்ப முனைவதுடன் அரசின் ஒருங்கிணைந்த திட்டங்களையும் பொதுமக்களுக்கு அறிவிக்கிறது. மாதம் இரு முறை வெளிவரும் தமிழ்இதழ் சராசரி 50,000 பிரதிகள் வெளியிடப்படுகின்றன. இவ்விதழின் ஆங்கிலப் பதிப்பு மாதம் இரு முறையாக வெளியிடப் பெற்றுத் தற்போது மாத இதழாக 3,000 பிரதிகள் வெளியிடப்படுகின்றது. 'தமிழரசு' வளர்ச்சியின் இடைக்காலத்தில் ஓர் இலட்சம் பிரதிகள் வெளியிடப்பெறும் நிலை வரை அடைந்திருந்தது. ஆங்கில மாதங்களில் 1, 16 நாட்களில் வெளிவரும் 'தமிழரசு', 1981-ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் முதல் 'திருவள்ளுவராண்டு' குறிப்போடுதமிழ் ஆண்டு, திங்களின் பெயர்கள் தாங்கி வருகின்றது.

அரசின் பல்வேறு துறைகள், அரசின் பொறுப்பிலுள்ள கழகங்கள், வாரியங்கள், நிறுவனங்கள் ஆகியவற்றின் பணிகள், பொதுத் தகவல்கள் ஆகியவற்றைச் சுருக்கமாகவும், படிப்போர் மனதில் படியும் வண்ணம் புகைப்படங்களுடனும் அளிக்கும் இவ்விதழ், தமிழ் மொழி, இலக்கியம் பற்றிய கட்டுரைகளையும் கவிதை, கதைகள் ஆகியவற்றையும் தாங்கி மற்ற எந்த மாநில அரசும் வெளியிடாத முறையில் தனிச் சிறப்புடன் அமைந்துள்ளது. அரசுத் துறையைச் சார்ந்ததாயினும் பார்க்கவும், படிக்கவும் தூண்டும் கவர்ச்சியோடு எளிய, இனிய மொழி நடையால் மக்கள் விரும்பிப் படிக்கும் இதழாக விளங்குகின்றது. மிகுந்த கவனத்தோடு சரியான தகவல்களுடனும் வெளியிடப் பெறும் கட்டுரைகளோடு, வளரும் தமிழகம், ஆக்கப்பணிகள், மாணவர் பக்கம், அறிவியல் அரங்கம், கேள்வியும் பதிலும், பேட்டிகள், நூல் அரங்கு, செய்திக் கொத்து, அறிவுச் சுடர், நிகழ்ச்சித் தொகுப்பு, பெட்டிச் செய்திகள் எனப் பல்வேறு வகை

களில் அனைவர்க்கும் பொது அறிவை வளர்த்துக் கொள்ள உதவும் இவ்விதழ், ஆய்வு மாணவர்க்குத் தகவல் களஞ்சியமாகப் பயன்பட வல்லது.

''ஏற்றமுறச் செய்வதுவும் மாற்றமுற வைப்பதும் ஏடேயாகும்
தோற்று புது நிலையுணர்ந்து, தோன்றாத வழிகூறித் துணை புரிந்து
சேற்றிலுயர் தாமரைபோல் திருநாட்டின் உளங் கவர்ந்து தீந்தமிழ்த்தொண்
டாற்றுந்தாள் அங்கங்கே அழகழகாய் அறிஞர்களால் அமைதல் வேண்டும்''[1]

எனப் புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் விரும்பிப் பாடிய தீந் தமிழ்த் தொண்டாற்றும் தாளாகவே தமிழரசு இதழை அதன் இதழாசிரியர்கள் உருவாக்கி வளர்த்து வந்துள்ளனர்.

1981 ஆம் ஆண்டு, தமிழக அரசின் சார்பில் ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடும், தமிழ்க்கவிஞர்கள், அறிஞர்கள் பலரின் நூற் றாண்டு விழாக்களும் நடந்த ஆண்டு ஆகும். தமிழறிஞர்களும், கவிஞர்களும் பலர் இந்த ஆண்டில் மறைந்திருக்கிறார்கள். தமிழ் மாநிலம் அமைந்து இருபத்தைந்து ஆண்டுகள் நிறைவெய்தியதும், தஞ்சையில் தமிழ்ப் பல்கலைக்கழகம் அமைந்ததும் இந்த ஆண்டிலேயேயாகும். இச்சிறப்பு நிகழ்ச்சிகளால், 1981-ஆம் ஆண்டின் தமிழரசு இதழ்களின் பெரும்பகுதி தமிழ் மொழி, இலக்கியம், தமிழக வரலாறு, தமிழகத்தின் தற்கால நிலை, தமிழறிஞர் வரலாறு ஆகியவற்றைப் பற்றிய கட்டுரைகளையும், தகவல்களையும் கொண்டுள்ளது.

தமிழகத்தின் பல்துறை வளர்ச்சியைப் பற்றிய ஆய்வுக்குரிய கட்டுரைகள் அடங்கியுள்ள 1981 ஆம் ஆண்டின் தமிழரசு இதழ் களில், தமிழியல் தொடர்பான பகுதிகள் மட்டுமே ஆய்வுக்குரியன வாகக் கொண்டு இக்கட்டுரை எழுதப்படுகின்றது. அரசின் பிற துறைகளைப் பற்றிய கட்டுரைகளாலும் தமிழ் வளம் பெற்றிருப்ப தையும் ஆய்தல், துணை நோக்கமாகக் கொள்ளப்பட்டுள்ளது.

1981-இல் வெளிவந்துள்ள 24 இதழ்களில் முதல் இதழ் ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டுச் சிறப்பிதழாகவும், தொடர்ந்து வந்துள்ள நான்கு இதழ்கள் மாநாட்டின் நிகழ்ச்சித் தொகுப்பு களைக் கொண்டதாகவும் அமைந்துள்ளன. ஐந்தாவது, ஆறாவது இதழ்கள் வ. வே. சு. ஐயர் நூற்றாண்டினையும்,

1. பாரதிதாசன், தமிழியக்கம் பாடல் எண் 108

பாவேந்தர் பாரதிதாசன் மறைவினையும் நினைவூட்டுவனவாக உள்ளன. பத்தாவது இதழ் பாரதிதாசன் பிறந்த நாள் விழா நிகழ்ச்சித் தொகுப்புடன் கவிஞர் பட்டுக்கோட்டை கல்யாண சுந்தரத்தை நினைவுறுத்தும் கட்டுரையையும் கொண்டுள்ளது. தமிழரசின் பதினோராம் ஆண்டு நிறைவைக் குறிக்கும் பதின் மூன்றாம் இதழ், தமிழகக் கல்வி இதழாகவும், பதினாறாவது இதழ், ரசிகமணி டி. கே. சி. சிறப்பிதழாகவும், இருபத்து மூன்றாம் இதழ் முழுமையாகப் பாரதியார் நூற்றாண்டுச் சிறப்பிதழாகவும் மலர்ந்துள்ளன. இவற்றிற்கிடையே வந்துள்ள இதழ்கள், தஞ்சைப் பல்கலைக்கழக அமைப்பு, தமிழ் மாநிலம் அமைந்த வெள்ளிவிழா, கவியரசு கண்ணதாசன் மறைவு ஆகிய வற்றின் தொடர்பான கட்டுரை, கவிதைகளையும், விழா நிகழ்ச்சித் தொகுப்புகளையும் கொண்டுள்ளன. இந்நிகழ்ச்சி களின் போது எடுத்த புகைப்படங்கள் மேலட்டைகளிலும் உள்ளும் இடம்பெற்றுள்ளன. இவற்றோடு, 'தமிழ் வளர்த்த பெரியார்' வரிசையில் தமிழறிஞர் எழுவரைப்பற்றிய வரலாறும், மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர், கவியரசு கண்ணதாசன் ஆகியோரின் வாழ்க்கைக் குறிப்புகளும் இடம் பெற்றுள்ளன.

ஆண்டின் தொடக்கத்தில் ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டை யொட்டி நடந்த பட்டிமன்ற நிகழ்ச்சிகள், சான்றோர் சிலை திறப்பு விழாக்கள், கருத்தரங்குகள், இசை, நடன, நாடக நிகழ்ச்சிப் படங்கள் ஆகியவற்றைத் தொகுத்து வெளியிட்டிருப்ப தோடு, சிறப்புக் கட்டுரைகள் பலவும் பரவலாக வெளியிடப் பட்டுள்ளன. படைப்பிலக்கிய வகையில், கருத்தை விளக்குவதற் கென்று எழுதப்பட்ட கதைகள், கவிதைகள் பலவும், நாடகமும் இடம் பெற்றுள்ளன. தமிழுக்கும் தமிழறிஞர்க்கும் தரப்பட்டுள்ள இச்சிறப்பினால், தமிழரசு—அரசின் 'பிரச்சார ஏடு' என்னும் எண்ணம் தோன்றாமல் பொருளாதார, சமூக வளர்ச்சிப் பணிகளுக்கிடையே தமிழ் மக்கள் 'தங்கள் வாழ்வும் வளமும் மங்காத தமிழே' என்பதை மறவாதவர்களாக இருப்பதற்குரிய வகையில் அரசு செயல்பட்டிருப்பதைக் காட்டுகிறது.

இதழின் அமைப்பு, கட்டுரை, கதை, துணுக்குகள் முதலிய வற்றிற்கு அளிக்கப்பட்டுள்ள நயமான தலைப்புகள், பிழைகள் இல்லாமல் அமைந்துள்ள தெளிந்த சீரான மொழி நடை ஆகிய வற்றில் தொடர்ந்து கவனம் செலுத்தியுள்ள இதழாசிரியர்

களுக்கு அரசு ஊழியர்கள் என்ற உணர்வுக்கு மேலாகத் 'தமிழ்ப் பணி' என்னும் உணர்வே தூண்டுதலாக இருந்திருப்பதைக் காண்கின்றோம்.

'தமிழரசு' இதழ்களில் எழுதியுள்ள கட்டுரையாளர்களைத் தமிழக அமைச்சர்கள், அரசின் துறைத் தலைவர்கள், மாவட்ட ஆட்சித் தலைவர்கள், செய்தி-மக்கள் தொடர்பு அலுவலர்கள், மருத்துவக் கல்லூரி மற்றும் வேளாண்மைப் பல்கலைக் கழகம் முதலியவற்றின் பேராசிரியர்கள், உலகத் தமிழராய்ச்சி நிறுவனத்தின் ஆய்வாளர்கள்-இந்த வரிசையில் சேராத பிற எழுத்தாளர்கள் எனப் பல வகையினராகப் பிரிக்கலாம். இவர்களைத் தவிர, புகழ் பெற்ற எழுத்தாளர்கள், கவிஞர்கள் பலரின் ஏற்கெனவே வெளிவந்த கதை கவிதை, கட்டுரைகள் அவசியம் கருதி மீண்டும் எடுத்து வெளியிடப்பட்டுள்ளன. முழுநேர எழுத்தாளர்களான வ. சம்பந்தம் (இணையாசிரியர்), சண்முகசுந்தரம் (தமிழ்ப் பித்தன்), குமாரராஜா (மாமூலன்), பி. வி. கிரி., பி. எல். இராசேந்திரன், ஜி. ஆனந்தன், ஆகியோரின் கட்டுரை, கவிதைகளால் மட்டுமல்லாமல் பேட்டிகள், நிகழ்ச்சித் தொகுப்புரைகள், சுற்றுலாச் செய்திகள், நூல் மதிப்புரைகள் ஆகியவற்றாலும் தமிழரசு இதழ்கள் பொலிவுறுகின்றன. இவர்களில் பலர் தமிழரசு இதழ் அலுவலர்களாக வருவதற்கு முன்பு தமிழியக்கப் பின்னணியுள்ள இதழ்களில் பணியாற்றியவர்கள்.

தமிழ்நாடு அரசின் செய்தி-மக்கள் தொடர்பு இயக்குநர் 'தமிழரசின்' ஆசிரியரும் வெளியிடுபவருமாவார்.

## 2

ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு நடந்த ஆண்டாதலின் 1981-ஆம் ஆண்டின் முதலிரு இதழ்களில் தமிழியல் பற்றிய கட்டுரைகள் பெருமளவில் வெளியிடப்பட்டுள்ளன. இவை பல நிலைகளிலுள்ள தமிழ் மக்கள் அனைவரும் அறியவேண்டிய தமிழ் வளர்ச்சி பற்றிய செய்திகளாகவும், தமிழுக்கும் தமிழர்க்கும் உழைத்த பெரியார் வரலாறுகள், தமிழர்கலை, பண்பாடு, நாகரிகம் பற்றிய சுருக்கமான கட்டுரைகளாகவும் உள்ளன.

இந்திய அரங்கில் பல்வேறு மாநிலங்களின் பல்கலைக் கழகங்களில் செழுந்தமிழ் இடம் பெற்றுச் சிறந்தோங்கிவரும் செய்திகளை, 'இந்தியப் பல்கலைக் கழகங்களில் தமிழ் வளர்ச்சி'

என்ற தலைப்பில் டாக்டர் ச. வே. சுப்பிரமணியன் அவர்களும், 'எங்கும் தமிழ் எதிலும் தமிழ்' என்னும் குறிக்கோளை முன் வைத்துத் தொண்டாற்றிவரும் அரசுத்துறை நிறுவனமாகிய தமிழ் வளர்ச்சி இயக்கத்தின் பணிகள்பற்றி டாக்டர் மா. நன்னன் அவர் களும், தமிழ்க் கல்வியைப் போற்றிப் புரப்பாரும் பேணிக்கொள் வாரும் இல்லாத நாளில், ஆதீனத் தலைவர்களும் ஆன்றோர்களும் (சிலர் புலவர்களாகவும் புரவலர்களாகவும் அமைந்து) தமிழ்க் கல்லூரிகளைத் தோற்றுவித்த பணியே வளர்ந்து இன்றைய தமிழ்ப் பல்கலைக் கழகமாகத் தோன்றியுள்ளதைப் பேராசிரியர் கு. சிவமணி அவர்களும் எழுதியுள்ளனர். மாமூலன், பி. வி. கிரி ஆகியோர், தமிழ் பரப்பும் மைசூர் இந்திய மொழிகள் நிறுவனம், வேங்கடவன் பல்கலைக் கழகத்தில் வளரும் தமிழ், கலைக் களஞ்சியம் தந்த தமிழ் வளர்ச்சிக் கழகம், முத்தமிழ் வளர்க்கும் தமிழ் நாடு இயல், இசை, நாடக மன்றம் ஆகியவற்றைப்பற்றி எழுதியுள்ளனர். தமிழ் வளர்ச்சிப் பணியில் ஈடுபட்டுள்ள நிறுவ னங்கள் பற்றிய இக்கட்டுரைகள் தகவல்கள் நிரம்பியவை. 'உலகத் தமிழ் மாநாடுகள்' 'ஐந்தாவது உலகத்தமிழ் மாநாடு' 'இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டில் பேரறிஞர் அண்ணா ஆற்றிய துவக்கவுரை', 'நிறைவு விழாச் சொற்பொழிவு' ஆகியவை உலகத் தமிழாராய்ச்சி மன்றமும், தமிழக அரசும் உலகெலாம் தமிழ் பரவ உதவுவதை விளக்குகின்றன.

இந்த நூற்றாண்டில் நிறுவனங்கள் மட்டுமல்லாமல், தனியாரும் பலர் தமிழ் வளர்ச்சிக்கும் வளத்திற்கும் உழைத் திருப்பதை 'மேன்மைத் தமிழ் வளர்த்த மேல்நாட்டு அறிஞர்கள்', 'சங்கத் தமிழ் வளர்த்த சான்றோர்கள்', 'சிலை வடிவம் பெறும் செம்மல்கள்', 'உரைநடை பலவிதம்', 'நாளும் வளர்ந்திடும் நாடகத்தமிழ்' எனப் பல்வகைத் தலைப்புகளில் கட்டுரைகளாக வும், பட்டியல்களாகவும், புகைப்பட விளக்கங்களுடன் திரட்டி வெளியிட்டுள்ளன.

மூன்றாவது இதழிலிருந்து ஓரிரு இதழ்கள் தவிர அனைத்து இதழ்களிலும் தமிழ், தமிழறிஞர் பற்றிய கட்டுரைகளும் விழாக் களில் நிகழ்த்திய உரைத் தொகுப்புகளும் வெளிவந்துள்ளன. 'தமிழ் வளர்த்த பெரியார்கள்' என்னும் வரிசையில் தமிழறிஞர் எழுவரின் வரலாறுகள் முழுமையாகத் தரப்பட்டுள்ளன. தமிழாராய்ச்சியில் விஞ்ஞானமுறை கண்ட பேராசிரியர் வையாபுரிப்பிள்ளை, கவிதைகள், சிறுகதைகள், புதினம் ஆகிய

வற்றையும் எழுதியிருப்பதையும், 1930-ஆம் ஆண்டிலேயே சீர்திருத்தத் திருமணம் செய்து கொண்ட டாக்டர் மா. இராச மாணிக்கனார், எழுத்தராகவும் நடுநிலைப்பள்ளி ஆசிரியராகவும் தம் பணியைத் தொடங்கி, சென்னைப் பல்கலைக்கழகத் துணைப் பேராசிரியராகவும், ஆய்வாளர்களுக்கு வழிகாட்டியாகவும் உயர்ந்ததையும் இவர்களைப்பற்றிய கட்டுரைகள் காட்டுகின்றன. பேராசியராகவும், நூலாசிரியராகவும் விளங்கிய சி. இலக்குவனார் 1944-இல் சங்க இலக்கியம் என்னும் வார இதழையும், பின்னர் இலக்கியம், திராவிடக் கூட்டரசு, குறள்நெறி ஆகிய இதழ்களையும் வெளியிட்டு, குறள் நெறியை நாளிதழாக நடத்தியதோடு 'குறள் நெறி', 'திராவிடக் கூட்டரசு' ஆகியவற்றின் ஆங்கிலப் பதிப்பையும் வெளியிட்டுச் சிறந்த பத்திரிகையாளர் என்னும் பெருமையை நிலை நாட்டியதையும், கவிமணி தேசிக விநாயகம்பிள்ளை, 1926-ஆம் ஆண்டிலேயே தமது மருமக்கள்வழி மான்மியம்' நூலின் வாயிலாகச் சமூகப் புரட்சி நடத்தியதையும், மற்றும் குடந்தை ப. சுந்தரேசனாரின் தமிழிசைத் தொண்டுகள், தத்துவப்பேரொளி கோ. வடிவேலனாரின் பல்கலைப் புலமை, தமிழ் நெறிக்காவலர் மயிலை சிவமுத்துவின் தமிழ்ப் பணிகள் ஆகியனபற்றியும் 'தமிழ் வளர்த்த பெரியார்' வரிசைக் கட்டுரைகள் அறிமுகப்படுத்துகின்றன.

பாரதியார், பாரதிதாசன், வ.வே.சு. ஐயர், ரசிகமணி டி.கே.சி, பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் ஆகியோரைப்பற்றி ராஜாஜி, மயிலை சீனி வேங்கடசாமி, ப. ஜீவானந்தம், பரலி சு. நெல்லையப்பர் ஆகியோரும் பிறரும் எழுதி ஏற்கெனவே பிற இதழ்களில் வெளியான கட்டுரைகள் மீண்டும் வெளியிடப் பட்டுள்ளன. 1981-இல் மறைந்த பேராசிரியர் ஒளவை துரைசாமிப் பிள்ளை தமிழ்ப் பத்திரிகையுலகில் சாதனை புரிந்த சி. பா. ஆதித்தனார், உடுமலை நாராயணகவி, குடந்தை ப. சுந்தரேசனார், கவிஞர் கண்ணதாசன் ஆகியோரைப் பற்றித் தமிழக முதல்வர் வெளியிட்டுள்ள இரங்கற் செய்தி முதலியவற்றால் இவர்தம் வாழ்வும் பணியும் பற்றிய குறிப்புகள் வெளிப்படுகின்றன.

தமிழ் நாடு, தமிழரின் கலை, கல்வி, பண்பாட்டு வளர்ச்சி, தமிழ்க் கவிஞர்களால் நாடும் மொழியும் பெற்ற பயன்கள் ஆகியவற்றைப் பற்றிய கட்டுரைகள் இதழ்கள்தோறும் வெளியிடப் பட்டுள்ளன. தாய்மொழி காரணமாகத் தோன்றிய தேசிய இன

உணர்ச்சி மொழிவழி மாநிலங்கள் அமைவதற்குக் காரணமான வரலாற்றைப்பற்றித் தமிழ் மாநிலம் அமைந்த வெள்ளிவிழாவை யொட்டி எழுதப்பட்டுள்ள கட்டுரை தருகின்றது.

பாரதி நூற்றாண்டு விழாச் சிறப்பிதழில், பாரதியாரைப் பற்றிப் பெரியார் ஈ.வே ரா., நாவலர் ச. சோமசுந்தர பாரதியார், பேரறிஞர் அண்ணா முதலானோர் தெரிவித்துள்ள கருத்துரைகளும், பாரதியின் நூல் முன்னுரைகள், பாரதி நூல் அறுபது, பாரதியின் கடித முத்துக்கள், பாரதியின் வாழ்க்கைக் குறிப்புகள் பாரதியின் மறைவுக்குப் பின் அவரை நினைவுறுத்த நடந்த நிகழ்ச்சிகள் எனப் பலவகைகளில் தகவல்கள் தரப்பட்டுள்ளன. கா. திரவியம் அவர்கள் எழுதியுள்ள 'ஒருமைப்பாட்டுக்கு உருவம் கொடுத்த உயர் கவிஞர்' சி.என். கிருஷ்ணபாரதி அவர்களின் 'பாரதி ஒரு பத்திரிகையாளர்', இல.செ. கந்தசாமியின் 'பாரதியும் வேளாண்மையும்' ஆகிய கட்டுரைகள் பாரதியைப் புதிய கோணத்தில் காட்டுவன. அவ்வாறே, ரசிகமணி டி.கே.சி யின் நூற்றாண்டு விழாவினையொட்டி எஸ். மகராஜன், ராஜேஸ்வரி நடராஜன், மீ.ப. சோமசுந்தரம் ஆகியோர் எழுதியுள்ள கட்டுரைகளும், விழா நிகழ்ச்சிகளும் தனி இதழாக அமைந்துள்ளன.

தமிழக அரசின் சார்பில் நடைபெற்ற உலகத் தமிழ் மாநாடு, தமிழ்ப் பல்கலைக்கழகத் துவக்கவிழா, பாரதியார், வ.வே.சு.ஐயர், ரசிகமணி டி.கே.சி ஆகியோரின் நூற்றாண்டு விழாக்கள், பாரதிதாசன் விழா, திருவள்ளுவர் விழா, தமிழ் மாநிலம் அமைந்த வெள்ளி விழா ஆகியவற்றின் தொகுப்புரைகளும் தமிழரசு இதழ்களில் வெளியிடப்பட்டுள்ளன. இந்நிகழ்ச்சிகளில் பாரதப் பிரதமர், தமிழக ஆளுநர், தமிழக முதலமைச்சர், அமைச்சர்கள், பல்துறை அறிஞர்கள் ஆகியோர் ஆற்றிய உரைகள், கருத்தரங்குகள், பட்டி மன்றங்கள், ஆராய்ச்சி அரங்குகள் ஆகியவற்றில் விளைந்த கருத்துரைகளின் தொகுப்புகள் ஆகியவற்றாலும் தமிழ், தமிழர், தமிழ்நாடு பற்றிய சிறப்புச் செய்திகள் பெறப்படுகின்றன.

தமிழரசு இதழ்களில் தரப்பட்டுள்ள செய்தித் துணுக்குகளிலும் தமிழ், தமிழிலக்கியம், தமிழைப்பற்றி அறிஞர்களின் கருத்துகள் ஆகியவையே பெரும் பகுதியாக இடம் பெற்றுள்ளன. முதல் இதழில் சொல்லும் பொருளும், சொல்லின் அருமை, பழந் தமிழ் இலக்கியங்களின் பட்டியல், பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள்,

சிற்றிலக்கியங்களின் எண்ணிக்கை, உரைநடை வகைகள், தமிழ்ப் பண்பாட்டின் சிறப்பு, ஒருமைப்பாட்டிற்குத் தமிழ் என்னும் தலைப்புகளில் அனைத்துத் துணுக்குச் செய்திகளும் தமிழைப் பற்றியனவாகவே உள்ளன. பிற இதழ்களில் உள்ள செய்தித் துணுக்குகளில் சில வருமாறு: வைணவ இலக்கியங்கள், உலக மொழிகளில் திருக்குறள். பட்டிமன்றத்தில் கிட்டிய முத்துக்கள், தமிழ்ப் புலவர்களின் உலகளாவிய உணர்வு, மாமண்டூரில் கம்பர், பாவேந்தரைக் கவர்ந்த பாரதி, பாவேந்தர் அறக்கட்டளை, ஜீவா குடும்பத்துக்கு ஒய்வு ஊதியம், தமிழ் வளர்ச்சித்துறையின் பரிசு பெற்ற நூல்கள், ரசிகமணியின் நூல்கள், திருக்குறளுக்குப் புலவர் அளித்து மகிழ்ந்த பெயர்கள், பாரதி மறைவு நாளில் 'சுதேச மித்திரன்' தலையங்கம், தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் குறிக் கோள்கள், தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் துணைவேந்தர், அதிய மான் நெடுமான் அஞ்சியின் கல்வெட்டுக் கண்டுபிடிப்பு, தேவ நேயப் பாவாணர் மாவட்ட மத்திய நூலகம்.

தமிழ் மக்களுக்குத் தம் மொழி, நாடு பற்றிய இத்தகைய செய்திகளைத் திரட்டியளிப்பதில் தமிழரசு இதழாசிரியர்கள் கொண்டுள்ள ஆர்வத்தை இவை காட்டுகின்றன.

தமிழரசு இதழ்களில் கதை, கவிதை, நாடகம் ஆகியவையும் வெளியிடப்பட்டுள்ளன. கதைகளும் கவிதைகளும் 'மாணவர் பக்கம்' பகுதியிலேயே பெரும்பாலும் இடம் பெற்றுள்ளன. இவை அனைத்தும் இளைஞர்க்கு நீதிபுகட்டும் நோக்குடனேயே எழுதப் பட்டுள்ளன. பி.வி. கிரியின் 'உயர்ந்த மனம்', 'யானையின் தியாகம்'—கதைகள், தியாகவுணர்வின் சிறப்பினை உணர்த்துவன. ஊனமுற்றோர் ஆண்டினையொட்டித் தன்னம்பிக்கை, துணிவு ஆகியவற்றை வளர்க்கும் நோக்கிலும், ஊனமுற்றோர்க்கு அரசு அளிக்கும் ஆதரவுகளைத் தெரிவிக்கும் வகையிலும் இரண்டு கதைகள் ('உள்ளத்தில் இல்லை ஊனம்', 'ஊனம்') வெளியிடப்பட் டுள்ளன. காந்தியடிகள் பிறந்தநாள் நினைவாகச் சமூகச் சமத்துவக் கருத்தினைப் பரப்பும் 'புதிய நந்தன்', 'தனி ஒரு வனுக்கு' என்னும் கதைகள் வெளியிடப்பட்டுள்ளன. இவை இரண்டும் புதுமைப்பித்தனின் சிறுகதைத் தொகுப்பிலிருந்து எடுக்கப்பட்டவை. முந்திரி சாகுபடியை விளக்கும் நோக்குடன் தூ. சி. தியாகராசன் எழுதியுள்ள சிறு நாடகம் ('மாமியார் மெச்சிய மருமகள்') படிப்பவர் மனத்தில் பதியும் வகையில் அமைந்துள்ளது.

ஓரிரு இதழ்கள் தவிர, 'தமிழரசின்' அனைத்து இதழ்களிலும் கவிதைகள் இடம் பெற்றுள்ளன. ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டுச் சிறப்பிதழாகிய முதல் இதழில் 'மனோன்மணீயம்' சுந்தரம் பிள்ளை, பாரதியார், நாவலர் சோமசுந்தர பாரதியார், திரு.வி.க., விபுலானந்தர், வரந்தருவார், பாரதிதாசன், நாமக்கல் கவிஞர் இராமலிங்கம் பிள்ளை ஆகியோரின் கவிதைகளி லிருந்து தமிழைப் பற்றிய வரிகள் எடுத்து வெளியிடப்பட்டுள்ளன.

பதினாறாவது இதழில் பாரதியாரின் 'எந்தையும் தாயும்' கவிதை சுதந்திர தின நினைவாக வெளியிடப்பட்டுள்ளது. பாரதி நூற்றாண்டு விழாச் சிறப்பிதழில் அட்டைப்பட விளக்கமாகப் 'பாரத தேசமென்று பெயர் சொல்லுவார்' கவிதை வெளியிடப் பட்டுள்ளது. பாரதிதாசன் நினைவாகவும், வ.வே.சு. ஐயர் நூற்றாண்டு விழாத் தொகுப்புரையைக் கொண்டதாகவும் வந்துள்ள எட்டாவது இதழில் 'வ.வே.சு. ஐயர் மறைவுக்குப் பாரதிதாசன் இரங்கற்பா' வெளிவந்துள்ளது. 1925-இல் பாவேந்தர் பாரதிதாசன், வ.வே.சு. ஐயரை 'மிக்க கீர்த்தி கொண்ட தமிழன்' எனக் குறிப்பிட்டு,

"ஆட்பணிதல் கடவுளொரு வனுக்கே யன்றி
அத்தனை பேரும் சமமே ஆகும் என்னும்
மாட்சி மிகும் எண்ணத்தால் நாட்டில் மீண்டும்
மலர்வித்த வீரர்க்குள் வீரன் கண்டீர்"[2]

எனப் போற்றிருப்பதைக் காண்கிறோம். தன்னிறைவுத் திட்டச் சிறப்பிதழாகிய ஒன்பதாவது இதழுக்குச் சிறப்பளிக்கும் வகையில் பாவேந்தரின் 'தொழிலே வாழி நீ' கவிதை எடுத்து வெளியிடப் பட்டுள்ளது. தொழிலைத் தம் தடந்தோளில் தழுவியோர் வறுமையைக் கடந்தனர். எங்கள் அழகிய திருநாட்டில்,

"சாதியும் மடமும் தடை செயும் வலிவிலே
மோது தோள் அனைத்தும் மொய்த்தன ஒன்றாய்
.........................................................
அலுப்பிலோம் இருப்புக் கலப்பை துடைத்தோம்
மலையெனச் செந்நெல் வழங்க எம் தோளில் வா"![3]

---

2. தமிழரசு மலர் 11: இதழ் 20, ப.1
3. ஷெ மலர் 11: இதழ் 21, ப.2

என வேண்டும் வரிகளைக் கொண்ட இக்கவிதை, வறுமையும் பிணியும் ஒழிந்திட வந்த திட்டத்திற்குப் பொருத்தமாக வாய்த்துள்ளது. 'கண்ணதாசன் கவிதை'களிலிருந்து, பண்டித நேரு நினைவாகச் 'சமத்துவச் சித்தன்' கவிதையும், நவம்பர் இரண்டாவது இதழில் கவிஞரின் நினைவாக அவரது 'மங்கலம் பேசுக' கவிதையும் எடுத்து வெளியிடப்பட்டுள்ளன. பாரதியார் நூற்றாண்டுச் சிறப்பிதழ் 'பாவலர் பாட்டினில் பாரதிக் கவிஞர்' பகுதியில், பாரதிதாசன், வாணிதாசன், கண்ணதாசன், நாமக்கல் கவிஞர், கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை ஆகியோர் கவிதைகள் உள்ளன.

சிந்தையும் செயலும் ஒன்றாகிப் பாடிய பாரதியைப் பற்றி

"செந்தமிழ் நாட்டினிற் பற்றும்—அதன்
சீருக்கு நல்லதோர் தொண்டும்
நிந்தை இலாதவை அன்றோ—எந்த
நேரமும் பாரதி நெஞ்சம்
கந்தையை எண்ணுவதில்லை—கையிற்
காசை நினைப்பதும் இல்லை
செந்தமிழ் வாழிய; வாழி—நல்ல
செந்தமிழ் நாடென்று வாழ்ந்தார்".[4]

எனப் பாவேந்தர், தம் கவிதையில் போற்றியுள்ளார். பேரறிஞர் அண்ணாவின் நினைவுநாளை யொட்டி வாணிதாசனின் 'சொல்லழகர் அண்ணா' கவிதை எடுத்து வெளியிடப்பட்டுள்ளது.

தமிழரசு இதழுக்கென எழுதப்பட்டுள்ள கவிதைகளில் 'தமிழன்னை பிள்ளைத்தமிழ்' குறிப்பிடத்தக்கதாகும். பெரியார் ஈ.வே.ரா. நூற்றாண்டு விழாவின் போது பெரியார் பரணி வெளியிட்டவர்கள், உலகத்தமிழ் மாநாட்டின் நினைவாக இப்பிள்ளைத் தமிழை வெளியிட்டுள்ளனர். நூற்றுக்கு மேற்பட்ட பிள்ளைத் தமிழ் மலர்கள் குவிந்துள்ள தமிழ் மொழியில் 'தமிழ்த் தாய்'க்குப் பிள்ளைத் தமிழ் இல்லாத குறையைப் போக்க ஒவ்வொரு பருவத்திற்கும் ஒரு பாடலாகக் கவிஞர்கள் முடியரசன், தமிழ்ப் பித்தன், சௌந்தரா கைலாசம், நாரா. நாச்சியப்பன், மதுரைவாணன், தமிழ் நேசன், புலமைப் பித்தன், நெல்லை ஆ. கணபதி, தமிழ் முடி, இளஞ்செழின் ஆகியோர் பத்துப்பாடல்களை அளித்

4. தமிழரசு மலர் 12; இதழ் 11, ப. 9

துள்ளனர். தமிழின் பண்டைப்பெருமைகளையும், புதுமைச்சிறப்பு களையும் இப்பிள்ளைத் தமிழில் கவிஞர்கள் எடுத்துக் காட்டியுள் ளனர். 'பிள்ளைத் தமிழ்' முயற்சி தமிழரசு இதழுக்குப் பெருமை சேர்த்துள்ளது.

பாரதிதாசன் நினைவுநாளை யொட்டி டாக்டர் கே.எம்.ஏ. வகாப் (பாட்டுப்பாட்டன்), மதிவண்ணன் (புரட்சியில் பூத்த புலவன்) ஆகியோரும், 'தமிழுக்கெனத் தனியே ஒரு பல்கலைக் கழகம்' வந்ததைப் பாராட்டிப் புத்தனேரி சுப்பிரமணியமும், பாரதி நூற்றாண்டு விழாவினை வாழ்த்திக் கவிஞர் சுத்தானந் தரும் எழுதியுள்ள கவிதைகளும், குழந்தைப் பாடல்களாக மூன்று கவிதைகளும் வெளியாகியுள்ளன.

தமிழக அரசு நடத்திய விழாக்களுக்கும் நாட்டு நிகழ்ச்சிகளுக் கும் பொருத்தமாக இக்கவிதைகள் வெளியிடப்பட்டுள்ளன.

தமிழரசு இதழில் நூல் நயம் என்னும் தலைப்பில் நூல் மதிப்பீடு செய்துள்ள பகுதி பன்னிரண்டு இதழ்களில் இடம் பெற்றுள்ளது. 1981-ஆம் ஆண்டில் 60 நூல்கள் மதிப்பீடு செய்யப் பட்டுள்ளன. அரசியல் கட்சி தொடர்பற்ற நூல்கள் மட்டுமே மதிப்புரைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன. ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டினையொட்டி உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் வெளியிட்ட தமிழர் நாட்டு விளையாட்டுகள், தமிழர் ஆடைகள், தமிழர் கண்ட மனம், தமிழர் பழக்க வழக்கங்களும் நம்பிக்கையும் தமிழக நாட்டுப்புறக் கலைகள்—என்னும் நூல்களின் மதிப்பீடு குறிப்பிடத்தக்கது. 'தமிழக நாட்டுப்புறக்கலைகள்' நூல்' தமிழ ரசில்'தொடர் கட்டுரையாக வெளிவந்துள்ளது. 'தமிழரசில்' மதிப்பீடு செய்யப்பட்டுள்ள நூல்களை உரைநடை (34), கவிதை (12), புதினம் (2), அறிவியல் (5)குழந்தை இலக்கியம் (6), மலர் (11) எனப் பிரிக்கலாம். தமிழக அரசின் சிறப்பிலக்கிய மொழி பெயர்ப்புத் திட்டத்தின்படி வெளிவந்த சோவியத் நாட்டுக் கவிஞர் களின் ஆங்கிலக் கவிதைகளின் தமிழாக்கமும் (சோவியத் கவிஞர் நூற்றுவர்), பாரதியார் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தளித்த கட்டுரை, கவிதைகளின் தொகுப்பு நூலும் இவற்றுள் அடங்கும்.

செய்திகளையும், கொள்கைகளையும் பரப்புதற்காகவும், அரசின் ஒருங்கிணைந்த திட்டங்களை மக்களுக்கு அறிவிப்பதற் காகவும் எழுதப்பட்டுள்ள கட்டுரைகள்—துறைத் தலைவர்கள், மருத்துவம், வேளாண்மை முதலிய துறைகளின் வல்லுநர்கள்,

செய்தி—மக்கள் தொடர்பு அலுவலர்கள் ஆகியோர் எழுதியுள்ள சிறப்புக் கட்டுரைகள் ஆகியவை தமிழ் உரைநடைக்கு வளம் சேர்ப்பனவாக உள்ளன. சட்டமன்றத்தில் தமிழக ஆளுநரின் உரை, தமிழக முதல்வரின் உரைகள், 'வளரும் தமிழகம்' என்னும் தலைப்பில் தமிழக அமைச்சர்கள் வானொலியில் ஆற்றியுள்ள உரைகள்—மொழிபெயர்ப்பு என்று எண்ணத் தோன்றாத வகையில் தமிழிலேயே சிந்தித்து எழுதியுள்ள வளமான நடையில் அமைந்துள்ளன. இவற்றில் பயன்பட்டுள்ள கலைச் சொற்கள் நயமும் பொருத்தமும் உடையனவாய் மொழிநடையின் தரத்தை உயர்த்தியுள்ளன. 'எந்தத் துறைக்கு எந்தச் சொல் தேவையா யினும் அந்தச் சொல்லை அழகு தமிழிலேயே அமைக்க முடியும்' என்பதையும் உறுதிப்படுத்துகின்றன. 'தமிழரசின் எழுத்துக் களாலும், உலகத்தமிழ் மாநாட்டில் அறிஞர்கள் ஆற்றிய சொற் பொழிவுகளாலும் புலப்படும் தமிழின் வளமும், வளர்ச்சியும் கோ. முத்துப்பிள்ளை அவர்கள் தம் கட்டுரையில் குறித்துள்ள வாறு,[5] "தமிழில் முடியுமா" என்று கேட்பவர்கள் இனிமேல் தமிழ் நாட்டில் யாருமே இல்லை என்ற முடிவுக்கு வரச் செய் கின்றன.

## செய்யவேண்டுவன

1. 1981-ஆம் ஆண்டிற்கு முன்பும் வந்துள்ள தமிழரசு இதழ் களின் தொகுதிகளைக் கொண்டு அரசின் பணிகளால் ஏற்பட் டுள்ள தமிழ் வளர்ச்சியையும், தமிழ் பெற்றுள்ள வளத்தையும் ஆய்தல் பயனுள்ளதாக இருக்கும்.

2. 1947-ஆம் ஆண்டுக்குப் பின்னர் அரசுத் துறையினர் வெளியிட்டுள்ள இதழ்கள், பிற வெளியீடுகள், தமிழ் வளர்ச்சி இயக்கம் மற்றும் தமிழக அரசின் சார்பு நிறுவனங்களாக உள்ள உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம், தமிழ்ப் பழங்கலை இயக்கம் முதலியனவற்றின் பணிகள் ஆகியவற்றையும் ஆய்ந்து மதிப்பிடுதல் தமிழ் வளர்ச்சியை அறிய உதவும்.

3. 'சென்னைச் செய்தி', 'தமிழரசு' ஆகிய இதழ்களில் வெளி யாகியுள்ள கட்டுரைகளால் புலப்படும் 1947-1890 ஆம் ஆண்டு களுக்கு இடைப்பட்ட காலத் தமிழகத்தின் பல்துறை வளர்ச்சி

5. தமிழரசு மலர் 11; இதழ் 17, ப. 27

வரலாறு தகவல் நூலாகப் பயன்படும் வகையில் எழுதப்படுதல் வேண்டும்.

## முடிவுரை

''தமிழுணர்ச்சியை — தமிழ்க் கவிதையை — தமிழிசையை வளர்த்தவரின் தொண்டினைப் பாராட்டித் தமிழறிந்தோர் அனைவரும் மனங்குளிரும் வகையில் தமிழக அரசு செயல்படும்''[6] எனும், தமிழகச் செய்தி–அறநிலையத் துறையின் மாண்புமிகு அமைச்சர் திரு இராம. வீரப்பன் அவர்களின் அறிவிப்பு செயல் வடிவம் பெற்றிருப்பதை 1981-ஆம் ஆண்டின் தமிழரசு இதழ்கள் உறுதிப்படுத்துகின்றன. தமிழக அரசு மேற்கொண்டுள்ள பொருளாதார, சமூக மேம்பாடு தொடர்பான நடவடிக்கைகள் ஆகியவற்றைவிடத் தமிழ் வளர்ச்சி, தமிழ் வளர்ச்சிக்குத் தொண்டாற்றியவர்களுக்குப் பாராட்டு முதலிய நிகழ்ச்சிகளுக்குச் சிறப்பிடம் அளித்துத் தமிழரசு தமிழ்ப்பணி யாற்றியிருப்பதைக் காண்கிறோம்.

''என் போன்ற வெளி மாநிலத்தில் வாழ்கின்ற தமிழர்களுக்கு உலகத் தமிழ் மாநாட்டுச் செய்திகளை நேரில் கண்டது போன்று படம் பிடித்துக் காட்டியது தமிழரசு''[7] என்று 'பார்த்தோம்— படித்தோம்' பகுதிக்கு வந்துள்ள பாராட்டுக் கடிதங்கள் மக்களின் பொதுக் கருத்தெனவே கொள்ளலாம்.

இந்தியாவிலுள்ள மாநில அரசுகள் வெளியிடும் வெளியீடுகளில் மிகச் சிறந்ததாகத் தமிழரசு விளங்குகின்றது என்பதில் ஐயமில்லை.

---

6. தமிழரசு மலர் 12; இதழ் 6, ப. 4
7. ஷெ மலர் 11; இதழ் 18, ப 18

# 30. தமிழ் பற்றிய ஆங்கில இதழ்கள்

ர. விஜயலட்சுமி

தமிழ் பற்றி மட்டுமே எழுதி வரும் ஆங்கில இதழ்கள் எண்ணிக்கையில் குறைவாகவே இருப்பினும், திராவிட மொழிகள், ஏனைய இந்திய மொழிகள், ஆப்பிரிக்க மொழிகள் ஆகியவற்றுடன் தமிழ்மொழி பற்றியும் கட்டுரைகள் தாங்கிவரும் இதழ்கள் பல இன்று உண்டு.

தமிழைத் தொடர்பு மொழியாகக் கொண்டு, தமிழ்பற்றி எழுதுகின்ற இதழ்கள் பல இன்று நம்மிடையே பெருகிவருகின்றன. இவற்றின் வாயிலாகத் தமிழ் தொடர்பான செய்திகளை தமிழ் பேசும் நல்லுலகம் பெற வாய்ப்புக் கிட்டுகிறது. தமிழறிந்தோர் அறிவு வேட்கையை இவ்விதழ்கள் ஓரளவு தணிக்கின்றன. தமிழ் பற்றி மட்டுமே எழுதி வரும் ஆங்கில இதழ்கள் எண்ணிக்கையில் குறைவாகவே இருப்பினும், திராவிட மொழிகள், ஆப்பிரிக்க மொழிகள், ஏனைய இந்திய மொழிகள் இவைகளுடன் தமிழ் மொழி பற்றியும் கட்டுரைகள் தாங்கி வரும் இதழ்கள் பல இன்றுண்டு. இவை நம் நாட்டின் பல பகுதிகளிலுமுள்ள ஆய்வு நிறுவனங்கள், இலக்கியப் பண்பாட்டு நிறுவனங்கள், பல்கலைக் கழகங்கள் முதலியவற்றிலிருந்து வெளிவருகின்றன. இவை தவிர, தமிழைப் பல்கலைக் கழகங்களில் ஒரு பாடமாகக் கற்றுக் கொடுக்கும் வெளிநாட்டுப் பல்கலைக் கழகங்களிலிருந்தும், ஆய்வு நிறுவனங்களிலிருந்தும் வெளிவரும் ஆங்கில இதழ்கள் தமிழ் தொடர்பான கட்டுரைகளை வெளியிடுகின்றன.

இந்நாட்டிலிருந்து வெளிவரும் இதழ்கள் பல ஆங்கிலம் தமிழ் என்ற இரு மொழிகளையும் (bi-lingual) தொடர்பு மொழியாகக் கொண்டிருக்கின்றன. இவற்றுள் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவை,

Journal of Tamil Studies, Indian Literature, Annuals of Oriental Research, Pulamai (புலமை), Saiva Siddhānta என்பனவாகும். இவற்றுடன் மொழியியல் ஆய்வினை வெளியிடுபவைகளாக Journal of Dravidian Studies, Linguistics, Pakha Sanjam ஆகியவை வெளிவருகின்றன.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனத்திலிருந்து வெளிவருகின்ற இதழாகிய Journal of Tamil Studies வருடம் இருமுறை தரமான ஆய்வுக் கட்டுரைகளைத் தாங்கி வெளிவருகின்றது. ஒப்பியல் இலக்கியம், பண்பாடு, நாட்டுப்புறவியல், வரலாறு, மொழியியல், இலக்கியம், இசை, நடனம், சிற்பம், ஓவியம், மொழிபெயர்ப்பியல், சுவடியியல் ஆகிய பொருள்கள் பற்றி ஆழ்ந்த புலமையுள்ள அறிவுடையோரால் இவ்விதழில் கட்டுரைகள் எழுதப்பட்டு வருகின்றன. எண்பத்தோராம் ஆண்டு வெளியான இரு இதழ்களிலும் மொத்தம் பதினாறு ஆங்கிலக் கட்டுரைகள் இடம் பெறுகின்றன.[1] இக்கட்டுரைகளைப் பின்வருமாறு வகைப்படுத்தி நோக்கலாம்.

## வரலாறு, கல்வெட்டியல்

1. Tamil in Ancient Jaffna and Vallipuram Gold Plate — A. Veluppillai (19, June 1981, pp. 1-14)
2. Temple lands and Society—A. Swaminathan (20, Dec. 1981, pp. 18—26)
3. Age of Tolkappiyam—S. M. Kandaswamy, (20, Dec. 1981, pp. 37—72)
4. Rise and Fall of Korkai—T. Sundararaj (19, June 1981, pp. 55—63)

பழைய யாழ்ப்பாணத்தில் தமிழர்களும் வல்லிபுரம் என்ற ஊரில் கிடைத்த பொன்னேடும் குறித்து ஆய்கின்ற இக்கட்டுரையின் முற்பகுதியில் ஆசிரியர் யாழ்ப்பாண அரசின் வரலாறுபற்றி விளக்கமாகக் கூறுகிறார். மகாவம்சச் செய்திகளின்படி அசோகனின் புதல்வியான சங்கமித்தை யாழ்ப்பாணத் துறைமுகத்தில் இறங்கிய போது அன்றைய மன்னனான தேவநம்பியதீசன் அவளை வரவேற்கச் சென்றதாகத் தெரிகிறது. அத்துடன் தேவ

1. இரண்டு கட்டுரைகள் தமிழிலுள்ளன.

நம்பியதீசனின் நல்லெண்ணத்தூதர்கள் (Emissaries)யாழ்ப்பாணத் துறைமுகம் வழியாகவே மகத நாட்டை அடைந்தனர். இத்தகைய செய்திகளிலிருந்து முற்காலத்திலிருந்தே யாழ்ப்பாணத்தில் பௌத்த செல்வாக்கு இருந்தமை புலப்படுகிறது என ஆசிரியர் கருதுகிறார். யாழ்ப்பாண அரசின் இத்தகைய சமயப் பின்னணியில் வல்லிபுரப் பொன்னேட்டிலுள்ள பின்வரும் வரிகளை ஆய்கின்றார்.

1. Sidha Maharaja Vahayaba rajehi amete
2. Isigiriyә Nakadeva biyameni
3. Badakara atenchi Pujaguha—Tisa
4. Vihara Karite

இந்நான்கு அடிகள் கூறும் செய்திகள் குறித்து ஈழத்தில் புகழ் பெற்ற வரலாற்று ஆசிரியரான செனரத் பரணவிதான சில கருத்துகளை நாற்பது ஆண்டுகளுக்கு முன்னர் வெளியிட்டிருந்தார். அக்கருத்துகளை முடிந்த முடிவாக ஏற்றுக் கொள்ளாத இக்கட்டுரையாசிரியர் தம் எண்ணங்களை இக் கட்டுரை வாயிலாகப் புலப்படுத்துகிறார்.

பரணவிதான இந்தப் பொன்னேட்டிலுள்ள மொழி பழைய சிங்களமென்றும், அதனால் அன்று சிங்களமே யாழ்ப்பாணத்து மொழியாக இருந்ததாகவும் கூறுகிறார். இதை மறுத்து முன்னரே எழுதிய குணசிங்கத்தின் எண்ணங்களையும் எடுததுக்காட்டி ஆசிரியர் தம் முடிவுகளை வெளியிடுகின்றார். வரலாற்றில், ஆட்சி மொழியினின்றும் மக்கள் பேச்சுமொழி வேறுபட்டு இருந்த நிலைகளையும், மன்னர் அறிக்கைகள் எப்போதுமே மக்கள் பேச்சுமொழியாக மட்டுமே இருந்ததில்லை என்பதையும் எடுத்துக்காட்டி, பரணவிதான கொண்ட கருத்தை மீண்டும் சிந்திக்கத் தூண்டுகின்றார். யாழ்ப்பாண அரசின் தோற்றம், வளர்ச்சி பற்றிய ஆய்வில் இக்கருத்து சிந்தனையைத் தூண்டுவதாயமைகிறது.

சோழர் காலத்தை அடிப்படையாகக் கொண்டு கோவில் நிலங்களும் சமுதாயமும் குறித்து எழுதப்பட்ட கட்டுரையில், இக் காலப் பகுதியில் கோவில் நிலங்கள் வெவ்வேறு தொழில் புரிவோருக்கு எவ்விதம் ஒதுக்கப்பட்டிருந்தது என்பது விரிவாக எடுத்துக்காட்டப் பட்டுள்ளது. சுவையான சில செய்திகளை சான்றுகளுடன் எடுத்துக் கொடுத்திருக்கின்றார் ஆசிரியர்,

தொல்காப்பியர் கால ஆய்வு பற்றிய கட்டுரை இதுவரை தொல்காப்பியருக்குக் கொடுக்கப்பட்ட காலப் பகுதிகளின் விவரங்களை அளிப்பதுடன் தொடங்குகிறது. அடுத்து, தொல்காப்பியத்துக்கும் அதற்கெழுந்த உரைகட்குமிடையே உள்ள கால வேறுபாடு எடுத்துக்காட்டப்பட்டுள்ளது. அதைத் தொடர்ந்து கி.மு. 200—கி.பி. 200-க்கும் இடைப்பட்ட காலத்திலெழுந்த தமிழ் பிராமிக் கல்வெட்டுகட்கும் தொல்காப்பியத்துக்கும் மொழியியல் அடிப்படையிலமைந்த தொடர்புகள் குறித்து ஒப்பியல் ஆய்வு அமைகிறது. நாட்டியசாத்திரத்திற்கும், தொல்காப்பிய மெய்ப்பாட்டியலுக்கும் ஒப்பீடு காட்டி, முன்னதன் செல்வாக்கு பின்னதிலுள்ளது என்ற கொள்கையுடையோர் கருத்து தவறானது என்கிறார். யாஸ்கரின் நிருக்தத்தினையும் தொல்காப்பியர் உவமவியலையும் ஒப்புநோக்கி, இரண்டிலும் பொதுவான பண்புகள் இருப்பினும் உவமை என்ற கோட்பாட்டை நோக்கின் இரு நூல்களும் ஒன்றுடன் ஒன்று தொடர்பில்லாது வளர்ந்திருக்கிறது என்கிறார். உவமை, தொல்காப்பியம், நாட்டியசாத்திரம் இரண்டிலும் வளர்ந்த நிலையை எடுத்துக்காட்டியுள்ளார். தொல்காப்பியத்தில் காணப்படும் தமிழிற்குப் புறம்பான செய்திகளையும், சூதர், வேதத் திருமணங்கள், பெண் தவிர்த்துப் போர்க்கேகல் எனும் போர்விதி, சதி, திரிவர்க்கம் முதலியவற்றையும், பௌத்தம் பற்றிக் கூறாமை, ஜைன மத செல்வாக்கு ஆகியவற்றையும் விளக்குகின்றார். ஆய்வு முடிவாகத் தொல்காப்பியத்தின் பெரும் பகுதி (90%) கி மு 300-க்கு முன்னர் எழுதப்பட்டதென்கின்றார். ஆசிரியரே கட்டுரை முடிவில் கூறுவது போல் மேலும் விரிவான ஆய்வுகள் இதுபற்றி செய்தாலன்றி இதை முடிந்த முடிவாகத் துணியலாகாது எனினும், இன்று பழையகாலம், இடைக்காலம் ஆகிய இருபகுதிகளிலும் ஆய்வு நிகழ்த்தும் தமிழிலக்கிய ஆய்வாளர்களில், சீர்மிகு ஆய்வு நோக்குக் கொண்டு தம்கட்டுரைகளை எழுதும் ஒரு சிலரில் ஆசிரியரும் ஒருவர் எனலாம்.

கொற்கையின் எழுச்சியும் வீழ்ச்சியும் பற்றிய கட்டுரையில் கொற்கைத் துறைமுகத்தின் வரலாற்று வளர்ச்சியினைக் காண்கின்றோம். கொற்கை என்றசொல்லை கொல்+கை எனப்பிரித்து, கொல்லும் கையெனப் பொருள் கொண்டு, அது புலவன் சொல்லாட்சியில் இராணுவ முகாமையோ, அரசாங்கத் தலைமையலுவலகத்தையோ குறிக்கும் (ப.55) என்கிறார். ஆய்வு நோக்கிப் எழுதப்பட்ட இக்கட்டுரை படிப்போர்க்குப் பயனுடைத்து.

## II. இலக்கியம்

1. A Motif of Messenger in the Mullaittiṇai—Alexander M. Dubianski (19, June, 1981, pp. 15-18)
2. Viṟali—S. B. Kersenboom - Story (19, June 1981, pp. 19-41)
3. Pāvāṇar A Pioneer in Tamilology — R. Madhivanam (19, June, 1981, pp. 73-80)
4. Kallāṭam Reconsidered—S. Bhaskaran, N. Subramanian (19, June, 1981, pp. 81-86)
5. Viral - Kodumudi S. Shanmugam (20, Dec. 1981, pp. 15-17)
6. Kannadasan Placed—V. Murugan (20, Dec. 1981, pp. 27-35)
7. Technique of narration in Dr. Mu. Va's Novels, Deva Sangeetham (20, Dec. 1981, pp. 83-99)

இலக்கியம் தொடர்பான கட்டுரைகளுள் முல்லைத்திணையில் தூது பற்றிய கட்டுரையும் விறலி பற்றிய கட்டுரையும் பழந்தமிழி லக்கியங்களுடன் தொடர்பானவை. முல்லைப்பாட்டில் தலைவனைப் பிரிந்தேங்கும் தலைவி எவ்வாறு அவன் வரவு குறித்த செய்திகளை அறியப் பிறரின் உதவியை நாடுகிறாள் எனத் தொடங்கும் கட்டுரை, பழைய பாடல்களில் தூதுப் பொருள் பற்றி விரிவாக ஆய்கிறது. இயற்கையைத் தூதாகக் கருதும் பண்பு தொடக்க நிலையில் நாட்டுப் புறப் பாடல்களில் காணப்பட்டுப் பின்னர் புலமை மிக்க பாடல்களில் கையாளப்பட்டதென ஆசிரியர் எடுத்துக் காட்டுகிறார்.

விறலியைப் பற்றிய கட்டுரையில் ஆசிரியரின் முதன்மையான நோக்கம் தமிழ் பாணர் பாட்டுக்கள் எழுந்த காலப்பகுதியில் (Bardic Period) தேவ அடியாள்கள் (Devadasi) பற்றிய செய்திகள் காணப்படுகின்றனவா என நோக்குவதேயாகும். விறலி, பாடினி, என்ற கலையுடன் தொடர்பான பாத்திரங்களின் அரசனைப் புகழும் பணி, உலகியல் நிலையில் மட்டுமன்றி தெய்வீக பண்புடனும் நெருங்கியிருந்திருக்கின்றது என்பதை எடுத்துக் காட்டுகிறார் ஆசிரியர். இதற்கு அடிப்படை நூல்களாகத் தொல்காப்பியப் பொருளதிகாரத்தையும், புறப்பொருள்வெண்பாமாலையினையும்

கொள்கிறார். ஆய்வு நோக்குடன் விரிவாக எழுதப்பட்டுள்ளதாக இக்கட்டுரை அமையினும், எடுத்துக்காட்டுகள் சிலவற்றை ஆசிரியர் தம் கருத்துக்கேற்ப வளைக்க முயல்கிறார் என்பது வெளிப்படையாகத் தெரிகிறது. எடுத்துக்காட்டாக, மழைக்கண் என்பதை (ப.21) விளக்கும் போது, மழை பெய்யச் செய்யும் வல்லமையுள்ள (Who have Power Ove rain[2]) என்று கொண்டு விறலிக்குக் கற்புத் தன்மை ஏற்றுகின்றார். கருமை, குளிர்மை, இளமை என்ற பொருள்களில் அழகுடைய மகளிர் அனைவருக்குமே இந்த மழைக்கண் என்ற அடைமொழி சங்கப் பாடல்களில் கூறப் பட்டுள்ளது. குறிப்பாக அதைக் கற்புடன் இணைப்பதனால், வலிந்து கொள்வதாகாதோ என்ற ஐயத்தைப் படிப்போர் மனதில் உண்டாக்குகிறது.

கல்லாடத்தைப் பற்றிய கட்டுரை, இந்நூல் பற்றிய பல சிறப்புச் செய்திகளை எடுத்தளிக்கிறது. திருக்கோவையாரைப் பார்த்து இந்நூல் எழுதப்பட்டிருக்குமோ என்ற ஐயத்தை இங்கு எழுப்புகிறார்கள் ஆசிரியர்கள். காதலுக்கும் ஒழுக்கத்திற்குமுள்ள தொடர்பு சிறப்பாக இங்கு எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

பழந்தமிழ் இலக்கியங்களில் விரல் என்ற அளவு குறித்து ஆயும் கட்டுரையில் ஆசிரியர் கோல் என்பது எண்பத்து நாலு சென்டிமீட்டர் (ஏறத்தாழ முப்பத்து மூன்று அங்குலம்) எனவும் இருபத்து நான்கு விரல்கள் ஒரு கோல் எனவும் விளக்கி விரல் என்பது $1\frac{3}{8}$ அங்குலமாக வேண்டும் என எடுத்துக் காட்டி யுள்ளார்கள்.

நம் காலத்து வாழ்ந்து மறைந்த பாவாணர், மு. வரத ராசனார், கண்ணதாசன் ஆகியோர் பற்றியும் மூன்று கட்டுரைகள் இங்குண்டு.

பாவாணர் தனித் தமிழ் இயக்கத்தை ஊக்குவித்து வளர்த்த தன்மையையும், மு. வரதராசனாரின் எடுத்துரைக்கும் பான் மையையும் (technique of narration), கண்ணதாசன் தமிழ் இலக்கியத்தில் வகிக்கும் இடத்தையும், இக்கட்டுரைகள் முறையே எடுத்தியம்புகின்றன. கண்ணதாசன் நிலை பற்றிய ஆய்வில் ஆசிரியர் கூறும் "இலக்கியப் படைப்பாளன் தனிப்பட்ட

2. This Epithet Occurs in the Texts used for this paper with chaste woman "who have power over rain".

வாழ்க்கைச் செய்திகள், அவன் இலக்கியத்தை மதிப்பிடும் அளவு கோலாக மாறினால், இலக்கியத்திறனாய்வு தன் தரத்தினின்றும் வேறுபட்டுவிடும் என்பதும், கம்பனை திருவள்ளுவரை எப்படிக் கம்பராமாயணம், திருக்குறள் என்ற நூல்களூடாக மதிப்பீடு செய்கிறோமோ அதுபோல் கண்ணதாசனையும் அவர் நூல்கள் மூலம் மதிப்பீடு செய்ய வேண்டும்'' என்று கூறும் கருத்தும் மிக வரவேற்கத்தக்கது.

## III. இலக்கணம்

1. Personal Names in Tamil—S. Manoharan (19, June, 1981 pp. 42-54)
2. Remarks on Nested case Relations and subject in 'Tamil' H. S. Ananthanarāyana (19, June, 1981, pp. 64-72)
3. Tolkāppiyam Collatikāram—Kamil V. Zvelabil (20, Dec, 1981, pp. 5-14)

## IV. பொது

1. A Lost Treatise on Toxicology—M. Arunachalam, (20, Dec. 1981, pp. 1-4)
2. Transliteration of Tamil for Cataloguing — Meera Bai Dawson (20, Dec. 1981, pp. 72—82).

நூற்பெயர்ப் பட்டியலுக்கு எழுத்துப் பெயர்ப்புச் செய்தல் (Transliteration Tamil for Cataloguing) என்ற கட்டுரை ஆய்வாளர்க்குப் பயனுடைத்து. குறிப்பாக, கட்டுரையின் இறுதியிலுள்ள பட்டியல் (Bibliography) பயனுள்ள செய்திகளை அளிக்கிறது.

மொழியியல் துறையில் பெருந்தொண்டாற்றி நிற்கும் ஓர் இதழ் (International Journal of Dravidian Linguistics (IJDL) திராவிட மொழிகளின் மொழியியல் அமைப்புப் பற்றி ஆய்வுக் கட்டுரைகளைத் தாங்கி வரும் இந்த ஆங்கில இதழ் ஆண்டுக்கு இருமுறை சனவரி, சூன் மாதங்களில் வெளியாகின்றது. இது தரமான, பயனுள்ள கட்டுரைகள் பலவற்றைத் தாங்கி வருகின்றது. ஜேம்ஸ் டபிள்யூ கயர் என்பவரும் எஸ். சுசிந்திரராஜா என்பவரும் கூட்டாகச் சேர்ந்து Some Aspects of the Jaffna

Tamil Verbal system[3] (யாழ்ப்பாணத் தமிழ் வினை அமைப்பு முறையில் சில பண்புகள்) என்ற தலைப்பில் எழுதிய ஒரு கட்டுரை இங்கு இடம் பெற்றுள்ளது.

'தமிழ் நாட்டில் பேசப்படும் தமிழ் மொழியினின்றும், அதன் பேச்சு வழக்கினின்றும் பெருமளவு வேறுபட்டிருக்கும் யாழ்ப்பாணத் தமிழை முதன் முதல் கேட்கும் இந்தியருக்கு இது தமிழினின்றும் பிறிதான இன்னொரு திராவிட மொழியோ என எண்ணத் தோன்றும்' எனக் கட்டுரையைத் தொடங்குகின்றனர் ஆசிரியர்கள். இத்தன்மைக்குக் காரணமான இம்மொழியின் வினையமைப்பு முறைகளின் சில பண்புகளை ஆய்வதாக இக் கட்டுரை அமைகின்றது.

யாழ்ப்பாணத் தமிழிலுள்ள ஒரு சுவையான பண்பாக, பேசுபவரே பெறும் நிலையிலிருக்கும் போது 'தா' 'குடு' என்ற இரு வினையுருவங்களையும் பயன்படுத்துகிறார்கள் என எடுத்துக் காட்டியுள்ளனர். அதே போல் உரையாடுதல், பேசுதல் என்பவற்றைக் குறிக்கும் 'கதை' என்ற வினையடியும், வெளியில் புறப்படுவதைக் குறிக்கும் 'வெளிக்கிடு' என்ற வினையடியும் இப் பகுதிப் பேச்சு வழக்கில் குறிப்பிடத்தக்கவை என்கிறார்கள்.

யாழ்ப்பாணத் தமிழிலுள்ள படர்க்கை, மரியாதை உருவமான 'அவாவா', 'வந்தாவா' இந்தியத் தமிழிலுள்ள 'அவளா', 'வந்தாளா' என்ற உருவங்கட்குப் பதிலாக வழங்கப்படுகிறது என்பதையும், அவளா, வந்தாளா என்பவை யாழ்ப்பாணத் தமிழில் மரியாதைக் குறைவான உருவங்கள் என்றும் எடுத்துக் காட்டுகின்றார்கள்.

மேலும் இப்பகுதித் தமிழிலுள்ள inflectional negative (நெகிழா எதிர்மறை) infinitive forms (முற்றாவினை உருவங்கள்) pronominal forms (இடப்பெயர் உருவங்கள்) முதலியவற்றின் சிறப்புப் பண்புகளை விரிவாக ஆய்ந்து, யாழ்ப்பாணத் தமிழிலுள்ள வினை உருவ அமைப்பு முறைகள், ஏனைய கிளை மொழிகளினின்றும் வேறுபட்டு இதற்கு ஒரு தனித்த பண்பை அளிக்கின்றன எனக் கூறுகின்றனர் ஆசிரியர்கள்.

Saiva Siddhanta (சைவசித்தாந்தம்) என்ற காலாண்டு ஆங்கில இதழ் சைவசித்தாந்தம் பற்றிய பல சிறு கட்டுரைகளைத்

---

3. International Journal of Dravidian Lingustics, Vol. x Number 2: June, 1981 pp 370 ff.

தாங்கி வருகின்றது. எண்பத்தோராம் ஆண்டு இதழ்களில் பி. நடராஜனின் திருமந்திர மொழிபெயர்ப்பும், எஸ். சுவாமி நாதனின் திருவிளையாடல் புராணக் கதைகளும் தொடர்ந்து வெளிவந்துள்ளன. இவ்இதழ்களில் ஒருசிலரின் கட்டுரைகள் மட்டுமே மீண்டும் மீண்டும் தோன்றியிருப்பது வியப்பிற்குரியதே!

சாகித்திய அகடெமியினால் (Sahitya Academy) மாதமிரு முறை வெளியிடப்படும் (Indian Literature) என்ற இதழில் பல்வேறு இந்திய மொழிகளிலுமுள்ள இலக்கியம் தொடர்பான கதைகள், கவிதைகள், கட்டுரைகள் முதலியவை இடம் பெறு கின்றன. இது முற்றிலும் ஆய்வு நோக்குடன் வெளிவரும் இதழெனக் கூற முடியாது. எண்பத்தோராம் ஆண்டு இதழ்களுள் நவம்பர்-டிசம்பர் வெளி வந்த பல்வேறு மொழிகளுடைய இலக்கிய வளர்ச்சியின் மதிப்பீடு இடம் பெறுகின்றது. Tamil the Progressive Path (தமிழ்—வளர்ச்சிப் பாதை) என்ற தலைப்பில் ஒரு கட்டுரை அமைகிறது.[4] இக்கட்டுரை எண்பதாம் ஆண்டில் தமிழ் இலக்கியத்தின் பல்வேறு பகுதிகளிலும் ஏற்பட்ட வளர்ச்சி நிலையை மதிப்பிடுகிறது. அவ்வாண்டில் பரிசு பெற்ற நூல்கள்' சிறுகதைகள், கவிதைகள், நாவல்கள் நாடகங்கள் முதலியன பற்றிய விவரங்களையும் அவற்றின் பண்புகளையும் எடுத்துக் காட்டி நிற்கிறது இக்கட்டுரை.

தமிழ் தொடர்பான பல்வேறு துறைகளிலும் எழுதப்படும் ஆய்வுக் கட்டுரைகளைத் தன்னகத்தே தாங்கி வரும் அரை யாண்டு இதழ் புலமை. தமிழ், ஆங்கிலம் ஆகிய இருமொழியையும் தொடர்பு மொழியாகக் கொண்டு வரும் கட்டுரைகள் இங்கு இடம் பெறினும். பெரும்பாலும் தமிழிலேயே கட்டுரைகள் எழுதப்படுகின்றன. எண்பத்தோராம் ஆண்டு வெளியான இரண்டு இதழ்களிலும் இரு கட்டுரைகள் மட்டுமே ஆங்கிலத்தில் எழுதப்பட்டுள்ளன.[5]

---

4. S. V. Subramanian, Tamil—The Progressive Path, **Indian Literature,** Vol. xxiv No. 6 (Delhi 1981)
5. K. Meenakshi, Historical Necessity for writing Grammars : A Case Study of Aṣṭadhyāyi and Tolkappiyam, **Pulamai,** Vol. 7 No. 1, (Madras, 1981) pp. 96—112. Pon. Kothandaraman, word classes in Tamil and Telugu, **Pulamai** Vol. 7 No. 2 (Madras 1981) pp. 148-164.

இவ்விரண்டனுள் Historical Necessity for Writing Grammars: A Case Study of Aṣṭadhyāyi and Tolkāppiyam என்ற கட்டுரை இருநூல்களினதும் ஒப்பீட்டு நோக்காக அமைக்கப்பட்டிருக்கிறது. இரு நூல்களையும் உள் நுழைந்து நோக்கி, அங்குள்ள சான்றுகளையும் துணை கொண்டிருந்தால் மேலும் பயனுள்ள ஆய்வாக இருந்திருக்கும்.

'Word Classes in Tamil and Telugu' என்ற கட்டுரை தமிழிலும் தெலுங்கிலுமுள்ள சொற் பாகுபாடுகளை, noun, verb, adjective, adverb, postposition, Conjunction, interjection, clitics, intensifier, Residual items என்ற பத்துத் தலைப்புகளில் விரிவாக ஆய்வதாகக் காணப்படுகிறது.

சென்னைப் பல்கலைக் கழகத்திலிருந்து வெளிவரும் **Annuals of Oriental Research** எனும் இதழ் தமிழ், தெலுங்கு, கன்னடம், ஹிந்தி, ஆங்கிலம் என்ற மொழிகளில் எழுதப்படும் ஆய்வுக் கட்டுரைகள் இடம் பெறுகின்றன. எண்பத்தோராம் ஆண்டு இதழில் எழுத்துச் சீர்திருத்தத்தின் தொடக்கம், அதன் தேவை, அதன் பயன் பற்றிய ஒரு கட்டுரை ஆங்கிலத்தில் இடம் பெற்றுள்ளது.[6]

வெளி நாட்டில் வெளியாகும் ஆங்கில இதழ்களில் Bulletin of the School of Oriental and African Studies, American Oriental Society Indo Iranian Journal, Language முதலியவை தமிழ் பற்றிய ஆய்வுக் கட்டுரைகளைத் தாங்கி வருகின்றன.[7] எண்பத்தோராம் ஆண்டில் இந்த இதழ்களில் தமிழ் பற்றிய கட்டுரைகள் எதுவும் சிறப்பாக இடம் பெறவில்லை. தமிழிலுள்ள சில நூல் மதிப்பீடுகளும் இவ்விதழ்களில் இடம் பெறுகின்றன. இவ்வழி பல நாட்டவரும் தமிழ் பற்றி அறியப் பெருவாய்ப்புக் கிட்டுகிறது. அத்துடன் மேற்கூறிய இதழ்களில் வெளியாகும் கட்டுரைகள் எண்ணிக்கையில் குறைவாக இருந்தாலும் பெரும்பாலும் ஆய்வுக் கண்ணோட்டத்துடன் எழுதப்படுவதால் தமிழ் வளர்ச்சியில் குறிப்பிடத்தக்க பங்கை வகிக்கின்றன.

---

6. Pon. Kothandaraman, Script Reform in Tamil, **Annals of Oriental Research**, (University of Madras, 1981) pp 1-8.

7. இவ்விதழ்களின் விவரங்கள் பின்னிணைப்பில் கொடுக்கப்பட்டுள்ளன.

# பின்னிணைப்பு

தமிழ் பற்றிய கட்டுரைகள் வெளியாகும் ஆங்கில இதழ்களும், ஆங்கிலத்தையும் தொடர்பு மொழியாகக் கொண்டுள்ள ஏனைய இதழ்களும்:-

1. American Oriental Society, (Quarterly, English) Williams Hall, CU. University of Pennsylvania, Philadelphia, Pa, 19174.
2. Annals of Oriental Research, University of Madras, India.
3. Bulletin of the School of Oriental and African Studies, (half yearly English) Published by the School of Oriental and African Studies, University of London, England.
4. Indian Journal of Applied Linguistics (half yearly, English), An International Journal from Bahri Publications, 57, Sant Nagar, P. O. Box, 7023, New Delhi. 110065, India.
5. Indian Linguistics (Quarterly, English), Journal of the Linguistic Society of India, Deccan College, Poona.
6. Indian Literature (Quarterly, English), Sahitya Academi, New Delhi, India.
7. Indo - Iranian Journal (Quarterly, English), D. Reidal Publishing Co. Dordrecht, Holland.
8. International Journal of Dravidian Linguistics, Dravidian Linguistics Association, Kerala Panini Buildings, Vanchiyoor, Trivandrum, Kerala, India.
9. Journal of Educational Research and Extension (Quarterly English), Published by Sri Ramakrishna Mission Vidyalaya, Coimbatore, India.
10. Journal of the Oriental Institute (English), Oriental Institute, M. S. University of Baroda, Baroda, India.

11. Journal of Tamil Studies (half yearly, Bilingual), International Institute of Tamil Studies, Taramani, Madras, India.

12. Language (Quarterly, English), Journal of the Linguistic Society of America, University Press, INC Baltimore MD 21202, U.S.A.

13. Pulamai (Half yearly, Bilingual), Madras, India.

14. Saiva Siddhanta (Quarterly, English), The Saiva Siddhanta Maha Samajam, Madras, India.

15. Zeitschrift der Deutschen Morgenlandischen Gesellochaft (German) Franz Sleiner Virlag, GMBH, Wies Baden West Germany.

# 31. பட்டிமன்றம்

பூ. சொல்விளங்கும் பெருமாள்

இலக்கியத் தலைப்புகளை விடப் பொதுத் தலைப்புகளே இவ்வாண்டு பட்டிமன்றங்களில் பெரிதும் பேசப்பட்டுள்ளன. சாதிச் சங்கங்கள், நண்பர் குழுக்கள், சிறு தெய்வ வழிபாட்டுக் கொடைகள், திருவிழாக்கள் ஆகியவற்றில் அண்மைக் காலத்தில் பட்டிமன்றங்கள் பெருகியுள்ளன. இலக்கியத்திற்கெனத் தோன்றிய பட்டிமன்றம் இவ்வாண்டில் அரசியல், சமயம் ஆகியவற்றிற்கும் பயன்பெற்றிருக்கிறது. பட்டிமன்றங்களின் வளர்ச்சியாக வழக்காடு மன்றங்கள் தோன்றிக் காலூன்றி வருகின்றன.

## முன்னுரை

80 இல் பட்டிமன்றம் எனும் முந்தைய கட்டுரையில் பட்டிமன்றத்தைப் பற்றியதொரு விரிவான முன்னுரை தரப்பெற்றிருந்தது. இக்கட்டுரையில் 81இல் பட்டிமன்றம் பற்றி ஆராயப் பெறுகிறது.

இவ்வாண்டில் பட்டிமன்றங்களிலும் இலக்கியத் தலைப்புகளைவிடப் பொதுத்தலைப்புகளே பெரிதும் பேசப் பெற்றுள்ளன. ஆண்டுதோறும் வழக்கமாக நடைபெறும் கம்பன் கழகம், திருவள்ளுவர் மன்றம், சமயச் சார்பான நிறுவனங்களில் மாற்றம் ஏதுமின்றி முந்தைய ஆண்டுகளைப் போன்று தொடர்புடைய இலக்கியங்களே பட்டிமன்ற ஆய்வுப் பொருளாக அமைந்தன.

சாதிச் சங்கங்கள், நண்பர் குழுக்கள், சிறுதெய்வ வழிபாட்டுக் கொடைகள், திருவிழாக்கள் போன்றவற்றில் அண்மைக் காலத்தில் பட்டிமன்றங்கள் பெருகியுள்ளன. கூட்டம் கூட்டவேண்டும் என்பதற்காகவும், வந்த கூட்டத்தை விடாது நிறுத்த வேண்டும்

என்பதற்காகவும், நற்செய்திகளையும் பயன்மிகு செய்திகளையும் தூவவேண்டும் எனும் நோக்கம் கருதியும் பல்வேறு நிறுவனங்கள் இப்போது பட்டிமன்றங்களைப்பயன்படுத்துகின்றன.

கரக ஆட்டங்களில் உள்ள கிராமீயப் போக்கை வெறுத்தும், 'உயர் ரசனை' கருதியும் பட்டிமன்றத்தை ஆதரிப்போரும் உண்டு; தெருக்கூத்து, நாடகம் போன்றவற்றின் சுவைமீறிய ஆபாசமும், காலத்திற்கொவ்வா பேச்சு முறையும் சிறிது கற்றவர்களைக்கூடப் பட்டிமன்றத்தின் பால் தள்ளிற்று எனலாம்.

'பண்டை முறையை மாற்றிப் பட்டிமன்றத்தை எதற்காக வைக்கிறீர்கள்' என்று சிலரிடம் கேட்டபோது பெரும்பாலோர் கூறிய ஒருமித்த கருத்து பட்டிமன்றம் மக்களை ஈர்க்கிறது; சுவையாக இருக்கிறது; மேடையில் கேட்ட செய்திகளை மக்கள் பல மாதங்கள் விவாதித்து மகிழ்கின்றனர்; ஒரு முறை கேட்டவர் மறுமுறை கேட்க விழைகிறார். விழா நடத்துவோருக்குப் பட்டிமன்றம் எனில் எளிதில் பணவசூலாகிறது.

## கட்சித் தலைவர்கள்

அரசியல் தலைவர்களைப் பற்றியும் கட்சித் தலைவர்களைப் பற்றியும் நினைவுகூரும் விழாக்களில் சிலர் தனிச் சொற்பொழிவாற்றுவது வழக்கமாக இருந்து வந்த நிலை மாறி, அத்தலைவர்களின் பெரும்புகழுக்குக் காரணம் யாது என்று நுணுக்கமான வேறுபாடுடைய இரு தலைப்புகளில் ஆராய்வது இன்று பழக்கமாக வந்துள்ளது.

(அ) பேரறிஞர் அண்ணாவின் பெரும்புகழுக்குக் காரணம் அவரது இலக்கியத்தொண்டா சமுதாயத்தொண்டா? (ஆ) கட்சிப் பணியா ஆட்சிப் பணியா? (இ) பேச்சாற்றலா எழுத்தாற்றலா? என்பன போன்ற பலதலைப்புகளில் பட்டிமன்றங்கள் நடந்தன.

அண்மைக் காலத்தில், பெருந்தலைவர் காமராசரின் பெரும்புகழுக்குக் காரணம் (அ) கட்சிப்பணியா ஆட்சிப் பணியா? (ஆ) ஈரநெஞ்சமா வீரநெஞ்சமா? (இ) கல்விப்பணியா சமூகப் பணியா? என்பன போன்ற பல தலைப்புகளில் பட்டிமன்றங்கள் நடந்து வருகின்றன.

## காமராசர்

1981இல் பெருந்தலைவர் காமராசரின் பெயரில் நடந்த பட்டிமன்றங்கள் பல எனலாம். அவருடன் நெருங்கிப் பழகியவர்கள்

கூறிய நெஞ்சை நெகிழ்விக்கும் நிகழ்ச்சிகள், நூல்களாகவும், இதழ்களில் கட்டுரைகளாகவும், கவிதைகளாகவும் வெளிவந்த செய்திகள், அவர் கூறியவை போன்ற பலவற்றை அவரவர் கோணத்தில் சுவையுடன் கூறும் போது கேட்போர் நெகிழ்வதைக் காண்கிறோம். எழுத்திலும் பேச்சிலும் பெருந்தலைவரைப் பற்றி வந்த செய்திகளில் உண்மையைக் கூட்டியோ குறைத்தோ அமைத்திருக்கக் கூடும். ஆயினும் அவரது புகழுக்கு இழுக்கு வராதவகையிலும் நற்பெயர் கூடும் வகையிலும் தான் எவரும் பேசுவர்.

கூட்டத்திலிருப்பவர்கள் பெரும்புகழ் கொண்ட தலைவர்களைப் பற்றிப் பேசுபவர்கள், 'அவர் நல்லவர், வல்லவர், ஆட்சித் திறனுடையவர்' என்றெல்லாம் வெற்றெனத் தொடுக்கும் போக்கினைக் கண்டிருக்கிறோம். நல்லவர் என்பதற்கு எடுத்துக்காட்டாக ஓரிரு நிகழ்ச்சிகளும், வல்லவர் என்பதனை நிறுவச் சில நிகழ்ச்சிகளும் கூறுவதையே மக்கள் விரும்புகின்றனர்.

'வடசென்னையில் ஒரு பள்ளிக்கூடத்தைத் திறக்கச் செல்கிறார் காமராசர்; அப்பள்ளியின் ஆரம்பகால வளர்ச்சியில் பெரும் பங்கு கொண்ட பொதுவுடைமைக் கட்சித்தலைவர் தோழர் ஜீவாவின் வீடு அண்மையில் இருப்பதை அறிகிறார். வீட்டைக் கண்டுபிடித்து எந்த வித ஆடம்பர ஆரவாரமுமின்றி ஜீவாவின் சிறு வீட்டினுள் குனிந்து செல்கிறார் முதலமைச்சர் காமராசர். இடுப்பில் துண்டு ஒன்றை மட்டும் கட்டிக் கொண்டு, சாய்வு நாற்காலியில் அமர்ந்திருந்த தோழர் ஜீவா வந்தவரைக் கவனிக்கவில்லை; முதலமைச்சரே தம் குடிசை நோக்கிக் குனிந்து வந்துள்ள எளிமையைக் கண்ட தோழர் ஜீவாவின் துணைவியார் உடனே எழுகிறார். தலையைத் திருப்பி நோக்கிய ஜீவா வந்தவரைக் கண்டு ஆச்சரியம் துரத்த அப்படியே எழுகிறார். "உங்கள் இடத்திலே பள்ளிக்கூடம் திறக்கும் போது நீங்கள் இருக்கவேண்டும்; புறப்படுங்கள்", என்கிறார் தலைவர். "உடனே எப்படிப் புறப்பட முடியும்? வேட்டி தான் காய்கிறதே", என்று சிரித்துக் கொண்டே கூறுகிறார் அந்தத் துண்டு கட்டி நிற்கும் தோழர். எதற்கும் கலங்காத காமராசரின் கண்கள் கசிகின்றன; 'ஒரு வீடு தர ஏற்பாடு செய்யவா?' என்கிறார் பெருந்தலைவர்; பெருந்தன்மையோடு மறுக்கிறார் பொதுவுடைமைத் தலைவர்; பின்னர் விழாவிற்கு இருவரும் செல்கிறார்கள். தோழர் ஜீவாவின் மனைவிக்கு ஆசிரியர் பணி அளிக்கப் பெறுகிறது. இந்த மனிதாபிமான நிகழ்ச்சி மனதிலிருந்து நீங்காததால்தான் ஜீவாவின் உயிர் நீங்கப்

போகும் இறுதிக் காலக் கட்டத்தில் ''இதனைக் காமராஜருக்குத் தெரிவித்து விடுங்கள்'', என்று கூறிவிட்டு மறைந்தார். கட்சிப் பகையும் காழ்ப்பும் இன்றித் தலைவர் மனிதாபிமானத்தோடு நடந்து கொள்பவர் என்று காட்ட இதுபோல எத்தனையோ நிகழ்ச்சிகளைக் காட்டலாம்.

தாம்பரம் பள்ளியில் நடந்த விழாவில் இராசேசுவரி எனும் ஒன்பது வயது சிறுமி 'இலவசக் கல்வி மட்டும் போதாது; உணவும் கொடுக்க வேண்டும்' என்று கேட்டாள். யார் சொல் கிறார் என்பதைப் பற்றிக் கவலைப்படாமல் எதைச் சொல்கிறார் என்று சிந்திக்கும் பெருந்தலைவர், குழந்தைதானே கூறுகிறது என்று விட்டுவிடாமல் அச்செய்தியின் உண்மையை உணர்ந்த வராய் மதிய உணவுத் திட்டத்தைக் கொண்டு வந்தார்.

ஆர்தர்ஹோப் கவர்னராக இருந்த போது பெருந்தலைவரின் அரசியல் குருவான சத்தியமூர்த்தி சென்னை மேயராக இருந்தார். பூண்டி புழலேரி நீர்த்தேக்கம் திறந்து வைக்கப் பெற்ற விழாவில் இருவரும் கலந்துகொள்ள வேண்டிய கட்டாயமேற்பட்டது. ஆனால் ஆங்கிலேயர் கலந்துகொள்ளும் எந்த நிகழ்ச்சியிலும் காங் கிரஸ்காரர்கள் கலந்து கொள்ளக்கூடாது எனும் பேரவைத் தீர் மானத்திற்கு அது எதிரானது. இதை நினைவுபடுத்தி, பெருந் தலைவர் காமராஜர் தனது அரசியல் குருவிடமே மன்னிப்புக் கடிதம் வாங்கினார் குருவிடமும் கண்டிப்பாக இருந்த சீடரின் செயலை வியக்கிறோம் இருவரிடையே இருந்த அன்பும் மதிப்பும் இந்நிகழ்ச்சியால் விளங்குகிறது.

சென்னைப் பல்கலைக்கழகத் துணைவேந்தர் பதவி திரு சத்தியமூர்த்தியைத் தேடி வந்தபோது, காமராசரின் ஆலோ சனையின் பேரில் அப்பதவியை நிராகரிக்கிறார். காமராசர் மீது அவருக்கிருந்த அளவு கடந்த நம்பிக்கையை இது காட்டுகிறது.

ஒன்பது மாதம் சிறையிலிருந்து விட்டுவந்த காமராசர் விருது நகர் நகரவைத் தலைவர் பதவி நாற்காலியில் ஒன்பது நிமிடம் மட்டும் இருந்து விட்டு இராசினாமா செய்கிறார்.

'கே. பிளான்' என்று எல்லோரும் போற்றிய அவரது திட்டத் தில் முதலமைச்சர் பதவியைத் தாமே துறந்து செல்கிறார்.

இவ்வாறெல்லாம் உள்ள கருத்துகளை எதிரும் புதிருமாகக் கேட்கும்போது பொதுமக்களின் உள்ளத்தில் அவை ஆழப்பதி கின்றன. முன்னே தெரிந்தவர்களுக்கு நினைவூட்டலாகவும், தெரியாதவர்களுக்குப் புதுச் செய்தியாகவும் இவை இனிக்கின்றன.

## அண்ணா

பேரறிஞர் அண்ணா அவர்களின் சொல்லாற்றலை விதந்து பேசுவோர் சட்ட சபையிலும் பிற மேடைகளிலும் அவர் நாவு நளினமாக விளையாடிய இடங்களை எடுத்தோதுவார்கள். ஆங்கிலத்திலும் தமிழிலும் அவருக்குள்ள ஆழமான அறிவையும் கவின்மிகு சொல்லாட்சியையும் போற்றிப் பேசுவர்.

'எதிர்க்கட்சியில் இருக்கும் உங்கள் நண்பர் வினாயகம் உங்களிடம் அடிக்கடி கேள்வி கேட்கிறாரே' என்று கேட்டபோது அண்ணா, 'அவரது பெயரிலேயே வினா இருக்கிறதல்லவா? அதனால்தான் அடிக்கடி வினா எழுப்புகிறார்' என்றார்.

சட்டசபையில் ஒருவர் "your days are numbered" என்று கூறிமுடிக்குமுன் முகம் மாறாமலேயே அண்ணா, "but my steps are measured" என்று கூறினார்.

"பேருந்துகளில், 'யாகாவா ராயினும் நா காக்க; காவாக்கால் சோ காப்பர் சொல்லிழுக்குப் பட்டு' என்ற குறள் எழுதியிருக் கிறதே, இக்குறள் ஓட்டுநருக்கா-நடத்துநருக்கா-இல்லை-பொது மக்களுக்கா?" என்று ஒருவர் கிண்டலாகக் கேட்டார். அதற்கு அண்ணா "'நாக்கு உள்ள அத்தனை பேருக்கும்" என்றார்.

மணிக்கணக்கில் பேசும் ஆற்றலுடைய அண்ணா சில சொற் களில் பேசிய மறக்க முடியாத பொழிவுகளும் உண்டு 'தம்பி வா; தலைமை ஏற்க வா" என்ற வரிகள் காலத்திற்கும் சூழ்நிலைக்கும் ஏற்பச் செறிவும் ஆற்றலும் நிறைந்து உணர்ச்சிகளைக் கொப் பளிக்கச் செய்தன.

சிலர் அண்ணாவை, அவரது வழியிலேயே மடக்கப் பார்த் தார்கள். 'உங்கள் தலைவர் தந்தை பெரியார் பிள்ளையார் சிலையை உடைக்கிறாரே; உங்கள்கருத்தும் கொள்கையும் என்ன?' என்று கேட்டபோது அண்ணா சென்னார்: "நாங்கள் சிலையையும் உடைக்கமாட்டோம், சிலைக்குத் தேங்காயும் உடைக்கமாட் டோம்" என்றார்.

ஆங்கிலத்திலுள்ள Because எனும் சொல் மூன்றுமுறை வரும் படியாக ஒரு சொற்றொடர் கூறுங்கள் என்று ஒருவர் கேட்டதும் சிறிதும் தயக்கமின்றி, அண்ணா, "No sentence ends with because because because is a Conjunction" என்று கூறினார்,

ஆகவே, இயல் இசை நாடகம் எனும் முத்தமிழுக்கு அப்பால் நான்காம் தமிழாக 'அண்ணா தமிழ்' என்று அன்பர்கள் பாராட்டிக் கூறிவருகின்றனர்.

அண்ணாவின் சிறுகதைகள், நாவல்கள், நாடகங்கள், கட்டுரைகள், திரைக்கதைகள், பேச்சுகள் ஆகியவற்றை எல்லாம் பொதுமக்கள் படித்திருக்கவோ அறிந்திருக்கவோ வாய்ப்பில்லை' அவர்கள் இருக்கும் இடம் நாடிச்சென்று, இச்செய்திகள் போய் விழுகின்றன, எனில் இப்பட்டிமன்றங்கள் பாராட்டுக்குரியன என்றே கூறவேண்டும்.

ரங்கூன் ராதாவில் வரும் கதாநாயகி, கணவனுக்கு மகிழ்ச்சி பொங்க, ''நான் மூன்று மாதம் முழுகாமல் இருக்கிறேன்'' என்று எழுதுகிறார். அதற்குக் கணவனிடமிருந்து வரும் கனல் தெறிக்கும் வரிகளிவை; ''நான் உன்னைத் தலை முழுகிவிட்டேன்.''

பண்டை இலக்கியங்களிலுள்ள ஏற்றமிகு வரிகள் சில, அண்ணாவின் நா பட்டுப் பட்டை தீட்டப்பெற்றன எனலாம். 'தம்பியுடையான் படையஞ்சான்' எனும் கம்பராமாயண வரியும் 'இப்படை தோற்கின் எப்படை வெல்லும்' எனும் மனோன்மணீய வரியும் அண்ணாவின் நாவசைத்த எழுத்துக்கோடுகள் என்று இன்றைக்கும் சிலர் எண்ணிக்கொண்டிருக்கின்றனர்.

'எதையும் தாங்கும் இதயம் வேண்டும்,' 'மறப்போம் மன்னிப் போம்', 'மாற்றான் தோட்டத்து மல்லிகைக்கும் மணமுண்டு' 'எங்கிருந்தாலும் வாழ்க' போன்ற நல்ல தொடர்கள் அவரை என்றும் நினைவூட்டிக் கொண்டிருப்பவை.

'வேலை போச்சு' எனும் சிறுகதையில் பொருத்தமில்லாத் திருமணம் நிகழ இருப்பதைத் தவிர்க்க, அண்ணா கையாளும் நகைச்சுவை நினைந்து நினைந்து இன்புறத் தக்கதாகும். திருமண அழைப்பிதழில் 'மணியரசு' என்றிருக்க வேண்டிய மணமகனின் பெயர் 'பிணியரசு' என்று அச்சாகியிருக்கிறது. காசுமாலை-காமாலை என்றும், விவாகம்-விவாதம் என்றும், சாமி காவடி யானந்தர்-காமி சாவடியானந்தர் என்றும் அச்சாகி இருப்பது மட்டுமின்றி அத்தவறான அச்சுப் பிழைகள் எழுத்தில் பிழைகளே யன்றிச் செயலில் பிழையன்று என்று அவர் விளக்கும் முறை நகைச் சுவை பயப்பன.

மேடையில் பேசுவோர் இச்செய்தியை ஏற்கும் வகையில் எடுத்துரைக்கும்போது கேட்போர் காதுகளையும் நெஞ்சினையும் குளிர்வித்தும் மகிழ்வித்தும் பதிகின்றன. அதுவே இக்கலையின் வெற்றி எனலாம்.

1981 இல் அண்ணாவின் பேரால் நடந்த பட்டிமன்றங்கள் முந்தைய ஆண்டுகளைவிட எண்ணிக்கையில் குறைவே. எனினும் அவருடைய துறைகள், கலை, எழுத்து, அரசியல், பேச்சு எனப் பலதரப் பட்டதாக இருப்பதாலும் அவற்றில் எல்லாம் அவர் ஆழங் கால் பட்டு நிற்பதாலும் கேட்போருக்கு அண்ணாவைப் பற்றிப் பல செய்திகள் கிடைக்கும்; பேசுவோருக்கும் செய்திகள் பல உண்டு.

(அ) அண்ணாவின் விஞ்சு புகழுக்குக் காரணம் அவரது சொல்லாற்றலா எழுத்தாற்றலா? (ஆ) அரசியல்பணியா சமுதாயப் பணியா? (இ) அண்ணாவின் முழுத்திறமை வெளிப்படுவது அவரது சிறுகதைகளிலா புதினங்களிலா? போன்ற பல தலைப்புகள் பட்டிமன்றங்களில் ஆராயப் பெற்றன. மேற்சொன்ன கருத்துகள் போன்ற பல செய்திகள் மக்கள் மன்றத்தில் பரப்பப் பெற்றன.

## பாரதியார்

இன்று நூற்றாண்டு கொண்டாடப் பெறும் மகாகவி பாரதி யாரை 1981 இல் பட்டிமன்ற மேடைகளைப் பிடித்துக் கொண்ட தனித்தலைவர் எனலாம். இலக்கியமன்றங்களும், அரசும், மாவட்டத்தலைநகர், பஞ்சாயத்துகள், நகராட்சிகள் போன்ற வைகளும், கல்வி நிறுவனங்களும் பாரதிவிழா கொண்டாடின. நாள், வார, திங்கள், ஆண்டு இதழ்கள் ஒன்றுவிடாமல் பாரதிக்கு நல்லஞ்சலி செலுத்து முகத்தான் சிறப்பிதழ்கள் வெளியிட்டன. பாரதியாரில் பேசுவதற்குத் தலைப்பு இல்லை எனும் அளவிற்குப் பட்டிமன்றங்கள் பாரதி பேரில் நடத்தப்பெற்றன.

(அ) பாரதியின் புகழுக்குக் காரணம் தெய்வீகப்பாடல்களா? தேசியப்பாடல்களா? (ஆ) காலவெள்ளத்தை எதிர்த்து நிற்கும் ஆற்றல் பாரதியின் தேசியப் பாடல்களுக்கு உண்டா இல்லையா? (இ) பாரதியின் எண்ணங்கள் ஈடேறாமல் இருப்பதற்குக் காரணம் மக்களா அரசா? (ஈ) பாரதியின் பாடல்களில் விஞ்சி நிற்பது புரட்சியா மறுமலர்ச்சியா? (உ) தேசியமா தெய்வீகமா? (ஊ) அரசியல் உணர்வா சமுதாய உணர்வா? (எ) பாரதியின் தொழில் கவிதையா

நாட்டுக் குழைத்தலா? (ஏ) முப்பாடலுள் சுவைமிக்கது எப்பாடல்? பாஞ்சாலி சபதம், குயில்பாட்டு, கண்ணன் பாட்டு (ஐ) பாரதியின் புரட்சி எங்கே தோன்றுகிறது? கவிதைகளிலா கட்டுரைகளிலா?

எத்தனை கோணங்களிலும் பாரதியைப் பார்க்கும் அளவுக்கு விரிவும் ஆழமும் இருக்கின்ற ஏதுவால் பாரதியைக் கேட்கச் சலிக்காது. ஒரு பட்டிமன்றத்தில் சொன்ன கருத்துகளே சில இடங்களில் மீண்டும் வந்து விழும் என்பது உண்மையே. எனினும் தேவை கருதிச் சொல்வதும் தவறாகாது. பாரதியின் வாழ்க்கை நிகழ்ச்சிகளோடும் இந்திய விடுதலை வாழ்வின் நிகழ்ச்சிகளோடும் பின்னிப் பிணைந்தவை பாரதியின் எழுத்துகள் என்கின்ற காரணத்தால் பாரதியின் கவிதைச் செய்திகளையும், கட்டுரைச் செய்திகளையும் வாழ்வியல் நிகழ்ச்சிகளோடு இணைத்துக் கூறும் போது மக்கள் நெகிழ்ந்து விடுகின்றனர்.

முப்பத்தொன்பது ஆண்டுகளே உயிரோடு வாழ்ந்த பாரதியின் வாழ்வில் வறுமை, விடுதலை வெறி, கவிதை வெறி, சமுதாய முற்போக்கு எண்ணம், பெண்விடுதலை, வாழ்வில் செம்மை போன்றவை பின்னிப் பிணைந்து வேரூன்றி நின்றன; அவனது பட்டறிவுகளும் அவற்றின் ஆழத்தினின்றெழுந்த கவிதை வரிகளும் எல்லோருடைய இதயத்தையும் ஈர்த்தன.

'தாய்நாடு' எனும் பழகி வந்த சொல்லை மாற்றித் 'தந்தையர் நாடு', என்று பாரதி கூறினார். அன்பு வழியில் அதிக மாகப் போய்விட்டதால் அன்னியர் எளிதில் புகுந்து இன்னல் புரியத்தொடங்கிவிட்டனர்; வீரமும் வேகமும் வேண்டும் என்பதைக் காட்டவே பாரதி 'தந்தையர் நாடு' என்று குறிப்பிடுகின்றார்.

அதுமட்டுமன்று; "இந்த நாடு எனக்கு உரிமைப்பட்ட நாடு; எந்தையும் தாயும் மகிழ்ந்து குலாவி இருந்ததும் இந்நாடே" என்று கூறிப் பாட்டன் சொத்திலும் அப்பன் சொத்திலும் இருக்கின்ற உரிமையை ஒருவன் விட்டுக் கொடுத்தான் என்றால், 'தாய் பிறன் கைப்பட சகிப்பவன் மகன் கொல்' என்று கேட்டு இந்தியனின் மானத்தைத் தூண்டுகிறார்.

'தாய் நாடு' எனும் சொல்லைக் கூட இரண்டாகப் பிரித்து "பெற்ற தாயும் பிறந்த பொன் நாடும் நற்றவ வானினும் நனி சிறந்தவே" என்று கூறி ஒருவனது பிறப்பும் வளர்ப்பும் நாட்டைச் சார்ந்தே இருக்கிறது என்று சுட்டிக்காட்டுகிறார்; உணர்ச்சியை ஊட்டுகிறார்: உறங்கிக்கிடந்த சமுதாயத்திற்குத் தம் பலத்தை உணர வைக்கிறார்,

நாட்டினைச் சாதாரண மண்ணும் மரமும் கடலும் மலையும் நிறைந்த உயிரற்ற பொருளாகக் கருதிடவில்லை பாரதி. வணங்குதற்கும் தொழுவதற்கும் உரிய தெய்வத்தன்மை கொண்ட தேவியாக, சக்தியாக, அன்னையாகக் கண்டவன் பாரதி. தேசப் பற்றையும் விடுதலை உணர்வையும், சைவத்தைப் போல் வைணவத்தைப் போல் ஒரு சமயமாக ஆக்கிக் காட்டியவன் பாரதி. ஆகவேதான் 'தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா' என்றும், 'வந்தே மாதரம் என்போம் எங்கள் மாநிலத் தாயை வணங்குதும் என்போம்' என்றும், 'சுதந்திரதேவி நின்னைத் தொழுதிடல் மறக்கிலேனே' என்றும் நாட்டினைப் பக்தி செய்தற்குரிய ஒன்றாக ஆக்கி அப்பற்றினை ஒரு சமயமாகவும் ஆக்கிக்காட்டுகிறான் பாரதி.

பெண் விடுதலையைப் பற்றிக் கவிதையாகவும் கட்டுரைகளாகவும் பாரதி எழுதியவை ஏராளம். விதவைகள் மறுமணம் தொடர்பாகத் தாம் கொண்ட கருத்துக்கு மாறாக எழுதியவர் காந்தியடிகளேயாயினும் சிறிதும் தயக்கமின்றி, பெண் விதவைகளைக் குறைக்கக் கூறுகிறார். 'பெண் விதவைகளைக் குறைக்க வழி கேட்டால் ஸ்ரீமான் காந்தி புருஷ விதவைகளை அதிகமாக்க வழி கூறுகிறார்' என்று எழுதியவன் பாரதி.

பண்டை நெறிமுறைகள் காலத்திற்கு ஒவ்வாதனவாக இருப்பின் அவற்றைத் தூக்கி எறிந்து ஆத்திசூடி படைக்கின்றான் பாரதி. ஊண்மிக விரும்பு, கிளை பல தாங்கேல், கீழோர்க்கு அஞ்சேல், கொடுமையை எதிர்த்து நில், போர்த்தொழில் பழகு, முனையிலே முகத்து நில், வெடிப்புறப் பேசு, தையலை உயர்வு செய் என்பன போன்ற புதுமைச் செய்திகளைப் பண்டைமுறைகளினின்றும் மாற்றிக் கூறும் புதுமையினைக் காண்கிறோம்.

சமயச் செய்திகளையும் நெறிமுறைகளையும் புரட்சிக் கண்ணோடு பார்க்கிறான் பாரதி. யோகம் யாகம் எனும் சமய நெறிகளைப் பாரதிபார்க்கும் கண்வேறு. "ஊருக்குழைத்திடல் யோகம்; புகழோங்கிடுமாறு வருந்துதல் யாகம்" என்பன பாரதியின் புரட்சிச் சிந்தனைகள்.

இறைவனிடம் தனது வறுமையும் மிடிமையும் விலகிட வேண்டும் என்று வேண்டாத பாரதி, "என்று தணியும் இந்த சுதந்திர தாகம்?—என்று தணியும் எங்கள் அடிமையில் மோகம்?" என்று நாட்டை எண்ணி நைந்து உருகி வேண்டுகிறான்.

தினந்தோறும் உப்புக்கும் சோற்றுக்கும் வேதனைப்பட்டுக் கொண்டிருந்த பாரதி, 'எத்தனை கோடி இன்பம் வைத்தாய் இறைவா' என்று பாடுகிறான். அவன்தான் தன்னை மறந்த புரட்சிக்கவி.

கண்ணனை 27 கோணங்களில் பாடியவன் இராமனைப் பெரிதும் பாடாததேன் என்று சிலர் வினவலாம். தனக்குரிய நாட்டையும் இழந்து நாடு துறந்து காட்டுக்குச் சென்றவன் இராமன். பாண்டவர்க்குரிய நாட்டை வஞ்சகமாகக் கைப்பற்றிய துரியோதனனாதியரிடமிருந்து அதனை மீட்கவும், அடிமைத் தளையிலிருந்து அவர்களை விடுவிக்கவும், பெண் விடுதலைக்காக முயன்றும் பாடுபட்டவன் இறைவன் கண்ணன். பாரதியின் குறிக்கோள் கண்ணன் வாழ்வில் நிறைவுறுகிறதேயன்றி இராமனின் வாழ்விலல்ல. ஆகவேதான் இராமனைப் பாடாது கண்ணனைப் பாடுகிறான் பாரதி இராமனைப் பாடும் போதும், அவனது அரக்கரையழித்த வீரவில் தன் நினைவுக்கு வருகிறது; காலத்தின் தேவை அது.

ஆண்டவனுக்கும் அரசருக்கும் தசாங்கம் பாடிய சிற்றிலக்கியங்கள் நிறைந்த நாட்களில் பாரத தேவிக்குத் தசாங்கம் பாடுகிறான் பாரதி.

முன்னவர்கள் பாடிய பாரதங்களில் பாராட்டப்பெறும் தருமன், பாரதியின் கையில் பெரும்பாடு படுகிறான். நாட்டை அடிமைப்படுத்தியதால், 'சீச்சீ சிறியர் செய்கை செய்தான்' என்றும், பெண்ணை அடிமைப்படுத்தியதால், 'அண்ணன் கையை எரித்திடுவோம்' என்றும் பாரதியின் கொடுஞ் சொற்கணைகளால் தாக்கப்படுகிறான் தருமன். இவ்விதம் பாரதியின் உள்ளக்கிடக்கையை வெளிக் கொணர இந்த நூற்றாண்டுப் பட்டிமன்றங்கள் உதவின எனலாம்.

பாரதி, தான் எழுதிய சிறுகதைகள் வாயிலாகச் செய்த நாட்டுத் தொண்டும் பெரிதாம். 'வீட்டு நாயும் ஓநாயும்' எனும் கதையில் 'சீ பிரஷ்டப் பயலே' என்று திட்டுவது நாயையா, இல்லை; 'நாயும் பிழைக்கும் இந்தப் பிழைப்பு', என வாழும் மனிதரையா என்று சிந்தித்துப் பார்க்க வேண்டும்.

கடைய நல்லூரில் பிராமணரல்லாதார் உண்ணும் இரண்டாம் பந்தியில் பாரதி உண்டதால் தன்னினத்தவரால் அவனுடைய குடும்பமே ஒதுக்கப்பட்டிருந்ததையும், திருவனந்தபுரத்தில் தன் உறவினர் திருமணத்தில் தான் அவமானப் பட்டதையும் பாரதி

பெரிதாக எண்ணி வருந்தியதில்லை. நாட்டுத் தொண்டிற்கும் விடுதலை வேட்கைக்கும் சமுதாயம் தந்த பரிசுகள் அவை.

'என்றெமது அன்னை கை விலங்குகள் போகும்
என்றெமதின்னல்கள் தீர்ந்து பொய்யாகும்'

என்ற ஒரே குறிக்கோளில் வாழ்ந்த புரட்சித் தீ பாரதி. ஆகவே தான் புரட்சிக் கனலூட்டிய பாரதியின் பாடல்கள் அடிமை இந்தியாவில் தடைசெய்யப்பட்டன.

பாரதியின் கனவுகள் பல; அவற்றைத் தொகுத்துப் பாடலாக்கித் தந்துள்ளான்; அக்கனவுகளுள் சில நடைமுறையாகி யுள்ளன; சிலவற்றை நடைமுறையாக்கும் முழுமுயற்சிகள் நடந்து வருகின்றன. வங்கத்து நீரை மைய நாடுகளுக்கு இழுத்தல், சிங்களப் பாலம், சந்திர மண்டலத்தியலறிதல் போன்றவற்றை இந்தியா செய்து முடிக்கும்.

மேலும் பாரதியின் பாடல்களில் சில தோன்றிய சூழ்நிலை களையும் அறிந்தோர் கூறியுள்ளனர். 1916-இல் பெருமழையிலும் சுழற்காற்றிலும் சூறையாடப்பட்ட புதுவையில் தோன்றிய கவிதைகள் 'புயற் காற்று', 'பிழைத்த தென்னந் தோப்பு', 'மழை' போன்றவையாம்.

பிஜித்தீவிலும் இலங்கையிலும் தமிழர் பட்ட வேதனையில் பிறந்தது, 'கரும்புத் தோட்டத்திலே'

கடைய நல்லூரில் பாரதியின் மரபு மீறிய நடவடிக்கையினால் தன்னினத்தவரும் பிறரும் பாரதியின் குழந்தைகளோடு விளையா டாதிருக்க தனிமைப்பட்டிருந்த குழந்தைகளுக்குப் பாடிய பாடல் 'பாப்பா பாட்டு'.

மார்கழிப் பசனைப பாடலுக்காக எழுதிப இறை வணக்கப் பாடலே 'நந்தலாலா.' 'செந்தமிழ் நாடு' எனும் பாடல் 'செந்தமிழ் இதழ் நடத்திய பாட்டுப் போட்டிக்கென எழுதிய பாடலாம்.

இந்த ஒரு நூற்றாண்டுக் காலத்திலேயே பாரதியின் வாழ் வியல் நிகழ்ச்சிகளில் பொய்யும் புனைவும் சில புகுந்துள்ளதையும் மறுத்தற்கியலாது. பாரதி ஒட்டுப் போட்ட கோட்டு அணிந் திருந்தார் எனச் சிலர் கூற, அவர் தோற்றத்திற்கு மிக முக்கியத் துவம் கொடுப்பவர்; ஆகவே அது பொய் எனச் சிலர் கூற நமக்கு ஒன்றும் புரியவில்லை.

பாரதியின் வாழ்க்கையைப் படம் பிடிக்கும் நூல்கள் சில வந்துள்ளன; அவற்றை ஆராய்ந்து பார்த்தால் ஒன்றிற்கு ஒன்று வேற்றுமை காணப்படுவதுடன் தவறான முடிவுகளுக்கும் நம்மைக் கொண்டு செல்ல முயல்கின்றன. பாரதி புதுவைக்கு வந்த காரணமும் வந்த சூழ்நிலையும் இன்னும் தெளிவாகவில்லை. பாரதி எட்டய மன்னருக்கு எழுதிய கடிதச் சூழ்நிலையும் அவ்வாறே; தர்மகர்த்தா கொள்கையைப் பற்றிப் பாரதி தம் கட்டுரைகளில் எழுதியிருக்கும் சூழ்நிலையும் தெளிவாக அறிய வேண்டிய ஒன்றாகும். லெனினின் கொள்கைகளைப் பாரதி பார்த்த விதத்தைத்தான் இன்றுள்ளோர் கூறுகிறார்களா என்பது ஐயமே.

வாஞ்சிநாதனின் செயலைப் பழித்ததும், பஞ்சாப் படுகொலையைப் பாடாததும் ஏன் என்று ஆய்வாளர்கள் கேட்கிறார்கள். ஜெர்மன் அரசனின் கதையொன்றைத் தம் கட்டுரை யொன்றில் எழுதியது போன்றே ஆஷ் கொலை செய்யப்பட்டான் என்று சிலர் கருதுவதால் அக்கொலையில் அவனுக்கும் பங்குண்டு என்பர் சிலர்.

மேற் சொன்ன செய்திகள் போன்ற பல்வேறு நிகழ்ச்சிகளில் இன்னும் வெளிச்சம் படாமலே இருப்பதையும் இப்பட்டி மன்றங்கள் காட்டி நம் சிந்தனையைச் சுறுசுறுப்பாக்கியுள்ளன எனல் வேண்டும். கவிதைகளைவிட ஏறத்தாழ மூன்று மடங்கு அதிகமாக அமைந்துள்ள பாரதியின் கட்டுரைகள் ஆராயப் பெற வில்லை என்றே கூறவேண்டும். பட்டிமன்றப் பொருளாகப் பெரும்பாலும் கவிதையே இடம் பெற்றிருக்கின்றது; பாரதியின் சமுதாய முன்னேற்றக் கருத்துகள் போன்றவை அவனது கட்டுரைகளில்தான் செறிந்து கிடக்கின்றன என்பதை மறுக்க இயலாது.

## பொதுத் தலைப்புகள்

பெரிய இலக்கியக் கழகங்கள் தவிர பிற இடங்களில் எல்லாம் பெரும்பாலும் பொதுத் தலைப்புகளே பட்டிமன்றப் பொருளாக அமைந்துள்ளன. சில ஆண்டுகளுக்கு முன்பு வரையிலும் கம்பன், இளங்கோ, திருவள்ளுவர் என்று முற்றிலும் இலக்கியத் தலைப்பு களையே ஆராய்ந்த இடங்களில் கூட அண்மைக் காலமாகப் பொதுத் தலைப்புகள் இடம் பெற்றுள்ளன. அன்றாட வாழ்க் கையை அலசும் இப்பட்டிமன்றங்கள் மக்களின் வாழ்வோடு

சேர்ந்து வாழ்வைப் பிரதிபலித்துப் பயன் நிறைந்த செய்திகளைத் தருவதால் மிக்க செல்வாக்குப் பெற்றிருக்கலாம். சில இடங்களில் இலக்கியங்களை நடைமுறை வாழ்வியலோடு இணைத்துத் தலைப்புக் கொடுத்துள்ளனர்.

(அ) குடும்பப் பொறுப்பில் பெரும்பங்கு வகிப்பவர் கணவனா? மனைவியா? (ஆ) இன்றைய உடனடித் தேவை சமுதாயச் சீர்திருத்தமா? பொருளாதாரச் சீர்திருத்தமா? (இ) மனிதகுல மேம்பாட்டிற்கு உதவுவது அருளா? பொருளா? (ஈ) நாட்டின் நலிவிற்குக் காரணம் பொது நலமின்மையா? பொருளின்மையா? (உ) அருள் வழங்குவதில் முன்னிற்பது அம்மையா அப்பனா? (ஊ)இலக்கியத்தை வளர்பவன் கலைஞனா? சுவைஞனா? (எ) உலகை மேன்மைப்படுத்துவது எது? அறிவியலா ஆன்மீகமா?(ஏ) அதிகக் குழந்தை பெறுவது நன்மையா? தீமையா? (ஐ) நூலகங்களில் படிப்போரைக் கவர்வது நூல்களின் கருத்தா சுவையா? (ஒ) பிள்ளை பெருகினால் தொல்லையே; இல்லையே? (ஓ) மனித வாழ்க்கையைச் செம்மைப் படுத்துவது இலக்கியமா சமயமா? (ஔ) குடும்பநலத் திட்டம் வெற்றி பெறுவது சட்டத்தாலா மனமாற்றத்தாலா? (ஃ) மனிதன் தவறிழைப்பது சூழ்நிலையாலா? அறிவின்மையாலா?

இவை போன்ற பல்வேறு தலைப்புகள் பட்டிமன்றத்தில் பேசப் பெற்றன.

குடும்பத்தில் பெரும்பங்கு வகிப்பவர் ஆடவர், கணவர், தந்தை என்று பேசுபவர்கள் தேனீ சேகரிப்பது போல் சேர்த்துத் தந்த கருத்துகள் பல. இதனை எதிர்த்துப் பெண்கள், மனைவி, தாய் என்று பேசுபவர்கள் மற்றவர் குறையைக் குறைத்துக் கூறாது தம் நிறையை எடுத்துக் கூறுவர். ஆடவர் அணியில் பெண்களும், பெண்களணியில் ஆடவரும் பேசினால்தான் இத் தலைப்பு சூடும் சுவையும் ஏறக் கண்டிருக்கிறேன். ஆடவரின் குறையைப் பெண்கள் எடுத்து வேகமாக வீசும்போது அதனைக் கேட்டுக் கொண்டிருக்கும் ஆடவர்கள் ஏதோ ஒரு பெண் தன்னையே நேருக்கு நேர் நின்று குறை கூறுவது போன்று அமைதியடைந்து, சுவையான செய்திகள் வரும் இடங்களிலும் உற்சாகப்படுத்தாது வாளாவிருந்து விடுகின்றனர்.

## கணவன்

தந்தையிடமிருந்துதான் குழந்தைகள் பீடி, குடி, சீட்டு போன்ற கெட்ட பழக்கங்களைப் பெறுகின்றனர் என்று எதிர்க்

கட்சியினர் குற்றம் சாட்டினர்; அதனையே சாதகமாகக் கொண்டு 'உண்மைதான், தந்தையின், கெட்ட பழக்கங்கள் குழந்தையைப் பாதிப்பதால் குழந்தை நன்முறையில் வளரும் பொறுப்பு தந்தையைச் சார்ந்து இருப்பது தெரிகிறதல்லவா' என்று மடக்கினர்.

'இவன் தந்தை என்நோற்றான்கொல் எனும் சொல்' என்பது தந்தையின் பொறுப்பைச் சுட்ட நின்ற குறட் பகுதியேயாம். 'சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே' என்ற புறவரியும் இதற்குச் சான்று. தவறு செய்தாலோ உயர்வு பெற்றாலோ ஒருவனை 'இவன் யார் மகன்?' என்றுதான் கேட்கின்றனர் எனின், ஒருவனின் இருதிறமும் தந்தையால் வருகிறதென்றே பொருளன்றோ?

'கணவனை இழந்தோர்க்குக் காட்டுவது இல்' என்னும் சொல் சமுதாயத்தில் தலைவன் பெற்றிருக்கும் உயர்விடத்தைக் காட்டுகிறது. 'விருந்து எதிர்கோடல் இழந்த' நிலை கண்ணகிக்குக் கணவனின் பிரிவால் வந்த இழிநிலையாகும்.

'அப்பனைப் போல் பிள்ளை தப்பாமல் பிறந்திருக்கிறது' எனும் பழஞ்சொல் தந்தையின் பங்குயர்வைக் குறிப்பிடும்.

குழந்தைகள் அஞ்சிப் பாடங்களைக் கற்பது தந்தையின் முன்னிலையில்தான். 'சாண் பிள்ளையானாலும் ஆண்பிள்ளை' எனும் பழமொழி வழிவழியாக ஆடவர்களுக்கு வந்த பெருமையைக் குறிக்கும்.

நாடுகாக்கும் தொழிலிலும், வீரஞ்செறிந்த விளையாட்டுக்களிலும் வீரர்கள் முன்னணியில் நின்றதால்தான் ஆடவர் எண்ணிக்கை, பெண்களை விடக் குறைந்துபோயிற்று; சில நாடுகளில் பலதாரமணம் நிலவியிருப்பது சூழ்நிலைத் தாக்கம் கருதியேயாம்.

'ஒற்றைக் குடும்பத்திலே புகழ் ஓங்க வைப்பவன் தந்தை,' பெண் கொடி படரும் கொழுநனாகவே சமுதாயம் ஆடவனைச் சிறப்பித்துக் காட்டுகிறது.

'வினையே ஆடவர்க்குயிரே, மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்' என்று பண்டை இலக்கியம் பகர்கிறது. 'தந்தையொடு கல்விபோம்' என்று பிற்கால வாழ்வை உயர்த்தும் கல்விக்குக் கருவாகக் கணவன் அமைந்து விளங்குகிறான்.

மனைவியை 'வாழ்க்கைத்துணை' என்று வள்ளுவர் கூறுவதால் முதல் யார் என்பது கூறாதே விளங்கும்.

தாலி என்னும் வேலியைப் போட்டுக் கணவன்தான் மனைவியை ஏற்றுக் கொள்கிறான்; குழந்தையின் தலைஎழுத்தும் கணவனின் முதலெழுத்தேயாகும். குடும்பத் தலைவன் யார் என்று தான் கேட்டு அரசாங்கப் பதிவுகளிலும் எழுதுகிறார்கள். 'கல்லானாலும் கணவன் புல்லானாலும் புருஷன்' எனும் மொழியும் அவனுடைய தனிமுதல் தன்மையை விளக்குகிறது.

அயன் அரி அரன் எனும் ஆக்கல் அளித்தல் அழித்தல் கடவுள் மூவரும் ஆணுருவில்தான் இருந்து உலகைப் புரக்கின்றனர். 'கொழுநற்றொழுதெழுத'லையே தலையாய கற்பெனப் போற்றப் பெறுகிறது.

இவ்வாறு சில கருத்துகளைக் கூறி ஆடவர் அணிக்குக் கருத்தணி சேர்த்து மகிழ்வர். இவ்வாறு பேசுகையில் பெண்கள் அணியை நேராகவும் மறைமுகமாகவும் சாடுவர். பெண்கள் அணியைச் சார்ந்தவர்கள் தம் கட்சியை வலியுறுத்திப் பேசியவற்றுள் சில.

## மனைவி

'ஈன்று புறந்தருதல்' என்பதில் 'புறந்தருதல்' எனும் சொல் பொருட் கருப்பம் நிறைந்தது. மகனைச் சமுதாயத்தில் ஏற்ற குடிமகனாக உள்ளத்தாலும் உடலாலும் ஆக்கித் தருதல் தாயின் கடமை.

'இல்லாளகத்திருக்க இல்லாத தொன்றில்லை' என்பது பொருள் நிலையிலும், 'புகழ்புரிந்த இல்லிலோர்க்கு' என்பது புகழ் நிலையிலும் பெண்ணே குடும்பத்திற்கு அடிப்படை என்பதைக் காட்டுகிறது.

ஆண் கற்றால் அவன் மட்டும் நன்மையடைகின்றான், பெண் கற்றால் குடும்பமே கல்வி பெறுகிறது. சிவாஜி, காந்திஜி, இராமகிருஷ்ணர் போன்றவர்களின் உயர்ந்த புகழுக்குப் பின்னால் பெண்கள் இருந்திருப்பதை மறக்க முடியாது. 'மனையறத்தின் வேர்' என்று பெரிய புராணம் மகளிரைக் குடும்பம் புகழுடன் விளங்கும்படி உயிரூட்டும் வேராகக் காட்டுகிறது.

கெட்டுத் திரியும் ஆடவனும் 'கால்கட்டு' போட்டால் திருந்தி விடுவான் எனக் கூறுவர். 'துணை' என்பது கீழானதன்று. அச்ச

மூட்டும் இருளிடத்தைத் தாண்டவேண்டின் நம்மினும் ஆற்றல், அறிவு, அனுபவம் உடையவர்களையே துணையாகக் கொள்வோம். அதுபோல வாழ்க்கைத் துணையாக வரும் பெண்கள் ஒழுக்கம் அறிவு போன்றவற்றில் உயர்ந்தவர்கள் என்பதே பொருள். ஒரு நண்பர் வீட்டிற்கு மனைவியை மட்டும் அழைத்துக் கொண்டு சென்றாலும், சொல்லும் பொழுது 'குடும்பத்துடன் வந்திருக்கிறேன்' என்றுதான் சொல்கிறோம்; இதிலிருந்து மனைவி தான் குடும்பம் என்று தெரியவருகிறது. வருமானம் எவ்வளவு வந்தாலும் ஒருவரது வீட்டில் இருக்கும் பெண் செய்யும் செலவுக்குத் தகவே குடும்பம் செல்வத்தில் மலரும். 'போகாறு அகலாக் கடை'யைப் போற்றாத பெண்ணின் குடும்பம் செல்வ நிலையிலும் புகழிலும் வீழும். வாழ்வும் வீழ்வும் வீட்டிற்கு விளக்கேற்றி வைக்க வந்த மாதரின் கையறத்தை நம்பியே இருக்கிறது. அதனால்தான் ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே என்ற மொழி பிறந்தது.

இளையான்குடி மாறநாயனாருக்கும், சிறுத்தொண்டருக்கும் பெருமை நாடி வந்ததற்குக் காரணங்கள் அவர்களுடைய மனைவியர் என்பதைப் புராணம் கூறி நிற்கிறது. பாலை ஊட்டி, ஓலை காட்டி, சூலை ஓட்டி ஆட்கொள்ளப்பட்ட தொண்டர்களின் வாழ்விற்குப் பின்னால் மாதர்கள் மறைந்து நிற்கிறார்கள் என்பதை மறந்திட இயலாது.

சீதேவி, பூதேவி, சரசுவதி, சக்தி என்றெல்லாம் ஆற்றலும் அருளும் நிறை இறைவியர்தாமே உலகை உயர்த்துகின்றனர். கங்காதேவி, வையை காவேரி என்று பூமியைப் புரக்கும் புனித ஆறுகளும் பெண் பெயராலேயே அமைந்துள்ளன. சிவராத்திரி ஒரு நாள் விழா; ஆனால் அன்னைக்கு நவராத்திரி என்று ஒன்பது நாள் விழா என்பதை மறுக்க முடியுமா?

இராமன், 'தேவியைப் பிரிந்தபின்னை திகைத்தனை போலும் செய்கை', என்று வாலியால் குற்றம் சாட்டப் பெறுகிறான். அதுவும் நியாயம் தானே.

குழந்தைக்கு நோய்வந்தால் தாய்தான் பத்தியம் இருக்கிறாள்; கணவனுக்கு என்ன கவலை. பத்துமாதம் நொந்தும், வளர்க்கும் போதும் வெந்தும் பாடுபட்ட தாயிடம் தாம் பெற்ற குழந்தையை யாருடைய குழந்தை எனக்கேட்டால் தம்பெயரைக் கூறாது தன் கணவனின் பெயரைக் கூறுகிறாளே—இது தியாகத் திருவுரு அல்லவா?

ஆடவன் கையில் பணம் வந்தால் மூன்று சீட்டுப் பிடிப்பான்; குடும்பம் குலையும். பெண் கையில் பணம் வந்தால் பாத்திரச் சீட்டும், பட்டுச் சீட்டும், நகைச் சீட்டும் பிடிக்கிறாள்; குடும்பம் உயரும், அவள் கைப்பணம் எய்ப்பில் வைப்பாகிறது.

கள்ளும் கவறும் ஆடவரைக் கெடுக்கும்; கள்ளுக் கடைகளும் சீட்டாடும் இடங்களும் யாரை நம்பித் திறக்கப்பட்டிருக்கின்றன? ஆடவர்களின் பலவீனத்தின் அடையாளச் சின்னங்களிவை; இவற்றால் வரும் கேடுகளையும் தாங்கும் சுமைதாங்கிகள் பெண்கள்.

'தாயைத் தண்ணீர்க் கரையில் பார்த்தால் பெண்ணை வீட்டில் பார்க்க வேண்டாம்'; 'தாயைப் போலப் பிள்ளை நூலைப் போலச் சீலை', 'பானை பிடித்தவள் பாக்கியசாலி' போன்ற பொன்மொழிகள் பெண் குலத்தின் பெருமை பேசுவனவாகும்.

பெற்று வளர்த்த தாயையும் தந்தையையும் மறந்து இடத்தையும் சூழலையும் துறந்து கைப்பிடித்த கணவன்பின் சென்று அவன் வீட்டிலும் ஒளி விளங்கச் செய்கிறாளே பெண்—அவ ளல்லவா தியாகத் திரு உரு. குடும்பவிளக்காகப் பிரகாசிக்கும் பெண்ணின் பெருஞ்சிறப்பால்தான் பல குடும்பங்கள் தலை நிமிர்ந்து நிற்கின்றன.

இராமனுக்கு ஆட்சியைக் கொடுக்கலாம்-ஏனெனில் 'சீதை நல்லவள்', என்று வசிட்டன் கூறும் அளவிற்குப் பெண்ணின் நலம் பேசப்படுகிறது. ஒவ்வொரு வீட்டிலும் கடவுள் அவதாரம் செய்ய முடியாது என்பதற்காகத் தான் இறைவன் தாயைப் படைக்கிறான் என்று மேனாட்டறிஞர் கூறியதும் நல்லுண்மையே.

சிறுவர் சிறைக்கோட்டத்திலிருக்கும் பையன்களைக் கேட்டுப் பாருங்கள்; பலருக்குத் தாய் இல்லை; தாய் மட்டும் இருந்திருந்தால் பிச்சை எடுத்தேனும் குழந்தைகளைக் காத்திருப்பாளே யன்றி குறிதவறி வாழவிட்டுக் குடும்பத்தைக் குலைத்திருக்க மாட்டாள். இல்லாள், மனைவி, மனையாள் எனும் சொற்களே வீட்டிற்கு உரியவர் பெண்களே என்பதைக்காட்டுகிறது. சாவித்திரியால் சத்தியவானின் உயிரையும் திரும்பக் கொண்டு வரமுடிந்ததே ஆகவேதான், 'பெண்ணிற் பெருந்தக்க யாவுள?' என்று வள்ளுவரும் வினவுகின்றார்.

இவ்வாறு குடும்பத்துப் பிரச்சினைகளை மக்கள் மத்தியில் ஆராயும் போது கேட்போரின் ஈடுபாடு அதிகமாகிறது. பயனும்

உண்டாகிறது, பொதுத்தலைப்பில் இதுவே இவ்வாண்டில் பெரும் பாலான மக்கள் விரும்பிக் கேட்டது எனலாம்.

## சமுதாயம்

நாட்டின் நலிவிற்குப் பெரிதும் காரணம் பொருளின்மையா? பொதுநலமின்மையா? எனும் தலைப்புப் பொது நிறுவனங்களிலும் இலக்கிய மன்றங்களிலும் விரும்பிக் கேட்கப்பட்ட ஒன்றாகும்.

பொருளின்மை என்று பேசியவர்கள், பொருளின் பொதுப் படையான சிறப்பையும், அஃதின்மையால் வருங்கேட்டினையும் சமுதாய இழிவையும் கூறினர்.

## பொருள்

நாட்டுமக்களின் தனிமனித வருமானம் மிகக்குறைவாகவே இந்தியாவில் இருக்கிறது. பிச்சை எடுப்பவர்களின் எண்ணிக்கை மிகுதியும் வறுமைக் கோட்டின் கீழே மிகுபேரும் இருப்பது நாட்டில் பொருளின்மை இருப்பதைத்தானே காட்டுகிறது. உலகப் படத்தில் இருக்கும் நாடுகளிடமெல்லாம் கடன் வாங்கியிருக் கிறோம்; தனியொருவனுக்குத் தன் வீட்டுக் கடன்போக நாட்டுக் கடன் 1700 ரூ. வரை இருக்கிறது. ஜெர்மனியில் படித்துக்கொண் டிருக்கும் குழந்தைகள் வாரத்தில் ஒரு நாள் தம் காலை உணவுக்கு ஆகும் செலவினை இந்தியாவில் வாழும் ஏழைக் குழந்தைகளுக்கு என ஒதுக்குகின்றனர் என்றால் என்ன பொருள்?

இயந்திரப் பொருளை நம்பாமல் வானத்து மழையை மட்டும் நம்புகின்ற பெரும்பான்மை மக்கள் இருக்கின்ற இந்த நாட்டில் ஓராண்டுக்காலம் மழை பொய்த்தபோது கல்லூரிகளில் வகுப்புகள் அடைக்கப்பட்டன; இராமநாதபுரம் தஞ்சையை நோக்கி நகர்ந்து வந்துகொண்டிருந்தது. அரசாங்கம் கூட வறட்சி நிவாரணப் பணிகளும் கஞ்சித்தொட்டிகளும் கடைப்பிடிக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. வயிற்றுப்பாட்டைக் கழிக்கும் பணியே அன்றாட உழைப்பு என்றால் வளமாக வாழ்வதற்கு மக்கள் பிறர் வாழ்நாளைத்தான் கடன்வாங்க வேண்டும்.

'வயிற்றுக்குச் சோறிடல் வேண்டும் இங்கு வாழும் மனிதருக் கெல்லாம்' என்றும் 'வெறுஞ் சோற்றுக்கோ வந்ததிந்தப் பஞ்சம்' என்றும் பாரதி குமுறியது மக்களின் பொருளின்மையைக் கருதித் தானே? மூட்டைதூக்கும் தொழிலாளி தன்மகனை அத்தொழிலில் ஈடுபட அனுமதிப்பாரா? அது விரும்பிச் செய்யும் தொழிலன்று;

வேறுவழியின்றிச் செய்யும் தொழில். எந்த நாட்டில் உடலுழைப் பிற்கு அதிகச் சம்பளமும் பிற உழைப்பிற்குக் குறைந்த சம்பளமும் கொடுக்கப்படுகிறதோ அந்த நாடுதான் பொருளாதாரத்தில் வளம்பெற்ற நாடாக இருக்க முடியும். நமது நாடு நேர்மாறாக இருப்பதிலிருந்தே பொருளின்மைதான் இங்குப் பிரச்சினை என்பதைச் சொல்லாமலே அறியலாம்.

இனாமாகச் சேலை கொடுக்கப்படுகிறது என்று கேள்விப் பட்ட ஏழைமக்கள் முட்டிமோதி மிதித்ததால் நாற்பது உயிர்கள் பலியாயின என்ற செய்தியும், வாக்குகள் பணத்திற்கு விற்கப்படு கின்றன எனும் தேர்தல்காலச் செய்திகளும் மக்களின் வறுமை யையே காட்டுகின்றன.

PL480 கடன் IMF கடன் என்று நாடு வாங்குவது மக்களுக்குத் தானே.

நாட்டுமக்களின் வறுமையின் கொடுமுடிதான் மணிமேகலை யின் கையில் காணப்பெற்ற அமுதசுரபிக் கற்பனை. பாரி, காரி, ஓரி என்றெல்லாம் வள்ளல்கள் எங்கு தோன்றுவார்கள்? வறுமை கொடிகட்டிப் பறக்கும் நாட்டில் வசதிபடைத்த சிலர் வள்ளலா வார்கள். பாரதியின் காலத்திலும், 'தாயைக் கொல்லும் பஞ்சத்தைத் தடுக்க முயற்சியுறார்' என்று பாடல் வருகிற தென்றால் வறட்சியும், வளமின்மையும், வறுமையும் பொருளின் மையும் தான் நமது நாட்டின் நலிவிற்குக் காரணம் என்று அறிய லாம்.

ஐந்து வயது முதல் பதினொரு வயதுவரை கட்டாயக் கல்வி இருக்கின்ற நாட்டில்தான் சிறுவர்கள் காலைமுதல் மாலைவரை கடினமாக உழைக்கிறார்கள். ஆற்றில் பல மாணவர்கள் மாண்ட செய்தி வந்தபின்னர் ஆட்சியாளர் விழிக்கிறார்கள். சிறுவர் வேலைக்குக் காரணம் பொருளின்மைதானே-அவ்வேலை அவரது படிப்பைத் தின்று, சமுதாயத்தில் வளர்ந்து வரவேண்டிய இளைய தலைமுறையின் எண்ணங்களை இருட்டறையிலடைத்து விடு கிறது.

காந்தியடிகளின் 'அரைநிர்வாண' உடை எதனால் வந்தது? பாடுபடும் தொழிலாளியின், உழவரின் நிரந்தர உடை அது ஆனதால் வந்தது.

நாடு காக்கும் படை காலால் நடக்கவில்லை, வயிற்றால் நடக்கிறதென்று அறிந்தவர்கள்தாம் கூறியிருக்கிறார்கள். ஆகவே

மத்திய பிரதேசமாக இருக்கும் வயிறு ஒழுங்காக இருந்தால் உத்திரப்பிரதேசமான மூளை ஒழுங்காக வேலை செய்யும். வெளி நாடுகளைப்போல அறிவியலிலும் தொழில் நுட்பத்திலும் நாடு முன்னேறவில்லை என்பதை ஒப்புக்கொள்பவர்கள் அதன் காரணம் நாட்டின் பொருள் வளமின்மை என்பதனையும் உணர வேண்டும்.

நல்லதங்காள் வரலாறு நாட்டில் வற்றிவிடவில்லை. குசேலர்கள் இருக்கிறார்கள். வளப்படுத்தும் கண்ணன்களைத்தான் காணோம்.

ஒவ்வொரு ஆண்டும் ஒரு ஆஸ்திரேலியா கண்டத்தை மக்கள் தொகையில் உருவாக்கும் இந்தியா, பொருளின்மையில் வாடவே செய்யும். ஒரு நெல் தோன்றுமுன் அதை உண்ண ஒன்பது தலைகள் தோன்றினால் எந்த வளமும் வறுமையைத் தடுக்க இயலாது.

சிவப்பு விளக்குப் பகுதியில் சீரழியும் பெண்கள் விரும்பி ஏற்றுக் கொண்ட தொழிலன்று அது; வறுமையின் கொடுமை தள்ளிய படுகுழி அது. நடுத்தெருவில் கரகம் ஆடும் இளம் பெண்ணைப் பேட்டி காணுங்கள்; மொய்த்து நின்று கொத்தித் தின்னும் காமக்கண்களுக்கு இரையாக எந்தப் பெண்ணும் விருப்பாள்—வீட்டிலிருந்து கல்லூரியில் படிக்க வேண்டிய பெண்ணை வறுமை வீதிக்கு விரட்டியிருக்கிறது. வசதிபடைத் தோரும் இதைச் செய்தால் கலை என்று போற்றுவோம். கடை வீதிக்குக் கலையை வறுமை இழுத்து வந்திருக்கிறது.

மதம் மாறுவதற்குக் காரணம் பல கூறலாம்; அடிப்படைக் காரணம்-ஏதோ ஒரு வறுமை; குறிப்பாக, உத்திரவாதமில்லாத-நம்பிக்கையில்லாத எதிர்காலம். பணம்படைத்தோரும், செல்வ மிக்க கோயில்களும், மதிக்கப் படுகிறதென்றால் வளங்குன்றிய வர்கள் சுற்றியிருக்கிறார்கள் என்பதே பொருள்.

'எச்சிலை தனிலே எறியும் சோற்றுக்குப் பிச்சைக்காரர் சண்டை ரோட்டிலே' என்று பாடும் அளவிற்கு நிலைமை பின் தங்கி நிற்கிறது தங்கமும் வைரமும் கண்டறியாத ஏழைகள் தங்கள் குழந்தைகளின் பெயரில் மட்டும் அப்பெயர்களைச் சூட்டி அழகு பார்க்கும் பரிதாப நிலை.

சம்பளம் போதாதென்று போராட்டம் செய்யும் நடுத்தர வர்க்கம்; ஈடு செய்ய லஞ்சம் வாங்கும் வேறு சிலர்; திருட்டில் இறங்கும் கீழ்மட்ட மக்கள்—இவற்றிற் கெல்லாம் காரணம்

என்ன? போதிய பொருளில்லை; வறுமை தாண்டவமாடுகிறது: ஆகவே நாட்டின் இன்றைய உடனடித் தேவை வறுமையைப் போக்குவதேயாம்.

இவ்விதம் பேசுவதைக் கேட்கையில் இவர்கள் கூறும் கருத்தே பலம் பொருந்திய உண்மையுடையது என்று எண்ணு வோம்.

## பொது நலம்

நாட்டின் இன்றைய உடனடித் தேவை பொது நலமேயாம் என்று வலியுறுத்துபவர்கள் வேறு ஒரு கோணத்தில் இத் தலைப்பினை நோக்குவர்.

'என்ன வளமில்லை இந்தத் திருநாட்டில்; ஏன் கையை ஏந்த வேண்டும் வெளிநாட்டில்?' என்று திரைப்படத்திலும் பாடல் வந்திருக்கிறது. வற்றாத ஜீவநதிகள் வளைந்தோடும் நாட்டில் இயற்கை வஞ்சம் தீர்த்து வறுமையைப் புகுத்திடவில்லை. வறுமையைப் புகுத்தியவர்கள் சிறுமனம் படைத்தவரேயன்றி வேறல்லர். பணவளம் நிறைந்த நாட்டில் மனவளம்தான் குன்றி விட்டது.

மற்றவரையும் மனிதர் என்றெண்ணும் மனஉயர்வு இல்லாத வர்களும், பொதுநல உணர்வு இல்லாதவர்களும்தாம் நாட்டின் நலிவிற்குக் காரணமேயன்றி பொருளல்ல காரணம். 'எல்லோரும் ஓர் குலம் எல்லோரும் ஓர் நிறை' எனும் உயர்வெண்ணம் இருந் தால், தன் பெண்டு, தன் பிள்ளை என்று ஒதுக்கிடும் இழிநிலை இருக்காது.

'சொந்தச் சகோதரர்கள் துன்பத்தில் சாதல் கண்டும்
சிந்தை யிரங்காரடீ—கிளியே—செம்மை மறந்தாரடி'

என்ற பாரதியின் குரல் எதைக் காட்டுகிறது!

'மாடுகட்டிப் போரடித்தால் மாளாது செந்நெல் என்று
யானை கட்டிப் போரடிக்கும் அழகான தென் மதுரை'

என்று பாடும் அளவு வளம் நிறைந்த நாட்டில் வறுமை வரக் காரணம்?

'மாடா ஒழைச்சவன் வாழ்க்கையிலே பசி
வந்திடக் காரணம் என்ன மச்சான்?'

என்று கேட்கும் பெண்ணின் வேதனைமிகு வினாவிற்கு விடை என்ன?

'அவன் தேடிய செல்வங்கள் வேறே இடத்திலே
சேர்வதனால் வரும் தொல்லையடி'

என்று வெந்து நொந்த பதிலை எத்தனை நாள் தான் கேட்டுக் கொண்டிருப்பது? உழைப்பவனுக்கு உரிய உணவில்லை, நெய்ப வனுக்கே அம்மணம்தான் பரிசென்றால், கொத்தனாருக்கே வானம்தான் கூரை என்றால் கோளாறு வேறு எங்கோ இருக் கிறது என்பது புரியவில்லை? அதனால்தான் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்,

'வாழை குலைக்குது சோலை தழைக்குது.
ஏழைகளுக்கதில் என்ன கிடைக்குது''

என்று கேட்கிறார். ஏழையின் உழைப்பில் வந்த பலன் குலைப் பதிலும் தழைப்பதிலும் தெரிகிறதே. அவனது நிலை என்ன?

'கூழைக் குடிக்குது நாளைக் கழிக்குது
ஓலைக் குடிசையில் ஒண்டிக் கெடக்குது''

என்கிறார். தழைத்த செல்வம் தரைமட்டத்திற்கு வராமல் போகும்படி எவருடைய கை தடுக்கிறது. பொது நலமில்லாதவர் களின் மனமும் செயலும்தான் இந்த ஏற்றத் தாழ்விற்குக் காரணம். நேரு பெருமான் கூறியது போன்று 'இந்தியா ஏழை நாடல்ல; இந்தியர்கள் தாம் ஏழைகள். இது ஏன்? இந்தியர்கள் ஏழைகளாக்கப்படுகிறார்கள்.

பக்கத்திலிருப்பவனைப் பற்றிய பற்றுள்ளம் இல்லாததால் தன் வாழ்வை வளப்படுத்த வேண்டும் எனும் பேராசை மனத் தினைப் பிடித்து ஆட்டுகிறது. ஆகவே மேடும் பள்ளமும் நாட்டில் நிலவுகின்றது.

''தேனாறு பாயுது வயலில் செங்கரும்பு சாயுது—ஆனாலும்
மக்கள் வயிறு காயுது— அதிசயம்தான் இது''

என்று வியக்கின்ற கவிஞருக்கும் காரணம் புரிந்ததுதான். மக்களின் இதயத்தில் மற்றவரைப் பற்றிய எண்ணமில்லை.

முல்லை படாத துயரைப் பட்டதுயராக எண்ணி மணித் தேரை நல்கிய பாரியும் இந்நாட்டில்தான் தோன்றினான்; குளிரில் நடுங்கிய மயிலின் இடத்தில் தன்னை வைத்து நோக்கிய பெரும் இதயம் கொண்ட பேகன் வாழ்ந்ததும் இந்நாடே. புறவுக் காகத் துலை ஏறியவரும் நம் பாட்டன் தானே. அத்தகைய நாட்டில்தான் இன்று தன்னலம் தலைவிரித்தாடுகிறது. பொது உணர்வு போன இடம் தெரியவில்லை.

'செய்க பொருளை செருநர் செருக்கறுக்கும் எஃகு அதனிற் கூரியது இல்' என்ற குறளினைத்தவறாகப் புரிந்துகொண்டவர்கள் நாசிக்கில் அடிக்க வேண்டிய ரூபாய் நோட்டுகளைத் தம்தம் பட்டறையிலடித்து அரசின் வேலையைக் குறைக்கிறார்கள் என்று. கூறலாமா? பணவீக்கத்திற்கும், ஏழைகளின் நலிவிற்கும் காரண ராக இருக்கும் இக்குடிகேடர்களால் விளையும் தீமைகள் எத்தனை?

உத்தர பிரதேசத்தில் ஒரு விவசாயி நீதிமன்றத்தில் ஒரு வழக்குக் கொண்டு வந்தார்—'கிணற்றைக் காணவில்லை' என்று. தன் வயலில் கிணறு வெட்டுவதற்கு 7000 ரூபாய் கடன் வேண்டி அரசாங்கத்திற்கு மனுச் செய்தார். கிணற்றை வெட்டாமலே 20 அடி வெட்டியதாகவும், 30 அடி வெட்டியதாகவும், தண்ணீர் ஊற்றுக் கண்டிருப்பதாகவும் அதிகாரிகள் சான்று கொடுத்தனர்—லஞ்சம் வாங்கிக் கொண்டு. முழுத்தொகை வாங்கி இலஞ்சமும் கொடுத்தபின் கிடைத்த தொகையை வேறு செலவு செய்த விவசாயி 'கிணற்றைக் காணவில்லை' என்கிறார்—நியாயம் தானே.

பொதுநல உணர்விருந்தால் சம்பளத்திற்குப் பணியாற்றும் அலுவலர்கள் லஞ்சம் வாங்குவார்களா?

'நன்றே தரினும் நடுவிகந்தாம் ஆக்கத்தை
அன்றே ஒழிய விடல்' என்ற குறள் என்னாவது?

கூட்டுறவுத்துறையில் 285 லட்சம் ரூ. மோசடி என்று செய்தித் தாளில் வரும் செய்தி நமது பொறுப்புள்ள மக்களின் அவல நிலையை அல்லவா காட்டுகிறது?

உழவாரப்படை எனும் தொண்டின் சின்னத்தைத் தாங்கிய அப்பரடிகள் வாழ்ந்த நாட்டில் இத்தனை சீர்கேடுகள் ஏன்?

கலப்படம் எனும் கலை பிறநாட்டில் இந்த அளவு உண்டா என்பது ஐயமே. உயிர்காக்கும் மருந்திலும் உடல் வளர்க்கும் உணவிலும் கலப்படம் செய்துதன் பணப்பெட்டியை நிறைக்கும் மனம் கொண்ட கயவர் கூட்டம் இங்கு உண்டா, இல்லையா? அரசாங்கம் போடும் சட்டங்களின் கீறல்கள் வழியாகத் தப்பி யோடிப் பிழைத்துக் கொள்ளும் இவர்களுக்குப் பொதுநலம் இல்லாததால்தான் நாடு பல்வேறு வகைகளில் நலிந்திருக்கிறது.

அந்நியச் செலாவணியை அதிகப்படுத்தும் வகையில் அரசாங் கம் முயற்சிகள் பல மேற்கொண்டது. சமூகக்கேடு ஒன்றையே

சிந்தித்துக் கொண்டிருக்கும் கும்பல் ஒன்று தாங்கள் வெளி நாட்டிற்கு அனுப்ப வேண்டிய கயிற்றைக் கடல் மணலில் புரட்டி எடை கூட்டிக் காட்ட சதி செய்தது. தன்னலம் தாண்டவமாடும் சிறு கும்பலால் நாட்டின் மானமே குன்றுவதைக் காண்கிறோம்.

ஜப்பானைச் சுற்றிப் பார்க்கச் சென்ற இந்தியர் ஒருவர் தாம் தங்கியிருந்த விடுதி ஒன்றில் ஒரு வானொலிப் பெட்டியைத் தொலைத்து விட்டதாகக் கூறினார். இவர் ஊர் திரும்பும் போது இவர் தொலைத்ததைப் போன்ற இன்னொரு வானொலிப் பெட்டியை அந்த விடுதி உரிமையாளர் தம் செலவில் வாங்கிக் கொடுத்தார். இவர் மறுத்ததும், 'எங்கள் நாட்டிற்கு வந்து செல்லும் தாங்கள் இனிய நினைவுகளுடன் திரும்ப வேண்டும். அது தான் எங்களுக்குப் பெருமை; ஜப்பானுக்கு வந்து ஒரு வானொலி பெட்டியைத் தொலைத்துவிட்டு வருகிறோம் என்னும் கசப்புணர்வுடன் போகக் கூடாது' என்றார். நாட்டுப் பற்றும் பொறுப்புணர்வும் உள்ள மக்கள் வாழும் நாட்டில் முன்னேற்றத்திற்கு என்ன தடை?

ஆனால் நாடு சுற்றிப் பார்க்க வந்த இரு வெளிநாட்டு மாதர்களை, தனது வாடகைக் காரில் தங்கும் விடுதிக்கு ஏற்றிச் செல்வது போன்று போக்குக் காட்டிவிட்டு, சிவப்பு விளக்குப் பகுதிக்கு அழைத்துச் சென்று ஏமாற்றிய கொடுமை இங்குதான் நடைபெற்றிருக்கிறது. பிற நாட்டவர் நம்மனோரை என்ன நினைப்பர் எனும் எண்ணங்கூட சிறிதும் இன்றி இவ்வாறு செய்கின்றனரே— பொதுநல எண்ணம் வேண்டாமா? நாட்டுப் பற்று வேண்டாமா?

'ஒரு லிட்டர் பாலை இரண்டு ரூபாய்க்கு வாங்கி அதில் கால் லிட்டர் தண்ணீர் கலந்து விற்றால் என்ன கிடைக்கும்?' என்ற வினாவிற்கு 'ஆறு மாதம் ஜெயில் கிடைக்கும்' என்று விடையளிக்கும் மாணவன் ரஷிய நாட்டில் உண்டு என ஒரு நிகழ்ச்சியைக் கூறுவார்கள். சிறுவர்களின் எண்ணப் போக்கில் கூட, கலப்படம் தீதென்றும், கொள்ளை லாபம் கொடுமை என்றும் வேரூன்றியிருக்கிறது. இங்கோ காப்பிப் பொடியில் எதைக் கலப்பது? மஞ்சளுக்கு மாற்று என்ன? மிளகுக்கு ஏற்ற பிற விதை என்ன? என்ற ஆராய்ச்சியில் ஈடுபட்டு வெற்றிக்கொடி நாட்டுகின்றனர். இந்த நாடு நலியாமல் என் செயும்! பிறரைப் பற்றி எண்ணாமல் தன்னைப்பற்றியே எண்ணும் சமுதாயப் புல்லுருவிகள் இருக்கும் நாடு முன்னேறுவது கடினம்,

'ஐந்தாண்டு திட்டங்கள் ஏழைகளை ஏழைகளாக்கி விட்டன: பணக்காரர்களைப் பணக்காரர்களாக ஆக்கிவிட்டன' என்று தேசீயத்தலைவர்களே வருந்தும் வண்ணம் தன்னலமிகள் பெருகி விட்டனர். தமிழகத்தின் ஓராண்டைய வரும்படி 1100 கோடி ரூபாய்; வடநாட்டில் ஒரு முதலாளியின் குடும்பச் சொத்து 1200 கோடி ரூபாய். இதன் காரணம் என்ன? இந்தியத் துணைக் கண்டத்தின் பொருளாதாரம் முழுவதும் 26 குடும்பங்களின் கையில் முடங்கிக் கிடக்கிறது என்று செல்வாக்குடைய நாளிதழ்கள் எழுதின.

''இயற்றலும் ஈட்டலும் காத்தலும் காத்த வகுத்தலும் வல்லதரசு'' என்ற குறளில் 'வகுத்தல்' எனும் பகுதி நமது நாட்டில் ஒழுங்காக நடைபெறுகிறதா?

ஏன் பலர் வறுமையில் வாடுகிறார்கள்? 'கஞ்சி குடிப்பதற்கிலார் அதன் காரணமிவை யெனும் அறிவுமிலார்' என்று பாரதி நொந்து கூறுகிறார். 'என்ன காரணம் என்று தெரியாதவர்கள் மக்கள்' 'நம்மைச் சுரண்டிக் கொண்டு பலர் வாழ்கிறார்கள்' என்னும் அறிவு இல்லாமல் இருக்கிறார்களாம்.

அணைக்கட்டுகளும், ஆலைகளும், இயந்திர சாதனைகளும் பெருகிக் கொண்டேதான் இருக்கின்றன; ஏழைகளும் பெருகிக் கொண்டே இருக்கின்றனரே! மாடங்களும் மாளிகைகளும் வளர்ந்து கொண்டே இருக்கின்றன; கூரைக் குடிசைகளும் சாலையோரக் கூட்டங்களும் குறைந்திட வில்லையே, ஏன்?

அவனுடைய கையிலிருந்து வாய்க்குப் போய்ச் சேருவதற்குள் யாரோ தட்டிப் பறிக்கிறார்கள். இந்த நாட்டில் ஒருவன் பிறக்கும் போது இந்தியனாகப் பிறப்பதில்லை; ஏழையின் மகன் ஏழையாகவும், பணக்காரனின் மகன் பணக்காரனாகவும் பிறக்கிறானே யன்றி பெரும்பாலோர் இந்தியனாகப் பிறப்பதில்லை; இது தான் கொடுமை.

செல்வந்தர்கள் தவறு செய்து தண்டிக்கப்பட்டு சிறைக்கு அனுப்பப்பட்டால் உள்ளேயும் அவர்களுக்கு எல்லாச் சலுகைகளும் தருவதற்குச் சட்டம் உதவுகிறது.

அன்னியர்களால் ஆளப்பட்ட நிலை மாறி இன்று செல்வந்தர்களால் ஆளப்படும் நிலையில் இருக்கிறோம். தன்னைப்பற்றியே எண்ணும் சுய நலமிகள் செய்யும் தகாத் செயல்கள் இங்கு நிலைமையை மிகக் கீழிறக்கிக் கொண்டிருக்கின்றன.

தன் கையிலிருக்கும் ஒரு ரூபாய் நோட்டை எரிப்பதற்கு மனமில்லாதவர்கள் எந்தவிதக் காரணமும் பொதுநல உணர்வும் இன்றி 2½ லட்சம் ரூபாய் பெறுமான பேருந்தினைப் பெருந்தீக்கு இரையாக்குகின்றனர். பள்ளியிலும் கல்லூரியிலும் படிக்கும் மாணவர்கள் தம் கல்வி நிறுவனங்களின் உள்ளே தீர்த்துக் கொள்ள வேண்டிய சிக்கல்களை விளக்குக் கம்பங்களில் இருக்கும் இருட்டைப் போக்கும் விளக்குகளை உடைத்துத் தீர்த்துக் கொள்ள நினைக்கிறார்கள்.

பொதுச் சொத்துக்கு நாசம் விளைவிப்பவர்கள் உணர்ச்சி பொங்கும் சூழ்நிலைகளைப் பயன்படுத்திக் கொள்கிறார்கள். தமிழ் நாடு விரைவு வண்டி விபத்துக்குள்ளாகி வேதனையை விளைத்தபோது விஷமிகள் சிலர் பயணிகளின் நகைகளைத் திருடுவதில் கவனமாக இருந்தனர். இவர்களுக்கும் மேல்மட்டத்தில் பெரிய மனிதர் போர்வையில் பொல்லாங்கு செய்பவர்களுக்கும் என்ன வேற்றுமை?

இரயில் நிலையத்தில் தண்ணீர் அண்டாவுக்கும் தகரக் குவளைக்கும் சங்கிலியால் தாலிகட்டியிருக்கும் வேதனையை எண்ணிப் பாருங்கள். எத்தனை குவளைகளைத் தொலைத்தபின் இந்த வேதனையான வேலையைச் செய்திருக்கிறார்களோ?

ரோட்டரி சங்கத்தினர், ஒரு முறை, நாளிதழ்களையும் வார இதழ்களையும் ரயில் நிலையத்தில் ஒரு மேசையில் வரிசையாக வைத்து, அதன் பின் விலையையும் குறித்து, பக்கத்தில் ஒரு உண்டியலையும் வைத்து, எடுக்கும் தாளுக்கு உரிய காசை உண்டியலில் போடவும் என்று எழுதிய அட்டையையும்-வைத்திருந்தனர். மாலை 6 மணிவரை எல்லாத்தாள்களும் விற்றன-சொன்னபடியே-மாலையில் பார்த்தால் உண்டியலைக் காணோம். இவைகளெல்லாம் வேடிக்கை இல்லை; வேதனையோடு ஒப்புக்கொள்ள வேண்டிய வினோத உண்மைகள்.

ஆகவே பொருளில்லை என்று கூறுவதில் பொருளில்லை; பொதுநலமின்மையே நாட்டின் நலிவிற்குக் காரணம் என்பதே உண்மை.

பொதுத் தலைப்புகளில பட்டிமன்றங்கள் பேசும் போது நாட்டின் அன்றாடப் பிரச்சினைகள் அலசப்படுவதால் மக்களுக்கு உற்சாகம் கரைபுரண்டோடுவதைக் கண்டிருக்கிறோம். ஒவ்வொரு

வரும் ஒவ்வொரு கோணத்தில் பாதிக்கப்பட்டிருப்பர். அவர்களுடைய அவலங்கள் அனுதாபத்தோடு நோக்கப் பெறும்போது அவர்களுடைய ஈடுபாடு இன்னும் அதிகமாகும்.

ஆண்டாண்டு தோறும் வரும் குறிப்பிட்ட சில விழாக்களில் ஒரே தலைப்பே பல்வேறு கோணங்களில் ஆராயப் பெறும். கிருஷ்ணஜெயந்தி, இராம நவமி போன்ற விழாக்களில் இத்திரு அவதாரங்களின் தொடர்புடைய தலைப்புகள் பேசப் பெற்று வருகின்றன.

1. பக்தியைப் பெரிதும் வளர்ப்பது கிருஷ்ணாவதாரமா? இராமாவதாரமா?

2. இன்றைய சிக்கல்களைத் தீர்க்கப் பெரிதும் உதவுவது இராமாவதாரமா கிருஷ்ணாவதாரமா?

3. இன்றைய சூழ்நிலையில் பின்பற்றத்தக்கவர் யார் இராமனா? கண்ணனா?

4. மக்கள் மனதில் பெரிதும் நிலை நிற்கும் பாத்திரம் எது—இராமனா? கிருஷ்ணனா?

இத்தலைப்புகள், ஏதேனும் ஒரு கோணத்தில், கண்ணன் புகழையும் இராமன் பெருமையையும் பேசுகின்றன. ஆதலின் கோயில்களில் இவை பெரிதும் இடம் பெற்றன. கிருஷ்ணாவதாரம், கண்ணன் எனும் தலைப்புகளில் பேசியவர்கள் கூறிய கருத்துக்களுள் சில.

## இராமன்

இராமன், நடையில் நின்றுயர் நாயகனாகப் போற்றப்படுகின்றான். அவனது வாழ்வு உலகில் உள்ளவர்களுக்கு நெறிமுறை காட்டிட வந்த ஒரு கைகாட்டி. ஒரு வில் உடைய கோதண்டராமனாகவும், ஒரு வில் உடைய சீதாராமனாகவும் காட்சியளிக்கும் அவன், பெற்றோர் சொல்லை அமுதம் எனக் கொண்டவனாகவும், பரந்த அன்பினனாகவும். எதிரிக்கும் மன்னிப்பருளும் இனிய பண்பாளனாகவும் காணப்பெறுகிறான்.

தசரதனால் மனைவியல்லள் எனத் துறக்கப்பட்ட கைகேயியையும், மகனல்லன் என விலக்கப் பெற்ற பரதனையும் எவ்வாறு மீண்டும் உறவாக்கிக் கொண்டு வருகின்றான் இராமன் என்பதனை நினைத்துப் பார்க்க வேண்டும். மீட்சிப் படலத்தில், இராமனை

ஆசிர்வதிக்க வானுலகத்திலிருந்து மண்ணுக்கு வரும் தசரதன் 'உனக்கு வேண்டும் வரம் கேள்' எனக் கூறுகிறான். அப்பொழுது பண்டைச் செய்தியை மறக்காது நினைந்தவனாய்,

> ''தீயள் என்றுநீ துறந்தஎன் தெய்வமும் மகனும்
> தாயும் தம்பியும் ஆம்வரம் தருகெனத் தாழ்ந்தான்.''

பெற்றோருக்கு இடையே இருந்த மனப்பிணக்கைத் தீர்க்கும் நல்ல மகனாக இராமன் இங்கு காட்சியளிக்கிறான்.

போர்க்களத்தில் தனக்கெதிரே நிற்கும் இராவணனை உடனே வீழ்த்தும் வாய்ப்பிருந்தும், அவன் திருந்துவான் என்கின்ற நிலை வரலாம் என்று எண்ணுபவன் போலவும், படையும் படைக்கலன் களும் இழந்து நிற்கும் ஒருவனை ஒறுத்தல் வீரமன்று என்று கருதி யவன் போலவும், 'இன்று போய்ப் போர்க்கு நாளை வா' வென்று நல்கினன். இது அவனது எதிரியை மன்னிக்கும் ஏற்றமிகு குணத் தினைக் காட்டுகிறது.

இராமனின் பரந்த இதயத்தை வியவாதாரில்லை. ஆற்றிலே ஒரு குகனையும், காட்டிலே ஒரு சுக்ரீவனையும், தீவிலே ஒரு விபீடணனையும் அரவணைத்துத் தம் உடன்பிறப்புக் கூட்டத் தினைப் பெருக்கியவன். வேடனும் விலங்கும் பறவையும் அரக் கனும் அவனது பரந்த சகோதர அன்பினுள் ஆட்பட்டவர்கள். ஆறும் காடும் கடலும் கடந்த அவனது விரிந்த அன்பு இனம் கடந்ததாகவும் இருக்கிறது என்பதை எண்ணி வியக்கிறோம். இத் தகைய ஆன்மநேய ஒருமைப்பாடு இடங்கடந்து, இனங்கடந்து இன்று மனித இனத்தில் இருந்தால் இன்றிருக்கும் இழிவுகள் என்றோ மறைந்திருக்கும் என்பது உண்மை.

இராமனில்தான் நாம் பேறும் இழப்பும் ஒன்றெனக் கருதும் பெருந்தகைமையைக் காண்கிறோம். 'மெய்த்திருப்பதம் மேவென்ற போதிலும், இத்திருத்துறந் தேகென்ற போதிலும், சித்திரத்தின் அலர்ந்த செந்தாமரை ஒத்திருக்கும் முகம்' உடைய இராமனின் இதய மேம்பாட்டை என்னென்று கூறுவது? இழப்பையும் வளத் தையும் பெரிதாக எண்ணக்கூடாது என்று அறிவுறுத்தும் அவனது இயல்பு எவரையும் ஈர்ப்பதாகும்.

ஏகப்பட்ட மனைவியரை உடைய தசரதனுக்கு மகனாகப் பிறந்தும் ஏகபத்தினி விரதனாக இறுதி வரையில் அவன் இருந்து காட்டினான். வாழ்ந்து காட்டி உயர்ந்த உத்தமனுடைய நிறைந்த

வாழ்க்கை எல்லோருக்கும் நல்லதொரு வழிகாட்டியாக அமைந்துள்ளது. ஆகவேதான், 'கற்பார் இராமனையல்லால் மற்றுங் கற்பரோ', என்று சான்றோர்கள் கூறினார்கள்.

இராமனின் வாழ்வில் வாலி கொலையையும், சீதையை தீயுள் இறக்குவதையும் மிகக் கொடுமையான செயல்கள் என்று கூறுவர்.

'எதிர்த்தோர் பலத்தில் பாதியை உறிஞ்சும் ஆற்றலை அநியாயமாகப் பெற்றவன் வாலி; தம்பி மனைவியைத் தன் மனை. யாக்க எண்ணியவன் அவன்; தம்பியின் உயிரைக் குடிக்க வெறியாக அலைந்தவன் வாலி; 20 மைல் வேகத்திற்கு மேல் போகக் கூடாத பாதையில் 40 மைல் வேகத்தில் ஓடும் லாரியைக் காவலர் 60 மைல் வேகத்தில் சென்று மடக்கிப் பிடிக்கலாம். சட்டக் காவலரே விதியை மீறுவது நியாயமா என்று யாரும் கேட்பதில்லை. காவலர்கள் விதிவிலகுவது விதிக்குள் சிலரைக் கொண்டு வர. ஆகவே தகாத வரம் பெற்ற வாலியை மறைந்து நின்று எய்ததில் தவறில்லை.

சீதையைத் தீயுள், இறக்கியதும் தவறில்லை; சுடச்சுடரும் பொன்போல் ஒளிவிடும் கற்பின் கனலியின் திறம் அதனால்தான் புகழுச்சியில் ஏற்றிப் போற்றப் பெற்றது தீக்கடவுள் சீதையின் கற்புக் கனவால் பொசுங்கி நின்ற நிலை சீதையை மிகப் பெரும் உயர்வுக்குக் கொண்டு சென்றது எனலாம். தீ நாக்குச் சீதைக்குச் சான்றிதழ் கொடுத்ததால்தான் தீயர்களின் நாக்கு அவளது திறம் பற்றிப் பேசத் திறனற்றுக் கிடக்கிறது. ஆகவே அதுவும் தவறில்லை. கணவனின் பொறுப்பு—மனைவியின் உயர்வைக் காப்பதில் மிக அதிகம் என்பதை இது காட்டுகிறது.

நாட்டுக்கு விடுதலை வாங்கிக் கொடுத்த காந்தியடிகள் இராம ராஜ்யம்' வேண்டும் என்றுதான் விரும்பினார். 'ரகுபதி ராகவ ராஜாராம்' என்றே பாடினார். வாழ்நாள் முழுவதும் கீதையைப் படித்து, கீதையை எழுதி, கீதையை உபதேசித்த காந்தியடிகள், இறுதி வேளையில் கூறிய சொல், 'இராம் இராம்', என்பதல்லவா? கண்ணன் சொன்னபடி நடந்தால் நடையில் நின்றுயர் நாயகனாம் இராமனின் பண்பே வரும் என்பதில் ஐயம் இல்லை.

வீரத்திலும் வலிமையிலும் ஒப்புவமை காட்ட முடியாத ஆற்றல் படைத்த இராமன் நமக்கொரு எடுத்துக்காட்டு-வாழ்வில்

உயரவேண்டும் எனில் நியாயமான செயல்களில் வீரமும், பண்பு நெறி தவறாத மனவலிமையும் பெறவேண்டும் எனும் உண்மை விளங்குகிறது. அவனது கைவண்ணத்தால் சிவதனுசு ஒடிந்தது; அவனது கால் வண்ணத்தால் கல் தெய்வக் கற்பினளாகியது; அவனது ஊங்கார ஒலியால் சிவசூலம் பொடியானது; இவ்வளவு இருந்தபின் கம்பர் மானுடம் வென்றதம்மா என்றே கூறுகிறார். இறைச் செயல்கள் மானுட நிலைக்கு இறங்கி வரும் என்பதையே இது காட்டுகிறது.

'பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றதன்றோ' என்று கூறும் இராமனின் விடுபட்ட மனப்பெருமை நம்மனோ ருக்கு ஒரு வழிகாட்டியாக அமைகிறது.

இவ்வாறு பேசியவர்கள், இராமனின் வாழ்வியல்நெறி, மனித சமுதாயத்திற்கு ஒரு வாழ்க்கை நெறிகாட்டியாக அமைந்தது என்று கூறுவதுடன் கண்ணனின் நெறிமுறை எவ்வாறு மாறு பட்டது என்றும் கூறினர். கண்ணன் சார்பில் பேசிய கருத்துகள் சில,

## கண்ணன்

கண்ணன்தான் இன்றைய வாழ்வியல் நெறிக்கு நமக்கு ஒரு வழிகாட்டி. 'தேவியைப் பிரிந்த பின்னை திகைத்தனை போலும் செய்கை' என்று வாலி பேசும் அளவு தவறு செய் தவனல்லவா இராமன், கூனியின் கூனில் உண்டை எறியலாமா? சூர்ப்பநகையிடம் அவள் மனம் சலனமடையும்படி விளையாட லாமா? கற்பின் கனலியை வாய்தந்தன பேசலாமா? என்பன போன்ற எதிர்க் கேள்விகளை எழுப்பிய பின் கண்ணனே வாழ்க் கைக்கேற்ற வழிகாட்டி என்று கூறினர்.

இராமன் அரசகுமாரன்; அரசர்களைத் துணைக்குக் கொண் டவன்; மக்கள் நிலைக்கு அப்பாற்பட்டவன் கண்ணன்; இடைத் தொழில் புரிந்து மண்ணை யுண்ணும் குழந்தைக் கடவுள்; சிறையிற் பிறந்து, மாமனால் கொலை முயன்று, நச்சுப்பாலூட்டப் பெற்று, பிறருக்குத் துணையாகித் துணையானவன்.

தன் வெற்றிக்காக இராமன், வீடணன், சுக்ரீவன், அனுமன் போன்றோரைப் பயன்படுத்தினான்; கண்ணன் பிறருக்குப் பயன் பட்டான்; தான் துன்புற்றான். சிறு குழந்தையாக இருக்கும் போதே தாய் வடிவில் வந்த பூதகியைக் கொன்றும், கோவர்த்தன

கிரியை இந்திரனுக்காகக் குடையாகப் பிடித்தும், காளிங்கன சடனம் புரிந்தும் பக்தர்களுக்கு எளியனாகி அருளியவன் கண்ணன்.

துவாரகைப் பஞ்சணையை விடுத்து ஆயர்பாடிக்கண்ணனாகத் திகழ்ந்தவன் அருளின் ஆழியான். ஆதலால்தான் மகாகவி பாரதி இருபத்தியேழு கோணங்களில் கண்ணனை அனுபவித்துக் கண்ணன் பாட்டினைப் பாடினார்.

குகன் அன்புடன் இராமனுக்குப் படைத்த மீனையும் தேனையும் உண்ணாமல் பவித்திரமாம் என்று கூறியதைவிட அவலை அன்புடன் கொண்டு வந்த குசேலரை மதித்து எடுத்து உண்ட கண்ணன்தான் நம் இதயத்தை ஈர்த்திழுக்க முடியும்.

நாடு கேட்டு தூதுபோன போது வழிநெடுக மொய்த்த மக்கள் தன் வீட்டிற்கு வரவேண்டும் என்று கெஞ்சினர். கண்ணன் தன் வீட்டினுள் வந்தால் வளம் பெருகும் என்ற தன்னெண்ணத்துடன் கேட்டவர் வீட்டிற்கெல்லாம் செல்லாமல் விதுரன் வீட்டினுள் நுழைந்தான் கண்ணன். ஏன்? விதுரன் மட்டும்தான், ''கண்ணா உன் வீட்டுக்கு வா'' என்று அழைத்தான். அத்தினாபுரத்திலும் தனக்கொரு வீடு இருக்கிறதோ என்று வியந்தவனாய் கண்ணன் அங்கு சென்றான்.

போர்க்களத்தில் அனுமன் போன்றோர் தோளில் தாங்க இராமன் போரிட்டான். கண்ணன் சாரதியாக இருந்து விஜயனின் கால்கள் தோளில் தாக்க தேரோட்டினான். தேரோட்டி மகன் என்று கர்ணனாம் கொடையாளியைக் கேவலமாகப் பேசியவர் பலர்; அத்தொழில் இழிவானதன்று என்று கூறுபவன்போல் தாமே பார்த்தனுக்குத் தேரோட்டியாகி இருந்தவன் கண்ணன்.

அர்ச்சுனனின் மகன் அபிமன்யு போர்க்களத்தில் இறந்துவிடுகிறான். கண்ணனுக்கு மட்டுமே இச்செய்தி தெரியும். அர்ச்சுனன் இத்துயரச் செய்தியைக் கேட்டால் இறந்து விடுவான் என்பதை அறிந்த கண்ணன், இந்திரனை அழைத்தான். தீக்குண்டம் ஒன்று வளரச் செய்து, இந்திரனைக் கிழ அந்தணன் வேடம் பூணச்செய்து அந்தத் தீக்குண்டத்தில் விழ முயல்வான் போல் செல்லச் செய்தான். தேர்த்தட்டிலிருக்கும் அர்ச்சுனனிடம் கிழவன் ஒருவன் தீயில் விழ முயல்வதைக் காட்டி, அவனைத்தடு என்று கூறினான். ஓடிச்சென்று தடுத்தான் பார்த்தன். ''உன் மகன் உன்னை விட்டுத் திடீரென இறந்தால் நீயும் இப்படித்தான் உயிரை விடுவாய்; இன்று எனக்கு மட்டும் அறிவுரை சொல்ல வந்து

விட்டாய்'' என்று தன் சோகக் கதையை விவரித்தான் கிழவன். ''ஒருநாளும் இல்லை; இறைவன்மீது ஆணையாகச் சொல்கிறேன்: அந்தச் சூழ்நிலையிலும் நான் இறக்கத் துணியமாட்டேன்; நீங்கள் உயிரை விடவேண்டாம்,'' என்று கூறி அந்தணனைக் காப்பாற்றி னான் அர்ச்சுனன். பின்னர் அபிமன்யு இறந்துவிட்ட செய்தியை அறிந்ததும் உயிரை விடுவதற்குத் தயாராகிவிட்டான் அர்ச்சுனன். கண்ணன் ஒன்றும் அறியாதவன்போல், அந்தணனுக்கு முன்னால் இட்ட ஆணையை நினைவூட்டி அர்ச்சுனனைக் காப்பாற்றினான். பக்தனை, நண்பனைக் காக்கவேண்டும் என்பதற்காக எத்தனை நாடகம் ஆடுகிறான் கண்ணன். அந்த நாடகதாரியைத்தான் யாரும் வாழ்க்கைக்கு மிக நெருக்கமானவனாக ஏற்றுக் கொள்வார்கள்.

சைதன்யரும் மீராவும் ஆழ்வார்களும் பாரதியும் கண்ணனைத் தம் இதய தெய்வமாக ஏற்றுக் கொண்டுள்ளார்கள். எளிமையும் இனிமையும் எவரையும் ஈர்க்கும் கண்ணன் இயல்புகள்.

புல்லாங்குழலால் ஆடு மாடுகளை ஈர்க்கும்-கண்ணன் தன் வாயசைவில் பிறந்த கீதையால் மக்களின் ஆன்மாக்களை ஈர்க் கிறான். ஓரடியால் உலகை அளந்தவனும், கோவர்த்தன மலையைத் தன் கையால் நிறுத்தியவனுமான இம்மாயவன் யசோதையின் கட்டுக்கும் உட்படுவான்; மத்தால் மொத்துண்ணு வான்; சிறுதாம்பில் கட்டுண்பான்; அத்தகைய எளிமை யாவருக் கும் விருப்புண்டாக்குமன்றோ.

'பின்னலைப் பின்னின்று இழுப்பான்—தலை
பின்னே திரும்புமுன்னே சென்று மறைவான்'

என்று பாரதி அனுபவிக்கும் கண்ணனின் லீலைகளை யாரால் மறக்க இயலும்?

போரில் கண்ணன் மேற்கொண்ட செயல்கள் சிலருக்கு ஐயத்தை எழுப்பும் என்பதில் ஐயமில்லை. கர்ணனின் பலம் எதுவோ அந்தக் கொடையைக் கொண்டே அவனைப் பலவீன மாக்கினானே; பொய்யை வெறுத்த தர்மனைப் பொய் சொல்ல வைத்தானே; வேண்டுமென்றே அஸ்வத்தாமனைப் பேதப்படுத் தினானே; படை தொடமாட்டேன் என்று சொல்லிப்பின் படை தொட்டானே; சூரியனைத் தன் திகிரியால் மறைத்தானே என்றெல்லாம் கூறுவர்.

கண்ணன்மீது குறை கிடையாது. நாடு கிடைக்கும் எனும் ஆசை மனத்தின் அடி ஆழத்தில் இருந்தால் தர்மனும் பொய் கூறு வதற்கு முன்வருவான் என்பதை உலகுக்குக் காட்டுகிறான். எதிரி கூட்டத்திலிருந்தாலும் கொடை எனும் ஒப்பற்ற குணமுடை யவனை கர்ணனை-உலகுக்குக் குந்தியின் மகன் என்று காட்ட வேண்டாமா? தர்மனுக்கு மூத்தவன் கர்ணன் என்று கண்ணன் கூறாதுவிட்டால் வேறு யார் சொல்ல முடியும்? அதனால்தான் அவனது இறுதியில் கண்ணன் சென்று விசுவரூபம் கொடுத்து உறவு கொண்டாடுகிறான்.

அசுவத்தாமன் வானும் நிலமும் காட்டிப் பேசியதைத் துரியோ தனன், தவறாகப் புரிந்து கொண்டான் என்றால் அது துரியோ தனனுடைய இறங்கிய அறிவைக் காட்டுகிறதே தவிர வேறன்று. பொய்த்தூக்கம் அவன் இயல்பு. தலையாசனத்தில் அமர்ந்து கொண்ட துரியோதனன் கண்ணனிடம் அவனுடைய படையைக் கேட்டான்; ஆனால் அர்ச்சுனனோ கண்ணனையே கேட்டான்: தேனீக்கூட்டத்தைப் பிடித்துக் கொண்டு போக வேண்டுபவன் ராணி ஈயை மட்டும் பிடித்தால் போதாதா? அறிவு நிறை அர்ச்சுனன் கண்ணனின் படையை வேண்டாம் என்று ஒதுக்கி ராணி ஈயாக இருக்கும் கண்ணனையே வேண்டிப் பெற்றான் அவரவர்கள் கண்ணன் மீது கொண்டிருக்கும் நம்பிக்கையையும் அன்பையும் பொறுத்தே அருளும் பொருளும் பெறுவர்.

சேலை திருடினானே, வெண்ணெய் திருடினானே என்றெல் லாம் பேசுவார்கள். ஆற்றில் குளித்துக் கொண்டிருந்த வேளையில் நீர்ச்சிலை நீரோடு போக, கண்ணன் வெளிவர முடியாமல் ஆற்றிலே காலம் தாழ்த்திக் கொண்டிருந்தான். தன் நுண்ணறி வால் இதனையறிந்த பாஞ்சாலி தன் சேலைத் தலைப்பைக் கிழித்துக் கொடுத்து அவன் மானத்தைக் காப்பாற்றினாள்; ஆதலால் அவ(ள்) மானத்தைக் காப்பாற்றினான். நம்பினோரை விடமாட்டான் இறைவன் என்பதையல்லவா இது காட்டுகிறது. தினைத்துணை நன்றியைப் பனைத்துணையாகக் கொள்ளும் இறை இயல்பைக் கண்ணனிடமிருந்து தெரிந்து வாழ்கிறோம்.

துர்வாசர் பசி தணிக்கவில்லையாயின் சாபம் வரும் என்று எண்ணி ஏங்கும் போது கண்ணன் தோன்றுகிறான்: பழம் பொருந்து சருக்கத்தில் அடிமன உண்மைகளை வெளிக்கொணர நாடக மாடுகிறான்; சிக்கலின் இறுதி விடையாகிறான்; கணவர்

களால் காப்பாற்ற இயலாது என்று விளங்கிவிட்ட நிலையில் கையற்றுக் கைகூப்பி நினைந்து நெஞ்சுருகி மாழ்கிய பாஞ்சாலிக்கு உதவுகிறான். கடவுளை நம்பினார் கைவிடப்படார் என்பதற் கல்லவா இவை எடுத்துக் காட்டுகள்.

'படைதொடேன்' என்று கூறிய கண்ணனைப் படைதொட வைப்பேன் என்று பீஷ்மாச்சாரியார் சபதம் செய்கிறார். தனது பக்தன் மொழி பொய்த்தால் மீண்டும் பிறப்பு உண்டு என்று நினைந்தருளிய கண்ணன், பழியைத் தன்மீது போட்டுக் கொண்டு, பக்தனுக்கு மீண்டும் பிறவி வாராவண்ணம் அவரது மொழியை உண்மையாக்குகிறான். வெயில் தாங்கி நிழல் தரும் குடைபோல் பழிதாங்கி வீடு நல்கும் கண்ணனல்லவா அவன்,

இவ்வாறு கண்ணனின் சிறப்புகளையும் அவன் மக்களின் இதயங்களை ஈர்க்கும் எளிமையினையும் பேசினர்.

## எங்கும் பட்டிமன்றம்

நாளுக்கு நாள் பட்டிமன்றத்தின் செல்வாக்குப் பரந்து வருவதைக் காண்கிறோம். கோயில் விழாக்களிலும் வீதிகளிலும் மக்களைக் கவர்ந்திழுத்த பட்டிமன்றக்கலை அண்மைக் காலத்தில் வீட்டினுள்ளும் புகுந்திருப்பது வியப்பைத் தருகிறது.

திருமணவிழா, காதணிவிழா, குழந்தைகளுக்குரிய விழாக்கள், மணிவிழா போன்றவற்றில் பல இடங்களில் பட்டிமன்றம் புகுந்து மகிழ்வித்து மக்களை நற்செய்திகளைக் கேட்கச் செய்திருக்கிறது. மதுரையில் முஸ்லிம் நண்பர் ஒருவரது திருமண விழாவில், 'குடும்பப் பொறுப்பில் பெரும்பங்கு வகிப்பவர் கணவனா, மனைவியா? எனும் தலைப்புப்பேசப்பெற்றது. மிக்கப் பயனுடைய தாகவும் சுவையுடையதாகவும் அமைந்து திருமண விழாவினை மேலும் மகிழ்ச்சி நிறைந்ததாக ஆக்கியது அப்பட்டிமன்றம்.

கண்டரமாணிக்கத்தில் ஒருவரது மணிவிழாவின் போது பக்தித் தலைப்பொன்று பேசப்பெற்றது. மற்றோர் இடத்தில் குழந்தைகளின் காதணிவிழா; அங்கு, 'அருள் வழங்குவதில் முன்னிற்பவர் கண்ணனா, கந்தனா?' என்று பேசப் பெற்றதலைப்பு இடத்திற்கும் சூழ்நிலைக்கும் ஏற்பப் பொருத்தமாகவும் பயனு டையதாகவும் இருந்தது.

செல்வந்தர்கள் வீட்டு விழாக்களில் கச்சேரிகளும், நாதசுர இசைகளும் பிடித்து மகிழ்வித்த இடங்களில் இன்று பட்டிமன்றம்

நுழைந்து உறவினர்களுக்கும் பிறருக்கும் பயனுள்ள செய்திகளைப் பறைசாற்றி வருகிறது எனலாம். 81 ஆம் ஆண்டு இத்துறையில் நல்லதொரு வளர்ச்சியைப் பெற்றுள்ள தெனலாம்.

மதுரையில் 81 இல் நிகழ்ந்த உலகத்தமிழ் நாட்டுப் பட்டி மன்றங்கள் குறிப்பிடத்தக்கன. மதுரைக் காமராசர் பல்கலைக் கழகவளாகத்தில் ஆராய்ச்சியாளர்கள் பல்வேறு துறை ஆராய்ச்சிக் கட்டுரைகளைப் படித்துக் கொண்டிருந்த வேளையில் பந்தய மைதானத்தில் அமைந்திருந்த மாபொரும் அழகிய பந்தலில் பொதுநிலைக் கருத்தரங்கில் பட்டிமன்றங்களும் இடம்பெற்றன. அண்மைக்காலத்தில் இத்தகையதொரு மாபெரும் பட்டிமன்றம் நடைபெற்றதில்லை எனும்படி பெரும் வரவேற்பைப் பெற்றது.

## உண்மைப் பட்டிமன்றம்

மக்கள் நடுவில் விழிப்புணர்ச்சி ஏற்படுத்துவதற்காக இவ் வாண்டில் பல்வேறு உண்மைப் பட்டிமன்றங்கள் நடைபெற்றன. அஃதாவது சமுதாயத்தில் நேருக்கு நேர் மோதிக் கொண்டிருக்கும் இரு கொள்கைகளை, அக்கொள்கைகளை வலியுறுத்திக் கொண் டிருப்பதையே தம் வாழ்வியல் நோக்கமாகக் கொண்டிருப்பவர் களைக் கொண்டு பேசச் செய்து உண்மை அறிவது. இத்தலைப்பு களையும் ஆட்களையும் மோதவிடும் தைரியமும் நம்பிக்கையும் தவத்திரு குன்றக்குடி அடிகளாரைத் தவிர பிறருக்கு இல்லை எனலாம். புராணங்களுக்கும் பகுத்தறிவுக் கொள்கைகளுக்கும் ஏற்பட்ட மோதலை சொல்லின் செல்வர் இரா. பி. சேதுப்பிள்ளை யும் பேரறிஞர் அண்ணாவும் மேடையில் சந்தித்ததைப் போன்று அமைந்தவை அவை.

'மக்களை நல்வழிப்படுத்துவது ஆத்திகமா நாத்திகமா?' எனும் தலைப்பில் இரு கட்சியிலும் கொள்கை வழிப்பட்டவர் களையே கொண்டு பட்டிமன்றங்கள் நடந்தன. அறிவியலா- ஆன்மீகமா?' 'பக்தியா-பகுத்தறிவா' போன்ற கொள்கை மோதும் தலைப்புகள் கேட்போரும் கட்சிபிரிந்து கைதட்டவும் ஆரவாரம் செய்யவும் செய்ததைக் கண்டிருக்கிறோம்.

'நாடு முன்னேற இன்றையத் தேவை சர்வாதிகாரமா, ஜன நாயகமா?' 'காந்தீயமா-கம்யூனிசமா?' போன்ற தலைப்புகள் அவ்வக் கொள்கையில் ஈடுபாடு கொண்டவர்கள் பேசுகையில் அனல் தெறிப்பதைக் கண்டிருக்கிறோம், இத்தகு தலைப்புகளைக்

கூட்டம் முடிந்த பல நாட்கள் சென்ற பின்னரும் மக்கள் விவாதிப் பதனைக் கேட்டிருக்கிறோம். பட்டிமன்றத்தின் பங்கும் பயனும் இத்தகு நேரங்களில் நன்கு விளங்குகின்றன,

அரசியல் கட்சிகளும் தம் கருத்துகளைக் கூறுவதற்குப் பெருங் கூட்டங்களைச் சேர்ப்பதற்குப் பட்டிமன்றங்களைப் பயன் படுத்துகின்றன. தம்தம் கட்சித் தலைவர்களின்—பெரும்பாலும் மறைந்த தலைவர்களின்—புகழை மையாக வைத்துப் பட்டி மன்றங்கள் நடைபெற்றன.

திராவிடர் கழகம், இவ்வாண்டில், அதன் மாநாடுகளிலும் பிற இடங்களிலும் A பட்டிமன்றங்கள் நடத்தியது. அவர்களது கொள்கைகளில் ஒன்றான புராண எதிர்ப்பை நடுவணதாக்கியும், அவை ஆபாசங்களை வலியுறுத்துகின்றன என்று கூறியும், திரைப் படங்களில், 'வயது வந்தோர்க்கு மட்டும் எனும் குறியீடான 'A' யினைப் போட்டுப் பட்டிமன்றம் நடத்தினர். 'ஆபாசத்தை அதிகம் கொண்டது எது? கம்பராமாயணமா? பெரிய புரணமா?' அயோக்கியன் யார்—கண்ணனா ராமனா?' என்பன போன்ற தலைப்புகள் பேசப்பெற்றன, இவ்வாறுள்ள தலைப்புகள் பக்தர்களின் உள்ளங்களைப் புண்படுத்துமே என்று கேட்ட போது பக்தர்கள் போடும் பட்டிமன்றங்கள் தம் உள்ளங்களைப் புண் படுத்துவதாகக் கூறினர். இவைகளும் கொள்கை விளக்கப் பட்டிமன்றங்களே.

## மகளிர் பட்டிமன்றம்

பெண்களே கலந்துகொள்ளும் பட்டிமன்றங்கள் பல இடங் களில் இவ்வாண்டு நடைபெற்றன. பட்டிமன்றம் பேசும் பெண் பேச்சாளர்கள் நிரம்ப உள்ளனர் ஆதலாலும், ஒரு புதுமையாகத் தோன்றும்என்பதாலும்மகளிர்பட்டிமன்றங்கள்பலநடைபெற்றன. சில இடங்களில் ஓரணி முழுவதும் பெண்களாகவும் மற்ற அணி ஆண்களாகவும் அமைந்ததும் உண்டு. 'கணவனா மனைவியா?', 'அருள் வழங்குவதில் முன்னிற்பவர் அப்பனா அம்மையா', 'ஆண் அடியார்களா—பெண்ணடியார்களா?' என்பன போன்ற தலைப்பு களில் ஆண் கட்சிக்குப் பெண்களும், பெண் கட்சிக்கு ஆடவரும் பேசி மகிழ்வித்த பட்டிமன்றங்கள் பல.

## தோல்வி

ஒருசில விழாக்களில் பட்டிமன்றங்களுக்குப் பின் அதே மேடையில் இசை நிகழ்ச்சியோ, நாடகமோ, திரைப்படமோ ஏற்பாடு செய்திருந்தனர். இவற்றுள் குறிப்பாகத் திரைப்படம் காட்டுவதாக இருந்தால் பட்டிமன்றம் நடத்துவது பெருஞ்சிரமம்.

வந்திருப்பவர்களில் பெரும்பாலோருடைய எண்ணம் திரைப் படத்தில் இருப்பதால் பட்டிமன்றம் காதில் விழாது; ஒத்துழைப்பு இருக்காது; மகிழ்ச்சி, ரசிப்பு, ருசிப்பு இல்லாத இடங்களில் பட்டி மன்றம் தோல்வியடைவது இயல்புதானே. 81இல் இத்தகைய தோல்விகளும் நிகழ்ந்துள்ளன. அமைப்பாளர்கள் மிக்கார்வத்தில் ஒரே மேடையில் பட்டிமன்றத்தையும், அதற்கடுத்து இசைக் கச்சேரியையும் ஏற்பாடு செய்தனர். வீணை போன்ற நுண்கருவி களை இணக்கத்திற்குக் கொண்டுவர நேரமாகுமாதலால் ஒரு வீணையை மேடைக்குக் கொண்டு வந்து விட்டனர்; அதன் பிறகு பட்டிமன்றத்தை நிறுத்த வேண்டும் என்று ஒரு சாராரும், தொடர வேண்டும் என்று மற்றொரு சாராரும் கூட்டத்தில் தம்முள் பட்டிமன்றம் பேச ஆரம்பித்துவிட்டனர்; மொத்தத்தில் பட்டிமன்றம் தோல்வியடைந்தது.

கூத்தும் கரகமும் வழக்கமாக நிகழும் திருவிழாவில் இவ் வாண்டு இளைஞர்கள் பட்டிமன்றம் நடத்த முன் வந்து தோல்வி கண்டதும் உண்டு. ஆடுபவர்களையும் பாடுபவர்களையும் எதிர் நோக்கி நிற்கும் கூட்டத்தில் பேசுபவர்களைக் கண்டால் எரிச்ச லடைவது இயல்புதானே.

சில பட்டிமன்றங்களில் பேச்சாளர்களுக்கு இடையிடையே பரிசு கொடுப்பதைக் கண்டிருக்கிறோம். ஆவேசமாகப் பேசிக் கொண்டிருந்த பேச்சாளர் ஒருவருக்குப் பார்வையாளர் கூட்டத் திலிருந்து வந்த ஒருவர் பத்து ரூபாய் அன்பளிப்பாகக் கொடுத் தார். இந்தப் போக்கைத் தடுத்த நடுவர் கூறிய காரணம் சிந்திக்கத் தக்கது. நாடகத்திலும் கலை நிகழ்ச்சியிலும் ரூபாய் நோட்டு கொடுப்பது போல இது இருக்கிறது. பல ரூபாய் நன்கொடை கொடுத்தவர்கள் பெயர் வெளித் தெரியாதிருக்க, சிறுதொகை கொடுத்தே விளம்பரம் தேடுவது விரும்பத்தக்கதல்ல. பேச்சாளர்களுக்குள் வேற்றுமை காட்டுவது தவறு. முந்தைய ஆண்டில் இருந்ததைவிட இப்பழக்கம் குறைந்துவிட்டது; நகர்ப் புறங்களில் இவ்வாறு பரிசுப் பொருளும் பணமும் தரும் வழக்கம் முற்றிலும் கிடையாது.

## எதிர்ப்பு

இவ்வாண்டில் பட்டிமன்றத்திற்குக் கடுமையான எதிர்ப்புத் தோன்றியது. பட்டிமன்றம் பொருள் விரயம் என்றும், இந்து சமய நெறிக்கு எதிர் என்றும், தரம் தாழ்ந்து போகிறதென்றும் பெரிதாகப் பேசப் பெற்றது.

தினமலர், கலைமகள், தினமணிகதிர் போன்ற இதழ்களிலும், விளம்பரத் தாள்களிலும் பட்டிமன்றத்தை எதிர்த்துப் பலர் எழுதினர். தென் மாவட்டங்களில் சமயக் கலவரங்கள் தலை எடுத்த போது இந்து சமயக் காவலர்கள் என்று கூறிய சிலர் பட்டிமன்றங்களில் இந்துக் கடவுளர்கள் பழிதூற்றப்படுகின்றனர் என்று குற்றஞ்சாட்டி எதிர்த்தனர். குற்றாலத்தில் நடந்த பட்டி மன்றத் தலைப்பினை மாற்ற வேண்டும் என்றும், மாற்றாவிடில் நிறுத்த வேண்டும் என்றும் பல தந்திகள் கொடுக்கப் பெற்றன.

புராணங்களிலும் இதிகாசங்களிலும் வரும் கதைமாந்தர்கள் தொழத்தக்கவர்கள் என்றும், அவர்களைப் பேரவைகளில் இலக்கிய மாந்தர்களாகவும், கதைமாந்தர்களாகவும் கருதி ஆராய்வது இந்து மதத்தை இழிவுபடுத்துவது என்றும், பக்தர்களைப் புண் படுத்துவது என்றும் எழுதவும் பேசவும் செய்தனர்.

சமயப் பீடங்களின் தலைவர்களில் சிலரும் முன் வந்து கோயில்களில் பட்டிமன்றம் நடத்துவது தீது எனப் பேசினர்; எழுதினர்; அவர்களைப் பின்பற்றும் சிலரும் அதைக் கடைப் பிடித்தனர். நாளிதழ்களில் கடிதம் எழுதிய சிலர் பட்டிமன்றத் திற்கு ஆதரவாகவும் எதிர்ப்பாகவும் எழுதினர். மதுரையில் திருவள்ளுவர் மன்றம் போன்றவற்றில் பட்டிமன்றம் நடத்துவ தில்லை. நடத்தி வந்தவர்கள் நிறுத்தி விட்டனர். சில கம்பன் கழகங்களிலும் கருத்தரங்கும் கவியரங்கும் நடத்தி விட்டுப் பட்டி மன்றம் நடத்தாமல் இருந்தனர். பின்னர் அந்த விழாக்களில் மக்கள் கூட்டம் அரிதானதை அறிந்து அவ்வெண்ணத்தை மாற்றி யுள்ளனர்.

மதுரையில் பேசிய சிலர் கேட்டுக் கொண்டதற்கிணங்க திருக்குறளார் முனுசாமி அவர்கள் பட்டிமன்றத்தில் கலந்து கொள்வதில்லை என்று கூறினார். பின்னர் இப்போதெல்லாம் பட்டிமன்றங்களில் பேசியே வருகிறார்.

குறிப்பிட்ட சில அரசியல் கட்சிப் பேச்சாளர்கள் பட்டி மன்றங்களை எதிர்த்துப் பேசி வந்தனர். அதன் குறைகளைப் பல்வேறு கோணங்களில் விரிவாகப் பேசினர். பல்கலைக் கழக ஆசிரியர்கள் சிலர் இப்பட்டிமன்றத்தைக் கிண்டல் செய்தும், பேசு வோரைக் கேலி செய்தும் பேசி வந்தனர். ஆராய்ச்சி அறிவுடை யார்க்கு இஃதாகாத் தொழில் எனப் பேசி வந்ததை நாம் அறிவோம்.

புதிய அறிவு ஜீவிகளான சில கவிஞர்கள், பட்டிமன்றத்தைக் கேலி செய்து கவிதைகள் படைத்துச் சிரித்தனர்.

இவ்வாறு பட்டிமன்றத்தைக் குறைவாகப் பேசியவர்களில் பெரும்பாலோர் இது சமயத்தை, குறிப்பாக இந்து மதத்தை பாத்திரங்களை அலசுவதன் மூலம் இழிவு படுத்துகிறதென்றே கருதினர். பெரியபுராணத்தைப் பேசும் போது சிவபெருமானின் நிறை குறை அலசப்படும்; அதை இலக்கியம் என்று எடுக்கக் கூடாது என்று வற்புறுத்துகின்றனர்.

மேடையில் பட்டிமன்றம் பேசாதவர்களும், பேசித் தோற்றவர்களும் பேச வாய்ப்பில்லாதவர்களும், பேசியவர்களைக் கண்டு பொறாமை கொள்வோரும், உள்நோக்கம் கற்பித்துப் பேசுவோரைப் புரிந்து கொள்ளாதவர்களும், சமயப் போர்வையிலுள்ள இலக்கிய எதிரிகளும் இக்கலையை எதிர்த்தனர்.

என்றாலும் பட்டிமன்றம் பரந்து கொண்டே வருகிறது. தரம் குறைந்த பேச்சு, நடுப்பொருளை விட்டு நாலா பக்கங்களிலும் சுற்றும் போக்கு, ஆழமான படிப்பின்மை, சொல்வளமின்மை' தொடர்பற்ற செய்திகள் போன்றவை பட்டிமன்றத்திற்கு எதிர்ப்பைத் தேடித் தந்தன. எனினும் அதன் செல்வாக்கு வளர்ந்து சிறக்கிறது. எதிர்ப்பு இருந்தால்தான் அதிலிருக்கும் குறைகள்-உண்டெனில்-மறைய வாய்ப்பிருக்கிறது.

## நகைச்சுவை

பட்டிமன்றத்தில் சிரிப்பு வெடி கிளம்பி மக்களை மகிழ்விக்கும். சொல்லும் முறையிலேயே நகைச்சுவை விளைவிப்பவர்களும் உண்டு; சிறுகதைகளும் துணுக்குகளும் கூறி கூட்டத்தை மகிழ்விப்பவர்களும் உண்டு. மொழி நடையைக் கீழிறக்கித் தரம் இறக்கிப் பேசுபவர்களால் இந்தக் கலைக்கு ஒரு கெட்டபெயர் வருகிறதெனக் கூறுவதும் உண்மையே. உணவுக்கு உப்புப் போல் நகைச்சுவை பட்டிமன்றத்திற்குத் தேவை; அதிகமானால் கேலிக் கூத்தாகவும், சிறிதும் இல்லை என்றால் அலுப்புத் தட்டுவதாகவும் அமைய நேரிடும். 81 இல் பட்டிமன்றங்களுக்கு ஒரு திசையில் இருந்து வந்த எதிர்ப்பின் காரணமாகப் பேசுபவர்கள் தம்மையறியாமலே அதன் தரத்தில் கவனம் செலுத்தினர் எனலாம். ஆகவே நயமான கதைகளும் சுவையான துணுக்குகளும் காலத்தின் தேவையாகிவிட்டன,

சுதந்திரமடைந்து முப்பத்தினான்கு ஆண்டுகளாகியும் நாடு உரிய வளர்ச்சியடையவில்லை என்பதற்கு, ஒன்றரை வயது குழந்தையின் மழலையும் தவழும் மென்மையும் கேட்கவும் காண வும் மகிழ்ச்சியாக இருக்கும்; முப்பத்தினான்கு வயதில் ஒருவன் மழலை பேசித் தவழ்ந்து கொண்டிருந்தால் மகிழ்ச்சிவருமா அழுகை வருமா என்று கூறிய துணுக்கு யாவரையும் சிந்திக்க வைத்தது.

## முடிவுரை

பட்டிமன்றம் கருத்துப் பரிமாற்றத்திற்கும் கருத்துப் பரப்பு தற்கும் ஒரு நல்ல கருவியாகப் பயன்படுத்தப்படுகிறது. இலக்கியத் திற்கெனத் தோன்றிய கலை இவ்வாண்டில் சமயத்திற்கும் அரசிய லுக்கும் கூடப் பயன்பெற்றிருக்கிறது. ஆகவே அவ்விரண்டையும் பிடிக்காதோரும், அவ்விரண்டிலும் அதிக வெறி கொண்டோரும் பட்டிமன்றத்தை எதிர்க்கவும் தொடங்கினர். உலகத்தமிழ் மாநாடு, பாரதி நூற்றாண்டு விழா, தலைவர்களின் பிறந்த நாள் விழாக்கள் இவ்வாண்டில் பட்டிமன்றத்திற்கு மிகுந்த ஏற்றம் கொடுத்தன எனலாம். சமுதாயச் சிந்தனைத் தலைப்புகளும், சமயச் சார்புடைய தலைப்புகளும் பெரிதும் பட்டிமன்றங்களைப் பிடித்துக் கொண்டன. உண்மைப் பட்டிமன்றங்கள் மிகச் சில இடங்களில் போடப்பெற்றாலும் அவை மக்கள் நடுவில் நல்ல வர வேற்பைப் பெற்றதோடு பெருந்திரளான மக்களை ஈர்த்தன. கொள்கை மோதல்கள் ஆர்வந்தூண்டுவனவாக இருந்தன. நாட்டுத் திருவிழாக்களில் நடந்துவந்த பட்டிமன்றம் வீட்டுத் திரு விழாக்களிலும் இடம்பெற்று நற்செய்திகளைக் கொண்டு கொடுத் தன. முந்தைய ஆண்டுகளை விட இவ்வாண்டு நிரம்பப் பெருகி யிருந்தன. ஒரு மூலையில் இருந்து பட்டிமன்றத்திற்கு வந்த எதிர்ப் பினால் அதன் வளர்ச்சிக்கும் பரப்பிற்கும் எந்தத் தடையும் வந்து விடவில்லை; மாறாகப் பட்டிமன்றப் பேச்சாளர்களின் பொறுப்பு கூடியிருக்கிறது. இக்கலையின் வளர்ச்சியாக வழக்காடுமன்றங்கள் தோன்றிக் காலூன்றி வருகின்றன.

# 32. கவியரங்கு

வா. மு. சேதுராமன்
மு. வெள்ளைச்சாமி

எண்ணக் கலவைக்கு அணிவண்ணம் பூட்டி, எழுத்துத் தேரில் இதயத்தைச் சுற்றிவர, சாலை அமைப்பது கவியரங்காகும். 1981-இல் கவியரங்கத்தமிழை நோக்கும் போது, "இந்த விந்தையான தலைமுறை தனது கைகளில் இறந்த காலத்தின் மண்ணையும், வருங்காலத்தின் விதைகளையும் வைத்திருக்கிறது" என்னும் கலீல் கிப்ரானின் வாக்கு தான் நினைவுக்கு வருகிறது.

புவி அரங்கில் தலைமை ஏற்கும் கருத்துகள் கவிதை ஆடை புனையும் இடம் தான் கவியரங்குகள்! எண்ணக் கலவைக்கு அணி வண்ணம் பூட்டி, எழுத்துத் தேரில் இதயத்தைச் சுற்றிவர, சாலை அமைப்பது கவியரங்காகும்! இதய வானில் மின்னும் சிந்தனைப் பொறியை உணர்த்தவே கவிதைப் போட்டிகள்!

அடிமை இந்தியாவின் கவிதைப் பேரரசராகிய மூவரில் பாரதி யின் கவியரங்கமாக எட்டப்ப பூபதியின் அவைக்களம் விளங்கியது. சுதந்திரப் பேரியக்கத்தின் மாநாட்டில்தான் தாகூரின் "ஜனகண மன" அரங்கேறியது. 'ஹிந்துஸ்தான் ஹமாரா' என முழங்கிய இக்பாலை "முஷையராக்கள்" என்ற கவியரங்குகளே உலகிற்குத் தந்தன.

கவிதைப் பயிர் விளைவிக்கும் கவியுழவன் எத்தகையவன்? அவன் செயல் எத்தகையது? "யாப்பு முறையில் விதைக்கப்பட்ட கவிதைப் பயிர் நெருங்கிப் பயன்குன்றி நிற்குமாயின், களையும் களைந்து, கவிதைப் பயிருக்கு கேடுவராமல் காப்பாற்றுவதோடு,

உரமென்னும் அணியழகு செய்து, அனுபவங் கண்ட தக்காரிடம் காட்டி, நலந்தீது உணர்ந்து, பத்திரமாகக் காத்து, உலகத்திற்குப் பயன் படுத்தித் தானும் உணர்ந்து, புகழ் பெற்று மகிழ்பவன் எவனோ, அவனே, சொல்லை ஏராக உடைய சொல்லேருழவன் என்னும் புலவனாம் என்கிறார் மலேசிய மாமுனி சுவாமி இராம தாசர்.

பொருள் தேடச் செல்கிறான் தலைவன், செவிப்புலன் உழும் கவிப்புல மக்கள் நிறைந்த மதுரை காண்பான். அங்கே தங்கி விடுவானோ? கவிச்சுவை புதிதுண்ணும் வாய்ப்புக் கிடைத்தால் தங்கி விடுதல் இயல்பு என்பதைக் கலித் தொகைப் பாட்டு உணர்த்துவதன் மூலம் சங்ககாலம் கவியரங்கங்களை நாம் அறியலாம்.

அரசன் நினைத்ததை அவையில் கவிதை பாடினால் ஆயிரம் காசு பொற்கிழி! அரசவையே கவியரங்கமாக விளங்கும் சிறைப் பைத் தானே தருமி பொற்கிழிக்காக, "கொங்கு தேர் வாழ்க்கை" என்ற பாடலைப் பாடும் செயல் நமக்கு விளக்குகிறது.

பாடினால் கிடைப்பது சன்மானம், பரிசு, அதைப் பற்றிச் சூடிக் கொடுத்த நாச்சியார் பாடுகிறாள்:

"......... உன் தன்னைப்
பாடிப்பறை கொண்டு யாம்பெறும் சன்மானம்
நாடுபுகழும் பரிசினால் ஒன்றாகச்
சூடகமே தோள் வளையே தோடே செவிப்பூவே
பாடகமே யென்றனைய பல்கலனும் யாமணிவோம்
ஆடையுடுப்போம் அதன் பின்னே பாற்சோறு
மூடநெய் பெய்து முழங்கை வழிவாரக்
கூடியிருந்து குளிர்ந்தேலோர் எம்பாவாய்!"

கவிதை வெளியிடும் வாய்ப்பைத் தருவது கவியரங்கமாகும். கவிதை படிக்க மேடை அமைத்துத் தருவது போன்றதே, கவிதைப் போட்டி நடத்திக் கவிதை வெளியிடுவதும். மக்கள் கூடி நின்று கவிதை கேட்பதற்கு இணையானதே வானொலியிலும், தொலைக் காட்சியிலும் கவிக்குரல் கேட்பது. எனவே கவியரங்கம், மேடைக் கவியரங்கம், போட்டிக் கவியரங்கம், வானொலி, தொலைக் காட்சிக் கவியரங்கம் என்று செயல்பாட்டின் வேறுபாட்டைக் கொண்டு பிரிக்கலாம்.

பாரதியின், "செந்தமிழ் நாடெனும் போதினிலே, இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே"— என்ற பாடல், கவிதைப்

போட்டி நடத்தியதால் நமக்குக் கிடைத்தது. பாரதியைப் பற்றிப் பாரதிதாசன் வழங்கிய 'மகாகவி பாரதி' என்ற கவிதை, வானொலி பாரதிதாசனைக் கேட்டுக் கொண்டதால்தான் கிடைத்தது-

''சிந்துக்குத் தந்தை, செந்தமிழ்த் தேனீ!
கவிழ்க்கும் பகையைக் கவிழ்க்கும் கவிமுரசு
காடுகமழும் கற்பூரச் சொற்கோ!
அறம் பாடவந்த அறிஞன்''

என்றெல்லாம் பாரதியைப் போற்றும் பாரதிதாசன் வரிகள் தமிழ்க் கவிதை பாடியவனுக்குச் சூட்டிய இதய உணர்ச்சிச் சொல் மாலை ஆகும்.

கவிதை எப்படி இருக்கவேண்டும் என்பதைப் பாரதிதாசனுக்கு விளக்கியதைத் தன்னுடைய ''தராசின்'' மூலம் வெளியிடுகிறார்.

காசிப்பட்டுப் போல பட்டு நெய்ய வேண்டும். அல்லது உறுதியான, உழவனுக்கு வேண்டிய, கச்சை வேஷ்டி போல நெய்ய வேண்டும். மல் நெசவு கூடாது. மஸ்லின் நீடித்து நிற்காது. பாட்டின் வலிமை, தெளிவு, மேன்மை, ஆழம் நேர்மை இத்தனையும் இருக்க வேண்டும். இதற்குமேல் நல்ல வர்ணஞ் சேர்த்தால் குற்றமில்லை'— எனக் குறிக்கிறார். 'புலவன் நீ' எனப் பாராட்டுகிறார். 'எங்கெங்கு காணினும் சக்தியடா' என்ற அக்கவிதை, சுதேசமித்திரனில் அரங்கேறும் முயற்சியைச் செய்கிறார்.

மக்கள் எழுத்தாளர் சங்கம், சமுதாயப் பிரச்சினையை மையமாக வைத்துக் கவியரங்கம் நடத்தும் போதுதான் நா. காமராசன் 'விலைமாதை''ப் பற்றிக் கவிதை பாடினார்.

''நாங்கள் ரஜனியின் மக்கள்
மன்மதனின் ஒற்றர்கள்
கற்புச் சிறையை உடைப்பதால்
கைது செய்யப் படுகிறோம்!
எங்களுடைய நீதிமன்றத்தில் தான்
ஒழுக்கம் தண்டிக்கப் படுகிறது,
நாங்கள் நிர்வாணத்தை விற்பனை செய்கிறோம்,
ஆடை வாங்குவதற்காக!......
நாங்கள் ரோஜாப் பூக்கள்
ஆனால் எங்களைப் பறிப்பவர்களின்
கைகளில்தான்

முள் முளைத்திருக்கிறது!
குழந்தைகளின் பசியை நாங்கள் அறிந்ததில்லை,
ஏனெனில்,
நாங்கள் பசியின் குழந்தைகள்,
எங்கள் முதலிரவிலும் கூட
வேர்வைப் பன்னீர்தான் தெளிக்கப்படுகிறது;

கவிதைப் போட்டி நடத்தி, அதில் வென்றதால் இரண்டாம் உலகத்தமிழ் மாநாட்டில் மேடையேறிய கவிதையின் சில வரிகள்:

"பிறநாட்டு வணிகர் வந்து பெரும் பொருள்
ஈட்டிச் செல்ல,
திறல் நாட்டு வணிகர் மைந்தன்
திருவினைத் தேடற்கென்று
புறநாட்டிற் போன அந்நாள்
பூம்புகார் வரலாற்றின் கண்
கறைபட்ட ஒருநாள்
துன்பக் கண்ணீரைத் துடைப்பதென்றோ"

அன்று குருவிக்கறம்பை சண்முகத்திற்குக் கவியரங்கம் வழங்கிய ஊக்கமே, அவர் மேலும் பல கவிதை நூல்களை வழங்கச் செய்தது.

பொதுவாகக் கவியரங்குகளைப் பற்றிக் கண்டோம். இனி 81 ஆம் ஆண்டில் தமிழ்க் கவியரங்குகள் பற்றிக் காண்போம்:-

வானொலிக் கவியரங்கில் இல்லாத சிறப்பு, போட்டிக் கவியரங்கில் கிடைக்காத மகிழ்ச்சி, மேடைக் கவியரங்கில் கவிஞர்களுக்குக் கிடைக்கிறது. கவியரங்க அமைப்பாளர்களும், பார்வையாளர்களும் அடையும் மகிழ்ச்சியைக் கவிஞன் நேருக்கு நேர் கண்டு பேரின்பம் அடைகிறான், "கணவன் இனிதென உண்டனன் நுண்ணிதின் மகிழ்ந்தன்றால் ஒண்ணுதல் முகனே" என்ற குறுந்தொகைத் தலைவியைப் போல கவிஞன் மகிழ்ச்சி அடைகிறான். கவிதை கேட்டு மகிழும் சான்றோர்களை நோக்கிக் கண்ணதாசன் "சேய் சமைத்த சோற்றைச் சிந்தாமல் சிதறாமல்—தாய் உண்ணும் பாவனையில் சபை நிறைந்த சான்றோரே"— என்கிறார்.

பார்வையாளர்களோ, அல்லது செவிவழிச் சுவைஞர்களோ இல்லாத கவியரங்கம் எப்படியிருக்கும்? "காகம் கரைவதையும்-வானம்பாடி பாடுவதையும் கவனிக்க யாருமில்லையேல் இரண்டும்

இசையே. நன்றாகப் பாடுவதாகக் கூறப்படும் இராக்குருவி சிறு குருவி போலப் பகலில் பாடுமாயின் அதன் இசைக்கு மதிப்பேது'' என்கிறார் ஷேக்ஸ்பியர். எனவே கவியரங்குகள் வானம்பாடியின் இசையைப் போன்றும் காலத்திற்கேற்ப சுவையூட்டும் இராக் குருவியின் பாடல் போன்றும் அமையவேண்டும். ஆனால் கவியரங்கை அமைக்கின்றவர்கள், கலந்துகொள்கிறவர்களின் நோக்கம் என்ன?

'உலகத்தில் தன்னால் முடியாத காரியத்தைத் தனக்கு உதவி யாக இருப்பவனைக் கொண்டு செய்து முடித்துக் கொள்ளுதல் வேண்டும். ஒருவன் நல்ல கண்ணுள்ளவனாக இருந்தாலும், இருளில் இருக்கும் பொருளை விளக்கில்லாமல் பார்க்க மாட்டான் என்று காளிதாசன் சொன்னதைப் போல இன்றையக் கவியரங்க அமைப்பாளர்கள் தங்களுக்கு வேண்டிய செயல்களைச் சந்தித்துக் கொள்ளும் நோக்குடனே கவியரங்க மேடைகளை அமைக் கின்றனர். அதில் கலந்து கொள்கின்ற கவிஞர்களும் ''யாளியை மரங்களாலும், கரடியைக் கண்ணாடியாலும்; யானையைப் பொய்க் குழிகளாலும், சிங்கத்தைக் கண்ணிகளாலும், மனிதர் களைத் தற்புகழ்ச்சியினாலும் ஏமாற்றலாம் என்று ஷேக்ஸ்பியர் கூறியதை, நன்கு உணர்ந்தவர்களாக, மிகச் சிறப்பாக மனிதத் துதிகளைப் பக்குவமாக வெளியிடுகின்றனர்.

கவியரங்க வரலாற்றின் ஒரு பகுதியைச் சுட்டிக் காட்டினேன். கவியரங்கத்தின் மறுபகுதியை—குறிப்பாக இன்றைய மேடைக் கவியரங்கத்தின் மறுபகுதியை மேத்தா காட்டுகிறார்.

> ''கவியரங்கில் பங்கு கொள்ளக் கவிஞர்கள் மட்டும் வருவார்கள் என்று உறுதி சொல்லமுடியாது...கவிஞர்கள் என்று தம்மை அழைத்துக் கொள்ள ஆசைப்படுகிறவர்களும் வரலாம். கவிதை ரசிகர்கள் மட்டுமே வருவார்கள் என்று எதிர்பார்க்க முடியாது. வேடிக்கை வினோதங்களைப் பார்க்க விரும்புகிறவர்களும் வரலாம்...அங்கு என்ன நடக்கும். சில பல சில்லறைச் சிலேடைகள்; துள்ளிக் குதிக்க வைக்கும் நகைச்சுவைத் துணுக்குகள்; கொஞ்சம் சுட்டித்தனமான குட்டிக் கதைகள்; வானொலி பத்திரிகைச் செய்திகளின் அசட்டு வர்ணனைகள். அங்கங்கே சிறிது அரசியல் பொடி நெடிகள்; எதுகை மோனைவிடுத்த விருத்தங்கள். மேளதாளங்

கொட்டும் சந்தச்சத்தங்கள். படபடக்க வைக்கும் பாலுணர்வுக் காட்சிகள். இவையெல்லாம், செய்யுள் ஒப்பனை செய்து கொள்ளும் பழைய கவிதை என்று பங்கைக் காட்டும், புதிய கவிதை என்று வந்து மூக்கைத் தீட்டும்.''

'பொழுது போக்க உதவும் நூல்கள், தேவை ஏற்படும்போது உதவும் நூல்கள், வாழ்நாள் முழுதும் உதவும் நூல்கள்' என்று ரஸ்கின் நூல்களை மூன்று வகையாகப் பிரித்தவிதம் போல, கவிதைகளையும் பொழுது போக்குக் கவிதைகள், கொதித்து எழும் கவிதைகள், இலட்சிய வழிகாட்டும் கவிதைகள் என மூவகையாகப் பிரிக்கலாம்.

அரசியல் கவியரங்குகள், அரசு விழாக் கவியரங்குகள், பக்திக் கவியரங்குகள், இலக்கியக் கவியரங்குகள், தனிமனிதர் பற்றிய கவியரங்குகள் ஆகியவற்றின் பெரும்பாலும் பொழுது போக்குக் கவிதைகளே புனர்சென்மம் எடுக்கின்றன. சிலர் அழுத்தமான சிந்தனைகளையும் பாடுவதுண்டு.

பகுத்தறிவுக் கவியரங்குகள், பொதுவுடைமைக் கவியரங்குகள், சமுதாயச் சீர்திருத்தக் கவியரங்குகள் ஆகியவற்றில் பெரும்பாலும் கொதித்து எழும் கவிதைகளே குமுறிப்பாய்கின்றன. அனைத்துக் கவியரங்குகளிலும் அத்திபூத்தாற்போல்தான் இலட்சிய வழி காட்டும் கவிதைகள் மின்னி மறைகின்றன. ஏன்?

'உழைக்காதுண்டு களித்திருப்போனும்
எத்திப் பிழைக்கும் ஒட்டுணியாளனும்
மதத்தின் தலைவனும் சமயச் சழக்கனும்
மாந்தர் வழியெலாம் வலை விரித்துள்ளனர்
ஏற்றத்தாழ்வின் ஏற்பாடின்னும்
முறைமாறாமல் கறையாய் உள்ளதே
இந்நிலை மாறுவ தெந்நாள்'

என்றார் இக்பால். அந்த நிலைதான் இன்றும் கவியரங்குகளில் மாற்றம் இல்லாமல் தோற்றம் கொள்கின்றது.

''நீயார் என்று கேட்டேன் மழையைப் பார்த்து
மழை சொன்னது நான் பூமியின் கவிதை.''

மண்ணுக்குப் பயன்படும் மழை பூமிக்குக் கவிதையாக 'வால்ட் விட்மனுக்குத் தோன்றியதைப் போல, தமிழுக்குப் பயன்படும் கவியரங்கக் கவிதைகளைப் புயலின் வேகத்தோடு தேடினோம். எத்தனை பகல்கள், எத்தனை இரவுகள் எத்தனை மன்றங்கள்,

எத்தனை மனிதர்கள், எத்தனை கவிஞர்கள், எத்தனை கவிதைகள்? எத்தனை அனுபவங்கள்? இந்த அனுபவங்களை எல்லாம் ஒன்று திரட்டிப் பார்க்கும்போது 'பைரன்' சொன்ன சொற்களைத் தான் எழுதவேண்டிவருகிறது.

பைரன் தன் கவிதைகளை அச்சகத்திற்கு அனுப்பினார். அங்கிருந்தவர்களுக்கு அவருடைய எழுத்துப் புரியவில்லை. எனவே அவரிடம் கேட்டனர். அப்போது அவர் "இதை எழுதும் போது என்ன எழுதினேன் என்று எனக்கும் தெரியும் ஆண்டவனுக் கும் தெரியும். ஆனால் இப்பொழுது ஐயகோ, அந்த ஆண்டவன் ஒருவனுக்குத்தான் தெரியும்'' என்றார். அதுபோன்றே நான் சந்தித்த, 81ஆம் ஆண்டில் கவியரங்கேறிய கவிஞர்களிடம் கவிதை கேட்டவுடன், 'காற்றிலே மிதந்துவிட்ட கவிதைகளைப் போற்றிய நினைவொன்றே உண்டு, தங்களிடம் தருவதற்குப் பாட் டொன்றும் இல்லை' என்கிறார் சிலர்.

கலங்கரை விளக்கிற்கு விளம்பரப் பலகையா? புலமைப் பித்தன், வைரமுத்து, தமிழன்பன், இளந்தேவன், ஆற்றலரசு, கோவேந்தன் போன்ற சென்னைக் கவியரங்கக் கவிஞர்கள் முசுக்குறி காட்டினர். 81ஆம் ஆண்டுக் கவிஞர்களிடம் பாரதியின் தாக்கம் அதிகமாகவே தெரிகிறது. உடன்பாடாகவும் எதிர் மறையாகவும், குறிப்பாகவும் வெளிப்படையாகவும் பாரதியைப் போற்றும் பாங்கு கவிதையாகிறது.

## பாரதி கலைக்கழகம்

பாரதி கலைக்கழகம் நடத்திய மாதக் கவியரங்கில் மலர்ந்த சில கவிதை மலர்கள் மூலம் 81ஆம் ஆண்டுச் சிந்தனை யோட்டத்தை அறிந்துகொள்வோம்.

"இருண்டு கிடந்த இந்திய வானில்
புரண்டு நெளிந்த புதியதோர் மின்னல்
வறண்டு வெடித்த இலக்கிய வயலில்
திரண்ட கதிர்கள் சேர்த்தவோர் வெள்ளம்,
காலம் அனுப்பிய அற்புதக் கலைஞன்,
கனவில் அமுதைப் பிழிந்த கவிஞன்
பாரதி என்பவன் யுகத்தின் தொடக்கம்
பாரதிக் குள்ளே பாரே அடக்கம்''

என்று மதிவண்ணன் பாரதியை யுகக்கவிஞனாக, உலகச் சிந்தனைகளைத் தன் கவிதைக்குள் அடக்கியவனாகப் போற்று கிறார்.

"உத்தம புத்திரனாய்
ஊழியம் புரியாமல்
எத்தர்கள் ஆட்சிக்கு
எமனாகக் குரல் கொடுக்க
நானென்ன பாரதியா?"

என்று எதிர்மறையாக தேவ நாராயணன் பாரதியை, பாரதியின் ஆட்சி எதிர்ப்பை விளக்குகிறார்.

81ஆம் ஆண்டில் எழுத்துலகம் எப்படி இருந்தது என்பதை ஐயாறப்பன்,

"பித்தேறிக் கெட்டலையும்
பீழை எழுத்துலகம்
சித்தம் தெரிந்திங்கே
சீக்கிரமே தேராதோ
எத்திப் பிழைக்காமல்
எழுத்துக்கு வலுவூட்டி
முத்தான சித்தனையை
மூண்டெழவே செய்யாதோ"

என்று சாடுவதன் மூலம் கவிதை காலக்கண்ணாடியாக இருப்பதை நாம் உணரலாம். அதே வேளையில் கொதித்தெழும் மனத்தைத் திசைதிருப்பும் தன்மையில் இலந்தை இராமசாமி,

"நெஞ்சே இன்னும் கரகமாடி
தஞ்சம் என்று சார்ந்த பின்னே
சரணம் தானே முக்கியம்,
அஞ்சேல் என்று காக்கும் தெய்வம்
நீயேன் அல்லல் படுகிறாய்
யாவும் அள்ளித் தருகையில்
எஞ்சுகின்ற வாழ்க்கை எல்லாம்
இன்பம் இன்பம் இன்பமே"

என்று பூசலார் நாராயணன் போல தனக்குள்தானே சுகம்கண்டு கொள்ளும் சிந்தனை, உலக வாழ்வியலை விட்டுத் தூங்கிப்போகும் மனவீச்சு கவியரங்கில் முளைப்பதையும் அறிகிறோம்.

தமிழழகன், மகி, ரா. பு. தங்கராசன், நா.சீ. வரதராசன், சிதம்பரம் சுவாமிநாதன், ப.வே. சுப்பிரமணியம், எதிரொலி விசுவநாதன், முருக சரணன், இளையவன், இளந்தேவன், நாவேந்தன், முதுபெரும் எழுத்தாளர் நாரண துரைக்கண்ணனார், வேதம்,

சக்தி, சுபிரபாலன், செல்லப்பன், பூ. சா. கிருஷ்ணசாமி, ரமணி, வைத்தியநாதன், சிவசங்கரி, வசந்தப்பிரியன், அமுதன், இரவி, செம்பருத்தி, துரைசாமி, அரிகிருஷ்ணன், இராசசேகரன், கொத்த மங்கலம் விசுவநாதன், இரா. சுராச், நா. பா. சாரதி, பதி• சீனிவாசன், மயன், மீ. விசுவநாதன் ஆகிய கவிஞர்கள் பாரதி கலைக்கழகத்தில் தங்கள் சிந்தனையைக் கவிமலர்களாக 81ஆம் ஆண்டில் வழங்கியுள்ளனர்.

## தமிழ்க் கவிஞர் மன்றம்

கடற்கரைக்கு மாலை உலாவருவோரின் மனதில் கவிதை உலா நடத்துவது தமிழ்க் கவிஞர் மன்றம் என்பது அறிந்த செய்தியே.

''தும்பை விட்டு வாலைப் பிடிக்கிறேன்நான்
துப்புக் கெட்டு வாழ்ந்து கெடக்கிறேன்
முருங்கை மரத்தில் கயிறுபோட்டு
ஊஞ்சல் ஆடிக் கனவு காண்கிறேன்''

என்று கவியரங்கில் கவிதைபாடிய பொன்னடியான் பொதுச் செய லகத்தில் பணியாற்றிக்கொண்டே கவிப்பணியாற்றுகிறார்.

''வரதட்சணை குறைவாக வந்ததால் மாமியார்
வார்த்தையால் கொள்ளி வைத்தாள்,
மல்லிகைக் கன்னியின் மணம் தன்னை நுகராமல்
மணந்தவன் தள்ளிவைத்தான்''

என்று சமுதாயச் சீர்கேட்டை உருவாக்கும் வரதட்சணைபற்றி நாவேந்தன் பாடினார். இவர் குடும்பநலத்திட்ட மருத்துவம் கற்பிக்கும் துறையில் பணியாற்றுகிறார். தன் காலச் சமூகச் சீர்கேட்டைப் பாடித் தமிழ்க் கவிதைக்குப் பெருந்தொண்டு புரிந் துள்ளார்.

''கண்ணீர்க் கரையில் முன்னேறி வந்தோம்
கண்டபோராட்டம் கொஞ்சமில்லை-எங்கள்
கஞ்சிக் கலயமும் மிஞ்சவில்லை''

என சோதிவளவன் இந்திய இருட்டில் கவிதை வெளிச்சம் காட்டு கிறார். சோதிவாணன், அலிபூர்ரகீம் ஆகியோரும் சிறந்த கவி அரங்கப் புலவர்கள்.

''பகலெல்லாம் உழைத்தவன்...
ஓலைக்கூரையின் ஓட்டைகள் வழியே,

செவ்வானத்தைச் சிறிது கண்டும்
விடிந்ததே என்று வெறித்து மகிழ்ந்தான்
அந்திவான் என்று அறியாமை யினால்''

வான்முகிலின் கற்பனை வரிகள் ஏழையின் சிறிது நேர மகிழ்ச்சியைச் சித்திரமாக்கின.

''வயிற்றுப் பசியால் துடிப்பவரை நிதம்
வறுமைக் கரையான் அரிக்கிறது,
பொய்யில் சுரண்டல் புன்மைகளில்—புகழ்
பூத்தொரு கும்பல் பொலிகிறது,
வெய்யில் உழைப்பில் உடல் தூவும்—உப்பு
வியர்வையில் ஓர்குலம் நலிகிறது.''

என்று எழிலவன் வறுமைக் குலத்தையும், சுரண்டல் குலத்தையும் மக்கள் குலத்திலிருந்து பிரித்துக்காட்டுகிறார்.

''இடையிடையே வாசிப்பவன் மேடையின் மேலே
இறுமாப்புடன் நாற்காலியில் குந்தியிருக்கான்,
கடைசிவரையில் தபேலாவை வாசிக்கிறானே
கடையன் போல தரையினிலே குந்தியிருக்கான்
ஒடுங்கி வாழும் மக்களாக வாழ்ந்தது போதும்
உரிமைக்காகப் போரிடவே புறப்படு தோழா''

என்று அமரசிகாமணி புரட்சிக்கு மகுடி வாசிக்கின்றார்.

''திருவாளர் சாதிக்கே சிறப்பான வெற்றியென்பேன்,
தீதான இந்தியாவை சீக்கிரமாய் மாறாதோ,''

எனச் சுழல் துப்பாக்கி, தேர்தல் வெற்றியைச் சாதிவெற்றியாய்க் கவிதைபாடி ஆறுதல் கொள்கிறார்.

''பள்ளிக் கூடத்துக்கு 'கட்' அடிக்கிற
பரிட்சை வந்தா 'பிட்' அடிக்கிற
கெழவி வந்தா 'சைட்' அடிக்கிற
கேள்வி கேட்டா 'விட்' அடிக்கிற
தம்பிகளே...தங்கக் கம்பிகளே''

என்று சிங்கார சடையப்பன் மாணவர் பற்றி மணிப்பிரவாளக் கவிதை வழங்கினார்.

''பாவம் இவர்கள் மாணவர்கள்...
தென்றலின் பிழிவுகள் நேரம் வந்தால்,
புயலின் புயல்கள், பூகம்ப மழைகள்,'

என நா. மூர்த்தி மாணவர் உலகத்தின் இயல்பைப் பாடினார். குழ. கதிரேசன், வே. நா. சாமி, எழிற்பித்தன் துரை வசந்தராசன் அருள் நம்பி, பா. அண்ணன், அய்யாச்சாமி, முத்து எத்திராசன், டி. கே. ராமமூர்த்தி, சித்தூர் பிச்சைராசு, பி. வி. பார்த்தசாரதி, தூத்துக்குடி அய்யம் பெருமாள், சித்ரா, யோகேஸ்வரி, செங்கதிர் வாணன், சுல்தான், கனககவிதா, இளங்கோவன், வாசுதேவன், பாட்டாளி பழனியப்பன், ரங்கோன் ராசா, காலைக்கதிரவன், ரதிராமன், பெங்களூர் புகழேந்தி, புலியூர் ராமலிங்கம் கடற்கரைக் கவியரங்கைச் சிறப்பித்த கவிஞர்கள் எண்ணற்றோர் ஆவார். தமிழ்க்கவிஞர் மன்றத்தின் சார்பில் கே.சி.எஸ் மணிவிழா, பட்டுக் கோட்டையார் நினைவுவிழா. பாவேந்தர் விழாக்கவியரங்குகளும், உடுமலை நாராயணகவி, ஆதித்தனார், கண்ணதாசன், பூதப் பாண்டியன் ஆகியோர் மறைவு குறித்து அஞ்சலிக் கவியரங்குகளும் நடந்தன. சென்னையில் அன்றி, உதகை, ஈரோடு, தர்மபுரி, சாத் தூர் ஆகிய இடங்களிலும் தமிழ்க் கவிஞர் மன்றம் சார்பில் திங்கள் தோறும் கவியரங்குகள் நடத்தப்படுகின்றன.

## கலை இலக்கியப் பெருமன்றம்

கலை கலைக்காகவே எனும் கண்மூடித் தனமான கருத்துக் களை மண்மூட வைத்தும், கலை வாழ்வுக்காகவே எனச் செய லாலும், கவிதையாலும் நிலைநிறுத்தும் அமைப்பு கலை இலக்கியப் பெருமன்றமாகும். உழைப்பாளி தன் உரிமையை உணர்ந்து கொள்ள, அவனுக்கு உணர்த்த கலை இலக்கியங்களின் மூலம் அணுகுவது இதன் செயற்பாடு ஆகும். இக்குறிக்கோளுக்காக உழைத்தவர்களை நினைவுறுத்துவதும், போற்றுவதும் கவியரங்கு கள் மூலம் வெளிப்படுத்துகின்றனர். பாரதிவிழா, பாரதிதாசன் விழா, பட்டுக்கோட்டையார் விழா, ஜீவா நினைவு விழா, சாமி சிதம்பரனார் நினைவுநாள், போன்றவற்றில் கவிஞர் தம் கவிமலர் களை மலர வைத்துள்ளனர்.

இளைய பாரதி. திருமலைராசன், மணிமாறன், காவிரி விஜயன், கோ. வெள்ளைச்சாமி, ஜீவபாரதி, பழநி சுந்தரேசன், ஈ. கேசவன், புவியரசு, செவ்வியன், பன்னீர்ச் செல்வம், நிர்மலா சுரேஷ், உதயகுமார், அரசு மணிமேகலை, ராஜ்மோகன், ராசகோபால், செங்கை வேந்தன் மற்றும் பலர் இம் மன்றக் கவியரங்கில் ஏறியுள்ளனர்.

## பகுத்தறிவாளர் கழகம்

மூடத்தனங்களைச் சாடி, நாட்டிற்கு நலந்தரும் வழிகளை நாடி, புதுக்கருத்தைக் கவிதையில் பாடி, பெரியார் போல் அறிவுத் துறையைத் தேடிப் பகுத்தறிவாளர்களைப் பெருக்குமிடம், பகுத் தறிவாளர் கழகம் ஆகும். உவமைக் கவிஞர் சுரதா, புலமைப் பித்தன், முடியரசன், பொன்னிவளவன், கருணானந்தம், நாச்சியப்பன், குடியரசு, முருகுசுந்தரம், ஈரோடு தமிழன்பன், அரிமதி தென்னகன், பூங்குன்றன், குருவிக்கரம்பை சண்முகம், மாரி. விசுவநாதன் முதலியோர் இக்கழகக் கவியரங்குகளில் கவி மழை பொழிந்துள்ளனர்.

சென்னையில் கம்பர் கழகம், இலக்கிய சிந்தனை, திருக்கழுக் குன்றம் தமிழ்க் கழகம், அம்பத்தூரில் மாங்குயில், விநாயக நல்லூரில் இலக்கிய வீதியின் கவிதைப் பள்ளி, கோவையில் வானம்பாடி, காரைக்குடிக் கம்பன் கழகம், திருப்பத்தூரில் திருக் குறள் பேரவை, கல்லூரிகளில் முத்தமிழ் விழா, மின்நிலைய மன மகிழ் மன்றங்கள், நாணல் மலர் வாசகர் வட்டம், பெரம்பூர் அண்ணல் அம்பேத்கார் பொதுப்பணிச் சங்கம், வியாசர் பாடி புத்ததரும சங்கம், சூளை இலக்கிய வட்டம், பாரதி இளைஞர் சங்கம், பாவேந்தர் பாசறை, சென்னைத் துறைமுகப் பொறுப்புக் கழகப்பணியாளர் மன்ற இலக்கிய மன்றம், அண்ணா கலை இலக்கிய நற்பணி மன்றம், மறுமலர்ச்சி மன்றம், சிவகலா கல்வி நிதிநிறுவனம், பாவலர் பாசறை, கோவில்பட்டி திருவள்ளுவர் மன்றம், இராசபாளையம் திருவள்ளுவர் மன்றம், வானொலி புத்தாண்டு விடுதலைநாள், பொங்கல் விழாக்கவியரங்குகள் மற்றும் பற்பல மன்றங்கள் 81 ஆம் ஆண்டில் கவியரங்கு மூலம் கவிப்பணி ஆற்றியுள்ளன.

## 81 ஆம் ஆண்டில் சிறப்பு

எந்தமிழர் எண்ணமதில், திண்ணியராய் வாழ்ந்திடவே
ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டை நான்மாடக் கூடல் எனும்
அழகுநகர் மதுரையிலே அண்டை அயல் மாநிலத்து
அரசாட்சி முதல்வர்களும் ஆர்வமுடன் பங்கேற்று
பழகுதமிழ்ச் சொல்லாற்றில் பாங்குறவே நீந்தினரே,
நாளும் கவியரங்கில் நல்ல தமிழ்ப் பயிர் வளர
வாளின் கூர்மழுங்க வார்த்தை உழுபடை கொண்டு

வாழ்வியலில் வகைவகையாய் வலிமை தரும் பொருள்
எடுத்து,

கருத்துச் சுவை கொண்ட கவிதைக்கனிக் கொத்தை
பருந்தின் பாய்ச்சலாய், அரிமா நோக்கமொடு
ஆற்றின் போக்கென அணியுடன் தந்தனர் அருந்தமிழ்ச்
செம்மல்கள்.

அந்தக் கவியரங்கில், சந்தச் சொல்லெடுத்துப் புதுக்கவிதைப் புலவர் மேத்தா முழங்கினர்.

''விடைபெற்றுக் கொண்டு
வெளியேறும்
தலைவனின் கால்களில்
மிதிபடுவது
வீதியல்ல...
இனிய பெண்களின்
இதயந்தான்...
அவன் வரும் வரை
அவர்கள் சுவாசிப்பது
காற்றை யல்ல...
அவன் நினைவுகளைத் தான்...
அடிக்கடி அவர்கள்
காண விரும்புவது
உணவுகளை அல்ல...
கனவுகளைத் தான்
அதிலாவது அவன்
வரக்கூடு மல்லவா
ஒருபுலவர் பாடினார்
இனியாள் சுவை
கனியாள் பெண்
மணியாள்—அவன்
மனையாள்
ஒப்பற்ற தலைவனை
ஒரு நாளும் அவள்
பிரியாள்!
பிரிந்தால்...
பிரிந்தால்—உயிர்
தரியாள்''

"தேமதுரத் தமிழ் உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும்',—என்ற பாரதியாரின் வாக்கை 5 ஆம் உலகக் கவிஞர் மாநாடு நமக்குக் கொடுத்தது. 7-7-81 இல் சான்பிரான்சிஸ்கோ கவியரங்கில் பெருங்கவிக்கோ வா. மு. சே.

"போகின்ற போக்கைப் பார்த்தால் ஒன்று
புரிகின்றது எனக்கு—எல்லாம்
ஆகின்ற காரியம்தான் அடடே
அத்தனையும் நடக்கும்—(போகின்ற)

மரத்தினடி சித்தாந்தம்—விரி
கொப்புகளோ வேதாந்தம்—அன்பு
சிரமேற் கொண்டிடும் சித்தம்—உணர்
சித்திரமன்றோ வெற்றி முத்தம் அட—(போகின்ற)

சாதி மதத்தை தொழுநோய்கள் —போலிச்
சந்நியாச வேடங் கொள் நாய்கள்—வென்று
ஆதிமுதலிறை எண்ணி —செல்லும்
அறந்தரு நல்வழி பண்ணி—அட (போகிற)

என்று தத்துவக் கவிதை பாடினார்.

"வங்கக் கவிஞன் எங்கள் கவிஞனே
எங்கள் கவிஞனும் வங்கக் கவிஞனே
முதலைத் தொடர்ந்து முடிவு வந்தாலும்
முடிவைத் தொடர்ந்து முதல் ஒன்று தோன்றும்
தோன்றிய அனைத்துளும் சுடராய் நிற்பது
பரம்பரைப் பண்பும் தாயகப்பற்றும்
ஒன்றே வானம், ஒன்றே நிலவு
ஒன்றே இதயம் ஒன்றே உறவு,
ஒவ்வொரு மொழிக்கும் ஒவ்வொரு வீடு,
உலகம் முழுதும் மானிடர் வீடு,"

என்று கவிஞர் கண்ணதாசன், கல்கத்தா மேடைக் கவியரங்கில் முன்பு பாடினார். பரம்பரைப் பண்பும், தாயகப் பற்றும் கொண்ட கவிஞர்கள் உலகம் யாவுமே மானிடம் வீடு எனக் கொண்டு கவிபாடும் வாய்ப்பை ஐந்தாம் உலகக் கவிஞர் மாநாடு தந்தது.

"புலவனே! எழுந்துவா! உனக்கு உணர்வு ஒன்று
இருக்குமாயின்
அதனை உன்னுடன் கொண்டுவா!

அதை இன்றே பரிகாசத் தந்திடு!
உனக்கு முன்னால் இருப்பது
இன்னல் மிகுந்த வாழ்வு!
கவிஞனே!
ஒருமுறை பொன்னுலகில் இருந்து
நம்பிக்கையின் சித்திரமதைக் கொணர்ந்திடு''

என்றார் கவிஞர் தாகூர். விரக்தி மிகுந்த மானுடர் வாழ்வில் பெருங்கவிக்கோ வா. மு சே.யின் சான்பிரான்சிஸ்கோ கவியரங்கக் கவிதை நம்பிக்கையின் சித்திரத்தைக் கொண்டு வருகிறது.

''பொய்த் தேவதைகளின் ஆலயங்களையும்
கிழடு தட்டிப் போன ஒழுக்க வாதிகளின்
போலி நியதிகளின் கள்ளுக் கடைகளையும்
நாசப் படுத்துபவர்கள்
மாயைகளின் காட்சி சாலைக்குள் ஊடுருவி,
பகுத்தறிவு ஆயுதங்களைக் கொண்டு
வறட்டு விதிகள், விலக்குகள் ஆகியவற்றின்
சீனச் சுவர்களை நொறுக்குபவர்கள்
மயானங்களை உழுது சடலங்களையும்
எலும்புகளையும் எறிந்து விட்டு
அங்கே மலர்த் தோட்டங்களை உருவாக்குபவர்கள்
இவர்களைப் பற்றி நான் பாடுவேன்''

என்றார் வங்காள தேசக் கவிஞர் நசுருல் இஸ்லாம்.

ஆனால் 81-இல் பகுத்தறிவுக் கவியரங்கில் தமிழ்க்குடிமகன்,

''எத்தனை பெரியார் எவ்வளவு காலம்
இடையறா துழைத்தாலும்,
சித்திரைத் திருநாள் தேர்தனை இழுக்கத்
திரண்டிடும் கூட்டமதை
ஆற்றினில் அழகர் அடிவைப்பதனை
அவாவிடும் மந்தையினை
மாற்றிட முடியுமா மன்பதை மாறுமா
மதித்திட முடியவில்லை''

என்று பாடுகிறார். மக்களிடம் பகுத்தறிவுச் சிந்தனையில் நம்பிக்கை இழந்தாலும், மொழிச் சிந்தனையில் ஊக்கம் கொள்கிறார்.

"புத்தி என்பது நித்திரை வடமொழி
அறிவெனும் அமுதத் தமிழ் மொழி
உத்தரவென்பதோ ஒட்டாதாகும்
உதட்டொலி,
கட்டளை என்பதே கனிந்த தமிழ்ஒலி
சித்திரம் என்பது தீப்பொறி வடமொழி
ஓவியம் என்பதே ஓங்கு புகழ்த் தமிழ்மொழி,
நித்திரை என்பது நெருப்பு வடமொழி
உறக்கம் என்பதே உலவும் தமிழ்மொழி''

எனப் பாடிய சுரதாவின் பல்கலைக்கழகம் பாரதிதாசனையும், மறைமலை அடிகளையும் போற்றும் முறையில் தமிழ்க் குடிமகன்,

''பாவேந்தர் தமிழியக்கம் பாடுகின்றார்
பாழான கீழ் நிலையைச் சாடுகின்றார்
பூவேந்தும் தமிழுக்குப் புஷ்பம் தந்து
புதுவேட்டி தனைக் கிழித்து வேஷ்டியாக்கி,
நாவேந்தும் சுவையுணவுக் கிளப்பில் வெந்து
நாறுகின்ற நிலைமைகள் உணர்ச்சிகொட்டப்
பாவேந்தர் தருகின்றார் என்றால் அந்தப்
பைந் தமிழர் மறைமலையார் இயக்கம் அன்றோ''

என்று பாடும் போது, தமிழ்த் தொண்டர் சாவதில்லை எனும் செம்மாந்த உணர்வு எழுகின்றது. உலகநாதன் கவியரங்கக் கவிதைகள் பல ஊக்கத்தை ஊட்டுகின்றன.

தமிழ்த் தொண்டர் வரிசையில் வந்து, தமிழ்ச் சொல்லுக்கு விளக்கம் தரும் கண்ணதாசன் முன்பு ஒரு கவியரங்கில்,

''கலக்கும் இருள் விரட்டி; விளக்கும் ஒளிப்பொருளை
விளக்கென்றார். காதல் விளக்கவரும் புதியவர்கள்
பயிலாத வித்தைக்குப் பள்ளியாய் அமைந்ததனால்
படுக்கையினைப் பள்ளி என்றே பக்குவமாய்ச்
சொல்லிவைத்தார் இழப்பதனால் சாவை இழவென்றார்
மணம் போல இழைவதனால் திருமணமென்ற
எழிலான சொல்வடித்தார்''

என்று பாடினார். அவர் வழியில் தமிழ்த் தொண்டாற்றும் சுன்மதியன் 81இல் மணவிழாக் கவியரங்கில்

''ஓரசைச்சீர் நாள் மலராம்
மக்களுக்கும் உணர்த்துமது
நாள் மலராய் வாழ்க வென்றே
ஈரசைச் சீர் காசு பிறப்பு
மக்களுக்கும் இயம்புவது
பிறப்பில் காசு வேண்டுமென்றே''

எனும் போது சொல்லுக்குரிய பொருளைச் சிலேடையாக பாவின் இலக்கணமாக வாழ்வுத் தேவையாகச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கிறார்.

## புறப்பார்வை

கவிஞர்களின் சிந்தனை வீச்சு உலகம் தழுவியதாக இருப்பதையும் காரணகாரியங்களை விளக்குவதையும் கவியரங்கக் கவிதைகள் உணர்த்துகின்றன. இ. சு. முத்துச்சாமி,

''மதத்தலைவன் அயத்துல்லா கோமேனி
மக்களின் தலைவனாய் முடிசூடா மன்னராய்
ஈரான் திரும்பினான்,
இசுலாத்தின் ஆட்சியை நிறுவினான்
தக்க தருணம் பார்த்த
அமெரிக்கர் பரம்பரைப் பகைவர்
பக்க நாட்டின் ஈராக்கைத்
தூண்டி விட்டனர் மூண்டது போர்
எண்ணில் ஆலைகள் எரிந்தன,
எங்கும் விமானத் தாக்கு
எண்ணெய்க் குழாய்கள் வெடித்தன,
எங்கும் புகைமயம் எரிதழல்''

என்று ஈரான் ஈராக் போரை விவரிக்கிறார்.

எல்லோரும் அறிந்த இயேசுவின் மலைப்பிரசங்கத்தின் போது அப்பம், மீன் வழங்கிய நிகழ்ச்சிக்குத் தத்துவ விளக்கம் தரும் கவிதை அரங்குகளின் மூலம் கிடைத்துள்ளது. அருமைநாதன்.

''ஐந்தப்பம் இரண்டுமீனை ஐயாயிரம் பேர்கள்
அன்புடனே புசிக்கவே அருளச்செய்த அற்புதமாம்
சிந்தித்தால் மெய்வாய்கண்செவிமூக்கு இவையனைத்தும்
தித்திக்கும் ஐம்புலனும் ஐந்தப்பம் ஆகுமென்றோ
முந்துகின்ற பாவபுண்யம் இரண்டுமே இருமீன்கள்,

அறிவுக்கே உணவென்றே ஆராய்ந்த பொருளாகும்
சொந்தமாம் பன்னிரு சீடர் இதயக் கூடைகளின்
இத்தனைக்கும் விருந்தளித்த தேவன் நல்பேரொளியே'',

என்று கவி வடிப்பது கிறித்துவ தத்துவச் சிந்தனையில் தியாக உணர்ச்சியைப் போதிக்கும் நெறிக்கு வலுவூட்டுவதாகவே இருக்கிறது.

கவிஞர் ஜெய்கிருஷ்ணா தெருவோர அனாதைகள் பற்றி,

''மழை மேகக் கூட்டங்கள்!
சுடும் நெருப்பை
வயிற்றில் தேக்கிய
அடுப்புகள்!
தென்றலுக்காக
ஏங்கித் தவிக்கும்
குளிர்கால வாடையின்
இளமலர்கள்!
தேர்தல் கால
வெயில் சூட்டிற்கு
இளநீர்ப் பிஞ்சுகள்!
கந்தல் துணிகளோ
இரவு நேர விண்மீன்
கூட்டங்களுக்கு
சவால்விடும்
சாளரங்கள்!
சுதந்திர பாரதத்தின்
சுந்தர மழலை
வீதியோரம் இவரிடும்
கூச்சல்!
புளிச்சியேப்ப
சாம்ராஜ்யத்தில்
இவர்கள்
பசியேப்ப மாத்திரை யாவர்!

என்று, இந்திய நாட்டின் பாதையோர ஏழ்மை வாழ்வைப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

விண்வெளிக் காட்சியை விவரிக்கும் ஒரு கவிதை:-

''பாரத ராக்கெட் போக்குவரத்து......
கோடி மைல்கள் வேகத்தில்.
குறுக்கே வந்திடும் விண்கூடு
அண்டத்தில் நிற்கும் அந்தரக் கட்டிடம்
அமெரிக்காவின் சாடிலைட்
அதுமட்டுமல்ல கிரகப் பந்துகள்
ஆயிரமாயிரம் விண்கற்கள்
கட்டுப் படாத ஸ்கைலாப்புகள்
காரணமில்லா விண்புயல்கள்
அதற்கு மேலே சூரிய எரிச்சல்,
அசந்தால் பஸ்பம் ஆக்கிவிடும்''

என்று அருவிமைந்தன் விண்வெளிச் சுழற்சியை தன்மை நவிற்சியாக விவரித்துச் செல்கிறார்.

அலுவலகத்தில் அன்றாடம் நடப்பதென்ன என்பதை இறைவனின் கவிதை உணர்த்துகிறது.

''பொய்யை உரைப் பார்க்கும் பொல்லாங்கு
சொல்வார்க்கும் பொன்னான வாழ்வு இங்கே!
பையைத் திறப்பார்க்கே பைலைத் திறப்பார்க்கே
மெய்யன்பர் பட்டம் இங்கே,
முறைவாசல் செய்வார்க்கும் முந்தானை விரிப்பார்க்கும்
கண்கண்ட சொர்க்கம் இதுவே''

நடத்துநர் பணிபற்றி, நடத்துநர் நரிப்பையூர் கசேந்திரன் பாடுகிறார்:

''இருபது ரூபாத் தாளைந் தந்து
முப்பது காசுச் சீட்டுக் கேட்பார்,
இல்லை சில்லறை என்றே நடத்துநர்
சொல்லு முன்பே சீறிப் பாய்ந்தே
எழுதிக் கொடப்பா எனக்குத் தெரியும்,
வாங்கும் இடத்தில் வாங்கிக் கொள்வேன்,
என்பார் அந்த இருட்டுப்பயணி......
தாளில் வரைந்து புகாரைத் தருவார்
தந்த புகாரில் நியாயம் உண்டா
என்றே கூடச் சிந்திக்காமல்
எச்சரிப்பாரே நடத்துநர் தனையே''

சுரண்டல் வாதிகளின் முகத்திரையைக் கோவேந்தன் கிழித் தெறிகிறார்.

''ஒட்டிய வயிறு
கொட்டும் கண்ணீர்
உயிரோடு போராட்டம்
கட்டத் துணியும்
வாழும் இடமும்
காணாதவர் கோடி
இவர்களைப் பற்றி
எண்ணா தந்தோ எங்கோ உள்ளதுவாம்
சொர்க்கம் கடவுள்
தொழுவீர் என்னும்
சுரண்டல் கூட்டங்கள்''

என்ற கவிதை வரிகள்,

''அக்கினி வயல்களில் தீக்கதிர் மணிகள்
அறுவடைக்காக முதிர்கிற காலம்
அறுவடை நடத்தும் எரிமலை உதட்டில்
அனற் கொழுந்தாய் எம்பாடல்கள் துடிக்கும்...
விடுதலை ராகம் மீட்டுதற்குப் பூமி வீணையின்
புழுதியைத் துடைப்போம்''

என்று 'வெள்ளை இருட்டில்' இன்குலாப் பாடிய புழுதியைத் தான், கோவேந்தன் சுரண்டல் கூட்டங்கள் என அடையாளங் காட்டினார்.

புரட்சியின் பிறப்பு வளர்ப்பைக் கூறி அதன் வருகையினைப் பற்றி அதனிடம் கேட்கிறார் கவிஞர் மு. வெள்ளைச்சாமி,

''வறுமைத்தாயின் வளர்ப்புப் பிள்ளையே
வெடிக்கும் இதயக் குமுறலின் வடிவே,
பொறுமை மலையில் எரியும் திரியே,
அலையும் கடலின் அக்கினி வளையமே,
நிறுத்தல் இன்றி இயங்கும் இயக்கமாய்,
நித்தம் பூக்கும் புரட்சியின் வித்தே,
வெறுத்தல் இன்றிக் கருத்தை விதைத்து
விடுதலைப் பாய்ச்சல் எப்போது சொல்வாய்!
புதுமை வேண்டும்
புரட்சியின் கருவே!
புதிரை அறுப்பாய்

பொய்யாம் மயக்கச்
சதியை உடைத்து
மனித இனத்தின் விதியை
விளைவை ஒன்றென ஆக்குவாய்''

## நிறைவுரை

81ஆம் ஆண்டுக் கவியரங்கத் தமிழை நோக்கும் போது, ''இந்த விந்தையான தலைமுறை, தனது கைகளில் இறந்த காலத்தின் மண்ணையும், வருங்காலத்தின் விதைகளையும் வைத்திருக்கிறது''—என்று கூறிய லெபனான் ஞானி கலீல் கிப்ரான் வாக்குத் தான் நினைவுக்கு வருகிறது.

இன்றையக் கவிஞர்கள் விருத்தம், வெண்பா, சிந்து, நாட்டுப் புறப்பாடல் மெட்டு, புதுவகை வடிவங்களைக் கையாளும் ஆற்றலும், ஆர்வமும் கொண்டு விளங்குகின்றனர். பொது மக்களுக்குச் செய்தியைக் கொண்டு செல்லும் நோக்கத்தில் கவிதை வடிக்கின்றனர். அப்போது பிரச்சார நோக்கமும் இழைந்துவிடுகிறது. முன்னிலைப் பரவலும், தன்னுணர்வு இணைத்தலும் கவிதை வெளியீட்டு முறைகளாக இருக்கின்றன. புதுக்கவிதை, மரபுக்கவிதை இரண்டிலுமே கருத்து வெளியீடும் சிலம்புச் சொல்லாட்டமும் நிகழ்கின்றன.

மரபுக் கவிதையிலும், புதுக்கவிதையிலும் மிகுதியான சொற்கூட்டங்கள், இறந்த உடலைத் தூக்கிச் செல்லும் எறும்புகளைப் போல, சுறுசுறுப்பாக விழுகின்றன. ஆனால் பயன்? கவிதையான ஒன்றை வெளியிட வேண்டும் என்ற கட்டாயத்தில் அமைக்கப் பட்டவை அவை. அது போன்ற முயற்சிகளைப் பற்றி, இமாம் சாதி கூறுகிறார். ''தலைப்பாகை ஆணவத்தின் சின்னம், மனிதனின் தலைக்குத் தேவையானது மூளைதான். தலைப்பாகையல்ல. தலைப்பாகை, தாடி இருக்கிறது என்று செருக்கு அடையாதே, ஒன்று பஞ்சு. மற்றொன்று மயிர், நீ அறிவுடையவனாக இல்லாவிட்டால் உன்னை மதிக்க மாட்டேன். பொன் ஜரிகையால் நெய்யப்பட்ட விலை மதிப்புள்ள ஆடையைப் போர்த்தியிருந்தாலும் கழுதை கழுதைதான்''.

கடுமையினைப் பாவலனே கற்றுக் கொள்வாய்
கத்தியின்றி வெற்றிகொள நினைத்தல் வேண்டா,

கடுமுயற்சி இல்லாமல் வந்தபாட்டைக்
கட்டாயம் நீயே ஓர் நாள் எரிப்பாய்

என்றார் இரசூல் கம் சுதாவ்.

கழியும் பிழைபொருள் தள்ளி
நன்னூலங் கடலின் உண்டு,
வழியும் பொதிய வரையினிற்
கால்கொண்டு வன்கவிதை மொழியும்,
புலவர் மனத்தே யிடித்து முழங்கி மின்னிப்
பொழியும் படிக்குக் கவிகாள மேகம் புறப்பட்டதே

என்றார் கவி காளமேகப்புலவர்.

இவர்களின் சிந்தனை ஓட்டக் கவிதைகளும் 81 ஆம் ஆண்டுக் கவியரங்கக் கவிஞர்களிடமே காணப்படுகின்றன.

# 33. கம்பன் கழகங்கள்

**கா. அ. ச. ரகுநாயகன்**

1981-இல் நாற்பத்து மூன்று கம்பன் கழகங்கள் காணப்படுகின்றன. அவற்றில் 18 கழகங்கள் குறித்து இங்குக் கூறப்பட்டுள்ளது. இப்பதினெட்டு கம்பன் கழகங்களிலும் காரைக்குடி சா. கணேசன் எவ்வாறேனும் தொடர்பு பெற்றிருக்கிறார். இக்கழக இலக்கிய நிகழ்ச்சிகளில் தலையாய தாகப் பட்டிமண்டபம் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கது. இப் பட்டி மண்டபங்கள் கல்லாதாரையும் கம்பன்பால் ஈர்த்திருக்கின்றன.

இராமாவதாரம் என்னும் நூலைக் கம்பர் இயற்றிப் பத்து நூற்றாண்டுகள் கழிந்துவிட்டன. இந்தப் பத்து நூற்றாண்டு களில் தமிழகத்தில் தோன்றிய பெரும் புலவர்களில் கம்பரைப் படித்து அவருடைய புலமையைப் போற்றாதார் இல்லை என்றே சொல்லலாம். முறையாக இலக்கியங்களைக் கற்றுத் தேர்ந்த புலவர்கள் ஒரு புறமிருக்க, கம்பராமாயணக் கதைகளைக் கேட்டுச் சுவைக்க நாடெங்கிலும்—சிற்றூர்களிலும், பெரிபநகரங்களிலும்—மக்கள் திரளாகச் சேர்ந்து விழா எடுத்து வந்திருக்கின்றனர்.

ஆண்டுதோறும் பங்குனி, சித்திரை மாதங்களில் ஸ்ரீராமநவமி உற்சவக் காலங்களில் இராமாயணச் சொற்பொழிவு ஆங்காங்கே நடைபெறுவதுண்டு. பத்து நாள், இருபது நாள், ஒரு மாத காலம் இராமாயணச் சொற்பொழிவை நடத்துவார்கள். சீதா கல்யாணம், பாதுகா பட்டாபிஷேகம், பிரகலாத சரித்திரம், விபீஷண சரணாகதி போன்ற கதைப்பகுதிகளைத் தனித்தனியாகச் சொற்பொழிவாற்றி விழா செய்வதும் உண்டு.

இராமாயணக் கதைகளை நாடகக் காட்சிகளாக அமைத்து நடித்தும் வந்தனர். பெரும்பாலும் பிற்பகலில் இராமாயண இசைச் சொற்பொழிவு நடைபெறும்; இரவில் நாடகம் நடைபெறும்,

பதினெட்டாம் நூற்றாண்டில் அருணாசலக்கவிராயர் யாத்தளித்த இராம நாடகக் கீர்த்தனைகள் இராமாயண நாடகத்துக்குப் பேருக்கம் அளித்தன. சிற்றூர்களிலும் பஜனை மன்றங்களில் அந்தக் கீர்த்தனைகள் பாடப்பெற்றன.

சொற்பொழிவுகள், நாடகங்கள், கீர்த்தனைகள் எல்லாம் கம்பருடைய காவியத்தைப் பின்பற்றியவையாகவே இருந்தன. கம்பரின் கவிதைகளும் கதை-கருத்துகளும் இவ்வாறு பல்வேறு வகைகளிலும் மக்களிடையே பல நூற்றாண்டுகளாகப் பரவி வந்துள்ளன.

கம்பர் காவியத்தைக் கற்றவர்கள் அவருடைய கருத்துகளையும் கற்பனைகளையும் தாமியற்றும் நூல்களில் வடித்துக் கொண்டனர். கம்பருடைய பெருமை இவ்வாறு கற்றவரிடமும் கல்லாதவரிடமும் பல்வகையிலும் பரவி வந்தது. ஆயினும்' கம்பருடைய புலமையை அளந்தறிவதற்கான வாய்ப்பு இந்த இருபதாம் நூற்றாண்டில்தான் ஏற்பட்டது.

அரசியல் நிலை காரணமாக நம் நாட்டினர் பலர் ஆங்கில மொழியைக் கற்றனர். பத்தொன்பதாம் நூற்றாண்டில் ஆங்கிலத்தைக் கற்ற அறிஞர்கள் எல்லோரும் அம்மொழியிலேயே உழன்று கொண்டிருந்தனர். அவர்களுக்குத் தாய்நாட்டுப்பற்று இல்லாமல் இருந்தது போலவே தாய்மொழிப்பற்றும் இருக்கவில்லை.

ஆங்கிலேய ஆட்சி அகல வேண்டும் என்ற உணர்ச்சி வீறிட்டெழுந்த பின்னர், பலர் தாய்மொழியைப் பற்றியும் எண்ணலாயினர்; தாய்மொழியிலுள்ள நூல்களையும் திரும்பிப் பார்த்தனர். இந்த விழிப்பு ஏற்படும் போது பத்தொன்பதாம் நூற்றாண்டு மறைந்து இருபதாம் நூற்றாண்டு தோன்றிவிட்டது.

ஆங்கிலம் படித்தவர்கள் பலர் அதிலேயே மூழ்கியிருக்க, வேறு சிலர் வடமொழியைப் படித்து அங்கேயே திளைத்துக் கொண்டிருந்தனர். 'இராமாயணம்' என்ற சொல் அவர்களுக்கு வால்மீகி படைத்த ஸ்ரீராமாயணம் ஒன்றையே நினைவூட்டியது. கம்பரை நினைப்பதும் அவர் பாடலை எடுத்துக் கூறுவதும் தங்களுக்கு இழுக்கெனவே அவர்கள் புறக்கணித்து வந்தனர்.

இந்த நிலையில் சேலம் மாவட்டம் மோகனூர் என்ற ஊரில் கோவிந்தராஜ அய்யங்கார் என்பவர் வடமொழியிலும் தமிழிலும்

பெரும் புலமை பெற்றிருந்தார். அவர் வால்மீகியையும் படித்தார், கம்பரையும் படித்தார். கம்பருடைய கதையும், நடையும்; கவிதையும் அவரைக் கவர்ந்தன. வால்மீகியையும் கம்பரையும் இணைத்துப் படித்துப் பார்த்த அவர் கம்பருடைய ஆற்றல் பெரியது என்பதை உணர்ந்தார்.

கம்பருடைய பெருமையைத் தமிழுலகுக்கு அறிவிக்க வேண்டு மென்ற உந்துதலினால் 'கம்பநாடர்' என்னும் திங்கள் இதழைத் தொடங்க முயன்றார். ஆனால் மோகனூரில் அதற்கு வேண்டிய உதவியை அவர் பெற முடியவில்லை.

'கம்பநாடர்' வாயிலாகக் கம்பர் புகழ் பரவ வேண்டும் என்ற ஒன்றையே நோக்கமாகக் கொண்ட கோவிந்தராஜர் தம்மை ஏற்கக் கூடிய-தம் கருத்துக்கு ஆக்கம் தரக்கூடிய செல்வரை நாடிச் சென்றார். அவருடைய செலவு அவரைக் காரைக்குடியில் கொண்டு வந்து நிறுத்தியது.

காரைக்குடியில் இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் வாழ்ந் திருந்த செல்வர் பலர் கோவிந்தராஜருக்கு ஊக்கமளித்தனர். அவர்களுடைய ஊக்கத்தாலும் ஆக்கத்தாலும் 'கம்பநாடர்' என்னும் இதழ் சில ஆண்டுகள் வெளி வந்தது. கோவிந்தராஜர் ஒருவரே அதில் எழுதினார்; எழுதிய எல்லாம் கம்பன் பெருமை களே!

கோவிந்தராஜருக்குக் கம்பராமாயணப் பாடல்கள் எல்லாம் மனப்பாடமாகத் தெரியும். கோவிந்தராஜர் இராமாயணச் சொற் பொழிவுகளையும் செய்து வந்தார். பத்து நாள் இருபது நாள் தொடர்சொற்பொழிவு செய்வார். அப்போது அவர் கையில் எந்த நூலும் இருக்காது. தொடர்ந்து மூன்று, நான்கு மணி நேரம் சொற்பொழிவாற்றுவார்.

கோவிந்தராஜருடைய அறிவும்ஆற்றலும்காரைக்குடியில்இளை ஞர்பலரைக் கவர்ந்தன. பலர் அவரிடம் கம்பராமாயணம் பாடம் கேட்டனர். 'தமிழ்க்கடல்' ராய. சொக்கலிங்கம் அவர்களும் அவ ருடைய மாணவர்களில் ஒருவராவார். ''என்னுடைய ஆசிரியர்க்கு பன்னீராயிரம் பாடல்களும் மனப்பாடமாக வரும். ஆனால் எனக்கு நான்காயிரம் பாடல்களே மனப்பாடம் ஆயிற்று'' என்று சொல்லித் 'தமிழ்க்கடல்' ஐயா அவர்கள் வருந்துவதுண்டு.

இவ்வாறாகக் கம்பராமாயணம் காரைக்குடியில் கால் கொண்டது. கோவிந்தராஜருக்குப் பின் அங்குப் பலர் கம்பரைப் படித்துத் தேர்ச்சி பெற்றனர். அந்நகரில் உள்ளவர்க்குக் கம்பரிடத்தில் ஆழ்ந்த பற்றும், இலக்கிய ஆர்வமும் மேலோங்கி வளர்கின்றன.

விடுதலை வேட்கை வீறிட்டெழுந்த நேரத்தில், பாரதியார்,

''யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவன் போல் இளங்கோ வைப்போல்
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை
உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை''

என்றும்,

''கல்வி சிறந்த தமிழ்நாடு—புகழ்க்
கம்பன் பிறந்த தமிழ்நாடு''

என்றும் பாடித் தமிழ் மக்களைக் கண் விழிக்கச் செய்தார்.

இந்த நூற்றாண்டில் கம்பராமாயண மறுமலர்ச்சி ஏற்பட்டதற்கு வ.வே.சு. அய்யர் அவர்கள் மற்றொரு வகையில் தொண்டாற்றியுள்ளார். வ.வே.சு. அவர்கள் பல திறப்பட்ட ஆற்றல் வாய்ந்தவராக இருந்தார். அவர் பல மொழிகளில் புலமை பெற்றிருந்தார். சிறையிலிருந்த போதெல்லாம் உடனிருந்தவர்களுக்குக் கம்பராமாயணம் பாடம் சொல்லிக் கொடுத்திருக்கிறார். வ.வே.சு அவர்கள் ஆங்கிலத்தில் எழுதிய கம்பராமாயண ஆராய்ச்சி நூல் ஆங்கிலம் கற்றவரை ஓரளவுக்கு விழிக்கச் செய்தது. வால்மீகி, காளிதாசன், ஷேக்ஸ்பியர், மில்டன், ஹோமர், கதே போன்ற உலகப் பெரும் புலவர்களோடு ஒப்பு நோக்கிக் கம்பருடைய பேராற்றலை அவர் விளக்குகிறார். 'கம்பர் ஓர் உலக மகாகவி' என்று முதன் முதலில் உணர்ந்து வெளியிட்டவர் வ.வே.சு. அவர்களே ஆவார்.

'ரசிகமணி' டி.கே சிதம்பரநாத முதலியார் அவர்கள் கம்பர் பாடல்களில் திளைத்தார்; அப்பாடல்களில் அமைந்துள்ள பாவத்தை உணர்ந்து போற்றினார். சில பாடல்களைப் பலமுறை பாடிப்பாடி மகிழ்ந்தார். மற்றவர்களையும் பாடி மகிழச் செய்தார். 'கம்பர் போன்ற புலவர்கள் ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒரு முறையே தோன்றுவார்கள்' என்று புகழ்ந்தார் டி.கே.சி. அவர்கள். சென்னையிலும் குற்றாலத்திலும் மாறி மாறித் தங்கியிருந்து 'இலக்கிய வட்ட'த்தைப் பெருக்கினார். அவர் வட்டத்தில் வந்த

வர்கள் எல்லோரும் செல்வமும் செல்வாக்கும் படைத்தவர்கள். அவர்களுக்கும் கம்பரிடத்தில் பற்று உண்டாயிற்று. அது தனி வேகம் பெற்றது.

காரைக்குடி திரு. சா. கணேசன் அவர்கள் சிறு வயதில் வ.வே.சு. அவர்களிடமும், மோகனூர் கோவிந்தராஜரிடமும் நெருங்கிப் பழகும் வாய்ப்பைப் பெற்றிருந்தார். பாரதியாரின் பாடல்கள் அவரை உணர்ச்சி வெள்ளத்தில் ஆழ்த்தின. பிற்காலத்தில் ரசிகமணி அவர்களிடத்திலும் அவருக்குத் தொடர்பு ஏற்பட்டது. இருபதாம் நூற்றாண்டில் கம்பரின் பெருமைகளைப் பறைசாற்றிய பெருமக்கள் அனைவரிடமும் தொடர்பு கொள்ளும் அரிய வாய்ப்பினைப் பெற்றார் திரு. கணேசன் அவர்கள். திரு. கணேசன் பின்னர்க் கம்பருக்கு ஆற்றியுள்ள மாபெருந் தொண்டிற்கு இந்தப் பெருமக்களின் தொடர்பே அடித்தளமாக அமைந்தது என்று கூறலாம்.

கம்பருடைய இராமாயணம் பத்தொன்பதாம் நூற்றாண்டு வரையில் ஒரு பக்தி நூலாகவே பாராட்டப்பெற்று வந்திருக்கிறது. பெரும் புலவர்கள் சிலர் அவ்வக் காலங்களில் கம்பரின் இலக்கிய நயங்களைப் போற்றியுள்ளார்களாயினும், இருபதாம் நூற்றாண்டு மக்களே கம்பரின் காவியத்தை ஒரு பேரிலக்கியமாகக் கண்டு போற்றும் வாய்ப்பினைப் பெற்றுள்ளார்கள்.

கம்பருடைய காவிய நயத்தில் இதயம் களித்தவர், பல்லோராயினும் அக்காவியத்தை உணர்ந்து போற்றுவதை ஒரு மக்கள் இயக்கமாக வளர்த்து அப்புலவர் பெருமகனுக்காகக் கழகங்கள் கண்ட பெருமை காரைக்குடி திரு. கணேசன் அவர்களையே சார்ந்தது.

1938 ஆம் ஆண்டில் திரு. கணேசன் அவர்கள் தம் சொந்த ஊராகிய காரைக்குடியில் 'கம்பன் கழகம்' என்ற அமைப்பை முதன்முதலில் தோற்றுவித்தார். அதுமுதல் ஆண்டுதோறும் பங்குனித் திங்களில் அக்கழகத்தின் சார்பில் அங்குக் கம்பன் விழா நடைபெற்று வருகிறது.

கம்பருடைய பிறப்பு வளர்ப்பு வரலாறு ஆகிய செய்தி அறிய நமக்குச் சான்றுகள் எவையும் கிடைத்தில; ஆயினும் கி.பி. 886 பெப்ருவரி 23 ஆம் நாள்—விசுவாவசு பங்குனி 4ஆம் நாள்—புதன் கிழமை அஸ்த நட்சத்திர நாளில் கம்பர் தம்முடைய 'இராமாவதார'த்தை அரங்கேற்றினார் என்று திரு. கணேசன் அவர்கள்

தம் ஆய்வின் முடிபாக அறுதியிட்டுக் கூறுகின்றார். எனவே, ஒவ்வொரு பங்குனித் திங்களிலும் மகம், பூரம், உத்திரம் ஆகிய மூன்று நாளிலும் காரைக்குடியிலும், அத்தத்தில் நாட்டரசன் கோட்டையில் கம்பருடைய பள்ளிபடை எனக் கருதப்படும் திருக்கோயிலிலும் கம்பருக்குத் திருவிழா எடுத்து வருகின்றனர்.

கடந்த இருபத்தைந்து ஆண்டுகளுக்கும் மேலாகத் திருவண்ணாமலையில் ஆகஸ்டுத் திங்களில் ஸ்ரீ அருணகிரிநாதர் திருவிழா நடைபெற்று வருகிறது. அவ்விழாவினையொட்டி அங்கு ஸ்ரீ அருணாசலேசுவரர் திருக்கோயிலுக்குள் இலக்கிய விழா ஒன்றையும் அமைக்கின்றார்கள். இலக்கிய விழாவில், காரைக்குடி தமிழ்க் கடல் திரு ராய. சொ. அவர்கள் ஆண்டுதோறும் பங்கேற்று வந்தார். இந்த இலக்கிய விழாவில் 'பட்டி மண்டபம்' என்னும் புதிய இலக்கிய உத்தியை ராய. சொ. அவர்கள் முதன்முதலாகப் புகுத்தினார்கள். இந்தப் பட்டிமண்டப நிகழ்ச்சி பொதுமக்களைப் பெரிதும் கவர்ந்தது. பட்டிமண்டப நிகழ்ச்சிகள் அனைத்தும் கம்பராமாயணத்தை ஒட்டியே நடைபெற்று வந்தன. தமிழ்நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் இலக்கியச் சுவைஞர்கள் இந்தப் பட்டிமண்டப நிகழ்ச்சியைக் கேட்டு மகிழ்வதற்காகத் திருவண்ணாமலைக்குத் திரண்டு வருவது வழக்கமாயிற்று.

இதனை யடுத்துத் தமிழ் நாடெங்கிலும் சிற்றூர்களிலும் பேரூர்களிலும் 'பட்டி மண்டபம்' நிகழத் தொடங்கிற்று. திருக்குறள், சிலப்பதிகாரம் போன்ற வேறு பல இலக்கியங்களை ஒட்டியும் பட்டிமண்டபங்கள் நிகழ்ந்தனவாயினும், இராமாயணத்தை ஒட்டிய பட்டிமண்டபங்களே பொது மக்களைப் பெரிதும் கவர்ந்தன.

பட்டிமண்டப நிகழ்ச்சியில் பங்கேற்றுப் பேசுவோரில் சிலர் இலக்கிய மரபுக்கு மாறுபட்டும் தரம் குறைந்தும் பேசுவதைக் கேட்டு மனம் வருந்திய பெரியோர் சிலர் 'பட்டி மண்டப'த்துக்கு எதிராகக் கொடி உயர்த்தி வந்தார்கள். ஆயினும் 'பட்டிமண்டபம் தன் கவர்ச்சியைத் தமிழ் மக்களிடம் இன்னும் இழந்துவிடவில்லை.

காரைக்குடியில் திரு கணேசன் அவர்கள் அயராது உழைத்து நடத்தி வந்த கம்பன் விழாவும், திருவண்ணாமலையில் ராய.சொ. அவர்கள் புகுத்திய பட்டிமண்டப நிகழ்ச்சியும் இணைந்து தமிழ் நாட்டில் பல்வேறு நகரங்களிலும் 'கம்பன் கழகம்' தோன்றுவதற்குத் தூண்டுகோலாக அமைந்தன.

1938 இல் காரைக்குடியில் கம்பன் கழகம் தோன்றிய பின்னர் 1977 ஆம் ஆண்டு வரை—முப்பத்தொன்பது ஆண்டுகளில்—பதினைந்து கழகங்கள் மட்டுமே தோன்றியிருந்தன. 1977 இல் பதினாறாவது கழகமாக வட ஆர்க்காடு மாவட்டத்தில் திருப்பத்தூர்க் கம்பன் கழகம் தோன்றியது. அதன் பின்னர் 1981 ஆம் ஆண்டுக்குள், நான்கு ஆண்டுகளில், இருபத்தாறு கழகங்கள் தோன்றியுள்ளன. 1981 இல் காரைக்குடி கழகத்துடன் சேர்த்து மொத்தம் நாற்பத்து மூன்று கழகங்கள் அமைக்கப்பட்டுள்ளன.

இவைகளில் முப்பத்தென்பது கழகங்கள் தமிழ்நாட்டின் எல்லைக்குள் அமைந்துள்ளன. மற்ற நான்கில் ஒன்று புதுவையிலும், ஒன்று கல்கத்தா மாநகரிலும், ஒன்று ஸ்ரீலங்கா யாழ்ப்பாணத்திலும், மற்றொன்று மலேசியா-மலாக்காவிலும் அமைந்துள்ளன.

தமிழ்நாட்டில் கம்பன் கழகம் அமைந்துள்ள ஊர்களின் பெயர்கள் வருமாறு; சென்னையில் 1; கிழக்குத் தாம்பரம், காஞ்சிபுரம் (செங்கை)2; வேலூர், வாழியூர், திருப்பத்தூர் (வடஆர்க்காடு 3; திண்டிவனம் (தென் ஆர்க்காடு)1; சேலம், நாமக்கல், இராசிபுரம் (சேலம்) 3; கள்ளிப்பட்டி, கோபி செட்டிப் பாளையம், கவுந்தம் பாடி (பெரியார்)3; கோயம்புத்தூர், அவினாசி, பொள்ளாச்சி (கோவை) 3; உதகமண்டலம் (நீலகிரி)1; திருச்சிராப்பள்ளி, கரூர், பெரம்பலூர் (திருச்சி)3; தஞ்சாவூர், தேரழுந்தூர், திருவாரூர், பட்டுக்கோட்டை, கும்பகோணம் (தஞ்சை)5; மதுரை, திருமங்கலம் (மதுரை)2; புதுக்கோட்டை 1; காரைக்குடி, நாட்டரசன் (1+1), சிவகங்கை, பரமக்குடி, ராமேசுவரம், ராஜபாளையம் (ராமநாத புரம்) 7; திருநெல்வேலி, பாளையங்கோட்டை, தென் திருப்பேரை, ஆலடிப்பட்டி (நெல்லை) 4.

கம்பருக்கு முதன்முதலில் கழகம் கண்ட இராமநாதபுரம் மாவட்டத்தில், எண்ணிக்கையில் மிகையாக, ஏழு கழகங்கள் அமைந்துள்ளன. இந்த மாவட்டத்தில் நாட்டரசன்கோட்டையில் இரு கழகங்கள் இயங்கி வருகின்றன. காரைக்குடி கம்பன் கழகத்தோடு இணைந்து பங்குனி அத்த நாளில் விழா எடுப்பது ஒன்று; மற்றொன்று தனியாகத் தொடங்கப்பட்டுள்ளது.

இராமநாதபுரம் மாவட்டத்துக்கு அடுத்துக் கம்பர் தோன்றிய தஞ்சை மாவட்டத்தில் ஐந்து கழகங்கள் அமைந்துள்ளது குறிப்பிடத் தக்கதாகும்,

தமிழ்நாட்டில் புதியனவாக உருவாக்கப்பட்டவையும் அளவில் சிறியவையுமான தருமபுரி, கன்னியாகுமரி ஆகிய இரு மாவட்டங்களிலும் கம்பன் கழகம் இதுவரை தோன்றவில்லை. ஏனைய பதினான்கு மாவட்டங்களிலும் கம்பன் கழகம் ஒன்றோ பலவோ தோன்றிச் செயல்பட்டு வருகின்றன.

சென்னை, பாண்டிச்சேரி, கோயம்புத்தூர், நாமக்கல், திருப்பத்தூர் ஆகிய நகரங்களில் உள்ள கழகங்கள் காரைக்குடி போலவே ஆண்டு தோறும் கம்பன் விழாவைச் சிறப்பாக நடத்தி வருகின்றன.

## II
## விழா நிகழ்ந்த ஊர்கள்

### 1. தேரழுந்தூர்

கம்பர் இந்த ஊரில் பிறந்தார் என்று நம்பப்படுகிறது. 'கம்பர் மேடு' என்ற ஓர் இடம் இந்த ஊரில் இருப்பதைக்கொண்டு அவர் அந்த இடத்தில் பிறந்து இருக்கக் கூடும் என்று எண்ணுகின்றனர்.

இந்த ஊரில் 1910 ஆம் ஆண்டிலேயே திரு T. A. பழனியப்ப முதலியார் என்பவர் 'கம்பர் கழகம்' என்னும் அமைப்பைத் தோற்றுவித்துள்ளார்.

காரைக்குடியில் தோன்றிய கழகமும், அதனைச் சார்ந்து பின்னர்த் தோன்றிய அனைத்துக் கழகங்களும் 'கம்பன் கழகம்' எனக் கம்பரை ஒருமையில் குறிக்க, இந்தத் தேரழுந்தூர்க் கழகம் மட்டுமே 'கம்பர் கழகம்' எனக் கம்பரைச் சிறப்புப் பன்மையினால் குறிப்பது குறிப்பிடத் தக்கதாகும்.

கம்பர் பிறந்த இந்த ஊரில் இருபதாம் நூற்றாண்டுத் தொடக்கத்திலேயே அப்பெரும்புலவர் பெயரில் கழகம் ஏற்பட்டது சிறப்புக்குரியதாகும். ஆயினும் அக்கழகம் 1933 ஆம் ஆண்டு வரை செயல்பட்டு வந்த செய்தி ஏதும் தெரியவில்லை. அதன் பின்னர், திரு. R. S. கந்தசாமிபிள்ளை, திரு. G. ஸ்ரீநிவாசாச்சாரி, திரு V. ரெங்காச்சாரி, திரு T. S. சுந்தரமய்யங்கார் முதலானோர் தலைமை ஏற்று ஆண்டுதோறும் விழா நடத்தி வந்துள்ளனர்.

அக்காலங்களில் டாக்டர் உ.வே. சாமிநாதய்யர், திரு. டி. கே சிதம்பரநாத முதலியார், திரு. கல்கி, திரு. பால்நாடார்,

திரு மு. அருணாசலம், திரு. ஸ்ரீநிவாசராகவன், திரு. கம்பன் அடிப்பொடி போன்றோர்கள் அங்கு வந்து விழாவில் பங்கேற்றுள்ளனர்.

1952 ஆம் ஆண்டில் கம்பர் மாநாடு ஒன்றை இக்கழகம் நடத்தியுள்ளது.

1953 ஆம் ஆண்டு முதல் 1975 ஆம் ஆண்டு வரையில் இவ்வூரில் உள்ள ஆமருவியப்பன் திருக்கோயில் நிதியிலிருந்து இங்குக் கம்பர் விழா நடைபெற்று வந்தது.

அதன் பின்னர்க் கம்பர் கழகமே மீண்டும் புத்துணர்வு பெற்று முன்போல் செயல்படத் தொடங்கியுள்ளது. கழகத்தில் புரவலர்களையும், ஆயுள் உறுப்பினர்களையும், ஆண்டு உறுப்பினர்களையும் சேர்த்து நிரந்தர நிதி ஒன்றை உருவாக்கியுள்ளனர். இதிலிருந்து கிடைக்கும் வட்டித் தொகை விழாச் செலவுக்கு ஓரளவு உதவுகிறது.

இக்கழகத்தின் இணைச்செயலர் புலவர் திரு. A. இராமபத்திரன் அவர்கள் தாம் செய்யும் சொற்பொழிவுகளில் தமக்குக் கிடைக்கும் தொகையை இக் கழகத்தின் மூலதனமாக வைக்க இசைந்து அவ்வாறே செய்து வருகிறார் என்பது போற்றற்குரிய செயலாகும்.

ஆண்டுதோறும் மாசித்திங்களில் புனர்பூச நாளின் அருகில் வரும் சனி ஞாயிறுகளில் இக்கழகத்தார் விழா எடுக்கின்றனர்.

1981- பெப்ருவரி 14, 15 (சனி, ஞாயிறு) ஆகிய இரு நாளில் விழா நடந்தது.

14-2-81 சனிக்கிழமை காலை 8 மணிக்கு கம்பர் மேட்டிலிருந்து கம்பர் திருவுருவப் படத்தினை ஊர்வலமாக எடுத்து வந்து கம்பர் கலைக்கோயில் அமைக்க எண்ணியுள்ள அரங்கினை அடைந்தனர்.

காலை 9-30 மணிக்கு ஆமருவியப்ப பெருமாள் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள கம்பர் பெருமானுக்குத் திருமஞ்சனம் செய்தார்கள்.

அன்று பிற்பகல் நிகழ்ச்சியில் திரு. சு. நல்லபெருமாள் அவர்கள் 'கவி உலகில் கம்பன்' என்னும் தலைப்பில் சிறப்புரை ஆற்றினார். பின்னர், 'கம்பன் படைத்த பாத்திரங்கள்' என்னும் தலைப்பில் கவிஞர் பதின்மர் கவி பாடினார்கள். 'கம்பரின் கைவண்ணத்தை மிகுதியாகக் காட்டும் பாத்திர அமைப்பு' என்னும்

தலைப்பில் பட்டிமன்றம் நடந்தது. 'தந்தையர் நிலையே', 'தாயர் நிலையே', 'தம்பியர் நிலையே' என மூன்று அணிகளாகத் திரண்டு அறிஞர் ஒன்பதின்மர் சொற்போரிட்டனர். இரவு 9 மணிக்குத் திரு. டி. வி. ஸ்ரீநிவாசாச்சாரியார் அவர்கள் கம்ப ராமாயண இசை பொழிந்தார்.

15-2-81 ஞாயிற்றுக்கிழமை காலை 9-மணிக்கு உயர்நிலைப் பள்ளி, மேல்நிலைப்பள்ளி மாணவர்களுக்கான பேச்சுப் போட்டி, 'பயிற்சி அரங்க'மாக நடைபெற்றது. அன்று பிற்பகல் மாயூரம் கோட்டாட்சித் தலைவர் செல்வி M. P. நிர்மலா அவர்கள் 'கருத்து அரங்க'த்தைத் தொடங்கி வைத்தார். திரு.சொ. சிங்கார வேலனார் தலைமையில் அறிஞர் பெருமக்கள் மூவர் கருத்துரை வழங்கினார்கள். இரவு 7 மணிக்கு, திருக்குறளார் திரு வி. முனிசாமி அவர்கள் நடுவராக விளங்கிய வழக்காடு மன்றத்தில் 'தந்தைக்கு ஏற்ற மைந்தனாக இந்திரசித்தன் விளங்கவில்லை' என்ற வழக்கு நடைபெற்றது.

இந்த ஊரில் கம்பருக்கு ஒரு நினைவாலயம் எழுப்பவேண்டுமென்ற உந்துதல் ஏற்பட்டு 10-10-1954-இல் அப்போதைய தமிழ் நாட்டு ஆளுநராக இருந்த திரு. ஸ்ரீபிரகாசா அவர்களைக் கொண்டு அடிக்கல் நாட்டியுள்ளனர். கட்டடம் உருவாகவில்லை. இந்த நினைவாலயத்தை எழுப்பி முடிப்பதற்காக இக்கழகத்தினர் மாநில அரசினை அணுகியுள்ளனர்.

உயர்நிலைப்பள்ளி மேல்நிலைப்பள்ளி மாணவர்களுக்கெனப் பேச்சுப் போட்டியும், தொடக்கப்பள்ளி மாணவர்களுக்கெனப் பாட்டு ஒப்பித்தல் போட்டியும் இவர்கள் நடத்திவருகின்றனர்.

திரு கடகம் K. சோமசுந்தரம் பிள்ளை அவர்கள் தலைவராகவும், திரு R. ஸ்ரீநிவாசன் அவர்கள செயலராகவும் பொறுப்பேற்று இதனை நடத்தி வருகின்றனர்.

## 2. காரைக்குடி

கம்பன் கழகங்கள் எல்லாம் 'தாய்க்கழகம்' எனப் போற்றும் இக்கழகம் 1938-ஆம் ஆண்டில் தொடங்கப் பெற்றது. தொடங்கிய காலம் முதல் திரு சா. கணேசன் அவர்கள் இதன் செயலராகப் பொறுப்பேற்று இக்கழகத்தினை இயக்கி வந்திருக்கிறார்.

காரைக்குடி கம்பன் கழகத்துக்கு ஓர் அறக்கட்டளையை நிறுவி அதன் சார்பில் இக்கழகம் இயங்கி வருகிறது. 'கம்பன் மணி

மண்டபம்'என்ற பெயரில் ஒரு பெரிய அரங்கத்தை அங்கே எழுப்பி யுள்ளனர். வேறு எந்த ஊரிலும் இத்தகைய அரங்கம் கழகத் துக்கே உரியதாய் ஏற்படவில்லை. மேலும் அம் மணிமண்டபத்தின் வளாகத்திலேயே கம்பருக்கு ஒரு கோயிலையும், தமிழ்த் தாய்க்கு ஒரு கோயிலையும் கட்டத்தொடங்கிப் பணி நடந்துகொண் டிருக்கிறது.

1938-ஆம் ஆண்டில் தொடங்கியது முதல் 1981-ஆம் ஆண்டு வரை நாற்பத்து மூன்று ஆண்டுகளாக ஓராண்டும் தவறாமல் இங்குக் கம்பன் திருநாள் நடைபெற்று வந்துள்ளது.

திருவெண்ணெய் நல்லூரில் 'இராமாவதாரம்' அரங்கேறிய நாள் எனக் கருதப்படும் பங்குனி அத்தத்திற்கு முன், மூன்று நாள் நிகழ்ச்சியைக் காரைக்குடியில் அமைப்பது என்ற நியதியைக் கொண்டு அவ்வாறே ஆண்டுதோறும் இங்கே கம்பன் திருநாள் கொண்டாடுகிறார்கள்.

1981ஆம் ஆண்டு மார்ச்சு 18இல் முதல் நாள் நிகழ்ச்சி நடை பெற்றது. தமிழ் நாடு நிதி அமைச்சர் மாண்புமிகு நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்கள், 'திருநாள் மங்கலம்' என்னும் காலை நிகழ்ச்சிக்குத் தலைமை ஏற்றார். இந்த ஆண்டு வ.வே.சு. அவர்களின் நூற்றாண்டு என்பதனை நினைவில் கொண்டு அவருடைய படத்திறப்பும், அண்மையில் இறைவனடி சேர்ந்த தமிழறிஞர் பன்மொழிப்புலவர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்களுடைய படத்திறப்பும் இந்நிகழ்ச்சியில் இடம் பெற்றன. கம்பருடைய இராமாவதாரத்தை ஹிந்தியில் மொழி பெயர்த்த திரு.தி. சேஷாத்திரி அவர்களுக்குப் பாராட்டும் இக்காலை நிகழ்ச்சியில் நடைபெற்றது. பின்னர் ஆண்டு விழா மலர் வெளி யிட்டனர்.

முதல் நாள் மாலையில் 'இன்று சந்திக்கும் இவர்கள்' என்னும் நிகழ்ச்சி நடைபெற்றது. சென்னை உலகத்தமிழ் ஆராய்ச்சி நிறுவனத்தின் இயக்குநர் டாக்டர் ச. வே. சுப்பிர மணியன் அவர்கள் தலைமை ஏற்றார்கள். காப்பிய மாந்தர் இருவர் மேடையில் தோன்றிக் காப்பியக் கதை முடிந்த பின்னர்த் தங்கள் குறை நிறைகளைத் தங்களுக்கிடையே கருத்துப் பரிமாற்றம் செய்து கொள்வதுபோல் அமைவது இந்நிகழ்ச்சி. இந்த நிகழ்ச்சியில் அப்பாத்திரங்களின் பண்பு நலன்களும், அவற்றை

ஏற்று உரையாடும் அறிஞரின் கற்பனைத் திறனும் ஒருங்கே வெளிப்படும் போக்கில் கேட்போர் பாத்திரப் படைப்பின் அருமையை நுணுகியறியும் வாய்ப்புப் பெறுகின்றனர்.

இரண்டாம் நாள் காலையில் கவியரங்கம் நடைபெற்றது. திரு. அரங்கசீனிவாசன் அவர்கள் தலைமை ஏற்றார். 'காந்தி காதை' என்னும் நூலைப் பாடிய சிறப்புக்காக முதலில் அவரைப் பாராட்டும் நிகழ்ச்சி இடம் பெற்றது. இராமன், சீதை, பரதன் போன்ற காப்பிய மாந்தரின் திருவடி தொடர்பு பெற்றுச் சிறப் படைந்த அயோத்தி, மிதிலை, அசோகவனம், நந்திக்கிராமம் போன்ற நிலங்கள் வாய் பெற்றுப் பேசுவதுபோல், 'நாங்களும் பேசுகிறோம்' என்ற தலைப்பில் கவிஞர் பதின்மர் கவிதை பொழிந்தனர்.

இரண்டாம் நாள் மாலையில் பட்டிமண்டபம் நடைபெற்றது. தவத்திரு குன்றக்குடி அடிகளார் நடுவராக அமர்ந்தார். 'இராமன் சிறப்புக்குப் பெருங்காரணம் அவனுடைய சீலமா, பண்பாடா, அல்லது வீரமா?' என்பதனை அறிஞர்கள் ஒன்பதின்மர் மூன்று அணியாகத் திரண்டு ஆய்ந்தனர். இவற்றில் ஓர் அணியின் வாதத்தில் வலிவு இல்லை என அவ்வணியை நோக்கர்கள் விலக்கினர். எஞ்சிய ஈரணியினரும் மீண்டும் தம் கட்சியின் நிலையை எடுத்துரைத்தனர். இறுதியில் நடுவர் தம் முடிபை வழங்கினார்.

காரைக்குடிக்கே சிறப்பாக உரிய மேல்முறையீட்டுப் பட்டி மண்டபம் மூன்றாம் நாள் காலையில் நடைபெற்றது. சென்னை உயர்நீதிமன்ற நடுவர் திரு. ஆர். செங்கோட்டுவேலன் அவர்களும், தமிழ்நாடு அரசுப் பணி ஆணைக்குழு உறுப்பினர் திரு எஸ். சீனிவாசன் அவர்களும் நடுவராயமாக அமர்ந்தனர். பதிவாளர் வழக்கை அவைக்கு எடுத்து விளக்கிய பின்னர் நோக்கர்களின் தீர்ப்பால் வீழ்ந்த தரப்பினரும் நடுவரின், தீர்ப்பால் வீழ்ந்த தரப்பினரும் மேல்முறையீடு செய்தனர். நோக்கர்கள் சார்பிலும், முதல் நாள் வழக்கில் வென்றவர் சார்பிலும் எதிர் வாதங்கள் உரைக்கப்பட்டன. நடுவராயம் இறுதியாகத் தம் தீர்ப்பை வழங்கி முடித்தனர்.

மூன்றாம் நாள் மாலை 'நற்றமிழ் முற்றம்' என்னும் நிகழ்ச்சி நடைபெற்றது. சென்னை திரு கி. வா. ஜகந்நாதன் அவர்கள் தலைமை ஏற்றார்கள். காப்பியத் தலைவன் இராமனைக் குறித்துப் பிறமாந்தர் தம் கருத்தினைக் கூறுவது போல் அமைவது

இந்நிகழ்ச்சி, தசரதன் , கைகேயி, விசுவாமித்திரன், அகலிகை, குகன், விராதன், சூர்ப்பணகை, கவந்தன், வாலி, வீடணன் போன்றார்கள் மேடையில் வந்து தங்கள் கருத்துகளை வெளியிட்டார்கள். அவர்களுடைய கூற்றில் இராமனை அவர்கள் காணும் காட்சியை நாம் அறிவதோடு அப்பாத்திரங்களின் பண்புநலன் களையும் நாம் அறியும் வாய்ப்பும் ஏற்படுகிறது.

## 3 (a) நாட்டரசன்கோட்டை

காரைக்குடி கம்பன் கழகத்தினரே இங்கு வந்து விழா எடுக் கின்றனர். கம்பருடைய பள்ளிபடைத் திருக்கோயிலில் ஆண்டு தோறும் பங்குனித் திங்கள் அத்த நாளில் திருநாள் கொண்டாடப் பெறுகிறது. காரைக்குடியில் முதல் மூன்று நாள் விழா கொண் டாடிய பின்னர் நான்காம் நாளில் இங்கு வந்து விழா செய்கின்றனர்.

1981 ஆம் ஆண்டில் மார்ச்சுத் திங்களில் 21 ஆம் நாளில் விழாக் கொண்டாடினார்கள். பிற்பகல் ஒரு வேளை மட்டுமே நிகழ்ச்சிகள் நடக்கின்றன. மாலை 4-30 மணிக்கு, கம்பருடைய அருட் கோயிலில் வழிபாடு செய்கின்றனர். மலர் வணக்கமும், கம்பருடைய அருட்கவி ஐந்தினைப் பாடுதலும் வழிபாடாக அமை கின்றன. இந்த ஆண்டில் வ. வே. சு. அவர்களின் வரலாற்றை வெளியிட்டனர். பின்னர் அறிஞர் பெருமக்கள் ஐவர் வ. வே. சு. அவர்களின் பல திறப்பட்ட ஆற்றலையும், கம்பருக்கு அவர் ஆற்றியுள்ள தொண்டினையும் பாராட்டிப் பேசினார்கள்.

## 3 (b) நாட்டரசன்கோட்டை

இந்த ஊரில் திரு. இராம. ஆவிச்சி அவர்களைத் தலைவ ராகக் கொண்டு 1981-ஆம் ஆண்டில் மற்றொரு கம்பன் கழகமும் தொடங்கியுள்ளனர்.

ஒவ்வோராண்டிலும் ஆடித் திங்கள் இறுதி வெள்ளிக் கிழமையில் கம்பன் அருட்கோயிலில் வழிபடுதலும், மே திங்கள் இறுதி சனி ஞாயிறுகளில் கம்பன் விழா எடுத்தலும், வைகாசித் திங்களில் ஸ்ரீகண்ணுடைய நாயகி அம்மன் விழாவின் போது இலக்கியநிகழ்ச்சிகளை நடத்துதலும்இக்கழகத்தின்நோக்கங்களாக அமைந்துள்ளன. இவை தவிர வாரந்தோறும்புதன் கிழமைகளில்

மாலையில் கூடி இராமகதை, சிலப்பதிகாரம், பெரியபுராணம் முதலான இலக்கியங்களில் கருத்தரங்கம், கவியரங்கம், பட்டி மண்டபம், வழக்காடு மன்றம் நடத்துவதையும் இக்கழகம் மேற் கொண்டுள்ளது.

1981 இல் 15 கூட்டங்கள் நடைபெற்றுள்ளன. இது தவிர மே 10 முதல் 19ஆம் நாள் வரையில் கம்பராமாயணத்தை முதன்மையாக வைத்து இலக்கியத் தொடர் நிகழ்ச்சி நடத்தியுள் ளனர்.

31-5-81 இல் காரைக்குடி திரு கம்பன் அடிப்பொடி அவர்களின் தலைமையில் முதலாம் ஆண்டு விழா நடந்தது.

14-10-81 முதல் 23-10-81 வரையில் மற்றொரு தொடர் நிகழ்ச்சி நடைபெற்றது. 'கண்ணுடையம்மன் 'வாலையந்தாதி' என்னும் நூலைக் குறித்து அறிஞர் பத்தொன்பதின்மர் இந் நிகழ்ச்சியில் பங்கேற்றனர்.

## 4. சென்னை

1974 இல் இக்சழகம் தொடங்கப்பட்டது. சென்னை நீதிபதி திரு மு.மு. இஸ்மாயில் அவர்கள் இதன் தலைவர். திரு. பழ. பழனியப்பன் செயலர். ஆண்டு தோறும் ஆகஸ்டுத் திங்கள் இரண்டாவது வாரம் வெள்ளி, சனி, ஞாயிறுகளில் இக்கழகம் 'கம்பன் விழா' எடுத்து வருகிறது. 1981 ஆகஸ்டு 7, 8, 9, ஆகிய மூன்று நாளிலும் விழா நடைபெற்றது. மயிலை இராஜேசுவரி திருமண மண்டபம் விழாக் களமாக அமைந்தது.

முதல் நாள் மாலை தொடக்க விழாவில், தமிழ்த் தொண் டாற்றி வரும் பெருமக்கள் திரு அ. கு. ஆதித்தர், திரு. கா. நயினார் முகம்மது ஆகிய இருவர்க்கும் பாராட்டுச் செய்தனர்.

இரண்டாம் நாள் காலை நிகழ்ச்சியில் கம்பரின் பெருமையை உலகுக்கு எடுத்தியம்பிய சான்றோர்களான வ.வே.சு., பாரதியார், ரசிகமணி, தெ. பொ. மீ. ஆகியோரின் பெருமைகளைப் பேசினர். மாலையில் 'கவிப்பொழில்' நிகழ்ச்சி நடைபெற்றது. கோனியல், குடியியல், அமைச்சியல், உழவியல், நட்பியல். ஒழுக்க வியல், இல்லறவியல், இறையியல் ஆகிய எட்டுத் துறைகளையும் கம்பர் தம் காப்பியத்தில் அமைந்துள்ள பாங்கினைக் கவிஞர் பெருமக்கள் எண்மர் தம் கவிதையில் அமைத்துப் பாடினார்கள்.

மூன்றாம் நாள் காலை நிகழ்ச்சியைக் கல்லூரி மாணவர்க்கே என ஒதுக்கி இளைஞர் சமுதாயத்துக்கு ஊக்கமளித்தார்கள். காப்பியத்தின் பின்னணியில் மின்னுகின்ற சிறு பாத்திரங்களை எடுத்துக் கொண்டு, அந்தச் சிறு பாத்திரங்களையும் கம்பர் எத்தகைய அழகிய ஓவியங்களாகத் தீட்டியுள்ளார் என்பதனை மாணவர்கள் சிறந்த ஒளி வீசிக் காட்டினர்.

அன்று மாலையில், நிகழ்ச்சிகளுக்கெல்லாம் மகுடமாகத் திகழும் 'பட்டிமண்டப'த்தை அமைத்தார்கள். இராமன் அம்பி னால் உயிர் நீத்த வாலி, கும்பகர்ணன், இராவணன் ஆகிய மூவரின் வீரத்தையும் அறிஞர் பெருமக்கள் ஆய்ந்து அவற்றின் தரத்தை அளவிட்டுக் காட்டினர். அவர்களுடைய வாதத்தில் வெளிப்பட்ட கருத்துகளை யெல்லாம் தொகுத்துக் கூறித் தம்முடைய தீர்ப்பினை வழங்கினார், நடுவராய் அமர்ந்த திரு. இஸ்மாயில் அவர்கள்.

ஆண்டுவிழா எடுப்பது மட்டுமன்றி, ஆண்டு முழுவதும் கம்பராமாயண வகுப்புகளை நடத்தி வருகிறது இக்கழகம். தவிர கம்பராமாயணம், சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், திருக்குறள், சீறாப்புராணம் ஆகிய இலக்கியங்களில் கட்டுரைப் போட்டியும் பேச்சுப் போட்டியும் நடத்துவது இக்கழகத்தின் சிறப்பாகும். போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்குக் கவக்ச்சியான ரொக்கப் பரிசும் வழங்கி வருகின்றனர். இளைஞர் சமுதாயத்திலிருந்து ஆண்டு தோறும் புதிய பேச்சாளர்கள் உருவாவதற்கு இப்போட்டிகள் பெரிதும் உதவுகின்றன.

## 5. காஞ்சிபுரம்

இக்கழகம் 1978இல் தோன்றியது. திரு. ப. கலியபெருமாள் இதன் தலைவராகவும், திரு ச.கி. இராமன் செயலராகவும் செயல் படுகின்றனர். மே திங்கள் முதல் வாரம் சனி ஞாயிறுகளில் விழா எடுக்கின்றனர். கருத்தரங்கம், கவியரங்கம், பட்டிமன்றம் ஆகிய நிகழ்ச்சிகள் விழாவில் இடம் பெறுகின்றன.

## 6. வாழியூர்

வடஆர்க்காடு மாவட்டத்தில் வேலூருக்கு அருகே உள்ளது. 10-7-78 இல் தொடங்கப்பட்டது. ஆண்டு தோறும் அக்டோபர் முதல் வாரத்தில் விழா எடுக்கின்றனர். புலவர் திரு. சிவசண்முகம் இதன் தலைவர்; திரு. வே. இராசவேலன் செயலர்.

ஆண்டுவிழாவில் கருத்தரங்கம், வாதாடு மன்றம், கவியரங்கம், பட்டிமண்டபம் போன்ற நிகழ்ச்சிகள் இடம் பெறுகின்றன. ஒவ்வோராண்டிலும் மாணவர்களுக்குப் பேச்சுப் போட்டி, கட்டுரைப் போட்டி, பாட்டு ஒப்பித்தல் நடத்திப் பரிசளித்து ஊக்கமளிக்கின்றனர்.

1981 அக்டோபர் 10, 11 ஆகிய இரு நாளில் மூன்றாம் ஆண்டு விழா எடுத்தார்கள்.

முதல் நாள் மாலையில் கருத்தரங்கமும், கலைதெரி அரங்கமும் நடைபெற்றன. வேலூர் திரு. வெ. சோலைநாதன் அவர்கள் தலைமையில் கருத்தரங்கம் நடைபெற்றது. 'இராமகாதை'யில் கற்பனை, காதல், வீரம், நகை ஆகிய நான்கு பொருள்களின் கருத்தினை அறிஞர் நால்வர் ஆய்ந்துரைத்தனர்.

இரவு 9 மணிக்கு, கலைதெரி அரங்கம் புலவர் திரு. சி. சிவசண்முகம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. 'இவர்கள் இன்று சந்தித்தால்' என்னும் தலைப்பில் (1) தசரதனும் கைகேயியும், (2) வாலியும் தாரையும், (3) இராவணனும் மண்டோதரியும் சந்தித்துத் தம் பழைய கதையை இன்றுள்ள நிலையில் ஆய்வு செய்தனர்.

இரண்டாம் நாள் காலை 9 மணிக்குக் கவியரங்கம் நிகழ்ந்தது. பெண்ணாத்தூர் திரு. சிவ. ஆறுமுகம் தலைமை ஏற்றார். 'நாங்களும் பேசுகிறோம்' என்னும் தலைப்பில் வில், மரவுரி, பாதுகை, பர்ணசாலை, மகுடம், சூளாமணி ஆகிய வாயில்லா அஃறிணைப் பொருள்கள் ஆறும் கவிஞர் பெருமக்கள் அறுவரின் கருத்தில் பிறந்து வாய் திறந்து கவிதைகளைப் பொழிந்தன.

அன்று பிற்பகல் 2 மணிக்குப் பாராட்டரங்கம் நிகழ்ந்தது. வ. வே. சு., டி. கே. சி., பாரதியார் ஆகிய மூன்று பெருமக்களையும் அறிஞர் மூவர் பாராட்டிப் பேசினர்.

மாலை 4 மணிக்குப் போட்டியில் வெற்றிபெற்ற மாணவர்க்குப் பரிசளித்தனர். ஏழை மாணவர்க்குப் பலகை புத்தகங்கள் வழங்கினர்.

இரவு 7 மணிக்குப் புலவர் திரு. சிவசண்முகம் அவர்கள் தலைமையில் 'பட்டிமன்றம்' நடைபெற்றது. சென்னை பேராசிரியர் திரு. தெ. ஞானசுந்தரம் அவர்கள் நடுவராய் வீற்றிருக்க

'இராமனைச் சேர்ந்த தம்பியருள் சிறந்தவன் குகனா, சுக்கிரீவனா, வீடணனா?' என்பதை அறிஞர் பெருமக்கள் ஒன்பதின்மர் மூன்று அணியாகத் திரண்டு சொற்போர் நிகழ்த்தினர்.

## 7. திருப்பத்தூர்

16-7-1977இல் காரைக்குடி திரு. கம்பன் அடிப்பொடி அவர்கள் தலைமையில் கோவை தவத்திரு. சுந்தரசுவாமிகள் இக் கழகத்தைத் தொடங்கி வைத்தார். திரு. கா. அ. ஷ. பத்மநாபன் அவர்களைத் தலைவராகவும், திரு. சு. சண்முகசுந்தரம் அவர்களைச் செயலராகவும் கொண்டு இது இயங்கி வருகிறது. ஆண்டு தோறும் சூலைத் திங்கள் மூன்றாவது வாரம் (ஆடித் திங்கள் முதல் வாரம்) சனி ஞாயிற்றுக்கிழமைகளில் விழா எடுக்கின்றனர். ஒவ்வோராண்டிலும் மலர் வெளியிடுகின்றனர். பள்ளி, கல்லூரி மாணவர்களுக்கான பேச்சுப் போட்டியும் கட்டுரைப் போட்டியும் நடத்தப்படுகின்றன. இராமகிருஷ்ணா மேல்நிலைப் பள்ளிக் கலைஅரங்கு விழாக்களமாக அமைகிறது.

இரண்டாம் ஆண்டு விழாவின் போது, திருப்பத்தூர்க் கோட்ட வனத்துறையினர் குறிஞ்சி, முல்லை நிலப் பூக்களைக் கொண்டு மலர்க்காட்சி அமைத்தனர். ஓவியக் கலைஞர்கள் இராமகாதையில் வரும் அரிய காட்சிகளை ஓவியங்களாகத் தீட்டி அவைகளைக் கொண்டு ஓவியக்காட்சி அமைத்தனர்.

திருப்பத்தூர் மாவட்ட வன அலுவலர் (D.F.O) திரு. சு. சண்முகசுந்தரம், ஐ எப்.எஸ். அவர்கள் 'கம்பன்கூறும் தாவரங்கள்' என்னும் தலைப்பில் ஒரு கட்டுரையை இக்கழகத்தின் மூன்றாம் ஆண்டு மலரில் வரைந்துள்ளார். இக்கட்டுரையில் ஒரு பட்டியலை அவர் கொடுத்துள்ளார். தாவரங்களின் இலக்கியப் பெயர், அதற்கு உரையாசிரியரின் விளக்கம், அதற்கு ஆங்கில அறிவியல் பெயர், அதனை விள்க்கும் குறிப்பு- இவைகள் அப்பட்டியலில் இடம் பெற்றுள்ளன. அரிய முயற்சி செய்து தொகுக்கப்பட்டுள்ள இப் பட்டியல் தாவர இயல் ஆய்வு மாணவர்க்குப் பெரிதும் பயன்படக் கூடியதாகும்.

மூன்றாம் ஆண்டுவிழாவின் போதும் தாவர, ஓவியக் காட்சிகள் வைக்கப்பட்டன.

வட ஆர்க்காடு மாவட்டத்தைச் சேர்ந்த முதுபெருந் தமிழறிஞர் இருவர்க்குச் சிறப்புச் செய்யும் நோக்கத்தில்,

பேராசிரியர் திரு. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை அவர்களுக்கும், புரிசை திரு. சு. முருகேச முதலியார் அவர்களுக்கும் பாராட்டுச் செய்தது சிறப்பு நிகழ்ச்சியாகும்.

1981 சூலைத்திங்கள் 18, 19 ஆகிய இரு நாளில் ஐந்தாம் ஆண்டு விழா நடைபெற்றது.

முதல் நாள் காலையில் திரு. கம்பன் அடிப்பொடி அவர்கள் தலைமையில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் திரு சை. வே. சிட்டிபாபு அவர்கள் விழாவைத் தொடங்கி வைத்தார். திரு. குமரி அனந்தன் அவர்கள் 'கம்பன் வரைந்த கோலம்' என்ற தலைப்பில் சிறப்புரை ஆற்றினார்.

மாலையில் திரு. சோ. சத்தியசீலன் அவர்கள் பட்டி மண்டபத்தில் நடுவராய் அமர்ந்தார். 'துயரத்தால் பெரிதும் பாதிக்கப் பட்டவர் யார்?' என்ற வினாவுக்குத் 'தயரதனே' என்றனர் ஓர் அணியினர். 'இல்லை; சீதையே' என்றனர் பிறிதோரணியினர். 'இல்லை இல்லை; மண்டோதரியே' என்றனர். மூன்றாவதணியினர். 'அவளும் அவனும்' என்னும் நிகழ்ச்சியில் (1) கைகேயியும் தசரதனும், (2) மண்டோதரியும் இந்திரசித்தும் தோன்றிக் கருத்துப் பரிமாறிக்கொண்டனர். கவிஞர் வாலி தலைமையில் இராமனைத் தலைவன், தோழன், சீடன், கணவன், தாய் என்னும் உறவில் ஐந்து கவிஞர்கள் கவிதை பொழிந்தனர்.

இரண்டாம் நாள் காலையில் 'இவர் பார்வையில் இவர்' என்ற நிகழ்ச்சியில் இராமனை டி. கே. சி. பார்த்தார். பரதனை இராஜாஜி பார்த்தார்; சீதையை வ. வே. சு. பார்த்தார்; இராவணனை அ. சா. ஞா. பார்த்தார். இங்ஙனம் இப்பெருமக்களின் பார்வைகளை அறிஞர் நால்வர் விளக்கிக் கூறினர். பின்னர் வ. வே. சு. நூற்றாண்டு விழா நிகழ்ச்சி நடைபெற்றது. திரு. கம்பன் அடிப்பொடி அவர்கள் தலைமையில் திரு. இரா. இராதாகிருஷ்ணன் அவர்கள் வ. வே சு. அவர்களின் சிறப்புகளைக் குறித்துப் பேசினார்.

மாலையில் 'பாங்கறிமண்டபம்' என்னும் புதிய நிகழ்ச்சி அறிமுகப்படுத்தப்பட்டது. திரு. இரா. இராதாகிருஷ்ணன் தலைமை ஏற்றார். 'இராவணன் அழிவிற்குக் காரணம் அவன் செயல்களே' என்பது தலைப்பு. அறிஞர் ஐவர் தங்கள் ஆய்வுரையை வழங்கினர்.

இறுதியாக செல்வி டாக்டர் பத்மா சுப்பிரமணியம் அவர்களின் கம்பராமாயண நாட்டிய நாடகம் நடைபெற்றது.

திருப்பத்தூர்க்கே உரிய ஒரு சிறப்பு— 'நிகழ்ச்சியாளர்' என ஒருவர் மேடையில் ஒரு புறம் அமர்ந்து நிகழ்ச்சிகளையும் நிகழ்ச்சியில் பங்கேற்கும் அறிஞர்களையும் அவையினர்க்கு அறிமுகப் படுத்துவதாகும். நிகழ்ச்சி தொடங்கியது முதல் முடியும் வரையில் அவையிலுள்ளோரை ஒருமுகப்படுத்தி அவர்களுக்குப் பல்வேறு செய்திகளை இந்த நிகழ்ச்சியாளர் இடையிடையே அறிவித்துக் கொண்டே இருப்பார். இதனால் நிகழ்ச்சிகள் நடைபெறுகின்ற பல மணிநேரமும் விறுவிறுப்பாகவே அவையை நடத்திச் செல்ல முடிகிறது.

திரு. இரத்தின நடராசன், திரு. டி. கே. சந்திரசேகரன் டாக்டர் ப. விசாகப்பெருமாள் ஆகியோர் இந்தச் சிறப்பு நிகழ்ச்சியை ஆண்டுதோறும் திறமையாகச் செய்து, பலருடைய பாராட்டையும் பெற்றுவருகின்றனர்.

## 8. சேலம்

1981இல் இக்கழகம் தன் எட்டாம் ஆண்டு விழாவைக் கொண்டாடியுள்ளது. திரு. எம். ஏ. பழனியப்பச்செட்டியாரைத் தலைவராகவும், திரு. ப. கந்தசாமி அவர்களைச் செயலராகவும் கொண்டுள்ளது இக்கழகம்.

25-1-81 ஞாயிறு காலை தொடக்கவிழா திரு. கம்பன் அடிப்பொடி அவர்கள் தலைமையில் நடைபெற்றது. டாக்டர் ம.பொ.சி. தொடக்கவுரை ஆற்றினார். திரு. கி. வா. ஜகந்நாதன் அவர்கள் தலைமையில் கவியரங்கம் நடைபெற்றது. அன்புடைமை, அறிவுடைமை, ஆற்றலுடைமை, பொறையுடைமை ஆகிய கம்பருடைய உடைமைகள் நான்கைக் குறித்துக் கவிஞர் நால்வர் கவி பாடினர். பிற்பகல் நிகழ்ச்சியில் ம.பொ.சி. அவர்கள் 'கம்பன் வழியில் காந்தியடிகள்' என்னும் தலைப்பில் தலைமையுரை ஆற்றினார். 'காப்பிய உலகில் கம்பன்' என்ற தலைப்பில் திரு. கி. வா. ஜ. பேசினார்.

மாலை 6 மணிக்கு, திரு. க.கு. கோதண்டராமக் கவுண்டர் அவர்கள் நடுவராக அமரப் பட்டிமண்டபம் நடைபெற்றது. கம்பனின் சிறுபாத்திரங்களில் சிறந்து நிற்போர் யார்?' என்னும் வினாவினை எழுப்பினர். 'சுமந்திரனே' என்று மூவரும், 'அங்கதனே' என்று மூவரும் பேசினர்; 'இல்லை, திரிசடையே' என்று வேறு மூவர் சொற்போர் நிகழ்த்தினர். இவ்விழா ஒரு நாள் நிகழ்ச்சியாக அமைந்தது.

## 9. இராசிபுரம்

திரு. எஸ். கிருஷ்ணமூர்த்தி அவர்கள் இதன் செயலர். இக் கழகம் 1961இல் தொடங்கப் பெற்று 1977 வரையில் மிகச் சீரிய முறையில் ஆண்டுதோறும் விழா எடுத்து வந்தது. அதன் பின்னர், எதிர்பாராத ஒரு நிகழ்ச்சியினால் விழா எடுப்பது நிறுத்தி வைக் கப்பட்டுள்ளது. மீண்டும் தொடங்கி முன்போல் சிறப்புடன் இயங்க முயற்சிகள் நடைபெறுகின்றன. வாரந்தோறும் புதன் கிழமைகளில் கம்பராமாயணம் தொடர் சொற்பொழிவாக நடத்தி முடித்துள்ளனர். ஸ்ரீராம நவமி உற்சவத்தின் போதும் பத்துநாள் கம்பராமாயணம் தொடர் சொற்பொழிவு நடத்து கின்றனர்.

## 10. நாமக்கல்

பழமையான கம்பன் கழகங்களில் இந்த ஊர்க் கழகமும் ஒன்றெனத் தெரிகிறது. 1980 ஆம் ஆண்டு விழா அழைப்பில் '23-ம் ஆண்டு' எனக் குறிப்பிட்டிருப்பதனைக் கொண்டு, இக்கழகம் 1958 ஆம் ஆண்டில் தொடங்கியிருக்கக்கூடும் என அறியலாம். இவர்களும் ஆண்டுதோறும் விழா எடுத்து வருகின்றனர். சூலைத் திங்கள் இரண்டாவது வாரம் சனி ஞாயிறுகளில் விழா எடுப்பதை இக்கழகம் வழக்கமாகக் கொண்டிருக்கிறது.

இக்கழகம் விழா எடுக்கும் அரங்கிற்குச் 'சடையப்பன் காவணம்' என்று பெயர் சூட்டி வருவது கம்பர் பெருமானுக்கே மகிழ்வூட்டும் சிறப்புடையதாகும். இவ்விழாவில் இன்னிசைச் சொற்பொழிவு, 'இவர்கள் சந்திப்பு,' கவியரங்கம், வழக்காடு மன்றம், பட்டிமண்டபம் ஆகிய நிகழ்ச்சிகள் இடம் பெறுகின்றன.

## 11. கோவை

கோவையில் கம்பன் கழகம் ஒன்பது ஆண்டுகளுக்கு முன்னர்த் தோன்றியுள்ளது. திரு. G.K. சுந்தரம் அவர்களைத் தலைவராக வும், திரு. க.மீ. வேங்கடேசன் அவர்களைச் செயலராகவும் கொண்டுள்ளது. பாப்பநாயக்கன்பாளையம் மணிபீடர் பள்ளியி லிருந்து இயங்கி வருகிறது. ஆண்டுதோறும் பிப்ரவரித் திங்களில் விழா எடுத்து வருகின்றனர். 1981ஆம் ஆண்டு வரையில் மூன்று மலர்கள் வெளியிட்டுள்ளனர்.

## 12. திருச்சிராப்பள்ளி

இக்கழகம் 1979இல் தோன்றியது. திரு. K. சந்தானம் அவர் களைத் தலைவராகவும், பேராசிரியர் திரு. இரா. இராதா கிருஷ்ணன் அவர்களைச் செயலராகவும் கொண்டிருக்கிறது.

1. தக்க ஒரு குழுவினைக் கொண்டு கம்பனைக் குறித்த ஆராய்ச்சி மையம் அமைத்தல்; 2. இராமாயணம் முழுமைக்கு மாக்ச் சொல்லடைவு செய்தல்; 3. ஆங்கிலத்தில் கம்பனைக் குறித்த ஆராய்ச்சிக் கட்டுரைகளை வெளியிடுதல்; 4. மாநில மொழிகளிலும் முறையாகக் கம்பனை உணருமாறு கட்டுரைகளை வெளியிடுதல்; 5. கம்பனைக் குறித்து இன்றுவரை வெளியாகி யுள்ள நூல்களைத் தொகுத்தும், கம்பராமாயணப் பதிப்புகளைத் தொகுத்தும் ஒரு நூல் நிலையம் அமைத்தல் ஆகிய சீரிய திட்டங் களைக் கொண்டு இக்கழகம் தோன்றியுள்ளது.

ஆண்டுதோறும் டிசம்பர்த் திங்கள் இரண்டாவது வாரம் சனி ஞாயிறுகளில் விழாக் கொண்டாடுவது இவர்கள் நோக்கத்தில் ஒன்று. முதலாண்டு விழாவின்போதே இவர்கள் மலர் வெளியிட் டுள்ளனர்.

கல்லுக்குழியில் தோன்றியுள்ள இக் கழகம் தவிர, மேலரண் சாலையிலுள்ள திருச்சிராப்பள்ளித் தமிழ்ச்சங்கமும் கம்பன் திரு விழா எடுத்து வருகிறது. ஆகஸ்டுத் திங்கள் கடைசி வாரம் சனி ஞாயிறுகளில் இச் சங்கம் விழா எடுக்கிறது. திரு. இரா. கிருஷ்ண சாமி செட்டியார் இதன் தலைவராகவும், திரு. சா. பெரியசாமி அவர்கள் அமைச்சராகவும் செயல்புரிகின்றனர். உரைக்கோவை, கருத்தரங்கம், பட்டிமன்றம் ஆகிய நிகழ்ச்சிகள் இவ்விழாவில் இடம் பெறுகின்றன.

## 13. திருமங்கலம்

15-4-1979இல் திரு.மு.சி.ஆ. இரத்தினசாமித் தேவர் அவர்கள் இக் கழகத்தைத் தொடங்கி வைத்தார். திரு. தே. சீனிவாசன் அவர்கள் தலைவராகவும் திரு. துரை மகாராசன் அவர்கள் செயல ராகவும் பொறுப்பேற்றுள்ளனர்.

1979 ஏப்ரல் திங்களில் கம்பராமாயண இன்னிசைச் சொற் பொழிவும், 1980 ஏப்ரல், மே திங்களில் கந்தபுராண இன்னிசைச் சொற்பொழிவும், 1981 ஏப்ரல், மே திங்களில் மகாபாரத இன்னி சைச் சொற்பொழிவும் நடத்தியுள்ளனர். இவைகள் தொடர் சொற்பொழிவாக நடைபெற்றுள்ளன.

5-5-81இல் காரைக்குடி திரு. கம்பன் அடிப்பொடி அவர்கள் திரு. வ.வே.சு. அவர்களின் படத்தைத் திறந்து வைத்தார். அன்று அறிஞர் பெருமக்கள் ஒன்பதின்மர் கம்பராமாயணத்தைப் பல்வேறு தலைப்புகளில் பேசினார்கள்,

## 14. புதுக்கோட்டை

1976ஆம் ஆண்டில் இக் கழகம் தோன்றியது. திரு. ம. கந்தையா அவர்கள்தலைவராகவும், புலவர் திரு.தி.சு.மலையப்பன் அவர்கள் செயலராகவும் அமைந்து இக் கழகத்தினை இயக்கி வருகின்றனர்.

ஒன்றாம் வகுப்பு முதல் எட்டாம் வகுப்பு வரையில் பயிலும் மாணவர்களுக்குச் செய்யுள் ஒப்பித்தல் போட்டியும், ஒன்பது முதல் பதினொன்றாம் வகுப்பு வரையில் பயிலும் மாணவர்களுக்கும், மேல்நிலைப்பள்ளி மற்றும் கல்லூரி மாணவர்களுக்கும் பேச்சுப்போட்டியும் நடத்திப் பல்வேறு பரிசுகளைவழங்கிச் சிறுவர்களையும் இளைஞர்களையும் இராமாயணத்தில் ஈடுபடுத்தி வருகின்றனர். இக் கழகத்தினர் ஆண்டுதோறும் மலர் வெளியிட்டு வருகின்றனர். காரைக்குடி திரு. கம்பன் அடிப்பொடி அவர்களின் இடையறாத தொண்டினைக் கண்டு ஊக்கம் பெற்ற திரு. அ. கிருஷ்ணசாமி அவர்களின் உள்ளத்தில் முளைத்தெழுந்தது இக் கழகம் என்று மலர்க்குழுவினர் நன்றிப்பெருக்கோடு கூறியுள்ளனர்.

## 15. இராஜபாளையம்

திரு. எஸ்.என்.ஆர்.டி. ராமசுப்பிரமணிய ராஜா அவர்களைத் தலைவராகக் கொண்டு இக் கழகம் இயங்குகிறது. திரு. குன்றக்குடி பெரிய பெருமாள், திரு. என். எஸ். முத்துகிருஷ்ண ராஜா ஆகிய இருவரும் இதன் பொதுச் செயலர்கள்.

1-2-1981இல் எஸ்.என்.ஆர்.டி. ரத்தினம் அம்மாள் நினைவுச் சொற்பொழிவு நடந்தது. திரு. மு.கு. ஜகந்நாத ராஜா அவர்களின் தலைமையில் புலவர் திரு. கீரன் அவர்கள், 'கம்பராமயணத்தில் உலக இலக்கியக் கூறுகள்' என்னும் தலைப்பில் உரையாற்றினார்.

18-6-81இல் வ. வே. சு. நூற்றாண்டு விழா கொண்டாடினார்கள். வ.வே.சு. அவர்களின் தியாகத்தைக் குறித்து திரு. கம்பன் அடிப்பொடி அவர்களும், அவர் தமிழ் இலக்கியத்துக்கு ஆற்றிய தொண்டைக் குறித்துத் திரு. குமரி அனந்தன் அவர்களும் சிறப்புறப் பேசி அவருக்கு அஞ்சலி செலுத்தினார்கள்.

1981 செப்டம்பர் 12, 13 ஆகிய இரு நாளில் கம்பன் திருவிழா எடுத்தார்கள். விழா மங்கலம், கவியரங்கம், இசையுரை, சந்திப்பு அரங்கம், பட்டிமண்டபம் ஆகிய ஐந்து நிகழ்ச்சிகளாக விழா அமைந்தது.

விழா மங்கலம் முதல் நாள் காலை 10-30 மணிக்குத் திரு. கம்பன் அடிப்பொடி அவர்களின் தலைமையில் தொடங்கியது. சென்னை, நீதிபதி திரு மு. மு. இஸ்மாயில் அவர்கள் தொடக்க வுரை ஆற்றிய பின்னர், 'இராமனைத் தரிசிப்போம்' என்னும் நூலைச் சென்னை 'அமுதசுரபி' ஆசிரியர் திரு. விக்கிரமன் வெளி யிட்டார். 'கம்பனைப் போற்றுவோம்' என்ற தலைப்பில் திரு. கீரன் அவர்கள் சிறப்புரை ஆற்றினார்.

முதல் நாள் மாலை 6 மணிக்கு டாக்டர் அர. சிங்கார வடிவேலன் அவர்கள் தலைமையில் 'இராமனைத் தரிசிப்போம்' என்னும் பொதுத் தலைப்பில் கவியரங்கம் நிகழ்ந்தது. கவிஞர் அறுவர் கம்பருடைய ஆறு காண்டத்தினுள்ளும் நுழைந்து அங்குக் காட்சியளித்த இராமனைத் தரிசித்துப் போற்றினார்கள்.

அன்று இரவு 8-30 மணிக்கு டாக்டர் சரசுவதிராமநாதன் அவர்கள் 'சீதையை வணங்குவோம்' என்ற தலைப்பில் இசையுரை நிகழ்த்தினார்கள்.

இரண்டாம் நாள் காலை 10 மணிக்குத் திரு. கம்பன் அடிப் பொடி அவர்கள் முன்னிலையில் 'சந்திப்பு அரங்கம்' என்னும் நிகழ்ச்சி நடைபெற்றது. டாக்டர் சரசுவதி ராமநாதன் அவர்கள் சீதையாக விளங்க, அறிஞர் பெருமக்கள் ஐவர், இலக்குவனாக, அனுமனாக, வீடணனாக, மண்டோதரியாக, இராமனாக வந்து அவரைக் கண்டு அவருடன் உரையாடினார்கள்.

அன்று மாலை 6 மணிக்குத் திரு. பி. கே. ராமசாமி ராஜா அவர்கள் தலைமையில் பட்டிமண்டபம் நடந்தது. 'தியாகத்தால் சிறந்து நிற்போன் இலக்குவனா, கும்பகர்ணனா?' என்னும் வழக் கிற்குத் திரு. கண. சிற்சபேசன் அவர்கள் நடுவராக அமர்ந்தார். வழக்குரைஞர் இருவர் தம் வழக்கினை எடுத்துரைத்தனர். அறிஞர் நால்வர் இரு அணியாகப் பிரிந்து அவ்விருவரைச் சார்ந்து வாதிட்டனர். சான்றோர் ஐவர் வழக்கினைக் கூர்ந்து நோக்கித் தம் முடிபினைக் கூறினர். இறுதியில் நடுவர் தம் முடிபினைக் கூறி முடித்தார்.

இக் கழகத்தில் நடைபெறும் ஒவ்வொரு நிகழ்ச்சியையும் ஊரில் உள்ள பெருமக்கள் அல்லது நிறுவனத்தினர் பொறுப்பேற்று நடத்துகின்றனர்.

## 16. பாளையங்கோட்டை

'நெல்லை மாவட்டக் கம்பன் கழகம்' என்னும் பெயரில் இக் கழகம் இயங்குகிறது. 4-10-1976இல் திரு. பி. ஸ்ரீ. அவர்கள் தலைமையில் திரு. A. P. C. வீரபாகு அவர்கள் இக் கழகத்தைத் தொடங்கி வைத்தார். திரு. K. S. கிருஷ்ண அய்யங்கார் இதன் தலைவர். திரு. M. சுப்பிரமணியம் செயலர்.

ஒவ்வொரு வாரமும் ஞாயிறு மாலை 7 மணிக்குக் கழகக் கூட்டம் நடைபெறுகிறது. முதல் அரை மணி நேரம் கலந்துரை யாடல் நடந்த பின்னர், சொற்பொழிவு 9 மணி வரை நடைபெறு கிறது.

ஏப்ரல், மே மாதங்களில் பத்து நாள் தொடர் சொற்பொழி வில் பல்வேறு இலக்கியங்களைக் கொண்டு பேசுகின்றனர்; தமிழ்ப் பேரறிஞர்கள் பாராட்டப் பெறுகின்றனர்.

திரு. பி. ஸ்ரீ. அவர்கள் எழுதிய 'நான் ரசித்த கம்பனும், கம்பன் கழகங்களின் கடமையும்'; திரு. பி ஸ்ரீ. அவர்களும் பள்ளத் தூர் டாக்டர் திருமதி சரசுவதி ராமநாதன் அவர்களும் இணைந்து எழுதிய 'கம்பன் கலைக்கோவிலுக்குக் கைவிளக்கு', 'கம்பன் அன்றும் இன்றும்', திருச்செந்தூர் ஆதித்தனார் கல்லூரி முதல்வர் டாக்டர் T. வைத்தமாநிதி அவர்கள் எழுதிய 'வ.வே.சு. அய்யர் அவர்களும் கம்பராமாயண சிந்தனைகளும், ஆகிய நூல்களை இக்கழகம் அச்சிட்டு அடக்க விலையில் வெளி யிட்டிருக்கிறது.

கட்டுரைப் போட்டியும் பேச்சுப் போட்டியும் நடத்திப் பரிசுகள் வழங்கி வருகின்றனர். மருத்துவமனை வழியில் நிழற் குடை ஒன்று கட்டி நோயுற்றோர்க்கு உதவியுள்ளனர்.

இராமாயணத் தொடர்புடைய இடங்களைப் பார்ப்பதற் காக இலங்கைப் பயணம் மேற்கொண்டனர். ஆண்டு தோறும் காரைக்குடி கம்பன் விழாவுக்குச் சென்று வருகின்றனர்.

கம்பராமாயணமும் பிற இலக்கியங்களுமாக ஐந்நூறு நூல்கள் உள்ள நூலகம் ஒன்றை அமைத்துள்ளனர்.

1981 இல் வாரக் கூட்டம் நாற்பத்தொன்பது நடைபெற் றுள்ளன. திருவரங்கம் திரு திருமலாச்சாரி அவர்கள் 17-1-81 முதல் 26-1-81 வரையில் 'பகவத் கதையமுதம்' என்ற தலைப்பி

லும், பள்ளத்தூர் டாக்டர் சரசுவதிராமநாதன் அவர்கள் 19-5-81 முதல் 27-5-81 வரையில் 'மாகபாரதம்' என்ற தலைப்பிலும் தொடர் சொற்பொழிவாற்றினார்கள். தொடர் சொற்பொழி வின் இறுதியில் (மே திங்களில்) ஆண்டுவிழா நடைபெறுகிறது. 'கம்பன் விழா' எனத் தனியாக ஒரு விழா செய்யும் பழக்க மில்லை. மலர் எதுவும் வெளியிடவில்லை.

## 17. ஆலடிப்பட்டி

நெல்லை மாவட்டம் தென்காசி வட்டத்தில் இந்தச் சிற்றூர் அமைந்திருக்கிறது. இக்கழகத்தைப் புலவர் திரு. வீ. செந்தில்நாயகம் அவர்கள் 29-3-1980-இல் தொடங்கி வைத்தார்கள். கம்பரிடத்தில் பெரிதும் ஈடுபாடு கொண்ட திரு. ஆலடி ஜெயா அவர்கள் இதன் செயலராக இருந்து இக் கழகத்தினை நடத்தி வருகின்றார். திரு. ஐ. வள்ளிநாயகம் அவர்கள் இதன் தலைவர்.

16-3-81இல் திரு. க. குத்தாலிங்கம் அவர்கள் தலைமையில் இலக்கிய விழா நடைபெற்றது. திரு. வீ. செந்தில்நாயகம் அவர் களும் திரு கு. சடகோபன் அவர்களும் சிறப்புரையாற்றினார்கள்.

## 18. அரூர்

1976 இல் இங்குக் கம்பன் கழகம் அமைத்தார்கள். திரு R. பலராமன் இதன் தலைவராகவும், வித்துவான் திரு தே. வே. சந்தானம் அவர்கள் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப் பட்டனர். ஆனால், இக்கழகம் தொடர்ந்து செயல்படவில்லை. இதன் செயலர் திரு. சந்தானம் அவர்கள் கம்பரிடத்தில் பெரிதும் ஈடுபாடு கொண்டவர். 1974 அக்டோபர்த் திங்களில் 'கம்பன் யார்?' என்னும் தலைப்பில் கவிதைப் போட்டி ஒன்றை, அரூர் வட்ட இலக்கிய மன்றத்தின் சார்பில் நடத்தியுள்ளார். 12-12-78 இல் இந்த இலக்கிய மன்றத்தின் சார்பில் கம்பன் விழா எடுத்துள்ளார். தருமபுரி மாவட்டத்தில் கம்பன் கழகம் இல்லை என்ற குறையைத் தீர்க்க இக்கழகம் ஓரளவுக்கு முயற்சி செய்கிறது.

III

## 1981 இல் நடைபெற்ற பட்டிமண்டப நிகழ்ச்சிகள்

## 1. சென்னை

'இராமன் அம்பிற்கு இலக்கானவரில் வீரத்தில் மிக்கவர் யார்?' என்பது வினா.

வாலியே! கும்பகருணனே! இராவணனே! என மூன்று விடைகள்.

## 2. காரைக்குடி

'இராமன் சிறப்புக்குப் பெருங்காரணம் எது?' என்பது வினா.

சீலமே! பண்பாடே! வீரமே! என மூன்று விடைகள்.

## 3. சேலம்

'கம்பரின் சிறு பாத்திரங்களில் சிறந்து நிற்போர் யார்?' என்பது வினா.

சுமந்திரனே! அங்கதனே! திரிசடையே! என மூன்று விடைகள்.

## 4. திருப்பத்தூர்

'துயரத்தால் பெரிதும் பாதிக்கப்பட்டவர் யார்?' என்பது வினா.

பரதனே! சீதையே! மண்டோதரியே! என மூன்று விடைகள்.

## 5. வாழியூர்

'இராமனைச் சேர்ந்த தம்பியருள் சிறந்தவன் யார்?' என்பது வினா.

குகனே! சுக்கிரீவனே! வீடணனே! என மூன்று விடைகள்.

## 6. இராஜபாளையம்

'தியாகத்தால் சிறந்து நிற்போன் யார்?' என்பது வினா.

இலக்குவனே! கும்பகர்ணனே! என இரு விடைகள்.

## 7. தேரழுந்தூர்

'கம்பரின் கைவண்ணத்தை மிகுதியாகக் காட்டும் பாத்திர அமைப்பு எது?' என்பது வினா.

தந்தையர் நிலையே! தாயர் நிலையே! தம்பியர் நிலையே! என மூன்று விடைகள்.

## 8. நாட்டரசன்கோட்டை

சீதையின் பண்பு நலன் சிறக்கப் பெருங்காரணம் எது?' என்பது வினா.

சொல்லே! இல்லே! வில்லே! என்று விடைகள் மூன்று.

IV

## 1981 இல் நடைபெற்ற கவியரங்க நிகழ்ச்சிகள்

### 1. சென்னை

'கவிப்பொழில்' என்பது அமைப்பு ஒரு கவிக் கொம்பு; அதனைக் 'கம்பனியல் என்னும் கவிக்கொடி பற்றிக் கொண்டிருக்கிறது. அக்கொடி வண்ண மலர்கள் பூத்துக் குலுங்குகிறது. கோனியல், குடியியல், அமைச்சியல், உழவியல், நட்பியல், ஒழுக்கவியல், இல்லறவியல், இறையியல் ஆகிய மலர்கள் மலர்கின்றன. வித்தும்பிகள் பல அம் மலரின் மேல் அமர்ந்து தேனுண்டு மயங்கிக் கவிதை 'ரீங்காரம்' செய்கின்றன.

### 2. காரைக்குடி

'நாங்களும் பேசுகிறோம்' என்பது தலைப்பு. அயோத்தி, மிதிலை, கங்கைக் கரை, சித்திரகூடம், தண்டகவனம், பஞ்சவடி, கிட்கிந்தை, அசோகவனம், இலங்காபுரி, நந்திக்கிராமம் ஆகியவை வாய் பெற்று வந்து கவிதை பொழிகின்றன.

### 3. சேலம்

'கம்பனுடைமைகள்' என்பது தலைப்பு. அன்புடைமை, அறிவுடைமை, ஆற்றலுடைமை, பொறையுடைமை ஆகிய உடைமைகளைப் பற்றிக் கவிதை பொழிந்தனர்.

### 4. திருப்பத்தூர்

'பாட்டுடைத் தலைவன்; இராமன்.

என் குழந்தை, என் தலைவன், என் தோழன், என் ஆசான், என் சீடன், என் கணவன், என் தாய் என்னும் ஏழு தலைப்புகளில் கவிதை பொழிந்தனர்.

### 5. வாழியூர்

'நாங்களும் பேசுகிறோம்' என்பது தலைப்பு.

வில், மரவுரி, பாதுகை, பர்ணசாலை, மகுடம், சூளாமணி ஆகிய ஆறும் வாய் பெற்றன, கவிதையில் தம் உள்ளக்கிடக்கைகளைப் பேசின.

### 6. இராஜ பாளையம்

'இராமனைத் தரிசிப்போம்' என்பது தலைப்பு.

பாலகாண்டம், அயோத்தியா காண்டம், ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தரகாண்டம் யுத்த காண்டம் ஆகிய ஆறு காண்டங்களிலும் காட்சியளித்த இராமனைக் கண்டு கவிஞர் அறுவர் கவிதை வழங்கினர்.

## 7. தேரழுந்தூர்

'கம்பன் படைத்த பாத்திரங்கள்' என்பது தலைப்பு.

அனுமன், வாலி, பரதன், சுமித்திரை, இராவணன், கைகேயி, கோசலை, குகன், இராமன், கும்பகருணன் ஆகிய பதின்மரின் பண்பு நலன்களைக் கவிதையாக்கிப் பாடினார்கள்.

## 8. நாட்டரசன்கோட்டை

'கம்பனின் கைவண்ணம்' என்பது தலைப்பு.

அறம், பாசம், அரசியல், இயற்கை, காதல் ஆகிய ஐந்து தலைப்பில் ஐந்து கவிஞர்கள் தம் கவிதைகளை வழங்கினர்.

V

## 1981இல் நடைபெற்ற பிற நிகழ்ச்சிகள்

## 1. சென்னை

(அ) பாராட்டரங்கம்

வீர விளக்கு வ. வே. சு. ஐயர், மஹாகவி பாரதியார், ரசிக மணி டி. கே. சி., பல்கலைச் செல்வர் தெ. பொ. மீ. ஆகிய தொண்டர் நால்வரையும் அறிஞர் நால்வர் பாராட்டித் துதித் தார்கள்.

(ஆ) தமிழ்ச்சோலை

நீலமாலை, அருமாமகன், அங்கதன், பிரகலாதன், திரிசடை, அதிகாயன் ஆகிய 'கம்ப அரும்புகள்' அறுவரைக் 'கல்லூரி அரும்புகள்' அறுவர் மணம் கமழச் செய்தனர். (இ) கட்டுரைப் போட்டி, பேச்சுப் போட்டிகளில் வெற்றி பெற்ற மாணவர்க்குப் பரிசளித்தனர். (ஈ) திரு மு. மு. இஸ்மாயில் அவர்கள் எழுதிய 'இலக்கிய மலர்கள் தொகுதி 2' வெளியிட்டனர்.

## 2. காரைக்குடி

(அ) படத்திறப்பு

வ. வே. சு., தெ. பொ. மீ. ஆகிய இருவரின் படங்களைத் திறந்து வைத்தனர்

(ஆ) மலர் வெளியிட்டார்கள்.

(இ) 'இன்று சந்திக்கும் இவர்கள்' என்னும் நிகழ்ச்சி:

கோசலையும் கைகேயியும் இணைந்து வந்து உரையாடினர். அவ்வாறே சீதையும் மண்டோதரியும், அனுமனும் வாலியும், இராவணனும் வீடணனும் வந்து உரையாடினார்கள்.

(ஈ) மேல்முறையீட்டுப் பட்டிமன்றம்

நோக்கர்கள் தீர்ப்பால் பாதிக்கப்பட்ட தரப்பினரும், நடுவர் தீர்ப்பால் பாதிக்கப்பட்ட தரப்பினரும் மேல்முறையீடு செய்கின்றனர். நோக்கர்கள் சார்பிலும், முதல் நாள் வென்றவர் சார்பிலும் எதிர்வாதம் செய்கின்றனர். இறுதியில் நடுவராயம் தீர்ப்பளிக்கிறது.

(உ) நற்றமிழ் மன்றம்

தயரதன், கோசலை, கைகேயி, வசிட்டன், விசுவாமித்திரன் அகலிகை, பரசுராமன், குகன், விராதன், சடாயு, சூர்ப்பணகை, கவந்தன், சபரி, அனுமன், வாலி, வீடணன் ஆகிய பதினறுவர் மேடையில் தோன்றி இராமனைப்பற்றி 'எங்களையும் கேளுங்கள்' என்று தங்கள் கோணத்திலிருந்து பேசினார்கள்.

(ஊ) நாட்டரசன் கோட்டையில் வ. வே. சு. வாழ்த்தரங்கு நடைபெற்றது. வ.வே.வ.சு வரலாற்றை வெளியிட்டனர்.

வ. வே. சு. ஒரு கம்பன் காதலன்; ஓர் இலக்கிய மேதை, ஒரு திறனாய்வுப் புலவன், ஓர் அரசியல் அறிஞன், ஒரு வீர விளக்கு என்னும் ஐந்து தலைப்புகளில் அறிஞர் ஐவர் வாழ்த்தினர்.

## 3. சேலம்

தொடக்க விழாவில், 'சால்புடைமை', 'ஒழுக்கமுடைமை' என்னும் இரு தலைப்புகளில் அறிஞர் இருவர் பேசினர். பிற்பகல் நிகழ்ச்சியில், 'கம்பன் வழியில் காந்தியடிகள்', 'காப்பிய உலகில் கம்பன்' என்னும் தலைப்பில் இருவர் பேசினர்.

## 4. திருப்பத்தூர்

(அ) தொடக்க விழாவில் மலர் வெளியிட்டனர்.

(ஆ) 'அவளும் அவனும்' நிகழ்ச்சியில் கைகேயியும் தசரதனும் தோன்றி உரையாடினர். பின்னர் மண்டோதரியும் இந்திரஜித்தும் தோன்றி உரையாடினர்.

(இ) 'இவர் பார்வையில் இவர்' என்னும் நிகழ்ச்சி. டி.கே.சி. பார்வையில் இராமன், இராஜாஜி பார்வையில் பரதன், வ.வே.சு. பார்வையில் சீதை; அ.ச.ஞா. பார்வையில் இராவணன் ஆகிய பார்வைகளைக் குறித்து நால்வர் பேசினர்.

(ஈ) வ.வே.சு. நூற்றாண்டு விழா: ஒருவர் தலைமையுரை யாகவும், மற்றொருவர் சிறப்புரையாகவும் வ. வே. சு. அவர்களின் ஆற்றல்களையும் பண்பு நலன்களையும் குறித்துப் பேசினார்கள்.

(உ) 'பாங்கறி மண்டபம்' நிகழ்ச்சி: 'இராவணன் அழிவிற்குக் காரணம் அவன் செயல்களே' என்பது குறித்து அறிஞர் ஐவர் உடன்பட்டும் மறுத்தும் பேசினர்.

(ஊ) 'ஆடல் வேள்வி' கம்பராமாயணப் பாடல்களைக் கொண்ட நாட்டிய நாடகம் நடைபெற்றது.

## 5. வாழியூர் (வடஆர்க்காடு)

(அ) கருத்தரங்கம்: இராமகாதையிலே கற்பனை, காதல், வீரம், நகை ஆகிய நான்கு பொருள்களைக் குறித்து அறிஞர் நால்வர் பேசினர்.

(ஆ) 'கலைதெரி அரங்கம்': 'இவர்கள் இன்று சந்தித்தால்', என்னும் நிகழ்ச்சி: தசரதன் கைகேயியைக் கண்டு வெகுண்டான்; வாலியைக் கண்டு தாரை வெதும்பினாள்; மண்டோதரியிடம் இராவணன் தன் செயல்களுக்காக வருந்தினான்.

(இ) பாராட்டரங்கம்: வீர விளக்கு வ. வே. சு., இரசிகமணி டி.கே.சி., மகாக்வி பாரதி ஆகிய தொண்டர் மூவரைக் குறித்து அறிஞர் மூவர் துதி பாடினர்.

(ஈ) பேச்சுப் போட்டி, கட்டுரைப் போட்டி, பாட்டு ஒப்பித்தல் போட்டி ஆகியவற்றில் வெற்றி பெற்ற மாணவர்க்குப் பரிசுகள் வழங்கினர்.

(உ) ஏழை மாணவர்களுக்குப் பலகை புத்தகம் வழங்கினார்கள்.

## 6. திருமங்கலம்

(அ) தொடர் சொற்பொழிவு: மகாபாரதம் இன்னிசைச் சொற்பொழிவு பதினாறு நாள் நடைபெற்றது.

(ஆ) நிறைவு விழா: மகாபாரதச் சொற்பொழிவின் நிறைவு நாளில் வ. வே. சு. ஐயர் அவர்களின் படத்தைத் திறந்து வைத்தனர்.

(இ) அறத்தின் நாயகன், இலங்கையர் வேந்தன், கற்பின் கனலி, இலங்கை நாடுடையாள், நீதியின் நிலையம், புள்ளின் வேந்தன், சொல்லின் செல்வன், தொண்டிற் குறைவிலான் ஆகிய எட்டுத் தலைப்புகளில் அறிஞர் பெருமக்கள் சிறப்புரையாற்றினர்.

## 7. இராஜபாளையம்

(அ) நினைவுச் சொற்பொழிவு: 'கம்பராமாயணத்தில் உலக இலக்கியக் கூறுகள்' என்னும் தலைப்பில் ஓர் ஆய்வுரை நடைபெற்றது.

(ஆ) வ. வே. சு. ஐயர் நூற்றாண்டு விழா: 'தியாகத் தீபம்' என்னும், 'இலக்கியச் செம்மல்' என்றும் அமரரைப் பாராட்டிச் சிறப்புச் செய்தார்கள்.

(இ) விழா மங்கலம்: 'இராமனைத் தரிசிப்போம்' என்னும் நூலை வெளியிட்டனர்.

(ஈ) 'கம்பனைப் போற்றுவோம்' என்னும் சிறப்புரை நிகழ்ந்தது.

(உ) 'சீதையை வணங்குவோம்' என்னும் இசையுரை நடைபெற்றது.

(ஊ) சந்திப்பு அரங்கம்: இலக்குவன், அனுமன், வீடணன் மண்டோதரி, இராமன் ஆகிய காப்பியப் பெருமக்கள் சீதையைக் கண்டு உரையாடினார்கள்.

## 8. பாளையங்கோட்டை

(அ) ஆண்டு முழுவதும் வாரம் ஒருமுறை ஞாயிற்றுக்கிழமை மாலை 7 மணிக்குக் கூட்டம்; கலந்துரையாடலுக்குப் பின்னர் ஒரு சொற்பொழிவு நடைபெற்று வருகிறது.

(ஆ) திரு.பி.ஸ்ரீ., டாக்டர் சரசுவதிராமநாதன், டாக்டர் திரு, T. வைத்த மாநிதி ஆகியோர் எழுதிய நூல்களை அடக்க விலையில் வெளியிட்டுள்ளனர்.

(இ) கட்டுரைப் போட்டி, பேச்சுப்போட்டிகளில் வெற்றி பெற்றவர்க்குப் பரிசுகள் வழங்கியுள்ளனர்.

(ஈ) கம்பராமாயணம், மற்றும் பிற இலக்கிய ஆராய்ச்சி நூல்களைக் கொண்ட நூலகம் நிறுவியுள்ளனர்.

(உ) மகாபாரதம், பகவத்கீதையமுதம் ஆகியவை குறித்து தொடர் சொற்பொழிவுகள் நடத்தியுள்ளனர்.

## 9. தேரழுந்தூர்

(அ) கம்பரின் திருவுருவப்படத்தை ஊர்வலமாக எடுத்து வந்தனர்.

(ஆ) ஆமருவியப்ப பெருமாள் திருக்கோயிலில் உள்ள கம்பர் திருமேனிக்குத் திருமஞ்சனம் செய்தனர்.

(இ) 'கவி உலகில் கம்பன்' என்னும் தலைப்பில் சிறப்புரை நிகழ்ந்தது.

(ஈ) கம்பராமாயண இசையரங்கு நடைபெற்றது.

(உ) உயர்நிலைப்பள்ளி, மேல்நிலைப்பள்ளி மாணவர்களுக்காகப் பேச்சுத்திறன் வளர்க்கும் பயிற்சி அரங்கம் நடந்தது.

(ஊ) 'பக்திக்கோர் காப்பியம்', 'கம்பர் காட்டும் அறம்', ஆழ்வார் அறநெறியில் கம்பர்' ஆகிய தலைப்புகளில் அறிஞர் கருத்துரைகள் வழங்கினர்.

(எ) 'தந்தைக்கு ஏற்ற மைந்தனாக இந்திரசித்தன் விளங்கவில்லை' என்னும் தலைப்பில் வழக்காடு மன்றம் நடைபெற்றது.

## 10. நாட்டரசன்கோட்டை

(அ) வாரந்தோறும் புதன்கிழமை மாலை 6 மணிக்குக் கூடி இராமகாதை, சிலப்பதிகாரம், பெரியபுராணம் ஆகிய இலக்கியங்களில் கருத்தரங்கம், கவியரங்கம், பட்டிமண்டபம், வழக்காடு மன்றம் முதலான நிகழ்ச்சிகளை நடத்துகின்றனர்.

(ஆ) பேச்சுக்கலைப் பயிற்சியும், கம்பராமாயண வகுப்புகளும் நடத்தி வருகின்றனர்.

(இ) தொடர் நிகழ்ச்சியாகப் பத்து நாளில் பல்வேறு இலக்கிய நிகழ்ச்சிகளை நடத்தினர்.

(ஈ) மற்றொரு தொடர் நிகழ்ச்சியில் 'கண்ணுடையம்மன் வாலையந்தாதி' என்னும் ஒரு சிற்றிலக்கியத்தைக் குறித்து அறிஞர் பெருமக்கள் பத்தொன்பதின்மர் பத்து நாள் சொற்பொழிவாற்றினர்.

## VI

## தொகுப்புரை

1981-ஆம் ஆண்டில், பட்டியலில் இடம் பெற்ற நாற்பத்து மூன்று கழகங்களில் பதினெட்டுக் கழகங்களைக் குறித்து ஓரளவுக்கு மட்டுமே இதில் சொல்ல முடிந்தது; மற்ற இருபத்து ஐந்து

கழகங்களைக் குறித்து ஒன்றும் சொல்ல இயலவில்லை. அவை களில் பல இயங்கமுடியாமல் இருக்கலாம்; சில சிறப்பாகவும் இயங் கலாம். இயங்கி வரும் கழகங்களில் பல தம் வரலாற்றைக் குறித்து வைத்திருக்காமல் இருக்கலாம்; கிடைக்கும் செய்திகளைத் தொகுத்துத்தரவும் எழுதியனுப்பவும் முடியாமலும் இருக்கலாம். தருமபுரி மாவட்டத்தில் உள்ள அரூர்க்கழகம் 'நாற்பத்து மூன்று' பட்டியலில் இடம் பெறவில்லை. ஆயினும் அங்குக் 'கம்பன் கழக, முயற்சி நடந்திருக்கிறது என்பதைக் காட்டவே அது இறுதியில் சேர்க்கப்பட்டது. மேலே எடுத்துக்காட்டுகளாகச் சுட்டப் பட்டுள்ள கம்பன் கழகங்களின் செயல்முறை வாயிலாக 198 இல் கம்பன் கழகங்கள் குறித்த பொதுத் தன்மையையும் சிறப்பையும் அறியமுடிகிறது.

இந்தப் பதினெட்டுக் கழகங்களிலும் காரைக்குடி திரு கம்பன் அடிப்பொடி அவர்கள் எவ்வாறேனும் ஒரு வகையில் தொடர்பு பெற்றிருக்கிறார் என்பதை அறிய முடிகிறது. 'கம்பன் கழகம்' தொடங்குவோரெல்லாம் அவரை அணுகி அவருடைய ஆலோசனையைப் பெற்றிருக்கின்றனர். தங்கள் நிகழ்ச்சிகளுக்கு அவரை அழைத்துள்ளனர்; அவருடைய வாழ்த்துகளைப் பெற்றுள் ளனர். இவைகளை யெல்லாம் அறியும் போது, இந்த இருபதாம் நூற்றாண்டில் கம்பனுக்கு ஒரு மாபெருங் காவலராகக் கம்பன் அடிப்பொடி விளங்கினார் என்று சொல்ல வேண்டும். கம்பனைக் கற்றாரிடத்திலும் கல்லாரிடத்திலும் கொண்டு சென்றவர் அவரே. கற்றாரும் கம்பனை வியந்து போற்றுகின்றனர். கல்லாதாரும் வியந்து வியந்து மகிழ்கின்றனர். இந்த அளவுக்கு இதற்கு முன் சென்ற நூற்றாண்டுகளில் கம்பரை மக்கள் அறிந் திருக்கவில்லை என்று சொல்ல முடியும்.

இலக்கிய அரங்குகளில் எல்லாம் தலையாய நிகழ்ச்சியாகப் 'பட்டிமண்டபம்' இடம் பெற்றிருப்பதைக் காண்கிறோம். பட்டி மண்டப நிகழ்ச்சிகள் நடைபெறும் இடங்களில் எல்லாம் மக்கள் திரண்டு வழிகின்றார்கள். கம்பன் கழகங்களின் விழாக்கள் அனைத்திலும் பட்டிமண்டபம் தவறாமல் இடம் பெற்று வருகிறது. அதுவே தலையாய நிகழ்ச்சியாகவும் அமைகிறது, எனவே கம்பரைக் கல்லாத மக்களிடம் ஈர்த்துச் சென்றது. இப் பட்டிமண்டப நிகழ்ச்சியே என்று சொல்ல வேண்டும்.

திரு. கம்பன் அடிப்பொடி அவர்களின் இடையறாத முயற்சியும் ஆழ்ந்த புலமையும், உயர்ந்த பண்பும், ஊக்கமும், பேருழைப்பும்

தமிழர் வாழுமிடங்களிலெல்லாம் கம்பன் கழகங்களைத் தோற்றுவித்தன. கம்பன் கழகங்களில் நிகழ்ந்து வரும் பட்டி மண்டபங்களே கல்லாதாரையும் கம்பன்பால் ஈர்த்துள்ளன. அவ்வளவுக்கும் அள்ள அள்ளக் குறையாத சுரங்கமாகக் கம்பரு ருடைய காவியம் அமைந்து பொன்னையும் முத்தையும் மணிகளை யும் வழங்கிக் கொண்டிருக்கிறது.

VII

## 1981-இல் கம்பன் கழக விழாக்களில் பங்கேற்ற அறிஞர்களின் பட்டியல்

| | பெயர் | பங்கேற்ற ஊர் |
|---|---|---|
| 1 | அகரமுதல்வன் | தேர. |
| 2 | அசோக்குமார், வி. | சென் |
| 3 | அண்ணாமலை, இல. | வாழி. |
| 4 | அண்ணாமலை, சுப. | திரும. |
| 5 | அப்துல்ரகுமான், எஸ். | சென். |
| 6 | அய்யூப், ப. யு. | இரா. |
| 7 | அரங்கராசன், எம். ஆர். | தேர. |
| 8 | அரசு மணிமேகலை | சென். |
| 9 | அருணகிரி, அ. | சென். |
| 10. | அருணாசலக் கவுண்டர், கு. | நாட். |
| 11. | அருள், தொ. | நாட். |
| 12 | அறிவொளி, அ. | இரா. |
| 13. | அன்புவல்லி, தங்க. | இரா. |
| 14 | ஆதித்தர், அ. கு. | பாளை |
| 15 | ஆவிச்சி, இராம. | நாட். |
| 16 | ஆறுமுகம், சிவ. | வாழி. |
| 17 | இசுமாயில், மு.மு. | சென். |
| 18 | இராசகோபாலன், அ. வ. | சென். |
| 19 | இராசகோபாலன், தி. | காரை |
| 20 | இராசகோபாலன், மா. | வாழி. |
| 21 | இராசவேலன், வே. | வாழி. |
| 22 | இராசு, கா. அ. | வாழி. |
| 23 | இராதா, சு. | நாட் |
| 24 | இராதா கிருஷ்ணன். இரா. | சென். |
| 25 | இராமகிருஷ்ணன். எஸ். | சென். |
| 26 | இராமசாமி. சோ. | நாட். |

| | பெயர் | பங்கேற்றவூர் |
|---|---|---|
| 27 | இராமசுப்பிரமணியன், வெ. | சென். |
| 28 | இராமச்சந்திரன், புலவர் | திரும. |
| 29 | இராமநாதன், க. வெ. | இரா. |
| 30 | இராமநாதன், வெ. | நாட். |
| 31 | இராமலிங்கம், த. | சென். |
| 32 | இளம்பிறை மணிமாறன் | இரா. |
| 33 | இளவரசு, சோம. | தேர. |
| 34 | உஷாராணி, சுப. | நாட். |
| 35 | கண்ணப்பச் செட்டியார், பெ. கரு. | நாட். |
| 36 | கண்ணப்ப மூர்த்தி, வெ. | நாட். |
| 37 | கண்ணம்மா, மு. | நாட். |
| 38 | கம்பராமன் | சென். |
| 39 | கம்பன் அடிப்பொடி. | சென். |
| 40 | காசிராஜன், எஸ். டி. | சேல. |
| 41 | காந்திமதி, இரா. | இரா. |
| 42 | காராளன் | இரா. |
| 43 | காளிமுத்து, சுப. | தேர. |
| 44 | கிருஷ்ணவேணி, செல்வி | சேல. |
| 45 | கிருபானந்த வாரியார் | காரை. |
| 46 | கிரன் | இரா. |
| 47 | குத்தாலிங்கம், க. | ஆவடி. |
| 48 | குமரி அனந்தன் | இரா. |
| 49 | குருசாமி, ஆ. | வாழி. |
| 50 | குருசாமி சுப்பிரமணியம் | நாட். |
| 51 | குன்றக்குடி அடிகளார் | காரை. |
| 52 | கெங்காதரன், எஸ். | நாட். |
| 53 | கோதண்டராமன் புலவர் சு, | வாழி |
| 54 | கோதண்டராமன், க. கு. | சென். |
| 55 | கோவிந்தசாமி, சி. | திருப். |
| 56 | கோவிந்தசாமி, ந. | காரை. |
| 57 | கோவிந்தசாமி, ம. | வாழி. |
| 58 | சங்கரராசு நாயுடு, எஸ். | காரை. |
| 59 | சடகோபன், கு. | ஆவடி |
| 60 | சண்முகக்கனி. அ. | திரும். |
| 61 | சண்முகம், எம். | தேர. |

| | பெயர் | பங்கேற்றஊர் |
|---|---|---|
| 62 | சண்முகம், குருவிக்கரம்பை | காரை. |
| 63 | சண்முகம் வெற்றியூர் | நாட். |
| 64 | சத்திய சீலன், கோ. | காரை. |
| 65 | சத்தி பெருமாள் | காரை. |
| 66 | சத்தியபாமா, இரா. | நாட் |
| 67 | சரஸ்வதி ராமநாதன, டாக்டர் | இரா. |
| 68 | சவகர்லால், ச. | இரா. |
| 69 | சாந்தி, சு. நா. | நாட். |
| 70 | சாரங்கபாணி, கோ. | சேல. |
| 71 | சானகிராமன், புலவர் கோவி. | வாழி. |
| 72 | சிங்கார வடிவேலன், டாக்டர் அர. | இரா. |
| 73 | சிங்காரவேலனார், சொ. | தேர. |
| 74 | சிட்டிபாபு, சை. வே. | திருப். |
| 75 | சிரீபால் | சென்னை. |
| 76 | சிவகாமசுந்தரி, ச. | காரை. |
| 77 | சிவசண்முகம், புலவர் சி. | வாழி. |
| 78 | சிவஞானம், டாக்டர் ம. பொ. | சென். |
| 79 | சிவப்பிரகாசம், சோம. | இரா. |
| 80 | சிவம், சுகி. | இரா. |
| 81 | சிற்சபேசன், கண. | இரா. |
| 82 | சின்னசாமி, புலவர் இரா. | வாழி |
| 83 | சீதா அண்ணாமலை, டாக்டர்திருமதி | திரும. |
| 84 | சீதாபதி, ஆர். டி. | பாளை. |
| 85 | சீனிச்சாமி, புலவர் வெ. | திரும. |
| 86 | சீனிவாசன், அரங்க. | காரை. |
| 87 | சீனிவாசன், எஸ். | காரை. |
| 88 | சீனிவாசன், க. வெ. | திருப். |
| 89 | சுகந்தி, வயி. | நாட். |
| 90 | சுதா சேஷய்யன், செல்வி | சென். |
| 91 | சுந்தரம், அரு. | நாட். |
| 92 | சுந்தரம், சொ. சொ. மீ. | சென். |
| 93 | சுந்தரம், ஜீ. கே. | காரை. |
| 94 | சுப்பிரமணியன், உ. | நாட். |
| 95 | சுப்பிரமணியன், எஸ். ஆர். | திருப். |
| 96 | சுப்பிரமணியம், டாக்டர் ச. வே. | காரை. |

| | பெயர் | பங்கேற்றனர் |
|---|---|---|
| 97 | சுப்பிரமணியம். சி. | சென். |
| 98 | சுப்பிரமணியன், து. | வாழி. |
| 99 | சுப்பையா கண. | நாட். |
| 100 | சுராஜ் இரா. | தேர. |
| 101 | செகந்நாதன், கி. வா. | காரை. |
| 102 | செகந்நாதராஜா, மு. கு. | இரா. |
| 103 | செங்கோட்டு வேலன், ஆர். | காரை. |
| 104 | செந்தில் நாயகம், வீ. | ஆலடி. |
| 105 | செயராமன், டாக்டர் நா. | திரும. |
| 106 | செல்வகணபதி, இரா. | தேர. |
| 107 | சேதுராசன், பெரிய. | நாட். |
| 108 | சோதி, மா. | வாழி. |
| 109 | சோமசுந்தரம் | தேர. |
| 110 | சோம சுந்தரம், செ. | திருப். |
| 111 | சோலைநாதன், வெ. | வாழி. |
| 112 | ஞானசம்பந்தம். அ. ச. | சென். |
| 113 | ஞானசுந்தரம், தெ. | வாழி. |
| 114 | தமிழ்வேள் | சென். |
| 115 | தனபாக்கியம், நா. | இரா. |
| 116 | திருமகன், சீ. | சென். |
| 117 | திருமலாச்சாரி, திருவரங்கம் | பாளை. |
| 118 | திருவேங்கடம், விஜய. | தேர. |
| 119 | திலகவதி, செல்வி, ச. | தேர. |
| 120 | துரைசாமி | நாட். |
| 121 | துரை வள்ளி, திருமதி | தேர. |
| 122 | தெய்வமணி, புலவர் | வாழி. |
| 123 | நடராஜன், ஔவை | காரை. |
| 124 | நடராஜன், புரிசை | திருப். |
| 125 | நமசிவாயம், பா, | சென்னை. |
| 126 | நல்லபெருமாள், சு. | தேர. |
| 127 | நவநீதகிருஷ்ண பாண்டியன், S. K. R. | ஆலடி. |
| 128 | நாகசாமி, இரா. | காரை. |
| 129 | நாகப்பன், அரு. | இரா. |
| 130 | நாராயணன், அ. | நாட். |

| | பெயர் | பங்கேற்ற ஊர் |
|---|---|---|
| 131 | நாராயணன், நா. சே. | நாட். |
| 132 | நாராயணன், ம. | வாழி. |
| 133 | நிர்மல, செல்வி எம். பி. | தேர. |
| 134 | நெடுஞ்செழியன், இரா. | காரை. |
| 135 | நெடுமாறன், நாஞ்சில் | இரா. |
| 136 | பசுபதி, ம. வே. | சென். |
| 137 | பதுமனார், வே. | திருப். |
| 138 | பழநியப்பன், பழ. | காரை. |
| 139 | பிரமிளா, செல்வி செ. | சென். |
| 140 | புருடோத்தமன், புலவர் நா. | வாழி. |
| 141 | மகாலிங்கம், ப. | திருப். |
| 142 | மணி, நா. | நாட். |
| 143 | மணிமுரசு, க. | நாட். |
| 144 | மத்தியாஸ், மறை திரு. | திரும. |
| 145 | மரகதம், ராஜம் | இரா. |
| 146 | மரியதாஸ் | சென். |
| 147 | மலைச்சாமி, கே. | நாட். |
| 148 | மலையப்பன், தி. சு. | இரா. |
| 149 | முத்துக்குரும்பன், வே. | திரும. |
| 150 | முத்துராமன், மா. | இரா. |
| 151 | முருகேசனார், புலவர் துரை. | வாழி. |
| 152 | முனிசாமி, திருக்குறள் வி. | தேர. |
| 153 | மேத்தா, மு. | சென். |
| 154 | ராஜகோபாலன், உ. பெ. உ. | நாட். |
| 155 | ராமசுப்பிரமணிய ராஜா, எஸ். என். ஆர். டி. | இரா. |
| 156 | ருக்மிணி, செல்வி இரா. | சென். |
| 157 | லலிதா தாரிணி, செல்வி எஸ். | சென். |
| 158 | வசந்தமல்லிகா, திருமதி வி. | தேர. |
| 159 | வரதராஜன், நா. சீ. | தேர. |
| 160 | வரதராஜன், மா. | இரா. |
| 161 | வாலி, கவிஞர் | திருப். |
| 162 | விக்கிரமன் | இரா. |
| 163 | விசுவநாதன், கி. ஆ. பெ. | சென். |
| 164 | விசுவேசுவரன், புலவர் வே. | வாழி. |

| | பெயர் | பங்கேற்றஊர் |
|---|---|---|
| 165 | வெங்கடாசலம், ப. | சேல. |
| 166 | வேங்கடசுப்பிரமணியன், கே. | திரும. |
| 167 | வேலு, பெ. | சேல. |
| 168 | வைரவன், க. | நாட் |

1 சென் — சென்னை
2 தேர — தேரழுந்தூர்
3 வாழி — வாழியூர்
4 ஆலடி — ஆலடிப்பட்டி
5 திரும — திருமங்கலம்
6 இரா — இராஜபாளையம்
7 பாளை — பாளையங்கோட்டை
8 நாட் — நாட்டரசன்கோட்டை
8 காரை — காரைக்குடி
10 சேல — சேலம்
11 திருப் — திருப்பத்தூர்.

VIII

## 1981 வரையில் அமைந்த கம்பன் கழகங்கள்

| வரிசை எண் | ஊர் | Pin | முகவரி |
|---|---|---|---|
| 1. | காரைக்குடி | 623002 | கம்பன் மணிமண்டபம், தொ. பே. 600 |
| 2. | நாட்டரசன்கோட்டை | 623556 | கம்பன் அருட்கோயில் |
| 3. | தேரழுந்தூர் | 609808 | ஆமருவியப்பன் கோயில் மாயூரம் வழி. |
| 4. | கள்ளிப்பட்டி | 638505 | சிராமவிண்ணகரம், வழி-ஈரோடு RMS, தொ. பே. 44. |
| 5. | நாமக்கல் | 637001 | சேலம் மாவட்டம் |
| 6 | கோபிச்செட்டிப் பாளையம் | 638452 | சீதா கல்யாணமண்டபம், தொ. பே. 84. |
| 7. | புதுச்சேரி | 605001 | 116, முத்துமாரியம்மன் கோயில் தெரு, தொ. பே. 509 |

| | | | |
|---|---|---|---|
| 8. | ராசிபுரம் | 637408 | 10, பெரிய அக்ரகாரம், சேலம் மாவட்டம். |
| 9. | கோயமுத்தூர் | 641037 | மணிபீடர் பள்ளி, தொ. பே. 35851 |
| 10. | சேலம் | 636001 | 4-பி, சாலை ரோடு. தொ. பே. 3501. |
| 11. | சென்னை | 600085 | கற்பகச் சோலை, 1, வெள்ளையன் செட்டியார் வீதி, கோட்டூர்புரம், தொ. பே. 411110. |
| 12. | புதுக்கோட்டை | 622001 | சித்ரா ஜவுளி ஸ்டோர்ஸ், தொ. பே. 560. |
| 13. | பாளையங்கோட்டை | 627002 | நெல்லை மாவட்டக் கம்பன் கழகம், கம்பராமயண மண்டபம், 1, பெருமாள் தெற்கு மாடவீதி. |
| 14. | மலேசியக் கம்பன் கழகம் MALACCA | — | 61, Jalan Hang Jebat MALACCA (Malaysia) [Phone : 3:06] |
| 15. | திருவாரூர் | 610108 | K.T.R. Perfumers, (120, காந்திசாலை) |
| 16. | பட்டுக்கோட்டை | 614601 | 11, சின்னையா தெரு, தொ. பே. 102. |
| 17. | திருப்பத்தூர் | 635601 | 6?, கச்சேரித் தெரு (வடஆர்க்காடு), |
| 18. | சிவகங்கை | 623560 | 1, மாணிக்கம்பிள்ளை தெரு |
| 19. | பரமக்குடி | 623707 | அனுமார் கோயில் |
| 20. | வேலூர், வ. ஆ. | 632006 | 13, E.B. காலனி, காந்திநகர். |
| 21. | திண்டிவனம் | 604002 | 8, சிங்கார முதலி தெரு, நல்லியக்கோடன் நகர். |
| 22. | திருச்சிராப்பள்ளி | 620020 | 22, ஞானதிக்கம் பிள்ளை தெரு, கல்லுக்குழி. |
| 23. | காஞ்சிபுரம் | 631502 | 8, ராஜ வீதி |
| 24. | தஞ்சாவூர் | 613001 | |
| 25. | மதுரை | 625018 | 9, அண்ணா நகர். |
| 26. | அவினாசி | 638654 | |

| | | | |
|---|---|---|---|
| 27. | கவுந்தப்பாடி | 638455 | 37, மெயின்ரோடு, வழி-ஈரோடு RMS. |
| 28. | பொள்ளாச்சி | 642002 | 23, காமராஜர் ரோடு |
| 29. | திருநெல்வேலி | 627004 | 23, 24, அன்னதான விநாயகர் கோயில்தெரு, பேட்டை. |
| 30. | தென் திருப்பேரை | 628623 | திருநெல்வேலி மாவட்டம். |
| 31. | வாழியூர் | 632315 | வடஆர்க்காடு மாவட்டம் |
| 32. | கரூர் | 633006 | 7-B, வாங்கப் பாளையம், சேலம் சாலை, திருச்சி மாவட்டம். |
| 33. | கல்கத்தா (மே. வங்காளம்) | 700029 | 4-A, டாக்டர் சரத்பானர்ஜி ரோடு. |
| 34. | திருமங்கலம் | 626706 | 68, இராசாராம் தெரு, ஜவஹர் நகர். |
| 35. | கிழக்குத் தாம்பரம் | 600059 | பேராசிரியர் குடியிருப்பு, தொ. பே. 48581. |
| 36. | பெரம்பலூர் | 621212 | 57, பஜார் தெரு. |
| 37. | நாட்டரசன் கோட்டை | 623556 | மேலரதவீதி |
| 38. | கும்பகோணம் | 612001 | 2, பேட்டை பாக்கிய நாதம் தெரு. |
| 39. | ஆலடிப்பட்டி-நல்லூர் | 627853 | தென்காசி வட்டம், நெல்லை மாவட்டம். |
| 40. | ராமேஸ்வரம் | 623526 | 9, வர்த்தகர் தெரு, தொ. பே. 24. |
| 41. | ராஜபாளையம் | 626117 | "சோலை" 6, தாண்டல் கந்தசாமி தெரு. |
| 42. | உதகமண்டலம் | 643001 | கலா தனிப்பயிற்சிக் கல்லூரி. கமர்ஷியல் சாலை. |
| 43. | யாழ்ப்பாணம் (ஸ்ரீலங்கா) | | அகில இலங்கைக் கம்பன் கழகம், 135, வாசிகசாலை வீதி, கல்வியங்காடு. |

நன்றி : 'எண்பத்தி ஒன்றில் கம்பன் கழகங்கள்' என்னும் இக் கட்டுரையின் ஆக்கத்திற்குத் துணையாக, கட்டுரை யாளரின் வேண்டுகோளுக்கு இணங்க உரிய தகவல் களை அனுப்பி உதவிய கம்பன் கழகங்களுக்கு நன்றி.

# 34. வானொலியில் தமிழ்

இளசை எஸ். சுந்தரம்

மனித வாழ்வின் சகல துறைகளையும் அலசி ஆராய்ந்து, கதையாய்-நாடகமாய்-உரையாடலாய் - சித்திரமாய் - இசையாய் - சொல்லோவிய மாய்-பாடலாய் பிரதிபலிக்கும் வானொலி எழுத்தறிவற்றோரும் ஒலி வடிவிலேயே பல இலக்கியக் கூறுகளை ரசிக்கவும், அறிவு பெறவும் சேவை புரிந்துள்ளது. அதுமட்டுமல்ல, வண்ணத் தமிழுக்கும் வானொலி வனப்புச் சேர்த்து வருகிறது என்பதில் ஐயமில்லை.

## முன்னுரை

வானொலி ஓர் அற்புதமான சாதனம்; மூலைமுடுக்கெல்லாம் சென்று ஒலிவண்ணம் காட்டும் கலைச் சாதனம். உல்லாசபுரியில் வாழ்வோர் மட்டுமல்ல, கல்லுடைக்கும் தொழிலாளியும் கேட்டு மகிழும் மக்கள் சாதனம். வெறும் பொழுதுபோக்குச் சாதனம் என்ற நிலையைக் கடந்து அறிவூட்டும் சாதனமாக வானொலி இப்போது பரிணாமம் பெற்றுவிட்டது. மனித வாழ்வின் சகல துறைகளையும் அலசி ஆராய்ந்து கதையாய், நாடகமாய், உரையாடலாய், சித்திரமாய், சொல்லோவியமாய், இசையாய், பாடலாய் பிரதிபலிக்கும் இந்தச் சாதனம் இப்போது மனித வாழ்வில் பிரிக்க முடியாததாய் இணைந்துவிட்டது. எழுத்தறிவற்றோரும் ஒலி வடிவிலேயே பல இலக்கியக் கூறுகளை ரசிக்கவும், அறிவு பெறவும் இந்தச் சாதனம் ஆற்றி வரும் சேவை மகத்தானது.

தமிழகத்தில் சென்னை, திருச்சிராப்பள்ளி, கோயம்புத்தூர், திருநெல்வேலி ஆகிய இடங்களிலும் பாண்டிசேரியிலும் வானொலி நிலையங்கள் உண்டு. இவை தவிர டெல்லியிலிருந்து வெளி

நாட்டிலுள்ள தமிழ் நேயர்களுக்காகவும், சென்னையிலிருந்து தென்கிழக்கு ஆசிய தமிழ் நேயர்களுக்காகவும் தமிழ் நிகழ்ச்சிகள் ஒலிபரப்பாகின்றன.

1981 - ஆம் ஆண்டு இந்நிலையங்களிலிருந்து ஒலிபரப்பாகி தமிழ் வளர்ச்சியில் தங்கள் பங்கினையும் ஆற்றிய நிகழ்ச்சிகள் குறித்துக் காணலாம்.

## 1. கல்வி ஒலிபரப்பில் தமிழ்

தமிழ் நாட்டில் சென்னை-1 அலைவரிசையிலும், திருச்சிராப் பள்ளி வானொலி நிலையத்திலிருந்தும் கல்வி நிகழ்ச்சிகள் ஒலி பரப்பாகின்றன. அறிவியல், வரலாறு, தமிழ், பொது அறிவு போன்ற பாடங்களைப் பலவிதமானவடிவங்களில்மாணவர்களுக்கு வழங்குகிறது வானொலி. திங்கட்கிழமை தொடங்கி வெள்ளிக் கிழமை முடிய ஒவ்வொரு நாளும் பிற்பகல் 2-15 மணி முதல் 2-40 மணிவரை உயர்நிலைப் பள்ளிகளுக்கான கல்வி நிகழ்ச்சிகள் ஒலி பரப்பாகின்றன. சென்னையிலிருந்தும் திருச்சியிலிருந்தும் ஒலி பரப்பப்படும் இந் நிகழ்ச்சிகளைக் கோயம்புத்தூர், திருநெல்வேலி, பாண்டிச்சேரி ஆகிய இடங்களிலுள்ள வானொலி நிலையங்களும் அஞ்சல் செய்கின்றன. திங்கள் முதல் வெள்ளிக்கிழமை வரையிலும் காலை 11-40 மணி முதல் மதியம் 12-00 மணி வரையிலும் தொடக்கப்பள்ளி மாணவர்களுக்காக நிகழ்ச்சிகள் ஒலி பரப்பப் படுகின்றன. இந்த நேரத்தில் ஒரு செய்தியை நிச்சயமாகச் சொல்லியாக வேண்டும். இந்தியா முழுவதிலுமே எல்லா மாநிலங் களிலும் சேர்த்து சுமார் எழுபதாயிரம் பள்ளிகளில்தான் வானொலிப் பெட்டிகள் உள்ளன. அதில் தமிழ்நாட்டில் மட்டும் பாதிக்கும் மேல், அதாவது 38 ஆயிரம் பள்ளிகளில் வானொலிப் பெட்டிகள் உள்ளன. தமிழ்நாட்டில் வானொலிப் பெட்டிகள் இல்லாத பள்ளியே இல்லை என்ற பெருமித நிலை உருவாகி உள்ளது.

பள்ளிகளில் தமிழ் கற்பிக்கும் முறை மிகப் பழமையான தாகவும், தற்கால இலக்கிய வளர்ச்சி, மொழியியல் ஆராய்ச்சி ஆகியவற்றுக்கு உதவும் வகையில் அமையாததும் கண்டறியப் பட்டது. எனவே, தமிழ் பயிற்று முறையை மேம்படுத்த தமிழாசிரியர்களுக்குச் சிறப்புப் பயிற்சி ஒன்றினை வழங்கும் அவசியம் ஏற்பட்டது. மைசூரிலுள்ள இந்திய மொழிகளுக்கான மத்திய நிறுவனம், தமிழகக் கல்வித் துறையின் கல்வி ஆராய்ச்சிப்

பயிற்சி நிறுவனம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், அகில இந்திய வானொலி ஆகியவை இணைந்து ஒவ்வோர் ஆண்டிலும் ஒவ்வொரு வகுப்புக்குத் தமிழாசிரியர்களுக்கென்று பயிற்சித் திட்டத்தைத் தொடங்கின. அந்த வகையில் 1981-ஆம் ஆண்டு பத்தாம் வகுப்புத் தமிழாசிரியருக்கான பயிற்சி முறைகள் தொடங்கின.

தமிழாசிரியர்களுக்கு வழங்கப்படும் அந்தப் பயிற்சி இரண்டு பகுதியாக அமைந்தது. செய்யுள், உரைநடை, நாடகம், கதை போன்றவற்றைப் புதிய முறையில் எவ்வாறு கற்பிக்க வேண்டும் என்பதை விளக்கி, அவர்களுக்கு ஆண்டு முழுவதும் குறிப்பேடுகள் அனுப்பப்படும். அது தவிர வானொலி மூலமாகவும் ஆலோசனை கூறும் வகையில் மாதிரிப் பாடங்கள் நடத்தப்படும். எனவேதான் இந்தப் பயிற்சித் திட்டம் "தமிழாசிரியர்களுக்கான வானொலி மற்றும் அஞ்சல்வழிப் பயிற்சி" என்று அழைக்கப்பட்டது. குறிப்பேட்டில் விவரிக்க முடியாத சில செய்திகளை, உத்திகளை வானொலி மூலம் நடத்திக் காட்டுவது எளிதாக இருந்தது. இப் படிப் பயிற்சி பெற்ற ஆசிரியர்கள், அவர்களுக்கு வழங்கப்படும் தன்மையறி தாளைப் பூர்த்தி செய்து அனுப்ப வேண்டும். அதன் அடிப்படையில் அவர்களுக்குச் சான்றிதழ்கள் வழங்கப்படும்.

1981-ஆம் ஆண்டு அப்படி வானொலி மூலம் ஒலிபரப்பான சில நிகழ்ச்சிகள்:

மொழித்திறன்கள், வாழ்த்து, அறிவுரை, தமிழ்த் தலைவர், பெரியோர், தாய் மொழியில் உயர்தரக் கல்வி, இலக்கணக் குறிப்பு, சிலப்பதிகாரம், இராமாயணம், பாரதப் பண்பாடு, விடுதலைப் போராட்டம், இலக்கணம், பெரிய புராணம், சீறாப் புராணம், இலக்கிய வரலாறு, தேம்பாவணி, பாஞ்சாலிசபதம். கலைச்சுவையும் கலை உணர்வும், சட்டமன்றக் குடியாட்சி, மறு மலர்ச்சிப் பாடல்கள், அரியணை அளித்த வள்ளல்கள், புலமையும் பெண்மையும், நற்றிணை மற்றும் புறநானூறு, பல்சுவைப் பாடல்கள்,பன்னாட்டு மன்றம்,நாடோடி இலக்கியம், வழிபாட்டுப் பாடல்கள், தமிழ் கற்பித்தலில் துணைக் கருவிகளின் பயன், நோக், கத்தின் அடிப்படையில் கற்பித்தலும் சோதித்தலும் செய்யுளைப் படிக்கும் விதம், மொழிப்பயிற்சிக் கட்டுரை.

இவை தவிர மற்ற வகுப்புகளுக்கு, தமிழ் இலக்கியத்தில் வினாடி வினா, உச்சரிப்பு, இலக்கண விளக்கம் போன்ற பாடங் களும் நடத்தப்பட்டன.

பாரதியார், கவிமணி, நாமக்கல் வெ. ராமலிங்கம் பிள்ளை போன்றோர் எழுதிய பாடல்களையும் மாணவர்கள் பாடிப் பழகும் வகையில் பாடற் பயிற்சிகள் நடத்தப்பட்டன. இதனால் மாணவர்கள் இசையோடு பாடல்களைப் பாடும் திறம் பெறு கின்றனர்.

## 2. சிறுகதை

தற்கால இலக்கிய உலகில் மிகச் சிறப்பான இடத்தைப் பெற்றிருப்பது சிறுகதை. குறுகிய உருவத்தாலும், துணுக்குறச் செய்யும் உள்ளடக்கத்தாலும் சிறப்பான உத்தியாலும் இன்றைய அவசர உலகில் அது வாசகர்களை மகிழ்விப்பதில் வியப்பில்லை வானொலியிலும் சிறுகதைக்குச் சிறப்பிடம் வழங்கப்பட் டிருக்கிறது.

வானொலியில் ஒலிபரப்பாகும் சிறுகதைகள் எல்லாம் ஏதாவது ஒரு படிப்பினையை ஊட்டுவதாக அமைவதே பொது வான நியதியாக உள்ளது. வானொலி மூலம் மக்களுக்குப் பல நல்ல கருத்துகளைச் சொல்லவேண் டுமென்பதே இதன் நோக்கம். நோக்கம் சிறந்ததுதான். ஆனால் அதிகமான பிரச்சாரவாடை வீசும் முறையிலே சிறுகதைகள் அமைந்து விடுகின்றன என்றும் இதனால் சிறுகதையின் வடிவம் சிதைந்து வெறும் பிரச்சாரத் துணுக்காக அமைந்துவிடுகிறதென்றும் பலர் கருதுகின்றனர். வானொலிக்குச் சிறுகதைகள் எழுதுகிறவர்கள் நீதிக் கருத்தை வலியுறுத்துவதிலேயே அதிகக் கவனம் செலுத்துவதால் சிறுகதைக் கான உத்திகளைக் கோட்டைவிட்டுவிடுகிறார்கள். நீதிக் கருத்துகளில் செலுத்தும் அதே கவனத்தை சம்பவங்களைப் பின்னும் நேர்த்தியிலும் காட்டினால் வானொலிச் சிறுகதைகள் இன்னும் வளம் பெறும் என நம்பலாம்.

பத்திரிகைகளில் வரும் கதைகளைவிட வானொலிச் சிறு கதைகள் கொஞ்சம் தரம் குறைந்தவை என்ற கருத்தும் நிலவு கிறது. பத்திரிகை ஆசிரியர்கள் தங்கள் அலுவலகத்துக்கு வரும் ஆயிரக்கணக்கான கதைகளில் ஒருசிலவற்றை மட்டும் தேர்ந் தெடுத்து வெளியிடுகின்றனர். அதனால் அவற்றில் தரம் இருப்ப தில் ஆச்சரியமில்லை. ஆனால் வானொலிக் கதைகள் ஒருவரை எழுதும்படி பணிக்கப்பட்டு குறித்த காலத்துக்குள் கிடைக்க வேண்டும் என்று வற்புறுத்தும் நிலை உள்ளதால் எழுத்தாளர்கள் எதையாவது எழுதிக் கொடுத்துவிடும் சூழ்நிலை உள்ளது.

எழுத்தாளர்கள் சிறப்பான முறையில் கதைகளை எழுதித்தரு வார்கள் என்ற நம்பிக்கையில்தான் அத்தகைய பொறுப்பு அவர் களுக்கு வழங்கப்படுகிறது. அதைச் செம்மையாக நிறைவேற்றித் தரவேண்டிய கடமை எழுத்தாளர்களுக்கு உண்டு. இத்தகையகுறை களைப் போக்குவதற்காகத்தான் வானொலி நிலையத்துக்கு வரும் கதைகளில் சிறந்தவற்றைத் தேர்ந்தெடுத்து, பிற கதைகளைத் திருப்பி அனுப்பிவிடும் வழக்கமும் வானொலி நிலையத்தில் கடை பிடிக்கப்படுகிறது. எழுத்தாளர்கள் வானொலி நிலையத்தோடு ஒத்துழைத்துச் சிறந்த சிறுகதைகளைப் படைப்பார்களேயானால் வானொலிச் சிறுகதைகளின் தரமும் உயரும் என்பதில் ஐயமில்லை.

1981-ஆம் ஆண்டு ஒலிபரப்பான சில சிறுகதைகளின் மையக் கருத்துகளைப் பார்ப்போம்.

''விருந்து''—ஜி.கே. பொன்னம்மாள்

விருந்தினரை உபசரிக்க வேண்டியதுதான். ஆனால் வரவுக்கு மீறிய செலவு செய்து விருந்தினரைப் பேணுவது ஆடம்பரம். அது தேவையா? என்ற கருத்தில் எழுதப்பட்ட கதை.

''ஓ! அவளா?''—எஸ். லீலா

வம்பு பேசுவது வாழ்க்கைக்குத் தேவையற்றது. அபாயகர மானதும்கூட. அறிந்தோ அறியாமலோ பேசப்படும் வம்புப் பேச்சு ஒரு பெண்ணின் வாழ்க்கையை மட்டுமல்ல உயிரையும் பறிக்கக் கூடியது. இதை வலியுறுத்துவதற்காக எழுதப்பட்ட கதை.

''உபதேசங்கள்''—கரு. நாகராசன்

அடுத்தவர்களைக் குறைசொல்லியே காலங்கழிக்கும் சிலர் தங்களிடமுள்ள குறைகளைக் காணவோ களையவோ துணிவ தில்லை. பிறருக்கு உபதேசம் செய்யும் அவர்கள் தங்களைத் திருத்திக்கொள்ள முயல வேண்டும் என்ற கருத்தை வலியுறுத்தப் பிறந்த கதை இது.

''குழந்தை ஒரு பிரச்சனை''—ராஜேந்திரகுமார்

வேலையில்லாத் திண்டாட்டத்தால் ஒரு காதல் ஜோடி ஒரு குழந்தையைக் கடத்த முயன்று தோல்வியுற்ற கதை. வேலை கிடைக்காமல் தவிப்பவர்களின் மனம் எப்படியெல்லாம் தீமை களின் பிறப்பிடமாக அமைகிறது என்பதை விளக்கப் பிறந்த கதை.

''நாவினால் சுட்ட வடு''—ருக்மணி பார்த்தசாரதி

சொல்லப்படும் சக்தி வாய்ந்த ஒரு சொல், சூழ்நிலைக்கேற்ப வேலாகிறது, வில்லாகிறது. மனப்புண்ணை ஆற்றும் மருந்தாகவும் அமைகிறது. என்பதை விவரிக்கும் கதை.

''சுயரூபங்கள்''—கோமகள்

இன்றைய தலைமுறையினர் கூட்டுக் குடும்பத்தை விரும்புவதில்லை. இதைப் பெரியவர்கள் புரிந்துகொண்டு நடந்தால் குடும்பத்தில் குழப்பங்கள் குறையும். இளையவர்கள் என்னதான் இங்கிதமில்லாமல் நடந்தாலும் பெரியவர்கள் பொறுத்துக் கொண்டு மேலும் மேலும் பாசத்தைக் கொட்டும் பண்பைப் பெற்றவர்கள் என்பதை விளக்கும் கதை.

''அழையாத விருந்தாளி''—மு. தங்கசாமி

சாதி சமய வேறுபாடுகள் உண்மையான அன்பிற்குமுன் அடிபட்டுப் போகும் என்ற மையக் கருத்தைக் கொண்டது.

''வேலி''- எஸ்.வி.ரமணி

கற்பின் புனிதத்தையும் அதைக் காப்பாற்றப் பெண்கள்படும் சிரமங்களையும் எடுத்துரைக்கும் கதை.

''கன்னத்தில் விழுந்த அறை''—இனியவன்

பணச் செருக்குக் கொண்டலையும் பெண்களுக்குச் சாட்டையடிகொடுப்பதே இக்கதையின் நோக்கம். ஏழ்மையிலும் பண்பு உண்டு என்பதை விளக்குகிறது.

ஒரு குறிப்பிட்ட மையக் கருத்தினை எடுத்துக்கொண்டு பல்வேறு எழுத்தாளர்கள் படைத்த சிறுகதைகளைத் தொடராக ஒலிபரப்பியது சென்னை வானொலி.

இளைஞர்களுக்கு வேலைவாய்ப்பைப் பற்றி செய்திகளை எடுத்துரைக்கும் கருத்தை மையமாகக் கொண்டு எஸ். மஞ்சுளா, எஸ். அறிவுமணி, ஆர். ஈ. சந்திரசேகரன், ராசி அழகப்பன், எஸ். உமாமகேஸ்வரி ஆகியோர் தொடராக வழங்கிய சிறுகதைகள் இளையபாரத நிகழ்ச்சிக்காக ஒலிபரப்பாயின.

இவை தவிர, வானொலியில் ஒலிபரப்பான மேலும் சில சிறுகதைகள்:

| சிறுகதை | | ஆசிரியர் |
|---|---|---|
| நீ என் தேவதை மஞ்சு | — | லட்சுமி ராஜரத்தினம் |
| ஒரு வனம் உருவாகிறது | — | சி. பாலகுமார் |
| அற்புதச் சிந்தனை | — | இடையபாளையம் பூ. பெருமாள்சாமி |
| ஊரியம் | — | சி. ராஜாராமன் |
| மழை | — | தே. ஞானசூரியன் |
| கல்யாணச் சாப்பாடு | — | ஜி. கே. பொன்னம்மாள் |
| நெஞ்சில் நிலைத்தவள் | — | தில்லை எஸ். ஏ. அமீர் அலி |
| கண்ணைக் குத்தும் ஊசிகள் | — | அவினாசி முருகேசன் |
| கனவுகள் பலிக்குமா | — | கே. வி. லட்சுமிகாந்தன் |
| விடிவு | — | கே. பொன்னுசாமி |
| இடி | — | எஸ். சுவாமிநாதன் |
| கன்னித்துவம் | — | மேரி நிர்மலா |
| தட்சணை தராத வாழ்வு | — | ஓ. மேரி ராஜேஸ்வரி |
| தருமமே தவறினால் | — | எஸ். கோகுலாச்சாரி |
| சித்ரா சிரிக்கிறாள் | — | ஏ. சீனிவாசன் |
| பாடாத குயில்கள் | — | எஸ். ராஜாங்கம் |
| ஊனம் என்னும் ஊன்றுகோல் | — | ரமா ராதாகிருஷ்ணன் |
| காலில் கொட்டிக்கொள்ளும் நெருப்பு | — | டி. தாரிசியஸ் |
| ஏன் இன்னும் தூங்கவில்லை | — | ஜி. பகீரதன் |
| நெருப்பு | — | விஜயா சிவகாசிநாதன் |
| வசுமதியின் தியாகம் | — | ஜெயமணி |
| ஒரு பஞ்சாயத்து | — | ஆர். ராமதாசு |
| பெண்மை எனும் புதிர் | — | பி. காந்திமதி |
| பொழுது புலர்ந்தது | — | எஸ். ராமு |
| சந்தர்ப்பங்கள் சலனங்கள் | — | ஆர். சம்பத்குமார் |
| ஒரு தேவையற்ற தோப்பு | — | லதா ராமகிருஷ்ணன் |
| அவள் ஒரு தூரத்துப் பச்சை | — | பி. ஜீவகன் |
| காலம் பதில் சொல்லும் | — | ஹேமலதா |
| இதோ ஒரு குருத்து | — | ஆர். ரகுபதி |

## 3. நாட்டுப்புறப் பாடல்கள்

மண்ணில் மலர்ந்து இசையான நாட்டுப்புறப் பாடல்கள்' கள்ளங் கபடமற்ற கிராம மக்களின் கற்பனையில் உதித்தவை. சொல் நயமும், சொக்கவைக்கும் சுவையும் கால நிலையின்

கணிப்பும், பண்பாட்டின் வெளிப்பாடும் இவை போன்ற இன்னும் பிற சிறப்புகளையும் உள்ளடக்கியவை. தாலாட்டுப் பாட லென்றும், காதற்சுவைப் பாடலென்றும், விவசாயப் பாட லென்றும், விழாக்காலப் பாடலென்றும், ஒப்பாரியென்றும் அதன் எல்லை விரிந்து பரந்து கிடக்கின்றது.

அப்படிப்பட்ட பாடல்கள் சிலவற்றைத் தொகுத்தும் தனித் தனியாகவும் அவ்வப்போது வானொலி நிலையங்கள் ஒலிபரப்பி வருகின்றன. நாடோடிப் பாடல்களைப் பாடுவதற்கேற்ற குரல் வாகு உடையவர்களைத் தேர்ந்தெடுத்து, கிராமப் புறங்களில் புழங்கி வரும் இசைக் கருவிகளைப் பயன்படுத்தி அவர்தம் பாடல்கள் ஒலிப்பதிவு செய்யப்படுகின்றன. நாடோடிப் பாடல் களை ஒலிப்பதிவு செய்யும் போது அதன் இயல்பான மெட்டைக் கண்டறிந்து அது சிதையாமல் இசையமைக்கப்படுகின்றது. நாடோடிப் பாடல்களில் தோய்ந்து நல்ல அனுபவம் உள்ள வர்களே இத்தகைய பாடல்களைத் தொகுத்து வழங்க ஒப்பந்தம் செய்யப்படுகிறார்கள். சென்னை வானொலி நிலையத்தைப் பொறுத்தவரை கவிஞர் முகவை ராஜமாணிக்கம் அவர்கள் இதில் நிறையச் சாதித்து வருகிறார்கள்.

கொல்லங்குடி கருப்பாயி என்ற கிராமத்துப் பெண்மணியை அறிமுகப்படுத்தியது 1981-ஆம் ஆண்டில் வானொலியின் அரிய சாதனை. எழுதப் படிக்கத் தெரியாத அந்தப் பெண் வாயைத் திறந்தாலே கவிதை பொங்குகிறது. நாடோடிப் பாடல்களின் சுரங்கம் அந்தப் பெண்மணி

நாடோடி இலக்கியங்களை நசித்துப் போகாமல் பாது காப்பதில் வானொலி பெரும்பங்கு வகிக்கிறது. புத்தகங்களில் புதைந்து நூலகங்களில் உறங்கும் நாடோடிப் பாடல்கள் மட்டு மில்லாமல் கிராமங்களுக்குச் சென்று மக்களை நேரடியாகவே அணுகி அச்சுக்கு வராத பல பாடல்களை அவர்கள் குரல் ஒலி மூலமாகவே ஒலிப்பதிவு நாடாவிற் பதிவு செய்து ஒலிபரப்பப்படு கின்றன.

## 5. கிராமியக் கலைகள்

ஒயில், கும்மி, லாவணி, தெருக்கூத்து, மகுட ஆட்டம், கரக ஆட்டம், வில்லுப்பாட்டு, இன்னும் இவை போன்ற கிராமியக் கலைகளில் சிறந்து விளங்குகின்ற கலைஞர்களை அழைத்து

வானொலியில் பங்கு பெறச் செய்வதன் மூலம் அந்தக் கலைஞர்களை உற்சாகப்படுத்துவதோடு பழமை வாய்ந்த அந்தக் கலைகள் அழிந்துபோகாமல் பாதுகாக்கும் அரும்பணியைச் செய்கிறது வானொலி.

## 6. அறிவியல் தமிழ்

அறிவியல் துறை அளப்பரிய முறையில் நாள் தோறும் முன்னேறி வருகிறது. மக்கள் சாதனமாக வானொலியும் அறிவியல் பற்றிய நிகழ்ச்சிகளை ஒலிபரப்பி வருகின்றது. சென்னை வானொலி நிலையத்தில் அதற்கென தனியாகச் சிறப்புத் துறையே தொடங்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு வாரமும் ஞாயிற்றுக் கிழமை காலை 7-30 மணிக்கு சென்னை வானொலி நிலையத்திலிருந்து 'ஏன்' என்ற அறிவியல் வினாக் கோவை நிகழ்ச்சி இடம் பெறுகிறது. அறிவியல் விந்தைகளை அறிந்து கொள்ள நேயர்கள் வினாக்களை வானொலி நிகழ்ச்சிக்கு எழுதி அனுப்புகிறார்கள். அந்தந்தத் துறையைச் சேர்ந்த வல்லுநர்களிடம் அதற்கான பதிலைப் பெற்று வானொலி ஒலிபரப்புகிறது. உதாரணமாக ஒரு கேள்வியையும் அதற்கான விடையினையும் பார்ப்போம்.

நமது முன்னோர்கள் வடக்குத் திசையில் தலைவைத்துப் படுக்கக் கூடாது என்று சொல்லியிருக்கிறார்கள். இது வெறும் மூட நம்பிக்கைக் கருத்தல்ல. அறிவியல் ரீதியிலும் இதற்கு அர்த்தம் உண்டு என்பதை அந்த வினாவும் விடையும் விளக்குகின்றன.

வினா : நாம் ஏன் வடக்குத் திசையில் தலைவைத்துப் படுக்கக் கூடாது? தெள்ளாறு என்ற ஊரிலிருந்து ரவிக்குமார் என்ற நேயர் கேட்டிருக்கும் வினா.

பதில் : "நமது பூமி காந்தசக்தி கொண்டது. இந்த காந்தத்தின் வடதுருவம் பூமியின் தெற்குப் பக்கத்திலும் தென் துவரும் வடக்குப் பக்கத்திலும் அமைந்துள்ளன. வடக்குப் பக்கத்தில் தலைவைத்துப் படுத்தால் இந்தக் காந்த மண்டலத்தின் விளைவாக நமது உடலிலுள்ள அய்னிகளின் ஓட்டமும் நிலையும் மாறுபடும். இதனால் உடம்பில் வேண்டாத விளைவுகள் ஏற்படலாம் எனக் கருதியே வடக்குத் திசையில் தலை வைத்துப் படுக்கக் கூடாது என்கிறார்கள்".

இவ்வாறு கிராமப்புறங்களில் உள்ள மக்களும் கேட்கும் கேள்விகளுக்கு அறிவியல் பூர்வமான முறையில் பதில் கிடைப்பதால் அவர்களின் அறிவு தெளிவு பெறுகிறது. அந்தணப்பேட்டை, பாலுசெட்டி சத்திரம், சிட்டத்தாங்கல்' செம்பாக்கம், வளவனூர் கீக்காளூர் இப்படி இன்னும் பல கிராமங்களின் மூலைமுடுக்குகளிலிருந்து வினாக்கள் வந்து குவிகின்றன.

இவை தவிர வேறு பல அறிவியல் நிகழ்ச்சிகளும் இடம் பெறுகின்றன.

இதில் மிக முக்கியமாக கவனத்தில் கொள்ள வேண்டிய அம்சம் என்ன வென்றால் தமிழில் அறிவியல் நிகழ்ச்சிகள் ஒலி பரப்பாகும் போது பல அறிவியல் கலைச்சொற்கள் தமிழுக்குக் கிடைக்கின்றன. புதிய கலைச் சொற்கள் உருவாகின்றன. அறிவியலோடு தமிழும் சேர்ந்து வளர்வதற்கான வாய்ப்பும் வளர்கிறது எனலாம். பல அறிவியல் கருத்து அரங்குகள், அறிவியல் கவியரங்கம், பட்டிமன்றம் ஆகியவையும் வானொலியில் ஒலிபரப்பாகின்றன. ''சுற்றுச் சூழலை அறிவியல் வளர்ச்சி சீரழிக்கிறதா? சீரமைக்கிறதா?''.இப்படியொரு பட்டிமன்றம். காவிய நயங்களே பட்டிமன்றமாகும் என்ற நிலையையும் தாண்டி வானொலி இப்படிப்பட்ட பட்டிமன்றங்களையும் அமைக்கின்ற இது வளர்ச்சி தானே.

## 7. கவிதை

மொழியில் ஆற்றல் மிக்க சாதனமான கவிதைக்கும் வானொலியில் சிறப்பிடம் கொடுக்கப்பட்டுள்ளது இயற்கையையும் இறைவனையும் மட்டுமே பாடும் கவிதைகள் மட்டுமில்லாமல் மக்களின் அன்றாடப் பிரச்சனைகளை அலசி ஆராய்ந்து தீட்டப்பட்டகவிதைகளும் வானொலியில் இடம்பெறுகின்றன. அறிவியல் கருத்துகளைச் சொல்லும் கவிதைகள் குடும்பநலத்தின் மேன்மையைச் சொல்லும் கவிதைகள், தொழிலாளர்களின் கடமைகளையும் உரிமைகளையும் வலியுறுத்தும் கவிதைகள், வரதட்சனைக் கொடுமை, தீண்டாமைப் பேய் போன்ற சமுதாயப் பிரச்சனைகளுக்குச் சாட்டையடி கொடுக்கும் கவிதைகள் என்று வானொலியின் கவிதைக்களம் விரிந்து கொண்டே செல்கிறது வானொலியில் கவிதைகளுக்கு - இப்படிப்பட்ட கவிதைகளுக்கு உரியவாய்ப்பு அளிக்கப்படுவதால் புதிய புதிய பிரச்சனைகளைத் தொடும் வாய்ப்பு கவிஞர்களுக்கு ஏற்படுகிறது. இயற்கையின்

எழிலில் மயங்கி அதையே வர்ணித்து எழுதும் கவிஞர்களின் கவனத்தைத் திருப்பி சமுதாயத்தின் சிக்கல்களைக் கூர்ந்து நோக்கி கவிதை படைக்க வைப்பதில் வானொலி ஆற்றும் பணி சிறப்பானது. இதன் மூலம் வானொலிக் கவிதை அல்லது காற்றிலே மிதந்த கவிதைகள் என்ற புதிய துறையே தமிழுக்கு ஏற்பட்டுள்ளது.

நாட்டுநலம் என்ற தலைப்பில் அலுவலகப் பணியாளர்களின் கடமைகள் பற்றி கவிஞர் உலகநாதன் எழுதிய கவிதையிலிருந்து சில வரிகள்.

அலுவலர்கள் என்பவர்கள்
அச்சாணி போன்றவர்கள்
ஆட்சித் தேர் நடப்பதற்கு
ஆதாரம் ஆனவர்கள்
அரசாங்கப் பணிமனையில்
அலுவலகக் கோப்புகளை
திறக்காத நொடிப்பொழுதும்
தேசத்தைப் பாழாக்கும்.

தவணைமுறையில் நமக்கு வாகனங்கள் தயாரித்துக் கொடுக்கின்ற டீசல் காற்றும் குவிந்துள்ள குப்பைகளும் உள்ளே சென்று குடியேறுவதுங்கூட விஞ்ஞானத்தின் தவப்பயனால் விளைந்துள்ள முன்னேற்றங்கள். சாவு நமக்கு எப்போதும் உறுதிதானே, அவசரமாய்ப் போய்ச் சேரவேண்டும் என்ற அக்கறை வாகனங்களுக்கு இராதா என்ன?

இவைதவிர சமூகத்தின் அன்றாடப் பிரச்சனைகளில் மக்களின் கவனத்தைத் திருப்பவும் அவர்களின் பொறுப்புகளை உணர்த்தவும் கவியரங்கம் அமைக்கப்படுகின்றன. உதாரணமாக 'சூழ்நிலைத் தூய்மைக் கேடு'' பற்றிய கவியரங்கம். சாக்கடையால் ஏற்படும் தூய்மைக்கேடு பற்றிச் செந்தமிழ் மாறன் வழங்கிய கவிதையிலிருந்து சில பகுதிகள்:

ஊத்துற தண்ணியும் ஓடுற தண்ணியும்
சேத்துக்குத்தான் வந்து சேரும்—அந்தச்
சேர்க்கையினால் தெரு நாறும்—அதில்
மூத்திரத் தீர்த்தமும் மோதுவதால் கொசு
மூலைமுடுக்குகள் தோறும் – அண்ணே
முட்டை இடுவதைப் பாரும்

கவிதைப் பூங்கா என்ற நிகழ்ச்சி சென்னை வானொலி யிலிருந்து ஒலிபரப்பாகிறது. அதில் பல கவிஞர்கள் பல்வேறு தலைப்புகளில் கவிதை வழங்குகிறார்கள். கவிக்குரல், கவிமுகில் போன்ற நிகழ்ச்சிகளில் கவிஞர்கள் தங்கள் படைப்புகளில் சில வற்றை நேயர்களுக்கு வழங்குகிறார்கள்.

## 8. கவியரங்கம்

இலக்கிய விழாக்களில். இலக்கியச் சுவைஞர்களை ஈர்க்கும் நிகழ்ச்சிகளில் கவியரங்கமும் ஒன்று. வானொலியும் கவியரங் கத்தை நல்ல சாதனமாகப் பயன்படுத்துகிறது. பொதுவாக பொங்கல் திருநாள், விடுதலை நாள் விழா, தமிழ் ஆண்டுப் பிறப்பு போன்ற நாட்களில் கவியரங்கங்கள் அமைவது வழக்கம். இத்தகைய கவியரங்கங்கள் ரசிகர்கள் முன்னிலையில் நடத்தப் பட்டு ஒலிப்பதிவு செய்யப்படுகின்றன. எனவே மக்கள் முன்னிலை யில் கவிதை பாடும் வாய்ப்பு கவிஞர்களுக்கும், கவிதைகளை நேரடியாகவே கேட்டு மகிழும் வாய்ப்பு மக்களுக்கும் ஏற்படுகிறது. பிறகு அந்தக் கவிதைகள் தொகுக்கப்பட்டு வானொலியில் ஒலி பரப்பாகும்.

கட்டவிழ்த்துப் பார்க்காமல்
காயங்கள் ஆறிடுமோ
காயங்கள் ஆறாமல்
நியாயங்கள் பிறந்திடுமோ
கண்ணீரும் பெருமூச்சும்
கலந்திருக்கும் கோப்புகளை
பொன்னான கையாலே
பூட்டுடைத்துக் காப்பளிப்பீர்.

பரம்பரைத் தளைகள் என்ற தலைப்பில் கே. ராஜேந்திரன் எழுதிய புதுக்கவிதையிலிருந்து சில வரிகள்.

சுயம்வரப் போட்டியில்
நீ பாடிக்காட்டி யென்ன?
ஆடிக்காட்டி யென்ன?
பணத்தைக் காட்டிய பிறகே
மாப்பிள்ளை
பல்லைக் காட்டுகிறார்
ஓ, பேதைமையே!
உன் பெயர்தான் பெண்மையோ?

பதுமைப் பெண்ணாய் நீ
பதுங்கியது போதும்
புதுமைப் பெண்ணாய்
பொங்கியெழு!

## நம்பிக்கை ஒளியில் நனைவோம் - கவியரங்கம்

'பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்' என்ற வள்ளுவரின் குறளைத் தொழிலுக்கு அப்பாலும் நின்று பார்ப்பது அவசியமாகிறது. உடல் ஊனத்தை எண்ணிச் சிலரைப் புறக்கணிப்பது ஈனமாகும் அல்லவா. மானிடர் அனைவருக்கும் வாழ்வு உரியது என்ற நம்பிக்கை ஒளியை ஏந்தும் கவியரங்கம் கோயம்புத்தூர் வானொலி நிலையத்திலிருந்து ஒலிபரப்பாயிற்று. காந்திதாசன், கு. மா. பாலசுப்பிரமணியம், பி. எம். அபிபுல்லா, கிருஷ்ணராஜா, மாலதி ஹரீந்திரன், சக்திக்கனல், ரோஹிணி ஆகியோர் பங்கு கொண்டனர்.

## 9. இலக்கிய ஏடு - இலக்கியப் பேருரை

பொதுவாக எல்லா வானொலி நிலையங்களிலிருந்தும் பழைய புதிய இலக்கியக் கூறுகளை மக்களுக்கு அறிமுகப்படுத்தும் இலக்கிய ஏடு நிகழ்ச்சி அரைமணி அல்லது ஒரு மணி நேர கால எல்லையில் ஒலிபரப்பாகிறது. பல புத்தகங்களைச் சேகரித்துப் படிக்க முடியாதவர்களுக்கு அந்தப் பணியை வானொலியே வகையுடன் செய்கிறது. பார்வைப் புலனை மட்டுமே சார்ந்திராமல் கேள்விப் புலனால் மட்டுமே இலக்கிய நிகழ்ச்சிகளைக் கேட்டு இன்புறும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுப்பது வானொலியே.

இலக்கிய ஏடு என்ற நிகழ்ச்சியில் பலர் பல தலைப்புகளில் வழங்கும் உரைகளைத் தொகுத்து உரிய இணைப்புரைகளுடன் வழங்குகிறது வானொலி.

இலக்கியப் பேருரை என்ற நிகழ்ச்சியில் ஒரு குறிப்பிட்ட பொருளை எடுத்துக்கொண்டு அதையே அலசி ஆராயும் நீண்ட உரை இடம்பெறும்.

1981-ஆம் ஆண்டு வானொலியில் இடம்பெற்ற நிகழ்ச்சிகளில் ஒரு சிலவற்றைக் காண்போம்.

''திணை'' என்னும் பகுப்புகள் பண்டைய தமிழ் மக்களின் நுண்ணிய வாழ்வியலையும் அறிவியலையும் கலை உணர்வையும் எடுத்துக் காட்டுவன. இவற்றை விளக்கிடும் நூல்களில் ஐந்திணை

எழுபது, திணைமாலை நூற்றைம்பது, திணை மொழி ஐம்பது' ஆகிய மூன்று நூல்களை ஆராயும் இலக்கிய ஏடு ஒலிபரப்பாகி உள்ளது. தமிழைப் பாடமாகப் படிக்கும் மாணவர்களும் தமிழ்ப் புலவர்களும் மட்டுமே தொடும் இத்தகைய நூல்களை எளிய தமிழில் இனிய குரலில் எல்லோரும் கேட்கும் வகையில் தொகுத்து வழங்குகிறது வானொலி.

பரிதிமாற் கலைஞர் யாத்துள்ள ''தமுனியப்பாசுரத் தொகை' கருத்துச் செறிவாலும் ஆற்றொழுக்கு நடையாலும், அமைப் பாலும் தமிழுக்குப் பெருமை சேர்ப்பன. இதனை விளக்கும் இலக்கியப் பேருரை நிகழ்ச்சியும் இடம்பெற்றுள்ளது. மக்களிடம் அதிகம் அறிமுகம் ஆகாமல் நூலகங்களில் உறங்கிக் கிடக்கும் அரிய கருவூலங்களைக் கண்டறிந்து மக்களுக்கு வழங்குகிறது வானொலி. இந்த இரண்டு நிகழ்ச்சிகளும் பாண்டிச்சேரி வானொலி நிலையத்தி லிருந்து ஒலிபரப்பாயிற்று.

பாரதிதாசன் கவிதைகள் சமுதாயத்தின் தீமைகளை வேரோடு சாய்த்துப் புதியதோர் உலகத்தைப் படைக்கும் ஆற்றல் படைத் தவை. அவரது கவிதைகள் பற்றிய இலக்கிய ஏடு ஒன்றில் 'முன் னேற்றம்' என்றதலைப்பில் திருமதி பி.பி. ராஜேஸ்வரி, 'குடும்பம்' என்ற தலைப்பில் டாக்டர் ந. சஞ்சீவி, 'சமுதாயம்' பற்றி திரு. சு. செல்லப்பன் ஆகியோர் உரையாற்றினர். இந்த நிகழ்ச்சி சென்னை வானொலியிலிருந்து ஒலிபரப்பாயிற்று.

இனிமை [சொட்டும் பகுதிகள் நிறைந்து இதயத்தைத் தொடும் பள்ளுப்பாடல்கள் நம் தமிழ்நாட்டின் எழிலையும், ஏற்றத்தையும் எடுத்துரைப்பன. ''பள்ளுப் பாட்டில் பண்பு பலன்கள்'' என்ற இலக்கியப் பேருரையை பாண்டிச்சேரி வானொலி நிலையத்திலிருந்து திரு. பூதலூர் முத்து வழங்கினார்.

## சிலப்பதிகாரத்தின் குறிக்கோள்

மூன்று குறிக்கோள்களை மையமாக வைத்து இளங்கோவடிகள் சிலப்பதிகாரத்தை யாத்துள்ளார். அந்தக் குறிக்கோள்கள் காப்பியத்தில் எவ்வாறு இடம்பெற்றுள்ளன என்பதை ஆராயும் இலக்கிய ஏட்டினைச் சிலம்பொலி செல்லப்பன், டாக்டர் மா. செல்வராசன், டாக்டர் வே. த. மாணிக்கம் ஆகியோர் வழங்கினர்.

உழைப்பால் உயர்ந்த எழுத்து மன்னர்கள் வ. ரா., புதுமைப் பித்தன், விந்தன் ஆகியோர் உழைப்பவர்களின் உரிமைக்காகவும் மேன்மைக்காகவும் எழுதியவர்கள். அதை மக்களுக்கு எடுத்

துரைக்கும் வண்ணம் வ. ரா. வின் சமுதாயப் பார்வை பற்றி சு கணேசன், புதுமைப்பித்தன் சிந்தனைகள் பற்றி ஜிம்மி ஈ. ராபட்ஸ், விந்தனின் புதுமை நோக்கு குறித்து கவிதைதாசன் ஆகியோர் உரையாற்றிய இலக்கிய ஏடு பாண்டிச்சேரி வானொலி யிலிருந்து மலர்ந்தது.

தூது இலக்கியத்தின் வரலாற்றையும் நயங்களையும் விவரிக்கும் இலக்கியப் பேருரையை செ. வைத்திலிங்கம் வழங் கினார்.

## இன்றைய இலக்கியத்தால் சமூகச் சீர்திருத்தம்

இந்த இலக்கிய ஏடு, சிறுகதைகள், நாவல்கள், கட்டுரைகள் வாயிலாக சமூகச் சீர்திருத்தக் கருத்துகளை வெளியிட்ட மூவரு டைய எழுத்துகளை ஆராய்ந்தது.

திரு வி. க. வின் கட்டுரைகள், வ. ரா. வின் நாவல்கள், அண்ணாவின் கதை பற்றி கு. ராஜவேலு, ரபிசிங், டி. கே. சீனிவாசன் ஆகியோர் பங்கு கொண்டு உரையாற்றினர்.

## கடித இலக்கியம்

கடிதம் எழுதுவதே ஒரு சிறந்த கலை. கடிதக்கலை தனிப் பட்டவர்களின் விவகாரமாயிருந்தாலும்கூட நம் பேரன்புக்குரிய பெரியோர்கள் எழுதிய கடிதங்கள் இலக்கியமாகவே இருக்கின்றன.

நேருஜி, மு.வரதராசனார், மறைமலையடிகளார் ஆகியோரின் கடிதங்களையே இலக்கிய ஏடாகப் பாண்டிச்சேரி வானொலி நிலையம் ஒலிபரப்பியது.

இப்படிப் புதுப்புது வகையில் நிகழ்ச்சிகளை ஒலிபரப்பி மக்களுக்கு இலக்கிய இன்பத்தை ஊட்டுவதில் வானொலி இணை யிலாத் தொண்டு செய்துள்ளது.

இலக்கிய ஏட்டில் மலர்ந்த வேறு சில மலர்கள்

கல்வெட்டு என்னும் காலக் கண்ணாடியில்

(1) சில பழக்க வழக்கங்கள்

(2) கலை நுணுக்கங்கள்

(3) வரலாற்றுச் சான்றுகள்

—பாண்டிச்சேரி

இருபதாம் நூற்றாண்டின் இலக்கியப் பெரியார் பம்மல் சம்பந்த முதலியார் - தில்லி வெளிநாட்டுத் தமிழ் ஒலிபரப்பு.

கண்ணப்பர் - இலக்கியப் பேருரை - திருச்சி

தாயுமானவர் - இலக்கியப் பேருரை - திருச்சி

**ஆண்டாள் பாசுரம்—இலக்கிய ஏடு :**

1. திருப்பாவையின் கருத்தழகு
2. கவிதை நயம்
3. வாழ்க்கையின் வெளிப்பாடு

—சென்னை.

**குடும்பம் :**

1. ஒரு கல்லூரி
2. ஒரு பயிற்சிக் கூடம்
3. ஒரு கோவில்

—டெல்லி வெளிநாட்டுத் தமிழ் ஒலிபரப்பு.

**தேச விடுதலை :**

1. விடுதலைக் கவி பாரதி
2. பெண் விடுதலை
3. வறுமையிலிருந்து விடுதலை

—சென்னை

**பாடலும் பாவலரும் :**

1. நமச்சிவாயப் புலவர்
2. மதுரகவிராயர்
3. சவ்வாதுப் புலவர்
4. இராமகவிராயர்
5. கடிகைமுத்துப் புலவர்
6. ந. கூர்முத்தப் புலவர்

—பாண்டிச்சேரி

## 10. தமிழ் மணம்

பழந்தமிழ்ப் பாடல்களின் நயங்களையும், சொல்லாட்சி களையும் இன்னும் பிற சிறப்புகளையும் தற்காலத் தமிழ் உலகுக்கு எடுத்துக்காட்டுவதற்காகச் சென்னை வானொலி நிலையம் தமிழ் மணம் என்ற நிகழ்ச்சியை ஒலிபரப்புகிறது. இலக்கியப் பாடல்கள் இசையோடு இணையும்போது அவை ஒரு புது மெருகினைப் பெறு

கின்றன. ஒலிபரப்பான பாடல்களில் உதாரணத்துக்குச் சில !

| | | |
|---|---|---|
| புகுந்த நெய்தலை | — | முக்கூடற் பள்ளு |
| திருவிளங்க | — | அருட்பா |
| என்று கொண்டு | — | கம்பராமாயணம் |
| சொல்லாசை | — | பூதஞ்சேந்தனார் |
| சிறியவர் | — | பழமொழி நானூறு |
| அற்ற குளத்தில் | — | அவ்வையார் |
| இம்மை மறுமை | — | திருவள்ளுவமாலை |
| பொன்னை நினைத்து | — | பட்டினத்தார் |
| மாசற்ற நெஞ்சுடையார் | — | நன்னெறி |
| ஐவகை எனும் | — | தாயுமானவர் |
| அன்னமாடவா | — | பலபட்டடைச் சொக்கநாதப் புலவர் |
| தந்தையாய் | — | அறப்பளீசுர சதகம் |
| அடக்கமுடையவர் | — | இன்னா நாற்பது |
| ஆரண நான்கிற்கும் | — | பட்டினத்தார் |
| சொல்லாமலே பெரியர் | — | அவ்வையார் |
| வையை வருபுனல் | — | பரிபாடல் |
| உய்யும்படி | — | தாயுமானவர் |
| நல்ல கீதம் | — | பாரதியார் |
| அன்னதானம் | — | குமரேச சதகம் |
| முன்னங் குடைபோல் | — | தண்டியலங்கார மேற்கோள் பாடல் |
| எண்ணரிய | — | கம்பராமாயணம். |

## 11. வந்தனை செய்வோம்

பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடப்பட்ட பாடல்கள் தமிழில் பலவுண்டு. ஊன்கலந்து உயிர் கலந்து உவட்டாமல் இனிக்கக் கூடிய அத்தகைய பக்திப் பாடல்கள் இசையுடன் பாடத்தக்க வகையில் அமைக்கப்பட்டிருப்பது இன்னொரு சிறப்பு. காலையில் எழுந்தவுடன் பக்தர்களுக்கு இறையருளை எடுத்துரைக்கும் வண்ணம் அருள் ததும்பும் பாடல்களை அற்புதமான இசையோடு குழைத்துத் தருகிறது வானொலி. பக்தி இலக்கியத்துக்குள் புதைந்து கிடக்கும் தமிழ் மொழியின் இனிமை, ஆற்றல், அழகு, அத்தனையும் வானொலியில் இசை வெள்ளமாய்ப் பொங்கும்போது அள்ளிப் பருக, ஆனந்தத்தில் உருக ஆசைப்படாதார்

யாருண்டு? நமது இளைய தலைமுறையினருக்கு பக்தி இலக்கியத்தை அறிமுகம் செய்து வைக்கும் பெரும் பணியில் முதலிடம் வகிப்பது வானொலி என்றால் மிகையில்லை. சமய வேறுபாடு இன்றி இந்து, கிறித்து, இஸ்லாமிய இலக்கியங்களில் பக்திப் பாடல்களை வந்தனை செய்வோம் என்ற பகுதியில் ஒவ்வொரு நாளும் ஒலிபரப்புகிறது, சென்னை வானொலி நிலையம். பக்தி மாலை என்ற வடிவத்தில் அந்தப் பணியைத் தினமும் செய்கிறது திருச்சி வானொலி நிலையம். அதுபோலவே பாமாலை, துதிப் பாடல்கள், ஒலிக்கதிர் போன்ற வரிசையில் பாண்டிச்சேரி, கோவை, நெல்லை வானொலி நிலையங்களும் தினமும் பக்தி இலக்கியத்திலுள்ள பாடல்களை இசையோடு இணைத்து மக்களுக்கு வழங்குகின்றன. அவ்வாறு ஒலிபரப்பான பக்தி இலக்கியப் பாடல்கள் சில :

| | | |
|---|---|---|
| உம்பர்கட்கரசே | — | திருவாசகம் |
| மாணிக்க நகம் | — | அழகரந்தாதி |
| வளையார் பசியின் | — | பட்டினத்தார் |
| ஒன்று தெய்வம் | — | நாயக மான்மியம் |
| பூத்தான் | — | தேம்பாவணி |
| அருமறை | — | சீறாப்புராணம் |
| முதுசொற் புலவர் | — | மீனாட்சி அம்மை பிள்ளைத் தமிழ் |
| என்னை தேவ | — | ரட்சண்ய யாத்ரீகம் |
| ஒள்ளித் துள்ள | — | சம்பந்தர் |

வந்தனை செய்வோம்

| | | |
|---|---|---|
| அம்பரமே தண்ணீரே<br>உந்து மதகளிற்றன் | — | திருப்பாவை |
| செங்கணவன் பால்<br>அண்ணாமலையான் | — | திருவெம்பாவை |
| குத்து விளக்கெரிய | — | திருப்பாவை |
| உன்கையிற் பிள்ளை | — | திருவெம்பாவை |
| முப்பத்து மூவர் | — | திருப்பாவை |
| போற்றி யருள்க | — | திருவெம்பாவை |
| ஏற்ற கலங்கள் | — | திருப்பாவை |
| என் வாழ் முதலாகிய | — | திருப்பள்ளியெழுச்சி |
| அங்கண் மாஞாலத்து | — | திருப்பாவை |

| | | |
|---|---|---|
| அருணன் இந்திரன் | — | திருப்பள்ளியெழுச்சி |
| மாரி மலை | — | திருப்பாவை |
| கூவின பூங்குயில் | — | திருப்பளளியெழுச்சி |
| அன்றிவ் உலகம் | — | திருப்பாவை |
| இன்னிசை வீணையர் | — | திருப்பள்ளியெழுச்சி |
| ஒருத்தி மகனாய் | — | திருப்பாவை |
| பூதங்கள் தோறும் | — | திருப்பள்ளியெழுச்சி |
| மாலே மணிவண்ணா | — | திருப்பாவை |
| பப்பற வீட்டிருந்து | — | திருப்பள்ளியெழுச்சி |
| கூடாரை வெல்லும் | — | திருப்பாவை |
| அது பழச்சுவை யென | — | திருப்பள்ளியெழுச்சி |
| கறவைகள் பின் சென்று | — | திருப்பாவை |
| முந்திய முதல் நடு | — | திருப்பள்ளியெழுச்சி |
| சிற்றஞ்சிறு காலே | — | திருப்பாவை |
| விண்ணகத் தேவரும் | — | திருப்பள்ளியெழுச்சி |
| வங்கக் கடல் கடைந்த | — | திருப்பாவை |
| பல்லாண்டு | — | திருப்பல்லாண்டு |
| பெருந்தேனிறைக்கும் | — | மீனாட்சியம்மைப் பிள்ளைத் தமிழ் |
| துதிமலர் தொகுப்பு நிகழ்ச்சி | — | மீ. ப. சோமு |
| பெருகும் புனல் | — | திருஞானசம்பந்தர் |
| தடவரையின் மீதே | — | நாச்சியார் திருமொழி |
| இந்த உபகாரம் | — | வேதநாயகம்பிள்ளை பாடல் |
| திமிர உத்தி | — | திருப்புகழ் |
| சிலம்பினிடை | — | திருமங்கையாழ்வார் |
| ஆண்டருளே | — | வேதநாயகம்பிள்ளை |
| வடமலை | — | திருவரங்கத்தந்தாதி |
| நினைந்து நினைந்து | — | அருட்பா |
| கன்னி பாலனாய் | — | ரட்சண்ய யாத்திரீகம் |
| எந்தையே | — | கசரத் ஞானியார் சாகிப் ஒலியுல்லா |
| எங்கும் நிறைந்த | — | அபயாம்பிகை சதகம் |
| ஆமையாகி | — | திருமங்கையாழ்வார் |
| உலகம் யாவையும் | — | கம்பர் |
| முத்தை நவமணியை | — | மஸ்தான் சாகிப் |
| அருணகிரிநாதர் பாமாலை தொகுப்பு | — | மீ. ப. சோமு |

பல சமயங்களைச் சேர்ந்த பக்தி இலக்கியப் பாடல்களை ஒரே தொகுப்பில் தினமும் ஒலிபரப்புவதன் மூலம் சமய ஒற்றுமை உணர்வை மக்களிடையே வளர்ப்பதில் வானொலி பெரும்பங்கு வகிக்கிறது. சமயப் பெரியோர்கள் பக்தி இலக்கியத்தின் மூலம் தமிழை அன்று வளர்த்தார்கள். இன்று அத்தகைய பாடல்களை இசையோடு குழைத்து மக்களுக்கு வழங்கி இறை உணர்வையும் தமிழ் மொழியையும் வளர்க்கிறது வானொலி.

## 12. தமிழிசை

இசைக் கச்சேரி என்றாலே அது கர்நாடக இசையே தான் என்றிருந்த நிலைமையை மாற்றி தமிழிசையின் பெருமையினை வலியுறுத்தி வளப்படுத்திய பெரியவர்கள் பலருண்டு. அவர்களின் சீரிய தொண்டின் மூலம் தமிழிசை இப்போது தலைநிமிர்ந்து நிற்கிறது. வானொலியும் தமிழிசைக்குத் தகுந்த இடத்தைக் கொடுத்து வருகிறது, என்பது மகிழ்ச்சிக்குரிய செய்தி. அதன் மூலம் தமிழிசை மேலும் பெருமை பெற வாய்ப்பு ஏற்படுகிறது தமிழிசைக்கென்று தனி நேரத்தையே ஒதுக்கிச் சிறப்புச் செய்கின்றது திருச்சி வானொலி நிலையம். மற்ற வானொலி நிலையங்கள் ஒலிபரப்பும் தமிழ் மணம், துதிப்பாடல்கள், பக்தி மாலை போன்ற நிகழ்ச்சிகள் மூலம் தமிழ்ப் பண்கள் போற்றிப் பாதுகாக்கப்படுகின்றன.

## 13. சான்றோர் வாக்கு

மக்கள் சமுதாயம் மலர்ச்சியுறப் பாடுபட்ட மாபெரும் அறிஞர்களின் எண்ணக் கருவூலங்களை, இதயத்தின் வெளிப்பாடு களை ஆராய்ந்து அதன் சாரத்தைப் பிழிந்து மக்களுக்கு வழங்கும் சீரிய பணியாக சென்னை வானொலி நிலையம் தினமும் காலையில் சான்றோர் வாக்கு என்ற சிற்றுரையை ஒலிபரப்புகிறது. நம் நாட்டுப் பெரியவர்கள் மட்டுமின்றி அயல்நாட்டு அறிஞர்களின் ஆன்ற மொழிகளைத் தகுந்த விளக்கங்களோடு சொல்வதால் மக்களுக்கு அதிகாலைப் பொழுதிலேயே நல்ல நூலொன்றைப் படித்த உணர்வு ஏற்படுகின்றது. சிந்தனை அமுதம், அறநெறி போன்ற தலைப்புகளில் இது போன்ற நிகழ்ச்சிகள் தமிழகத்தின் பிற வானொலி நிலையங்களிலிருந்தும் ஒலிபரப்பாகின்றன.

இதன் மூலம் பிறநாட்டு அறிஞர்களும் சான்றோர்களும் தமிழ் மொழிக்கு அறிமுகம் செய்துவைக்கப்படுகிறார்கள். தமிழ்

தமிழ் மொழியும் தனது வளர்ச்சியை மேலும் விரிவாக்கிக் கொள்கிறது. மதவேறுபாடின்றி எல்லா சமயத்தைச் சேர்ந்த பெருமக்களின் சிந்தனைகளும் இந்தப் பகுதியில் அழகுறச் சொல்லப்படுகின்றன.

ஏசுபிரான் பொன்மொழிகள்
அவ்வையார் சிந்தனைகள்
முகம்மதுநபி பெருமான் சிந்தனைகள்
பாரதிதாசன் சிந்தனைகள்
அக்பர் சிந்தனைகள்
திலகர் சிந்தனைகள்

## 14. குறள் நெறி

உலகப் பொதுமறையாகும் தகுதியினைப் பெற்ற வான்புகழ் வள்ளுவம், தமிழுக்குக் கிடைத்த அரும் புதையல். அதன் நயத்தினை, கருத்தினை, வழிகாட்டுதல் முகமாக தினமும் வானொலியில் குறள்நெறி விளக்கம் கூறப்பெறுகிறது.

## 15. காந்தி அஞ்சலி

அரசியல் விடுதலைக்காக மட்டுமின்றி சமுதாய விழிப்புணர்ச்சிக்காகவும் ஆன்மீக மேம்பாட்டிற்காகவும் அயராது பாடுபட்டவர் அண்ணல் காந்தியடிகள். ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் காலையில் காந்தி அஞ்சலி என்ற நிகழ்ச்சியின் மூலம் தமிழகத்தின் எல்லா வானொலி நிலையங்களும் பாண்டிச்சேரி வானொலி நிலையமும் காந்தியடிகளின் உன்னதக் கருத்துகளை மக்களுக்கு எடுத்தியம்பி வருகின்றன. காந்தியச் சிந்தனைகள் தமிழரோடு கலக்கும் போது தமிழரின் செழுமையில் மேலும் மெருகேறுகிறது.

## 16. வானொலித் தொகுப்பு

வானொலி நிலையத்தினர் தாங்களாகவே திட்டமிட்டு ஒலி பரப்பும் நிகழ்ச்சிகள் தவிர அவ்வப்போது வெளியிடங்களில் நடைபெறும் கருத்தரங்கம், கவியரங்கம், பட்டிமன்றம், இலக்கியச் சொற்பொழிவுகள் போன்றவற்றை ஒலிப்பதிவு செய்து வந்து அதனைத் தொகுத்து, பின்னர் ஒலிபரப்புகின்றனர். பொது நிகழ்ச்சிகளை நேரடியாகச் சென்று பார்த்து மகிழ முடியாதவர்களுக்கு இத்தகைய வானொலித் தொகுப்புகள் ஒரு வரப்

பிரசாதம். இதில் இன்னொரு சிறப்பு என்னவென்றால், பொது நிகழ்ச்சிகளில் சொல்லப்பட்ட சிறப்பான கருத்துகளை மட்டும் தொகுத்துக் குறுகிய நேரத்தில் கொடுப்பதுதான். செழுமையான தமிழில் அந்த நிகழ்ச்சிகளுக்குத் தொகுப்புரை அமைக்கப்பட்டு அவை ஒலிபரப்பாகும் போது தமிழில் அது ஒரு புதிய வடிவமாகவே அமைந்துவிடுகிறது. அந்த வகையில் 1981-ஆம் ஆண்டில் ஒலிபரப்பான வானொலித் தொகுப்பு நிகழ்ச்சியில் முக்கியமானவை சங்கம் வைத்து தமிழ் வளர்த்த மதுரையில் நடைபெற்ற ஐந்தாவது உலகத்தமிழ் மாநாட்டு நிகழ்ச்சிகள் தொகுப்பைக் குறிப்பிடலாம். ஒவ்வொரு நாளும் நடைபெற்ற பல்வேறு நிகழ்ச்சிகள் உடனுக்குடன் தொகுத்து ஒலிபரப்பப்பட்டன.

அதுபோலவே புரட்சிக் கவிஞன் பாரதியின் நூற்றாண்டு விழாவின் தொடக்க விழா, அவன் அவதரித்த எட்டையபுரம் மண்ணில் சிறப்புற நடைபெற்றபோது அந்த நிகழ்ச்சிகளையும் வானொலி தொகுத்து வழங்கியது, வானொலி மூலம் தமிழ் பெறும் வளர்ச்சிக்கு இவையும் ஓர் எடுத்துக்காட்டு.

## 17. பாரதி

19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் அவதரித்து 20-ஆம் நூற்றாண்டில் இணையற்று விளங்கிய மாபெரும் கவிஞர் பாரதி. இன்றும் என்றும் ஈடில்லா படைப்பாகத் திகழ்ந்து மக்களுக்கு உணர்ச்சியூட்டி ஒளிகாட்டும் ஒப்பற்றகவிதைகள் அவனுடையவை. அக்கவிதைகளைத் தற்காலத் தலைமுறையினர் மனதில் பதிய வைப்பதில் வானொலியும் தனது ஒப்பற்ற பங்கினை ஆற்றி வருகிறது. மெல்லிசைப் பகுதியில் பாரதியின் பாடல்கள் பல, திரைப்படத் துறையில் பிரபலமான பாடகர்களைக் கொண்டும், வேறு சில இசைக் கலைஞர்களைக் கொண்டும் சிறப்பான இசையமைப்பில் பதிவு செய்யப்பட்டு அவ்வப்போது ஒலிபரப்பாகின்றன. கல்வி ஒலிபரப்பில் பாரதியார் பாடல்கள் சிலவற்றை இசையோடு பாட மாணாக்கர்களை ஊக்குவிக்கும் வகையில் பாடற் பயிற்சி முறை செயல்படுகிறது. இசையமைப்பாளர் திரு. எம். பி. சீனிவாசன் தலைமையில் செயல்பட்ட வானொலி பாடற் குழு பல பாரதியார் பாடல்களைப் புதுமையான முறையில் இசையமைத்துப் பல வகையான குரல் வண்ணங்களோடு மக்களுக்கு வழங்கியது.

தமிழ் நாட்டிலுள்ள வானொலி நிலையங்கள் பாரதி பற்றிய கவியரங்கம், கருத்தரங்கம் எனப் பல நிகழ்ச்சிகளை ஒலிபரப்பு கின்றன. திருச்சிராப்பள்ளி வானொலி நிலையத்தில் பாரதி தரிசனம் என்ற சிறப்பு நிகழ்ச்சியே தொடங்கப்பட்டு தினமும் காலை 7. 00 மணி முதல் 7-15 வரை ஒலிபரப்பாகிறது பாரதியார் கட்டுரைகளுக்கும், சுயசரிதை போன்றவற்றிற்கும் விளக்கங்கள் கொடுக்கப்படுகின்றன.

திருச்சிராப்பள்ளி வானொலி நிலையம், பாரதி நூற்றாண் டினை யொட்டி சிறப்பு இசைக் கலை நிகழ்ச்சியினை நடத்தியது. பாண்டிச்சேரி வானொலி நிலையத்திலிருந்து சொல் புதிது சுவை புதிது என்ற இலக்கிய ஏடு ஒலிபரப்பாயிற்று.

பாரதியாரின் பேத்தியான லலிதா பாரதி, பாரதியாரின் வாழ்க்கை பற்றியும், கவிதைகள் பற்றியும் உணர்ச்சியோடு பாடிக் கொண்டே ஆற்றிய இலக்கியப் பேருரை சென்னை, வானொலியி லிருந்து ஒலிபரப்பாயிற்று பாரதியின் நூற்றாண்டு விழாவை யொட்டி மாதந்தோறும் ஏற்பாடு செய்யப்பட்ட தொடர் சொற் பொழிவில் முதல் நிகழ்ச்சி இது.

மாடும் மானுடனும், குயிலும் குரங்கும் ஆகிய நான்கு கதாபாத்திரங்களின் நடையில், நயமான காவியம் செய்த மகாகவி யின் கற்பனையை இசை ஓவியமாக அமைத்து வழங்கியது கோவை வானொலி நிலையம்.

பாட்டுக் குயில்கள் - பாரதியார் பற்றிய சிறப்புக் கவியரங்கம், பாரதியார் குயிற்பாட்டு பாடிய குயிற்சோலைக்கு அருகில் ரசிகர்கள் முன்னிலையில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த இக்கவியரங் கத்தை பாண்டிச்சேரி நிலையம் ஒலிபரப்ப, தமிழகத்தின் பிற வானொலி நிலையங்கள் அஞ்சல் செய்தன.

திருநெல்வேலி வானொலி நிலையத்திலிருந்து பாடிவந்த நிலா என்ற சிறப்புச் சித்திரம் ஒலிபரப்பாயிற்று;

## முடிவுரை

விரைவான முன்னேற்றம் கண்டு வரும் உலகியல் நிகழ்ச்சி களோடு இணைந்து, பல துறைகளிலும் கிளை பரப்பி நாளும் வளர்ந்து வருகிறது நம் தமிழ். பல்வேறு நிகழ்ச்சிகள் மூலம் வானொலியும் வண்ணத் தமிழுக்கு வனப்புச் சேர்க்கிறது என்பதில் ஐயமில்லை.

# 35. வானொலி நாடகம்

## பட்டுக்கோட்டை குமாரவேல்

நல்ல கருத்துகளை உள்ளடக்கிய நாடகங்களை வானொலி ஒலி பரப்பி வருகிறது. வானொலி நாடகங்கள் பண்பாட்டை வளர்ப்பன; புதுமை இல்லாமல் போனாலும் புனிதம் கெடாமல் இருந்தால் போதும் என்னும் வேலிக்குள் வளரும் பூஞ்செடிகள். இலட்சியங்களுக்காகப் பாடு படுவதோடு புதிய இலட்சியங்களையும் அவை உருவாக்கி வருகின்றன. இவற்றை 81-இல் ஒலிபரப்பான வானொலி நாடகங்கள் உணர்த்தி நிற்கின்றன.

மனித வாழ்க்கையின் பிரதிபலிப்புகளை நாடகங்களாக வானொலி நிலையங்கள் ஒலிபரப்பி வருகின்றன. கலையின் எல்லா அம்சங்களும் வானொலி நாடகத்தில் நிறைந்திருக்கின்றன. இயல், இசை, நாடகமான முத்தமிழும் நிறைந்திருப்பது வானொலி நாடகத்தில்தான். கற்பனை, உணர்ச்சி, பேச்சுத்திறமை, இசை எனப் பலவும் வானொலி நாடகத்தில் இடம் பெறுகின்றன.

ஒரு கருத்தை மக்கள் உடனே புரிந்து கொள்ள வைப்பதற்கு கட்டுரை, சிறுகதை, நாவல் ஆகியவற்றைவிடச் சிறந்த சாதனம் வானொலி நாடகமே.

பத்திரிக்கையில் எழுதும் நாடகத்தைப் படிக்கும் வாசகர்கள் புரிந்து கொள்ளும்படி ஆசிரியர் எழுதவேண்டும். மேடை நாடகத்தை, மேடையில் கதாபாத்திரங்களை நிறுத்தி உணர்ச்சி பாவங்களைக் காட்டி, பேசி நடிக்கும்படி எழுத வேண்டும். திரைப் படங்களில் பேச்சைக் குறைத்து உணர்ச்சி பாவங்களுக்கு முக்கியத் துவம் கொடுத்து எழுத வேண்டும். ஆனால் வானொலி நாடகம் எழுதும் ஆசிரியர் மேற்சொன்ன மூன்று வகை நாடக உத்தி களையும் உணர்ந்து, அத்தனை உத்திகளையும் குரல் வடிவில்

நேயர்களுக்கு அவர் எழுதப் போகும் காட்சியைக் கொண்டு வந்து நிறுத்தி அந்தக் காட்சியை ஒலிவடிவில் எப்படி மக்களுக்குச்சொல்லி மகிழ்விக்க முடியும் என்று அனுபவித்து, சிந்தித்து எழுதவேண்டும்.

இந்தக் காலத்தில் வானொலி நாடகம் ஒன்றுதான் தங்கள் குடும்பத்தாரோடு கேட்டு மகிழச் செய்கிறது எனலாம். மேடையில் திரைப்படத்தில் காணும் பாலுணர்ச்சிகளுக்கோ, வன்முறைச் செயல்களுக்கோ வானொலி இடம் கொடுக்காமல் நாடக இலக்கியப் பண்பாட்டோடு நல்ல கருத்துள்ள நாடகங்களை ஒலி பரப்புகிறது. எவர் மனதையும் புண்படுத்தாத வகையில், நல்ல கருத்து, வசனம் ஆகியவற்றை உள்ளடக்கிய நாடகங்களை வானொலி நிலையங்கள் ஒலிபரப்புகின்றன.

வானொலிநாடகங்கள் பண்பாட்டை வளர்க்கும் நாடகங்கள். புதுமை இல்லாமல் போனாலும் புனிதம் கெடாமல் இருந் தால் போதும் என்னும் வேலிக்குள் வளரும் பூஞ்செடிகள். நாடக இனத்திலேயே ஜனநாயகத் தன்மை நிரம்பியது. வானொலி நாடகங்களில் சமுதாயக் களியாட்டங்களோ, கசப்போ இடம் பெறுவதில்லை. இலட்சியங்களுக்காகப் பாடுபடுவதோடு, புது இலட்சியங்களையும் அவை தோற்றுவித்துக் கொண்டிருக்கின்றன.

## வானொலி நாடகத்தின் தோற்றமும் வளர்ச்சியும்

1938-ஆம் ஆண்டு சென்னையில் வானொலி நிலையம் துவங் கியது. 1939-ஆம் ஆண்டில் திருச்சி நிலையம் இயங்க ஆரம் பித்தது. வானொலி நிகழ்ச்சிகளை முன்னதாக ஒலிப்பதிவு செய்யும் ஒலிப்பதிவு நாடாக்கள் அப்போது இல்லை. நேரிடை யாகவே நிகழ்ச்சிகளை ஒலிபரப்ப வேண்டிய சூழ்நிலை அப்போது வானொலியில் நாடகங்களை அமைப்பது பெரும் ஆராய்ச் சிக்குரியதாக இருந்தது.

முதலில் சிறுகதைகளை நாடகமாக்கினார்கள். அடுத்து நாவல்கள் நாடகங்களாயின. பழம் பெரும் காவியங்களின் காட்சி களைப் பிறகு நாடகமாக்கினார்கள்.

இசைப்பாடல்களை உரையாடல்களோடு இணைத்து அவற் றையும் நாடகமாக்கினார்கள். அதற்கு முன் வானொலி நாடகத் திற்கான மாதிரி அமைப்பு கிடையாது. ஆதலால், நிலையத்தில் உள்ள எழுத்தாளர்களெல்லாம், அவர்கள் மனதில் ஏற்படும் உத்திக்குப் பட்டவைகளையெல்லாம் நாடகமாக்கி அன்றாடம் மக்கள் பேசும் மொழியில் ஒலிபரப்பினார்கள்.

மக்கள் அந்நாடகங்களை வரவேற்கவே வானொலிநாடகத்தை ஒலிவடிவில் மேலும் மக்களைக்கவரும் வண்ணம் எப்படி உருவாக்குவது என்று திட்டமிட்டார்கள். கதை-காட்சி அமைப்பு-இடம்-காலம்-சம்பவம்-காட்சிகளுக்குத் தேவையான ஒலிக்குறிப்புகள் உணர்ச்சிக் குறிப்புகள் இவைகளைக் குறித்துக் கொண்டு நாடகப் பிரதியைப் பார்த்துப் படித்து நடிக்கக் கற்றுக் கொடுத்தார்கள்.

பலதரப்பட்ட மக்களுக்கும் புரியும் பேச்சுத் தமிழில் வானொலி நாடகங்களை எழுதத் துவங்கினார்கள். நிலைய எழுத்தாளர்களை அமைத்துக்கொண்டும், சிலபெரிய எழுத்தாளர்களை அணுகி நீங்களெல்லாரும் எழுதினால் வானொலி நாடகத்திற்கு உயர்வும், புகழும் ஏற்படும் என்று எழுதச் சொல்லியும் வானொலி நாடகத்தின் தரத்தைஉயர்த்தி ஒலிபரப்பினார்கள்.

புகழ் பெற்ற நகைச்சுவை மன்னன் கலைவாணர் N.S. கிருஷ்ணன் போன்றவர்கள் வானொலி நாடகங்களினால் மக்களுக்கு நல்ல கருத்தைச் சொல்லலாம், நாடக நடிகர்களுக்கும் சிரமமில்லை என்று உணர்ந்து நாடகமும் எழுதி நடிக்க வந்தார்கள். அதன் பிறகுதான் M. K தியாகராஜ பாகவதர் போன்ற நடிகர்கள் பங்கு பெற வந்தார்கள். திருச்சி வானொலியில், திரைப்பட இயக்குனர் ASA சாமி எழுதி M. K. தியாகராஜ பாகவதர் நடித்த ''பில்ஹணன்'' என்ற வானொலி நாடகம் அதன்பிறகு திரைப்படமாக வெளிவந்தது குறிப்பிடத்தக்கது.

ஐம்பது ஆண்டுகளாக ஒலிபரப்பப்படும் வானொலி நாடகங்களை ஆராய்ந்து பட்டம் பெறுகிறார்கள். பல்கலைக் கழக நாடகப் பிரிவில் இப்பொழுது வானொலி நாடகமும் முக்கிய அங்கம் வகிக்கிறது.

வானொலி நாடகங்கள் பல ஞான பீட விருதைப் பெற்றிருக்கின்றன. 'தின்கர்' என்ற ஹிந்திக் கவிஞரால் முதலில் வானொலிக்காக எழுதப்பட்ட ஒரு கவிதை நாடகம் பின்னால் அவராலேயே விரிவாக்கப்பட்டு பாரதீய ஞானபீடப் பரிசைப் பெற்றது.

ஞானபீடப் பரிசு பெற்ற எழுத்தாளர் அகிலனின் சித்திரப் பாவை என்ற நாவல் அகிலபாரத நாடகமாக்கப்பட்டு பதினெட்டு இந்திய மொழிகளில் ஒலிபரப்பாகி மக்களால் பாராட்டுப் பெற்றது. எல்லா மொழிகளிலும் வானொலி நாடகம் இலக்கிய அந்தஸ்தைப் பெறுவதற்கு முயன்று கொண்டிருக்கிறது.

பல வானொலி நாடகங்கள் மேடை நாடகங்களாகவும் திரைப்படங்களாகவும் ஆகியிருக்கின்றன.

## குழந்தைகளுக்கான நாடகங்கள்

சென்னை வானொலியில் சிறுவர்களுக்கான நாடகங்கள் அமைத்து வழங்கி வருபவர் ''வானொலி அண்ணா'' என்று அழைக்கப்படும் திரு. கூத்தபிரான் அவர்கள்.

குழந்தைகளுக்கு என்று எழுதப்படும் நாடகங்களில் அன்பு, கருணை, தயை, பக்தி, வீரம், உதவும் மனப்பான்மை, எண்ணிய முடிதல் வேண்டும், தேசபக்தி, தெய்வபக்தி முதலியவை முக்கிய மான கருப்பொருளாக அமைதல்வேண்டும். கூறப்படும் கருத் துக்கள், குழந்தைகள் உள்ளத்தில் பச்சை மரத்தில் அடித்த ஆணி போல் பதிய வேண்டும் என்பது மிகவும் இன்றியமையாதது.

வானொலியில் ஆண்டு தோறும் கோடை விடுமுறை நாட் களில் சிறுவர் நாடகவிழா ஒன்றினை நடத்தி வருகிறார்கள். 1981இல் நான்கு நாடகங்கள் ஒலிபரப்பாயின. இளசை எஸ். சுந்தரம் அவர்கள் எழுதிய புதிய தளிர்கள் நாடகம் அவற்றில் சிறப்பானது. இளம் தளிர்கள்—அதாவது, குழந்தைகள், சிறுவர்கள்—துணிந்து பெற்ற தாயாகயிருந்தாலும் தவற்றைக் கண்டிக்கவும், குற்றம் குற்றமே என்பதை எடுத்துக் காட்டும் துணிச்சலை வலியுறுத்தும் வகையில் இந்நாடகம் அமைந் திருந்தது.

குழந்தைகளுக்கென ஒலி பரப்பாகும் நாடகங்களில் செவிக்கு விருந்தையும், அறிவுக்கு நல்ல கருத்தையும் இணைத்து வழங்கு கிறார்கள்.

## 1980-இல் ஒலிபரப்பான நாடகங்களில் குறிப்பிடத் தக்கவை

வானொலி கிராம நிகழ்ச்சிகளில் நாடகங்கள் நடத்தியே ''பசுமைப்புரட்சி'' செய்து இந்திய அரசின் பாராட்டுப்பெற்ற நிலையம் திருச்சி வானொலி நிலையம்.

பயிர்களும், அதை அழிக்கவரும் பூச்சிகளும். அவைகள் மத்தியில் அகப்பட்டுத் திண்டாடும் விவசாயப் பெருமக்களும் பயிர் பாதுகாப்பு நாடகங்களின் கதாபாத்திரங்களாகி விடுகிறார்கள்.

விவசாயம், கால் நடை வளர்ச்சி, கூட்டுறவு, மீன்வளம், மன இயல் போன்ற கருத்துகளை மையமாக வைத்துப் பண்ணை இல்லப் பிரிவில் திருநெல்வேலி வானொலி நிலையம் சிறந்த நாடகங்களை எண்பத்தி ஒன்றாம் ஆண்டில் ஒலிபரப்பியிருக்கிறது.

கரை ஏறாத அலைகள் என்ற நாடகம் தூத்துக்குடியில் வாழும் மீனவர்கள் வாழ்வைப் பின்னணியாகக் கொண்டு எழுதப் பட்டது. குடிப்பழக்கம் மீனவர்கள் வாழ்வை எப்படிப் பாழடிக் கிறது என்று எடுத்துக்காட்டப்பட்டுள்ளது.

தூத்துக்குடியில் சினிமா கொட்டகை தீப்பிடித்து எரிந்து பல உயிர்களைப் பலி வாங்கிய உண்மை நிகழ்ச்சி இந்தக் கதையின் பின்னணியாக அமைக்கப்பட்டுள்ளது.

இது இலையுதிர்காலம் காலத்திற்கேற்றபடி விவசாயிகள் பயிர்ப் பாதுகாப்புக் கருத்துகளை மாற்றிக் கொள்ள வேண்டும் என்று வலியுறுத்தும் நாடகம். அதே நேரத்தில் வாழ்க்கைச் சம்பிரதாயங்களையும் அவசியப்படும்போது மாற்றிக் கொள்ள வேண்டும் என்ற புரட்சிக் கருத்தையும் நாடகம் வலியுறுத்தியது.

சென்னை வானொலியில் 1981-இல் ஒலிபரப்பான நாடகங்கள் சுமார் நூற்று அறுபத்தைந்து. இவற்றில் பதினைந்து நிமிட நாடகங்கள்—முப்பது நிமிட நாடகங்கள். அறுபது நிமிட நாடகங்கள் ஆகியவை அடங்கும்.

இவற்றில் ஆறு அகில பாரத நாடகங்கள் ஒலிபரப்பாயின. அவற்றில் சிறந்த நாடகமாகக் கோமதி தமிழாக்கம் செய்த கிலி என்ற காஷ்மீரி மொழி நாடகம் விளங்கியது. மல்லிகைக் கண்ணன் எழுதிய இப்படிக்கு எழிலரசி என்ற தமிழ் நாடகம் அகிலபாரத நாடகமாகப் பதினெட்டு மொழிகளில் மொழிபெயர்ப்புச் செய்யப் பெற்று ஒலிபரப்பானது.

கிலிதூரி என்ற காஷ்மீரி மொழி நாடகம் ஹ்ருதப் கௌல் பாரதி என்பவரால் எழுதப்பெற்றது. 1980ஆம் ஆண்டுக்கான அகில இந்திய வானொலி நாடகப் போட்டியில் மய்னா ஸம்வாத் என்ற அஸ்ஸாமிய மொழி நாடகத்துடன் இணையாக இரண்டாவது பரிசு கிடைத்தது. இந்த நாடகம் 1981ஆம் ஆண்டு ஜூன் 25ஆம் தேதி அகில பாரத நாடகமாக ஒலிபரப்பப்பட்டது.

ஏழு, எட்டு வயதுடைய இரு சிறு குழந்தைகளை மட்டுமே பிரதான பாத்திரங்களாகக் கொண்டு எழுதப்பட்ட நாடகம் இது. மாற்றலாகி அண்டை வீட்டுக்குக் குடிவந்த ஒரு குடும்பத்துச்

சிறுமியுடன் ஒரு சிறுவனுக்கு நட்பு ஏற்படுகிறது. மறுபடியும் அந்தக் குடும்பம் மாற்றலாகிப் போகும் வரை நாடகம் நடக்கிறது.

இந்தச் சிறிய வட்டத்துக்குள் குழந்தை உலகத்தின் ஓர் அழகிய ஓவியத்தையே படைத்து அளித்து விட்டார் ஆசிரியர். குழந்தை மனங்களின் களங்கமற்ற ஆசைகள் அவற்றின் அடித்தளத்தில் பிறக்கும் தீர்மானங்கள், பெரியவர்கள் நடவடிக்கைகளால் குழந்தைகள் மனங்களில் ஏற்படும் பாதிப்புகள், பெரியவர்களைப் போல் கௌரவமாய், பகட்டாய் பேசி உண்மை பலவீனங்களை மறைக்க முயலும் சாமர்த்தியம், இவையனைத்துக்கும் அடியில் அழுத்தமாய் இழையோடும் ஒருவெள்ளை வெகுளித்தனம், இவையெல்லாவற்றையும் ஆசிரியர் குழந்தைகளின் நிலைக்கு இறங்கி ஒரு குழந்தையாகவே மாறி மிக அழகாகச் சித்திரித்திருக்கிறார் என்பது தான் இந்த நாடகத்தின் சிறப்பு அம்சம்.

வீட்டில் நேர்ந்த சாவு ஒன்றினை ஒளிந்திருந்து பார்த்ததின் பயனாய், தோட்டத்தில் இறந்து கிடக்கும் புல்புல் குஞ்சை, அம்மா தோய்த்து உலர்த்தியிருக்கும் வெள்ளைக் கைக்குட்டையைத் திருடிக் கொண்டு வந்து போர்த்தி அடக்கம் செய்யும் போதும்; நாடகத்தின் இறுதியில் பிரிந்து செல்லும் தோழிக்கு, அவளுக்குப் பிடித்த தனது கார் பொம்மையைப் பரிசாக அளித்து ''இப்படி விளையாடு, இப்படி, இப்படி'' என்று அதன் சக்கரங்களைத் தரையில் அழுத்தித் தேய்த்தவாறே தனது உள்ளத்தில் பொங்கும் பிரிவாற்றாமையை உள்ளத்திலேயே அடக்கி அழுத்தும் போதும் நாடகத்தைக் கேட்போர் கண்களில் கண்ணீர் நிறைந்து விடும்.

இரு குழந்தைகள் ஒரு நாடகத்தின் உரையாடல்களை நன்கு புரிந்து கொண்டு அரைமணி நேரம் கேட்பவருக்கு அலுப்புத் தட்டாமல் அழுது, சிரித்து, பாவங்களை குரல் நயத்தால் காட்டி நடிப்பது என்பது எளிதான காரியமல்ல. அரைமணிநேரம் நாடகம் நடந்தது தெரியாமல் நம் கவனத்தைக் கவர்ந்ததுதான் இந்த நாடகத்தின் வெற்றிக்குச் சான்று. ஆசிரியரின் எழுத்து, குழந்தைகளின் நடிப்பு இரண்டுமே இந்த நாடகத்தின் வெற்றிக்குக் காரணங்கள்.

மல்லிகைக் கண்ணன் அவர்கள் எழுதிய இப்படிக்கு எழிலரசி என்ற ஒரு மணிநேர நாடகத்தில், ''பண்பற்ற காமுகனாக

வாழ்ந்த துரைசாமி திருமணமாகி ஒரு பெண்குழந்தைக்குத் தந்தையான பின்பும் தன்னைச் சகோதரனாக மதித்த எதிர்வீட்டு நண்பனின் மனைவியைக் கற்பழித்து விடுகிறான். அவனுக்கு அது பழக்க தோஷம். ஆனால் அவளுக்கு......? அவள் தீக்குளித்து உயிர் துறக்கிறாள்.

குற்றவாளி ஊரைவிட்டே ஓடிவிடுகிறான். அவன் திரும்பி வரும்போது அவன் அனாதையாக விட்டுச் சென்ற சிறு பெண் குழந்தையைத் தன் மனைவியின் மரணத்துக்குப் பின் வளர்த்து ஆளாக்கிய புண்ணியவானே எதிர்வீட்டு நண்பன்தான் என்று தெரிய வந்ததும் துரைசாமியின் மனம் துடிக்கிறது. தன் பாவத்தின் கருநிழல் தன்பருவ மகளைப் பற்றிப் பாதித்து விடுமோ என்ற பெரும்பயம் அவன் உள்ளத்தைக் கவ்விக் கொள்கிறது. ஒருவன் எவ்வளவு பெரிய காமுகனாக இருப்பினும் தன் பெண் குழந்தை பருவமடைந்து அவளுடைய கற்பு சூறையாடப் படுவதை விரும்புவதில்லை. பெண்மையின் பெருமையை, ஒழுக்கத்தின் உயர்வை, தன் பாவம் தன் பெண்ணைப் பாதித்து விடுமோ என்று பயந்து நடுங்கும் நேரங்களில்தான் ஒருவன் முழுமையாக உணர்கிறான் என்ற மனோதத்துவ உண்மையை மையக் கருத்தாகக் கொண்டு அமைந்ததுதான் இந்த நாடகத்தின் சிறப்பு அம்சம்.

இப்சன் எழுதிய நாவலைத் தழுவி "தோல்வியின் சந்நிதானத்தில்" நாடகமாக எழுதியவர் G. மாணிக்க வாசகம் இப்சனின் கருத்தும், கதையும் மாறுபடாமல் தமிழில் நாடகமாக்கம் செய்திருந்தார். இது திரு M. K. மூர்த்தியின் தயாரிப்பு.

## தொடர் நாடகங்கள்

பட்டுக்கோட்டை குமாரவேல் எழுதி அமைத்த தொடர் நாடகமான புதிய வேதாளம் எண்பத்தி ஒன்றாம் ஆண்டில் மறு ஒலிபரப்பாகியிருக்கிறது. புதிய நாடகத் தொடராக கறைபடிந்த கரங்கள், கிராமத்துக்கு வாங்க என்ற தலைப்புகளில் ஒலிபரப்பாகியிருக்கின்றன.

சமுதாய விரோதிகளாக நடமாடும் பாத்திரங்களின் குணாதிசயங்களையும், சமுதாயத்தில் அவர்களால் ஏற்படும் கொடுமைகளையும் சித்திரிக்கும் வகையில் புதுமையாக எழுதியிருந்தார் கறை படிந்த கரங்கள் நாடகத்தின் ஆசிரியர் திரு. பொன். பரமகுரு அவர்கள். காவல் துறையில் நடந்த உண்மைச் சம்பவங்களை

வைத்து, தனித்தனி நாடகமாக எழுதியிருந்தார். வானொலி நாடகமாகச் சிறப்பாக அமைத்திருந்தார் T. கணேசன் அவர்கள், இருபத்து நான்கு பகுதிகள் ஒலிபரப்பாகியிருக்கின்றன.

கிராமத்துக்கு வாங்க என்ற நாடகத்தொடர் நகரத்தை நம்பி வாழவந்து, வாழ முடியாமல் தவிக்கும் மக்கள் வாழ்விற்கு வகை சொல்லும் வகையில் ஒலிபரப்பப்பட்டது. பதின்மூன்று ஆசிரியர் களால் எழுதப்பட்டவை. வானொலி நாடக அமைப்பு திரு. பட்டுக்கோட்டை குமாரவேல் அவர்கள்.

பெண்ணாய்ப் பிறந்தவள் நாடகத் தொடர் மறு ஒலிபரப் பாகியிருக்கிறது. பெண்ணாய்ப் பிறந்த ஒவ்வொரு பெண்ணும் திருந்தி சிறப்பான வாழ்க்கை அமைத்துக் கொள்ளும் வகையில் திருமதி லெஷ்மி, திருமதி கோமதி சுப்ரமண்யம், திருமதி லஷ்மி ராஜரத்னம் போன்ற பல பெண் எழுத்தாளர்களைக் கொண்டே எழுதப்பட்ட நாடகங்கள்.

எண்பத்தி ஒன்றாம் ஆண்டில் ஒலிபரப்பான குறிப்பிடத்தக்க சிறந்த நாடகங்களாக, இ.கோவிந்தராஜ் எழுதிய சத்திரபதி சிவாஜி, வரதட்சணைக் கொடுமையை மையமாக வைத்து ரோஷினி ரவிச்சந்திரன் எழுதிய பேசும் மௌனங்கள், டெலி போன் பேசும்போது கேட்கும் பேச்சுக்களை மையமாக வைத்து S. பூமிநாதன் எழுதிய டெலிபோன் மணி அடிக்கிறது, சிறு சேமிப்புத் திட்டத்தை விளக்கும் சிறந்த நாடகமாக N. தயா னந்தன் எழுதிய சின்னச் சின்னக் கைகள், ரவீந்திரநாத் தாகூரின் நினைவாக அவர் சிறுகதையைத் தழுவி T. S. கலியபெருமாள் எழுதிய போஸ்டாபீஸ், கொத்தடிமையின் கொடுமையைச் சித்தி ரிக்கும் சிறந்த ஒரு மணி நேர நாடகமாக லியோ பிரபு எழுதிய கரும்புக்கண்ணு, நடுத்தர வாழ்வு வாழ்ந்த தன் பிள்ளைகள் தன்னைக் காப்பாற்றுவார்கள் என்று நம்பி வாழ்ந்து ஏமாற்ற மடையும் பெற்றோர்களின் நிலைகளைக் கண்முன்னே கொண்டு வந்து நிறுத்திய பட்டுக்கோட்டை குமாரவேல் எழுதிய முழுநேர நாடகமான பூர்த்தி பெறாத ஆசைகள் ஆகியவற்றைக் குறிப்பிட லாம்.

1981 செப்டம்பர், அக்டோபர், டிசம்பர் மாதங்களில் சிறப் பான இடம் பெற்று நேயர்களின் கவனத்தைக் கவர்ந்தது ரேடியோ நாடக விழா.

சென்னை, திருச்சிராப்பள்ளி, பாண்டிச்சேரி, கோயம் புத்தூர், திருநெல்வேலி வானொலி நிலையங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு முழுநேர நாடகங்களை ஒலிபரப்பு செய்தன.

நாடக விழாவில் சென்னை நிலையத்திலிருந்து ஒலிபரப்பான இரண்டு முப்பது நிமிட நகைச்சுவை நாடகங்களில் பரிசுக்குள் பலம் என்ற நாடகத்தை அகஸ்டோவும், விடியும் வரை காத்திரு என்ற நாடகத்தை T.R. முரளி மனோகரும் எழுதி இருக்கிறார்கள்.

ரத்த தானத்தைப் பற்றி G. மாணிக்க வாசகம் எழுதிய உயிர் நிலை என்ற கவிதை நாடகமும், M. S. கோபால் எழுதிய நோய்க்கு இடம் கொடேல் என்ற நகைச்சுவை நாடகமும் நவம்பர் மாதத்தில் மறு ஒலிபரப்புச் செய்யப்பட்ட எழுத்தாளர் மாயாவி எழுதிய இன்பக்கனா ஒன்று கண்டேன் என்ற நாடகமும் ஞாயிற்றுக்கிழமை நாடகமாக ஒலிபரப்பாகின.

விதவைகளின் மறுவாழ்வு பற்றி கவிஞர் S. கருணானந்தம் அவர்கள் எழுதிய மறுமணம் என்ற கவிதை நாடகம் டிசம்பர் மாதத்தில் ஒலிபரப்பப்பட்டது. கதைக் கருத்தும், காட்சித் திருப் பங்களும் மிகச் சிறப்பாய் அமைந்திருந்தன.

## நிறைவுரை

மேற்சொன்ன முறையில், பல்வேறு உத்திகளைக் கையாண்டு மக்களை, வானொலி நாடகங்களைக் கேட்கச் செய்வது வெறும் பொழுதுபோக்கிற்காக மட்டுமன்று. மக்களுக்குத் தேவையான குடும்ப நெறி, சிறு சேமிப்பு, நாட்டுப்பற்று, ஒழுக்கம், பண்பாடு, தேசிய ஒருமைப்பாடு எனப் பல கருத்துகளைப் பிரசாரம் செய் யாமல் நடுவே அவற்றை இழையோடச் செய்து, மக்களைச் சிறந்த குடிமக்களாக மாற்றும் மகத்தான பணியை வானொலி நாடகம் செய்து வருகிறது.

வளர்ந்து வரும் நமது நாட்டில் பட்டி தொட்டிகளில் வாழும், எளிய கிராம மக்கள், நகர்ப்புறத்தில் வாழும் நடுத்தர வர்க்கத் தினர் ஆகிய எல்லாத் தரப்பு மக்களும் கேட்டுப் பயன் பெறத் தக்கது வானொலி நாடகம்.

கௌதம புத்தர், சரிபுட்டா, மொகல்லாறா என்ற தமது இரு சீடர்களையும் அழைத்து, நான் சொல்லும் இக்கருத்தை, நாடெங் கும் சென்று பரப்புங்கள் என்று ஆணையிட்டார். அந்தக் கருத்து,

''பகுறான ஹிதாய, பகுஜன ஸீகாய'', அதாவது 'பெரும் பாலான மக்களின் நலனுக்காக, பெரும்பாலான மக்களின் இன்பத் துக்காக' என்பது ஆகும்.

இக்கொள்கையையே, தனது குறிக்கோளாகக் கொண்டு வானொலி, நாடகங்களை ஒலிபரப்பி வருகிறது எனலாம்.

# பின்னிணைப்பு

## 1981-இல் சென்னை வானொலியில் ஒலிபரப்பப்பட்ட நாடகங்கள்

### 1 பதினைந்து நிமிட நாடகங்கள்

(திங்கள்—சனி இரவு 8 மணி முதல் 8-15 வரை)

| வரிசை எண் | நாள் | தலைப்பு | ஆசிரியர் | வானொலி அமைப்பு | பாத்திரங்களின் எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| 1. | 12- 1-81 | கறை படிந்த கரங்கள் பகுதி-1 | பொன். பரமகுரு | T. கணேசன் | 9 |
| 2. | 14- 1-81 | 'கரும்புவில்' (பொங்கல் விழா) மூன்று நாடகங்கள் | | | |
| | | 1. பாலும் பானையும் | பட்டுக்கோட்டை குமாரவேல் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 13 |
| | | 2. மஞ்சள் கொத்து | வா. பாண்டியஅரசன் | | |
| | | 3. கல்யாண ஜவுளி | இளங்கண்ணன் | | |
| 3. | 17- 1-81 | வேண்டாம் ஆடம்பரம் | வில்லிவாக்கம் சாக்ரடீஸ் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 4 |
| 4. | 19- 1-81 | கறை படிந்த கரங்கள் பகுதி—2 | பொன். பரமகுரு | T. கணேசன் | 9 |
| 5. | 24- 1-81 | விலைபோகும் சிலைகள் | அகஸ்டோ | பட்டுக்கோட்டை குமாரவேல் | 3 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 6. | 31- 1-81 | மணிமேகலை | T. S. கலியபெருமாள் | (மறு ஒலிபரப்பு) | 6 |
| 7. | 2- 2-81 | கறை படிந்த கரங்கள் பகுதி—3 | பொன். பரமகுரு | T. கணேசன் | 7 |
| 8. | 4- 2-81 | போராட்டம் | சுடர்வண்ணன் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 9 |
| 9. | 7- 2-81 | ரசிகை | லஷ்மிராமசாமி | ,, | 4 |
| 10. | 9- 2 81 | கறை படிந்த கரங்கள் பகுதி—4 | பொன். பரமகுரு | T. கணேசன் | 8 |
| 11. | 14- 2-81 | பாலிடால் பரந்தாமன் | ஜெயேந்திரன் | (மறு ஒலிபரப்பு) | 6 |
| 12. | 16- 2-81 | கறை படிந்த கரங்கள் பகுதி—5 | பொன். பரமகுரு | T. கணேசன் | 9 |
| 13. | 21- 2-81 | யானைப்பொம்மை | மலையமான் | பார்வதி இராமநாதன் | 4 |
| 14. | 22- 2-81 | கறை படிந்த கரங்கள் பகுதி—6 | பொன். பரமகுரு | T. கணேசன் | 8 |
| 15. | 28- 2-81 | கடிதம் வந்தது | R. பானு | பட்டுக்கோட்டை குமாரவேல் | 4 |
| 16. | 2- 3-81 | கறை படிந்த கரங்கள் பகுதி—7 | பொன். பரமகுரு | T. கணேசன் | 10 |
| 17. | 7- 3-81 | உயிர்நிலை | G. மாணிக்கவாசகம் | K. V. ஜானகி | 4 |
| 18. | 9- 3-81 | கறை படிந்த கரங்கள் பகுதி—8 | பொன். பரமகுரு | T. கணேசன் | 8 |
| 19. | 14- 3-81 | இனிமேல் குடிக்க மாட்டேன் | D. முத்துசாமி | பட்டுக்கோட்டை குமாரவேல் | 4 |

| வரிசை எண் | நாள் | தலைப்பு | ஆசிரியர் | வானொலி அமைப்பு | பாத்திரங்களின் எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| 20. | 16- 3-81 | கறை படிந்த கரங்கள் பகுதி—9 | பொன். பரமகுரு | T. கணேசன் | 5 |
| 21. | 18- 3-81 | வெள்ளம் | T. கணேசன் | (மறு ஒலிபரப்பு) | 6 |
| 22. | 21- 3-81 | கேரியர் சாப்பாடு | A.V.M. கணேஷ் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 5 |
| 23. | 23- 3-81 | கறை படிந்த கரங்கள் பகுதி—10 | பொன். பரமகுரு | T. கணேசன் | 7 |
| 24. | 30- 3-81 | கறை படிந்த கரங்கள் பகுதி-11 | பொன். பரமகுரு | T. கணேசன் | 8 |
| 25. | 6- 4-81 | கறை படிந்த கரங்கள் பகுதி—12 | பொன். பரமகுரு | T. கணேசன் | 9 |
| 26. | 11- 4-81 | அசுனப் பறவை | பூவரசு | (மறு ஒலிபரப்பு) | 6 |
| 27. | 13- 4-81 | கடன் கேட்காதே | கௌரி ராஜன் | M. K. மூர்த்தி | 4 |
| 28. | 18- 4-81 | டெலிபோன் மணி அடிக்கிறது | S. பூமிநாதன் | வானொலி நாடகப்பயிற்சி இயக்குனர்கள் ஹைதராபாத் (மறு ஒலிபரப்பு). | 6 |
| 29. | 20- 4-81 | இதயப்பரிசு | அறிவுச்சுடர் | பார்வதி இராமநாதன் | 7 |
| 30. | 25- 4-81 | ஒரு நாய் குரைக்கிறது | ஸ்ரீரங்கம் நரசிம்மன் | (மறு ஒலிபரப்பு) | 5 |
| 31. | 27- 4-81 | சின்னச் சின்னக் கைகள் | தயாநந்தன் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 10 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 32. | 2- 5-81 | யதார்த்தங்கள் | சரஸ்காந்தன் | (மறு ஒலிபரப்பு) | 4 |
| 33. | 4- 5-81 | அம்மா இருக்கிறாள் | S. V. நாதன் | T. கணேசன் | 4 |
| 34. | 11- 5-81 | தேடினேன் ஒரு அப்பா | T. ஸ்ரீனிவாசவரதன் | பார்வதி இராமநாதன் | 5 |
| 35. | 16- 5-81 | உலகில் ஊனம் இல்லை | D. கன்னையா | (மறு ஒலிபரப்பு) | 5 |
| 36. | 18- 5-81 | சிபாரிசு சிங்காரம் | ஏர்வாடி இராதா கிருஷ்ணன் | பார்வதி இராமநாதன் | 5 |
| 37. | 23- 5-81 | வக்கீலய்யா | பிருந்தா வரதராஜன் | (மறு ஒலிபரப்பு) | 6 |
| 38. | 25- 5-81 | ஜாடிக்கு ஏற்காத மூடி | R. பொன்னம்மாள் | பார்வதி இராமநாதன் | 6 |
| 39. | 30- 5-81 | வெற்றிக்கு பலி | A.N. பெருமாள் | (மறு ஒலிபரப்பு) | 7 |
| 40. | 1- 6-81 | வேலைக் கூலி | குமரன் | M.K. மூர்த்தி | 7 |
| 41. | 6- 6-81 | மன்னிக்க முடியாதது | P. M. இளங்குமரன் | பார்வதிஇராமநாதன் | 7 |
| 42. | 8- 6-81 | மருமகன், மருமகள் | S.A. ராஜம் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 4 |
| 43. | 15- 6-81 | ஏழை உறவினன் | தூன் | பார்வதிஇராமநாதன் | 6 |
| 44. | 20- 6-81 | விலை போகும் சிலைகள் | அகஸ்டோ | (மறு ஒலிபரப்பு) | 3 |
| 45. | 22- 6-81 | படிப்பும் பதவியும் | கோ. கந்தசாமி | M.K. மூர்த்தி | 5 |
| 46. | 27- 6-81 | நட்பு | பூவை. S. விமலன் | பார்வதி இராமநாதன் | 6 |
| 47. | 29- 6-81 | ஒலியும், கிலியும் | ஸ்ரீரங்கம் நரசிம்மன் | ,, | 4 |
| 48. | 4- 7-81 | உத்தியோக லக்ஷணம் | ஆரூர் கணேஷ் | பார்வதி இராமநாதன் | 5 |
| 49. | 6- 7-81 | நவீன சுயம்வரம் | S. சந்திரசேகர் | M.K. மூர்த்தி | 7 |
| 50. | 11- 7-81 | மணிமேகலை | T.S. கலியபெருமாள் | M.K. மூர்த்தி | 5 |
| 51. | 13- 7-81 | இருமல் குரல் | கோமதி சுவாமிநாதன் | பார்வதி இராமநாதன் | 5 |
| 52. | 18- 7-81 | நேற்றுவரை பாக்கி | அகஸ்டோ | ,, | 5 |

| வரிசை எண் | நாள் | தலைப்பு | ஆசிரியர் | வானொலி அமைப்பு | பாத்திரங்களின் எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| 53. | 20. 7-81 | குற்றம் பறித்த குழி | தூன் | பார்வதி இராமநாதன் | 10 |
| 54. | 25- 7-81 | ரசிகை | லஷ்மி ராமசாமி | (மறு ஒலிபரப்பு) | 4 |
| 55. | 27- 7-81 | கலிங்கத்தில் பாய்ந்த கருணாகரன் | A.N. பெருமாள் | M. K. மூர்த்தி | 10 |
| 56. | 1- 8-81 | யானைப்பொம்மை | மலையமான் | (மறு ஒலிபரப்பு) | 6 |
| 57. | 3- 8-81 | காதலுக்கு ஒரு டெஸ்ட் | வசந்தா சிதம்பரம் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 4 |
| 58. | 8- 8-81 | கடிதம் வந்தது | R. பானு | (மறு ஒலிபரப்பு) | 4 |
| 59. | 10- 8-81 | இருண்ட உள்ளம் | பாலஜானகி | பார்வதி இராமநாதன் | 8 |
| 60. | 17- 8-81 | ரமா ஒரு குழந்தை | M. அசோகன் | பார்வதி இராமநாதன் | 5 |
| 61. | 19- 8-81 | விண்வெளிக்கு அப்பால் (விஞ்ஞான நாடகம்) | S. ராமநாதன் | பார்வதி இராமநாதன் (மறு ஒலிபரப்பு) | 6 |
| 62. | 22- 8-81 | புலவனும் புரவலனும் (கவிதை நாடகம்) | முகவை இராஜமாணிக்கம் | (மறு ஒலிபரப்பு) | 7 |
| 63. | 24- 8-81 | நேரம் நல்ல நேரம் | பரணி கோபு | M.K. மூர்த்தி | 5 |
| 64. | 31- 8-81 | பஸ் பிரயாணம் | M.S. மாறன் | M.K. மூர்த்தி | 7 |
| 65. | 5- 9-81 | எங்க வீட்டுக்கல்யாணம் | S. ஜெகதீசன் | (மறு ஒலிபரப்பு) | 6 |
| 66. | 7- 9-81 | மாணவி ஒரு மழலை | P. வெங்கடாசலம் | M. K. மூர்த்தி | 7 |
| 67. | 12- 9-81 | விபத்துக்கள் | துறைவன் | (மறு ஒலிபரப்பு) | 7 |
| 68. | 14- 9-81 | படும்பாடு | இசைவாணன் | பார்வதிஇராமநாதன் | 5 |
| 69. | 26- 9-81 | கௌரவம் | அம்புலி புத்திரன் | ப. சந்திரமௌலி | 3 |
| 70. | 3-10-81 | கணவன் | M.P. தூரன் | (மறுஒலிபரப்பு) | 4 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 71. | 5-10-81 | சுகமா? சுமையா? | வில்லிவாக்கம் சாக்ரடீஸ் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 5 |
| 72. | 10-10-81 | புதிய டெலிபோன் | திருச்செந்தூரான் | (மறு ஒலிபரப்பு) | 4 |
| 73. | 17-10-81 | எப்படியாவது பணம் | பாலஜானகி | M.K. மூர்த்தி | 4 |
| 74. | 19-10-81 | எப்படிப் புரிய வைப்பது | சரஸ்காந்தன் | ,, | 3 |
| 75. | 24-10-81 | பட்டினத்துப்பக்கம் | R. மாலதி | ,, | 6 |
| 76. | 31-10-81 | ஜீவ சமுத்திரம் | வானம்பாடி | பார்வதி இராமநாதன் | 4 |
| 77. | 2-11-81 | திருமணத்துக்கு ஒரு வரம் | ரா. பாலகிருஷ்ணன் | M. K. மூர்த்தி | 5 |
| 78. | 7-11-81 | உயிர் நிலை (கவிதை நாடகம்) | G. மாணிக்கவாசகம் | K. V ஜானகி | 4 |
| 79. | 9-11-81 | வறட்டுக்கௌரவம் | ஆற்றலரசு | பார்வதி இராமநாதன் | 6 |
| 80. | 14-11-81 | கேரியர் சாப்பாடு | A.V.M. கணேஷ் | (மறு ஒலிபரப்பு) | 5 |
| 81. | 16-11-81 | உதவி | அறிவுச்சுடர் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 6 |
| 82. | 21-11-81 | திருடன் வந்தான் | மல்லிகைக்கண்ணன் | பார்வதி இராமநாதன் | 5 |
| 83. | 23-11-81 | எங்கே நிம்மதி | பாரதிநாதன் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 6 |
| 84. | 28-11-81 | சின்னச் சின்னக் கைகள் | தயானந்தன் | மறு ஒலிபரப்பு) | 5 |
| 85. | 30-11-81 | பார்த்த பலன் | கோமதி சுவாமிநாதன் | பார்வதி இராமநாதன் | 6 |
| 86. | 5-12-81 | அம்மா இருக்கிறாள் | S.V. நாதன் | (மறு ஒலிபரப்பு) | 4 |
| 87. | 7-12-81 | சரவண விஜயம் | N.A. விஜயசாரதி | M. K. மூர்த்தி | 6 |
| 88. | 12-12-81 | பொரிசு சிங்காரம் | ஏர்வாடி இராதா கிருஷ்ணன் | (மறு ஒலிபரப்பு) | 4 |
| 89. | 14-12-81 | மனஊனம் | S. ஜகதீசன் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 4 |
| 90. | 19-12-81 | வீட்டுக்குள்ளே | குமரன் | (மறு ஒலிபரப்பு) | |

## II முப்பது நிமிட நாடகங்கள்

(புதன் — வெள்ளி இரவு 8 மணி முதல் 8-30 வரை)

| வரிசை எண் | நாள் | தலைப்பு | ஆசிரியர் | அமைப்பு | பாத்திர எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| 1. | 16- 1-81 | பெண்ணாய்ப் பிறந்தவள் பகுதி—12 | கோமதி சுப்ரமண்யம் | பார்வதி இராமநாதன் | 7 |
| 2. | 23- 1-81 | பெண்ணாய்ப் பிறந்தவள் பகுதி—13 | லக்ஷ்மி இராஜரத்னம் | பார்வதி இராமநாதன் | 5 |
| 3. | 30- 1-81 | பெண்ணாய்ப்பிறந்தவள் பகுதி—14 | ராஜலக்ஷ்மி ராமமூர்த்தி | ,, | 8 |
| 4. | 6- 2-81 | பெண்ணாய்ப் பிறந்தவள் பகுதி –15 | ராஜம்கிருஷ்ணன் | ,, | 4 |
| 5. | 13- 2-81 | பெண்ணாய்ப் பிறந்தவள் பகுதி—16 | வாரிஜகுமாரி | ,, | 7 |
| 6. | 18- 2-81 | கட்டாயக்கல்யாணம் | துமிலன் (நாடக ஆக்கம் சாக்ரடீஸ்) | பட்டுக்கோட்டை குமாரவேல் | 7 |
| 7. | 20- 2-81 | பெண்ணாய்ப்பிறந்தவள் பகுதி—17 | லக்ஷ்மி | பார்வதி இராமநாதன் | 9 |
| 8. | 27- 2-81 | பெண்ணாய்ப் பிறந்தவள் பகுதி—18 | நித்தியாமூர்த்தி | ,, | 8 |
| 9. | 4- 3-81 | பாதைகள் பிரிகின்றன | மாமூலன் | பொன். துரைசாமி | 7 |
| 10. | 6- 3-81 | பெண்ணாய்ப் பிறந்தவள் பகுதி—19 | கோமதி சுப்ரமண்யம் | பார்வதி இராமநாதன் | 4 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 11. | 13- 3-81 | பெண்ணாய்ப்பிறந்தவள் பகுதி—20 | வாரிஜகுமாரி | பார்வதிஇராமநாதன் | |
| 12. | 20- 3-81 | பெண்ணாய்ப் பிறந்தவள் பகுதி—21 | லக்ஷ்மி ராஜரத்னம் | ,, | 6 |
| 13. | 27- 3-81 | பெண்ணாய்ப் பிறந்தவள் பகுதி—22 | லக்ஷ்மி | ,, | 11 |
| 14. | 1- 4-81 | நினைப்பும் நடப்பும் | செந்தாமரை | M.K. மூர்த்தி | 7 |
| 15. | 3- 4-81 | புதியவேதாளம் பகுதி—1 (தொடர் நாடகம்) | பட்டுக்கோட்டை குமாரவேல் | (மறுஒலிபரப்பு) | 11 |
| 16. | 4- 4-81 | சிவாஜி | E. கோவிந்தராஜ் | பார்வதி இராமநாதன் | 9 |
| 17. | 10- 4-81 | புதியவேதாளம் பகுதி—2 | பட்டுக்கோட்டை குமாரவேல் | (மறுஒலிபரப்பு) | 10 |
| 18. | 15- 4-81 | தேன் தமிழ்ப் பாவை (கவிதை நாடகம்) | நெல்லை கிருஷ்ணன் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 13 |
| 19. | 17- 4-81 | புதிய வேதாளம் பகுதி—3 | பட்டுக்கோட்டை குமாரவேல் | (மறுஒலிபரப்பு) | 10 |
| 20. | 24- 4-81 | புதிய வேதாளம் பகுதி—4 | பட்டுக்கோட்டை குமாரவேல் | (மறுஒலிபரப்பு) | 10 |
| 21. | 29- 4-81 | அழகுப் போட்டி | A. சுவாமிநாதன் | M.K. மூர்த்தி | 11 |
| 22. | 1- 5-81 | புதிய வேதாளம் பகுதி—5 | பட்டுக்கோட்டை குமாரவேல் | (மறுஒலிபரப்பு) | 9 |
| 23. | 6- 5-81 | அன்புக்குப் பழுதில்லை | உமாசந்திரன் | பார்வதி இராமநாதன் | 12 |
| 24. | 8- 5-81 | புதியவேதாளம் பகுதி—6 | பட்டுக்கோட்டை குமாரவேல் | (மறுஒலிபரப்பு) | 8 |

| வரிசை எண் | நாள் | தலைப்பு | ஆசிரியர் | அமைப்பு | பாத்திர எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| 25. | 9- 5-81 | காபூலிவாலா | ரவீந்திரநாத் தாகூர் | (மறுஒலிபரப்பு) | 4 |
| 26. | 15- 5-81 | புதியவேதாளம் பகுதி—7 | பட்டுக்கோட்டை குமாரவேல் | (மறுஒலிபரப்பு) | 9 |
| 27. | 20- 5-81 | பின்னங்கள் | பூவை ராஜசேகரன் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 7 |
| 28. | 22- 5-81 | புதியவேதாளம் பகுதி—8 | பட்டுக்கோட்டை குமாரவேல் | (மறுஒலிபரப்பு) | 10 |
| 29. | 29- 5-81 | புதியவேதாளம் பகுதி—9 | பட்டுக்கோட்டை குமாரவேல் | (மறுஒலிபரப்பு) | 11 |
| 30. | 3- 6-81 | பிடிவாதமே உன்பெயர் | ரவீந்திரபட் (மராத்தி) தமிழாக்கம் கோமதி | பார்வதிஇராமநாதன் | 5 |
| 31. | 5- 6-81 | புதிய வேதாளம் பகுதி—10 | பட்டுக்கோட்டை குமாரவேல் | (மறு ஒலிபரப்பு) | 11 |
| 32. | 12- 6-81 | புதிய வேதாளம் பகுதி—11 | பட்டுக்கோட்டை குமாரவேல் | (மறுஒலிபரப்பு) | 8 |
| 33. | 17- 6-81 | நீதி ஒன்றுதான் | ரா. தயாநிதி | M. K. மூர்த்தி | 6 |
| 34. | 20- 6-81 | அழவிடமாட்டேன் சிரிக்கவைப்பேன் | கூத்தபிரான் | கூத்தபிரான் | 4 |
| 35. | 26- 6-81 | புதியவேதாளம் பகுதி—12 | பட்டுக்கோட்டை குமாரவேல் | (மறுஒலிபரப்பு) | 10 |
| 36. | 1- 7-81 | அம்மாவுக்கு ஓய்வு | நித்தியா மூர்த்தி | பார்வதிஇராமநாதன் | 6 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 37. | 3-7-81 | கிராமத்துக்கு வாங்க பகுதி—1 | S.p.பாலகிருஷ்ணன் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 11 |
| 38. | 10-7-81 | கிராமத்துக்கு வாங்க பகுதி—2 | S.P.பாலகிருஷ்ணன் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 10 |
| 39. | 15-7-81 | அவன் கொண்ட முடிவு | V D சச்சிதானந்தம் | பார்வதிஇராமநாதன் | 7 |
| 40. | 17-7-81 | கிராமத்துக்கு வாங்க பகுதி—3 | S P பாலகிருஷ்ணன் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 5 |
| 41. | 24-7-81 | கிராமத்துக்கு வாங்க பகுதி—4 | ரா. தயாநிதி | பட்டுக்கோட்டை குமாரவேல் | 11 |
| 42. | 29-7-81 | கலக்கல் | ஆற்றலரசு | பட்டுக்கோட்டை குமாரவேல் | 6 |
| 43. | 31-7-81. | கிராமத்துக்கு வாங்க பகுதி—5 | N. வாசுதேவ் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 9 |
| 44. | 5-8-81 | நாரதவடிவு | S. நீலம் | பார்வதிஇராமநாதன் | 9 |
| 45. | 7-8-81 | கிராமத்துக்கு வாங்க பகுதி—6 | N. வாசுதேவ் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 8 |
| 46. | 21-8-81 | கிராமத்துக்கு வாங்க பகுதி—7 | N. வாசுதேவ் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 10 |
| 47. | 2-9-81 | வெகுளி வீராசாமி | அபிராமி | பார்வதிஇராமநாதன் | 9 |
| 48. | 4-9-81 | கிராமத்துக்கு வாங்க பகுதி—8 | ரா. தயாநிதி | பட்டுக்கோட்டை குமாரவேல் | 10 |
| 49. | 11-9-81 | கிராமத்துக்கு வாங்க பகுதி—9 | வாசவன் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 10 |
| 50. | 25-9 81 | கிராமத்துக்கு வாங்க பகுதி—10 | வாசவன் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 7 |

| வரிசை எண் | நாள் | தலைப்பு | ஆசிரியர் | அமைப்பு | பாத்திர எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| 51. | 30-9-81 | பரிமள காந்தி | ராஜம் K. V. ராமமூர்த்தி | பட்டுக்கோட்டை குமாரவேல் | 9 |
| 52. | 2-10-81 | எங்கிருந்தோ வந்தான் பகுதி—1 | T. A துரைராஜ் | M.K. மூர்த்தி (மறு ஒலிபரப்பு) | |
| 53. | 7-10-81 | தப்புக்கணக்கு | P. ராஜாமணி | பார்வதி இராமநாதன் | 7 |
| 54. | | எங்கிருந்தோ வந்தான் பகுதி—2 | பரணிகோபு | (மறுஒலிபரப்பு) | 9 |
| 55. | 16-10-81 | எங்கிருந்தோ வந்தான் பகுதி—3 | ஏகவன் | (மறுஒலிபரப்பு) | 10 |
| 56. | 21-10-81 | அடராவணா | பொன். பரம குரு | T. கணேசன் | 7 |
| 57. | 23-10-81 | எங்கிருந்தோ வந்தான் பகுதி—4 | கோமதி சுவாமிநாதன் | M. K. மூர்த்தி (மறுஒலிபரப்பு) | 10 |
| 58. | 30-10-81 | எங்கிருந்தோ வந்தான் பகுதி—5 | மஹி | M.K. மூர்த்தி (மறுஒலிபரப்பு) | 10 |
| 59. | 4-11-81 | முதல் சந்தர்ப்பம் | S. ராமநாதன் | பார்வதிஇராமநாதன் | 6 |
| 60. | 6-11-81 | எங்கிருந்தோ வந்தான் பகுதி—6 | வாசவன் | (மறுஒலிபரப்பு) | 10 |
| 61. | 13-11-81 | எங்கிருந்தோ வந்தான் பகுதி-7 | பட்டுக்கோட்டை குமாரவேல் | (மறு ஒலிபரப்பு) | 9 |
| 62. | 18-11-81 | கைத்தலம் பற்றி | லஷ்மி ராஜரத்னம் | M. K. மூர்த்தி | 3 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 63. | 19-11-81 | விசாகை | தாமரைக் கண்ணன் | M. K. மூர்த்தி | 6 |
| 64. | 20-11-81 | நோய்க்கு இடம் கொடேல் | M. S. கோபால் | (மறு ஒலிபரப்பு) | 8 |
| 65. | 27-11-81 | நல்லெண்ணத்துக்கு நன்றி | புனிதன் | (மறு ஒலிபரப்பு | |
| 66. | 2-12-81 | ரிப்பேர் | கிரிஷ் பக்ஷி (ஹிந்தி) தமிழாக்கம்:கோமதி | பார்வதி இராமநாதன் | 5 |
| 67. | 4-12-81 | முள்வேலி | A. S. A. சாமி | (மறு ஒலிபரப்பு) | 6 |
| 68. | 11-12-81 | நறுமணம் (கவிதை நாடகம்) | கருணானந்தம் | K. V. ஜானகி | 7 |
| 69. | 16-12-81 | வலிமையின் ரகசியம் | சின்ன ராசு | M. K. மூர்த்தி | 9 |
| 70. | 18-12-81 | மோட்டார் கேரேஜில் முப்பதுநாட்கள் | ரா. தயாநிதி | M. K. மூர்த்தி | 10 |

## III ஒரு மணி நேர நாடகங்கள்

(வியாழன் இரவு 9-30 முதல் 10-30 வரை)

(ஞாயிறு மாலை 3 மணி முதல் 4 மணி வரை)

| வரிசை எண் | நாள் | தலைப்பு | ஆசிரியர் | வானொலி அமைப்பு | பாத்திர எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| 1. | 11- 1-81 | கைகேயி | S. P. பாலகிருஷ்ணன் | M. K. மூர்த்தி | 11 |
| 2. | 15- 1-81 | தேவை ஒரு மகன் | ஸ்ரீரங்கம் நரசிம்மன் | (மறு ஒலிபரப்பு) | 6 |
| 3. | 22- 1-81 | கௌசல்யா (அகில பாரத நாடகம்) | போல பிரகாடு சத்திய நாராயண் தமிழாக்கம்:கோமதி | M. K. மூர்த்தி | 10 |
| 4. | 31- 1-81 | மணிமேகலை | T. S. கலிய பெருமாள் | (மறு ஒலிபரப்பு) | |
| 5. | 19- 2-81 | நடைபாதை ராகங்கள் | மல்லிகைக் கண்ணன் | (மறு ஒலிபரப்பு) | 8 |
| 6. | 19- 3-81 | மனப்பந்தல் | பட்டுக் கோட்டை குமாரவேல் | பட்டுக்கோட்டை குமாரவேல் | 8 |
| 7. | 22- 3-81 | மனுஷ்புத்திரன் | ஜோசப் ஆனந்தன் | T. கணேசன் | 11 |
| 8. | 12- 4-81 | மெழுகுவர்த்தி | புனர்வசு | பார்வதி இராமநாதன் | 14 |
| 9. | 16-4 -81 | நியாயங்கள் தோற்பதில்லை | G. மாணிக்கவாசகம் | M. K. மூர்த்தி | 10 |
| 10. | 23- 4-81 | யகுதி கிலாடிகி | ஆகா கஸ்தர் (உருது) தமிழாக்கம்:கோமதி | M. K. மூர்த்தி | 11 |
| 11. | 10- 5-81 | கரும்புக் கன்று | வியோ பிரபு | T. கணேசன் | 16 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 12. | 21- 5-81 | இப்படிக்கு எழிலரசி | மல்லிகைக் கண்ணன் | M. K. மூர்த்தி | 12 |
| 13. | 24- 5-81 | அவள் தாயாகிறாள் | லக்ஷிமி | (மறு ஒலிபரப்பு) | 11 |
| 14. | 14- 6-81 | பூர்த்தி பெறாத ஆசைகள் | பட்டுக் கோட்டை குமாரவேல் | பட்டுக்கோட்டை குமாரமேல் | 11 |
| 15. | 18- 6-81 | போர்வைகள் | வா. பாண்டியரசன் | (மறு ஒலிபரப்பு) | 15 |
| 16. | 20- 6-81 | கிலி தூரி (காஷ்மீரி) | ஹிருதய் கவுல்பாக்ஷி (காஷ்மீரி) தமிழாக்கம்:கோமதி | பார்வதி இராமநாதன் | |
| | | 2. மொயினா சம்வார் (அஸ்ஸாம்) | தருண் சாக்கியா தமிழாக்கம்:கோமதி | | |
| 17. | 12- 7-81 | பேசும் மௌனங்கள் | ரோகிணி ரவிச்சந்திரன் | M. K. மூர்த்தி | 10 |
| 18. | 16- 7-81 | ஊரார் | ரா. தயாநிதி | T. கணேசன் (மறு ஒலிபரப்பு) | 15 |
| 19. | 9- 8-81 | சிலைகளும் சில மனிதர்களும் | A. V. M. கணேஷ் (வானொலி வடிவம்) வில்லிவாக்கம் சாக்ரடீஸ்) | M. K. மூர்த்தி | 8 |
| 20. | 20- 8-81 | குரோடன்ஸ் | T. கணேசன் | (மறு ஒலிபரப்பு) | |
| 21. | 23- 8-81 | வேதவாக்கு | ஸ்ரீ ரங்கம் நரசிம்மன் | (மறு ஒலிபரப்பு) | 9 |
| 22. | 28- 8-81 | எல்லைக்குள்ளே | ஷங்கர்ஸ் (பெங்காலி நாவல்) தமிழாக்கம் : கோமதி | (மறு ஒலிபரப்பு) | 10 |

| வரிசை எண் | நாள் | தலைப்பு | ஆசிரியர் | வானொலி அமைப்பு | பாத்திர எண்ணிக்கை |
|---|---|---|---|---|---|
| 23. | 13- 8-81 | சிலைந்த கனவுகள் | ஜான்கா பிரியேல் போர்க்ஸ் மென் வானொலி வடிவம் G. மாணிக்க வாசகம் | T. கணேசன் | 8 |
| 24. | 17- 9-81 | நீங்கள் நினைப்பதுபோல் | R. முத்து சுப்ரமண்யன் | (மறு ஒலிபரப்பு) | 8 |
| 25. | 24- 9-81 | இப்படிக்கு எழிலரசி | மல்லிகைக் கண்ணன் | (மறு ஒலிபரப்பு) | 10 |
| 26. | 11-10-81 | பனிச்சருக்கு | லியோ பிரபு | பார்வதிஇராமநாதன் | 10 |
| 27. | 14-10-81 | பர்சுக்குள் பலம் | அகஸ்டோ | T. கணேசன் | 6 |
| | | 2. விடியும் வரை காத்திரு (நாடக விழாவில் இரண்டு முப்பது நிமிட நாடகங்கள்) | T. R. முரளீதரன் | ,, | 5 |
| 28. | 26-10-81 | திருநாள் தீர்மானம் | P. M. இளங்குமரன் | M. K. மூர்த்தி | 12 |
| 29. | 8-11-81 | பூநாகம் | S. P. பாலகிருஷ்ணன் | பட்டுக் கோட்டை குமாரவேல் | 14 |
| 30. | 22-11-81 | இன்பக்கனா ஒன்று கண்டேன் | மயன் | பார்வதி இராமநாதன் | 10 |
| 31. | 13-12-81 | பாச விலங்கு | R. நாகராஜன் | (மறு ஒலிபரப்பு) | 9 |
| 32. | 17-12-81 | மனுஷ்ய புத்திரன் | ஜோசப் ஆனந்தன் | (மறு ஒலிபரப்பு) | 11 |

# 36. தொலைக்காட்சியில் தமிழ்

**வெ. நல்லதம்பி**

*தொலைக்காட்சி, நாளேடுகளைப் போல் எழுத்துகளைப் பயன் படுத்துகிறது; வானொலிபோல வினாடி நேரத்தில் மக்களிடம் சென்று சேர்கிறது; திரைப்படம் போல் காட்சி, கேள்வி மூலம் மக்களுக்கு அறிவுறுத்துகிறது. பழகு தமிழையே பயன்படுத்திவரும் தொலைக்காட்சி மேலும் தமிழுக்குத் தொண்டு செய்ய வாய்ப்பு உள்ளது.*

மொழி வளர்க்கும் துறைகள் இன்று பல்கிப் பெருகியுள்ளன. பள்ளிகள், கல்லூரிகள் என்னும் கல்வி நிலையங்கள் மட்டும் அல்லாமல் நாளேடு, வானொலி, திரைப்படம், தொலைக்காட்சி முதலான மக்கள் தகவல் துறைகளும் மொழித் தொண்டில் ஈடுபட்டுள்ளன.

தொலைக்காட்சியைப் பத்திரிகை, வானொலி, திரைப்படம் முதலியவற்றின் விரிவு எனச் சொல்வார்கள். அது ஓரளவுக்கு உண்மையே. ஆயின் ஆழ்ந்து சிந்திப்பார்க்கு அது ஒரு தனிக்கலை என்பது விளங்கும். நாளேடுகள் போல் எழுத்துகளைத் தொலைக் காட்சி பயன்படுத்துகிறது. வானொலி போல் நொடி நேரத்தில் அது மக்களிடம் சென்று சேர்கிறது. திரைப்படம் போல் மக்களுக்கு தொலைக்காட்சி காட்சி, கேள்வி மூலம் அறிவுறுத்துகிறது.

தொடக்க கால மொழி நிலைக்கும் தொலைக்காட்சிக்கும் ஓர் ஒற்றுமை உள்ளது. தொடக்க காலத்தில் மொழி உருவம் கொள்ளாதபோது, மக்கள் உடல் அசைவுகளையும், முகக் குறிப்புக்களையும், பண்படாத ஒலிகளையும் பயன்படுத்தித் தங்கள் கருத்துக்களைப் பிறருக்குத் தெரிவிக்க முயன்றனர். தொலைக்காட்சியில்

அந்த உத்திகளைப் பெரிதும் பாராட்டுகிறார்கள். பேசும் மொழி எழுதும் மொழி தொலைக்காட்சியில் அதிகமாகப் பயன்படுத்தப் பட்டால் பிற துறைக் கூறு மிகுந்து விட்டதாகக் குற்றஞ் சாட்டுவதும் உண்டு. ஒருகாலத்தில் பின் தங்கிய நிலை என்று கருதப்பட்ட ஒன்று, மற்றொரு காலத்தில் உகந்த ஒன்றாகக் கருதப்படும் நிலை சற்று வியக்கத்தக்கதே!

தொலைக்காட்சியில் மொழியைக் குறைந்த அளவு பயன் படுத்தி கருத்துக்களையும் உணர்வுகளையும் தெரிவிப்பது நல்லது என்று கருதும் போக்கிற்குக் காரணம் உள்ளது. தொலைக்காட்சி உலகம் தழுவிய ஒரு கருவியாக உள்ளது. பல மொழி பேசப்படும் நாடுகளில் ஒரு குறிப்பிட்ட மொழிப் பகுதியினர் தயாரிக்கும் நிகழ்ச்சியைப் பார்க்கிறார்கள். உலகம் அனைத்தும் ஒன்றாகும் நிலையினைத் தொலைக்காட்சி உருவாக்கித்தருகிறது. அந்நிலையில் எல்லா மொழியினரும் புரிந்துகொள்ள வசதியாகச் சைகை மொழியை உடல் உறுப்பு நெளிவு சுளிவு வழியான (குறிப்பு) மொழியைப் பயன்படுத்துவது வேண்டத்தக்கதாகிறது; விரும்பப் படுவதாகிறது.

அப்படியாயின் குறிப்பிட்ட மொழிக்குத் தொலைக்காட்சி தொண்டு செய்வதில்லையா? ஒருபுறம் நோக்கின் 'ஆம்' எனவும் மறுபுறம் நோக்கின் 'இல்லை' எனவும் கூறலாம். குழந்தை, தன்னைப் பெற்றவளைத் 'தாய்' எனவும் அத்'தாயை'ஈன்ற முதிய தாய் அப்பெண்ணைத் தன் 'மகள்' எனவும் அழைக்கும் நிலை போன்றது அது.

ஒரு நாட்டில் நடைபெறும் நிகழ்ச்சியைச் செயற்கைக்கோள் வழி உலகம் முழுவதற்கும் தொலைக்காட்சி அஞ்சல் செய்யும் போது ஒருலக மனப்பான்மையோடு சொந்த மொழியை அது அவ்வளவாக நத்துவதில்லை. ஆனால் மண்ணின் மணம் கொப்பளிக்கும் இலக்கிய நிகழ்ச்சிகளைத் தான் கால்கொண்டுள்ள பகுதியினர்க்கு அவர்தம் மொழியிலேயே வழங்கும்போது அது அம் மொழித் தொண்டு செய்கிறது.

கருத்துப் பகிர்வு என்ற செயலுக்கு இருவர் தேவை என்பது அனைவரும் அறிந்த ஒன்று. சொல்வோர் ஒருவர், கேட்பவர் உள்ளம் கொள்ளுமாறு 'சொலச் சொல்ல' வேண்டுமாயின் கேட்போர் மனநிலையறிந்து, அவர் புரிந்து கொள்ளும் மொழியில் சொல்வதே சாலச்சிறந்தது. இதனையே கருத்து அறிவிப்புத்துறை வல்லார் வலியுறுத்திக் கூறுவர்.

இந்த நோக்கில் பார்த்தால் தொலைக்காட்சி, தான் சார்ந்துள்ள பகுதி மொழியை வளர்த்தே ஆகவேண்டும்;பயன்படுத்தியே ஆகவேண்டும்.

வளர்த்தல் என்ற சொல்லுக்குப் பலரும் பலவாறு பொருள் சொல்கின்றனர். ''மொழியைப் பயன்படுத்தலையே'' பெரும் தொண்டாகக் கொள்பவர் ஒரு சாரார். அவர் கருத்தில், மொழியைப் பயன்படுத்தாமல் விட்டால் அது அழியும். எனவே ''பயன்படுத்தலே'' பெரும் தொண்டு என்பது அவர் கருத்து. இன்னொரு பிரிவினர், பயன்படுத்தும் மொழியைத் தூய்மையானதாகப் பயன்படுத்தவேண்டும்; சிதைவாகப் பயன்படுத்தல் மொழிக் கொலையாகி விடும் என்று கருதுகிறார்கள். இன்றும் சிலர் 'காலம் தோறும் தமிழ்' என்ற நோக்கில், புதிது புதிதாகப் பல கால கட்டங்களில் ஏற்படும் கருத்துக்களைத் தமிழில் படைப்பதும் மொழித் தொண்டு, மொழி வளர்த்தல் என்று கருதுகிறார்கள்.

இந்நிலையில் தொலைக்காட்சி தமிழ் மொழிக்குச் செய்துள்ளது பற்றிச் சிந்திப்போம். தமிழை முப்பிரிவாக்கி இயல், இசை நாடகம் எனப்பகுத்தது பழைய முறை. கலைகள் பலவாகி வளர்ந்துள்ள இந்த இருபதாம் நூற்றாண்டில் தமிழை மேலும் பலவாகப் பகுக்கவேண்டிய நிலை வந்துள்ளது. அறிவியல்தமிழ், செய்தித் தமிழ், குழந்தை இலக்கியத் தமிழ், படத்தமிழ் எனப் பலவாறாகத் தொலைக்காட்சியில் பிரிக்கும் நிலை உள்ளது. தொலைக்காட்சி அம்முறையில் தமிழைப் பல கூறுகளாகப் பகுத்து அது நடத்தும் நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு வளர்த்து வருகிறது; பயன்படுத்துகிறது; படைத்து வருகிறது.

தொலைக்காட்சியின் செயல் அறைப் பிரிவுகட்கு ஏற்கனவே தமிழ்ப்பெயர்கள் இடப்பட்டிருப்பினும் அவற்றின் நயமான உருவங்களை இப்போது கையாண்டு வருகிறார்கள். தொலைக் காட்சியின் கருவிகட்கும் செயல்கட்கும் தமிழில் சொற்கள் கண்டு ஆளப்பட்டு வருகின்றன. ஏற்கனவே உள்ள சொற்களுக்குச் சீரான மாற்றுச் சொற்களைப் பயன்படுத்துகிறார்கள்.

தன் விளக்கத்திற்குத் தமிழைப் பயன்படுத்தத் தொடங்கியுள்ள தொலைக்காட்சி, தன் நிகழ்ச்சிகளில் இயன்றவரை நல்ல சொற்களைப் பயன்படுத்துகிறது. ஆனால் அதில் ஓர் எல்லைக்குள் நின்றே அது செயல்பட முடிகிறது. வேறு வகையாகச் சொல்வதானால் அது 'பழகுதமிழை'த்தான் பெருமளவும் பயன்படுத்து

கிறது. பழகுதமிழின் 'தரம்' காலத்துக்குக் காலம் மாறுபடக் கூடியது. இலக்கண வரம்புக்குள் விரைவில் வராதது. எனவே அந்தப் பழகுதமிழை 'மக்கள் நலன்' கருதிப் பெருமளவு பயன் படுத்துகிறது.

மக்களின் நாவில் பழகிவரும் சொல்லாலேயே கருத்துணர்த்து வது சாலச்சிறந்தது என்ற அடிப்படையில் புழக்கத்தில் உள்ள சொல், சொல் தொடர்களைத் தொலைக்காட்சி பயன்படுத்து கிறது. வேகமாகச் செயல்பட வேண்டியிருப்பதாலும், வானொலி, நாளேடு போன்றவற்றோடு போட்டியிட்டுச் செய்திகளைத் தர வேண்டியிருப்பதாலும் மொழித் தூய்மையில் கருத்துச் செலுத்து வதற்குப் போதுமான கால வசதி அதற்கில்லை. கருத்தினைப் 'பளிச்'சென்று உணர்த்துவதே அதன் தலையாய கடமை.

இந்நிலையிலும் தொலைக்காட்சி தன்னாலான தமிழ்த் தொண்டைத் தொடர்ந்து செய்து வருகிறது. வண்ணக் களஞ்சியம் என்ற சஞ்சிகை நிகழ்ச்சி மொழி, கலை, இலக்கிய நிகழ்ச்சிகள் பலவற்றை அளித்துள்ளது. தமிழ்ப் பெரியார்கள் பற்றியும், தமிழர் விழாக்கள் பற்றியும் நிகழ்ச்சிகள் அழகுற மிளிர்ந்துள்ளன. தமிழ்நாட்டில் ஆங்காங்கு நடைபெற்ற இலக்கிய நிகழ்ச்சிகளின் தொகுப்பையும் அழகுத்தமிழ் நடையில் அளித்துள்ளது.

## வண்ணக் களஞ்சியம் நிகழ்ச்சிகளில் சில

1. நிகழ்ந்தவை நிகழ்ந்த இடம் என்ற தொடரில் அதியமான் கோட்டை, பறம்புமலை முதலியவற்றை அடிப்படையாகக் கொண்டு, புரவலர், புலவர் வரலாறுகள் சித்திரிக்கப்பட்டுள்ளன. (2) பாவேந்தர் பைந்தமிழ் (3) இஸ்லாமிய இலக்கியத்தில் எளிமை (4) நட்புக்கோர் இலக்கியம் திருக்குறள் (5) கிறிஸ்தவர்கள் தமிழ்த்தொண்டு (6) ஜைனர்கள் தமிழ்த் தொண்டு (7) சித்தர்கள் தமிழ்த் தொண்டு (8) வள்ளல்கள் வளர்த்த தமிழ் (9) எழுத்துச் சீர்திருத்தம் (10) நாமக்கல் கவிஞரின் நற்கவித்திறன் (11) பாரதி நூற்றாண்டு விழாவையொட்டி கருத்தரங்குகள்.

1981-ஆம் ஆண்டு சனவரித் திங்கள் நான்கு முதல் பத்து தேதி வரை மதுரை மாநகரில் நடைபெற்ற ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டுச் செயல்முறைகளைப் படம்பிடித்துத் தமிழகத் தலை நகரிலும் சுற்றியுள்ள மாவட்டங்களிலும் உள்ள மக்கள் கண்டு களிக்கும் வண்ணம் தொலைக்காட்சி அளித்தது. மாநில அரசின்

ஒத்துழைப்போடு, பன்னாட்டுத் தமிழாய்வுக் கழகம் ஏற்பாடு செய்திருந்த ஒரு மாபெரும் விழாவை அத்தகு அளவில் மிக விரிவாகப் பதிவு செய்து தொலைக்காட்சி ஒளிபரப்பியது அதுவே முதல் முறையாகும். இக்கட்டுரையாளரும் அவர்தம் நண்பர் இரா. மகாதேவனும் அப்பொறுப்பை ஏற்று நிறைவேற்றினர். மதுரைப் பல்கலைக் கழகத்தில் நடைபெற்ற கருத்தரங்குகள், மூவேந்தர் அரங்கில் நடைபெற்ற பொதுமக்களுக்கான சொற் பொழிவுகள், மாலை வேளைகளில் பல அரங்குகளில் நடைபெற்ற இயல், இசை, நாடக, நாட்டியக் கலைநிகழ்ச்சிகள் ஆகியன வற்றைத் தொலைக்காட்சி தொகுத்தளித்தது. பன்னாட்டுப் பிறமொழித் தமிழ் அறிஞர்களின் சிறப்புப் பேட்டிகளையும் அது ஒளிபரப்பியது.

தொடக்க நிலையினர்க்குத் தமிழ் கற்பிக்கும் முயற்சியிலும் தொலைக்காட்சி ஈடுபட்டுள்ளது. வயது வந்தோர் கல்வி இயக்கத் தின் ஓர் அங்கமாக வாழ்க்கைக் கல்வி என்னும் அரைமணி நேர நிகழ்ச்சியை அது நடத்துகிறது. அதில் எழுத்தறிவு தரும் பணி சீரும் சிறப்புமாக நடைபெறுகிறது. பேராசிரியர் டாக்டர் மா. நன்னன் அவர்கள் தொலைக்காட்சி ஆசிரியராகப் பங்கு பெற்றுப் பாடம் நடத்தி வருகிறார். சென்னை, செங்கல்பட்டு, வடஆர்க்காடு, தென்ஆர்க்காடு ஆகிய மாவட்டங்களில் உள்ள எழுத்தறிவு நிரம்பாத வயது வந்தோர், நிகழ்ச்சியைக் குழுக்களாக இருந்தும், தனியே இல்லங்களிலிருந்தும் கண்டு எண்ணும் எழுத்தும் கற்றுவருகிறார்கள். இதனைத் தொலைக்காட்சி செய்யும் நேரடி மொழிப்பணி எனலாம்.

இந்நிகழ்ச்சியில் இலக்கண இலக்கியங்கள் கற்பிக்கப்படு வதற்குப் பதில் நடைமுறைத் தமிழ் கற்பிக்கப்படுகிறது, மொழியை நடைமுறையில் பேசுவதுபோல் எழுதவும் முயற்சி செய்யப்படுகிறது. இதனை நடைமுறை மொழி என முதியோர் கல்வித்துறை வல்லார் குறிப்பிடுகிறார்கள். இந்நிகழ்ச்சி முந்தைய ஆண்டுகளில் நடத்தப்பட்டதன் பட்டறிவைக் கொண்டு சீர் செய்யப்பட்டுள்ளது. பள்ளிசாராக் கல்விமுறையின்பாற்பட்டது இந்நிகழ்ச்சி.

பள்ளிக் கல்வித்துறையினருடன் சேர்ந்து நடத்தும் காண்போம் கற்போம் கல்வி நிகழ்ச்சி, பள்ளி மாணவர்களுக்கானது. இதில் இளங்கோவடிகள் துறவு போன்ற இலக்கியப் பாடங்கள் இடம்

பெற்றுள்ளன. சிலம்பு யாக்கப்பட்டதன் நோக்கங்கள் போன்றன வும் அந்நிகழ்ச்சியில் விளக்கப்பட்டன. அத்துடன் புரட்சிக் கவி பாரதியாரின் வாழ்க்கையில் நடைபெற்ற நிகழ்ச்சிகளைச் சித்திரித்துத் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளை வழங்கியுள்ளமை குறிப்பிடத்தக்கது. மாணவர்களுக்குக் கட்டுரைப் போட்டி, இலக்கணம் முதலியனவும் நடத்தப்பட்டுள்ளன.

தொலைக்காட்சியில் இசையும் நாடகமும் சிறப்பிடம் பெறுவன; மக்களால் விரும்பப்படுவன. கர்நாடக இசைத்துறை யில் பெரிதும் தெலுங்குக் கீர்த்தனைகளும் மிகக் குறைந்த அளவுக்கு—அல்லது ஒரோ வழி மட்டுமே—தமிழ்ப் பாடல்களும் இடம் பெற்றுள்ளன. மெல்லிசை என்னும் மக்கள் மனம் கவரும் இசைப் பகுதியில் புதிய புதிய தமிழ்ப் பாடல்கள் இடம் பெற்று வருகின்றன. தமிழன்பன், மின்னூர் சீனிவாசன் போன்றோர் தம் கற்பனையில் உதித்த இசைப்பாடல்கள் மெல்லிசையில் இடம் பெற்றுள்ளன.

ஆண்டிறுதியில் நடைபெற்ற கர்நாடக இசை நிகழ்ச்சி யொன்றில் பெரியசாமித் தூரன், தஞ்சாவூர் பொன்னையா பிள்ளை, சுத்த சத்வானந்தா முதலானோரின் கீர்த்தனைகள் இடம்பெற்றன. அவ்வப்போது பாரதியார் பாடல்களும் இடம் பெற்றுவருகின்றன. திருப்புகழ்ப் பாடல்கள் இசை நிகழ்ச்சிகளின் நிறைவுப் பாடல்களாக எடுத்தாளப்படுகின்றன.

இசையைப் போல் இடம் பெறும் இன்னொரு நிகழ்ச்சி நாட்டியம். நாட்டிய நிகழ்ச்சிகள் பெரும்பாலும் கதைப்போக்கில் அமைவன அல்ல ஆதலாலும், வணக்கம், தொடக்கம், நடன நுட்பம், நிறைவு என்ற நிலைகளைக் காட்டும் வண்ணம் அமைவன ஆதலாலும், அவை பெரிதும் உடல் கவர்ச்சியுடன் உணர்வுகளைச் சார்ந்திருத்தலாலும், மொழிக்கு முக்கியத்துவம் கொடாமல் பல மொழிகளிலும் இயன்றுவரும் பாடல்களைக் கொண்டு நடத்தப் படுகின்றன. உதிரிப்பாடல்கள், புராணம், வரலாறு ஆகியவற்றி லிருந்து எடுக்கப்படும் பாடல்கள் எனப் பாடற்பகுதி அமையும். சில வேளைகளில் நாட்டியக் குறிப்புச் சொற்களின் தொடரினை மட்டுமே (தாம்திரிகிட, தீம்திரிகிட போன்றவை) பாடலாகக் கொண்டு இயல்வனவும் உண்டு. மிகச்சிறுபான்மையாகக் குறவஞ்சி போன்ற தமிழ் இலக்கியப் பகுதிகள் நாட்டியப் படுத்தப் பட்டுள்ளன.

இயல், இசை போன்றே நாடகமும் அதற்குரிய இடத்தைப் பெற்றுள்ளது. உண்மையில் திரைப்படத்தினை அடுத்து மக்களால் பெரிதும் விரும்பப்படும் பொழுது போக்கு நிகழ்ச்சி நாடகமே! இந்த நாடகங்கள், முழுநேர நாடகங்களாகவும், பல்சுவை நிகழ்ச்சிகளில் ஓர் அங்கமாகவும் இடம்பெற்று வருகின்றன. வாரம் ஒரு முறை நடைபெறும் பெரிய நாடகங்கள் பொதுவில் சமூக நாடகங்களாக அமைந்துள்ளன. சில நகைச்சுவையை வெளிப் படுத்துவன; இந்தக் கற்பனை நாடகங்கள் அனைத்தும் கலப்படத் தமிழ் உரைநடைகளில் இயன்றவை. தமிழகத்தில் தோமையர் என்ற நாடகம் ஒன்று ஒளிபரப்பானதில் அன்பர்கள் பலர் எதிர்ப்புக்குரல் கொடுத்தனர். தோமையர் தமிழகம் வந்தபோது திருவள்ளுவர் முதலானோர் எதிர் சென்று வரவேற்றதாகவும் இலக்கிய அறக்கோட்பாடுகள் பற்றி அவர்களிடையே விவாதம் எழுந்ததாகவும் அமைக்கப்பட்ட காட்சிகளுக்குப் பெரும் எதிர்ப்பு எழுந்தது டாக்டர் தயாநந்தன் பிரான்ஸிஸ் என்ற தமிழ் அறிஞர் எழுதிய அந்த நாடகத்தைத் திரு. வி. சேனாபதி தயாரித்திருந் தார். நாடகக் குழுக்கள் சில தாம் ஏற்கனவே அரங்கேற்றிய ஓரிரு நாடகங்களையும் ஒளிபரப்பியுள்ளன.

## 1981-ல் ஒளிபரப்பப்பட்ட சில நாடகங்கள்

தேடாமல் வந்த செல்வம், கனவு ஒன்று கண்டேன், டாக்டர் வருகிறார் உஷார், அடிச்சது யோகம், ரெய்ன் ரெய்ன் கோ அவே, வெளிச்சத்தை நோக்கி..., நாடகம் தொடர்கிறது, அம்மா, மன்னிக்க வேண்கிறேன், கிருஷ்ணா காதல் வைபோகமே, வாடகைக்கு ஒரு வீடு, சாந்தாவின் காதலி, அம்மாவுக்கு தெரியக் கூடாது, அய்யா அம்மா அம்மம்மா, ஒரு மலர் வாடுகிறது, ஆனது ஆகட்டும், டூ-லெட், கேள்வி பிறக்குது, உன்னத உறவுகள், மாற முடியுமா?, எழுத்தாளர் மனைவி, கௌரி, நம்ப முடியவில்லை.

முன்னணியில் உள்ள நாடக ஆசிரியர்களின் படைப்புகளைத் தொலைக்காட்சியில் அமைக்க முயற்சிகள் நடந்து வருகின்றன. இலக்கிய நாடகங்கள் போதுமான அளவுக்கு—ஏன் ஒன்றிரண்டு கூட—ஒளிபரப்பாகவில்லை எனலாம். புதிர் நாடகங்கள், அவல நாடகங்கள், நகைச்சுவை நாடகங்கள், வரலாற்று நாடகங்கள், இலக்கிய நாடகங்கள், அறிவியல் நாடகங்கள், மனோதத்துவ நாடகங்கள் எனத் தொலைக்காட்சி பலவகை நாடகங்களையும் ஒளிபரப்பத் திட்டமிட்டுள்ளது.

குறிப்பிட்ட பிரிவினர்க்கென வழங்கப்படும் நிகழ்ச்சிகளிலும், நாடகங்கள் இடம் பெறுகின்றன. சான்றாகச் சிறுவர் நிகழ்ச்சிகள், முதியோர் கல்வி நிகழ்ச்சிகள், தொழிலாளர்க்கான நிகழ்ச்சிகள், கிராம நிகழ்ச்சிகள், குடும்பத்தினர்கான நிகழ்ச்சிகள் முதலிய வற்றில் நாடகங்கள் இடம் பெற்று வருகின்றன. நடிகர்கள் உச்சரிப்புத் திறனும், நடிப்புத் திறனும் கைவரப்பெற்றவர்களா எனக் கண்டறியப்பட்ட பிறகே வாய்ப்பளிக்கப் படுகின்றனர். எனவே உச்சரிப்புக் கொலை போன்ற மொழித்தவறுகளுக்கு இட மிருப்பதில்லை சிறு நாடகங்களை, நல்ல குடிமகனுக்கு வேண்டிய பொறுப்புக்களை அறிவிக்கவும் பயன்படுத்துகிறார்கள். சிறு குடும்ப நெறி, சேமிப்பு, தீண்டாமைக் கொடுமை, மதுவின் கேடுகள் போன்றவற்றை எடுத்துரைக்கவும் குறுநாடகங்கள் பயன் பட்டுள்ளன.

மக்கள் மனம் கவரும் நிகழ்ச்சிகளில் மற்றொன்று செய்தி நிகழ்ச்சி. ஒளிபரப்புத் தொடக்கத்திலும், இரவு எட்டு மணி அளவிலும் இடம் பெறும் செய்திகள் தமிழில் தரப்பட்டன. தொலைத் தட்டச்சுப் பொறியில் வரும் செய்திகள் ஆங்கிலத்தில் இருப்பதால் அவற்றைத் தமிழில் மொழி பெயர்த்து வடிவ மைத்துத் தரவேண்டியுள்ளது. செய்தி படிப்பவர் உச்சரிப்பு முதலானவற்றில் கவனம் செலுத்துபவர் ஆயினும் உலகம் முழு வதிலிருந்து வரும் செய்திகளில் உள்ள இடப் பெயர்கள், ஆள் பெயர்கள் முதலானவற்றை அப்படியே கையாள வேண்டி வருகிறது. பிற செய்திகளைத் தமிழ்ப்படுத்தும் போது தமிழ் மரபு கெடாமல் இருக்க முயற்சி மேற்கொள்ளப்படுகிறது. ஆயினும் செய்தி ஆசிரியரின் தமிழறிவே அதற்கு ஆதாரம் என்ப தாலும், எல்லாச் சமயங்களிலும் அத்தகு திறமையாளர்கள் கிடைப்பதில்லை என்பதாலும் ஆங்கிலப்பாணி இடம் பெற வாய்ப்பு உள்ளது.

பெயர்களுக்கு முன் கூறப்பட்டு வந்த ஸ்ரீ, ஸ்ரீமதி, குமாரி போன்ற சொற்களுக்குப் பதில் திரு, திருமதி, செல்வி போன்ற அடைமொழிகளைப் பயன்படுத்தும் முன்னேற்றம் நிகழ்ந்து வருகிறது. விஜயம் என்ற சொல்லுக்குப் பதில் வருகை எனவும், பாராளுமன்றத்துக்குப் பதில் நாடாளுமன்றம் எனவும் மேலவை, கீழவை எனவும் நல்ல சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன. (Standard Tamil) செய்தி நிகழ்ச்சியில் மனநிறைவு கொள்ளும் தட்டளைத் தமிழ் பயன்படுத்தப்படுகிறது. செய்தியைப் பார்ப்

போர் பல திறத்தினர், பல பகுதியினர் என்பதால் அவ்வாறு கட்டளைத்தமிழ் பயன்படுத்தப்படுகிறது. கடைசி நிமிடத்தில் கூட ஒரு செய்தியைச் செய்தி ஆசிரியர் விரைவாக மொழி பெயர்த்துத் தர வேண்டிய கட்டாயம் ஏற்படுவதால் சில வேளை களில் பிற மொழிச் சொற்கள் அவ்வாறே இடம் பெறும் சூழல் உள்ளது.

நாள்தோறும் அறிவியல்துறையில் புதுப்புது கண்டுபிடிப்புக் களும், கருத்துக்களும் உருவாகி வருகின்றன. அவை ஆங்கிலத்தில் தெரிவிக்கப்படுவதால் சென்னைத் தொலைக்காட்சியில் தமிழ்ப் படுத்தி வெளியிட வேண்டியுள்ளது. அதற்கென மொழி பெயர்ப் பாளர்களை நாடி நிகழ்ச்சியை நடத்துகிறார்கள். அந்நிகழ்ச்சி களில் புதிய கருத்துக்கள் தெளிவாக உணர்த்தப்பட வேண்டும் என்ற நினைவில் சில வேளைகளில் ஆங்கிலச் சொற்கள் பயன் படுத்தப்படுகின்றன.

கிராம மக்கள் தொலைக்காட்சியில் தமக்கு வேண்டிய நிகழ்ச்சிகளை எதிர்பார்க்கிறார்கள். வயலும் வாழ்வும், கிராமியக் கலைகள், வாழ்க்கைக் கல்வி போன்றவற்றின் மூலம் 'மண் வாசனை' வீசும் கலை நிகழ்ச்சிகள், கருத்து நிகழ்ச்சிகள் தரப் பட்டுள்ளன.

நாட்டுப்புறக் கலைகள் பலவும் நிகழ்ச்சியில் இடம் பெற் றுள்ளன. லாவணி, கரகம், காவடி, சேர்வையாட்டம், தெருக் கூத்து, வில்லுப்பாட்டு, பம்பை மேளம், பொய்க்கால் குதிரை, கும்மி, சிலம்பாட்டம், மகுட ஆட்டம், தோல்பாவைக் கூத்து முதலியவை சிறப்பாக இடம் பெற்றுள்ளன. பவளக் கொடி, அரிச்சந்திர மயான காண்டம், ஆரவல்லி சூரவல்லி, குறவஞ்சி, சத்தியவான் சாவித்திரி, அர்ச்சுனன் தபசு முதலியவை கருப் பொருளாக அமைந்துள்ளன.

தஞ்சை, திருச்சி, திருநெல்வேலி, கோயமுத்தூர், வட ஆர்க்காடு, தென்ஆர்க்காடு ஆகிய மாவட்டங்களிலிருந்து கலைஞர்கள் வந்துள்ளனர். அவர்களில் பெரும்பகுதியினர், முதன் முறையாகச் சென்னை நகருக்கு வரும் வாய்ப்பினை அத் தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் அளித்துள்ளன. பழங்கலையினைப் புதிய தகவல்துறையில் பொருந்தியதால் ஏற்பட்ட வாய்ப்பு அல்லவோ அது?

கிராம நிகழ்ச்சியில் இடம் பெற்ற 'கொல்லங்குடி கருப்பாயி' யின் நாட்டுப்புறப் பாடல்கள் சென்னை நகரில் பெரும் பரபரப்பையும் கிறுகிறுப்பையும் ஏற்படுத்தின. கல்வியறிவு இல்லா அந்த மூதாட்டி, இசைக்கருவியை மீட்டும் போதோ தம்கற்பனையில் உதிப்பவற்றைக் கருத்து நிறைந்த சொற்கோவையாக்கித் தாளம் தப்பாமல் பாடியதைக் கண்ணுற்றவர்கள் அதிசயித்து நின்றார்கள்.

கிராம மக்களுக்குப் பாரதியை அறிமுகப்படுத்தும் வண்ணம் பாரதிப்பாடல்கள் இடம் பெற்றுள்ளன. கிராமிய இசையில் வள்ளுவர் வந்தார், பாரதத் தாயின் பன்னிரு கரங்கள் என்ற வில்லுப் பாட்டுத் தொடர் ஆகியவையும் இடம் பெற்றுள்ளன. வழிகாட்டி பாகவதர் என்ற கிராமீய நிகழ்ச்சியில் கொங்கு தமிழ் பயன்படுத்தப்பட்டுள்ளது.

தமிழ்ப்புத்தாண்டு, பொங்கல் முதலிய தமிழ்த்திருநாட்களிலும், திருவள்ளுவர் திருநாள், கம்பன் விழா முதலான சிறப்பு நாட்களிலும் கவியரங்குகள், பட்டிமண்டபங்கள் ஆகிய நிகழ்ச்சிகளைத் தொலைக்காட்சி சிறப்பாக வழங்கியுள்ளது. தமிழ்ப் பெரியார்கள், தலைவர்கள் ஆகியோரின் நினைவு நாள், ஆண்டு தினம் முதலியவற்றை முன்னிட்டும் வாழ்க்கை வரலாற்று நிகழ்ச்சிகள், இலக்கிய நிகழ்ச்சிகளைத் தொலைக்காட்சி வழங்கியுள்ளது.

குழந்தை நிகழ்ச்சிகளில் சிறுசிறு சொற்களைப் பயன்படுத்தி நாடகம், உரையாடல்கள் முதலியன நடைபெறுகின்றன. குழந்தைகளின் சொற்களஞ்சியத்தின் எல்லையை அறிந்து செய்யும் முயற்சி இது. குழந்தைப் பாடல்கள் ஆடல் பாடலுடன் நிகழ்த்தப்படுகின்றன. குழந்தைக் கவிஞர்கள், அழ வள்ளியப்பா, தணிகை உலகநாதன், அழகு. பழனிச்சாமி முதலானோரின் எழுத்தோவியங்கள் இடம் பெற்றுள்ளன.

செய்திப்படங்களுக்குத் தமிழில் வர்ணனை எழுதும் போதும் மொழியின் தேவை உணரப்படுகிறது. படத்தில் வரும் ஒரு குறிப்பிட்ட காட்சி எவ்வளவு நேரத்திற்கு இருக்கிறதோ, அவ்வளவு நேரத்திற்குள் வர்ணனைச் சொற்றொடர் பேசி முடிக்கப்படும் வண்ணம் எழுதப்படுகிறது. காட்சி நேரமும் கருத்து உரையும் ஒரே கால அளவுக்குள் இருக்கும் வண்ணம் அமைக்கப்படுகிறது.

தொலைக்காட்சியின் பொறியியல் பிரிவுகளையும் அவற்றின் செயல்களையும் இன்னும் போதுமான அளவுக்குத் தமிழில்

சொல்ல முடியவில்லை. முன்னர்க் குறிப்பிட்டது போல் ஓரளவுக்கு முயற்சி இருப்பினும், செயல்பட வேண்டியது இன்னும் பெருமளவு உள்ளது. சான்றாக, நிலைய அறிமுக அறிவிப்பில் பேண்டு (Band) சானல் (Channel) போன்ற சொற்கள் இன்னும் ஆங்கி லத்திலேயே சொல்லப்படுகிறன்றன.

## தமிழில் வழங்கப்படும் சிலசொற்கள்

Television டெலிவிஷன்—தொலைக்காட்சி
Transmission டிரான்ஸ்மிஷன்—ஒளிபரப்பு
வீடியோ டேப்—ஒளிநாடா
Recording ரிகார்டிங்—பதிவு
Vision mixing விஷன் மிக்சிங்—ஒளிக்கலவை
Live programme லைவ் புரோகிராம்—நேரடி நிகழ்ச்சி
Telecine டெலிசினி—தொலைப்படம்
Graphics கிராபிக்ஸ்—சித்திரக்கலை
Wardrobe வார்டுரோப்—ஆடையணி
Property பிராப்பர்ட்டி—அரங்கப் பொருள்
Microwave மைக்ரோவேவ் – நுண் அலை
Relay ரிலே—அஞ்சல்
satellite சாட்டலைட்—செயற்கைக்கோள்
Colour programme கலர் புரோகிராம்—வண்ண நிகழ்ச்சி

நிகழ்ச்சித் தயாரிப்பின் போது, தயாரிப்பாளர்கள் தங்கள் ஆணைகளைத் தமிழில் தருவதில்லை: காரணம் ஆணைகளைக் கேட்டுச் செயல்படும் கலைஞர்களில் பலர் பிறமொழியினர். நாடு முழுமையுமிருந்து பணிக்கு வருபவர் அவர். அக்கலைஞர்களைப் போன்று பொறியாளர்களும் பல மொழியினர். அவர்களும் அந்த ஆணைகளைத் தமிழில் புரிந்து கொள்ள இயலவில்லை. எனவே தயாரிப்பு ஆணைகள் ஆங்கிலத்திலேயே இருக்க வேண்டியுள்ளது. ஆயினும், தயாரிப்பு நேரமில்லாத ஆயத்த நேரங்களில் சில இளைஞர்கள் தமிழில் சொல்ல முயற்சி செய்கிறார்கள்.

கலைஞர்களுக்கு அனுப்பும் கடிதங்களைப் பொறுத்தவரை நாட்டுப்புறப் பகுதிகளில் உள்ளவர்களுக்குத் தமிழில் செல்லும் வாய்ப்பு உள்ளது. நகர்ப்புறங்களில் உள்ளவர்களுக்குப் பெரும் பாலும் ஆங்கிலத்தில் கடிதங்கள் செல்கின்றன.

தமிழகத்தில் உள்ள தொலைக்காட்சி, மேலும் தமிழ்மொழி யின் வளர்ச்சிக்கும் வாழ்வுக்கும் தொண்டு செய்ய வாய்ப்புஉள்ளது.

# 37. மேடை நாடகம்

**மு. தங்கராசு**

1981-இல் தமிழகத்தில் நடைபெற்ற நாடகங்கள் ஓராயிரம் இருக்கலாம். சென்னையில் மட்டும் ஏறத்தாழ நூற்று அறுபதுக்கும் மேலான புதிய நாடகங்கள் மேடையேறின. ஆனால், குறிப்பிட்டுச் சொல்லும்படியாக ஒருசில நாடகங்களே அமைந்துள்ளன.

தமிழ் நாடகம் மேடையேறத் தொடங்கி ஏறத்தாழ நூறு ஆண்டுகள் ஆகின்றன. சென்ற நூற்றாண்டின் இந்தக் கால கட்டத்தில்தான், தெருவோரம் தேம்பி நின்ற தமிழ்க்கூத்தினைச் சில திருவாளர்கள் மேடைக்குக் கொண்டு வந்து மாண்புறச் செய்தனர். மேடைக்கு அழைத்துவந்தவர்கள் தொடர்ந்து அதன் வளர்ச்சிக்கு அயராது உழைத்தனர். அங்ஙனம் அயராது உழைத்தவர்கள் தமிழ் நெஞ்சம் படைத்தவர்கள். அதனால் மேடை நாடகம் மேலும் மேலும் மெருகேறிப் பொலிவுறத் தொடங்கியது.

ஆற்றல் வாய்ந்த அறிஞர் பெருமக்கள், செல்வம் படைத்தவர்கள், அறிவியல் மேதைகள், அரசியல் அறிஞர்கள், சமுதாயப் பெருமைக்குரியவர்கள் இப்படிப் பல திறத்தாரும் மேடை நாடகக் கலைக்குத் தொண்டாற்ற முன்வந்தார்கள். ஊக்கமளித்துப் போற்றினார்கள். நல்லவர்கள் கைப்பட்டதனால் இக்கலை நாளும் வளர்ந்து சிறக்க வழி உண்டானது. காலத்திற்கேற்ற மாறுபாடுகளையும் வேறுபாடுகளையும் கண்டு வீறு நடை போடத் தொடங்கியது தொய்வில்லாத வளர்ச்சி தொடர்ந்தது. புராணத்தில் முகிழ்த்து வரலாற்றில் மொட்டாகி, சமுதாயச் சிந்தனைகளில் மணம் பரப்பும் மலராக மேடை நாடகக் கலை விரிந்து நிற்கின்றது. இன்று இன்னும் நுண்மை நோக்கி நடைபயிலும் நற்கலையாகத், தன் தரத்தினை உயர்த்திக் கொண்டுள்ளது.

இன்று தமிழகம் எங்கும் மேடை நாடகங்கள் நடைபெறும் சூழல் உருவாகியுள்ளது. சிறப்பு நாட்களிலும், சிறுதெய்வ வழி பாட்டிலும் மேடை நாடகம் முக்கிய இடம் பெறுவது வழக்கமாகி விட்டது. இது வழக்கமாக மட்டும் இல்லை தேவையாகவே அனைவராலும் ஏற்றுக்கொள்ளப் பெற்றுள்ளது. இந்த நூறு ஆண்டுகளில் தமிழகத்தில் நடைபெற்ற நாடகங்களைத் தொகுக்க முயன்றால் குறைந்தது பதினாயிரம் நாடகங்கள் நமக்குக் கிட்டும். அவற்றில் பல நூறு நாடகங்கள் தரமிக்கனவாய் பாது காத்துப் போற்றும் பான்மையனவாக அமையும்.

1981 ஆம் ஆண்டில் தமிழ் நாடெங்கிலும் நடைபெற்ற நாடகங்கள் குறைந்தது ஓராயிரம் இருக்கலாம். சென்னையில் மட்டும் ஏறத்தாழ நூற்று அறுபதுக்கும் மேலான புதிய நாடகங்கள் மேடையேறி இருக்கின்றன. சென்னையில் எல்லா நாட்களிலும் நாடகம் நடைபெறுவது இயல்பாகிவிட்டது. ஒருசில நாட்களில் பல நாடகங்கள் பல்வேறு அரங்கங்களில் நடைபெறு வதும் உண்டு. சென்னையில் உள்ள நாடகக் குழுவினர் தமிழகத் தின் எல்லாப் பகுதிகளிலும் தங்கள் நாடகங்களை நடித்துக் காட்டிப் புகழ் பெற்று வருகின்றனர். அது போன்று தமிழகத்தின் மற்ற நகரங்களில் உள்ள குழுவினரால் செய்ய இயல்வதில்லை. இதற்குப் பல்வேறு காரணங்கள் உள்ளன. அவற்றைப் பற்றி ஆராய்வது தனி ஆய்வாக அமையும்.

1981 ஆம் ஆண்டில் தமிழ் நாடகங்கள் என்ற இவ் ஆய்வுக் கட்டுரை சென்னையில் நடைபெற்ற நாடகங்களை மட்டுமே கொண்டு எழுதப் பெறுகிறது. இந்த ஆண்டில் தமிழ் மேடை நாடகங்கள் கண்ட வெற்றியும் வளர்ச்சியும் வளமும், ஏராளம் ஏராளம் என்று சாதனைப் பட்டியலைத் தர இயலா விடினும், எழுதுவதற்குத் தாராளமாகச் செய்திகள் இருக்கின்றன. அவற்றில் சிலவற்றை வெளிப்படுத்த முயல்வதே இக்கட்டுரையின் நோக்கம் ஆகும்.

## நாடக வகைகள்

நாடகங்களை வகைப்படுத்தப் பல அளவுகோல்களைக் கை யாளலாம். நாடகத்தின் முடிவினைக் கொண்டு துன்பியல் நாடகம், இன்பியல் நாடகம் எனப் பகுக்கலாம். நாடகத்தின் அளவினைக் கொண்டு (மேடையில் நடிக்க ஆகும் கால அளவு) குறுநாடகம், முழுநாடகம், ஓரங்க நாடகம் என வகைப்படுத்தலாம். நாடகம் அமைந்துள்ள நடையினை வைத்து உரைநடை நாடகம், கவிதை

நாடகம் எனப் பிரிக்கலாம். நாடகம் முழுமையும் இசைப்பாடல் களாக அமைந்திருந்தால் இசை நாடகம் என்போம். இக்கட்டுரை இத்தகைய பகுப்புகளைத் தவிர்த்துப் பொருட் பகுப்பினை மட்டுமே மேற்கொள்வது பொருத்தமாக அமையும் என்பதால், புராண நாடகம், வரலாற்று நாடகம், சமூக நாடகம், மனவியல் நாடகம், நகைச்சுவை நாடகம், அரசியல் நாடகம், திகில் நாடகம் வேட்கை வளர்ப்பு நாடகம், செய்தி நாடகம், ஆகிய ஒன்பது வகைத் தலைப்புக்களுடன் 1981 ஆம் ஆண்டுத் தமிழ் மேடைநாட கங்கள் ஆராயப்படுகின்றன.

## 1. புராண நாடகம்

சென்ற நூற்றாண்டின் இறுதிப் பகுதியாலும், இந்த நூற் றாண்டின் தொடக்கக் காலத்திலும் தமிழில் நாடகம் புத்துயிர் பெற்று மேடையேறத் துணை நின்றது புராணமே. ஆனால் கால மாறுபாடு புராணத்திற்கு முதலிடம் தராமைக்குக் காரணமாக அமைந்து விட்டது. மேடை நாடகம் தன் வளர்ச்சி நிலையில், பெரும்பான்மையாக இருந்த புராணங்களைச் சிறுபான்மை யாக்கி முன்னேறத் தொடங்கி ஆண்டுகள் பல கடந்து விட்டன. இந்த நூற்றாண்டின் முதல் கால் நூற்றாண்டு மட்டுமே புராணம் முழு ஆதிக்கம் செலுத்திக் கொண்டிருந்தது. அதற்குப் பிறகு செல்வாக்குக் குறைந்துவிட்டது என்று கூற முடியாது. வளர்ச்சி நிலை வேறாக அமைந்துவிட்டது என்பதே பொருத்தமாகும்.

1981 ஆம் ஆண்டைப் பொறுத்த வரையில் புராணங்களை அடிப்படையாக அமைத்துக் கொண்டு எழுந்த நாடகங்கள் ஆறு அல்லது ஏழு மட்டுமே.

புராண நாடகங்கள் அருகிப் போனதற்குக் காரணங்கள் பல உள்ளன. முதலாவது காரணம் புராண நாடகங்களை நடத்த மிகப் பெரிய அளவில் காட்சி அமைப்புகளைத் தயார் செய்ய வேண்டும். அங்ஙனம் மிகப்பெரிய காட்சிகளை மேடையில் அமைக்க ஏராளமான பொருட்செலவு ஏற்படும். இரண்டாவ தாக நடிகர்களும் நடிகைகளும் மிகுதியாகத் தேவைப்படுவார்கள். எல்லாவற்றிற்கும் மேலாகப் புராணக் கதை மாந்தர்கள் நல்ல தமிழில் பேச வேண்டும். அத்தகைய உரையாடல்களை எழுத வேண்டுமாயின் நாடகம் படைக்கும் ஆசிரியரும் தமிழில் தேர்ந்த வர்களாக இருக்க வேண்டும். இவையெல்லாம் இன்று பலராலும் இயலாத நிலையில் புராண நாடகங்கள் அருகிவிட்டன.

## நேஷனல் தியேட்டர்ஸ்

கடந்த இருபத்தைந்து ஆண்டுகளாகத் தொடர்ந்து புராண நாடகங்களை இக்குழுவினர் மட்டுமே மேடையேற்றி வருகிறார்கள். இக்குழுவின் சொந்தக் காரரான ஆர். எஸ். மனோகரின் இடையறாத முயற்சி பாராட்டிற்குரியது. மனோகர் இலங்கேஸ்வரன், சூரபத்மன், விசுவாமித்திரர், பரசுராமன் துரியோதனன் போன்ற பல புராண நாடகங்களை நடித்து வருகின்றார். அவர் இந்த ஆண்டு மேடையேற்றிய புராண நாடகம் 'சிவ தாண்டவம்'

பல நல்ல நாடகங்களைப் படைத்தளித்த இரா. பழனிசாமி எழுதிய 'சிவதாண்டவம்' சிவபெருமானின் திருவிளையாடல் களைச் சொல்லும் பாங்கினது. துந்துபி என்கிற அரக்கனை அழித்தல், கணநாதனை உற்பத்தி செய்தல், அந்தக் கண நாதனையே விநாயகப் பெருமனாக மாற்றுதல், தக்கன் யாகத்தினை அழித்தல், விண்ணில் திரியும் மூன்று கோட்டைகளை எரித்தல், காளியுடன் நடனம் ஆடுதல், இராவணனின் கர்வத்தை அடக்குதல். காரைக்கால் அம்மையாருக்குக் காட்சியளித்தல் போன்ற நிகழ்ச்சிகளின் தொகுப்பாக இந்நாடகம் அமைந்திருக்கின்றது.

அர்ச்சுனன் தான் கண்ணப்பராகவும், நக்கீரராகவும், அருணகிரிநாதராகவும் அவ்வப்போது தோன்றியதாக ஆசிரியர் கூறுவது புராணவழி உண்டாகும் புதிய சிந்தனையாக அமைந்திருக்கின்றது.

இப்புராண நாடகத்தின் நிறைவுப் பகுதியாகக் காரைக்கால் அம்மையாருக்கும் இறைவனுக்கும் இடையேயான அன்பினைப் புலப்படுத்தும் பகுதி அமைக்கப் பெற்றுள்ளது. இறைவனைக் காணும் ஆவலில் கொஞ்சமும் தளராத உள்ளத்தோடு இமயம் நோக்கி வருகின்ற அம்மையார், தன் உடலில் உள்ள ஊனெல்லாம் இழந்து எலும்புக் கூடாக ஆன பின்னரும் கொண்ட கொள்கையினை நிறைவேற்ற முயன்று, வெற்றியடைகின்ற காட்சி, நாடகம் காண்பவரின் உள்ளத்தில் நிலையான இடம் பெறும் தன்மைத்து.

சிவபெருமானின் பெருமை பேசுகின்ற புராண நாடகம் என்றாலும் உரையாடலில் இக்கால அரசியல் மணம் ஆங்காங்கே வீசுகின்றது. இருந்தாலும் வெளிப்படையாகவோ, மற்றொன்று

விரித்தலாகவோ இல்லாமல் காட்சிக்கேற்ற வண்ணம் பொருத்த மாக அமைந்து நாடகத்தின் நகைச்சுவைப் பகுதியாக ஆகின்றது. புராண நாடகத்தில் இத்தகைய உத்தியினைக் கையாளுவது கடினம். அதற்குத் தனித்திறம் வேண்டும். அத்திறம் இக் குழுவி னரிடம் சிறப்பாக அமைந்துள்ளது.

## ஹெரான் தியேட்டர்ஸ்

ஹெரான் இராமசாமி இக்குழுவினை அமைத்துப் புராண நாடகங்களை நடித்தும் நடத்தியும் வருகின்றார். வால்மீகி, சனீஸ்வரன் I ஆகிய நாடகங்களை மிகச்சிறப்பாக மேடையேற்றிய இக்குழுவினர், சனீஸ்வரன் II என்ற புராண நாடகத்தினை இந்த ஆண்டு அரங்கேற்றினர். சனீஸ்வரன் I, சனீஸ்வரன் II ஆகிய இரண்டு நாடகங்களையும் ஸ்ரீ கவி எழுதியுள்ளார்.

கோள்களின் இயக்கம் எங்ஙனம் மனிதனின் உடலோடும் உள்ளத்தோடும் தொடர்பு கொண்டுள்ளது என்ற விளக்கத்தோடு சனீஸ்வரன் II நாடகம் தொடங்குகின்றது. சனீஸ்வரன் எப்படி யெல்லாம் இயங்குகின்றார், யார் யாரையெல்லாம் தொடர்கின் றார் என்பதனையும் விளக்குகின்றது இந்நாடகம். சனீஸ்வரன் திருநல்லாற்றில் எழுந்தருளும் காட்சியுடன் இந்நாடகம் நிறைவு பெறுகின்றது. ஆசிரியர் ஸ்ரீகவியின் வளமான தமிழ் உரையாடல் இந்நாடகத்தினைக் காண்பவர் திளைத்து மகிழும் வண்ணம் சிறப் பாக அமைந்துள்ளது.

## வேறு சில

இவையன்றி வேறு சில புராண நாடகங்களும் சென்னையில் மேடையேறின. ஆனால் சிவதாண்டவமும் சனீஸ்வரனும் போன்று யாவருக்கும் அறிமுகமாகவில்லை. குறிப்பாக 'நவகிரக நாயகி' என்ற நாடகத்தினைச் சொல்ல வேண்டும். அழகிரி நாடக மன்றத்தினரால் அரங்கேற்றப் பெற்ற இந்நாடகம் நவகிரகங்களைப் பற்றிய விளக்கத்தினைத் தருகின்ற வகையில் அமைந்தது. நவகிரகங்கள் மனிதர்களை ஆட்டிப்படைக்கும் ஆற்றல் பெற்று விளங்குகின்றன. அத்தகைய ஆற்றலை இக் கிரகங்கள் எங்ஙனம் பெற்றன என்பதனை விளக்கும் வகையில் அமைந்த நாடகம் இது. மிகச் சிறந்த காட்சி அமைப்புக்களும் நல்ல இசையும் இந்நாடகத்தின் சிறப்பாகும்.

கவிஞர் இரா. பழனிச்சாமி எழுத, பழம்பெரும் நாடகக் கலைஞர் சகஸ்ரநாமம் இயக்கிய நாடகம் 'விக்கிரமாதித்தன்'

என்ற நாடகம். இரண்டு சிறந்த கலைஞர்களின் உழைப்பும் அறிவும் இணைந்து செயல்பட்டும் இந்நாடகம் அடையாளம் தெரியாத ஒன்றாகவே அடங்கி விட்டது. 'ஸ்ரீனிவாச கல்யாணம்', போன்ற சில புராண நாடகங்களும் மேடைக்கு வந்து, அவ்வளவாக அறிமுகமாகாமலேயே நின்றுவிட்டன.

## 2. வரலாற்று நாடகம்

வரலாற்று நாடகங்கள் புராண நாடகங்களினும் அருகியனவாக உள்ளன. புராண நாடகங்கள் அதிகமின்மைக்குக் கூறிய காரணங்களையே இங்கும் குறிப்பிடவேண்டும். அதற்கு மேலும், வரலாற்று நாடகம் படைப்போருக்கு வரலாற்று அறிவும், இலக்கியப் புலமையும் மிகுதியும் தேவைப்படுகின்றது. வரலாற்று நாடகம் படைப்பது புராண நாடகம் படைப்பதினும் கடினமானது. காண்பவர் கண்டு மகிழும் வண்ணம் சுவையுடையதாகவும் இருக்கவேண்டும்; வரலாறும் முரண்படாமல் கூறப்பட வேண்டும். வரலாற்றில் சுவையை இணைக்கின்ற கலவை மிக நுண்மையானது. எவரும் எளிதிற் கையாளும் திறத்தது அன்று. இத்தகைய பல காரணங்களாலேயே பலகாலம் தொடர்ந்து நாடகம் நடத்தி அனுபவம் பெற்றவர்கள் கூட வரலாற்று நாடகங்கள் பற்றிச் சிந்திப்பதில்லை.

### குடவாயில் கோட்டம்

இந்நாடகம் தலைமைச் செயலக ஊழியர்களால் நடத்தப் பெற்று வருகின்றது. மிகச் சிறந்த புதின எழுத்தாளர் கோவி. மணிசேகரன் அவர்களின் 'குடவாயில் கோட்டம்' புதினமே இந்த நாடகம். இது சேரமான் கணைக்காலிரும்பொறையினைப் பற்றிய நாடகம். வரலாற்று வழிக் கிடைக்கின்ற மிகச் சிறிய கருவினைக் கொண்டு மிகச் சிறந்த நாடகத்தினைப் படைக்க முடியும் என்பதற்கு இந்நாடகம் ஓர் எடுத்துக் காட்டு.

சேரமான் கணைக்கால் இரும்பொறை பற்றியும் சோழன் கோச்செங்கணான் பற்றியும் நாம் அறிவோம். நாடகத்தின் சுவைக்காகக் கணைக்கால் இரும்பொறைக்குக் கோதைமார்பன் என்ற ஒரு தம்பி படைக்கப்பெறுகின்றான். அங்ஙனமே சோழன் கோச்செங்கணானுக்கு ஒரு தங்கை படைக்கப் பெறுகிறாள். சேரன் தம்பி கோதைமார்பனுக்கும் சோழன் தங்கைக்கும் திருமணம் நடத்த, சேரனும் சோழனும் ஒப்பந்தம் செய்து கொள்

கின்றார்கள். கோதைமார்பனோ வேறொருத்தியின் காதலன். இத்தகைய சுவையான தொடக்கத்தோடு நாடகம் நடை போடத் தொடங்குகின்றது.

பல்வேறு சுழல்களால் சேரனுக்கும் சோழனுக்கும் பகைமை உண்டாகின்றது. பகைமை முற்றிப் போராக மாறுகின்றது சேரநாட்டுத் தலைமைப்புலவர் பொய்கையார் சோழனை வாழ்த்தும் போது 'நின் வாள் வெற்றி பெறுக' என்று வாழ்த்து கின்றார். சேரன் கணைக்கால் இரும்பொறையோ தன் தம்பிக்கு மணம் பேசிய காலத்தில், சோழனுடன் போரிடாமல் நட்புடன் இருக்கப் போவதாக அறிவித்திருந்தான். புலவர் வாக்குப் பொய்க்கக் கூடாது என்பதற்காகவும், தான் முன்பு அறிவித்தபடி நடந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவும் சேரமான் கணைக் கால் இரும்பொறை தன் ஆற்றல் வாய்ந்த கணைக்கால் படை யினைத் தீயிட்டு அழித்து விடுகின்றான். தம்பி கோதை மார்பனும் மற்றவர்களும் வீரத்தோடு போரிட்டும் கணைக்கால் படை இன்மையாலும், சேரன் செயலாற்றாது இருந்தமையாலும் சோழன் வெற்றியடைகின்றான். புலவர் வாக்கு மெய்யாகிறது. சேரனும் தன் சொற்படி நடந்து கொண்டான். விளைவு சோழனின் கைதியாகிறான் சேரன். இந்த உண்மை வெளிப்படும் போது சேரன் உயிர் அவன் உடலிலிருந்து வெளியாகி விட்டிருக் கிறது. இப்படி அமைக்கப் பெற்ற நாடகம்தான் 'குடவாயிற் கோட்டம்'. இந்நாடகத்தின் உரையாடல் தீந்தமிழ்ச் சுவை நிரம் பியது. காட்சியமைப்பும், நடிப்பும் பாராட்டுப் பெறும் தன்மையன. இசையும் இனிமையாகவும் பொருத்தமாகவும் அமைந்து துணை செய்கிறது. இது பாராட்டுப்பெறும் வரலாற்று நாடகமாக மிளிர்கின்றது.

## மருதுபாண்டியர்

இந்த ஆண்டில் குறிப்பிட வேண்டிய இன்னொரு வரலாற்று நாடகம் 'மருதுபாண்டியர்'. சம்பத் எழுதிய இந்நாடகம் 'இராசா தியேட்டர்ஸ்' குழுவினரால் நடத்தப் பெறுகின்றது. குடவாயில் கோட்டம் அளவுக்குச் சிறப்புடைய நாடகம் என்று இந்நாடகத்தினைக் கூற இயலாவிடினும், குறிப்பிட்டுச் சொல்லும் அளவுக்குத் தகுதி வாய்ந்த நாடகமேயாகும். இந்நாட கத்தில் மருது பாண்டியரின் பெருமையும் வீரமும் முரண் இல்லா மல் கூறப்பெறுகின்றன. வெள்ளையர்களின் சூழ்ச்சியினையும்

நாடு பிடிக்கும் கயமை உள்ளத்தினையும் பொருத்தமாகக் காட்டியுள்ளனர். குறிப்பிட்டுப் பாராட்டும் வண்ணம் பல இடங்களில் உரையாடலில் தமிழ் நயம் கொஞ்சுவதைக் காண முடிகின்றது. நடிகர்களும் ஆர்வம் மிக்கவர்களாகவே காணப்பெறுகின்றார்கள். சிறந்த வரலாற்று நாடகங்களைத் தொடர்ந்து தருவார்கள் என்று நம்பும் வகையில் இந்த நாடகம் அமைந்திருக்கின்றது. அடுத்து வரும் நாடகங்களை நடிக்கும் போது இன்னும் கொஞ்சம் விறுவிறுப்புடன் செயல்படுவார்களேயானால் வெற்றி உறுதி.

இவ்விரு நாடகங்கள் அன்றியும் வேறு சில வரலாற்று நாடகங்களும் நடைபெற்றிருக்கின்றன. பொதுவாக வரலாற்று நாடகங்கள் வளம் பெற்றுத் திகழ வேண்டுமானால் செல்வச் சிறப்புடன் உள்ள சிலர் முயன்று பார்த்தால் முடியும். செல்வத்தோடு கூட நல்ல அனுபவமும் ஆற்றலும் படைத்தவர்கள் இணைய வேண்டும். அப்போது தான் வரலாற்று நாடகங்கள் குறிப்பிட்டுப் பாராட்டும் சிறப்புக்குள்ளாகும். வரலாற்று நாடகத்தில் பங்கேற்கும் கலைஞர்களுக்குப் பொறுப்பு மிகுதி. குறிப்பாக, நடிகர்களாக இருக்கிறவர்கள் தமிழைச் செம்மையாகப் பேசும் திறம் பெற்றவர்களாக விளங்க வேண்டும். அங்ஙனம் உரையாடலின் தரமும் திறமும் அறியாது நடிப்பாரேல் பொருத்தமாக இல்லாது போவதுடன் கேலிக்குரியதாகவும் அமையும். இவ்வளவு சிறப்புக்கள் தேவைப்படுவதனால் தான் வரலாற்று நாடகங்கள் அருகி வருகின்றன.

## 3. சமூக நாடகம்

1981ஆம் ஆண்டின் பெரும்பாலான நாடகங்கள் சமூக நாடகங்களே. இது கடந்த பல ஆண்டுகளாகவே தொடர்ந்து வருகின்ற ஒரு நிலை. சமுதாயத்தின் பல்வேறு சிக்கல்களும் இடர்ப்பாடுகளும் இன்று எழுத்தாளர்களைச் சிந்திக்கத் தூண்டுவது போலவே நாடக ஆசிரியர்களையும் தூண்டுகின்றன. எனவே ஒவ்வொரு நாடக ஆசிரியரும் சமுதாயத்திலே தங்கள் நாடகத்திற்குக் கருவினைத் தேடி அலையும் நிலை உருவாகியுள்ளது. எத்தனைக் கோணத்தில் பார்த்தாலும் பார்க்க வழி இருக்கின்ற ஒரு துறையாக சமுதாயத்துறை இருப்பதனால் வேறுபாடான விதத்தில் பல நாடகங்கள் முகிழ்ந்த வண்ணம் இருக்கின்றன. ஆனால் அண்மைக்காலத்தில் இந்த முறையும் மாறி, சமுதா

யத்தை ஆழமாகக் காணாமல், மேலோட்டமாக, நகைச்சுவை யாக மட்டுமே காணும் நிலையும் உருவாகியிருக்கிறது. இருந் தாலும் சில ஆசிரியர்கள் சமுதாயத்தின் சிக்கல்களை நகைச்சுவை யோடு இழைத்து நயமாகத் தந்து கொண்டுதான் இருக்கிறார்கள்.

## வரதட்சணைக் கொடுமை

இது ஒரு பெரிய சிக்கல். இது நாடு தழுவிய ஒரு சிக்கல். எனவே பெரும்பாலான நாடகங்களில் வரதட்சணை பற்றிய செய் திகள் பேசப்படுதல் உண்டு. 'பனிநீர் மழையல்ல' என்ற நாடகம் இந்த வரதட்சணைக் கொடுமையினையே அடிப்படையாகக் கொண்டு எழுந்ததாகும். இந்நாடகத்தினைக் கஜேந்திர குமார் எழுதியுள்ளார். தன் தங்கையின் திருமணத்திற்கு வரதட்சணை கொடுக்க இயலாத ஓர் அண்ணன் பணக்கார வீட்டுப் பையனைக் கடத்திவந்து அவன் வழியாகப் பணம் பெற எண்ணுகின்றான். அதனால் பல சிக்கல்கள் ஏற்படுகின்றன. அந்தச் சிக்கல்களைத் தீர்க்கும் வகையில் புனையப்பெற்றதுதான் இந் நாடகம். இந்த நாடகத்தின் மூலம், வரதட்சணைக் கொடுமை மனிதனை எத்தகைய தீமை செய்யவும் தூண்டும் என்ற கருத்தினை ஆசிரியர் நமக்குத் தருகின்றார்.

'பரத்' எழுதிய 'புதியதோர் உலகம் செய்வோம்' என்ற நாட கத்தில், தன் தங்கையின் திருமணத்திற்காகத் தரவேண்டிய வரதட்சணைக்காக அண்ணன் தன் சிறுகத்தில் ஒன்றினை ஒரு பணக்காரனுக்கு விற்றுப் பத்தாயிரம் ரூபாய் வாங்கும் காட்சி யினை ஆசிரியர் அமைத்துள்ளார். இக்காட்சியினைக் கண்ட வர்கள் உள்ளத்தால் நெகிழ்ந்து போகிற அளவுக்கு ஆசிரியர் அமைத்திருக்கின்றார்.

## குடியின் தீமை

காலம் காலமாகச் சமுதாயத்தால் கண்டிக்கப் பெற்றுவரு கின்ற ஒன்று குடிப்பழக்கம். எத்தனை அறநூல்களும் அறிவுரை களும் தோன்றியும் இப்பழக்கம் மட்டும் ஒழிந்தபாடில்லை. இப் பழக்கத்தினை ஒழிக்க முழங்காத அரசியல் மேடைகளும் தலைவர் களும் இல்லை. அந்த வகையில் நாடக ஆசிரியர்களும் இந்தக் குடியின் கொடுமை குறித்துக் கண்டித்து வருகின்றார்கள். 1981ஆம் ஆண்டு குடியின் தீமையினைக் கருவாகக் கொண் டமைந்த நாடகம் 'ஒரு மனிதனின் கதை' சிவசங்கரி எழுதிய புதி னத்தை என். கே. சுந்தரம் நாடகமாக்கி மேடையேற்றியுள்ளார்

## கணவன் மனைவி உறவு

கணவன் மனைவியரிடையே விட்டுக்கொடுக்கின்ற இயல்பும், பொறுத்துப் போகின்ற மனப்பாங்கும் இருத்தல் அவசியம். அங்ஙனம் இல்லையாயின் வீணான குழப்பங்கள் உண்டாகி மன அமைதி கெடும் என்பதனை விளக்கும் வகையில் 'அர்த்தமுள்ள மௌனங்கள்' என்ற நாடகம் அமைந்துள்ளது. கணவனைச் சரியாகப் புரிந்துகொள்ளாத மனைவியின் பரிதாப முடிவினைக் காண வைக்கின்றார் வியட்நாம்வீடு சுந்தரம்.

இந் நாடகத்தில் வரும் கணவன் மிகப் பெரிய டாக்டர்; தனியாக மருத்துவமனை வைத்துப் பேரும் புகழும் பெற்று விளங்குபவர். தன் தொழிலின் மீது மிகுதியும் பற்றுடையவர் பத்தியோடு தொழில் புரியும் இயல்பினர். எந்த நேரமும் அவரது சிந்தனையை முழுமையாக ஆட்கொண்டிருப்பவர்கள் நோயாளிகளே. மனைவியோ தன் கணவன் எந்த நிகழ்ச்சியிலும் தன்னுடன் இருப்பதில்லை என்ற மனக்குறை உடையவள். இப்படி இவர்கள் இருவரும் இருந்ததன் விளைவு வேதனையாக அமைகின்றது, கணவனும் சிறிது நேரத்தை மனைவியின் மகிழ்ச்சிக்காக ஒதுக்க வேண்டும் என்பதும், மனைவியும் கணவனின் கடமைகளுக்குத் துணைநிற்க இயலாவிடினும் இடையூறாக இல்லாமல் இருக்க வேண்டும் என்பதும் இந்நாடகம் உணர்த்தும் கருத்தாக அமைகின்றது.

கசேந்திர குமார் எழுதிய இன்னொரு நாடகம் 'சிவசக்தி', இந்நாடகத்தில் வரும் கணவன் ஒரு பெரிய கவிஞன்- மனைவி மிகச் சிறந்த பாடகி. கணவன் எழுதுகின்ற பாடல்களையெல்லாம் மேடையில் பாடிப் பாராட்டுப் பெறுகின்றாள் மனைவி. கணவனும் தன் மனைவிக்காகப் பல பாடல்களை எழுதித் தருகின்றான்; இருவரும் இணைந்து பெரும் புகழ் அடைகின்றார்கள். ஒரு சூழலில் இருவரிடையேயும் கருத்து மாறுபாடு தோன்றுகின்றது. கணவன் தன் பாடலைப் பாடுவதனால்தான் மனைவிக்குப் புகழ் என்று கூற, அவள் தான் பாடுவதனால் தன் கணவனுக்குப் புகழ் என்று கூறும் நிலை உருவாகின்றது. கருத்து மாறுபாட்டின் வளர்ச்சி இருவரையும் பிரிக்கின்றது. வேறு ஒரு பாடகர் மூலமாகத் தன் கவிதைகளை மேடையேற்றி வெற்றி நாட்டப் போவதாகக் கணவன் கூறுகின்றான். மனைவியும் வேறொரு கவிஞனின் பாடலைப் பாடிப் பாராட்டும் பணமும்

பெற முடியும் என்று சபதமிடுகிறாள். இது நாள் வரையில் ஒரே மேடையில் தோன்றியவர்கள் வேறு வேறு மேடைக்குச் செல்கின்றார்கள். இருவருக்கும் வரவேற்பு இல்லாததோடு எதிர்ப்பும் எழுகின்றது. இருவரும் இணைந்து செயல்படும் நிலையினையே கலைஞர்கள் விரும்புகிறார்கள். தங்கள் தவற்றினை இருவரும் உணர்ந்து மீண்டும் இணைகின்றார்கள். கணவன் மனைவியரிடையே தன்னால் தான் இதுநடக்கின்றது என்ற எண்ணம் இருக்கக் கூடாது. எதனையும் இருவரும் இணைந்து செய்கின்றோம் என்ற உணர்வு இருக்க வேண்டும். கணவன் மனைவி என்பவர்கள் 'சிவ சக்தியாக' இணைந்தால்தான் பலம் அதிகம் என்பன போன்ற கருத்துக்களை மையமாகக் கொண்டு இந்த நாடகம் உருவாக்கப் பெற்றுள்ளது. 'அர்த்தமுள்ள மௌனங்கள்' 1980 ஆம் ஆண்டில் மேடையேறி 1981ஆம் ஆண்டிலும் தொடர்ந்த நாடகம். 'சிவசக்தி' 1981 ஆம் ஆண்டு மேடையேறிய நாடகம்.

## பெற்றோரும் பிள்ளைகளும்

பெற்றோர்க்கும் பிள்ளைகளுக்கும் உள்ள உறவு நுண்மையானது, பெற்றோர்களை நம்பித்தான் பிள்ளைகள் இருக்கிறார்கள் என்பதும், பெற்றோர்களைப் பிள்ளைகள் காப்பாற்றுவார்கள் என்பதும் தவறுடையது என்பதனை விளக்கும் வகையில் எழுந்த நாடகம் 'பத்து வருஷ பைத்தியம்'. இந்நாடகத்தின் கதையினை அன்னம் எழுத, பரணி கோபு உரையாடல்களைத் தீட்டியுள்ளார். ஐ. என். ஏ. தியேட்டர்ஸ் குழுவினர் 1981 ஆம் ஆண்டில் தங்கள் பங்காக மேடைக்கு அளித்த நாடகம் இது.

தன் மகள் திருமணம் முடிந்த அன்றே விபத்தில் இறந்து போனதால் தந்தை பைத்தியமாகிறார். பத்து ஆண்டுகள் கழித்து அவருக்குச் சுயநினைவு வருகின்றது. அதற்குள் அவருடைய மனைவி இறந்து விடுகிறாள். பத்து ஆண்டுகளில் பிள்ளைகள் எல்லாம் திருமணம் முடித்துக் கொண்டு குடும்பம் நடத்திக் கொண்டிருக்கின்றார்கள். தந்தை திரும்பியதில் எந்தப் பிள்ளைக்கும் மகிழ்ச்சி இல்லை. வீட்டிற்கு வந்த தந்தைக்குச் சரியான வரவேற்பும் மரியாதையும் கிட்டவில்லை. எல்லோராலும் புறக்கணிக்கப் பெறுவதனை உணர்கின்றார். அதனால் மீண்டும் தனக்குப் பைத்தியம் பிடித்து விட்டது போல நடிக்கின்றார். மீண்டும் மனநல மருத்துவ மனையில் சேர்க்கப் பெறுகின்றார். ஆனால் அங்குள்ள மருத்துவர் ஒருவர் அவர்

நடிக்கிறார் என்பதனை தெரிந்து கொள்கிறார். அவருடைய வேதனையைக் கண்டு மனம் இரங்கித் தன்னுடன் வைத்துக் கொள்வதாக ஆறுதல் சொல்லி அழைத்துச் சென்றுவிடுகின்றார்.

'தோப்பில் தனிமரம்' என்பது இன்னொரு நாடகம். இதுவும் 1981 ஆம் ஆண்டில் அரங்கேறி மேடையில் தொடர்ந்து வலம் வந்த ஒரு நாடகம். பெற்றோருடன் ஒட்டி உறவாடி இருந்த பிள்ளைகள் ஒவ்வொருவரும் தங்கள் திருமணத்திற்குப் பின் தனித் தனியாகப் பிரிந்து சென்றுவிடுகின்றார்கள். இறுதியில் பெற்றோர் தோப்பில் தனி மரமாக நின்றுவிடுகின்றார்கள். இந் நாடகத்தினை இரமணி எழுதியுள்ளார். வாணி கலா மந்திர் குழுவினர் மேடையேற்றினர்.

## வேலையில்லாத் திண்டாட்டம்

வேலையில்லாத் திண்டாட்டம் என்பது இன்று ஒரு பெரிய கொடுமையாக உள்ளது. இக்கொடுமையினால் பல படித்த இளைஞர்கள் திசைமாறிப் போய் விடுகிறார்கள். 'உள்ளம் பேசுவது உண்டு' என்ற பிரபுவின் நாடகம் அப்படித் திசைமாறிப் போன ஓர் இளைஞனின் கதையினைச் சுட்டிக் காட்டும் வகையில் அமைந்திருக்கின்றது.

வேலை இல்லாமல் வேதனையுடன் இருந்த ஓர் இளைஞனுக்கு ஒரு வேலை கிடைக்கின்றது. ஆனால் அதற்கு முன்பணம் கட்ட வேண்டும் அவ்வளவு பணம் அவனிடம் இல்லை. அதனால் இடுகாட்டில் தங்கச் சங்கிலியுடன் அடக்கம் செய்யப் பெற்ற ஒரு குழந்தையின் சவப்பெட்டியைத் தோண்டி எடுத்து, அதன் உடம்பில் இருந்த தங்கச் சங்கிலியைத் திருடுகின்றான். ஆனால் அவன் மனசாட்சி அவனை விடவில்லை. அதனால் அவன் பைத்தியம் என்று மற்றவர்கள் எண்ணும் நிலைக்கு ஆளாகின்றான். சமுதாயம் அவனைப் பைத்தியமாகவே எண்ணி ஒதுக்கிவிடுகின்றது. வேலையில்லாத கொடுமை ஒரு மனிதனை எந்த அளவுக்கு ஆட்டிப் படைத்து விடுகின்றது என்பதனை மிகவும் நுணுக்கமான முறையில் பிரபு படம் பிடித்துக் காட்டியுள்ளார். மனசாட்சியோடு வாழ நினைக்கிறவனை இந்த உலகம் பைத்தியக்காரனாகவே கருதுகின்றது என்ற ஒரு கருத்தினையும் பெற வைக்கின்றார் ஆசிரியர் பிரபு.

## மூட நம்பிக்கை

மூட நம்பிக்கை சமுதாயத்தில் விளையும் பல தீய விளைவுகளுக்குக் காரணமாக அமைந்து விடுகின்றது. மூடநம்பிக்கை

யினால் சிலருடைய வாழ்வே கூடப் பாழாகிவிடுகின்றது. இக் கருத்தினைக் கொண்டே 'சொல்லடி சிவசக்தி' என்னும் நாடகம் அமைந்துள்ளது. கண்ணன் எழுதியுள்ள இந்நாடகம் மூடநம்பிக் கையினால், எப்படி ஒரு பெண்ணின் வாழ்வு பாழாக இருந்தது என்பதனை விளக்குகின்றது.

திருமணம் ஆன புதிதில் தன் மருமகளைத் தலைமேல் தூக்கி வைத்துப் போற்றுகிறார்கள் மாமியாரும் மாமனாரும். வீட்டுப் பொறுப்பும் சாவியும் அவளிடம் ஒப்படைக்கப் பெறு கின்றன. அந்த வீட்டில் ஒரு தீமை நடந்தவுடன் அவர்களே தங்கள் மருமகளின் வரவால் தான் அவை நடந்து விட்டன என்று எண்ணுகின்றார்கள். தன் இளைய மகன் சாலை விபத்தில் இறந்த தற்கும் காரணம் மருமகளின் தோஷமே என்று கருதுகின்றார்கள். அதனால் மருமகள் பிறந்த வீட்டிற்கு அனுப்பப் பெறுகின்றாள். பிறந்த வீட்டிற்கு வந்துவிட்ட மருமகள் மீண்டும் புகுந்த வீட்டிற்குப் போய்ச் சேருவதுதான் நாடகம். மிக நல்ல முறையில் அமைந்த நாடகம் இது.

## 4. மன இயல் நாடகம்

மனிதனின் மன இயல்புகளை வைத்தே நாடகம் படைக்க இயலும் என்பதனை இன்று பல ஆசிரியர்கள் மெய்ப்பித்து வரு கின்றார்கள். 'அந்தச் சில நாட்கள்' என்ற வெங்கட் எழுதிய நாடகம் இதற்கு ஒரு சான்று. தன் மகனின் சுறுசுறுப்பும் அறிவும் கண்டு மகிழ்ந்து போற்றிய பெற்றோர் முதல் மற்ற அனைவரும் அவன் சில நாட்கள் மனநல மருத்துவமனை சென்று வந்த பிறகு, அவன் செய்யும் ஒவ்வொன்றும் மனநிலை சரியில்லாமையினால் தான் என்று எண்ணுகிறார்கள். சில நாள் மருத்துவ மனையில் இருந்த தன்னை மற்றவர்கள் இவ்வாறு நினைப்பது கண்டு அவன் மனவேதனை அடைகின்றான். இத்தகைய நுண்மையான கருத் தினைக் கொண்டு விளங்குவது அந்தச் சில நாட்கள்.

### புலி வருது புலி

இதுவும் மன இயல் அடிப்படையில் எழுந்த நாடகம் என்றே கூற வேண்டும். 'புலி வருது, புலி வருது' என்று அனைவரையும் ஏமாற்றி வந்த ஒருவன், உண்மையிலேயே புலி வந்த அன்று எவ்வளவு கத்தியும் யாருடைய உதவியும் கிடைக்காமல் புலிக்கு இரையானான் என்னும் ஒரு பழங்கதை. இக்கதையினைக் கருவாக வைத்து 'நாலு பேருக்கு நன்றி' என்ற நாடகத்தினைப் படைத்துள்ளார் ரங்கா.

இந்த நாடகத்தின் கதைத் தலைவன் பாபு. அவன் ஒவ்வொரு ஏப்ரல் முதல்நாளிலும் எப்படியாவது மற்றவர்களை முட்டாளாக்குவதில் ஆர்வம் மிக்கவன். ஓர் ஏப்ரல் முதல் நாளில், தன் நண்பர்களுடன் இணைந்து, ஊரில் உள்ள எல்லாப் பெரிய மனிதர்களையும் முட்டாளாக்க வேண்டும் என்று முடிவு செய்கிறான். அதற்காகத் தனக்குத் திருமணம் நடக்கப் போவதாக (ஏப்ரல் 1ஆம் தேதி) அழைப்பிதழ் அச்சடித்து அனைவருக்கும் கொடுக்க எண்ணுகின்றான். அவன் தன் நண்பர்களுடன் இணைந்து கற்பனையாக ஓர் ஊர் உருவாக்கி, அந்த ஊரில் உள்ள சுந்தரேசன் மகள் அலமேலுவுக்கும் தனக்கும் திருமணம் நடைபெறப் போவதாக அழைப்பிதழ் தயார் செய்கின்றான். ஒரு திருமண மண்டபமும் தயார் செய்து வைக்கிறான். அவன் கற்பனையில் கண்டு பிடித்த ஊர் சலகண்டபுரம். அந்தச் சலகண்டபுரத்தில் உள்ள சுந்தரேசன் மகள் அலமேலு. அவள்தான் [மணப்பெண். பாபு எண்ணிய வண்ணம் எல்லோரும் ஏமாறுகின்றார்கள்.

ஆனால், இவன் கற்பனையாக உண்டாக்கிய சலகண்டபுரம் என்ற ஊர் உண்மையிலேயே இருக்கின்றது. அந்த ஊரில் சுந்தரேசன் என்பவருக்கு ஒரு பெண் இருக்கின்றாள். அவள் பெயர் அலமேலு. இவர்கள் பொய்யாக அச்சிட்ட அழைப்பிதழால் அலமேலுக்கு நடக்க இருந்த திருமணம் தடையாகிறது. தந்தை சலகண்டபுரம் சுந்தரேசன் கோபமடைகின்றார். பாபுவைப் பழி வாங்க எண்ணுகின்றார். பாபுவுக்கும் அலமேலுவுக்கும் திருமணம் என்று மீண்டும் அழைப்பிதழ் போடுகின்றார். இந்தத் திட்டத்திற்குத் திருமண மண்டப மேலாளரும் உதவுகின்றார். இந்த அழைப்பிதழிலும் ஏப்ரல் முதல் நாளே திருமண நாளாகக் குறிக்கப் பெற்றிருக்கின்றது. தன்னால் ஒரு பெண்ணின் வாழ்வு சீரழிந்தது என்பதனால் பாபு இந்தத் திருமணத்திற்கு ஒத்துக் கொள்கின்றான். திருமண நாளன்று சுந்தரேசன் தன் தங்கை மகனைத் தாலி கட்டச் சொல்லி பாபுவை முட்டாளாக்குகின்றார். இந்த மாபெரும் ஏமாற்றத்தினைப் பாபுவால் தாங்கிக் கொள்ள இயலவில்லை. அதனால் தற்கொலை செய்து கொள்கிறான்.

பாபுவின் 'தந்தை தொலைபேசியின் மூலம் எல்லோருக்கும் தன் மகன் தற்கொலை செய்து கொண்டதனைச் சொல்கின்றார். ஆனால் யாரும் நம்பத் தயாராக இல்லை. அவரும் ஏப்ரல் முதல் நாளில் முட்டாளாக்குவதற்காக அவ்வாறு கூறுவதாகவே

அனைவரும் எண்ணுகிறார்கள் யாருமே வராததால் நான்கு கூலி ஆட்களை வைத்துத் தன் மகனின் இறுதிச் சடங்குகளைச் செய்து முடிக்கின்றார். அந்த நாலு பேருக்கும் நன்றி கூறுகின்றார்.

## 4. நகைச்சுவை நாடகம்

கொள்கையும் குறிக்கோளுமின்றி சிரிப்பூட்டும் துணுக்கு களையே மாலையாக்கி, நாடகம் காணவருவோரைச் சிரிக்க வைப்பது என்ற ஒரே நோக்கத்தில் படைக்கப் பெறுவது நகைச் சுவை நாடகங்கள். இத்தகைய நகைச்சுவை நாடகங்கள்தான் இன்று மிகுதியாக உள்ளன. 1981ஆம் ஆண்டின் நாடகங்களில் பல நகைச்சுவை நாடகங்களே. அவற்றில் சில நாடகங்கள் நூற்றுக்கும் மேற்பட்ட முறை மேடையேறி வெற்றி நாடகங்கள் பட்டியலில் சேர்க்கப்பெறுகின்றன. அப்படி நூற்றுக்கு மேல் மேடையேறிய நாடகங்களுள் 'காதில பூ' என்ற நாடகமும் ஒன்று. இன்னும் 'பக்கத்து வீட்டு பாரு', 'ஒரு பெண் ஒருவீடு', 'மனஇண்டி மேரேஜ்' போன்ற பல நாடகங்களை நகைச்சுவை நாடகங்களுக்கு எடுத்துக் காட்டலாம்.

நகைச்சுவை மனிதனின் மகிழ்ச்சிக்கு வழி வகுப்பது. துன்பத்தைத் துரத்துவது. அயர்ச்சியைப் போக்கும் ஆற்றல் பெற்றது. எனவே நாடகத்தில் நகைச்சுவை இணைவது இன்றி யமையாதது. வேகமாகவும் கோபமாகவும் சொல்லும் போது ஏற்க மறுக்கும் அதே கருத்து நகைச்சுவையோடு இழைத்துச் சொல்லும் போது எளிமையாக ஏற்கப்படுதல் உண்டு. கசப்பு மருந் துக்கு மேலே இனிப்புறை போலக் கடுமையான கருத்துக்களைச் சொல்லும்போது நகைச்சுவையினை இணைத்தால் கேட்பவருக்குச் சுவையாகஇருக்கும். ஆனால் இன்றைய நகைச்சுவை நாடகங்கள் வெறும் மேலுறையாக மட்டுமே உள்ளன. உள்ளே மருந்து இருக்க வேண்டும் என்பதனை மறந்து விடுகின்றார்கள்.

## 5. அரசியல் நாடகம்

பொதுவாக இக்கால மேடை நாடகங்கள் ஒவ்வொன்றிலும் அரசியல் கருத்துக்களைக் காணலாம். புராண நாடகங்களிலும், வரலாற்று நாடகங்களிலும் கூட இடத்திற்கேற்றவாறு இக்கால அரசியல் கருத்துக்களைப் புகுத்துகின்றார்கள். குறிப்பாகப் பல நாடக ஆசிரியர்கள் அரசியல் செய்திகளை நகைச்சுவையாக இணைத்து அரங்கில் நாடகம் காண அமர்ந்திருப்பவர்களைச்

சிரிக்க வைக்கின்றார்கள். மனோகரின் புராண நாடகங்களில் நகைச்சுவைப் பகுதி அரசியலாகத் தான் இருக்கும். முழுமையாக அரசியல் பின்னணியை வைத்தே சிலர் நாடகம் படைக்கிறார்கள்.

1981 ஆம் ஆண்டில் குறிப்பிடும் வகையில் அமைந்த நாடகங்கள் சோ' எழுதிய 'நேர்மை உறங்கும் நேரம்' என்ற நாடகமும், சுஜாதா எழுதிய 'டாக்டர் நரேந்திரனின் வினோத வழக்கு' என்ற நாடகமுமே ஆகும். இந்த இரண்டும் இருவேறு கோணத்தில் முழுக்க முழுக்க அரசியலை ஆராய்கின்ற நாடகங்களாகும்.

'நேர்மை உறங்கும் நேரம்' என்ற நாடகத்தில் அரசியல் வாதிகள் சிலரின் ஏமாற்று வேலைகளாகப் பல நிகழ்ச்சிகளைக் காட்டுகின்றார் 'சோ'. சட்டத்தால் தண்டிக்கப் பெற வேண்டிய ஒருசிலர் அரசியலில் சேர்ந்து பெரிய மனிதர்களாக ஆகிவிடுகிறார்கள் என்பதனையும், சில பழைய பெரிய மனிதர்கள் 'இந்த நாடு உருப்படாது' என்று பேசிக்கொண்டு இருப்பதோடு சரி; உருப்பட ஒரு வழியும் சொல்ல மாட்டார்கள் என்பதனையும் சொல்கின்றார் ஆசிரியர்.

நாட்டைச் சீர்திருத்தும் தகுதியும் திறமையும் மிக்கக் கல்வியாளர்கள், அறிஞர் பெருமக்கள் அரசியலிலிருந்து விலகியும் ஒதுங்கியும் இருக்கின்றார்கள். அரசியலுக்கு வர மறுக்கின்றார்கள்; அஞ்சுகின்றார்கள், நல்லவர்கள், திறமையாளர்கள், தொண்டுள்ளம் கொண்டவர்கள் முன் வராமையினால் வேறு வழியின்றி தகுதி இல்லாவிட்டாலும் மீண்டும் மீண்டும் அவர்களே வேட்பாளர்களாகி வெற்றி பெறுகின்றார்கள். இதுதான் நம் நாட்டு அரசியல் நிலை என்று எடுத்துக் காட்டுகின்றார் 'சோ'.

சுஜாதா எழுதிய 'டாக்டர் நரேந்திரனின் வினோத வழக்கு' ஒரு புகழ் பெற்ற டாக்டர் மீது சாட்டப் பெறும் மூன்று குற்றச் சாட்டுக்களைப் பற்றியது. கோமாவில் படுத்திருந்த ஒரு நோயாளியை வேண்மென்றே கொன்றுவிட்டார் என்பது முதல் குற்றச்சாட்டு. தன் மருத்துவமனையில் வேலை பார்க்கும் ஒரு இளம் பெண்ணுடன் தகாத முறையில் உறவு வைத்திருந்தார். அந்த உறவு மூலம் உண்டான குழந்தையை மருத்துவமனை சட்ட திட்டங்களுக்குப் புறம்பாகக் கலைத்துவிட ஏற்பாடு செய்தார். இது இரண்டாவது குற்றச்சாட்டு. ஒரு சிறுவனுக்கு, அவன் உடம்புக்கு ஒத்துக் கொள்ளுமா ஒத்துக் கொள்ளாதா என்று பரிசோதிக்காமலேயே, வேறு டாக்டர்கள் பயன்படுத்த அஞ்சுகின்ற ஒரு மருந்தினை ஊசி மூலம் செலுத்தி, வேண்டுமென்றே அவனைக் கொன்றுவிட்டார் என்பது மூன்றாவது குற்றச்சாட்டு.

இந்த மூன்று குற்றச்சாட்டுகளையும் டாக்டர் ஒத்துக்கொள்கின்றார். அதற்கு டாக்டர் கூறும் காரணம், இந்த வழக்குத் திட்டமிடப் பெற்ற ஒன்று என்பதுதான். டாக்டரின் மன நிலையினை உணர்ந்த இரண்டு வழக்கறிஞர்கள் டாக்டரை காப்பாற்ற முயல்கின்றார்கள் எல்லா வகையான சாட்சிகளும் தயாராகின்றன. வழக்கறிஞர்கள் ஆராய்ந்து பார்த்த வரையில் டாக்டர் எந்தக் குற்றமும் செய்யவில்லை என்பது புலனாகின்றது. சாட்சிகள் அனைவரும் டாக்டர் நரேந்திரன் நல்லவர்; நாங்கள் அவர் பக்கம் சாட்சி சொல்லுகின்றோம் என்று உறுதியளிக்கின்றார்கள். பிள்ளையை இழந்த பெற்றோரும், டாக்டரால் கெடுக்கப் பெற்றதாகக் கூறப்படும் பெண்ணும் டாக்டரைக் காப்பாற்ற நாங்கள் முழு ஒத்துழைப்புத் தருகின்றோம் என்று வாக்குக் கொடுக்கின்றார்கள். சாட்சிகள் எல்லோரும் வழக்கு மன்றத்தில் அழைக்கப் பெறுகின்றார்கள். அத்தனை பேரும் டாக்டருக்கு எதிராகவே வாக்கு மூலம் தருகின்றார்கள். வழக்கறிஞர்கள் புரியாமல் குழம்புகிறார்கள். அதன் பிறகுதான் தெரிகிறது ஓர் அரசியல்வாதி அத்தனை பேரையும் ஒரே நாளில் மாற்றிவிட்டார் என்று.

இவ்வளவுக்கும் காரணம், டாக்டர் நரேந்திரனுக்கு அடுத்த நிலையில் இருந்த ஒருவருக்குப் பதவி உயர்வு கொடுக்க டாக்டர் நரேந்திரன் தடையாக இருக்கிறார் என்பதுதான். அடுத்த நிலையில் இருப்பவரோ அமைச்சருக்கு மிகவும் வேண்டியவர். அதனால் திட்டமிட்டு ஒரு சதி வலையைப் பின்னினார்கள். சட்டம் பயின்ற வழக்கறிஞர்களால் ஒன்று செய்ய இயலவில்லை. டாக்டர் நரேந்திரன் தண்டிக்கப்படுகின்றார்.

'சோ' தன் நாடகத்தில் அரசியல் சூழல்களை உள்ளது உள்ள படி எடுத்துச் சொல்ல நினைக்கின்றார். சுஜாதா அரசியல் சூழல்களை வேறு நிகழ்ச்சிகளின் துணையால் சுட்டிக் காட்டுகின்றார. மொத்தத்தில் அரசியல்வாதிகளைத் தாக்குவதில் 'சோ'வை விட சுஜாதா கொஞ்சம் அதிகமான வேகத்தைக் கையாண்டுள்ளார். 'சோ' நகைச் சுவையாகச் சொல்வதனை, சுஜாதா உணர்ச்சிப் பொங்கும் ஆத்திரத்தோடு கூறுகின்றார்.

## 7. திகில் நாடகம்

இந்த வகை நாடகம் மிகவும் அருகிய வழக்காக உள்ளது. 1980ஆம்ஆண்டு மேடையேறி 1981ஆம் ஆண்டில் பலமுறை நடிக்கப்

பெற்ற 'ஒரு கொலை ராகம்' இந்த வகையில் அமைந்த ஒரு நாடகம். இந்த நாடகத்தினை 'ராது' எழுதியுள்ளார். 'நவ்ரங் ஆர்ட்ஸ் தியேட்டர்ஸ்' குழுவினரால் நடிக்கப் பெற்றது.

எப்படியும் பணக்காரனாக ஆக வேண்டும் என்ற எண்ண முடைய இளைஞனின் வீட்டில் ஒரு பெரும் பணக்காரன் பெட்டி நிறைய பணத்துடன் வந்து தங்குகின்றான். பணத்தின் மீதிருந்த ஆசையினால் அவனைக் கொலை செய்து விடுகின்றான் இளைஞன். இறந்தவனைத் தேடி அவன் மனைவியும் குழந் தையும் அங்கு வந்து சேருகின்றார்கள். அவர்கள் மூலம் இறந் தவன், சிறுவயதில் ஓடிப் போய்விட்ட தன் அண்ணன் என்பதனை அறிகின்றான் இளைஞன். இருந்தாலும் பண ஆசையினால் அவர் களை ஏமாற்ற முயன்று வருகின்றான். இந்த நேரத்தில் இறந் தவனின் பெண் குழந்தை தன் கெட்டிக்காரத் தனத்தினால் அப்பாவின் பெட்டி அங்கு இருப்பதனைக் கண்டுகொள்கின்றாள். அதனால் அந்தக் குழந்தையையும் கொல்ல முயற்சி நடக்கிறது. மின்விசை இணைக்கப் பெற்ற நாற்காலியில் உட்கார வைத்துத் தீர்த்துக் கட்ட முயல்கிறான். குழந்தையின் கெட்டிக்காரத் தனத்தினால் அவனே பலியாகின்றான். இதுதான் 'ஒரு கொலை ராகம்' இந்நாடகம் அமைந்திருக்கும் முறையும், பாத்திரங்கள் செயல்படும் முறையும் திடுக்கிட வைக்கும் தன்மையுடையன.

## 8. வேட்கை வளர்ப்பு நாடகம்

காண்பவரின் வேட்கையினைத் தூண்டும் வகையில், துப்பறியும் முறையில் சில நாடகங்கள் 1981ஆம் ஆண்டில் மேடை யேறியுள்ளன. நல்ல வரவேற்பையும் பெற்றன. ஆர். கே. இராமன் எழுதிய 'செக் அண்ட் மேட்'; பிரபு எழுதிய 'டிரம்ப் கார்ட்' ஆகிய இரண்டு நாடகங்களும் இந்த வகையில் சிறந்த நாடகங்கள். 1980ஆம் ஆண்டு மேடைக்கு அறிமுகமாகி 1981ஆம் ஆண்டில் பல முறை நடிக்கப் பெற்ற நாடகங்கள் அகஸ்டோவின் 'இருட்டல்ல நிழல்', ராதுவின் 'மண்ணில் தெரியுது வானம்', ஜி. கே வேலுவின் 'நமக்குள் இருக்கட்டும்' முதலியன. இவையும் வேட்கை வளர்ப்பு நாடகங்களாக அமைந்து காண வந்தவர்களின் வேட்கைக்கு விருந்தாக அமைந்தன.

## 9. செய்தி நாடகம்

நாட்டில் எங்காவது நடைபெற்ற, மற்றவர்கள் உள்ளத்தைத் தொட்ட ஒரு செய்தியினையே கருவாக வைத்து நாடகம்

படைப்பது அண்மைக் காலத்தில் ஒரு புதுமையாகக் கருதப் பெறு கின்றது. அந்தச் செய்தியால் உண்டான மாற்றங்களையும் மற்ற நிகழ்ச்சிகளையும் தொகுத்து ஆசிரியர் தம் எண்ணத்தைக் குழைத்து நாடகமாக ஆக்குகிறார். இத்தகைய நாடகங்கள் தமிழில் குறைவு என்றே கூற வேண்டும். குறைவு என்பதனைக் காட்டிலும் இன்னும் முறையாக அறிமுகமாகி வளரவில்லை என்றே கூறலாம்.

1980 ஆம் ஆண்டின் இறுதியில் மேடையேறி 1981 ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் வரை மிகப் பரபரப்போடு பலமுறை மேடையில் வலம் வந்த 'தண்ணீர்! தண்ணீர்!' நாடகம் இத்தகைய செய்தி நாடக வகையில் அமையும் தகுதி பெற்றது. செய்தி நாடகத் துறைக்கு முன்னோடியாக அமைந்த கோமல் சுவாமி நாதன் 'தண்ணீர்! தண்ணீர்!' முதல் தரமான நாடகமாகவும் அமைந்தது. 'தங்கள் ஊருக்கு யாரும் எந்த நன்மையும் செய்ய வில்லை என்பதற்காகவும், தங்கள் கோரிக்கைகள் கவனிக்கப் பெற வில்லை என்பதற்காகவும் ஒரு சிற்றூரைச் சார்ந்த சில நூறு பேர் களில் ஒருவர்கூட வாக்குச் சாவடிக்கு வந்து தங்கள் வாக்கினை அளிக்கவில்லை என்பது செய்தி. கோமல் சுவாமிநாதனின் 'தண் ணீர் தண்ணீர்' நாடகத்தின் கரு இதுவே. தங்கள் ஊரில் தண்ணீர் கிடைக்கவில்லை என்பதற்காக அத்திப்பட்டி என்ற சிற்றூரைச் சேர்ந்தவர்கள் தேர்தலைப் புறக்கணிப்பதும், அதற்கு முன்னும் பின்னும் அவர்கள் வாழ்க்கையில் நிகழும் நிகழ்ச்சிகளுமே இந் நாடகத்தின் முழுப்பொருளாக அமைந்துள்ளது. இந்த நாடகம் திரைப்படமாகவும் வெளிவந்து வெற்றி கண்டது.

இந்த வகையில் வேறு நாடகங்கள் உண்டா என்று தேடு கின்றபோது கிடைத்த இன்னொரு மேடை நாடகம் 'பலூன்'. இந்நாடகத்தினை ஞாநி எழுதியுள்ளார். இந்நாடகம் பரீட்சா குழுவினரால் மேடையேற்றப் பெற்றது. அச்சாகி நூல் வடி விலும் கிடைக்கின்றது. பேருந்து கட்டணம் ஏற்றப்பட்டது தவறு என்று புதுவகையான பலூன் போராட்டத்தைச் சில இளைஞர்கள் நடத்துகின்றார்கள். அதன் விளைவு என்ன என்பதனை விளக்கும் வகையில் ஆசிரியர் தன் கற்பனையையும் இந்த நாட்டுச் சூழலையும் பிணைத்து நாடகமாக ஆக்கியுள்ளார்.

இதுகாறும் கூறப்பெற்றவை 1981 ஆம் ஆண்டு மேடை நாட கங்கள் பற்றிய செய்திகளின் தொகுப்பு ஆகும். இங்கே எடுத்துக்

காட்டுக்காகச் சில நாடகங்கள் மட்டுமே வகைக்கு ஒன்று அல்லது இரண்டாக மேற்கொள்ளப்பெற்றன. சுமார் நூற்று அறுபது நாடகங்கள் 1981ஆம் ஆண்டு மட்டுமே மேடையேறியுள்ளன. அவையன்றி அதற்கு முன்னர் மேடையேறி தொடர்ந்து நடத்தப் பெற்ற நாடகங்களையும் சேர்த்துப் பார்த்தால் சுமார் இரு நூறுக்கும் மேல் எண்ணிக்கை பெருகும். அத்தனை நாடகங் களையும் தனித்தனியாகக் குறிப்பிடுவது என்பது இயலாத ஒன்று என்பதனால் 1981 ஆம் ஆண்டு சென்னை மாநகரில் மேடையேறிய எல்லா நாடகங்களையும் அகரவரிசைப்படி பின்னிணைப்பாகக் கொண்டுள்ளது இக்கட்டுரை. இனி, இந்த ஓராண்டு நாடகங்கள் குறித்து ஆய்வு நோக்கில் சில செய்திகளைக் காண்பது பொருந்தும்.

## நாடக நடை

'நாடக நடை' என்கின்ற இத்தலைப்பில் உரையாடல்களை மட்டுமே கொண்டு சில கருத்துக்களைக் காணலாம். இன்றைய நாடகங்களின் உரையாடல்கள் பற்றிக் குறிப்பிட்டே ஆகவேண்டும். இங்கே குறிக்கப் பெறும் இக்கருத்துக்கள் 1981-ஆம் ஆண்டில் மேடையேறிய நாடகங்களுக்கு மட்டுமே பொருந்தும் என்ப தில்லை. அண்மைக்கால நாடகங்கள் எல்லாமே இந்த நோக் கினையே பின்பற்றி வந்துகொண்டிருப்பதனைக் காணமுடிகின்றது.

உரையாடலில் ஆங்கிலத்தின் பங்கும், பிறமொழிகளின் பங்கும் மிகுதி ஒரு சில நாடகங்களில் தமிழைவிட மற்றமொழிச் சொற்களே அதிகமாக இருக்கும் என்று எண்ணுகின்ற வகையில் மொழிக் கலப்பு நிகழ்ந்துவருகின்றது. எடுத்துக்காட்டுக்கு ஞாநி எழுதிய 'பலூன்' என்ற நாடகத்தினைச் சொல்லலாம். இந்த நாடகத்தினை எடுத்துக்காட்டுக்காகக் கொள்வதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று இந்நாடகத்தில் ஆங்கிலமும் பிற மொழியும் கலந்துள்ள அளவு மிக மிக அதிகம். மற்றொன்று இந் நாடகம் நூல் வடிவில் கிடைக்கின்ற ஒன்றாக இருக்கின்றது. இந் நாடகத்தில் ஞாநி சரிக்குச் சரியாகத் தமிழ்ச் சொற்களைப் பயன் படுத்தியிருக்கின்றாரா என்பதே ஐயமாக இருக்கின்றது. அப்படிப் பாதிக்கும் குறைவாக உள்ள தமிழ்ச் சொற்களும் அடையாளம் தெரியாதவாறு சிதைக்கப் பெற்றுப் பின்னரே பயன்படுத்தப் பெறும் வாய்ப்பினைப் பெற்றுள்ளன. ஆங்கிலச் சொற்களும் வரி களும் தாராளமாகக் கையாளப் படுவதுடன் சில இடங்களில் முழுமையும் ஆங்கிலமாகவும் அமைந்துள்ளதனைக் காண்

கின்றோம். ஞாநி போன்ற மொழிக்கலப்பாளர்களும், தமிழ்ச் சிதைப்பாளர்களும் மேடை நாடகத்தின் போக்கினை மாற்றிப் புதுமையும் புரட்சியும் செய்யப் போவதாக வேறு மார்தட்டிக் கொண்டிருப்பதனைக் காணுகின்றோம்.

பிராமணர்கள் தங்கள் வீட்டில் பேசிக்கொள்கின்ற ஒருவகை யான 'பிராமணத் தமிழ்' நடையினையும் மேடை நாடகங்களில் மிகுதியாகக் காணமுடிகின்றது. பிராமணர்கள் பேசுவதுபோன்ற உரையாடல் இடம் பெறுவது தவறு அன்று; ஆனால் முழுமையும் பிராமணர்கள்பேசுவது போன்றே அமைவதுதான் தவறு. பெரும் பாலான நாடக ஆசிரியர்கள் பிராமணர்களாக இருப்பதனால் இந்த நிலை இருக்கிறது என்றாலும், நாடகம் பொதுமையான நல்ல தமிழ் நடையில் எழுதப் பெறுதல்தான் சிறப்பு. எங்களுக்கு இந்த வகை உரைநடையில்தான் எழுத இயலும் என்றோ, இப்படி எழுதுவதுதான் எங்கள் குறிக்கோள் என்றோ இவர்கள் பிடி வாதம் பிடிக்காமல் பொதுமையாக எழுத இனியேனும் முயல வேண்டும். அதுதான் தமிழ் நாடகக் கலைக்குத் தொண்டு செய்யும் முறை.

## நாடகத் தலைப்பு

தமிழ் நாடகத்திற்குத் தமிழில்தான் தலைப்பு அமைய வேண்டும். அதுதான் சிறப்பு, ஒரு நாடகம் தலைப்பிலேயே பிறரைக் கவரும் வண்ணம் தலைப்பு நுண்மையும் சிறப்பும் உடையதாக அமைக்கப் பெறல்வேண்டும். மற்றவர்களைக் கவர வேண்டும் என்பதற்காகத் தலைப்பில் தமிழை இடம் பெறச் செய்யாமல் இருப்பது கேலிக்குரியதாகும். 1981-ஆம் ஆண்டில் 'செக் அண்ட் மேட்', 'டிரம்ப் கார்ட்' என்ற இரண்டு நாடகங்கள் ஆங்கிலத் தலைப்புடனும், 'மன இண்டி மேரேஜ்' என்ற நாடகம் தெலுங்குத் தலைப்புடனும் மேடையேறியுள்ளன. தமிழ் நாடக ஆசிரியர்களுக்கு இந்த அளவுக்கு வேற்று மொழிக் காதல் இருப்பது தவறு.

ஆங்கிலத்தையும், ஆங்கில ஆதிக்கத்தையும் அடியோடு வெறுத்தவன் பாரதி, ஆங்கிலேயனின் அடிமைத் தளைகளை உடைத்தெறியத் துடித்த தமிழ்க் கவிஞன் அவன். அத்தகைய விடுதலைக் கவிஞனின் வாழ்க்கை நிகழ்ச்சிகளை மையமாகவைத்து இன்று அனைவரும் அறிந்த திரைப்படக்கவிஞர் வாலி நாடகம் படைத்துள்ளார். அவர் சூட்டியுள்ள தலைப்பு 'இண்டியா டுடே',

அரங்கேறியது 1982-ஆம் ஆண்டு சனவரித் திங்கள். இன்று, (வாலியின் நாடகத்தில் மீண்டும் பாரதி இம்மண்ணுலகத்திற்கு, குறிப்பாகத் தமிழகத்திற்கு வருவது போல்) பாரதி மீண்டும் தமிழகத்திற்கு வந்தால் இந்தக் கவிஞர் வாலியின்மீது எப்படிக் கவிதை எழுதுவார் என்று எண்ணிப் பார்க்கத் தோன்றுகின்றது. ஒரு கவிஞனின் வாழ்க்கையினை ஒட்டி எழுந்த நாடகம் 'இண்டியா டுடே' என்று அமைவது எந்த வகையில் தமிழுக்கும், அந்தத் தமிழ்க் கவிஞனுக்கும் பெருமை சேர்க்கும் என்று புரியவில்லை.

## கருத்துப் போட்டிவேண்டும்

இரண்டு மூன்று என்று விரல்விட்டு எண்ணிச் சொல்லுகின்ற அளவில் சில நாடகங்கள் தவிர மற்ற எல்லாம் ஒரு போக்குடையனவாகவே அமைந்திருக்கின்றன. கோமல் சுவாமிநாதன், சோ, சுஜாதா, அகஸ்டோ, பிரபு, போன்றவர்கள் மட்டுமே தனித்தன்மையில் இயங்கியுள்ளார்கள். பெரும்பாலானவர்கள் நகைச்சுவையினைக் குவித்தே நாடகம் எழுத முயன்றுள்ளனர். அத்தகைய நகைச்சுவையில் போற்றும் தரத்தன குறைவே. இன்னும் சிலர் ஒருவகையான நாடகத்திற்கு வரவேற்பு இருந்தால் அதே வகையில் எழுத முயன்றுவருகின்றார்கள். குறிப்பாக பிராமணர் இல்லத்துத் தகராறுகளே பெரும்பாலான நாடகங்களின் கருவாகவும் கருத்தாகவும் அமைந்துள்ளன.

கருத்து வளத்தால் உயர்ந்து நிற்கும் வகையில் சிறந்த நாடகங்களைப் படைக்கவேண்டும் என்ற போட்டி உணர்வு நாடகம் எழுதுவாரிடையே எழவேண்டும். கருத்துப் போட்டியே கலையின் வளர்ச்சிக்குப் பெரிதும் துணை நிற்கும். ஓராண்டு நாடகங்களை ஆராயும் நிலையில் குறைந்தது பத்து நாடகங்களாவது உலக அரங்கில் நிற்கும். தன்மையுடையன என்று சொல்லும் தகுதியும் பெருமையும் பெற்றனவாக அமைதல் வேண்டும். அத்தகைய சிறந்த நாடகங்கள் அமையவேண்டுமாயின் அனைவரும் ஏற்கும் பொதுமையான உயர்ந்த கருவினை, உலகப் பொதுமையான ஒன்றினை மையமாகக் கொண்டு நாடகம் படைக்கவேண்டும்.

## புதிய உத்திகள்

மேடை நாடக வளர்ச்சியில் பல்வேறு உத்திகள் இடம் பெற்று வருகின்றன. நாடகத்தைச் சிறப்பாக அமைக்கவேண்டும் என்ற

எண்ணத்தில் அவ்வப்போது சில புதுமைகளைக் கையாண்டு வரு கின்றனர். அந்த வகையில் மனோகர் அறிமுகப்படுத்திய அகன்ற மேடை உத்திக்குத் தனி வரவேற்பிருப்பதனை நாம் அறிவோம். இதுபோன்ற பல்வேறு உத்திகளைப் பலரும் தொடர்ந்து கையாண்டு வருவதனால்தான் தமிழ் நாடகம் இன்று ஓரளவுக்கு தலைநிமிர்ந்து நிற்கமுடிகின்றது. ஒவ்வோர் ஆண்டும் ஏதாவது ஒரு புதுமையினைக் காணலாம். அந்த வகையில் இந்த ஆண்டு மனோகர் தன் 'சிவதாண்டவம்' நாடகத்தின் மூலம் ஒரு புதிய உத்தியினைப் புகுத்தியுள்ளார்.

'சிவதாண்டவம்' நாடகத்தில் சிவபெருமான் காளியுடன் போட்டியிட்டு நடனமாடும் ஒரு காட்சி அமைகின்றது. அக்காட்சி யின் போது 'ஸ்ட்ரவோ ஸ்கோப்' என்ற முறையில் ஒரு வகையான ஒளியினை மேடையில் பாய்ச்சுகின்றனர். அந்த ஒளி பட்டவுடன் மேடையில் இருக்கின்ற கதை மாந்தர்களின் கை ஒரு முறை அசைந்தால் அது பல முறை வேகமாக அசைவது போன்ற ஒரு தோற்றம் உண்டாகும். சிவனும் காளியும் நடனமாடும் காட்சியில் இந்த வேக மின்னொலியைப் பாய்ச்சும் போது, உண்மையிலேயே சிவபெருமானும் காளியும் வந்தால்கூட இவ்வளவு வேகமாக ஆடியிருப்பார்களா என்று ஐயுறும் அளவுக்கு அந்தக் காட்சி அமைகின்றது. இம்முறையினை இன்று வேறு சில நாடகங்களிலும் பயன்படுத்தத் தொடங்கியிருக்கின்றார்கள். இந்த உத்திதான் 1981 ஆம் ஆண்டுத் தமிழ்மேடை நாடகம் கண்ட புது உத்தி யாகும்.

## குழுக்களும் மன்றங்களும்

மன்றங்கள் என்று இங்குக் குறிக்கப் பெறுவது சென்னை யிலுள்ள சபாக்களையே. 1981 ஆம் ஆண்டில் நாடகத்தை மேடை யேற்றிய குழுக்களின் எண்ணிக்கை நூற்றுக்கும் மேல் என்றாலும், மன்றங்களின் ஆதரவினைப் பெற்றுத் தொடர்ந்து செயல்பட்டவர் களின் எண்ணிக்கை மிகக் குறைவே இம்மன்றங்கள் தங்கள் நிலை யான உறுப்பினர்களைக் கொண்டுள்ளதால் அரங்க வாயிலில் வாசூல் செய்யும் நிலையில்லாமல் நாடகங்களை நடத்தும் வாய்ப் பினைப் பெற்றுள்ளன. எனவே இவர்களின் ஆதரவு குழுக்களுக்குத் தேவைப்படுகின்றன. இன்று சென்னையில் மட்டும் உள்ள மன்றங் களின் எண்ணிக்கை நூற்றுக்கும் மேல் விரிகின்றன. இம் மன்றங் களின்துணையின்றி நாடகம் நடத்துவது என்பது இன்று அவ்வளவு எளிதாக இயலாத ஒன்று.

மன்றங்கள் நாடக வளர்ச்சிக்குத் துணை புரியவில்லை, தடையாக இருக்கின்றன. அவற்றை ஒதுக்கித் தள்ள வேண்டும் என்ற கருத்தும் அதற்கு மாறான கருத்தும் இந்த ஆண்டில் பெருமளவில் பலராலும் பரிமாறிக் கொள்ளப்பட்டன. எதிர்த்தவர்கள் பின்னர் இணைந்துபோய்விட்டார்கள். பொதுவாக மன்றங்கள் நாடகக் குழுக்களை ஆதரிக்கின்றன என்பதில் கருத்து மாறுபாடு இல்லை. அவற்றின் செயல்பாடுகளில் சில தவிர்க்க வேண்டிய குறைகள் இருப்பதாகச் சுட்டிக் காட்டப் பெறுகின்றன. அவற்றைக் களைவதில் மன்றங்கள் கவனம் செலுத்தினால் இன்னும் பயன் மிகும்.

## புதிய இயக்கங்கள்

தமிழ் நாடகம் ஒரு போக்கில் போய்க்கொண்டிருக்கிறது. அதன் போக்கில் புதுமையும் இயல்புத் தன்மையும் இல்லை. தமிழ் நாடகம் உண்மையினைப் படம் பிடித்துக் காட்டும் கலையாக மாற வேண்டும். அந்த முறையில் நாங்கள் செயல்படப் போகிறோம். என்ற குறிக்கோளுடன் சில புதிய இயக்கங்கள் அண்மைக் காலங்களில் தமிழகத்தில் தோன்றியுள்ளன. பரீட்சா குழுவினர், நிஜநாடகக் குழுவினர் போன்றவர்கள் இத்தகைய புதிய இயக்கத்தினர்களாவர். பரீட்சா குழுவினர் சென்னையில் தொடர்ந்து பல நாடகங்களை மேடையேற்றியுள்ளனர். 1981 ஆம் ஆண்டில் அவர்கள் மேடையேற்றிய நாடகம் 'பலூன்'. தமிழ் நாடகத்துறையில் புதுமையும் புரட்சியும் காண விழைவதாகக் கூறிக் கொள்ளும் இவர்களின் இந்த நாடகத்தில், தமிழ் உரையாடல்களை நாம் தேடித்தான் காணவேண்டியுள்ளது. இந்நிலையில் இவர்களின் நோக்கம் ஒரு புதிராகவே உள்ளது. பொறுத்திருந்துதான் பார்க்க வேண்டும்.

## நாடகமும் தாளிகைகளும்

தமிழில் நாளிதழ்கள், வார இதழ்கள், மாத இதழ்கள் என்று வரும் தாளிகைகளின் எண்ணிக்கை ஏராளம். இந்த அளவுக்கு எண்ணிக்கை இருந்தும் தமிழ் நாடகங்களுக்கு இந்தத் தாளிகைகளில் கொஞ்சமும் இடமில்லை. தமிழில் ஆனந்த விகடனும், ஆங்கில இதழ்களில் 'இந்து'வும் ஓரளவுக்குத் தொடர்ந்து நாடகங்கள் பற்றிய மதிப்புரைகளை வழங்கி வருகின்றன. தமிழ்த் தாளிகைகள் நாடகக் கலையின் மீது கவனம் செலுத்த வேண்டும். ஒவ்வொரு தாளிகையிலும் ஒரு பக்க அளவாவது நாடகம் பற்றிய செய்திகளைப் போட முன் வரவேண்டும்.

## நிறைவுரை

பொதுவாக 1981-இல் தமிழில் பல மேடை நாடகங்கள் தோன்றியிருந்தாலும் குறிப்பிட்டுச் சொல்லும் திறத்தனவாக ஒருசில மட்டுமே அமைந்துள்ளன. மேடை நாடகம் மேலும் மேலும் சிறப்புற வேண்டுமாயின் பலரும் இக்கலைக்குத் தொண்டாற்ற முயலவேண்டும். தமிழ்ப் பயின்றவர்கள் பலர் நாடகாசிரியர்களாக அமைதல் வேண்டும். தமிழ் அறிஞர்கள் பல்கலைக் கழகங்கள், இக்கலை மீது கவனம் கொள்ள வேண்டும் அரசும் ஆர்வத்தோடு ஆவன செய்ய முன்வர வேண்டும். இவை யெல்லாம் நடந்தால் நாடகக் கலை நல்ல வகையில் மேன்மை எய்த வழியுண்டு.

## பின்னிணைப்பு

### 1981 ஆம் ஆண்டு சென்னையில் மேடையேறிய நாடகங்கள்

1. அட்டகாசம்
2. அடா அபிஸ்டு
3. அடாவடி அம்மா கண்ணு
4. அணைந்த தீபம்
5. அந்தச் சில நாட்கள்
6. அந்த மூன்று நாட்கள்
7. அய்யப்பன்
8. அய்யர் ஆத்தில் ஒரு ஆயிசா
9. அர்த்தமுள்ள ராகங்கள்
10. அல்லலும் ஆசையும்
11. அலைகள் ஓய்ந்த போது
12. அலையும் நெஞ்சம்
13. அவசரக் கல்யாணம் அவசியம் வாங்க
14. அவள் ஒரு ராகம்
15. அவளுக்கென்ன ராஜாத்தி
16. அழியாத காவியம்
17. அழியாத நினைவுகள்
18. அறிமுகம்
19. ஆண்டவன் போட்ட முடிச்சு
20. ஆயிரம் கண் படைத்தவள்
21. இடையில் வந்த சொந்தம்

22. இடைவெளி
23. இதயத்தில் கோவில் கட்டி வைத்தேன்
24. இமைகள்
25. இராவணேஸ்வரன்
26. இருட்டறை
27. இன்னாருக்கு இன்னரென்று
28. உந்திச் சுழி
29. உள்ளம் அழுகிறது, உதடு சுடுகிறது
30 உள்ளம் பேசுவதுண்டு
31. உன் தந்தை யார்?
32. உறவுக்கு ஒரு உள்ளம்
33. உறவுகள் ஆயிரம்
34. உறவுகள் பிரிவதில்லை
35. உறவுகள் ஊஞ்சலாடுகின்றன
36. ஊஞ்சல்
37. ஊஞ்சலாடும் ராகங்கள்
38. ஊனங்கள்
39. எதுக்கும் இருக்கட்டுமே
40. எல்லைக் கோடு
41. எரிமலை
42. என் கணவருடைய மனைவி
43. ஏங்கும் நெஞ்சங்கள்
44. ஒரு சம்பவம் சிவப்பாகிறது
45. ஒரு நர்சிங் ஹோம் கோவிலாகிறது
46. ஒரு பெண் ஒரு வீடு
47. ஒரு மல்லிகைப் பூ மணம் பரப்புகிறது
48. ஒரு வட்டம் ஒரு கோடு
49. ஒரு மனிதனின் கதை
50: ஒரே ஆசை
51. ஒரே பல்லவி
52. ஔவையார்
53. கட்டபொம்மன்-81
54. கட்டியக்காரன்
55. கடல் கடந்த கங்கை
56. கடைசியில் வந்த கருங்குயில்
57. கண்டி ராஜா

58. கண்ணகியின் சபதம்
59. கம்பர் தரும் காட்சி
60. கல்வாரி
61. கலைந்த ஓவியம்
62. கற்பூர தீபம்
63. கனவு கண்டேன் கண்ணா
64. காசிக்குப் போன கணவன்
65. காதல் வந்திருச்சி
66. காதில பூ
67. கால் கட்டு
68. குட்பை டு ஊட்டி
69. குடவாயில் கோட்டம்
70. கேள்விக் குறி
71. சகாப்தம்
72. சந்திர மண்டலத்தில் சங்கர சாஸ்திரி
73. சமுதாயச் சந்தையில் ஒரு சந்தன கட்டை
74. சனீஸ்வரன்—பாகம் II
75. சாந்தி வந்தாள்
76. சாதல் இல்லையேல் காதல்
77. சித்திரமே நில்லடி
78. சிந்தப் பிறந்த ரத்தங்கள்
79. சில க்ஷணங்களில் சில முகங்கள்
80. சில வித்தியாசங்கள்
81. சிவ சக்தி
82. சிவதாண்டவம்
83. சிவன் கோயில் சிவா
84. சின்னஞ் சிறு காதல்
85. சூர்ப்பணகையின் சபதம்
86. செக் அண்ட் மேட்
87. செண்பகப் புஷ்பங்கள்
88. சொல்லடி சிவ சக்தி
89. டாக்டர் நரேந்திரனின் வினோத வழக்கு
90. டிரம்ப் கார்டு
91. தண்ணீருக்குத் தாகம்
92. தன்னைத் தானே
93. தியாக தீபங்கள்

94. திருச்சிக்கு ஒரு வாக்கிங்
95. திருந்தாத உள்ளங்கள்
96. தேவை ஒரு செகரெட்டரி
97. தோப்பில் தனிமரம்
98. நல்ல காலம் பொறந்திடுச்சி
99. நவகிரக நாயகி
100. நாக நந்தி
101. நாலு பேருக்கு நன்றி
102. நிரந்தர அடிமைகளா?
103. நில்! நில்! நில்லடி!!
104. நிலவும் சுடுகிறது
105. நீதிமன்றம்
106. நெஞ்சின் நெருப்பு
107. நெஞ்சு பொறுக்குதில்லையே
108. நிழலே உன்னை வெறுக்கிறேன்
109. நேர்மை உறங்கும் நேரம்
110. பக்கத்து வீட்டு பாரு
111. பகையிலும் பாசம்
112. பத்து வருஷப் பைத்தியம்
113. பருந்து
114. பலூன்
115. பழுத்த பலா
116. பனிநீர் மழையல்ல
117. பாட மறந்த குயில்
118. பாசக்கிளி
119. பாதை மாறிய பயணங்கள்
120. பார்வைகள்
121. பாவத்தின் நிழல்
122. பிரேமா மீண்டும் சிரித்தாள்
123. புதிய பாரதி
124. புதிய ராகம்
125. புலிகளைத் துரத்திய புள்ளிமான்
126. பூங்கதவே தாழ் திறவாய்
127. மகாகவி பாரதி
128. மங்களம் உண்டாகட்டும்
129. மன இண்டி மேரேஜ்

130. மருது பாண்டியர்
131. மலர்ந்தும் மலராத மலர்கள்
132. மறக்க முடியாத நெஞ்சம்
133. மனக்கோயில் தீபம்
134. மன சாட்சியே ஒரு நீதிமன்றம்
135. மனிதனும் மெழுகுதானா?
136. மனைவிகள் வாழ்க
137. மாப்பிள்ளை ஊர்வலம்
138. மாப்பிள்ளை மெச்சிய மாமியார்
139. மீண்டும் ஒரு பிறவி
140. முச்சந்தியில் சிறு துளி
141. முடிவுகள் முடிவல்ல
142. ராக பந்தங்கள்
143, ராசி பலன்
144. ராஜ நர்தகி
145. லெட்சுமி
146. வாசமில்லா மலர்
147. வாசமில்லா மலரிது
148. வாடிய மலர்கள்
149. வாழத்தான் வேண்டுமா?
150. வானம் பார்த்த பூமி
151. வெற்றித் திலகமே வருக
152. வேஷங்கள்
153. ஜங்ஷன்
154. ஜூலியஸ் சீசர்
155. ஸ்ரீனிவாச கல்யாணம்

# 38. நூலகர் பார்வையில் நூல்கள்

இரா. பார்வதி

1981-இல் 1121 தமிழ் நூல்கள் வெளியாகியுள்ளன. அவற்றில் முதற்பதிப்பாக வெளியானவை 995.

19ஆம் நூற்றாண்டிற்குமுன் பெரும்பாலும் சமயநூல்களே தமிழில் அச்சிடப்பட்டன. பழந்தமிழ் நூல்களைப் பாதுகாக்க வேண்டும். அந்த நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து சுவடிகள் பதிப்பிக்கப்படலாயின. தொடர்ந்து, திறனாய்வு நூல்களும் பிற துறை நூல்களும் வெளிவரலாயின. ஆய்வாளர் தங்களுக்கு ஆர்வமுள்ள துறைகளில் வெளிவரும் நூல்களின் வளர்ச்சியையும், மாற்றத்தையும் கவனிப்பர். நூலகர் அனைத்துத் துறைகளில் வெளிவரும் நூல்களைப் பற்றிய பொதுவான கண்ணோட்டத்தைக் கவனிப்பர். தமிழ்நூல்களின் வெளியீட்டுத் திறன், மொழி வளர்ச்சி, ஒவ்வோர் ஆண்டும் வெளிவரும் நூல்களின் தொகை ஆகியவற்றால் நூலகத்தின் வளம் பெருகும் என்ற கருத்தையும் அறியலாம்.

## நூலகம்

ஒருவர் கருத்தை மற்றவர்களுக்கு வெளியிடும் கருவியே நூல்கள். அவை இடம் கடந்து, காலம் கடந்து அறிவைத் தெரிவிக்க, வளர்க்க, பரிமாற, நாகரிக மேம்பாட்டின் வரலாற்றினைக் கூற உதவுகின்றன. அறிவுப்பசியைத் தணித்துக் கொள்ள நினைக்கும் அனைவரும் அனைத்துநூல்களையும் ஒருங்கேசொந்தமாக வாங்கிப் படிக்க இயலாத நிலையில் நூலகத்தை நாடி வருகின்றனர். நூலகம் தன்னுடைய அமைப்பாலும், பணியாலும் மக்களுடைய அறிவுப் பசியைத் தணிக்கிறது.

## நூலகர்

நூல்களுக்கும் வாசகர்களுக்கும் இடையே பாலமாக நூலகர் விளங்குகிறார். நூல்களைத் தொகுத்து, வகை செய்து, அவைகளைப் பயன்படுத்தும் வண்ணம் பணிபுரிவதுதான் நூலகர் பணியாகும்.

அவ்வாறு நூல்களைத் தொகுக்க உதவுவது பதிப்பாளர் (நூல்களில்) கொடுக்கும் தகவல்களாகும். ஆசிரியர் தன்னுடைய கருத்தை மட்டுமே பதிப்பாளருக்கு அளிக்கிறார். அதற்குத் தலைப்புப் பக்கம், பொருளடக்கம், அணிந்துரை, பதிப்புரை ஆகியவற்றைக் கொடுத்து முழுமையாக்கி பதிப்பாளர் நூலை வெளியிடுவர்.

## 1981-இல் தமிழ் நூல்கள்

1981-இல் வெளியிடப்பட்ட தமிழ் நூல்களின் எண்ணிக்கை வருமாறு:

துறையும் வெளியான நூல்களும்

1. அறிவியல் 13
2. ஆன்மிக நூல்கள் 18
3. இலக்கணம் 24
4. இலக்கிய வரலாறு 3
5. உரைநடை 60
6. கடிதங்கள் 7
7. கணிதவியல் 3
8. கல்வி 6
9. கலை 26
10. கவிதை 92
11. கவிதை ஆய்வு 45
12. சட்டவியல் 12
13. சமயம் 98
14. சிறுவர் இலக்கியம் 31
15. சொற்பொழிவு 4
16. சோதிடம் 18
17. தத்துவம் 43
18. திறனாய்வு நூல்கள் (கம்பன்) 18
19. திறனாய்வு (காப்பியங்கள்) 13
20. திறனாய்வு(சங்க நூல்கள்)29
21. ,, (சிற்றிலக்கியம்) 17
22. நாடகம் 29
23. நூலகவியல் 7
24. பிரயாணம் 5
25. புதினம் 255
26. புதினம் (ஆய்வு) 4
27. பொது அறிவு 6
28. பொறியியல் 18
29. பொருளாதாரம் 22
30. மருத்துவம் 42
31. மலர்கள் 16
32. மானிடவியல் 28
33. மொழிபெயர்ப்பு நூல்கள் 21
34. வரலாறு 21
35. வாழ்க்கை வரலாறு 53
36. விலங்கியல் 4
37. விவசாயம் 11

1981-இல் 1121 நூல்கள் வெளிவந்துள்ளன. அவற்றில் முதற் பதிப்பாக வெளியானவை 995 நூல்களாகும். 126 நூல்கள் மறு பதிப்பாக வெளியானவை. மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழுவினர் 26 நூல்களை இவ்வாண்டில் வெளியிட்டுள்ளனர். கி. ஆ. பெ. விசுவநாதம் எழுதிய 'தமிழ் மருந்துகள்' என்னும் நூல் 18ஆவது பதிப்பாக வெளிவந்துள்ளது.

## நூல்களின் அமைப்பும் எதிர்பார்ப்பும்

நூல்களின் அமைப்பை மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1) கட்டமைப்பு (Binding.), புறத்தோற்றம், அச்சு.
2) தலைப்புப் பக்கமும் அதன் பின்பக்கமும் (Title page and Half title page)
3) உட்பொருள் அடக்கம் (Subject Matter)

வாசகர் கையாளலைத் தாங்கக் கூடியதாக நூல் உறுதியான கட்டுப் பெற்றிருத்தல் வேண்டும். துணிக்கட்டு நூலகத்திற்கு உகந்ததாகும். இப்பொழுது அதிகமாக நூல்கள் காகிதக் கட்டு (Card board) அல்லது உறுதியான காகிதக் கட்டு (Hard card board) பெற்றுள்ளன. ஒருசில நூல்கள் காலிக்கோ கட்டுப் பெற்று இருக்கிறது. விலை காரணமாக அனைத்து நூல்களும் உறுதிக் கட்டுப் பெற்று இருப்பதில்லை. தரமான இலக்கிய நூல்களே இவ்வாறான கட்டுக்களைப் பெற்று வருகின்றன.

வரிக்கு வரி இடைவெளி விட்டு ரோமன் வடிவ எழுத்தில் அச்சிடவேண்டும்.

புதுப்படிப்பாளர்களுக்கும், குழந்தைகளுக்கும் அமையும் நூல்கள் பெரிய அளவு எழுத்துக்களில் அமைய வேண்டும். ஒவ்வொரு நூலும் ஓரத்தில் போதிய இடைவெளி கொண்டதாக இருத்தல் வேண்டும். நூல்கள் திரும்பக் கட்டுக்குப் போய் வரும் போது எழுத்து வெட்டுப்படாமல் இருக்க இது பெரிதும் உதவும்.

நூலின் கருத்து நேரிடையாக வாசகர்களைக் கவர்வது இல்லை. நூலின் தோற்றக் கவர்ச்சி (Attractive get up) ஓரள வுக்கு நூலுக்கு அவசியமாகிறது. சிறுவர்களைக் கவரக்கூடியதும், படிக்கும் ஆர்வத்தைத் தூண்டும் கவர்ச்சியான தோற்றமும், ஓவியம் அமைந்த முகப்பு ஆகும். 'ஓரியண்டல் வாட்ச்மென்

பப்ளிஷிங் ஹவுஸ்' (Oriental Watchman Publishing House) அமைக்கும் நூலின் புறத்தோற்றமும், ஓவியமும் படிக்கும் ஆர்வம் இல்லாதவர்களைக்கூடப் படிக்கத் தூண்டுகிறது. பூம்புகார் பிரசுரம், நர்மதா பதிப்பகம் போன்றன வெளியிடும் நூல்களையும் சிறப்பாகக் குறிப்பிடலாம்.

தலைப்புப் பக்கம் நூலுக்கு மிகவும் இன்றியமையாததாகும். நூலகர்களுக்கு நூல்களைப் பகுப்பதற்கும் (Classification) ஆசிரியர் பட்டியல் (Author Index), தலைப்புப் பட்டியல் (Title Index) தயாரிப்பதற்கும் இது ஒரு கருவியாகும். தலைப்புப் பக்கத்தில் பெரிய எழுத்தில் தலைப்பும், ஆசிரியர் பெயரும் (Author), தொகுப்பாசிரியர் (Editor) பெயரும், பதிப்பு செய்திருந்தால் பதிப்பாசிரியர் பெயரும், வெளியிடும் பதிப்பகத்தாரின் பெயரும் எளிமையாகவும் தெளிவாகவும் அச்சடித்தல் வேண்டும்.

தலைப்புப் பக்கத்தின் பின்புறத்தில் (Half title page) வெளியிட்ட தேதியுடன், அது முதல் பதிப்பா (அ) மறுபதிப்பா என்பதையும் குறித்தல் வேண்டும். விலை, அச்சகத்தாரின் பெயர், ஆசிரியர், பிறந்த தேதியும் முக்கியமாகத் தருதல் வேண்டும். 1981-இல் வெளியான அனைத்துத் தமிழ் நூல்களும் முழுமையான தகவல்களை அளித்துள்ளன.

நூலின் உட்பொருளின் அடிப்படையில் நூல்களைப் பொதுவாக மூன்று பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

1. இலக்கிய நூல்கள்.
2. பொழுது போக்கு நூல்கள்.
3. மனித சமுதாயத்தின் வளர்ச்சி பற்றிய நூல்கள்.

இலக்கிய நூல்களில் காப்பியங்களைப் பற்றியவை, தமிழ் மொழிவளர்ச்சி பற்றியவை, தமிழ் அறிஞர்களைப் பற்றியவை, பயணநூல்கள் ஆகியவைஅடங்கும். தமிழ்மொழி மற்றும் இலக்கிய வளர்ச்சியினைக் காட்டும் கண்ணாடியாக 'மொழி வளர்ச்சி' கம்பனும் உலகியல் அறிவும்', 'தமிழ் இலக்கியக் கொள்கை' பகுதி 6, 'தமிழர் தோற்கருவிகள்', 'தமிழர் உணவு', 'திருக்குறள் உரைக்களஞ்சியம் பாயிரவியல்', 'முத்துக் கோவை', முதலிய இலக்கிய நூல்கள் வெளிவந்துள்ளன.

இந்தியப் பல்கலைக்கழகத் தமிழாசிரியர் மன்றம் வெளியிட்ட பதின்மூன்றாவது கருத்தரங்கு ஆய்வுக் கோவை தமிழ் அறிஞர்களின் ஆய்வு உணர்வினை எடுத்துக்காட்டுகிறது. முதல்

தொகுதியில் இலக்கியக் கட்டுரைகளும், இரண்டாவது தொகுதியில் மொழி இயல், இலக்கணம் பற்றிய கட்டுரைகளும், மூன்றாவது தொகுதியில் வரலாறு, நாட்டுப்புற இலக்கியம் அறிவியல், சமூகவியல் ஆகிய பலதுறைகளில் ஆய்வுக் கட்டுரைகளும் வெளிவந்துள்ளன.

## பயண நூல்கள்

உலக நடவடிக்கைகளை அறியவும், அறிவு வளர்ச்சி, நாகரிக முன்னேற்றம் ஆகியவற்றை எடுத்துரைக்கவும், தொழிலின் அபிவிருத்தியின் வேகத்தை எடுத்துக் காட்டவும் உதவுவன இவ்வகை நூல்களாகும். ஒவ்வொருவரும் வெளிநாடுகளுக்கோ, வரலாற்றுப் புகழ்பெற்ற இடங்களுக்கோ, புண்ணிய ஸ்தலங்களுக்கோ நேரிடையாகச்சென்று காண்பது என்பது அரிதாகும். இருந்த இடத்திலேயே இருந்துகொண்டு நம்மை எங்கெங்கோ அழைத்துச் செல்வது பிரயாண நூல்களாகும். 1981-இல் வெளியான 'நான் கண்ட அமெரிக்காவும், பத்ரி கேதார் யாத்திரையும் குறிப்பிடத்தக்கன. நான் கண்ட அமெரிக்காவில் நிழற்படங்களுடன் கூடிய பயண அனுபவங்கள் சிறப்பாக அமைந்துள்ளன. பலர் பயணங்களை மேற்கொண்டாலும் மிகச் சிலரே பயண நூல்களை எழுதி வெளியிடுகிறார்கள்.

## பொழுதுபோக்கு நூல்கள்

இவ்வகையில் புதினங்கள், கவிதை நூல்கள் நாடக நூல்கள் ஆகியவை அடங்கும். சிறுவர் முதல் பெரியவர் வரை துன்பநேரத்திலும் நண்பர்களாக விளங்குவன பொழுது போக்கு நூல்களாகும். பொழுது போக்கு புதினங்களில் சமுதாய நாவல்களும், சரித்திர நாவல்களும் குறிப்பிடத்தக்கன.

சரித்திர நாவலாசிரியன் வறண்ட உண்மைகளையும் தன் கற்பனைத்திறனால் அழகுபடுத்தி ஒரு குறிப்பிட்ட கால நாகரிகத்தை உண்மையானதாகவும் மனத்தில் பதியுமாறும் செய்கிறான். 'கடல் ராணி' அரபிக்கடல் கொள்ளையரைப்பற்றியும், 'மலை அரசி' ராஜபுதன வரலாற்றின் முக்கியப் பகுதியையும் அறிந்து கொள்ளத் துணைபுரிகின்றன. நா. பார்த்தசாரதியின் 'ராணி மங்கம்மாள்' நாயக்கர் வரலாற்றைக்கூறுவதோடு அக்கால மதுரை, இராமநாதபுரம், திரிசிரபுரம் ஆகிய இடங்களின் நிலையையும் உணர்த்துகிறது.

இந்நாளில் கலைநோக்கோடும் வணிகநோக்கோடும் கூடிய புதுக்கவிதை நூல்கள் வெளியிடப்படுகின்றன நலிந்து நசுங்கிப் போன சமுதாயத்தைக் கட்டிக்காக்கும் பழமைவாதிகளுக்கு எதிராக எழுந்துள்ள புரட்சிக் கவிதை நூலாக 'விடியல் கீதம்' விளங்குகிறது. வேர்ட்ஸ்வெர்த் போன்று இயற்கைக்கு ஒரு விளக்கம் தந்துள்ளார் வாணிதாசன். மரபுக் கவிதை நூலில் பாரதிதாசனோடு ஒப்பிடும் அளவிற்கு உயர்ந்து நிற்கிறார் வாணிதாசன் (கவிதைகள் தொகுதி-2)

மனித சமுதாயத்தின் வளர்ச்சி பற்றிய நூல்களோடு சமுதாயத்திற்குப் பயன்படும் நூல்களையும் சேர்க்கலாம். கலை, கல்வி, நிலவியல். வரலாறு, பொருளாதாரம், அரசியல், மானிடவியல், அறிவியல் நூல்கள் ஆகியவற்றை இதில் சேர்க்கலாம். 'Cultural Heritage of the Tamils' எனும் நூல் தமிழர் பண்பாட்டு வளர்ச்சியைப் பற்றி 21 கட்டுரைகள் மூலம் வெளிப்படுத்தியுள்ளது. 'Literary Heritage of the Tamils' எனும் நூல் தமிழர் தம் இலக்கிய மரபுச்செல்வத்தை எடுத்துக்கூறும் வகையில் பல நல்ல ஆய்வுக் கட்டுரைகளைத் தாங்கி வெளிவந்துள்ளது.

'கல்வியின் தத்துவ, சமூக அடிப்படைகள்', 'கல்வியின் உளவியல் அடிப்படைகள்' என்னும் இரு நூல்களும் உயர் கல்வியின் அனைத்துப் பாடங்களுக்கும் பயிற்று மொழியாக்க மேற்கொள்ளப் பட்டு வரும் முயற்சியில் வெற்றி பெற்றுள்ளன.

வருங்காலச் சந்ததியினரின் வளர்ச்சிக்கு உதவும் வகையில் தரமான அறிவியல் நூல்கள் வரவேண்டும் என்ற எண்ணத்திற்கு 'அறிவியல் அதிசயங்கள்' என்னும் நூல் ஒரு வரப்பிரசாதமாக அமைந்திருக்கிறது.

## மலர்கள்

தொடர்ந்து வரும் ஆண்டு மலர்கள், நிகழ்ச்சிக்கான மலர்கள் என இருவகை மலர்கள் வெளியாகின்றன. நிகழ்ச்சிக்கான மலர்களில் ஐந்தாம் உலகத் தமிழ் மாநாட்டு மலரைக் குறிப்பிடலாம். மதுரையில் தமிழுக்கு எடுத்த பெருவிழாவில் வெளிவந்த ஐந்தாம் உலகத்தமிழ் மாநாட்டு மலர் என்றும் ஒளிவீசும் வரலாற்றுச் சின்னம் என்று கூறும் அளவிற்கு அமைந்துள்ளது. ஆய்வாளர்களின் கட்டுரைகள், தமிழுக்குத் தொண்டு செய்த பெரியவர்களின் திருவுருவப் படங்கள், கவிதைகள், ஓவியங்கள் ஆகியவற்றை இம் மலரில் காணலாம். ஆய்வாளர்களுக்கும், அறிஞர்களுக்கும் உதவு கின்ற சிறந்த மலராக இதனைக் கருதலாம்.

தொடர் ஆண்டு மலர்களில் கலைமகள் மலர் மிகச்சிறந்ததாக அமைந்துள்ளது. சிறுகதைகளைத் தவிர்த்து சிறந்த ஒன்பது கட்டுரைகளும் வெளியிடப்பட்டுள்ளன. சிறுவர் நூல்களில் ஓவியங்களுடன் கூடிய எழுத்துக்களில் அச்சிடப்படுதல் மிக முக்கியமாகும். ஒருசில நூல்களில் 'சிறந்தோர் வாழ்க்கைக் கதைகள்', 'அற்புதக் கதைகள்' ஓவியங்கள் சிறுவர்களைக் கவருவதோடு அல்லாமல் எளிதில் அக்கதையிலுள்ள கருத்தை அவர்கள் புரிந்து கொள்ளவும் உதவுகிறது. சிறுவர் கதைகள் மனதில் நல்ல கருத்துக்களைப் பதியவைக்கவேண்டும் என்னும் நோக்கோடு எழுதுவதால் அவர்களைக் கவரும் புறத்தோற்றத்தையும் ஓவியங்களையும் பெற்றிருத்தல் மிகவும் இன்றியமையாததாகும்.

நூலகப் பகுப்புக்குத் தேவையான ஆசிரியர்தம் பிறந்த தேதி அனைத்து நூல்களிலும் குறிப்பிடப்படவில்லை. இது நூலகருக்கு பகுப்புப்பட்டியல் தயாரிக்கும்போது குறியீட்டு எண் போடுவதற்கு உதவும். அந்தக் குறியீட்டு எண்மூலம் நாவலுக்குரிய ஆசிரியரை அறியலாம். 'பயனுள்ள குடும்பக் குறிப்புகள்' போன்று ஒருசில நூல்கள் முன்னுரைகள் இழந்து நிற்கின்றன. முன்னுரைகள் கற்போருக்கு ஆசிரியரை அறிமுகம் செய்து வைத்து நூல் எழுந்த காரணத்தையும் அறியும்படிச் செய்கிறது. நூல் வகைப்படுத்தும் போது நூல்கள் தலைப்பு மூலம் பொருள் அடக்கம் அறிந்து கொள்ள முடியவில்லையானால் முன்னுரையில் அறிந்து கொள்ளலாம். இல்லையானால் நேரத்தை வீணாக்கி முழுமையாகப் படித்து வகைப்படுத்த வேண்டியிருக்கும்.

நூலகவியலில் கூறப்பட்டுள்ள நான்காவது கட்டளையான 'படிப்போரின் காலம் கருதுக' (Save the time of the Reader) என்ற கருத்திற்கு ஒரு சில நூல்கள் கவனம் செலுத்தவில்லை. 'பழைய சோறும் போர்ன்விடாவும்' என்னும் சிறுகதைகளை உடைய நூல் பொருளடக்கம் இழந்து நிற்கிறது. 'மலர்கள் பறிப்பதற்கல்ல' என்னும் கவிதை நூலும் பொருளடக்கம் இன்றி வெளியிடப்பட்டுள்ளது. ஒரு குறிப்பிட்ட சிறுகதையைப் படிக்க வாசகர் விரும்பி வந்தால் (அ) ஒரு குறிப்பிட்ட சிறுகதையைப் படிக்க வந்தால் நேரத்தை வீணாக்க வேண்டியுள்ளது. ஒரு பொதுக் கண்ணோட்டத்தில் ஒரு நூல் எதைப்பற்றியெல்லாம் விவரித்துள்ளது என்பதைப் பொருளடக்கம் மூலம் அறிகிறோம். இவ்வின்றியமையாமையை மறந்து நூல் வருதல் வருந்தத்தக்கது.

தவிர்க்கக் கூடிய அச்சுப்பிழையைத் தவிர்த்தல் மிகவும் இன்றி யமையாததாகும். பி. சி. கணேசன் எழுதிய 'வாழ்க்கைக்குப் புதிய கண்ணோட்டம் தேவை' என்னும் நூலின் மேல் உறையில் (Wrap_ per) 'வாழ்க்கைக்கு புதிய கண்ணோட்டம் தேவை' என்று 'ப்' என்னும் மெய்எழுத்து அச்சடிக்கப்படவில்லை. ஆனால் தலைப்புப் பக்கத்தில் தவறின்றி அச்சடிக்கப்பட்டுள்ளது.

ஒரு குறிப்பிட்ட கருத்தை எழுத முன்வருபவர் அதனைப்பற்றி நன்கு அறிந்திருத்தல் வேண்டும். தலைப்புக்கும் உட்பொருள் கருத்துக்கும் சம்பந்தமில்லாமல் எழுதுவதை ஆசிரியர்கள் தவிர்க்க வேண்டும். இது ஒரு பொதுவான கருத்தாகும்.

## செல்வாக்கு

'Age of Novels' என்று கூறும் அளவிற்கு நாவல்கள் அதிக மாக வெளிவருவதற்குக் காரணம் ஒரு குறிப்பிட்ட சமுதாயம் மட்டும் புதினங்களைப் படிப்பதில்லை. பொழுது போக்கின் காரணமாக நாவலை நண்பர்களாக அனைவரும் கருதுகிறார்கள். வாசகர் அதிகமாக வாங்குவதால் வியாபார நோக்கமும் இதில் உள்ளது. காலச் சூழ்நிலைக்கேற்றவாறு வெளிவரும் நூல்களை சமுதாயம் வரவேற்கிறது. சமுதாயத்தின் இடையே பிரச் சனைகள் மலிந்து இருக்கும் இந்நாளில் அதனைக் கொண்டு அமை யும் புதினங்களுக்கு அதிக வரவேற்பு உள்ளது. புதினம் பற்றிய ஆய்வு நூல்கள் நான்கு வெளிவந்துள்ளன.

உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் 1981-இல் 14 அரிய தமிழ் நூல்களை வெளியிட்டு, தமிழ்மொழி வளர்ச்சி, தமிழரின் பண் பாட்டு வளர்ச்சி, சமூக, பொருளாதார, வரலாற்று வளர்ச்சி ஆகியனபற்றி அதிகமாக ஆய்வு நூல்களை வெளியிட்ட நிறுவனம் என்னும் சிறப்பினைப் பெறுகின்றது.

## ஆலோசனைகள்

நூல் வெளியீட்டில் பதிப்பாளர் பணியே முக்கியமாதலின் பதிப்பகத்தாருக்கு ஒரு சில கோரிக்கைகளை முன்வைக்கிறேன்.

நூல்கள் பொதுவாக மக்களுக்கு மலிவுப் பதிப்பாகவும், நூலகத்திற்கு நூலகப் பதிப்பாகவும் வெளியிடவேண்டும். நூல் களின் மேல் உறையின் (Jacket) மேல் போடும் அட்டைப்படங் களை கலைஞன் பதிப்பகம் போன்று அட்டையிலேயே வெளியிட லாம். ஏனெனில் மிகக் குறுகிய காலத்தில் மேல்உறை கிழிந்து வீணாகி விடுகிறது.

தமிழ் நூல்களைத் தலைப்புப்பக்கமும், தலைப்புப் பக்கத்தின் பின்புறமும் அகில உலக நியதிப்படி வெளியிட்டு, முன்னுரை, பொருளடக்கத்துடன் முழுமையான நூல்களை வெளியிட முயல வேண்டும்.

நூலுக்கு விலை நிர்ணயிக்கும்போது வியாபார நோக்கம் மட்டுமே குறிக்கோளாக அமையாமல், இலக்கியத் தொண்டு என்ற மனப்பான்மையும் உண்டாதல் நன்று. சிறந்த எழுத்தாளர் என்ற பெயர்பெற்றவுடன் அவருடைய நூல்களுக்கு அதிக விலை போடுவது என்பது தவிர்க்கப்பட வேண்டியதாகும். 'Asian Educational services' வெளியிடும் களிக்கோ கட்டுக்கு மிக அதிகமான விலை போடுவது விலை நிர்ணயத்திற்கு ஒரு வரையறை இருந்தால் நல்லது என்று தோன்றுகிறது.

நூலகங்களிலும் பல்கலைக்கழகங்களிலும் வைக்கப்படும் தரமான இலக்கிய நூல்களை (Standard Literary Works) அதிகமாக வெளியிட வேண்டும். புதினங்கள்தாம் தமிழ்நூல்கள் என்ற எண்ணத்தை மாற்றி அமைத்து, தமிழ் மொழியை வளர்க்கும் புதிய செய்திகள், புதிய உண்மைகள் ஆகியனவற்றைத் தரவல்ல நூல்களின் எண்ணிக்கை தமிழில் ஏறிக்கொண்டே போக வேண்டும். ''வாழ்க்கையில் மனிதர்களின் தொடர்பு கசக்கும் நாள் வரும். ஆனால் உயர்ந்த புத்தகங்களின் கருத்துகள் என்றுமே கசப்பதில்லை'' என்னும் மு.வ.வின் கருத்துப்படி தரமான கருத்துக்களைக் கொண்ட நூல்கள் தமிழில் வெளிவரவேண்டும்.

# பின்னிணைப்பு

## 1981-இல் வெளியான தமிழ் நூல்கள்

### நூலக இயல்/இதழியல்

1 இந்திய தேசிய நூல் விவரப்பட்டியல் தமிழ்ப் பகுதி
1968-1974. பகுதி. 1
வெங்கடாச்சாரி, பி. ந. பதி.
தமிழ் நாடு அரசு வெளியீடு, சென்னை.

2 இந்திய நூலக வரலாறு
தில்லைநாயகம், வே.
தமிழ் நாடு பொது நூலகத்துறை
சென்னை-8. ரூ. 25.00

927 பகவத் கீதை
சுப்பிரமணிய பாரதியார், உரை
நர்மதா பதிப்பகம்,
1, வியாசராவ் தெரு, தி. நகர், சென்னை-17. ரூ 8.

928 பகுத்தறிவின் கிரகம்
பாக்கியம் சுந்தரம், மொழி
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
41-பி. சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேல், சென்னை-98.
ரூ 5.

929 பயனுள்ள பரிசு
சின்ன அண்ணாமலை.
சங்கப்பலகை, 39, சாதுல்லாசாலை,
தியாகராயநகர், சென்னை-17. ரூ 7.

930 பெரியார் களஞ்சியம் தொகுதி. 4
வீரமணி, கி.
பெரியார் சுயமரியாதை பிரசாரவெளி,
சென்னை-7. ரூ 18.

931 பெரியோர் சொல்லமுதம் பதி. 2
பெருமாள், தே. ப.
வானதி பதிப்பகம், தி. நகர், சென்னை-17. ரூ 10.50

932 போற்றி பஃறொடை : தெளிவுரை
உமாபதி சிவம்,
ஸ்ரீ காசி மடம், திருப்பனந்தாள்-612504. 1.25

933 மணவாழ்வில் முழு இன்பம்
செல்வப்பிரியா
யமுனா பிரசுரம், 85, சல்லிவன்ஸ் கார்டன் ரோடு,
மயிலாப்பூர், சென்னை-4. ரூ 5.

934 மனதில் மறைந்திருக்கும் சக்தி, பதி. 2
ராவ் பி. எஸ். ஆர்.
நர்மதா பதிப்பகம், 1, வியாசராவ் தெரு,
தி. நகர், சென்னை-17, ரூ 8.

935 மானுடத்துவமும் தாந்திரிகமும்
கணேசர், தி.
தமிழ் புத்தகாலயம், 58, டி. பி. கோயில் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5. ரூ 5.

936 முத்தும் முல்லையும்
குலசேகரன், எஸ்.
அமிழ்தம் பதிப்பகம், நார்த்தாம் பூண்டி
திருவண்ணாமலை வட்டம்,
வ. ஆ. மா-606809. ரூ 4.

937 முயற்சியே முன்னேற்றம்
மெர்வின்,
நர்மதா பதிப்பகம், 1, வியாசராவ் தெரு,
தி. நகர், சென்னை-17, ரூ 8.

938 வழிகாட்டும் கீதை,
கணேசன், பி. சி.
வானதி பதிப்பகம், தி. நகர், சென்னை-17. ரூ 5.

939 வாழ்வின் திறவுகோல் : வாழ்க்கை நூல்
கிருட்டிணன், காசி.
தேன் தமிழ்ப் பதிப்பகம்,
85 சுப்பிரமணியம் பிள்ளைத்தெரு,
சேலம்-636001. ரூ 5.50

940 விடுதலையும் வீடுபேறும்
ஞானசூரியன், கி.
லண்டன் சைவ சித்தாந்த நிலையம், ரூ 15.

941 வெற்றியின் இரகசியம்
பகுதி 1 முதல் 12 வரை
தண்டபாணி செட்டியார், பி. எஸ்.
செந்தாமரைப் பதிப்பகம்,
தெற்கு செட்டி தெரு, திருத்துறைப்பூண்டி-614713. ரூ 79.50

942 ஜகத்குரு சங்கராச்சாரியாள் பதிலளிக்கிறாள்
ஜகத்குரு சங்கராச்சாரியார், சிருங்கேரி,
பத்திரிகை செயலாளர், ஸ்ரீ சிருங்கேரி,
சாரதா பீடம், சிருங்கேரி-577134. ரூ 7.50

943 ஜைன தத்துவமும் பஞ்ச பரமேஷ்டிகளும்
ஸ்ரீ சந்திரன் ஜெ. ரூ 12.50.

944 ஆவிகள் பேசுகின்றன
ரவிச்சந்திரன், வி,
மாருதி பதிப்பகம், 173 பீட்டர்ஸ் ரோடு,
இராயப்பேட்டை, சென்னை-14,

945 ஆவிகள் தொடர்பும் அடையும் நன்மைகளும்
ரவிச்சந்திரன், வி,
மாருதி பதிப்பகம், 173, பீட்டர்ஸ் ரோடு,
இராயப்பேட்டை, சென்னை-14. ரூ 8.

946 நினைவுக் கலை
இராமையா, பெ.
இளங்கோ பதிப்பகம், கருணாநிதிநகர்,
கோவில்பட்டி-627701, நெல்லை மாவட்டம்
ரூ 7.50

947 நீ நான் அவன்
அல்போன்ஸ், அ
திரு இருதயக் கிறித்துவக் கல்லூரி,
பூந்தமல்லி, சென்னை-56. ரூ 7.50

948 நீங்களும் சிரிக்கலாமே
சாயபு மரைக்காயர், மு.
பாத்திமா பதிப்பகம், 67, காயர் வீதி,
காரைக்கால், ரூ 3.

949 மனவலிமையும் மனவளமும் பெறுவது எப்படி?
லேனா தமிழ்வாணன்,
மணிமேகலைப் பிரசுரம், த.பெ.எண்: 1447
4, தணிகாசலம் செட்டி சாலை, தி.நகர்
சென்னை-17. ரூ 9.

950 மனோதத்துவ மருத்துவம்
சோமசுந்தர், ஆர்.எம்.
நர்மதா பதிப்பகம், 1, வியாசராவ் தெரு,
தி.நகர், சென்னை-17. ரூ 10.

951 முற்பிறவி மறுபிறவி அதிசயங்கள்
ரவிச்சந்திரன், வி.
மாருதி பதிப்பகம்,
173, பீட்டர்ஸ்ரோடு,
இராயப்பேட்டை, சென்னை-14 ரூ 7.50

## கல்வி

952 30 நாட்களில் அரபி பாஷை
கணாத்ரே. நா.க.ரா.
பாலாஜி பப்ளிகேஷன்ஸ்,
103, பைகிராப்ட்ஸ் ரோடு,
சென்னை-14. ரூ 7.50

953 கல்வி மொழி தமிழா, ஆங்கிலமா?
(ம.பொ.சி)
இளங்கோவன், மாரா, தொகு.

954 கல்வியின் உளவியல் அடிப்படைகள்
சந்தானம், எஸ்.
பழனியப்பா பிரதர்ஸ், சென்னை-14' ரூ 31.

955 கல்வியின் தத்துவ, சமூக அடிப்படைகள்
சந்தானம், எஸ்,
பழனியப்பா பிரதர்ஸ், சென்னை-14. ரூ 25.

956 தமிழ் மலர் 1
ஆரோக்கியசாமி,
தொடர் மைய முறை வெளியீட்டு நிலையம்,
மரி இல்லம், கம்பன் நகர், புதுவை-605010 ரூ 4.

957 படி
அஹமது பஷீர், அ.
சிங்கைப் பதிப்பகம், 23. கரீம் சுபேதார் தெரு,
இராயப்பேட்டை, சென்னை-14. ரூ 4.

## பிரயாண நூல்கள்

958 இமயமலைப் பயணம்
சுப்பிரமணியன்
சேகர் பதிப்பகம், 66 பெரியார் தெரு,
எம்.ஜி.ஆர். நகர், சென்னை. 78. ரூ 4.50

959 பத்ரி—கேதார் யாத்திரை
தெய்வ சிகாமணி, தெ.சி.
பைலட் பப்ளிகேஷன்ஸ்,
6, நல்ல தம்பி செட்டித்தெரு, அண்ணாசாலை,
சென்னை. 2. ரூ 5.

960 புதிர் நிறைந்த பூமி
எலிசா
மருதமலை பதிப்பகம், 33. பொன்னுசாமி நாயக்கர் தெரு,
இராயப்பேட்டை, சென்னை-14 ரூ 3.

961 நான் கண்ட அமெரிக்கா
முத்தையா, எம்
அசோகன் பதிப்பகம், சென்னை-96 ரூ 3.25

962 நேப்பாள நாட்டில் அனுபவங்கள்
பரத பாண்டியன். எம்.
சர்வோதய இலக்கியப்பண்ணை,
32/1 மேலவெளி வீதி, மதுரை. ரூ 5.

## வரலாறு

963 இங்கிலாந்தில் அரசியல் அமைப்பு வரலாறு பாகம் 1
கி மு. 55—கி.பி. 1603
கிருஷ்ணமூர்த்தி, வி.எம்.
விஜயலட்சுமி பப்ளிகேஷன்ஸ், திங்கள்சந்தை
நெய்யூர் அஞ்சல், ரூ 12 50

964 எண்பது ஆண்டுகளில் சோவியத் யூனியன்
குரோதகோவ், பொரிஸ்,
சோவியத்நாடு ஆபீஸ் 1 தி.நகர்.
சென்னை-17. ரூ 1.

965 எந்தப் பாதையில்
ஜவஹர், இரா.
ஆய்வகம் 18 சங்கரபுரம், மூன்றாம் தெரு,
சூளைமேடு. சென்னை-94. ரூ 4.

966 களப்பிறர்
காசிநாதன், நடன. ரூ 3.75

967 சங்ககால வரலாறு மேற்பட்டப்படிப்பிற்குரியது
சுவாமிநாதன், அ.
மோகன் பதிப்பகம், 4, பைகிராப்ட்ஸ் ரோடு
திருவல்லிக்கேணி, சென்னை-600 005. ரூ 22.

968 சோவியத் கம்யூனிஸ்ட் கட்சி 26ஆவது காங்கிரஸ்
தஸ்தாவேஜிகளும் தீர்மானங்களும்
ஒய் எப்.ரு. நோவ், சோவியத்நாடு அலுவலகம்
115, தியாகராய சாலை, சென்னை-600017. ரூ 2.

969 சோவியத்யூனியன்-இந்தியா
ரமாதானத்தின் முக்கிய அம்சம்
ஒரு லோவ் (ரோஸ்திஸ்லாங்)
சோவியத்நாடு ஆபிஸ் 115, தி.நகர், .17. ரூ 1.

970 சோவியத் சமாதானக் கோட்பாடு
ஜக்லாதின், வாதிம்
சோவியத்நாடு ஆபீஸ்,

971 சோழர்கால வரலாறு: மேற்பட்டப் படிப்பிற்குரியது
சுவாமிநாதன், அ.
மோகன் பதிப்பகம், 4, பைகிராப்ட்ஸ்ரோடு,
திருவல்லிக்கேணி, சென்னை-600 005. ரூ 22

972 சோஷலிசமும் ஜனநாயகமும்
மாஜினி மொழி நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
41,பி. சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
சென்னை-98. ரூ 12.

973 தமிழகத்தில் மார்க்கோபோலோ இபுன்பதூதா
மரைக்காயர் எம். ஐ. ஆசிரியர்
85 செட்டித் தெரு, சென்னை. 600001. ரூ 5.

974 தமிழகமும் ஜெர்மானியரும்
ஞானசேகரன், ஆ.

975 பல்லவர் காலவரலாறு மேற்பட்டப்படிப்பிற்குரியது
சுவாமிநாதன், அ.
மோகன் பதிப்பகம் 4, பைகிராப்ட்ஸ் ரோடு,
திருவல்லிக்கேணி, சென்னை-600 005. ரூ 18.

976 பழுவேட்டரையர்கள்
பாலாம்பாள் 84, அப்புமுதலி தெரு
மயிலாப்பூர், சென்னை 4.

977 மா.பொ.சி படைத்த புதிய தமிழகம்
சுந்தரம் (வெள்ளையாம்பட்டு),
சேகர் பதிப்பகம், 66, பெரியார் தெரு, எம்.ஜி.ஆர். நகர்,
சென்னை-600078. ரூ 16.

978 மதுரைநாயக்கர் வரலாறு, பதி.4
பரந்தாமனார், சு.கி.
அல்லி நிலையம், 19 முத்துமுதலி தெரு, வேப்பேரி
சென்னை-600 007. ரூ 30.

979 முத்தமிழ் மதுரை
புலியூர்க்கேசிகன்
வானதி பதிப்பகம், தி. நகர், சென்னை-17. ரூ 5.

980 ஆட்சிக்கலை ரூஸோ
ராஜகோபாலன், கொடுமுடி.
ஸ்டார் பிரசுரம்,
72, பெரிய தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5. ரூ 8.

981 தமிழ்நாடு சட்டமன்ற மேலவை
அரசு உறுதிமொழிக்குழு,
முப்பத்தைந்தாவது அறிக்கை
தமிழ்நாடு அரசு உறுதிமொழிக்குழு
சட்டமன்ற மேலவைத்துறை
புனித ஜார்ஜ் கோட்டை,
சென்னை-600009.

982 தமிழ்நாடு சட்டமன்றப் பேரவை 1981-82ஆம் ஆண்டு
நிதிநிலை அறிக்கை, நிதி அமைச்சர் மாண்பு மிகு
திரு இரா. நெடுஞ்செழியன் அவர்கள் ஆற்றிய உரை
தமிழ்நாடு சட்டமன்றப் பேரவை, சென்னை-9

933 ஜனநாயகத்தின் அரிச்சுவடி
கணேசன், பி.சி.
வானதி பதிப்பகம், தி.நகர். சென்னை-17. ரூ 5.

## பொருளாதாரம்

984 இந்தியப் பொருளாதார வளர்ச்சி
குருசாமி, மா. பா.
கழகம், 79 பிரகாசம் சாலை.
சென்னை-1. ரூ 7. 50

985 இன்று முதல்
தேவபாரதி. புனை
தேவபாரதி நூலகம்
29 திருவள்ளுவர் சாலை,
சென்னை-18. ரூ 4. 50

986 உத்தியோக உயர்வு பெற சில வழிகள்
கணேசன் பி. சி.
வானதி பதிப்பகம், தி. நகர், சென்னை-17. ரூ 4. 00

987 ஒரு தேர்ந்த நிர்வாகி ஆக வேண்டுமா?
சண்முகம் ர.
அருணோதயம், 3. கௌடியா மடம் சாலை,
இராயப்பேட்டை, சென்னை-600014. ரூ 5. 00

988 கடன் வாங்குவதும் சமாளிப்பதும் எப்படி?
மைக்கேல் ஜான்
ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்,
23. கோபாலகிருஷ்ணய்யர் தெரு,
த. பெ. எண். 1404, சென்னை-17. ரூ 5. 00

989 கம்யூனிசம் கேள்வி—பதில் புத்தகம்—3
ஜலோபின் என். முதலியோர்
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
41. பி. சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
சென்னை-610098. ரூ 4. 00

990 கம்யூனிசம் கேள்வி—பதில் புத்தகம்—4
டால்ஸ்டிக் வி. முதலியோர்
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்
41. பி. சிட்கே இண்டஸ்டிரியல் எஸ்டேட்,
சென்னை-600098. ரூ 5. 00

991 காந்தியப் பொருளாதாரம்.
அருணாசலம் க.
ஜெயபிரகாசம் ர. பதி.
சர்வோதய இலக்கியப் பண்ணை, 32 மேல வெளிவீதி,
மதுரை 625001, ரு 20. 00

992 குறைந்த முதலில் குடிசைத் தொழில்கள்
சூசை ராஜா, எஸ். ஏ.
அருணோதயம், இராயப்பேட்டை, சென்னை-14. ரு 3. 00

993 சிறு தொழில் செய்முறைகள் பதி. 2
சூசைராஜா எஸ். ஏ.
ஸ்டார் பிரசுரம், 72 பெரிய தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5. ரு 9. 50

994 சிறு முதலில் பல தொழில்கள் பதி. 2
ஜனார்த்தனன், என். ரு 9. 00

995 சோஷலிசத்தின் அரசியல் பொருளாதாரம்
கொலிகோவ், நி கோலாய்,
சோவியத் நாடு பிரசுரங்கள்
115, தியாகராய சாலை, சென்னை-17. ரு 1. 00

996 சோஷலிசமும் மனித நேசமும்
போவொவ், எஸ்.
நியூசெஞ்சுரிபுக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
41. பி, சிட்கோ இன்டஸ்டிரியல் எஸ்டேட்,
சென்னை-98. ரு 10. 00

997 தற்கால டிராட்ஸ்கியிசம் அதன் புரட்சிக்கு எதிரான இயல்பு
பஸ்மானோவ், எம்
நியூசெஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
41. சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை-98
ரு 10. 00

998 தொழிற் சங்கங்கள்
சாபர் அலி. கா.
குயிலன் பதிப்பகம்,
54. பாண்டி பஜார், தி. நகர்,
சென்னை-17. ரு 4. 00

999 பணம் சம்பாதிக்க 100 வழிகள்
ஜனார்த்தனன், என்.
நர்மதா பதிப்பகம்,
1. வியாசராவ் தெரு,
தி. நகர், சென்னை-17. ரூ 5. 50

1000 பெண்களுக்கேற்ற தொழில்கள்
கந்தகிரி நாதன்
இலக்குமி நிலையம்
59. முத்து முதலி தெரு,
இராயப்பேட்டை, சென்னை-14. ரூ 5. 00

1001 பொருளாதாரத்தின் அரிச்சுவடி
கணேசன் பி. சி.
வானதி பதிப்பகம்,
தி. நகர், சென்னை-17. ரூ 4. 50

1002 பொருளாதாரம் வணிகப் புள்ளியியல் கூறுகள்
விசயலட்சுமி எ. முதலியோர், பதி.
மதுரைக் காமராசர் பல்கலைக் கழகம், மதுரை 2. ரூ 30. 00

1003 மார்க்ஸ் முதல் மாசேதுங் வரை புரட்சிகர இயங்கியல்
பற்றிய ஓர் ஆய்வு
தாம்ஸன், ஜார்ஜ்
பொதுமை வெளியீடு, சென்னை-600017. ரூ 12. 00

1004 முதலாளியமும் அதன் பிறகும்: சரக்கு உற்பத்தியின்
தோற்றமும் வீழ்ச்சியும்
தாம்ஸன் ஜார்ஜ்
பொதுமை வெளியீடு, 16 மங்கேஷ் தெரு,
சென்னை-17. ரூ 12. 50

1005 வியாபாரத்தில் வெற்றி பெற வேண்டுமா?
இரத்தின சண்முகனார்
அருணோதயம். 3. கௌடியாமடம் சாலை,
இராயப்பேட்டை, சென்னை-600014. ரூ 5. 00

## மானிடவியல்

1006 உலகுடைய பெருமாள் கதை : வரலாற்றுக் கதைப்பாடல்.
நடராசன், தி. பதி,
மதுரை தமிழாலஜி பப்ளிஷர்ஸ்,
121, மேல மாசி வீதி, மதுரை, 625001. ரூ 6.

1007 ஐவர் அம்மானை
விநாயக மூர்த்தி, அ.
பால முருகன் பதிப்பகம்,
90, பாரதியார் தெரு,
ஜெய் ஹிந்தபுரம்,
மதுரை-625001. ரூ 22.

1008 ஏழ்மையே உன்பெயர்தான் கிராமமா?
ஜெகந்நாதன் ஜி கடல் பப்ளிஷர்ஸ்,
121, மேல வீதி
மதுரை-625001. ரூ 6.

1009 சுசீல வள்ளல் அம்மானை
சௌந்தர பாண்டியன், எஸ். ரூ 8.25

1010 சோவியத் வாழ்க்கை முறை
சோவியத் நாடு ஆபீஸ்,
115, தியாகராயர் ரோடு,
சென்னை-17. ரூ 1.

1011 தமிழ்த் திருமணம்
இராமலிங்கனார்.
தமிழ் நூற்பதிப்பகம்,
60, பி நெல்லுக்காரத் தெரு,
காஞ்சிபுரம்-631502. ரூ 2.25.

1012 தமிழக நாட்டுப்புறவியல்
சரசுவதி வேணுகோபால்,
தாமரை வெளியீடு,
157 அழகர் கோயில் சாலை,
மதுரை-2. ரூ 8.

1013 தமிழர் உணவு
நமசிவாயம், ரூ 8. ரூ 12.

1014 தமிழர் வரலாறு, நாகரிகம், பண்பாடு
செந்துறை முத்து, புலவர்,
அருண்மொழிப் பதிப்பகம்,
85, சுப்பிரமணியம் பிள்ளைத் தெரு,
சேலம்-636 001. ரூ 25.

1015 தமிழர் வாழ்வியல், பதி. 2•
முத்தையா முல்லை,
மணிவாசகர் நூலகம், சிதம்பரம்.

1016 தமிழும் பிற பண்பாடும் பதி. 4
மீனாட்சி சுந்தரனார், தெ. பொ.
நியுசெஞ்சுரி புக்ஹவுஸ் பிரைவேட் லிமிடெட்,
41-பி சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட்
சென்னை-98. ரூ 5.50.

1017 திருமண மலர்
ஜனககுமாரி T. S.
ஜகஜோதி பிரசுரம்,
திருவிடை மருதூர்-612104. ரூ 1.

1018 நாட்டார் வழக்காற்றியல் ஆய்வுகள் தொகு. 1
லூர்து. தே.
பாரிவேள் பதிப்பகம், சாராடக்கர் கல்லூரிச் சாலை,
பெருமாள்புரம், திருநெல்வேலி-627007. ரூ 25.

1019 நாட்டுப்புறப் பாடல்கள்
சுந்தரம், மெ. ரூ 30.

1020 நீங்கள் நீதிபதியாயிருந்தால், பகுதி,
சண்முக சுந்தரம், வை.
கலைக்கருவூலம், 19, மேற்குத் தெரு,
மேற்கு சி.ஐ.டி. நகர்,
சென்னை-35. ரூ 5.

1021 பயனுள்ள குடும்பக் குறிப்புகள்
மெர்வின்
நர்மதா பதிப்பகம் 1, வியாசராவ் தெரு,
தி.நகர், சென்னை-17. ரூ 3.50.

1022 பள்ளு இலக்கியம்; ஒரு சமூகவியல் பார்வை
கேசவன் கோ.
அண்மை 2. சிவன் கோயில் தெற்குத் தெரு,
சிவகங்கை-623560. ரூ 10.

1023 பாக்கியமிகு பாத்திஹா விளக்கம்
முஹமது ஹசன் காத்திமு,
நன்மார்க்கப் பதிப்பகம்,
கே. டி. எம். தெரு,
காயல் பட்டணம்-628204. ரூ 10.

1024 புகை அகராதி
ரங்காச்சாரி, து.
135, மேலச்சித்திரை வீதி,
ஸ்ரீரங்கம்-620 006. ரூ 1.50.

1025 புரட்சிப் பொன்மொழிகள்
சண்முகதாசன்,
திருப்புகழரசு பதிப்பகம்,
5, மாடல் ஹவுஸ் சாலை, சி.ஐ டி. நகர், நந்தனம்,
சென்னை-35. ரூ 8. 50.

1026 பொன்மொழிப் புதையல்
சோலையப்பன் அரு.
இலக்குமி நிலையம், 10, காசிம் சாகிப் தெரு,
இராயப் பேட்டை, சென்னை-14. ரூ 4.25.

1027 மதுப்பழக்கத்தை மறப்பது எப்படி?
மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு,
மணிமேகலைப் பிரசுரம், த. பெ. எண் 1447,
4, தணிகாசலம் செட்டி ரோடு,
சென்னை-17. ரூ 5.90.

1028 மதுவும் மதியும்
செல்வராஜ், வீ.
தமிழ்நாடு காந்தி நினைவு நிதி,
மதுரை-625 020. ரூ 0. 50.

1029 மீனாட்சி புர சிந்தனைகள்
பிலால், தஞ்சை
இக்பால் இரவாஞ்சேரி 609 501. ரூ 2 . 50.

1030 வாழ்க்கைக்குப் புதிய கண்ணோட்டம் தேவை
கணேசன் பி. சி.
வானதி பதிப்பகம், தி. நகர். சென்னை-17, ரூ 4.50.

1031 வெற்றிக்கு வழிகள்
கிருஷ்ணஸ்வாமி பி. எஸ்.
நர்மதா பதிப்பகம், வியாசராவ் தெரு,
தி.நகர், சென்னை-17. ரூ 9.

1032 வேளாளர் யார்?
தேவ ஆசீர்வாதம்
இராமதேவன் பதிப்பகம்,
தஞ்சாவூர்-7. ரூ 12.

1033 ஸ்ரீவாசவி அவதாரமும் ஆரிய வைசியர் வரலாறும்
இளங்கருயிறை புனை.
தி. தர்சப்ப செட்டியார் மளிகை,
டி. என். பி. தெரு,
தூக்கநாயக்கன் பாளையம்-638 506,
பெரியார் மாவட்டம்.

## சட்டவியல்

1034 என்ன செய்ய வேண்டும்?
அரசாங்க அலுவலக விதிமுறைகள், பாகம். 2
லேனா தமிழ்வாணன்
மணிமேகலைப் பிரசுரம்,
4, தணிகாசலம் செட்டி தெரு,
தி. நகர், சென்னை-17. ரூ 11.

1035 என்ன செய்ய வேண்டும்!
அரசாங்க அலுவலக விதிமுறைகள் பாகம். 3
லேனா. தமிழ்வாணன்
மணிமேகலைப் பிரசுரம்,
4, தணிகாசலம் செட்டி ரோடு, தி. நகர்,
சென்னை-17. ரூ 1. 50

1036 கிரிமினல் சட்டம் தெரிந்து கொள்ளுங்கள்
மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு,
மணிமேகலைப் பிரசுரம், 4, தணிகாசலம் செட்டி ரோடு,
தி. நகர், சென்னை-17. ரூ 13.50

1037 சட்டவியல் கோட்பாடுகள் பகுதி. 1
ஆர். மங்கை நூலகம், 7, தீர்த்தாரப்ப முதலி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5. ரூ 12.50

1038 சட்டவியல் கோட்பாடுகள் பகுதி. 2
மங்கை நூலகம், 7, தீத்தாரப்ப முதலி தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5. ரூ 10.

1039 சிவில் சட்டம் தெரிந்து கொள்ளுங்கள்
மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு,
மணிமேகலைப் பிரசுரம்,
4, தணிகாசலம் செட்டி ரோடு,
தி. நகர், சென்னை-17. ரூ 11 50

1040 சொத்துரிமைச் சட்டம்
மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு,
மணிமேகலைப் பிரசுரம், த. பெ. எண் : 1447
4, தணிகாசலம் செட்டி ரோடு,
தி. நகர், சென்னை-17. ரூ 7.50

1041 திருமணச் சட்டமும் விவாகரத்துச் சட்டமும்
மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு
மணிமேகலைப் பிரசுரம், த. பெ. எ. 1447
4, தணிகாசலம் செட்டி ரோடு, தி. நகர்,
சென்னை-17. ரூ 5.90

1042 நீங்கள் நீதிபதியாயிருந்தால் பகுதி-1
சண்முக சுந்தரம், வை.
கலைக் கருவூலம், 19, மேற்குத்தெரு,
மேற்கு சி. ஐ. டி நகர்,

1043 பரபரப்பான கொலை வழக்குகள்
மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு,
மணிமேகலைப் பிரசுரம்
த. பெ. எண். 1447
4, தணிகாசலம் செட்டி ரோடு,
தி. நகர், சென்னை-17. ரூ 9.75

1044 பொது நம்பகங்களும் அறக்கட்டளைகளும்
சேசாசலம், சோ.
சபாநாயகன் பதிப்பகம்,
20, ஸ்டேஷன் ரோடு, மேற்கு மாம்பலம்,
சென்னை-33. ரூ 7.

1045 வாதாடாத வழக்குகள்
கணேஷ்பாபு, தா.
மணியகம், 3, இரண்டாவது நெடுஞ்சாலை,
கோட்டூர் தோட்டம், சென்னை-8. ரூ 2.

## பொது அறிவு நூல்கள்

1046 அறிவு வளர்ச்சிக் 300 குறிப்புகள்
குரும்பூர் குப்புசாமி, புனை.
செல்வ நிலையம், 18 முத்து முதலி தெரு,
இராயப்பேட்டை, சென்னை-14. ரூ 10. 00

1047 கேட்டலும் இளத்தலும்,
பாரதிதாசன் புனை.
பூம்புகார் பிரசுரம் பிரஸ், 63 பிராட்வே,
சென்னை-1. ரூ 4. 50

1048 பொது அறிவுக் கட்டுரைகள்
கிரி, பி. வி.
புத்தகப் பூங்கா,
48. முத்து முதலி தெரு, இராயப்பேட்டை
சென்னை-14. ரூ 6. 50

1049 பொது அறிவுக் களஞ்சியம்,
சம்பந்தம்.
வானதி பதிப்பகம், தி. நகர், சென்னை-17. ரூ 21. 50

1050 பொது அறிவுப் பெட்டகம்,
நாராயணன் தேவகோட்டை பி.
புத்தகப் பூங்கா, 48, முத்து முதலித்தெரு,
இராயப்பேட்டை, சென்னை-14. ரூ 5. 00

1051 வினாடி வினாக்கள்
ராஜன், எஸ். என். கே.
மீனா புத்தக நிலையம், க்யூ 25, தெற்கு போக் சாலை,
தி. நகர், சென்னை-600017. ரூ 12. 00

## மலர்கள்

1052 அமுதசுரபி—தீபாவளி மலர்

1053 கடவுள்—தீபாவளிமலர்

1054 கம்பன் மணி மலர்
காரைக்குடி கம்பன் கழகம், வெளி.
கம்பன் கழகம்
காரைக்குடி

1055 கம்பன் மலர்—1981
கம்பன் கழகம்

1056 கம்பன் விழா மலர்
கம்பன் கழகம் வெளி.
கம்பன் கழகம்,
திருப்பத்தூர்.

1057 கல்கி தீபாவளி மலர்.

1058 கலைமகள் தீபாவளி மலர்
கலைமகள், வெளி.
த. பெ. எண் 604, மயிலாப்பூர்,
சென்னை, 600004. ரூ 18. 00

1059 கேரளத்தமிழ் மூன்றாவது ஆண்டு மலர்

1060 செல்வி முத்தையா அவர்களின் ஆண்டு நிறைவு வெள்ளி விழா மலர்
பெற்றோர் ஆசிரியர் சங்கம், வெளி.

1061 டாக்டர் மா. இராசமாணிக்கனார் 75 ஆவது பிறந்தநாள் விழா மலர்-1981
டாக்டர் மா. இராசமாணிக்கனார் இலக்கிய மன்றம், வெளி.

1062 தமிழ் உரைநடைத் தந்தை தத்துவப் போதகர் தே. நோபிலி
நான்காம் நூற்றாண்டு விழா சிறப்பு மலர்,
தே. நோபிலி மறைப்பணி நிலையம்,
மதுரை, 8.

1063 தினமணிகதிர்—தீபாவளி மலர்

1064 தீக்கதிர் சிறப்பு மலர்—உலகத்தமிழ் மாநாடு,
தீன் கதிர் அச்சகம்,
6/16, பையாஸ் ரோடு, மதுரை, 625018.

1065 நூலக வளர்ச்சி மலர் 1981
பெங்களூர்த் தமிழ்ச் சங்கம்,
29/1, அண்ணாசாமி முதலியார் சாலை,
பெங்களூர், 560042

1066 வாகீச பக்த ஜன சபை சமரச சுத்த
சன்மார்க்க சங்கம் வெள்ளி விழாமலர் 1956—81

1067 37 ஆவது ஆண்டு விழா மலர்
நாரதகானசபா, வெளி
நாரதகான சபா
சென்னை-5

## வாழ்க்கை வரலாறு

1068 அண்ணாவோடு வாழ்ந்த அந்தச் சிறைவாசம்
நெடுஞ்செழியன், இரா.
தையற்கலைப் பதிப்பகம்,
புரசைவாக்கம், சென்னை-7. ரூ 8. 00

1069 அரவிந்தர் உத்தர்பாரா பேருரை.
அரவிந்தர்
ஸ்ரீஅரவிந்தர் ஆசிரமம், புதுச்சேரி 2. ரூ 1. 00

1070 அருளரசு
சிதம்பரம், இராம.
அம்பாள் பதிப்பகம்
1, கக்கன் தெரு,
சத்தியா தோட்டம், சென்னை-600093. ரூ 4. 00

1071 அன்பின் அருஞ்செயல்
கன்னியப்பன் சிவ.
குவை பப்ளிகேஷன்ஸ்,
143, பெல்சு சாலை,
திருவல்லிக்கேணி, சென்னை-5. ரூ 4. 50

1072 ஆட்சிமொழிக் காவலர் கீ. இராமலிங்கனார்
வாழ்க்கை வரலாறு.
சந்திரன், வீ,
சொர்ணகுரு பதிப்பகம்.
43, ஆர்க்காடுச் சாலை,
கோடம்பாக்கம், சென்னை-24. ரூ 10. 00

1073 இரமணரும் காந்தியும்
இராமசாமி, அ.
கஸ்தூர்பா காந்தி கன்யா குருகுலம் வெளியீட்டுப்பகுதி,
வேதாரண்யம் 614810. ரூ 6. 50

1074 இராஜாஜி நூற்றுக்கு நூறு, பகுதி. 2.
பரந்தாமன்,
பரந்தாமன் பதிப்பகம்,
எல் 23, தெற்கு போக் சாலை,
சென்னை-600017. ரூ 6. 00

1075 இலக்கிய ஜோதி; ஒரு மோகன வாழ்வின் முழு நோக்கு
விமலானந்தம் மது ச.
மோகனப் பதிப்பகம்,
7. கல்வி வாகுத் தெரு, மயிலை, சென்னை-4.

1076 உலகத் தத்துவ ஞானியர் பதி.
தட்சிணாமூர்த்தி. வை.
நாவலர் புத்தக நிலையம்,
69. ஏ, மேலாவணி மூலவீதி
மதுரை—625001, ரூ 7. 00

1077 உலகப்பெரும் எழுத்தாளர்கள்
கணேசன் பி. சி.
வானதி பதிப்பகம்,
சென்னை-600017 ரூ 3. 00

1078 கவிஞர் சவராயலு வாழ்க்கை வரலாறு
புதுவை அரசு கல்வித்துறை, வெளி
ரூ 4. 00

1079 காந்தி, பதி. 3.
திருமலை தி. டி.
ஜலதரங்கினி பதிப்பகம், சென்னை-4. ரூ 8. 00

1080 காந்தி சிந்தனைகள்
அருணாசலம். க.
தமிழ் நாடு காந்தி நினைவு நிதி, மதுரை-20. ரூ 2. 00

1081 காந்தி மகானும் வள்ளுவரும், பதி. 2.
கிருபானந்தவாரியார்
குறிஞ்சிப் பதிப்பகம், 7 வடுகநாதன்ரோடு,
பொன்னமராவதி 622407. ரூ 3. 00

1082 சின்னஞ்சிறு வயதில், பதி. 9
வள்ளியப்பா அழ.
குழந்தைப் புத்தக நிலையம், சென்னை-17. ரூ 5. 00

1083 காரைக்கால் மஸ்தான் சாஹிப் விலியுல்லாஹ் வரலாற்றுப் பேழை
இறையனடியான் புனை.
சாயபு மரைக்காயர்
17, காஜியார் வீதி, காரைக்கால். ரூ 15. 00

1084 சுவாமி விவேகானந்தா வாழ்க்கையும் போதனைகளும்
ராவ் வி. கே. ஆர். வி,
சர்வோதய இலக்கியப் பண்ணை
32/1 மேல வெளி வீதி, மதுரை 625001. ரூ 20. 00

1085 தமிழ்ப் புலவர் சரித்திரம், பதி.7
சூரிய நாராயண சாஸ்திரியார், வி.கோ,
பரிதிமால் பதிப்பகம்,
5.ஏ, மூன்றாம் தெரு,
வசந்த நகர், மதுரை-3

1086 தமிழக முதல்வர்கள்
தேவ மூர்த்தி. ரூ 3-50

1087 தலைவர் ம.பொ.சி ஆற்றுப்படை
அமிர்தலிங்கம். த.
செவ்வேள் பதிப்பகம்,
7. வெங்கடாசல நாயக்கன் மூன்றாம் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5. ரூ 3

1088 தவத்திரு நாராயணகுரு சுவாமிகள்: வாழ்க்கை வரலாறும் கொள்கை ஆய்வும்,
தேவதாஸ், எஸ்
60. இ.பி. காலனி, விருதம்பட்டு,
வேலூர் 632000. ரூ 5

1089 தவமணி இராசன் மணிவிழா மலர்.
சம்பந்தம், என்.எஸ்.
3. பகவந்தம் குப்தா தெரு,
தி.நகர், சென்னை-17

1090 திருத்தொண்டர் கதைகள்
செந்துறை முத்து
அறிவு நிலையம் 60/1, பைகிராப்ட்ஸ் சாலை,
திருவல்லிக்கேணி, சென்னை-5

1091 திரு நபி சரித்திரம் பதி. 4
ஹாஜி முஹம்மது சாஹிப் மு.ந.
மு.ந. ஹாஜி முஹம்மது சாஹிப் டிரஸ்ட்,
முஸ்லிம் அனாதை நிலையம், காதிர் நகர்,
ஹைகிரவுண்ட்ஸ், திருநெல்வேலி. 627011. ரூ 20.

1092 திருவாவடுதுறை ஆதினம் திருக்கயிலாய பரம்பரைத்
திருவாவடுதுறை ஆதினக் குருபரம்பரை விளக்கம்
திருவாவடுதுறை ஆதினம், திருவாவடுதுறை

1093 தேசத் தந்தை காந்தி
செல்வராஜ். V
தமிழ்நாடு காந்தி மார்க் நிதி,
மதுரை-68. ரூ 1.

1094 தெய்வீகப் பெண்மணிகள்
சிங்கார வேலனார்,
திருமருகல் புத்தகப் பூங்கா,
48. முத்து முதலி தெரு,
இராயப் பேட்டை, சென்னை-4. ரூ 8.

1095 நல்வழி காட்டிய நால்வர்
அண்ணாமலை, வே,
ஸ்ரீ இந்து பப்ளிகேஷன்,
23. கோபால கிருஷ்ணய்யா தெரு,
த.பெ.எண் 1404, சென்னை-17. ரூ 4.50

1096 நெஞ்சம் கவர் நேருஜி
சுகி சுப்பிரமணியம், டி.என்
அமிழ்தம் பதிப்பகம், நார்த்தாம் பூண்டி,
திருவண்ணாமலை வட்டம், வட ஆர்க்காடு,606 809.
ரூ 4.50

1097 பங்கிம் சந்திரர்
சந்தானலக்ஷ்மி
பழனியப்பா பிரதர்ஸ்,
சென்னை-14. ரூ 3.

1098 பிரபலமானவர்களின் விலாசங்கள்
மணிமேகலைப் பிரசுர ஆசிரியர் குழு
மணிமேகலைப் பிரசுரம்
4 தணிகாசலம் செட்டி தெரு,
தி.நகர், சென்னை-17. ரூ 15

1099 பெரியார் ஈ.வே.ரா. சிந்தனைகளில் பெண்கள்
அரசு மணிமேகலை
பாரி நிலையம், 59. பிராட்வே, சென்னை-1 ரூ 7-50

1100 பெரியார் காவியம்: இளமைக் காண்டம்
நாராயணன், பா.
34, இராசாசி குடியிருப்பு, ஆத்தூர். 636 102,
சேலம் மாவட்டம். ரூ 10.

1101 பெரியார் சாதித்ததுதான் என்ன?
அறிவுக்கனல் வெளியீடு எண். 21,
செந்தமிழ்க் கோ, வேலூர்,
அறிவுக்கனல் பதிப்பகம்,
புரட்சிக் கவிஞர் இல்லம்,
அஞ்சல்பெட்டி எண். 109, வேலூர் 632001. ரூ 10.

1102 பொதுநலச் செம்மல் வி.டி. செல்வப்பிள்ளை அவர்கள்
மணி விழா மலர்

1103 மகாராஜா ஸ்ரீஸ்வாதித் திருநாள்
ஸ்ரீநிவாசய்யர், செம்மங்குடி. ரா.
நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா,
புதுடில்லி. ரூ 6.25

1104 மந்த்ராலயம் சற்குரு ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள்
வாழ்க்கையும் உபதேசங்களும்,
வெங்கட்ராவ், கே.
ஸ்ரீகுருகிருபா பதிப்பகம்,
24, ஸ்ரீநிவாஸ பெருமாள் சன்னதிதெரு,
இராயப்பேட்டை, சென்னை-600 014. ரூ 15.

1105 மருத்துவ மேதைகள் பதி.2
பாலகிருஷ்ணன், ரா.
வானதி பதிப்பகம், தி.நகர். சென்னை-17. ரூ 6.50.

1106 மாணவர்களுக்கு காந்தியடிகள்
சண்முகம், ர.
அறிவு நிலையம்,
60/1, பைகிராப்ட்ஸ் சாலை,
திருவல்லிக்கேணி, சென்னை-5. ரூ 5.

1107 மாணவர்களுக்கு காமராசர்
சண்முகம், ர.
அறிவு நிலையம்,
60]1, பைகிராப்ட்ஸ் சாலை,
திருவல்லிக்கேணி, சென்னை-5 ரூ 5.

1108 மாணவர்களுக்கு நேரு
சண்முகம், ர.
அறிவு நிலையம்,
60-1, பைகிராப்ட்ஸ் சாலை,
திருவல்லிக்கேணி, சென்னை-5. ரூ 5.

1109 ரமண ஞான போதம்
அகப்பொருள் விளக்கம், பா.2
முருகனார்,
ஸ்ரீரமண கேந்திரம், புதுதில்லி. ரூ 8.85.

1110 வ.வே.சு.ஐயர் வரலாற்றுச் சுருக்கமும்
கம்பராமாயணச் சிந்தனையும்
வைத்தமாநிதி, T. ரூ 1.50.

1111 வள்ளல் சீதக்காதி வரலாறு
ஷெரீப் கவி காமு,
சீதக்காதி நூல் வெளியீட்டகம்,
21, பச்சையப்ப செட்டித்தெரு,
சென்னை-2. ரூ 12.

1112 வாழ்வளிக்கும் வள்ளல்
தயாநந்த ப்ரான்ஸிஸ்
பூக்கூடை பதிப்பகம்,
P.B. 501, சென்னை-3. ரூ 5.

1113 வாழ்விக்க வந்த காந்தி மகாத்மா
சம்பந்தம்,
வானதி பதிப்பகம், தி நகர். சென்னை-1. ரூ 9.50.

1114 வி.கோ. சூரியநாராயண சாஸ்திரியார் 1810—1903 பதி.3
சுப்ரமணியன், ந.
பரிதிமால் பதிப்பகம்,
5-ஏ. மூன்றாம் தெரு,
வசந்த் நகர், மதுரை-3.

1115 விண்வெளி வித்தகர்
ஞானி,
திருமலைப் பதிப்பகம்,
இராயப்பேட்டை, சென்னை-600 014. ரூ 9.25.

1116 விவேகானந்தர் வாழ்வும் வாக்கும்
சீனிவாசன், ர.
கூடல் பதிப்பகம், 79-2/4, பசும்பொன் நகர்,
மதுரை-625003.

1117 வைணவ சமய சான்றோர்களின் வாழ்க்கை அனுபவங்கள்
மணவாளன், கா.சே.
ஆனந்த பப்ளிகேஷன்ஸ்,
15, தீத்தாரப்ப முதலி தெரு,
திருவல்லிக்கேணி. சென்னை-5.

1118 வெற்றிவீரர் வின்ஸ்டன் சர்ச்சில்
ராஜேந்திரன், பி.எல்.
மணிவாசகர் நூலகம்,
12.பி. மேல்சன்னதி, சிதம்பரம் 608 001.
ரூ 3.50.

1119 ஸ்ரீசங்கரர்
ஸ்ரீநிவாஸன், டி.எஸ்.
வசந்தா பிரசுரம்,
55, கணபதி தெரு,
மேற்கு மாம்பலம்,
சென்னை-33. ரூ 7.25.

1120 ஸ்ரீமத் இராமாநுஜாசாரியார்
பத்மநாபன், ஆர்.
குவை பப்ளிகேஷன்ஸ், 143, பெல்சுசாலை,
திருவல்லிக்கேணி, சென்னை-5. ரூ 2 25.

# 39. அந்தமானில் தமிழ்

—சுப. சுப்பிரமணியன்

35 ஆயிரம் தமிழர்கள் வாழும் இத்தீவுகளில் முழுமையான அளவில் ஒரு தமிழ் நூல்கூட இதுவரை வெளிவரவில்லை. எனினும் முண்டியடித்து முன்னேறும் தமிழர்தம் நெஞ்சில் தமிழ் கொலுவிருக்கிறது. மொழி நலம் மறக்காத தமிழரின் மொழியுணர்வு பொங்கிய ஆண்டு 1981 என்று கூறலாம்.

வங்கக் கடலில் வடக்குத் தெற்காக, தமிழகத்தின் தலைநகர் சென்னையிலிருந்து 900 கி.மீ தொலைவில் நீண்டு நெளிந்து கிடக்கும் அந்தமான் நிக்கோபார் தீவுகள் எண்ணிக்கையில் சிறிதும் பெரிதுமாக 350-க்கு மேல் இருந்தாலும் ஏறத்தாழ 50 தீவுகளில் மட்டுமே மக்கள் வசிக்கிறார்கள்.

அந்தமான் நிக்கோபார் தீவுகள் 6 டிகிரியிலிருந்து 14 டிகிரி வரையுள்ள வடக்கு அட்சரேகைக்கும், 92 டிகிரிக்கும் 94 டிகிரிக்கும் இடைப்பட்ட தீர்க்கரேகைக்கும் உள்ளடங்கிய 8,293 ச. கிமீ. பரப்பளவு கொண்ட தீவாகும். இத்தீவுகளின் மொத்த மக்கள் தொகை இரண்டு இலட்சம் மட்டுமே. இவருள் தமிழ் பேசும் மக்கள் 35 ஆயிரம் பேராவர்.

தமிழைத் தாய்மொழியாகக் கொண்டோர் முப்பத்தையாயிரம் பேர் வாழ்ந்தாலும் இங்கிருந்து இதுவரை எந்தத்துறை-இயல் பற்றியும் தமிழ் மொழியில் ஒரு நூலும் வெளிவரவில்லை என்பது வருந்தத்தக்க ஒன்றே. தமிழில் அந்தமானைப் பற்றி ஒரு நூல் வெளியிடும் முயற்சியில் அந்தமான் தமிழர்களோ அல்லது தமிழ் கூறும் நல்லுலகத் தமிழர்களோ முன்வராததற்கு நிமித்தம் அறிய முடியவில்லை என்றாலும், படித்த அறிஞர்களில்கூடப் பலர்

அந்தமான் தீவுகள் குறித்தோ அங்கு வாழும் தமிழர்கள் குறித்தோ துளியும் தெரிந்திருக்கவில்லை என்பதை மறுக்க முடியாது.

அந்தமான் தீவுகளில் தமிழர்கள் எங்கெல்லாம் வாழ்கிறார்களோ அங்கெல்லாம் தமிழ் தொடர்பான சங்கங்கள் மன்றங்கள் ஏராளம். இவற்றுள் அந்தமான் தமிழர் சங்கம், தமிழ் இலக்கிய மன்றம், உலகத் தமிழ்ப் பண்பாட்டு இயக்கம், தமிழ் இளைஞர் பண்பாட்டுக் கலைமன்றம் ஆகிய யாவும் தலைநகரில் உள்ளவை. இவற்றின் சார்பாகப் புகழ்பூத்த அந்தமான் தமிழர் சங்கக் கலையரங்கில் பொங்கல்விழா, சித்திரை விழா, புலவர் விழா, பாரதி-பாரதிதாசன் விழா ஆகியவை மாறிமாறி நடைபெறும். 1981ஆம் ஆண்டும் கவிதை அரங்கம், பட்டிமன்றம், வழக்காடு மன்றம் ஆகியவை கொண்டாடப்பட்டன.

இதே போல நீளத்தீவு தமிழர் படிப்பகம், ரெங்கத் அண்ணா படிப்பகம், பாத்து பஸ்த்தி முத்தமிழ் மன்றம், சிறிய அந்தமான் தமிழர் சங்கம், மாயா பந்தர், டிக்லிப் பூன் தமிழர் சங்கங்கள் தமிழ் வளர்ச்சிப் பணியில் 81இல் சிறந்து பணியாற்றியுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

இந்த நிலைகளைத் தமிழகத்தோடு ஒப்பிட்டுப் பார்க்கக் கூடாது. தூரத்தொலைவில் எந்தவித வாய்ப்பு வசதியும் இல்லாத இடத்தில் தமிழ் உணர்வுகளை மட்டுமே மூலதனமாகக் கொண்டு இங்கே நடத்தப்படும் விழாக்கள் ஆக்கத்தின் அடிப்படையில் அமைவதில்லை; ஆர்வத்தின் அடிப்படையில் அமைவதாகும். குடிபெயர்ந்த மக்கள் வாழ்க்கைக்குப் போராடுவதோடு தமிழ் மொழி வளர்ச்சிக்காகவும் பாடுபடுவது உண்மை மொழி உணர்வின் பாற்பட்டதே!

1981, ஆகஸ்ட் 3-ஆம் நாள் தீவின் தலைநகரத்திலும் தீவின் பிற பகுதியிலும் 'தமிழ்க் கல்விப் பாதுகாப்புக் குழு'வின் சார்பாக அதன் தலைவர் திரு.க. கந்தசாமி, அதன் பொதுச் செயலர் திரு. சுப. சுப்பிரமணியன் ஆகியோர் தலைமையில் கல்வி நலத்திற்காகவும், தமிழர் தம் பிற தேவைகளை முன்வைத்தும் வரலாற்றுச் சிறப்புடைய போராட்டம் ஒன்றை நடத்தினார்கள்.

இந்தப் போராட்டத்தின் விளைவாக இன்றைய நாட்களில் தமிழைப் போதனா மொழியாகக் கொண்ட மூன்று மேல்நிலைப்

பள்ளிகள், ஆறு இடைநிலைப்பள்ளிகள், இருபது ஆரம்பத் தமிழ் பள்ளிகள் ஆகியவற்றில் ஐந்து ஆயிரத்திற்கும் கூடுதலான தமிழ்க் குழந்தைகள் தாய் மொழியில் கல்வி பயில வகை பிறந்திருக்கிறது. தீவுத்தமிழ் மாணவர்கள் மும்மொழித் திட்ட ரீதியில் கல்வி பயின் றாலும் போதனாமொழி தமிழே. அதற்குரிய பாடநூல்கள் யாவும் தமிழகத்துப் பாட நூல்களே என்பது குறிப்பிடத்தக்கது. எதை மறந்தாலும் மொழி நலம் மறக்காத தீவுத்தமிழ் மக்களின் மொழி உணர்வு பொங்கிய ஆண்டு 81 என்று கூறலாம்.

மொழி ஆய்வு, இலக்கிய ஆய்வு, வரலாற்று ஆய்வு இதுவரை இங்கு ஏதும் செய்யப்படவில்லை, என்றாலும் தீவில் மேல் நிலைப் பள்ளிவரை பயின்ற மாணவர்கள் தற்போது கல்லூரிகளில் பயிலச் செல்கிறார்கள். வேறு சில மாணவர்கள் மேற்படிப்பிற்காகத் தமிழகத்திற்கும், பிற இந்திய மாநிலங்களுக்கும் பயிலச் செல் கின்றனர். இவர்தம் கல்வி வளர்ச்சி தீவில் மொழித் துறையில் தேவையான மாற்றங்களைக் கொண்டு வரும் என உறுதியாக நம்புகிறோம். தற்போதைய நிலைகள் மொழி—தமிழ் மொழி வளர்ச்சிக்குத் தோற்றுவாயாக அமையலாம்.

ஏறத்தாழ 14 ஆண்டுகளாகத் தீவினின்று அந்தமான் முரசு எனும் தமிழ் கிழமை இதழ் வெளியிடப்பட்டு வருகிறது. இவ் விதழ் மொழித்துறையில் தீவுத்தமிழர்களுக்கு அவர் தம் ஆர் வத்தைக் கொட்ட வடிகாலாகப் பயன்பட்டதோடு தீவுத் தமிழர் தம் அரசியல், சமூகப் பொருளாதாரத் துறைகளிலும் செயலாற்றி வருகிறது.

1981 இல் 'தீ பரவட்டும்', 'அந்தமான் அலை' ஆகிய மேலும் இரு கிழமை இதழ்கள் தமிழில் வெளிவரத் துவங்கியுள்ளன.

1981இல் தொடங்கி 82இல் வெளி வந்த தமிழ் இளைஞர் பண்பாட்டுக் கலை மன்றத்தாரின் 'பொங்கல் சிறப்பு மலர்' தீவின் அரசியல், சமூக, பொருளாதார, நிருவாக நிலைகளைப் பேரளவு படம் பிடித்துக் காட்டுமாறு அமைந்ததாகும். தீவின் பழங்குடி மக்கள், அவர் தம் பழக்க வழக்கங்கள், பிற இனமக்கள் அவர் தம் எண்ணிக்கை, தாயகப் போக்குவரத்து, சுற்றுலா வாய்ப்பு வசதி இன்ன பிற தகவல்களை மலர் கொண்டிருக்கிறது. அந்தமானைப் பற்றிய செய்திகளை அறிய ஒரு நல்ல முயற்சி என்றே இந்த மலரைக் குறிப்பிட வேண்டும்.

1980 இல் தொடங்கி 81 இல் வெளிவந்த அந்தமான் தமிழர் சங்கத்தின் வெளியீடான கவிதை மலர் தீவின் இளைஞர் களின் மொழி உணர்வை எதிரொலிப்பதாகும்.

இந்தக் கவிதை நூலுக்கு முத்தமிழ் காவலர் கி.அ.பெ. விசுவநாதன், கலைமகள் ஆசிரியர் கி.வா. ஜகந்நாதன் ஆகியோர் ஆசியுரை தந்து சிறப்பித்துள்ளனர். இந்த நூல் 1981 இல் பொங்கல் விழாவின் போது வெளியிடப்பட்டது.

மொழி வளர்ச்சியில் இங்குள்ள கோவில்களும் தம் பங்கினை ஆற்றத் தவறுவதில்லை. திருப்புகழ் மன்றத்தின் ஆண்டு மலர் வெளியீடு அந்தமானில் ஆன்மீகத் துறையில் தமிழர்களின் ஈடு பாட்டினை நவிலுவதாலும். இந்தச் சின்னஞ்சிறிய தீவில் பதினைந்துக்கும் மேற்பட்ட இடங்களில் முருகன் கோவில்கள் உண்டு. இங்கே தேவாரம், திருவாசகம், திருப்புகழ் சொற் பொழிவுகள் அவ்வப்போது நடப்பதுண்டு ஒவ்வோர் ஆண்டும் நடக்கும் தைப்பூசம், கார்த்திகை விழாக்கள் தீவுத்தமிழர்களின் ஆர்வத்தைத் தூண்டுவதாகும்.

தீவின் வானொலி சிறப்பான தன்மை வாய்ந்ததாகும். இங்கு ஏழு மொழிகளில் ஒலி பரப்பப்படுகிறது. இவற்றில் தமிழ் மொழி யும் ஒன்று.

இங்கே '81 இல் பல புதிய ஒலிபரப்புகள் இடம் பெற்றன. சென்னை-திருச்சி வானொலி நிலையங்களில் பதிவு செய்யப்பட்ட இசை நிகழ்ச்சிகள், நாடகங்கள் தீவில் மறு ஒலிபரப்புச் செய்யப் பட்டன. இங்குள்ள தமிழ் அறிஞர்கள் குடியரசு தினம், சுதந்திர தினம், பொங்கல் விழா போன்ற நாட்களில் வானொலியில் கவிதை அரங்கம், சிறப்புச் சொற்பொழிவு ஆகிய நிகழ்ச்சிகளை நடத்தினர். அத்தோடு இங்குள்ள வானொலியில் ஒவ்வொரு நாளும் அரை மணிநேரம் தமிழ் நிகழ்ச்சிகளுக்கு இடம் ஒதுக்கப் பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

1981இல் அந்தமானில் தமிழ் என்பது பிற தமிழ் கூறும் நல்லுலகு போலப் பிரித்துக் கூறும் அளவு தனித்தன்மை வாய்ந்த தல்ல. என்றாலும் வளரும் அந்தமான் தமிழர் சமுதாயத்தின் முன், மொழி பற்றிய பிரச்சனைகள் பெரிய அறைகூவலாகத் தலை எடுத்துள்ளன. முண்டியடித்து முன்னேறும் அவர்கள் நெஞ் சில் தமிழ் கொலுவிருக்கிறது. எனவே, தம்மைப் பற்றி எழுதும் வரலாற்றைத் தமிழகத்திற்குக் கொண்டு வரும் நாளில் தகைமை பெறும் அந்தமான் தமிழ் நெஞ்சம்,

# 40. புதுவையில் தமிழ்

மு. சாயபு மரைக்காயர்

*சிறு மாநிலமே ஆயினும் புதுவையில் தமிழ் எழுத்தாளர்களும், சிந்தனையாளர்களும் இலக்கிய ஆர்வலர்களும் நிறைந்து காணப்படுகின்றனர். அதிக அளவில் புதுவை மக்கள் இலக்கிய நிகழ்ச்சிகளில் பங்கேற்கின்றனர். 81-இல் 29 நூல்கள் புதுவையில் வெளியாகியுள்ளன. இவற்றில் 26 நூல்கள் புதுவையைச் சேர்ந்த எழுத்தாளர்களால் எழுதப் பட்டவை என்பது குறிப்பிடத்தக்கது.*

பழமைச் சிறப்பும், பண்பாட்டு வளமும் மிக்க எழில் மாநிலம் புதுவை. இம்மாநிலம் புதுச்சேரி, காரைக்கால், மாஹே, ஏனாம் என்னும் நான்கு பெரும் பகுதிகளைக் கொண்டதாகத் திகழ்கின்றது. தமிழ், தெலுங்கு, மலையாளம், ஆங்கிலம், பிரெஞ்சு ஆகிய ஐந்துமொழிகள் இங்கே ஆட்சி மொழிகளாக உள்ளன. இது புதுவை மாநிலத்துக்கு மட்டுமே உரிய தனிச் சிறப்பாகும்.

புதுவை மாநிலத்தின் மொத்தப் பரப்பளவு 480 சதுர கிலோ மீட்டராகும். மக்கள் தொகை ஏறத்தாழ 5 இலட்சம் பேர். பரப்பளவிலும், மக்கள் தொகையிலும் தமிழ் நாட்டின் ஒரு மாவட்டத்தைவிடப் புதுவை மாநிலம் சிறுபகுதியாக இருப்பினும் புதுவைக்கென்று பல்வேறு தனிச் சிறப்புகள் உள்ளன.

## வரலாற்று நோக்கில் புதுவை

யவன ஆசிரியர்கள் தாலமி, பெரிபுளூஸ் ஆகியோர் குறிப்பிடும் 'பொதுக்கே' என்ற துறைமுகமே இப்போதிருக்கும் 'புதுச்சேரி' என ஆராய்ச்சியாளர்கள் அறுதியிட்டுரைக்கின்றனர். கி.மு. 2ஆம் நூற்றாண்டு முதல் புதுவை மேனாடுகளுடனும் கீழ் நாடுகளுட

னும் தொடர்பு கொண்டிருந்தது. புதுவைக்கு அருகிலுள்ள அரிக்கமேட்டில் கிடைத்த அரேபிய, ரோம, சீன நாணயங்கள் அக்கூற்றை உறுதிப்படுத்துகின்றன.[1]

புறநானூற்றில் 320ஆவது பாடலைப் பாடியுள்ள வீரை வெளியனார், அகநானூற்றில் 188ஆவது பாடலைப் பாடியுள்ள வீரை வெளியன் தித்தன் ஆகிய சங்க நூற்புலவர்கள் இருவரும், புதுவையைச் சேர்ந்த 'வீரை' என்னும் வீராம்பட்டினத்தைச் சேர்ந்தவர்களாகக் கருதப்படுகின்றனர்.[2]

பிற்காலப் பல்லவர்கள் ஆட்சி செலுத்திய கி. பி. 8ஆம் நூற்றாண்டில், புதுவையைச் சேர்ந்த பாகூரில் வடமொழிப் பல்கலைக் கழகம் ஒன்று விளங்கியதாம். புதுவையைச் சார்ந்த திருபுவனை வரதராஜப் பெருமாள் கோவிலில் கி.பி. 12ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த கல்வெட்டுகள் ஏறக்குறைய 40 காணப் படுகின்றன. புதுவையோடு தொடர்புடைய பல சுவையான செய்திகளை இவற்றின் மூலம் நாம் அறிந்துகொள்ள முடிகின்றது

பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்து பிரெஞ்சுக் காரர்கள் புதுச்சேரியுடன் தொடர்பு கொண்டிருந்தார்கள். கி.பி. 1761 முதல் கி பி 1814ஆம் ஆண்டுகளுக்கிடையில் பலமுறை புதுச்சேரி ஆங்கிலேயர்க்கு உடைமையாகி, இறுதியாகக் கி.பி 1815ஆம் ஆண்டில்தான் புதுவை பிரெஞ்சு ஆட்சிக்கு வந்தது. 1954ஆம் ஆண்டு நவம்பர் வரையில் பிரெஞ்சுக்காரர்களது ஆட்சி புதுவையில் நிலவியது. அதற்குப் பின்னரே புதுவை தன்னாட்சி பெற்று, இந்தியக் குடியரசுத் தலைவரின் நேரடி ஆட்சிப் பொறுப்பில் இயங்கும் தனி மாநிலமாக மாறிற்று.

இந்திய விடுதலைப் போராட்டத்தில் புதுவையின் பங்கு குறிப்பிடத்தக்கது. வங்கம் தந்த விடுதலைச் சிங்கம் அரவிந்தர், புதுமைக் கவிஞர் பாரதியார், புரட்சிக்கனல் வ.வே.சு. ஐயர், புரட்சி வீரர் மாடசாமி, சுப்பிரமணிய சிவா போன்ற தேச பக்தர் களுக்கும், விடுதலை வீரர்களுக்கும் புகலிடமாக விளங்கிய பெருமை புதுச்சேரிக்கு உண்டு.

---

1. அகமது, காரை, "புதுச்சேரி வழிகாட்டி" பாத்திமா பதிப்பகம், காரைக்கால், பக் 3,
2. தில்லைவனம். சு., "புதுவை மாநிலத் தமிழ் வளர்ச்சி" பாரி நிலையம், சென்னை, பக் 3.

# இலக்கிய நோக்கில் புதுவை.

வரலாற்று நோக்கில் மட்டுமின்றி இலக்கிய நோக்கிலும் புதுவைக்குப் பல பெருமைகள் உண்டு. இருபதாம் நூற்றாண்டின் தமிழ்க் கவிதை இலக்கியம் புதுச்சேரிக்குப் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறது.

மகாகவி பாரதியார் கி. பி. 1908 முதல் 1918 வரை பத்தாண்டுகள் புதுவையில் தங்கியிருந்தார். அவருக்குப் புகழ் சேர்த்த பெரும்பாலான படைப்புகள் புதுவையில் எழுதப் பட்டவையே ஆகும்.

பாரதியின் புதுவைப் படைப்புகளை மதிப்பிடுகின்ற தமிழறிஞர் பெ. தூரன் அவர்கள், ''பாரதியாருடைய கவிதையும் உரைநடையும் புதுச்சேரியில் மெருகேறிப் பூரண முதிர்ச்சி யடைந்தன என்று கூறலாம்'' என்கின்றார்.[3]

பாரதிக்குப் பின்னர் தமிழ் மறுமலர்ச்சிக்குக் காரணமாய் அமைந்த பாவேந்தர் பாரதிதாசனும் புதுவைப் பகுதியைச் சேர்ந்தவர் என்பது எண்ணத்தக்கது. எழுச்சியூட்டும் எண்ணற்ற சமுதாயச் சீர்திருத்தப் பாடல்களையும், ஐம்பதுக்கும் மேற்பட்ட நூல்களையும் புதுச்சேரியில் இருந்துதான் பாரதிதாசன் உலகுக்கு வழங்கினார்.

கி. பி. 1736 முதல் கி. பி. 17(0 வரை 25 ஆண்டுகளுக்கு அன்றாடம் நடந்த நிகழ்ச்சிகளை நாட்குறிப்பாக எழுதி, நாட் குறிப்பும் ஓர் இலக்கியமாக முடியும் என்று நிறுவிக் காட்டியுள்ள ஆனந்தரங்கப்பிள்ளையும் புதுவையைச் சேர்ந்தவரே!

சிறுகதைத் துறைக்கும், ஒப்பிலக்கியத்திற்கும், கம்பராமாயண ஆய்வுக்கும் களன் அமைத்துக் கொடுத்த வ. வே. சு. ஐயரும், கட்டுரை இலக்கியத்துக்கு வழி வகுத்துக் கொடுத்த வ. ரா. அவர் களும், கவியோகி சுத்தானந்த பாரதியாரும் வாழ்ந்து தமிழுக்கு வலிவும் பொலிவும் ஊட்டிய மண், புதுவை மண்ணே![4]

---

3. தூரன், பெ., (தொகுப்பாசிரியர்), ''பாரதி தமிழ்'' அமுத நிலையம், சென்னை, 1952, பக்.36.
4. பாண்டுரங்கன் அ. 'புதுவை மாநிலத்தில்' கட்டுரை ''உலகத் தமிழ்'' தமிழண்ணல் — குழந்தைநாதன் (பதிப்பாசிரியர்கள்), மதுரைக்காமராசர் பல்கலைக்கழகம் முதற்பதிப்பு, ஜனவரி 81, பக்.148.

மற்றும் சவராயலு நாயகர், இராமானுஜ நாவலர், பு. அ. பெரியசாமிப் பிள்ளை, பங்காரு பத்தர், புலவர் பொன்னைய முதலியார், வீ. துரைசாமி முதலியார், ஜெய்னுல்லாபுதீன் சாயபு, ஞான தியாகு, பரமானந்த மரியதாசு, சு. குமாரசாமி செட்டியார், அமுதகவி சாயபு மரைக்காயர், வாணிதாசன் போன்ற புலவர் களும் புதுவைக்குப் புகழ் சேர்த்த புலவர்களுள் குறிப்பிடத்தக்க வர்கள் ஆவர்.

இத்தகு இலக்கியப் பின்னணியை உடைய புதுவை மாநிலம் இன்றளவும் தமிழ் வளர்ச்சியில் முன்னணியில் நிற்கின்றது. 1981 ஆம் ஆண்டில் புதுவை மாநிலத்தில் வெளியிடப்பட்டிருக்கும் நூல்களை அடிப்படையாகக் கொண்டு, புதுவையில் தமிழ் வளர்ச்சி முன்னணியில் நிற்கின்றது எனலாம். 1981 ஆம் ஆண்டில் புதுவை மாநிலத்தில் வெளியிடப்பட்டிருக்கும் நூல்களை அடிப்படையாகக் கொண்டு, புதுவையில் தமிழ் வளர்ச்சி இங்கு மதிப்பீடு செய்யப் படுகிறது.

## புதுவையில் எண்பத்தொன்றில் வெளிவந்த நூல்கள்

புதுவைப் பகுதிகளில் சிந்தனையாளர்களும், எழுத்தாளர் களும், இலக்கிய ஆர்வலர்களும் நிறைந்துள்ளனர். புதுவையி லுள்ள பல்வேறு இலக்கிய அமைப்புகளும் வாரந்தோறும் இலக்கிய நிகழ்ச்சிகளைத் தொடர்ந்து நடத்தி வருகின்றன. இந் நிகழ்ச்சிகளுக்குப் புதுவை மக்கள் பெருமளவில் வருகின்றனர். சென்னை போன்ற பெருநகரங்களைவிட அதிகமான அளவில் புதுவை மக்கள் இலக்கிய நிகழ்ச்சிகளில் பங்கேற்கின்றனர் என்பது பரவலான கருத்து.

நூல் வெளியீட்டிலும் புதுவை எழுத்தாளர்கள் பேரார்வம் காட்டுகின்றனர். கடந்த ஆண்டுகளை ஒப்புநோக்க, 1981இல் புதுவையில் வெளியிடப்பட்ட நூல்களின் எண்ணிக்கை கணிச மாக உயர்ந்துள்ளது 1981இல் மட்டும் 29 நூல்கள் புதுவையில் வெளியிடப்பட்டுள்ளன. இவற்றுள் 26 நூல்கள் புதுவையைச் சேர்ந்த எழுத்தாளர்களால் எழுதப்பட்டவை. எஞ்சிய மூன்று நூல்கள் தமிழகத்தைச் சேர்ந்த எழுத்தாளர்களால் எழுதப்பட்டு, புதுவையில் வெளியிடப்பட்டவை.

கவிதை, சிறுகதை, கட்டுரை, இலக்கணம், திறனாய்வு என்று எல்லாத் துறைகளிலும் நூல்கள் வெளிவந்துள்ளன. ஒவ்வொரு துறையிலும் வெளியிடப்பட்ட நூல்களின் விவரம் பின்வருமாறு:

| | | |
|---|---|---|
| கவிதை நூல்கள் | — | 10 |
| வரலாற்று ,, | — | 5 |
| இலக்கியத் திறனாய்வு | — | 4 |
| சிறுகதை | — | 2 |
| இலக்கணம் | — | 2 |
| அறிவியல் | — | 1 |
| கட்டுரை | — | 1 |
| சிறுவர் புதினம் | — | 1 |
| மொழி நூல் | — | 1 |
| வழிகாட்டி நூல் | — | 1 |
| நகைச்சுவைத் துணுக்குகள் | — | 1 |
| ஆக மொத்தம் | | 29 நூல்கள் |

புதுவையில் வெளியிடப்பட்டுள்ள நூல்களில் முதலிடம் பெறுபவை கவிதை நூல்களே. 10 நூல்கள் கவிதை நூல்களாக வெளிவந்துள்ளன. 5 நூல்கள் வெளி வந்துள்ள வரலாற்று வகை இரண்டாம் இடத்தைப் பெறுகின்றது. மூன்றாம் இடத்தைப் பெறும் இலக்கியத் திறனாய்வில் 4 நூல்கள் வெளியிடப்பட்டுள்ளன.

புதினம், புதுக்கவிதை, நாடகம் போன்ற வகைகளில் 1981ஆம் ஆண்டில் புதுவையில் ஒரு நூல் கூட வெளிவராதது குறிப்பிடத் தக்கது. புதுவையில் வெளியிடப்பட்ட நூல்களில் 18 பக்கங்களைக் கொண்ட ஆறுபடை வீடு அளவால் மிகச் சிறியது. 272 பக்கங்களை உடைய காரைக்கால் மஸ்தான் சாஹிப் வலியுல்லாஹ் வரலாற்றுப் பேழை அளவால் பெரியது. இனி ஒவ்வோர் இலக்கிய வகையாக நோக்குவோம்.

## கவிதை

பாரதியாரும், பாரதிதாசனும், வாணிதாசனும் பாட்டுணர்வை ஊட்டி வளர்த்த இடம் என்பதாலோ என்னவோ, 1981 இல் புதுவையில் வெளியிடப்பட்ட நூல்களில் கவிதை நூல்களே மிகுதியாகக் காணப்படுகின்றன. 10 நூல்கள் கவிதை

வடிவில் வெளிவந்துள்ளன. இவற்றுள் காவியம்—1; குறுங் காவியம்—2; சிற்றிலக்கியம்—2; குழந்தை இலக்கியம்—2; தனிப் பாடல்களின் தொகுப்பு—3.

இந்நூல்கள் யாவுமே மரபுக் கவிதையாக அமைந்திருப்பது சிறப்பாகக் குறிப்பிடத் தக்கது. புதுக்கவிதை மோகம் பெருகி யுள்ள இக் காலகட்டத்தில், புதுவையிலிருந்து வெளியிடப்பட்ட எல்லாக் கவிதை நூல்களுமே மரபைப் பின்பற்றியிருப்பது, புதுவைக் கவிஞர்கள் பழமையின் மீது கொண்டிருக்கும் ஆழ்ந்த பற்றினை வெளிப்படுத்துகின்றது.

## 1. மேகநாதம்

| | | |
|---|---|---|
| நூலாசிரியர் | — | எஸ். கே. இராமராஜன். |
| வெளியீடு | — | வானதி பதிப்பகம் தியாகராய நகர், சென்னை-17. |
| பக்கம் | — | 16+128=144 |
| விலை | — | ரூ 7/- |

புதுவையில் 1931 ஆம் ஆண்டு நடைபெற்ற 'கம்பன் விழா' வில் இந்நூல் வெளியிடப்பட்டது. ஆயினும் இந்நூலாசிரியர் புதுவையைச் சார்ந்தவர் அல்லர். இதன் முதற்பதிப்பு 1956 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்டிருக்கின்றது.

நான்கு இலம்பகங்களையும், 180 பாடல்களையும் கொண்ட காப்பியமாக இந்நூல் இலங்குகின்றது. ஒவ்வோர் இலம்பகமும் முறையே 45 பாடல்களைக் கொண்டுள்ளன.

''இலங்கையம்பதியை வீரமாநகர் ஆக்கியவன் மேகநாதன். இவன் இராவணனுடைய புதல்வன். இந்திரனையே புறம் கண்டவன். அதனால் 'இந்திரசித்தன்' என்ற விருது பெற்றவன். இவ் வீரமகனைப் பற்றிக் கூறுவதே 'மேகநாதம்' என்னும் இந் நூல். மேகநாதனைப் பற்றிக் கூறுவதால் 'மேகநாதம்' எனப் பெயர் பெற்றது'' என்று நூலாசிரியர் தம் முன்னுரையில் குறிப் பிடுகின்றார்.

இந்நூலில் ஒவ்வொரு பாடலுக்கும் கீழே அதற்குரிய விளக் கத்தை ஆசிரியரே எழுதியிருப்பது குறிப்பிடத்தக்கது. அளவால் சிறிய நூலேயாயினும் காப்பிய நெறிகள் போற்றப்பட்டுள்ளன.

## 2. காதல் பாதை

நூலாசிரியர் — புலவர். பட்டாபிராமன்.
வெளியீடு — கல்வித் துறைச் சார்பு வெளியீடு புதுவை அரசு.
பக்கம் — 8+54=62
விலை — குறிப்பிடப்படவில்லை.

புதுவைக் கவிஞர் சவராயலு நாயகரின் 150 ஆவது ஆண்டு விழா நினைவாகப் புதுவை அரசு 'குறுங்காவியப் போட்டி' ஒன்றை 1981இல் நடத்தியது. அப்போட்டியில் முதற்பரிசு பெற்ற பட்டாபிராமனின் இந்நூலைக் கல்வித்துறை சார்பாகப் புதுவை அரசே வெளியிட்டுள்ளது.

சாதியொழிப்பு, தீண்டாமை ஒழிப்பு, வரதட்சணை ஒழிப்பு, ஊனமுற்றோர் நல்வாழ்வு, கலப்பு மணம், குடும்ப நலம் போன்ற சீர்திருத்தக் கருத்துகள் நூல் முழுவதும் விரவிக் கிடக்கின்றன. அரசு நடத்திய போட்டியாதலின், அரசின் ஆக்கப் பணிகளை யெல்லாம் ஒருசேரக் கலவையாக்கி இக் குறுங்காப்பியத்தை ஆசிரியர் பாடியிருப்பார் போலும் என்று எண்ண வைக்கின்றது. இருப்பினும்,

''மன்றல்செய் மகனுக் காக
மனமது மிகவும் நொந்தே
இன்றவர் ஈயும் செல்வம்
இழிவினும் இழிவே அன்றோ?''

(பக். 40) என்று வரதட்சணை வாங்குவோரைச் சாடுவதும்,

''ஒரு பிள்ளை இரு பிள்ளை
போதும் மேலே போனால்
உரைக்க வொண்ணாத் தொல்லையிங்கே
எல்லையதற் கில்லை'' (பக். 51)

என்று குடும்ப நலம் பாடுவதும் சுவையாக உள்ளன.

## 3. பெண்மை போராடுகிறது!

நூலாசிரியர் — பாவண்ணன்
வெளியீடு — கல்வித்துறைச் சார்பு வெளியீடு புதுவை அரசு.
பக்கம் — 4+74=78
விலை — குறிப்பிடப்படவில்லை

கதைத் தலைவி செல்வி கணவனை இழந்தவள்; தன் குழந்தைகளையே உலகமாக மதிப்பவள்; போலிச் சமுதாயத்தை எதிர்த்து நின்று, தன் குழந்தைகளை வளர்ப்பதற்காகச் செல்வி நடத்தும் போராட்டமே 'பெண்மை போராடுகிறது' என்னும் இச் சிறு காப்பியம்.

புதுவை அரசு நடத்திய குறுங்காவியப் போட்டியில் இரண்டாம் பரிசு பெற்ற இந்நூலைப் பாவலர் பாவண்ணன் பாடியுள்ளார். புதுவை அரசே இந்நூலை வெளியிட்டிருக்கிறது.

பெண்மையின் பெருமையைப் போற்றும் வகையில் இவர் படைத்துள்ள குறுங்காவியமே 'பெண்மை போராடுகிறது'.

"பெண்ணுரிமை என்பதெலாம் வெற்றுப் பேச்சு;
பெண்கட்கு விடுதலையென் பதுவும் கூச்சல்;
பெண்ணுரிமை பெண்ணுரிமை என்று பேசும்
பித்தரெலாம் மனத்துள்ளே வீட்டுக் குள்ளே
பெண்கள்தமை இழிவாக நடத்தித் தத்தம்
பேச்சில்மட்டும் வீரத்தைக் காட்டு வாரேல்
பெண்ணுரிமை நம்நாட்டில் கிடைத்தல் இல்லை;
பெண்ணிலையும் நம்நாட்டில் உயர்தல் இல்லை"

(பக். 97) என்று பெண்ணுரிமைக்கு முழக்கமிடும் பாவலராக—வளரும் பாவேந்தராக இவரை நாம் காண்கிறோம். சிறந்த எதிர் காலம் பாவண்ணனுக்கு அமையுமென்று நம்பலாம்.

## 4. அரிமதி அந்தாதி

நூலாசிரியர் — அரிமதி தென்னகன்
வெளியீடு — ஆனந்தரங்கர் பதிப்பகம், புதுச்சேரி.
பக்கம் — 48.
விலை — ரூ 3. 50.

புதுவைப் புகழ் மணிகளுள் ஒருவரான ஆனந்தரங்கம் பிள்ளையின் தற்போதைய தலைமுறையினராகிய ஆனந்த ரங்கக் கிருஷ்ணசாமிப் பிள்ளையைப் பாட்டுடைத் தலைவராகக் கொண்டு இந்த அந்தாதி நூல் பாடப்பட்டுள்ளது. அந்தாதி யாப்பில் 100 பாடல்கள் பாடப்பட்டுள்ளன.

தம்மை ஆதரித்துப் போற்றிய புரவலரின் சிறப்புக்களையும் பண்பு நலன்களையும் புலவர் அரிமதி தென்னகன் இந்நூலில் சிறப்புற விளக்கியுள்ளார்.

பொதுவாக அந்தாதி நூல்களுக்குப் பாட்டுடைத் தலைவரின் பெயரையே சூட்டுவது மரபு. ஆனால் இந்நூலாசிரியர் 'அரிமதி அந்தாதி' என்று தம் பெயரையே நூலுக்குச் சூட்டிப் புதிய மரபைத் தொடங்கி வைத்துள்ளார்.

## 5. திருநபி இரட்டை மணி மாலை

நூலாசிரியர் — காரை-இறையடியான்,
வெளியீடு — பாத்திமா பதிப்பகம்
67, காஜீயார் வீதி, காரைக்கால்
பக்கம் — 24
விலை — 1—00

''எல்லா வகை இலக்கியங்களிலும் இடம் பெற்றுள்ள ஏந்தல் நபிகள்நாயகம் அவர்கள், 'இரட்டை மணிமாலை'யிலும் இடம் பெற வேண்டுமென்ற எண்ணத்தால் இந்நூல் உருவாயிற்று'' என்று பாவலர் - காரை இறையடியான் தமது முன்னுரையில் இந்நூல் தோற்றத்திற்கான காரணத்தை விளக்குகின்றார்.

'திருநபி இரட்டை மணி மாலை'யோடு, 'தூய்மைக்கோர் தூதர் நபி', 'நான் கண்ட நபி மணி' 'நபி வழியே நல்வழி' 'பண்பு நபி பதிகம்' முதலிய பாடல்களும் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. எல்லாப் பாடல்களுமே அண்ணல் நபிகளாரின் புகழைப் போற்று வனவாக உள்ளன.

கவிஞர் காரை இறையடியான், நபிகள் நாயகத்தின் திரு நெறியைப் பின்பற்ற வேண்டியதன் தேவையைப் பின்வருமாறு வலியுறுத்திப் பாடுகின்றார்.

''ஆங்காங்கும் மூடம்; அறியாமைப் பீடம்;
அம்மணப்பெண் ஆடஓர் கூடம்;
வாங்குவது வட்டி; வாய்க்குமதுப் புட்டி!
வாழ்விழந்து நிற்கின்றான் மட்டி!
ஏங்க வைக்கும் தீமை; எண்ணமெலாம் ஆமை;
ஏனடா நாவிருந்தும் ஊமை?
தாங்குநெறி உற்றே தவறுகளை எற்றே
தலைமைநபி தூய்மைநிலை பற்றே!''; (பக். 21)

இறையடியானின் சொல்லாட்சிக்கும் பொருள் வளத்துக்கும், கவிநயத்துக்கும் இப்பாடல் ஓர் இனிய எடுத்துக்காட்டு!

'திருக்காரை இரட்டை மணிமாலையை' அடுத்து இஸ்லாமியத் தமிழிலக்கியத்தில் இரண்டாவது இரட்டை மணிமாலையாக வெளிவந்துள்ள இந்நூல், இஸ்லாத்துக்கும் இன்பத் தமிழுக்கும் பெருமை சேர்ப்பதாகும்.

## 6. குழந்தை மலர்கள்

நூலாசிரியர் — புலவர் தமிழவேள்,
வெளியீடு — நெடுவேளகம், புதுச்சேரி,
பக்கம் 8+60=68
விலை — ரூ 3—00

குழந்தைகளுக்காகப் பாடப்பட்ட 45 கவிதைகளின் தொகுப்பே இந்நூல்! இவற்றுள் 13 கதைப் பாட்டுக்களாக உள்ளன. புலவர் தமிழவேள் இக்குழந்தை இலக்கியத்தை இயற்றியுள்ளார்.

சிறுவர்களுக்கு ஆர்வ மூட்டுகின்ற வகையில் பசு, பூனை நாய், யானை, சிட்டுக்குருவி, பச்சைக்கிளி, எறும்பு, வெண்ணிலா, வின்மீன், மழை, மலர்கள், வானொலி, பழங்கள், தொலைக்காட்சி போன்ற தலைப்புக்களில் அமைந்த பாடல்கள் எளிமையாகவும் இனிமையாகவும் உள்ளன.

'அரச மரமும் நாணலும்' 'பூனையும் பானையும்' 'காக்கையும் தண்ணீர்க் குடமும்,' 'கிரியும் தாயும்' போன்ற தலைப்புக்களில் அமைந்த கதைப் பாடல்கள் சிறுவர்களுக்குச் சிறந்த கருத்துகளை நல்ல கதைகளின் மூலம் கூறுவனவாக உள்ளன.

''இந்நூற்பாடல் ஒவ்வொன்றிலும் இனிமையும்' எளிமையும் மிளிர்கின்றன. அவையனைத்துமே குழந்தைகளுடைய உணர்ச்சி களை உயர்த்துவனவாகவும், ஒழுக்கத்தை வளர்ப்பனவாகவும், அவர்களுடைய வாழ்க்கையைச் செப்பனிடுவனவாகவும் இருக் கின்றன'' என்று முன்னாள் தலைமைநீதிபதி ஜஸ்டிஸ் இஸ்மாயில், அவர்கள் இந்நூலின் அணிந்துரையில் குறிப்பிடுவது முற்றிலும் பொருத்தமாகவே உள்ளது.[5]

''எந்த உருவைத் தொழுதாலும்
எந்தப் பெயரைச் சொன்னாலும்
அந்தக் கடவுள் மகிழ்ந்திடுவார்;
அருளை என்றும் வழங்கிடுவார்'' (பக்.1)

---

5. இஸ்மாயீல், மு. மு.. ''குழந்தை மலர்கள்'' புலவர்தமிழ வேள், அணிந்துரை, பக். 3,

என்னும் கடவுளைப் பற்றிய பாடல் பிஞ்சு நெஞ்சங்களில் சமய ஒருமையைப் பதிய வைக்கும் ஆற்றல் மிக்கது. இது போன்ற சுவை யான பாடல்கள் இந்நூலை அணி செய்கின்றன.

## 7. புரட்சி மழலைப் பூக்கள்

நூலாசிரியர் — அரிமதி தென்னகன்
வெளியீடு — தென்னன் பதிப்பகம், புதுச்சேரி
பக்கம் — 32
விலை — ரூ 2—00

குழந்தைகளுக்கான 28 பாக்களே, புரட்சி மழலைப் பூக்களாக மலர்ந்துள்ளன. புரட்சிக் கருத்துகளைக் குழந்தை உள்ளங்களிலே விதைக்க, ஆசிரியர் மேற்கொண்ட அரும் முயற்சியே இந்நூல் எனலாம்.

'இனநலம் காப்பாய்' 'ஈந்து வீழாதே' 'உயர்ந்திடத் தாழேல்' (பக். 5) என்று இவரும் காலத்திற்கேற்ற புதிய ஆத்தி சூடியைப் பாடியுள்ளார். அகர வரிசையோடு நிறுத்தியிருக்காமல், முழுமையான ஆத்திசூடியைப் பாடியிருக்கலாம்.

ஒவ்வோர் உயிரினத்திடமிருந்தும் நாம் கற்றுக் கொள்ள வேண்டிய நீதிகளைப் 'பாடம் பதினாறு' என்ற தலைப்பிலும், மரங்களிடமிருந்து அறிந்து கொள்ள வேண்டிய செய்திகளை 'இரு இரு' என்ற தலைப்பிலும் பாடியிருப்பது நன்றாக உள்ளது.

"சேற்றைச் சோற்றில் சேர்ப்பாயா?
செந்தமிழ்ச் சோற்றில் பிறமொழி ஏன்?"

(பக்:19) என்று பிறமொழிக் கலப்பினைச் சாடுவது சிறப்பு. வளரும் உள்ளங்களுக்கு இத்தகு கருத்துகளே தேவை அன்றோ?

## 8. ஆறுபடை வீடு

நூலாசிரியர் — பண்ணடிமை பரமகேது
பக்கம் — 18
விலை — ரூ 1—00

தமிழ்க் கடவுள் திருமுருகன் எழுந்தருளியுள்ள அறுபடை வீடுகளின் பெருமைகளை இந்நூல் பாடுகின்றது. 'ஆறுபடை வீட்டில் அமர்ந்திருக்கும் ஆனந்த வடிவினைப் பாடிப் பரவச மடைய வேண்டும்' என்ற தமது ஆசையாலேயே இந்நூல் உருப் பெற்றதாக நூலாசிரியர் பண்ணடிமை பரமகேது தமது முன்னுரை யில் குறிப்பிடுகின்றார்.

''ஆவினன் குன்றுவாழ் அண்ணலை வேண்டினால்
மேவி யருள் புரி வான்'' (பக்:13)

''ஏரகம் வாழ்ந்திடும் எந்தையை எண்ணினால்
சீரும் சிறப்புமளிப் பான்'' (பக்:13)

என்று நூல் முழுமையும் முருகன் அருள் வேட்டலாகவே பரமகேது பாடியுள்ளார்.

## 9. அழகோவியம்

நூலாசிரியர் — அரிமதி தென்னகன்
வெளியீடு — சேகர் பதிப்பகம்
சென்னை—78
பக்கம் — 128
விலை — 9—00

அரிமதி தென்னகன் அவ்வப்போது பாடிய 27 பாடல்களின் தொகுப்பாக இந்நூல் வெளியிடப்பட்டுள்ளது. ''வளமையின் செழிப்பில் மட்டுமல்ல, வறுமையின் அழிப்பிலும் அழகைக் காண லாம். அழகு என்பது அவரவர்தம் கருத்தைப் பொறுத்தே எழுகிறது; விழுகிறது'' (பக்:21) என்று ஆசிரியர் அழகுக்குத்தரும் விளக்கம் அருமை!

தம் எண்ணத்திற்கேற்ப 'மீசை', 'திண்ணை' 'துடைப்பம்' 'பழஞ்செருப்பு' 'எலும்புக்கூடு' 'இடுகாடு' முதலியவற்றையும் பாட்டுடைப் பொருளாக்கிப் பாடியிருப்பது புதுமை!

புதிய உவமைகளைச் சொல்வதில் அரிமதி தென்னகன் சிறந்து விளங்குகின்றார்.

நாய்மடி முலையேயான தென்னங் குறும்பை,
வெடிக்காத கொப்புளம் போல் பூனையின் உள்ளங்கால்
பூண்டின் பல்லைப்போல் கோழி மூக்கு
சுருக்கித் தொங்கவிட்ட குடைபோல் வாழைப்பூ

இவை போன்ற இனிய புதிய உவமைகளை நூல் முழுவதும் கையாண்டிருக்கிறார்.

ஏழை அழிபசியைப் போக்காத அப்பம், நிறுத்தெடுக்க முடியாத தங்கத்தட்டு, பறித்தளிக்கஇயலாத வானப்பூ, அவிழ்த்து வைத்த வழிப்பயணக் கட்டுச் சோறு, கேரளத்தார் கைத்தாழங் குடை உப்பங்கழியிலே மிதக்கின்ற பரிசல், என்றெல்லாம் ''நிலாவைச்'' சிறப்பித்துக் கவிஞர் கூறும் உவமைகள், இவரை இன்னுமோர் உவமைக் கவிஞராக நம்மை உணரச் செய்கின்றன.

## 10. வாணிதாசன் கவிதைகள் தொகுதி-2

பதிப்பாசிரியர் — அரங்க. நலங்கிள்ளி
வெளியீடு — வாணிதாசன் பதிப்பகம்
பாகூர், புதுவை,
பக்கம் — 16+108=124
விலை — ரூ 6—00

'தமிழ் நாட்டுத் தாகூர்' 'தமிழ் நாட்டின் வோர்ட்ஸ்வொர்த்' என்றெல்லாம் பாராட்டப்படும் பாவலர் வாணிதாசன்' புதுவையைச் சேர்ந்த பாகூரில் பிறந்தவர்: பாரதிதாசனின் மாணவர்; பதினைந்து கவிதை நூல்களை வெளியிட்டவர் பாவலரேறு என்ற சிறப்புப் பட்டத்தைப் பெற்றவர்.

வாணிதாசன் கவிதைகள் முதல் தொகுதியில் இடம் பெறாத 56 பாடல்களைத் தொகுத்து, அவர்தம் மகனாராகிய நலங்கிள்ளி இந்நூலைப் பதிப்பித்து வெளியிட்டுள்ளார்.

அழகின் சிரிப்போ அழியா ஓவியம்!
ஆசான் பிரிவென் அழுகைக் காவியம்!
பழகு தமிழுக் கினியார் பிறப்பார்?
பைந்தமிழ் வளத்தை இனியார் நிறைப்பார்?

(பக்-57) என்று தம் ஆசான் பாரதிதாசனின் மறைவுக்காக மனம் வருந்தி, வாணிதாசன் கையறு நிலையில் பாடுவது உருக்கமாக உள்ளது.

"சீரழிந்த சிற்பமுதல் நாட்டியக்கலை
சித்திரமும் கைத்தொழிலும் மெத்த வளர்ப்போம்
பார்மொழிகள் அத்தனையின் தேனைப் பிழிந்து
பலகவிதை சிறுகதைகள் தமிழில் குவிப்போம்

(பக்.12) என்ற வாணிதாசனாரின் பாடலில் பாரதியின் தாக்கத்தை அதிகமாகக் காண்கிறோம்.

பாரதி, பாரதிதாசன் வரிசையில் தமிழுலகம் போற்ற வேண்டிய மற்றுமோர் கவிஞர் வாணிதாசன் என்பதை இந் நூலும் உறுதி செய்கின்றது.

### புதுவையில் கவிதைகள்

1981 ஆம் ஆண்டில் புதுவையில் வெளியான கவிதை நூல் களை ஒரு சேர ஒப்பு நோக்கும்போது, காலத்திற்கேற்ற எளிய நடையில் மரபைப் போற்றிக் கவிதை எழுதுதல் இயலும் என்பதை அவை உறுதிசெய்கின்றன.

## பாரதி கவிதாஞ்சலி

மகாகவி பாரதியாரின் நூற்றாண்டுத் தொடக்க விழா 1981 ஆம் ஆண்டில் தொடங்கியது. புதுவை அரசு இவ்விழாவினை 1981 டிசம்பர் 11,12,13 ஆகிய மூன்று நாட்களில் மிகச் சிறப்பான முறையில் கொண்டாடியது; இவ்விழாவையொட்டிப் புதுவை அரசு 'அறுசீர் விருத்தப் பாட்டுப் போட்டி' ஒன்றையும் நடத்தியது. இப்போட்டிக்குச் சுமார் 1500 கவிதைகள் வந்தன.

புதுக்கோட்டையைச் சேர்ந்த பாவலர் செ. இளவல் எழுதிய,

"பாட்டியலில் விடுதலைப்போர்ப் பட்டியலில்
முதற்பெயரைப் பதித்த கோமான்!
ஏட்டியலில் புதுமைஒளி ஏற்றியவன்!
பாரதியாம் எழுக திர்க்குக்
கோட்டிமயக் கல்லெடுத்துக் குமரியிலே
அதை நனைத்துக் கொண்டு வந்து
வேட்டமுறும் சிலை வடிப்போம்! வீதிதோறும்
நூற்றாண்டு விழாவெ டுப்போம்! [6]

என்ற பாடல் பரிசுக்குரியதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டு, ஆயிரம் ரூபாய் பரிசளிக்கப்பட்டது. ஒவ்வொரு மாவட்டத்திலும் மிகச் சிறந்த கவிஞர் தேர்ந்தெடுக்கப்பட்டு, அவர் எழுதிய பாடலுக்கு நூறு ரூபாய் வீதம் பரிசளிக்கப்பட்டது.

1981 டிசம்பர் 11,12,13 ஆகிய மூன்று நாட்களிலும் ஆயிரக் கணக்கான கவிஞர்கள் நாடு முழுவதிலுமிருந்து புதுவைக்கு வந்து பாரதி வாழ்ந்த இல்லத்தில் தாம் எழுதிவந்த அறுசீர் விருத்தப் பாடல் ஒன்றைப் பாடி, மகாகவி பாரதிக்கு அஞ்சலி செலுத்தினர். ஆயிரத்துக்கும் மேற்பட்ட கவிஞர்கள் பங்கேற்ற முதல் கவியரங்கம் உலகிலேயே இதுவாகத்தான் இருக்க வேண்டும்.

இக்கவிதாஞ்சலிக்கு ஏற்பாடு செய்த தியாகி எஸ்.ஆர். சுப்பிரமணியமும், அதைச் சிறப்பாக நடத்திக் காட்டிய புதுவை அரசினரும் பாராட்டுக்கு உரியவர்கள் ஆவர். பாரதி அஞ்சலியாகப் பாடப்பட்ட எல்லாப் பாடல்களையும் அரசே தொகுத்து, நூலாக வெளியிடவிருக்கின்றது.

---

6. "ஸ்ரீ சுப்ரமண்ய பாரதி கவிதா மண்டலம்", கார்த்திகை இதழ், புதுவை, பக். 5.

## வரலாறு

கவிதை நூற்களையடுத்துப் புதுவையில் 1981 ஆம் ஆண்டில் வரலாற்று நூல்களே அதிகம் வெளிவந்துள்ளன. வெளியிடப் பட்ட ஐந்து நூல்களுள் திருநள்ளாற்று வரலாறு, சித்த விநாயகர் செங்கம்மா காளியம்மன் புராண வரலாறு ஆகிய இரண்டும் தல வரலாற்றைக் கூறுவன; அன்னை உம்மு ஹபீபா, காரைக்கால் மஸ்தான் சாஹிப் வலியுல்லாஹ் வரலாற்றுப் பேழை என்ற இரண்டும் இறை நேசச் செல்வர்களின் வாழ்க்கை வரலாற்றை விளக்குவன; கவிஞர் சவராயலு நாயகர் வாழ்க்கை வரலாறு புதுவைப் புலவர் ஒருவரின் வாழ்க்கை வரலாற்றைக் கூறுவது.

இனி, இந்நூற்கள் ஒவ்வொன்றைப் பற்றியும் ஒரு சிறிது காண்போம்:

### 11. திருநள்ளாற்று வரலாறு

| | | |
|---|---|---|
| நூலாசிரியர் | — | புலவர் திருமேனி நாகராசன் |
| வெளியீடு | — | ஆலய வெளியீடு திருநள்ளாறு |
| பக்கம் | — | 24 |
| விலை | — | ரூ 1-00 |

சனிக்கோர் தனிக்கோயில் கொண்ட திருத்தலமாகிய திருநள்ளாற்றின் வரலாறு, இந்நூலில் விளக்கப்படுகின்றது. ஆலயமே வெளியிட்டுள்ள இந்நூல், அளவால் மிகச் சிறியது. ஆயினும் பக்தர்களுக்குப் பெரிதும் பயன்தருவது. சுருக்கமாகவும், செறிவாகவும் அழகிய தமிழ் நடையில் இந்நூலைப் புலவர் திருமேனி நாகராசன் எழுதியுள்ளார்.

தேவாரம் பாடிய மூவராலும் பாடல் பெற்ற திருத்தலமாகிய திருநள்ளாற்றின் பல்வேறு சிறப்புகளையும் ஆசிரியர் குறிப்பிட்டெழுதியுள்ளார்.

நள்ளாறு என்பதற்கு அரிசிலாற்றிற்கும், நூலாற்றிற்கும் நடுவில் இருக்கும் தலம் என்பது பொருள். இனி நளன் ஆறுதல் பெற்றதால் 'நள்ளாறு' என்றாயிற்று என்பாரும் உளர். இவ்வூர் பண்டு தருப்பை வனமாகக் கிடந்தமையால் 'தர்ப்பாரண்யம்' என்றும், நான்முகன் இங்கு வழிபட்டு வாழ்வு பெற்றதால், 'ஆதிபுரி' என்றும், நகவிடங்கராகிய தியாகேசப் பெருமான் எழுந்தருளி இருப்பதால் 'நகவிடங்கபுரம்' என்றும், நளன் வணங்கிக் கலிநீங்கிக் களித்தமையால் 'நளேச்சுரம்' என்றும் பலவாறு வழங்கப்படுகிறது'' (பக். 3)

இவ்வாறு திருநள்ளாற்றுக்கு வழங்கும் பல்வேறு திருப்பெயர் களையும்; அவற்றுக்கான காரணங்களோடு ஆசிரியர் விளக்கி யுள்ள திறம் பாராட்டத்தக்கது.

திருக்கோயில் அமைப்பு, தேவையான படங்களோடு விளக்கப்பட்டுள்ளது. சனி பகவானை வழிபடும் முறையும் பக்தர் களுக்குப் பயன்படும் முறையில் கூறப்பட்டுள்ளது.

சைவத்தின் பெருமை நிலை நாட்டப்படுவதற்குக் காரண மாய் அமைந்த பதிகம், திருநள்ளாற்றின் மீது பாடப்பட்டது என்பது இந்நூல் மூலம் அறியவரும் செய்தியாகும்.

## 12. சித்தி விநாயகர்—செங்கம்மா காளியம்மன் புராண வரலாறு

| | | |
|---|---|---|
| நூலாசிரியர் | — | புலவர். திருமேனி நாகராசன் |
| வெளியீடு | — | அருள்மிகு செங்கம்மா காளியம்மன் ஆலய வெளியீடு |
| பக்கம் | — | 48 |
| விலை | — | ரூ 1-50 |

தரங்கம்பாடியைச் சார்ந்த விநாயகர் பாளையத்தில் வீற்றி ருக்கும் செங்கம்மா காளியம்மனது வரலாற்றைக் கூறும் இந்நூல் காரைக்காலைச் சேர்ந்த புலவர், திருமேனி நாகராசனால் எழுதப் பட்டுள்ளது.

மதுரையில் மீனாட்சியாகவும், காஞ்சியில் காமாட்சியாகவும் தில்லையில் சிவகாமியாகவும், சமயபுரத்தில் மகமாயியாகவும் எழுந்தருளியுள்ள பராசக்தி, தரங்கை விநாயகர் பாளையத்தில் செங்கம்மா காளியம்மனாக வீற்றிருக்கின்றாள். இந்த அம்மனின் வரலாற்றோடு சித்தி விநாயகரின் சிறப்பும் இந்நூலில் பேசப் பட்டுள்ளது.

## 13. அன்னை உம்மு ஹபீபா

| | | |
|---|---|---|
| நூலாசிரியர் | — | M.H. ஷிகாபுதீன் |
| வெளியீடு | — | இஸ்லாமியத் தமிழிலக்கிய மன்றம் புதுச்சேரி |
| பக்கம் | — | 60 |
| விலை | — | ரூ 3-00 |

அண்ணல் நபிகளாரின் அருமைத் துணைவியருள் ஒருவராகிய அன்னை உம்மு ஹபீபாவின் வரலாற்றை விளக்கும் இந்நூல், 12 அத்தியாயங்களை உடையதாய் அமைந்துள்ளது.

பெற்ற தந்தையும், உற்றார் உறவினரும் எதிர்த்தபோதும் நபிகள் நாயகத்தை இறுதித் தூதராக ஏற்று, இஸ்லாத்தை உயிர்மூச்சாக மதித்தவர் உம்முஹபீபா. காசுக்காகக் கொள்கையை விற்றுக் கணவன் மதம் மாறியபோதும், தாம் மட்டும் இஸ்லாத்தைக் கைவிடவில்லை. கையில் குழந்தையோடு நிராதரவாய் நின்ற உம்முஹபீபாவை, அண்ணலார் அவர் தம் மன உறுதிக்காகத் தம் அருந்துணைவி ஆக்கிக் கொண்டார்கள்.

வீரமும் தியாகமும் தோய்ந்த இவ்வரலாற்றை ஆசிரியர் ஷிகாபுதீன் சுவையாக எழுதியுள்ளார்.

## 14. காரைக்கால் மஸ்தான் சாஹிப் வலியுல்லாஹ் வரலாற்றுப் பேழை

| | | |
|---|---|---|
| நூலாசிரியர்கள் | — | காரை-இறையடியான்<br>மு. சாயபு மரைக்காயர் |
| வெளியீடு | — | முஸ்லிம் பஞ்சாயத்துச் சபை<br>காரைக்கால் |
| பக்கம் | — | 4+268=272 |
| விலை | — | ரூ 10 00 |

1981ஆம் ஆண்டில் புதுவை மாநிலத்தில் வெளியிடப்பட்ட நூல்களில் அளவால் பெரியது இதுவே!

ரஷ்யாவிலுள்ள புகாராவில் பிறந்து, தம் இருபத்தைந்தாவது வயதில் முதலமைச்சர் பொறுப்பேற்று, நாற்பதாவது வயதில் அப்பதவியைத் துறந்து ஆன்மீக நெறியில் ஈடுபட்டு, பின்னர் 47 ஆண்டுகள் ஞானப்பயணம் புரிந்து நாடெங்கும் பல்லாயிரக் கணக்கான மக்கள் இஸ்லாமியத் திருநெறியிலே இணைவதற்குத் தூண்டுகோலாக அமைந்து, இந்தியாவுக்கு வந்து திருச்சியில் தம் ஞானகுருவோடு 12 ஆண்டுகள் தங்கியிருந்து, இறுதியாகக் காரைக்கால் வந்தடைந்து 21 ஆண்டுகள் அங்கே வாழ்ந்து, தமது 120ஆவது வயதில் மறைவுற்ற இறைநேசச் செல்வர் காரைக்கால் மஸ்தான் சாஹிப் வலியுல்லாவின் வரலாறு அழகிய நடையில்' ஆதாரப்பூர்வமான வரலாற்றுச் சான்றுகளோடு எழுதப் பட்டுள்ளது.

காரை இறையடியானும், மு. சாயபு மரைக்காயரும் இணைந்து இந்நூலை இயற்றியுள்ளனர்.

காப்பிய அமைப்பில் இவ்வரலாற்று நூல் எழுதப்பட்டுள்ளது. புகாராக் காண்டம், ஞானவழிக் காண்டம், திருச்சிக் காண்டம், காரைக் காண்டம், திருப்புகழ்ச் காண்டம் ஆகிய 5 காண்டங்களையும், 72 அதிகாரங்களையும் கொண்டதாக இந்நூல் அமைந்துள்ளது.

திருப்புகழ்க் காண்டத்தில், மஸ்தான் சாஹிப் வலியுல்லாவைப் பற்றி இதுவரை வெளிவந்துள்ள 19 நூல்களைப் பற்றியும் குறிப்புகள் தந்திருப்பது பயனுள்ள பணியாகும்.

''இந்நூலை முன்மாதிரியாகக் கொண்டு தமிழ் நாட்டின் பல பகுதிகளிலும் வாழும் எழுத்தாளர்கள், பல்வேறு பகுதிகளில் அடக்கமாகியுள்ள அல்லாஹ்வின் அருள்பெற்ற அடியார்களைப் பற்றி வரலாறுகளைத் தொகுத்து எழுதுவார்களானால், அது தமிழ்நாட்டு முஸ்லிம்களுடைய கலாச்சார வரலாற்றுத் தொகுப்புக்கு ஆதாரமாக அமையும்'' என்று மாநில முஸ்லிம் லீக் தலைவர் ஆ.கா.அ. அப்துஸ்ஸமத் அவர்கள், தம் முன்னுரையில் இந்நூலைப் பாராட்டியுள்ளார். அவ்வகையில் ஒரு முன்னோடி நூலாக இது திகழ்கின்றது.

## 15. கவிஞர் சவராயலு நாயகர் வாழ்க்கை வரலாறு

| | | |
|---|---|---|
| நூலாசிரியர் | — | சிவ. கண்ணப்பா |
| வெளியீடு | — | கல்வித்துறை வெளியீடு, புதுவை அரசு |
| பக்கம் | — | 16+96=112 |
| விலை | - | ரூ 4 00 |

நூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்னர் புதுச்சேரியில் வாழ்ந்த புகழ்சால் கவிஞர் சவராயலு நாயகரின் வாழ்க்கை வரலாற்றை இந்நூல் கூறுகின்றது. கவிஞரது 150 ஆவது பிறந்தநாள் விழாவையொட்டிப் புதுவை அரசே இந்நூலை வெளியிட்டுள்ளது. 'செந்தமிழ்த்தொண்டர்' சிவ. கண்ணப்பா இந்நூலை இயற்றியுள்ளார்

---

7. அப்துஸ்ஸமத்,ஆ.கா.அ., ''காரைக்கால் மஸ்தான் சாஹிப் வரலாற்றுப்பேழை'', முன்னுரை, பக். 5,

சவராயலு நாயக்கரது இனிய வரலாற்றைச் சிவ. கண்ணப்பா இந்நூலில் சுவையாகக் கூறியுள்ளார்.

## இலக்கியத் திறனாய்வு

புதுவையில் ஆண்டுதோறும் மேத் திங்கள் இரண்டாம் வாரத்தில் ''கம்பன் விழா'' இலக்கியப் பெருவிழாவாகக் கொண்டாடப்படுவது வழக்கம். இவ்விழாவின்போது நூல் வெளியீடுகளும் நிகழ்வுறும். தமிழகத்தைச் சார்ந்த அறிஞர்கள் பலரும், புதுவை கம்பன் விழாவில் தம் நூல் வெளியிடப்படுவதைப் பெருமையாகக் கருதுகின்றனர். 1981ஆம் ஆண்டிலும் மூன்று நூல்கள் அங்ஙனம் வெளியிடப்பட்டன. அவற்றுள் 'நயத்தக்க நாகரிகம்' 'கம்பரும் நாடகக் கலையும்' ஆகிய இரண்டும் கம்பரைப்பற்றிய இலக்கியத் திறனாய்வு நூல்களாகும்.

காப்பிய விழாவின்போது வெளியான ''காப்பியச் சிதறல்கள்'' பாரதி நூற்றாண்டுத் தொடக்கவிழாவின்போது வெளியிடப்பட்ட ''ஞானரதம் - ஒரு கண்ணோட்டம்'' ஆகியவையும் 81இல் புதுவையில் வெளிவந்த திறனாய்வு நூல்களாகும்.

### 16. நயத்தக்க நாகரிகம்

நூலாசிரியர் — ஜஸ்டிஸ் மு.மு. இஸ்மாயீல்
வெளியீடு — வானதி பதிப்பகம், சென்னை 17.
பக்கம் — 16+144 = 160
விலை — ரூ 7.00

முன்னாள் தலைமை நீதிபதி மு. மு. இஸ்மாயில் அவர்கள் எழுதிய 'நயத்தக்க நாகரிகம்' 'கம்பன் எனும் கலைக்களஞ்சியம்' 'இருக்கிறதம்மா இவ்வுலகம்' 'தண்மை திண்மை தொன்மை', 'பேசாப்பொருள்' 'பிரார்த்தனை' ஆகிய ஆறு இலக்கியக் கட்டுரைகளின் தொகுப்பாக இந்நூல் விளங்குகின்றது,

### 17. கம்பரும் நாடகக் கலையும்

நூலாசிரியர் — அ.கு. ஆதித்தர்
வெளியீடு — வானதி பதிப்பகம்
தி.நகர், சென்னை-17
பக்கம் — 201
விலை — ரூ 9.00

''இந்நூலில் 10 சுவைகளோடு நடிப்புக்குரிய பாடங்களையும் சேர்த்து எழுதி உள்ளேன், இவற்றைப் பொருள் உணர்ந்து

நடித்துப் பயில்வோர் சிறந்த நடிகராவது மட்டுமின்றி, ஒழுக்கம் என்பது யாது,பண்பாடு என்பது யாது,என நன்குணர்வர்'' என்று நூலாசிரியர் தம் முன்னுரையில் குறிப்பிடுகின்றார்.

தொல்காப்பியர் கூறும் எண்வகைச் சுவையோடு சமனிலை, பக்திச் சுவை ஆகிய இரண்டையும் சேர்த்துப் பத்து சுவைகளாகக் கூறுகின்றார் அ கு. ஆதித்தர். கம்பரைப் பற்றிய 12 கட்டுரைகள் இந்நூலை அணி செய்கின்றன.

## 18. காப்பியச் சிதறல்கள்

தொகுப்பு — விழாக்குழுவினர்
வெளியீடு — பாரத இளைஞர் சமூகநலப் பணிக்கழகம் புதுச்சேரி
விலை — ரூ 2.00

புதுவைக்குப் பெருமை சேர்க்கும் மற்றோர் இலக்கியப் பெரு விழா ''காப்பிய விழா''வாகும். இவ்விழாவிலும் நூல் வெளியீடு நிகழ்வதுண்டு. 1981ஆம் ஆண்டில் ''காப்பியச் சிதறல்கள்'' என்ற தொகுப்பு நூல் வெளியிடப்பட்டது. சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, வளையாபதி, குண்டலகேசி ஆகிய ஐந்து காப்பியங்களைப்பற்றித் தமிழறிஞர்கள் ஐவர் எழுதிய திறனாய்வுக் கட்டுரைகள் இந்நூலில் இடம்பெற்றுள்ளன.

## 19. ஞானரதம்-ஒரு கண்ணோட்டம்

நூலாசிரியர் — தி. தேவிதாசன்
வெளியீடு — சேகர் பதிப்பகம், சென்னை
பக்கம் — 172
விலை — ரூ 10.00

புதுவை அரசு நடத்திய ''பாரதி நூற்றாண்டுத் தொடக்க விழா''வில் இந்நூல் வெளியிடப்பட்டது. புதுமைக் கவிஞர் வாணிதாசனின் இளவலாகிய புலவர். தி. தேவிதாசன் இந்நூலை இயற்றியுள்ளார்.

கவிஞர் பாரதியைக் 'கதாசிரியர் பாரதி'யாக நிறுவும் முயற்சியே இந்நூல். மகாகவி பாரதியின் ''ஞானரதம்'' ''சந்திரிகையின் கதை'' ''சின்னச் சங்கரன் கதை'' ஆகிய கதை களைத் திறனாய்வு செய்வதாக இந்நூல் விளங்குகின்றது.

'சிறுகதை' என்ற தலைப்புடைய கட்டுரையில், கதையின் வகைகளைக் கூறக் கருதிய ஆசிரியர் புதினத்தின் வகைகளைப்

பொருத்தமற்ற முறையில் எழுதியுள்ளார். (பக். 23), 'புதினம் அல்லது கதைகள்' என்று புதினத்தையும் கதையையும் ஒன்றாகவே மதித்து எழுதியிருப்பது தவறு. புதினம் வேறு, சிறு கதை வேறு என்பதை ஆசிரியர் அறியாதிருக்க நியாயமில்லை. சிறுகதை, புதினம் ஆகிய இரண்டையும் ஒரே சொல்லால் குறிக்கக் கருதியிருந்தால் 'புனை கதை' (Fiction) என்ற சொல்லைப் பயன்படுத்தி இருக்கலாம்.

சிலம்பின் மாதவியோடு பாரதியின் சந்திரிகையையும், ஷேக்ஸ்பியரின் 'மாக்பெத்'தோடு பாரதியின் ஞானரதத்தையும் ஆசிரியர் ஒப்பிடுவது பொருத்தமாக உள்ளது.

'சின்னச் சங்கரன் கதை' பற்றிய திறனாய்வில், பாரதியின் வாழ்வில் நடந்த பல நிகழ்ச்சிகள் அக்கதையில் இழையோடியிருப்பதைப் புலவர் தி. தேவிதாசன் தக்க சான்றுகளோடு எடுத்துக் காட்டுகிறார். பாரதி நூற்றாண்டில் அவருக்குப் பெருமைசேர்க்கக் கூடிய திறனாய்வாக இந்நூல் வெளிவந்துள்ளது.

## இலக்கணம்

இலக்கியச் சொற்பொழிவுகளைத் தொடர்ந்து நடத்திவிடக் கூடும். ஆனால் இலக்கணச் சொற்பொழிவுகளைத் தொடர்ந்து நடத்துவதும், அக்கூட்டங்களுக்குக் குறைந்தது நூறு பேர் தவறாமல் வருவதும் சற்று வியப்புக்குரிய செய்தியே ஆகும்.

இவ்வியப்பினைப் புதுவையில் திங்கள்தோறும் நடத்திக் காட்டுபவர் 'இலக்கணச்சுடர்' புலவர் இரா. திருமுருகன் ஆவார். 1981ஆம் ஆண்டில் இலக்கணம் தொடர்பான இரு நூல்களை இவர் எழுதி வெளியிட்டுள்ளார். இலக்கணத்தை வேம்பாக நினைப்போர்க்கு, இவர்தம் நூல்கள் கரும்பாக நினைக்கச் செய்கின்றன.

## 20. இலக்கணத் துணைவன்

நூலாசிரியர் — இரா. திருமுருகன்
வெளியீடு — பாவலர் பண்ணை, புதுவை
பக்கம் — 4 + 108 = 112
விலை — ரூ 4 50

மேனிலைப்பள்ளி மாணவர்கள் தமிழ் இலக்கண வினாக்களுக்குத் தக்கவிடை எழுதுவதற்குத் துணைபுரியும் வகையில் இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

உறுப்பிலக்கணம் கூறும் முறை, இலக்கணக் குறிப்பு எழுதும் முறை, புணர்ச்சி விதி கூறும் முறை, பொருள் இலக்கணம், அணியிலக்கணம், யாப்பிலக்கணம் ஆகிய இந்நூலின் பகுதிகள் யாவும் எளிய முறையில் மாணவர்களுக்கு இலக்கணத்தைக் கற்பிக்கின்றன.

## 21. இனிக்கும் இலக்கணம்

| | | |
|---|---|---|
| நூலாசிரியர் | — | இரா திருமுருகன் |
| வெளியீடு | — | சேகர் பதிப்பகம் சென்னை. |
| பக்கம் | — | 4+132=136 |
| விலை | — | ரூ 7.50 |

இலக்கண ஈடுபாடற்றவர்களும் இலக்கணச் சுவைஞர்களாக மாறும் வகையில் நூலைச் சுவைபட எழுதியிருப்பது பாராட்டுக்குரியது. இலக்கணத் தொடர்பான ஆறு கட்டுரைகள் இந்நூலை அணி செய்கின்றன.

'தமிழ் யாப்பிலக்கணம், எழுத்தறியார் தம் இயல்பான வெளிப்பாட்டில் உள்ளது என்பது அறியப்படுவதால், அது பாட்டுக்குச் செயற்கையானது என்பதும் புறம்பானது என்பதும் பொருந்தாது'' (பக்:124) என்று அறுதியிட்டுரைக்கும் ஆசிரியர், இயற்கையோடு இயைந்த யாப்பு விதிகள் புலவர்களால் போற்றப் பட வேண்டுமென விரும்புகின்றார்.

'மொழியின் பயன் தெளிவான கருத்து மாற்றமே; பிறரை மருட்டுவதன்று! கலப்பிலிருந்து தனிநிலைக்கு மாறுதல் சிறுது சிறிதாக நிகழ்தல் வேண்டும்'' என்பது ஆசிரியர்தம் எண்ணம்.

மொத்தத்தில், இந்நூலிலுள்ள ஆறு கட்டுரைகளும் மிக்கப் பயன் விளைவிப்பவை. புலவர், இரா. திருமுருகன் பாராட்டுக்குரியவர்.

## சிறுகதை

1891 ஆம் ஆண்டில் புதுவையில் விருந்து, மௌன உணர்த்தல்கள் என்ற இரு சிறுகதைத் தொகுப்புகள் மட்டுமே வெளிவந்துள்ளன. இவற்றுள் இடம்பெற்றுள்ள பெருமபாலான சிறுகதைகள் 'பொதுவான' கதைகளாக இருக்கின்றனவேயன்றி புதுவைமக்களின் வாழ்க்கைச் சிக்கல்களையோ, பண்பாட்டையோ பழக்கவழக்கங்களையோ வட்டாரச் சிறப்பைபோ சற்றும் தொட்டுக் காட்டுவனவாக இல்லை. எனவே புதுவை மண்ணின்

மணத்தை இக்கதைகளில் பார்க்க முடியவில்லை. பல கதைகள் தொடக்க முயற்சியாக இருக்கின்றனவேயன்றிக் கலையுணர் வோடு படைக்கப்படவில்லை.

## 22. விருந்து

தொகுப்பாசிரியர் — க. தமிழ்மல்லன்
வெளியீடு — தனித்தமிழ்க் கழகம், புதுச்சேரி
பக்கம் — 100
விலை — ரூ 5—00

புதுவை தனித் தமிழ்க் கழகம் வெளியிட்டுள்ள இச்சிறுகதைத் தொகுப்பில், பன்னிரெண்டு கதைகள் இடம்பெற்றுள்ளன. ''தமிழிலக்கிய வரலாற்றில் முதல் தனித்தமிழ்ச் சிறுகதைத் தொகுப்பாக இது வருகின்றது'' (பக்:5) என்று தொகுப்பாசிரியர் தம் முன்னுரையில் குறிப்பிடுகின்றார்.

எல்லா எழுத்தாளர்களுமே இயன்றவரை தனித்தமிழ் நடையில் கதை எழுதியிருக்கின்றார்கள். அப்படியும் தவறுதலாக இடம் பெற்றுவிட்ட பிறமொழிச் சொற்களைத் தனித்தமிழாக்கி, பிழைதிருத்தப்பட்டியல் ஒன்றும் இடம் பெறச் செய்திருக் கிறார்கள். இவற்றையும் மீறி வேற்றுமொழிச் சொற்கள் சில இதன்கண் காணப்படுகின்றன.

ஆயினும் மொழி நடையில் தூய்மை காக்கப்பட வேண்டு மென்னும் தனித்தமிழ்க் கழகத்தின் நோக்கம் போற்றத்தக்கது. அவ்வகையில் இந்நூல் வரவேற்கத்தக்க புது முயற்சியே.

ஆனால் தலைப்பிலும், நடையிலும் இருக்கும் புதுமையைப் பல கதைகளில் ஏனோ காணமுடியவில்லை, பாதிக்கும் மேற்பட்ட கதைகள், இரண்டாந்தர இதழ்களில் வெளிவருகின்ற மிகச் சாதாரணமான கதைகளே!

'அவன் உணர்வுகள் வழிதவறி ஆண்மை பயனற்றதாக வெளித்தள்ளப்படுகின்றது' (பக்:35)

'அவள் சேலை நழுவிக் கொண்டிருந்தது. அதை அறியாமல் கருமமே கண்ணாய் இருந்தாள். அவன் ஆண்மை விழித்தது' (பக்:41)

இப்படியெல்லாம் எழுதுவதற்குத் தனித்தமிழைப் பயன் படுத்துவதால் என்ன பயன்? மொழி நடையில் காட்டியுள்ள

தூய்மையை, கதைக் கருவைத் தேர்ந்தெடுப்பதிலும், கதை கூறும் முறையிலும் காட்டியிருந்தால் இந்நூல் முயற்சி சிறந்திருக்கும்.

மலைவாழ் மக்களின் பழக்கம், விருந்துக்கு வந்தவனிடம் மனைவியும் விருந்தாவாள். இதை விளக்கும் கதையைப்போய், நூல் தலைப்பாக வைக்க வேண்டுமா?

சாலையில் நடமாடும் உயிர்களைப் பற்றிய கவலையின்றிப் பேருந்தினை விரைந்து ஓட்டிப் பணம் தேட விழையும் முதலாளி, நேர்ச்சி நேராமல் பொறுப்போடு பேருந்தை ஓட்ட எண்ணும் தொழிலாளி இவர்களது முரண்பட்ட பண்பு நலன்களை நல்ல தற்குக் காலமில்லை கதையில் தேவமைந்தன் அருமையாகச் சித்திரித்துள்ளார். 'எருமைப்பால் குடித்தே வளர்ந்த மக்கள், தெருநடுவில் நடப்பதைச் சாலை ஒழுங்காகக் கொண்டிருக் கின்றனர்' (பக்:64) என்பது நல்ல அங்கதம்.

மாறுபட்ட மனித மனப்போக்குகளை அழகாக விளக்கும் தமிழ்மாறனின் 'முடிசூடா மன்னன்', குழந்தை உள்ளத்தின் ஏக்கங்களையும், எதிர்பார்ப்புகளையும் ஆழமாகச் சித்திரிக்கும் ஜெயசீலனின் 'பரிசு' போன்ற கதைகள் பாராட்டத்தக்கவை.

தனித்தமிழ்க் கழகத்தின் பணி போற்றுதற்குரியது. எதிர் காலத்தில் இன்னும் சிறப்பான தனித்தமிழ்ச் சிறுகதைத் தொகுப்பைக் கழகம் வெளியிடுமென்று நம்பலாம்.

## 23. மௌன உணர்த்தல்கள்

நூலாசிரியர் — சக்திப்புயல்
வெளியீடு — தென்றல் பதிப்பகம், புதுச்சேரி
பக்கம் — 12 + 88 = 100
விலை — ரூ 5—00

சக்திப்புயலின் ஒன்பது சிறுகதைகள் அடங்கிய தொகுப்பு இந்நூல்.

''ஆசிரியர் சக்திப்புயலிடம் சுற்றி நடக்கும் நிகழ்ச்சிகளை, அனுபவங்களையெல்லாம் கூர்ந்து கவனித்து மனதில் பதிய வைத்துக் கொண்டு சொல்லும் திறன் உள்ளது என்பதற்கு இச்சிறு கதைகள் எடுத்துக்காட்டு'' (பக். vii) என்று 'தீபம்' நா. பார்த்த சாரதி தம் ஆய்வுரையில் குறிப்பிடுவது, சரியான மதிப்பீடே எனலாம்.

கற்பனைக் கலப்பற்ற ஆசிரியரின் நேரடி அனுபவங்களே இத்தொகுப்பின் பெரும்பாலான சிறுகதைகளாக உருப்பெற்றுள்ளன. பல கதைகளில் ஆசிரியரையும் ஒரு பாத்திரமாக உணர முடிகின்றது.

தேர்தல் களத்தில் யாருடைய வலையிலும் சிக்காமல், 'நம்ம நாட்டுக்காக நம்ம கடமைக்காக ஓட்டுப் போடறோம்' என்ற உணர்வோடு இலட்சியவாதியாக வாழ்ந்து காட்டும் சுதந்திர பாண்டியன் ஓர் அருமையான பாத்திரப் படைப்பு! உருவம், உள்ளடக்கம், உணர்த்தும் முறை ஆகிய மூன்றாலும் இதோ ஒரு குடிமகன் என்னும் இச் சிறுகதை, இத்தொகுப்பின் சிறந்த கதையாகத் திகழ்கின்றது.

இந்நூலில் உள்ள கதைகளைப் படிக்கும் போது ஏதோ ஒரு நாட்குறிப்பைப் படிக்கின்ற உணர்வு எழுகின்றதேயன்றிச் 'சிறுகதை' படிக்கும் உணர்வு தோன்றவில்லை. இவற்றில் கதைத் தன்மையும், கலைத்திறமும் மிகவும் குறைந்தே காணப்படுகின்றன.

இத்தொகுப்பின் பெரும்பாலான கதைகள், படிக்கும் போது சுவையாக இருந்தாலும், படித்துமுடித்தவுடன் எவ்விதப் பாதிப்பையும், தாக்கத்தையும் ஏனோ நமக்கு ஏற்படுத்தவில்லை. இக்குறை தவிர்க்கப்பட்டால், ஆசிரியர் சக்திப்புயல் சிறந்த சிறுகதை எழுத்தாளராக உருவாவார் என்பது திண்ணம்.

## பரிசுக் கதைகள்

மதுராந்தகத்தில் இயங்கும் இலக்கிய வீதி, ஒவ்வொரு மாதமும் சிறுகதைப் போட்டியை நடத்தி, வெற்றி பெறுகின்ற சிறுகதைகளைத் தொகுத்து ஒவ்வோர் ஆண்டும் நூலாக வெளியிட்டு வருகின்றது.

1981 ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட விடியும் வெளிச்சம் வரும் என்ற சிறுகதைத் தொகுப்பில், புதுவையைச் சேர்ந்த மீ.ரா. கருணாகரன், காரை சாயபு மரைக்காயர், எஸ். மீரா, பூங்குருநல் அசோகன் ஆகிய நான்கு எழுந்தாளர்களின் கதைகள் பரிசு பெற்றுள்ளன. 1981 ஆம் ஆண்டின் சிறந்த சிறுகதைகள் பன்னிரண்டில், நான்கு புதுவைப் பகுதியைச் சார்ந்தவை என்பது குறிப்பிடத்தக்கது.

## சிறுவர் புதினம்

புதுவையில் 1981 ஆம் ஆண்டில் புதினம் எதுவும் வெளியிடப் படவில்லை. ஆனால் சிறுவர் புதினமாக ஒரு நூல் மட்டும் வெளி யாகியுள்ளது. 1980 ஆம் ஆண்டு மாஸ்கோவில் நடைபெற்ற ஒலிம்பிக்கை மையமாகக் கொண்டு இந்நூல் எழுதப்பட்டுள்ளது.

### 24. சுதாகர் ஒலிம்பிக் பார்க்கிறான்

நூலாசிரியர் — ஞா. ஜெயசீலன்
வெளியீடு — வசந்தா பிரசுரம், சென்னை
பக்கம் — 52
விலை — ரூ 3-25

புதுவையைச் சேர்ந்த சிறுவன் சுதாகர், மாஸ்கோவில் இருக்கும் தன் மாமா உதவியோடு ஒலிம்பிக் பார்க்கச் சென்று வரு வதை நூலாசிரியர் ஞா. ஜெயசீலன் விறுவிறுப்பான நடையில் எழுதியுள்ளார். கிறிஸ்துமஸ் தாத்தா பனித்தாத்தா போன்று ஒலிம்பிக் தாத்தா என்ற புதியதோர் பாத்திரத்தை உருவாக்கி யுள்ளார்.

"விளையாட்டுகளில் வெற்றி முக்கியமல்ல; அதில் பங் கெடுப்பதே முக்கியம். விளையாட்டில் மட்டுமல்ல, வாழ்க்கை யிலும் கூட வெற்றி கொள்வதைவிட வாழ்வின் பிரச்சினைகளை எதிர்த்துப் போராடுவதே முக்கியம். இப்போதனைகளைப் பரப்பி மனிதகுலத்தை அதிக வலிமையும், நேர்மையும், கருணையும் கொண்டதாக உருவாக்குவோமாக!" (பக்.51)

இம் மையக்கருத்தை விளக்குவதற்காகவே இந்நூலில்நிகழ்ச்சி களை அமைத்துள்ள ஆசிரியரின் கலைத்திறம் பாராட்டுக்குரியது.

## அறிவியல்

தமிழில் அறிவியல் நூல்கள் பெருகுதல் வேண்டும். அறிவியல் தமிழின் வளர்ச்சிக்கு ஆக்கம் தரும் வகையில், புதுவையில் 1981 ஆம் ஆண்டில் ஒரு நூல் வெளிவந்தது. அந்நூல் பற்றிக் காண்போம்:

### 25. இலக்கியத்தில் அறிவியல்

நூலாசிரியர் — பி.எல். சாமி
வெளியீடு — சேகர் பதிப்பகம், சென்னை
பக்கம் — 264
விலை — ரூ 15-00

இந்நூலில் 27 கட்டுரைகள் இடம் பெற்றுள்ளன. தமிழ்

இலக்கியத்திலுள்ள அறிவியல் பற்றியே பெரும்பாலான கட்டுரைகள் உள்ளன. கல்வெட்டு, மொழியியல், வானவியல், இலக்கியம் தொடர்பான சிலகட்டுரைகளும் இதில் இடம் பெற்றுள்ளன.

இந்நூல் தாவரவியல், உயிரியல், பொதுவியல் என்ற மூன்று பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வோர் இயலும் ஒன்பது கட்டுரைகளோடு திகழ்கின்றது. இந்நூல் மூலம் நாம் அறியக்கூடிய சில அறிவியற் செய்திகளாவன:—

1. "குறிஞ்சிச் செடியில் 28 இனங்கள் காணப்படுகின்றன. 12 ஆண்டுகளுக்கு ஒரு முறை மலரும் குறிஞ்சிப்பூ 'Strobilanthes Wallichi' என்ற இனத்தைச் சார்ந்தது" (பக். 25)

2. "சங்க இலக்கியங்களில் குறிப்பிடப்படும் குல்லைச் செடியே இன்று நாம் குறிப்பிடும் கஞ்சாச் செடியாகும்". (பக். 55)

3. "செம்பை, உருநை, தாட்புழு என்பவை நெல்லுக்கு வரும் பிணிகளாகும்; நாவேறு, சுருட்டை என்பவை வெற்றிலைக்கு வரும் நோய்களாகும்" (பக். 93)

4. "இமய மலையில் வாழும் விலங்குகளில் மனிதரோடு பழகி வாழும் விலங்கு 'யாக்' (Yak) எனப்படும் விலங்காகும். இதையே 'கவரிமா' என்று சங்கப் பாடல்கள் கூறுகின்றன. கவரியை ஈந்த விலங்கு 'கவரிமா' எனப்பட்டது" (பக். 101)

5. "சங்க இலக்கியங்களில் கூறப்படும் 'மகண்மா' தேவாங்கைக் குறிப்பதாகும்" (பக். 123)

**மொழி நூல்:**

## 26. 30 நாட்களில் பிரெஞ்சு பாஷை

| | | |
|---|---|---|
| நூலாசிரியர் | — | சிவ. கண்ணப்பா |
| வெளியீடு | — | பாலாஜி பப்ளிகேஷன்ஸ், சென்னை |
| பக்கம் | — | 4+168=172 |
| விலை | — | ரூ 9-25 |

தேசிய ஒருமைப்பாட்டு மொழி நூல் வரிசையில், தமிழ் மூலம் பிரெஞ்சு கற்கத் துணைபுரிவதாக இந்நூல் வெளிவந்துள்ளது. பிரெஞ்சு மொழியிலும், தமிழிலும் பெரும்புலமை பெற்றவரான சிவ. கண்ணப்பா இந்நூலை எழுதியுள்ளார்.

பிரெஞ்சு மொழி கற்கவேண்டுமென ஆர்வம் உள்ளவர்கள் முறைப்படி இந்நூலைப் பயின்றால், முப்பது நாட்களில் ஓரளவு பிரெஞ்சினைப் பேசவும் எழுதவும் கூடும்.

அரிச்சுவடியில் தொடங்கி, எழுத்துக்கள், கூட்டெழுத்துக்கள் சொற்கள், சொற்றொடர்கள், அன்றாட வாழ்விற்குப் பயன்படத் தக்க உரையாடல்கள், இலக்கணம் என்று படிப்படியாகப் பிரெஞ்சு மொழியைக் கற்பிக்கும் முறை இந்நூலில் சிறந்து விளங்குகிறது.

**கட்டுரை :**

## 27. தீனவர் ஆட்சி

| | | |
|---|---|---|
| நூலாசிரியர் | — | M. H. ஷீகாபுதீன் |
| வெளியீடு | — | இஸ்லாமியத் தமிழ் இலக்கிய மன்றம் புதுவை |
| பக்கம் | — | 4 + 68 = 72 |
| விலை | — | ரூ 5—00 |

இஸ்லாம் தோன்றி உலகெங்கும் பரவி நிலைபெற்ற வகையினை இந்நூல் அழகுற விவரிக்கின்றது.

சர்தார் நபிகளும் சம்பூர்ண சன்மார்க்கமும் சத்திய இஸ்லாத்தைக் காத்த சஹாபாப் பெருமக்கள் உமையாக்களின் ஆட்சி, அப்பாஸியாக்கள், இஸ்லாமும் இந்தியாவும், ஆன்மீகமும் ஆன்றோர்களும், பக்தாதும் பண்பாட்டுச் சிறப்பும், அறிவு மணம் கமழ இஸ்லாமியர் செய்த தமிழ்த் தொண்டு ஆகிய எட்டுத் தலைப்புகளில் அமைந்துள்ள கட்டுரைகள், பல அரிய புதிய செய்திகளை நமக்கு அறிவிக்கும் வகையில் அமைந்துள்ளன.

இஸ்லாமும் மருத்துவமும், இஸ்லாமும் வேதியலும், இஸ்லாமும் கணிதவியலும் ஆகிய தலைப்புகளில் ஆசிரியர் தந்துள்ள குறிப்புகள் அறிவியல் வளர்ச்சிக்கு முஸ்லிம்கள் ஆற்றியுள்ள தொண்டுகளை அறியத் துணை புரிகின்றன.

நூலின் இறுதியில், உலகாண்ட கலீபாக்களின் பட்டியலைக் கால வரிசைப்படி தொகுத்துத் தந்திருப்பது, பயன் தரும் பணியாகும்.

**நகைச்சுவைத் துணுக்குகள்:**

## 28. நீங்களும் சிரிக்கலாமே

நூலாசிரியர் — மு. சாயபு மரைக்காயர்
வெளியீடு — பாத்திமா பதிப்பகம்,
67, காஜியார் வீதி, காரைக்கால்
பக்கம் — 67
விலை — ரூ 3—00

''கதை, கட்டுரை, கவிதைகளைப் போலவே துணுக்குகளும் இலக்கியந்தான்! அரும்பெரும் கருத்துக்களையெல்லாம் மிகச்சில வரிகளில் சுவையாகவும், செறிவாகவும், அழகாகவும், ஆணித்தரமாகவும் சொல்லிவிடும் ஆற்றல் துணுக்குகளுக்கு உண்டு. ஒரு நாட்டின், ஓர் இனத்தின், ஒரு சமுதாயத்தின் பண்பாட்டைக் கூடத் துணுக்குகள் அழகாகப் படம் பிடித்துக் காட்டிவிடுகின்றன. தமிழில் நகைச்சுவை நூல்கள் மிகுதியாகத் தோன்றவில்லை, தமிழ் கூறு நல்லுலகின் இத்தேவையை நிறைவேற்றுவதை என் சேவையாக எண்ணுகிறேன்'' (பக் 34) என்று நகைச்சுவை நூல்களின் அவசியத்தைத் தம் முன்னுரையில் நூலாசிரியர் வற்புறுத்துகின்றார்.

இந்நூலில் 200 சுவையான நகைச்சுவைத் துணுக்குகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. ஆசிரியரே எழுதியவையும், ஆங்கிலத்திலிருந்து தமிழாக்கம் செய்தவையும், பிற நண்பர்களால் எழுதப்பட்டு இதழ்களில் வெளிவந்து ஆசிரியரின் உள்ளத்தைக் கவர்ந்தவையுமாக அத்துணுக்குகள் உள்ளன. ஒவ்வொரு துணுக்கிற்கும் பொருத்தமான தலைப்பு தரப்பட்டுள்ளது.

பெரும்பாலான துணுக்குகள், படித்தவுடன் வெடிச்சிரிப்பை ஏற்படுத்துகின்றன. சான்றுக்குச் சில:—

பெண் — போடா, நீ முட்டாள்!
பையன் — போடி, நீ தான் முட்டாள்!
தந்தை — என்ன கூச்சல்? நான் ஒருத்தன்
இங்கே இருக்கிறது உங்களுக்குத் தெரியவில்லை?

x x x

''என்னங்க! இவரைப் போய் பெரிய மனிதர்னு சொன்னீங்க! ஒண்ணு ரெண்டு, மூணுன்னு விரலை விட்டு எண்ணுறாரே!''

"நான்தான் சொன்னேனே! விரல்விட்டு எண்ணக்கூடிய பெரிய மனிதர்களில் இவர் ஒருத்தர்னு!"

x x x

வந்தவர் —இந்தாப்பா! உண்மையாகவே உன் முதலாளி வீட்டிற்குள் இல்லையா?

வேலைக்காரன் — இல்லவே இல்லீங்க!

வந்தவர் — சரி! வந்ததும் நான் வந்து தேடிவிட்டுப் போன தாகச் சொல்! மறந்துபோய்விடாமல் ஞாபகமாகச் சொல்லுவாயா?

வேலைக்காரன் — ஏனுங்க உங்களுக்கு இந்தச் சந்தேகம்? இதோ இப்பவே போய்ச் சொல்லிடறேனுங்க!"

துணுக்குகளைத் தொகுத்துத் தருவதோடு அமையாது, தொகுத்த துணுக்குகளின் அடிப்படையில் ஓர் ஆய்வுக்கட்டுரையை யும் ஆசிரியர் எழுதிச் சேர்த்திருந்தால் இந்நூல் மேலும் சிறப்பாக இருந்திருக்கும்.

**வழிகாட்டி நூல்:**

## 29. புதுச்சேரி வழிகாட்டி

| | | |
|---|---|---|
| நூலாசிரியர் | — | காரை அகமது |
| வெளியீடு | — | பாத்திமா பதிப்பகம், காரைக்கால் |
| பக்கம் | — | 40 |
| விலை | — | ரூ 1—00 |

புதுச்சேரியைப் பற்றிய வரலாற்றுக் குறிப்புகள், புதுவையில் காணப்படும் கல்வெட்டுகள், புதுவையில் வாழ்ந்த புலவர்கள், புதுவையில் காணவேண்டிய இடங்களைப் பற்றிய செய்திகள் யாவும் இந்நூலில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. புதுவைக்கு வரும் பயணிகளுக்குப் பயன்படும் வகையில் பேருந்துக் கால அட்ட வணையும் இந்நூலில் இடம் பெற்றுள்ளது.

## புதுவையில் இலக்கிய அமைப்புக்கள்

புதுவையில் கம்பன் கழகம், பாரத இளைஞர் சமூக நலப் பணிக் கழகம், தமிழ்ச் சங்கம், தமிழ்க் காவற்குழு, தனித்தமிழ்க் கழகம், சுப்ரதீபக் கவிராயர் தீந்தமிழ் மன்றம், சமரச சன்மார்க்க சங்கம், பாவாணர் இளைஞர் நற்பணி மன்றம், பாரதிதாசனார்

தமிழ்ப்பணி மன்றம், மூவிண்மீன் இளைஞர் நற்பணி மன்றம், குறள்நெறி மன்றம் முதலிய எண்ணற்ற இலக்கிய அமைப்புக்களும் காரைக்காலில் காரைத் தமிழ்ச்சங்கம், இளைஞர் முத்தமிழ்ச் சங்கம், சுவாமி விவேகானந்தர் வாலிபர் சங்கம் போன்ற இலக்கிய அமைப்புக்களும் தொடர்ந்து தமிழ்த் தொண்டாற்றி வருகின்றன.

## புதுவையில் இதழ்கள்

புதுவையில் 1981 ஆம் ஆண்டில் பல்வேறு இதழ்கள் வெளி வந்துள்ளன. புதுவைச் செய்திகள், கூட்டுறவுச் சுடர் ஆகியவை அரசே நடத்தும் இதழ்களாகும். இவையன்றி சுப்ரமண்ய பாரதி கவிதாமண்டலம், உதயதாரகை, ஓடை, துளிகள், இளந்தென்றல், புயல், சுதந்திரம், சீலம், தமிழ் முனிவன், ஓங்காரம், மாநில முரசு, சர்வ வியாபி, ஏப்ரல், செக்ஸ் எஜுகேசன், புதுவைக் குரல் போன்ற பல்வேறு இதழ்கள் வெளிவந்துள்ளன.

இவற்றுள் பெரும்பாலானவை குறித்தகாலத்தில் வெளியிடப் படவில்லை. வெளிவந்த சில இதழ்களும் ஓராண்டிற்குள் தம் ஆயுளை முடித்துக் கொண்டன. இலக்கிய ஆர்வலர்கள் நிறைந்த புதுவையில் தக்கோர் இதழ் நடத்தினால் வெற்றி காணலாம்.

## நிறைவுரை

இலக்கியப்பூமியாகிய புதுவையில் 1981இல் மட்டும் 29 நூல்கள் வெளிவந்துள்ளன. இவற்றை இயற்றியுள்ள நூலாசிரியர்களுக்குப் புதுவை அரசு போதிய ஆதரவளிக்காதது ஒரு குறையேயாகும். பெரும்பாலோரின் நூல்கள் புதுவை அரசு சார்பான நூலகங்களில் இடம் பெறவில்லை. புதுவையில் வெளியாகும் நூல்கள், புதுவை யிலுள்ள அனைத்து நூலகங்களிலும் இடம் பெறுவதற்கான ஆணையை அரசு பிறப்பிக்க வேண்டும்.

அன்றியும், தமிழ் நாட்டைப் போலப் புதுவை அரசும் ''தமிழ் வளர்ச்சித் துறை'' ஒன்றை ஏற்படுத்தி, ஒவ்வோராண்டிலும் பல் வேறு துறைகளிலும் வெளி வருகின்ற சிறந்த நூல்களுக்குப் பரிசளித்துப் பாராட்ட வேண்டும். புதுவை அரசு இவற்றைச் செய்யுமானால், புதுவையில் தமிழ், மேலும் பொலிவு பெறும் என்பது திண்ணம்.

# 41. புதுவையில் இலக்கிய அமைப்புக்கள்-தமிழ்ச் சங்கங்கள்

தி. ஜானகிராமன் (கல்லாடன்)

தமிழைப் போற்றி வளர்த்தல், எங்குந்தமிழ் எதிலும் தமிழ் என்ற நிலையை உருவாக்குதல், இலக்கியம் வளர்க்கும் ஆர்வத்தைத் தூண்டுதல், அனைவரையுந் தமிழின்பம் காணவைத்தல், சமுதாயப் போக்கினை இலக்கிய வழிச் சரி செய்தல் ஆகியவை புதுவையிலுள்ள இலக்கிய அமைப்புக்களின் அடிப்படை நோக்கங்களாக விளங்குகின்றன.

## முன்னுரை

தமிழர்கள் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே சங்கம் வைத்துத் தமிழ் வளர்த்து வந்துள்ளனர். அச்சங்கத்தில் புதுவைப் புலவர்களும்[1] வீற்றிருந்தனர். தவிர கி. பி 3ஆம் நூற்றாண்டிலிருந்து 8-ஆம் நூற்றாண்டு வரையிலான புதுவை வரலாறு இன்னும் விளக்கம் பெறவில்லை.[2] கி. பி. 8ஆம் நூற்றாண்டிலும், புதுவையின் பாகூரிலும் திருபுவனையிலும் வடமொழிப் பல்கலைக் கழகங்கள் இருந்துள்ளன. இவை வடமொழியோடு தமிழ் மொழிக்கும் இலக்கியத்திற்கும் தொண்டாற்றியிருக்கலாம்.

இதையடுத்த கால கட்டத்திலும் அமைப்புக்கள் பற்றிய விவரங்கள் கிடைத்திலவாயினும் சமயப் பெரியார்களும் தனிப்பட்ட செல்வாக்குப் படைத்தவர்களும் பக்தி நெறியிலும் தனிப் புகழ்ச்சி நிலையிலும் தமிழ் வளர்ச்சிக்குத் துணைபுரிந்துள்ளனர்.

---

1. வீரை வெளியனார் (புறம் 320—பாடியவர்); வீரை வெளியன் தித்தனார்(அகம் 188—பாடியவர்)
2. புதுவை மாநிலத் தமிழ் வளர்ச்சி-சு. தில்லைவனம் பக்.4.
3. புதுவை வழிகாட்டி-காரை ஏ. ஏ. அலீம், பக். 19,

கி. பி. 18-19ஆம் நூற்றாண்டுகளிலும் 20ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும், புதுவையில் பல இயக்கங்கள் தோன்றித் தமிழுக்குப் பல்வேறு நிலைகளில் பணிபுரிந்துள்ளன; ஒருசில அமைப்புக்கள் நிலைத்த புகழையும் பெற்றுள்ளன.

எழுத்திலக்கியப் பணிபோலவே, இலக்கிய அமைப்புக்களின் பணியும் அந்தந்தக் காலகட்டத்தை ஒட்டியும் அரசியல் பொருளாதாரச் சமூகச் சூழல்களைப் பொறுத்தும் நிகழ்கின்றது. ஆயினும் பழைய அமைப்புக்கள், புதிய அமைப்புக்களுக்கு அடிப்படையாகவும் பின்னணியாகவும் அமைதல் இயல்பு. இந்நிலையில் பழைய அமைப்புக்கள் பற்றியும் முன்னோட்டமாக ஓரளவேனும் காணுதல் பொருத்தமாகும்.

## பழைய அமைப்புகட்கு வித்திட்டோர்

''பற்பல பாடையின் கழகம்எம் மருங்கும்
பொற்பு அமரத் துன்னும் புதுவையே''

என்று முதுபெரும் புலவர் பு. அ. பெரியசாமிப் பிள்ளையவர்கள் பாடுவதற்கொப்பப் புதுவையில் அன்றும் இன்றும் எம்மருங்கும் பற்பல கழகங்கள் இலங்குவது கண்கூடே.

அன்றைய கழகங்களின் ஆணிவேராய்த் திகழ்ந்தவர்கள் நல்லிசைப் புலவர் பல்லோராவர். அவர்களுள் குறிப்பிடத் தக்கவர்கள் இராமாநுச நாவலர், தவத்திரு நாகலிங்க சுவாமிகள், மகாவித்துவான் பு. அ. பெரியசாமிப் பிள்ளை, பண்டித அ. நாராயணசாமி நாயுடு, வித்துவான் வீ. துரைசாமி முதலியார், புலவர். சி. பங்காருபத்தர், நாடு சண்முகமுதலியார், பாவலர் ஜெய்னுலாபுதீன், மொழியாக்கச் செம்மல் இரா. தேசிகம்பிள்ளை, மகாகவி பாரதியார், புரட்சிக் கவிஞர் பாரதிதாசன், புதுமைக் கவிஞர் வாணிதாசன், திருமுடி சேதுராமன், இலக்கணச் செம்மல் சு. குமாரசாமிச் செட்டியார் ஆகியோர். இவர்கள் பல்வேறு இலக்கிய அமைப்புக்களோடு தொடர்புகொண்டு இலக்கியவானின் விடிவெள்ளிகளாகத் திகழ்ந்தனர்.

---

4. பு. அ பெரியசாமிப்பிள்ளை; புதுவைப் புகழ் மணிகள் பக். 13 (தொகுப்பாசிரியர் சு. மன்னர் மன்னன்)
5. புதுவைப் புகழ்மணிகள் பக் 5. 6. சிவ கண்ணப்பர்

## பழைய அமைப்புக்கள்

## 1. புதுவைப் பகுதி

(i) **புதுவைச் செந்தமிழ்ப் பிரகாச சபை:** இது 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலும் 20ஆம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் இயங்கி வந்தது. இதன் சிறப்புத் தலைவர்[5] திருவுடைச் சீமானுமல்ல, பெரிய அதிகாரியுமல்ல, ஒரு சுருட்டுத் தொழிலாளி. ஆனால் ஒரு கல்விக் கடல், மரபு வழிக் கவிதை மன்னர், புதுவைப் பெரியசாமி எனும் புலவர் பெருந்தகை "புலவர்க்குப் புலமை ஈந்து நிலவு பெரும் புகழ்ப் பெரியசாமிப் பிள்ளை"[6] என்பார் பாவேந்தரின் ஆசானுமாவர்.

(ii) **கலைமகள் கழகம்:** (கலைமகள் வாசக சாலை) "செந்தமிழ் இருப்பே என்னும் பங்காருபத்தர்"[7] அவர்களும் பாவேந்தர்க்கு ஆசான் அவர் 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கலைமகள் கழகம் என்னும் ஓர் அரிய இலக்கிய அமைப்பை உருவாக்கினார். புதுவையில் புகழ் வாய்ந்த அரசியல் தலைவர் நாடு சண்முகமுதலியார் இல்லத்தில் அமைத்துச் சிறப்புற நடத்தி வந்தார். இக்கழகத்தின் செயலர் தி. திருப்புளிசாமி ஐயராவர். இவரும் பாவேந்தர்க்கு ஆசான்.

இக்கழகம் கலைமகள்[8] என்னும் திங்கள் இதழையும் நடத்தி வந்தது. இவ்விதழ் வெளியீடு, கழகப்பணிகளில் முத்தாய்ப்பானதாகும். இவ்விதழில் சங்க இலக்கியம் மற்றும் பல்வேறுபட்ட ஆய்வுரைகள், தனித் தமிழ்க் கட்டுரைகள், தமிழ் மருத்துவ ஆய்வுகள், சிறுகதை, புதினம் ஆகிய புத்திலக்கிய வகைகள் இடம் பெற்றிருந்தன. புதுவை மற்றும் தமிழகத்துப் பெரும் புலவர்கள் இவ்விதழில் எழுதியுள்ளனர். ஸ்ரீலஸ்ரீ சுவாமிவேதாசலம் (மறைமலையடிகளார்) அவர்களும் இவ்விதழில் தொடர்ந்து எழுதியுள்ளார்.

கலைமகள் கழகம் நூல்நிலையம் ஒன்றையும் நடத்தி வந்துள்ளது.[9] புதுவைப் பெரியார் பலரும் இந்நூல் நிலையத்திற்கு அரிய இலக்கண இலக்கிய நூல்களை நன்கொடையாகத் தந்து இதனைப் புரந்துள்ளனர்.

---

6. மேற்படி பக் 17. புரட்சிக்கவிஞர் பாரதிதாசன்
7. ,, பக் 8. N. அப்பர்
8. கலைமகள் திங்கள் இதழ்கள்
9. கலைமகள் இதழ் ஆகஸ்டு - செப்டம்பர் 19'7 பக். 186

இக்கழக ஆண்டுவிழா தொடர்ந்து திருப்பாதிரிப்புலியூர் தவத்திரு ஞானியார் அடிகள் தலைமையில் புத்தாண்டுகள் வரை நடைபெற்றது. அரும் பெரும் புலவர்கள் ந. மு. வேங்கடசாமி நாட்டார், கரந்தைக் கவியரசு திரு. வேங்கடாசலம்பிள்ளை. கரப்பாக்கம் மடாதிபதிகள் முதலானோர் இக்கழக நிகழ்ச்சிகளில் கலந்து சொற்பெருக்காற்றியுள்ளனர்.

(iii) பங்காருபத்தர் வாசக சாலை: புதுவையின் புகழ்மணக்க அரிய தமிழ்த் தொண்டாற்றி வந்த பங்காருபத்தர் அவர்கள் 20-2-1925இல் தம் 54ஆம் அகவையில் இயற்கை எய்தினார், இவர் பால் பேரன்புகொண்டு ஒழுகி வாழ்ந்த அறிஞர்களும் சான்றோர் களும், இவர்தம் நினைவைப் போற்றும் வகையில் புதுவை சப்பான் இராமசாமி ஆசாரி அவர்கள் இல்லத்தில் பங்காரு பத்தர் வாசகசாலையை[10] நிறுவி இனிதே நடத்தித் தமிழ்த் தொண்டு புரிந்துள்ளனர்.

(iv) தமிழ்த்தளிர்க் கழகம்: புதுவை மகாவித்துவான் பு.அ. பெரியசாமிப் பிள்ளையின் சிறந்த மாணவர்கள் மூவர். அவர் களுள் முதல் மாணவர் கோ. இராமானுசசெட்டியார்; அடுத்தவர் சி. பங்காருபத்தர், மூன்றாமவர் பண்டித வீ.துரைசாமி முதலியார். இவர்கள் புதுவையில் புகழ் மிக்க மும்மணிகளாக விளங்கினர்.

இவர்கள் தோற்றுவித்ததே புதுவைத்''தமிழ்த்தளிர்''[11] என்னும் கழகமாகும். மிகச் சிறந்த தமிழ்ப் பணியாற்றிய இக்கழகம் இடை யில் செயலற்றிருந்தது. அண்மையில் இதன் பொறுப்பினை ஆசிரியர் வீ. மதுரகவி ஏற்றார். இலக்கணச்சுடர் இரா.திருமுருகன் அவர்களைத் தலைவராய்க் கொண்டு செயல்படத் தொடங்கியது.

(v) புதுவைத் தமிழ்ச் சங்கம்: மதுரை-புதுவை-சென்னை ஆகிய மூன்று நகரங்களிலும் மூன்று தமிழ்ச் சங்கங்கள்[12] இருந்தன. இவைகள் இணைந்து செயல்புரிந்தன. தமிழ் இலக்கண இலக்கிய நூற்களோடு மருத்துவம், சோதிடம் முதலிய நூற்களை யும் இச்சங்கம் வெளியிட்டுள்ளது.

முத்தமிழ் வித்தகர்களாகிய அந்தகக்கவி வீரராகவமுதலியார் களத்தூர் வேதகிரி முதலியார், நாகலிங்க சுவாமிகள்,அருணாசலக்

---

10. புதுவைப் புகழ் மணிகள் பக் 21. அப்பர்
11. ,, பக் 25. கவிஞர் சித்தன்
12. துரை வடிவேலனார் பக் 5, கவிஞர் சித்தன்

குருக்கள், வெண்பாப்புலி கோவிந்தராசப்பிள்ளை, மறைத்திரு வேலாயுதசாமி என வழங்கும் வேதானந்த சுவாமிகள்முதலியோர் இச்சங்கத்தின் தலைமைப் பொறுப்பேற்றவர்களாவர் இவர்களுக்குப் பிறகு, பண்டித வீ. துரைசாமி முதலியார் தலைவராகவும் பாவேந்தர் பாரதிதாசன் செயலாளராகவும் இருந்து இச்சங்கத்தைச் சிறப்புடன் நடத்தி வந்தனர். இச்சங்கத்தினின்றும் ''தமிழ்மகவு'' (1918) என்னும் திங்களிதழை வீ. துரைசாமி முதலியார் நடத்திவந்தார் மக்களுக்குக் கல்விப் பயிற்சியளிப்பது இதன் நோக்கமாய் இருந்தது.[13]

(vi) கல்விக் கழகம்: புதுவையில் 18-19ஆம் நூற்றாண்டில் பிரஞ்சுக் கல்வி புகுத்தப்பட்டதனால் தமிழ்மொழியின் ஆக்கம் குன்றத் தலைப்பட்டது. இந்நிலையில் மொழித்தொண்டின் ஆக்கம் சில இளைஞர்களின் கருத்தைக் கவர்ந்தது. 1912ஆம் ஆண்டின் தொடக்கத்தில் மாணவர் பதின்மர் ஒன்றுகூடிக் ''கல்விப்பிள்ளைகள் இணக்கம்''[14] என்ற பெயரோடு ஒரு கழகத்தைக் கல்வி வளர்ச்சிக்காகவும், சிறப்பாகத் தமிழ் மொழிப் பயிற்சிக்காகவும் நிறுவினர். இக்கழகம் வளர்மதியென வளர்வதாயிற்று. படிப்பகம், நூலகம், இரவுப்பாடசாலை முதலிய உறுப்புக்களைத் தன்னகத்தே கொண்டு, தொண்டுபுரிந்து வந்தது.

மகாகவி சி. சுப்பிரமணிய பாரதியார், புரட்சி ஏறு வ. வே. சு. ஐயர், முதுபெரும் புலவர் சி. பங்காருபத்தர் முதலிய பெரியார்களின் அன்பையும் அருளையும் பெற்று இக்கல்விப்பிள்ளைகள் இணக்கமே வளர்ந்து 1926இல் ''கல்விக் கழகம்'' என்னும் புதுப் பெயரால் பொலிவதாயிற்று. இக்கழகத்தின் தலைவராக வழக்கறிஞர் அ. வி. தெய்வசிகாமணி அவர்களும், அமைச்சராக மொழியாக்கச் செல்வர் இரா. தேசிகம் பிள்ளை அவர்களும் இருந்து சீரிய முறையில் நடத்தி வந்துள்ளனர்.

இக்கழகம் தமிழகம் இதுவரை காணாத வகையில் பதினெண் கீழ்க்கணக்கு மாநாடு நடத்தி வெற்றி கண்டது. இக்கழக நிகழ்ச்சிகளில் கலந்துகொள்ளாத தமிழ்ப்பெரும் புலவர்களே இல்லை எனலாம். தமிழ்த்தென்றல் திரு.வி.க., டாக்டர் ரா. பி சேதுப்பிள்ளை, டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார், மே.வீ.வேணு

---

13. புதுவை மாநிலத்தமிழ் வளர்ச்சி, சு. தில்லைவனம் பக்170
14. நமது கழகம்: கல்விக்கழக வெள்ளி விழா நினைவுமலர், திரு. அ. வி. தெய்வ சிகாமணி.B. A. B.L. பக். 4—5.

கோபாலப் பிள்ளை, டாக்டர் மா. இராசமாணிக்கனார், புதுக் கோட்டை திவான் கான்பகதூர், பி. கலிபுல்லாசாகிபு பகதூர், சுவாமிநாத தீட்சதர் ஆகிய அனைவரையும் அழைத்துத் தமிழ் செழிக்கச் செய்தது. இக்கழகத்தின் வெள்ளி விழாமலர் (1951) ஓர் இலக்கியப் பெட்டகமாகப் போற்றிக்காக்கவேண்டிய ஒரு கருவூலம் இக்கழகத்தின் சொந்தமனையில் தற்போது அரசுப்பள்ளி நடை பெற்றுவருகிறது. இக்கழகத்தின் தற்போதைய தலைவர் திரு. பாவலர் சித்தன், செயலர் திரு தே. இராமநாதன் ஆவர்.

(vii) இலக்கிய மன்றம்: புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கள் 1943ஆம் ஆண்டில் இம்மன்றத்தினைத் தொடங்கி னார்கள். அதன் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் உறுதுணை நின்றவர் வரலாற்றுக் களஞ்சியமாம் திருமுடி சேதுராமனாவார்[15]

பாவேந்தர்க்குப் பின் இம்மன்றம் செயலற்றுப் போயிற்று. ஆயின் 1978இல் திருமுடி சேதுராமன் அவர்கள் இம்மன்றத்தினை மீண்டும் செயல்படுத்தினார். இதற்குத் துணை நின்றவர் பாவேந்தர் திருமகனார் மன்னர் மன்னன் அவர்களே.

திருவையாறு அரசினர் கல்லூரி முதல்வர் தி. வே. கோபாலய்யர் இம்மன்றத்தில் தொடர்ப்பொழிவு செய்து பண்டை இலக்கிய மாண்பை உணர்த்திவந்தார். பண்ணாராய்ச்சி வித்தகர் இசைப் பேராசிரியர் குடந்தை ப. சுந்தரேசனார் சிலப்பதிகார வகுப்பு நடத்தி இசைமாண்பை விளக்கினார்.

(viii) பாரதி மன்றம்: விடுதலைக் குயில் பாரதியின் நினை வைப் போற்றும் வகையில் இம்மன்றம் செயல்பட்டு வந்தது. இதன் வளர்ச்சிக்குத் துணை நின்றவர் திருமுடி சேதுராமன் அவர்கள். இம்மன்றம் பாரதி பாலர்பள்ளியாகத் தற்போது அரசின் பொறுப்பில் செயல்பட்டு வருகிறது.[16]

(ix) இராமகிருஷ்ணர் வாசகசாலை: முப்பத்தைந்து ஆண்டு களுக்குமுன் புதுவைச் சின்னக்கடைப்பகுதியில் கல்விவளர்ச்சிப்பணி யில் ஈடுபட்டிருந்தது. அதோடு இலக்கியப் பணியிலும் சிறந்து விளங்கியது.

(x) ஷெல்லி மன்றம்: ஷெல்லி பாரதி ஆகிய இருவரும் அரசியல் சமூக, பொருளாதார விடுதலைக்கு வீறிட்டு எழுந்த

---

15. வரலாற்றுக் களஞ்சியம் பக் 9. புலவர் சு. குப்புசாமி
16 ஷெ பக் 29.

வர்கள். இருவர் கவிதைகளிலும் பல ஒற்றுமைக் கூறுகள் இணைந்த போக்குகள் நிலவுவதைக் காணலாம். ஆயினும் பாரதி, ஷெல்லியைத் தன் வழிகாட்டியாகக் கருதுகிறார். எனவே தம் பெயரை ஷெல்லதாசன் என்று சொல்லிப் பெருமைப்பட்டிருக்கிறார். அந்த ஆங்கில வீறுணர்ச்சிக் கவியைப் போற்றும்வகையில், நம் தமிழக வீறுணர்ச்சிக் கவி பாரதி, அவன் பெயரால் புதுவையில் ''ஷெல்லி மன்றம்''[17] ஒன்று அமைத்தார் என்பதை அறியும்போது பாரதியின் கவிதை உள்ளமும் நேர்மைப் பாங்கும், பொதுமைப் பான்மையும் புல்லரிக்கச் செய்யும். அவர்தாம் வாழ்ந்துவந்த புதுவைப் பெருமாள் கோயில் தெருவை ஷெல்லி தெரு என்று குறிப்பிடுவதுண்டாம்.

அடிமைப் படுத்தப்பட்ட ஒரு நாட்டுப் புலவன் அடிமைப்படுத்திய நாட்டுப் புலவனைப் போற்றினான் என்றால் அதுதான் பாரதி உள்ளம்.

## 2. காரைப் பகுதி

காரைக்கால் வட்டத்திலும் இந்த நூற்றாண்டின் முற்பகுதியில் சில அமைப்புக்கள் தோன்றி மிகச்சிறந்த பணிகளை ஆற்றியுள்ளன. அவற்றுள் குறிப்பிடத் தக்கவை காரைக்கால் கல்விக் கழகம், விவேகானந்தர் வாலிபர் சங்கம், மற்றும் சில இசுலாமியச் சங்கங்களாகும்.

(i) **காரைக்கால் கல்விக் கழகம் :** புதுவைக் கல்விக்கழகத்தை ஒத்த மிகச்சிறந்த இலக்கிய அமைப்பாகும். இது நாற்பதாண்டுகளுக்கு முன் தோற்றுவிக்கப்பட்டது. கிழமைதோறும் சொற்பயிற்சிக் கூட்டங்கள் நடத்தித் தமிழ்ப்பணியாற்றியுள்ளது. இக்கழக நிகழ்ச்சிகளில் பங்கேற்றவர்கள் பலர் இன்று தமிழகத்தின் தலைசிறந்தபேச்சாளர்களாக, எழுத்தாளர்களாகத்திகழ்பவர்கள். இக் கழகம் தற்போது செயல்படாவிடினும் நிலைத்த புகழில் நின்று நிலவுகின்றது.

(ii) **விவேகானந்தர் வாலிபர் சங்கம் :** சுமார் ஐம்பது ஆண்டுகட்கு முன் சிறப்புற்று விளங்கியது. தலைசிறந்த தமிழறிஞர்களைக் கொண்டு சொற்பெருக்காற்றித் தொண்டு செய்துள்ளது

---

17. புதுவைக்குறள் நெறிமன்ற பாரதி விழாவில் (23-5-8?. இல்) மக்கள் தலைவர் வ. சுப்பையா அவர்கள் ஆற்றிய உரையிலிருந்து.

இந்த அமைப்பில் நூலகம் ஒன்றும் இயங்கிவருகிறது. இம்மன்ற மும், செயலற்றிருப்பினும், இது ஆற்றியுள்ள பணிகள் நிலைத்த புகழைத் தந்துள்ளன. இதன் பொறுப்பினைத் தற்போது புலவர் கோ. சாரங்கபாணி ஏற்றுள்ளார்.

(iii) சமூகநல ஊழியர் சங்கம்: காரைக்கால் வட்டம் திருநள்ளாறு கொம்யூன் மேயரும், பிரஞ்சு இந்தியக் காந்தி என்று போற்றப்படுபவருமான திரு. சு. அரங்கசாமி அவர்கள் ஐம்பது ஆண்டுகளுக்குமுன் இளைஞர்களை ஒன்றுபடுத்திச் சமூகநல ஊழியர் சங்கம்[18] ஒன்றை அமைத்தார்கள். இச்சங்கத்தின்மூலம் இளைஞர்களுக்குப் பேச்சுப் பயிற்சி அளிக்கப்பட்டது. சமூகச் சீர் திருத்தம், இன ஒற்றுமை, பகுத்தறிவு, விடுதலை முழக்கம் ஆகியவை இச்சங்கத்தின் அடிப்படைக் குறிக்கோள்களாய் இருந்தன.

(iv) பால்யமுஸ்லீம்கள் சங்கம்: முப்பது ஆண்டுகளுக்குமுன் சீருடனும் சிறப்புடனும் இயங்கிச்சிறந்த தமிழ்ப்பணி புரிந்துள்ளது. இது நடத்திய நூல் நிலையத்தில் அரசு நூலகங்களில் கூடக் கிடைக்கவொண்ணா அரிய நூல்கள் இருந்தன. இச்சங்கமும் செய லற்று மறைந்து போயிற்று.

(v) இசுலாமியச் சங்கம்: இது ஒரு சமயச் சார்புடைய சங்கமேயாயினும் பக்திநெறியில் தமிழ்ப்பணியைச் சிறப்புறச் செய்துவந்தது. காருண்யநபி, உலகரட்சகர், முகம்மதுநபி பெருமானின் பிரச்சாரம், மக்காயாத்திரையின் மகத்துவம்அல்லது ஹிஜ்ஜியின் விளக்கம், கமால் பாட்சா இறுதிச்செய்தி, தீன்மார்க்க விளக்கம், இசுலாமியர்களின் இரத்தக் கண்ணீர், ஆகிய நூல்களை இச்சங்கம் வெளியிட்டுள்ளது.[19] மு மஸ்தான் சாயபு, அப்துல் ரகுமான் நஜ்மி, அப்துல்சலாம் சாகிப் நத்வீ, காலித்ஷெல்ட்ரேக் மௌலானா ஸய்யித் நவாப். அலிரஜ்வி முதலிய புலவர்கள் இச் சங்கத்தில் தொடர்பு கொண்டிருந்தார்கள். இச் சங்கம் சமயப் பரப்பு நோக்கத்தைக் கொண்டிருந்தது, தமிழ்ப்பணி சமயப் பணிக்கு ஒரு கருவியாக இருந்தது.

(vi) உலகத் தமிழ்க் கழகம்: எட்டாண்டுகளுக்கு முன் தொடங்கப்பெற்ற ஒன்றாம். இதன் தலைவர் காரை இறையடி யான், செயலர்; காரை ஏ.ஏ. அலீம்; தற்போது இதன் செயல்

18. புதுவைப் புகழ் மணிகள் பக் 57-58, K. சண்முக மூர்த்தி.
19. புதுவை மாநிலத் தமிழ் வளர்ச்சி பக் 152,

பாடுகள் குன்றியிருப்பினும் அடிப்படைப் பணிகள் தொடர்கின்றன. இவைபோன்று புதுச்சேரி காரைக்கால் வட்டங்களில் எண்ணற்ற இலக்கிய அமைப்புக்கள் செயல்பட்டுவந்துள்ளன.

## செயற்பாட்டில் உள்ள இலக்கிய அமைப்புக்கள்

## 1. புதுச்சேரி வட்டம்

(i) புதுவைத் தமிழ்ச் சங்கம்:

10, முதல் தெரு, திருமுடி நகர், புதுச்சேரி-605001.

முன்பிருந்த அமைப்பு மீண்டும் புதிய பொலிவோடு 24-9-67ல் தொடங்கப்பட்டது. இதற்கு தூண்டுகோலாக இருந்து உருவாக்கியவர் மறைந்த திரு. திருச்சி கு. விசுவநாதம் அவர்கள்.

சங்கத்தின் அடிப்படைக் கொள்கை: "யாதும் ஊரே யாவரும் கேளிர்." இதன் பணிகள்: இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழையும் பேணல். மகிழுலாவுடன் கூடிய வரலாற்றுக் கருத்தரங்கு, ஆய்வரங்கு நூல் வெளியீடு முதலியவை நடத்துதல், தமிழ்ச் சான்றோரைப் போற்றுதல். இச்சங்கத்தின் செயற்பாடுகளில் பெரிதும் ஈடுபாடு கொண்டிருந்தவர் திருமுடி சேதுராமன். இவர் பாரதியார் பெயரில் ஓர் அறக்கட்டளை நிறுவி நிதியும் அளித்துள்ளார். சங்கத்திற்கெனச் சொந்த நிலம் வாங்கிக் கட்டடம் கட்டுவதற்குக் கால்கோள் விழாவும் செய்யப்பட்டது. இச்சங்கத்தின் தலைவர். புரவலர் ந. கோவிந்த சாமி அவர்கள், செயலர் புலவர் தி. தேவிதாசனவர்கள்.

(ii) புதுவைத் தமிழ்க் கழகம் 35. பெரியார் சாலை, புதுச்சேரி. 605001.

"எங்கள் வாழ்வும் எங்கள் வளமும்
மங்காத தமிழென்று சங்கே முழங்கு" என்ற பாவேந்தர்

கொள்கை முழக்கோடு, தனித் தமிழ் வளர்ச்சிக்கும், பகுத்தறிவு வளர்ச்சிக்கும் பாடுபடும் நோக்கோடு தொடங்கப்பட்ட கழகமாகும். இதன் தொடக்கம் 1973 ஆம் ஆண்டாகும்.—புதுவையில் தனித்தமிழுணர்வு மங்கியிருந்த வேளையில் எழுச்சியுடன் செயல்பட்டு ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தியதாகும். தமிழ் ஆட்சி மொழியாக விளங்கவேண்டும். அரசுத் துறைகள் தமிழிலேயே தம் பணிகளை ஆற்றவேண்டும், வணிக நிறுவனங்களின் பெயர்ப் பலகைகளைத் தமிழில் வைக்கவேண்டும். தமிழ்மக்கள் தமிழ்ப்

பெயரோடு விளங்க வேண்டும் என்று பலவகையாகத் தொடர்ந்து செயல்பட்டு வருகின்றது. மறைமலையடிகள் நூற்றாண்டு விழா கண்டு புதுவை வில்லியனூர்ச் சாலைக்கு "மறைமலையடிகள் சாலை" என்று பெயர் வைக்க அரசை வற்புறுத்தி வெற்றி கண்டது. மற்றும் "பாண்டிச்சேரி" என்ற ஆங்கில'அடிமைப் பெயரை மாற்றிப் "புதுச்சேரி" என்ற பழைய பெயரையே யாவரும் பயன்படுத்துமாறு நான்காயிரம் துண்டறிக்கைகள் வெளியிட்டது. மற்றும் வள்ளுவர்க்கும் பாவேந்தர்க்கும் விழா நடத்தியுள்ளது. தனித்தமிழ்க் கட்டுரைப் போட்டி, பேச்சுப் போட்டி நிகழ்த்தி பரிசுகள் அளித்துள்ளது. இதன் அமைப்புக்கு முதன்மையாக விளங்கியவர்கள், திரு. க. தமிழமல்லன், பாவலர் இலக்கியன், பாவலர் சு. வேல்முருகன், புலவர் இரா. பன்னீர்ச் செல்வம், கவிஞர் கல்லாடன் ஆகியோர். இதன் தற்போதைய தலைவர் சி. நாகலிங்கம்; செயலர் பாவலர் இலக்கியன். இன்றியமையாப் பொறுப்பாளர்கள் கவிஞர் புதுவைச் செல்வம், கவிஞர் கல்லாடன், பாவலர் சு. வேல்முருகன் ஆகியோர்.

**(iii) புதுவைத் தமிழ்க் கவிஞர் மன்றம், 35, பெரியார் சாலை, புதுச்சேரி - 605001.**

இம்மன்றம் 7-7-77 இல் தொடங்கப்பட்டதாகும். கடலூர் கவிச்சித்தர் க.பொ. இளம்வழுதி அவர்களைப் பொதுச் செயலாளராகக் கொண்ட தென்னார்க்காடு மாவட்டத் தமிழ்க் கவிஞர் மன்றத்தின் கிளை மன்றமாகப் புதுவையில் செயல்பட்டு வருகின்றது.

தமிழ் இலக்கிய வானில் ஒளி வீசித் திகழ்ந்த பாரதி, பாரதி தாசன், வாணிதாசன் ஆகியோர் வழிநடந்து தமிழ்நலங் காத்தல், எழுத்தாலே "தாய் நாட்டைத் தான் பிறந்த நாட்டை ஈடேற்ற முனைதல்"[20] ஆகிய செயல்களைத் தம் முழு மூச்சாய்க்கொண்டு தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபட்டு வருதல் இம்மன்றத்தின் குறிக்கோளாகும்.

கவிஞர் பெருமக்கள் மற்றும் சான்றோரைப் போற்றுதல், நூல் வெளியிடல், இலக்கிய விழாக்காணல், எங்கும் தமிழ் எதிலும் தமிழ் என்று முழக்கமிடல் ஆகியவை மன்றத்தின் குறிப்பிடத்

20. "எழுத்தாலே தாய் நாட்டைத் தான்பிறந்த நாட்டை ஈடேற்ற முனைவதுதான் படித்தவனின் செய்கை"
—கவிஞரேறு வாணிதாசன்.

தக்க செயல்களாகும். கவிஞரேறு வாணிதாசனார் நினைவுமலர், வாணிதாசனாரின் எழிலோவியம், இன்ப இலக்கியம், கல்லாடன் அவர்களின் தேன்மொழி. வில்லியனூர் சு. பழனியின் பசி எங்கள் உணவு, ஒரு கைக்கிளை, ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளது.

இம்மன்றத்தின் தலைவர் பாவலர் புதுவைச் செல்வம். செயலர், பாவலர் சு. வேல்முருகன், பொருளர், பாவலர் இலக்கியன். துணைத் தலைவர் பாவலர் கல்லாடன், துணைச் செயலர் பாவலர் சு. பழனிச்சாமி.

(iv) தமிழ்க் காவற்குழு: மறைமலையடிகள் சாலை (சுதேசி பஞ்சாலை எதிரில்) புதுச்சேரி. 605001.

புதுவையில் தாய் மொழியாம் தமிழ் தளர்ச்சியுறவும், பிற மொழி ஆதிக்கம் மேலோங்கவும் நேரிடையாகவும் மறைமுகமாக வும் தீவிர முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. அவ்வேளையில் தமிழுக்கு உரியநிலை கிடைக்கவும், பிறமொழி ஆதிக்கத்தை ஒடுக்கவும் புதுவைத் தமிழ்க் கழகம் முனைந்து மற்ற அமைப்புக் களையும் ஒருங்கிணைத்துச் செயல்படத் தொடங்கிப் பின்னர் பல தமிழ் இலக்கிய அமைப்புக்களின் கூட்டமைப்பாகத் "தமிழ்க் காவற்குழு" என்று உருவெடுத்துச் சிறப்பாகத் தமிழுக்குப் பணி யாற்றி வருகின்றது.

இக்குழு பெயருக்கேற்பத் தமிழுக்குக் காப்பாக அமைந் துள்ளது. எங்கெல்லாம் தமிழுக்கு ஊறு நேர்கிறதோ அங்கெல் லாம் இக்குழு முந்துறும் நகரப் பகுதிகளிலும், சிற்றூர்ப் பகுதி களிலும் பல தமிழ் அமைப்புக்களோடு இணைந்து சென்று வணிக நிறுவனங்களின் பெயர்ப் பலகைகளைத் தமிழில் எழுதி வைக்கு மாறு கூறி வெற்றி கண்டுள்ளது. வணிக நிறுவனங்களின் பெயர்ப் பலகைகளைத் தமிழில் எழுதி வைக்குமாறு அரசையும் ஆணை பிறப்பிக்கச் செய்தது. கோயில்களில் தமிழில் வழிபாட்டைக் கடைப்பிடிக்கச் செய்தது. கோயில்களில் தமிழில் அருச்சனை செய்யவேண்டும் என்று அரசை வற்புறுத்தி ஆணை பிறப்பிக்கு மாறு செய்தது. ஆட்சி மொழி ஆண்டு விழா, பாவாணர் நினைவு ஆகியவற்றைச் சிறப்பாகக் கொண்டாடித் தனித் தமிழ் உணர் வைப் பரப்பியது.

தமிழகத்தில் "Madras State" என்று இருந்ததைத் "தமிழ் நாடு" என்று பெயர் மாற்றம் செய்தது போல் புதுவை மாநிலத்

திலும் ''பாண்டிச்சேரி'' என்னும் தவறான வழக்கை மாற்றிப் ''புதுச்சேரி' ' என்று வழங்குமாறு புதுவை அரசைப் பன் முறை வற்புறுத்திப் புதுவைச் சட்டப் பேரவையில் ''பாண்டிச் சேரி'' எனும் பெயர் வழக்கைப் ''புதுச்சேரி'' என்று மாற்ற வேண்டும் என்று தீர்மானமும் கொண்டு வந்து நடுவணரசுக்கு அனுப்பிவைத்தது.

இலக்கணச்சுடர் இரா. திருமுருகனார் இயற்றிய ''புதுச் சேரியா? பாண்டிச்சேரியா?'' என்ற சிறு ஆய்வு நூலை வெளி யிட்டுப் ''புதுச்சேரி'' என்ற பெயரின் தனித்தன்மையை எடுத்துக் காட்டி விழிப்பை ஏற்படுத்தியது.

இக்குழுவில் இலக்கணச்சுடர் இரா. திருமுருகனார், புலவர் வே. முத்துக் குமாரசாமி, புலவர் இலக்கியன், திரு க. தமிழ மல்லன் ஆகியோர் சிறந்த முறையில் செயல்பட்டனர். தற்போது பாவலர் சு. வேல்முருகன் தலைவராகவும், ஆசிரியர் துரைராசு அவர்கள் செயலராகவும், ஆ. பழனி அவர்கள் பொருளராகவும் விளங்குகின்றார்கள்.

(v) **தனித் தமிழ்க் கழகம்:** 168, மாரியம்மன் கோயில் தெரு, தட்டாஞ்சாவடி, புதுச்சேரி 605009.

இக்கழகம்,

''தாழ்ச்சியுறுந் தமிழினத்தின் மேன்மையெலாம்
தமிழ்மொழியின் மேன்மை ஒன்றே'' என்ற கருத்தை உயிர் மூச்சாய்க் கொண்டு, தனித்தமிழ் வளர்த்தல், அதனைப் பரப்புதல் ஆகிய செயற்பாடுகளைக் கொண்டுள்ளது.

தனித்தமிழ்க் கொள்கையை வளர்க்கச் சரியான அமைப்பு இல்லாமை, கலப்புத் தமிழ் வழக்காற்றின் பெருக்கம், தமிழ் மக்களிடத்தும் தமிழ் கற்றாரிடத்தும் தமிழ்ப் பண்பாடு குறைந் தமை ஆகிய கரணியங்களால் இவ்வமைப்புத் தோன்றியதெனலாம்.

இக்கழகம் தி.பி. 2009 சுறவத்திங்கள் 12 ஆம் பக்கல் (25.1.78) தனித்தமிழ் க. தமிழமல்லன் அவர்களால் அமைக்கப்பட்டது. இதன் தலைவர் க. தமிழமல்லன். செயலர் சீனு அரிமாப் பாண்டியன்.

எங்கும் தமிழ், எதிலும் தமிழ்; அதிலும் தனித்தமிழே என்பதற்கு இடையறாது பாடுபட்டு வருகின்றது. தமிழ் வளர்ச்சித்

துறை அமைக்கவும், தமிழை ஆட்சி மொழியாக்கவும் அரசை வலியுறுத்தியுள்ளது. தனித் தமிழ்ச் சிறுகதைத் தொகுப்பு நூலை வெளியிட்டுள்ளது. மொழி ஞாயிறு பாவாணர் நினைவைப் போற்றியுள்ளது. இன்னும் பல்வேறு நிலைகளில் தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபட்டு வருகின்றது.

(vi) குறள் நெறி மன்றம்: 22 அ- வேளாளர் தெரு, புதுச்சேரி 605001.

இம்மன்றம் 27-1-1977 இல் புலவர் அரிமதி தென்னகன் அவர்களால் அமைக்கப்பட்டு, 6-2-1977 இல் தொடங்கப்பட்டது. தமிழ் வாழவும் குறல்நெறி வெல்லவும் தலைப்படல் இதன் நோக்கமாகும்.

பாவேந்தர் பாரதிதாசனார், கவிஞரேறு வாணிதாசனார், திருவள்ளுவர், பெரியார், அண்ணா ஆகியோர்க்கு விழா எடுத்தல், சித்திரை முழு நிலவில் சிலப்பதிகார விழா எடுத்தல், நூல்வெளியிடல் அவ்வப்போது இலக்கிய விழாக்காணல், தமிழ்ச் சான்றோரைப் பாராட்டுதல் ஆகியன இதன் குறிப்பிடத் தக்க பணிகளாகும். ஒன்பதுக்கும் மேற்பட்ட நூல்களை வெளியிட்டுள்ளது. புதுவையின் தமிழ்த் தொண்டர், நயனுடைச் செல்வர் சிவ. கண்ணப்பா அவர்கட்குச் செந்தமிழ்த் தொண்டர் என்னும் பட்டமளித்துள்ளது. அவர்களின் மணிவிழாவைச் சிறப்புறக் கொண்டாடியுள்ளது. ''அரிமதி வெண்பாமாலை'' என்ற நூலையும் வெளியிட்டுள்ளது.

இம்மன்றத்தின் காப்பாளர் துரை சுப்பிரமணியன், நெறியாளர் கோ. தென்னன், தலைவர் புலவரேறு அரிமதி தென்னகன் ஆகியோர் ஆவர்.

(vii) புதுவைக் கம்பன் கழகம்:- இக்கழகம் 1966 இல் தொடங்கப்பட்டது. நீதிபதி எஸ். மகராசன் அவர்கள் ஊக்கம் நல்க புதுவைப்புலவர் அ. அருணகிரி அவர்கள் செயல்படத் தொடங்கினார். புதுவைப் புரவலர்களையும் ஆர்வலர்களையும் கொண்டு செல்வச் செழுமையோடு திகழ்கிறது. தெய்வமாக் கவி கம்பனுக்கு விழா எடுத்தல், நூல் வெளியிடல், மலர் வெளியிடல் இதன் இன்றியமையாப் பணிகளாகும். ஆண்டுதோறும் மேத் திங்கள் இடையில் இசையுரை, எழிலுரை, உரைமன்றம், பட்டிமன்றம், வழக்காடு மன்றம், மேல் முறையீட்டுப் பட்டிமன்றம்,

பாட்டரங்கம் ஆகிய நிகழ்ச்சிகள் மூலம் கம்பன் காவியத்தைக் காணவைக்கிறார். இவ்விழா மூன்று நாட்கள் சிறப்பாக நடை பெறுகின்றது.

(viii) பாரத இளைஞர் சமூக நலப்பணிக் கழகம்: 16/156, காந்திவீதி, புதுச்சேரி 605003.

சமூகப்பணியிலும் இலக்கியப் பணியிலும் ஆர்வங் கொண்ட இளைஞர்களின் முயற்சியில் 17. 6. 76 இல் இக்கழகம் மலர்ந்தது[21] ஆண்டுதோறும் காப்பிய விழா நடத்தி வருகின்றது. ஐம்பெருங் காப்பியங்களேயன்றி, சிறு காப்பியம், தேம்பாவணி, சீறாப் புரா ணம் முதலிய நூல்களின் சிறப்பையும் இனிமையையும் மக்கட்கு ஊட்டிப் பல்வேறு நிகழ்ச்சிகளை விரிவான முறையில் அமைத்து வருகின்றது.

இக்கழகத்தின் தலைவர் இரா. பூங்காவனம் பொதுச் செயலர் தி. தியாகராசன்; செயலர் ச. சிவா மேதகு புதுவை மாநிலத்தின் ஆளுநர் தலைமைப் புரவலராகவும், முதல்வர் மற்றும் அமைச் சர்கள், பாராளுமன்ற உறுப்பினர்கள் சிறப்புப்புரவலர்களாகவும், சிறப்புத் தலைவர்களாகவும் பொறுப்பேற்றுள்ளனர்.

(ix) இலக்கியக் கூடல்:- 10, முதல் தெரு, திருமுடிநகர், புதுச்சேரி 605001. இவ்வமைப்பு முதல் முதல் பாளை. எழிலேந்தி அவர்களின் பொறுப்பில் அமைந்து, 19-6-1977 இல் புலவர் தேவி தாசன் அவர்களின் பொறுப்பில் நடைபெறத் தொடங்கியது. இக்கூடலின் நோக்கம் புதிய அணுகுமுறையில் இலக்கியத்தை வளர்த்தல். பாடல் போட்டி வைத்து இளம்பாவலர்களுக்குப் பட்டமளித்தல், திறனாய்வாளர்களை எழுத்தாளர்களை உரு வாக்குதல், அறிஞர்களைப் போற்றுதல், நூல்வெளியிடல், திங்கள் தோறும் மூன்றாம் ஞாயிற்றுக் கிழமை கூடல் நடைபெறும். கலந்துரையாடல் போன்ற நிகழ்ச்சி மூலம் இலக்கியச் சிந்தனையை வளர்த்தல் இதன் குறிக்கோளாம், புலவர் தேவிதாசனின் ''கலம் பகக் காட்சிகள்'' என்னும் நூலையும் வெளியிட்டுள்ளது. குறித்த நேரத்தில் நிகழ்ச்சியைத் தொடங்கி முடித்தல் இதன் இன்றியமை யாத குறிக்கோள். இக்கூடலின் தலைவர் திரு மிகு சிவகண்ணப்பர் ஆவார்.

---

21. காப்பிய விருந்து-103 தொகுப்பாசிரியர்: சாயுபு மரைக் காயர்

(x) வாணி நிலையம்: நைனியப்ப பிள்ளைத் தெரு, புதுச்சேரி. இந்நிலையம் 15-8-1951இல் மாணவர்கள் சிலரின் முயற்சியால் தொடங்கப்பட்டது. விளையாட்டு அரங்கு, நூலகம் என்ற நிலைகளோடு தொடங்கப்பட்ட நிலையம், இரவுப்பள்ளி, தமிழ்மன்றம் இதழ் வெளியீடு, குப்பம்மாள் நினைவுச் சிறார் பள்ளி மூலம் பல வகையில் செயல்பட்டு வருகின்றது.[22] உறுப்பினர்களின் பெரு முயற்சியாலும், புரவலர் சிலரின் பேருதவியாலும், நிலையம் ஒரு நல்ல வளர்ச்சியைப் பெற்றுச் சிறப்புடன் செயல்பட்டு வருகின்றது. புதுவையில் சொந்தக் கட்டடத்தோடு உள்ள ஓரிரு அமைப்புக்களில் இதுவும் ஒன்றாகும்.

''நலமான உடலே நலமான உள்ளத்திற்கு இடமாகும்'' என்ற இவ்வுண்மையை நோக்கமாகக் கொண்ட நிலையம் உடல் நலத்திற்கு மருத்துவப்பிரிவும், விளையாட்டரங்கமும், மனநலத்திற்குக் கல்வி வளர்ச்சி, இலக்கிய நுகர்ச்சி ஆகிய வினைகளை மேற்கொண்டுள்ளது. தமிழ்மன்றத்தின் சார்பில் பல்வேறு சிறந்த இலக்கிய நிகழ்ச்சிகளை நடத்திய வாணி நிலையம் திங்கள் தோறும் முதல் ஞாயிறன்று சிந்தனைக்குழு அமைத்துப் புதுவையில் இலக்கியத் துறையில் ஒரு புதுமையைச் செய்து காட்டியது. இதற்குத் தூண்டுகோலாய் இருந்தவர் திருச்சி கு. விசுவநாதம் அவர்கள். அமைப்பாளர் கவிஞர் கல்லாடன் ஆவார். மேலும் மன்றத்தின் சீரிய வளர்ச்சிக்கும் சிறந்த செயல்பாட்டிற்கும் துணை நிற்போர் டாக்டர் A. புருஷோத்தமன் MBBS, Dch, இராஜு கண்ணன், கோவிந்தராஜன், அரங்கநாதன், வே. பெருமாள், வீ. வரதராசு, எ. கணபதிராம், கவிஞர் கல்லாடன் ஆகியோர் குறிப்பிடத்தகுந்தவர்.

மன்றத்தின் தற்போதைய தலைவர் இராஜுகண்ணன்; செயலர் கோவிந்தராஜன்; தமிழ் மன்றச் செயலர் கவிஞர் கல்லாடன்.

(xi) பாவலர் பண்ணை: மறைமலையடிகள் சாலை, (சுதேசி பஞ்சாலை எதிரில்) புதுச்சேரி 605001. இலக்கணம் பயில வாய்ப்பில்லாமல் பாட்டெழுதும் ஆர்வமுள்ள தமிழ்ப் பாவலர்கட்கு யாப்பிலக்கண அறிவினை ஊட்டும் நோக்கோடு இப்பண்ணை 1970 இல் தொடங்கப்பட்டதாகும். இக்காலத்தில் மலரும்

---

22. வாணி நிலையம் 15-ஆம் ஆண்டு நினைவு விழா மலர்

பாட்டெழுதும் ஆர்வத்தால் பிழையான பாடல்களை எழுத முற்படுகின்றனர். அன்னவர்வர் நிலையை மாற்றல், ஒழுங்கான முறையில் பாட்டெழுதப் பயிற்சியும் அளித்தல் இவ்வமைப்பு உருவாகக் காரணங்களாகும். இவ்வமைப்பு நேரிடையாகவும் அஞ்சல் வழியாகவும் பயிற்சி அளிக்கின்றது. பெருவழக்கில் உள்ள பாவகைகள், சிந்து வகைகள், இசைப்பாக்கள் ஆகியவற்றை நன்கு அறிவுறுத்துகின்றது. பயிற்சியின் பின் தேர்வு வைத்துப் பாவலர் பட்டமும் வழங்குகின்றது. இப்பண்ணையைப் பயன்படுத்திப் பலரும் பாட்டியற்றும் தகுதி பெறுகின்றனர்.

இப்பண்ணையின் முதல்வர் இலக்கணச்சுடர் இரா. திரு, முருகனார்; மேலாளர் வெண்பா வேந்தர் முதுகண்ணனாவார்.

(xii) **சுப்பிரதீபக் கவிராயர் தீந்தமிழ் மன்றம்:** காளத்தீசுவரன் கோவில் வீதி. புதுச்சேரி 605001. இம்மன்றம் தி. பி. 2009 ஆனித் திங்கள் 25 ஆம் நாள் (9-7-78) புரவலர் ந. கோவிந்த சாமி அவர்கள் தலைமை ஏற்க வரலாற்றுக் களஞ்சியம் திருமுடி சேது ராமனார் பெயர் சூட்டப் புலவர் தேவிதாசன் உரையோடு தொடங்கப்பட்டதாகும்.[23] இதன் அமைப்பாளர்கள், தமிழ்த் திருவாளர்கள், ந. சுப்பிரமணியன், மு. சுவாமிநாதன் ஆகியோ ராவர்.

தமிழ்ச் சான்றோரைப் போற்றுதல், அருகிவரும் அரிய இலக்கியங்களையும் அவையில் நிலை நிறுத்தல், இலக்கிய நுகர்ச்சிக்கு அனைவரையும் ஈடுபடுத்தல் இம்மன்றத்தின் நோக்கங்களாகும், இம்மன்றம் சங்க இலக்கியங்கள், பக்தி இலக்கியங்கள், இடைக்கால நவீன இலக்கியங்கள், மறைந்த இலக்கியங்கள் என எல்லா இலக்கிய வகைகளிலும் பாட்டரங்கம், பட்டிமன்றம், உரைமன்றம், சுவைஞர் மன்றம் ஆகியவை அமைத்துத் தமிழின் வளமறியச் செய்து வருகின்றது. திங்கள் தோறும் நான்கு நிகழ்ச்சிகளை நடத்திவந்த இம்மன்றம் மற்ற இலக்கிய அமைப்புக் கட்கும் வழிவிடும் வகையில் தற்போது இரண்டு நிகழ்ச்சிகளை இடைவிடாது தொடர்ந்து நடத்திவருகிறது. எந்தத்தடையையும் பொருட்படுத்தாமல் தொடர்ந்து நிகழ்ச்சிகளைச் செவ்வனே புதுவையில் நடத்தி வரும் ஒரே மன்றம் இதுவேயாகும்.

இம்மன்றம் வெள்ளிவிழா நிகழ்ச்சியில் புலவர் திரு முருகனார்க்கு ''இலக்கணச்சுடர்'' என்னும் பட்டமளித்துப்

23. மன்றப் பொன் விழா மலர்.

பாராட்டியது. 28-2-81 அன்று பொன் நிகழ்ச்சி கண்டு பாவலர் தமிழவேள் அவர்கட்குத் "தீந்தமிழ் ஏந்தல்" என்னும் பட்டமளித்துப் பாராட்டியுள்ளது. 1981 இல் மட்டும் பல்வேறு தலைப்புக்களில், பல்வேறு அறிஞர்களைக் கொண்டு இருபதுக்கும் மேற்பட்ட நிகழ்ச்சிகளை நடத்தி ஒப்பற்ற தமிழ்த் தொண்டு புரிந்துள்ளது. இம்மன்றம் கண்டுள்ள இலக்கிய நிகழ்ச்சிகள் வள்ளுவர் விழா, புறநானூற்றில் கண்ணகி, புறநானூற்றில் பெயர் காணாப் புகழ்மணிகள், தலையாலங்கானத்துச் செரு வென்ற பாண்டியன் நெடுஞ்செழியன், மாந்தரஞ்சேரல் இரும்பொறை, பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, இலவந்திகைப் பள்ளித்துஞ்சிய நன்மாறன், வாணிதாசனார் விழா, உ. வே. சா. விழா, பாரதிவிழா, புகழ்மிகு தமிழ்ப்பாவையர் விழா ஆகியனவாம்.

இம்மன்றத்தின் தலைவர் திரு ந. சுப்பிரமணியன் செயலர் மு. சுவாமிநாதன், இவர்கள் தம்மை முழுமையாக இலக்கியப் பணிக்காகவே ஈடுபடுத்திக் கொண்டுள்ளனர். இம்மன்ற வளர்ச்சிக்கு சிவ. கண்ணப்பா, சண்முகசுந்தரம் இரா. சிங்காரவேலன், பாவலர் இலக்கியன், கவிஞர் கல்லாடன், பாவலர் சு. வேல் முருகன், பழனி ஆகியோர் குறிப்பிடத்தக்கவர்கள்.

(xiii) இலக்கியச் சோலை:: சேலியமேடு, புதுவை மாநிலம், கவிஞரேறு வாணிதாசனார் வாழ்ந்த சிற்றூரே சேலியமேடு, கம்பன் வீட்டுக் கட்டுத்தறியும் கவிபாடும் என்பது போல், சேலியமேட்டுச் சிறு பையன் கூடத் தீங்கவி செய்வான். இஃது அம் மண்ணின் சிறப்பாகும். அங்கே தோற்றுவிக்கப்பட்டதே இத் தீந்தமிழ்ச் சோலை. இதன் அமைப்பாளர் புலவர் கி. அரியரன் ஆவார்.

சிற்றூர்ப் புறங்களில் தமிழின் மேன்மையைக் காட்டித் தமிழுணர்வு ஊட்டுதல் இதன் நோக்கமாகும். திங்கள் தோறும் ஒவ்வொரு சிற்றூரிலும் இலக்கிய நிகழ்ச்சிகளை அமைத்து அந்தந்தப் பகுதியில் குடத்துள் விளக்காக இருக்கும் தமிழுணர்வு நெஞ்சங்களைக் குன்றிலிட்ட விளக்காக மாற்றும் அரிய பணியினை மேற்கொண்டுள்ளது. ஏறக்குறைய புதுவையின் எல்லா வட்டங்களிலும் நிகழ்ச்சிகளை நடத்தி விறலும் திறலும் வியன் புகழும் பெற்றுள்ளது. பெற்று வருகின்றது.

(xiv) மறைமலையடிகள் மன்றம்: பாகூர், புதுவைமாநிலம் 607402. இம்மன்றம் தி.பி. 2007இல் சுறவத்திங்கள் பொங்கல்நாளில் (15-1-76) தொடங்கப்பட்டதாகும். தனித் தமிழ் உணர்வும், தமிழினவுணர்வும், தமிழ் நாட்டுணர்வும் தழைத்தோங்கப் பாடு படுவதே இம்மன்றத்தின் இன்றியமையாத நோக்கமாகும்.

பொங்கலின்போதும், வேனிலின் போதும் சிறப்பாக விழா வைத்துத் தம் கொள்கையை-நோக்கை இனிதே செயல்படுத்தி வருகின்றது. மற்றும் பெரியார் பிறந்தநாள் விழா, மொழிஞாயிறு பாவாணர் நினைவு விழா, பாரதி விழா ஆகிய நிகழ்ச்சிகளையும் நடத்துகின்றது. இம்மன்றத் தலைவர் புலவர்,சி. வெற்றிவேந்தன், செயலர், இரா. மலையமான் ஆவர்.

(xv) இராம்ஜி இளைஞர் நற்பணி மன்றம்: மடுகரை, புதுவை மாநிலம் 605120. இம்மன்றம் 22-12-1979இல் தொடங்கப்பட்டது. சமுதாயநற்பணி, அறியாமை இருளைப் போக்குதல், ஒற்றுமை, ஒழுங்கு, சேவை உணர்வை ஊட்டுதல் ஆகியவை இம்மன்றத்தின் நோக்கங்களாகும்.

''சிற்றூர் திருத்தமுற்றால்தான் நாடு திருத்தமுறும்'' என்ற நோக்கில் சிற்றூர் மேம்பாட்டிற்குப் பாடுபட்டு வருகின்றனர் இம் மன்றத்தார். அதோடு இலக்கியப் பணியும் ஆற்றிவருகின்றனர். சிறப்பாகத் தேர்ச்சியுற்ற மாணவர்க்குப் பரிசளிப்பும், அண்ணல் அம்பேத்கார் விழாவையும் நிகழ்த்தியுள்ளது. உடலோம்புந் திறனை வளர்க்க உடற்பயிற்சி, விளையாட்டுப் போட்டி ஆகியவை நடத்தி வருகின்றது.

இம்மன்றத் தலைவர் ஏ. ஜெயராமன்; செயலர் பா. ஐயம் பெருமாள்; பொருளாளர் சு. இலட்சுமணன்.

(xvi) பேராலய இளைஞர் அணி: இம்மன்றம் 1-8-1980-இல் புதுச்சேரியில் தொடங்கப்பட்டது. இது கிறித்துவ ஆலயத்தைச் சார்ந்ததாயினும். ஏலாமக்கட்கு இனிதுதவல், வல்லுடல் பெற உடற்பயிற்சி செயல், இன்றமிழ் வளர்ச்சிக்கு இலக்கியப் பணி புரிதல் ஆகிய செயற்பாடுகளை முறையே நிகழ்த்தி வருகின்றது.

இவ்வணி சமூகப்பணியேயன்றி, அவ்வப்போது இலக்கிய நிகழ்ச்சிகள் நடத்துதல், கல்விக் கண்காட்சி, நூல்வெளியீடு ஆகியவையும் செய்துள்ளது.

இவ்வணியின் தலைவர் சாலமோன் அடிகளார் ஆவார்.

(xvii) பாவாணர் பயிற்றகம்: கன்னியக்கோயில், பாகூர் வட்டம், புதுவை 607402.

''தமிழயரத் தாழ்ந்தான் தமிழன்; அவனே
தமிழுயரத் தானுயர்வான் தான்''

என்ற மொழிஞாயிறு பாவாணர் அவர்களின் குறள்வழித் தமிழை உயர்த்தி அதன் வழித்தமிழனை உயர்த்தவேண்டும் என்ற உணர்வோடு இவ்வமைப்புப் பாவலர் கதிர்முத்தையன் அவர்களால் கி. பி. 2007 சுறவம் 25ஆம் நாள் (8-2-76) தொடங்கப் பட்டது.

சிற்றூர்ப்பகுதியில் தனித் தமிழ் உணர்வை ஊட்டுதல், இலக்கிய விழா எடுத்தல், மாணவர்க்கு இலக்கிய உணர்வை ஊட்டல், பரிசளித்தல் ஆகிய செயற்பாடுகளில் ஈடுபட்டுள்ளது.

இப்பயிற்றகம் தென்னார்க்காடு மாவட்ட அளவில் பாவாணர் நினைவுப் பரிசு நிகழ்ச்சி நடத்திப் பரிசுகள் வழங்கியுள்ளது. கடலூர்த்துறைமுக நகரில் திருக்குறள்முப்பால் விழாவினை மூன்று நாட்கள் சிறப்பாக நடத்தியுள்ளது. பாரதியார் நூற்றாண்டு விழாவையும் பாகூர் வட்டத்தில் நடத்தியுள்ளது.

இப்பயிற்றகத்தின் அமைப்பாளர் புலவர் கதிர்முத்தையன், தலைவர் - புலவர் வ. கலியபெருமாள்; சிறப்புத் தலைவர் திருக்குறள் பெருமாள்; இயக்குநர்-புலவர் கி. அரியரன், செயலர் நா. கோதண்டபாணியாவார்.

(xviii) இளங்கோ இளைஞர் மன்றம்: தவளக்குப்பம், புதுச்சேரி 605007. இம்மன்றம் 16-12-1957-இல் தொடங்கப் பட்டது. மொழிவளர்ச்சி, முதியோர் கல்வி, சிற்றூர்மக்களிடை நூல்களைப் படிக்கும் வழக்கத்தை நூலக வாயிலாக உண்டு பண்ணுதல், உடற்பயிற்சி, விளையாட்டுப்பயிற்சி, அவ்வப்போது இலக்கிய விழா நடத்தல் ஆகிய செயற்பாடுகளைக் கொண்டுள்ளது.

(xix) ஜோர்ஜ் கிளேமான் சோவின் திருவள்ளுவர் மன்றம். நெல்லித்தோப்பு, புதுச்சேரி - 605005. இம்மன்றம் 12-6-1970இல் தொடங்கப்பட்டது. உடற்கலை, அறிவுக்கலை வளர்த்தல் பொதுப்பணிபுரிதல் ஆகியவை இதன் நோக்கங்களாம். இயல் இசை நாடகம் ஆகியமுத்துறையிலும்த ன் முத்திரையைப் பதித்துள்ளது, கவிஞர் பொன்னம்பலம் அவர்கள் முயற்சியால், உடைந்த உள்ளம்

ஞானசௌந்தரி, ஆகிய புகழ்பெற்ற நாடகங்களை நடத்தியுள்ளது உடல் உறுதி, ஒளிவிளக்கு (ஆசிரியர் மகிமைதாசன்) ஆகிய நூல்களை வெளியிட்டுள்ளது.

இம்மன்றம் சொந்தக் கட்டடத்தில் இயங்கி வருகிறது. ஆரம்பப்பள்ளி ஒன்றையும், நூலகம் ஒன்றையும் நடத்தி வருகிறது. அவ்வப்போது இலக்கிய நிகழ்ச்சிகளை, சிந்தனை மேடைகளை நடத்தி வருகின்றது. இதன் தலைவர் கி. மகிமைதாசன்; துணைத் தலைவர், இராஜிகண்ணன்; பொதுச் செயலர் புலவர் இரா. பன்னீர்ச்செல்வம்.

(xx) இலக்கணச் செம்மல் சுந்தரகுமரனார் நினைவுக் குழு:

புதுவையில் தலைசிறந்த இலக்கணப் புலவராகத்திகழ்ந்தவர் இலக்கணச் செம்மல் சுந்தரகுமரனார் ஆவார். அவரின் முயற்சி யால் புதுவையில் இலக்கண உணர்வு பலரிடத்தும் சிறந்துள்ளது. அவர் நினைவாகத் தொடங்கப் பெற்றதே ''இலக்கணச் செம்மல் சுந்தரகுமரனார் நினைவுக்குழுவாம். இக்குழு செப்டம்பர்த்திங்கள் 1980இல் இலக்கண அறிவைப்போற்றலும் காத்தலும் வளர்த்த லும் என்ற நிலைகளில் செயல்பட்டு வருகின்றது. ஆண்டுதோறும் இலக்கணச் செம்மல் சுந்தரகுமரனார் நினைவாக இலககணச் சொற்பொழிவுகள் நிகழ்த்துகின்றது. அதுவன்றி திங்கள்தோறும் இலக்கணச் சொற்பொழிவும், இலக்கணத்தில் ஏற்படும் ஐயங் களைதலும், கலந்துரையாடலும் நிகழ்ந்து வருகின்றன.

முதலெழுத்து, மயக்கம்-ஒரு புதிய பார்வை, இன்றைய மாணவர்க்கு இலக்கணம் கசப்பதேன்? குறட்போலி, கம்பராமா யணத்தில் கட்டளைக் கலித்துறை இடம் பெறாமை ஏன்? பொருளிலக்கணம் தேவையா? ஐ-அய்யோ! சுட்டும் வினாவும் எழுத்துக்களா? சொற்களா? குற்றுகரப்பாகுபாடு தேவையா? இலைமறைகனிகள் ஆகிய புதுமையான தலைப்புக்களில் ஆய் வுரைகள் நிகழ்த்தியுள்ளது. புதுவை மாநிலத்தில் சிறப்பாக மதிப் பெண் பெறும் இரு மாணவர்க்கு ஆண்டுதோறும் பரிசளித்தல் நிகழ்ச்சியும் நடத்தி வருகின்றது.

இதன் அமைப்பாளர், பொதுச்செயலர் இலக்கணச் சுடர் இரா. திருமுருகனார் ஆவார். மற்றும் இக்குழுவின் பொறுப் பாளர்கள் புலவர்கள் க. சொக்கம்மாள், க. மீனாட்சி, இருதய தெரேசு, இலக்கியன் ஆகியோராவர்.

(xxi) உலகத் தமிழ்ப் பண்பாட்டுக் கழகம்: இக்கழகம் இரண்டாண்டுகளுக்கு முன் தொடங்கப்பட்டது. இதன் அமைப்பாளர்கள்: ஆசிரியர் வீ. மதுரகவி, வீ. சு. கரிகாலன் ஆகியோர். அயல் நாடுகளில் உள்ள தமிழ்ப் பண்பாட்டு இயக்கங்களோடு நெருங்கிய தொடர்பு பூண்டு உலகம் முழுவதும் தமிழின் மாண்பும் தமிழ்ப்பண்பாடும் பரவிச் செழிக்கப் பாடுபடுதல் இதன் இன்றியமையாத நோக்கமாகும். இது உலகத்தமிழர் மறுமலர்ச்சி இயக்கத்தோடும் தொடர்புகொண்டுள்ளது. இலங்கைத் தமிழர் இன்னல் தீர்க்க முனைப்பாக எழுந்து செயல்பட்டுவருகின்றது. இலங்கை அமிர்தலிங்கனாரையும் அவர் துணைவியாரையும் வரவழைத்து இலங்கை மக்கள் இன்னல்களை நம் கண் முன் காட்டிச்செல்ல உணர்வு மயமான பெருங் கூட்டத்தை ஏற்பாடு செய்து புகழ் பெற்றது. உணர்ச்சிப் பாவலர் காசி. ஆனந்தன் அவர்களையும் அழைத்துப் பாட்டரங்கும் நடத்தியுள்ளது. 1981 மேத்திங்கள் தமிழறிஞர்களான, சங்க இலக்கியச் சான்றோர் பி. எஸ். சாமி, இலக்கணச்சுடர் இரா. திருமுருகனார் ஆகியவர்க்குப் பாராட்டு விழாவெடுத்து மலர் ஒன்றையும் சிறப்பாக வெளியிட்டது.

(xxii) புதுவை சமரச சுத்த சன்மார்க்க சங்கம்: புதுச்சேரி: உலகில் பல்வேறு பாகங்களில் உள்ள மற்றைய சன்மார்க்கச் சங்கங்கள் போலவே, இவ்வமைப்பும் வள்ளலார் பணியைத் தொடர்ந்து செய்து வருகின்றது; அவர்தம் புகழைப் பரப்புகின்றது. கடந்த ஐம்பது ஆண்டுகளாகச் செயல்பட்டு வரும் இம் மன்றம் தற்போது மிகுந்த பொலிவோடு புதிய கட்டடத்தில் பீடு நடைபோட்டு வருகின்றது கிழமைதோறும் அறிஞர்களைக் கூட்டி வள்ளலார் தம் இலக்கிய மாண்பையும் அவர் தம் சமுதாய சமயப் பணிகளையும் விளக்கி வருகின்றது. இதன் இன்றியமையாத பொறுப்பாளர்கள் திரு. ஆறுமுக முதலியார் அவர்களும் வழக்குரைஞர் திரு. இர. நடராசன் அவர்களும் ஆவர்.

(xxiii) புதுவை வரலாற்றுச் சங்கம்: ரோமன் ரோலண்டு வீதி, புதுச்சேரி 605001. வரலாறின்றி இலக்கியமில்லை; இலக்கியமின்றி வரலாறில்லை. வரலாறும் இலக்கியமும் ஒன்றோடொன்றைச் சார்ந்தது. பின்னிப்பிணைந்தது என்பர் அறிஞர்.[24] இக்கூற்றினுக்கொப்ப இச்சங்கம் வரலாற்றினை அடிப்படையாய்க் கொண்டு அமைந்திருப்பினும் சிறந்த இலக்கியப் பணியும் புரிந்து வருகின்றது.

24. Prof. Mme. Adeceam, College Francais, Pondichery

இச்சங்கம் 'Societe del 'Histoire del' Etat de Pondichery'[25] (புதுவை மாநில வரலாற்றுச் சங்கம்) என்னும் பெயரில் 1911ஆம் ஆண்டில், வரலாற்றறிஞரும் இம்மாநில ஆளுநருமாய் இருந்த ஆல்பிரட் மார்த்தினோ என்பவரால் தொடங்கப்பட்டது.

இச்சங்கத்தோடு ஒன்றியிருந்த பேரறிஞர் கபிரியேல் முவோ துய்ப்ரேய் (Gabriel Jouveau Dubreil)[26] பிரஞ்சு நாட்டுப் பேராசிரியர், பிரஞ்சுக் கல்லூரியில் பணிபுரிந்தவர். இவர் தாம் பல்லவர் வரலாற்றை உலகத்தின் கவனத்திற்குக் கொண்டு வந்தவராவார். முட்புதர்களுக்கிடையே மறைந்துகிடந்த மாமல்லபுரத்தை உலகறியச் செய்தவராவார் ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முற்பட்ட சித்தன்னவாயில், காஞ்சிபுரம் வண்ண ஓவியங்களின் மேம்பாட்டைக் கண்டுபிடித்தவரும் இவரே. இவர் தென்னிந்திய வரலாற்றுக்கு ஒளிவிளக்காய்த் திகழும் ஏராளமான நூல்களை வெளியிட்டுப் புதுவை வரலாற்றுச் சங்கத்திற்கு அழியாப்புகழ் சேர்த்துள்ளார்.

இச்சங்கம் "Revue Historique"—வரலாற்றுத் தொகுப்பு என்னும் இதழை வெளியிட்டுள்ளது. இவ்விதழ்கள் உலகமெங்கும் குறிப்பாக ஐரோப்பாவில் தென்னிந்தியாவின் பழமை வாய்ந்த வரலாற்றைப் பறைசாற்றின. வெளிநாட்டின் வரலாற்றை ஆராய்ந்தறியத் தூண்டுகோலாய் அமைந்தன.

இத்துணைச் சிறப்பு வாய்ந்த இச்சங்கம் செயலற்றது. வரலாறே உருக்கொண்டெழுந்த செம்மல் திருமுடி சேதுராமன் அவர்கள் இச்சங்கத்திற்குத் தக்க சமயத்தில் உணர்வூட்டிப் பொலியச் செய்தார். 1971 முதல் நல்ல முறையில் செயல்படத் தொடங்கியது. திருமுடி சேதுராமன் அவர்களைத் தலைவராகவும் புதுவை அரசின் துணைச்செயலர் சிரில்அந்தோணி அவர்களைச் செயலாளராகவும் கொணடு இச்சங்கம் நீண்டநெடும் வரலாற்று நோக்குடன் நல்ல பல திட்டங்களைத் தீட்டியது.[27]

தமிழ், ஆங்கிலம், பிரஞ்சு ஆகிய மொழிகளின்[28] நூல்களை வெளியிடல், வரலாறு, பண்பாடு, இலக்கியம், கலை, கோயில்

25. புதுவை வரலாற்றுச் சங்கக் குறிப்பு.
26. வரலாற்றுக் களஞ்சியம் பக். 20.
27. ஷை பக் 21
28. புதுவை வரலாற்றுச் சங்கக் குறிப்புகள்.

கல்வெட்டு, தொல்பொருள் ஆய்வு, புதிய கண்டுபிடிப்பு, ஆகிய செயற்பாட்டில் இச்சங்கம் ஈடுபட்டுள்ளது. ''வரலாற்றில் புதுவை, ஆசிரியர் முவோதுய்ப்ரேய் (மொழியாக்கம் இரா.தேசிகம்பிள்ளை) ''கல்வெட்டுக்களில் புதுவைப் பகுதிகள்'' (ஆசிரியர் புலவர் சு. குப்புசாமி) ஆகிய அரிய நூல்களையும் வெளியிட்டுள்ளது. ''வரலாற்றுச் சுவடுகள்'' என்ற ஆய்வுத் தொகுப்பு நூல் ஒன்றினையும் வெளியிட்டுள்ளது. அண்மையில் மேல்சாத்த மங்கலம் என்னும் இடத்தில் அகழ்வாய்வு செய்து அவ்விடத்து வரலாற்று இன்றியமையாமையை அரசுக்கு உணர்த்தியுள்ளது. இதேபோல் விழுப்புரம் அருகில் கீழ்வாலை என்னும் ஊரில் கற்பாறைகளில் உள்ள பழைமையான ஓவியங்களைக் கண்டுபிடித்துத் தமிழக அரசுக்குத் தெரிவித்துள்ளது.

இச்சங்கம் ஒரு நூலகத்தையும் கொண்டுள்ளது. இதில் மிகப் பழமையான நூல்கள், இதழ்கள், ஆவணங்கள், தொல்பொருள்கள் உள்ளன. ஆய்வாளர்களுக்குப் பெரிதும்பயன்படுவன. இச்சங்கத்தின் தற்போதைய தலைவர் பி எல். சாமி, செயலர் இராமசாமி; சங்க இயக்குநர் - பதிப்பாசிரியர் சிரில்அந்தோணி ஆவார்.

(xxiv) **பிரஞ்சு இந்தியக் கலைக் கழகம்:-** பிரஞ்சு நாட்டு அரசு இந்திய இயலை ஆராயும் பொருட்டுப் புதுவையில் ஒரு கலைக் கழகத்தை நிறுவியது.[29] பிரஞ்சு நாட்டுப் பேராசிரியர்கள் ஜான் பிலியோசா (Jean Fillioyat) முவோதுய்ப்ரேய், P.Z. பட்டாபிராமன், திருமுடி சேதுராமன் ஆகியோர் 1955 இல் இக்கலைக் கழகத்தை உருவாக்கினார்கள்.

பிரஞ்சுக்காரர்கள் புதுச்சேரியை விட்டு அகன்ற பின்பும் அவர்கட்கும் தமிழர்கட்கும் உள்ள உறவைப் புலப்படுத்தும் ஓர் அமைப்பாக,[30] ஒரு பாலமாகத் திகழ்கிறது.

இக்கலைக் கழகம்,[31] இந்திய-தென்கிழக்கு ஆசிய-தூரக் கிழக்கு நாடுகளின் நாகரிகங்களை வரலாற்று அடிப்படையிலும், தற்போதுள்ள வளர்ச்சி நிலைகளிலும் ஆய்வு செய்யும் பணியில் ஈடுபட்டுள்ளது. இதன் அறிவியல் பிரிவு, இயற்கை வளங்களையும்

---

29. வரலாற்றுக் களஞ்சியம் பக் 22
30. புதுவை மாநிலத் தமிழ் வளர்ச்சி பக் 1)4
31. A French Approach to Tamil Studies, by Prof. Francois Gros, P. 9

அவை அமைந்துள்ள சூழல்களையும், அவற்றின் பயன்களையும் ஆய்வு செய்கின்றது. தமிழ் இலக்கிய-பண்பாட்டு வரலாறு பற்றிய ஆய்வு, இக்கழகத்தின் ஒரு பிரிவே. எனினும் மற்றத் துறைகளும் தமிழ்ப் பண்பாட்டை உலகத்தின் முன் கொணரவும், உலக அரங்கில் பரவச் செய்யவும் துணை நிற்கின்றன. தமிழே அன்றி வட மொழி ஆய்வும் மேற் கொள்ளப்படுகின்றது.

இந்நாளில் இக்கழகம் உலகெங்கும் புகழ்பெற்று விளங்குகின்றது. ''தேமதுரத் தமிழோசையை உலகெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும்'' என்ற பாரதியின் ஆணையைப் பின்பற்றிப் பல அரிய தமிழ் நூல்களை பிரஞ்சு மொழியில் பெயர்த்துள்ளது. அதிலும் பிரஞ்சுக்காரர்கள் இப்பணியைச் செய்கிறார்களென்றால் தமிழின் மாண்பும், தமிழ் மாட்டு அவர்கள் கொண்டுள்ள காதலும் நன்கு புலனாகின்றன. பேராசிரியர் குரோ (F. Gros) அவர்கள் பரிபாடலையும், பிலியோசா (J. Filliozat) திருப்பாவை, திருமுருகாற்றுப்படை ஆகிய இலக்கியங்களையும் பிரஞ்சு மொழியில் பெயர்த்துள்ளார். காரைக்காலம் மையார் படைப்புக்கள், காரவேலன் என்பவரால் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. இவரே பாரதியார் பாடல்கள் சிலவற்றையும் பாவேந்தரின் ''கடற்மேற் குமிழ்கள்'' என்ற நூலையும் பிரஞ்சு மொழியில் பெயர்த்துள்ளார். மொழியாக்கச் செம்மல், இரா. தேசிகம்பிள்ளை அவர்களும் தமிழிலிருந்து பிரஞ்சு மொழியிலும், பிரஞ்சு மொழியிலிருந்து தமிழிலும் பல மொழி பெயர்ப்புக்கள் செய்துள்ளனர். தி.வே. கோபாலய்யர் பொறுப்பில் இலக்கண இலக்கியம், தொல்காப்பியம் முதலியன வெளியிடப்பட்டுள்ளன. இவர் சங்க இலக்கியச் சொல்லடைவும் தயாரித்து வருகிறார்.[32]

கல்வெட்டு ஆய்விற்கும் இக்கழகம் துணைபுரிந்து வருகின்றது. தமிழ் மொழியே அன்றி வடமொழி உட்படப் பல தென்னிந்திய மொழிகளையும், இக்கழகம் ஆய்வு செய்து வருகின்றது[33].

அரியபல நூல்களைக் கொண்ட மிகப்பெரிய நூல்நிலையம் இங்கே உண்டு. ஆயிரக்கணக்கான ஓலைச் சுவடிகள் இங்குச் சேர்த்துவைக்கப்பட்டுள்ளன. இலட்சக் கணக்கான நிறற் படங்கள் உண்டு. நூற்றுக்கணக்கான அரிய ஆய்வு நூல்களையும், இக்

32. A Freneh Approach to Tamil Studies by Pro, Francois Gros. பக் 11.
33. புதுவை மாநிலத் தமிழ் வளர்ச்சி 194.

கழகம் வெளியிட்டுள்ளது இதே போல் ஆகம வெளியீடுகள் பலவும் இதன் அரிய பணியாகும். உலகின் பல்வேறு திக்கிலிருந்தும் ஆய்வாளர்கள் இக்கழகத்தை நாடிய வண்ணம் உள்ளனர்.[34] இப் பிரஞ்சு இந்தியப் பல்கலைக் கழகம் உண்மையில் தமிழ் மாண்பிற்கும் வளர்ச்சிக்கும், புதுவையும் பிரஞ்சு அரசும் அளித்த ஒரு பெருங் கொடையாகும்.

## 2. காரைக்கால் பகுதி

புதுவையைப் போலவே காரைக்கால் பகுதியும் பல விழுமிய அமைப்புக்களைக் கொண்டு இலக்கியப்பணி, மொழி காக்கும்பணி ஆகியவற்றில் ஈடுபட்டுள்ளது. அவற்றுள் சிலவற்றைப் பற்றிப் பின்னே காணலாம்.

(i) பூஞ்சோலை இலக்கிய மன்றம்: 53, மஸ்தான் பள்ளி வீதி, காரைக்கால் 609602.

இம்மன்றம் காரை ஏ.ஏ. அலீம் அவர்களால் 1967 இல் தொடங்கப்பட்டது. சாதிமத வேறுபாடின்றி அனைவரையும் இணைத்துத் தமிழ்ப் பணி புரிதலே இதன் குறிக்கோள். அத்தோடு அறிஞர் பெருமக்களையும் சான்றோரையும் போற்றி வருகின்றது. ''பூஞ்சோலை''[35] என்னும் தனித்தமிழ் இதழையும் இம்மன்றம் நடத்தியுள்ளது கவியரசு கண்ணதாசன் நினைவையும், பாவேந்தர் பாரதிதாசன் நினைவையும் கொண்டாடியுள்ளது. ''காரைக்கால் வழிகாட்டி'' என்னும் நூலையும் வெளியிட்டுள்ளது. இலங்கை யாழ்ப்பாண நூலகத்திற்கு 500 தமிழ்நூல்களை அனுப்பியுள்ளது. இம்மன்றம் 'காரைக்கால் புனிதத் தலங்கள்' என்னும் நூலையும் வெளியிட உள்ளது. இம்மன்றச் செயலர் சி. கணேசன் ஆவார்.

(ii) சமுதாயப் பணி மையம்: காரைக்கால், இவ்வமைப்பு சி. கணேசன் அவர்களால் 1980 இல் தொடங்கப் பட்டதாகும். ''எங்குந்தமிழ், எதிலுந் தமிழ்'' என முழங்குதல், பெயர்ப் பலகைகளைத் தமிழில் எழுதச்செய்தல், பாரதியார் நூற்றாண்டு விழாக் கொண்டாட்டம், கண்ணதாசன் நினைவு விழாக் காணல் ஆகிய பணிகளை இம்மையம் செய்துள்ளது இதன் தலைவர் அ. சானகிராமன்; செயலர் சி. கணேசன்.

34. வரலாற்றுக் களஞ்சியம், பக் 24.
35. பூஞ்சோலைப் பதிப்பகம், காரைக்கால், காரை ஏ, ஏ, அலீம்

(iii) இளைஞர் முத்தமிழ்ச் சங்கம்: 276, பாரதியார் வீதி, காரைக்கால் 609602.

தமிழிலக்கியப்பணி, தமிழுணர்வை வளர்த்தல், எங்கும் தமிழ் ஆட்சி செய்யச்செயற்படுதல் ஆகிய அரிய நோக்கங்களைக் கொண்டு விளங்குகிறது இச்சங்கம். இது 15-1-78 இல் தொடங்கப் பட்டதாகும். வளரும் சமுதாயம் நீதிநெறிகளைப் பேணவும், தமிழ் மாண்பை மதிக்கவும் பாடுபட்டு வருகின்றது. இச்சங்கம் ஆறு பாட்டரங்குகளையும் நான்கு பட்டிமன்றங்களையும் நடத்தி தமிழ் ஆர்வலர்களை அறிமுகப்படுத்தியுள்ளது. நாட்டுக் குழைத்த நல்லோர்களின் வரலாறுகளை நாடகமாக்கி மக்களுக்கு நாட் டுணர்வைத் தூண்டி வருகின்றது. இன்னிசையையும் பரப்பி இசைத் தமிழையும் வளர்க்கின்றது.

இம்மன்றத்தின் தலைவர் வை. முருகை ராசேந்திரன், செயலர் சிவா. மனோகரன், அமைப்பாளர் கோ. ஆனந்த கிருஷ்ணன்.

(iv) மற்ற அமைப்புக்கள்: அஞ்சுமன் இஸ்லாமியச் சங்கம், காயிதே மில்லத் மன்றம், மஸ்தானியா சங்கம், முஸ்லிம் வாலிபர் சங்கம் (திருமலைராயன் பட்டினம்), இசுலாமிய இளைஞர் சங்கம், (அம்பகரத்தூர்) ஆகியவை முஸ்லீம் இலக்கியத்துடன் தமிழ் இலக் கியத்திற்கும் பணிபுரிந்து வருகின்றது. தவிர, நவம் இளைஞர் சங்கம், தலத்தெரு பாரதிமன்றம், டாக்டர் அம்பேத்கார் மன்றம், காரைத் தமிழ்ப் பேரவை ஆகியவையும் காரைக்கால் பகுதியில் அரிய தமிழ்ப் பணிபுரிந்து வருகின்றன.

## முடிவுரை

புதுவை, காரைப் பகுதிகளில் இன்னும் எண்ணற்ற இலக்கிய அமைப்புக்கள், பொழுது போக்கு மன்றங்கள், கல்லூரிகளில் இயங்கும் தமிழ்ப் பேரவைகள், பள்ளிகளில் இயங்கும் தமிழ் மன்றங்கள் ஆகியவையும் சிறந்த முறையில் ஆங்காங்குள்ள சிற்றூர்களில் தமிழ்ப்பணி புரிந்து வருகின்றன. விரிவஞ்சி அவற்றின் விளக்கங்கள் விடுக்கப்படுகின்றன. பல அமைப்புக்கள் மிகச் சிறந்த பணிகளைச் செய்து நிலைத்த புகழுடன் விளங்கு கின்றன.

இவ்விலக்கிய அமைப்புக்களின் பயனால் மொழி வளர்ச்சி வான்போல உயர்ந்துள்ளது. விழிப்புணர்ச்சி சிறந்துள்ளது.

இலக்கியத் துறையில் புதிய புதிய ஆக்கங்கள் எழுந்துள்ளன. பாட்டரங்கம், பட்டிமன்றம், வழக்காடு மன்றம், சிந்தனை மேடை, சொல்லாய்வு மன்றங்கள், இலக்கண ஆய்வுகள், இலக்கிய இன்பம், வாழ்க்கைக்கு வழி, நூற்கள், மலர்கள் வெளியிடுதல் முதலிய தமிழ் வளர்ச்சிப் பணிகள் மலர்ந்துள்ளன.

மற்றைய அமைப்புக்கள் சங்கங்கள் போலவே இலக்கிய அமைப்புக்களும், காலத்தின் நிலை, ஆர்வலர்களின் ஊக்கம், மக்களின் எழுச்சி, மொழியுணர்வு ஆகியவற்றைப் பொறுத்து மலர்ந்து செயல்பட்டு வருகின்றன. ஆயின் தனிமனித வளர்ச்சி, வீழ்ச்சி ஆகியவை போல இலக்கிய அமைப்புக்களும், வளர்ச்சியும் வீழ்ச்சியும் கண்டு வருகின்றன.

அமைப்புக்களின் நலிவிற்கும் வீழ்ச்சிக்கும் பல்வேறு காரணங்கள் உள்ளன. பொதுமக்கள் ஆர்வம் குன்றுதல், அமைப்பினை நடத்திச் செல்வோர் பொறுப்புக் குறைவு, அல்லது அவர்க்கு ஒத்துழைப்பின்மை, குறிப்பிட்டவர் சிலரே முழுச்சுமையையும் ஏற்றுத் தளர்வுறுதல், ஆர்வலர் சிலரின் மறைவிற்குப் பின் அவர்கள் பணி தொடராமை, இப்படிப் பல்வேறு தாக்குதல்களால் அமைப்புக்கள் வளர்ந்தும், செயலிழந்தும், வீழ்ந்தும் போக நேரிடுகின்றன. அதே சமயம் புதிய அமைப்புக்களும் தோன்றிய வண்ணமுள்ளன. ஆக, தமிழ்ப் பணியும் ஏதோ ஒரு வகையில் குன்றாமல் தொடர்ந்து வருவதும் கண்கூடாம்.

பொதுவாக இலக்கிய அமைப்புக்களின் தமிழ்ச் சங்கங்களின் அடிப்படை நோக்கங்களை வரையறை செய்வோமானால், தாய்மொழியாம் தமிழைப் போற்றுதல், அதனை வளர்த்தல், எங்குந் தமிழ், எதிலும் தமிழ் என்ற நிலையை உருவாக்குதல், இலக்கியம் வளர்க்கும் ஆர்வத்தைத் தூண்டுதல், யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என அனைவரையும் தமிழின்பம் காண வைத்தல் சமுதாயப் போக்கினையும் இலக்கிய வழிச் சரிசெய்ய முயலுதல் ஆகிய அடிப்படைக் கூறுகளைக் காணலாம். ஆனால் இவ்வடிப்படைக் கூறுகள் பல்வேறு முறைகளில் செயல்பட்டு வருகின்றன. எல்லா அமைப்புக்களின் ஒருமித்த குரலாக, இந்நோக்கங்கள் எழுமாயின் அவை விரைவில் நிறைவேறுதல் திண்ணம். இதற்கு ஒரு கூட்டமைப்புத் தேவை. உண்மையில் புதுவைத் தமிழ்க் காவற்குழு என்பது பல தமிழ் இலக்கிய அமைப்புக்களின் கூட்டமைப்பு. சிதறிக் கிடக்கும் அமைப்புக்களை ஒன்று

படுத்தி ஒரு கூட்டமைப்பாக உருவாக்கிட முனைந்ததுதான். ஆனால் அதுவும் மற்றைய அமைப்புக்கள் போல் தனிஅமைப்பாக மாறும் நிலை ஏற்படுகின்றது. என்னதான் தனித்தனி அமைப் புக்களின் குரலுக்கு அரசு செவிசாய்த்தாலும், அது எதிர்பார்க்கும் விளைவைத் தரவில்லை தாய்மொழிக்குரிய இடம், அரசுத் துறைகளில் தமிழைப் பயன்படுத்தல், பள்ளி, கல்லூரிகளில் தமிழ், வணிக நிறுவனச் செயல்களில் தமிழ் போன்ற நிலைகளில் அரசாணைகள் இருந்தும் நடைமுறையில் இல்லை; இந்நிலையில் தமிழ், தமிழ் வளர்ச்சி, எங்குந் தமிழ், எதிலும் தமிழ், என்ற அடிப் படைக் கொள்கைகளுக்காகவாவது தற்போதுள்ள இணைமன்றங் களேனும், (Sister Association) ஒன்றுசேர வேண்டும். தற்போ துள்ள மன்றங்களின் எண்ணிக்கை குறைந்து செயற்பாடுகளின் விரிவும் வலிவும் பெருகவேண்டும். இது நடைமுறைப்பட்டால் தமிழுணர்வு வெல்வது உறுதி. சிறந்த எழுத்தாளர்கள் தகுதி வாய்ந்த படைப்பாளிகள் தம் எழுத்துக்களை வெளிக்கொணர முடியாமல் உள்ளனர். மன்றங்கள் இவ்வகையில் தம் செயற் பாட்டை விரிவாக்கிப் பயன் விளைக்க வேண்டும். இதற்கும் கூட்டமைப்பு முறையே சிறந்த வழியாகும். ஆசிரியர்கள் குறிப் பாகத் தமிழாசிரியர்கள் எண்ணிக்கையில் மிக்கிருந்தும் தமிழ்த் தொடர்பு இருந்தும் அவர்களில் பெரும்பான்மையோர் இத்துறை யில் ஈடுபாடு கொள்ளாமை பெருங் குறையாகும். அவர்கள் முனைந்தால் நல்ல தமிழுணர்வு ஊட்டி உண்மையிலேயே மொழிக்கும் நாட்டிற்கும் நல்ல தொண்டாற்ற இயலும்.

# 42. ஸ்ரீலங்காவில் தமிழ்

டாக்டர். இ. பாலசுந்தரம்

ஸ்ரீலங்காவில் நாவல், சிறுகதை, நாடகம், கவிதை, திறனாய்வு எனப் பல்வேறு துறைகளில் 91 நூல்கள் 1981-இல் வெளியாகியுள்ளன. இவ்வாண்டில் வெளியான பாடசாலை நூல்கள் 70. சஞ்சிகைகளும் பத்திரிகைகளும் இவ்வாண்டில் 79 வெளிவந்துள்ளன. இலங்கை ஒலிபரப்புக் கூட்டு ஸ்தாபனம் முதலான பல்வேறு நிறுவனங்களும் தமிழ் வளர்ச்சிக்குத் தொண்டாற்றி வருகின்றன.

இப்பணியின் தொடர்பில் ஸ்ரீலங்காவில் தமிழ் நிலை பற்றிய தகவல்களைச் சேகரிப்பதற்கு பத்திரிகைகளில் பொதுவிளம்பரம் கொடுக்கப்பட்டது. ஸ்ரீலங்கா தேசிய சுவடிகள் திணைக்களத்தின் பதிவேடுகள், பத்திரிகைகள் என்பவற்றில் இருந்தும் நேரடியாகவும் கட்டுரைக்குரிய தரவுகள் சேகரிக்கப்பட்டன. சேகரிக்கப் பட்ட தரவுகளை அடிப்படையாகக் கொண்டு இக்கட்டுரை பின்வரும் தலைப்புக்களில் அமைக்கப்பட்டுள்ளது.

1. சிறுகதை, 2. நாவல், 3. கவிதை, 4. நாடகம், 5. இலக்கியத் திறனாய்வு, 6. வாழ்க்கை வரலாற்று நூல்கள், 7. பல்கலைக்கழகங்களில் தமிழ், 8. பத்திரிகைகளில் தமிழ், 9. நிறுவனங்களின் பணி என்பனவாகும்.

## சிறுகதை

ஆங்கில எழுத்தாளரான ஸ்டிவன்சன் சிறுகதை ஆக்கம் பெறும் மூவகை வழிகளைக் குறிப்பிடுகின்றார். அவை முறையே கதைக் கருவைத் தேர்ந்தெடுத்து அதற்குரிய பாத்திரங்களை அமைத்தல், ஒரு பாத்திரத்தைத் தேர்ந்தெடுத்து அதன் மீது

நிகழ்ச்சிகளை அமைத்தல், ஒரு சூழ்நிலையைத் தேர்ந்தெடுத்து அதற்குப் பொருத்தமான நிகழ்ச்சிகளையும், பாத்திரங்களையும் தேர்ந்தெடுத்தல் என்பனவாகும். இவ் வகையில் ஈழத்துச் சிறு கதைகளை நோக்கும்போது அவை மூன்றாம் வகையிலேயே பெரிதும் ஆக்கம் பெற்றிருத்தலைக் காணலாம்.

ஈழத்தில் சிறுகதை இலக்கிய வளர்ச்சி 1930-களில் ஆரம்பிக்கிறது. ஈழத்துச் சிறுகதைகளின் முதல் தொகுதியாக செ. கணேச லிங்கனின் "நல்லவன்" என்ற தொகுப்பு 1956இல் சென்னையில் வெளிவந்தது. ஆனால் 1958இல் வெளிவந்த "சிற்பியின்" ஈழத்துச் சிறுகதைகள் என்ற தொகுப்பே ஈழத்தில் வெளியிடப் பட்ட முதல் தொகுப்பு. அதனைத் தொடர்ந்து பல சிறுகதைத் தொகுப்புக்கள் அறுபதுகளில் வெளிவரலாயின. எழுபதுகளில் இந்த எண்ணிக்கை மேலும் அதிகரிப்பதாயிற்று. 80இல் நான்கு தொகுதிகள் வெளிவந்தன. ஆனால் 81இல் "பகவானின் பாதங் களில்", "இவர்கள்" ஆகிய இரு தொகுப்புகள் மட்டுமே வெளி யாயின. இது பிரசுர வசதியின்மையைக் குறிக்கின்றதா அல்லது எழுத்தாளர்களின் பலவீனத்தைக் காட்டுகின்றதா என்பதை மிக உன்னிப்பாக நோக்கவேண்டும்.

## பகவானின் பாதங்களில்

இது தனி ஒருவர் படைப்பாகும். கவிஞன், நாடகாசிரியன், மொழிபெயர்ப்பாளன், கட்டுரையாளன், விமர்சகன் எனப் புகழ் பெற்ற மு. கனகராசன் இத் தொகுப்பின் மூலம் சிறந்த சிறுகதை யாளன் என்ற பாராட்டையும் பெறுகின்றார். 1962க்கும் 1978க்கும் இடைப்பட்ட காலத்தில் எழுதப்பட்ட கதைகளின் தொகுப்பே இந்நூல். எனவே பழைய கதைகளின் புதிய வெளியீடே "பகவானின் பாதங்களில்" என்க.

## இவர்கள்

யாழ்ப்பாணம், தெல்லிப்பளையிலுள்ள மகாஜனக்கல்லூரி கலை இலக்கியத்துறையில் நீண்டகாலமாக ஈடுபட்டு வருகின்றது. அக்கல்லூரியினை நிறுவியவர் ஈழத்துத் தமிழ் இலக்கியத்துறை யிலே போற்றப்படுகின்ற பாவலர் துரையப்பாபிள்ளை. அன்னாரது நினைவையொட்டி, அவரது மனைவி "திருமதி தையல்நாயகம் துரையப்பாபிள்ளை கேடயம்" சிறுகதைப்போட்டி அகில இலங்கை ரீதியாக ஆண்டுதோறும் நடத்தப்படுகிறது. 1975க்கும் 1980க்குமிடைப்பட்ட காலத்தில் இப்போட்டிகளில் முதல் பரிசைப்

பெற்ற சிறுகதைகளின் தொகுப்பே ‘‘இவர்கள்’’. இதனைத் தெல்லிப்பளை மகாஜனக் கல்லூரி படைப்பிலக்கிய மன்றம் வெளியிட்டுள்ளது.

இவ்விரு தொகுப்புக்களையும் நோக்கும்போது 81இல் புதிய படைப்புக்களாகிய சிறுகதைத் தொகுதிகள் எதுவுமே வெளிவரவில்லை என்பது புலனாகின்றது. இப்பின்னணியிலே தினகரனில் ‘‘வாரம் ஒரு சிறுகதை’’ என்ற தலைப்பில் பழம் எழுத்தாளர்களின் தரமான பழைய சிறுகதைகள் பிரசுரம் பெற்று 81இல் ஏற்பட்ட இடைவெளியை வாசகர்களுக்கு நிரப்பிக் கொடுத்தன.

எண்பத்தொன்றில் வெளிவந்த வார இறுதிப் பத்திரிகைகள் யாவற்றிலும் சுமார் 300 புதிய சிறுகதைகள் வெளிவந்தன. எண்ணிக்கையில் இது பெரும் தொகையாயினும், சிறுகதை இலக்கிய மகுடத்தின் கணிப்பில் எத்தனைகதைகள் தரமானவை என்பது ஆய்வுக்குரியது. இவற்றைவிட மல்லிகை, தீர்த்தக்கரை, அலை, அனல் முதலான மாத சஞ்சிகைகளிலும் புதிய சிறுகதைகள் வெளிவரலாயின. தமிழகத்துத் தரமான பத்திரிகைகள் எனக் கருதப்படும் ‘‘கணையாழி’’யில் குந்தவையின் ‘‘யோகம் இருக்கிறது’’, சாந்தனின் ‘‘விலகிப் போகிறவன்’’ என்ற கதைகள் சனவரி இதழில் வெளிவந்தன. மேலும் வெவ்வேறு பத்திரிகைகளிலும் வந்த கதைகளின் விவரங்கள் சேர்க்கப்படுமாயின் 81இன் மொத்தச் சிறுகதைகளின் தரத்தை அறிந்து கொள்ளலாம்.

புதுப்புது எழுத்தாளர்களைப் பெருந்தன்மையோடு பத்திரிகைகள் அறிமுகம் செய்து வருவது பாராட்டுக்குரியதே. ஆனால் அவர்கள் யாவருடைய படைப்பும் அமரத்துவமானவை எனக் கொள்வதற்கில்லை. ஈழத்துச் சிறந்த சிறுகதை எழுத்தாளர் பலர் இன்று எழுத்துத் துறையினின்றும் ஒதுங்கியிருக்கிறார்கள். இதற்கு வாசகர்களும் சில புதிய எழுத்தாளர்களும் காரணமாகின்றனர் என்கின்றது ஈழநாடு (18.1.81). எழுத்தாளனைத் தரம் கண்டு போற்றும் மனோபாவம் மக்களிடம் இன்னும் நன்கு வளரவில்லை. மேலும், இன்றைய ஈழத்து இலக்கிய உலகிலுள்ள தனி நபர் துதியும், கோஷ்டி சேரும் தன்மையும், தனி நபர் ஆதிக்கமுந்தான் திறமை மிக்க பல எழுத்தளார்கள் எழுத்துலகில் இருந்து கொஞ்சம் கொஞ்சமாக ஒதுங்கிக் கொள்வதற்கு முக்கிய காரணங்களாக அமைகின்றன. இன்னுமொரு முக்கிய கருத்து இங்கே வைக்கப்பட்டுள்ளது. புகழ்பெற விரும்பும் எழுத்தாளர் சிலர்

எவ்வித இலட்சியமுமில்லாமல் எண்ணிக்கைக்காக நிறையக் கதைகளை எழுதி, அவை தரமாக இருந்தால் என்ன இல்லா விட்டாலென்ன, தமது சொந்தச் செல்வாக்கைப் பிரயோகித்து பிரசுரிக்கச் செய்வதன் மூலம் ஈழத்துப் பிரசுரங்களைத் தொடர்ந்து ஆக்கிரமித்துக்கொண்டு வருவதும் திறமைமிக்க எழுத்தாளரின் தேக்க நிலைக்கு மற்றுமொரு காரணம் எனலாம்.

தகவம் நடத்திய 1980இன் முதல் அரையாண்டுச் சிறுகதைப் போட்டியிற் பரிசுபெற்ற து. வைத்திலிங்கம், வ.அ. இராசரத்தினம் காவலூர் எஸ். ஜெகநாதன் ஆகியோர் 81இல் தொடர்ந்து நல்ல சிறு கதைகளை வாரப்பத்திரிகைகளிலும் மாத சஞ்சிகைகளிலும் எழுதலாயினர். 80ஆம் ஆண்டின் முதல் அரையாண்டுக் கதைகளின் தரத்தை இரண்டாம் அரையாண்டுக் கதைகள் பிடிக்கவில்லை என்றும், 81இல் சிறுகதையின் எண்ணிக்கை அதிகரித்தாலும் அவற்றின் கட்டுக்கோப்புக்கள் ஆராயப்பட வேண்டியுள்ளன என்றும் கூறும் சிறுகதை மதிப்பீட்டுத் தகவம் குழுச் செயலாளர் (தினகரன் 10-5-81) கருத்தும் ஈண்டுக் கருத்தில் கொள்ளப்பட வேண்டியதாகும்.

81இல் மார்ச் மாத சிறுகதைகளில் மிகச் சிறந்த கதை எழுதியவர் புலோலி இரத்தினவேலோன். இளைய தலைமுறையின், முன்னணி எழுத்தாளராகிய இவர், நினைத்ததை நினைத்தபடி எழுதுகின்ற மன உறுதியும் சமூக அநீதிகளைத் தீரத்துடன் எதிர்த்துப் போராடுகின்ற திறமும் இவரிடம் காணப்படுகின்றன. இவருடைய கதைகளை சிங்கைத் திவாகரன் விமர்சிக்கும்போது (தினகரன் 28-6-81) தான் வாழ்கின்ற சூழலில் தன்னைச் சுற்றியுள்ள சமூகத்தில் நடைபெறும் சமூக அநீதிகளையும் வாழ்க்கைப் போராட்டங்களையும் நல்ல சிறுகதைகளாக இவர் படைத்துள்ளார் என்கிறார். இவர் உவமை நயங்களையும் குறியீடுகளையும் சிறப்பாகக் கையாள்கிறார். மண் வாசனை இவரது கதைகளில் மிகவும் ஆழமாகவே வீசுகிறது. இவர் கதை சொல்லும் பாணி தனித்துவமானது. இவர் எழுதிய கதைகளில் ''தளிர்ப்பு'' என்பது மிகச் சிறந்ததாகும்.

செ. குணரத்தினம் பெரும்பாலான பத்திரிகைகளில் சிறுகதை எழுதியுள்ளார். சிறுகதை, மினிகதை, குறுநாவல் என்ற கதைத் துறையிலும் இவரது பங்களிப்பு கணிசமானதாகும். 81இல் அகில இலங்கை ரீதியில் சித்திரா பத்திரிக்கை நடாத்திய சிறுகதைப் போட்டியில் இவருடைய ''பெண் கெட்டாலும் சம்பவந்தான்'' என்ற சிறுகதை பரிசு பெற்றது.

'தகவம்' நிறுவனம் எண்பத்தொன்றில் வெளிவந்த சிறு கதைகளை காலாண்டு ரீதியாக மதிப்பீடு செய்து முதலாம் காலாண்டின் சிறந்த சிறுகதையாளராக எஸ். முத்துகுண ரத்தினம் பரிசு பெற்றார். இளவாலை விஜயேந்திரன், சி. சுதந்திரராஜா ஆகிய இருவர் கதைகளும் சான்றிதழ்கள் பெற்றன.

இரண்டாம் காலாண்டின் சிறந்த சிறுகதையாளராக "செங்கை ஆழியான்" தேர்ந்தெடுக்கப்பட்டார். இவர் ஈழத்தின் சிறந்த நாவல் ஆசிரியர்களுள் ஒருவர். கே. விஜயன், எஸ். எம். நௌசாத் இருவரும் சான்றிதழ்களைப் பெற்றனர்.

## கதைகள் பலவிதம்

நாவல், குறுநாவல் ஆகிய புனைகதைகளைவிட, "குட்டிக் கதை" மினிக்கதை, "மணிக்கதை", "நீதிக்கதை", "உருவகக் கதை", "குறுங்கதை", "சிறுவர் கதைகள்" என்ற தலைப்புகளில் வாரமஞ்சரிப் பத்திரிகைகளில் பல்வேறு கதைகள் வெளிவரலாயின. இத்தகைய கதைகளை எழுதியோர் வரிசையில் பரிபூரணன், செ. நடராசா, ஏ.பி.வி. கோமாஸ், செ. குணரத்தினம், தமிழ்ப் பிரியா, ஆர்.எம். நௌசாத், காரைசிவம், சிவகாமி சண்முகநாதன் மாஸ்டர் சிவலிங்கம் என நீண்டதோர் பட்டியலைக் குறிப் பிடலாம்.

இச்சந்தர்ப்பத்தில் ஆங்கிலத்தில் புனைகதைகள் எழுதும் தமிழ் எழுத்தாளர்கள் பற்றிக் குறிப்பிடுதலும் தகும். இவர்களது எண்ணிக்கை கணிசமானது. அழகு சுப்பிரமணியம், எஸ்.ஜே.கே. க்ரௌதர், டி. ராமநாதன், ராஜா புரொக்டர், உவெஸ்லி காசிநாதர், ஏ. சென், வின்சென்ட் துரைராஜா, இமானுவேல் சகோதரர்கள், ஸி.வி. வேலுப்பிள்ளை போன்றோர் ஈழத்து வார இறுதி ஆங்கிலப் பத்திரிகைகளில் புனைகதைகள் எழுதி வருகிறார்கள்.

## நாவல் இலக்கியம்

ஈழத்துத் தமிழ் நாவல் இலக்கிய வளர்ச்சியை நோக்கும்போது தமிழக நாவல் இலக்கியப் போக்கின் சாயல் ஈழத்திலும் தலை காட்டி வந்துள்ளது. தமிழகத்திலும் ஈழத்திலும் தோன்றிய நாவல்கள் எண்ணிக்கையிலும், பேச்சு வழக்கிலும் வேறு பட்டிருந்தன. எனினும் 1960க்குப் பின்பு ஈழத்தின் மண்

வாசனையை நிலைநாட்டக்கூடிய வகையில் நாவல் இலக்கியம் ஆக்கம் பெறுவதாயிற்று. செ. கணேசலிங்கன், எஸ். பொன்னுத்துரை, செங்கை ஆழியான், டானியல், இளங்கீரன், மண்டூர் அசோகா போன்றோரின் படைப்புக்கள் இவ்வகையில் குறிப்பிடத்தக்கன. எழுபதுகளிலும் எண்பதுகளிலும் ஈழத்து மண்வாசனையும் ஈழத்துச் சமூக, அரசியல், பொருளாதார, கலாசார விடயங்களும் முதன்மை பெற்றன. இவ்வகையில் க. குணராஜா, ஸி.வி. வேலுப்பிள்ளை, எம். பி முகம்மது ஜலீல், அருள் சுப்பிரமணியம் போன்றோரின் படைப்புகள் 81ஆம் ஆண்டில் நாவலிலக்கியத் துறையைச் சிறப்புச் செய்தன.

நாவல் இலக்கியத்துறையில் அறுபதுகளில் காணப்பட்ட விழிப்புணர்வும் வேகமும் படிப்படியாகக் குறைந்து வந்துள்ளது. எனினும் அவ்வேகம் மீண்டும் எண்பத்தொன்றிலே தலை எடுத்துள்ளது. இவ்வாண்டில் ''அன்புள்ளங்கள்'' ''இளமைக்கோலங்கள்'' ''கனவுகள், கற்பனைகள், ஆசைகள்'' ''சரித்திரம் தொடர்கிறது'', ''நாடற்றவன்'', ''ஒரு கோடை விடுமுறை'' என்ற ஆறு நாவல்கள் நூல்வடிவம் பெற்றன. இவ்வகையில் 80இல் பார்க்க 81இல் நாவல் இலக்கியம் எண்ணிக்கையடிப்படையிலும், புதுப் பரிமாண ரீதியிலும் வளர்ச்சிப் பாதையில் புதுவேகம் பெறுவதாயிற்று.

ஈழத்தின் அண்மைக்கால நாவல்கள் சமூகப் படைப்புக்களாக மலர்ந்து நாவல் இலக்கியத்துக்குப் புதிய பரிமாணம் தந்துள்ளன. இவை தன்னிகரில்லாத் தலைவன் ஒருவனைச் சுற்றிக் கதையும் கருத்துக்களும் படராமல் ஒரு சமூகத்தின் பலத்தையும் பலவீனத்தையும் யுகமாற்றங்களையும் சித்திரிக்கின்றன.

எம்.பி. முகம்மது ஜலீல் 1979இல் எழுதிய ''ஒரு வெள்ளைப் பூச்சிரிக்கிறது'' என்ற நாவலின் தொடர்ச்சியோ எனக் கொள்ளத்தக்க வகையில் ''சரித்திரம் தொடர்கிறது'' என்ற நாவல் அமைகிறது. இந்நாவலிலே சமூகப் போராட்டங்களும் சிக்கல்களும் சிறந்த முறையில் சித்திரிக்கப்பட்டுள்ளன. ''ஒரு கோடை விடுமுறை'' என்ற நாவலில் திருமதி ராஜேஸ்வரி பாலசுப்பிரமணியம் ஈழத்தின் தேசிய இனப் பிரச்சினையை ஒரு புதிய கோணத்தில் அணுகியுள்ளார். ஈழத்தின் பழம் பெரும் எழுத்தாளர் ஸி.வி. வேலுப்பிள்ளை, பல ஆண்டுகளுக்கு முன்பு வீரகேசரி வார இதழில் எழுதிய ' நாடற்றவன்'' என்ற தொடர் நாவலை 81இல் வைகறை வெளியீட்டினர் நூலாக வெளியிட்டனர். மலையகத் தோட்டத்தொழிலாளர் அநுபவிக்கும் அவலங்களை இந்நாவல்

சித்திரிக்கிறது. 'கனவுகள் கற்பனைகள் ஆசைகள்' என்ற நாவலின் ஆசிரியரான செங்கை ஆழியான் ஈழத்து நாவல் இலக்கியத் துறைக்கு கடந்த இரு தசாப்தங்களாகத் தொடர்ந்து ஆக்கபூர்வ மான படைப்புக்களை அளித்து வருகின்றார்.

## தொடர் நவீனங்கள்

ஆனந்தவிகடனில் 13-6-81 இதழ் முதலாக அருள் சுப்பிர மணியத்தின் ''சூரசம்ஹாரம்'' என்ற நாவல் தொடர்ச்சியாக வெளிவந்தது. 1980இல் ஆனந்தவிகடன் நடாத்திய நாவல் இலக்கியப் போட்டிக்கு ''துரத்து ஓவியங்கள்'' என்ற நாவலை அனுப்பி, தனது திறமையை தமிழுலகில் நிலைநாட்டி, ஈழத்து நாவலிலக்கியத்துறைக்குப் பெருமை ஈட்டிக் கொடுத்தவர் அருள் சுப்பிரமணியம். தமிழகத்தைப்போன்று ஈழத்திலும் தலைசிறந்த நாவலாசிரியர்கள் தோற்றம் பெற்று வருகிறார்கள் என்பதற்கு இவ்வாசிரியர் சான்று, ''அவளுக்கு வயது வந்துவிட்டது'', ''நான் கெடமாட்டேன்'', ''அக்கரைகள் பச்சையில்லை''—என்ற நாவல் களைப் படைத்த அருள் சுப்பிரமணியத்தின் 81 இன் படைப்பான ''சூரசம்ஹாரத்தின்'' பெறுமதியை முழு நாவலும் வெளிவந்த பின்பே மதிப்பிடுதல் பொருந்தும்.

சிந்தாமணி இதழில் 4-1-81 முதலாகப் பெ. பத்மநாதன் எழுதிய 'ஒரு துளிக் கண்ணீர் அவளுக்காக'' என்ற தொடர் நவீனம் வெளிவந்து கொண்டிருந்தது. எழுத்துத்துறையில் நீண்ட நாள் பயிற்சியுடைய பத்மநாதனின் இப்படைப்பு சிந்தாமணி வாசகரிடையே மிக்க வரவேற்பைப் பெற்றிருந்தது.

## குறுநாவல்

சிறுகதை, நாவல் போன்று குறுநாவலும் தனி இலக்கிய வடிவமாக வளர்ந்து வருகிறது. சிறிய நாவலே குறுநாவல் எனப் பலர் தவறாகக் கருதுகின்றனர். பிரசுர வசதிகள் மிகக் குறைவாக வுள்ள ஈழத்தில் எழுத்தாளர்கள் குறுநாவல்களை மிகுதியாக எழுதி வெளியிடுவது சாத்தியமானதும் பயனுடையதுமாகும். ஈழத்தில் சிறுகதைத் துறையிலும் குறுநாவல் துறையிலும் ஆற்றல் மிக்க செ. யோகநாதன் 1-3-81 முதலாக வீரகேசரி வார மஞ்சரி யில் ''விடியும் ஒரு புதிய நாள்'' என்ற 'குறுநாவலை எழுதினார். அது 82இலும் தொடர்ந்து வளர்வதாயிற்று. குறுநாவலின் இயல் பினைப் பயில விரும்பும் இளையவர்கள் செ. யோகநாதனின் குறு நாவல் தொகுப்பினைப் படிக்கலாம் (தினகரன் 19-4-81). 1962ஆம்

ஆண்டில் பேராதனைப் பல்கலைக்கழகத் தமிழ்ச் சங்கம் நடத்திய குறுநாவல் போட்டியில் ''யாத்திரை'' என்ற குறுநாவலை எழுதி முதற் பரிசு பெற்றவர் யோகநாதன். தொடர்ந்தும் அவர் இத் துறையில் உழைத்து வருகிறார். ஈழத்துக் குறுநாவல் தொகுதி களில் யோகநாதனின் ''ஒளி நமக்கு வேண்டும்'' என்பது சிறந்த தாகும்.

## கவிதை இலக்கியம்

ஏனைய எழுத்துத்துறைகளுக்குள்ள வரவேற்பு கவிதைத் துறைக்கு இப்போது இல்லாதிருப்பது இலக்கியக்காரர் எவரும் ஏற்றுக்கொள்ளக்கூடிய உண்மையாகும். இலக்கியத்தின் மேலான உருவம்—எண்ணத்தின் உச்ச வெளிப்பாட்டுக்கருவி கவிதை என்பதனையும், அது தொன்மைமிக்கதென்பதையும் ஏற்றுக் கொள்ளாதார் இலர். உயர்ந்தநிலைஒன்று ஜனரஞ்சகம் பெறாது போகின்றமைக்குப் பல காரணிகள் பின்னணியாக அமைகின்றன. இத் தேக்கநிலை குறித்துக் கடந்த 25 ஆண்டுகளாகக் கவிதைத் துறையிலீடுபட்டு வருபவரும், ''வாழும் கவிதை'' (1962) என்ற கவிதைத் தொகுப்பின் ஆசிரியரும், 1967ல் கவிதை நாடகத்திற்குச் சாகித்திய மண்டலப் பரிசு பெற்றவருமான கவிஞன் ஜீவா ஜீவரத்தினம் பின்வரும் காரணங்களைக் கூறுகின்றார். (தினகரன் 6-9-81)

அ. பிரசுரகளம் போதாமை

ஆ. வாசகருக்குக் கவிதை நயத்தின் பயிற்சி இல்லாமை

இ. வாசகரைத் தேடிக் கவிதைகள் சென்றடையாமை

ஈ. கவிஞர்கள் கௌரவிக்கப்படாமை

இத்தகைய காரணங்களோடு இன்னுமொரு முக்கிய காரணம் 1981 இல் பாடசாலை நூல்கள் இலவசமாக வழங்கப்பட்டமையினால், பாட நூல் விற்பனைமூலம் பெறும் இலாபத்தை இழந்த அச்சகங்கள் 81இல் இலக்கிய நூல்களைத் தம் முதலீட்டில் வெளியிட முன்வரவில்லை.

## கவிதை நூல்கள்

எண்பதில் ஐந்து கவிதைத் தொகுதிகள் வெளிவந்தன. ஆனால் எண்பத்தொன்றில் பத்துக் கவிதை நூல்கள் வெளிவந்துள்ளமை கவிதைத் துறையில் ஏற்பட்டுள்ள விழிப்புணர்வைக் காட்டுகிறது. இவற்றில் அன்பு முகைதீனின்—''அண்ணல் நபி

பிறந்தார்'', அஹ்மதின் — 'நல்லற போதனை'', எம். வை. எம் முஸ்லிமின்—''இறவாச்செல்வம்'' என்ற நூல் இஸ்லாம் தழுவிய கவிதைத் தொகுப்புக்களாகும். ''நல்லற போதனை'' திருக்குர் ஆனின் அறப்போதனைகளையும், நபிகள் நாயகத்தின் திருநெறி விளக்கங்களையும் 107 கவிதைகளில் வடித்து, அவற்றுக்கு விரிவான விளக்கங்களையும் கொண்டிலங்குகிறது.

அடுத்ததாக முருகையனின் ''நெடும்பகல்'', எம். சிவராசாவின் ''என் சித்தப்பா'', எஸ். மகாலிங்கத்தின் ''முத்துக் குவியல்'' மங்கலராணியின் ''ஓ சமுதாயமே'', எம்.ஸி.எம். சுபைரின்—''பிரித்தேன்'' என்னும் கவிதைத் தொகுதிகள் ஓரினத்தைச் சார்ந்தவை. அடுத்ததாக நுஃமானும் முருகையனும் சேர்ந்து வெளியிட்ட ''பலஸ்தீனக் கவிதைகள்'' என்ற தொகுப்பு வேறொரு பொருள்நெறி கொண்டதாகும்.

## நூலுருப்பெறாத கவிதைகள்

வாரமஞ்சரிகளிலும், மாதசஞ்சிகைகளிலும் பல நூற்றுக் கணக்கான மரபுக் கவிதைகள் வெளிவந்தன. அவற்றோடு நீண்ட கவிதைகளும் பிரசுரமாகின. அவற்றுள் தினகரன் வாரமஞ்சரியில் 13-12-81 முதலாக மூன்று தொடர்களில் வெளிவந்த ''இசைவாணன் ஒபியசு'' என்ற நீண்ட கவிதையைச் சொக்கன் எழுதினார். ஒபியசு அப்பலோ தெய்வத்தின் மகனாவார். அப்பலோ அவனுக்கு ஒரு தங்க யாழைத் கொடுத்து, வாசிக்கவும், நல்லிசை வழங்கவும் கற்பித்து விட்டது. ஒபியசு தனது இசையின் மகிமையால் புரிந்த சாதனைகள் அனந்தம். இசையினிற் கனிந்துருகும் தமிழிதயங்களுக்கு, இசைவெறியனான மகாகவி பாரதி நூற்றாண்டை ஒட்டி இக்கதைப் பாடலைக் காணிக்கையாக்கியுள்ளார் இதன் ஆசிரியர் சொக்கன்.

## புதுக் கவிதை

கவிதைகளை மரபுக் கவிதைகள், புதுக் கவிதைகள் எனப் பிரித்து நோக்குவது வழக்கமாகிவிட்டது. யாப்பு விதிகளுக்கு அமைந்தனவற்றை மரபுக் கவிதைகள் என்றும், யாப்பில்லாக் கவிதைகளைப் புதுக் கவிதைகள் என்றும் கூறுவர். மனதில் உள்ள கருத்துக்களைச் சுருக்கமாகக் கூற மரபுக் கவிதை வழி செய்தது. ஆயினும் சொல்வளம் யாப்புக்குள் அடக்கப் பழந்தமிழ்க்கவி அறிவு இல்லாதார்க்கு மரபுக்கவி இடர் செய்தது. எதுகை

மோனை, அசை, தளை என்னும் வடிகட்டியினூடாக கவியின் கருத்துக்கள் செலுத்தப்படும்போது அநேக அற்புதமான கருத்துக்கள் வெளியே சிந்தச் சக்கைகள் மாத்திரம் கவியாவதுமுண்டு. இக் குறைபோக்கவே வசன கவிதை உருவானது. நாளடைவில் மரபுக் கவிதைகளின் தொகையிலும் பார்க்க அதிகமான வசன கவிதைகள் உருவாகின. எவ்வளவு வேகமாக உருவாகினவோ அவ்வளவு வேகமாக அழிந்து மறைந்தன. வசன கவிதை நாளடைவில் புதிய கவிதைகள் எனும் பெயரைச் சூடிக்கொண்டு உலா வந்திருக்கிறது. அநுபவப்படுத்த முடியாதநிலை, அரும்பதமறிய முடியாதளவு சொல்வளமின்மை, போதிய இலக்கணப் பயிற்சி இன்மையால் சொற்சேர்க்கையைப் பிரித்துணரமுடியாத நிலை, இலக்கியப் பயிற்சி இன்மையால் சுவைத்துணர முடியாத மயக்கம் என்பன தற்காலக் கவிஞர்களுக்கும் மரபுக் கவிதைகளுக்குமிடையில் ஏற்பட்டுள்ள இடைவெளிக்குக் காரணமாகும். அன்று கவிதை கற்றோருக்கு மாத்திரம் சொந்தமாயிருந்ததுண்டு. இன்றோ மக்கள் யாவருக்கும் தேவைப்படும் ஒரு கலையாக இருக்கிறது. எனவே கவிதையில் ஒரு நெகிழ்வு அவசியம் ஏற்படுவது தவிர்க்க முடியாததொன்று. இக் காரணத்தினாற்றான் புதுக் கவிதையில் மக்களின் நாட்டம் செல்லத்தொடங்கிற்று. (ஈழத்துப் பூராடனார் கவிதைச் சரம் சிந்தனையும் விமரிசனமும், 1971)

புதுக்கவிதைகளுக்குத் தக்கதோர் பிரசுரகளத்தைப் பத்திரிகைகள் அமைத்துக் கொண்டன. வாரந்தோறும் சுமார் 30க்கும் மேற்பட்ட புதுக்கவிதைகள் வெளிவந்தன. கவிதை என்பது புரியாத ஒன்று என விலகிச் சென்று கொண்டிருந்த மக்களைத் தனது எளிமையான, ஆழமான புதுக் கவிதைகள் மூலம் மக்களை ஈர்த்து வருபவர்களில் ஏ. ஆர். ஏ. ஹஸீஸ், சிறப்பான முறையில் சமூகக் கொடுமைகளையும் அவலங்களையும் அனைவருக்கும் விளங்கும் படியாகப் பழகு தமிழின் அழகு கொண்டு புதுக் கவிதை படைத்தார். வானொலியில் வாரந்தோறும் இடம்பெற்ற இலக்கிய மஞ்சரியில் புதுக்கவிதை அரங்கும் இடம்பெற்றது.

## தனி பிரபந்தங்கள்

கோயில் சம்பந்தமாகத் தனி இலக்கியங்களும் நூல்வடிவம் பெற்றன. செ. கணபதிப்பிள்ளையின் "புளியன் பொக்கனைத் தலபுராணம்" பூ. தியாகராஜக்குருக்களின் "கோணகிரிசதகம்"

கே. பெரியதம்பியின் "ஆழ்வார் சுவாமிகுருதாள் விடுதூது" என்ற மூன்று தனிப்பிரபந்தங்கள் எண்பத்தொன்றில் வெளி வந்தமையும் நோக்கற்பாலது.

## நாடகக் கலை

ஈழத்து நாடக வளர்ச்சி நெறியைப் பகுப்பாய்வு செய்த க. சொக்கலிங்கம் அதனை நாட்டுக் கூத்துக்கால நாடகங்கள், சமயதத்துவ அறப்போதனைக் கால நாடகங்கள் (1917-38), சமூக விழிப்புக்கால நாடகங்கள் (1939-1948), அரசியல் எழுச்சிக்கால நாடகங்கள் (1949) எனப் பிரித்து நோக்கினார். (ஈழத்துத் தமிழ் நாடக வளர்ச்சி (1978). ஈழத்து நாடக மேடை தமிழகத்து நாடக நெறியுடன் சமபோக்குடன் காணப்பட்டாலும் கடந்த ஒரு தசாப்த காலமாக ஈழத்து நாடகக் கலை தனித்துவம் பெற்று வந்துள்ளது. நாடகத் தயாரிப்பில் புதிய பரீட்சார்த்தமான நாடக உத்திகளைக் கையாண்ட வகையிலும் புதிய புதிய பொருட் களில் அமைந்த நாடகப் பிரதிகளைப் பயன்படுத்திய முறையிலும் நாடகக்கலைக்கு மக்கள் மத்தியில் அமோக வரவேற்பை ஏற்படுத் திய விதத்திலும் தனித்துவத்தைக் காணக்கூடியதாகவுள்ளது. ஈழத்தில் அண்மைக்காலத்தில் நாடகக்கலை செம்மைபெற மூல காரணியாக இருந்தவர்களில் ந. சுந்தரலிங்கம், அ. தாஸியஸிஸ், க. பாலேந்திரா, சுஹைர் ஹமீட் முதலியோரை முக்கியமாகக் குறிப் பிடலாம். இவர்கள் நாடக அரங்கியலை முறையாகக் கற்று நாடக மேடையைச் செம்மைப்படுத்தியவர்கள். ஏனைய நாடகத் தயாரிப் பாளர் பங்கும் குறைத்து மதிப்பிடத்தக்கதல்ல.

இவர்களில் சுந்தரலிங்கம், தாஸியஸிஸ் ஆகிய இருவரும் சமூக விழிப்புக்கு ஏற்ற வகையில் சோஷலிச சித்தாந்த நாடகங் களையே மேடை ஏற்றினர். ஆனால் பாலேந்திரா அந்த வட்டத் திற்குள் அகப்படாமல் உலகப்புகழ் பெற்ற பிறமொழி நாடகங் களை ஈழத்துத் தமிழ் நாடக மேடையில் அறிமுகப் படுத்திப் புதிய சாதனைகளைப் புரிந்தார்.

கடந்த இரு தசாப்த காலமாகத் தமிழ் நாடக மேடையில் தனித்துவம் மிக்க நாடக நெறியாளராக விளங்கிய சுஹைர் ஹமீட் 81 இல் இவ்வுலக நாடக மேடையைவிட்டு விலகியமை பேரிழப் பாகும். இலங்கை அவைக்காற்று கழகத்தினர், தற்போது தீவிர நாடகங்களுக்கு என்றே ஒரு கணிசமான பார்வையாளர்

கூட்டத்தைச் சேகரித்துக் கொண்டவர்கள். இவர்கள் நகர்ப்புறங் களில் மட்டுமன்றி, சுற்றுலாக்கள் நடாத்திப் பாடசாலைகளிலும் கிராமங்களிலும் ஒரு புதிய விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தி நாடகத் தயாரிப்பிலும் ஒரு பலமான அத்திவாரத்தை ஏற்படுத்தியுள்ளார்கள். பெண்கள் நாடகங்களில் முன்வந்து நடிக்கக்கூடிய ஒரு சாகப்தத்தை ஏற்படுத்தியுள்ளார்கள்.(தினகரன் 5-4-81). இவர்களது "அரையும் குறையும்" 81 இல் பெரும் பர பரப்பை ஏற்படுத்தியது.

## யாழ் நாடக அரங்கக் கல்லூரி

யாழ்ப்பாணம் புத்திஜீவிகளின் அரும்முயற்சியினால் தாபிக்கப் பட்டு இயங்கிவரும் இந் நிறுவனம் நாடகப் பயிற்சி வகுப்புகள், நாடக மேடை ஏற்றம், நாடக நூல் வெளியீடு, முதலிய துறை களில் தீவிரமாக உழைத்து வருகிறது. 80 இல் வெளியிட்ட "சங்காரம்" நாடகத்தை 81 இல் புதிய முறையில் மேடை ஏற்றினர். "அரங்கம்" என்ற நாடக சஞ்சிகையை நடத்திவரு கின்றனர். "நாடகத்தில் ஆரம்ப நிலையிலுள்ளவர்களுக்கும் உதவக்கூடியதாக இச் சஞ்சிகையில் இடம்பெறும் விடயங்கள் இருக்கவேண்டும்; கிராமப் புறங்களில் நிகழத்தக்க நல்ல நாடகங் களை மதிப்பிடவும் ஊக்குவிக்கவும் அதன் கலைஞர்களையும் மன்றங்களையும் கௌரவிக்கவேண்டும் என்ற குறிக்கோளுடைய தாக அரங்கம் இயங்கி வருகிறது.

## கொழும்பில் மேடை நாடகம்

அநீதனிஜீவா, ரொபர்ட், பௌசுல்அமீர், சுஹைறீஹமீட், கலைச்செல்வன், பாரூக், மாத்தளைக் கார்த்திகேசு, க.பாலேந்திரா, கே. எம். வாசகர் போன்றோர் கொழும்பில் "அப்பர் மிடில் கிளாஸ்" நாடகங்கள் அல்லாத சாதாரண, குறிப்பாக, பள்ளத்தில் உள்ள மக்களின் சோக நாடகங்களையே மேடைக்குக் கொண்டு வந்தனர். ஆயினும் இவர்கள் கொழும்பு நாடகமேடையினின்று நழுவி, ஈழத்துத் திரையுலகில் சஞ்சரிக்கிறார்கள் போலத் தெரி கிறது எனத் தினகரன் (16-8-81) தெரிவித்த கருத்து எண்பத் தொன்றைப் பொறுத்தவரையிற் பொருந்தும். அதே வேளையில் ஹாஸ்ய நாடகமேடை ஏற்றம் அதன் செல்வாக்கை இங்கு இழக் காது அமோக வரவேற்பைப் பெற்றிருந்தது என்ற உண்மை கசப்பானதுதான்.

## எண்பத்தொன்றில் நாடக வளர்ச்சி-மதிப்பீடு

எண்பதுடன்ஒப் பிடும்போது 81 இல் நாடக வளர்ச்சி மந்த கதியிலேயே காணப்படுகிறது. இதற்கு யாழ்ப்பாணத்தில் நிலவிய சமூக, அரசியல் சூழல்களே காரணம் என்பதில் ஐயமில்லை. நாடகத் துறையில் அறிவுபூர்வமான முயற்சிகள் மேற்கொள்ளப் படவேண்டும் என்ற உணர்வும் ஆங்காங்கே சில காத்திரமான செயல்பாடுகளும் ஈழத்தின் தமிழ்நாடகத் துறையில் காணப்படு கிறது. நல்ல எழுத்தாளர்களின் நாடக ஆக்கங்களைத் தொடர்ந்து அறிமுகப்படுத்தி கணிசமான வெற்றியும் கண்டு வருகின்றனர். சிங்கள நாடகத்துறை மிகவேகமாக வளர்ந்துகொண்டிருக்கும் இக் கால கட்டத்தில் அந்நாடகத் தாக்கங்கள் ஈழத்துத் தமிழ்நாடகத் துறையிலும் ஏற்படுதல் தவிர்க்க முடியாதது (தினகரன்22/3/82).

கடந்த தசாப்தங்களில் மட்டுமல்ல எண்பத்தொன்றிலும் கூட நாடக மேடையை மொழிபெயர்ப்பு நாடகங்களே ஆக்கிர மித்துக் கொண்ட போதிலும், அவை வளமான நாடக உத்திகளை அறிமுகம் செய்து பரீட்சார்த்த முறையிலான நாடகத் தயாரிப் பாளருக்குச் சாதகமாக அமைந்தன. பிற மொழியிலமைந்த நாடகங்களை மொழிபெயர்ப்பது பற்றிய கருத்து வேறுபாடுகளும் இங்குக் காணப்படவே செய்கின்றன. ''எமது மொழியில் எம் கலாச்சாரப் பண்புகளைப் பிரதிபலிக்கும் நாடகங்களை உருவாக்கு வதும் பிறநாட்டு நற்படைப்புக்களை நம்மவர்க்கு அறிமுகப் படுத்துவதும் எத்துணை வரவேற்கத்தக்கதோ அத்துணை வரவேற்பும் நம் நாட்டில் இதர சமூகத்தினரின் ஆக்கங்களை அறிமுகப்படுத்தும் போதும் எதிர்பார்க்கலாம். இத்தகைய உண்மையினை உள்ளூர்க்கலை, கலாசார, இசை, நாடகப் பரிவர்த்தனையையிட்டு இவ்வளவு காலமும் நாம் அக்கறை செலுத்தாமைக்குப் பல காரணங்கள் இருக்கக் கூடும். இருப்பினும் ஒரு தேசிய சமுதாயமாக ஒருமித்து இயங்கும் நிலையில், இந் நாட்டில் இருக்கும் நமது சகோதர இன மக்களின் கலை, இலக்கிய அறிவியல் முயற்சிகளை, அவர்களின் கலையுலகப் பங்களிப்பினை அறிய முயலாது, அக்கரைச் சரக்குகள் மட்டுமே அதிசிறந்தன என்று மருண்டோடுதல் புத்தி ஜீவிதமாகுமா?'' எனக்கேள்வி எழுப்பும் யோகா பாலச்சதிரனின் குரல் (வீரகேசரி 22/3/82) தமிழ் நாடகக் கலைஞர்களின் காதில் விழும் போது ஈழத்தில் இன்னும் ஆழமான ஒரு தனித்துவமான போக்கை நாடகத்துறையில் ஏற்படுத்தலாம் என்பது உண்மை.

## இலக்கியத் திறனாய்வுக் கலை

எண்பத்தொன்றில் ஆக்க இலக்கியத் துறைகளைவிட திறனாய்வுக்கலையே நன்கு ஆர்வம் கொண்டிருந்தது என்று கூறக் கூடிய அளவிற்கு இலக்கியத் திறனாய்வுக் கட்டுரைகளும், திறனாய்வு நிகழ்ச்சிகளும் இடம்பெற்றுள்ளன. இலக்கியத் திறனாய்வுக் கருத்தரங்குகள், நூல் விமரிசனக் கூட்டங்கள் என்பன பரவலாக நடைபெற்றன. பொதுசனத் தொடர்புச் சாதனங்களாகிய பத்திரிகைகள், சஞ்சிகைகள் வானொலி என்பவற்றின் மூலமாக இலக்கியத் திறனாய்வு புத்திஜீவிகள் அல்லாத பொது மக்களது கவனத்தையும் ஈர்த்துள்ளது என்றும் கூறலாம்.

ஈழத்தில் நவீன இலக்கியத்துறை சார்ந்த இலக்கியத் திறனாய்வு கடந்த முப்பது ஆண்டுக்கால வளர்ச்சிப் படிகளைத் தாண்டி வந்து, 81 இல் க. கைலாசபதி, கா. சிவத்தம்பி, கே. எஸ். சிவகுமாரன், தெளிவத்தை ஜோசப் முதலான காத்திரமான இலக்கியத் திறனாய்வாளர்களின் பங்களிப்பைப் பெற்றுள்ளது. இத்தகைய வளர்ச்சி நெறியில், ஈழத்து இலக்கியத்திறனாய்வாளர்களை அவர்களில் ஒருவராகிய கே. எஸ். சிவகுமாரன் மூன்று பிரிவினராகப் பகுத்துக் கூறியுள்ளார் (தினகரன், 4-10-81). பல்கலைக்கழகங்களிலே பேராசிரியர்களாகவும் விரிவுரையாளர்களாகவும் விளங்கும் இலக்கியத் திறனாய்வாளர் முதற் பிரிவினர். இரண்டாவது பிரிவில் ஆக்க இலக்கிய கர்த்தாக்கள் அடங்குவர். இவர்கள் இலக்கியத் திறனாய்வுத் துறையில் முழு மூச்சாக ஈடுபடாது, இதனை ஒரு துணைச்சாதனமாகவே கையாண்டுள்ளனர். இத்தகையோரில் எஸ். பொன்னுத்துரை, மு. தளையசிங்கம், முருகையன், அ. யேசுராசா, டானியல், தெளிவத்தை யோசேப், முதலியோரைக் குறிப்பிடலாம். பத்திரிகை, வானொலி முதலிய பொதுசனத் தொடர்புச் சாதனங்களுக்காக எழுதும் இலக்கியத் திறனாய்வு மூன்றாம் பிரிவை கே. எஸ். சிவகுமாரன், அந்தனி ஜீவா, காவலூர் ஜெகநாதன், ஈழவாணன் போன்றோர் குறிப்பிடத் தக்கோராவர். மேற்குறிப்பிட்ட மூவகையினது இலக்கியத் திறனாய்வுகள் 81 ஆம் ஆண்டின் ஈழத்து இலக்கியப்போக்கினை மதிப்பிடலாயின.

1981 வரையும் ஈழத்து விமரிசனப் போக்கை மதிப்பிட்டுக் கூறிய சிவகுமாரனின் கருத்தை (தினகரன் 14-10-81) ஈண்டுத் தருதல் பொருத்தமுடையது ''ஈழத்தில் விமரிசனத் துறையின் வளர்ச்சி காரணமாக ஏற்பட்டு வரும் மாற்றங்கள் நன்மை பயப்

பனவாகவே இருக்கின்றன. எழுத்தாளர்களுக்கு, மாணவர்களுக்கு, கலை இலக்கியங்களில் ஈடுபட்டவர்களுக்கு, பொதுமக்களுக்கு ஆகிய அனைவருக்கும் புதிய தகவல்களையும், புதிய வளர்ச்சிப் போக்கினையும் காட்டுவதாக ஈழத்து விமரிசனப் போக்கு இருந்து வருகிறது. பொதுவாக ஐம்பதுகளில் பயன்பெற்ற மாணவனை விட எண்பதுகளில் பயன்பெறும் மாணவன் புதிய விமரிசன ஞானத்தால் கூடுதலான பயனைப் பெறுகிறான்''. 81 இல் இலக்கியத் திறனாய்வுக்கலை இங்கு எந்த அளவில் வளர்ச்சியையும் தாக்கத்தையும் ஏற்படுத்தியுள்ளது என்பதை இக்கருத்துத் தெளிவாக்குகிறது.

இலக்கியத் திறனாய்வாளர் இலக்கியங்களை அவை கூறும் கோட்பாடுகளின் அடிப்படையில் பகுத்தே ஆய்வு மேற் கொள்வர். அவ்வகையில் இலக்கியங்களை அவயவக் கொள்கை, அறிவியற் கொள்கை, உணர்ச்சிக் கொள்கை, அழகியற் கொள்கை, சமுதாயக் கொள்கை என ஐந்தாக வகைப்படுத்துவர். இந்த அணுகு முறைகளை அனுசரணைக் கொள்கை, பயன்வழிக்கொள்கை, வெளிப்பாட்டுக்கொள்கை, புறநிலைக் கொள்கை அல்லது விடயக் கொள்கை, பல்நெறி சார்ந்த திறனாய்வுக் கொள்கை என்ற வகைகளிலும் பிரித்துக்கூறுவர்.

இலக்கியத் திறனாய்வில் இலக்கியத்தின் உருவம். உள்ளடக்கம் புலவன் அவற்றை எப்படிக் கூறுகிறான்; அவற்றின் சமுதாயப் பின்னணி என்ன என்ற விடயங்கள் முக்கியத்துவம் பெறுகின்றன. அண்மைக்காலம் முதலாக ஈழத்து இலக்கியத் திறனாய்வை நோக்கும்போது அவற்றில் கலை, இலக்கியம், அறிவியல், அரசியல், பண்பாட்டு விடயங்கள், வரலாறு முதலான பல்வேறு அம்சங் களும் தொடர்பு படுத்தப்பட்டிருப்பதைக் காணலாம். இவ் வகையில் ஈழத்தில் பல்நெறி சார்ந்த இலக்கியத் திறனாய்வே முதன்மை பெற்றுள்ளது. எனினும் மேலே குறிப்பிட்ட தனித் தனியான அணுகுமுறைகளும் கணிசமான அளவில் இடம் பெற்று வந்துள்ளன என்பதும் உண்மை.

ஈழத்து இலக்கியத் திறனாய்வுக் கலை பற்றி கே. எஸ் சிவகுமாரன் தினகரன் வாரமஞ்சரியில் (4-10-81—8-11-81) எழுதிய ''ஈழத்து விமரிசனத்துறை'' என்ற கட்டுரைத் தொடரும் வீரகேசரியில் வெளிவந்த ''கலைப்புலம்'' என்ற கட்டுரைத் தொடரும் 81இல் இலக்கியத் திறனாய்வு எந்த அளவுக்கு யாவ

ராலும் விரும்பப்பட்டது என்பதை உணர்த்துகின்றன. இவற்றை விட ஏனைய வாரப்பத்திரிகைகளிலும், மாத சஞ்சிகைகளிலும் எழுதப்பட்ட ஆக்க இலக்கிய விமரிசனங்கள் பற்றிய கட்டுரைகளும் இவ்வரிசையிற் குறிப்பிடத்தக்கன. மேலும் நூல் விமரிசனங்கள் நாடக விமரிசனங்கள் திரைப்பட விமரிசனங்கள் என்பனவும் வார இறுதிப் பத்திரிகைகளையும் மற்றும் சஞ்சிகைகள் வானொலி ஆகியனவற்றையும் அலங்கரித்தன.

ஒவ்வோராண்டும் மதிப்பிட்டறியக்கூடியளவிற்கு ஈழத்தில் இலக்கியத் திறனாய்வு வளர்ந்து கொண்டே வருகிறது. அன்றியும் ஈழத்து இலக்கியத் திறனாய்வுக்கு தனித்துவமான ஒரு பாரம்பரியம் உண்டு என்பதும் வலியுறுத்தப்பட வேண்டிய அம்சமாகும். தமிழகத்து முன்னணிப் பத்திரிகைகளில் "தாமரை", "தீபம்" "கணையாழி," "எழுத்து", "சரஸ்வதி", "வைகை", "படிகள்" முதலியவை, ஈழத்து இலக்கிய விமரிசனக் கட்டுரைகளைத் தரமறிந்து, அவ்வப்போது வெளியிட்டு வந்துள்ளமையை ஈண்டு குறிப்பிடுதல் பொருந்தும்.

அறுபதுகளில் ஆரம்பித்து எழுபதுகளில் வளர்ச்சியடைந்து, எண்பதுகளில் தீவிரம் அடைந்துள்ள ஈழத்து விமரிசனக்கலை ஈழத்தின் தனித்துவத்தை இத்துறையில் முத்திரை பதித்துக் காட்டியுள்ளது. இதுபற்றி "படிகள்" (பெப்ருவரி 1981) இதழில் வெளிவந்த கருத்தும் இக்கூற்றைச் சான்றுபடுத்துதல் படித்து அறியத்தக்கதாகும்.

## வாழ்க்கை வரலாற்று நூல்கள்

பாரத கண்டத்திலும் ஈழத்திலும் வெளிவந்த வாழ்க்கை வரலாற்று நூல்களில் ஆங்கிலத்திலும், தமிழிலும் வெளிவந்த மகாத்மா காந்தியின் சுயசரிதை தனிப்போக்கும் உலக மக்களுக்கு உன்னத வழிகாட்டியாகவும் அமையும் தன்மை வாய்ந்தது. உலகம் உய்ய வாழ்ந்த மகான்களின் வாழ்க்கை வரலாற்றை நூலில் வடித்து, உலகோருக்கு அளிக்கும்போது அந்நூல் மக்கள் வாழ்க்கைக்குப் பெரிதும் பயன்படுவதாகின்றது. எனவே வாழ்க்கை வரலாற்று நூல் உண்மைச் செய்திகளையும், தனி மனித அநுபவங்களையும் வாழ்க்கைப் போராட்டங்களையும் தன்னகத்தே கொண்டு, வாசகர்களுக்கு நல்வழியையும், நன்னம்பிக்கையையும் ஊட்டும் வகையில் ஆற்றல் மிக்க இலக்கியமாகத் திகழ்கின்றது.

சங்ககாலம் முதல் பாண்டிக்கோவை, முத்தொள்ளாயிரம்' பாரதம், இராமாயணம், குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ், பாரதி சுயசரிதை, என்ற வரிசையில் கூறத்தக்க எத்தனையோ இலக்கியங்கள் தமிழில் வெவ்வேறு காலப்பகுதியில் வெவ்வேறு இலக்கிய வடிவில் சுயசரிதைகளாக, வாழ்க்கை வரலாற்று நூல்களாக தோன்றியன. எனினும் 19ஆம் நூற்றாண்டிலேயே ''வாழ்க்கை வரலாற்று நூல்கள்'' உரைநடையில் ஆக்கம் பெறத் தொடங்கி தமிழ் இலக்கிய நெறியில் ஒரு புதிய சகாப்தத்தை ஏற்படுத்தி, அதன் பயனாகத் தமிழில் பல வாழ்க்கை வரலாற்று நூல்கள் தோன்றலாயின.

ஈழத்தில் இவ்வகையில் தோன்றிய நூல்கள் சிலவே ஆண்டுக்கு இரண்டு அல்லது மூன்று என்று கூறத்தக்க வகையில் 81இல் இரண்டு நூல்களே வெளிவந்துள்ளன. வாழ்க்கை வரலாற்று நூல்கள் இருவகைப்படும். தன்னுடைய வாழ்க்கை அநுபவங்களைத் தாமே எழுதும் சுயசரிதை (Autobiography) ஒரு வகை. இரண்டாவது வகை ஒருவருடைய வாழ்க்கை வரலாற்றை இன்னொருவர் எழுதும் வாழ்க்கை வரலாற்று நூல் (Biography) இன்னொருவகை இவற்றில் சுயசரிதை ஒருவர் தாம் வாழ்ந்து கொண்டிருக்கும் காலத்திலேயே எழுதப்படுவது. ஆனால் வாழ்க்கை வரலாற்று நூல் ஒருவர் இறந்த பின்புதான் எழுதப் படுவது பொது மரபாக இருந்தாலும், வாழ்ந்து கொண்டிருக்கும் ஒருவரைப்பற்றி எழுதும் வழக்கமும் இருந்து வருகிறது.

அறிஞர்கள், பெரியோர்கள் பலரின் வாழ்க்கை வரலாறுகளை நோக்கும்போது, அவர்கள் வாழ்ந்த காலத்தை விட, மறைந்த தன் பின்னரே அவர்கள் போற்றப்படுவதை அவதானிக்கலாம். நடைமுறை வாழ்க்கையின் பூசல்கள், பிடுங்கல்களில் இருந்து விடுபட்ட ஒரு சூழலிற் மதிப்பீடு சுலபமாகின்றது. நாட்டையோ, மலையையோ அதனுள் நின்று கொண்டு பாராது தொலை தூரத்தில் நின்று பார்த்து, அதன் விகசிப்பை மதிப்பிடுவதுபோல் சிலரை மதிப்பிடுவதற்கு ''காலத்தொலை'' அத்தியாவசியமாகின்றது என்று கூறும் பேராசிரியர் கா. சிவத்தம்பி அவர்களின் கருத்து (தினகரன் 23-8-81) பொருந்தும். சமகாலத்தில் வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு சமூகத் தொண்டனையோ அல்லது இலக்கிய வாதியையோ உடனுக்குடன் மதிப்பிட்டு அவனை உற்சாகப் படுத்தும் போது அவனது பணி மேலும் கூர்மையும் விரிவும்

அடைய ஏதுவாகின்றது. அவ்வகையில் எண்பத்தொன்றில் ஈழத்தில் எழுந்த இரு வாழ்க்கை வரலாற்று நூல்களும் தனித்துவம் பெறுகின்றன.

ஈழத்து முஸ்லிம்களின் கல்வித்துறை வரலாற்றில் அறிஞர் சித்தி லெப்பை, ஏ. ஏ. அஸீஸ், அல்ஹாஜ் டாக்டர் பதியுதீன் முகமட், டாக்டர் எம். எம். உவைஸ் ஆகிய நால்வரும் மிக முக்கிய இடத்தைப் பெற்றுள்ளார்கள். இப்பின்னணியில் டாக்டர் உவைஸ் அவர்களின் கல்விப் பணியினையும் சமூகப் பணியினையும் மதிப்பீடு செய்து எழுதப்பட்ட நூலே ''உத்தமர் உவைஸ்'' என்பதாகும்.

ஈழத்து நாட்டுக்கூத்து வரலாற்றில் புகுந்தான் ஜோசேப்பு அவர்களுக்கு தனியிடம் உண்டு. யாழ்ப்பாணத்தில் வடபாங்கு, தென்பாங்குக் கூத்துக்களையும் விலாசக் கூத்துக்களையும் மேடை ஏற்றியதோடு சிறந்த நடிகராகவும் திகழ்ந்தவர். ''நாட்டுக்கூத்துக் கலாநிதி'' என்ற பட்டமும் பெற்ற அன்னாருடைய வரலாற்றையும் நாட்டுக்கூத்து இயல்புகளையும் ஆராய்ந்து எழுதப்பட்ட நூலே ''புகுந்தான் ஜோசேப் கலையுலக வாழ்க்கை வரலாறு'' என்பதாகும்

•

## பல்கலைக் கழகங்களில் தமிழ்

ஸ்ரீலங்காவில் உள்ள பல்வேறு பல்கலைக்கழகங்களில் பேராதனை, கொழும்பு, யாழ்ப்பாணம் ஆகிய பல்கலைக்கழகங்களிலேயே தமிழ்மொழி மூலம் போதனைகள் இடம் பெறுகின்றன. யாழ்ப்பாணத்திலும் பேராதனையிலும் தமிழ் இயல் கல்வி சிறந்து விளங்குகிறது. தொழில் வாய்ப்பை முன்னிட்டு தமிழைச் சிறப்புப் பாடமாகக் கற்கும் மாணவர்களின் எண்ணிக்கை மிகமிகக் குறைவாகவே உள்ளது. பேராதனை, கொழும்பு, யாழ்ப்பாணம் ஆகிய பல்கலைக்கழகங்களில் 81இல் தமிழ் தொடர்பான தகவல்கள் இங்கே தரப்படுகின்றன.

## 1981-இல் பேராதனைப் பல்கலைக் கழகம்

1. 1981-இல் தமிழை ஒரு பாடமாகப் பயின்ற மாணவர் தொகை—74
2. தமிழைச் சிறப்புப் பாடமாகப் பயின்ற மாணவர் தொகை—10
3. தமிழ்ச் சிறப்புப் பட்டதாரி மாணவர்கள் சமர்ப்பித்த ஆராய்ச்சிக் கட்டுரைகள்:

அ. செல்வி பரமேஸ்வரி கந்தையா—சமணப்பக்திப்பாடல்கள் திரு நூற்றந்தாதி

ஆ. செல்வி இந்திராணி கந்தையா—அ. பாலமனோகரின் புனை கதைகள்-ஒருமதிப்பீடு

இ. செல்வி மேரி ஆன்இமெல்டா — பெத்தலகேம் குறவஞ்சி-ஓர் ஆய்வு

ஈ. செல்வி மாலினி தம்பு — பாவலர் துரையப்பாபிள்ளையின் பாடல்களில் சமூக நோக்கு

உ. வி. மகேஸ்வரன் நிலாவணன் கவிதைகள்-ஓர் ஆய்வு

## முதுகலைமாணிப்பட்டம் பெற்றோர்

அ. செல்வி சிவகாமசுந்தரி கணபதிப்பிள்ளை—பெரியாழ்வார், குலசேகராழ்வார் பாடல்கள்-ஓர் ஒப்பியல் நோக்கு

ஆ. எஸ். செபநேசன்—இலங்கையில் அமெரிக்க மிசனரியினர் தமிழ் மொழிக்காற்றிய பணிகள்

## முதுகலை மாணிப்பட்டத்திற்காக ஆய்வு செய்வோர் விவரம்

1. Miss P. Sampasivan — Language of Manimekalai
2. Miss K. Kanapathy pillai— The Spoken language in Sri Lanka Tamil Drama 1948-70.
3. Miss C. Ratnam— A Study of the influence of massmedia in Ceylon Tamil Literature.
4. Miss K. Vadivelu— A Conparative Study of characterisation in Kantha Puranam and Kanparamayanam.
5. Miss C. Kandiah— A Study of Poetry of Pattinathar
6. Miss A. Thillainathan— A critical Study of Tirugnana sampandar as a literary Perse nality.

## தமிழ்த்துறையாளர்களின் கட்டுரைகள்

1. கலாநிதி க. அருணாசலம்:

   (i) 'பாரதியும் பராசக்தியும்'' இந்து தர்மம். பேராதனைப் பல்கலைக் கழகம்

   (ii) ''புதுமைப் பித்தன் கண்ட துன்பக்கேணி'' இளங்கதிர் பேராதனைப் பல்கலைக்கழகம்.

2. ரி. மனோகரன் :-

   (i) ''சமயக் குரவரும் ஊழ்வினைக் கோட்பாடும்' இந்துதர்மம் பேராதனைப் பல்கலைக்கழகம்.

   (ii) ''ஈழத்து நாவல்களும் சமுதாயச் சார்பும்'' சண்முகவித்தியாசாலை பொன்விழாமலர், ஊரெழு.

   (iil) ''ஆக்க இலக்கியத்தில் தமிழ் உரைநடையின் பண்பாடு'' இளங்கதிர், பேராதனைப்பல்கலைக் கழகம்

3. சி. தில்லைநாதன்- ''தமிழ் சினிமாவும் இலக்கியமும்'' இளங்கதிர், பேராதனைப் பல்கலைக்கழகம்

4. கலாநிதி அ. வேலுப்பிள்ளை

   (i) ''உடுப்பிட்டிச் சிவசம்புப் புலவர்'' இளங்கதிர், பேராதவைப் பல்கலைகழகம்

   (ii) ''உபய கதிர்காமக் கந்தரலங்காரம்'' புலோல் உபய கதிர் காமம் குடமுழுக்குமலர்''

## 1981-இல் கொழும்புப் பல்கலைக்கழகம்

1. தமிழை ஒரு பாடமாகப் பயின்ற மாணவர்கள்—7
2. தமிழைச் சிறப்புப் பாடமாகப் பயின்ற மாணவர்—3
3. முதுகலைமாணிப்பட்டத்திற்காக ஆய்வு செய்வோர்

   அ. செல்வி அன்னபூரணம் பொன்னையா ''தொல்காப் பியர்மொழி''

   ஆ. திருமதி கிருகாம்பிகை பெர்ணாண்டோ ''அருணகிரிநாதர் பாடல்கள் ஓர்:ஆய்வு

   இ. திரு. வ. கனகரட்னம்— நாவலரின் சைவ சமயப்பணி

## பி. எச். டி. ஆய்வு செய்வோர்

1. Mrs. N. Selvanayagan :

"The development of Saiva Sidhanta the Philosophy from the Hymns of the four Saiva Saints."

## கட்டுரைகள்

கலாநிதி இ. பாலசுந்தரம் (i) 'காலந்தோறும் தமிழ் இலக்கியங்களில் நாடகப் பண்புகள்''

(ii) ''பன்மொழிப் பண்டிதர் சுவாமி ஞானப்பிரகாசர்'' பாதுகாவலர், சுவாமிஞானப்பிரகாசர் முத்திரை வெளியீட்டுச் சிறப்பிதழ் 15, 22-5-81

(iii) ''வளர்ச்சிப் பாதையில் ஈழத்துத் தமிழ் நாடகங்கள்'' புதுமுறைக் கட்டுரைக் கோவை—1, தமிழ் வளர்ச்சிக் கழகம், காரைநகர்.

வானொலி கல்விச் சேவையில் ஒலிபரப்பாகிய 30 நிமிட நிகழ்ச்சிக்குரிய பிரதிகள்—(14-4-81—31-12-81)

1. புதுவருடப்பிறப்பு—நம்பிக்கைகளும்—மரபுகளும்
2. மனித வாழ்வும் சடங்குகளும்
3. பாரம்பரிய விளையாட்டுக்களும், பொழுது போக்குகளும்
4. மீனவர் வாழ்வும் வளமும்
5. தேசிய வீரர்கள்
6. உழவர் வாழ்வும் வளமும்
7. தமிழர் பண்பாட்டில் தாலாட்டுப் பாடல்கள்
8. தமிழர் வாழ்வில் பழமொழிகள்
9. சிறுவர் வளர்ச்சிப் பாதையில் பாடல்கள்
10. காலந்தோறும் வளர்ந்த வழிபாட்டுப் பாடல்கள்
11. தமிழர் பண்பாட்டில் விடுகதைகள்
12. கிராமிய நாடகங்களில் தென்மோடிக் கூத்துக்கள்
13. கிராமிய நாடகங்ளில் வடமோடிக் கூத்துக்கள்
14. கிராமிய நாடகங்களில் விலாசங்கள்
15. கிராமிய நடனங்களில் வசந்தன் ஆட்டம்
16. காவடி ஆட்டம்
17. மலையகக் கலைவடிவங்கள்

18. மலையகப் பாரம்பரியக் கூத்துக்கள்
19. காமன் கூத்து
20. ஈழத்தில் கண்ணகி வழிபாடு
21. சித்தர்களும் அவர்களது பாடல்களும்
22. தமிழ் இலக்கியத்தில் சிலேடை அலங்காரம்
23. தூது இலக்கியச் சுவை கேட்போம்
24. தமிழர் பண்பாட்டில் கனவுகள்
25. தமிழர் பண்பாட்டில் காகங்கள்
26. தமிழர் பண்பாட்டில் சங்கும் சங்க நாதமும்
27. தமிழர் பண்பாட்டில் வில்லிசைக்கலை
28. கிராமியப் பண்பாட்டில் தோலிசைக் கருவிகள்
29. தமிழர் பண்பாட்டில் புல்லாங்குழலிசை
30. யாழும் வீணையும்
31. பாரதியார் பாடல்களில் விந்தைச் சுவை
32. தீயும் தீயோடு வளர்ந்த கலைகளும்
33. தமிழர் போற்றிய போர்க்கலை

வானொலி உரையாடல்

1. மரபுக்கலைகளைப் பேணல்
2. சிலப்பதிகாரம் காட்டும் தமிழர் பண்பாடு

81 இல் யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்

1. அ. தமிழை ஒரு பாடமாகச் செய்தோர்—220
   ஆ. தமிழைச் சிறப்பாகப் பயின்றவர்கள்—26
2. எம்.ஏ. பரீட்சைக்குப் பதிவு செய்தோர்
   அ. பெயர்—செல்வி அம்மன்கிளி கைலாசநாதன்
      தலைப்பு: ராஜம் கிருஷ்ணனின் நாவல்கள்
   ஆ. பெயர்—இ. சிவகுருநான்
      தலைப்பு: இலங்கையில் தமிழ்ப் புதினப் பத்திரிகைகள் தொடர்பான ஆய்வு—1931—60 (தினகரன் தொடர்பான சிறப்பு ஆய்வுத்தகவல்களுடன்)
3. டாக்டர் (Ph.D) பட்டத்திற்கு

நா. சுப்பிரமணியம்—''தமிழ் யாப்பு வளர்ச்சி''
மனோன்மணி சண்முகதாஸ்—தமிழ் இலக்கணத்தின் தத்துவ அடிப்படைகள்

4. ஆய்வுக் கட்டுரைகள்—(மாணவர்களுடையவை) துறைக்குச் சமர்ப்பிக்கப்பட்டவை

அ. பெயர்—செல்வி த. குணலஷ்மி
"வன்னிப்பகுதி நாட்டார் வழக்கியல்"
புதுக்குடியிருப்பை மையமாகக் கொண்ட ஆய்வு

ஆ. பெயர்—செல்வி இ. திசவீரசிங்கம்
"மட்டக்களப்புப் பிரதேசத்தின் இலக்கிய வெளிப்பாடுகள்"

இ. பெயர்—செல்வி ரூபி வலன்ரீனா
"இலங்கையில் தனித்தமிழ் இயக்கம்"

ஈ. பெயர்—பாலசிங்கம் சுகுமார்
"இலங்கையில் தமிழ் இன உணர்வின் இலக்கிய வெளிப்பாடு"

(மேற்படி கட்டுரைகள் தமிழ்த்துறைக் கருத்தரங்குகளில் படிக்கப் பட்டவை)

5. ஆசிரியர்களின் முயற்சிகள்

அ. Dr. S. Suseendrarajah, "Aspect of Verbs system in Jaffna Tamil." International Jeurnal of Dravidian Linguistics, Vol. X, No 2, Kerala India. 1981.

ஆ. திருமதி யோகேஸ்வரி கணேசலிங்கம் எம்.ஏ.
திரு.வி. கலியாணசுந்தரனார் ஆக்கங்களில் மேலைப்புலோலி நா. கதிரவேற்பிள்ளையின் தாக்கம்—5 வது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாடு, மதுரை 1981

இ. எம்.ஏ.நு. மான்
அரபுத்தமிழ்—(தமிழ்த்துறை ஆய்வரங்கு)

ஈ. பேராசிரியர் கலாநிதி கா. சிவத்தம்பி
ஈழத்திற் கவிதைப் பாரம்பரியம்
• (தமிழ்த்துறை ஆய்வரங்கு)
Drama in Ancient Tamil Society, New Century Book House, Madras. PP. I-XXI—1443.

உ. நா. சுப்பிரமணியம் எம்.ஏ.

1. தமிழ் யாப்பிலக்கண மரபில் ஓசை—5 ஆவது அனைத்துலகத் தமிழாராய்ச்சி மாநாடு, மதுரை 1981, ஜனவரி 6

2. வரலாற்று நோக்கில் தமிழ்ச் செய்யுளிலக்கண நூல்கள்—உலகத் தமிழாராய்ச்சிக்கு வித்திட்ட தனிநாயக அடிகளார் நினைவுமலர், மதுரை 1982
3. உபநிடதமும் திருமுறையும், இளவாலை, சித்ரமேழி
4. ஞானவைரவர் கோவில் கும்பாபிஷேகமலர், 1981
5. கவிதையும் யாப்பும், மல்லிகை 1981 ஆகஸ்ட், யாழ்ப்பாணம்
6. இலக்கியப் பிரச்சினைகள் (ஈழத்தமிழர் பிரச்சினைகளும், ஈழத்தின் நவீன இலக்கியமும் தொடர்பான ஆய்வு) சுடர் 1980 மே முதல் 1981 மே வரை தொடராக வெளிவந்தது—கொழும்பு

## கருத்தரங்கு உரைகள்

1. வீரகேசரியில் படைப்பிலக்கியப்பணி
   தமிழ்க்கலைஞர் வட்டக் கருத்தரங்கு, 1981-05-23, கொழும்பு
2 ஈழத்துத் தமிழ் நாவலிலக்கியம்—சென்னை மாநிலக்கல்லூரித் தமிழ்த்துறையில் பேராசிரியர் மெ. சுந்தரம் தலைமையில் 1981-09-01
3. ஈழத்துத் தமிழ் இலக்கியம்—தமிழ்நாடு நாகர்கோவில் ''காகங்கள்,' இலக்கிய வட்டம், எழுத்தாளர் சுந்தர ராம சாமி தலைமையில் 22-8-1981
4. தமிழ் இலங்கை—சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ் இலக்கியத்துறைக் கருத்தரங்கு—1981-09-07.

## வானொலி உரைகள்

1. ஈழத்துத் தமிழ் நாவலில் கதாபாத்திரங்கள்
2. வன்னி நாட்டின் மண்வாசனை நாவல்கள்
3. பாரதியின் கண்ணன்பாட்டு — கவித்திறன்
4. யாப்பும் கவிதையும்

## வானொலிக் கலந்துரையாடல்

1. ''கம்பராமாயணக் கதாபாத்திரங்கள்''
2. டாக்டர் மு. வரதராசனாரின் தமிழ்ப்பணி

ஊ. கலாநிதி அ. சண்முகதாஸ்

1. ''சுவாமி ஞானப்பிரகாசரும் மொழியாய்வும்''
   சுவாமி ஞானப்பிரகாசர் சிந்தனையும் பணியும், (தொகுப்பாசிரியர் கா. இந்திரபாலா) சுவாமி ஞானப்

பிரகாசர் நூற்றாண்டு விழாக்குழு, ஆயர் இல்லம், யாழ்ப்பாணம், 1981, பக். 27-34.

2. "தமிழ்ப்பெரும் பாரம்பரியத்தில் தவத்திரு தனிநாயக அடிகளார்", அருட்டிரு தனிநாயகம் அடிகள் நினைவு மலர், மக்கள் குரல் வெளியீடு, யாழ்ப்பாணம், 1981.

3. "கண் திறக்க வேண்டும்" (பாரதி பற்றிய விமரிசனக் கட்டுரை) மல்லிகை, நவம்பர், 1981

4. "காரைக்காலம்மையாரின் அன்பு நெறி" மஹாகும்பாபிஷேக மலர், மீசாலை, 1981.

5. "பக்தி செய்து பிழைக்கச் சொன்னார் (பாரதி பற்றிய விமர்சனக் கட்டுரை), இந்துதர்மம், இந்து மாணவர் மன்றம், பேராதனைப் பல்கலைக்கழகம், பேராதனை, 8191.

## வானொலிப் பேச்சுகள்

1. "தமிழ் இலக்கியத்தில் விமரிசனத் துறையின் வளர்ச்சி"
2. "பாரதியும் பாரதிதாசனும்"
3. "நாவல் வசனநடையின் இலக்கியத்தன்மை"
4. "பாரதியின் கண்ணன் பாட்டில் அணிநயம்"
5. இலக்கியமும் இன்றைய சமுதாயமும்"
6. ஈழத்தில் தமிழியல் வளர்ச்சியில் சதாசிவ ஐயரின் பணி'
7. "ஈழத்துத் தமிழியல் வளர்ச்சியில் பல்கலைக்கழகங்களின் பங்கு"

## வானொலி உரையாடல்கள்

1. "மரபுக் கலைகளைப் பேணுதல்"
2. "சிலப்பதிகாரம் காட்டும் பழந்தமிழ் மக்களின் பண்பியல்களும் நெறிமுறைகளும்".
3. "சங்க இலக்கியங்கள் பின்வந்த இலக்கியங்களில் ஏற்படுத்திய தாக்கம்".
4. "குறள்வழி—இலக்கியம் சிலப்பதிகாரம்".
5. "கம்பராமாயணக் கதாபாத்திரங்கள்".

## இலக்கிய ஏடுகள் பத்திரிகைகள்

ஈழத்தில் முதன்முதலாக 1841 இல் "உதயதாரகை" என்ற பத்திரிகை வெளிவந்தது. கிறிஸ்தவ சமயப் பிரச்சாரத்திற்காக ஆரம்பிக்கப்பட்ட ஈழத்துப் பத்திரிகை வரலாறு இன்று வளர்ச்சி யடைந்து இலக்கியம், அரசியல், கலாசாரம், சமயம், சமூக பொருளாதாரக் கோட்பாடுகள் என்ற அடிப்படையில் சென்று கொண்டிருக்கிறது இப்பத்திரிகைகள் இயக்க ரீதியாக இயங்கி வருகின்றன என்பதும் மறுக்க முடியாத உண்மை "மார்க்ஸீய வாதம்", 'மரபுவழி', "முற்போக்கு" என்ற கோட்பாட்டு ரீதி யாகவே இயங்குகின்றன. இயக்க ரீதியாக வெளிவரும் சஞ்சிகை களுக்கு இயக்க ரீதியான வாசகர் வட்டங்களும் அமைக்கப்பட்டு விமரிசனங்களும் கருத்துப் பரிமாறல்களும் நடைபெற்று வருகின்ற மையும் இச் சஞ்சிகைகளின் வளர்ச்சிக்கும் பணிக்கும் துணையாக அமைகின்றன.

## இலக்கிய ஏடுகள்

ஈழநாட்டிலே நவீன இலக்கியத் துறையிலீடுபாடு கொண்ட இலக்கிய ஏடுகள் ஐம்பதுகள் தொடக்கம் வெளிவரத்தொடங்கின. அதற்கு முன்னரும் இலக்கிய ஆர்வமுடைய ஏடுகள் வெளிவந் திருப்பினும் இலங்கை சுதந்திரமடைந்த பின்பு (1948) வெளிவந்த ஏடுகள் ஈழத்து இலக்கியப் பிரக்ஞையை ஓர் இயக்கமாகவே மேற் கொள்ளலாயின. இப்போக்குத் தமிழகத்திற்கும் பொருந்தும். இது பற்றிய ஒப்பீட்டாய்வு விரும்பத்தக்கது.

"தமிழ் மெகசீன்" என்னும் பெயருடன் ஒரு மாத வெளியீடு 1831 தொடக்கம் 1836வரை "சென்னை மதத் துண்டுப் பிரசுரக் கழகம்" என்னும் சங்கத்தால் அச்சிடப்பட்டதென்றும், இவ் வெளியீட்டின் தமிழ்ப் பெயர் யாதெனத் திட்டமாகத் தெரிய வில்லை என்றும் ஆராய்ச்சி அறிஞர் மயிலை சீனி வேங்கடசாமி கூறுவார் (வீரகேசரி 8-3-81). இதுபோன்றே சமயவளர்ச்சி கருதிய தாகவே ஈழநாட்டின் சஞ்சிகையின் தோற்றமும் அமைவதாயிற்று. 1941ல் அமெரிக்க மிஸனரிமார் தமது சமயப்பிரசார நோக்கத் திற்காக, "உதயதாரகை" அல்லது "Morning Star" என்ற பத்திரிகையைத் தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளியிட்டனர். இப் பத்திரிகை யாழ்ப்பாணத்தில் வெளிவந்தது. அதே ஆண்டில் "உதயாதித்தன்" என்ற பத்திரிகையை சைமன் காசிச் செட்டி அவர்கள் கொழும்பில் வெளியிட்டார்கள்.

1841 முதல் 1972 வரை ஈழத்தில் 242 தமிழ்ப் பத்திரிகைகள் வெளிவந்துள்ளதாக இலங்கைத் தேசியச் சுவடிகள் திணைக்களப் பதிவேடுகள் கூறுகின்றன. ஆனால் கடந்த பத்து ஆண்டுகளில் சஞ்சிகைகளின் வளர்ச்சி மிகத் துரிதகதியடைந்துள்ளது. தரமான இலக்கியப் பத்திரிகை என்ற அளவுகோலின் அடிப்படையில் 1930இல் வெளிவந்த "ஈழகேசரி"யின் உதயத்தோடேயே ஈழத்துப் பத்திரிகைகளின் தமிழ்ப் பணியும் தொடங்குகிறது எனலாம்.

ஈழத்தில் 70-க்குப் பின்பு சஞ்சிகைகளின் வளர்ச்சி வேகம் பெற்றுள்ளது. ஆயினும் எண்பதுகளில் இவ்வேகம் எண்ணிக்கை அடிப்படையில் குறைந்தாலும் தரமான சஞ்சிகைகள் தொடர்ந்து வெளிவந்துகொண்டிருந்தன. 81இல் வெளிவந்த சஞ்சிகைகளில் இடது சாரி அல்லது முற்போக்கு இயக்கக் கருத்துக்களை முன்னிறுத்தும் கலை, இலக்கிய ஏடுகளாக அலை, அனல், கதம்பம், தீர்த்தக்கரை, மல்லிகை முதலியவற்றை முக்கியமாகக் குறிப்பிடலாம். இச் சஞ்சிகைகளில் தனிமனிதப் பிரச்சினைகள், சமூக, பொருளாதாரப் பிரச்சினைகள் முதலியவை கலை, இலக்கியப் படைப்புகளாக விமரிசனக் கண்ணோட்டத்துடன் வெளியிடப்பட்டன. இடதுசாரி, உதயசூரியன், செங்கொடி, தொழிலாளி முதலான பத்திரிகைகள் அரசியல், தொழிற்சங்கங்கள் பற்றிய ஆக்கங்களைக் கொண்டு வெளிவந்தன. இவற்றைவிட இஸ்லாம், கிறிஸ்தவம், சைவம் என்பனவற்றின் களத்தில் தோன்றி அவற்றுக்கு விளக்கம் கொடுக்கும் ஏடுகளும் தோன்றித் தமிழ்ப் பணி புரிந்து வருகின்றன. வழமைபோல் 81லும் பொருளியல் நோக்கு என்ற மாதசஞ்சிகை ஈழத்தில் பொருளாதாரப் பிரச்சினையையும், உலகப் பொருளாதார நிலைகளையும் விளக்கும் பொருளியல் அறிஞர்களின் கட்டுரைகளைத் தாங்கி வெளிவந்தது.

## சஞ்சிகைகளின் பணிகள்

1. புதிய எழுத்தாளர்களுக்குக் களம் அமைத்துக் கொடுத்து அவர்களை இலக்கிய உலகுக்கு அறிமுகப்படுத்தி ஊக்குவித்தமை.
2. பழைய எழுத்தாளர்களின் ஆக்கங்களைத் தொடர்ந்து வெளியிட்டமை.
3. ஈழத்தில் தரமான விமரிசனப்போக்கு தலைதூக்குவதற்கு ஆரோக்கியமான ஒரு சூழலை ஏற்படுத்திக் கொடுத்தமை.

4. ஈழத்து ஆக்க இலக்கிய வளர்ச்சியின் தொடர்ச்சியான பணிகள் அமைய உதவியமை.

5. சோசலிஸம், மார்க்சிஸம், ரியலிசம் என்ற அடிப்படையில் வெளிவரும் இலக்கிய ஆக்கங்கள் சமூக விழிப்புணர்ச்சியும் பகுத்தறிவு வாதமும் வளரத் துணையாக அமைந்தவை.

6. 81 இல் அரசியல் கெடுபிடிகளின் உண்மை நிலைகளை மக்களுக்கு உணர்த்தியமை.

7. 81 இல் புதுக் கவிதைபற்றிய விளக்கங்களும், விமரிசனங்களும் வெளிவந்த ஈழத்தில் புதுக்கவிதையாளருக்கு மேலும் ஒரு பிடிப்பை ஏற்படுத்தியமை.

ஈழத்தில் தமிழ்ச் சஞ்சிகைகள் என்று நோக்கும்போது ஓரிரு ஏடுகளைவிட ஏனையவை யாவும் கலை, இலக்கியச் சார்புடையனவே. 'சஞ்சிகைகள்' என்ற சாதனம் யாப்பிலக்கியத்தைச் சேர்த்து இன்னும் பிற துறைகளையும் கவனிக்கக் கூடியது. சிற்றேடுகள் இன்னமும் இலக்கியத்தையே குறியாகக் கொள்ள வேண்டிய கட்டாயத்தில் இருந்தபோதிலும் கூட கருத்துக்களைக் கொண்டு செல்லும் சாதனம் என்ற அளவில் பிற துறை நிகழ்வுகளை ஆர்ந்து கொள்ளவேண்டியது அவசியமாகும். இன்றைய சிற்றேடுகள் படைப்பிலக்கியத்தாரால் நடாத்தப்படுவதால் இலக்கியமே முதன்மை பெறுவது தவிர்க்க முடியாததாகிறது. ஆனால் இந்த மூளைக்களத்தில் இதர கலைகள் வேண்டப்படாதவை அல்ல. அவை மகிழ்ச்சியுடன் உள்ளே இழுத்துக் கொள்ளப்பட வேண்டிய உணர்வுகள் (வீரகேசரி 14-6-81). பெரும்பாலான ஈழத்துச் சஞ்சிகைகள் இலக்கியக் களத்தில் தோற்றம் பெற்றாலும், அவற்றுள் கணிசமானவை அரசியல், சமூகப் பார்வை, பொருளாதாரம், தொழிலாளர் பிரச்சினை, சமயம் என்ற பல்வேறு விடயங்களையும் தழுவி வருதல் அவற்றின் புதிய வளர்ச்சி நெறியையே காட்டுகின்றது. இவ்வகையில் வசந்தம், மல்லிகை, அலை, தீர்த்தக்கரை, கிருதயுகம், கைத்தொழில், பொருளியல் நோக்கு முதலானவை இலக்கியத்திற்கு அப்பாலும் காலூன்றிப் பணி செய்து வருகின்றன.

யாழ்ப்பாண மாவட்ட சன சமூக நிலையங்களின் ஒன்றியம் நடாத்தும் சமூகத் தொண்டன் என்ற சஞ்சிகை, அகில இலங்கை ரீதியில் சிறுகதைப் போட்டி, கவிஞர் நீலாவணனின் நினைவாக

கவிதைப் போட்டி என்பனவற்றை நடாத்தியது. 81 இதழ்களில் பேராசிரியர் க. கைலாசபதி எழுதிய ''எமது கவிஞர்கள்'' என்ற கட்டுரைத் தொடர் விமரிசனப் போக்கில் அமைந்தவையாகும்.

''அழுகியல் இலக்கியங்களில் இருந்தும் நரமாமிசக் கலைப் படைப்புக்களில் இருந்தும் எங்களது குழந்தைகளையும் இளைஞர் களையும் காப்பது நமது தட்டிக் கழிக்க முடியாத கடமை. பிஞ்சு நெஞ்சில் நஞ்சு பாயவிடக் கூடாது. அவர்களுக்கு ஆரோக்கியமான சிந்தனைத் தெளிவை உண்டாக்கப் பொது மக்களின் பக்கபலத்துடன் கிருதயுகம் இளைஞர்களையும் குழந்தைகளையும் நோக்கி வெளிவருகிறது,'' என்கிறது கிருத யுகம் சஞ்சிகையின் ஆசிரியர் தலைப்பு.

ஏற்கனவே வெளிவந்த வசந்தம் இடைநடுவே நின்றுபோய் மீண்டும் 81இல் காத்திரமான படைப்புக்களுடனும் பேராசிரியர் கைலாசபதி, பேராசிரியர் கா. சிவத்தம்பி, மற்றும் செ. யோக நாதன், பொன்னிலன் முதலியோரின் ஆக்கங்கள் பிற நாட்டுக் கதைகள் என்பவற்றோடும் வெளிவருவதாயிற்று.

## நாளேடுகள்

ஈழத்தில் நாளேடுகளாகத் தினகரன், வீரகேசரி, தினபதி, ஈழ நாடு, சுதந்திரன், மித்திரன் முதலிய பத்திரிகைகள் வெளிவந்து கொண்டிருக்கின்றன. புதினப் பத்திரிகைகளாகிய இவ்வேடுகளின் பல்வேறுபட்ட புதினங்கள் பிரசுரமாகின. இவற்றுள் தினபதியில் மாணவர்களும் இளைஞர்களும் வெளியிட்ட கையெழுத்துப் பத்திரிகைகள் பற்றிய முழு விவரங்களும் வெளிவந்து கொண் டிருந்தமை தனிச் சிறப்பாகும். ஈழத்தில் பிரசுர வசதியும் வர்த்தக வசதியும் குறைவாக இருந்த சூழலில் ஆக்க இலக்கியங்கள் நூல் வடிவில் வெளிவரக்கூடிய வாய்ப்புகள் மிகக்குறைவாகவே காணப் பட்டன.

எனவே ஆக்க இலக்கியப் பிரசுரகளமாகப் பத்திரிகைகளே இலக்கிய கர்த்தாக்களுக்கு கைகொடுத்துதவின. ஞாயிறு சிறப் பிதழ்கள் இப்பணியினைச் சிறப்பாக மேற்கொண்டன. ஈழத்து இலக்கிய வளர்ச்சியில் ஞாயிறு இதழ்களின் பணியும் மகத்தானது.

## ஞாயிறு சிறப்பிதழ்கள்

### தினகரன் வாரமஞ்சரி

81 இல் ஈழத்தில் வெளிவந்த வார இறுதிப் பத்திரிகைகளில் தினகரன் வாரமஞ்சரியின் கலை, இலக்கியப்பணி மகத்தானது.

ஒரு சிறுகதை, மினிக்கதை, மணிக்கதை, உருவகக்கதை, குறுங் கதை என்பவற்றில் ஒன்றோ பலவோ வாரந்தோறும் வெளி வந்தன. கவிதைச்சோலை என்ற தலைப்பில் புதுக் கவிதை எழுத் தாளர்களின் புதிய படைப்புகள் அரங்கேறின. இலக்கிய உலகம் என்ற பகுதியில் கலை, இலக்கியச் செய்திகள் பிரசுரம் பெற்றன. வாரம் ஒரு சிறுகதை என்ற தலைப்பில் ஒரு பழைய சிறுகதையும், மேலும் இலக்கியக்கட்டுரைகள், உலக அரசியல் அரங்கு, சினிமாத் துறை, வைத்தியம் முதலான பகுதிகள் தினகரன் வாரமஞ்சரியை அலங்கரித்துத் தமிழ்வளர்ச்சிக்குப் பணியாற்றியமை மதிப்பிடப் படவேண்டியதாகும்.

(i) இலக்கிய உலகம் (இராமன்—குகன்)

இலைமறை காய்போன்றிருக்கும் எழுத்தாளர்கள், கவிஞர்கள், இலக்கியப் பற்றுள்ளோர் மக்களின் முன்னே, புகழ்பெற்று நல்ல பெயர்பெற்ற எழுத்தாளர்கள் முதலியோர் இன்று மறைந்து கொண்டு போகிறார்கள் என்பதை மையமாக வைத்து அவர்களை ஒருதடவை நினைவூட்டி உற்சாகப்படுத்தும் வகையில் அமைந்த தினகரன் வாரமஞ்சரியின் இலக்கிய உலகம் என்ற பகுதி பாராட் டப்படத்தக்கது.

(ii) வாரம் ஒரு சிறுகதை—(ராமேஷ் – ரவீந்திரன்)

இத் தலைப்பின்கீழ் வாரந்தோறும் ஏற்கனவே வெளிவந்த சிறுகதை ஒன்று வெளியிடப்பட்டது. அச் சிறுகதை ஆசிரியரின் இலக்கியப் பணிகளை மதிப்பீடு செய்து அவ்வெழுத்தாளன் வாசகர்களுக்கு மீண்டும் நினைவூட்டப்பட்டான். இப்பகுதி பின் வரும் வகையில் முக்கியத்துவம் பெறுகிறது.

அ. பழைய எழுத்தாளர்களைப் பற்றிய முழு விவரங்களைத் தருதல்.

ஆ. வாசகர்களுக்குப் பழைய கதையை மீண்டும் வாசிக்க வாய்ப்புக் கிடைத்தல்.

இ. பழைய தரமான சிறுகதைகள் புதிய எழுத்தாளர்களுக்கு வழிகாட்டியாக அமைதல்.

1981 இல் வாரந்தோறும் ஒரு சிறுகதை என்று தலைப்பில் வெளிவந்த 47 சிறுகதைகள் பற்றிய விவரங்கள் அட்டவணை 11இல் தரப்பட்டுள்ளன. இந்த 47 கதையாசிரியர்களில் 25பேர் தமிழகத்தைச் சேர்ந்தவர்கள்; 22பேர் ஈழத்தவர்கள். சிறுகதையின்

தரமும், அதன் கட்டுக்கோப்பும் நிலை தளர்ந்த நிலையில் அவற்றுக்கு உரம் ஊட்டவேண்டி, ஆதர்சமாக இக் கதைகள் வெளியிடப் பட்டனவோ என எண்ணத் தூண்டுகிறது.

(iii) எமது ஞாயிறு சிறுகதை

இவ்வாண்டில் தினகரனில் 52 புதிய சிறுகதைகள் வெளி வந்தன. இவற்றில் செ. யோகநாதன், தாமரைச் செல்வி, சு. வேலுப்பிள்ளை, புலோலி இரத்தினவேலோன், செந்தூரன்' ராஜேஸ்வரி பாலசுப்பிரமணியம், திருமலைஞானா, புவியன், எம். ஏ. றஹீமா முதலானோரின் கதைகள் குறிப்பிடத்தக்கவை. இவற்றின் கதைக்கரு பொதுவாகச் சாதி அமைப்பு, காதல் பிரச்சினை, கணவன்—மனைவி குடும்ப விவகாரங்கள், விவசாயிகள் பிரச் சினை, நாடற்றவர் பிரச்சினை, உயர்கல்விப் பிரச்சினை பல்வேறு பட்ட சுரண்டல் நடவடிக்கைகள், சீதனப்பிரச்சினை, புரட்சித் திருமணம், வாழ்க்கைச் செலவு அதிகரிப்பு, மத்தியகிழக்கு நாடுகளில் வேலை செய்யும் பெண்கள் நிலை முதலிய அம்சங்களே முதன்மை பெற்றன. இலங்கையின் பல பாகங்களில் இருந்தும் எழுதப்பட்ட கதைகள் பிரசுரிக்கப்பட்டன. மண்வாசனை கொண்ட மொழி நடை, கலாசாரப் பின்னணிகள் அவர்களுடைய எழுத்துக்களிலும் முத்திரையைப் பொறித்தன. எழுத்தாளர் கையாண்ட பேச்சு மொழிபாத்திரங்களுக்கும் பிரதேசத்திற்கும் ஏற்பஅமைந்திருந்தது. எம். ஏ, ஹமீமா தினகரனில் (22-3-81) எழுதிய மரண அறிவித்தல் என்ற சிறுகதையில் கொழும்பு முஸ்லிம்களின் பேச்சு வழக்குகள் பதிவு செய்யப்பட்டுள்ளமையை ஓர் உதாரணமாகக் காட்டலாம்.

> "றேடியோவுக்கு நியூஸ் குடுத்த மாதிரி மிச்சம் இரிக்கிற வேலவெட்டிகளையும், அவனுக்கு-அந்த மாஸ்டருக்கு வந்து பார்க்கச்சொல்லுங்க. எல்லா பாரத்தையும் ஏண்ட தலயில போட்டுக் கொண்டு செஞ்சதுக்கு எனய பழைய செருப்பால அடிச்சாலும் போதாது. பள்ளி கமிட்டிய கூட்டி இவரையும் அவளயும் கூட்டி விசாரிச்சுக் கொள்ளுறன். எனக்கு இனி இங்க என்ன வேலை."

(iv) கவிதைச் சோலை

சுமார் ஆறு அல்லது ஏழு புதுக்கவிதை எழுத்தாளர்களின் படைப்புகள் வாரந்தோறும் வெளிவரலாயின. ஏ. எச். சித்திக் காரியப்பர் இதனைத் தொகுத்துத் தந்தார்.

(v) இலக்கியக் கட்டுரைகள்

இவ்வாண்டில் முப்பத்துக்கு மேற்பட்ட தரமான கட்டுரைகள் இடம் பெற்றன. அவற்றுள் பின்வரும் தலைப்புக்கள் குறிப்பிடத் தக்கவை. ''திருக்குறளும் விவிலியமும்'', ''பண்டிதமணி கதிரேசன் செட்டியார் தமிழ்ப் பணி'', ''நா. கதிரவேற் பிள்ளையும் பாரதியும்'' ''வீரமாமுனிவர் ஆற்றிய தமிழ்ப்பணிகள்'', ''பிச்சாமூர்த்தியின் நினைவுகளும் எழுத்தும்'', ''ஈழத்து நாடகத் தந்தை அச்சுவேலி தம்பி முத்துப் பிள்ளை'', ''வ. வே. சு. ஐயரின் இலக்கியப் பணிகள்,'' ''தமிழ் இலக்கிய வரலாற்றில் மகாகவி பாரதியார்'', "''சோவியத் யூனியனில் தமிழ் ஆராய்ச்சி.''

(vi) உலக அரசியல் அரங்கு

அவ்வப்போது உலகஅரசியல் அரங்கில் காணப்பட்ட அரசியல் நெருக்கடிகளையும் பிரச்சினைகளையும் பற்றி க. அருமை நாயகம் எழுதி வந்தார். இந்தியா எதிர்நோக்கிய பிரச்சினைகள், அணி சேரா இயக்கம், மத்திய கிழக்கு நாடுகளின் பிரச்சினைகள், கம்பூச்சிய விவகாரம், வல்லரசுகளின் நியூற்றன்குண்டு பற்றிய கட்டுரைகள் ஆகியன முக்கியத்துவம் வாய்ந்தவை.

(vii) சித்திரத் தொடர்கதைகள்

ஈழத்தில் சித்திரத் தொடர்கதைச் சஞ்சிகைகள் மிக மிகக் குறைவு. அந்த வெற்றிடத்தை வாரமஞ்சரிகள் சமன் செய்தன. தினகரன் வாரமஞ்சரியில் சிறுவர்களுக்காக எழுதப்பட்ட ''வேதாளன்'' என்ற சித்திரத் தொடர்கதையும், ''சிந்துபாத்தின் கடற்பயணம்'' என்ற சித்திரத் தொடர்கதையும் தொடர்ந்து வெளிவரலாயின.

(viii) மேலைக்கலையுலகம்

மேனாட்டுக் கலைஇலக்கிய உலகங்களில் நிலவும் தற்போதைய போக்குகளைத் திரட்டித் தருவதே இந்த வாராந்தப் பந்தியின் நோக்கம். குறிப்பாக ஐரோப்பிய, அமெரிக்க, ஆஸ்திரிய, கனேடிய விடயங்களோடு, ஆசிய, ஆபிரிக்க, இலத்தீன் அமெரிக்கக் கலைகள், இலக்கியங்கள் போன்றவை மேனாட்டுடன் சம்பந்தப் படும்போது அவைபற்றிய தகவல்களும் தரப்பட்டன. இத்தொடர் 12-4-81 முதலாக வெளிவரலாயிற்று.

(xi) மேற்குறிப்பிட்ட சிறப்பம்சங்களைவிட ''கண் சிமிட்டிய நட்சத்திரங்கள்'' என்ற தலைப்பின் கீழ் மருதூர் மஜீத் இலக்கிய

விடயங்கள், உலக அதிசயங்கள் வரலாற்றுச் செய்திகள், உலகப் பெரியார்கள் பற்றிய பல்வேறு விடயங்களைத் தொகுத்துத் தந்தார். அதேபோன்று ''எழுத்துலக சஞ்சாரம்'' என்ற மகுடத்தில் நீள்கரைநம்பி என்பவர் எழுத்துலகில் சஞ்சரித்து எழுதினார். கோகிலா மகேந்திரன் என்பவர், ஈழத்துப் பெண் எழுத்தாளர்களைப் பற்றி ''பெண் பிரமாக்கள்'' என்ற தலைப்பில் எழுதி வந்தார். டாக்டர் மு. வ. கயிலாயநாதன் 'உங்கள் ஆரோக்கியம்' என்ற தலைப்பில் வைத்திய அறிவுரைகளை வாசகர்களுக்கு வழங்கினார். ''புத்தக உலகம்'' என்ற தலைப்பில் புதிய நூல் வெளியீட்டுச் செய்திகளும், நூல் விமரிசனங்களும் இடம்பெற்றன.

## வீரகேசரி வார மலர்

ஈழத்துத் தமிழ் இலக்கிய வரலாற்றிலே பத்திரிகை நிறுவனங்களுள் வீரகேசரி நிறுவனம் தனியிடம் பெறுகிறது. பத்திரிகைத் துறை மூலம் மட்டுமன்றி நூல் வெளியீட்டுத் துறையிலும் அரிய சாதனைகளை இந் நிறுவனம் சாதித்துள்ளது. சிறுகதை, கவிதை, நூல் விமர்சனம், பயணக் கட்டுரைகள், இலக்கியக் கட்டுரைகள், சித்திரத் தொடர்கதைகள், இலக்கிய விமர்சனக் கட்டுரைகள் என்பனவற்றைத் தாங்கி வீரகேசரி வாரமலர் வெளிவருகிறது.

### (i) சிறுகதை

வாரந்தோறும் ஒரு புதிய சிறுகதை வெளிவருவது வழக்கம். வீரகேசரியில் சிறுகதை எழுதியோரில் செ. குணரத்தினம், அ. பாலமனோகரன், குந்தவை, காவலூர் எஸ். ஜெகநாதன், தாமரைச் செல்வி, மாத்தளைச் சோமு, புதுவையூர் அ. இரத்தின வேலோன், திக்குவெல்லைக் கமால், பெனடிக்ற் பாலன் முதலியவர்களின் கதைகள் பாராட்டத் தகுந்தவை.

### (ii) சிறுவர் குறுங்கதை

எஸ். ரி. மூர்த்தி சிறுவர்களுக்கான குறுங்கதைகளை எழுதி வந்தார்.

### (iii) சித்திரத் தொடர்கதை

''பகலிலே கனவுகள்'' ''அண்டமெலாம் தேடி'' ''சித்திர சிகிச்சை'' என்ற மூன்று கதைகள் 81 இல் வெளிவந்தன. இவை சிறுவர் இலக்கிய ஆர்வத்தைத் தூண்டும் வகையில் அமைந்தன.

(iv) உரைவீச்சு (புதுக் கவிதை)

வாரந்தோறும் புதுக் கவிதையாளர் பலர் இப்பகுதியில் அரங்கேற்றம் கண்டனர். உதாரணமாக, புதுக் கவிதை ஒன்று இங்கு தரப்படுகின்றது.

குடைகள்

''உழைக்கும் நாங்கள்
குடைகளைப் போன்றோர்
வேண்டும் போதினில்
உழைத்துக் கொடுப்போம்,
வேண்டாப் போதினில்
ஒதுக்கப்படுவோம்,
வெயிலும், மழையும்
எங்கள் உடம்பில்! ஆனால்
எங்கள் உழைப்பின்
பலன் எமக்கில்லை. (2-5-81)

(v) மரபுக்கவிதைகள்

புதுக் கவிதையோடு மரபுக் கவிதைகளும் வீரசேகரி வார மலரில் இடம் பெற்றன. மரபுக் கவிதை எழுதியோரில் மு. சடாச்சரன், புதுவையூர் ஆர். இரத்தினவேலோன், திருகோணமலைக் கவிராயர், சொக்கன் போன்றவர்களின் கவிதைகள் கவிதை மணம் பரப்பி நின்றன.

(vi) கட்டுரை இலக்கியம்

கலை, இலக்கியம், விஞ்ஞானம், அரசியல் விமரிசனம் சார்ந்த பல்வேறு கட்டுரைகள் வெளிவந்தன. பண்டிதமணி சி. கணபதிப் பிள்ளையின் எழுத்தாற்றல்கள் பற்றிய தொடர் கட்டுரைகள் தாவீது அடிகளாரின் தமிழ்த் தொண்டு முதலான இலக்கிய நெறிக் கட்டுரைகள், ''இந்துநதியிலிருந்து வழுக்கியாறு வரை ஓர் எழுத்தின் பயணம்'' போன்ற புதைபொருள்—வரலாற்றுச் சார்பான கட்டுரைகள், 'செயற்கைக் கோள்கள் மூலம் மின்சார உற்பத்தி''— போன்ற விஞ்ஞானக் கட்டுரைகள், ''றீகனின் மார்பில் பாய்ந்தது பைத்தியக்காரனின் வேட்டா?'' போன்ற உலக அரசியல் அரங்கம் பற்றிய கட்டுரைகள், ''கலைப்புலம்'' என்ற தலைப்பில் கே. எஸ் சிவகுமாரன் எழுதிய கலை, இலக்கிய விமரிசனக் கட்டுரைகள், உலகத் தமிழாராய்ச்சி மகாநாடு பற்றி எஸ். நடராஜா எழுதிய தொடர் கட்டுரைகள், பயணக்

கட்டுரைகள், வீரகேசரி வார மலருக்குச் சிறப்பளித்தன. கட்டுரை இலக்கியம் பத்திரிகைத் துறை மூலமே வளர்க்கப்படுகிறது என்ற உண்மையை வீரகேசரி நிருபித்துள்ளது.

(vii) வாரம் ஒரு கடிதம் - (மு. கனகராசன்)

பிரபல இலக்கிய மேதைகள், படைப்பிலக்கியவாதிகள், அரசியல் ஞானிகள், விஞ்ஞானிகள், விமர்சகர்கள், அரசியல் தலைவர்கள் போன்றோர் தம் நண்பர்களுக்கு எழுதிய கடிதங் களைத் தேடிப் பெற்று அவற்றைப் பிரசுரித்து, அவற்றுக்கு கலை, இலக்கியப் பின்னணியில் வியாக்கியானம் கொடுக்கும் வகை யிலான ஒரு முயற்சியும் வீரகேசரியில் இடம் பெற்றுள்ளது.

## சிந்தாமணி

ஈழத்தின் வாரமஞ்சரிகளில் ஒன்றான சிந்தாமணி தமிழ்க் கலை இலக்கியத் துறைகளை நேர்த்தியான பாதையில் இட்டுச் செல் வதில் தன் பங்கைச் செலுத்தி வருகிறது. விமர்சனப் போக்குடைய இப் பத்திரிகை கலை, இலக்கியப் படைப்பாளிகளை ஆத்ம சக்தி யோடு நெறிப்படுத்துவதில் கவனம் செலுத்தி வந்துள்ளது.

(i) கவிதை

மரபுக்கவிதை, புதுக்கவிதை ஆகியன இதில் வெளிவந்தன. சொக்கன், கம்பதாசன், முருகையன், புரட்சிக் கமால், அன்பு முகைதீன், க. வேலாயுதம், செ. குணரத்தினம் போன்றோர் சிந்தாமணியில் சிறந்த மரபுக் கவிதைகளை எழுதினர். இசைக் கலைஞன் ஒபியல் என்பவனின் கதையை சொக்கன் மரபுக் கவிதையில் வடித்திருந்தார். இக்கதை இதே ஆண்டில் சிறுவர் சிந்தாமணியில் சிறுவர் கதையாகவும் வெளிவந்தது. மணிக் கவிதை என்ற தலைப்பில் வாரந்தோறும் புதுக் கவிதைகள் வெளி வந்தன.

(ii) சிறுகதை

ஏனைய பத்திரிகைகளைப் போன்றே சிந்தாமணி வாரம் ஒரு சிறுகதையைப் பிரசுரித்து வந்தது. பல சிறந்த சிறுகதையாசிரியர் களின் படைப்புக்கள் இடம் பெற்றன. செ. குணரத்தினம், தமிழ் பிரியா, இராஜேஸ்வரி, பாலசுப்பிரமணியம், கிருபாலஷ்மி, கலா மோகன் போன்றோரின் சிறுகதைகள் பாராட்டத்தகுந்தவை.

(iii) சிறுவர் சிந்தாமணி

சிறுவர்களுக்கென ஒரு தனிப்பகுதியை ஒதுக்கி அவர்களது இலக்கிய வேட்கையைத் தூண்டும் வகையில் இதனை எழுதிய மாஸ்டர் சிவலிங்கத்தின் பணி பாராட்டத்தக்க வகையில் அமைந்தது. டென்மார்க், ரஷ்யா, சுவீடன், இங்கிலாந்து முதலான பல நாடுகளைச் சேர்ந்த நாட்டார் கதைகள் மொழிபெயர்த்துத் தரப்பட்டன. இவற்றுள் ''சூலமலைக்கிழவன்'' என்ற கதைத் தொடர் 15 வாரங்கள் தொடர்ச்சியாக வெளிவந்தது.

(iv) பூலோக சஞ்சாரம்

கதாசி, ''எஸ். எஸ். எஸ்'' என்ற இரு புனைபெயர் எழுத்தாளர்கள் உலக அரசியலை அலசி எழுதினர். ஈரான்—ஈராக் சண்டை, அணிசேரா நாடுகள், இந்திய அரசியல் நிலை, நியூற்றன் குண்டு முதலான பலவிடயங்கள் முக்கியத்துவம் பெற்றிருந்தன. சிந்தாமணி இந்திய அரசியல் அரங்கிற்கு முதன்மை அளித்திருந்தமை கவனிக்கக் கூடியதாக இருந்தது. ''காண்டீபம்'' என்ற பெயரில் எழுதியவர் இலங்கை அரசியல் நிலை பற்றி எழுதினார்.

(v) கட்டுரை இலக்கியம்

எஸ். டி சிவநாயகம் அவர்கள் (தினபதி ஆசிரியர்) நீண்ட காலமாகப் பத்திரிகைத் துறையில் அநுபவமும், எழுத்தாற்றலும் உடைய பழம் பெரும் எழுத்தாளர். அவருடைய கைவண்ணங்கள் 81இல் வெளிவந்த சிந்தாமணியினை ஆக்கிரமித்தன என்றே கூற வேண்டும். அவர் சிந்தாமணியில் எழுதி வந்த ''நான்கண்ட பாரதி'' என்ற கட்டுரைத் தொடர் பாரதி நூற்றாண்டினை நினைவூட்டுவதாகவும் அறியப்படாத அரிய பல விடயங்களைத் தருவதாகவும் அமைந்தது. அது போன்றே உலகத் தமிழாராய்ச்சி மகாநாடு பற்றி அவர் எழுதிய கட்டுரைத் தொடர்கள் ஈழத்து வாசகர்களுக்கு அம் மகாநாட்டினையும், அம் மகாநாட்டுப் பலா பலன்களையும் உணரச் செய்தன.

(vi) சிந்தாமணி எழுத்தாளர்கள்

சிந்தாமணியில் பல்துறைக் கட்டுரை இலக்கிய வளர்ச்சிக்குப் பங்களிப்புச் செய்தோரில் கர்ணன், மாத்தளை அருணேசர், அன்ரனி பெர்ணாண்டோ, இந்திரப்பிரஸ்தன், ஈழவாணன், ஷாக்கோ, செ. நடராசா, பொள்ளாச்சி நா. மகாலிங்கம், புலவர் மெ. பொ. சிவசேகரம், தமிழ்மாறன், ஏ. பி. வி. கோமஸ், ரம்ளா மணாளன் போன்றோரை விதந்து குறிப்பிடலாம்.

**(vii) இலக்கியப்பீடம்**

தினகரன் வாரமஞ்சரியில் இலக்கிய உலகம் பகுதி எவ்வாறு இயங்கிற்றோ, அது போன்றே சிந்தாமணியில் 13-9-81 முதல் ''இலக்கியபீடம்'' என்ற பகுதி ஆரம்பிக்கப்பட்டு கலை, இலக்கிய, விமரிசனச் செய்திகள் இடம் பெறலாயின.

**(viii) இலக்கியப் போட்டி**

வீரகேசரி 81ஐ எழுத்தாளர் ஆண்டாகப் பிரகடனப் படுத்திற்று. ஆனால் சிந்தாமணி 81இல் மாணவர்களிடையே எழுத்து வேட்கையைத் தூண்டி அவர்களிடையே ''கையெழுத்துப் பத்திரிகை''ப் போட்டியினை ஆரம்பித்து, இளம் சமுதாயத்தைப் படைப்பிலக்கியத் துறையில் வழி நடத்தியது.

## ஈழநாடு

யாழ்ப்பாணத்திலிருந்து வெளிவரும் பத்திரிகைகளில் ஈழநாடு தனித்துவம் வாய்ந்தது. நாளேடாகவும், வார மலராகவும் இப் பத்திரிகை மலர்கிறது. சமயம், இலக்கியம், அரசியல் என்ற பல் துறைச் செய்திகளையும் தன்னகத்தே கொண்டு வெளிவரும் இப் பத்திரிகையின் 1-1-81 நாளேட்டிலே ''மதுரைத் தமிழாராய்ச்சி மகாநாடு-கோலாகல ஏற்பாடு'' என்ற முதற்பக்கத் தலைப்போடும் தனிநாயக அடிகளாரின் ''தமிழ் ஆராய்ச்சியும், நூல் விமரிசனமும்'' என்ற விமரிசனக் கட்டுரையும் இடம் பெற்றிருந்தன.

வாரமலரில் வழமைபோல் ஏனைய பத்திரிகைகளின் சாயலில் சிறுகதை, கவிதை, நூல் விமரிசனம், கட்டுரை இலக்கிய விமரிசனம் முதலியன இடம் பெற்றன. 81இல் ஈழநாடு வாரமலரில் சிறப்பாகக் குறிப்பிடத்தக்க வகையில் ''ஈழத்து இலக்கியத் துறையில் அன்றும் இன்றும்'' என்ற தலைப்பில் சிங்கைத் திவாகரன் எழுதிய தொடர் கட்டுரைகள் ஈழத்து எழுத்தாளர் களின் பணியை மதிப்பீடு செய்வதாக அமைந்தன.

சிறிய மரபுக் கவிதைகளும், நீண்ட பாடல்களாய் அமைந்த குறுங்காவியங்களும் ஈழநாட்டில் இடம்பெறலாயின. கரவைக் கிழார் எழுதிய ''இயற்கையும் இதயமும்'' என்ற மரபுக் கவிதை குறுங்காவியமாக அமைந்திருந்தது.

## கையெழுத்துப் பத்திரிகை

பாடசாலை மாணவர்கள் கலை, இலக்கியத் துறையில் ஆர்வ முடைய இளைஞர்கள் சேர்ந்து கையெழுத்துப் பத்திரிகைகளை

நடாத்தும் மரபு நீண்ட காலமாக இருந்து வருவதாகும். ஆனால் 81இல் தினபதி பத்திரிகை ஏற்படுத்திய கையெழுத்துப் பத்திரிகைப் போட்டியின் மூலம் ஈழத்தின் பட்டிதொட்டி எல்லாம் கையெழுத்துப் பத்திரிகைகள் தோன்றலாயின. இவ்வாறு உருப் பெற்ற எண்பது கையெழுத்துப் பத்திரிகைகளின் முழு விவரமும் அரிதில் முயன்று சேகரித்தும் இக்கட்டுரையின் பரப்பு நீளும் என் றெண்ணி அவ்விவரங்கள் இணைக்கப்படவில்லை. ஈழத்துப் பத்திரிகை வரலாற்றில் என்றுமே இடம்பெறாத எண்ணிக்கை யினைக் கொண்ட கையெழுத்துப் பத்திரிகைகள் 81இல் தோற்றம் பெற்றன என்பது சிறப்பம்சமாகும்.

## 1981–எழுத்தாளர் ஆண்டு

வீரகேசரி நிறுவனம் 1981-ஆம் ஆண்டை எழுத்தாளர் ஆண் டாகப் பிரகடனம் செய்தது. அதன் தொடர்பாக ஈழத்து எழுத் தாளர்களின் பட்டியலை 1-4-81 முதல் வீரகேசரி வாரமலரில் பிரசுரித்து வந்தது. அவ்வாறாக 696 ஈழத்து எழுத்தாளர்களின் பெயர்களைப் பத்திரிகைகளில் பிரசுரித்து அவர்களுக்குக் குறியீட்டு எண்களும் கொடுத்து, அவர்களிடையே 5000 ரூபாய் பெறுமதி யுடைய பின்வரும் பரிசுப் போட்டிகளையும் நடாத்தியது.

போட்டி — பரிசு பெற்றவர்

நாவல் : செ. குணரத்தினம், இ. மகேஸ்வரன்

சிறுகதை : வை. சசிதானந்தன், அப்பச்சி மகாலிங்கம், வடகோவை வரதராசன்

கவிதை : சோலைக்கிளி அஜீத், ச. பத்மநாதன், அனலை ஆறுமுகம்

இலக்கிய விமரிசனம் : கே. பி. சிவம்

நகைச்சுவை இலக்கியம் : புலோலியூர் க. தம்பையா

விஞ்ஞானக் கட்டுரை : க. தியாகலிங்கம்

தொழில் நுட்பவியல் : செல்வி ஆர். கே. சண்முகலிங்கம்

தமிழ் இளைஞர்களின் எதிர்காலம் : எம். சந்திர கலாதரன்

உரை வீச்சு : ரீ. பாக்கியநாயகம்

திரையரங்கு : கே. எஸ். சிவகுமாரன்

இப்போட்டிகளில் ஈழத்து மண்வாசனையையும் சமகால அரசியல் சமூகவியல் பொருளாதார நடவடிக்கைகளையும் மைய

மாகக்கொண்ட எழுத்துக்களே இடம் பெற்றன. இதில் 68 எழுத்தாளர்கள் கலந்தனர். இப்போட்டிக்கு 16 நாவல்களும், 150 சிறு கதைகளும், 9 கவிதைகளும், 240 புதுக் கவிதைகளும் அனுப்பி வைக்கப்பட்டன.

## பெண் எழுத்தாளர்கள்

அறுபதுகளுக்கு முன்பு ஈழத்து ஆக்க இலக்கியத்துறையில் மகளிர் ஈடுபட்டது குறைவு என்றே கூறவேண்டும். ஆனால் அறுபது களின் பின்பு தமிழ் மகளிரின் இலக்கிய ஈடுபாட்டில் ஒரு வேகம் ஏற்படலாயிற்று. மேலும் எழுபதுகளின் பின்னர் புதிய உத்வேகத் துடனும் சிந்தனைகளோடும் இலக்கிய உலகில் காலடி எடுத்து வைத்து கவிதா, தாமரைச் செல்வி, தமிழ்ப்பிரியா, வித்யா, மண்டூர் அசோகா, மண்டூர் மீனா, கோகிலா மகேந்திரன், அருள் விஜய ராணி, சிவமலர் செல்வத்துரை, தேவமனோகரி, மாவை பாரதி ஆனந்தி, சாரதா சண்முகநாதன், ஜனகமகள் சிவஞானம் இஸ்மாலிகா, மண்டைதீவு கலைச்செல்வி, இந்திராணி தாமோதரம்பிள்ளை, மங்கை கங்காதரம், ராஜேஸ்வரி பால சுப்பிரமணியம் ஆகியோர் தொடர்ந்து எழுதி வருகின்றனர்.

## பயணக் கட்டுரை இலக்கியம்

ஒருவர் தாம் மேற்கொண்ட பிரயாணத்திற் பெறப்பட்ட அநுபவங்களைப் பிறரும் படித்துப் பயன்பெறும் நோக்குடனேயே பயண இலக்கியங்கள் எழுதப்படுகின்றன. இது சிறு கட்டுரையாக வும் அமையலாம்; பெருநூலாகவும் அமையலாம். வாழ்க்கை வரலாற்று இலக்கியங்கள், சுயசரிதை நூல்கள் முதலியவற்றைப் போன்றே பயண இலக்கியங்களும் ஒருவகையில் வழிகாட்டல் நூல்களே. ஆங்கிலம் மூலம் அறிமுகப்படுத்தப்பட்ட புதிய இலக்கிய வடிவமே பயண இலக்கியம்.

ஈழத்தில் தோன்றிய பயண இலக்கியங்களைத் தமிழகத்தோடு ஒப்பிட்டு நோக்கும்போது மிகமிகக் குறைவே. எஸ்.எம். காமல்தீன் எழுதிய ''தாய்லாந்தின் தலைநகரத்திலே'' முதலிய நூல்களே இதுவரை ஈழத்தில் வெளிவந்துள்ளன. ஆண்டுதோறும், புதுப் புதுப் பயணக் கட்டுரைகள், பத்திரிகைகளில் வெளிவந்துகொண்டே இருக்கின்றன. 81இல் வெளிவந்த பயணக் கட்டுரைகள் வருமாறு:

1. மேற்கு ஜெர்மனி - க.தா. சிவகுருநாதன் - சிந்தாமணி.
2. செக்கோஸ்லவக்கியாவில் பெண்கள் - நிரே ா ஷ தா - வீரகேசரி
3. சிங்கப்பூர் அநுபவம் - க. சிவப்பிரகாசம் - வீரகேசரி
4. கிழக்கு ஜெர்மனியில் சில காட்சிகள் - அன்ரன் எட்வர்ட்- வீரகேசரி
5. இந்தியப் பயணம் - கே.எஸ். சிவகுமாரன் - வீரகேசரி
6. ஓர் இலக்கியக்காரனின் அநுபவங்கள்-நெல்லைக்க பேரன்- தினகரன்
7. சாயி தரிசனம் - தினபதி.

## திரைக்கதை வசனம்

தமிழகத்துத் திரைப்படக் கலையோடு போட்டிபோட இயலாது, ஈழத்துத் தமிழ்த் திரைப்படக் கலை மிக மிக மந்த கதியில் நகர்ந்து கொண்டிருக்கிறது என்பது கசப்பான உண்மை தான். இச்சூழ்நிலையில் தேசியத் திரைப்படக் கூட்டுத் தாபனத் தின் "தமிழ்த்திரைப்பட எழுத்துப்பிரதி மதிப்பீட்டுக்குழு" கடந்த ஐந்தாண்டுகளாகச் செயற்பட்டு வருகிறது. ஈழத்தில் தமிழ்த்திரைப்பட வளர்ச்சிக்கு உறுதுணைபுரியும் பொருட்டுத் திரைப்படப்பிரதிகளை மதிப்பிட்டு, ஆலோசனை வழங்கி அவற்றின் தரத்தை உயர்த்துவதே இக்குழுவின் நோக்கம். இப் பின்னணியில் தரமான பிரதிகள் எழுதப்பட்டுள்ளன. ஆயினும் ஏனைய தொழில் நுட்ப வசதிகள், நடிகர் நடிகைகள் குறை பாடுகள், வர்த்தகநோக்கு என்ற அடிப்படையில் பல பிரச்சினை களைத் தமிழ்த்திரைப்படத் தயாரிப்பாளர்கள் எதிர்நோக்க வேண்டியுள்ளது.

இதனடிப்படையில் இக்குழு 1979இல் தமிழ்த்திரைப்படப் பிரதியாக்கம் பற்றிய செயல்முறைக் கருத்தரங்கு ஒன்றை ஒழுங்கு செய்தது. அதில் அறுபது பேர் பங்கு பற்றினர். அங்கே படப் பிரதியாக்கம், திரைப்படத் தொழில் நுட்பம் முதலிய செயல் முறைப் பயிற்சிகளும் கொடுக்கப்பட்டன. அதனைத் தொடர்ந்து 1981இல் தமிழ்த் திரைப்படப்பிரதி ஆக்கப்போட்டி ஒன்றை இக்குழு நடாத்தியது. இப்போட்டிக்கு 57 பிரதிகள் கிடைத்தன. (தினகரன் 13-9-81)

இப்போட்டியில் ''கிராமத்து இதயம்'' என்ற பிரதியை எழுதிய பி விக்கினேஸ்வரன் முதற்பரிசு (ரூ 5000) பெற்றார். வானொலி நாடகத் தயாரிப்பாளராகவும், பரீட்சார்த்த நாடக ஆசிரியராகவும் விளங்கும் இவர் எழுதிய நாடகங்களுள் ''சலனம்' மிக்கப் பாராட்டைப் பெற்றதாகும்.

இப்போட்டியில் ரூ 4000 பெறுமதியான இரண்டாம் பரிசினை ''சுட்டும் சுடர்கள்'' என்ற பிரதியின் ஆசிரியர் மாத்தளைக் கார்த்திகேசு பெற்றார். ''அவள் ஒரு ஜீவநதி'' என்ற படத் தயாரிப்பாளராகிய கார்த்திகேசு, ஈழத்தின் சிறந்த நாடக ஆசிரி யரும் நடிகருமாவார். இவர் எழுதிய நாடகங்களுள் பரிசும் பாராட்டும் பெற்றவை ''காலங்கள் அழுவதில்லை'', ''களங்கம்'' ''போராட்டம்'', ''ஒரு சக்கரம் சுழல்கிறது'' என்பன. மலைய கத்தைப் பிறப்பிடமாகக் கொண்ட கார்த்திகேசுவின் ஆக்கங் களும், மலையக மக்களின் அவலங்களையே சித்திரித்து அவற் றுக்குப் பரிகாரம் தேட முனையும் தன்மை கொண்டிருத்தல் ஒரு தனி அம்சமாகும்.

மூன்றாம் பரிசினை, கே. மதிவதனனின் ''சிறகொடிந்த பறவைகள்'' என்ற பிரதி பெற்றுக்கொண்டது. ஐம்பதுக்கு மேற்பட்ட வானொலி நாடகங்களை எழுதிப் புகழ் பெற்றவர் மதிவதனன். ''என்னடி ராக்கம்மா'', ''காதலே நீ வாழ்க'', ''உன் கண்ணில்நீர் வடிந்தால்'' என்ற மேடை நாடகங்களே அவரது புகழை நிலைநாட்டியவையாகும்.

உலகத் தமிழாராய்ச்சி மகாநாடு பற்றிய செய்திகள்

மதுரையில் நடைபெற்ற ஐந்தாவது உலகத் தமிழாராய்ச்சி மகாநாடு பற்றிய செய்திகள் ஈழத்துத் தினப் பத்திரிகைகளிலும், வாரஇறுதிப் பத்திரிகைகளிலும் ஜனவரி முதல் தொடர்ந்து பல மாதங்கள் முதன்மை பெறலாயின. தினபதி, சிந்தாமணி, தின கரன், வீரகேசரி, ஈழநாடு எனும் பத்திரிகைகளில் மகாநாட்டில் இடம் பெற்றஊர்வலங்கள்,கருத்தரங்குகள்,அலங்காரப் பந்தல்கள் முதலான பல்வேறுபட்ட படங்களும். மகாநாடு பற்றிய பல்வேறு பட்ட கருத்துக்களும், நோக்குகளும் இடம் பெற்றன. காரசார மான கண்டனங்களும் இடம்பெறாமலில்லை. எஸ்.ரி. சிவநாயகம், மகாநாடு பற்றிச் சிந்தாமணியில் தொடர்ச்சியாக முப்பது கட்டு ரைகள் எழுதினார். அதேபோன்று வீரகேசரி வாரமஞ்சரியில்

எஸ். நடராஜா மகாநாடு பற்றிய விவரங்களைத் தொகுத்து தொடர்கட்டுரைகளாக எழுதினார். ஈழநாட்டிலும் தினகரனிலும் மகாநாடு பற்றிய கட்டுரைகள் வெளிவந்தன.

## பாரதி நூற்றாண்டு விழா

யுகக் கவிஞன் மகாகவி சுப்பிரமணிய பாரதியாரின் பிறந்த ஆண்டினை அடிப்படையாகக் கொண்டு 11-12-1981 முதலாக பாரதி நூற்றாண்டைக் கொண்டாடுவதற்கான ஏற்பாடுகள் தமிழகத்திலும் ஈழத்திலும் தீவிரமாக மேற்கொள்ளப்பட்டன. ஈழத்தில் இலங்கை முற்போக்கு எழுத்தாளர் சங்கம் பாரதி நூற்றாண்டைக் கொண்டாடும் முகமாக, அகில இலங்கை ரீதியாக பாரதி நூற்றாண்டு விழா தேசியக்குழு ஒன்றை அமைத்து, கொழும்புத் தமிழ்ச்சங்கத்திலே பாரதிக்குப் பெருவிழா எடுத்து' அவ்விழாவிலே "புதுமை இலக்கியம்" என்ற நூலையும் வெளி யிட்டது.

இதைவிட, மேலும் பல மன்றங்கள் அகில இங்கை ரீதியாக பாரதி நூற்றாண்டு நினைவாக விழாக்களையும் போட்டிகளையும் நடத்திமக்களிடையேயும், சிறப்பாக ஆக்க இலக்கியக்கர்த்தாக்கள், கவிஞர்கள் ஆகியோரிடையேயும் ஒரு புத்துணர்வை ஏற்படுத்தின. அகில இலங்கை சமநீதி இயக்கம் 14 வயதிற்கும் 24 வயதிற்கும் இடைப்பட்ட மாணவர், இளைஞர், யுவதிகள் ஆகியோரிடையே கட்டுரை, கவிதை பேச்சுப் போட்டிகளை நடாத்தியது.

ஈழத்தில் பெரும்பாலான கல்லூரிகளில் பாரதி நினைவாக விழாக்களும் போட்டிகளும் நடைபெற்றுக்கொண்டே இருக் கின்றன. பாரதி நூற்றாண்டை நோக்கி சகல இலக்கிய சஞ்சிகை களிலும், வாராந்தப் பத்திரிகைகளிலும் விசேடக் கட்டுரைகள் வெளிவரலாயின. குறிப்பாக மல்லிகை பதினேழாவது ஆண்டு மலரில் பேராசிரியர் க. கைலாசபதி எழுதிய "பாரதி ஆய்வுகள் வளர்ச்சியும் வக்கிரங்களும்" என்ற கட்டுரையும் வீரகேசரியில்— கலைப்புலம் என்ற மகுடத்தில் கே.எஸ். சிவகுமாரன் எழுதிய "பாரதி ஆராய்ச்சி" என்ற கட்டுரையும், நுட்பம், இளந்தென்றல் மலர்களில் வெளிவந்த கட்டுரைகள், மற்றும் பாரதி பற்றி வார இதழ்களில் வெளிவந்த சிறப்புக் கட்டுரைகள் முதலியவற்றையும் குறிப்பிடலாம்.

பாரதி நூற்றாண்டு ஈழத்துக் கவிஞர்களின் உணர்ச்சியைத் தூண்டிவிட்டிருக்கிறது என்பதை 82ஆம் ஆண்டுப் போக்குக்

காட்டுகிறது. கவிஞர் இ. முருகையன், ஈழத்திலே பாரதி சம்பந்த மாக வெளிவந்த கவிதைகளைத் திரட்டித் தனி நூலாக வெளி யிடுவதற்கு முயற்சி எடுத்த செய்தி (சிந்தாமணி 11-10-81) கிடைத்தது அதுபோன்றே துரைமனோகரன் என்பவர் ' பாரதீயக் கதைகள்'' என்ற தலைப்பில் பாரதியாரின் கவிதைப் பொருளைக் கருவாகக் கொண்டமைந்த மாத்தளை வடிவேலன், மலரன்பன், மருதுர்க் கொத்தன், மாத்தளை சோமு, பரிபூரணன் போன்றோரின் சிறுகதைகளைத் தொகுத்து வெளியிட முயற்சி எடுத்துள்ளார்.

''பாரதி ஒரு மொழிக்கு ஓரினத்திற்குச் சொந்தமானவன் அல்லன், உலக மகாகவி. அதனால் அவன் கவிகள் எல்லாம் உலக மொழிகளில் வெளிவரவேண்டும்''. (தினகரன் 11-1-82) என்ற குரலும் ஈழத்தில் ஒலிக்கத் தொடங்கிற்று.

## வலது குறைந்தோர் ஆண்டு

1981ம் ஆண்டை ''வலதுகுறைந்தோர் ஆண்டு'' என ஐக்கிய நாடுகள் நிறுவனம் பிரகடனப்படுத்தியது. ஐக்கிய நாடுகள் நிறு வனத்தின் மதிப்பீட்டின் படி உலகில் 45 கோடி மககள் ஊன முற்றோராக வாழ்ந்துகொண்டிருக்கின்றனர். இலங்கை அரசும், சமூக நிறுவனங்களும் இவ்வாண்டில் வலது குறைந்தோருக்கான நடவடிக்கைகளிலீடுபட்டன. உலகப் புகழ்பெற்ற வேற்று மொழிச் சஞ்சிகைகளில் வலது குறைந்தோர் பற்றிய ஆக்கங்கள் 81 இல் வெளி வந்து கொண்டிருந்தன. ஆனால் ஈழத்து தமிழ் எழுத்தா ளர்களின் பேனாக்கள் செயலற்றிருந்தன. இதனை அவதானித்த தினகரன் இலக்கிய உலகம் (27-8-81) ''எமது எழுத்தாளர்கள் சிறிதளவாவது இதில் கவனம் செலுத்தியதாகத் தெரியவில்லை'' எனக் கூறுவது பொருத்தமே. வீரகேசரியில் வலது குறைந்தோர். ஆண்டின் நினைவாக ஒரு சிறப்புக் கட்டுரை இடம் பெற்றது.

## நிறுவனங்களின் தமிழ்ப்பணி

(1) இலங்கை ஒலிபரப்புக் கூட்டுத்தாபனம்

கேள்விப்புலன் மூலன் கலையிலக்கியத்துறையில் மட்டுமன்றி சமயம் உலக நடப்புக்கள் முதலான துறைகளிலும் மக்களின் கவனத்தை ஈர்க்கும் வகையில் வானொலி முக்கியத்துவம் பெறு கின்றது. இலங்கை வானொலியில் இடம் பெறும் ஒலிபரப்புக்

களில் குறிப்பாக நாடகம், கவிதை, சிறுகதை, சிறப்புரைகள், உரையாடல், செவ்வி, விமர்சனம், கிராமியக் கலை வடிவங்கள் ஆகிய நிகழ்ச்சிகள் முக்கியத்துவம் வாய்ந்தவை. வாரந்தோறும் 15 நிமிடம், 30 நிமிடம் என்ற அளவில் சுமார் 250 நாடகங்கள் 81 இல் ஒலிபரப்பாகின. இவற்றில் தொடர் நாடகங்களும் இடம் பெற்றன. இதுபோன்றே சிறுகதைகளும் வாரம் இரண்டு என்ற அடிப்படையில் நூற்றுக்கு மேற்பட்ட சிறுகதைகள் ஒலிபரப் பாகின. ஒவ்வொரு பூரணைத் தினத்திலும், தைப்பொங்கல், புது வருடப்பிறப்பு, தீபாவளி முதலான பண்டிகைகளிலும் ஈழத்தின் பிரபல கவிஞர்களான நாவற்குழியூர் நடராசன், தான்தோன்றிக் கவிராயர் ஆகியோர் தலைமையில் அரைமணி நேரம் கவிதை யரங்கம் இடம்பெற்றது. இதில் ஈழத்தின் சிறந்த கவிஞர்கள் பங்கு பற்றினர். இவற்றைவிட இளைஞர் வட்டம், ஒலிமஞ்சரி முதலான பல நிகழ்ச்சிகளிலும் கவிதை இடம் பெற்றது. திங்கள் இரவு தோறும் ''கலைக்கோலம்'' 30நிமிட நிகழ்ச்சியில் நூல் விமர்சனம், எழுத்தாளர் சந்திப்பு, இலக்கியப் பேச்சுக்கள் என்பன ஒலிபரப் பாகின. மாதம் ஒரு தடவை இலக்கிய அறிஞர்கள், ஆர்வலர்கள் 45 நிமிட இலக்கியக் கலந்துரையாடல்கள் நடத்தினர்.

தினமும் ஒரு மணித்தியானம் நடைபெறும். முஸ்லிம் நிகழ்ச்சி யில் இஸ்லாமியக் கலை, கலாச்சார விடயங்களும், சமய நிகழ்ச்சி கள், இஸ்லாமிய இலக்கியங்கள் முதலான பல்வேறு விடயங்களும், நாடகம், சிறுகதை, நூல்விமர்சனம் என்பனவும் இடம் பெற்றன.

கல்விச் சேவையில் எண்பத்தொன்றில் புதிதாக ஒவ்வொரு செவ்வாயும் வியாழனும் ஒலிபரப்பப்பட்டு வந்த 'விந்தைச் சுவைக்கலைகள்'' என்ற சஞ்சிகை நிகழ்ச்சியில் ஈழத்துக் கலை கலாச்சாரம் பற்றிய விடயங்கள் இடம் பெற்றன.

(2) இந்து சமயத் திணைக்களம்

பிரதேச அபிவிருத்தி, இந்துசமயம், தமிழ் அலுவல்கள் முதலியவற்றுக்கெனத் தனியாக அமைக்கப்பட்டுள்ள அமைச்சின் கீழ் இந்துசமயத் திணைக்களம் இயங்குகிறது. 81இல் ''கோபுரம்'' என்ற சஞ்சிகை வெளியிடப்பட்டது. இரு இதழ்கள் வெளி வந்தன. அத்துடன் ''திருஞானசம்பந்தர்'', ''ஞானப்பிரகாச முனிவர்'' என்ற இரு நூல்களையும் வெளியிட்டுள்ளது.

(3) தேசிய இளைஞர் சேவைகள் மன்றம்

ஆண்டுதோறும் இளைஞர் மத்தியில் கவிதை, சிறுகதை, நாட்டார்பாடல் இசைப்போட்டி, நாடகம் முதலாம் பல்வேறு துறைகளில் போட்டி நடாத்தி வருகிறது. கலை விழாக்கள், பரிசளிப்பு விழாக்கள் நடத்தப்பட்டன. பயிற்சி வகுப்புகளும் இடம் பெற்றன. "இளைஞன்" பத்திரிகை வெளியிட்டனர். சிறுகதை, கவிதை, மன்றச் செய்திகள் என்பவற்றைத் தாங்கி வரும் இவ்விதழ் ஆக்க இலக்கியத்தில் ஈடுபாடுடைய இளைஞர் களுக்குத் தகுந்த களமாக அமைந்தது.

(4) கொழும்புத் தமிழ்ச் சங்கம்

ஸ்ரீலங்காவின் தலைநகரிலே அமைந்துள்ள இந் நிறுவனத்தில் ஞாயிறு மாலைதோறும் தமிழாராய்ச்சிக் கட்டுரைகள் படிக்கும் கருத்தரங்கம் இடம் பெற்றது. தமிழ் மாணவர்களின் கல்வி வளர்ச்சியைக் குறிக்கோளாகக் கருதிப் பல்துறைப் பயிற்சி நெறி களைத் தகுதி வாய்ந்த ஆசிரியர்களைக் கொண்டு பிரத்தியேக வகுப்புக்களை நடாத்தி வருகின்றது. வழமைபோல் 81 இலும் அகில இலங்கை ரீதியாகப் பேச்சுப்போட்டி, கட்டுரைப்போட்டி களையும் நடாத்தியது. நூல் அறிமுக விழாக்கள் அறிஞர்களின் சொற்பொழிவுகள் என்பனவும் இடம் பெற்றன.

(5) தமிழியற் கழகம்

யாழ்ப்பாணப் பல்கலைக்கழகத் தமிழ்ச் சிறப்புக்கலை மாணவர்கள் ஒன்றிணைந்து 18-10-79 இல் இக்கழகத்தை அமைத் தனர். தமிழியல் சார்ந்த நிகழ்ச்சிகளை நடத்தியதும், ஈழத்துத் தமிழ் இலக்கியத் துறையை வளம் படுத்துவதுமே இவர்கள் குறிக் கோள். கடந்த இரண்டு ஆண்டுகளில் 21 தொடர் நிகழ்ச்சிகளை நடாத்தினர். விமர்சன அரங்குகள் நூலாய்வுகள், தொடர்ச்சியாக இடம்பெற்றன. இவ்வரங்குகளில் யாழ்ப்பாணப் பல்கலைக்கழக விரிவுரையாளர்களே இடம் பெற்றனர்.

(6) பேருவளை நலீம் மிய்யா மத்திய இஸ்லாமிய ஆராய்ச்சி நிறுவனம்

1973 இல் இஸ்லாமிய கலாநிலையம் தாபிக்கப்பட்டது. அதில் 81இல் இஸ்லாமிய ஆராய்ச்சிப் பிரிவு நிர்மாணிக்கப்பட்டது. இதன் குறிக்கோள்களாக இஸ்லாம் சம்பந்தமான நூல்கள் ஏடுகள் கட்புலசெவிப்புலசாதனங்கள் பெறுவதற்குரிய ஒழுங்குகள்

மேற்கொள்ளப்பட்டன. அரபுத் தமிழ் நூல்களும் கையெழுத்துப் பிரதிகளும் நூலகத்தில் சேர்க்கப்பட்டன. ஈழத்து முஸ்லிம் பெரியார்களின் நூலகங்களின் திரட்டல்கள் இந்நூலகத்திற்கு அன்பளிப்பாகக் கிடைத்தன. முஸ்லிம் நாடுகளில் இருந்தும் நூல்கள் கிடைத்து வருகின்றன. இஸ்லாமிய இலக்கியத் துறையில் மட்டுமன்றி தமிழாய்வுக்கும் ஏற்ற ஆய்வுக்களமாக இந்நூலகம் திகழ்கின்றது.

(7) தகவம்

கொழும்பில் இயங்கிவரும் இந்நிறுவனம் 1979 முதல் இலக்கியக் கலந்துரையாடல்கள் கருத்தரங்கங்கள், இலக்கிய விழாக்கள் நூல்வெளியீட்டு விழாக்கள், ஈழத்து தமிழ் புனைகதை நூல்களை விற்பனை செய்து வெளியீட்டாளருக்கு உதவி செய்தல் முதலான பணிகளில் ஈடுபட்டு வருகின்றது. 75 ஆம் ஆண்டுமுதல் ஈழத் தமிழ்ப் பத்திரிகைகளிலும் மாசிகைகளிலும் பிரசுரமான சிறு கதைகளைச் சேகரித்து மதிப்பிட்டுப் பரிசும் சான்றிதழ்களும் வழங்கி கதைஞரை ஊக்குவித்து வருகின்றது. 80 முதல் ஈழத்துத் தமிழ் நாவல்களை மதிப்பிட்டு பரிசளித்து வருகிறது. 81இல் ''தமிழக நாவல்களும் ஈழத்து நாவல்களும்'' வீரகேசரி வெளியீடுகள்,'' ''புனைகதை இலக்கியம்'' என்ற தலைப்புகளில் கருத்தரங்குகள் நடாத்தியது.

நிறைவுரை

1981இல் உலகளாவிய தமிழ் மொழியின் நிலைபற்றிய மதிப்பீட்டில் ஸ்ரீலங்காவில் தமிழ் நிலை பற்றிய தகவல்கள் இதில் தரப்பட்டுள்ளன. தமிழ்மொழி மதிப்பீட்டாளர்களுக்கு மேலும் பயன்தரத்தக்க வகையில் ஸ்ரீலங்காவில் இவ்வாண்டில் வெளிவந்த பல்வகையான தமிழ் வெளியீடுகள் பற்றிய விவரங்களும் பின்னிணைப்பாகத் தரப்படுகின்றன.

## பின்னிணைப்பு-1

## 1981 இல் இலங்கையில் வெளிவந்த நூல்கள்

1. அகஸ்தியர், எஸ் : புகுந்தான் யோசேப்பு கலையுலக வாழ்க்கை வரலாறு, யாழ்ப்பாணம், நவரச நாட்டுக் கூத்துக் கலாமன்ற வெளியீடு, பக். 102

2. அந்தனிஜீவா : ஈழத்தில் தமிழ் நாடகம், சென்னை, அகரம் வெளியீடு, பக். 42, ரூ4

3. அமீன், சி. எம். ஏ. : அல்குர்ஆனும் நவீன வனவியலும் கொழும்பு, இஸ்லாமிய வெளியீட்டுமனை, பக். 183, ரூ.15

4. அழகேசன், வி : கணக்கியற் சுருக்கம் பகுதி 1. யாழ்ப்பாணம் ஸ்ரீசுப்பிரமணிய அச்சகம், பக். 373, ரூ,27

5. அன்புமுகைதீன் : அண்ணல் நபி பிறந்தார் (கவிதை), கல்முனை, குட்வின் அச்சகம்.

6. அஹ்மது, கே. டி. எம். எஸ். : நல்லற போதனை (கவிதை சென்னை.

7. இந்து சமயத் திணைக்களம்: சிவராத்திரிச் சிறப்பு, பிரதேச அபிவிருத்தி அமைச்சு வெளியீடு, பக். 136

8. இப்றாகீம், ஏ. எல். எம்: சமூகங்களின் எழுச்சியும் வீழ்ச்சியும் (மொழிபெயர்ப்பு) கொழும்பு, இலங்கை ஜமாஅதே இஸ்லாமிவெளியீடு, பக். 40, ரூ.4 50

9. இம்தியாஸ், எம். டி. எம்: அன்பு உள்ளங்கள் (நாவல்), கொழும்பு, றுகுண அச்சகம், பக். 116, ரூ 12

10. இராசசிங்கம், எஸ்: இளமைக் கோலங்கள் (நாவல்), கொழும்பு வீரகேசரிவெளியீடு, பக். 198, ரூ. 7. 90

11. இராஜயோகம், ஆர். (மலர் ஆசிரியர்) இந்து தர்மம், யாழ்ப் பாணம், இந்துமாணவர் சங்க வெளியீடு, பக். 132.

12. இராஜரட்ணம், கே. ரி : சிம்போலிக் லொஜிக், யாழ்ப்பாணம் தயாஅச்சகம், பக். 66, ரூ. 11 75.

13. இலங்கை மத்திய வங்கி : பிரமாணங்களும் பரீட்சைத் திருத் தங்களும், கொழும்பு, பரீட்சைதிணைக்களை அச்சகம், ரூ. 3.50

14. உலகநாதர் : உலகநீதி,யாழ்ப்பாணம் கௌரி அச்சகம், பக்.16 ரூ. 2.25

15. ஏரம்பமூர்த்தி, வை : பாரதச் செல்வம், (பாரதக்கதை), யாழ்ப்பாணம், ஸ்ரீசுப்பிரமணிய, அச்சகம். பக். 190, ரூ. 12

16. கணபதிப்பிள்ளை, சி : இலக்கியவழி, (மறுபதிப்பு) சுன்னாகம் திருமகள் அழுத்தகம், பக். 200, ரூ. 15

17. ..............: சைவ நற்சிந்தனை (மறுபதிப்பு) சுன்னாகம் திருமகள் அழுத்தகம் பக். 44.

18. ..................: பாரதநவமணி, (மறுபதிப்பு) சுன்னாகம், திரு மகள் அழுத்தகம்.

19. கணபதிப்பிள்ளை, செல்லப்பா : புளியம் பொக்கணை தல புராணம், யாழ்ப்பாணம், விபுலாநந்தா அச்சகம்,பக். 82, ரூ;5

20. கணேச வித்தியாசாலை பொன்விழாமலர், ஊரெழு. யாழ்ப்பாணம்
21. கந்தசாமி, வி. எஸ் : சோதிடத்தில் கண்ணோட்டம், யாழ்ப்பாணம் ஆனந்தா அச்சகம், பக். 16, ரூ. 2
22. கந்தையா, ஆ : இலக்கிய வளம் யாழ்ப்பாணம், ஸ்ரீகாந்தா அச்சகம். பக். 125, ரூ. 15
23. கனகராசா, மு : பகவானின் பாதங்களில் (சிறுகதை), யாழ்ப்பாணம்
24. காதர், பி. ஏ: பெருந் தோட்டத் தொழிலாளர் எதிர்காலம் கொழும்பு, குகன் அச்சகம், பக். 44
25. குணராஜா கே : கனவுகள், கற்பனை, ஆசைகள் (நாவல்) கொழும்பு எக்ஸ் பிரஸ் நியுஸ் பேப்பர் அச்சகம். பக். 234, ரூ-790
26. குலரத்தினம், கே. சி. : திருநூற்றுப் பதிகம், யாழ்ப்பாணம், சாந்தி அச்சகம். பக். 12
27. குலேந்திரன், கே. பி. (நல்லை அமுதன்) : புதுக்கவிதைத் தொகுப்பு, மூதூர்
28. கூட்டுறவாளர் தினவிழா மலர்1950—1981, யாழ்ப்பாணம்
29. கொழும்புத் தமிழ்ச் சங்கம், : சிறுவர் கதைகள் (இரண்டாம் பதிப்பு) பக். 30, ரூ 7
30. கொழும்புப் பல்கலைக்கழகத் தமிழ்ச்சங்கம் : இளந்தென்றல் 1980—1981 பக். 124
31. கோப்பாய் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி : கலைமலர்—22 யாழ்ப்பாணம், ஆசிர்வாதம் அச்சகம், பக், 56
32. கௌரிநாதன், ஏ: வயதுவந்தோருக்கான சர்வஜன வாக்குரிமைகள் சில உண்மைகள், கொழும்பு, ஜி.ஸி. ஸீ. அச்சகம் பக். 13
33. சண்முகசுந்தரம், த : மாவை முருகன் காவடிப்பாட்டு, தெல்லிப்பழை பக். 81
34. ………… : வன்னி நாச்சியார் மான்மியம், தெல்லிப்பழை, பக் 21
35. சண்முகநாதபிள்ளை, என். கே : புறத்தனி நயினை நாகபூசனி (வரலாறு) சரவகச்சேரி, திருக்கணித அச்சகம், பக். 136 ரூ. 15
36. சதாசிவம், வே : நூரளை ஸ்ரீஇலங்காதீஸ்வரர், கொழும்பு, இந்துசமயதிணைக்கள வெளியீடு, பக். 42

37. சாமிஜீ : யாழ்ப்பாணம் எரிந்தது ஏன்?எப்படி? யாழ்ப்பாணம், சித்திரா அச்சகம், பக். 80, ரூ 8.75

38. சில்லையூர்நாதன், : மனிதனின் பறிக்கப்பட்ட உரிமைகள், யாழ்ப்பாணம், திருமகள் அச்சகம், பக். 37

39. சிவபாதசுந்தரம், என். : பரவெளித்தத்துவம், யாழ்ப்பாணம் விபுலாநந்தா அச்சகம், பக். 80, ரூ 15.

40. சிவராசா, வி. ஏ :எண் அதிர்ஷ்ட விஞ்ஞானம்,யாழ்ப்பாணம், சாந்தி அச்சகம், பக். 20

41. .............. : உங்களுக்கு 1981 எப்படி?கண்டி, டி. பி. ரி. எஸ் அச்சகம்.

42. சிவராஜசிங்கம், இ. : முருகன் இசைத் தமிழ், களுவமஞ்சிக்கு குடி, சாந்தா அச்சகம், பக். 52.

43. சிவராஜா, எம் : என் சித்தப்பா (கவிதை), யாழ்ப்பாணம், சித்திரா அச்சகம், பக். 40, ரூ. 4.

44. சிறீதரன், ஈ. : மழலைச் செல்வம், யாழ்ப்பாணம், ஸ்ரீசுப்பிரமணிய அச்சகம், பக். 104, ரூ 12

45. சின்னத்தம்பி,அ. : அறுவை வைத்திய நலம் பெற்ற கைநூல், யாழ்ப்பாணம், சந்திரா அச்சகம், பக். 65, ரூ 7.50

46. சுப்பிரமணியம், எஸ். : தெல்லிப்பழை துர்க்காதேவி பாட்டு யாழ்ப்பாணம், மொழியரசி அச்சகம், பக். 24.

47. சுபைர், எம். ஸி. எம். : பிரித்தேன் (கவிதை), அக்குறணை ஷிவ்வா அச்சகம் பக். 98

48. செபநேசன், எஸ். : (ஆசிரியர்) யாழ்ப்பாணக் கல்லூரியின் மெஸலனி நூறாவது ஆண்டுச் சிறப்பிதழ், சுன்னாகம், திருமகள் அச்சகம், பக். 154

49. செல்வராஜகோபால், க. த. : எழுத்துச் சீர்திருத்தங்கள் களுவாஞ்சிக்குடி, மனோகரா அச்சகம், பக். 58, ரூ. 10

50. சொக்கலிங்கம், க. : இலக்கணத் தெளிவு, யாழ்ப்பாணம், ஸ்ரீசுப்பிரமணிய அச்சகம், பக். 168, ரூ 14

51. சோமகாந்தன் என் : புதுமைஇலக்கியம், இலங்கைமுற்போக்கு எழுத்தாளர் சங்க வெளியீடு, றுகுண அச்சகம், பக். 106 ரூ 10

52. ஞானசூரியம்,கே. : தமிழா விழித்திரு,யாழ்ப்பாணம், ஆனந்தா அச்சகம், பக். 186

53. தமிழ் இலக்கிய மன்றம் : தமிழ் மலர் 1981, கொழும்பு புனித பிறிஜெட் கன்னியர் மடம் கல்லூரி, அரசன் அச்சகம் பக். 178

54. தனிநாயகம் அடிகளார் : தமிழர் பண்பாடும் அதன் சிறப்புகளும், யாழ்ப்பாணம், தந்தை செல்வா அறங்காவற்குழு, ரூ 5.

55. தியாகராஜக்குருக்கள், பூ. : கோணகிரிசதகம், யாழ்ப்பாணம், கண்ணன் அச்சகம்.

56. திருஞானசம்பந்தம்பிள்ளை, எம். : (ஆசிரியர்) வேலணை சைவப்பிரகாசக வித்தியாசாலை நூற்றாண்டு விழா மல யாழ்ப்பாணம், செட்டியார் அச்சகம்.

57. தெல்லிப்பழை மகாஜனக்கல்லூரி படைப்பிலக்கிய மன்றம் இவர்கள் (சிறுகதை) யாழ்ப்பாணம்.

58. தெல்லிப்பழை யோகசபா : இலகு ஆசனப்பயிற்சிகள் சுன்னாகம், திருமகள் அச்சகம், ரூ. 7.50

59. தேசிய அரசுப்பேரவை சட்டங்கள் சட்டமூலங்கள், அரசாங்க வர்தமானி, : கொழும்பு, அரசாங்க அச்சகம்.

60. தேசிய சேமிப்பு வங்கி: தேசிய சேமிப்பு வங்கி ஆண்டறிக்கை 1979, கொழும்பு.

61. நவேந்திரன், கந்தையா. : விழிப்புணர்வு பற்றிய விளக்கங்கள் சென்னை, நர்மதா பதிப்பகம், பக். 175, (மறுபதிப்பு)

62. நீலாவணன்: மீண்டும் யாழ்ப்பாணம் எரிகிறது, யாழ்ப்பாணம் ஆனந்தா அச்சகம், பக். 84, ரூ 8.

63. நுஃமான், எம். ஏ., முருகையன், இ. : பலஸ்தீனக் கவிதைகள் யாழ்ப்பாணம், சித்திரா அச்சகம், பக். 56, ரூ 10.

64. நைனார் லெவ்வை, எஸ். ஏ. ஸி: புதுக்குஷாம்-கந்தம்பருக்கிய இயல், கொழும்பு, ஸி. என். பி. லிமிட், பக். 19.

65. பஞ்சாட்சரம், எஸ். வி. : சைவப் பிரகாச மகாவித்தியாலய வரலாறு, யாழ்ப்பாணம், சைவப்பிரகாச அச்சகம், பக். 24

66. பரமராஜா, எஸ்: யாழ்ப்பாண அசம்பாவிதங்கள் 1981, யாழ்ப்பாணம், ஆனந்தா அச்சகம், பக். 12, ரூ. 2.

67. பரராசசிங்கம், குருசாமி : அவசர காலம் 1979, யாழ்ப்பாணம் புனிதபிலோமினா அச்சகம், பக். 114, ரூ 5

68. பல்கலைக்கழக மானியங்கள் ஆணைக்குழு : முதலாவது ஆண்டறிக்கை, 19 கொழும்பு, பல்கலைக்கழக அச்சகம், பக். 72

69. பாலசுப்பிரமணியம், ஆர் : ஒரு கோடை விடுமுறை (நாவல்) யாழ்ப்பாணம், அலை வெளியீடு, பக். 248, ரூ. 20

70. பூபாலசிங்கம், பி : இராகுகால துர்க்காதேவி துதிப்பாடல்கள் களுவாஞ்சிக்குடி, பன்ஸி அச்சகம், பக். 11

71. பெரியதம்பி, கே. : ஆழ்வார் சுவாமி குருதாள்விடுதூது. யாழ்ப்பாணம், சைவப்பிரகாச அச்சகம், பக். 30

72. பெனடிக்ற், சாமுவேல், : (ஆசிரியர்) தவத்திரு தனிநாயக அடிகளார் மாட்சி நயப்பு மலர், யாழ்ப்பாணம், யாழ்மறை மாநிலக் கத்தோலிக்க ஆசிரியர் சங்க வெளியீடு ரூ. 25

73. பொன்னன், எம் : நாகதம்பிரான்அம்மானை, தோற்றாத்தீவு மனோகரா அச்சகம், பக். 8

74. மகாலிங்கம், எஸ் : முத்துக் குவியல் (கவிதை), கொழும்பு, எம், டி. குணசேனா அச்சகம், பக். 26, ரூ 10

75. மங்கலராணி, : ஓ சமுதாயமே (கவிதை), யாழ்ப்பாணம் றொட்டறிகிளப், பக். 29, ரூ. 8

76. முகமதுஜலீல், எம். பி : சரித்திரம் தொடர்கிறது (நாவல்).

77. முகைதீன், பி. பி. எம். : சமூகங்களின் எழுச்சியும் வீழ்ச்சியும் (மொழிபெயர்ப்பு) கொழும்பு, ஐ. பி. ஸி. அச்சகம், பக். 20

78. முருகையன், இ. : நெடும் பகல் (கவிதை) சாவகச்சேரி, திருக் கணித அச்சகம், பக். 61, ரூ 6.70

79. முஸ்லீம், எம். வை. எம். : இறவாச் செல்வம் (கவிதை) மருதமுனை.

80. மெய்கண்டான் அச்சகத்தார் : நல்லூர்க்கந்தன் திருவருள் தேன்மலர்கள், யாழ்ப்பாணம், பக். 30

81. மெனாஸஸ், ஜே. ஏ. : இயற்கைமுறை குடும்பநலத்திட்டம், யாழ்ப்பாணம், ஏரஸ் அச்சகம், பக். 22

82. மொரட்டுவைப் பல்கலைக்கழகத் தமிழ்ச் சங்கம்: நுட்பம் கொழும்பு, சித்திரா அச்சகம் பக். 132

83. யோகராசா புஸ்பராணி : நீங்கள் அழகாக இருக்கப் புது இரகசியம், யாழ்ப்பாணம், சசிகலா வெளியீடு

84. வெங்கடேச ஐயர், ஆர்.: துர்மதி வருஷ வாக்கிய பஞ்சாங்கம் **1981 — 1982** கொக்குவில், சோதிடப் பிரகாசக அச்சகம், பக். 114, ரூ 10

85. வேலுப்பிள்ளை, ஸி. வி. : நாடற்றவன் (நாவல்) யாழ்ப்பாணம், வைகறை வெளியீடு, பக். 120

86. றவீந்திரன், டி. : கே. யேசு வருகிறார், கொழும்பு பன்ஸி அச்சகம், பக். 14

87. ஜமீல், எஸ். எச். எம்.:எ. எம் எ: அஸீஸ் அவர்களின் கல்விச் சிந்தனைகளும் பங்களிப்பும், கல்முனை, ஸாகிறாக் கல்லூரி பழைய மாணவர்கள் வெளியீடு, பக். 95, ரூ 9.

88. ஜெயரட்ணராஜா, ஆர். : அறிமுகப் பொருளியல், கொழும்பு சுசீதா இண்டஸ்றியல் அச்சகம், பக் 272, ரூ 24.

89. ஹனிபா, எஸ். எம்: உத்தமர் உவைஸ், கொழும்பு, ஐ. பீ. ஸி அச்சகம், பக். 172, ரூ 10.

90. ஸ்ரீதுர்க்காதேவி கோயில்: சைவசித்தாந்த மகாநாடு சுன்னாகம், திருமகள் அச்சகம், பக். 120

91. ஸ்ரீதுர்க்காதேவி தேவஸ்தானம்:ஸ்ரீதுர்க்காதேவி தேவஸ்தான கும்பாபிஷேகமலர், சுன்னாகம், திருமகள் அச்சகம், பக். 72 ரூ 10.

## பின்னிணைப்பு - 2

### பாடசாலைப் பாடப் புத்தகங்கள்

1. அழகரத்தினம், (திருமதி) ஜே: சுற்றாடற் கல்வி-8. யாழ்ப் பாணம், ஸ்ரீலங்கா அச்சகம்,
சுற்றாடற் கல்வி-4 ஷ

2. ஆறுமுகம், எம்: பௌதிகப் பயிற்சி, யாழ்ப்பாணம், மெய் கண்டான் அச்சகம்.

3. இராசையா, கே: பாசைப் பயிற்சியும் இலக்கணமும். யாழ்ப் பாணம், ஸ்ரீசுப்பிரமணிய அச்சகம்.

4. இராஜகுலவீரசிங்கம், கே.ஆர்: உயர்தரக் கணக்கியல் அச்சு வேலி ராஜா அச்சகம்.

5. குணராசா, கே: படம் வரை கலை, சமூகக் கல்வி பட வேலை-9; 10, சமூகக் கல்வி படவேலை-8.

6. சற்குணராசா, பி: அட்சர கணிதம் பகுதி-1. யாழ்ப்பாணம், பிறிவின் அச்சகம்.

7. சுப்பிரமணியம், வி. எஸ்: புதிய கணிதப் பயிற்சி-8, யாழ்ப் பாணம், ஸ்ரீகாந்தா அச்சகம்.

8. செல்வரத்தினம், பொன்: மாணவர் இரசாயனம் பகுதி-11. யாழ்ப்பாணம், மெய்கண்டான் அச்சகம்,

9. நடராசா, எஸ்: கம்பராமாயணம் யாழ்ப்பாணம், ஸ்ரீசுப்பிர மணிய அச்சகம்.
சைவநெறிப் பயிற்சி-3; 4. ஸ்ரீசுப்பிரமணிய அச்சகம்
தமிழ்மொழிப் பயிற்சி-2; 4; 5. ,, ,,
கணிதப்பயிற்சி-3; 4; 5. ,, ,,

10. நடேசபிள்ளை, வி: சிதம்பரப்பிள்ளை, கே. கணிதப் பயிற்சி-8 கொழும்பு, கலைவாணி அச்சகம்.

11. நாகரத்தினம், ரி: இரசாயனம், யாழ்ப்பாணம், சித்திரா அச்சகம்.

12. பாலகிருஷ்ணன், பி. கே: விஞ்ஞானம்-10. யாழ்ப்பாணம், செட்டியார் அச்சகம்.

13. பிரான்சிஸ், எஸ். புதிய சுகாதாரக் கல்வி-7; 8; 9. யாழ்ப் பாணம் ஸ்ரீசுப்பிரமணிய அச்சகம்.
சமூகக் கல்வி-10. யாழ்ப்பாணம், சாந்தி அச்சகம்.

14. லொட்ஸ்பிச், வில்லியம் : விஞ்ஞானக் கண்டு பிடிப்புகள் கொழும்பு, மார்க்க நிறுவனவெளியீடு

15. வடஇலங்கை தமிழ் நூற்பதிப்பகம்; பாலர் போதினி பாலர் வகுப்பு, சுன்னாகம், திருமகள் அச்சகம்

16. வேலுப்பிள்ளை, எஸ்: தமிழ்மொழி பாடப்பயிற்சிகள், யாழ்ப் பாணம், ஸ்ரீசுப்பிரமணிய அச்சகம்.

17. றிலுவான், ஸி.எம்: நேர் வழி-6. கொழும்பு, றுகுண அச்சகம்.

18. ஜெகநாதன், ஐ: விஞ்ஞானப்பயிற்சி-7. சுன்னாகம், திருமகள் அச்சகம். விஞ்ஞானம்-8; 10. சுன்னாகம். திருமகள் அச்சகம்.

## கல்வி வெளியீட்டுத் திணைக்களம் 81 இல் வெளியிட்ட பாடசாலை நூல்கள்

(இந்நூலகம் யாவும் மாணவர்களுக்கு இலவசமாக அரசாங்கத் தால் வழங்கப்பட்டன)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1. | தமிழ் முதற்புத்தகம் | — மறுபதிப்பு | — 125940 | அச்சக கூட்டுத் தாபனம் |
| 2. | தமிழ் 1 | — ,, | — 125700 | ,, |
| 3. | தமிழ் 2 | — முதற்பதிப்பு | — 99660 | ,, |
| 4. | தமிழ் 3 | — மறுபதிப்பு | — 19802 | ,, |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 5. | தமிழ் 4 | — முதற்பதிப்பு — | 74790 | ,, |
| 6. | தமிழ் 5 | — மறுபதிப்பு — | 40000 | லங்கா புளக் மேக்கர்ஸ் |
| 7. | தமிழ் 6 | — முதற்பதிப்பு — | 74864 | ,, |
| 8. | தமிழ் 7 | — மறுபதிப்பு — | 25000 | திருமகள் அச்சகம் |
| 9. | தமிழ் 8 | — ,, — | 40000 | எக்னோமிக் கல் பிரஸ் |
| 10. | தமிழ் 9 | — முதற்பதிப்பு — | 58803 | ,, |
| 11. | தமிழ் 10 | — ,, — | 22829 | ,, |
| 12. | கம்பராமாயணம் 9-10 | — ,, — | 75000 | திஸ்ஸர அச்சகம் |
| 13. | நாட்டார் பாடல்கள் 9-10 | — முதற்பதிப்பு — | 60000 | திருமகள் |
| 14. | பாலர் இந்துசமயம் | — மறுபதிப்பு — | 69129 | அச்சக கூட்டுத் தாபனம் |
| 15. | இந்துதர்மம் 1 | — ,, — | 70020 | அச்சக கூட்டுத் தாபனம் |
| 16. | சைவநெறி 2 | — ,, — | 60120 | ,, |
| 17. | சைவநெறி 3 | — ,, — | 34700 | ,, |
| 18. | சைவநெறி 4 | — ,, — | 73260 | ,, |
| 19. | சைவநெறி 5 | — ,, — | 21690 | ,, |
| 20. | சைவநெறி 7 | — முதற்பதிப்பு — | 50000 | திஸ்ஸர அச்சகம் |
| 21. | சைவநெறி 8 | — ,, — | 50000 | ,, |
| 22. | சைவநெறி 9 | — ,, — | 52050 | அச்சக கூட்டுத் தாபனம் |
| 23. | சைவநெறி 10 | — ,, — | 35550 | ,, |
| 24 | பாலர் இஸ்லாம் | — மறுபதிப்பு — | 40089 | எக்னோமிக் கல் பிரஸ் |
| 25. | இஸ்லாம் 1 | — ,, — | 35000 | ,, |
| 26. | இஸ்லாம் 2 | — ,, — | 29650 | ,, |
| 27. | இஸ்லாம் 3 | — ,, — | 20000 | ,, |
| 28. | இஸ்லாம் 5 | — ,, — | 25410 | அச்சகக் கூட்டுத் தாபனம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 29. | இஸ்லாம் 6 | — முதற்பதிப்பு — | 35000 | திஸ்ஸர அச்சகம் |
| 30. | இஸ்லாம் 7 | — ,, — | 6010 | அப்போதிக் கரிஸ் |
| 31. | இஸ்லாம் 8 | — மறுபதிப்பு — | 18045 | அச்சகக் கூட்டுத் தாபனம் |
| 32. | சீறாப்புராணம் 9-10 | — ,, — | 40000 | திருமகள் அச்சகம் |
| 33. | புதுக் குஸ்ஸாம் 9-10 | — ,, — | 41060 | பிரகதி அச்சகம் |
| 34. | கிறிஸ்தவறோமன் கத்தோலிக்கம் 2 | — முதற்பதிப்பு — | 15600 | அச்சகக் கூட்டுத் தாபனம் |
| 35. | கிறிஸ்தவறோமன் கத்தோலிக்கம் 6 | — மறுபதிப்பு — | 7500 | திருமகள் அச்சகம் |
| 36. | கிறிஸ்தவறோமன் கத்தோலிக்கம் 9 | — ,, — | 7500 | அச்சகக் கூட்டுத் தாபனம் |
| 37. | றோமன் கத்தோலிக்கம் அல்லாத 7 | ,, — | 5000 | அப்போதிக் கரிஸ் |
| 38. | றோமன் கத்தோலிக்கம் அல்லாதகிறிஸ்தவம் 8 | ,, — | 5000 | திருமகள் |
| 39. | சமூகக் கல்வி 6 | ,, — | 203548 | அச்சகக் கூட்டுத் தாபனம் |
| 40. | சமூகக் கல்வி 8 | முதற்பதிப்பு — | 75073 | குணரத்தினம் அச்சகம் |
| 41. | சமூகக் கல்வி பகுதி 11-9 | மறு பதிப்பு — | 177900 | அச்சகக் கூட்டுத் தாபனம் |
| 42. | சமூகக் கல்வி பகுதி 11-9 | — ,, — | 75000 | குணரத்தினம் அச்சகம் |

| | | | | |
|---|---|---|---|---|
| 43. | சமூகக் கல்வி பகுதி 1-10 | — முதற்பதிப்பு — | 59853 | அரசாங்க அச்சகம் |
| 44. | சமூகக் கல்வி படவேலைப் பயிற்சி 9-10 | — ,, — | 100000 | திஸ்ஸர அச்சகம் |
| 45. | ஆரம்பவிஞ்ஞானம் பகுதி 1-6 | — முதற்பதிப்பு — | 90009 | அப்போதிக் கறிஸ் |
| 46. | விஞ்ஞான அறிமுகம் பகுதி 11-6 | — ,, — | 990000 | நீர்க் கொழும்பு அச்சகம் |
| 47. | விஞ்ஞானம் பகுதி 11-7 | — முதற்பதிப்பு — | 90000 | திஸ்ஸர அச்சகம் |
| 48. | விஞ்ஞானம் பகுதி 1-9 | — மறுபதிப்பு — | 35860 | அச்சகக்கூட்டுத் தாபனம் |
| 49. | விஞ்ஞானம் பகுதி 11-9 | — முதற்பதிப்பு — | 75454 | ஜனதா பினான்ஸ் |
| 50. | பொதுவிஞ்ஞானம் பகுதி 1-10 | — ,, — | 105040 | அச்சக கூட்டுத் தாபனம் |
| 51. | பொதுவிஞ்ஞானம் பகுதி 11-10 | — ,, — | 60405 | எக்னோமிக்ஸ் |

## பின்னிணைப்பு-3

## 1981இல் இலங்கையில் வெளிவந்த சஞ்சிகைகளும் பத்திரிகைகளும்

| சஞ்சிகைகளும பத்திரிகைகளும் | ஆசிரியரும் வெளியிடப்பட்ட இடமும் | குறிப்புக்கள் |
|---|---|---|
| 1. அக்கினிக் குஞ்சு | யாழப்பாணப் பல்கலைக்கழக மாணவர்குழு | இலக்கியம், அரசியல் |
| 2. அரங்கம் | வி.எம். குகராசா, சுன்னாகம் | இலக்கியம், கலை |
| 3. அல்—ஜெஸிறா | ஏ.எம். முபாறக், கல்முனை | இலக்கியம் |
| 4. அல்—ஹிலால் | குன் அமீன், கண்டி | இலக்கியம் |
| 5. அலை | எம். புஷ்பராசன், சாவகச்சேரி | கலை,இலக்கியம், விமரிசனம் |
| 6. அனல் | எம். இன்பரூபன், யாழ்ப்பாணம் | கலை,இலக்கியம், விமரிசனம் |
| 7. ஆத்மஜோதி | நா. முத்தையா, நாவலப்பிட்டி | சமயம், இலக்கியம் |
| 8. இக்றா | வை.எம...எம.ஏ, கொழும்பு | இஸ்லாம் |
| 9. இடதுசாரி | ஏ.கே. அண்ணாமலை, யாழ்ப்பாணம் | அரசியல் |
| 10. இனமுழக்கம் | யாழ்ப்பாணம் | அரசியல் |
| 11. இஸ்லாமிய ஆசிரியன் | ஏ.எம.கே.அஹமது, நீர்கொழும்பு | இஸ்லாம் |
| 12. இஸ்லாமிய சிந்தனை | ஸி.எம.ஏ.அமீன், கொழும்பு | இஸ்லாம் |
| 13 ஈழநாடு | யாழ்ப்பாணம் | நாளேடு (செய்தி) |
| 14. ஈழமுரசு | க. திலகராசா, யாழ்ப்பாணம் | — |
| 15. உதயசூரியன் | கே.க. யோகநாதன், யாழ்ப்பாணம் | அரசியல் |
| 16 ஊற்று | யாழ்ப்பாணம் | இலக்கியம் |

| | | |
|---|---|---|
| 17. ஐக்கிய தீபம் | கே. நடேசன், யாழ்ப்பாணம் | இலக்கியம் |
| 18. கதம்பம் | கே.வி.எஸ. மோகன், கொழும்பு | கலை, இலக்கியம் |
| 19. கிருதயுகம் | | கலை, இலக்கியம் |
| 20. கீதா | ஜோ.ஜி.ஜெயசீலன், கொழும்பு | திரைப்படம் |
| 21. கீற்று | ஆர்.என், யோகேந்திரலிங்கம், கல்முனை | கலை,இலக்கியம், விமரிசனம் |
| 22. குன்றின் குரல் | போல்கஸ்பரஸ், மலையகம் | மலையக இலக்கியம் |
| 23. கூட்டுறவு ஊழியன் | என்.ரி. இராஜேந்திரன், யாழ்ப்பாணம் | — |
| 24. கைத்தொழில் | ஐ.டீ.பி. நிறுவனம், கொழும்பு | — |
| 25. சத்திய வசனம் | ஸாம்போல், கொழும்பு | கிறிஸ்தவம் |
| 26. சந்திர தீபம் | வி. நல்லையா, கொழும்பு | — |
| 27. சமர் | டானியல் அன்ரனி, யாழ்ப்பாணம் | கலை, இலக்கியம்,விமரிசனம் |
| 28. சமூகத்தொண்டன் | வி.எஸ். துரைராசா, யாழ்ப்பாணம் | கலை, இலக்கியம் |
| 29. சித்ரா | கொழும்பு | சித்திரக்கதை |
| 30. சிந்தாமணி | கொழும்பு | வாரமஞ்சரி |
| 31. சிரித்திரன் | சி. சிவஞானசுந்தரம், யாழ்ப்பாணம் | நகைச்சுவை ஏடு |
| 32. சுதந்திரன் | யாழ்ப்பாணம் | நாளேடு (செய்தி) |
| 33. செங்கொடி | இலங்கைத் தோட்டத் தொழிலாளர் சங்கம் | — |
| 34. செந்தழல் | எஸ். கணேஸ்வரன், யாழ்ப்பாணம் | — |
| 35. செம்பதாகை | | |
| 36. சோதிடமலர் | கே. சதாசிவசர்மா, சாவகச்சேரி | சோதிடம் |
| 37. சோசலிசம் | இலங்கை சோவியத் நட்புறவுச்சங்கம் | — |
| 38. சோவியத் நாடு | யு.எஸ்.எஸ.ஆர்., தகவல்நிலையம், கொழும்பு | கலை, இலக்கியம், அரசியல் |

ஏ—71

| சஞ்சிகைகளும் பத்திரிகைகளும் | ஆசிரியரும் வெளியிடப்பட்ட இடமும் | குறிப்புக்கள் |
|---|---|---|
| 39. ஞானச் சுரங்கம் | காத்தான்குடி மெய்ஞானப் பேரவை | சமயநெறி |
| 40. தமிழன் குரல் | எஸ். பாலசிங்கம், யாழ்ப்பாணம் | அரசியல் |
| 41. தமிழோசை | தி. பரமானந்தன், யாழ்ப்பாணம் | — |
| 42. தார்க்கம் | எஸ. விக்னேஸ்வரன், யாழ்ப்பாணம் | |
| 43. தாரகை | சி. சங்கரப்பிள்ளை, மட்டக்களப்பு | கலை, இலக்கியம் |
| 44. திருவருள் | வி. சதாசிவம், கொழும்பு | சமயம் |
| 45. தினகரன் | கொழும்பு | நாளேடு (செய்தி) |
| 46. தினபதி | கொழும்பு | நாளேடு (செய்தி) |
| 47. தீர்த்தக்கரை | எஸ. சாந்திக்குமார், மலையகம் | கலை, இலக்கியம், விமரிசனம் |
| 48. தூதன் | எம். செல்வராசா, கொழும்பு | கிறிஸ்தவம் |
| 49. தேசிய முரசொலி | கே. குமாரசாமி, கொழும்பு | — |
| 50. தொடுவானம் | வண.எஸ்.டவ்ள்யூ. அரியராசா, யாழ்ப்பாணம் | இலக்கியம் |
| 51. தொழிலாளி | எஸ். தியாகராசா, யாழ்ப்பாணம் | — |
| 52. நல்வழி | பி. கணேசரத்தினம், யாழ்ப்பாணம் | — |
| 53. நவஉதயம் | வி. திருநாவுக்கரசு, கொழும்பு | — |
| 54. நான் | வண.ப.ப்பற்றீக், கண்டி | — |
| 55. நேர்வழி | ஏ.ஸி.எம். றிலுவான், கொழும்பு | இஸ்லாம் |
| 56. பிரியா | ஜி. நடேசன், கொழும்பு | சித்திரக் கதைமலர் |
| 57. புதிய பாதை | — | — |
| 58. புதுசு | ஏ.றவி, சுன்னாகம் | — |
| 59. பெண்ணின் குரல் | கொழும்பு | இலக்கியம் |

| | | |
|---|---|---|
| 60. பொருளியல் நோக்கு | மக்கள் வங்கி, கொழும்பு | பொருளியல் |
| 61. மதுரம் | என். சண்முகப்பிரபு, கொழும்பு | கலை, இலக்கியம் |
| 62. மல்லிகை | டொமினிக் ஜீவா, யாழ்ப்பாணம் | கலை,இலக்கியம்,விமரிசனம் |
| 63. மன்றாடல் | சி.எஸ். தேவபாலசிங்கம், கொழும்பு | — |
| 64. மனிதன் | ஏ. விமலதாசன், கொழும்பு | — |
| 65. மாவலி | தேசியத்தொழிலாளர்சங்கம், கொழும்பு | இலக்கியம், அரசியல் |
| 66. மித்திரன் | கொழும்பு | நாளேடு (செய்தி) |
| 67. மில்க்வைற் செய்தி | கே.ஸி. குலரத்தினம், யாழ்ப்பாணம் | இலக்கியம், சமயம் |
| 68. மெய்கண்டார் நெறி | எஸ். பரமசாமி, கொழும்பு | சமயம் |
| 69. மேகம் | கே. கணேசன், யாழ்ப்பாணம் | இலக்கியம் |
| 70. யாழ் | ந. பாலசண்முகநாதன், யாழ்ப்பாணம் | — |
| 71. யேசுவருகிறார் | வண. இராஜேந்திரம், கொழும்பு | கிறிஸ்தவம் |
| 72. யேசுஜீவிக்கிறார் | ஆர். றவீந்திரன், கொழும்பு | கிறிஸ்தவம் |
| 73. வசந்தம் | | இலக்கியம் |
| 74. வாகை | வி.ஆர். இளங்கோவன், யாழ்ப்பாணம் | கலை,இலக்கியம், விமரிசனம் |
| 75. வாழ்வில் வசந்தம் | அரசாங்கத் தாதியர்மன்றம், யாழ்ப்பாணம் | இலக்கியம் |
| 76. வான்சுடர் | எஸ்.ஐ.எம் நிஸார், கொழும்பு | — |
| 77. வீரகேசரி | கொழும்பு | நாளேடு (செய்தி) |
| 78. ஜனநாயகத் தொழிலாளி | ஜனநாயகத் தொழிலாளர் காங்கிரஸ்.கொழும்பு | இலக்கியம், அரசியல் |
| 79. ஹிஜ்றா | இஸ்லாமிய நலன்புரிச் சங்கம், கட்டுகஸ்தோட்டை | இஸ்லாம் |

## பின்னிணைப்பு-4

கட்டுரை படித்தோர் கட்டுரைகள்

1. த. கனகரத்தினம்—''தமிழ்-சிங்கள மொழிபெயர்ப்பு இலக்கியங்கள்''
2. சச்சிதானந்தா ஸ்ரீ காந்தா—''கர்நாடக இசையில் ஆதிகுரு அருணகிரிநாதர்''
3. மருத்துவக் கலாநிதி ஜே. ரி. சேவையர்—''இந்துசமய மூல ஒலி பிராக்கிருதமா? சங்கதமா?
4. இ. அம்பிகைபாகன், ''வண. பிதா கிறீன் வைத்தியர் தமிழ் அறிவியல் வளர்ச்சிக்கு ஆற்றிய பணி''
5. நா. சுப்பிரமணியம்—''தமிழ்க் கவிதை ஒலிமரபு''
6. கலாநிதி எச். டபிள்யூ. தம்பையா—''பண்டைக்காலத்திலும் மத்திய காலத்திலும், இந்தியாவிலும், இலங்கையிலும் இருந்து உள்ளூராட்சி சட்டங்கள்.
7. த. சண்முகசுந்தரம்—''யாழ்ப்பாணத்து இசைவேளாளர்''.
8. கு. சண்முகநாதன்—''பழந்தமிழர் கல்வி''.
9. டி ரி. நாணயக்கார— ''பிறமொழி மாணவர்கள் தமிழைக் கற்கும்போது ஏற்படும் பிரச்சினைகள்''
10. க. கணேசலிங்கம்—''திரு. வி. க. வின் இலக்கியங்களில் நா. கதிரவேற்பிள்ளை அவர்களின் கருத்துத் தாக்கங்கள்.
11. 22-11-81 க. செ. நடராசா—''தொல்காப்பிய நூற்பாவும் உரையாசிரியர் முரண்பாடும்''
12. சபா ஜெயராசா'' தமிழ்க்கட்டுரை இலக்கியம்''

# 43. மலேசியாவில் தமிழ்

டாக்டர் இரா. தண்டாயுதம்

மலேசியாவில் தமிழிலக்கியத்தை வளர்க்கும் சாதனங்களில் தலையாயது பத்திரிகை. பத்திரிகைகளின் எண்ணிக்கை கூடி, படைப்புக்களின் எண்ணிக்கை பெருகியிருந்தாலும் புத்தக வெளியீட்டில் முன்னேற்றம் ஏதுமில்லை. 1981இல் மலேசியாவில் வெளிவந்த தமிழ்நூல்கள் எண்ணிக்கையில் குறைந்திருந்தாலும் மலேசியத் தமிழிலக்கியத்தைப் புரிந்து கொள்ள விரும்புவோர்க்கும், ஆராய விரும்புவோர்க்கும் இவை இன்றியமையாதனவாக விளங்குகின்றன.

மலேசியாவில் தமிழ் இலக்கியத்தை வளர்க்கும் சாதனங்களுள் தலையாயதாக இருப்பது பத்திரிகை. பத்திரிகையின் ஞாயிறு இதழ்களே அன்று முதல் இன்று வரை எழுத்தாளர்களின் படைப்புக்களைத் தாங்கி வருகின்றன. இம்முறையில் பார்த்தால் மலேசியத் தமிழ் இலக்கிய வரலாற்றில் இவ்வாண்டை ஒரு குறிப்பிடத்தக்க ஆண்டாகவே கொள்ள வேண்டும். ஏனெனில், 1980-இன் இறுதியில் தமிழ்நேசன் நாளிதழ் மட்டுமே வெளிவந்து கொண்டிருந்தது. மற்றொரு நாளிதழான தமிழ் மலர் இந்நாட்டு மதமான இஸ்லாத்தைப் பற்றி மாறான சில கருத்துக்கள் அடங்கிய ஒருகட்டுரையை வெளியிட்டதால்நிறுத்தப்பட்டிருந்தது. தமிழ்மலர் 1981-மே மாதத்தில் தினமணி என்ற பெயரில் மறுபடியும் வெளிவரத் தொடங்கியது. அத்துடன் தமிழ் ஓசை என்ற மற்றொரு நாளிதழும் இதே மாதத்திலிருந்து வெளிவரத் தொடங்கியது வானம்பாடி என்ற வார இதழில் பணியாற்றிக் கொண்டிருந்த ஆதி குமணன், இராஜகுமாரன், அக்னி ஆகிய மூவரும் தமிழ் ஓசையில் பணியாற்ற வந்தனர். இதனால் தமிழ்ப் பத்திரிகை உலகம் சுறுசுறுப்படைந்தது. ஒன்றுக்கு மூன்றாகத்

தமிழ் நாளிதழ்களின் எண்ணிக்கை கூடியவுடன், கவிதை-சிறுகதை களின் எண்ணிக்கையும் கணிசமாக உயர்ந்தது. பல ஆண்டுகளுக்கு முன் தமிழ் நேசன், தமிழ்மலர், தமிழ் முரசு என்ற மூன்று நாளி தழ்கள்வெளிவந்த சூழல் இவ்வாண்டு மே மாதத்திலிருந்து காணப் படுகிறது. இந்நாளிதழ்களுடன் 'வானம்பாடி' வார ஏடும் 'புதிய சமுதாயம்' 'உதயம்' ஆகிய மாத இதழ்களும் தொடர்ந்து வெளி வந்து கொண்டுள்ளன.

பத்திரிகைகளின் எண்ணிக்கை கூடி, படைப்புக்களின் எண்ணிக்கை பெருகியிருந்தாலும், புத்தக வெளியீட்டில் ஒருவித மாற்றமும் இல்லை. பழையபடியே எழுத்தாளர்கள் தாங்களே வெளியிட்டுத் தாங்களே விற்பதற்கும் முயன்று வருகின்றனர். ஒரு நிலையான புத்தக வெளியீட்டு நிறுவனம் தோன்றாதவரை இந் நிலையில் எந்தவித முன்னேற்றத்தையும் காண முடியாது.

இதற்கிடையில், மலேசியத் தமிழ் எழுத்தாளர் சங்கம் எழுத்தாளர் அற நிறுவனம் ஒன்றை இவ்வாண்டு அமைத்துள்ளது. எழுத்தாளர் நலன்களைக் கவனிப்பதற்கென இத்தகைய அற நிறுவனம் ஒன்றை அமைக்க வித்திட்டவர் அமரர் டான்ஸ்ரீ மாணிக்கவாசகர் ஆவார். மலேசிய இந்தியர் காங்கிரசின் தலை வராகவும் மலேசிய அரசாங்க அமைச்சராகவும் அவர் இருந்த போது, இத்தகைய ஒரு அற நிறுவனத்தின் தேவை கூறி, அப்படி ஒரு நிறுவனம் அமையுமானால் மலேசிய இந்தியர் காங்கிரஸ் பத்தாயிரம் வெள்ளி தரும் என்றும் வாக்குறுதி அளித்தார். அவ்வாக்குறுதி இவ்வாண்டில் செயலுருவம் பெற்றது. அதற்கென நடந்த விழாவில் தேசியத் தோட்டத் தொழிலாளர் சங்கமும் இந்நிதிக்குப் பத்தாயிரம் வெள்ளி தருவதாக வாக்களித்துள்ளது. இவ்வற நிறுவனம் முறையாகச் செயல்படத் தொடங்கும்போது, புத்தக வெளியீட்டிலும் ஒரு மாற்றம் ஏற்படலாம். அதுவரை இப்போதிருக்கும் நிலையில் மாற்றம் ஏற்படும் எனத் தோன்ற வில்லை.

இனி, இவ்வாண்டு வெளிவந்த நூல்களைப் பார்ப்போம்.

## நாவல்கள்

இவ்வாண்டு வெளிவந்த நாவல்கள் நான்கு. வீ கு. சந்திர சேகரனின் நிறைந்த வெளியில் நீலவானம், ரெ. கார்த்திகேசு வின் வானத்து வேலிகள், குமாரி அஞ்சலை கிருஷ்ணனின் காவியத்

திலே ஒரு கண்ணீர் ஆகிய மூன்றையும் நாவல்களாகவும், மெ. அறிவானந்தனின் சங்கமத்தைக் குறுநாவலாகவும் கொள்ள லாம்.

## நிறைந்த வெளியில் நீலவானம்

தமிழ்ப்புத்தக வெளியீட்டுத்துறை மலேசியாவைப் பொறுத்த வரை பிரச்சினைக்குரிய ஒன்றாக இருப்பினும், தளராது நூல் வெளியீட்டுத் துறையில் கவனம் செலுத்தி வருபவர்களில் வீ. கு சந்திரசேகரும் ஒருவர். தமது நான்காவது நூலாக அவர் இந்நாவலை வெளியிட்டுள்ளார். நூல்களை வெளியிடுவதோடு நில்லாது, நாடு முழுவதும் வெளியீட்டு விழாக்களை நடத்தி விற் பனைக்கும் இவர் வழிசெய்து விடுவார். புதிய தலைமுறை என்ற இவரது மூன்றாவது நூல்—சிறுகதைத் தொகுதி—ஐந்தாயிரம் படிகள் விற்றிருப்பதாக இவர் குறிப்பிடுகிறார். மலேசியத் தமிழ் எழுத்துலகைப் பொறுத்தவரை இந்த விற்பனை எண்ணிக்கை வியப்பிற்குரிய ஒன்றாகும்.

நிறைந்த வெளியில் நீலவானம் என்ற இந்நாவல் சுங்கை பீலேக் என்ற இடத்தில் உள்ள 'கருணை இல்லம்' என்ற அனாதை விடுதியை மையமாகக் கொண்டு எழுந்ததாகும். இளமையில் கைம் பெண்ணாகி இந்த அனாதை விடுதியை நடத்திவரும் திலகவதி அம்மையாருக்கு உறுதுணையாக இருக்கும் கனிமொழியே இந் நாவலின் நாயகி. குமரேசன் என்ற இலட்சியவாதியைக் காதலித்து, அனாதை விடுதியின் எதிர்கால நலனுக்காக அக்காதலை அவள் தியாகம் செய்வதே கதை. பதினான்கு அத்தியாயங்களால் ஆன இக்கதை, காதலையும் சமூக சேவையையும் அவற்றிற்கிடையில் எழும் போராட்டத்தையும் சம்பவங்கள் மூலமாகக் காட்டிச் செல்கிறது. காதலைச் சேவையுணர்ச்சி வென்றுவிடுவதாகக் காட்டுவது ஆசிரியரின் நோக்கத்தைத் காட்டுகிறது. கனிமொழி யின் தியாகத்தோடு கதை முடிந்துவிட்டாலும், 'கதைமுடிய வில்லை.. 'என்ற் குறிப்போடு நாவலை முடித்துள்ளார் ஆசிரியர்.

## வானத்து வேலிகள்

இந்நாவலின் ஆசிரியரான ரெ. கார்த்திகேசு ஒரு நல்ல சிறு கதையாசிரியராக மலேசியத் தமிழ் வாசகர்களுக்கு அறிமுகமான வர். புதிய தொடக்கங்கள் என்ற சிறுகதைத்தொகுதியை அடுத்துச் சில ஆண்டுகளுக்குப் பின் இந்நாவல் வெளிவருகிறது. இது இவருடைய முதல் நாவல்,

இந்நாவலும் ஒரு சிறந்த இலட்சியத்தை உள்ளடக்கியே எழுதப்பட்டுள்ளது. மலேசிய இந்தியர்கள் பொருளாதாரத் துறையில் மற்ற இனங்களைப் போல் முன்னேற வேண்டும் என்பதே அந்த இலட்சியம். அந்த இலட்சியத்தின் அடையாள மாகவே இந்நாவலின் கதைத்தலைவன் டத்தோ குணசேகரன் படைக்கப்பட்டுள்ளார். தோட்டப்புறக் குடும்பமொன்றில் பிறந்த குணசேகரன், அன்றாடம் குடித்துவிட்டுத் தாயைக் கொடுமைப் படுத்தும் தந்தையால் மனம் கொதிக்கிறான். வாழ்க்கையில் முன் னேற வேண்டும் என்ற வெறி கொள்கிறான். அந்த வெறியே, சந்தர்ப்பங்களைப் பயன்படுத்தி முன்னேறத் தூண்டுகிறது. முன்னேறி, வழக்கறிஞர் ஆகிறார். நிறைய சம்பாதிக்கிறார். சமூக முன்னேற்றத்திற்கு வாரிவழங்குகிறார். தமது வாழ்நாள் இலட்சிய மான 'விஸ்மா குணா' என்ற முப்பது மாடிக் கட்டிடத்தையும் கட்டி முடிக்கிறார். இடையில் அவருடைய குடும்பப்பிரச்னைகளும் கதைத்திட்டத்திற்குக் கணிசமாக உதவுகின்றன. சுருக்கமாகச் சொன்னால் தனிமனிதப் பிரச்சினைகளும் சமுதாயப் பிரச்சினை களுமே டத்தோ குணசேகரன் என்ற பாத்திரப்படைப்பாக உருவம் பெற்றுள்ளது எனலாம்.

கதைப்போக்கில் அதிகச் சிறப்பில்லா விட்டாலும், கதை சொல்லும் முறையில் ஆசிரியர் தனிக்கவனம் செலுத்தியுள்ளார். கதை சொல்லும்போது இருக்கும் குணசேகரனையும் அவருடைய கடந்த கால வாழ்க்கையையும் மாற்றி மாற்றிக் காட்டிச் செல்லும் போது, அவருடைய வளர்ச்சியை முழுமையாக உணர்ந்து கொள்ள முடிகிறது. அவ்வாறு காட்டிச் செல்லும் போது, ஓர் அரை நூற் றாண்டு காலத் தமிழ்ச் சமுதாய வரலாற்றையே ஆசிரியர் பின்னணியாக்கி விடுகிறார். அந்தப் பின்னணி மேலும் அழுத்த மாகும் வகையில், இந்தக் காலகட்டத்தில் வாழ்ந்த - வாழும்— அரசியல் தலைவர்களையும் அவர் இந்நாவலின் கதைமாந்தர் களாக்கியுள்ளார். கதையின் உண்மையியல் போக்கிற்கு இவ்வுத்தி நன்கு துணை செய்கிறது. எனினும், நாடகப்போக்கில் செயற்கை யாய் அமையும் சில கதைச்சம்பவங்கள் கதையைப் பலவீனப் படுத்தி விடுகின்றன.

## காவியத்திலே ஒரு கண்ணீர்

குமாரி அஞ்சலை கிருஷ்ணனின் இந்த நாவல் ஒரு தொடக்க முயற்சியாகவே அமைகின்றது. வானொலி நாடகங்கள் பல

வற்றின் மூலமும் 'வானம்பாடி'யில் 'உதயபானு' என்ற தொடர் மூலமும் வாசகர்களுக்கு அறிமுகமான இவருடைய முதல் நூல் இது.

அமுதா, கண்ணன் என்ற இருவருடைய காதலே இந்நாவலின் சம்பவங்களை உருவாக்குகின்றது. இருவரும் எழுத்தாளர்கள். ஒருவரையொருவர் காணாமலே கடிதங்களின் மூலம் காதலை வளர்த்துக் கொள்கின்றனர். இக்காதலிலே ஏற்படும் சிக்கலும் அது விடுபடுவதுமே கதை.

கதை நீளமாக வளர்த்துச் செல்லப்பட்டிருந்தாலும் மிகை யுணர்ச்சியின் காரணமாக எழும் சம்பவங்கள் உரிய அழுத்தம் பெறத் தவறிவிடுகின்றன. சம்பவங்கள் அளவுக்கு மீறி நீண்டிருப் பதும், தேவையில்லாமல் இடம் பெற்றிருப்பதும் கதைத் திட்டத்தைப் பலவீனப்படுத்தி விடுகின்றன. கதையில் இடம் பெறும் ஒரு முழு வானொலி நாடகம் கதையை மேலும் பலவீனப் படுத்தி விடுகிறது.

## சங்கமம்

அளவில் குறுநாவலாக இருப்பினும், மலேசியத் தமிழர் சமூக வரலாற்றில் ஐந்து தலைமுறைகளைத் தொட்டுச் செல்லும் கதை யாகச் சங்கமம் அமைகிறது. இதன் ஆசிரியர் மெ அறிவானந்தன் 1957-லேயே மல்லிகா என்ற நாவலை வெளியிட்டுள்ளார். அதனை யடுத்து, நீண்ட இடைவெளிக்குப் பின்வரும் நாவல் இது.

வழிவழியாக வந்த பண்பாட்டில் ஆழக் காலூன்றி, வீரமே வாழ்வாக வாழ்ந்த ஒரு சமுதாயத்தின் மகத்தான வீழ்ச்சியையும், அவ்வீழ்ச்சிக்கு இடையில் எழும் நம்பிக்கையையுமே இந்நாவலில் ஆசிரியர் உருவகப்படுத்திக் காட்டுகின்றாரோ என்று எண்ணும் அளவிற்கு இந்நாவல் அமைந்துள்ளது. ராமசாமி என்ற கதை மாந்தரை மையமாகக் கொண்டு சுழலும் இக்கதை, அவருக்கு முன்னும் பின்னுமாக இரண்டிரண்டு தலைமுறைகளைப் பிணைத்துக் கொண்டு செல்கிறது. ராமசாமியின் தாத்தா பக்கிரி சாமி வீரம் என்ற விளைநிலத்தில் விளைந்தவர். மரபிற்கும் பண் பாட்டிற்கும் கட்டுப்பட்டவர். அவர் மகன் முத்துசாமி புதிய நாகரிகத்தோடு ஓரளவு சமரசம் செய்து கொள்கிறார். அவர் மகன் ராமசாமி ஒரு தோட்டத் தொழிலாளி. கூடிய வரை நல்ல தமிழ் எழுதுவதிலும், தொழிற்சங்கம் அமைப்பதிலும் அவர்

வாழும் தோட்டத்திற்கு வழிகாட்டுகிறார். அவர் மகன் பத்து மலையோ உளுத்துப்போன ஒரு கூட்டத்தின் பிரதிநிதி. உழைப் பையும் கல்வியையும் நம்பாமல் போதைப் பொருளும் ஏமாற்றுமே வாழ்க்கையாகக் கொண்டு வாழ்கிறான். இந்தச் சூழலில் அவன் மகன் பக்கிரிசாமிதான் ஒரு சிறிய நம்பிக்கைக் கீற்றாகச் சுடர் விடு கிறான். ஐந்து தலைமுறைகளைத் தொட்டுச் செல்லும் இக்கதை யைச் சம்பவங்களால் இன்னும் விரிவாக்கி, கதைத்திட்டத்தை அழுத்தமாக்கியிருந்தால் இது ஒரு சிறந்த நாவலாகியிருக்க முடியும்.

## சிறுகதை

மலேசியத் தமிழ் எழுத்தாளர்கள் பரவலாகப் பயன்படுத்தும் சிறுகதைத்துறையில் இவ்வாண்டு ஆறு சிறுகதைத் தொகுப்புக்கள் வெளிவந்துள்ளன. இவற்றில் இரண்டு, பல எழுத்தாளர்களின் சிறுகதைகளை உள்ளடக்கியிருக்கும் தொகுப்புக்கள். 1977-சிறு கதைகள், வண்ணங்கள் பத்து ஆகியவையே அவை. மற்றவை நான்கும் தனிப்பட்ட எழுத்தாளர்களின் சிறுகதைத்தொகுப்புக்கள். சி. வடிவேலுவின் புதிய பாதை, மு. அன்புச்செல்வனின் தீபங்கள், சோலை முனியனின் இராணுவக் கதைகள், வி. ச. முத்தையாவின் ஆகஸ்டு 26 ஆகியவையே அத்தொகுப்புக்கள்.

## 1977-சிறுகதைகள்

இவ்வாண்டு வெளிவந்த சிறுகதைத் தொகுதிகளிலேயே தனிச் சிறப்பிடம் பெறும் தொகுதி இது எனலாம். 1977-ஆம் ஆண்டில் மலேசிய-சிங்கப்பூர் இதழ்களில் இடம் பெற்ற கதைகளில் சிறந் தவை எனத் தேர்ந்தெடுக்கப்பட்ட பதினேழு கதைகள் இத் தொகுதியில் இடம் பெற்றுள்ளன.

இக்கதைகளின் தேர்விற்கும் நூல் வெளியீட்டிற்கும் காரண மாக அமைந்தது சிங்கப்பூர் இலக்கியக் களம் என்னும் அமைப்பு. 1976-ஆம் ஆண்டின் இறுதியில் தோன்றிய இந்த அமைப்பு, சிங்கப்பூர்-மலேசிய இதழ்களில் படைக்கப்படும் தரமான சிறு கதைகளை அடையாளம் காட்டுவதற்காகவே அமைந்தது. இரண்டு மாதங்களுக்கொருமுறை தேர்ந்த திறனாய்வாளர்களைக் கொண்டு மூன்று சிறந்த சிறுகதைகளைத் தேர்ந்தெடுத்துப் பரிசும் கொடுக்கின்றது. திறனாய்வாளர்களையும் மலேசியா-சிங்கப்பூ ரோடு வரையறுத்துக் கொள்ளாமல் தமிழகம், இலங்கை ஆகிய

இடங்களில் உள்ள திறனாய்வாளர்களையும் இவ்வமைப்பு பயன் படுத்திக் கொண்டது. விருப்பு வெறுப்பற்று நடுநிலையோடு பணி யாற்றும் இவ்வமைப்பின் முதல் சாதனையே இந்நூல் வடிவில் வெளிவந்துள்ளது.

இத்தொகுதியின் சிறந்த கதையாகத் தேர்ந்தெடுக்கப் பட்டுள்ள எண்ணங்கள் நிலையானவை அல்ல என்ற சிறுகதை, ஒரு பலசரக்குக்கடை முதலாளியான நல்லதம்பியையும் அவரிடம் நாள் முழுவதும் ஓய்வில்லாமல் பாடுபடும் சின்னக்கண்ணுவையும் பற்றிப் படர்கிறது. தொடக்கத்தில் இருவரும் நண்பர்கள் என்றாலும், தொழில் முன்னேற்றம் இருவரையும் முதலாளி தொழிலாளி நிலைகளில் வைத்து விடுகிறது. நல்லதம்பியின் மனைவி எப்படியும் பெரிய அளவில் சின்னக்கண்ணுவிற்கு உதவ வேண்டும் என்கிறாள். ஆனால் நல்லதம்பி அதற்கு இணங்க வில்லை. இடையில் நல்லதம்பி ஒரு கனவு காண்கிறார். அவரும் சின்னக்கண்ணுவும் இறந்து விடுவதாகவும், ஆவியுலகில் இருந்து இருவர் வீடுகளையும் வீட்டார் நடவடிக்கைகளையும் பார்ப்ப தாகவும் அமைந்த இக்கனவு அவர் உள்ளத்தை மாற்றுகிறது. மனைவியிடமும் அவருக்கு உதவப் போவதாகக் கூறுகிறார். ஆனால் இந்த நல்லெண்ணம் சில கணங்களுக்குத்தான். நல்ல தம்பி மறுபடியும் முதலாளியாகி விடுகிறார்.

ஒரு முதலாளியின் குணச்சித்திரத்தை அடிப்படையாகக் கொண்ட இக்கதை, மனித மனத்தின் இயல்பை மிகத் துல்லிய மாகக் காட்டி விடுகிறது. ஆசிரியரின் ஆழமான சமூகப் பார்வை கதை முழுவதும் படர்ந்துள்ளது. இக்கதையை எழுதியவர் மா. இளங்கண்ணன்.

இத்தொகுதியின் பிற சிறந்த கதைகளுள் குறிப்பிடத்தக்க ஒரு சிறுகதை இராஜகுமாரனின் அக்கரைப் பச்சைகள் ஆகும். சிவப்பு அடையாளக் கார்டினால் தற்காலிகத் தொழிலாளியாகித் துன்பப்பட்டுத் தாயகம் திரும்பும் சபேசன், அங்குள்ள இழிநிலை களைக் கண்டு பொறுக்காமல் மலேசியா திரும்புவதே கதை. மலேசியத் தமிழர்கள்எதிர்நோக்கும் ஒரு முக்கியப்பிரச்சினை இங்கு அழகான சிறுகதை வடிவம் எடுத்துள்ளது.

இதனையடுத்துக் குறிப்பிட வேண்டிய மற்றொரு சிறுகதை சா. ஆ. அன்பானந்தனின் சட்டத்திற்கு... ஆகும். பிறப்புச் சான்றிதழ் இல்லாததால் குடியுரிமை கிடைக்க அல்லற்படும் ஒரு

தோட்டத் தொழிலாளியின் கதை இது. இதுவும் மலேசியத் தமிழ்ச் சமுதாயம் எதிர்நோக்கும் ஒரு முக்கியப் பிரச்சினை.

இவையல்லாத பிற கதைகளும் மலேசியத் தமிழ்ச் சமுதாயத்தின் பல்வேறு கோணங்களைக் காட்டும் வகையிலேயே அமைந்துள்ளன. தன் அரசியல் தலைவரை வெற்றி பெறச் செய்வதற்காகவே குடும்பப் பொறுப்புக்களை மறக்கும் சரவணனுடைய கதை, மா. இராமையாவின் முடிவு. இதே அரசியல் பின்னணியைக் கொண்ட மற்றொரு கதை ரெ. கார்த்திகேசுவின் முத்து அழுகிறான். பழைமையை மறந்து புதிய நாகரித்தில் அடிபட்டு அழியும் ஒருவனை நாடோடிகள் கதை காட்டுகிறது. இதனை எழுதியவர் இராம கண்ணபிரான். மற்றவர் துன்பத்தையும் தன் வருவாய்க்கு வழியாக ஆக்கிக் கொள்ளும் ஒருவன் கதையைத் தோட்டப்புறப் பின்னணியில் உடல் மட்டும் நனைகிறது கதை சொல்கிறது பிற கதைகளும் இவ்வாறே ஒவ்வொரு பிரச்சினையைத் தொட்டுச் செல்கின்றன. மலேசியத் தமிழ்ச் சமுதாயத்தையும், தமிழ்ச் சிறுகதைகளின் தன்மையையும் அறியவிரும்புபவர்களுக்கு இத்தொகுதி ஒரு சிறந்த உறுதுணை.

## வண்ணங்கள் பத்து

முன்னையச் சிறுகதைத் தொகுதியைப் போல் அமைப்பால் சிறப்படையும் மற்றொரு சிறுகதைத் தொகுதி வண்ணங்கள் பத்து ஆகும். பத்து எழுத்தாளர்களின் சிறுகதைகள் இதில் உள்ளன. இப்பத்து எழுத்தாளர்களும் தேசியச் செய்தித்தாள் ஊழியர் சங்கத்தின் தமிழ் நேசன் கிளை உறுப்பினர்கள். பத்திரிகையோடு தொடர்புடைய ஒரு சங்கத்தின் கிளை முதன் முதலாக வெளியிடும் தொகுப்பு இது. அந்த வகையில் இதனை ஒரு முக்கியத் தொகுப்பாகக் கொள்வது பொருந்தும்.

இக்கதைகளும் மலேசியத் தமிழ்ச் சமூகத்துடன் தொடர்புள்ள கதைக்கருக்களையே எடுத்தாண்டுள்ளன. ஒன்றிரண்டு கதைகள் எழுத்துத் துறையோடு தொடர்புள்ளவை.

இவற்றில் ஒரு மலர்உதிர்கிறது என்ற கதை ஒரு கோயில் பிரச்சினையை மையமாகக் கொண்டு எழுதப்பட்டது. அரசியல், கோயில் நிர்வாகத்திலும் ஊடுவிக் கேடு செய்வது இங்குச் சம்பவங்கள் மூலம் காட்டப்பட்டுள்ளது. சிலையுடைப்புச் சம்பவங்களை மையமாகக் கொண்ட கதை பராசக்தி உன் மகனின் கதியைப் பார்

ஆகும். அதுகிடக்கட்டும் சாக்கடை என்ற கதை கலை இரவுகள் என்ற பெயரில் நடக்கும் கேலிக்கூத்துக்களுக்கு வெளிச்சம் போட்டுக் காட்டுகிறது.

எழுத்துத் துறையை ஒட்டிய கதைகளில் பேனாவில் மை முடிந்த போது கதை குறிப்பிடத்தக்கது. விரசமான கதை எழுத முனையும் ஓர் எழுத்தாளர் படும் தொல்லையை இக்கதை விவரிக்கிறது. உதவி ஆசிரியரால் ஏளனம் செய்யப்பட்ட ஒருவர், உழைப்பால் அதே பத்திரிகையில் துணையாசிரியர் ஆவது அவன் முன்னேறுகிறான் கதையில் காட்டப்பட்டுள்ளது. கதைப் பொருள்களில் புதுமை இருப்பினும், சிறுகதையமைப்பில் இத் தொகுதியின் பல கதைகள் சிறப்படையவில்லை.

## புதிய பாதை

இச்சிறுகதைத் தொகுப்பின் ஆசிரியரான சி. வடிவேல் மலேசியத் தமிழ் வாசகர்களுக்கு நன்கு அறிமுகமானவர். இது அவருடைய மூன்றாவது சிறுகதைத் தொகுதி. வள்ளுவரின் காதலி என்ற முதல் தொகுதி 1965-ஆம் ஆண்டிலும், இருண்ட உலகம் என்ற இரண்டாம் தொகுதி 1970 ஆம் ஆண்டிலும் வெளி வந்தன. மலேசியத் தமிழ் எழுத்தாளர்களிலேயே மூன்றாவது சிறுகதைத் தொகுதியை வெளியிடும் முதல்வர் சி. வடிவேல். இத் தொகுதியில் எட்டுச் சிறுகதைகளும். மூன்று தமிழ்க்கதைகளின் மலாய் மொழியாக்கமும் உள்ளன. தமிழரல்லாத பிற இனத் தவர் மலேசியத் தமிழ்ச் சிறுகதையை அறிய இம்மொழியாக் கங்கள் நன்கு உதவும்.

சிறுகதைக் கலையை எப்போதும் பயன் கருதியே கையாள்பவர் சி. வடிவேல். ''சிறுகதை என்பதைப் பிரச்சினைகளை ஆராய்வதற்கும் உணர்த்துவதற்கும் எனக்குக் கிடைத்த ஒரு கருவியாகவே கருதுகிறேன்'' என்று அவர் கூறுகிறார். முதலிரண்டு தொகுதி களைப் போல இத்தொகுதியும் இக்கூற்றை விளக்கும் முறையிலேயே அமைந்துள்ளது.

இத்தொகுதியில் உள்ள கண்ணன் ரிமூவ் வகுப்பில் படிக்கிறான்; புதியபாதை ஆகிய இரண்டு கதைகளும் மலேசியத் தமிழர்கள் எதிர்நோக்கும் கல்விப் பிரச்சினையை மையமாகக் கொண்டவை. இக்கதைகளைப் புரிந்து கொள்ள மலேசியக் கல்வியமைப்பைப் புரிந்து கொள்வது இன்றியமையாதது இங்கு

இருவகையான தொடக்கப் பள்ளிகள் உள்ளன. தசியப் பள்ளிகள் மலாய் மொழியைப் பயிற்று மொழியாகக் கொண்டவை. தேசியப் பாரதிப் பள்ளிகள் தமிழையோ சீனத்தையோ பயிற்று மொழியாகக் கொண்டவை. இடைநிலைப் பள்ளிகள் அனைத்தும் மலாய் மொழியையே பயிற்று மொழியாகக் கொண்டவை. எனவே தமிழ், சீனத் தொடக்கப் பள்ளிகளில் பயின்றவர்கள், முதல் படிவத்தில் சேருவதற்கு முன் 'ரிமூவ் வகுப்பு' என ஓராண்டு பயில வேண்டும். தேசிய மாதிரிப் பள்ளிகளில் பயின்றவர்கள், தேசியப் பள்ளிகளில் பயின்றவர்களோடு இணைவதற்கு ஒரு பாலமாகவே அந்த ரிமூவ் வகுப்பு அமைகிறது எனலாம். இந்த வகுப்பினால் எழும் சில பிரச்சினைகளையே முதல் கதை பேசுகிறது. அந்தப் பிரச்சினைகளிலிருந்து விடுபடும் வழியை இரண்டாவது கதை காட்டுகிறது. முதல் கதையில் செய்தி கலைவடிவத்திற்கு உட்பட்டு வெளிப்படுகிறது. இரண்டாம் கதையிலோ செய்தியே மேலோங்கி நிற்கிறது.

இத்தொகுதியின் பிற கதைகளில் மூன்றுதலை முறை, தாயும் மகளும் ஆகிய இரண்டும் தோட்டப்புறப் பின்னணியில் அமைந்தவை. முதல் கதை ஒரு தோட்டத் தொழிலாளியின் முன்னேற்றத்தையும், அடுத்த கதை ஒரு கங்காணியின் இழிசெயலையும் மையமாகக் கொண்டவை. நகர்ப்புற நாகரிகத்தின் ஒரு போக்கைக் கதைக் கருவாகக் கொண்ட கதை சிரம்பானிலிருந்து வந்த செல்லா. எட்டுமாடிக்கும் மேலே கதை நாட்டுப்பற்றை வற்புறுத்தும் கதை. நகர்ப்புறங்களில் வேகமாக வளர்ந்து வரும் சாயிபாபா பஜனைகளை மையமாக வைத்துப் பின்னப்பட்ட கதை பிள்ளைவரம்.

பாம்பு ஆண்டு வந்தது என்பது இத்தொகுதியின் இறுதிக் கதை. சீனர்களின். நம்பிக்கைகளையும் பழக்க வழக்கங்களையும் இக்கதை காட்டுகிறது. மூவின மக்கள் வாழும் இந்நாட்டில் பிற இனமக்களின் வாழ்க்கை முறைகளைக் காட்டும் வகையில் அமைந்த சில தமிழ்ச் சிறுகதைகளில் இதுவும் ஒன்று.

## தீபங்கள்

தவத்தின் வலிமை என்ற சிறுகதைத் தொகுப்பின் மூலம் அறிமுகமான மு. அன்புச் செல்வனின் இரண்டாவது சிறுகதைத் தொகுதி இது. இத்தொகுதியில் பத்துச் சிறுகதைகள் உள்ளன. கல்வி முதலிய பல்வேறு சமுதாயப் பிரச்சினைகளை அடிப்படையாகக் கொண்டு இக்கதைகள் புனையப்பட்டுள்ளன.

இத்தொகுப்பின் சிறந்த சிறுகதையாக அட்டைகள் கதையைச் சொல்லலாம். தோட்டப்புறப் பின்னணியில் அமைந்த இக்கதை, தோட்டப்புறப் பாட்டாளியின் மகன் ஒருவன் கல்வித் துறையில் முன்னேற வேண்டுமானால் எதிர்நோக்க வேண்டிய இக்கட்டுகளைத் தெளிவாகக் காட்டுகிறது. தோட்டத் தொழிலாளி அழகிரி தன் மகன் தங்கையாவை ஆங்கில இடைநிலைப் பள்ளிக்கு அனுப்ப முடிவு செய்கிறான். தோட்டமே அதிசயிக்கிறது. பெரிய கிராணி மேத்யூஸ் அறிவுரை கூறுவது போலத் தடுக்க முயன்றும், அழகிரி துணிந்து மகனை ஆங்கிலப் பள்ளிக்கு அனுப்புகிறான். குடும்பம் பட்டினி கிடந்து முயன்றும், பெரிய கிராணியின் சூழ்ச்சியால் தங்கையாவின் படிப்பு பாதியிலேயே நின்று விடுகிறது. வேறு வழியில்லாமல் பெரிய கிராணியிடமே வேலைக்கமர்கிறான் தங்கையா. கதைத் தலைவன் தன் முயற்சியில் வெற்றி பெறாவிட்டாலும், தோட்டப்புறச் சூழ்நிலையைக் கதை அழகாகப் படம்பிடித்துக் காட்டுகிறது.

நிகழ்கால வாழ்க்கையில் உண்மைக்கும் நேர்மைக்கும் ஏற்பட்டு விட்ட பஞ்சத்தைச் சைத்தான் வேதம் ஓதுகிறது என்ற கதை காட்டுகிறது. ஆவியுலகத்தோடு பரிச்சயம் உள்ள ஒருவன் வாழ்க்கையில் முன்னேற வேண்டும் என்ற நோக்கத்தோடு, அவ்வாறு முன்னேறிய ஒரு நண்பனின் ஆவியிடம் ஆலோசனை கேட்கிறான். பொய்யையே மூலதனமாகக் கொண்டு, ஏமாற்றையே வாழ்க்கை வழியாகக் காட்டுகிறது ஆவி. கதைப் பொருள் உத்தி முறையில் சிறந்து நிற்பதற்கு இக்கதை ஒரு நல்ல எடுத்துக்காட்டு. பிரம்ம தேவனுடன் ஒரு வழக்கு என்ற மற்றொரு கதை தம் நடைமுறை வாழ்க்கையின் துன்பங்களையே காட்டுகிறது.

அரசியல் உலகின் ஏமாற்றுக்களைக் காட்டும் கதை ஒரு யதார்த்தவாதியின் பதவி விலகல் நேர்மையாளனுக்கு அரசியலில் ஏற்படும் தோல்வியைக் காட்டுவதே ஆசிரியரின் நோக்கம்.

இத்தொகுதியில் பிற கதைகள் தனிமனித நிலையிலும் குடும்ப வாழ்க்கையிலும் ஏற்படும் அனுபவங்களை அடிப்படையாகக் கொண்டவை. தந்தை உடல் நோக உழைத்து இங்கிருந்து அனுப்பும் பணத்தில் ஊதாரி வாழ்க்கை வாழும் ஒருஇளைஞனைத் 'தீபங்கள்' கதையில் காணலாம். அத்தானிடம் கொண்ட அன்பின் காரணமாக உயிரையே தியாகம் செய்யும் ஒரு தலைவி லலிதா—கதையின் நாயகி—மறைந்ததந்தையின் ஆழமான அன்பை

நினைவு கூரும் கதை நினைவுகள் சாவதில்லை. வயதுக்கு வந்த பின் தாய் போட்ட கட்டுப்பாடுகளை வெறுக்கும் ஒரு பெண், அனுபவத்தால் அதே கட்டுப்பாடுகளைத் தன் மகளுக்குப் போடு வதை இலக்கணம் மாறுமோ? கதை காட்டுகிறது.

## இராணுவக் கதைகள்

மலேசிய இராணுவத்தில் பணிபுரியும் சோலைமுனியனின் இரண்டாவது கதைத் தொகுதி இது முதல் கதைத் தொகுதியான மலர்வளையத்திலேயே இராணுவம் சம்பந்தப்பட்ட கதைகள் சில இருப்பினும், இத்தொகுதிக் கதைகள் அனைத்தையும் இராணுவப் பின்னணியிலே ஆசிரியர் எழுதியுள்ளார். அவ்வகையில் இச்சிறுகதைத் தொகுதிக்குத் தனிச்சிறப்புண்டு.

"புண்ணியம் செய்தவள், ரூபி, பகையோடு பாசம், வீரனின் காதலி, ஜெனிவா உடன்படிக்கை, தீப அலைகள், பாட்டாளியின் மகன் ஆகிய ஏழு கதைகள் இத்தொகுதியில் உள்ளன. நாட்டின் அமைதிக்கும் பாதுகாப்புக்கும் பேரிடர் விளைவிக்கும் பயங்கரவாதிகளோடு மலேசிய இராணுவ வீரர்கள் தொடுக்கும் போரே இக்கதைகளின் அடிப்படையாய் அமைந்துள்ளது. நோக்கம் சிறந்திருப்பினும் கதையமைப்பிலும் சம்பவக்கோவையிலும் ஒரு சாதாரணத் தன்மையே காணப்படுகிறது.

சரவா மாநிலக் காட்டில் விறகு வெட்டிப் பிழைக்கும் மீனாவைப் பயங்கரவாதிகளிடம் இருந்து இராணுவ வீரர்கள் மீட்பதைப் புண்ணியம் செய்தவள் கதை காட்டுகிறது. பயங்கரவாதியோடு ஓடிப்போய்த் துன்பப்படும் ஒரு சகோதரி, இராணுவ வீரனாகத் தன்' சகோதரனைப் பார்த்து வருந்துவதைப் பகையோடு பாசம் கதையில் காணலாம். கல்வியில் முன்னேற முடியாத ஒரு தோட்டத் தொழிலாளியின் மகன் வீரத்தால் இராணுவத்தில் முன்னேறுவதே பாட்டாளியின் மகன் கதை.

## ஆகஸ்ட் 26

'தமிழ் நேசன் நாளிதழின் துணையாசிரியரான வி. ச, முத்தையாவின் பத்துச் சிறுகதைகளை உள்ளடக்கிய தொகுதியே ஆகஸ்ட் 26.

இத்தொகுதியின் முதல் கதை ஒரு நடிகையின் வாழ்க்கையில் ஏற்படும் மாற்றத்தைப் பற்றியது. படப்பிடிப்பிற்காக மலேசியா வந்த நடிகை, இங்கு ஒருவனோடு காதல்கொண்டு அதனால்

அவள் வாழ்க்கையில் ஏற்பட்ட மாற்றங்களைக் கதைவிவரிக்கிறது. அடுத்த கதையான சபதம் ஒரு சீனத் தம்பதியரைப் பற்றியது. இளமையில் வீட்டை விட்டு ஓடிப்போய்ப் பயங்கரவாதிகளோடு சேர்ந்துகொண்ட மகனை, இராணுவத்தில் பணியாற்றும் வளர்ப்பு மகன் சுட்டுக்கொன்றதைத் தந்தை மகிழ்வோடு வரவேற்பதை இக்கதை காட்டுகிறது. நேர்மையாளன் தன் நடவடிக்கையால் ஒரு திருடனையும் திருத்த முடியும் என்பதை உணர்த்தும் கதை கேட்டானே ஒரு கேள்வி, மனநிறைவு என்ற அடுத்த கதை, ஒரு சீனப்பெண்ணின் கடுமையான உழைப்பையும் அதன் பின்னணியில் அமைந்த குடும்ப வாழ்க்கையையும் வைத்துப் பின்னப்பட்டது. ஒரு கவிஞனுக்கு மலர்களிடத்தில் உள்ள ஆர்வத்தை விளக்கும் கதை முதல் ரோஜா முற்பிறப்பிற்கும் இப்பிறப்பிற்கும் இடையில் உள்ள தொடர்பினை மையமாகக் கொண்டு பின்னப்பட்ட கதைகள் பிறப்பின் விசித்திரம், ஒரு பெண்ணின் உணர்ச்சிகள் பேசுகின்றன ஆகிய கதைகள், முற்பிறப்பில் நாம் செய்த செயல்களின் விளைவே இப்பிறவி என்பதை இக்கதைகளின் மூலம் ஆசிரியர் காட்ட நினைக்கிறார். கதை சொல்லும் முறையில் வாசகரோடு நெருங்கி வரும் ஆசிரியர், கதைச் சம்பவங்களில் இன்னும் போதிய அழுத்தத்தைச் சேர்த்திருக்கலாம்.

## கவிதை

சிறுகதையை அடுத்து மலேசியத் தமிழிலக்கியத்தில் செல்வாக்குப் பெற்ற ஒரு துறையாகக் கவிதை விளங்கி வருகிறது. மலேசியத் தமிழ்ப் பத்திரிகைகள் அனைத்துமே கவிதைகளை அவற்றின் தரமுணர்ந்து வெளியிட்டு வருகின்றன. மரபுக் கவிதைகளோடு புதுக்கவிதைகளும் இங்கு நிறைய எழுதப்படுகின்றன. மரபுக் கவிதைகளைத் தமிழ் நேசனும் புதுக்கவிதைகளைத் தமிழோசையும் ஊக்குவித்து, கவிதை வளர்ச்சிக்குத் துணை செய்கின்றன. எனினும் புதுக்கவிதைத் துறையில் இரண்டு நூல்களே இதுவரை வெளியாகியுள்ளன. இவ்வாண்டு இத்துறையில் வெளிவந்த முதல் மலர், தமயந்தி ஆகிய இரண்டு நூல்களும் மரபுக் கவிதைகளையே உள்ளடக்கியுள்ளன.

## முதல் மலர்

கரு. திருவரசுவின் இசைப்பாடல் தொகுதியே முதல் மலர். இது இவருடைய இரண்டாவது கவிதைத் தொகுதி. முதல்

தொகுதி வண்ணங்கள் என்ற பெயரிலே சில ஆண்டுகளுக்கு முன் வெளிவந்தது. இதிலுள்ள சில பாடல்கள் மலேசிய ஐந்தாம் படிவத் தமிழ் இலக்கியப் பாடத்தில் சேர்க்கப்பட்டுள்ளன. இவருடைய பாடல்களுடன் ஐ. உலகநாதன் பாடல்கள் சிலவும் இதில் சேர்க்கப்பட்டுள்ளன. மலேசியக் கவிஞர்களின் பாடல்கள் ஐந்தாம் படிவ இலக்கியத்தில் சேர்த்துக் கொள்ளப்பட்டது இதுவே முதல் முறை.

## முதல் மலர்

தமிழ், முருகன், நாடு, இசை,காதல், பொது ஆகிய ஆறு பகுதிகளாக இக்கவிதைத் தொகுதி பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு பகுதியிலும் அவ்வத்துறையில் கவிஞர் பாடிய இசைப்பாடல்கள் இடம் பெற்றுள்ளன. இசைப் பாடல்களானதால் ஓசையொழுங்கு முதலிடம் பெற்றிருந்தாலும், கற்பனையும் சிந்தனையும் பல பாடல்களில் அழகுற வெளிப்பட்டுள்ளன.

கவிஞர் மொழியுணர்வு நிறைந்தவர்- தமிழை இயலாகவும் இசையாகவும் கூத்தாகவும் பார்க்கும் கவிஞர் அவ்வளவோடு நில்லாமல் தாயாகவும் பார்க்கிறார்.

குயிலது கூவிட இசையானாய்!
கிளிமொழி பேசிட இயலானாய்!
மயில்நடம் ஆடிடக் கூத்தானாய்!
வழிவழி மரபால் தாயானாய்!

என்பது கவிஞர் தமிழைக் காணும் கோணத்தைக் காட்டும் பகுதி. மொழியுணர்வே ஒரு இனத்தின் தனித் தன்மைகளை வழி வழியாகக் காத்து வருவது என்பதை வழிவழி மரபால் தாயானாய் என்ற அடியில் அழகுற உணர்த்துகிறார் கவிஞர்.

கவிஞருடைய முருகன் பாடல்கள் கற்பனையழகிலும் சிந்தனை நயத்திலும் சிறந்து நிற்கின்றன.

முருகனை நோக்கிப் பாடும்போது கவிஞரின் பக்தியும், கற்பனையும், சிந்தனையும் ஒருசேர வெளிப்பட்டு நிற்கின்றன. இந்நிலையை இத்தொகுதியின் பல பாடல்களிலும் காணலாம்.

## தமயந்தி

கவிஞர் ஐ. உலகநாதனின் தமயந்தி ஒரு நாடகக் காப்பியம். வானொலிக் கவிதை நாடகமாகப் பல ஆண்டுகளுக்கு முன் அரங்கேறிய இக்காவியம் இப்போது நூலுருவம் பெற்றுள்ளது.

1966-இல் வெளியான சந்தனக் கிண்ணம் தொகுப்பின் மூலம் மலேசியத் தமிழ்க் கவிதையில் ஒரு நிலையான இடம் பிடித்து விட்ட உலகநாதன், இக்கவிதை நாடகத்தின் மூலம் மேலும் சிறப்புப் பெறுகிறார். புகழேந்தியும் அதிவீரராம பாண்டியரும் பாடிய காவியத்தை இக்காலத்திற்கேற்ற வகையில் எளிமையாக வும் இனிமையாகவும் பாடியுள்ளார் கவிஞர்.

''தமயந்தி கால்பாகம்
தமிழ்சிந்தும் அரைபாகம்
சமைந்ததொரு நளபாகம்
சார்ந்தமுக் கால்பாகம்
அமைந்ததொரு சூதாட்ட
அரங்கமொரு முழுபாகம்
எமையந்திப் பொழுதொருநாள்
ஈர்த்ததனால் வார்த்த கதை!

என்று கதையின் கதையில் இக்காவியம் பிறந்ததற்கான சூழலைக் கவிஞர் கூறுகிறார். ஆனாலும் புகழேந்தியை அவர் மறந்து விடவில்லை.

தம் பாட்டிற்கு மூலம் புகழேந்தி என்றும் கவிஞர் உறுதியாகக் கூறி விடுகிறார். எனினும், வேண்டிய இடங்களில் காலத்திற்கேற்ற சில மாற்றங்களையும் அவர் செய்யத் தவறவில்லை. தூது சென்ற அன்னத்தை, அன்னம் என்ற பெயருள்ள பெண்ணாக்கிக் காட்டுவது அவற்றுள் முக்கியமானது.

கதை பழையதாயினும், இந்தக் காலத்திற்கும் பொருந்தும் ஓர் உண்மை கதையில் வெளிப்படுவதாகக் கவிஞர் கருதுகிறார்.

தனி மனிதன் தவறிழைத்தால்
சரிவதவன் ஒருவன்தான்!
தலைவனே தவறிழைத்தால்
சமுதாயம் தடம்புரளும்!
இனிய இந்த தத்துவத்தை
எடுத்துரைக்கும் கதையிதுதான்!
என்றைக்கும் புதுமையிது;
இன்றைக்கும் ஏற்றகதை!

என்ற இவ்வுண்மையே கதை முழுவதும் ஊடுருவி நிற்கிறது. எனவே கவிதையாலும் கருத்தாலும் அமைப்பாலும் சிறந்த ஒரு நாடகக் காப்பியமாக இது விளங்குவதில் ஐயமில்லை,

## சமயமும் பிறவும்

மலேசியத் தமிழரிடையே இந்து சமயத்தைப்பற்றிய உண்மைகளையும், தத்துவங்களையும், வரலாற்றையும் அறியவேண்டும் என்ற ஆவல் அண்மைக் காலங்களில் பெருகி வருகிறது. இந்துக்களாகப் பிறப்பதோடு வாழவும் வேண்டும் என அவர்கள் விரும்புகின்றனர். இந்த நோக்கம் நிறைவேறும் வகையில் அவ்வப்போது சில நூல்கள் வெளிவந்து கொண்டுள்ளன. இவ்வாண்டு இத்துறையில் இரு நூல்கள் வெளிவந்துள்ளன.

''இந்து சமயம் விளக்கம்—மூன்றாம் புத்தகம்'', இந்துசமய தத்துவ விளக்க அகராதி என்ற இவ்விரு நூல்களையும் எழுதியவர் மலேசியக் கல்வித் துறையைச் சேர்ந்த சி. வேலுசுவாமி.

## இந்து சமய விளக்கம் (மூன்றாம் புத்தகம்)

1977, 1978 ஆகிய ஆண்டுகளில் முறையே முதல், இரண்டாம் புத்தகங்கள் வெளிவந்த பிறகு இவ்வாண்டில் இந்து சமய விளக்கம்—மூன்றாம் புத்தகம் வெளிவந்துள்ளது. பல ஆண்டுகள் தலைமையாசிரியராக இருந்து வரும் சி. வேலுசுவாமி மாணவர் உலகத்தோடு நெருங்கிய தொடர்பு கொண்டவர். அதனால் அவர்களுடைய தேவைகளையும் அறிந்தவர். இந்தத்தேவைகளை நிறைவேற்றும் வகையிலேயே இந்நூல் அமைந்துள்ளது. ''தமிழ் மாணவர் அனைவரும் இந்து சமயத்தைப் பற்றிய அடிப்படை உண்மைகளை அறிந்து கொள்ள வேண்டும் என்பதுவே அடியேனுடைய குறிக்கோள். அதன் பொருட்டே செய்திகள் எளிமையாகவும் விளக்கமாகவும் எழுதப் பெற்றுள்ளன'' என்று என்னுரையில் அவர் கூறுவது இந்நூலின் நோக்கத்தைப் புரிந்து கொள்ளத் துணை செய்யும்.

மூன்றாம் புத்தகமான இதில் வேதம், வேதாங்கம், வேதாந்தம், தரிசனம் ஆகியவையும்; சைவம், வைணவம், சைவ சமயச் சாத்திரங்கள், சித்தாந்தக் கொள்கை, உருவ வழிபாட்டின் அவசியம், அவதாரம், நான்கு முக்கிய படிமுறைகள், தீக்கை ஆகியவையும் விளக்கப் பெற்றுள்ளன.

## இந்துசமயத் தத்துவ விளக்க அகராதி

அகர வரிசையில் அமைந்துள்ள இந்நூல், இந்து சமயத்தைப் பற்றிய பல பொருள்களை விளக்கும் வகையில் அமைந்துள்ளது.

அக்கினி தொடங்கி ஸ்ரீருத்ரத்தில் முடியும் இந்நூல், இந்து சமயத் தத்துவங்களை அறியத் துணைநிற்கும் என்பது உறுதி. இந்து சமயத்தின் உண்மைகளைப் புரிந்து கொண்டு அதன் வழி வாழ விரும்புபவர்களுக்கு உதவும் வகையிலேயே இவ்வகராதியும் அமைந்துள்ளது.

## சாதி எதிர்ப்பு மொழிகள்

இந்திய சமுதாயத்தின் கொடிய நோயாகக் கருதப்படும் சாதி யமைப்பை எதிர்த்து அறிஞர்கள் சொன்ன கருத்துக்களைத் தொகுத்துத் தரும் நூல் இது. அம்பேத்கார் முதல் பலஅறிஞர்கள், சிந்தனையாளர்கள், தலைவர்கள், கவிஞர்கள், ஆய்வாளர்கள் கருத்துக்கள் முறையாகத் தொகுக்கப்பட்டுள்ளன. பஞ்சூர் மு. திரு வேங்கடம் இவற்றைக் தொகுத்துத் தந்துள்ளார்.

## சிறுவர் நூல்: மொழியாக்கம்

சிறுவர்களுக்காக இந்த ஆண்டு வெளிவந்த நூல் ஒன்றே ஒன்று. அதுவும் மொழியாக்க நூல். வெண்கலப்பன்றி என்ற இந் நூல் இரண்டு கதைகளைக் கொண்டது. முதலாவது ஆங்கிலத்தி லிருந்தும், அடுத்தது மலாயிலிருந்தும் மொழியாக்கம் செய்யப் பெற்றது. இவற்றை மொழியாக்கம் செய்தவர் சி. வேலுசுவாமி.

முதல் கதையான 'வெண்கலப் பன்றி' ஒரு ஏழைச் சிறுவனின் அற்புத அனுபவங்களையும், அவன் ஓவியனாக வளர்ந்ததையும் சுவையாகச் சொல்கிறது. இரண்டாம் கதையான கப்பல் தலைவன் தெங்காங், பெற்றோரை இகழ்ந்தவன் அடையும் துன் பங்களை விவரிக்கிறது. கம்பத்தில் (கிராமத்தில்) பிறந்து வளர்ந்த தெங்காங், சந்தர்ப்பச் சூழலால் கப்பல் தலைவனாகித் தன் பெற்றோரை இகழ்ந்து ஒதுக்கும் போது இயற்கையே சீறி அவனைத் தண்டிப்பதாகக் கதை முடிகிறது.

## முடிவுரை

1980-ஆம் ஆண்டோடு ஒப்பிடும் போது நூல்களின் எண்ணிக்கை குறைந்திருந்தாலும், இவ்வாண்டில் பல குறிப்பிடத் தக்க நூல்கள் வெளிவந்துள்ளன. மலேசியத் தமிழிலக்கியத்தைப் புரிந்து கொள்ள விரும்புபவர்களுக்கும், ஆராய விரும்புபவர் களுக்கும் இவை இன்றியமையாதவையாக விளங்குகின்றன.

# மலேசியாவில் 1981-இல் வெளியான நூல்கள்

## நாவல்கள்

அஞ்சலை கிருஷ்ணன், காவியத்திலே ஒரு கண்ணீர், ஆசிரியை. சிம்பாங் எம்பாட், 1981, பக். 176

அறிவானந்தன், மெ., சங்கமம், பசிபிக்பிரஸ், கோலாலம்பூர் 1981, பக். 33

கார்த்திகேசு, ரெ., வானத்து வேலிகள், ஆசியன் பதிப்பகம், பினாங்கு, 1931, பக் 135

சந்திரசேகரன், வீ.கு., நிறைந்த வெளியில் நீலவானம், மலர்விழிப் பதிப்பகம், கோலாலம்பூர், 1981, பக். 98

## சிறுகதைத் தொகுதிகள்

1977-சிறுகதைகள், தமிழ்ப் புத்தகாலயம். சென்னை, 1981 பக். 172

வண்ணங்கள் பத்து, தேசிய செய்தித்தாள் ஊழியர்கள் சங்கம் தமிழ்நேசன் கிளை, கோலாலம்பூர். 1981 பக். 81

அன்புச்செல்வன், மு.. தீபங்கள், தமிழ் இளைஞர் மணி மன்றம், கோலாலம்பூர், 1981, பக். 128

சோலை முனியன், இராணுவக் கதைகள், செந்தமிழ்க் கலா நிலையம், பினாங்கு, 1981, பக் 83

முத்தையா, வி.ச , ஆகஸ்ட் 26, வேணி வெளியீடு, சென்னை, 1981, பக் 85

வடிவேல், சி , புதிய பாதை, பாரதி பிரஸ். சிரம்பான், 1981 பக் 146

## கவிதை

உலகநாதன், ஐ., தமயந்தி, பாரி நிலையம், சென்னை, 1981 பக். 84

திருவரசு, கரு , முதல் மலர், தமிழ் இளைஞர் மணிமன்றம், பினாங்கு, 1981, பக் 110

## சமயம்

வேலுசுவாமி, சி., இந்துசமய விளக்கம் (மூன்றாம் புத்தகம்) திருமகள் வெளியீடு, கோலாலம்பூர், 1981, பக். 123

வேலுசுவாமி சி., இந்துசமயத் தத்துவ விளக்க அகராதி, திருமகள் வெளியீடு, கோலாலம்பூர் 1931, பக் 56

## பிற

திருவேங்கடம், பஞ்சூர் மு. (தொ-ர்), சாதி எதிர்ப்பு மொழிகள், ஆசிரியர், பஞ்சூர், 1981, பக் 72

## சிறுவர் நூல்: மொழியாக்கம்

சி. வேலுசுவாமி, வெண்கலப் பன்றி, திருமகள் வெளியீடு, கோலாலம்பூர், 1981, பக் 25

# 44. சிங்கப்பூரில் தமிழ்

எஸ். எஸ். சர்மா

ஒன்றரை லட்சம் தமிழ் மக்கள் வாழும் சிங்கப்பூரில் வானொலி, தொலைக் காட்சி, தமிழர் இயக்கப் பேரவை, நூல்கள், நாடகங்கள் ஆகியவற்றால் தமிழ் பெரிதும் வளர்ச்சியடைந்துள்ளது. தமிழ் மக்கள் தமிழையும் தமிழ் பண்பாட்டையும் மறந்துவிடாமலிருக்கப் பல தமிழ் அமைப்புகள் சிறந்த பணியாற்றிவருகின்றன.

சிங்கப்பூர்க் குடியரசின் நான்கு ஆட்சி மொழிகளில் தமிழ் மொழியும் ஒன்று.

தமிழ்மொழி பேசும் நாடாளுமன்ற உறுப்பினர்கள் சிங்கப்பூர் நாடாளுமன்றத்தில் தமிழில் உரை நிகழ்த்துவதை அவ்வப்போது கேட்க முடியும். ஓர் உறுப்பினர் உரையாற்றும் போது, இதர உறுப்பினர்களுக்கு அம்மொழி தெரியாவிடில் அவர்கள் விரும்பிய இதர மொழிகளில் அதன் மொழிபெயர்ப்பைக் காதுக்கருவிகளில் செவிமடுக்கும் வசதியும் செய்யப்பட்டுள்ளது.

## அரியாசனம் பெற்ற தமிழ்

குடியரசின் அதிபராக இப்போது இருப்பவர் இந்திய வம்சா வழி வந்த திரு. தேவன் நாயர். வெளி விவகார அமைச்சராக இருப்பவர் திரு. எஸ். ராஜரத்தினம். கலாச்சார அமைச்சர் திரு. எஸ் தனபாலன். தமிழ் மொழி பேசும் நாடாளுமன்ற உறுப் பினர்களாக உள்ளவர்கள திரு. எம். கே. ஏ ஜப்பார், பேராசிரியர் எஸ். ஜெயக்குமார், திரு. செல்வதுரை ஆகியோர்.

617 சதுர கிலோ மீட்டர் கொண்ட சிங்கப்பூரில் வாழும் 24 லட்சம் மக்கள் தொகையில் தமிழர்களின் எண்ணிக்கை ஒன்றரை லட்சம்.

மிகச் சிறுபான்மையாகத் தமிழர்களின் எண்ணிக்கை இருப்பினும் அவர்களின் மொழியும் பண்பாடும் பெரும்பான்மைச் சமூகத்தினரின் ஆதிக்கத்தில் அமிழ்ந்து அழிந்துவிடாமல், அடையாளம் காட்டும் விதத்தில் நிலைநிறுத்தி வைப்பதில் முக்கிய பங்காற்றி வரும் தமிழர் அமைப்புகளையும் தமிழ் அன்பர்களையும் நாம் மறக்க முடியாது.

## அறிவிப்புகளில் தமிழ்

சிங்கப்பூரின் நாணயங்களில் தமிழ் இடம் பெற்றுள்ளது.

அரசினரின் அறிவிப்புகளில், அறிக்கைகளில் ஆங்கில, மலாய் சீன மொழிகளுடன் தமிழும் இடம்பெற்றுள்ளது.

அரசுத்துறையினர் வீடமைப்பு, பொதுப்பயனீட்டுத்துறை போன்ற துணை அமைப்பினரும் அனுப்பும் அறிக்கைகளில் நான்கு மொழிகளுடன் தமிழும் இடம் பெற்றிருப்பதைக் காணலாம் எடுத்துக்காட்டாக, தமிழர் ஒருவருக்கு அனுப்பப்படும் வருமான வரிப் பாரங்கள் தமிழில் முழு விளக்கமுடன் அமைந்திருக்கும். தமிழில் அவற்றை நிரப்பி அனுப்பலாம்.

## அழைப்புகள் தமிழில்

சிங்கப்பூர் அதிபர் அல்லது பிரதமர் நடத்தும் அதிகாரபூர்வ நிகழ்ச்சிகளுக்கான அழைப்புகள் தமிழர்களுக்குத் தமிழிலேயே அச்சிடப்பட்டு அனுப்பப்படுகின்றன.

சிங்கப்பூர்த் தேசிய தின அரசாங்க வைபவ அழைப்புகளைத் தமிழில் தமிழர்கள் பெறும்போது பெருமிதம் கொள்ளவே செய்வார்கள் என்பதில் ஐயமில்லை.

விமானங்களின் வருகை, புறப்பாடு குறித்து தமிழிலும் செய்யப்படுவதை விமான நிலையத்தில் கேட்கலாம்.

## நூல்நிலையத்தில்

சிங்கப்பூரின் தேசிய நூல் நிலையத்தில் பல்லாயிரக்கணக்கான தமிழ் நூல்கள் உள்ளன. இவை தொகுதி வாரியாகப் பிரிக்கப்பட்டு வரிசைப்படுத்தி வைக்கப்பட்டுள்ளன. அநேக வார, மாத இதழ்களும் இங்கே இடம் பெற்றுள்ளன. வாசகசாலைகளைத் தமிழ் மாணவர்களும் மற்றும் ஆர்வலர்களும் நன்கு பயன்படுத்தி வருகின்றனர்.

பழைய நாளிதழ்கள், மாத இதழ்கள், அறிக்கைகள் மைக்ரோ பிலிம் செய்யப்பட்டிருப்பதால்துரிதமாக அவற்றைக்கண்ணோட்ட மிட்டுத் தேவையான குறிப்புகளை எடுத்துக் கொள்ள முடியும்.*

1981 ல் தமிழ் பற்றிய தொகுப்பைச் செய்யுமுன், சிங்கப்பூரில் தமிழ் மொழியின் நிலையை ஓரளவுக்குக் காட்டினால்தான் வெளி நாட்டில் வாழும் தமிழர்கள் புரிந்து கொள்வார்கள் என்பதால் சில விளக்கங்களையும் தந்துள்ளோம்.

## பள்ளிகளில் தமிழ்

சிங்கப்பூரின் கல்விக் கொள்கையில் தாய்மொழி அறிவு கட்டாயப் பாடமாக்கப்பட்டுள்ளது. சிங்கப்பூரின் தேசிய மொழி களான ஆங்கிலம், சீனம், மாண்டரின் மொழி, மலாய், தமிழ் ஆகியவற்றில், ஆங்கிலமுடன் பிறமொழி ஒன்றை இரண்டாம் மொழியாகப் பயின்றால்தான் அவர்கள் பல்கலைக்கழகப் புகுமுக வகுப்பில் இடம் பெற முடியும்.

அண்டைநாடான மலேசியாவில் மலாய் மட்டுமே தேசிய மொழியாக இருப்பதாலும் பல்வேறு இனமக்களிடையேயும் தொடர்பு மொழியாக மலாய் மொழி இருப்பதாலும் கற்பதற்கு எளிதாக இருப்பதாலும் அநேகர் மலாய் மொழியை இரண்டாம் பாடமாக எடுக்கின்றனர். தமிழ் மாணவர்கள் தமிழை இரண்டாம் மொழியாகப் பயில்வதற்கு சிங்கப்பூரில் நூற்றுக்கு மேற்பட்ட பள்ளிகளில் வசதிகள் செய்யப்பட்டுள்ளன. இருந்தும் இரண்டாம் மொழியாகத் தமிழை தமிழ் மாணவர்கள் எடுப்பதற்கு அதிகத் தூண்டுதல் தேவைப்படுகிறது.

## ஒரு சதவீதமே

''சிங்கப்பூரில் 30,390 தமிழ் மாணவர்கள் பள்ளிகளில் படிக் கின்றனர். இவர்களில் 9, 200 பேரே தமிழை இரண்டாம் மொழி யாகப் பயில்கின்றனர். தேசியப் பல்கலைக் கழகம், தொழில் பயிற்சிக் கல்லூரி (பாலி டெக்னிக்) பயிலும் தமிழ் மாணவர்களின் எண்ணிக்கை 1 சதவீதம் அல்லது 102 மாணவர்களே!'' என்கிறார் சிங்கப்பூர் தமிழர் பேரவைத் தலைவர் கோ. கந்தசாமி அவர்கள்.

---

★ 1981க்கான தொகுப்பைச் செய்ய நண்பர் பி. எஸ். பற்குண ராஜா அவர்களும் நானும் இந்த வாசகசாலையில் குறிப்புகளை எடுத்தோம்.

தமிழைப் போதனா மொழியாகக்கொண்ட தமிழ் தொடக்கப் பள்ளிகள் சிங்கப்பூரில் இப்போது இல்லை. உமறுப் புலவர் உயர் நிலைப்பள்ளி ஒன்று மட்டுமே தமிழர்களின் பெயர்கூற இப்போது இருந்து வருகிறது.

## தமிழ் ஆசிரியர் பங்கு

சிங்கப்பூரில் அடிப்படைத் தமிழ் போதனையைத் தருவதில் தமிழ் ஆசிரியர்கள் அரும் பங்காற்றி வருகின்றனர்.

இந்தத் தமிழாசிரியர்கள் பொதுக் கல்விச் சான்றிதழில் தமிழை இரண்டாம் மொழியாகக் கற்றிருப்பினும், ஆங்கிலத்தில் பெற்ற அறிவாற்றல் போல் தமிழில் ஆழமான பயிற்சியைப் பெற வாய்ப்பில்லை. எனினும் அடிப்படைத் தமிழறிவை வளர்ப்பதில் சிறப்பான பங்காற்றி வருகின்றனர்.

சிங்கப்பூரில் தமிழில் போதனை செய்யும் ஆசிரியர்கள் பிற மொழி ஆசிரியர்கள் போன்றே சம ஊதியம் பெறுகின்றனர். இதனால் இவர்கள் முன்னைய தமிழ்ப் பள்ளிக்கூட ஆசிரியர்களை விட மிக உயர்ந்த வாழ்க்கைத் தரத்தையும் வசதிகளையும் பெற முடிந்துள்ளது.

சிங்கப்பூரில் தேசியப் பல்கலைக்கழகத்தில் தமிழை இடம் பெறச் செய்ய இப்போது முயற்சி மேற்கொள்ளப்பட்டு வருகிறது. சிங்கப்பூரின் பிரிவினைக்கு முன்னர் இருந்த தமிழ்ப் பகுதி மலேசிய பல்கலைக்கழகத்திற்கு மாற்றலாகிவிட்டது என்பது சுட்டத்தக்கது.

மறைந்த "தமிழ் முரசு" ஆசிரியர் திரு. கோ. சாரங்கபாணி அவர்கள் சிங்கப்பூர்ப் பல்கலைக்கழகத்தில் தமிழ் மொழி இடம் பெறச் செய்ய "தமிழ் எங்கள் உயிர்" என்ற நிதி மூலம் பொது மக்களிடம் ஏறத்தாழ ஒரு லட்சம் வெள்ளிக்கு மேல் வசூல் செய்து வழங்கியது நன்றியுடன் நினைவு கூரத்தக்கது.

## தமிழ் நூல்கள்!

சிங்கப்பூர்ப் பள்ளிகளுக்குத் தேவையான தமிழ்ப்பாட நூல்களை இங்குள்ள சூழ்நிலை உணர்ந்து கல்வித்துறை சார்ந்த அன்பர்கள் தயாரித்து வெளியிட்டுள்ளனர். அவை மாணவர் களுக்குப் பெரிதும் பயனளித்து வருகின்றன.

தமிழாசிரியர் சங்கமும் அவ்வப்போது பல இலக்கியப் போட்டிகளை நடத்தி வருகிறது. 11-7-1981 முதல் 26-7-81 வரை தமிழாசிரியர் சங்கம் பள்ளிகளிடையே இலக்கியப் போட்டிகளை நடத்தியது.

## அறநெறிப் போதனை

சிங்கப்பூர்ப் பள்ளிகளில் சமய, அறநெறிக் கல்வி இப்போது கட்டாயப் பாடமாக்கப்பட்டுள்ளது. இந்து, பௌத்த, இஸ்லாமிய கிறித்துவ, கன்பூஷியஸ் ஆகிய சமயங்களில் ஒன்றைக் கட்டாயப்பாடமாக இடைநிலைப் பள்ளி மாணவர்கள் கற்க வேண்டும் என்ற நிலை ஏற்பட்டிருப்பதால், இதில் இந்து சமயத்தைப் பாடமாக எடுக்கும் மாணவர்கள்தாம் பெரிதும் பாதிக்கப்பட்டுள்ளனர்.

இந்து சமயப் பாடங்களை எளிதாக விளக்கும் அடிப்படை நூல்கள் தமிழில் போதிய அளவில்லை. பரந்த இந்து சமயத்தை எப்படிப் போதிக்க வேண்டும் என்பதற்கான பாடத்திட்டம் அண்மையில் சில அறிஞர்களைக் கொண்டு உருவாக்கப்பட்டுள்ளது. பல்வேறு கூறுகளைக் கொண்ட இந்து சமயத்தைப்பற்றி பள்ளி மாணவர்கள் எளிதில் விளங்கிக் கொள்ளும் விதத்தில் தெளிவான நூல்கள் வெளியிடப்படுவது இன்று இன்றியமையாத் தேவையாகிறது இதைச் செய்யத் தவறினால் இந்து மாணவர்கள் பிற சமயப் பாடங்களைக் கற்பதில் நாட்டம் செலுத்தும் நிலை ஏற்படலாம். இது குறித்து அண்மையில் கொழும்பில் நடைபெற்ற உலக இந்து மாநாட்டின் ஆய்வுக் கருத்தரங்கிலும் வற்புறுத்தப் பட்டது சமய அறிஞர்கள் இந்த அடிப்படை போதனை நூல்களை வெளியிடுவதில் உடனே கவனம் செலுத்த வேண்டும்.

## வானொலியில் தமிழ்

சிங்கப்பூரில் தமிழ் மொழி வளர்ச்சிக்குக் கல்விக்கூடங்களை அடுத்து, வானொலி, தொலைக்காட்சி, திரைப்படங்கள், நாளிதழ்கள், மாத இதழ்கள் ஆகியவை பெரிதும் துணை செய்கின்றன.

சிங்கப்பூர் வானொலியின் தமிழ் நிகழ்ச்சிகளை உள்நாட்டில் மட்டுமல்லாது மலேசியா, இந்தோனேசியா, சாவா, போர்னியோ, புநணை போன்ற அண்டை நாடுகளில் வாழும் தமிழர்களும் கேட்டு மகிழ்கின்றனர்.

சிங்கப்பூர் வானொலி அன்றாடம் காலை 5-30 முதல் இரவு 9 மணி வரை இடைவிடாது தமிழ்நிகழ்ச்சிகளை ஒலிபரப்புகிறது. இந்த நிகழ்ச்சிகள் ஏ. எம். எனப்படும் மத்திம, சிற்றலை வரிசைகளிலும், எப். எம். எனப்படும் ஒலி அலைச் சீர்வரிசையிலும் ஒலிபரப்பாகின்றன. எப். எம். ஸ்டீரியோ எனப்படும் இரு ஒலி வழி ஒலிபரப்புக்கும் கணிசமான நேரம் ஒதுக்கப்பட்டுள்ளது!

## இருவழி ஒலிபரப்பு

தமிழ் நிகழ்ச்சிகள் உலகிலேயே முதல் தடவையாக சிங்கப்பூரில் தான் இருவழி ஒலிபரப்பைத் (எப். எம். ஸ்டீரியோ) தொடங்கியுள்ளன. ஆனால் இந்த ஒலிபரப்புக்குத் தேவையான இரு வழி ஒலி தரும் (ஸ்டீரியோ) இசைத்தட்டுகள் போதிய அளவில் இல்லை என்பதுதான் குறைபாடாகும்.

சீன, ஆங்கில, மலாய் மொழிகளில் வெளிவரும் கேசட்டுகள் இசைத்தட்டுகள் ''ஸ்டீரியோ'' எனப்படும் இருவழி, ''குவாட்ரோபோனிக்'' எனப்படும் நான்கு வழி இசைப்பிரிப்புகளைக் கொண்டவையாகும். தமிழுக்கான தேவையை இசைத்தட்டு வெளியீட்டு நிறுவனங்கள் உணர்ந்து கவனிக்க வேண்டும்.

## வானொலி நாடகங்கள்

வானொலியில் இசைப்பகுதிகளுடன் சிறுகதைகள், தொடர் நாடகங்கள், தனி நாடகங்கள், இலக்கிய நிகழ்ச்சிகள், மாதர் சிறுவர், இளைஞர் பகுதிகள் போன்றவை முந்திய ஆண்டுகளைப் போலவே 1981 லும் இடம் பெற்றன.

உள்ளூர், வெளியூர் எழுத்தாளர்கள் இவற்றில் கணிசமான பங்கு பெறுகின்றனர். எழுத்தாளர்களின் தகுதி, தரத்திற்கேற்ப அன்பளிப்புகள் வழங்கப்படுகின்றன.

## தொலைக்காட்சியில்

சிங்கப்பூரில்தான் உலகிலேயே முதல் தொலைக்காட்சித் தமிழ் நிகழ்ச்சிகள் தொடங்கப்பட்டன. முதல் வண்ணத் தொலைக்காட்சி நிகழ்ச்சிகளும் தமிழில் தொடங்கப்பட்டது சிங்கப்பூரில் தான்.

சிங்கப்பூரின் வண்ணத் தொலைக்காட்சியில் இரு ஒளி அலை வரிசைகளில் நிகழ்ச்சிகள் ஒளிபரப்பாகின்றன. அண்டை நாடான

மலேசியாவின் நிகழ்ச்சிகளும் இரு ஒளி அலைவரிசைகளில் ஒளிபரப்பாகின்றன. அவற்றையும் சிங்கப்பூரிலுள்ளோர் கண்டுகளிக்க முடியும்.

தொலைக்காட்சி நிகழ்ச்சிகள் சிங்கப்பூர்த் தொலைக்காட்சியில் பிற்பகல் தொடங்கி நள்ளிரவு வரையும் ஒளிபரப்பாகின்றன. சனிக்கிழமை இரவுகளிலும் விடுமுறை நாட்களிலும் இரவு 2 மணி ஒளிபரப்பாகின்றன. பள்ளிக்கூடங்களுக்கென கல்வி ஒளிபரப்பும் உள்ளது. வாரம் ஒரு தடவை ஒளியேறும் தமிழ்த் திரைப் படங்களை எல்லோரும் விரும்பிப் பார்க்கின்றனர்.

## திரைப்படப் பணி

சிங்கப்பூரிலும் மலேசியாவிலும் பிற இனமக்கள் நடுவே வாழும் தமிழர்கள் தங்கள் மொழியை மறக்காமல் இருக்க உதவி வருவது தமிழ்த் திரைப்படங்களே!

சிங்கப்பூர்த் தொலைக் காட்சியில் தமிழ்த் திரைப்படங்கள் அல்லாது, நாடகங்கள், இசை நிகழ்ச்சிகள், நடனங்கள், மாணவர் பகுதி ஆகியவை இடம் பெறுகின்றன.

1981இல் ஒளிபரப்பான நிகழ்ச்சிகளில் ''ஒரே நாள்'' என்ற நாடகத் தொடர் சிறப்பாக இருந்தது. ''தமிழர் பண்பாடு'' என்ற தொடர் நிகழ்ச்சி 13 வாரங்கள் ஒளிபரப்பான பல்வேறு விழாக்களின் அடிப்படையில் இந்தத் தொடர் அமைந்தது. இருப்பினும் தொலைக்காட்சி நாடகங்களின் தரம் இன்னும் உயரவில்லை தொலைக்காட்சியில் ''கவிஞர் உள்ளம்'' என்ற தலைப்பில் ஆறு நிகழ்ச்சிகள் 25-2-1981 முதல் ஒளிபரப்பாயின.

## கவிஞர்கள்

இந்தக் கவிஞர் உள்ளம் நிகழ்ச்சியில் உள்ளூர் கவிஞர்களான பா. பழநிவேலு, பரணன், காது. மு. இக்பால், முத்தமிழன், இக்குவனம், அமலதாசன், இளமாறன், பெரியராமு, வெ. பழநி, ஆர். ஆர் சந்திரன், முல்லைவாணன் ஆகியோர் பங்குபற்றினர். கவிஞர்களைப் போல் நாடக, கட்டுரை, கதை எழுத்தாளர்களின். உள்ளங்களையும் தொலைக் காட்சியினர் படம் பிடித்துக்காட்ட வேண்டும்!

## தமிழ் முரசு

வானொலி, தொலைக்காட்சியை அடுத்து உள்ளூர் எழுத்தாளர்களின் படைப்புகளைப் பத்திரிகைகள் வெளிப்படுத்துகின்றன.

சிங்கப்பூரிலிருந்து வெளிவரும் ஒரே நாளேடு ''தமிழ் முரசு'' காலஞ்சென்ற தமிழவேள் கோ. சாரங்கபாணி அவர்கள் தொடங்கிய ''தமிழ் முரசு'' கடந்த 50 ஆண்டுகளாகத் தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது.

1981 ஆம் ஆண்டில் தமிழ் முரசில் இடம் பெற்ற உள்நாட்டுச் சிறுகதை எழுத்தாளர்களின் படைப்புகள் வருமாறு:

| சிறுகதையின் தலைப்பு | கதாசிரியர் | தமிழ் முரசில்வெளி வந்த தேதி |
|---|---|---|
| ''நிறம் மாறிய மலர்கள்'' | கா. முருகையன் | 4-1-81 |
| 'வேலி தாண்டிய வனிதை'' | கே. ராஜமாணிக்கம் | 11-1-81 |
| ''ஒரு ரசிகை துணைவியாகிறாள்'' | கா. முருகையன் | 18-1-81 |
| ''ரத்தபாசம் வென்றது'' | கே. ராஜமாணிக்கம் | 1-2-81 |
| ''தியாகம்'' | திருமதி சங்கரி ராமானுஜம் | 8-2-81 |
| ''பெண்ணிற்குத் துரோகம்'' | கே. ராஜமாணிக்கம் | 15-2-81 |
| ''நான் என்ன குறை வைத்தேன்'' | பிலோமினா இமானுவேல் | 22-2-81 |
| ''கொடி எங்கே படரும்'' | கா. முருகையன் | 1-3-81 |
| ''பெண்ணின் மனவேதனை'' | கா. முருகையன் | 8-3-81 |
| ''கற்பூரத்தின் கனல்'' | கே. ராஜமாணிக்கம் | 15-3-81 |
| ''விதியின் விளையாட்டு'' | ப. சாந்தி | 22-3-81 |
| ''இதோ முதற் கனி'' | பிலோமினா இமானுவேல் | 29-3-81 |
| ''பெண்ணின் விலை'' | த. ராஜசேகரன் | 5-4-81 |
| ''பாசமும் நேசமும்'' | கா. சங்கையா | 12-4-81 |
| ''நிம்மதி நிர்மூலமாக்கப் படுகிறது'' | த. திருமாறன் | 26-4-81 |
| ''மனமே மயங்கியது போதும்'' | பிலோமினா இமானுவேல் | 2-5-81 |
| ''காலம் கடந்து விட்டது'' | இரா. துரைமாணிக்கம் | 11-5-81 |
| ''அத்தை மகள்'' | த. திருமாறன் | 17-5-81 |
| ''அன்புக்குப் பிரிவில்லை'' | மனோகரி இமானுவேல் | 24-5-81 |
| ''தண்டனை'' | கே. முருகையன் | 14-6-81 |
| ''இவன் என் மகன்'' | இரா. துரைமாணிக்கம் | 21-6-81 |
| ''அவன் அவள் அவர்கள்'' | சங்கரி ராமானுஜம் | 23-6-81 |
| ''உணர்வுகளின் விளிம்புகள்'' | மா. இளங்கண்ணன் | 5-7-81 |
| ''ஓ என் இனிய நினைவுகள்'' | பாமலன் | 12-7-81 |
| ''புன்னகையே பொன்னகை'' | பிலோமினா இமானுவேல் | 12-7-81 |

| | | |
|---|---|---|
| ''ஓர் உறவு ஒரு பிரிவு'' | இரா. துரைமாணிக்கம் | 19-7-81 |
| ''மீண்டும் மங்களம் வருவாள்'' | சங்கரி ராமானுஜம் | 26-7-81 |
| ''இது பூனையே அல்ல திலகவதியின் உயிர்தான்'' | ஆரூர் கன்னித்தமிழன் | 2-8-81 |
| ''சேய் தாயானாள்'' | பிலோமினா இமானுவேல் | 16-8-81 |
| ''அழகு மங்கை'' | முருகதாசன் | 23-8-81 |
| ''பட்டமரம்'' | குமாரி பி. விமலா | 23-8-81 |
| ''சுப்பையா குழம்பிப் போயிருக்கிறார்'' | வெ. நீலவேணி | 30-8-88 |
| ''தாபம்'' | குமாரி ப. சாந்தி | 6-9-81 |
| ''இரு நிழல்கள் | பாமலன் | 13-9-81 |
| ''அவர்கள் இங்கேயே இருக்கட்டும்'' | சங்கரி ராமானுஜம் | 27-9-81 |
| ''சொல்லத்தான் முடியும்'' | பிலோமினா இமானுவேல் | 11-10-81 |
| ''புதுவாழ்வு'' | இரா. துரைமாணிக்கம் | 18-10-81 |
| ''அது பொருந்தாதோ'' அவளுக்கு | சங்கரி ராமானுஜம் | 8-11-81 |
| ''நல்ல முடிவு'' | ப. சாந்தி | 22-11-81 |
| 'குழப்பம் இல்லை திருப்பம்'' | பிலோமினா இமானுவேல் | 29-11-81 |
| ''தூராத்துப் பச்சை'' | ஈஸ்வரி | 6-12-81 |
| 'நான் கண்ணனின் குழந்தை'' | பாமலன் | 13-12-81 |
| ''காதல் கொண்ட நெஞ்சம்'' | அன்னலட்சுமி கிருஷ்ணன் | 13-12-81 |
| ''அவள் ஒரு தமிழ் ஆசிரியை'' | த. கமலா சரஸ்வதி | 20-12-81 |
| ''தண்டனை யாருக்கு'' | மலர்க்கொடி | 27-12-81 |
| ''சமூக சேவகி'' | த. கமலா சரஸ்வதி | 26-12-81 |

மலேசியத் தலைநகரான கோலாலம்பூரிலிருந்து வெளிவரும் தமிழ்நேசன், தினமணி, தமிழ்ஓசை, ஆகிய நாளிதழ்களிலும், புதிய சமுதாயம், உதயம், வானம்பாடி ஆகிய இதழ்களிலும் அவ்வப்போது சிங்கப்பூர் எழுத்தாளர்களின் எழுத்தோவியங்களும் இடம் பெற்று வருகின்றன.

## இந்தியன் மூவி நியூஸ்

சிங்கப்பூரிலும் மலேசியாவிலும் தனித்தனியே அச்சிடப்பட்டு வெளிவரும் இந்தியன் மூவி நியூஸ் மாத இதழின் ஆசிரியராகக்

கடந்த 31 ஆண்டுகளாக எஸ். எஸ். சர்மா (இக்கட்டுரையாசிரியர்) பணியாற்றி வருகிறார். இந்த இதழிலும் சிங்கப்பூர், மலேசிய எழுத்தாளர்களின் படைப்புகள் இடம் பெற்று வருகின்றன.

1981 இல் இந்தியன் மூவி நியூஸ் இதழில் வெளிவந்த சிங்கப்பூர் எழுத்தாளர்களின் படைப்புகள்.

''பொன்மனம்'' குமாரி சாந்தி சுப்பையா ஜனவரி— 1981
''தப்புக் கணக்கு'' சுப்பிரமணியம் சுப்பையா ஜூலை— 1981
''நான் உன்னை நினைச்சேன்!'' இரா. இளங்கோவன் ஆகஸ்டு—1981
''தெளிவு'' குமாரி சாந்தி சுப்பையா டிசம்பர்—1981

இந்த இதழில் இக்கட்டுரையாசிரியர் எழுதிய ''இனியவளே'' என்ற தொடர்கதை மூன்று ஆண்டுகள் தொடர்ந்து வந்தது.

## வேல்

திருமதி வசந்தி சர்மா ஆசிரியையாக உள்ள 'வேல்' சிங்கை அண்ணலை ஆசிரியராகக் கொண்ட ''திரையொளி'' ஆகிய சிங்கப்பூர் இதழ்களிலும் உள்ளூர் எழுத்தாளர்களின் படைப்புகள் இடம்பெற்று வருகின்றன. சிங்கப்பூரிலிருந்து வெளிவரும் ''கொள்கை முழக்கம்'' ''முரசொலி'' ஆகிய மாத இதழ்களும் உள்ளூர்ப் படைப்புகளுக்கு இடமளித்து வருகின்றன.

சிங்கப்பூரின் ஆங்கில தேசிய நாளிதழான ''ஸ்டிரெய்ட்ஸ் டைம்ஸ்'' வாரந்தோறும் தமிழுக்கென ஒரு பக்கம் ஒதுக்கி, தமிழிலும் ஆங்கிலத்திலும் இலக்கியப் பண்பாட்டுக் கட்டுரைகளை வெளியிட்டு வருவது குறிப்பிடத்தக்கது.

## கவிஞர்கள் பங்கு

குடியரசில் கவிஞர்களின் பங்கு பாராட்டுக்குரிய பங்கை அளித்து வருகிறது.

9-8-81 இல் வெளிவந்த தமிழ்முரசு தேசிய நாள் மலரில் இடம் பெற்ற சில கவிதைகள் இவை.

''வாழிய நம் குடியரசு''—மெ. சிதம்பரம்
''ஆசியனின் ஒளிவிளக்கு''—பாமலன்
''வளம் மேவும் சிங்கை''—முல்லைவாணன்
''சிங்கப்பூர் நாடு எங்கள் நாடே''—அமலதாசன்

''நாம்'' —ஆர். ஆர். சந்திரன்

பார்புகழ் சிங்கையின் பத்து வகை'' —மெ. இளமாறன் (''தசாங்கம்'')

''பதினாறு வயதினிலே''—தி. கு. பா. சாமி

''அழகு மங்கை சிங்கை'' முருகுதாசன்—23-8-81

''தமிழ் வளர்த்த சான்றோர்'' அது. மு. இக்பால் 27-9-81

## பாட்டரங்கம்

சிங்கப்பூர்க் கவிஞர்களின் சிறந்த படைப்புகளை ரேடின்மாஸ் சமூக நிலைய இந்தியக் கலாச்சாரக்குழு நடத்திய ''தேசிய நாள் பாட்டரங்கு'' நிகழ்ச்சியிலும் கேட்க முடிந்தது.

## நூல் வெளியீடுகள்

1981 ஆம் ஆண்டில் சிங்கப்பூரில் அச்சிடப்பட்டு வெளியிடப் பட்ட நூல்களில் எஸ்.எஸ். சர்மா எழுதிய ''தமிழ் நாட்டில் எட்டு நாட்கள்'' குறிப்பிடத்தக்கது. 400 பக்கங்களில் ஏராளமான வண்ணப்படங்களுடன் வெளிவந்த இந்தப் பயண இலக்கிய நூல் சிங்கப்பூரிலேயே அச்சிடப்பட்டது. நூலின் விலை சிங்கப்பூர் வெள்ளி பத்து. மூவாயிரம் பிரதிகள் வெளியிடப்பட்டன. இந்த நூலின் வெளியீட்டு விழாக்கள் கோலாலம்பூர், தாப்பா, சுங்கை சிப்புட் ஆகிய இடங்களில் நடைபெற்றன. இந்த நூலில் கவியரசு கண்ணதாசன், அகிலன் ஆகியோரின் வாழ்த்துரைகளும் இடம் பெற்றிருந்தன.

எஸ்.எஸ், சர்மா எழுதி வெளியிட்ட மற்றொரு நூல் ''அமளி துமளி.'' இந்த நாடக நூலின் விலை வெள்ளி ஐந்து. இதுவும் சிங்கப்பூரிலேயே அச்சிடப்பட்டது. சிங்கப்பூர் எழுத்தாளர் பொன் சுந்தரராசு எழுதிய ''என்னதான் செய்வது?'' என்ற சிறுகதைத் தொகுப்பு தமிழ் நாட்டிலுள்ள தமிழ்ப் புத்தகாலய வெளியீடாக 118 பக்கங்களில் வந்தது. இதன் விலை வெள்ளி 5-50. இதே புத்தகாலய வெளியீடாக இராம. கண்ணபிரான் எழுதிய இரு சிறு கதைத் தொகுப்பு நூல்களும் 1981ல் வெளிவந்தன. ''வாடைக் காற்று'' என்ற சிறுகதைத் தொகுப்பு 119 பக்கங்கள் கொண்டது. 'சோழன் பொம்மை'' 114 பக்கங்கள் கொண்டது. விலை வெள்ளி 5-50.

சிங்கப்பூர்ப் பாவலர் மெ. இளமாறன் எழுதிய "பாத்தேறல்" என்ற கவிதைத் தொகுப்பு, தமிழ் நாடு கண்ணகி பதிப்பக வெளியீடாக மே 1981இல் வெளிவந்தது. 136 பக்கங்களைக் கொண்ட இந்த நூலின் விலை ரூபாய் 3. உள்ளூர் எழுத்தாளர்கள் எழுதிய துணைப்பாட நூல் ஒன்றை விஸ்வநாதன் பதிப்பகம் வெளியிட்டது.

சிங்கப்பூர் இந்தியர் சங்கத்தின் பொன் விழாவை ஒட்டி 1981 மே 1,2 தேதிகளில் தேசிய அரங்கில் நடைபெற்ற தமிழ் நாட்டுக் கலைஞர்களின் நிகழ்ச்சியுடன் பொன்விழா மலர் ஒன்றும் வெளியிடப்பட்டது. இந்த மலரில் சிங்கப்பூரில் 50 ஆண்டு காலமாக இயங்கிவரும் இந்தியர் சங்க வரலாற்றைத் தமிழில் கட்டுரையாக எழுதியிருக்கிறார் எஸ்.எஸ். சர்மா அவர்கள்.

சிங்கப்பூர் தமிழர் இயக்கத்தின் வெள்ளிவிழா மலரைக் கொள்கை முழக்கம் என்ற மாத இதழ் வெளியிட்டது. ஏராளமான படங்களுடன் பொலிவுடன் வெளிவந்த இந்த வெள்ளி விழா மலரில் சிங்கப்பூரில் சிறப்பான பணியாற்றிவரும் தமிழர் இயக்கத்தின் 25 ஆண்டு கால சாதனைகளைக் காணமுடிந்தது, தலைவர் சி. நடேசன், பொதுச் செயலாளர் மா.சி. வீரப்பன், மற்றும் செல்வக் கணபதி, சொ.ஐ.துரை, ஏ. பி சண்முகம், கந்தசாமி, * குமாரி தமிழரசி கிருட்டிணன் ஆகிய உறுப்பினர்களின் எழுத்தோவியங்களும் மலருக்குச் சிறப்புச் சேர்த்தன.

## பொன்னாடை

சிங்கப்பூரில் மொழி, கலை, இலக்கிய, சமய, விளையாட்டு, பொதுத் தொண்டுத் துறைகளில் சிறப்பாகச் சேவைசெய்த 25 பிரமுகர்களுக்கு வெள்ளிவிழா நினைவாகப் பொன்னாடை போர்த்தி நற்சான்றுப் பத்திரங்களையும் தமிழர் இயக்கம் வழங்கியது.

## மேடை நாடகங்கள்

சிங்கப்பூரில் 1981ல் மூன்று மேடை நாடகங்கள் அரங்கேற்றப் பட்டன. அவை:

நினைவெல்லாம் நீயே, அவள் ஒரு மேனகை, சின்னஞ் சிறுசுகள்.

"நினைவெல்லாம் நீயே", "அவள் ஒரு மேனகை" ஆகிய நாடகங்களை கதை வசனம் எழுதி இயக்கியவர் எஸ்.எஸ். சர்மா. 1981 மே 1,2 தேதிகளில் அரங்கேறிய "நினைவெல்லாம் நீயே" கலாச்சார அமைச்சின் ஆதரவுடன் நடைபெற்றது.

தேசிய நாடக விழாவில் அரங்கேறிய "அவள் ஒரு மேனகை" நாடகத்தில் நாயகியாக நடித்த திருமதி கன்னிகா சிறந்த தமிழ் நடிகைக்கான தேசிய விருதைப் பெற்றார். இந்த நாடகம் 18-9-81 இல் அரங்கேறியது. தேசிய நாடக விழாவை ஒட்டி அரங்கேற்றப் பட்ட மற்றொரு தமிழ் நாடகம் 'சின்னஞ் சிறுசுகள்''. 27-9-81இல் அரங்கேறியது. சண்முகம் கதை வசனம் எழுத சா. வரதன் இதனை இயக்கியிருந்தார். இந்த நாடகத்தில் நடித்த திரு. டேவிட்பாலா சிறந்த நடிகருக்கான விருதைப் பெற்றார்.

கதை, கட்டுரை, கவிதை, நாடகம், நூல் வெளியீடு என 1981-இல் தமிழ் இலக்கியத் துறை வளர்ச்சிக்கு சிங்கப்பூரும் தன் பங்கைச் சிறப்பாகச் செய்துள்ளது என்பதில் ஐயமில்லை.

# 45. மேற்கு ஜெர்மனியில் தமிழ்

டாக்டர் அ. தாமோதரன்

மேற்கு ஜெர்மனியில் தமிழ்த் தொடர்பாக நடக்கும் பணிகளைக் குறித்து ஒவ்வோர் ஆண்டிலும் ஓர் அறிக்கை தயாரிப்பது எளிதல்ல. தமிழ்த் தொடர்பாக இந்தியாவில் ஒவ்வோராண்டும் அடுக்கடுக்கான நடவடிக்கைகள் இடம் பெறுவது போல மேற்கு ஜெர்மனியில் இடம் பெற வாய்ப்புகள் இல்லை என்பதே இதற்குக் காரணம்.

கேட்பதற்கு இனிமையாக இருக்கும் இந்த அழகிய தலைப்பில் — மேற்கு ஜெர்மனியில் தமிழ் — என்ற தலைப்பில், தமிழில்—தமிழியலில் அல்லது தமிழ்த்தொடர்பாக இங்கு நடக்கும் பணிகளை விளக்கமாகவோ அல்லது சுருக்கமாகவோ அறிக்கை வடிவில் விவரிப்பது அவ்வளவு எளிதல்ல. இது 1981க்கு மட்டுமல்லாமல் எந்த ஒரு ஆண்டுக்குமே பொருந்தும். வேறு வகையில் சொன்னால் ஒவ்வோர் ஆண்டிலும் மேற்கு ஜெர் மனியில் தமிழ்த்தொடர்பாக நடக்கும் பணிகளைக் குறித்து ஓர் அறிக்கை தயாரிப்பது எளிதல்ல. இளநிலை, முதுநிலை, புலவர் போன்ற தனித் தமிழ் வகுப்புகள், எம்.லிட்., பி எச்.டி என்ற ஆராய்ச்சிப் பிரிவுகள், கருத்தரங்கம், சிறப்புச் சொற்பொழிவு, மாநாடு போன்ற மேடை நிகழ்ச்சிகள், ஆண்டு மலர், சிறப்பு மலர் என்னும் மலர் வெளியீடுகள், பிற நூல் வெளியீடுகள் என்று இந்தியப் பல்கலைக் கழகங்களில் தமிழ்த் தொடர்பாக ஒவ்வோர் ஆண்டும் அடுக்கடுக்கான நடவடிக்கைகள் இடம் பெறுவது போல மேற்கு ஜெர்மனியில் இடம் பெற வாய்ப்புகள் இல்லை என்பதே இதற்குக் காரணம். பதினைந்து ஆண்டு களுக்கு மேலாகத் தொடர்ந்து தமிழ் கற்பிக்கப்படுகிறது இந்தியவியல் என்றால் சம்ஸ்கிருதத்தைக் கற்பிப்பது அல்லது

சமஸ்கிருதத்தில் புலமை பெறுவது என்ற பழங்கொள்கையை மாற்றிவிட்டுச் சமஸ்கிருதத்தோடு பிற இந்திய மொழிகளை இணைத்து மொழிக் கல்வியோடன்றி வரலாறு, சமயம், மானிடவியல் என்று ஒன்றுக்கொன்று தொடர்புள்ள பல நல்ல அறிதுறைகளை அதனோடு இணைத்தும் புதிய கண்ணோட்டத்தில் இந்தியவியல் கற்பிக்கப்படுகிற தெற்காசியக் கழகத்தின் நிலைமையே இப்படி என்றால் மேற்கு ஜெர்மனியில் தமிழ் கற்பிக்கப்படும் மற்றப்பல்கலைக்கழகங்களின் நிலைமை எப்படி இருக்கக் கூடுமென்று ஒருவாறு ஊகித்துக் கொள்ள இயலும். ஐரோப்பாவில் உள்ள எல்லாப் பல்கலைக் கழகங்களிலும் இந்த நிலைமை தான் என்பதைத் தனியே குறிப்பிட வேண்டியதில்லை. இதற்குப் பொருள் வெளிநாட்டுப் பல்கலைக்கழகங்களில் தமிழ்ப் பணிகள் நடக்கவே இல்லை என்பதல்ல. மேலோட்டமாகப் பார்க்கும் போது அவ்வாறு தோன்றினாலும் அது வெறும் தோற்றமே; உண்மை அது அல்ல. பணிகள் நடந்து கொண்டு தான் இருக்கின்றன. பரந்த அளவில் எண்ணிக்கை பெருகிய நிலையில் விரைந்த போக்கில் தமிழகத்தில் நடப்பதைப் போல இங்கெல்லாம் நடப்பதில்லை. நடப்பதில்லை என்பதைவிடப் பணிகள் நடக்க இங்கு வாய்ப்பு இல்லை என்பதே இன்னும் பொருத்தமாக இருக்கும். எனவேதான் ஒவ்வோர் ஆண்டிலும் இங்கு நடக்கும் தமிழ்ப் பணிகளைப் பற்றி ஓர் அறிக்கை தயாரிப்பது எளிதல்ல என்று மேலே குறிப்பிட நேர்ந்தது.

இந்தச் சூழ்நிலைக்குக் காரணங்கள் ஏராளமாக இருக்கின்றன. அவற்றையெல்லாம் ஆராய்வது இந்தக் கட்டுரையின் நோக்கம் அல்ல. என்றாலும் இதற்கு அடிப்படையான காரணம் இங்குள்ள பாடத்திட்ட அமைப்பில் தமிழ் இடம் பெற்றுள்ள முறையே யாகும். இதைக் கொஞ்சம் தெளிவாகக் குறிப்பிட்டாக வேண்டும். இங்கிலாந்து, பிரான்சு, ஜெர்மனி, ஹாலந்து, போன்ற ஐரோப்பிய நாடுகளில் தமிழ் கற்பிக்கப்படுகிறது என்பதைப் பொது நிலையில் எல்லோரும் அறிந்திருந்தாலும் யார் —எந்தெந்த நிலைகளில் எதற்காகத் தமிழ் படிக்கிறார்கள் என்ற விவரங்கள் எல்லாம் நம்மில் பலருக்குத் தெரிவதில்லை. நன்றாகப் படித்தவர்களுக்கே கல்வித் துறையில் ஈடுபட்டுள்ளவர்களுக்கே கூட இந்த விவரங்கள் சரியாகத் தெரிவதில்லை. உதாரணமாகப் பேராசிரியர் கமில் சுவலபில் செக்கோஸ்லொவேகியாவில் தமிழ்

கற்பித்து வந்தார். 1968 இல் அவர் அங்கிருந்து விலகிய பின்னர் அந்த நாட்டில் தமிழியல் எந்த நிலையில் இருக்கிறது என்பது பெரும்பாலோர்க்குத் தெரியாது. தமிழறிந்த பேராசிரியர் வாசக் அங்கே இருக்கிறார் என்பதாலும் ஐந்தாவது உலகத் தமிழ் மாநாட்டில் கலந்துகொண்டு உரையாற்றினார் என்பதாலும் அங்கே எப்போதும் போல் தமிழியல் வளர்கிறது என்றும் ஒவ்வோர் ஆண்டும் தமிழ்ப் படிக்க மாணவர்கள் புதிது புதிதாக வந்து கொண்டேயிருக்கிறார்கள் என்றும் நாம் நினைத்துக் கொண்டால் அது நம்முடைய குறைபாடே. இதுபோலவே மேற்கு ஜெர்மனியில் பேராசிரியர் யானர்ட்டின் தலைமையில் இயங்கும் கொலோன் பல்கலைக்கழக இந்தியவியல் துறையில் கடந்த பத்துப் பன்னிரண்டு ஆண்டுகளாகத் தமிழ் கற்கும் வசதி இருந்து வருகிறது. அப்படியிருந்தும் ஆண்டு தோறும் அங்கே எத்தனை மாணவர்கள் தமிழ் படிக்க வருகிறார்கள் என்ற விவரம் எல்லாம் யாருக்குத் தெரியும்? இப்படி ஐரோப்பாவில் தமிழ் கற்பிக்கும் நிறுவனங்கள் அனைத்திற்கும் தனித்தனியே ஒரு கணக்கெடுப்பு நடத்திப் பார்த்தால்தான் இங்குள்ள தமிழ்க் கல்வியின் நடப்பு நிலை தெரியவரும். அது அவ்வளவு உற்சாகம் அளிப்பதாக இல்லை.

பொதுவாக ஐரோப்பியப் பல்கலைக் கழகங்களைப் பற்றி நமது கணிப்பும் மதிப்பீடும் எப்போதுமே உயர்ந்தது. இதனால் இன்னின்ன ஐரோப்பியப் பல்கலைக் கழகங்களில் எல்லாம் தமிழ் கற்பிக்கப்படுகிறது என்ற செய்தியைக் கேட்கும் போதே அங்கு நடைபெறும் தமிழ்ப் பணிகளைப் பற்றிய மதிப்பீடும் நமது உள்ளத்தில் உயர்ந்து விடுகிறது. இது அளவுக்கு மீறிய எதிர் பார்ப்புகளுக்கு வழிகோலிவிடுகிறது. இதற்கு நம்முடைய மொழிப்பற்றே முதற் காரணம் என்றாலும் தவறாகாது. எது எப்படி இருந்தாலும் ஐரோப்பியப் பல்கலைக் கழகங்களில் தமிழ் கற்பித்தல் எந்த அளவில்—எந்த முறையில் நடைபெறுகிறது என்பதைச் சிறிது விளக்கமாகக் குறிப்பிடுவது நல்லது. இந்தச் செய்தியை விளக்குவதற்குத் தெற்காசிய நிறுவனத்தை விடவும் பொருத்தமான வேறொரு நிறுவனம் இல்லை என்பதால்இதையே உதாரணமாக எடுத்துக் கொள்ளலாம்.

ஏறக்குறைய அறுநூறு ஆண்டுகளாக இயங்கி வரும் ஹைடெல்பெர்க் பல்கலைக் கழகம் பழம் பெருமை வாய்ந்த ஐரோப்பியப் பல்கலைக் கழகங்களில் ஒன்று. ஜெர்மனியில் இது வரலாற்றுச் சிறப்பு மிக்கது. இதன் ஒரு பகுதியாக விளங்கும்

தெற்காசிய நிறுவனம் இந்தியாவைப் பற்றிய ஆராய்ச்சிகளுக்குப் பெயர்பெற்ற நிறுவனமாகும். இங்கே கடந்த பதினைந்து ஆண்டுகளாகத் தமிழ் கற்பிக்கப்பட்டு வருகிறது. பால பாடம் முதல் எம். ஏ., பிஎச். டி முதலிய பட்டப் படிப்பு வரை தமிழ் கற்க இங்கே வசதி உண்டு. எனவே பல்கலைக்கழக நிலையில் மட்டுமே மேற்கு ஜெர்மனியில் தமிழ் கற்பிக்கப்படுகிறது. பள்ளிக் கூட நிலையில் இளஞ்சிறுவர்கள் இந்த நாட்டில் எங்கும் தமிழ் கற்பதில்லை. இதற்கான வாய்ப்பு வசதிகள் எதிர்காலத்தில் கூட ஏடுபடுமென்று சொல்ல முடியாது. பல்கலைக்கழக மாணவர்கள் தமிழைத் தலைமைப் பாடமாகவோ அல்லது துணைப் பாடமாகவோ தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். தமிழோடு கன்னடம், இந்தி, உருது, மராத்தி, வங்காளி போன்ற இந்திய மொழிகள் சிலவற்றை இணைத்துப் படிக்கும் வசதியும் இங்கே உண்டு. மொழிக்கல்வியோ டன்றி வரலாறு, பொருளாதாரம், அரசியல், மானிடவியல், மானிட மரபியல், சமயம், சட்டம், கலை, வரலாறு என்று தொடர்புடைய பல துறைகளோடும் தமிழை இயைபு படுத்தி இந்தியப் பின்னணியில் கற்கக் கூடிய வசதியும் இங்கு உண்டு. இந்திய மொழிகளையும் இந்தியாவோடு தொடர்புடைய மற்றப் பாடங்களையும் கற்பதற்கு இதைவிடவும் தகுதியானதொரு நிறுவனம் மேற்கு ஜெர்மனியில் வேறெங்கும் இல்லை. இப்படியிருந்தும் இங்குத் தமிழ் படிக்கவரும் மாணவர்களின் தொகை ஊக்கம் அளிப்பதாக இல்லை. இந்த நிலை தமிழுக்கு மட்டும் உரியதில்லை. மற்ற மொழிகளைக் கற்க வரும் மாணவர்களின் தொகையும் இதே அளவுதான் என்பது இங்கே குறிப்பிடப் படவேண்டும்.

மேலை நாட்டுப் பல்கலைக் கழகங்களில் இந்திய மொழிகளைப் பயில்வோரின் தொகை எப்போதுமே குறைவானது என்ற பொதுவான உண்மை எல்லோரும் அறிந்ததே. என்றாலும் தமிழ் பயில வரும் மாணவர்களின் தொகை குறைவாக இருப்பதற்குத் தனிக் காரணங்களும் உண்டு. இவற்றை அறிய வேண்டுமானால் முதலில் இந்தியவியலுக்கும் தமிழ் மொழிக்கும் உள்ள தொடர்பைச் சிறிது விளக்க வேண்டும். தமிழியல் தனித்ததொரு துறையாக ஐரோப்பாவில் எங்கும் இன்னும் உருவாகவும் இல்லை; இயங்கவும் இல்லை. அது இப்போதைக்குத் தமிழ் கற்பித்தல் என்னும் தொடக்க நிலையில் சுருங்கிய அளவில்தான் அமைந்துள்ளது. தமிழ் கற்பித்தல் தமிழியலுக்கு முதல்நிலை ஆகலாமே தவிர அதுவே தமிழியல் ஆகி

விட முடியாது. தமிழ் கற்பித்தல் வேறு; தமிழியல் வேறு. இந்தியவியல் போலத் தமிழியல் தனித்ததோர் அறிதுறை; தமிழ் கற்பித்தலையும் உள்ளடக்கிய ஓர் ஆய்வு நெறி. சுருங்கச் சொன்னால் தமிழ் கற்பித்தல் என்பது தமிழியலின் ஓர் உட்பிரிவு. இந்தப் பின்னணியில் பார்த்தால் தமிழியல் என்னும் ஆராய்ச்சித் துறை இனிமேல்தான் தோற்றுவிக்கப்பட வேண்டும்; வளர்க்கப் படவேண்டும். அது வளர்ந்து பெருகி நாளடைவில் திராவிட இயலாக (Dravi-dialogy) மலரவேண்டும். ஆனால் இன்றைய சூழ் நிலையில் தமிழியல் அல்லது தமிழ் கற்பித்தல் என்பது ஐரோப்பியப் பல்கலைக் கழகங்களில் இந்தியவியலின் ஒரு சிறு பிரிவாகவே செயல்பட்டாக வேண்டும். இந்தத் தொடர்பு முறை தமிழ் படிக்க வரும் மாணவர்களை நிர்ணயிப்பதில் பேரங்கம் வகிக்கிறது.

இந்தியவியலின் உட்பிரிவாகத் தமிழ் இருக்கின்ற காரணத் தால் இதைப் படிக்கும் மாணவர்களே தமிழைத் துணைப்பாட மாகத் தேர்ந்தெடுத்துக் கொள்கின்றனர். அதோடு வரலாறு, சமயம், இறையியல், மானிடவியல், இனமரபியல் போன்ற பிற துறைகளில் பயிலும் மாணவர்கள் சிலரும் அவ்வப்போது தமிழைத் துணைப் பாடமாக எடுத்துக் கொள்கின்றனர். என்றாலும் மேற்கு ஜெர்மனியில் தமிழ் படிக்கும் மாணவர்களின் தொகை இந்திய வியல் படிக்கும் மாணவர்களின் தொகையைப் பொறுத்தது. இது சில ஆண்டுகளில் கூடுதலாக இருக்கும்; சில ஆண்டுகளில் குறை வாக இருக்கும். மேலும் இந்தியவியல் படிப்பவர்கள் அனைவரும் தமிழைத் துணைப்பாடமாக எடுப்பதும் இல்லை. இந்தி, உருது, வங்காளி போன்ற பிற இந்திய மொழிகளை எடுத்துக் கொள்வதும் உண்டு. ஆதலால் இந்தியவியல் மாணவர்களைவிடத் தமிழ் மாணவர்கள் எப்போதும் குறைவாகவே இருக்கின்றனர். இந்த நிலை மற்றப் பல்கலைக்கழகங்களுக்கும் பொது என்றாலும் ஹைடெல்பெர்க் பல்கலைக்கழகம் கொஞ்சம் கொடுத்து வைத்தது என்றே சொல்லவேண்டும். இங்கே 1970 முதல் 1981 வரை ஒவ்வோர் ஆண்டும் புதிதாக ஒருவர் இருவராவது தமிழ் படிக்க வந்து கொண்டிருக்கின்றனர். 'ஒருவர் இருவர்' என்ற எண்ணிக்கையைக் கேட்கும்போது நம்மில் சிலருக்கு நகைப்பாகவும் இருக்கக் கூடும். தொடர்ந்து பல ஆண்டுகள் தமிழ் படிக்க மாணவர் களே வராமல் இருக்கும் ஐரோப்பியப் பல்கலைக் கழகங்களோடு— அப்படியும் சில பல்கலைக் கழகங்கள் உண்டு—ஒப்பிடும் போது தான் அந்த 'ஒருவர் இருவர்' என்ற எண்ணிக்கையின் பெருமை அவர்களுக்குப் புலப்படும்.

அவ்வாறு 1981இல் தமிழ் படிக்க வந்த மாணவர்கள் மூவர். அவர்களுள் இருவர் இறையியல் படிப்பவர்கள்: ஒருவர் மானிடவியல் படிக்கும் மாணவர். இவர்கள் மூவரும் தமிழைத் துணைப் பாடமாக எடுத்திருந்தாலும் அது அவர்களுக்கு விருப்பப்பாடமே; தேர்வுக்கு உரியதல்ல. விருப்பப்பாடமாகத் தமிழ் படிப்பவர்கள் தங்களுக்குரிய நேரத்தையும் விருப்பத்தையும் பொறுத்து இரண்டு முதல் நான்கு செமஸ்டர்கள் வரை தமிழ் படிக்கின்றனர், இவர்களுடைய நோக்கம் தமிழை எழுதவும் படிக்கவும் கற்றுக் கொள்வதே ஆகும். தமிழ் நாட்டில் அல்லது ஈழநாட்டில் அவர்கள் மேற்கொள்ளத்திட்டமிட்டுள்ள கள ஆய்வுக்குப் பயன்படும் அளவு அவர்களுக்கு மொழிப் பயிற்சி இருந்தால் போதுமானது. இவர்களுக்குத் தமிழ் உச்சரிப்புக்கூட முக்கியம் அல்ல.

தமிழைத் துணைப் பாடமாக எடுத்துப் படிக்கும் மாணவர்கள் ஆறு முதல் எட்டு செமஸ்டர்கள் வரையில் தமிழ் படிக்கிறார்கள். இவர்கள் தமிழ் உரைநடையைத் தெளிவாகவும் சரளமாகவும் படித்துப் பழகுகின்றனர். இவர்களில் சிலர் தமிழை நன்றாக உச்சரிக்கவும் தமிழில் தெளிவாகப் பேசவும் முயல்வதுண்டு. இதற்காக இந்த மாணவர்கள் மூன்று மாதம் முதல் ஓராண்டு வரையில் தமிழகம் சென்று வருகிறார்கள். மொழியின் அமைப்பை நன்றாகப் புரிந்து கொள்வதற்காக மொழிபெயர்ப்புப் பயிற்சியையும் மேற்கொள்கின்றனர். ஜெயகாந்தன், அகிலன் போன்றோரின் சிறுகதைகளை ஜெர்மன் மொழியில் மொழிபெயர்த்துத் தமிழ் வாக்கிய அமைப்புகளைத் தெளிவுபடுத்திக் கொள்கின்றனர். இந்த மாணவர்களுக்குத் தற்கால உரைநடையைத் தவிர வேறு இலக்கியங்களைப் படிப்பதோ தமிழில் ஆராய்ச்சி செய்வதோ நோக்கம் அல்ல. எனவே பெரும்பாலான மாணவர்களுக்குத் தமிழறிவு என்பது பாடநூல்களோடு நின்று விடுகிறது. தேர்வுக்குப் பிறகு தமிழோடு உள்ள தொடர்பு குறைந்துவிடுவதால் இவர்களுடைய தமிழ்க் கல்வி ஒரு குறிப்பிட்ட அளவோடு அமைந்துவிடுகிறது.

தமிழைத் தலைமைப் பாடமாக எடுத்துப் படிக்கும் மாணவர்கள் இதற்கு முற்றிலும் மாறுபட்டவர்கள். இந்த மாணவர்கள் பன்னிரண்டு முதல் பதினைந்து செமஸ்டர்கள் வரையில் தமிழ் படிக்கிறார்கள். தமிழ் மொழியைப் பிழையறப் படிக்கவும் எழுதவும் இவர்கள் காட்டும் ஆர்வம் பாராட்டத்தக்கது. இயல்பான தமிழ் உச்சரிப்புக்காக இந்த மாணவர்கள் செய்யும் முயற்சியும் பயிற்சியும் மிகமிகக் கடுமையானது. ஒன்றையே பலமுறை திரும்பத் திரும்பக் கீறல் விழுந்த இசைத்தட்டுப் போல அவர்கள் சொல்லிப்

பார்த்துக் கொள்வது சில நேரங்களில் பரிதாபமாகக்கூட இருக்கும். உதவித் தொகை கிடைப்பதைப் பொறுத்து இவர்கள் ஓரிரு ஆண்டுகள் தமிழகம் வருவதும் தமிழ் பயிலுவதும் பெரிய செய்தி அல்ல. பேச்சுத் தமிழைக் கற்க விரும்பும் மாணவர்கள் நான்கைந்து ஆண்டுகள் தமிழகத்தில் மக்களோடு மக்களாய்ப் பழகி மொழிப் பயிற்சி செய்வதும் உண்டு. தமிழ்ச் சிறுகதைகள், குறுநாவல்கள், நாவல்கள், புதுக்கவிதைகள் ஆகியவற்றோடு திருக்குறள், திருவாசகம், கம்பராமாயணம் போன்ற இலக்கியங்களிலிருந்து சிற் சில பகுதிகளையும் இவர்கள் படிக்க முற்படுகின்றனர். மாணவர் களின் தமிழார்வம் பெரிதுதான். ஆனால் தலைமைப் பாடமாகத் தமிழைப் படிக்க வருவோரின் எண்ணிக்கைதான் மிகவும் குறை வாக இருந்து விடுகிறது.

தெற்காசிய நிறுவனத்தில் இதுவரை இரண்டு மாணவர்களே தமிழில் பிஎச்.டி செய்ய முன்வந்துள்ளனர். தொடரியல் ஆராய்ச்சி யில் ஈடுபட்டுள்ள இந்த இருவருள் ஒருவர் 'தமிழில் இரட்டைக் கிளவிகள்' என்ற தலைப்பிலும், இரண்டாமவர் 'தமிழில் துணை வாக்கியங்களின் அமைப்பு' என்ற தலைப்பிலும் ஆய்வுக் கட்டுரை வழங்கத் திட்டமிட்டுள்ளார். இவர்களுடைய ஆய்வுப் பணி இன்னும் இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளில் முடிவடையக் கூடும். இவ்வாறு இளநிலை, இடைநிலை, உயர்நிலை ஆகிய மூன்று நிலைகளிலுமாகச் சேர்த்து 1981இல் மொத்தம் பத்துமாணவர்கள், தெற்காசிய நிறுவனத்தில் தமிழ் படித்து வருகின்றனர். இதுவரை இங்கே தமிழ் படித்த மாணவர்களின் எண்ணிக்கை—உருது, வங்காளி, மராத்தி போன்ற பிற இந்திய மொழிகளைப் பயிலும் மாணவர்களின் தொகை—மற்றப் பல்கலைக் கழகங்களில் தமிழ் பயிலும் மாணவர்களின் தொகை ஆகியவற்றோடு ஒப்பிட்டு நோக்கும்போது தமிழ் மாணவர்கள் பத்துப் பேர் என்பது கணிச மானது என்றே சொல்லவேண்டும். இந்தத் தொகை எதிர்காலத் தில் கூடுமா அல்லது குறையுமா என்று இப்போதே ஒன்றும் உறுதி கூற இயலாது. இது இந்தியவியல் கற்பதற்கு அடுத்தடுத்து வரும் மாணவர்களின் தொகையும் தமிழியல் உருவாகி வளரும் போக்கையும் பொறுத்ததாகும். எதிர் வரும் ஆண்டுகளில் இந்திய வியல் படிக்க வரும் மாணவர்களைப் பெருக்குவது நமக்குரிய பணியும் அல்ல; அது நம் சக்திக்கு உட்பட்டதும் அல்ல. ஆனால் தமிழ் கற்பித்தலை—தமிழியலை உருவாக்கி வளர்ப்பது நமக்கே யுரிய பணி மட்டும் அல்ல; அந்தப் பணி நம்முடைய ஆக்க சக்திக்கு உட்பட்டதும் ஆகும்.

மறைவாக நமக்குள்ளே பழங்கதைகள் பேசாமல் சுயவிமரிசன நோக்கில் நாமே நம்மை ஆராய்ந்து பார்த்தால் கடந்த இருபது ஆண்டுகளில் தமிழ் கற்பித்தலுக்காக தமிழியல் உருவாவதற்காக, நாம்—நாம் என்றால் தமிழர்களாகிய நாமும், தமிழகத்தில் உள்ள பல்கலைக் கழகங்களும், உயர் ஆராய்ச்சி நிறுவனங்களும், அரசாங்கத் துறைகளும் ஆகிய அனைத்தும் உள்ளடங்கிய நாம்—சிறப்பாக ஒன்றும் செய்யவில்லை என்பது தெரியவரும் ஏறக்குறைய நானூறு ஆண்டுகளுக்கு முன்பே தமிழுக்கு இருமொழி இலக்கணம் தோன்றிவிட்டது. ஏறக்குறைய முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பே தமிழில் இருமொழி அகராதி தொகுக்கப்பட்டு விட்டது. ஏறக்குறைய இருநூற்றைம்பது ஆண்டுகளுக்கு முன்பே தமிழ்ச் செய்யுட்கள் வேற்று மொழியில் மொழிபெயர்க்கப் பட்டுவிட்டன. பிற இந்திய மொழிகளோடு ஒப்பிட்டுப் பார்த்தால் தான் இந்த வரலாற்றுப் பழைமையின் பெருமை விளங்கும். இத்தகு பாரம்பரியம் பெற்றுள்ள நாம் இன்று வரையில் தமிழ் கற்பித்தலை - த மி ழி ய லை - ஆக்கபூர்வமாக உருவாக்காதது நம்முடைய குறைபாடே ஆகும். இப்பணிகளைச் செய்வதற்குக் கடந்த நூற்றாண்டுகளில் சமய போதகர்கள் முன்வந்தது போல இனியும் வருவார்கள் என்று காத்திருந்து பயனில்லை. அதற்கான சூழ்நிலைகளும் இல்லை எனவே இந்தப் பணிகளை நாம்தான் செய்ய வேண்டும். இவற்றை இனியும் தள்ளிப் போடுவது தமிழுக்கு ஊறு விளைவிப்பதாகவே முடியும். ‘தேமதுரத் தமிழோசை உலகமெலாம் பரவும் வகை செய்தல் வேண்டும்’ என்ற பாரதியின் கனவை நனவாக்க ஒவ்வொரு தமிழரும் உறுதி கொள்ள வேண்டும். இந்தக் கனவு கனியும் காலம் இதுவே; இந்த எண்ணம் ஈடேறும் சமயமும் இதுவே. தஞ்சையில் உருவாகியுள்ள தமிழ்ப் பல்கலைக் கழகம் தமிழர்களுக்கு எடுத்துரைக்கும் நற்செய்தி இதுவன்றி வேறு என்னவாக இருந்துவிட முடியும்?

“வெள்ளத்தின் பெருக்கைப்போல் கலைப்பெருக்கும்
கவிப்பெருக்கும் மேவு மாயின்
பள்ளத்தில் வீழ்ந்திருக்கும் குருடரெல்லாம்
விழிபெற்றுப் பதவி கொள்வார்
தெள்ளுற்ற தமிழமுதின் சுவைகண்டார்
இங்கமரர் சிறப்புக் கண்டார்.”

என்ற பாரதி வாக்குப் பொய்க்குமா என்ன?

# 46. நாவல்

டாக்டர் தா. வே. வீராசாமி

1981-இல் வெளியான தமிழ் நாவல்களின் எண்ணிக்கை வழக்கம் போலப் பேரளவில் அமைந்துள்ளது. புதிய வகையில் கலை நுணுக்கம் வாய்ந்த நாவல்கள் விரல்விட்டு எண்ணும் விதத்தில்தான் வெளிவந்துள்ளன. முன்னைய ஆண்டைவிட இவ்வாண்டு வந்த நாவல்களில் திரைப்பட நுணுக்கங்கள் சில வெளியிடப்பட்டுள்ளன. உண்மையான வரலாற்று நாவல் என்பது இன்னும் செம்மையாக உருவாக வேண்டியுள்ளது. சமூக நாவல்களில் பெண்ணை மையமாகக் கொண்டு எழுந்த கதைகளே மிகுதியாக உள்ளன. சில நல்ல நாவல்கள் வெளிவர இந்த ஆண்டு துணை புரிந்துள்ளது எனலாம்.

## I

பொதுவாகத் தமிழ் இலக்கியப் படைப்பிலே இந்த ஆண்டும் முதலிடம் பெற்று விளங்குவது நாவலே. மற்ற இலக்கியப் படைப்புகளைவிட நாவல் தனக்குரிய சிறப்பிடத்தை இன்னும் தக்க வைத்துக் கொண்டிருப்பது குறிப்பிடத்தக்கது. நாவல் என்பது இந்த நூற்றாண்டின் தலைக் கொழுந்தாகத் தளிர்த்த வண்ணம் உள்ளது. சென்ற 1980ஆம் ஆண்டைப் போலவே இந்த ஆண்டும் நாவல் எண்ணிக்கை நூற்றுக்கும் மேற்பட்ட நிலையில் சென்றுள்ளது.

திங்கள் வெளியீடுகளில் சில நாவல்கள் தனியே வந்துள்ளன. அவற்றைத் தனிக்கட்டுரையாகத் தருவதால் அவற்றை இப்பகுதியில் எடுத்துக் கொள்ளவில்லை. இந்த ஆண்டு இதழ்களில் தொடர் கதையாக வெளிவந்த நாவல்களையும் அவை நூல் வடிவில் வராததால் எடுத்துக்கொள்ளாமல் விடப்பட்டன. புதிதாக முதல் முறை

யாக வெளியிடப்பட்டவற்றுள்ளும் கிடைத்தற்கு இயலாமல் போனவற்றை விட்டுவிட வேண்டி நேர்ந்தது. சென்ற ஆண்டு போலவே இந்த ஆண்டும் மொத்தத்தில் பன்னீராயிரம் பக்கங்கள் (12000) படித்தபின்னரே இக்கட்டுரை எழுதும் முயற்சி தொடங் கியது. இம்முயற்சியில் நாவல்களின் முழு எண்ணிக்கையையும் பார்த்தபின் எழுதும் போது ஒருசில கருத்துகள் வேண்டுமாயின் மாறலாம். எனினும் பெரும்பாலான கருத்துகள் மாறுவதற்கு இடமில்லை.

வெளிவந்த நாவல்களின் எண்ணிக்கை பலவாக இருந்தாலும் தரமான நாவல்கள் என்பவை மிகச் சிலவாகவே உள்ளன. நேர்முக மாகக் கதையைக் கூறிச் செல்லும் நாவல்களே பலவாக உள்ளன. புதிய கலை நுணுக்க முயற்சிகள் அருகித் தென்படுகின்றன. ஆனால் அந்நெறியில் முயன்று கலை வடிவம் பெற்ற நாவல்கள் சிறப்புக்குரிய நிலையில் வெளிவந்துள்ளன என்பது உண்மை.

II

துப்பறியும் கதைகளை எழுதிக் கொலை, திருட்டுப் போன்ற வற்றை அடிப்படையாகக் கொண்டு மயிர்க்கூச்செறியும் நிகழ்ச்சி களைப் பின்னி, படிப்போருடைய ஆர்வத்தைத் தூண்டும் வகை யில் கதைகளை எழுதும் வழக்கம் தொடர்கிறது. சில பெண் எழுத் தாளர்களின் முயற்சி இதில் தெரிகிறது. வழக்கமாகச் சமூகப் பின்னணியில் சமூகச் சிக்கல்களையே கதையின் கருவாகக் கொண்டு கதை எழுதும் பெண் எழுத்தாளர்கள் துப்பறியும் கதை எழுத முயன்றுள்ளனர். எனினும், குறிப்பிடத் தக்க வெற்றி பெற்றார்கள் என்று கூற இயலவில்லை. சில நாவல்களில் துப்பறிப வனை மடக்க அனுப்பப் பெறும் பெண்ணே அவன்மீது காதல் வயப்பட்டுத் திசைமாறிவிட நேர்கிறது. கொலையும், கடத்தல் தொழிலும் பற்றி வெளிவந்துள்ள சில நாவல்கள் திரைப்படக் கலைநுணுக்கம் பெற்று அமைந்துள்ளது. இது இக்காலத்தில் திரைப்படக்கலை வளர்ந்து வருவதன் விளைவு ஆகும். எனினும் அந்தக் கலை நுணுக்கத்தையும் ஆழமாகப் பின்பற்றவில்லை.

பாலுணர்வும் கொலையும் தொடர்புடையன. திருட்டுகளில் பூட்டுடைத்துத் திருடும் கலை, வாணிகம் வளர்ச்சி பெற்றுள்ள இக்கால நகர் நாகரிகத்தில் படிப்பவர்க்குத் தனி ஆர்வம் ஊட்டு வது, பரத்தமைக் குற்றம் பரந்து கிடத்தல் ஆகியவை போன்ற பல குற்றங்களின் கொத்தாகச் சில நிகழ்ச்சிகளை உருவாக்கித்

தரும்போது சிறுசிறு அளவில் பல்வேறு குற்றங்களைத் தனித் தனியே படித்துக் கொஞ்ச நேரத்திற்கு அச்சுவை தரும் இன்பம் ஊட்டமுயல்வன சில. புதைபொருள் ஆராய்ச்சி என்ற போக்கினை ஒரு வழியில் காட்டிச் சென்று அதனையே கள்ள நோட்டு அச் சடிப்பில் முடித்துக் காட்டும் இத்தகைய நாவல்களில் ஆர்வத் திருப்பத்தை வேறொன்றாகத் திடுமென முடித்துக்காட்டும் முயற்சி வெளிப்படுகிறது. பொதுவாகக் கொலைச் செயல் பற்றி யும் பின்னர் அதனை மனக்காட்சியில் கண்டு அக்குற்றங்களைக் கண்டுபிடிக்கும் வகையில் உளவியல் துணையாக அமையும் நிலை யில் சில வெளிவந்துள்ளன. இவை அறிவியலில் புறப்பொருள் களைக் கொண்டு குற்றங்களைக் காணும் முறையிலிருந்து சற்று மாறி மனித மனத்தின் அகநிலைக் காட்சிகளின் துணையையும் அவற்றைப் பயன்படுத்தும் முறையையும் சில நாவல்கள் புதுமை யாகக் கையாண்டுள்ளன. இந்த நாவல்களின் ஆற்றலே மொழி யில் காணும் அழகிய எளிய நடைதான்.

சிறுவர்க்குரிய நாவல் என்ற தலைப்பில் சில நூல்கள் வெளி வந்துள்ளன. சிறுவர் இலக்கியம் என்ற தலைப்பினுள் இவை அடங்குதற்குரியன. அதனை மேலும் பகுக்கும் போது கதைகள் என்று பகுப்பர். அப்போது அதனை இப்பகுதியில் சேர்க்க இடம் ஏற்படலாம்.

மாயாஜாலம் நிறைந்த சில கதைகளை இப்பகுப்பில் சேர்த் துள்ளனர். எனினும் இதனை மந்திர தந்திரக் கதைகள் என்ற பிரிவில் அமைக்கலாம். அடுத்துப் பெற்றோர்கள் பிள்ளைகள் எனும் இருவர் நிலையையும் காட்டிப் பிள்ளைகள் பண்பால் உயர்ந்த நிலையில் உள்ளனர் என்ற உண்மையை நிலைநாட்ட முயலும் பாங்கு இந்நூல்களில் தெரிகிறது. ஊனமுற்ற சிறுவர்கள் மற்றவர்களின் கையை எதிர்பார்ப்பதைவிடத் தாங்களே பிறர்க்கு உதவியும் தங்களைப் போன்றார்க்குத் தாங்களே கைகொடுக்கும் தன்னம்பிக்கை நெறியும் வளரும் வகையில் சில கதைகள் வர வேற்கும் வண்ணம் வெளி வந்துள்ளன.

III

ஒரு சில வரலாற்றுப் புதினங்கள் இந்த ஆண்டும் தமிழில் வெளிவந்துள்ளன. தமிழகத்துப் பழைய வரலாற்றை அறி வதற்குத் துணை புரிவது பதிற்றுப்பத்து என்ற சங்கநூல். அதன் பதிகமும் பலவழிகளில் துணை செய்யும். சங்க நூலில்

வரலாற்றுச் செய்திகளைப் பெரிதும் ஈடுபாட்டுடன் பாடுபவர் பரணர். அவர் பாடிய ஐந்தாம் பத்தின் அடிப்படையில் சேரர் வரலாற்றுச் செய்தியாகப் படைக்கும்போது சிலப்பதிகார ஆசிரியர் இளங்கோவடிகளையும் நாவல் மாந்தராகப் பயன்படுத்த முனைந்துள்ளனர். சிற்றரசர்கள் தமிழகப் போர்களில் எந்த அளவு பயன்பட்டனர் என்பதும் மகள் மறுத்தல் என்ற புறப்பொருள் துறை எவ்வாறு கதை வளர்ச்சிக்குத் துணைபுரிகிறது என்பதும் புலனாகும். கலைப்பின்னணி சேரர் வரலாற்றைக் காட்டுவதில் நன்கு பயன்பட்டுள்ளது.

சோழ ஆட்சியில் முடிசூடும் உரிமை பற்றிப் பல செயல்கள் வளர்ச்சி பெறுகின்றன. அதனை ஒட்டிச் சக்திவழிபாடு, வேட ஒற்றுமை, பிறப்புப் பற்றிய உண்மைச் செய்திகள் ஆகியவை பின்னப்பட்டுப் பெரு வடிவம் கொள்ளும் வகையில் நாவல்கள் உருவாகியுள்ளன. சோழர் புகழ் பெற்று வளரும் நிலைக்குப் பல்லவர் அழிவும், கங்கர் துணையும் எவ்வாறு பயன்படுகிறது என்பதைக் காட்ட முயல்கின்றன. அரசர்களுக்கு முதலிடம் கொடாமல் படைத் தலைவர்களுக்குச் சிறப்புக்காணச் சில நாவல்கள் வழிகாட்டுகின்றன. வரலாற்றுச் சிறப்புப் பெற்ற கவிஞர்களும், அடியார்களும் கதை நிகழ்ச்சியில் பங்கு பெற்றாலும் அவர்களின் ஆளுமை செவ்விய நிலையில் பல நாவல்களில் காண முடியவில்லை. பிற்காலப் பல்லவர்கள் பற்றிய நாவல்களைப் புனையும்போது சோழர் ஆட்சி உரிமை பற்றிச் சிக்கல்கள் எழுந்தது போன்றே இவற்றிலும் கதைச் சிக்கல்களை அமைத்துள்ளனர்.

பிற்காலத்தில் தமிழகத்தை ஆண்ட நாயக்கர்கள் வரலாற்றுச் செய்தியைக் கூறும் போது அரசின் வாரிசைக் காக்கும் பணி முதலிடம் பெறுகிறது. சமண சமயம் நாயக்கர் காலத்தில் ஆற்றல் வாய்ந்த சமயமாக விளங்காவிடினும் சில நாவல்கள் அந்தச் சமயத்தை இக்காலத்தில் பயன்படுத்தியுள்ளன. கள்வர் கூட்டத்தையும் இத்தகைய சமயத்தவருடன் இணைக்கும். இவையெல்லாம் வரலாறு என்ற பின்னணியை விட்டுக் கற்பனையையே பெரிதும் தழுவிச் செல்லும் பாங்கினைக் காட்டும். மாறாக நாயக்கர் வரலாற்றில் புகழ்வாய்ந்திருந்த பெண்ணரசியை உருவாக்கும் போது பற்பல விழாக்களில் காணும் பண்பாட்டு வளர்ச்சியையும் மக்கள் கொண்ட நம்பிக்கைகளையும் புலப்படுத்தும் நோக்கு வெளியாகிறது.

தமிழகத்திற்கு வெளியில் நடைபெற்ற இந்திய வரலாற்று நிகழ்ச்சிகளைப் பயன்படுத்தி ஒருசில நாவல்கள் வெளிவந்துள்ளன. மாராட்டிய மண்ணில் சிவாஜிக்குப் பின்னர் பீஷ்வாக்களின் செல்வாக்கு வளர்வதைக் காட்டும் கதையில் வரலாற்றின் உண்மை ஒளி அதிகம் படரவில்லை. மாறாக, இராஜபுதனத்தை மார்வார், மேவார் அரசுப் போட்டி மிக நல்லமுறையில் சிறிய அளவில் சித்திரிக்கப்பட்டுள்ளது. குறிப்பாகப் படைதிரட்டுதல், அதைப் பழக்குதல் என்ற போர்நெறி நன்கு கையாளப்பட்டுள்ளது. அதைப் போன்றே பதினெட்டாம் நூற்றாண்டில் மேற்குக் கடற்கரையோரத்தில்ஐரோப்பியர் இந்தியாவை ஆளத் திட்டமிட்டு உருவாக்கிய நிகழ்ச்சிகளையும் மராட்டிய மண்ணில் உருவான வீரர்கள் அவற்றை எப்படித் திட்டமிட்டு எதிர்த்தார்கள் எனவும் வேண்டுமளவு வரலாற்றுச் செய்திகளைச் சுவைநயம் படக் கலந்து திறமையுடன் தந்துள்ளன. வரலாற்று நாவல்கள் எழுதும்போது வரலாற்று நூல்களையும் பிறநாட்டார் குறிப்பினையும், சான்றுகளையும் தக்கவண்ணம் பயன்படுத்தும் போக்கில் நாவல் ஆசிரியர்களின் கடினமான உழைப்புப் புலப்படுகிறது. இத்தகைய நாவல்களும் அரிய நிலையிலேயே வெளிவருகின்றன.

## IV

காதலை மையமாகக் கொண்டு எழுந்துள்ள நாவல்கள் இவ்வாண்டும் மிகுதியாக உள்ளன. கைக்கிளைக் காதல் என்பது தியாகத்தின் அடிப்படையில் உருவாகி வளர்கிறது என்பதைக் காட்டும் போது—உறவின் தொடர்புகளைக் காட்ட முயலும் போது—பழைய தமிழ்க் காதல் நெறியில் ஒட்டியும் ஒட்டாமலும் செல்லும் நிலையை உணர்த்துகிறது. அண்மையில் வெளிவந்த திரைப்படத்தாக்கங்களையும் இத்தகைய போக்கில் காணலாம். எனினும் இப்போக்கு நல்ல முறையில் வெற்றி பெற்றதாகக் கூற முடியவில்லை. இழந்த காதலை மறுபடியும் புதுப்பிக்க உருவ ஒற்றுமை வாய்ப்புத்தருகிறது. அதுவும் ஒருதலைக் காதலாகக் காணும்போது துன்பியலில் முடிகிறது. இதன் பின்னணி சிற்றூர்களாக அமைகிறது.

சற்று மாறுபட்ட நிலையில் நாவல்களைப் படைக்கும் போது ஊனமுற்றவர்கள் ஏற்கனவே மணம்புரிந்து கொண்டவர்களைத் தம் வாழ்க்கைத் துணையாக நாடும் கதை மிக நல்ல முறையில் உருவாகி இன்பியலில் முடிகிறது. நகரச் சூழலும்—குறிப்பாக

மருத்துவமனையும்—இதன் களமாக அமையும் போது இன்றைய நகர் நாகரிகமே இத்தகைய துணிச்சலான முடிவுக்கு இடமளிக்க இயலும் என்ற உண்மையை வற்புறுத்துகிறது. காதல் மலர்ச்சிக் கென ஒருசில நாவல்கள் பழங்காலத் தமிழ்ப் பாக்களைப் பயன் படுத்தியுள்ளன. வேறு சில நாவல்கள் ஆங்கிலப் பாடல்களை இணைத்துள்ளன. எனினும், இம்முயற்சியால் காதல் உணர்வுப் பெருக்கம் நன்முறையில் சுட்டப்பட்டது எனக் கூற இயலவில்லை.

காதல் ஏமாற்றம் ஒரு பெண்ணை எப்பாடுபட வைக்கிறது என்பதை ஒரு பெண்ணே ஆசிரியராக இருந்து உருவாக்கிக் காட்டும் போது அதன் தனித்தன்மை விளங்குகிறது. பெண் மனத்தில் ஏற்படும் நுண்ணுணர்வுகளை நன்கு காணும் வகையில் கதை உருவாக்கப்பெற்றுள்ளது. வெளிமாநில மக்கள் பற்றித் தமிழகத்திலுள்ளோர் அறியும் வகையில் சில முயற்சிகள் எழுந் துள்ளன. இந்தியாவின் வடகிழக்குப்பகுதி மக்களிடையே நிலவும் காதல், வெளியார் அதனைச் சிதைக்கும் கொடுமை போன்ற வற்றை மிக எளிய முறையில் சுவைபட விளக்குகின்றன.

பெண் விடுதலை இயக்கம் வளர்ந்து வரும் காலத்தில் தனித்த நிலையில் இளம் பெண்ணொருத்தி எவ்வாறு தன் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள முடியும் என்பதை, முதலில் ஏமாற்றத்தில் தொடங்கிப் படிப்படியாக உண்மை அன்பின் பெருக்கை உணர்த்தும் வகையில் செல்லும் நாவலும் உருவாகியுள்ளது. ஆண் பெண் என்ற வேறுபாடு உண்மை அன்பில் மறைவதைக் காட்டும் இது.

திருமணம் பற்றி இளம் பெண்களால் ஒரு முடிவுக்கு வரமுடி யாது. அவ்வாறு வரும் போது அவர்கள் எதிர்பாராத முறையில் பிழை செய்வதற்கு வாய்ப்புண்டு. அத்தகைய பிழைகளை அவர்கள் உணர்வு விஞ்சிய நிலையில் அறியமாட்டார்கள். எனவே உலகியல் புரிந்தவர்கள் அதை உணர்ந்து அத்தகைய பிழைகளை நீக்கிவிட்டு பார்க்கும் போது உண்மையான மண வாழ்வு ஏற்படும் என்பதைப் பெண் எழுத்தாளர்களே எழுதும் போது திருமணம் பற்றிய புதிய எண்ணம் சமுதாயத்தில் எழுவதை உணர முடிகிறது.

பெண் என்பவள் மென்மையின் இருப்பிடம் மட்டுமன்று; கொலைவெறியும் குடியிருக்கும் புற்றாதலும் கூடும். சொத்தாசை பெருகும்போது எந்த வகையான கொடுமைக்கும் அஞ்சாத

நிலையை எடுத்துக் காட்டச் சில நாவல்கள் வந்துள்ளன. ஆயினும் அவற்றில் செறிவின்மை இவ்வுணர்வுகளை நன்முறையில் அமைத்துக் காட்டுதற்கு உதவவில்லை.

அலுவலகத்தில் பெண்கள் பணிபுரியும் வாய்ப்பு நாளும் பெருகிய வண்ணம் உள்ளது. அந்தச் சூழலைப் பயன்படுத்திக் கொண்டு சில நாவல்கள் உருவாகியுள்ளன. அலுவலகம் என்ற களம் சிலவற்றில் நல்ல வண்ணம் உருவாக்கப்பெற்றுள்ளது. இந் நிலையில் காதல் வெற்றி அல்லது தோல்வி என்பதை மையமாகக் கொண்டே கதைகள் வளர்ந்துள்ளன. அவ்வளர்ச்சியிலும் புதிய படைப்பாக்கம் எதுவுமில்லை.

சமுதாயத்தில் குறைபட்டவன் மற்றவர்கள் பார்வைக்கு என்றும் தீயவனாகவே தெரிதல் கூடும். ஆயினும் அவன் உள்ளம் பெண்மை கொண்ட முதற் காதலுக்கு வழிவிடுகிறது; பின்னர்த் தன்னை அக்காதலிலிருந்து விடுவித்துக் கொள்ளும் முயற்சியில் ஈடு படுகிறது. அதனால் மனிதப்பண்பு வெளிப்பட்டு உயர்நிலையை அடைகிறது. குப்பையில் முளைத்த குருக்கத்தியாக இத்தகைய மனித வாழ்வு செதுக்கப் பெறுகிறது. சில நாவல்கள் பெண்ணும் பாசமும் சேர்வதே கணவன் என்ற கொள்கையைப் பெண்ணின் கண் கொண்டு உணர்த்தும். இதில் முன்னது பெறும் வெற்றியைப் பின்னது அடைய இயலவில்லை.

ஒரு ஆண் பல பெண் என்ற நோக்கில் ஆண் தன் வாழ்வை அவ ரது முடிவின் மேல் குலைத்துக் கொள்ளும் போக்கு ஒருவகை எனில் மணந்து கொண்ட மனைவி தன் முந்தைய காதலை வெளிப் படையாகக் கூறினாலும் அதை ஏற்காமல் கொடுமைப்படுத்தும் ஆணின் போக்கு மற்றொரு வகை எனக் காட்ட முற்படுகின்றன சிற்றூர்களில் நிலவுடைமைப் பின்னணியில் பெண்மையின் இன்பம் ஆணின் வெறியால் சூறையாடப்படும் ஊமை நிலையை உருக்கமாக எடுத்துரைக்கும் முயற்சியில் சில நாவல்கள் உருப் பெற்றுள்ளன.

## V

கலப்பு மணம் என்பது இளைஞர்களிடையே பரவுவது வரவேற்கத்தக்கது. அதுவே வயதானவர்களிடையே தோன்றும் காதலுக்கும் உதவுமா என்ற கேள்வி எழுகிறது. அதற்கு விடை யாக இளமைக்கு இடம் கொடுத்துவிட்டு முதுமை ஒதுங்கிக் கொள்ளும் போக்கினை இன்றைய மக்கள் பெறும் பட்டறிவுப்

பாங்கினை நாவல் எடுத்துரைக்க முயலும். அப்போது மேல்சாதி, கீழ்ச்சாதி, பணம், சமுதாய மதிப்பு ஆகியவையெல்லாம் ஒரு பக்கம் திரண்டு நின்று முதியோர் மனத்தைச் சாய்ப்பதை நன்கு காட்டும்.

பெண்களை ஆண்கள் இன்னும் அடிமையாகவே நடத்துவதுடன் அவர்களே தம் முயற்சியால் முன்னுக்கு வந்து நல்வாழ்வு நடத்த முயற்சி செய்யும்போது கூடத்தன்னுரிமையை நிலைநாட்ட வாய்ப்புக் கிடைக்கும்போது ஆண் தன் கோரப்பற்களால் கிழித்துக் குதறத் தயாராய் இருக்கின்றனர் என்பதையும் அந்தக் கொடுமைக்குப் பலியாக இளைய தலைமுறைப் பெண்கள் இடம் கொடுப்பதில்லை என்பதையும் சில நாவலின் போக்குகள் வெளிப்படையாக உணர்த்தும். மாறாகப் பழைய போக்கிலேயே கணவன் போக்கால் பெண்ணின் வாழ்க்கை ஒளிபெறவும் முடிகிறது; இருளடையவும் முடிகிறது. சந்தேகம் என்பதுதான் குடும்பவேரை அறுக்கிறதைப் பல நாவல்கள் வற்புறுத்துகின்றன.

உறவு என்பதெல்லாம் தன்னலமற்ற நிலையில் உதவியது ஒரு காலம். இன்றைய சூழலில் பெற்றோர்களற்ற பெண்கள் படும் துன்பம் எந்நிலையிலும் எடுத்துரைக்க முடியாத அவல நிலையாகும். அத்தகைய பெண்களை மற்றவர்கள் மட்டும் உதறிவிடுவதில்லை. சொந்த உடன் பிறப்புகள் கூடத் தன்னலத்தின் வெறியால் அவர்களைத் தள்ளிவிடுவதை மிக நுணுக்கமாகக் காட்ட முனைகின்றன சில கதைகள். மாறிவரும் சமுதாயத்தின் பிளவுகளைப் பெண் படும் வேதனைக்குரலால் நன்கு அறியமுடிகிறது.

## VI

குழந்தைப்பேற்றின் பெருக்கத்தை நாடெங்கும் தவிர்க்கும் முயற்சி ஒரு பக்கம் நடக்கக் குழந்தைப்பேறே இல்லாதவர்கள் படும் வேதனைகளைக் காட்டும் வகையில் சில புது முயற்சிகள் எழுந்துள்ளன. ஊனமுற்றோர் ஆண்டினை நினைவில் கொண்டு மக்கட்பேறு பற்றிய கருத்தையும் ஊனமுற்றவர் பற்றிய பரிவுக் கருத்தையும் ஒன்றாக இணைக்கும் போது இவற்றில் அழுத்தம் பெறுவதில் எது முன்னுள்ளது என்பதைக் காட்டப் போட்டியிடுகிறது.

குடும்ப வாழ்வில் தலைமை பெண்ணிடம் இன்றைய நிலையிலும் நிலவி நிற்பதைக் காட்டும் வகையில் சில நாவல்கள் முனையும் போது நாவல் ஆசிரியர் தாம் பிறந்த குடியின்

பின்னணியைக் கொண்டே நிகழ்ச்சிகளைப் பின்னும் போது அதில் உயிரோட்டம் இழையோடுகிறது. வளர்ந்து வரும் குடும்பச் சிக்கலில் அத்தகைய தலைமைப்பாங்கு பல முனைகளிலுமிருந்து தாக்கப்பெற்றுச் சிதையும் போது பழமையின் சிதைவிலும் ஒரு வகை அவலம் எதிரொலிக்கின்றது.

குடும்பம் வாழ ஒரு வீடு வேண்டுமென்ற கொள்கையைப் பின்பற்றி வீடு கட்டுவதுடன் எல்லாம் முடிந்துவிடுகிறது என்று முடிவுகட்டுவது பல நடுத்தர மக்களின் வழக்கமாகும். அத்தகைய கனவு வெறும் செங்கல், சுவர், கூரை போன்றவற்றால் முடிவதில்லை. வீட்டின் தொல்லைகள் பெருகப்பெருகக் குடும்ப இன்பம் குலைவதைச் சில நாவல்கள் காட்டுகின்றன. தனி வீட்டிலிருந்து மக்கள் வாழ்வைப் பார்ப்பது ஒருமுறை. அதிலிருந்து தனி ஆளாக வேறொரு வீட்டிலிருந்து சமுதாயத்தின் குறைகளைப் பார்ப்பது மற்றொருமுறை.அப்பார்வையில் பலவீடுகளில் நெளியும் புழுக்கள் தனிப்பட்டவர் கண்ணுக்குப் படுவதாக ஆசிரியர் தம் வாழ்வில் பெற்ற பட்டறிவுப் பார்வை கொண்டு துலக்கும் போது வாழ்வின் இருண்ட பகுதிகளிற் சில இலக்கிய வெளிச்சத்தில் வெளிப்படுகின்றன.

தனிமனிதன் துன்பத்தை மறக்கக்குடிப்பழக்கத்திற்கு அடிமை ஆகும்போது எப்படிப்பட்ட நரக வேதனையை அனுபவிக்க நேர்கிறது எனவும், அத்தகைய சமுதாயத் தீமைக்குட்பட்ட குடும்பம் அணுவணுவாக எப்படி நலிகிறது எனவும் காட்டுதற்கு உண்மை மனித உறவுப்பான்மையுடன் சில கதைகள் எழும்போது தனிமனித வாழ்வுக்கு அரண்தேடும் பாங்கு புலனாகும்.

## VII

திருமணம் என்பது ஒருவனை ஒருத்தி விரும்பும் நிலையா அல்லது மணமாகுமுன் பிறனொருவனை விரும்பிப் பின் வேறொருவனை மணந்து கொள்ளும் வாய்ப்பு வரும் போது அவனை ஏமாற்ற நினைக்காமல் உண்மை நிலையைக் கூறிப் பின் சத்தியம் நம்பிக்கை என்ற வெளிச்சத்தைப் பெறுவதா என்ற கேள்விகளை இன்றைய சமுதாய நிலையின் அடிப்படையில் கிளப்பி நடைமுறைப் போக்கில் அவற்றிற்கு விடைகாண்கின்றன. சில நாவல்கள் இத்தகைய கதைக்கருக்களைக் கையாளும்போது அறிவடிப்படையில் சிக்கலை அணுகி அதில் சற்றும் அருவருப்போ புறக்கணிப்போ

இன்றிக் கையாளும் போது சமுதாயச் சிக்கலைக் கைதேர்ந்தகலை நுணுக்கத்திறனுடன் உருவாக்கும் எழிலை உணர முடிகிறது.

திருமணம் முடிந்த பின் பிள்ளைப்பேற்றினைக் கட்டுப் படுத்துவது என்பது மனக்கட்டுப்பாட்டின் அளவில் இருக்கும் போதுதான் அதன் உயர்வை மக்கள் உணர முடியும். வெறும் உடலளவுத்தடை என்பதெல்லாம் மக்களை மாக்களாக்கிவிடும் இந்நிலை வெறும் பகுத்தறிவு உண்மை நிலையை உணரத் துணை செய்யாது. சமுதாய உணர்வுடன் அறிவியல் பார்வை பெற்று இச்சிக்கலை அணுகும் போதுதான் தெளிவு கிடைக்கும் என்பதைச் சில படைப்புகள் உணர்த்துகின்றன. இப்போக்கு இன்றைய குடும்பக் கட்டுப்பாடு என்ற கொள்கை பற்றி மறு ஆய்வு நிலை எனலாம்.

அதை ஒட்டி வளர்ந்த நிலையில் முதியோர் காதல் வாழ்வு பற்றிய நாவல் உருவாகியுள்ளது. கலைவாழ்வில் தோய்ந்த ஆணும் பெண்ணும் சமுதாயத்தில் காணும் எல்லாக் கட்டுப்பாடு களையும் உடைத்தெறிந்து விட்டு ஒன்றாக வாழ நினைத்து வாழும்போது ஒன்றிய உள்ளங்களிடையே சில மாறுபாடுகள் எழுவது இயற்கை. ஒருகலைஞர் மற்றொரு கலைஞரின் கருத்து வெளிப்பாடு குறித்து ஐயம் கொள்ளும் போது மேல்மட்ட நிலை யில் பிரிவு ஏற்படுதல் கூடும். ஆயினும் அந்தப் பிரிவுக்கும் அடித் தளத்தில் உண்மையான, தன்னலமற்ற பேரன்பு நீரோட்டமாக ஓடிக்கொண்டிருக்கும் போது மேல்மட்ட மாறுபாடுகள் வெறும் தோற்றங்களாக மின்னி மறைந்து விடுகின்றன. இதற்கு உள்ளுறைப் பொருளாக நல்லிலக்கியம் எந்தச் சூழலிலும் உயிர் பெற்று உலவுதல் திண்ணம் என்பதை வலியுறுத்தும் போக்கு புலப் படுகிறது. இத்தகைய உள்ளுறைப் பொருளமையும் வகையில் தமிழ்நாவல் உலகில் வெகு அருகிய நிலையிலேயே சில படைப்புகள் வெளிவந்துள்ளன.

## VIII

சிற்றூர்ப் பண்ணைகளில் பழம்பெரும் நிலவுடைமையாளர்கள் தங்கள் உடைமை நிலையை விடாமல் பற்றிக் கொண்டிருக்க எல்லாவகையிலும் முயல்வதையும் அம்முயற்சிக்குத் தடையாகத் தோன்றும் எல்லாவகை எதிர்ப்புகளையும் அவர்கள் எவ்வகை யிலேனும் முறியடித்து வீழ்த்துவதையும் காட்டும் நாவல்கள் பழம் பண்பாட்டுப் பின்னணியை-சிற்றூர் சிறு தெய்வ விழாக்கள்,

சடங்குகள், நம்பிக்கைகள் ஆகியவற்றை வேண்டுமளவு பயன் படுத்தத் தவறவில்லை.

இதற்கு மாறாக நகரச் சூழலில் ஏழைகளை எல்லா வகை யிலும் சுரண்டுவதற்குக் கூட்டம் கூட்டமாகக் கூடி நின்று சங்கிலி போன்ற அமைப்மை உறுதியாக அமைத்துக் கொண்டு அதன் வாயிலாக ஏழை எளியமக்களின் பணத்தைக் கொத்தி உறிஞ்சிச் சுவைப்பதில் இரக்கமற்ற அரக்கத்தனம் தலைதூக்கி நிற்பதை வெளிப்படையாக நடப்பியல் ஓவியமாகச் சில காட்டுகின்றன. அப்படிக் காட்டும் போது குடும்ப உட்பூசலும் உறவின் தனி அமைப்புகளும் பணஆசைக்குப் பலியாகும் போக்கினை வெளிப் படுத்தும். அந்நிலையிலும் தனிமனிதன் அவன் உடல் நிலை, அறிவு நிலை ஆகிய எல்லாவற்றின் வன்மை மென்மைகளைப் பயன்படுத்திக் காசாக்கும் கண்ணோட்டம் வான் முட்டப் பறப்பதைக் காட்டுவன சில நாவல்கள்

இப்படிப் பண ஆசைக்குத் தனி மனிதர்கள் மட்டும் பலியாவ தில்லை. சமய அமைப்புகளும் அதைச் சார்ந்து நிற்கும் சமுதாய மும் பலியாவதை நன்கு வெளிக் காட்டுகின்றன சில படைப்புகள். பற்றற்ற ஞானிகளுக்கு இந்த அமைப்புகள், சடங்குகள், உறவு நிலைகள், தலைமை நிலையில் காணப்படும் குற்றங்கள் ஆகியவை யெல்லாம் பொது நோக்காய்ப் புலப்படினும் சமய நிறுவன நடை முறையில் டல ஊறுகள் விளைவிப்பதையும் அதனால் பல மானிடர் அந்தச் சமுதாயத் தேரோட்டத்தில் நசுங்கி விடுவதைக் காட்டும் முயற்சி சில நாவல்களில் தெளிவாக அமைந்துள்ளது. அப்பால் அறிவுக்கு அழைத்துச் செல்லும் நெறியாக இது புலப் படுகிறது.

இதற்கு மாறான சூழ்நிலையில் நகரங்களில் அமைந்தது தொழிற்கூடங்களில் வேலை செய்யும் தொழிலாளர்களின் அன்றாட வாழ்க்கை. தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்யும் போது தொழிற்கூடங்களில் வேலை செய்யும் மக்கள் வாழ்க்கை யில் எத்தகைய மாற்றங்கள் நிகழ்கின்றன என்பதை வெளிக் காட்டும் முயற்சி தென்படுகிறது. பல்வேறுபட்ட மனித உறவுகள் குறிப்பாகத் தொழிலாளி முதலாளி உறவுகள் ஆகியவற்றைக் காட்டும் முயற்சி கலை நுணுக்கத்தோடு பின்னப் பெற்றுள்ளது. அதில் கலை எழுச்சியும் தொழிற்கூட வாழ்வும் தனிநிலையில் உருவாகியுள்ளன,

தமிழகத்தை விட்டு அப்பால் சென்று இந்தியத் தலைநகரில் வாழும் மேல்தட்டு மக்களின் கலைவாழ்வைக் காட்டும் முயற்சியில் வாழ்க்கையில் தனிமனித உரிமை தலைதூக்கி நிற்கிறது. கட்டற்ற பாலுறவின் போக்குகள் எத்தகைய விளைவுகளைப் பழைய குடும்ப அமைப்பில் உண்டாக்குகின்றன என்பதைக் காட்டும். புறவுலகு நிகழ்ச்சிகளைவிட அகவுலக எண்ண ஓட்டங்களே இங்கு ஆற்றல் பெற்று விளங்குகின்றன.

## IX

சமுதாயக் கூட்டு வாழ்க்கை, தனிமனித உரிமை வாழ்க்கை என்ற இரண்டும் இன்று மெய்ப் பொருளியலில் தனித் தன்மை பெற்றுப் புதுப் புது விளக்கங்கள் தந்து நிற்கின்றன. குடும்பம், அலுவலகம், சமூகத்தின் பல பகுதிகள் என்ற கட்டுக்குள் தனி மனிதன் சிக்கித் தவிப்பதாக உணரும் அறிவுள்ளங்கள் அதை விட்டுத் தன்னைப் பிரித்து, தான் யார் என்பதை உணர்த்த விரும்பு கிறது. அதில் பிற பிடிப்புகளிலிருந்து தன்னை விலக்கித் தான் ஒரு தனித்தன்மை பெற்ற தகுதி உடையவன்; எவ்வகை மீயாற்றலும் தன்னைக் கட்டுப்படுத்த இயலாது என்ற உண்மையை எளிய குடும்ப நிலையிலிருந்தும் காட்டமுயல்வது ஒரு நிலை. கலை உலகில் உருவான ஒரு எழுத்தாளன் வாழ்வைப் பின்னணியாகக் கொண்டு பல்வேறு இலக்கிய இயக்கங்களையும் சமுதாயப் பகுதி களையும் கொள்கைகளையும் மதிப்பீடு செய்வது மற்றொரு நிலை மனித இருப்பியல் கொள்கையினைப் பல்வேறு கலைப் பொலிவு தோன்ற விளக்க முயலும் படைப்புப் பாங்கின் அழகை வெளிப்படுத்தச் சில நாவல்கள் புதிய வடிவங்கொண்டு வெளி வந்துள்ளன. இதற்கு மாறாகச் சமுதாயத்தின் சிக்கல்கள் போராட்ட முறையில் தீர்க்கப்பட வேண்டும். அதற்குச் சமுதாயத் தில் தாழ்ந்த நிலையிலுள்ளவர்கள் நன்றாகக் கூடி ஒரு ரட்டமைப் பில் ஒன்று சேர்ந்து போராட வேண்டும் என்பதைக் காட்டும் சமுதாய உணர்வு நாவல்கள் வெளிவந்துள்ளன.

## X

இந்த ஆண்டு வெளியான தமிழ் நாவல்களின் எண்ணிக்கை வழக்கம் போலப் பேரளவில் அமைந்துள்ளது. புதியவகையில் கலை நுணுக்கம் வாய்ந்த நாவல்கள் விரல்விட்டு எண்ணும் விதத்தில் தான் வெளிவந்துள்ளன. முன்னைய ஆண்டை விட இவ்வாண்டு வந்த நாவல்களில் திரைப்பட நுணுக்கங்கள் சில வெளிப்பட்

டுள்ளன. தமிழகத்தில் திரைப்படம் கொண்டுள்ள செல்வாக்கை இது புலப்படுத்தும்.

வரலாற்று நாவல்களில் தமிழகம் பற்றிய வரலாற்றை அடிப்படையாகக் கொண்டு எழுந்தவை அளவிலும் நிலையிலும் சற்றுப் பின்னோக்கியே உள்ளன. தமிழகத்தைத் தாண்டியுள்ள பகுதிகளை எழுதுவதில் ஆர்வம் மிகுதியாகத் தென்படுகிறது. உண்மையான வரலாற்று நாவல் என்பது இன்னும் செம்மையாக உருவாக வேண்டியுள்ளது.

சமூக நாவல்களில் பெண்ணை மையமாகக் கொண்டு எழுந்த கதைகளே மிகுதியாக உள்ளன. பெண் நாவலாசிரியர்களின் படைப்பும் இவ்வாண்டு குறிப்பிடத் தக்க வண்ணம் வெளி வந்துள்ளன. திருமணச்சிக்கல், குடும்பக் கட்டுப்பாடு, முதியோர் வாழ்வு போன்றவை நல்ல முறையில் கையாளப் பெற்றுள்ளன.

தனிமனிதனை மையமாகக் கொண்டு அவன் விடுதலை பெற்று உயர்வாழ்வு வாழவேண்டும் என்ற கொள்கையில் புதிய கலை வடிவ முயற்சியில் சில படைப்புகள் வெளி வந்துள்ளன. சமுதாயத்தில் கூட்டு முயற்சியில் தீமையை எதிர்த்துப் போராடும் மனப்பாங்கைத் தூண்டும் வகையில் சில முயற்சிகளும் உருவாகியுள்ளன. சில நல்ல நாவல்கள் வெளிவர இந்த ஆண்டு துணைபுரிந்துள்ளது எனலாம்.

துப்பறியும் மோகனை வீழ்த்துவதற்கு எனக் கொலைகாரக் கும்பல் கமலா என்ற பெயரில் அனுப்பிய ரேகா அவன் மீது அன்பு கொண்டு மனம் மாறிய பின்னும் அந்தக் கொலைக்கும்பலால் தன் மோகனுக்குத் துன்பம் வரக்கூடாதே என்பதற்குப் படும் பாட்டை பின்னணியாகக் கொண்டு எழுந்த கதை சி. ஆர். ராஜம்மாவின் 'மோகனராகம்',[1] துப்பறிதல் குறைவாகவும் தத்தளிக்கும் காதல் கூடுதலாகவும் இதில் தென்படுகின்றது. துப்பறியும் கதைகளை முன்னர் வை. மு. கோதை நாயகி எழுதியதைப் போன்றே முயன்று இப்போது இந்துமதியும் 'யார்?'[2] என்ற தலைப்பில் ஒரு நாவலை எழுதியுள்ளார்.

---

1. மோகனராகம், சி. ஆர். ராஜம்மா, ரேவதி பதிப்பகம், 33, கணபதி தெரு, மேற்கு மாம்பலம், சென்னை-33, ஜனவரி, 1981

2. யார்?, இந்துமதி, திருமகள் நிலையம், சென்னை 1, ஜனவரி 1981.

திரைப்படத் தயாரிப்பாளர் பாலகிருஷ்ணன் மகன் ஹரியின் காதலி ப்ரீதியைக் கடத்திச் சென்று பணம் கேட்கும் கொடுமையை உருவாக்கி இடையே வேலைக்காரநாயர் கொலையையும் இணைத்து ப்ரீதியைக் கடத்தியவன் யார்? நாயரைக் கொன்றவன் யார்? என்ற கேள்விக்கு விடைகாணும் வகையில் கதை செல்கிறது.

இறுதியில் படப்பிடிப்புக்குப் பயன்படும் 'டம்மி' பொம்மையை நாயரே பயன்படுத்திப் ப்ரீதியைக் கடத்திச் சென்றதை இன்ஸ்பெக்டர் கணேஷ் கண்டுபிடித்துக் குற்றத்தை வெளிப் படுத்தியதை இந்தக் கதை காட்டும் வாராவாரம் படிப்பவரின் ஆர்வத்தைத் தூண்டும் வகையில் திகிலும், பால்நெறியும் கலக்க அமைந்துள்ளது இக்கதை.

இளைஞர்கள் குற்றங்களைப் பாலுணர்வு அடிப்படையாகவும் செய்யலாம். ஓர் 'அம்மா'வைக் கைப்பற்ற அவள் குழந்தையைத் தூக்கிச் செல்லும் சுனிலின் குற்றம் அவனுடைய தந்தை வகித்த பதவியால் காப்பாற்றப்படுகிறது. கடையில் பூட்டுக்களை உடைத்துத் திருடும் ஆறுமுகம் தனக்குத் துணையென நம்பிய பெண்ணின் பேதமையால் மறுபடியும் சிறைபடுகிறான், காதலில் தோல்வியுற்றவர் தற்கொலை செய்து கொள்கிறார். பரத்தமைத் தொழில் புரியும் குமாரி மறுபடியும் அந்தத் தொழிலிலே ஈடுபடு கிறாள். இப்படி 'வஸந்த காலக் குற்றங்களை வகைப்படுத்தி இளம் உள்ளங்கள் பொழுது போக்குக்குப் படிக்கும் வகையில் சுஜாதாவின் நாவல் செல்கிறது.[3] அதன் முடிவாக வஸந்த காலக் குற்றங்கள் முற்றும் என்பதே கிடையாது என்று ஆசிரியர் கூறும் போது இந்தச் சமுதாயத்தில் இத்தகைய குற்றங்கள் இருக்கத்தான் செய்யும்; அதனை மேலோட்டமாகச் சொல்லிப் பொழுது போக்குத் தீனி ஆக இத்தகைய நூல்கள் வரத்தான் செய்யும் என்பதைச் சொல்லாமல் சொல்கிறார்.

கல்வெட்டாராய்ச்சியிலீடுபட்ட பேராசிரியர் அப்பாதுரையின் கட்டுரையில் தொடங்கும் மர்மம், இராஜராஜன் கிணறு பற்றி என்ன புதைபொருளுண்மை கிடைக்குமோ என்ற ஆர்வம் ஆகியவை சுஜாதா எழுதிய, 'வஸந்த்! வஸந்த்' நாவலின்[4] மைய

---

3. வசந்த காலக் குற்றங்கள், சுஜாதா, மோனா பப்ளி கேஷன்ஸ், சென்னை 44, மார்ச்சு, 1981
4. வஸந்த் வஸந்த், சுஜாதா, விஜயா பதிப்பகம், கோயமுத் தூர், நவம்பர் 1981

மாக நின்று கதையை நடத்திச் செல்கிறது. பேராசிரியர் மகள் இனியா மீது வஸந்த் கொண்ட காதல் இறுதியில் திசை திரும்புவது போலவே இக்கதையில் வரலாற்று உண்மைகள் கிடைப்பதற்கு மாறாகக் கள்ள நோட்டுக் கூட்டத்தின் கொடுமை வெளிப்படுகிறது.

கணேஷ் வசந்த் ஆகிய இரு வழக்கறிஞர்களின் அறிவு, அசைவு ஆகிய இரு பண்புகளின் ஓட்டமாகச் செல்கிறது. பொழுது போக்கில் பெரிதும் மென்மையைக் கூட்டியதன் விளைவாக இது உள்ளது.

இரவுப் பெண்கள் ஒவ்வொருவராகக் கொலை செய்யப், படுவது பரபரப்பான செய்தி. அக்கொலைகளைத் தன் மனக் காட்சியாகக் கண்ட தாரா போலீசுக்குத் தெரிவிக்கிறாள். அதனைத் தொடர்ந்து பி.ஆர்.ஒ. ஹரி என்ற மனிதர் தன்னை விட மேல்நிலையில் உள்ளவர்கள் கொள்ளும் பாலுறவைக் கண்டு பொறாது செய்த கொலைகளாக அவை வெளிப்படுகின்றன. இக் கொலைகளை மனக் காட்சியாகக் காணும் தாரா என்ற படைப்பு புஷ்பா தங்கதுரையின் 'வியாபார இரவு'களின் தனிப் படைப் பாகும்.[5] கொலை செய்வது யார் என்று தெரியாத வகையில் கடைசி வரை செல்வதே இதன் தனி ஆற்றலாகும். அதற்குத் துணை போகும் வகையில் நடையோட்டம் அமைந்துள்ளது.

சிறுவர்க்கு என எழுதும் நாவலில் சேர்வது கனிமொழியின் 'மகேந்திரபுரி மாவீரன்'[6] மகேந்திரபுரியின் இளவரசி பூங் கொடியை மணக்கத் தளபதியின் மகன் புலியன் முயன்று மந்திர வாதியின் துணையுடன் சூழ்ச்சி செய்தலைக் குணாளன் என்ற காவலன் வென்று இறுதியில் மந்திரவாதியையும் கொன்று இளவரசியை மணந்து கொள்ளும் கதை இது. மந்திர தந்திரங்கள் நிறைந்தது. எனினும் இதனைச் சிறுவர்க்குரிய நாவல் எனக் கொள்ள இயலவில்லை.

சிறுவர்கள் வாழ்விலும் பெற்றோர்கள் வாழ்விலும் மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேறுபாடுகள் நிறைந்திருக்கின்றன.

---

5. வியாபார இரவுகள், புஷ்பா தங்கதுரை, அபிராமி பப்ளி கேஷன்ஸ், சென்னை-1, டிசம்பர், 1981
6. மகேந்திரபுரி மாவீரன், கனிமொழி, அருணோதய வெளி யீடு, சென்னை, ஜூன், 1981

இயல்பாகவே சிறுவர்களிடம் அமைந்த நல்ல பண்புகளை வளர்க்கச் சமுதாயம் துணையாக நிற்க வேண்டும். இவ்வுண் மையைக் காட்டும் வகையில் சாந்தி, கமலா, ராமு, ரமேஸ், அரவிந்தன் ஆகிய சிறுவர்களையும் நாகலிங்கம், தியாகராஜன், தங்கமணி ஆகிய பெரியவர்களையும் கொண்டு 'ஒரு கிளைப் பறவை'களைப் பூதலூர் முத்து[7] உருவாக்கியுள்ளார். சிறுவர்கள் பற்றிய கதை மனித அன்பின் அடிப்படை வளர வழிகாட்டுகிறது.

ஊனமுற்றவர் நல்வாழ்வுக்கெனப் பல நல்ல திட்டங்கள் தீட்டும் நாளில் சிறுவர்க்குரிய நாவல் கதையாக எஸ். விஜய லெட்சுமியின் 'மனம் ஊனமாகவில்லை'[8] சிறந்த முறையில் வெளி வந்துள்ளது. சப்பாணியான கோபுவைப் பற்றிய கதை இது. உடல் ஊனமுற்றிருப்பினும் அவனுடைய மனம் மிக உயர்ந்த பண்பில் தோய்ந்திருந்தது. அவன் அன்பு நிறைந்த செயலால் தீய ராஜு திருந்துகிறான். கோபுவின் நிறையுடைச் செயல்கள் பல மக்களில் பலர்க்கும் பயன்பட்டன. தான் பெற்ற பரிசுப் பணத்தையும் ஊனமுற்றோர்க்கு நன்கொடையாக அளிக்கும் போது மற்றவர்களிடமிருந்து பரிவையும் பாசத்தையும் பெறுவதைக் காட்டிலும் தம்மைத் தாமே உயர்த்தும் தன்னம் பிக்கை வாழ்வுக்குத் தனிச் சிறப்பு நல்குகிறது இப்படைப்பு. இத்தகைய படைப்புகள் சிறுவர் உள்ளத்தில் நல்ல பண்புகளை விதைத்துத் தன்னம்பிக்கை ஊட்டும் என்பதில் ஐயமில்லை.

சேரர் வரலாற்றில் பதிற்றுப் பத்தில் ஐந்தாம் பத்துப் பாடிய பரணர்க்கு 'உம்பற் காட்டு வாரியையும் தன் மகன் குட்டுவன் சேரலையும் கொடுத்தான்' என்ற தொடரின் பொருளை மனத்தில் கொண்டு பூவண்ணன் 'கொல்லி மலைச் செல்வி'[9] நாவலைப் புனைந்துள்ளார். செல்வி என்ற பாண்மகளின் இசை மீது குட்டுவன் காதல் கொள்ள அரசன் செங்குட்டுவன் அதைத் தடுத்தான். இடையே குன்றத்தூர் அறுகை அரசர் மகள் கோதையை மணம் முடிக்க எண்ணினான். ஆனால் மோகூர் மன்னன் பழையன் அவளைப் பெண் கேட்டுக் கைப்பற்றிச்

7. ஒரு கிளைப் பறவைகள், பூதலூர் முத்து, வானதி பதிப் பகம், சென்னை, 17, நவம்பர், 1981
8. மனம் ஊனமாகவில்லை, எஸ். விஜயலெட்சுமி, வானதிப் பதிப்பகம், சென்னை 17, நவம்பர், 1981.
9. கொல்லிமலைச் செல்வி, பூவண்ணன், நறுமலர்ப் பதிப் பகம், சென்னை 29, ஆகஸ்டு, 1981

செல்லும்போது சேரர் படை அவனை வென்றது. செங்குட்டுவன் படைவெற்றி செல்வி குட்டுவன் காதலைச் சிதைக்கும் எனக் கருதிப் பரணர் இளங்கோ அடிகளின் உள்ளத்திற் கேற்பச் செங்குட்டுவன் மீது பத்துப் பாடல் பாடிப் பரிசுப் பொருளாகக் குட்டுவனைப் பெற்று அவன் கொண்ட காதல் வாழ்வு மலர வழி செய்கிறார்.

சிற்றரசர்களின் பூசல் மகள் மறுப்பால் விளையும் போர், காதலுக்கும் அரசுரிமைக்கும் ஏற்படும் முரண், புலவர் கொடை பூசலைப் போக்கும் பெருமிதம் என்பவை எல்லாம் இதன் அக அணிகளாக மிளிர்கின்றன. பழைய நூலில் காணும் சொற்றொடரும் அதனைப் பயன்படுத்தி அக்காலப் பண்பாட்டைப் பரிசிலடிப்படையில் கதையை மாற்றிக் காதல் வெற்றியாகப் படைப்பதும் இந்நாவலின் வெற்றியாகும்.

தாமரை மணாளனின் 'அந்தப்புரம்'[10] வீரராஜேந்திரன் சோழ மணிமுடி தரிக்கும் நிகழ்ச்சியை மையமாகக் கொண்டு பல் வேறு மாந்தர்களின் திடுக்கிடும் தலையீட்டால் பல மாற்றங் களின் வழியே உருவாகுமாறு வளர்ந்துள்ளது. தொடக்கத்தில் கலை வல்லாள் மாதங்கி, கொடும்பாளூர் வேளார் மகள் புவனமா தேவி ஈழத்திலிருந்து வந்து தன் வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்ள முயலும் சந்திரசேனா ஆகியோருடன் வீரராஜேந்திரனின் காதல் செயல்கள் மிகுதியாகத் தென்படுகின்றன.

நாட்டின் வளர்ச்சியைக் குறித்துத் தன் மகனையே வீர ராஜேந்திரன் என வேடமிடச் செய்து இரு அரச குமாரர்களைக் காக்க முயன்ற முயற்சி கடைசிவரை வெளிப்படாச் சிக்கலாகவே ஆர்வத்தைத் தூண்டும் வகையில் அமைந்துள்ளது.

சக்தி வழிபாட்டைப் பரப்பும் காளிமாகண்டர் சோழப் பேரரசின் நலனுக்குப் பாடுபடுவதை ஈழ எதிரிகளோ பாண்டிய வீரர்களோ அறியாத மந்திரதந்திரச் சூழலில் தம் செயல்களைப் புரிந்து அவர் யார் என்ற ஆர்வத்தைத் தூண்டும் வகையில் சென்று இறுதியில் அவர் கடவுள் நெறியில் செல்ல விரும்பும் நல்லவராகக் காணும் நேரத்தில் அவர் வீரரஜேந்திரனின் உடன் பிறந்தார் என்ற உண்மையும் தெரிகிறது.

---

10. அந்தப்புரம், தாமரைமணாளன், வானதி பதிப்பகம், சென்னை 17, ஏப்ரல், 1981

வேங்கி நாட்டிலிருந்து வந்து தமிழகச் சோழராய் ஆண்ட இராசாதிராசன் சோழ நாட்டை வீரரஜேந்திரனிடம் ஒப்படைக்கும் முறை அரச தந்திரங்கள் அமைந்துள்ளன. காதல், வீரம் சாகசச் செயல்கள், முன்னறிவு, சொல்வன்மை ஆகிய யாவும் அமைந்த பெருவீரனாக வீரராஜேந்திரன் விளங்குவது தமிழக வரலாற்றுப் புதினங்களின் வழக்கமான நெறி. இதில் கல்கியும் சாண்டில்யனும் கலந்த பாங்கு தென்படுகிறது.

தொடக்கத்தில் வரலாற்றுச் சூழல்கள் பல்வேறு நிலைகளை அடுக்கிக் கொண்டே சென்று ஈழப்படை தமிழகத்தில் வரும் நிலையைக் கூறிப் பல்வேறு அரசியல் நிகழ்ச்சிகளை எதிரிடையாகப் படைத்து ஆர்வத்தைத் தூண்டுவதிலேயே பின்னர் அமைந்துள்ள பகுதிகள் விளங்குகின்றன. முத்திரை மோதிரம், மரத்தின் கீழ் சுரங்கப்பாதை, பிள்ளையார் அடையாளம், சங்கு மச்சம் போன்றவை கதை ஓட்டத்தில் கலக்கும் சுவைக் கூட்டுகள். இவை பழைய நெறியின் விரிவுகள் என்பதையே காண முடிகிறது. செயலீட்டத்தின் முழுவடிவமாக இந்தக் கதை செல்கிறது.

சோழ அரசை மறுபடியும் புகழ் பெறச் செய்யவேண்டும் என ஆதித்த சோழன் கனவு காண்பதைச் 'சோழ இளவரசன் கனவு' என்ற நாவலில் விக்கிரமன் விவரிக்கிறார்.[11] சிற்பிமகளான மீன் விழியும் அவள் உடன் பிறப்பான மயில்விழியும் பல்லவ நாட்டில் ஆதித்தனின் வீரம் வெளிப்படப் பின்னணியாகப் பயன்படுகின்றனர். பல்லவ இளவரசி வைரக்கண்ணி பல்லவ மன்னன் அபராஜிதனின் மனைவியாதற்கு மறுத்துத் தன் மனத்தை ஆதித்தனிடம் பறிகொடுக்கிறாள்.

விஜயாலய சோழர் சோழநாட்டின் பெருமை ஓங்க நிதம்ப சூதனியை வணங்கிய வண்ணமிருப்பதை நாவல் மறவாமல் வெளிப்படுத்துகிறது. கங்கநாட்டு இளவரசன் விக்கியண்ணன் ஆதித்தனுக்கு நிழல்போல நின்று உதவுவது பெருந்துணையாக அமைகிறது.

வரலாற்று நாவல்களில் பொதுவாகக் காணும் குதிரை வீரர் போர், நிலவறைச் சூழல். ஒற்றரின் வேடத்திறன் போன்றவை ஆங்காங்கே வெளிப்படுகின்றன. எதிர்பாராத வகையில் மயில்விழி,

11. சோழ இளவரசன் கனவு, விக்கிரமன், திருமகள் நிலையம், சென்னை-1. டிசம்பர், 1981.

மீன்விழி கொண்ட காதல் எதிர்நிலையை அடைய ஆதித்தன் கனவு மட்டுமே வைரக்கண்ணியை மணப்பதில் வெற்றி பெறுகிறது.

சோழர் வெற்றி பெற்றுப் புதிய ஆட்சிக்கு வழி வகுப்பதைக் கலைப் பின்னணியிலேயே விக்கிரமன் காட்டிச் செல்கிறார். கல்கி நெறியில் முழுமையாக ஆழ்ந்துள்ள பற்று இதில் நன்கு புலனாகிறது.

சாண்டில்யனை ஒட்டிச் சரித்திர நாவல்கள் படைக்கும் முயற்சியில் 'காவிரி நாடனை'[12] முகிலன் எழுதியுள்ளார். தெள்ளாறெறிந்த நந்திவர்மன் காலத்தைத் தேர்ந்தெடுத்து அவன் இராட்டிரகூடர்களுடன் போர்புரிந்து மண உறவு கொண்ட செய்தியில் அவனுக்கு முதலிடம் கொடாமல் படைத் தலைவன் நெடுமாறன் புகழ் மிக்க செயல்களே முதலிடம் பெறுகின்றன.

இராஜ குருவின் திட்டங்கள் இடையிட அவர் மகள் தாரகையை நெடுமாறன் விரும்பிப் பல்லவ நாட்டில் பாரதம் பாடிய பெருந்தேவனார் பொறுப்பில் விட்டுச் செல்கிறான். எனினும் அவளை மறுபடியும் மீட்டுச் செல்லும் நிகழ்ச்சி நிகழ் கிறது. இராட்டிரகூடர் போர் ஊடே பாண்டியருடன் தெள் ளாற்றுப் போர் இவைகளெல்லாம் ஆர்வத்தை மிகுவிக்கும் செயல் களாக வருகின்றன. குறிப்பாக, நெடுமாறனின் கூரிய அறிவும், திட்டமிடும் ஆற்றலுமே பெருவீரச் செயல்களாக மின்னலிடு கின்றன. வரலாற்றில் வாழ்ந்த பாரதம் பாடிய பெருந்தேவனார், கோட்புலி நாயனார் போன்றவர்கள் வரினும் சிறப்பான இடத்தைப் பெறவில்லை. வரலாற்றுப் பின்னணி போல் பல இடங்கள் அமைந்து ஆர்வத்தைப் பெருக்குகின்றன.

பிற்காலப் பல்லவர் ஆட்சியை மையமாகக் கொண்டு எழுந்த வரலாற்று நாவல் கௌரிராசனின் 'மாமல்ல நாயகன்'[13] இராச சிம்மன் ஆட்சியில் பல்லவமல்லன் என்ற சிறுவன் அரசன் அன்பு வளர்ப்பில் வளரும்போது அரசுவழிவழி சித்திரமாயனின் வஞ்சம் சிறுவனைக் காபாலிகர் கூட்டத்தில் பலி கொடுக்கச் சதித் திட்ட மாக மாறுகிறது. கயல்விழி என்ற பெண் அதற்குத் துணைசெய்யும் போது சிறுவன் வாழ்வு மற்றொரு வகையில் காப்பாற்றப் பெறுகிறது.

---

12. காவிரி நாடன், முகிலன், கவிதா பப்ளிகேஷன், சென்னை-33, மே, 1981.
13. மாமல்லநாயகன், கௌரிராஜன், முத்தையா நிலையம், சென்னை-5, ஜூன், 1981.

சூழ்ச்சியின் தொடர்ச்சியில் இரண்டாம் பரமேசுவரவர்மன் கொல்லப்பட 12 வயதான பல்லவமல்லன் அரசனாகும் கதையை நேர் நடையில் சொல்லிச் செல்கிறது. மாமல்லை என்ற பின்னணி, காபாலிகக் கூட்டச்சதி, அரசபரம்பரையின் ஆட்சிப் பேராசை போன்றவை பயன்படுத்தப் பெற்றுள்ளன.

மதுரை, தஞ்சை நாயக்கர் வரலாற்றில் சொக்கநாதனின் ஆட்சியாளனாக அழகாத்திரி தஞ்சையில் ஆண்டதையும் அவனுக்குத் துணையாக வெங்கண்ணா வெங்கடாத்திரியும் இருந்ததைக்கொண்டு எஸ் குலசேகரனின் 'அந்திமந்தாரை' வெளி வந்துள்ளது.[14] தஞ்சையின் குலக்கொழுந்தாம் செங்கமலனைக் காக்கக் குமார தாத்தாச்சாரியார் அவர் மகள் கோதை இருவரும் பட்டபாடு இந்த நாவலெங்கும் ஊடுருவிச் செல்கிறது. ஊனமுற்ற காலால் விந்தி விந்திச் சென்ற கோதை புதிய கோதையாக விளங்குகிறாள்.

சமணத் தலைவராக வந்த ஜீனேந்திர அடிகள் முந்தைய லிங்கமநாய்க்கன் எனக் காட்டும் போக்கு வரலாற்று நாவல்களில் திடீர்த்திருப்பம் உண்டாக்கவேண்டும் என்பதைக் காட்டுகிறது. நாட்டியச்செல்வி செம்பவழவல்லியும் ஒற்று வேலை செய்த ராதையும் முரண்பட்ட பண்புகள் எனினும் வரலாற்றுத் திருப்பங் களுக்கு அவர்களை ஆசிரியர் பயன்படுத்தியுள்ளார். கள்ளர் தலைவனாயிருந்த மணிவண்ணனை ஆசிரியர் சமணப் பள்ளியி லிருந்து புதிய அரசு படைக்க உதவுவதை நன்கு காட்டியுள்ளார்.

மதுரை நாயக்கர் ஆட்சியில் 'மங்கம்மா'வின் புகழ் தனிச் சிறப்புடையது. நாயக்கர் ஆட்சியையும் அவளையும் மையமாகக் கொண்டு தமிழ் நாவலின் தொடக்க காலத்தில் வெளிவந்த சில நாவல்கள் உள்ளன. இவ்வாண்டு நா. பார்த்தசாரதியின் தொடர் நாவலாக 'ராணிமங்கம்மாள்'[15] வெளிவந்துள்ளது.

கட்டிய கணவனையும் பெற்ற மகன் ரங்ககிருஷ்ண முத்து வீரப்பனையும் இழந்தவளான மங்கம்மா தன் குலம் விளங்கப் பேரன் விசயரங்கசொக்கநாதனை உருவாக்க முயன்றாள்.

---

14. அந்திமந்தாரை, எஸ். குலசேகரன், குணவபப்ளிகேஷன்ஸ், சென்னை-5, செப்டெம்பர், 1981.

15. ராணிமங்கம்மாள், நா. பார்த்தசாரதி, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, மார்ச்சு, 1982.

இஸ்லாமியர் படையெடுத்தாலும் அம்மதத்தவர் அமைதியாய் வாழத் துணைபுரிந்தார் மங்கம்மாள். போர்ச்சுக்கல்லிலிருந்து வந்த பிரிட்டோ பாதிரி போன்றவர்க்கும் அவள் உதவினாள். ஆயினும் உள்நாட்டுப் பூசலும் மராட்டியர், கன்னடியர், கேரளர் போன்றவர்கள் கொடுத்த தொல்லைகளுக்கு இடங்கொடாமால் தன் திறமையை நிறுவும்போது சேதுபதிக் கிழவனின் சிக்கல் நிறைந்த பகையும், சொந்தப் பேரனின் கொடுமையும் அவள் போக்கைத் தடைசெய்தன.

மீனாட்சி கல்யாணம், அழகர் ஆற்றில் இறங்குதல் போன்ற பண்பாட்டு விழா நிகழ்ச்சிகளுடன், தீக்கனவு, செய்யக்கூடாத செயல்கள் ஆகியவற்றைப் பற்றிய நம்பிக்கைகள் புலப்படுகின்றன. துன்பப் புயலின் நடுவே துணிவுடன் செயலாற்றி மறைந்த மன்னர் பெருமாட்டியாக ராணிமங்கம்மாள் தான் செய்த அறச் செயல்களால் உயிர் வாழ்வதை இந்த நாவல் புலப்படுத்துகிறது.

ராஜபுதன வரலாற்றில் மார்வார் மேவார் அரசுப்போட்டியில் மேவார் மன்னன் சந்தசிம்மன் அவன் மக்கள் காந்தாஜி, மஞ்ஜாஜி ஆகியவர்களை மார்வார் மன்னன் ரின்மல்லின் மகன் ராவ்ஜோடா வெல்லும் நிகழ்ச்சியைச் சாண்டில்யனின் 'மலை அரசி'[16] விளக்குகிறது.

வரலாற்றில் நடமாடிய பிருமசாரி ஹர்பா சங்க்லா, குதிரை வளர்ப்பு வீரரான பாபுஜி ஆகியவர் ஜோடாவின் செயலுக்குத் துணை நிற்கின்றனர். துறவி ஜோகியும், அவர் வளர்ப்பு மகளான கிரிஜா என்னும் 'மலை அரசி'யும் ஜோடாவின் உணர்வுக்கு எண்ணெய் வார்க்கின்றனர். படைதிரட்டல், புதிய முறையில் சிறுசிறு குழுவாகப் பிரிந்து போரிடல், குதிரைகளைப் பழக்கும் முறை போன்றவை கதையின் வேகத்தைப் பெருக்குகின்றன.

மலைஅரசி, ஜோடாவின் காதல் சுவைபடச் செல்கிறது. கர்னல் ஜேம்ஸ் டாட் எழுதிய நூலின் பகுதி இத்தகைய நாவல் உருவாவதற்குத் துணை செய்கிறது என்பது குறிப்பிடத்தக்கது.

மராட்டிய சாம்ராஜ்யம் சிவாஜியின் வழிவந்தோரால் ஆளும் திறமையற்று அமைச்சர்களாம் பீஷ்வாக்களின் கையில் சிக்கிய வரலாற்றைக் காட்டுவது சி. என். நாச்சியப்பன் எழுதிய

16. மலை அரசி, சாண்டில்யன், வானதி பதிப்பகம், சென்னை-17, அக்டோபர், 1981.

'கங்காவதி' என்ற நாவல்[17] பீஷ்வா பாலாஜி விசுவநாதன் பேத்தி சிவாஜி பரம்பரையில் வந்த சாருவைக் காதலித்து அவனை மன்னனாக்கும் முயற்சியில் பல சமயங்களில் துணைபுரிந்து இறுதியில் பீஷ்வாவின் பொய்ம் மொழியால் சாரு இறந்ததாக நம்பி ஆற்றில் வீழ்ந்திறக்கிறாள். வரலாற்றுப் பின்னணியைவிட நடை ஓட்டமே இந்த நூலில் முன்னிற்கிறது.

18ஆம் நூற்றாண்டில் மேற்குக் கடற்கரையில் நடை பெற்ற கடல் கொள்ளைகள், வெள்ளையர் இந்தியாவை ஆளத்திட்ட மிட்ட செய்கைகள் ஆகியவற்றை மையமாகக் கொண்டு சாண்டில்யனின் கடல் ராணி' உருவாக்கப்பட்டுள்ளது.[18]

கடல் போர்கள், அக்காலத்தில் பயன்பட்ட கப்பல்கள் பற்றிய செய்திகளை எல்லாம் பல நூல்களிலிருந்து திரட்டி ஏராளமான வரலாற்றுச் சான்றுகளுடன் தந்துள்ளார் ஆசிரியர். சிந்து துர்க்கப் பின்னணியில் அரைத்தூக்கத்தில் அறிமுகமாகும் அனந்தின் நுண்ணறிவும் செயலாண்மையும் பல்வேறு சிக்கல்களை நீக்கிப் பேஷ்வா பாஜிராவின் திட்டப்படி மேற்குக் கடலில் கடற் கொள்ளையர், அன்னியர் ஆகியோரின் பிடிப்பு அசைகிறது. கடல் ராணி ரத்னாவின் செயலாண்மை பல இடங்களில் தனித் தன்மையைக் காட்டும். கடல்ராணியும் பேஷ்வாவின் மருமகன் சாருவும் இரு துருவங்களாகக் கடல், நிலம் என்ற இரு களங்களில் அனந்த் வகுக்கும் திட்டத்திற்கு உதவுகின்றனர். கடற் கொள்ளையராம் இங்க்லண்ட், டெய்லர், சில்வர், அவன் வளர்த்த கிளி பற்றியும் பிரஞ்சுக் கொள்ளைக்காரன் லாபூஷே (லிவாஸியர்) போன்றவரின் நடவடிக்கைகள் பற்றியும் அறியும்போது படிப் போர்க்குக் கணத்துக்குக்கணம் திகிலூட்டும் வகையில் நாவல் வளர் கிறது. எல்லாவற்றையும் விஞ்சி அனந்தும் அவன் நண்பன் துலாஜியும் திட்டமிட்டு ஒவ்வொரு செயலையும் செயல்படுத்தி இறுதியில் பூர்ணகட் போரில் ஆங்கில கேப்டன் மாக்மராவுடன் போரிட்டு வெல்லும் நிகழ்ச்சியைக் காட்டுவதில் 'கடல்ராணி' தனி அழகுடையதாக உள்ளது.

கடல்ராணி, சாரு ஆகியவருடன் அனந்தும் சேர்ந்து புரியும் இன்பச் செயல்கள், வீரத்திற்குக் காதல் செயல்கள் எவ்வளவு

---

17. கங்காவதி, சி. என். நாச்சியப்பன், அருணோதயம், சென்னை-14, மார்ச்சு, 1981.
18. கடல்ராணி, சாண்டில்யன், வானதி பதிப்பகம், சென்னை-17, டிசம்பர், 1981.

சுவையூட்ட இயலும் என்பதைக் காட்டும் வகையில் வடிக்கப் பட்டுள்ளன. கடல் களங்கள், கடலோடிகளின் செயல்கள், மராட்டிய மக்களின் செயல், மேலைநாட்டு மக்களின் மனம் ஆகிய வற்றை நன்கு வெளிக்காட்டுகிறது இந்த நாவல். வெளிநாட்டார் பேசும் பேச்சிலும் அவர்களுக்கு விடையளிக்கும் சில மாந்தர் பேச்சி லும் முழு ஆங்கிலமே பயன்படுத்தப்பட்டிருப்பினும் அடைப்புக் குறிக்குள் தமிழ்த் தொடர்கள் இருப்பதால் படிப்பவர்க்குத் துன்ப மில்லாமல் அமைகிறது. வடமொழி தமிழ் ஆகியவற்றிலுள்ள காப்பியங்கள், இலக்கியங்கள் இந்நாவலில் வேண்டுமளவு பயன் பட்டுள்ளன என்பது குறிப்பிடத்தக்கது.

கைக்கிளைக் காதல் நிலையைக் காட்டும் கதையாகத் 'தாய் மாமன்'[19] அமைந்துள்ளது. கல்வியும் பணமும் உறவு நிலையும் எந்த அளவு ஆற்றல் வாய்ந்தவை எனவும் உண்மையான காதல் என்பது திருமணம் செய்வதை விடவும் காதலித்தவள் நல்வாழ்வு வாழவேண்டும் என்பதிலேயே கருத்தூன்றி இருக்கும் என்பதையும் இது உணர்த்தும்.

சிற்றூரிலே வாழ்ந்த ரமணி ராதாவின் காதலை வெளிப் படுத்தும் நீரோட்டமான கதை பி. எல். ராஜேந்திரனின் 'இரவல் பூ'[20] திருமண நாளன்று தீப்பிடித்து மறைந்தான் ரமணி. நோய் வாய்ப்பட்ட ராதாவை மருத்துவமனையில் சேர்த் தனர். அவளுக்கு மருத்துவம் செய்த இளைஞரிடம் தன் ரமணி சாயலைக் கண்டு மனம் துளிர்க்கிறாள் ராதா. ஆனால் அந்த மருத்துவரோ மாயா என்ற பெண்ணை விரும்புகிறார் என்று கண்டவுடன் உயிர்துறக்கிறாள்.

சிற்றூரில் காதல் எப்படி அரும்பி கனிந்து பின் வெம்பி வீழ்கிறது என்பதைக் காட்டுவதே இக்கதையின் நோக்கமாக உள்ளது. ஒவ்வொரு பிரிவின் தலைப்பிலும் சிற்றூர்மணம் கமழ நாட்டுப்புறப் பாடல்களின் சில அடிகளைத் தந்துள்ளது ஆசிரியரின் கலை நோக்கத்தை வெளிப்படுத்துகிறது.

---

19. தாய்மாமன், ஆலந்தூர் மணிவண்ணன், அன்பு பதிப்பகம், ஆலந்தூர், சென்னை 11, டிசம்பர், 1981

20. இரவல்பூ, பி. எல். ராஜேந்திரன், முருகன்நிலையம், 12 தேசிகர் தெரு, சென்னை, 26; மார்ச்சு 1981.

காதல் என்பது உடலைக் கடந்ததா பொருளாதாரச் சிக்கல் களுக்குட்பட்டதா என்ற கேள்விகட்கெல்லாம் விடையாக வாஸந்தியின் 'அந்தி நேரத்து உதயங்கள்' வெளிவந்துள்ளது[21].

ஹரி ஒரு விபத்தில் ஊனமுற்றபோது அவனைக் காதலித்த மாயா வேறொருவனை மணக்கும் சூழல் ஏற்படுகிறது. ஏற்கனவே மணமாயிருந்த நர்ஸ் சாந்தி தன் கணவன் நடராஜனால் அளவுக்கு மீறிய கொடுமைக்கு ஆட்பட்டு அவனை விட்டுப் பிரிகிறாள். ஆனால் அவள் காட்டும் அன்பால் ஒவ்வொரு நோயாளியும் புத்துயிர் பெறுகின்றனர். ஹரியும் தன்னம்பிக்கை பெற்று வாழ்வை நடத்த பெட்ரோல் பங்க் திறக்கத் திட்டமிட்டுத்தன் துணையாக வருமாறு சாந்தியைக் கேட்கிறான். இடையே அவன் வீடுதிரும்பும் போது மருத்துவமனையில் இல்லாத சாந்தி தன்கணவன் விருப்பிற் கிணங்க மணவிடுதலை எழுதி அவனிடம் தந்துவிட்டு ஹரியுடன் இணைகிறாள்.

மணமும், மணமுறிவும், புதுமண உறவும் அந்தி நேரத்தில் தோன்றும் உதயங்களாகப் புது வாழ்வுக்கு ஒளி காட்டுகின்றன.

'பாதை தவறிய பைங்கிளிகள்' என்ற தி. குலோத்துங்கன் நாவலில் சாதிப் பாகுபாட்டைக் களைய முயலும் முயற்சி வெளிப்படுகிறது. புராணகால ஒழுக்கங்களை நீக்க நினைக்கும் சொற் பொழிவுத்திறன் படைத்த மாணவன் குமரன். தேன்மொழி, மலர்விழிஆகிய இருவர் காதலனாக விளங்குகிறான். பெரும் பான்மையான பக்கங்கள் பால் உறவு பற்றியதாக அமைந்துள்ளன. ஆங்காங்கே பழைய தமிழ் இலக்கியப்பாடல்களும் மிதக்கின்றன. தொடக்கத்திலுள்ள வழக்குமன்றக் காட்சி பழைய திரைப்படங் களின் செல்வாக்கைக் காட்டுகிறது.

'மலராத மொடடுகள்'[23] என்ற நீண்ட நெடும் கதை காதல் வாழ்வு என்ற புள்ளிகளை மையமாகக் கொண்டு எழுதப்பட்டது. உதயணனின் முயற்சியில் ரமணி என்ற மாந்தன் தன்நண்பனுக்காக வாழ்வில் படும் பல்வேறு துன்பங்களை விரிவான முறையில் காட்டிச் செல்கிறார். எந்த வகையிலும் சுவையூட்டும் முயற்சி

---

21. அந்தி நேரத்து உதயங்கள், வாஸந்தி, கலைஞன் பதிப் பகம், சென்னை 17, டிசம்பர், 1981
22. பாதை தவறிய பைங்கிளிகள், குலோத்துங்கன், வசந்தா பிரசுரம், சென்னை 33 ஆகஸ்டு, 1981.
23. மலராத மொட்டுகள், உதயணன், அன்பு பப்ளிகேஷன்ஸ் சென்னை-33 1981.

தெரிகிறது. பல ஆங்கிலப் பாடல்கள் கடிதங்களில் உள்ளன. முதிராமுயற்சியின் விளைவைக் காண முடிகிறது.

பெண்மனத்தைப் புரிந்து நாவல்கள் எழுதுவது லஷ்மி அவர்களுடைய நீண்ட காலப் பழக்கம். அந்நெறியில் 'தேடிக் கொண்டே இருப்பேன்'[24] என்பது கொலைகாரி என்று பட்டம் சூட்டப்பட்டுத் தண்டனைமுழுதும் அனுபவித்து வெளியே வந்த சௌதாமினியின் வாழ்க்கை பற்றியது இந்த நாவல். வேங்கைப்பட்டி கிராமத்தில் வாழ்ந்தபோது பெரும் பணக்காரரின் மகன் தாயுமானவரைக் காதலித்து ஏமாந்தாள். பின் ஏகாம்பரத்துடன் திருமணம் புரியாமல் காதல் வாழ்வு வாழ்ந்து கௌசிக்குத் தாயானாள். சூழ்நிலை அவளைத் தொழிலதிபர் முருகதாஸைக் கொன்றதாகக் குற்றம் சாட்டுகிறது. அதனால் தண்டனை அடைந்த நிலை முன்கதை.

அவள் வாழ்க்கை பற்றி முழுவிவரமும் திரட்ட முனைந்த ரிஷி என்ற பத்திரிகை நிருபர் எல்லா உண்மையும் திரட்டும்போது அவள் உண்மையில் கொலைகாரி அல்ல என்றும் தன் பத்திரிகை முதலாளியே அவள் முதலில் காதலித்தவர் என்றும் அறிகிறான். இறுதியில் அவளைத் தன் அக்கா ஆகவும் ஏற்றுக்கொள்கிறான். இன்றையச் சூழலில் தனி ஒரு பெண் எத்தகைய துன்பங்களை அனுபவிக்கிறாள் என்பதை நன்கு வெளிப்படுத்துகிறது லஷ்மியின் படைப்பு. பின்னோக்கு உத்தி பல இடங்களில் பயன்பட்டுக் கதை மாந்தர் நிலையை உணர்த்துகிறது.

அயல் மாநிலங்களைப் பின்னணியாகக் கொண்டு நாவல் வருவது குறைவு. வாஸந்தியின் உணர்ச்சி மிக்க 'மூங்கில் பூக்கள்'[25] மீஜோராம் பின்னணியில் வளர்கிறது.

தமிழ்ப் பெண் ஷீலா தன் அன்பால் முரட்டுப்பையன் சுங்காவைத் திருத்தும் பாங்கில் ஏற்படும் பல்வேறு உணர்வு நிலைகளை இது காட்டிச் செல்கிறது. காட்டு மனிதர்களிடையே வளர்ந்த சுங்காவிடம் அன்புக்கு ஏங்கும் ஏக்கம், ஆர்க்கிட் பூவின் அழகைக் கண்டு சுவைக்கும் பற்று, தீமையை வெறுக்கும் வேகம் ஆகியவை புலப்படும்.

---

24. தேடிக் கொண்டே இருப்பேன், லஷ்மி, திருமகள் நிலையம், சென்னை 1, டிசம்பர், 1981
25. மூங்கில் பூக்கள், வாஸந்தி, வானதி பதிப்பகம் சென்னை 17, ஆகஸ்டு, 1981

கல்விகற்பிக்கும் ஆசிரியர் என்பவர் உளவியலைப் புரிந்து கொண்டு மொழி, இனம் இவற்றையெல்லாம் கடந்து மனித அன்பின் உறைவிடமாக வாழ முயலும் முயற்சியில் ஈடுபடும்போது ஷீலா போன்றவர்க்கு நாகரிக வேடத்தில் தம்மை மறைத்துக் கொண்டு கொலை வெறியில் மூழ்கும் ராஜீவ்கள் தடையாகின்றனர். இயற்கை அன்பும் செயற்கை வெறியும் மோதும் உணர்வுப் போரினை மிக இயற்கையாகக் காட்டுகிறது இந்த நாவல். மூங்கில் பூவினை எலிகள் தின்றால் பஞ்சம் வரும் என்ற பழங்குடி மக்களின் நம்பிக்கை உருவகமாக இந்த நாவலின் தலைப்பாக அமைந்து நம்மை எங்கெங்கோ அழைத்துச்செல்கிறது. பயங்கரவாதியாம் லால்சுங்கா, தன்மகன் சுங்காவை ராஜீவ் ஜீப்பை ஏற்றிக் கொன்ற பின்னர்ச் சுங்காவிடம் அன்பு காட்டிய ஷீலாவைத் தப்புவிக்கும் பணியில் ஈடுபட்ட மனநிலை உண்மை மனித அன்பின் பொலிவை வெளிப்படுத்தும்.

பெண் விடுதலை இயக்கம் உலகின் பல பகுதிகளில் வளர்ந்து வருகிறது. இந்தியாவில், குறிப்பாகத் தமிழகத்தில் அது தோன்றினால் எப்படி இருக்கும் என்பதை ஒருவாறு சுட்டிக் காட்டும் முயற்சியில் இந்துமதியின் 'சக்தி 81' அமைந்துள்ளது.[26] தன் தந்தையால் புறக்கணிக்கப்பட்டு, சிற்றப்பாவால் ஏமாற்றப் பட்டு, வேறுசில ஆண்களால் அவலப்பட்டு முடிவில் ஆண்களே விலங்குகள் என்ற எண்ணத்தில் மிதந்த சக்தி எதிர்பாராத வகையில் பிரதாபின் உண்மையான நட்பைப் புகைவண்டியில் பெற்று அவனுடனே சென்னையில் தங்கிப் பத்திரிகை நிருபராக வாழ்கிறாள். தன்மீது அவன் கொண்ட மாசுமறுவற்ற அன்பைப் புரிந்து கொள்ளாமல் தன்னுடைய பழைய அனுபவங்களின் அடிப்படையில் புறக்கணிக்கிறாள். எனவே பிரதாப் வெளியேறுகிறான். பெண்விடுதலை இயக்கத்தில் முன் பங்கு எடுத்த அவளுடைய உணர்ச்சிமிக்க பேச்சை மதுரையில் கேட்டதால் பிரதாப் மீண்டும் அவளுடன் இணையும் வாய்ப்புக் கிடைக்கிறது.

தனிப்பட்ட பெண்ணொருத்தி ஆண்களின் ஆதிக்கம் மிக்க சூழலில் எவ்வாறு தன்னம்பிக்கையுடனும் தன்னுணர்வுடனும் பல்வேறு சிக்கல்களில் சிக்கி இறுதியில் மனித அன்பாம் ஆண் பெண் உண்மைக் கலப்பில் ஒன்றுவதைக் காண முடிகிறது.

---

26. சக்தி 81, இந்துமதி, கலைஞன் பதிப்பகம், சென்னை, டிசம்பர், 1981

திருமணம் பற்றி ஒரு இளம்பெண்ணால் சரியாகத் தீர்மானிக்க முடியுமா என்ற சிக்கலை விளக்குவதாக அமைகிறது இந்துமதியின் 'வேலியோரத்துப் பூக்கள்'[27] தன் முதலாளிமகள் சரண்யாவை ஸ்ரீராம் மணக்க விரும்புகிறான். அதனை முதலாளியும் ஏற்கிறார். ஒரு மனநிலையில் அவளும் ஒப்புக் கொள்கிறாள்.

ஆனால் புகைப்படக்காட்சியில் ஹரீஸ் கௌதமைச் சந்தித் ததும் அவள் சலனமடைகிறாள். கௌதமை மணக்கவும் ஸ்ரீராமை புறக்கணிக்கவும் நினைக்கிறாள்.

ஆனால் ஏற்கனவே மணமான கௌதம் சரண்யா தன்னை விரும்புவதை அறியான். மகளின் பிடிவாதத்தால் மனமுடைந்த தந்தை இறக்கிறார். தன்னைப் போல கௌதம் விரும்பவில்லை எனச் சரண்யா உண்மை ஒளியை உணர்ந்து திகைக்கிறாள்.

அவளுடைய பக்குவமடையாப் பருவத்தின்வெறும் சலனத்தின் விளைவை அவளுக்கு உணர்த்திய ஸ்ரீராம் வேலியோரத்துப் பூவை விட வீட்டில் வளரும் ரோஜாவின் பெருமையைக் காட்டும் வகையில் அவளை ஏற்கிறான். எது காதல், எது நட்பு என்று தெரியாத வெறும் சலனங்களின் ஓட்டத்தை உணர்த்தி அதற்கேற்ப வாழ்வை அமைத்துக்கொள்ளும் வழியைக் காட்டுகிறது இந்நாவல்.

'அற்புதா' என்ற நாவலில்[28] கௌரிராஜன் பெண்களிடம் அமைந்துள்ள பண வெறி இரும்பைத் தங்கமாக்கி வாழ்வைச் செல்வக் கொழிப்பாக்கச் செய்யும் பேராசையை வெளிப்படுத்தும். பாம்பு வளர்க்கும் ஆசையில் வெளிப்படும் கொலை வெறியும் இடையே ஊடாடும். பெண்களின் மென்மையான பண்புகளையே கண்டுணர்ந்தவர்க்கு இது ஒரு புதுத் திருப்பம்.

அத்தையின் கொடுமையைக் காட்டும் வகையில் பி.எஸ்.ஆர். ராவின் 'நீயில்லாமல் நானில்லை'[29] என்ற நாவல் உருவாகி யுள்ளது. அமெரிக்காவில் ரவிகுமார் படித்துத் திரும்பும் போது அவன் குடும்பச் சொத்தைத் திருட்டுத்தனமாக அபகரித்த, அத்தை கோமளம் தன் மகளை ரவிக்குக் கட்டிவைத்துச்

---

27. வேலியோரத்துப்பூக்கள், இந்துமதி கலைஞன்பதிப்பகம் சென்னை 17, டிசம்பர், 1981

28. அற்புதா, கௌரிராஜன், இலக்குமி நிலையம், 59 முத்து முதலிதெரு, சென்னை-14, ஜுன், 1981.

29. நீயில்லாமல் நானில்லை, பி.எஸ்.ஆர். ராவ், நர்மதா பதிப்பகம், சென்னை-17, ஆகஸ்டு, 1981

சொத்தை முழுதும் கைப்பற்ற நினைக்கிறாள். ஆனால் ரவி தான் விரும்பிய மீரா, விதவையானாலும் மணக்க முடிவு செய்யும் போது, அத்தையின் திட்டத்தால் விஷ உணவுண்டு ஆபத்துக்கு ஆளாகிறான். கடைசியில் அவன் தந்தை சாவதற்குமுன் எழுதிய கடிதம் கிடைக்கிறது. அவனும் பிழைத்து மீராவையும் மணந்து அத்தையின் துன்ப வலையிலிருந்து தப்புகிறான்; சாதாரணக்கதை. பழங்காலந்தொட்டுவரும் அத்தை கொடுமை கதை வடிவில் படிப் பதற்கு எளிய முறையில் அமைந்துள்ளது.

அலுவலகத்தில் வேலைசெய்யும் ஆனந்தன் சந்தர்ப்ப வசத் தால் தன் பணத்தை இழந்து, வேலையையும் இழக்கிறான். ஆயினும் அவன் விரும்பிய மீனாவின் அன்பை இழக்கவில்லை. ஆனால் அந்த அன்புக்கும் சோதனைமேல் சோதனை ஏற்படு வதையும், அவை இறுதியில் பிரமிளா என்ற பெண் அலுவலாளர் துணையாலேயே முடிவதையும் சி.ஆர். ராஜம்மாவின் 'சுப முகூர்த்தம்'[30] காட்டும்.

பி. எல். ராஜேந்திரன் எழுதிய. 'கார்த்திகா காத்திருக் கிறாள்[31]' என்ற நாவல் அலுவலகத்தில் வரவேற்பாளராகப் பணி யாற்றும் கார்த்திகாவும் அங்குப் பணியாற்ற வரும் சுரேஷ் குமாரையும் மையமாகக்கொண்டு வளர்கிறது.இடையேஅவனைப் பற்றி அவள் கொண்ட ஐயத்தில் சில குழப்பங்கள் நேர இறுதியில் யாவும் தீர்ந்து திருமணத்தில் முடிகிறது. இடைத்தட்டு மக்களின் ஆசை வெறிகள் பொருந்தாத ஒழுக்கங்களுக்கமைந்த சமூகச்சூழல் யாவும் அமைந்துள்ளன. திரைப்படப் பாடல்களின் வரிகள் பல தலைப்புகளாக அமைந்துள்ளன.

பல குற்றங்களைச் செய்து சிறையிலகப்படாது தப்பிய புண்ணிய கோடி, நாராயணன் என்ற பெயரில் பல இடங்களில் வேலை செய்யும்போது திலகம் என்ற கூலிக்காரப் பெண்ணைச் சென்னையில் சந்திக்கிறான். அவளைத் தன் வாழ்க்கையுடன் இணைக்க எண்ணும்போது, அவளைக் காப்பாற்றுவதற்காகக் கொலையாளியான குமாரசாமியின் கதையை அறிந்து தானே சிறைப்படும் செய்தியைச் சென்னைச் சூழலை மையமாகக்

30. சுபமுகூர்த்தம், சி ஆர். ராஜம்மா, குமரன் பதிப்பகம், சென்னை-33, டிசம்பர், 1981

31. கார்த்திகா காத்திருக்கிறாள், பி.எஸ். ராஜேந்திரன் ரேவதி பதிப்பகம், சென்னை -35, அக்டோபர், 1981

கொண்டு மிக விருவிருப்பான நடையில் செல்கிறது சுஜாதாவின் 'என்றாவது ஒருநாள்'[32]

விபத்தில் ஊனமுற்ற பணக்காரப் பெண் தேன்குழலி மெய் யம்மையின் ஓவியப்பற்று ஒருவகையில் வெளிப்பட அந்த அம்மையின் பணியாளர்கள் பிரகாஷ், அருண் ஆகியோர் தவறுகள் பெருகுகின்றன. இடையே மீனா சங்கர் என்பவர்களை அவர்கள் கடத்திவர உண்மையான காதலர்களுக்கு மெய்யம்மை உதவு கிறார். அதுபோல் தன்னிடம் பணிபுரிந்த அலமேலுவைப் பிரகாஷுக்குத் திருமணம் செய்துவைக்கிறார். இப்படிப்பட்ட சுழல் நாவலைப் 'பெண்+பாசம்=கணவன்'[33] என்ற புதிய தலைப்பில் கவர்ச்சியுடன் கௌரிநாதன் எழுதியுள்ளார்.

வாழ்க்கையில் நிதானமின்றி அவசர அவசரமாக முடிவு எடுப்பதால் எப்படி ஒரு ஆண் தன் வாழ்வைக் குலைத்துக் கொள் கிறான் என்பதை, ரமா, சுந்தரி, மாலா ஆகியவர்களைத், தவறாக எண்ணித் துப்பாக்கியும் கையுமாக அலைந்து கொலை காரனாகிப் பின் தன்மனைவி சுந்தரியே தூயவள் என அவளைச் சேர்ந்து வாழும் வாழ்வாகக் 'கிளை ஒன்று கிளிகள் மூன்று'[34] என்ற உருவகத்தலைப்பின் அமைப்பாக முல்லைக்கரை கணேசனின் நாவல் அமைந்துள்ளது.

எதிர்பாராத விபத்தில் திருமண முடிவு மாறும் போது ஒருவனைக் காதலித்த இந்திரா, மனோகர் என்பவனை மணக்கு மாறு நிலை ஏற்படுகிறது. முதலிரவில் அவனிடம் தன்னிலையைச் சொல்லிவிட்டாள். அதன் பயனாக அவனால் புறக்கணிக்கப்படு கிறாள். அவள் பம்பாய் சென்று தன் காதலனுக்குப் பிளாஸ்டிக் கால் வைக்கும் மருத்துவமனையைத் தேடும்போது பரத்தமை இல்லத்தார் கையகப்பட்டுக் கொலைகாரி என்ற பட்டத்துடன் நிற்கிறாள். காதலன், கணவன், பெற்றோர் ஆகியவர்கள் அவள் தூய்மையை நிலைநாட்ட முயலும்போது நீதிமன்றமும் அவளுக்கு துணை நிற்கிறது. இப்படித் துன்பப்படும் பெண்ணுக்கு அன்பு

---

32 என்றாவது ஒருநாள், சுஜாதா, குமரிப்பதிப்பகம், நாகபட்டினம், ஜனவரி, 1981.

33. பெண்+பாசம்=கணவன், கௌரிராஜன், சக்திபதிப் பகம், சென்னை-95, ஏப்ரல், 1981

34- கிளை ஒன்று கிளிகள் மூன்று, முல்லைக்கரை கணேசன், மருதமலையான் பதிப்பகம், சென்னை, ஜுன், 1981.

காட்டத் 'தேவை ஓர் உள்ளம்'[35] என்று உணர்த்துகிறது சி.என். நாச்சியப்பனின் படைப்பு.

நிலவுடைமைச் சமுதாயத்தில் கள்ளிப்பாக்கம் போன்ற கிராமங்களில் இன்னும் பண்ணையாளரின் பிடிப்பு நிலைத்து நிற்கின்றது. பண்ணையார் பரமசிவம் ஏராளமான நிலத்தின் சொந்தக்காரராக இருந்ததால் பங்கஜம் கிழவியின் மூன்று இளம்பெண்களாம் பூங்காவனம், செண்பகம், சாமந்தி ஆகியோரைத் தன் வெறிக்கு இரையாக்கிப் பிணமாக்கிவிடுகிறார்.

அவர் மகள் அனுவோ புதுமை நெறியை அறிந்து தொண்டர் தேசதாசனை மணக்க விரும்புகிறாள். காலத்தின் மாற்றத்தால் பண்ணையார் கொடுமைகளை மக்கள் அடக்க, அவர் மகள் நிலத்தை எல்லாம் அந்தஊர் மக்களே பெறும்படி எழுதிவைக்கிறாள். இவ்வாறு நிலவுடைமைக் கொடுமை நீங்க மனமாற்ற வழியை ஆர்.ஈ. சந்திரசேகரனின் 'ஏரிக்கரையில் சில ஊமைக் குயில்கள்'[36] என்ற இந்த நாவல் எடுத்துரைக்கிறது.

வானொலி நாடகமாக ஒலிபரப்பப் பெற்ற 'பொன்மான்' நாவல் வடிவில் 'சீதம்மா'[37]வாகத் தருகிறார் எஸ். குலசேகரன். மனித சமுகத்தில் உயர்வு தாழ்வு என்ற சாதி அமைப்பில் பல்வேறு போராட்டங்கள் நிகழ்கின்றன. அதில் ஊராட்சித் தலைவர் பினாகபாணி தோட்டிப் பெண் சீதம்மாவை விரும்புகிறார். மனைவியை இழந்த அவருடைய ஆசை தவறு என்று மற்றவர் கூறும்போது சீர்திருத்த உள்ளம் படைத்தவர்கள் அதனை ஏற்றுக்கொள்வர்.

சீதம்மாவின் மகள் வில்லியும், பினாகபாணியின் மகன் டாக்டர் அருண் பிரசாதும் காதலித்து மணம் செய்து கொள்ள விரும்புவதை அறிந்த சீதம்மா பினாகபாணியின் குடும்ப மதிப்பைக் கருதி வேலையை விட்டும் பினாகபாணியின் அன்பைத் துறந்தும் வெளியேறுகிறாள்.

---

35. தேவை ஓர் உள்ளம், சி.என். நாச்சியப்பன், தமிழ்ச் செல்வி நிலையம், மயிலை, சென்னை, ஜுன், 1981
36. ஏரிக்கரையில் சில ஊமைக்குயில்கள், ஆர். ஈ. சந்திர சேகரன், நர்மதாபதிப்பகம், சென்னை-17, டிசம்பர், 1981.
37. சீதம்மா, எஸ். குலசேகரன், அமிழ்தம் பதிப்பகம், நார்த்தாம் பூண்டி, வ.ஆ. ஏப்ரல், 1981.

இந்நிலையில் இந்த நாவல் உணர்த்தும் கலப்புமணம் ஒரு வகையில் தியாகத்தின் அடிப்படையில் உருவானாலும் மற்றொரு வகையில் காதல் மணமாக உருவெடுக்கிறது. குடும்ப மதிப்புக்கும் கலப்புமணத்திற்கும் இடையே செய்து கொண்ட ஒரு இடை ஒப்பந்தமாக இந்த நாவல் அமைகிறது.

பெண்ணை எப்படி வேண்டுமானாலும் கையாளலாம் என்ற கொள்கைக்கிணங்கப் படிக்கும் போதே புவனாவை அவள் சித்தி துரைசாமி என்ற பெண் பொறுக்கிக்கு மணம் செய்து வைத்ததுடன் அவனுக்கு ஜாக்பாட்டில் பணம் விழுந்தபோது தன் மகள் சுந்தரியையும் அவனுடன் சேர்க்கிறாள். புவனா வீட்டை, விட்டு வெளியேறி நன்கு முன்னேறித் தன் மகளை டாக்டருக்குப் படிக்க வைக்கும் போது அப்பெண்ணைத் தன் மகனுக்கு மணம் செய்ய வந்த டாக்டர் நீலகண்டன் கன்னிகாதானம் செய்யும் போது தந்தையும் உடனிருக்க வற்புறுத்துகிறார். அவ்வாறு செய்யுமாறு தன் கணவனிடம் சென்று புவனா வேண்டியபோது எல்லோருடைய முன்னிலையில் வெட்கமில்லாமல் தன் படுக்கைக்கு வர அவளை அவன் அழைத்தபோது புவனா மகள் அதனை வெறுத்துத், தன் தாயை அழைத்துக் கொண்டு செல்லும் போது இந்த உலகம் பெண்ணை இன்பப் பொருளாகவே எப்போதும் பயன்படுத்த நினைக்கிறது. அதற்குப் பணமே எல்லா ஆற்றலையும் தருகிறது. அதன் வேகத்தில் மனிதன் வெட்கங் கெட்டு விலங்காக மாறுகிறான் என்பதைச் சிவசங்கரியின் 'வெட்கங் கெட்டவர்கள்'[38] காட்டும்.

ரமணி சந்திரன் 'வெண்மையில் எத்தனை நிறங்கள்[39] என்ற நூல் பெண் மீது ஆண் கொள்ளும் சந்தேகத்தால் திருமணத்திற்குப் பின்னால் எவ்வளவு கொடுமைகளை ஒரு பெண் அனுபவிக்கிறாள் என்பதைக் காட்டுகிறது.

சியாம் தன் தாய் தவறு செய்ததாக எண்ணி எல்லாப் பெண்களையும் வெறுக்கிறான். தான் மணந்த சசியை எல்லா வகையிலும் துன்புறுத்தி அதில் இன்பம் கண்டான். இறுதியில் பிழையை உணர்ந்து தாயிடம் மன்னிப்புக் கேட்டு நல்வாழ்வு வாழ

38. வெட்கங் கெட்டவர்கள், சிவசங்கரி, வானதி பதிப்பகம், சென்னை-17, ஆகஸ்டு, 1981.
39. வெண்மையில் எத்தனை நிறங்கள், ரமணிசந்திரன், அருணோதயம், சென்னை-14, பிப்ருவரி, 1981

முயலும் முயற்சியைக் காட்டுகிறது இக்கதை. உரையாடல் வாயிலாகவே எல்லாச் செய்திகளும் செல்வதால் நாடகத் தாக்கம் இதில் மிகுதியாகப் படுகிறது.

பெண்களுக்கு வாய்க்கும் கணவன்மார்களால் அவர்களின் வாழ்க்கை நல்லதாகவும் கெட்டதாகவும் அமையும் நிலையில் இன்றைய உலகம் செல்கிறது. கோமகளின் 'பெண் ஒரு மலர்'[40] இதனை விளக்கும் நாவலாக வெளிவந்துள்ளது. இதில் காணும் மாலா பிரியா ஆகிய இருவர் வாழ்க்கை இதற்கு எடுத்துக்காட்டு. அக்கா பிரியாவின் கணவன் குமார் இன்ப வேட்டையில் நாட்டமுள்ளவனாக இருந்தது மட்டுமல்ல பணக்காரர்க்குப் பெண்களை விருந்தாக்கும் கறைபட்ட செயலிலும் ஈடுபட்டிருந்தான். அதற்குத் தன் மனைவியின் தங்கை மாலாவையும் பலியாக்கத் துணிந்தான். ஆயினும் அவனால் இருளில் தள்ளப்பட்ட மற்றொரு பெண்ணால் கொலை செய்யப்படுகிறான். அதனைக் கேட்ட பிரியா கணவன் மறைவைத் தாங்காமல் சாகிறாள்.

இதற்கு நேர் மாறானது மாலாவின் அன்பு வாழ்க்கை. அவள் கணவன் வாசு எப்போதும் தன் மனைவி மீது அன்பைச் சொரிந்து எவ்வகை ஐயத்திற்கும் இடம் கொடாமல் நல்வாழ்வு வாழ்கிறான். இந்த இரு வேறு பட்ட முரண்பாடுகளைக் காட்டும் போது குமாரின் கொடுமை இக்காலப் பெண்டிர் வாழ்வை எவ்வாறு நஞ்சாக்குகிறது என்பதை வெளிப்படுத்துவதில் கோமகள் வெற்றி பெற்றுள்ளார்.

பெற்றோர்கள் இறந்தவுடன் அக்குடும்பத்துப் பிள்ளைகள் ஆதரவற்றுத் துடிக்கும் போது உறவினர்கள் என்ற பெயரில் அக்குழந்தைகளைக் காப்பாற்ற வருபவர்களால் என்னென்ன கொடுமைகள் உண்டாகின்றன என்பதைத் 'தான், தன் சுகம்'[41] என்ற நாவலில் சிவசங்கரி காட்டுகிறார். தனம் என்ற பெண் தன் தம்பியின் எதிர்கால நல்வாழ்வுக்காகத் தன்னையும் தன் தம்பியையும் பாதுகாத்து வந்த மாமனிடம் தன் கன்னித் தன்மையைப் பலியிட, அவள் மணமாகு முன்னரே தாயாகிறாள். தம்பிக்காக உண்மையை மறைத்த அவளுக்கு எல்லாம் எதிரா

---

40. பெண் ஒருமலர், கோமகள், வானதி பதிப்பகம் சென்னை 17, ஜூலை, 1981
41. தான், தன் சுகம், சிவசங்கரி, வானதி பதிப்பகம் சென்னை, மே, 1981

கின்றன. கடைசியில் தம்பியும் அவளைக் குழந்தையிடமிருந்து பிரிக்க நினைத்த போது உலகையே வெறுத்துக் கடலைப் புகலிடமாகக் கொள்கிறாள் தனம்.

பொதுவாக இன்றைய சமுதாய நிலையில் பெற்றோரின் பாதுகாப்பற்ற நிலையில் வயதான பெண்கள் படும் துன்பத்தையும் உடன் பிறந்தவர்கள் கூடத் தம் சுகத்தை மட்டுமே கருதுவதால் தமக்காக உதவிய உடன் பிறப்புகளைக் கூட மதிக்காமல் தூக்கி எறியும் அவலத்தையும் அறிவதற்கு இது ஒரு வாயில்.

ஊன முற்றோர் ஆண்டின் விளைவாக அவர்கள் விடுதியிர பணிபுரியும் சம்பாவையும் இணைத்துக் குழந்தைப் பேறு இல்லாத குறையைச் சுட்டும் வகையில் அமைந்துள்ளது பி. எல். ராஜேந்திரனின் 'புன்னகை ரோஜாக்கள்![42] குழந்தை பற்றிப் பாடிய கண்ணதாசனின் பாடல் வரிகளை நாவலாசிரியர் இந்த நாவல் பகுதியின் தலைப்புகளில் தந்துள்ளார்.

செட்டி நாட்டுமரபைக் காட்டும் பெட்டகமாக அமைந்துள்ளது. கண்ணதாசனின் 'ஆச்சி'[43] நாகரிக வளர்ச்சியில் அத்தகைய சீதை ஆச்சியின் பரம்பரையை இழந்து வரும் நிலையை நன்கு வெளிக் காட்டியுள்ளார் கவிஞர்.

ஒரு காலத்தில் கட்டுப்பாட்டுக் கெதிராகப் பினாங்கு சென்று திரும்பிய ஆச்சி தண்ணீர் மலை, இராமநாதன், பெரியகருப்பன் ஆகிய மூன்று மக்களின் திருமணத்தால் படாதபாடு படுகிறாள். முதல் மகள் தெய்வயானையை மணந்து அவள் எதிர்பாராத விபத்தில் கருப்பை சிதைய, மறுபெண்ணை அவனுக்காகப் பார்க்கும் தாய் மனத்திற்குத் தெய்வயானையின் உறவுப் பெண் அன்னக் கொடியின் இணைப்பு பேரிடியாக அமைகிறது.

இராமநாதன் மனைவி மெய்யம்மை தன் குடும்பப் பணப் பெருக்கத்தாலும் படிப்பாலும் மாமியாருக்கு மதிப்பளிக்காமல் செய்வது முதிய உள்ளத்திற்குப் பெருவேதனையைத் தருகிறது.

---

42. புன்னகை ரோஜாக்கள், பி. எல். ராஜேந்திரன், ரேவதி பதிப்பகம், சென்னை 35, 1981
43. ஆச்சி, கண்ணதாசன், வானதி பதிப்பகம், சென்னை 17, ஜனவரி, 1981

கடைசி மகன்தன் திருமணத்தின் முன்பே சரோஜா என்ற தாசியை ஏற்று ஒரு குழந்தைக்கும் தந்தை ஆகிறான். கடைசியாகக் கோவிலில் முதல் மகன் தண்ணீர் மலைக்கும் அன்னக்கொடிக்கும் திருமணம் நடந்ததால் ஆச்சி நோயில் படுத்து மறைகிறாள். அவள் மறைவில் பழைய தலைமுறையின் மறைவைக் கவிஞர் உருக்கமாகக் காட்டுகிறார். நகரத்தார் பண்பாடுகளை அறிய உதவும் நாவல் இது.

கண்ணதாசன் தான் எழுதத் தொடங்கிய காலத்தில் எழுதியது 'மனம் போல் வாழ்வு'[44] இரத்த வேகத்தில் சில பாத்திரங்கள் படைக்கப் பெற்றதாகவும் அவை தேசியத்திற்கு விரோதமாக உள்ளதாகவும் அவரே குறிப்பிடுவார். தேசத் தொண்டர் சிறையிலிருந்து விடுதலையாகித் தன் சொந்த ஊர் வரும்போது வழியில் சந்தித்த பெண், அவள் பட்ட துன்பம் அவள் மறைதல் ஆகிய அடுக்கு எண்ணங்கள்—வழக்கு மன்றம் கள்ள நோட்டுச் செய்தி, தம் தங்கையின் ஏமாற்றம், நாடகச் சூழல் இப்படிப் பல்வேறுபட்டவற்றையும் நிகழ்ச்சிகளையும் உண்மைகளையும் மனம் போன போக்கில் கவிஞர் எழுதியுள்ளார்.

தொடக்க காலப் படைப்புகளில் காணும் பல குறைகளின் நிலையமாக இது உள்ளது. நடை நயம் ஒன்றே நாவலின் உயிர்த் துடிப்பாக ஓடுகிறது.

நடுத்தரக் குடும்பத்தார்க்கு வீடு வேண்டுமென்ற ஆசையில் குளத்திற்குள்ளேயே வீட்டைக் கட்டி அல்லல்படும்போது வீட்டிலும் ஒரு புதிய குழப்பம் ஏற்படுகிறது. ஓவியத்தில் திறமை பெற்றிருந்த மகள் உஷா பிழை செய்தவளாகி ஒரு குழந்தைக்குத் தாயாகும் போது ஓவியர் சுந்தரம்தான் அதன் தந்தை என நினைக்கின்றனர். ஆனால் ஓவியரோ குற்றவாளி தான் அல்ல எனக் கூறி உஷாவின் களங்கத்தைப் போக்கத் தானே அவளுக்குக் கணவனாகிறான். வீட்டுச் சூழலில் நடுத்தர மக்கள் படும் துன்பத்தை நன்கு வெளிப்படுத்துகிறது. புலவர் நாகலிங்கத்தின் 'தனி வீடு'[45]. வீடு என்பது சிக்கல் நிறைந்த குடும்பத்தின் வெளிப்பாடாக அமைகிறது. குடும்பத்தலைவன் படும் வேதனையை இந்த நாவல் ஓரளவு வெளிப்படுத்துகிறது.

---

44. மனம் போல வாழ்வு, கண்ணதாசன், வானதி பதிப்பகம் சென்னை 17, ஜுலை, 1981
45. தனி வீடு, புலவர் நாகலிங்கம், அம்பாள் பதிப்பகம், சென்னை-98, டிசம்பர். 1981

பெரிய விஷயங்களை எழுதவேண்டும் என ஆசைப்படும் கண்ணதாசனுக்குப் பொழுதுபோக்கு விஷயங்களை எழுதுவதற்கான வாய்ப்புகள் அதிகம் என்பதை அவரே 'ரயில் டிக்கெட்டு' என்ற தலைப்பில் 'சிங்காரி பார்த்த சென்னை, நாவலுக்கு எழுதிய முன்னுரையில் குறித்துள்ளார்.[46] சினிமாத் துறையில் அவர் பெற்ற அனுபவம் அளவிடுதற்கு அரியது. பரத்தமைத் தொழிலால் பணம் பறிக்கும் வாய்ப்பு மிகுதியாக உள்ள படத் தொழிலில் குடியும் கும்மாளமும் பண ஓட்டமும் எந்த அளவு மக்கள் வாழ்க்கையை இருளண்டச் செய்கிறது என்பதைக் காட்டுகிறார் கவிஞர்.

சென்னைக்குப் பிழைக்க வந்த பாப்பாயி நடிகை வீட்டிலும் படத்தயாரிப்பாளர் வீட்டிலும் வேலைக்காரி ஆகிறாள். நடிகையர் வீட்டில் காணும் கொடுமைகள் கொலைகள் போன்றவற்றைக் கண்ணதாசன் மேலோட்டமாகக் காட்டத் தவறவில்லை. வாய்ப்புக் கிடைத்ததால் பாப்பாயி நடிகை ஆகிப் பாரததேவி ஆனாள். கிடைத்த பணத்தை வேண்டுமளவு திட்டமிட்டு எதிர்கால வாழ்க்கைக்குக் காப்பீடு செய்தும், பிறர்க்கு உதவியும் ஓரளவு பணமும் புகழும் வந்ததும் படவுலகை விட்டு விட்டுத் தன் வெள்ளனூர்க்கே திரும்புவதாகக் கற்பனை செய்கிறார் கவிஞர் அவர் பார்த்த பல திரை உலக வடிவங்கள் இதில் மிதக்கின்றன. எளிய பால் உணர்வுச் சுண்டுதல்களுக்கும் இதில் ஏராளமான இடமுண்டு.

மதுவிலக்குப் பற்றி ராஜாஜி காலத்திலிருந்து தமிழில் பல இலக்கியப் படைப்புகள் தோன்றியுள்ளன. அந்நெறியில் சிவசங்கரி எழுதிய 'ஒரு மனிதனின் கதை' என்ற நாவல் வெளிவந்துள்ளது.[47] நடுத்தரக் குடும்பத்தைச் சார்ந்த தியாகு குடிக்கும் பழக்கத்தில் ஆட்படுதற்குரிய முற்கால வாழ்க்கையைச் சுட்டிக் காட்டிப் பின் அதன்வாயிலாக மிக இழிந்த நிலைக்குச் செல்கிறான் பின்னர் அவன் தன் நண்பன் நாணுவின் துணையாலும், குடிப் பழக்கத் தீமையிலிருந்து காப்பாற்ற ஆல்கஹாலிக்ஸ் அனானிமஸ் அமைப்பைச் சார்ந்த ராஜனின் உதவியாலும் புதுவாழ்வு பெறப் போகும் நம்பிக்கையை ஊட்டும் நாவல் இது.

---

46. சிங்காரி பார்த்த சென்னை, கண்ணதாசன், வானதி பதிப்பகம், சென்னை-17, ஏப்ரல், 1981.
47. ஒரு மனிதனின் கதை, சிவசங்கரி, ஆனந்த விகடன் பிரசுரம், சென்னை, ஏப்ரல், 1981.

தந்தையின் கொடுமை, மனைவியின் புறக்கணிப்பு, தனக்குள்ள சிக்கல்களைத் தீர்க்க மயக்கப் பொருளை நாடும் சிறுமனம் ஆகியவற்றை எல்லாம் காட்டிக் குடியில் சிக்கியவர்களைத் தடுக்க முயலும் மருத்துவ முயற்சிகளையெல்லாம் விளக்கமாக எடுத்துரைக்கிறது இந்த நாவல். குடிகாரன் படும் துன்பம், அவன் சமூகத்தில் படும் தாழ்ச்சி அவன் குடும்பச் சீரழிவு ஆகியவை பற்றி நன்குணர்ந்து அத்தகைய தீய குடிப்பழகத்திலிருந்து விடுதலை வேண்டும் முயற்சியைத் தூண்டுகிறது.

இந்த நாவல் சிறு சிறு தொடர்களையே பயன்படுத்தியதில் அழுத்தமான உணர்வுகளை உண்டாக்குவதில் வெற்றி பெற்றுள்ளது. மனைவி நிலையில் கங்காவும், நண்பன் நிலையில் நாணுவும் நாவலில் தனிச் சிறப்புடன் விளங்குகின்றனர். குடிகாரனின் உண்மை நிலையை உள்ளவாறு உணர்த்துவதில் தியாகுவின் படைப்பு, தனியிடம் பெறுகிறது. மருத்துவச் செய்திகளை வேண்டும் அளவு தொகுத்துக் கொடுத்துள்ள முயற்சி புது முயற்சியாகும்.

நகரவாழ்க்கையில் பெரும்பாலான மக்களுக்கு நிலையான வருமானம் இல்லை. நிரந்தரமான குடியிருப்பு இல்லை; இந்நிலையில் நிலையான நெறியும் பண்பும் உண்டு என்பதை ஜெயகாந்தனின் 'ஒவ்வொரு கூரைக்கும் கீழே'[48] என்ற சிறு நாவல் உணர்த்துகிறது.

முறையான உறவில் ஷம்ஷுதீன் மாலதி உறவு ஏற்படவில்லை ஒருவகையில் மணமானவனுடன் மணமாகு முன்னர் ஒரு பெண் காதல் உறவு கொள்ளலாமா என்ற கேள்விக்கு விடையாக அது நெறியிலிருந்து 'கீழே விழுதல்' என்ற விடை கிடைக்கிறது. ஆயினும் அதைத் தாங்கிக் கொள்வது போல் ஆசிரியர் பாக்கியம் தம் வயதான காலத்திலும் ஆண் துணையைப் பாதுகாப்பதற்காகத் தேடிக் கொள்ளும் புதுமை நெறியை உணர்ந்து மாலதியும் சிவகுருநாதனை மணக்கத் துணியும்போது பழைய உறவு வழிவிடவும் புதிய உறவு கைகொடுக்கவும் முடிகிறது.

ஏமாற்ற நினைக்காமல் வெளிப்படையாகக் கூறும்போது நம்பிக்கை, சத்தியம் என்பவை ஒவ்வொரு கூரையின் கீழே வெளிச்சம் தருகிறது என்ற உண்மையை இதன் வாயிலாக அறிகிறோம்.

48. ஒவ்வொரு கூரைக்கும் கீழே, ஜெயகாந்தன், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, நவம்பர், 1981

குடும்பக் கட்டுப்பாடு என்று நாடெங்கும் பறையறைந்து அரசாங்கம் பரப்ப நினைக்கும் காலத்தில் சுயகட்டுப்பாடுவேண்டும் என்ற கொள்கையின் அடிப்படையில் எழுந்துள்ளது ஜெயகாந்த னின் 'கரு'[49] குத்துச் சண்டை வீரர் கந்தசாமி, சரஸா திருமண நிகழ்வை உருவாக்கும்போது பகுத்தறிவு பேசுவோரும் பெண் ணின் உரிமையைக் கருதாமல் உடலின்ப வேட்கையைத் தணித்துக் கொள்ளவும் அதற்கான வழியை வஞ்சகமாக அடையவும் முயலும் போக்கினைப் பல குடும்பங்களின் பின்னணியைக் காட்டுவதின் வாயிலாக வெளிப்படுகிறது.

உடல் வலிமை, உள்ள வலிமை என்ற இரண்டின் அடிப்படை யில் சுயகட்டுப்பாடு அமைவதின் சிறப்பைக் கந்தசாமி வாயிலாக உணர்த்துகிறார் ஆசிரியர். இன்றைய வாழ்க்கைச் சூழலில் அரசாங்கமே உணரும் வகையில் இந்தியாவின் செல்வமும் பலமும் அதன் மக்கள் தொகையே. அந்தச் செல்வங்களை அனாதையாக நிறுத்தியிருப்பது தனியுடைமை அமைப்பு. இந்த மக்களை ஒரு குடும்பமாக ஆக்குதற்குச் சமதர்ம சமுதாய அமைப்பே உதவும் என்ற உண்மையைப் புலப்படுத்துகிறார் ஜெயகாந்தன்.

தமிழில் சிறு நூல்போன்ற இதழ்கள் பெருகியுள்ளன. சும்மா புரட்டி எறியத்தக்கவையல்லாத நிலையில் தகுதியும் செம்மையும் கொண்ட இலக்கியம் வளரும் நம்பிக்கையும் உள்ளது என்பதை மனத்தில்கொண்டு எழுதும் எழுத்தாகச் சில வெளிவருகின்றன. சமூகவாழ்க்கையில் காகிதப்பிசாசின் பேயாட்டத்தை எதிர்க்க விரும்பும் கொள்கையை மனத்தில்கொண்டு அதற்கெனக் கதைக் கரு, மாந்தர் ஆகிய எல்லாம் படைத்துத் தற்கால இலக்கியச் சீரழிவுக் கும்பலுக்கு நடுவே நிகழும் நாகரிக யுத்தத்தின் உருவக மாக ஜெயகாந்தனின் 'கரிக்கோடுகள்'[50] வெளிவந்துள்ளது.

புகைப்படக்காரரும் கன்னட எழுத்தாளர் கங்குபாயும் திருமணம் செய்துகொண்ட வாழ்வில் எழுதுவது கூடாது என்று கூறியதன் விளைவாக அவள் அவனைப் பிரிந்து சென்றாள். அப்போது கன்னட எழுத்தாளரான மாதவராவ் அவன் வீட்டுக்கு விருந்தாளியாக வந்தபோது அவன் வாழ்க்கைபற்றி விரிவாகப்

---

49. கரு, ஜெயகாந்தன், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை ஏப்ரல், 1981,
50. கரிக்கோடுகள், ஜெயகாந்தன், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, மே, 1981,

பேசினான். தூய அன்பு வாழ்க்கை வாழ்ந்தது பற்றி அவன் பெருமைப்பட்டான். திரும்பி வந்த கங்கு கணவனையும் மாதவ ராவையும் கண்டு, விருந்தாளி முன்பு ஊடலை மறந்தாள்.

பத்திரிக்கையின் வியாபார புத்திக்குக் கங்கு பலியாகக்கூடாது என்று மாதவராவ் எழுதியதுதான் அவர்கள் ஊடலுக்கும் பிரிவுக்கும் காரணம். ஊடல் உணர்ந்த பின் உண்மை அன்பு பூப்பது போல் 'கரிக்கோடுகள்' உண்மை இலக்கியம் உண்மை எழுத்தாளனிடம் என்றும் அன்புகொண்டு நல்லகமாக அமைத்துக் கொள்ளும் என்பதைக் காட்டுகிறது. முதியோர் காதலின் இழையும் மெல்லுணர்வுகளை மிகச் சிறந்த முறையில் எடுத்துணர்த்துகிறது

நாஞ்சில் நாடனின் 'மாமிசப் படைப்புகள்'[51] தென்தமிழகத்தின் மருத வாழ்வை அப்படியே படம் பிடித்துக் காட்டுகிறது. பண்ணைக்காரர்களாம் கடுவாய் கங்காதரம் பிள்ளை, விக்கிரம சிங்கம்பிள்ளை ஆகியோரின் அதிகாரமும் அதை எதிர்க்கும் கந்தையா போன்றவர்களின் உழைப்பு உருக்குலைவதையும் நன்கு எடுத்துக் காட்டுகிறது. தங்கள் உழைப்பின் பயனைத் தாங்களே பெறவேண்டும் என்று முயன்ற கந்தையாவின் கூட்டம் புறம்போக்கு நிலத்தைப் பயிரிட்டுத் தலைஎடுப்பதைக் கடுவாய்க் கூட்டத்தார் பொறாமல் எளியவர் வாழைத் தோட்டத்தை அழித்ததுடன் அவர்களின் வழிகாட்டியாக நின்ற கந்தையாவையும் 'மாமிசப் படைப்'பாக மாற்றினர் என்று காட்டும் போது சிற்றூர்களில் வேரூன்றி நிற்கும் நிலவுடைமை ஆதிக்கத்தை நாஞ்சில் நாட்டுப் பின்னணியில் மிக அழகாகக் காட்டுகிறது. இந்த நாவல் இயல்பான நடை ஓட்டமும் நாஞ்சில் நாட்டு மக்களின் வழக்கு மொழியும் இதன் அழகுக்குத் துணையாகின்றன. சிற்றூர்களில் காணும் மூடநம்பிக்கை நடப்பியலோடு ஒட்டி வெளிப்படுகிறது.

சமுதாயத்தை நேராகச் சென்று தாக்கி அதனை மாற்றி அமைக்கவல்ல வலிய கூறுகளுள் இலக்கியம் ஒன்று என ஏற்காமல் மாற்றுக்குரிய, மாற்றத்தை விரைவுபடுத்தும் ஆற்றலாக இலக்கியத்தைக் கொள்கின்ற இலங்கை எழுத்தாளர் தெணியான் 'கழுகுகள்'[52] என்ற நல்ல நாவலை எழுதி அதனைத் தமிழகத்தில் வெளியிட்டுள்ளார்.

---

51. மாமிசப் படைப்பு, நாஞ்சில்நாடன், அன்னம் வெளியீடு சிவகங்கை, நவம்பர், 1981.
52. கழுகுகள், தெணியான், நர்மதா பதிப்பகம், சென்னை-17 நவம்பர், 1981.

சுரண்டல்கள், ஊழல்கள், சமுதாயக் கொடுமைகள் ஆகிய எல்லாம் மக்கள் மனத்தில் ஆழப்பதிய வேண்டும் என்ற நோக்கில்' நீரழிவு நோய் வாய்ப்பட்ட தரகர் ஆறுமுகத்தார் வாழ்வின் இறுதிக் கூற்றினை விளக்க முற்பட்டு அத்தீமைகள் பற்றிப் படிப் போர் தெளிவாகச் சிந்திக்க வழி செய்கிறார். இரண்டாம் தாரமான செல்லம்மாள் தன் கணவனின் சொத்தும் நிலமும் தன் கைக்குக் கிடைக்கவேண்டும் என்பதில் எவ்வளவு விழிப்பாக இருக்கிறாள் என்பதை நன்கு காணமுடிகிறது.

குறிப்பாக யாழ்ப்பாணச் சமூக அமைப்பில் அதன் கட்டுக் கோப்புகள் பணம் என்ற கருவியால் எவ்விதம் சிதைகிறது என்பதை இந்நாவலால் நன்கு அறிய முடிகிறது. நோயாளியாக வந்தவனை மருத்துவமனையிலுள்ள மருத்துவர், உயர்மருத்துவர் என்ற நிலையிலிருந்து அம்மருத்துவர்களுக்கு என அமைந்த இடைத்தரகர்கள், கண்காணிகள், காவலாளிகள் போன்றவர்கள் பிணந்தின்னிக் 'கழுகு' களாய்ப் பறந்து திரிவதை ஒவ்வொரு நிலையிலும் உன்னிப்பாய்ப் பார்க்கமுடிகிறது. நோயாளி இறந்த பின்னும் சமுதாயம் அத்துயர நிகழ்ச்சியில் கண்ணீர் சிந்துவதைக் கூட ஒரு சடங்காக்கி அதில் பணம் கிடைக்காதா என ஏங்கிக் கிடக்கும் பெருமூச்சை உணர்கிறோம்.

பொதுவாகத் தமிழகத்திற்கு வெளியே வாழும் ஈழநாட்டுத் தமிழர்களின் அன்றாட வாழ்வின் குறுக்கு வெட்டுக்காட்சியைக் காணவும் இன்றைய சமுதாயப் போக்கில் தவிர்க்க முடியாத குடும்பச் சிதைவுகளின் வழியை அறியவும் 'கழுகுகள்' துணை செய்கிறது.

புதிய கருவைத் தேர்ந்தெடுத்துக் கதைகளை உருவாக்குவது தமிழ் நாவல் உலகில் அரிய செயலாகவே உள்ளது. அத்தகைய அரிய செயல்களில் ஒன்றாக ர. சு. நல்ல பெருமாளின் 'நம்பிக்கைகள்'[93] விளங்குகிறது. கோவிலிலுள்ள சிலைகளைத் திருடி விற்கும் செயலைத் தொடர்ந்து இன்றைய செய்தித்தாள்களில் படிக்கிறோம். அச்செயலில் ஈடுபட்ட சோமையா என்ற இளைஞனின் வாழ்க்கையைக் கொண்டு தமிழகத்தில் இன்றுள்ள கோயில்களின் நடைமுறையைத் தெள்ளத் தெளிவாகக் காட்டியுள்ளார் ஆசிரியர்.

---

93. நம்பிக்கைகள், ர. சு. நல்லபெருமாள், கலைமகள், சென்னை 4, ஜனவரி, 1981

கோயிலில் பூசை புரியும் அந்தணர் சமூகம் எப்படி நாளும் நாளும் சீரழிந்து வருகிறது என்றும், அது படும் பாடு எத்தகையது என்றும் கூறுகிறது. சிக்கலான பிடிப்புள் சிக்கிய அச்சமூகத்தைச் சார்ந்த ஆணும் பெண்ணும் எத்தகைய துன்பம் அடைகின்றனர் என்பதைக் கூறும்போது பிரம்ம சாஸ்திரி, அவர் மகன் சங்கரன் ஆகியோரின் உயர்ந்த பண்புகளையும், அவர்கள் செய்த சிறு தவற்றினை உணர்ந்து துடிக்கும் நிலைகளையும், தத்தமக்குரிய முறையில் குறை நீக்க முயலும் வழிகளையும் காணும்போது அந்த சமூகத்தின் முழு வடிவம் புலப்படுகிறது.

கோவில் நிர்வாகக் குழுவில் தெய்வ நம்பிக்கை உள்ளவர்கள் செய்யும் பிழைகளையும், நம்பிக்கையில்லாதவர்கள் அரசியல் செல்வாக்கினால் அக்குழுவினுள் புகுந்து செய்யும் பிழைகளையும் காட்ட அர்ச்சனைச் சீட்டு, கோவில் கடைகளை வாடகைக்கு விடும்முறை, கோவில் நிலக்குத்தகையைப் பெறும் வழி ஆகியவற்றில் கையாளும் செயல்கள் என்பவை உண்மை நிலையை உணர்த்தும் வாயிலாக உள்ளன. பெரும்பாலும் எல்லா நிகழ்ச்சிகளுமே வணிக நோக்கில் நிகழ்ந்து கோவில்களின் நடைமுறைகளையும், நோக்கத்தையும் குலைக்கும் காட்சியை இந்நாவல் நன்கு காட்டுகிறது.

இதில் பேசாமல் சிரித்துக் கொண்டிருக்கும் கோட்டிசாமியின். இருப்பு நிலையைக் காட்டும் வகையிலே திருமூலர் பரப்பிய நம்பிக்கை ஒளிக்கீற்றாக நாவலின் ஊடே செல்லுவதை உணர முடிகிறது. சிற்சில இடங்கள் ஆசிரியரின் பொதுவுடைமைக்கு எதிரான கருத்துக்கள் தென்படுகின்றன. அது அவர்தம் தனி நம்பிக்கையாக நாவலில் வெளிப்படுகிறது.

தொழிற்சாலை வாழ்க்கையை மையமாகக் கொண்டு எழுந்த தமிழ் நாவல்கள் மிகமிகக் குறைவு. அவர்கள் வாழ்வினைக் கூரிய பார்வை கொண்டு விளக்கிய நாவலாக பாலகுமாரனின் 'மெர்க் குரிப்பூக்கள்' விளங்குகிறது.[4]

கணேசன் சாவித்திரி அன்பு வாழ்க்கை தொழிற்சாலையில், ஏற்படும் குழப்பங்களால் சிதைகிறது. எனினும் சாவித்திரியின் உறுதியால் அவள் குடும்ப மதிப்பு காப்பாற்றப்பெறுவதுடன் தொழிற்சங்கவாதி கோபாலனுக்கும் அடைக்கலம் கொடுப்பதால் அது பெரும் அளவுக்கு உயர்கிறது.

---

4. மெர்க்குரிப்பூக்கள், பாலகுமாரன், வானதி பதிப்பகம் சென்னை 17, ஏப்ரல், 1981.

சங்கரன் தொழிற்சாலையிலும் வீட்டிலும் பெரும்பணி செய்யாவிடினும் சியாமளியைக் கடத்திச் செல்வதில் தோல்வி அடைந்தாலும் வேலை நிறுத்தக் காலத்தில் தொழிலாளரின் உண்மைத் துணைவனாகி மற்றொரு பணியாளரின் துன்பத்தைப் போக்க அவருடைய மகளைத் தக்க சமயத்தில் மணந்து அவர் மானத்தைக் காப்பாற்றுகிறான்.

தொழிலாளி முதலாளி உறவில் அன்பு படர மறுபடியும் வாழ்க்கை இயல்பாகச் செல்வதற்கான சூழல் ஏற்படுவதை நல்லுணர்ச்சியுடன் நடத்திச் செல்கிறது இந்த நாவல். அறிவுக் கரசன் அவன் பயன்படுத்திய ஸ்டிலட்டோகத்தி சமுதாயத்தின் கொடுமையை வெளிப்படுத்தும் போது தண்டபாணி, சங்கரனின் மன்னி போன்ற உயர்ந்த மனிதர்களும் உள்ளனர். என்பதை அறிய முடிகிறது- எல்லாவற்றையும் விடச் சாவித்திரியின் பண்பு நலம் சிறந்து ஒளிவீசுகிறது. சிறந்த நடை நயம் இதன் சிறப்புகளில் ஒன்றாகும்.

.டில்லியில் வாழும் மக்களின் மேல்தட்டு வாழ்க்கையில் எழும் அறப் போராட்டங்களை எடுத்துக் காட்டுகிறது இந்திரா பார்த்த சாரதியின் 'வெந்து தணிந்த காடுகள்.'[55] பெண்ணைக் காட்சிப் பொம்மையாகக் காணும் அருண், பெண் உள்ளத்திலும் ஆளுமை கலை வடிவோடு வெளிப்பட வாய்ப்புண்டு என்பதை நிறுவும் விம்மி, பெண்விடுதலை என்று பேசி விடுதலை வாழ்வு வாழ்ந்து தோல்வியைத் தழுவும் ராதிகா, 'பொய்யான வாழ்வே கூடாது; எல்லாம் வெளிப்படையாக விளங்க வேண்டும்; மனத்தடை இல்லா வாழ்வே வாழ்வு' என வாழ்ந்து தன் உடல் ஊனத்தை மன ஊனமாக்கிக் கொண்ட தாமோதரன் ஆகியோரை வைத்து இன்றைய குடும்பங்களில் ஏற்படும் சிக்கல், குடிப்பழக்கம் மனிதனின் தனிமையைத் தவிர்க்கும் தீநெறி, எதிலும் தன் ஆளுமையைக்காட்டி இறுதியில் தோல்வியைத் தழுவும் வெறுமை ஆகியவற்றை விளக்குகிறது இந்த நாவல்.

செயல்களை விட அடிமன எண்ணங்கள் வெளிப்பட்டு முறை யற்ற நெறியில் செல்லும்போது படும் தோல்விகளைத் தனிமை நெடி கமழ உருவாக்கியுள்ளது. டெல்லிச் சூழலுக்கேற்ப உரை யாடல்கள் பல ஆங்கிலத் தொடர்களாகவே உள்ளன.

---

55. வெந்து தணிந்த காடுகள், இந்திரா பார்த்த சாரதி, தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, 5 மே, 1981.

மனவியல் நாவல்கள் மிகவும் அருகிய நிலையில்தான் தமிழில் வெளிவந்துள்ளன. சா. கந்தசாமியின் 'அவன் ஆனது'[56] அத்தகைய புதிய வரவில் சிறந்த வரவு ஆகும். எண்ண அலைகள் மனத்தில் எப்படி எப்படி முன்பின்னாகப் பின்னலிட்டுச் செல் கின்றன என்பதைச் சிவாவின் வாழ்க்கைப் பின்னணியில் வெளிப் படுத்துவதில் இந்நாவலின் தனித்தன்மை புலனாகிறது.

பேசியே வாழ்வை ஓட்டும் திருவேங்கடம், வேண்டும்போது பேசி உண்மை ஒளிபாய்ச்சும் ராமு, குடும்ப உறவைக்குலைக்காமல் குலைக்கும் பத்மநாபன், குடும்பத்தின் பெண்விளக்காய்த்திகழும் கமலா, பழைய பட்டாளக்காரர், தொழிற்சாலை மேலாளர்' சிரித்துச் சிரித்து வாழ்வை வெளிக்காட்டும் ரோஸ்மேரி, ராஜ லட்சுமி போன்றவர்களின் திறம்பட்ட படைப்புகளை மன ஓவியங்கள் ஆக்கும் அறிவிலி சிவாவின் பார்வையிலே தனிப் பார்வை தெரியும்.

வெளியூருக்குப் போதல்பற்றிய நிகழ்ச்சிப் பின்னலில் சிவாவின் பள்ளிப்பருவம், வேலைக்கமர்ந்த நிலை, நண்பர்களுடன் பழகுதல் காதல் வளர்ச்சி, குடும்ப ஓட்டம் போன்றவைகள் கூர்ந்து பார்த்து உண்மையை அறியாக் குழந்தை நெறியில் கூறிச் செல்வது தனிச் சிறப்பு வட்டம் உள்வட்டம், குறுக்கு வளைவுகள் என்பன எண்ண அலைகளின் வடிவமாக உள்ளே புகினும் செவ்விய மனவியல் நாவல் வடிவம் நல்ல படைப்பாக உருவாகி உள்ளது.

சுந்தரராமசாமி எழுதிய 'ஜே. ஜே சில குறிப்புகள்'[57] என்ற நாவல் 1981-இல் புதியவரவாகும். படிப்பவர் நன்கு முயன்று படித்த பின்னரே புரிந்து கொள்ளும் வண்ணம் பல்வேறு கலை அமைப்புகள், நுணுக்கங்கள் அமைந்த நாவல் இது. ஜோசஃப் ஜேக்ஸ் (ஜே. ஜே.) என்ற மலையாள எழுத்தாளனின் வாழ்வைக் கருத்து வடிவில் காட்டும் பண்போவியமாக இந்நூல் துலங்கு கிறது.

அந்த எழுத்தாளன் தன் உள்ளொளியைக் காணத் தன் எழுத்துப் படைப்பை வெளியிட்டவன். அவனுடைய நாட்குறிப்பு களின் பல பகுதியை அப்படியே தருவதுபோல் இந்நாவலின் பகுதி யாகத் தந்துள்ள ஆசிரியர் இது நாவலின் பின்பகுதியாக அமைந்து இந்த எழுத்தாளன் நாம் வாழ்ந்த காலத்திலே உண்மையில்

---

56. அவன் ஆனது, சா. கந்தசாமி, கலைஞன் பதிப்பகம் சென்னை, 17, மார்ச்சு, 1981

57. ஜே ஜே சில குறிப்புகள், சுந்தரராமசாமி, க்ரியா, சென்னை, 14 நவம்பர், 1981.

வாழ்ந்த ஓர் எழுத்தாளன் என்ற உணர்வை ஊட்டுகிறது. மற்ற நாவல்கள் போல் நிகழ்ச்சிகளைப் பின்னிக்காட்டும் செயலமைப் பாக இந்நாவல் அமையாமல் 'கொந்தளிப்புத் தத்துவ'க் கொள் கலமாக இது குதித்தோடுகிறது.

தச்சன் மகனாக வளர்ந்து கல்லூரியில் பயிலும் போது சிறந்த கால்பந்தாட்டக் காரனாக மாறிய ஜே. ஜே. 'காலடியில் வந்து சேரும் பந்து உன்னுடையதல்ல, என் குழுவினுடையது' என்று எப்போதும் குழுவுக்கு சமுதாயத்திற்கு முதலிடம் தரும் எண்ணத்தை நினைந்தான். பிறகு ஓவியனானான். கவிதைத் திறனாய்வாளன், கட்டுரையாளன் நாடக ஆசிரியன், மொழி பெயர்ப்பாளன் எனப் பலதுறையில் தன்னைத்தானே உருவாக்கிக் கொண்டான். அத்துடன் அவனை உருவாக்க அரவிந்தாட்ச மேனன் போன்றவர் முயன்றனர். எம். கே. அய்யப்பன், முல்லைக் கல் போன்றவரின் உறவு அவனைப் பல நிலையில் தனித்த முறை யில் சிந்திக்கச் செய்து 'மூன்றாவது பாதை' பற்றி எழுத வகை செய்தது.

மனித ஜாதியை முழுமையாகத் தழுவிக் கொள்ளும் உண்மை என்ற ஒன்று தனித்த நிலையில் இல்லை. 'என் செயல்' 'நான் ஏற்ற காவியம்' என்ற தளத்தில் சிந்தித்தபின் எதிர்த்தரப்பையும் பார்க்கும் காலம் வருகிறது. ஒரு கதவைத் திறப்பதே திறக்காத பல கதவைப் பார்க்கத்தான் என்பன போன்ற பல உண்மைகளைப் பற்றிய உணர்வு பெற்ற நிலையை ஜே. ஜேயின் வாழ்க்கைச்சூழல், நண்பர்கள், அவன் கலந்துகொண்ட எழுத்தாளர் மாநாடுகள் பணிபுரிந்த நிலைகள், காதலித்த போக்கு ஆகியவை காட்டும். அத்துடன் நூலாசிரியனின் வாழ்வுத்துணுக்குகளும் இடையிடையே துணைபுரியும்.

இப்படிப் பல்வேறு பரிமாணங்களைக் காட்டும்போது நம்பிக்கை அவநம்பிக்கை, நடப்பியல், அழகியல், தூய்மை நிலை இருப்பியல் போன்ற எல்லாம் ஒன்றன்பின் ஒன்றாக அணிவகுத்து நிற்கின்றன. முடிவில் தனி மனிதனின் மையப் புள்ளியை ஆழ்ந்து காணச் செய்யும் வகையில் தத்துவ நெறி ஒளியைப் பாய்ச்சுகின்ற புதிய படைப்பாகத் தனியிடம் பெற்று நிற்கிறது இந்த நாவல்.

நிலவுடைமைச் சமூகத்தில் புதிய ஒடுக்கு முறைகளும் இன்றைய வர்க்க பேதம் பாராமல் மானுட உணர்வுகள் நசிக்கச் செய்யும் போக்கைக் காட்டும் வகையில் ஜெயகாந்தனின் 'மூங்கில் காட்டு நிலா'[58] வெளிவந்துள்ளது. அந்த நிலவுடைமையாளரின் கூட்டத்தில் ஊஞ்சலாட்டம் போடும் ஒரு இடைப்பட்ட மனிதனின் பார்வையில் இக்கதை நிகழ்கிறது.

வரலாற்றில் விவசாயச் சங்கப் போராட்டங்களில் போராடிய பெண்களும், இராமநாதபுர விவசாயிகள் போராட்டத்தில் உயிரிழந்த பெண்களும் இந்த நாவலில் நிலாவாக வந்து தான் பிறந்த கீழ்ச் சாதிமக்களின் உயர் வாழ்வுக்காகப் போராடி உயிர் நீக்கும் கடமை ஓவியம் இது.

## பயன்பட்ட நூல்கள்

இந்திரா பார்த்தசாரதி

வெந்து தணிந்தகாடுகள், தமிழ்ப் புத்தகாலயம், சென்னை, மே, 81

இந்துமதி

யார்?, திருமகள் நிலையம், சென்னை, ஜனவரி, 81

சக்தி 81, கலைஞன் பதிப்பகம், சென்னை, டிசம்பர், 81

வேலியோரத்துப் பூக்கள், கலைஞன் பதிப்பகம், சென்னை, டிசம்பர், 81

உதயணன்

மலராத மொட்டுகள், அன்பு பப்ளிகேஷன்ஸ், சென்னை, 81

கண்ணதாசன்

ஆச்சி, வானதி பதிப்பகம், சென்னை, ஜனவரி 81

சிங்காரி பார்த்த சென்னை, வானதி பதிப்பகம், சென்னை, ஏப்ரல், 81

மனம் போல வாழ்வு, வானதிபதிப்பகம், சென்னை, ஜூலை 81

கணேசன், முல்லைக்கரை

கிளை ஒன்று கிளிகள் மூன்று, மருதமலையான் பதிப்பகம், சென்னை ஜூன், 81

---

58. மூங்கில் காட்டு நிலா, ஜெயகாந்தன், மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, ஜூன், 1981.

கந்தசாமி, சா.

அவன் ஆனது, கலைஞன் பதிப்பகம், சென்னை, மார்ச்சு, 81

கனிமொழி

மகேந்திரபுரி மாவீரன், அருணோதயம் வெளியீடு, சென்னை, ஜுன், 81

குலசேகரன், எஸ்.

சீதம்மா, அமிழ்தம் பதிப்பகம், நார்த்தாம் பூண்டி, வ. ஆ. ஏப்ரல், 81

அந்திமந்தாரை, குவை பப்ளிகேஷன்ஸ், சென்னை, செப்டம்பர், 81

குலோத்துங்கன்

பாதை தவறிய பைங்கிளிகள், வசந்தா பிரசுரம், சென்னை ஆகஸ்டு, 81

கோமகள்

பெண் ஒரு மலர், வானதி பதிப்பகம், சென்னை, ஜுலை, 81

கௌரிராஜன்

பெண்+பாசம்=கணவன், சக்தி பதிப்பகம், சென்னை, ஏப்ரல் 81

அற்புதா, இலக்குமி நிலையம், இராயப்பேட்டை சென்னை, ஜுன், 81

மாமல்ல நாயகன், முத்தையா நிலையம், சென்னை-5, ஜுன், 81

சந்திரசேகரன் ஆர். சு.

ஏரிக்கரையில் சில ஊமைக்குயில்கள், நர்மதா பதிப்பகம், சென்னை, டிசம்பர், 81

சாண்டில்யன்

மலைஅரசி. வானதி பதிப்பகம், சென்னை, அக்டோபர், 81

கடல் ராணி, வானதி பதிப்பகம், சென்னை, டிசம்பர், 81

சிவசங்கரி

ஒரு மனிதனின் கதை, ஆனந்தவிகடன் பிரசுரம், சென்னை ஏப்ரல், 81

தான் தன் சுகம், வானதி பதிப்பகம், சென்னை, மே, 81

வெட்கம் கெட்டவர்கள், வானதி பதிப்பகம், சென்னை, ஆகஸ்டு, 81

